

ந்திமரத்தின் போதலர்ந்த பூவி ரப்க்கிட்டி [ல்

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ௩-ம் பத்து, ௧-ம் திருமொழி, இரு ப்ரவேசம்.

ரிக்கிற யிந்திரபுரமெ ம்னும் திவ்யதேச ம். (௧)



வ்யா.—அவ.—† அவ்வோ நிலங்களுக்குச் சிறப்பாகிலமென்று -ட்டுச் சொல்லக்கடவர்களாயிற்றுக் கவிகளானவர்கள்-போக்ய போயன்றிக்கே, யதாபூதவாதிகளான ஆழ்வார்கள் டியாய், இருமை வங்களை விஷயமாகச் சொல்லுமவற்றில் நாம் கண்டாயங்கொண்ட -கர்ளும்படி யெங்ஙனேயென்றால்; அவர்களுடைய ப்ரீதவுள்ளத்தில் தாக்கு அவதியில்லாமையைக் கொள்ளுமித்தனை; ததாவாறே தன்னை பனுயிருக்கச் செய்தேயும் அல்லாதவர்களுடைய புகத வராஹ விக்ர டிலும் ரூபவானாய்த் தோற்றுமிறே ப்ரேமததாலேயாயில் ஏகதேசத் இவர்களுகப்புக்கு அவதி யில்லாமையாலும், சொல்லுவார ரக்ஷக ஏற்றமெல்லாம் பொறுக்கும்படி ஸர்வேஶ்வரன விஷயமாகச் செ லுகையாலும், இபபடியாகையிலொருதட்டில்லை. காரணமான ப்ரேமத்தாக்கு அவதியில்லாமையாலே, அதின்காரயமாய் வருமவை யுமெல்லாமுண்டாகைக் கொருகுறையில்லையிறே.

† ரஜோகுண ப்ரசுரனை பல்லவனுங்கூட ஆஶ்ரயிக்கலாம்படி பரமேச்சுர விண்ணகரிலே ஸந்நிஹிதனானபடியை யநுஸந்தித்தார், அங்ஙனன்றிக்கே, ஸத்வநிஷ்டராய் ஸ்வவர்ண ஸ்வாஶ்ரமோசித மானகர்மங்களை பகவத்ஸமாராதந புத்யா மாறாதே அநுஷ்டிக்கும் ப்ராஹ்மணர்க்கு உபாஸ்யனாய்க்கொண்டு திருக்கோவலூரிலே ஸந்நிஹிதனானபடியை யநுஸந்தித்தார்; தேவர்களுக்கு அந்தர்யாமி ்கிற புத்திவிசேஷத்தைப்பண்ணி அவ்வோமுகங்களாலே ஆஶ்ரக யன்றிக்கே, அவன்றன்னையே ஆஶ்ரயிக்கும் † அநுகூலர்க்கு ஜகத்துக்குக் காதாசித்கமாகவுண்டாம் ப்ரளயத்தைபபோக்கி நோக்குமாபோலேயும், † நித்யஸூரிகளுக்கு ஸதாதர்சநம் பண்ணுகைக்கு [illegible]னக்கொடுத்துக்கொண்டிருக்குமாபோலேயும், அபரிச்சிந்நனை தன்னை, "இவனிவ்வளவிலுள்ளான்" என்று இவர்களுக்குப் பரிச்சேதித்து ப்ரதிபத்தி பண்ணலாம்படி தனக்குள்ளதடைய

காட்டிக்கொடுத்துக்கொடு நிற்கிறவிடமாகையாலே, ப்ராப்யமென்று புத்திபண்ணி, அத்தைப்பேசி யநு ... ... ... ... ... *

---

தண் ப்ரவேசம். கீழ்த்திருமொழிகளிலும மேல்திருமொழி மொழிதன்னிலும் திருப்பதிகளுக்குச் சிறப்பிட்டுச்சொன்ன சங்காபூர்வகமாக வருளிச்செய்கிருர் (அவ்வோநிலங்களுக்

'ருமொழிகளோடு இத்திருமொழிக்கு ஸங்கதி யருளிச்செய் ரத்யாதி). ராஜஸராயும் ஸாதநாந்தர நிஷ்டராயுமிருக்கிற ங்காட்டிக்கொண்டிருக்கிற ஸ்த்தலஙகளிலநுபவத்திற்காட் ச்கு முகங்கொடுக்குமிடத்தில் இவர்களோடு தாமுமநுப ்யமெனறு திருவயிந்திரபுரத்துத் தெய்வநாயகனை யநுப ருவுள்ளம். (அநுகூலர்க்காக) என்றதுக்கு, (நிற்கிறவிடமா ்தோடன்வயம். இங்கு அநுகூலரென்றது - இத்திருமொ ்படுகிற, வண்டுகள், குரக்கினம், அன்னம், சோலைகள் பலலாம், ஸ்வாபதேசத்திலே, பாகவதர்களென்று திருவுள்ளம் இருந்தண்மாநிலம" இதயாதியைப்பற்ற வருளிச்செய்கிருர் (ஜகத்துக் கித்யாதி). "மின்னுமாழியங்கையவன்" என்றதனைப்பற்ற (நித்யஸூரிகளுக் கித்யாதி). அன்றிக்கே, இத்திருமொழிக்கு உயிரப்பாட்டான "வையமேழு முண்டு" என்கிறபாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்தாரென்னவுமாம், "அடியவர்க்கு மெய்யனுகிய" என்றிறே யிருக்கிறது; "தெய்வநாயகன்" என்றிறே அதில்பாசுரம். ... ... ... ... ... *

மூ.—இருந்தண்மாநிலமேனமதாய்வளைமருப்பினிலகத்தொடுக்கிக்
கருந்தண்மாகடல்கண்துயின்றவனிடம்கமலநன்மலர்த்தேற
லருந்தியின் ' சைமுரன்றெழுமளிகுலம்பொதுளியம்பொழிலூடே
செருந்திந॥ லர்சென்றணைந்துழிதரு திருவயிந்திரபுரமே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இருந்தண் | மிகக்குளிர்ந்த | கருந்தண்மாகடல் | கறுத்துக்குளிர்ந்[illegible] ருங்கடலில் |
| மாநிலம் | பெரியபூமியை (ப்ரளயங்கொணடவனை று) | கண்துயின்றவன் | யோகநித்ரை[illegible] ருளுமவனுக்கு |
| ஏனமதாய் | வராஹரூபியாய் | இடம் | வாஸஸ்த்தாநமாவது, |
| வளைமருப்பகத்தினில் | வளைந்தகொம்பினிடத்திலே | கமலம் | தாமரையினது |
| | | நல் | அழகிய |
| ஒடுக்கி | அடக்கி, (பின்பு) | மலர் | பூவிலுண்டான |

| | | | |
|---|---|---|---|
| தேறல் | தேனை | செருந்தி | செருந்திமரத்தின் |
| அருந்தி | பாநம்பண்ணி | நாள்மலர் | அப்போதலர்ந்த பூவி |
| இன்இசை | இனியராகத்தை | சென்று அணைந்து | ல் போய்க்கிட்டி |
| முரன்று | பாடி | உழிதரு | ஸஞ்சரிக்கிற |
| எழும | கூத்தாடாநின்றுள்ள | திருவயிந்திரபுரமே | திருவயிந்திரபுரமென்னும் திவ்யதேசமாம். (க) |
| அளிகுலம் | வண்டுக்கூட்டங்கள் | | |
| பொதுளி | திரண்டு | | |
| அம் | அழகிய | | |
| பொழிலூடே | சோலைநடுவிலே | | |

வ்யா.—முதற்பாட்டு. (இருந்தண்மாநிலம்) பூசிலமென்று - பூமிப் பரப்பைச் சொல்லுகையாலே, தட்பததாலே-போக்ய போகோபகரண போகஸ்ததாந பரசுரமாயிருக்கும்படியாய், இருமையால்-அதில் பெருமையாய்க்கிடக்கிறது. †இத்தை ப்ரளயங்கொண்ட விடத்தில சேதநாக்குறுபபாமாகாரமேயாயிறறுத திருவுள்ளத்தில் பட்டுக்கிடக்கிறது. (ஏனமதாய்) †கார்யம் தெரிந்தவாறே தன்னை யழிய மாறினன். †நீருக்கும் சேற்றுக்குமிருயாக வராஹ விக்ரஹத்தைப் பரிக்ரஹித்தான். வளைந்த கொம்பிலகவர்யில் ஏகதேசத்திலே யடக்கினன். இத்தால ரக்ஷ்யத்தி னளவல்லரக ரக்ஷகனுடைய பாரிபபைச் சொன்னபடி. †இது ஸம்ரக்ஷிதமென்று திருவுள்ளததே பட்டவாறே. (கருந்தணிகயாதி) †கடல்களதோறும் கண்வளாந்தருளும என்றொரு பரஸிததியுண்டு; அததாலே, (க) "உவர்க்கும கருங்கடல் நீருள்ளான" என்கிறபடியே சொல்லிற்றாகவுமாம அன்றிக்கே, திருப்பாற்கடல்தான் மஹாவராஹத்தினுடைய குளமபிலே துகளாய்ககுழமபிந தனனிறம்போயிறறென்னவுமாம்.

(கமலமிதயாதி) †தாமரையினுடைய செவ்வியோடே அலர்ந்த விலக்ஷணமான புஷ்பங்களிலே வண்டுகளானவை புக மதுபாநத்தைப்பண்ணும்; கழுநீரே கட்டளையாக மதுபாநத்தைப் பண்ணுகையாலுண்டான பரீதிபரகர்ஷத்தாலே, இனிய இசையை முரலாநிற்கும் - †செவிபடாவுடைத்தாக ஆளத்தி வையாநிற்கும. உள்ளுப் புக்க த்ரவ்யம் இருந்தவிடத்தி லிருக்கவொட்டாமையாலே, கொண்டு கிளர்ந்தெழுகிற வண்டுகளினுடைய ஸமூஹமானது, தாமரையிலே மதுபாநம பண்ணச்செய்தே, பினனையும சாபலாதிசயத்தாலே செருந்தியிலேபோய் மதுபாநம் பண்ணுவதாக நினைத்து அதின் தேன்

(க) ௩ - திரு - ௰௭.

வெள்ளத்தை யநுஸந்தித்து; கிண்ணகத்தி லிழிவார் கைகோத்துக் கொண்டிழிய ஆள்திரள் பார்த்திருப்பாரைப்போலே; (பொதுளி) வண்டுகள் வந்து செறியுமளவு மிருந்து, அவை திரண்டவாறே தர்சநீயமாகப்பூத்த, பொழிலூடே - சோலையினுள்ளே, செருந்தியினுடைய செவ்விப்பூவிலே சென்று கிட்டும். †(பொதுளி) திரண்டிருந்து உழிதராநிற்கும், †தாமரைப்பூவிலாசையாலே இழிந்து மதுபாநம்பண்ணின வண்டினம், செருந்தியில் மதுவெள்ளத்தை யநுஸந்தித்துவிசாரியாதேயிழிந்து, "அகப்பட்டுக்கொடுநிற்குமது கார்யமல்ல" என்றுபார்த்து கிண்ணகத்திலிழிய அஞ்சிக்கரையிலே உலாவுவாரைப்போலே, செருந்திப்பூவைச் சென்று கிட்டி அதிலிழிய அஞ்சி கரையிலே நின்று இதஸ்ததः ஸஞ்சரியா நிற்குமாயிற்று. (பொதுளி) செறிவு. பொழிலுக்கு விசேஷண மாகவுமாம். (௧)

---

அரு — முதற்பாட்டு. (இருந்தணித்யாதி). அழிந்ததசையில் போக்யாதிகளுண்டாகக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இத்தையித்யாதி). ப்ரளயத்துக்கு முன்புள்ள ஆகாரம் ஆழ்வார் திருவுள்ளத்தேகிடந்ததென்று திருவுள்ளம். எம்பெருமான் திருவுள்ளத்தில் கிடந்ததென்னவுமாம். (கார்யம் தெரிகையாவது)-ப்ரளயங்கொண்ட பூமியையெடுக்க விசாரிக்கை. "ஏனமாய்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்து, "அதாய்" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (நீருக்குமித்யாதி). மேலுக்கவதாரிகை (இதுவித்யாதி). * கருமை பெருமையாக்கி, நஞ்சீயர் வ்யாக்யாநம்பண்ணியிருந்தாலும், ப்ரஸித்தி ப்ராசுர்யத்தைப்பற்ற கறுப்பையே விவக்ஷித்தருளிச்செய்கிறார் (கடல்கள்தோறுமித்யாதி).

கமலம் - தாமரையுடைய, நல் - விலக்ஷணமான, மலரில், தேறலை - தேனை, அருந்தி - பாநம்பண்ணி, இனிதான இசைமுரன்று எழாநின்றுள்ள அளி-வண்டுகளினுடைய, குலம் - ஸமூஹமானது, பொதுளி - திரண்டு. அழகிய பொழில்நடுவே, செருந்தி என்கிற வ்ருக்ஷவிசேஷத்தின் நாட்பூவில் சென்று கிட்டி ஸஞ்சரியாநிற்கிற திருவயிந்திரபுரமென்ற சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தாமரையினுடையவித்யாதி). விவரணம் (செவியித்யாதி) செவிப்பாடு - செவிக்கினிதாகப்பாடுகை. அந்வயமகாட்டுகைக்காக மீளவுமருளிச்செய்கிறார் (பொதுளியித்யாதி). உழிதருகைக்குக் கருத்தருளிச்செய்கிறார் (தாமரைப்பூவிலித்யாதி). ஷட்பதநிஷ்டரான ஸ்ரீவைஷ்ணவர்கள் தெய்வநாயகன் திருவடித்தாமரைகளில்தேனைக் குறைவற உண்டு, ஆசையால், நித்யஸூரி பரிஷத்கதனான *வாஸுதேவதருவின் பாதமலரில் தேனை புஜிக்கக்கோலி ஸஞ்சரித்துக்கொண்டிருப்பார்களென்று ஸ்வாபதேசத்தில் பலிதார்த்தம். ... ... ... (௧)

மூ.—மின்னுமாழியங்கையவன்செய்யவளுறைதருதிருமார்வன்
பன்னுநான்மறைப் பல்பொருளாகிய பரனிடம் வரைச்சாரல்
பின்னுமாதவிப் பந்தலில் பெடைவரப் பிணியவிழ் கமலத்துத்
தென்னவென்றுவண்டின்னிசைமுரல்தரு திருவயிந்திரபுரமே, (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| மின்னும் | மின்னுகின்றுள்ள | பரன் | ஸர்வஸ்மாத்பரனுக்கு |
| ஆழி | திருவாழியைய | இடம் | ஸ்தாநமாவது, |
| அம் | அழகிய [யனாய், | வரைச்சாரல் | மலைப்பக்கங்களில் |
| கையவன் | திருக்கையிலேயுடை | பின்னும் | நெருங்கியிருந்துள்ள |
| செய்யவள் | பெரியபிராட்டியார் | மாதவிப்பந்தலில் | குருக்கத்திப்பந்தலிலே |
| உறைதரு | நித்யவாஸம்பண்ணுகிற [னாய், | வண்டு | வண்டுகளானவை |
| திருமார்வன் | திருமார்வையுடைய | பெடை | தங்கள்பேடைகள் |
| நான்மறை | நான்குவகைப்பட்ட வேதங்களால | வர | வருகைக்காக |
| | | பிணி அவிழ | கட்டு அவிழுகிற |
| பன்னு | சொல்லப்படும் | கமலத்து | தாமரையிலே (புக்கு) |
| பல்பொருள் | பதார்த்தங்களையெல்லாம் | தென்னஎன்று | தென்னா! தெனா! என்று |
| ஆகிய | தனக்கு ப்ரகாரமாகவுடைய | இன்இசைமுரல்தரு | இனியஇசைபாடாநின்றுள்ள |
| | | | திருவயிந்திரபுரமே. (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (மின்னுமித்யாதி) ஸர்வேஶ்வரத்வ லக்ஷணமாகிறது - திருவாழியைக் கையிலே சலியாதே பிடித்தல், லக்ஷ்மீபதியாதல், வேதைக ஸமதிகம்யனாதல், இவையாயிற்று; இவை மூன்று முண்டிங்கு. (மின்னுமாழியங்கையவன்) மேகத்திலே மின்னினாற்போலே யிருக்கிற திருவாழியைக் கையிலே யுடையவன். (செய்யவளித்யாதி) அந்த மின்கொடிதான் ப்ரதேசாந்தரத்திலே தழுவினாற்போலேயாயிற்றுப் பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே யுடையனாயிருக்கும்படி. (பன்னித்யாதி) பரந்து நாலுவகைப்பட்ட வேதத்தில் அவயவா விடங்கள்தோறும் சொல்லப்பட்ட பதார்த்தங்களடங்கத் தனக்கு சரீரதயா ப்ரகாரமாய், தானொருவனுமே ப்ரகாரியா யிருக்கையாலே ஸர்வஸ்மாத்பரனானவன். (௧) †"வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய꞉ - வேதைஶ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய꞉" என்றானிறே. (௨) "ஹ்ரீஶ்ச தே - ஹ்ரீஶ்சதே" (௩) †"அஸ்யேஶாநா - அஸ்யேசாநா".

---

(௧) கீதை. (௨) ஸ்ரீஸூக்தம். (௩) ஸ்ரீஸூக்தம்.

(வரையித்யாதி) †பிராட்டியும் தானுமான சேர்த்தியில ப்ரணய கலஹம் மாறாதே செல்லுமாபோலே யாயிற்று அங்குத்தை திர்யக்குக்களுடைய யாத்ரையும், மலையின் பர்யந்தத்தில் நெருங்கபபட்டிருந்துள்ள மாதவிப பந்தலிலே மதுபானம்பண்ண விழிந்த வண்டுகளானவை, தனனிலதான பரணயரோஷததாலே, "நீ, நான்" என்ன, அவ்வளவிலே பேடையானது, "இனி நீ ஜீவிக்கும் படி யெல்லாம நான் காண்கிறேன்" என்று, பரதிஜ்ஞைபண்ணி, மாதவியிலே செறியபபூதத பூவிலே புககொளிததது; அதனை யொழிய அரைக்ஷணம ஜீவிககமாட்டாமையாலே, (௪) "నైవదంశా-னைவதமசாந்" (உ) "న జీవేయమ్ - நஜீவேயம்" என்று படுமிறே சேவல், அபபடி நோவுபட்டு, எலலாத்தாதநஙகளையு மநுஷ்டிதது, †பல் பன்னிரண்டுட காட்டினவிடததிலும் அதுக்குக கேட்டதிலலை யாயிற்று; "இனிசசெய்வதென?" என்று பாரதது "கைகழியபபோ கமாட்டாது, நாமபடுவது காண மறைந்து விததனை, நமமிடற்றோசையாலே முகங்காட்டுவிததுக கொளவோம" என்றுபாரதது, (பின்னுமாதவிபபந்தலிலபெடைவர) அதிலே புகக பேடையானது, ஊடல் தீர்ந்துவந்து முகங்காட்டுமபடி †அபபோ தலாந்த செவ்வித் தாமரையிலே போயபபுகுந் தென்ன'என்று ஆளததிவைககததுடங்கிற்றாயிறறு †நககுண்டாா †நாவெழாரிறே. பாட்டபபகை தீருமென்ப திறே; (௩) †"பேதை நெஞ்சறவுறப பாடுமபாட்டை" என்னககடவ திறே. ... ... ... ... (உ)

அநு — இரண்டாமபாட்டு. (மினனித்யாதி). கீழபபாட்டில, ஸ்ரீவராஹமாய, ஜகததுக்குவநத பரளயாபத்திவருததததையசசெயது கணவளரங்கிக்கிடந்தவன வநதிருககிறவிடமாகையாலே பராபயமென்றநுஸந்திததார்; இதில, ஸாவஸ்மாதபரன வாததிககிறவிடமாகையால பராபயமெனறநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"மின்னுமாழ" இதயாதிககு வ்யுதகரமேண ப்ரமாண ப்ரதாசநம் (வேதைரித்யாதி). "வேதைஃ" எனகிற பனமையால, பேதஸ்ருதி, அபேத ஸ்ருதி, கடகஸ்ருதி எலலாம சொலலுகையால், "பொருளாகிய" என்றதுக்கு ப்ரமாணமென்று கருதது. (அஸ்யேசாநா) என்றவநந்தரம், (௪) "శ్రీవత్సవక్షా నిత్యశ్రీరజయ్య శాశ్వతో ధ్రువః- ఈశ్వరః పరమో ధాతా శఙ్ఖచక్రగదాధరః- శ్రీవత్స

(க) ரா-ஸு ௩௧-௪உ.
(உ) ரா-ஸு ௩௧-௪0
(௩) தி-வாய்-௧-௧-௧.
(௪) ரா-யு ககஎ-கரு.

ான்ன பர
வக்ஷா நித்ய ஸ்ரீரஜேயஸ் மாஸ்வதோ த்ருஷ:-தமஸ: பரமோத ரவிக்கிறாரெ
கதாதர:'' என்ற தநுஸந்தேயம்.

(உறைதிருமார்வன்) என்னவமைந்திருக்கவும், '
ப்ரணயகலஹம்மாறாதே செல்லுகை ஸித்தமென்று ெ ஆலிலையில், வை
க்கி, பெடைவரும்படி இன்னிசைமுரலாநிற்கும் ஏச்செய்கிறா (பூரியித்
ளிச்செய்கிறார் (பிராட்டியுமித்யாதி). (ஸாதநங்களையுள் பூவிவாகக
ரேஷணாதிகளைப் பண்ணியென்றபடி. (பல்பன்னிரண் அடியவர்க்குகயாய்
கெஞ்சியும் என்றபடி. கெஞ்சும்போது பதினறும் எ வருளிச்செய்ட்டித்
டும் என்றது - மந்தஸ்மிததசையிலும் நாலுதோற்றுகிறதுநந்தரம, ஆபரம்
அதிகமாகத்தோற்றுவது பன்னிரண்டேயென்கை. (அட்டது. அடர்வரியா
ரையிலேபுக்கு) என்றதுக்கு - எங்கும தேடித்திரிந்து மூடிநேனியா
கொட்டிக்கிடந்தது, பாமபோது நாக்கு நனைக்கக்கடிகளெல்வொட்
யில் போயிற்றென்றுகருத்து. கெஞ்சிறல்வாதது பங்ஙனநுட கரும்பி
ன்ன வருளிச்செய்கிறார் (நக்குணடாரித்யாதி). (நக்குண் விவாண வெள்ள
பெற்றவர்கள். (நாவெழார்) குற்றமசொல்லமாட்டா ய் நிரவதிச
“ஸ்தோத்ரம் ஸ்த்ரீ ...-தஸ்மாத் காயந்தம ணணிறயென்றால்
என்கிறபடியே - கானரஸங் கேட்கில் குற்றஞ்சொல்ல )). (ப்ரகாரம்).ஸ்வ
ன்றதாயிற்று. பாடப்பகைதீருமோவென்ன (பேணயி ாதி).

(ப மேல்
ரு.—வையமேழுமுண்டாலிலை வைகிய மாயவனடியவர்க்கு போ
மெய்யனாகியதெய்வ நாயகனிடம மெய்தகு வரைச்சாரல்
மொய்கொள் மாதவி செண்பகம முயங்கிய முலலையங்கொடியாடச்
செய்யதாமரைச் செழும்பணை திகழ்தரு திருவயிந்திரபுரமே. (ரு.)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| வையம்ஏழும் | கீழ் ஏழுலோகங்களை | வரைச்சாரல் | மலைப்பக்கத்தில் |
| உண்டு | அமுதுசெய்து [யும | மொய்கொள | நெருங்கியிருந்துள்ள |
| ஆலிலை | வடதளத்திலே | மாதவி | குருக்கத்தியானது |
| வைகிய | போதுபோக்கின | செண்பகம | செண்பகத்தை |
| மாயவன் | ஆச்சர்யசக்தியுக்த | முயங்கிய | தழுவின |
| | னாய் | முலலை | கீழ்ப்ரதேசத்தில |
| அடியவர்க்கு | தனக்கே எல்லாவடி | ஆம் | அழகிய |
| | மையும்செய்யுமவ | கொடி | முல்லைக்கொடியான |
| | ர்களுக்கு | | து [முலை) |
| மெய்யனாகிய | தன்னை யுள்ளபடிகா | அட | அசைய, (அதனகாற |
| | ட்டுமவனான | செழு | செழித்த |
| தெய்வநாயகன் | தெய்வநாயகனுக்கு | பணை | நீர்நிலங்களிலுள்ள |
| இடம் | இடமாவது, | செய்யதாமரை | செந்தாமரை (அலர் |
| மெய்தகு | எம்பெருமான் திரு | | ந்து) |
| | மேனியில் மார்தத | திகழ்தரு | ஒளிசெய்கிற |
| | காத்துக்குத்தக்க | திருவயிந்திரபுரமே. | (ரு.) |

அரு.—மூன்ரும்பாட்டு. (வையமித்யாதி) இப்பாட்டில்சொன்ன பரத்வத்தைத் தத்கார்யமான அகடிதகடநாஸாமர்த்யமுகேந அநுபவிக்கிருரென்று ஸங்கதி.

வையமேழும் - ஈரேழுலோகங்களும், உண்டு - ஆலிலையில், வைகிய - போதுபோக்கின, என்று சப்தார்த்தமாயருளிச்செய்கிருர் (பூமியித்யாதி). (பூமிப்பரப்படங்கலும்) என்றது-ஈழில்லோகங்கள் பூவிவாங்க... யாலே. மேலுக்கவதாரிகை (அகடிதங்களையித்யாதி). அடியவர்க்கு...ஞகிறதும் வையமுண்டதுபோல் அகடிதமோவென்ன வருளிச்செய்... (காதாசித்கேத்யாதிவாக்யத்தாலே). (ப்ரளயமிறே) என்றவநந்தரம, ஆ...லே அதுவாராதபடி என்று சேஷபூரணம்பண்ணிக்கொள்வது. அடர்ஹியாஞன தன்னைப் பரிச்சேதித்தநுபவிக்கும்படி பண்ணுகை அகடிதமிறே... திருவுள்ளம். நித்யஸூரிகள் ஸர்வஜ்ஞராகையாலே தன்படிகளை... பவிக்கலாம்படி பண்ணிஞனேயாகிலும்,இங்குள்ளார்க்கு அங்ஙனநுப... கூடுமோவென்ன வருளிச்செய்கிருர் (அஹமித்யாதி). விவா... வொட் கரும்பி ணித்யாதி). ஸ்வரூபதோ குணதஶ்ச நிரதிசயப்ருஹத்தாய் நிரவதிக... வெள்ள ரூபமானவஸ்து பக்திக்கு ஸுலபமாயநுபவிக்கலாம்படி பண்ணிஞயென்ருல் இது நாட்டில் கண்டதில்லையேயென்ன (நாட்டிலித்யாதி). (ப்ரகாரம்)-ஸ்வபாவம்.

(மெய்க்கு) என்றது. தெய்வநாயகன் திருமேனிக்கென்றபடி. (மென்மையையுடைத்தாயிருக்கை) - எம்பெருமான் திருமேனியில் மார்த்தவம்போலே மார்த்தவத்தையுடைத்தாயிருக்கை. மொய்கொள்-நெருங்கியிருந்துள்ள, மாதவியானது, செணபகத்தை, முயங்கிய - தழுவிய, முல்லை முல்லைநிலத்திலே - நிர்ஜலப்ரதேசத்திலே, அமகொடியானது - அக்கொடியானது-முல்லையென்ற சப்தத்தாலே சொல்லப்பட்ட கொடியானது, ஆட, அத்தாலே, செழும்பணையில்-மருதநிலத்தில், நீர்நிலத்தில்-செய்யதாமரை திகழ்கிற திருவயிந்திரபுரமென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிருர் (மெய்யென்றித்யாதி வாக்யத்ரயத்தாலே). முல்லையங்கொடி - அழகியமுல்லைக்கொடி. ஆட, தாமரையுடைய செழும்பணையிலே விளங்குகிற என்று அர்த்தாந்தரமருளிச்செய்கிருர் (சிவந்தவித்யாதி). முந்தினவர்த்தத்தில, குறிஞ்சி நிலமான மலைச்சார்விலே முல்லைநிலமும் மருதநிலமுமிருக்கக்கூடுமோ வென்னும் சங்கையிலே யருளிச்செய்கிருர் (அகடிதங்களை யித்யாதி). (விருத்தமானதேசத்தில்)-அவையிரண்டுக்கும் விருத்தமான மருதநிலத்திலென்றபடி. ... ... (௩)

மூ.—மாறுகொண்டுடன்றெதிர்ந்தவல்லவுணன்றன்மார்வகமிருபிளவாக் கூறுகொண்டவன்குலமகற்கின்னருள்கொடுத்தவனிடம்மிடைந்து சாறுகொண்டமென்கரும்பிளங்கழைதகைவிசும்புறமணிநீழல் சேறுகொண்டதண் பழனமதெழில்திகழ் திருவயிந்திரபுரமே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| மாறுகொண்டு | (நான்) சத்ரு என்று கொண்டு |
| உடன்று | கோபித்து |
| எதிர்ந்த | எதிரிட்டுவந்தவனுடைய |
| வல் | மிக்க பலமுடைய |
| அவுணன்றன் | ராக்ஷஸனான ஹிரண்யனது |
| மார்வகம் | மார்வானது |
| இருபிளவா | இரண்டுபிளவாம்படி |
| கீண்டு | கூறுசெய்து |
| குலமகற்கு | அவனுடைய குலபுத்ரனான ப்ரஹ்லாதாழ்வானுக்கு |
| ...னருள்கொ...வன் | நல்ல அருள்செய்தவனுக்கு |
| ...கொடு... | இடமாவது, [ங்கி |
| ...ணிமேற | ஒளியோடுகூடின |
| ...ட | ஸர்வமானதபெருகா நின்றுள்ள |
| மெல் | ம்ருதுவான |

| பதம். | உரை. |
|---|---|
| கரும்பு | கரும்பினுடைய |
| இளங்கழை | குருத்தின் நுனியானது |
| விசும்பு | ஆகாசத்தை [து |
| உற | கிட்ட |
| தகை | (அத்தாலே) தகையப்பட்டிருப்பதாய் (அக்கரும்பினுடைய) |
| மணிநீழல் | அழகியநிழலையுடைத்தாய் |
| சேறுகொண்ட | (கருப்பஞ்சாற்றாலே வெள்ளமிட்ட) சேற்றையுடைத்தாய் |
| தண் | குளிர்ந்த |
| பழனமது | நீர்நிலங்களின் |
| எழில் | அழகு |
| திகழ் | ஒளிவிடுகிற |
| | திருவயிந்திரபுரமே. (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (மாறுகொண்டித்யாதி). (க) †"ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்-ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்றிருக்குமவனோடே, † "நான்மாறு" என்று வந்தானாயிற்று; "நான்சத்ரு" என்று கொண்டு (உடன்று) "நான்சத்ரு" என்று சொல்லாநிற்கச் செய்தேயும், அகவாயிலின்றிக்கே யிருக்கவுமாமிறே; அங்ஙனன்றிக்கே, அகவாயில் த்வேஷத்தோடே எதிரிட்டு முன்னேவந்த. (வல்லவுணன்). †ஹிரண்யனுடைய. சத்ருவென்று வாயாலே சொல்லுகையும், அதுக்கடியான நெஞ்சில் த்வேஷமும், அதின் கார்யமான முன்னே வந்து நிற்கையும், மூன்றையும் சொன்ன†படி. தேவர்களுடைய வரத்தை ஊட்டியாகவிட்டு வளர்த்த மிக்கபலத்தை யுடையனான ஆஸுரப்ரக்ருதியுடைய (மார்வகமித்யாதி). பரந்த மார்வானது இரண்டு பிளவாம்படி கூறுசெய்தவன். †சீற்றத்தோடே நரஸிம்ஹம் வந்து தோற்றின தோற்றங்கண்டவாறே மெல்கினான்; பின்னையிரண்டு கூறாக்கிப் போகட்டானாயிற்று. குலவிரோதியான ஹிரண்யனைப் போக்கி, அவன் குலபுத்ரனுக்குத் தன்பேறான அருளைப்பண்ணினவன். †ஸர்வேஶ்வரன்றானேயிறே, பிதாவுக்கு ப்ரஜைபக்கலிலே வாத்ஸல்யமுறைத்து அவனை நோக்கும்படி பண்ணுகிறான்;

(க) கீதை - ரு - உக

அதில் அந்த வாத்ஸல்யம்போய் தானே தானும்படி தோற்றிநின்ற வாறே தான் தமப்பனி லண்ணிய வுறவாய்வந்து உதவினானாயிற்று.

(மிடைந்தித்யாதி) †பெற்ற தமப்பன் பகையாக அவனிலண்ணிய உறவாயுதவினவன் றனக்குத் தன்னிலண்ணிய உறவில்லையிறே புறம்பு; இப்படியிருக்கிறதானும் (க) "𑌆𑌤𑍍𑌮𑍈𑌵 𑌰𑌿𑌪𑍁𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 - ஆத்மைவ ரிபுராத்மந:" என்கிறபடியே, தனக்குததானே பகையாய் தன்னை முடிக்கப்பார்த்தவன்று "உன்னை உன்கையில் காட்டித் தாரேன்" என்று நோக்குகைக்காகவந்து நிற்கிறவிடம்; †பரஸ்பரம் நெருங்கி அந்நெருக்கம் பொறாமையாலே ஸாரமானது ப்ரவஹியா நின்றுள்ள மெல்லிய கரும்பினுடைய, இளங்கழையுண்டு - நுனியானது, ஆகாசத்திலே சென்றுவளர, "இனியிவ்வருகு போகவொட்டோம்" என்று தடுக்குமாயிற்று ஆகாசம். இபபடிவளர்ந்த கரும்பினுடைய †அழுகிய கிழலையுடைத்தாய், கருப்பஞ்சாற்றாலே வெள்ளமிட்ட சேறுகளையுடைத்தாயிருந்துள்ள நீர் நிலங்களிலழகு உஜ்ஜ்வலமாகா நின்றுள்ள திருவயிந்திரபுரமே - (உ) †[கழீஇக்கொண்டு போரவுணன்றன்னைச் சுழித்தெங்கும் தாழ்விடங்களபற்றிப்†புலால் வெள்ளம் தானுகள] வ்யாபரிததபோது ஹிரண்யனுடைய ருதிர வெள்ளத்தாலே பார்ததபாத்த விடமெங்கும் சேறு செய்தாற்போலே, கரும்புகளொன்றோடொன்று நெருங்கி ப்ரவஹித்த சாற்று வெள்ளத்தாலே பூமியெல்லாம் சேறாய்க்கிடக்குமாயிற்று. ... (௬)

---

அரு.—நாலாம்பாட்டு. (மாறுகொண டித்யாதி). கீழ்ப்பாட்டில், "அடியவர்க்குமெய்யனாகிய" என்றருளிச்செய்தார்; அவர்களையடியராக்கினபடியை யநுஸந்தித்துக்கொணடு, அவனிடம் ப்ராப்யமென்கிறாரென்று ஸங்கதி.

"மாறாய்"என்னாதே,"கொண்டு" என்றதத்தால், தோற்றின உட்கருத்தை யருளிச்செய்கிறார் (ஸாஹ்ருதமித்யாதி). "உடன்று" சினத்து என்றாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (நானித்யாதி). கீற்பலித்தவர்த்தத்தையநுவதித்துக் கொண்டு வன்மையை உபபாதிக்கிறார் (ஹிரணயனுடையவித்யாதி வாக்யத்வயத்தாலே). (படி) என்றவநந்தரம் அதுக்குடலாக என்றுசேஷம். இருபிளவாக்கினவன் என்னவே அமைந்திருக்க,"கூறுகொண்டவன்"என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (கீற்றத்தோடேயித்யாதி). "குலமகன்" என்கைக்கு ஈச்வரன் பிதாவோவென்னவருளிச்செய்கிறா (ஸர்வேச்வரன்றானேயித்யாதி).

"அவுணன் குலமகற்கு இன்னருள்கொடுத்தவனிடம் திருவயிந்திரபுரம்" என்றதுக்கு உட்கருத்தருளிச்செய்கிறார் (பெற்றவித்யாதி). வாக்யார்த்தம்

---

(க) கீதை - ௬ - ௫. (உ) பெரியதிருவந்தாதி - ௬௭.

(பரம்பரமித்யாதி) "மணி" என்றதினர்த்தம் (அழகிய) என்றது. "மார்வக மிருபிளவாக்கூறுகொண்டவன்" என்றத்தை த்ருஷ்டாந்தமாக்கித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தழீஇக்கொண்டித்யாதி). (புலால்வெள்ளம்) - ரக்தப்ர வாஹம். ... ... ... ... ... ... (௪)

மூ.—ஆங்குமாவலிவேள்வியிலிரந்து சென்ற கலிடமளந்தாயர்
பூங்கொடிக்கினவிடை பொருதவனிடம் பொன்மலர்திகழ்வேங்கை
கோங்குசெண்பகக்கொம்பினில் குதிகொடுகுரக்கினமிரைத்தோடித்
தேன்கலந்த தண்பலங்கனி நுகர்தரு திருவயிந்திரபுரமே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாவலி | மஹாபலியின் | இடம் | இடமாவது, |
| வேள்வியில் | யஜ்ஞவாடத்திலே | குரக்கினம் | குரங்கின் கூட்டமானது |
| சென்று | கிட்டி | பொன்மலர் | பொற்பூப்போலே |
| இரந்து | (மூன்றடிமண்ணை) அர்த்தித்து | திகழ் | விளங்காநின்றுள்ள |
| அங்கு | அவ்விடத்திலேயே | வேங்கைகோங்குசெண்பகம் | வேங்கைகோங்கு செண்பகம் என்கிறவி |
| அகல் இடம் | பரந்தபூமியை | கொம்பினில் | கொம்பிலே [வற்றின் |
| அளந்து | அளந்துகொண்டவனாய் | குதிகொடு | குதித்துக்கொண்டு |
| ஆயர் | இடையருடைய | இரைத்து | பெரிய ஆரவாரத்துடனே |
| பூங்கொடிக்கு | பூத்தகொடிபோன்ற நப்பின்னைப் பிராட்டிக்காக | ஓடி | ஓடிவந்து, [னே |
| | | தேன்கலந்த | தேன்மிக்க |
| | | தண் | அழகிய |
| இனவிடை | இனமானஏழுருஷபங்களையும் [னுக்கு | பலங்கனி | பலாப்பழத்தை |
| பொருதவன் | எதிரிட்டு நிரஸித்தவ | நுகர்தரு | புஜியாநின்றுள்ள |
| | | திருவயிந்திரபுரமே. | (௫) |

வ்யா—அஞ்சாம்பாட்டு. (ஆங்கித்யாதி). †" மஹாபலி தாநம் பண்ணாநின்றான்" என்று கேட்டவாறே, அவனுடைய யஜ்ஞவாடத்திலே தன்னை அர்த்தியாக்கிச்சென்று, அவன்கையில் நீர் தன்கையிலே விழுந்த வநந்தரம் அவ்விடந்தன்னிலே நின்றே பூமிப்பரப்படைய அளந்துகொண்டு, இடையர் பூத்தகொடிபோலேயிருக்கிற நப்பின்னைப் பிராட்டிக்காக. உபக்ரமம் தேட்டமான பருவமாயிற்று. (க) "𑌪𑌤𑌿𑌸𑌂𑌯𑍋𑌗𑌸𑌲𑌭𑌂 𑌵𑌯𑌃 - பதிஸம்யோக ஸுலபம் வய:" என்கிறபடியே ஒரு கொள்கொம்பிலே கூட்டில் கிடைக்குமளவாய், இல்லையாகில் தர்மலோபம் பிறக்குமளவாயிருக்கை. இனமானருஷபங்களோடே பொருதவனுடைய ஸ்தாநம்.

(க) ரா - அ - ௧௧௮ - ௩௪.

(பொன்னித்யாதி) குரக்கினமானது, பொன்போலே யிருக்கிற மலர்விளங்கா நின்றுள்ள, வேங்கை கோங்கு செண்பகக் கொம்பினில் - இவற்றிலே தாவி பெரிய வேகத்தோடேவந்து ; அவ்வருகு போக்கின்றிக்கே. (தேன் கலந்த) †தேன்மிக்கிருந்துள்ள பலாப்பழத்தை புஜியாநிற்குமாயிற்று. ... ... ... (௫)

---

அரு.—அஞ்சாம்பாட்டு, (ஆங்கித்யாதி) தனக்குத்தானே பகையான இச்சேதநனைநோக்கி அநந்யப்ரயோஜநனுக்குமவனென்கிறார் கீழ்ப்பாட்டில்; அத்தாலே அநந்யப்ரயோஜநரான அடியவர்க்கு மெய்யனுகை கேட்கவேணுமோ, ப்ரயோஜநாந்தரபரனுக்குங்கூடத் தன்னையழியமாறிக் கார்யம்செய்தானிறே என்று வாமநாவதாரவ்ருத்தாந்தத்தை யநுஸந்தித்துக்கொண்டு, அடியவர்க்குமெய்யனுகைக்கு த்ருஷ்டாந்தமாகக்கருதி, நப்பின்னையிடத்தில் வ்யாமோஹத்தால்செய்த செயலையுமநுஸந்தித்து, அவனிருந்தவிடம் ப்ராப்யமென்கிறாரென்று ஸங்கதி.

"மாவலிவேள்வியில்சென்று - இரந்து - ஆங்கு - அகலிடமளந்து" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி பலிதார்த்தமருளிச்செய்கிறார் (மஹாபலியித்யாதி).

"தெட்டபழம் - மதுச்சொரியும்" என்கிறபடியே - பலங்கனியில் தேன் சொரியுமென்றருளிச்செய்கிறார் (தேனித்யாதி). ... ... ... (௫)

மூ.—கூனுலாவிய மடந்தைதன் கொடுஞ்சொலின்திறத்திளங்கொடி
யோடும் கானுலாவிய கருமுகில் திருநிறத்தவனிடம் கவினாரும்
வானுலாவிய மதி தவழ் மால்வரை மாமதிள் புடைசூழத்
தேனுலாவிய செழும் பொழில் தழுவிய திருவயிந்திரபுரமே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கூன் உலாவிய | கூனேறின குப்ஜையி | வான் | ஆகாசத்திலே |
| மடந்தைதன் | னுடைய | உலாவிய | ஸஞ்சரிக்கிற |
| கொடும்சொலின்திறத்து | கடியபேச்சுக்காக | மதி | சந்த்ரன் |
| | | தவழ் | தவழும்படி |
| இளங்கொடியோடும் | பிராட்டியும் தானுமாய் | மாலவரை | உயர்ந்த மலைகளும் |
| | | மாமதிள் | பெரியமதிள்களும் |
| கான் | காட்டிலே | புடைசூழ | பக்கங்களிலேசூழ்ந்திருக்கப்பதாய் |
| உலாவிய | எழுந்தருளினவனாய் | | |
| கருமுகில் | கறுத்தமேகம்போன்ற | தேன் உலாவிய | வண்டுகள்ஸஞ்சரிக்கிற |
| | | செழும்பொழில் | அழகிய நீர்நிலங்களால் |
| திருநிறத்தவன் | வடிவழகையுடையவனுக்கு | | |
| இடம் | இடமாவது, | தழுவிய | சூழப்பட்ட |
| கவின் | அழகு | | திருவயிந்திரபுரமே. (௬) |
| ஆரும் | மிருக்கிருந்துள்ள | | |

வ்யா.—ஆரும்பாட்டு. (கூனித்யாதி). (௧) †“ సర్వాత్మనాన్ధః - ஸர்வாத்மநாந்த:” என்று, கண்ணில் குருடேயன்றிக்கே நெஞ்சும் குருடுபட்டிருக்கு மென்றாற்போலே, முதுகில் கூனேயன்றிக்கே நெஞ்சும் க்ரூரமாயாயிற்றிருப்பது. கூனியினுடைய கொடுஞ்சொல்லுண்டு - (௨) “రామే వా భరతే వాహం విశేషం నోపలక్షయే - ராமேவாபரதே வாஹம்விசேஷம் நோபலக்ஷயே” என்ற கைகேயி (௩) “ ఏష మే జీవితస్యాన్తో రామో యద్యభిషిచ్యతే - ஏஷமே ஜீவிதஸ்யாந்தோ ராமோயத்யபிஷிச்யதே” என்று சொல்லும்படி பண்ணின கொடிய சொல்லாயிற்று. (இளங்கொடியோடும்) கொளகொம்பு தேட்டமாயிருப்பது, அதில் தானே சென்று பற்றமாட்டாதே யிருப்பதான பருவமாயிற்று.(கானுலாவிய) †ஒருஸர்க்கமாக, பெருமாள்தாமே, “உனக்குக் காட்டில் வெம்மை பொறாது” என்றருளிச் செய்தாரிறே. (கருமுகில்) மின்கொடிதழுவ ஒருமேகம ஸஞ்சரிக்குமாபோலே, காட்டிலே யிருவருமா யுலாவினபடி.

கவினென்று அழகு; அழகு மிக்கிருந்துள்ள ஆகாசத்திலே ஸஞ்சரிக்கிற சந்த்ரனுக்கு, குழவிகள் சுரமேறுமாபோலே தவழ்ந்தேறவேண்டும்படியான ஒக்கத்தையுடைய பெரிய மலைகளையும் பெரியமதிள்களையும் சுற்றிலே யுடைததாய், வண்டுகள் ஸஞ்சரியாநின்றுள்ள அழகிய பொழிலாலே சூழப்பட்ட திருவயிந்திரபுரமே. †முன்பு வநவாஸம் பண்ணின சக்ரவர்த்திதிருமகனுக்குத், திருச்சித்ரகூடததையும் தண்டகாரண்யததையும் விஸ்மரித்து வர்ததிக்கலாம் தேசமாயிற்று. ... ... ... (௬)

---

அரு.—ஆரும்பாட்டு. (கூனித்யாதி) ப்ரயோஜநாந்தரபரனுகிலும் தன்னையாஸ்ரயித்த இந்த்ரனுக்காகத் தன்னையழியமாறினது கேட்கவேணுமோ, க்ரூரையான கூனிசொற்கொண்டு காப்புக்கயிற்றோடே ராஜ்யம்விட்டுக் காட்டுக்கெழுந்தருளினனிறே என்று அந்த அபதாநத்தை யநுஸந்தித்து, அவனிடம் ப்ராப்யமென்கிறாரென்று ஸங்கதி.

கூனுல்வந்த அதர்சநீயதையும், “மடந்தைதன்” என்றத்தாலேசொன்ன தாருண தன்மை - நெஞ்சில் க்ரௌர்யமென்னுமத்தையும் திருவுள்ளம்பற்றி, ஸத்ருஷ்டாந்தமுபபாதிக்கிறார் (ஸாவாத்மநேத்யாதி). ஸர்வாத்மநாந்தன் - த்ருதராஷ்ட்ரன். இளங்கொடியாகில் இவளோடே கானுலாவுவானென்னெ

---

(௧) பா.ர. (௨) ரா-அ-௭-௩௰. (௩) ரா-ஆ-௩௭-௬.

ன்னவருளிச்செய்கிருர் (ஓருஸர்க்கமாகவித்யாதி). ஆயிருக்கச்செய்தேயும் கொடியாகையாலே கூடத்துடர்ந்தாளென்று கருத்து.

திருவயிந்திரபுரத்துக்குத் திருமதிள்களைச்சொல்லுகை புரவர்ணநோப யுக்தமாகிலும், மலைகளையும் மரங்களையும் வர்ணித்ததுக்கு உட்கருத்தருளிச் செய்கிருர் (முன்பித்யாதி). ... ... ... ... ... (௬)

ரூ — மின்னில்நுண்ணிடைமடக்கொடிகாரணம்விலங்கலின்மிசையிலங்கை
மன்னன்நீண்முடிபொடிசெய்த மைந்தனதிடம் மணிவரைநீழல்
அன்னமாமலரரவிந்தத் தமளியில் பெடையொடுமினிதமரச்
செங்நெலார் கவரிக்குலை வீசு தண் திருவயிந்திரபுரமே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மின்னில் | மின்போன்ற | மணிவரை | ரத்நபர்வதத்தின் |
| நுண் | ஸூக்ஷ்மமான | நீழல் | நிழலிலே |
| இடை | இடையையும்யுளாய் | அன்னம் | ஹம்ஸங்களானவை |
| மடம் | மடப்பத்தையுமுடை | மா | பெரிய |
| கொடிகாரணம் | கொடிபோன்ற பிராட்டிக்காக | அரவிந்தமலர் | தாமரைப்பூவாகிய |
| | | அமளியில் | படுக்கையில் |
| விலங்கலின்மிசை | ஸுவேலமலையின் மேல் கட்டப்பட்ட | பெடையொடும் | தங்கள்பேடையோடே |
| | | இனிது | இனிதாக |
| இலங்கை | லங்கைக்கு [டைய | அமர | தங்கியிருக்கும்படி |
| மன்னன் | ராஜாவானராவணனு | செங்நெல்ஆர்குலை | செங்நெல்நிறைந்தகுலையானது [கிற |
| நீள்முடி | பெரிய முடிகள்பத்தையும் | கவரிவீசு | சாமரம்போலேவீசு |
| பொடிசெய்த | பொடிபடுத்தின | தண | குளிர்ந்த |
| மைந்தனது | மிடுக்கனானவனுக்கு | | திருவயிந்திரபுரமே. (௭) |
| இடம் | இடமாவது, | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மின்னிதயாதி) † மின்னோடொத்த நுண்ணிய இடையையுடையளாய், ஆதமகுணங்களுக்கெல்லாந்தானே ஆஶ்ரயமாய், ஒரு உபக்நத்தோடேசேர்க்கவேண்டும்படியான பருவத்தையுடைய ஶ்ரீஜநகராஜன் திருமகள் ஹேதுவாக. † பிரிவில் ரக்ஷகனை இவ்வார்த்தை சொல்லுவிக்கும்படியான அழகிறே. (௧) † [ஹூர்வ மே சாருஹாஸி-புரேவமேசாருததிம] மாயாம்ருகத்தின்பின்னே போவதுக்குமுன்பு, "இம்மானைபபிடித்துத்தரவேணும்" என்ற கூறுவலோடே † கொடுவந்து காட்டிறறிலாகளாகில், [ஸஹ்யஸா-அநிந்திதாம்] "அவளைப்பெருமையாலே ஜகதுபஸம்ஹாரம்பண்ணினர்" என்றால், "அவளுக்காக இது செய்தவிடம், தப்பச்செய்தார்"

(௧) ரா - ஆ - ௬௪ - ௭௫.

என்னவல்லாருண்டோ? (௧) “ யுக்தமித்யேவ மேமதிஃ - யுக்தமித்யேவ மேமதிஃ” என்னுமித்தனையாகாதே. †பிராட்டியை உள்ளபடியெல்லாமறியாத வெனக்கு மிருந்தபடியிது; இனி இவளையுள்ளபடியறிவாரென்கிளைந்திருப்பார்களோ?(௨)[ ஸதீவேத்யாதி-ஸதேவேத்யாதி] †இத்தை வருக்கைக்கு நெஞ்சால்பட்ட விடர்படவேணுமே அழிக்கைக்கு. (விலங்கலித்யாதி) ஸமுத்ரவேலைசைலமாய், அதின்மேலே த்ரிகூடமாய், அதின்மேலே படைவீடாயிறேயிருப்பது; இப்படி ஒருவராலழிக்கவொண்ணாத படைவீட்டுக்கு நான் ராஜாவல்லேனோ என்று அபிமாநித்திருக்கிற பையலுடைய, தேவதைகளுடையவரங்களாலே பூண்கட்டியிருக்கிற முடிகள்பத்தும் துகளாம்படி பண்ணின மிடுக்கனானவன் வர்த்திக்கிற ஸ்தாநம்.

(மணிவரைநீழல்)ரத்நபர்வதச்சாயையிலே. (அன்னமித்யாதி) அன்னமானது, பெரியமலரான தாமரைப்படுக்கையிலே, †அதாகிறது - குளித்தல், உண்ணுதல், மதுபாநம் †பண்ணுதல், ஊடினால் ஒருவரையொருவரணித்தாகாதபடி கடக்கக் கிடக்கைக்கு வேண்டுமிடம்போரும்படி பரப்புடைத்தான படுக்கையிலே. † ஜாத்யாசண்டாளரைப் பொறுத்தாலும் ப்ரணயாபராத சண்டாளரைப் பொறுப்பாரில்லையிறே; (௩) †“பள்ளிகமலத்திடைப்பட்ட” என்னுமாபோலே. (செங்நெலாரித்யாதி) அப்படுக்கையிலே பேடையோடே இனிதமரும்படியாக, அவ்வநுபவத்துக்குத் †தண்ணீர்த்துரும்பாகையன்றிக்கே இனிதமரவீசுமாயிற்றுச் செந்நெல்; ஒருசேதநனென்று துணுக்கென்னவேண்டாதே, நிறைந்த கவரிக்கொத்தை வீசாநிற்குமாயிற்று. ... ... ... ... ... ... (௭)

---

அரு.—ஏழாம்பாட்டு. (மின்னித்யாதி) “இளங்கொடியோடும் கானுலாவிய” என்றநுஸந்தித்தவாறே அங்குண்டான அபதாநமெல்லாம் திருவுள்ளத்திலோடி அவன் மிடுக்கை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

“மின்னில்” என்ற பஞ்சமியை உபமாநார்த்தத்திலே யாக்கி யருளிச்செய்கிறார் (மின்னேடித்யாதி). சீதைகாரணமாகவென்னவமைந்திருக்க, இங்ஙன் வர்ணித்துச்சொன்னது - அழகே காரணமென்கைக்காக வென்றருளிச்செய்கிறார் (பிரிவிலித்யாதி). “இவ்வார்த்தை” என்ற வார்த்தைதானேதென்ன வருளிச்செய்கிறார் (புரேவேத்யாதி). (கொடுவேந்து) என்றவாந்தரம், ஜகத்திலுள்ளார் என்றுசேஷம். திருவடிபிராட்டியைக்கண்டபின்பு, பெரு

---

(௧) ரா-ஸு- (௨) ரா-ஆ-௬௪-௭௫. (௩) ௬,௫-௯-

மாள் பிரிவால்படுகிறபாடெல்லாமுசிதம் என்றிருந்தால் நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகள் கொண்டாடுகை கைமுதிகந்யாயஸித்தமென்கிறார் (பிராட்டியையித்யாதி). (இத்தை) - ஜகத்தை.

“மா” என்றதுக்குத்தாத்பர்யம் (அதாகிறதித்யாதி). (பண்ணுதல்) என்றவநந்தரம், என்னையொழியச்செய்தாய் என்று இவ்வளவும் கூட்டுவது. ப்ரணயகலஹம் பிறந்தால் தனியேகிடக்கவேணுமோ, பொறுக்கவொண்ணாதோவென்ன வருளிச்செய்கிறார் (ஜாத்யாசண்டாளரை யித்யாதி). திர்யக்குக்களுக்கு ப்ரணயகலஹப்ரஸக்தியுண்டோவென்ன வருளிச்செய்கிறார் (பள்ளி கமலத்தித்யாதி). (தண்ணீர்த்துரும்பாகையன்றிக்கே) என்றதுக்கு - கேவலம் தண்ணீரில் பிறந்த ஸஸ்யமாயேபோகாமே சேதநக்ருத்யமான கவரிவீசிற்றென்றும், கேவலசேதநமாய் போகப்ரதிபந்தகமாகாமலிருந்ததென்றும் தாத்பர்யம் கண்டுகொள்வது. ... ... ... ... ... ... (எ)

மூ.—விரைகமழ்ந்தமென்கருங்குழல்காரணம்வில்லிறுத்தடல்மழைக்
நிரைகலங்கிடவரைகுடையெடுத்தவன்நிலவியவிடம்தடமார் [கு
வரை வளந்திகழ் மதகரி மருப்பொடு மலை வளரகிலுந்தித்
திரைகொணர்ந்தணைசெழுநதிவயல்புகுதிருவயிந்திரபுரமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விரை | நறுநாற்றம் | ஆர் | நிறைந்த |
| கமழ்ந்த | கமழாநின்றுள்ள | வரை | மலைகளுக்கு |
| மெல் | ம்ருதுவான | வளம் | அழகாய்க்கொண்டு |
| கருங்குழல்காரணம் | கறுத்த திருக்குழலையுடைய பிராட்டிக்காக | திகழ் | விளங்காநின்றுள்ள |
| வில் | வில்லை | மதகரி | மத்தகஜத்தின் |
| இறுத்து | முறித்தவனாய், | மருப்பொடு | கொம்பையும் |
| அடல் | யுத்தோந்முகமான | மலைவளர் | மலையில்வளருகிற |
| மழைக்கு | வர்ஷத்துக்கு | அகில் | அகில்மரத்தையும் |
| நிரை | பசுக்கூட்டம் | உந்தி | தள்ளிக்கொண்டு |
| கலங்கிட | நோவுபட | திரை | அலையானது |
| வரை | கோவர்த்தநகிரியை | கொணர்ந்து | கொண்டுவந்து |
| குடை | குடையாக | அணை | சேருகிற |
| எடுத்தவன் | எடுத்துக்காத்தவன் | செழுநதி | அழகியஆறு |
| நிலவிய | நித்யவாஸம்பண்ணுகிற | வயல் | வயலில் |
| இடம் | இடமாவது, | புகு | பாய்கிற |
| தடம் | தடாகங்கள் | | திருவயிந்திரபுரமே. (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (விரையித்யாதி) நறுநாற்றம் கமழாநிற்பதாய் ம்ருதுவான கருங்குழலையுடைய ஸ்ரீஜநகராஜன்திருமகள்ஹேதுவாக வில்லை முறித்து. †(க)“[illegible]-ஸர்வகந்த:” என்கிறவஸ்து,

(க) சாந்தோக்யம்- ௩- ௧௪ -

"முடியும், முடியாது" என்றுபாராதே மேல்விழுந்து வில்லேமுறி க்கும்படியாயிற்றுக் குழலின் பரிமளம். † அதாகிறது-அவ்வருகு பெறவிருக்கிறது இவளேயாகில் நடுவுண்டான ப்ரதிபந்தகங்கள் கொடு கார்யமென்! என்றிருந்தார். (அடல்மழைக்கு)† அவளழகிலே துவக்குண்டு செய்த செயலேயன்றிக்கே, ஸ்வரக்ஷணத்தி லன்வய மில்லாத பசுக்களுக்கும் இடையர்க்குமாக மலையையெடுத்து மழை யைப பரிஹரித்தானாயிற்று. †இந்த்ரனாலே யேவப்பட்ட மேகங்கள் வர்ஷிக்க அதிலே பசுக்களும் இடையரும் நோவுபடப்புக, கோவர்த் தநகிரியைதரித்து ரக்ஷித்தானாயிற்று.(அடல் மழைக்கு)(க) †"போர் ககளத்து"என்னுமாபோலே யுதத்தோந்முகமான வர்ஷத்துக்கு.(நிரை கலங்கிட) (உ) "ஸம்வர்த்ம் - அதிவார்ததம்" என்கிறபடியே நோவு பட. (நிரைகலங்கிட அடல்மழைக்கு-வரைகுடையெடுத்தவன்). †வி ஶ்வாமித்ராதிகளோடாதல், ஜநகாதிகளோடாதல் கூட்டிச்செய்யும் ஜந்மமன்றே! தோற்றிற்றொருரு மலையையெடுததுப் பரிஹரித்தானா யிற்று.(கிலவியவிடம்) இந்தரன் வர்ஷிப்பிக்கப் பிற்பாடராய் நோவு படவிட்டாற்போலேயாகவொண்ணாதென்று, ஏற்கவே நோவு படா மே நோக்குகைக்காகவந்து நித்யவாஸம்பண்ணுகிறவிடமாயிற்று.

(தடமித்யாதி) †தடமென்று-தாழ்வரையாய், தான்வளரா நின் றுள்ளவரைபோலே அழகு விளங்காநின்றுள்ளமத்தகஜத்தினுடைய வென்னுதல்; அன்றிக்கே, தடமென்று-தடாகமாய், தடங்கள்மிக்கிரு ந்துள்ளவரைக் கழகாய்க்கொண்டு விளங்காநின்றுள்ள மததகஜத்தி னுடைய மருப்பபோடேகூட வென்னுதல். மலைக்குச்சிறபபாக ஆனைகளைச் சொல்லக்கடவதிறே. (மலைவளரகிலுந்தி) மலையிலே மநுஷ்யாதிகளால்வரும் ஸங்கோசமில்லாமையாலே, ஆகாசாவகா சத்தை இடமடைததுக்கொண்டு தான்கண்டபடி வளருகிற அகிலை வேரோடேபறித்துத்தள்ளிக்கொண்டு. (திரையிதயாதி) வர்ஷித்த வாறே,மலையருவிகளானவை ஆனைக்கொம்பையும் அகில்மரத்தையும் முறித்துத்தன் திரைகளாகிற கைகளாலேயேந்திக்கொண்டு வயலிலே வந்து புகுருமாயிற்று. அளவுபட்ட வாய்த்தலைகளாலேயாதல், கை வாய்க்காலாலேயாதல் புகுருகையன்றிக்கே, விளைவில்லாக்கடலிலே போய்ப் புகுகையுமன்றிக்கே, ஆறுதானே வயலிலேவந்து புகுருமா யிற்று. ... ... ... ... (அ)

(க) பெரி-திரு-௩-௫-அ. (உ) வி-பு-௧௧-௧௩.

அ௫.—எட்டாம்பாட்டு. (விரையித்யாதி) பிராட்டியழகில் துவக்குண்டு ராவணனைவென்ற மைந்தன் என்றார் கீழ்ப்பாட்டில்; அவ்வளவோ, அவளைக் கைப்பிடிக்கப்போனவன்றே பரிமளத்தில் நசையாலே வில்லைமுறித்த மிடுக்கையும், அவ்வளவன்றியே, க்ருஷ்ணனாய் மலையெடுத்தானென்று மநுஸந்தித்து, அந்தமிடுக்கனிருக்குமிடம் ப்ராப்யமென்கிறாரென்றுஸங்கதி.

கமழ்ந்த மென் கருங்குழல் என்றாலமையாதோ, "விரை" என்று விசேஷித்ததுக்குக் கருத்தென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வகந்த இத்யாதி). (ஜ்யா) வித்தவ்யாக்யாத்ரு வாக்யம் (அதாகிறதித்யாதி). ஒருகாமுகன், வ்யாமோஹத்தாலே கார்முகத்தை முறித்தானென்கிறவிது மிடுக்காகவேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (அவளித்யாதி). மலையெடுக்கும்படி மழைவர ப்ரஸக்தியைக் காட்டாநின்றுகொண்டு விவரிக்கிறார் (இந்த்ரனித்யாதி). மழையை யுத்தோந்முகமானதாகச் சொன்னாருண்டோவென்ன (போர்க்களத்தென்னுமாபோலே) என்கிறார். "சவைமாமுகில் பல்கணப்போர்க்களத்துச் சரமாரிபொழிந்து" என்று பெரியாழ்வாரருளிச்செய்தாற்போலே யென்று கருத்து. அர்ஜுநனைப்போலே சரக்கூடமாகக்கட்டாதே, மலையெடுப்பானென்னென்ன; இடையனானகையாலே பெருமாளைப்போலே விசாரியாதே செய்தானென்கிறார் (விஶ்வாமித்ரேத்யாதி).

ஆர்தல் - மிகுதியாய், வளர்த்தியைச் சொல்லுகிறதென் றருளிச்செய்கிறார் (தடமென்றித்யாதி). ... ... ... ... ... (அ)

மூ.—வேல்கொள்கைத்தலத்தரசர்வெம்போரினில்விசயனுக்காய்மணித்தேர்க்
கோல்கொள்கைத்தலத்தெந்தைபெம்மானிடம்குலவுதண்வரைச்சாரல்
கால்கொள்கண்கொடிக்கையெழக்கமுகிளம்பாளைகள்கமழ்சாரல்
சேல்கள் பாய்தரு செழுநதி வயல்புகு திருவயிந்திரபுரமே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கைத்தலத்து | கையில் | கைத்தலத்து | கையில் |
| வேல்கொள் | வேலையுடையரான | கொள் | கொண்டுநின்ற |
| அரசர் | துர்யோதநாதிகளு | எந்தை | என்குலநாதனான |
| வெம் | பயாவஹமான[டைய | பெம்மான் | ஸர்வேஶ்வரனுக்கு |
| போரினில் | பாரதயுத்தத்தில் | இடம் | இடமாவது, |
| விசயனுக்குஆய் | அர்ஜுநனுக்கே அநுகூலனாய் (அவனுடைய) | குலவு | எல்லாராலும்கொண்டாடப்படுகிற |
| | | தண் | குளிர்ந்த |
| மணித்தேர் | அழகியதேர்முன்னே | வரைச்சாரல் | பர்வதபார்ஶ்வத்தில் |
| கோல் | உழவுகோலை | கால் | வெற்றிலைக்கால்கள் |

| | | | |
|---|---|---|---|
| கண்கொள் | கண்தோறும் கிளைக்கி[ற | சேல்கள் | சேல்மத்ஸ்யங்கள் |
| கொடி | கொடியானது | பாய்தரு | பாய்கிற |
| கையெழ | கையெழாநிற்குமதாய் | செழுநதி | அழகிய ஆருனது |
| கமுகு | பாக்குமரங்களின் | வயல்புகு | வயலில் பாயாநின்றுள்ள |
| இளம்பாளைகள் | இளைதானபாளைகள் | | திருவயிந்திரபுரமே. (௯) |
| கமழ் | பரிமளியாநிற்கிற | | |
| சாரல் | பர்யந்தத்தையுடைத்தாய் | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வேலித்யாதி). †பகதத்தனில்குறைந்தாரில்லையிறே அங்கேறினபேரில்;(க) ஸ்ரீஸம்ஸத்தோத்ஸவு-பார்த்தம் ஸஞ்சாத்யபண்ணவேண்டும்படியிறே. (அரசர்)பரிகரம்தூசியேற ராஜாக்கள்கடக்கநிற்கையன்றிக்கே, ராஜாக்களே தூசியேறினபோராயிற்று. (வெம்போர்)பாரதஸமரமென்றால் கேட்டவர்களுக்கும்வயிறெழுக வேண்டும்படியான யுத்தத்திலே, காணவந்தசோழர்க்கும் தங்களை நோக்குகைக்குக் கையிலே ஓராயுதம்பிடித்துக்கொண்டு நிற்கவேண்டும்படி பயாவஹமிறே. (விசயனுக்காய்)†அர்ஜுநனுக்காகத் தன்னை அழிவுக்கிட்டு. †ரதியைச்சீறினவன் ஸாரதியையிறே யழியச்செய்வது.†உடம்புக்கு ஈடு இடாதே தன்னை அழிவுக்கிட்டு நின்றுனாயிற்று. †தான்கொண்டவிஜயமும் அர்ஜுநன்தலையிலே கிடக்கும்படி தன்னைத்தாழவிட்டு வைத்தானாயிற்று. (உ)†"மலைபுரைதோள்" இத்யாதி. (மணியித்யாதி) ஶ்லாக்யமான தேரிலே, கையிலே உழவுகோலைக் கொண்டுநின்ற என்குலநாதனுடைய ஸ்தாநம்.

(குலவித்யாதி)†கொண்டாடப்பார்த்தால் தன்னையேகொண்டாடும்படியாயிருக்கிற குளிர்ந்த மலைச்சாரலிலே-பாயந்தத்திலே. (கால்கொள்கண்கொடி)காலுண்டு-†வெற்றிலைக்கால்; அதுமறையும்படியாகக்கண்தோறும்†பலலிபற்றுமாயிற்று வெற்றிலைக்கொடி. அக்கொடிகள், கமுகுகளினுடைய இளம்பாளைகள் விரிந்த பரிமளத்தாலே வெருவிட்டாற்போலேயிருக்க, கையெழாநிற்கும். கையென்று - வெற்றிலைக்கிளைகளிறே. இப்படிப்பட்டசோலையையுடைத்தாய், இச்சோலைக்கணித்தாயிறே ஆறுமிருப்பது. அப்பரிமளத்திலே மதுபாநம்பண்ணினாற்போலேகளித்து சேல்கள் பாயாநிற்குமாயிற்று. இப்படியிருக்கிற அழகிய நதியானது வயலிலேபுகுமாயிற்று. அதாவது - இவ்வயலளவுமாயிற்று ஆறாய் வருவது; இங்கேவந்தவாறே வயலிலேபுகுந்தாயிற்றுப்போவது.

---

(க) பாரத- (உ)

ஆக, தாரகம் தார்யத்துக்குள்ளே மறைந்திருக்கும் தேசமாயிற்று. தான் வெல்லச்செய்தேயும், "அர்ஜுநன்வென்றான்" என்று சொல்லலாம்படி க்ருஷ்ணன் அவனுக்குப் பரிகரமாய் அந்தர்ப்பவித்தாற்போலே, தான் விளைவிக்கச்செய்தே "வயல்விளைந்தது" என்று சொல்லலாம்படியாயிற்று இருப்பது. ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (வேலித்யாதி). மலையெடுத்து மழைதடுத்தானென்று க்ருஷ்ணாவதாரம் ப்ரஸ்துதமானவாறே, அவனுடைய ஆஸ்ரித பக்ஷபாதத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

போரில்வருமரசர்க்கு ஆயுதங்களநுக்தஸித்தமன்றோ,விசேஷிப்பானென்னென்ன; கருத்தருளிச்செய்கிறார் (பகதத்தனிலித்யாதிவாக்யத்வயத்தாலே). "ఉరసాచ్ఛాదయామాస పార్థం సఞ్ఛాద్య మాధవః - உரஸாச்சாதயாமாஸ பார்த்தம் ஸஞ்ச்சாத்யமாதவ:" என்கிறபடியே பகதத்தன்விட்ட அஸ்த்ரத்தை க்ருஷ்ணன் தன்மார்விலேற்று அர்ஜுநனை ரக்ஷிக்கவேண்டுமானால், அவனிலும் மிகுத்த அரசர்வேல்கள் க்ரூரங்களென்கைக்காக விசேஷித்தாரென்று கருத்து. "விசயன் மணித்தேர்க்கோல்கொள்" என்றத்தாலே - தன்மேன்மையழித்து ஸாரதியாய் தன்னை அம்புக்கிலக்காக்கினமை தோற்றுகிறதென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (அர்ஜுநனுக்காகவித்யாதி). ரதிக்கன்றோ அழிவென்ன வருளிச்செய்கிறா (ரதியையித்யாதி). "விசயனுக்காய்" என்றது-விஜயனுக்கேயாயென்று ஸாவதாரணமாக்கித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உடம்புக்கித்யாதி). ஸ்வரக்ஷணாதத்மாக உடம்பிலே கவசம்போடாமலிருந்தானென்று கருத்து. பார்த்தர்க்காயென்னாதே, "விசயன்" என்று அவனை நிரூபித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (தானித்யாதி). தான்கொண்டவிஜயம் அவன்மேலே யேறிட்டதுக்கு ப்ரமாணம் (மலையித்யாதி). "அலைவலை" என்கையாலே - தான்செய்தவிஜயத்தையெல்லாம் அர்ஜுநன்மேலே யேறிட்டுத் தானேகொண்டாடினானென்று கருத்து.

குலவுதல் - குலாவுதலாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (கொண்டாடவித்யாதி). (வெற்றிலைக்கால்) என்றது - வெற்றிலைக்கொடிவளரும்படியான கொள்கொம்பு, (பல்லிபற்றுகை) கிளைக்கை. ... (௯)

ம்.—மூவராகியவொருவனை மூவுலகுண்டுமிழ்ந்தளந்தானைத் [த்து
தேவர்தானவர் சென்றுசென்றிறைஞ்சத் தண்திருவயிந்திரபுர
மேவுசோதியைவேல்வலவன கலிகன்றிவிரித்துரைத்த
பாவுதண்டமிழ் பத்திவை பாடிடப பாவங்கள் பயிலாவே. (௧௦)

திருமங்கை யாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மூவர்ஆகிய | ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரரூபியான | மேவு | நித்யவாஸம்பண்ணுகிற |
| ஒருவனை | அத்விதீயனாய், | சோதியை | தேஜஸ்வியானவன் விஷயமாக |
| மூவுலகு | மூன்றுலோகங்களை | | |
| உண்டு | அமுதுசெய்து [யும் | வேல்வலவன் | வேலாலேயெதிரிகளை ஜயிக்கவல்ல |
| உமிழ்ந்து | வெளியில் புறப்படவி[ட்டு | கலிகன்றி | ஆழ்வார் |
| அளந்தானை | (மஹாபலிபக்கலில்நின்றும்மீட்டு) அளந்துகொண்டவனை | விரித்து | விஸ்தரித்து |
| | | உரைத்த | அருளிச்செய்ததாய் |
| | | பாவு | பரந்த |
| தேவர் | தேவர்களும் [ய், | தண் | அழகிய |
| தானவர் | அஸுரர்களும் | தமிழ் | தமிழ்பாஷையான |
| சென்றுசென்று | பலகால்சென்று | இவைபத்து | இப்பத்துப்பாட்டை |
| இறைஞ்ச | ஆஸ்ரயிக்கலாம்படி | பாடிட | பாட [யும் |
| தண் | ஸ்ரமஹரமான | பாவங்கள் | பாபங்கள் |
| திருவயிந்திரபுரத்து | திருவயிந்திரபுரத்தி[லே | பயிலா | சேரமாட்டா. (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு.(மூவரித்யாதி)ப்ரஹ்மருத்ராதிகளுடைய சரீரத்துக்கும் ஆத்மாவுக்கு மந்தராத்மதயாநின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப்பண்ணுகையாலும், ஸ்வேநரூபேணநின்று பாலநத்தைப் பண்ணுகையாலும்; (மூவராகிய ஒருவனை) (௧)†"ब्रह्मविष्णुशिवात्मिकाम्- ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகாம்"ஆக ஸர்வநியந்தாவாயிற்று.(மூவுலகித்யாதி)ஆபத்ஸகனுமாயிற்று.(தேவரித்யாதி)(௨) "देवानां दानवानां च தேவாநாம் தாநவாநாஞ்ச" என்கிறபடியே, தன்னாலே ஸ்ருஜ்யரானவர்களிரண்டு திறத்தார்க்குமொத்திருக்கையாலே, தந்தாமுடைய அபேக்ஷிதஸித்திக்காக தேவர்களுக்கும் அஸுரர்களுக்குமடையச் சென்றாஸ்ரயிக்கலாம்படி திருவயிந்திரபுரத்திலே நித்யவாஸம் பண்ணி, அத்தாலே பரமபதத்திற்காட்டிலு முஜ்ஜ்வலனாயிருக்கிறவனை. †எல்லாமில்லையிறே பரமபதத்தில்; இவர்களுக்கு அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுகையால் வந்தவேற்றமுண்டிறேயிங்கு.

(வேல்வலவன்) (௩) "ஆழிவலவன்" என்னுமாபோலே. (விரித்துரைத்த) சொல்லுகிற லக்ஷணங்களுண்டாம்படிசொன்ன.†"விரித்துரைத்த" என்றும்,"தொகுத்துரைத்த" என்றுமுண்டிறே. சிஷ்டர்கென்ன நெஞ்சிலே படும்படிபண்ணுகையும், இவர்களுக்குப் பரக்கச் சொல்லுகையும், இவையெல்லாம் வேணுமிறே. (பாவு) பரந்து.

(௧) வி-பு-௧-௨-௬௬. (௨) ஜி-ஸ்தோ-௨. (௩) ௩-திரு-௭௧.

ஸபாதலக்ஷமாயிருக்கையன்றிக்கே பத்தாயிற்று. (பாவங்கள் பயிலாவே) பாபாநுபவம் பண்ணுகைக்காகவிறே ஸம்ஸாரத்திலே பிறக்கிறது, அவையநுபவிக்கவந்த வித்தேசத்திலே இத்தையதிகரிக்கில்; அவைதான் "நமக்கிருப்பிடமல்ல" என்று விட்டோடிப்போம்.(௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



---

அரு.—பத்தாம்பாட்டு. (மூவரித்யாதி). "ஸ்ருஷ்ட்டி ஸ்த்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் விஷ்ணுவேபண்ணுகிறான்" என்றதுக்கு ப்ரமாணம் (ப்ரஹ்மேத்யாதி)."సృష్టిస్థిత్యన్తకరణీం బ్రహ్మవిష్ణుశివాత్మికామ్ । ససంజ్ఞాం యాతి భగవానేక ఏవ జనార్దనః - ஸ்ருஷ்ட்டி ஸ்த்தித்யந்த கரணீம் ப்ரஹ்மவிஷ்ணு சிவாத்மிகாம் | ஸஸம்ஜ்ஞாம் யாதி பகவாநேக எவ ஜநார்த்தநః" என்று ப்ரமாண சேஷம். (எல்லாமில்லையிறே) என்றது - அநுகூல ப்ரதிகூலவிபாகமில்லையிறேயென்கை.

நெஞ்சிலேபடும்படி ஸங்க்ரஹமாக உரைக்கவமையாதோ, விரித்துரைப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (விரித்தித்யாதி). அதிஸங்க்ரஹ விஸ்தரமாகச் சொன்னாரென்கை. ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றாம்பத்தில் முதல் திருமொழி முடிந்தது.



ஆழ்வார்திருவடிகளே சரணம்.

# பெரிய திருமொழி, ௯ - ம் பத்து, உ - ம் திருமொழி

## ஊன்வாடப்ரவேசம்.



வ்யா.—(க)†"அடியவர்க்குமெய்யனாகிய தெய்வநாயகன்" என்று †ஆஶ்ரிதர்க்குஸுலபனாகைக்காகத திருவயிந்திரபுரத்திலே ஸந்நிஹிதனானென்றார் - கீழ்; அவன்படி இதுவானபின்பு, விரோதியான தேஹத்தைக்கழித்து பகவத்ப்ராப்திபண்ணவேண்டியிருப்பார்க்கு §(சரீரத்தையொறுத்து ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேண்டா, அவனுகந்து வர்த்திக்கிற திருச்சித்ரகூடத்தை யாஶ்ரயியுங்கோளென்கிறார்). (உ) "மன்னுமழல்நுகர்ந்தும வண்டடத்தினுட்கிடந்தும்" என்கிறபடியே - கோடைகாலம் பஞ்சாக்நிமத்யஸ்த்தராயும், சீதகாலம் தடாகங்களிலே அகமர்ஷணம்பண்ணியும், அதிலே பாசியேறக்கிடந்தும், இப்படி சரீரத்தையொறுத்து, அப்பக்ஷராயும், வாயுபக்ஷராயும், சாகமூலபலாதிகளை புஜித்தும் தபஸ்ஸுபண்ணிக்லேசிக்கவேண்டா; ப்ரளயாதயாபத்துக்களில் அபேக்ஷாநிரபேக்ஷமாக ரக்ஷிக்கும் ஸ்வபாவனாய், ராவணஹிரண்யாதிகளாலே நலிவு வந்தகாலத்து ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்பண்ணி ரக்ஷித்ததும், இப்படி ஸர்வப்ரகாரமாக ஸர்வரக்ஷகனான ஸர்வேஶ்வரன், ஶ்ரிய:பதி, திருச்சித்ரகூடத்திலே ஸந்நிஹிதனானன், அததேசததைசசென்று சேரவே ஸகலவிரோதிகளும்போய் அவனைபபெறலாம். சடக்கென அத்தேசத்திலேசென்று சேருங்கோளென்று பரோபதேசம் பண்ணுகிறார். ... ... ... ... *

---

அரு.—ஊன்வாடப்ரவேசம்.—திருவயிந்திரபுரத்திலே*அடியவர்க்கு மெய்யனாய் தெய்வநாயகனிருக்கையால் அங்கேதானே ஆஶ்ரயிக்கச்சொல்லலாயிருக்க, "திருச்சித்திரகூடத்தில்சென்று சேர்மின்கள்" என்று உபதேசிப்பானென்னென்கிற சங்கையிலே ஸங்கதியருளிச்செய்கிறார் (அடியவர்க் இத்யாதி). (ஆஶ்ரிதர்க்கு) என்றது - திருமேனியோடிருக்கு மாஶ்ரிதர்க்கென்றபடி.

---

(க) ௯-க-௯-

(உ) பெரியதிருமடல

§ குணடலிதம் க்வாசித்கம்.

மூ.—ஊன்வாட வுண்ணாதுயிர் காவலிட்
டுடலில்பிரியாப் புலனைந்தும் நொந்து
தாம் வாடவாடத் தவம் செய்யவேண்டா
தமதாவிமையோ ருலகாளகிற்பீர்
கானாட மஞ்ஞைக் கணமாட மாடே
கயலாடு கானீர்ப் பழனம் புடைபோய்த்
தேனாட மாடக் கொடியாடு தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இமையோருல | பரமபதத்தை | ஆட | அசையுமபடியாக |
| தமதா [கு | தங்களதாக | மஞ்ஞைக்கண | மயிலதிரள்கள் |
| ஆளகிற்பீர் | ஆளவேண்டியிருக்கு மவர்களே! | ஆட [ம் | ஆடவும |
| | | மாடே | பக்கத்திலே |
| ஊன் | மாம்ஸமானது | கயல் | கயல்மத்ஸ்யங்கள் |
| வாட | வற்றியுலரும்படி | ஆடு | ஸஞ்சரிக்கிற |
| உண்ணாது | போஜநாதிகளைத் த விர்ந்து | நீர் | நீரோடுகிற [டைய |
| | | கால் | வாய்க்கால்களையு |
| உயிர் | ப்ராணனை (போகாத படியாக நீர் காற் றுமுதலானவற்றா | பழனம்புடை போய் | நீர்நிலங்களினருகே போய் |
| | | தேன் | வண்டுகள் |
| காவலிட்டு | சிறையிலிட்டு [ல்) | ஆட | மேலேயெழப்பறக்க (அக்காற்றாலே) |
| உடலில்பிரியா | சரீரத்தை விட்டுப் போகாத | மாடம் | மாடங்களிலுள்ள |
| ஐந்துபுலனும் | ஐந்து இந்த்ரியங்களு | கொடி | கொடிகள் |
| நொந்து | வருந்தி [ம | ஆடு | அசையாநிற்கிற |
| தாம் | தாங்கள் [க்கும்படி | தில்லைத்திருச்சி த்திரகூடம் | தில்லைத்திருச்சித்திர கூடத்தை |
| வாடவாட | மேலமேலும க்லேசி | | |
| தவம்செய்யவே ண்டா | தபஸ்ஸு பண்ணவே ண்டாம்; | சென்றுசேர்மி ன்கள் | சென்றுசேருங்கோ ள். (௧) |
| கான் | வநமானது | | |

வ்யா-முதற்பாட்டு. (ஊன்வாட) மாம்ஸமானது குறைய அசந†வஸநாதிகளைக்குறைத்து, ப்ராணன்களைப்போகாதபடி அப்பக்ஷண வாயுபக்ஷணங்களாலே காற்கட்டி, சரீரத்தை விட்டுப்போகாத இந்த்ரியங்களைந்தும் ஸ்வஸ்வவிஷயங்களைப்பெறாமையாலே நொந்து ஈடுபடும்படி தாங்கள் †மேன்மேலும் க்லேசிக்கும்படி தபஸ்ஸு பண்ணவேண்டா. (தமதாவித்யாதி) †பரமபதத்தைத தங்களதாக ஆளவேண்டியிருப்பீர்!

(காருடை) சோலையசையும்படியாக † மயிலினங்களாட, அத்தாலே சோலையில்நின்றும் கிளம்பின வண்டுகளானவை, அச்†சோலையருகே கயல்கள்களித்துப்பாயாநின்றுள்ள†நீரோடு காலையுடைத்தாயிருக்கிற நீர்நிலங்கள் †அருகிட்டுப்போய், தேனுண்டு - வண்டுகளானவை, மேலேயெழப்பறக்க, அக்காற்றாலே மாடத்திலுண்டான கொடிகளானவை அசையாநிற்குமாயிற்று. ... ... (௧)

அரு.—முதற்பாட்டு. (ஊனித்யாதி) "உண்ணாது" என்றது - உடாமைக்கு உபலக்ஷணமா யருளிச்செய்கிறார் (வஸநாதிகளை) என்று. "வாடவாட" என்ற மீமிசையினர்த்தம் (மேன்மேலும் க்லேசிக்கும்படி) என்றது. "இமையோருலகு - தமதா ஆளகிற்பீர்" என்றர்வயித் தருளிச்செய்கிறார் (பரமபதத்தையித்யாதி).

"மஞ்ஞைக்கணம்" என்றதினர்த்தம் (மயிலினங்கள்) என்றது. "மாடே" என்றதினர்த்தம் (சோலையருகே) என்றது. "நீர் - கால் பழனம்" என்றர்வயித்து அர்த்தமருளிச்செய்கிறார் (நீரோடித்யாதி). "புடை" என்றதினர்த்தம் (அருகிட்டு) என்றது. ... .. ... ... ... (௧)

மூ.—காயோடு நீடு கனியுண்டு வீசு
கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலமைந்து
தீயோடுநின்று தவஞ்செய்யவேண்டா
திருமார்வனைச் சிந்தையுள் வைத்துமென்பீர்
வாயோது வேதம் மல்கின்றதொல்சீர்
மறையாளர் நாளும் முறையால் வளர்த்த
தீயோங்கவோங்கப் புகழோங்கு தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திருமார்வனை | ஸ்ரியபதியை | நுகர்ந்து | பாநமபண்ணி |
| சிந்தையுள் | நெஞ்சில் | நெடுங்காலம் | நெடுநாள் |
| வைத்தும்என்பீர் | வைத்துக்கொள்ளவேணுமென்பீர்! | ஐந்துதீயோடுநின்று | பஞ்சாக்நிமத்யஸ்தராய்நின்று |
| காயோடு | இளங்காய்களையும் | தவம்செய்யவேண்டா | தபஸ்ஸுபண்ணவேண்டா; |
| நீடுகனி | நெடுநாளுலர்ந்தபழங்களையும் | வாய் | வாயாலே |
| உண்டு | புஜித்து | ஓது | ஓதப்படுகிற |
| வீசு | அடிக்கிற | வேதம் | வேதமானது |
| கடுங்கால் | வெட்டியகாற்றை | மல்கின்ற | குறைவற்றிருக்கிற |

| | | | |
|---|---|---|---|
| தொல் | ஸ்வாபாவிகமான | தீ | அக்நியானது |
| சீர் | ஸம்பத்தையுடைய | ஓங்கலுங்க | வளரவளர (அத்தா |
| மறையாளர் | ப்ராஹ்மணர் | ஓங்கு | மிக்குவருகிற [லே) |
| நாளும் | நாள்தோறும் | புகழ் | புகழையுடைய |
| முறையால் | க்ரமமாக | தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று | |
| வளர்த்த | அநுஷ்டித்த | சேர்மின்கள். | (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (காயோடித்யாதி)†பருவமிளைதான காய்களையும், வெய்யிலிலும் காற்றிலுமுலர்ந்து பசையற்றகனிகளையும் புஜித்து,வீசின†வெட்டிய காற்றைப்பருகி நெடுங்காலம் பஞ்சாக்நிமத்யஸ்த்தராய் நின்று தபஸ்ஸுபண்ணவேண்டா, ஸ்ரீயஃபதியை ஹ்ருதயத்திலே பிரியாதபடி வைத்துக்கொள்வோமென்பீர்!

(வாயோதிதயாதி) வாயாலேஓதுகிறவேதம் குறைவறுகையால் வந்த ஸ்வாபாவிகஸம்பத்தையுடைய ப்ராஹ்மணர் என்று மொக்க முறையாலே அநுஷ்டித்த அக்நி வளரவளரப் புகழோங்காநின்றுள்ள தில்லை. ... ... ... ... ... ... (௨)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (காயித்யாதி) ஊன்வாடவுணணுதார் உயிரைக் காவலிடும்படி யெங்ஙனேயென்ன; அத்தை விவரியாநின்றுகொண்டு தபஸ்ஸினுடைய துஷ்கரதையையும் காட்டுகிறாரென்று ஸங்கதி.

நீடுகனி - நெடுநாளுலர்ந்த கனியென்றாய், அங்ஙன்காய்க்கு விசேஷணமிடாமையால், இளங்காயென்று ப்ரகரணததுக்குச் சேர வருளிச்செய்கிறார் (பருவமித்யாதி). (வெட்டிய) உஷ்ணமான. ... ... ... (௨)

மூ.—வெம்பும் சினத்தடி புனக்கேழலொன்றாய்
விரிநீர் முதுவெள்ள முள்புக்கழுந்த
வம்புண்பொழில்சூழுலகன்றெடுத்தா
னடிப்போதணைவான் விருப்போடிருப்பீர்
பைம்பொன்னு முத்தும் மணியுங் கொணர்ந்து
படை மன்னவன் பல்லவர்கோன் பணிந்த
செம்பொன் மணிமாடங்கள் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்களே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வம்பு | புதிதாய் [ன | முதுநீர்வெள்ள | மஹாஜலமானகடலி |
| உண் | ஊணுக்குவிஷயமா | முள்புக்கு | லேப்ரவேசித்து |
| பொழில் | சோலை | அழுந்த | மக்னையாக |
| சூழ் | சூழ்ந்த | அன்று | அப்போது |
| உலகு | பூமியானது | வெம்புஞ்சினம் | மிக்ககோபத்தையு |
| விரி | பரந்த | | டைத்தாய் |

| | | | |
|---|---|---|---|
| புனம் | காட்டிலேவர்த்திக்கி | மணியும் | மாணிக்கங்களையும் |
| ஒன்று | ஒப்பற்ற [ற | கொணர்ந்து | கொண்டுவந்து |
| கேழலாய் | மஹாவராஹமாய்க் கொண்டு | படை | பரிகரத்தோடேகூட |
| | | மன்னவன் | ராஜாவான |
| எடுத்தான் | அத்தை இடந்தெடுத் தவனுடைய [ளை | பல்லவர்கோன் | பல்லவராஜா |
| | | பணிந்த | ஆச்ரயித்ததாய் |
| அடிப்போது | திருவடித்தாமரைக | செம்பொன் | அழகியபொன்னாலும் |
| அணைவான் | சாரவேணுமென்கிற | மணி | மாணிக்கங்களாலும் செய்யப்பட்ட |
| விருப்போடு | ஆதரத்தோடு | | |
| இருப்பீர் | வர்த்திக்கிறவர்களே ! | மாடங்கள் | மாடங்களால் |
| பை | அழகிய | சூழ்ந்த | சூழப்பட்ட |
| பொன்னும் | பொற்பூக்களையும் | தில்லைத்திருச்சித்திரகூடம் சென்று | |
| முத்தும் | முத்துக்களையும் | சேர்மின்கள். (௩) | |

வ்யா.—மூன்றும்பாட்டு. (வெம்புமித்யாதி) மிக்கசினத்தை யுடைத்தாய் புனத்திலே வர்த்திக்கும் மஹாவராஹமொன்றாய், பரந்திருந்துள்ளகடலிலே பூமி யழுந்த, அப்போது†பல (ஃல) மூலங்களை யுடைத்தான பொழில்சூழ்ந்த பூமியை எடுத்தவனுடைய திருவடித் தாமரைகளை யணையவேணுமென்னும் விருப்பத்தோடே வர்த்திப்பீர் !

(பைம்பொன்னித்யாதி) ரத்நாதிகளைக்கொண்டு பரிகரத்தோடும் பல்லவர்கோன் பணிவதும்செய்து, செம்பொன்னாலும் மணியாலும்செய்த மாடங்கள்சூழாநின்றுள்ள தில்லை. ... ... (௩)

அரு.—மூன்றும்பாட்டு. (வெம்புமித்யாதி) "தவம்செய்யவேண்டா, திருச்சித்திரகூடம் சேர்மின்கள்" என்றீர், நாங்கள் ஸம்ஸாரப்ரளயத்திலழுந்திக்கிடக்க உத்தரிப்பனோவென்ன ; ப்ரளயார்ணவமக்நையான பூமியையெடுத்தாற்போல் உங்களை உத்தரிக்கவல்லவனென்கிறாரென்றுஸங்கதி.

வம்பு - புதிசாய், உண் - ஊணுக்குவிஷயமாய், அவற்றையுடைத்தான பொழிலென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (பலேத்யாதி).

பைம்பொன் - அழகியபொற்பூக்கள். ... ... (௩)

மூ.—அரு மாநில மன்றளப்பான் குறளா
யவுணன் பெருவேள்வியில் சென்றிரந்த
பெருமான் திருநாமம் பிதற்றி நுந்தம்
பிறவித்துயர் நீங்குதுமென்னகிற்பீர்
கரு மா கடலுள் கிடந்தா னுவந்து
கவை நா வரவினணைப பள்ளியின்மேல்
திருமால் திருமங்கையோடாடு தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்களே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | இந்த்ரன் ராஜ்யத் | நீங்குதும | போக்குவோம் [பீர்! |
| | தை இழந்தவன்று | என்னகிற்பீர் | என்றுசொல்லியிருப் |
| அரு | அளக்கவரிதான | கருமா | கறுத்துப்பெரியதான |
| மாநிலம் | மஹாப்ருதிவியை | கடலுள் | திருப்பாற்கடலிலே |
| அளப்பான் | அளக்கைக்காக | கலைவநா | இரண்டுநாவையுடை |
| குறளாய் | வாமநரூபியாய் | | ய |
| அவுணன் | அஸுரனை மஹா | அரவினணைப்ப | திருவனந்தாழ்வாரு |
| | பலியினுடைய | ள்ளியின்மேல் | கிற படுக்கையிலே |
| பெருவேள்வியி | மஹாயாகத்தில | வந்து | உகந்து [ன |
| ல் | | கிடந்தான | பள்ளிகொண்டருளி |
| சென்றுஇரந்த | சென்றுஅர்த்தித்த | திருமால் | ஸ்ரீயஃபதி |
| பெருமான் | ஸர்வேஸ்வரனுடைய | திருமங்கையோ | பெரியபிராட்டியா |
| *திருநாமம் | திருநாமததை [லி | டு | ரோடே |
| பிதற்றி | அடைவுகெடச்சொல் | ஆடு | நித்யவாஸமபண்ணு |
| நீர்தம் | உஙகளுடைய | | கிற |
| பிறவித்துயர் | ஜந்மதுஃகத்தை | தில்லைத்திருச்சித்திரகூடம் சென்று | |
| | | சேர்மின்கள். | (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (அருமாவிதயாதி) அளக்கவரிதான மஹாப்ருதிவியை அளக்கைக்காக வாமநனாய், அஸுரனுடைய மஹாயாகத்திலே சென்றர்த்தித்த ஸர்வேஸ்வரனுடைய திருநாமத்தை அடைவுகெடப்பேசி உங்களுடைய ஜந்மதுஃகத்தைப்போக்குவோமென்று சொல்லியிருப்பீர்!

(கருமாவென்று தொடங்கி) இரண்டு நாவையுடைய திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலே, † கறுத்துப் பெருத்த கடலிலே உகந்து கண்வளர்ந்தருளின ஸ்ரீயஃபதி பெரியபிராட்டியாரோடே கூடவிடாதே ஸஞ்சரிக்கிற தில்லை. ... ... ... ... ...(௪)

---

அரு.—நாலாம்பாட்டு. (அருமாவிதயாதி). ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு அவன் பரமப்ரணயியாகையாலுதவினனேயாகிலும, அதுகொண்டு நாஙகள தேறும படியெங்ஙனேயென்ன; தன்னை அர்த்தித்தாககாகவே தானர்த்தியாய்க் கார்யம்செய்து தலைககட்டினவனன்றோ, உங்களபேக்ஷிதமும், செய்வனென்றருளிச்செய்கிறாரென்று ஸஙகதி.

"கடல்கள்தோறும் கணவளாந்தருளுமென்றொரு ப்ரமாணப்ரஸித்தியுண்டு" என்று முன்னே தாம நிர்வஹித்தநிர்வாஹத்தைத திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (கறுத்துப்பெருததகடலிலே) என்று. ... (௪)

மூ.—கோமங்க வங்கக் கடல் வைய முய்யக்
குலமன்ன ரங்கம் மழுவில் துணியத்
தாமங்கமருள் படைதொட்ட வென்றித்
தவமா முனியைத் தமக்காக்ககிற்பீர

பூமங்கை தங்கிப் புலமங்கை மன்னிப்
புகழ் மங்கையெங்கும் திகழப் புகழ்சேர்
சேமங்கொள் பைம் பூம் பொழில் சூழ்ந்த தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர் மின்களே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கோ | ராஜாக்கள் | ஆக்ககிற்பீர் | ஆக்கிக்கொள்ளவே |
| மங்க | நசிக்கவும் [ந்த) | | ண்டியிருப்பீர் ! |
| வங்கம் | மரக்கலங்கள் (நிறை | பூமங்கை | பெரியபிராட்டியார் |
| கடல் | கடல்சூழ்ந்த | தங்கி | (திருமார்விலே) தங்கி |
| வையம் | பூமியிலுள்ளார்[கவும் | | யும் |
| உய்ய | உஜ்ஜீவிக்கும்படியா | புலமங்கை | ஸ்ரீபூமிப்பிராட்டி |
| குலமன்னர் | ராஜாக்களுடைய | மன்னி | (இடவருகே) பொரு |
| அங்கம் | சரீரமானது | | ந்தியும்(அத்தாலே) |
| மழுவில் | மழுவிலே | புகழ் | கீர்த்தியாகிற |
| துணிய | துணியும்படியாகவும் | மங்கை | ஸ்த்ரீ |
| தாம் | தாமே | எங்கும் | எங்குமொக்க |
| அங்கு | அப்போதுண்டான | திகழ | உஜ்ஜ்வலமாய்விளங் |
| அமருள் | பூசலிலேபுக்கு | | காநிற்க |
| படைதொட்ட | ஆயுதமெடுத்த [ய் | புகழ்சேர் | புகழையுடைத்தாய் |
| வென்றி | ஜயத்தையுடையவனை | சேமம்கொள் | அரணையுடைத்தான |
| தவம் | பின்பு தபஸ்ஸுபண் | பைம்பூம்பொழி | பரந்துபூத்தசோலை |
| | ணப்புக்க | ல்சூழ்ந்த | யால்சூழப்பட்ட |
| மாமுனியை | மஹாமுனியான ஸ்ரீ | தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று | |
| | பரசுராமாழ்வானை | சேர்மின்கள். | (ரு) |
| தமக்கு | தந்தாமுக்கு | | |

வ்யா—அஞ்சாம்பாட்டு. (கோமங்கவித்யாதி) ராஜாக்களென்று பேர்பெற்றாரடங்கலும் மங்க, கடல்சூழ்ந்தபூமி உய்ய, ராஜாக்களுடையசரீரம் மழுவிலே துணித்தவிடத்திலும் †கோபம்மாறாதே ஆயுதந்தொட்ட அதிமாத்ரமான மஹாவீர்யத்தையுடையனை ஸ்ரீபரசுராமாழ்வானைத்தந்தாமுக்காக்கிக்கொள்ளவேண்டியிருப்பீர்!

(பூமங்கையித்யாதி) பெரியபிராட்டியாரும், ஸ்ரீபூமிப்பிராட்டியாரும், நித்யவாஸம்பண்ணி புகழ் மங்கை யெங்கு முஜ்ஜ்வலமாய் வர்த்திப்பதும் செய்து, புகழையும் காப்பையுமுடைய பொழில் சூழ்ந்த தில்லை. ... ... ... ... ... ... (ரு)

அரு.—அஞ்சாம்பாட்டு. (கோமங்கவித்யாதி) இந்த்ரனுக்கு விரோதியாய் உதாரனான மஹாபலிபோலேயோ எங்களுடைய ப்ரபலவிரோதிகள் என்னும் ஜிஜ்ஞாஸுக்களுக்கு விரோதிநிரஸநசீலதையை யருளிச்செய்யக்கோலி, வாமநாவதாரத்துக்கு அநந்தரபாவியான ஸ்ரீபரசுராமாழ்வான் வீரசரித்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

மழுவில் துணித்தபின்பும் படைதொட்டிருக்கையால் பலித்தவர்த்தம் (கோபம்மாறுதே) என்று. ... ... ... ... ... (௫)

மூ —நெய் வாயழ லம்பு துரந்து முந்நீர்
துணியப் பணிகொண் டணியார்ந் திலங்கும்
மையார் மணிவண்ண னையெண்ணி நுந்தம்
மனத்தே யிருத்தும்படி வாழவல்லீர்
அவ்வாயிளமங்கையர் பேசவுந்தா
னருமாமறை யந்தணர் சிந்தை புகச்
செவ்வாய்க்கிளி நான்மறை பாடும் தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்று சேர்மின்களே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெய் | கூரிய | வாழவல்லீர் | வாழவேண்டியிருப்பீ[ர்! |
| வாய் | வாயையும் | அவ்வாய் | அவ்விடத்தில் |
| அழல் | அக்நிபோன்றதேஜஸ்ஸையுமுடைய | இளமங்கையர் | சிறுபெண்கள் (தமப்பன்மார் அத்யயநம் பண்ணக்கேட்டிருக்கையாலே,) |
| அம்பு | அம்பை | | |
| துரந்து | விட்டு | | |
| முந்நீர் துணிய | கடலைவற்றச்செய்து | அருமாமறை | அர்த்தமறிய அருமையான பெரியவேதத்தை |
| பணிகொண்டு | (அதில்) அணைகட்டினவனாய் | | |
| அணி | ஆபரணத்தாலே | பேசவும் | சொல்லவும், (அப்பெண்களுடனேகூட) |
| ஆர்ந்து | பூர்ணமாய் | | |
| இலங்கும் | விளங்காநிற்பதாய் | செவ்வாய்க்கிளி | சிவந்தவாயையுடையகிளிகள் |
| மை ஆர் | கருமைமிக்க | | |
| மணிவண்ணனை | மணிபோன்றவடிவழகையுடையவனை | அந்தணர்சிந்தைபுக | ப்ராஹ்மணர்ஹ்ருதயத்திலேபுகும்படி |
| எண்ணி | அநுஸந்தித்து | நால்மறை | நான்குவேதங்களையு[ம் |
| நுந்தம் | உங்களுடைய | பாடு | பாடுகிற |
| மனத்தே | நெஞ்சிலே [படி | தில்லைத்திருச்சித்திரகூடம் சென்று | |
| இருத்தும்படி | நித்யவாஸம்பண்ணும் | சேர்மின்கள். (௬) | |

வ்யா.—ஆறும்பாட்டு. (நெய்வாயித்யாதி) கடைந்து நெய்யிட்ட வாயையுடைத்தாய், நெருப்பையுமிழுகிற அம்பையேவிக் கடலைத்துணித்து, அத்தைப்பணிகொண்டு, †உஜ்ஜ்வலமாய் கருமை மிக்கிருந்துள்ள மணிபோலேயிருக்கிற திருநிறத்தோடே கூடின விக்ரஹத்தை யுடையவனை யநுஸந்தித்து, உங்களுடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணும்படி வாழவல்லீர்!

(அவ்வாயென்று துடங்கி)† தன்வாயில் பழுப்புபபோலே யிருக்கிற பாலை(ஷா)களானபெண்கள ஓதுதுக்கேட்ட செவியேற்றாலே சொல்லவும் ப்ராஹ்மணருடைய ஹ்ருதயத்துக்கேற, சிவந்தவாயை

யுடைத்தான இனியானது நல்ல ஸ்வரத்தோடே நாலுவேதத்தையும் பாடாநின்றுள்ள தில்லை. ... ... ... (௬)

அநு.—ஆறும்பாட்டு. (செய்வாயிதயாதி) லோகத்தில் எதிரிட்ட ராஜாக்களையென்றுகிலும் எங்களுடைய அபாரஸம்ஸாரஸமுத்ரத்தை வெல்லவல்லனோவென்ன; அநந்தராவதாரத்தில் கடலைகலக்கின அதிமாநுஷசேஷ்டிதத்தையருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

அணி - ஆபரணமாய், அத்தாலே ஆர்ந்து - பூரணமாய், இலங்குமதாயென்று விக்ரஹவிசேஷணமென்று திருவுள்ளம்பற்றியருளிசசெய்கிறார் (உஜ்ஜ்வலமாய்) என்று.

"அவ்வாயிளமங்கையா - அருமாமறை - பேசவும் அந்தணர்சிந்தைபுக, செவ்வாய்க்கிளி-தான-நான்மறைபாடு" என்றநவயம திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னிதயாதி). ... .. (௬)

மூ—மௌவல் குழலாய்ச்சி மென்தோள்நயந்து
மகரம்சுழலச் சுழல் நீர்பயந்த
தெய்வத திருமாமலர் மங்கை தங்கு
திருமார்பனை சிந்தையுள் வைத்துமென்பீர்
கௌவைக்களிற்றின் மருப்பும் பொருப்பில்
கமழ் சந்து முந்தி நிவா வலங்கொள்
தெய்வபபுனல்சூழ்ந் தழகாய தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (எ)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மௌவல் | முல்லைமலரை [ய | வைத்துமஎன்பீா | வைக்கவேணடியிருப்பீா!, (ஸிமஹத்தோடேபிணஙகுகையாலே) |
| குழல | திருக்குழலிலேயுடை | | |
| ஆய்ச்சி | நப்பினனைப்பிராட்டி | | |
| மெல் | ம்ருதுவான [யுடைய | கௌவை | பிளிறுகிற |
| தோள் | திருத்தோளோடே | களிறறின் | யானையின் |
| நயந்து | கலந்து, [மானவை | மருபபும | கொம்பையும் |
| மகரம | மத்ஸ்யமதொடக்க | பொருப்பில் | பர்வததநில் |
| சுழல | சுழலும்படி | கமழ | நறுநாறறமகமழ்கிற |
| சுழல் | சுழன்றுவருகிற | சந்தும் | சந்தநத்தையும் |
| நீர்பயந்த | கடல்பெற்ற | உந்தி | தள்ளிகொண்டுவரு |
| தெய்வமம | அழகிய | நிவா | வெள்ளாறு [கிற |
| திருமாமலாமஙகை | பெரியபிராட்டியார் | வலங்கொள் | வலஙகொள்ளாநிற்கி |
| | | தெய்வம் | அழகிய [ற |
| தங்கு | தஙகுகிற | புனல்சூழ்ந்து | ஜலம்சூழ்ந்து |
| திருமார்பனை | திருமாாவையுடைய | அழகாய | தர்சநீயமான |
| சிந்தையுள் | நெஞ்சில [வனை | தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று சேர்மினகள். (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மௌவலித்யாதி) †மௌவலோடேகூடின திருக்குழலையுடைய நப்பின்னைப் பிராட்டியினுடைய ம்ருதுவான திருத்தோளிலேகலந்து, † அங்குண்டான மத்ஸ்யங்கள் சுழலும்படி சுழன்றுவருகிற கடல் பெற்ற பெரியபிராட்டியார்தங்கும் திருமார்வையுடையவனை ஹ்ருதயத்திலே வைத்துக்கொள்வோமென்பீர்!.

(கௌவையித்யாதி) ஸிம்ஹத்தோடு பிணங்கி†பிளிறுகிற ஆனையினுடைய கொம்பும், மலையில் பரிமளிதமான சந்தநத்தையும் தள்ளிவா என்கிற ஆறு வலங்கொள்ளாநிற்கிற விலக்ஷணமான புனல் சூழ்ந்து தர்சநீயமான தில்லை. ... ... ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (மௌவலித்யாதி). "ஸம்ஸாரஸமுத்ரத்தைக் கலக்கவல்லவன் வந்திருக்கிறதேசத்தில், சென்று சேர்மின்கள்" என்னுகின்றீர், எங்களால் கிட்டப்போமோவென்ன; புருஷகாரபூதர் அருகேயுண்டு, பிற்காலியாதேசென்று சேருங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

(மௌவலோடே) என்றது - முல்லைமலரோடே என்றபடி. (அங்குண்டான) என்றது - மேலேசொல்லப்படுகிற ஸமுத்ரத்திலுண்டான என்றபடி. கௌவை - ஆரவாரமாய், (பிளிறுகிற) என்றருளிச்செய்கிறார். ... (எ)

மூ.—மாவாயினங்கம் மதியாது கீறி
மழை மா முது குன்றெடுத்தாயர்தங்கள்
கோவாய் நிரைமேய்த்துலகுண்டமாயன்
குறை மா கழல் கூடும் குறிப்புடையீர்
மூவாயிர நான்மறையாளர்நாளும்
முறையால் வணங்க வணங்காயசோதித்
தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாவின் | கேசிஎன்னும்குதிரையின் | எடுத்து | குடையாகஎடுத்து |
| வாய் | வாயையும் | ஆயர்தங்கள் | இடையர்க்குத் தலைவனாய் |
| அங்கம் | உடலையும் | கோவாய் | |
| மதியாது | ஒருசரக்காகநினையாதே | நிரை | பசுத்திரளை |
| கீறி | பிளந்துபொகட்டு, (இந்தான் வர்ஷிப்பித்த) | மேய்த்து | மேய்த்து, (ப்ரளயாபத்திலே) |
| | | உலகு | லோகத்தை [த |
| மழை | கல்வர்ஷத்துக்கு | உண்ட | திருவயிற்றிலேவைத் |
| மா | பெரிதாய் | மாயன் | ஆஶ்சர்யபூதனுடைய |
| முது | பழையதான | குறை | ஆபரணங்களால்சப்திக்கிற |
| குன்று | கோவர்த்தநமென்னுமலையை | மா | பெருமைதங்கிய |

| | | | |
|---|---|---|---|
| கழல் | திருவடிகளை [ம் | வணங்க | ஆஶ்ரயிக்க |
| கூடும் | சேரவேணுமென்னு | அணங்காய | அப்ராக்ருதமான |
| குறிப்புடையீர் | நினைவையுடையீர்! | சோதி | தேஜஸ்ஸையுடைய |
| மூவாயிரம் | மூவாயிரரான | தேவாதிதேவன் | ஸர்வேஶ்வரன் |
| நான்மறையாளர் | ப்ராஹ்மணர் | திகழ்கின்ற | விளங்குகின்ற |
| நாளும் | நாள்தோறும் [சுபடி | தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று சேர்மினகள். | (அ) |
| முறையால் | ஸ்வரூபத்துக்குத்தக் | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (மாவாயித்யாதி) கேசியுடைய வாயோடே கூடவுடம்பை அநாயாஸேந இரண்டாகக்கிழித்து, இந்த்ரனால்வந்த மழையிலே, பெருத்துப்பழைதான கோவர்த்தநத்தை யெடுத்து ஆயர்தலைவனாய்ப் பசுமேய்த்து, லோகத்தைத் திருவயிற்றிலே வைத்த ஆஶ்சர்யபூதனுடைய, ஆபரண ஒலியை யுடைத்தாய் போக்யதைமிக்க திருவடிகளைக்கூடவேணுமென்று குறிப்புடையீர்!

(முறையால் வணங்க அணங்காயசோதி) சாஸ்த்ரங்களில் சொல்லுகிறபடியே ஆஶ்ரயிக்க, அவர்களுக்காஶ்ரயணீயனாய் † தேஜஸ்ஸையுடைய ஸர்வேஶ்வரன். ... ... ... ...(அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (மாவாயித்யாதி) கீழ்ப்பாட்டிற்சொன்ன புருஷகாரபூதரை முன்னிட்டாஶ்ரயித்தார்க்கு, விரோதி பாபங்களைப்போக்கி துஷ்கேவர்ஷத்தை நீக்கித்தன்வயிற்றிலேவைத்து நோக்கவல்லனென்னுமதுக்கு த்ருஷ்டாந்தமான அபதாநங்களை ஸூசிப்பித்து அவனிருக்கும் தேசத்திலே செல்லுங்கோ ளென்கிறாரென்று ஸங்கதி.

அணங்காய - அப்ராக்ருதமான, சோதி என்றாய், அத்தையருளிச்செய்கிறார் (தேஜஸ்ஸையுடைய) என்று. ... ... ... .. (எ)

மூ.—செரு நீல வேற்கண் மடவார்திறத்துச்
சினத்தோடு நின்று மனத்தால்வளர்க்கும்
அரு நீல பாவ மகலப் புகழ்சே
ரமரர்க்குமெய்தாதவண்டத் திருப்பீர்
பெருநீர்நிவா வுந்தி முத்தங்கொணர்ந்தெங்கும்
வித்தும்வயலுள் கயல் பாய்ந்துகளத்
திருநீலநின்று திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (௯)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| செரு | யுத்தத்துக்குப்பரிகர | புகழ்சேர் | புகழையுடைய |
| | மான [ய் | அமரர்க்கும் | ப்ரஹ்மாதிகளுக்கும் |
| வேல் | வேல்போலேகூரிதா | எய்தாத | கிட்டவரிதான |
| நீலம் | நீலம்போலேகுளிர்ந் | அணடத்து | பரமபதத்தில் [பீர்! |
| | த [ராய் | இருப்பீர் | இருக்கவேண்டியிருப் |
| கண் | கண்ணழகையுடைய | பெருநீர் | மிக்கநீரையுடைய |
| மடவார்திறத்து | மடப்பத்தையுடைய | நிவா | வெள்ளாறு |
| | ஸ்த்ரீகளிடத்தில் | முத்தம்கொண | முத்தக்களைக்கொ |
| | (புஜிக்க நினைத்த | ர்ந்து | ண்டுவந்து |
| | போகங்களை விலக் | உந்தி | தள்ளி |
| | குவார்பக்கல்) | வித்தும் | விதைக்கிற |
| சினத்தோடு | கோபத்தோடு | வயலுளெங்கும் | வயல்தோறும் |
| நின்று | இருந்து | கயல் | கயல்மத்ஸ்யங்கள் |
| மனத்தால் | நெஞ்சிலாசையாலே | பாய்ந்துஉகள | குதித்துத்துள்ள |
| வளர்க்கும் | வளர்த்துவருமதாய் | திருநீலம் | அழகியநெய்தல்மலர் |
| அரு | போக்கவொண்ணாத | நின்று | எங்குமொக்கப்பரந் |
| நீலம் | தண்ணிய | திகழ்கின்ற | விளங்குகிற [து |
| பாவம் | பாபமானது | தில்லைத்திருச்சித்திரகூடம்சென்று | |
| அகல | போம்படி | சேர்மின்கள். | (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (செருவித்யாதி) யுத்தத்துக்குப் பரிகரமாய் நீலமான நிறத்தையுடைய வேல்போலேயிருக்கிற கண்ணை யுடைய ஸ்த்ரீகள் திறத்தில், அதுக்கு ப்ரதிபந்தகர்பக்கல் சினத் தோடே நெஞ்சிலாசையாலே வளர்ந்து பரிஹரிக்கவொண்ணாதே †தண்ணிதான பகவத்ப்ரதிபந்தகமான பாபம் போக பரஸித்தரான ப்ரஹ்மாதிகளுக்கும் கிட்டவரிய பரமபதத்திலே யிருக்கவேண்டி யிருப்பீர்!

(பெருநீரென்றுதுடங்கி) மிக்கநீரையுடைய நிவா என்கிறஆறுமுத்தைக்கொடுவந்து வித்துகிற வயலிலே †விக்ருதமான கயல்கள்பாய்ந்து தாவித்திரிய தர்சநீயமான நீலம் நின்று திகழாநின்றுள்ள தில்லை.

---

அரு.—ஒன்பதாம் பாட்டு. (செருவித்யாதி) தாமுபதேசித்த ஆஶ்ரயணத்துக்கு பல(ஃல) ஸ்வரூபந்தான் ப்ராப்யாந்தரநிவ்ருத்திபூர்வக பகவத்ப்ராப்தி என்று பல(ஃல) கௌரவத்தை நெஞ்சில் படுத்துகிறாரென்று ஸங்கதி.

"நீலம" என்று - கறுப்பாய், அத்தால் தண்ணிமையைச்சொல்லுகிறதென்றருளிச்செய்கிறார் (தண்ணிதான) என்று.

† (விக்ருதமான) என்றது - முத்தை வித்துகையாலே கல்லிட்டெறிந்தாற்போலே பயப்பட்டிருக்கிறதென்றபடி. நீலம் - நெய்தல். .. (௯)

மூ.—சீரார்பொழில் சூழ்ந்தழகாய தில்லைத்
திருச்சித்திரகூடத் துறை செங்கண்மாலுக்
காராத உள்ளத்தவர் கேட்டுவப்ப
வலைநீ ருலகுக் கருளே புரியும்
காரார்புயற்கைக் கலிகன்றி குன்றா
வொலிமாலையோ ரொன்பதோ டொன்றும்வல்லார்
பாராருலகை மளந்தா னடிக்கீழ்ப்
பலகாலம் நிற்கும்படி வாழ்வர்தாமே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சீர்ஆர் | அழகுமிக்க [டு | புயல் | மேகம்போலே |
| பொழில்சூழ்ந்து | சோலையாலசூழப்பட் | கை | உதாரரான |
| அழகாய | அழகையுடைத்தான | கலிகன்றி | ஆழ்வார் |
| தில்லைத்திருச்சித்திரகூடத்து | [கிற | குன்றா | குறையாத |
| உறை | நித்யவாஸம்பண்ணு | ஒலி | ஓசையையுடைத்தா |
| செங்கண்மாலு | சிவந்தகண்ணழகை | | மபடியருளிச்செய் |
| க்கு | யுடையஸர்வேஶ்வ | | த |
| | ரன்விஷயமாக | மாலை | சப்த ஸந்தர்ப்பத்தை |
| ஆராத | பகவதநுபவத்தில்த்ரு | | யுடைய |
| | ப்திபிறவாத | ஓரொன்பதோ | பத்துப்பாட்டையும் |
| உள்ளத்தவர் | ஸ்நேஹத்தையுடைய | டொன்றும் | |
| | ஸ்ரீவைஷ்ணவர்கள் | வல்லார் | அர்த்தத்துடன்கற்க |
| கேட்டு | ஶ்ரவணம்பண்ணி | | வல்லவர்கள் |
| உவப்ப | ஸந்தோஷிக்கும்படி | பார்ஆர்உலகம | பூமியையும்ஸ்வர்க்கா |
| | யாக | | திலோகங்களையும் |
| அலைநீர் | அலையெறிகிறஜலத் | அளந்தான் | அளந்துகொண்டவனு |
| | தையுடையகடலா | | டைய |
| | ல்சூழப்பட்ட | அடிக்கீழ் | திருவடிகளிலே |
| உலகுக்கு | பூமியிலுள்ளார்க்கு | பலகாலம் | ஸர்வகாலமும் |
| அருளை | ப்ரஸாதத்தையே | நிற்கும்படிவாழ் | அடிமைசெய்துவர்த் |
| புரியும் | பண்ணும்ஸ்வபாவத் | வர் | திக்கும்படியான |
| | தையுடையராய் | | வாழ்வைப்பெறுவ |
| கார்ஆர் | மிகவும்பெருத்த | | ர்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (சீராரித்யாதி) அழகுமிக்க பொழில் சூழ்ந்து தர்சநீயமான தில்லையில் நிதயவாஸம்பண்ணுகிற ஸர்வேஶ்வரனுக்கு, ஒருநாளும ஆராத †ஸ்நேஹத்தையுடைய ஸ்ரீவைஷ்ணவர்

கள்கேட்டு ஸந்தோஷிக்க, கடல்சூழ்ந்த பூமிக்கு ப்ரஸாதத்தைப்பண்ணும் †ஸ்வபாவராய், கார்காலத்து மேகம்போலே பரமோதாரரான திருமங்கையாழ்வார் குறையாத வோசையையுடைத்தாக வருளிச்செய்த திருமொழி பத்தும்வல்லார், ப்ருதிவீப்ரசுரமான லோகத்தை யளந்தவன் திருவடிகளின்கீழே காலமெல்லாம் வர்த்திக்கும்படியான வாழ்வைப் பெறுவர். ... ... ... (௧௦)

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. (சீராரித்யாதி) "உள்ளம்" என்கிறபதம் லக்ஷணயா ஸ்நேஹத்தைச்சொல்லுமென்றருளிச்செய்கிறார் (ஸ்நேஹத்தை) என்று. "அருளேபுரியும்" என்கிற அவதாரணலப்யார்த்தம் (ஸ்வபாவராய்) என்றது. ... ... ... ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றும்பத்தில் இரண்டாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - ௩ - ம் பத்து - ௩ - ம் திருமொழி

## வாடமருதிடை ப்ரவேசம்.



வ்யா.—†க்ருஷ்ணாவதாராதிகளிலிழவுதீரத் திருச்சித்ரகூடத்திலேவந்து ஸந்நிஹிதனானான், எல்லாருமாஶ்ரயியுங்கோளென்கிறார்.

---

அரு.—வாடமருதிடைப்ரவேசம். கீழ்த்திருமொழியில் ராமக்ருஷ்ணாதி விபவங்களிலபதானங்களை யாஶ்ரயிக்கைக்குறுப்பாகச்சொல்லி, "திருச்சித்திரகூடத்தில் சென்று சேர்மின்கள்" என்றார்; இதுகேட்டசேதநர்க்கு, விபவத்தில் நெஞ்சுசென்று அங்கே யாஶ்ரயிக்கையில் ருசிபிறந்து அது காலாதீதமென்று பிற்காலிக்கவும் கூடுமென்று திருவுள்ளம்பற்றி, அந்த விபவங்களில் விரோதிநிரஸநசீலதையை பஹுமுகமாக வருளிச்செய்துகொண்டு, அவனே திருச்சித்திரகூடத்துள்ளானென்று ஸம்ஸாரிகள்நெஞ்சில் படுத்துகிறாரென்னும் ஸங்கதியை ஸங்க்ரஹேண ஸூசிப்பிக்கிறா (க்ருஷ்ணாவதாரேத்யாதி). ஆதிசப்தத்தாலே ராமாவதாரமும நரஸிம்ஹாவதாரமும் சொல்லுகிறது.



மூ—வாடமருதிடைபோகி மல்லரைக் கொன்றொக்கலித்திட்
டாடல் நன் மா வுடைத்தாய ராநிரைக்கன்றிடர்தீர்ப்பான்
கூடிய மாமழைகாத்த கூத்தனென வருகின்றான்
சேடியர் பூம் பொழில் தில்லைச் சித்திரகூடத் துள்ளானே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மருதிடை | இரண்டுமருதமரங்களின்நடுவே | உடைத்து | கொன்று, |
| வாட | அவைவாடியிருந்தவளவில் | அன்று | இந்த்ரன்வர்ஷிப்பித்தவன்று |
| போகி | தவழ்ந்துபோய், | ஆயர் | இடையருடைய |
| மல்லரை | சாணூரமுஷ்டிகாதிமல்லவர்க்கத்தை | ஆநிரைக்கு | பசுக்கூட்டத்துக்குவ[ந்த |
| கொன்று | நிரஸித்து, | இடர் | துக்கத்தை |
| ஒக்கலித்திட்டு | நடைபழகினதாய் | தீர்ப்பான் | தீர்க்கைக்காக |
| ஆடல் | ஆடிக்கொண்டுவரும[தாய் | கூடிய | திரண்ட |
| நல் | அழகிதான | மாமழை | பெரியகல்வர்ஷத்தை (மலையையெடுத்து) |
| மா | குதிரைவடிவுகொண்டகேசியை | காத்த | ரக்ஷித்த |

| | | | |
|---|---|---|---|
| கூத்தன் என | மநோஹாரிசேஷ்டிதத்தையுடையவன் என்று எல்லாரும் சொல்லும்படி | உயர் | ஓங்கின |
| வருகின்றான் | வருமவன், | பூம்பொழில் | அழகியசோலைகளையுடைய |
| சேடு | இளகிப்பதித்ததாய் | தில்லைச்சித்திரகூடத்து | தில்லைத்திருச்சித்ரகூடத்திலே |
| | | உள்ளான் | நித்யவாஸம்பண்ணுகின்றான். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (வாடவித்யாதி) †அஸுராவேசத்தாலே வந்த மருதாகையாலே இவன்கிட்டக்கிட்ட அவைவாட மருதின் நடுவே போய். (மல்லரைக்கொன்று) சாணூரமுஷ்டிகரை நிரஸித்து. † ஆவாலம் கொட்டி, (ஆடல்) தன் ஸஞ்சாரத்திலே இவன் அந்ய பராணும்படி ஆடிக்கொண்டுவந்து தோற்றின கேசியைக்கொன்று, இடையருடைய பசுநிரைக்கு அன்றிடர் தீர்க்கைக்காக, இந்த்ரன் ப்ரேரித்த புஷ்கலாவர்த்தகாதி மேகங்களெல்லாம் கூடி வர்ஷித்த பெருமழையைக்காத்த மநோஹாரிசேஷ்டிதத்தையுடையவன் என்று எல்லாரும் சொல்ல வருகிறவன்.—(சேடு) இளமையும், திரட்சியும். ... ... ... ... ... (க)

---

அரு.—முதற்பாட்டு. (வாடவித்யாதி) (க)“இணைமருதிற்றுவீழ” என்னுமா போலே முறிந்துவிழுகையைச் சொல்லவேண்டியிருக்க, “வாட”என்றதுக்கு-வாடும் போதுபோனுனென்று விவக்ஷித்து ஹேதுபூர்வகம் தாத்பர்யமருளிச் செய்கிறார் (அஸுரேத்யாதி). ஒக்கலிதநிட்டு - பழகின, ஆடலுடைத்தாய் நல்லதான மா என்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆவாலமித்யாதி). (ஆவாலங்கொட்டுகை) குதிரை நடைபழக்குகைக்குக் கொட்டுகை.

மூ—பேய்மகள் கொங்கை நஞ்சுண்ட பிள்ளை பரிசிதுவென்றால்
மாநில மாமகள் மாதர் கேள்வ னிவனென்றும் வண்டுண்
பூமகள் நாயகனென்றும் புலனெ கெழு கோவியர் பாடித்
தேமலர் தூவ வருவான் சித்திரகூடத்துள்ளானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பேய்மகள் | பேயானபூதனையுடைய | பிள்ளைபரிசு என்றால் | பிள்ளையுடையப்ரகாரம் என்னக்கேட்டு, |
| கொங்கை | முலையில் | இவன் | இந்தக்ருஷ்ணன் (இளம்பிள்ளையல்லன், |
| நஞ்சு | விஷத்தை | மா | பஞ்சாசத்கோடிவிஸ்தீர்ணையான |
| உண்ட | அமுதுசெய்தருளின | | |
| இது | ஆப்சர்யமானவிச்செயல் | | |

(க) கக - ச - கூ.

| | | | |
|---|---|---|---|
| நிலமாமகள்மார் | பூமியை ப்ரகாரமாகவுடைய ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு | புலன்கெழு | கண்டார்நெஞ்சைக் கவரும்வடிவையுடைய |
| கேள்வன்என்று | வல்லபன்என்றும், | கோவியர் | இடைப்பெண்கள் |
| வண்டு [ம் | வண்டுகள் [ழுகிற | பாடி | ஸ்தோத்ரபூர்வகமாகப்பாடி |
| உண் | மதுபாநம்பண்ணவி | | |
| பூமகள் | தாமரைப்பூவைப்பிறந்தகமாகவுடைய | தேன்மலர் | செவ்விகுன்றாதபூவை |
| [ம் | பெரியபிராட்டியா | தூவ | பணிமாற |
| நாயகன்என்று | பதியென்றும் [ர்க்கு | வருவான் | வருமவன் |
| | | சித்திரகூடத்துள்ளான். (உ) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு.(பேய்மகளித்யாதி)†(பிள்ளை§யுடையபடி-பேயாய்வந்த ஸ்த்ரீயினுடைய முலையில் நஞ்சையுண்ட ஆஶ்சர்யமான செயலென்றால், "இவன் கேவலம் பிள்ளையல்லன், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு வல்லபன், பெரியபிராட்டியார்க்கு நாயகன்" என்று கண்டாருடைய இந்த்ரியங்களைப் பிணிக்கும் வடிவையுடைய இடைப்பெண்கள்பாடி,செவ்விபபூவைத தூவ வருமவன். †(பொலன்கெழு கோவியர்) என்று - பொன்னாலேசெய்த ஆபரணத்தையுடைய கோவியரென்னவுமாம். ... ... ... ... ... (உ)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (பேயித்யாதி) கோவர்த்தநோத்தரணாதி அதிமாநுஷசேஷ்டிதங்களைச்செய்தவனை சித்ரகூடத்துள்ளானென்றறிந்து நிஶ்சயிக்கும்படி யெங்ஙனே? என்னும் ஜிஜ்ஞாஸையிலே; இடைப்பிள்ளையா யிருக்கச்செய்தே ஶ்ரியஃபதியென்று நிஶ்சயித்தார் இடைப்பெண்கள் கண்டீர்களே, அங்ஙனே நீங்களும்கொள்ளுங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

"பிள்ளைபரிசு - பேய்மகள் கொங்கைநஞ்சுண்ட - இதுவென்றால், மாநிலம்" இத்யாதி என்றந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (பிள்ளையித்யாதி). (பிள்ளையுடையபடி) என்று சில ஸ்ரீகோசங்களிலுண்டாயிருக்கும்; அப்போது அந்வயத்திலே திருவுள்ளம். அன்றிக்கே, சில ஸ்ரீகோசங்களில் (பிள்ளையுடையபடியே) என்று முண்டு; அப்போது, பிள்ளையைப்போலே மாநுஷ்யமானபடியே என்றாய், "பேய்" என்றும் "மகள்" என்றும் சொன்ன பதத்வயத்துக்கும் - பேயானது மநுஷ்யவேஷங்கொண்டதென்று கருத்தருளிச்செய்கைக்கு த்ருஷ்டாந்தமென்று கொள்ளவேணும்; இப்போது யதாவஸ்திதமே அந்வயம். பொலன் - ஆபரணம், கெழுமுகை - சேருகையாய், அருளிச்செய்கிறார் (பொலனித்யாதி). ... ... ... (உ)

---

§ குண்டலிதம் அரும்பதத்துக்குப் பாடாந்தரமாயினும், ப்ராசீந வ்யாக்யாந ஸ்ரீகோசங்களிலெல்லாம் "பிள்ளையுடைய" என்றே காண்கிறது.

மூ.—பண்டிவன் வெண்ணெயுண்டானென் றாய்ச்சியர்கூடி§யிழிப்ப
எண்டிசையோரும் வணங்க விணை மருதூடு நடந்திட்
டண்டரும் வானத் தவரு மாயிர நாமங்களோடு
திண்டிறல் பாட வருவான் சித்திரகூடத் துள்ளானே. (௩)

| பதம். | உரை. | உரை. | பதம். |
|---|---|---|---|
| இவன | இச்சிறப்பிள்ளை | நடந்திட்டு | தவழ்ந்துபோய் |
| வெண்ணெய் உண்டானென்று | வெண்ணெயைக் களவுகண்டு அமுதுசெய்தானென்று | அண்டரும் | நித்யஸூரிகளும் |
| ஆய்ச்சியர் | இடைப்பெண்கள் | வானத்தவரும் | ப்ரஹ்மாதிகளும் |
| கூடி | திரண்டு | ஆயிரநாமங்களோடு | ஸஹஸ்ரநாமங்களைச் சொல்லி, (அவனுடைய) |
| இழிப்ப | பழிக்க | திண் | திண்ணிதான |
| எண்திசையோரும் | எட்டுதிக்கிலுள்ளாரும் | திறல் | ஆண்பிள்ளைத்தனத்தை |
| வணங்க | ஸேவிக்கும்படியாக | பண்டு | முற்காலத்திலே |
| இணைமருதூடு | சேர்ந்துநின்ற இரண்டு மருதமரங்களின் நடுவே | பாட | பாடும்படி |
| | | வருவான் | வருமவன் |
| | | சித்திரகூடத்துள்ளான். (௩) | |

வ்யா.—(பண்டித்யாதி) "இவன் வெண்ணெயுண்டான்" என்று இடைப்பெண்கள் கூடி †யேச, எட்டுதிக்கிலுள்ளாரும் திருவடிகளிலே வணங்கும்படியாக, நிர்விவரமான மருதினுள்ளிட்டுப்போய், இடையர்களும் தேவர்களுமாய் ஆயிரந்திருநாமங்களைச்சொல்லிக் கொண்டு, தன்னுடைய ஆண்பிள்ளைத்தனத்தைப் பண்டு பாடவருவான். ... ... ... ... ... ... ... (௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (பண்டித்யாதி) பேய்முலையுண்டபடியைக்கண்ட இடைப்பெண்கள் மேன்மை பேசினாராகிலும், வெண்ணெயுண்டபோது இடைப்பிள்ளையென்றே ஏசவுங்கண்டோமீ! என்ன; வெண்ணெயுண்டு கட்டுண்டுநின்றபோதே, நின்ற மருதிறுத்து, தேவராலும் இடையராலும் கொண்டாடப்பட்டான் கண்டீர் என்று நெஞ்சிலுரைக்கச் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

அழைக்கை-கூப்பிடுகையாய், பலிததவர்த்தம் (ஏச) என்றது. "இவன்" என்றுதுடங்கி, "திண்டிறல் - பண்டு - பாடவருவான்" என்றந்வயம். ... (௩)

மூ.—வளைக்கை நெடுங்கண் மடவா ராய்ச்சிய ரஞ்சி யழைப்பத்
தளைத் தவிழ் தாமரைப்பொய்கைத் தண்டடம் புக்கண்டர்காண
முளைத்த வெயிற்றழல நாகத் துச்சியில் நின்றதுவாடத்
திளைத்தமர் செய்து வருவான் சித்திரகூடத்துள்ளானே. (௪)

§ அழைப்ப என்று இவ்வரும்பதத்துக்குப்பாடம். ஆயினும் "இழிப்ப" என்பதே ப்ராசீந பாடமாகக் காணகிறது.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வளை | வளைகளாலே அலங்கரிக்கப்பட்ட | புக்கு | போய் |
| கை | கைகளையும் | அண்டர் | இடையர் |
| நெடு | நீண்ட | காண | காணும்படியாக |
| கண் | கண்களையும் | முளைத்தஎயிறு | முளைத்தபற்களையும் |
| மடவார் | மடப்பத்தையுமுடையரான | அழல் | விஷாக்நியையுமுடைய |
| ஆய்ச்சியர் | ஸ்ரீகோபிமார்கள் | நாகத்துஉச்சியில் | காளியனாகிறபாம்பின்தலையிலே |
| அஞ்சி | பயப்பட்டு | நின்று | ஒருபடிபடநின்று |
| அழைப்ப | கூப்பிட | அதுவாட | அது இளைக்கும்படி |
| தளை அவிழ் | கட்டு அவிழுகிற | திளைத்து | களித்து நர்த்தநம்செய்து |
| தாமரைப்பொய்கை | தாமரைத்தடாகத்தின் | அமர்செய்து | பூசலபண்ணி |
| தண் | குளிர்ந்த | வருவான் | வருமவன் |
| தடம் | கரையிலே | | |

சித்திரகூடத்துள்ளான். (௪)

வ்யா.—நாலாம்பாட்டு. (வளைக்கையித்யாதி) வளையாலே அலங்க்ருதமான கையையும், பேதை(ஷீ)களாயப்பார்க்கும் நோக்கையுமுடைய இடைப்பெண்கள் அஞ்சிக்கூப்பிட, † கட்டவிழ்ந்தலர்ந்த தாமரைப்பொய்கையினுடைய ஸ்ரமஹரமான கரையிலேசென்று; இடையர்காண, முளைத்தவெயிற்றையுடைய பாம்பினுடைய உச்சியிலே புக்குநின்று அதுவாடும்படி கூடவிளையாடி † அமர்செய்து வருமவன். ... ... ... ... ...(௪)

அரு.—நாலாம்பாட்டு. (வளையித்யாதி) மருநிறுத்த வளவன்றிக்கே, பாம்பின படத்தில் தானேபோய் நடமாடின அபதாநத்தாலும் அவர்கள் பரனென்றிருந்தார்களென்று நியாமகாந்தரமருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"தளைத்தவிழ" என்றவிடத்தில், "அத்து" சாரியைச் சொல்லாய், "தளை அவிழ்" என்றுமருளிச்செய்கிறார் (கட்டவிழ்ந்தலர்ந்த) என்று. (அமர்செய்து) - யுத்தம்பண்ணி. ... ... ...(௪)

மூ.—பருவக் கருமுகி லொத்து முத்துடை மா கட லொத்து
அருவித் திரடிகழ்கின்ற வாயிரம் பொன்மலை யொத்து
உருவக் கருங்குழலாய்ச்சித் திறத்தி னமால விடைசெற்றுத்
தெருவில் திளைத்து வருவான் சித்திரகூடத்துள்ளானே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பருவம் | காரகாலத்திலுண்டான | மா | பெரிய |
| கருமுகில்ஒத்து | காளமேகம்போலேயும் | கடல்ஒத்து | கடல்போலேயும் |
| முத்துஉடை | முத்துக்களையுடைய | அருவித்திரள | அருவிகளின் ஸமூஹத்தினாலே |

| | | | |
|---|---|---|---|
| திகழ்கின்ற | விளங்காநின்றுள்ள | இனம் | ஒன்றாகத்திரண்ட |
| ஆயிரம்பொன் | அநேகம்ரத்நபர்வதங் | மால்விடை | பெரிய ருஷபங்களை |
| மலைஒத்து | கள்போலேயுமாய் | செற்று | நிரஸித்து |
| உருவம் | அழகியவடிவையும் | தெருவில் | வீதியிலே |
| கரு | கறுத்த [ய | திளைத்து | (களித்து) விளையாடி |
| குழல் | திருக்குழலையுமுடை | வருவான் | வருமவன் |
| ஆய்ச்சிதிறத்து | நப்பின்னைப்பிராட்டிக்காக | | சித்திரகூடத்துள்ளான். (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பருவமித்யாதி) † வர்ஷூகவலாஹ கம்போலேயும், மூதத்துடைய பெருங்கடல்போலேயும், அருவித் திரள்களாலே விளங்காநின்றுள்ள †ஆயிரம் பொன்மலைபோலேயு மாய், அழகிய வடிவையும் கறுத்த திருக்குழலையுமுடைய நப்பின் னைப்பிராட்டியிடையாட்டத்துக்காக, திரண்டு பெருமையையுடைய ருஷபங்களைக்கொன்று, தன்பருவத்திற்பிள்ளைகளோடே தெருவிலே கூடி விளையாடி வருமவன், ... ... ... (ரு)

அரு.—அஞ்சாம்பாட்டு. (பருவமித்யாதி) கீழ் நாலு பாட்டாலும் - அவனதிமாநுஷ சேஷ்டிதங்களைச்சொல்லி, அத்தால் அவன்பரன் என்றாற் போலே நீங்களுமவனை நிர்ணயித்தாஶ்ரயியுங்கோளென்றார்; இனி மேல் பாட்டுக்களில் - நப்பின்னை முதலானார்க்கு விரோதி நிவர்த்தந முகத்தாலே யுதவினாற்போலே உங்களுக்கு முதவுவானென்பாராய், அதில் நப்பின்னைக் குதவினவித்தை இதிலருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

நப்பின்னை க்ருஷ்ணனோடொத்த நிறமுடையவளென்று விவக்ஷித்தரு ளிச்செய்கிறார் (வர்ஷூகேத்யாதி). (பொன்மலைபோலேயும்) என்றது - ஆப ரணச் சேர்த்தியாலே. ... . ... ... ... ... (ரு)

மூ.—எய்யச் சிதைந்த திலங்கை மலங்க வரு மழை காப்பான்
உய்யப் பருவரை தாங்கி யாநிரை காத்தானென்றேத்தி
வையத் §தெவரும் வணங்க வணங்கெழு மாமலைபோலே
தெய்வப்புள்ளேறிவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எய்ய | அம்பினாலடித்தபோ | வரும்மழை | வருகிறமழையை |
| இலங்கை | லங்கையானது [து | காப்பான | போக்குகைக்காக |
| சிதைந்தது | அழிந்தது; | உய்ய | (அவை) உஜ்ஜீவிக்கும் |
| ஆநிரை | பசுத்திரள் | பருவரை | பெரியமலையை [படி |
| மலங்க | கலங்கும்படி | தாங்கி | எடுத்து (அவற்றை) |

§ தேவரும் என்று அரும்பதத்துக்குப்பாடம்.

| | | | |
|---|---|---|---|
| காத்தானென்று | ரக்ஷித்தானென்று | மா | பெரிய |
| வையத்து | பூமியிலுள்ள | மலைபோலே | மலையைப்போலே |
| எவரும் | ஸத்வப்ரக்ருதிகளெல்லாரும் | தெய்வம் | அழகிய |
| ஏத்தி | ஸ்தோத்ரம்பண்ணி | புள் | பெரியதிருவடிமேலே |
| வணங்க | ஆஶ்ரயிக்கும்படியாக | ஏறி | ஏறிக்கொண்டு |
| அணங்குஎழு | தேவாவிஷ்டமான | வருமவன் | வருமவன் |
| | | | சித்திரகூடத்துள்ளான். (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு (எய்யவிகயாதி) இவன் பண்டு எய்ய, லங்கையழிந்தது; பசுக்களு மிடையரும் மலங்கும்படியாக வருகிற மழையைக் காக்கைக்காக, அவை உய்யும்படிக் கீடாகப் பெரிய மலையையெடுத்துக்காத்தானென்றேத்தி †பூமியிலுள்ளாரெல்லாரும் வணங்க, தேவாவிஷ்டமான மலைபோலே, பெரிய திருவடிமேலே யேறி வருமவன். ... ... ... ... (௬)

---

அரு.—ஆறாம்பாட்டு (எய்யவித்யாதி) இதில் - பிராட்டிக்கும் பசுக்களுக்கு முதவினாற்போலே யுதவுமவனென்றருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

(பூமியிலுள்ளாரெல்லாரும்) என்றதுக்கு - "வையத்தேவர்" என்கிறபதத்தாலே பூஸுரர்களைச் சொல்லிற்றேயாகிலும், ஸத்வபரசுரரான தைவப்ரக்ருதிகளெல்லாரையும் சொல்லுமென்று திருவுள்ளம். (௬)

மூ.—ஆவரிவை செய்தறிவா ரஞ்சன மா மலைபோலே
மேவு சினத்த டல் வேழம் வீழ முனிந்தழகாய
காவிமலா நெடுங்கண்ணார் கைதொழ வீதிவருவான்
தேவாவணங்கு தண் டிலலைச் சித்திரகூடத்துள்ளானே (எ)

| பதம். | உரை. | பதம் | உரை |
|---|---|---|---|
| இவை | இப்படிப்பட்ட ஆனைத்தொழில்களை | முனிந்து | சீறியருளி |
| செய்தறிவார் | செய்தார் எவர்? ஒருவருமில்லை; (அதாவ தென்னென்னில்) | அழகாய | அழகையுடைத்தாய |
| ஆர் | | காவிமலா | நீலோத்பலம்போலே |
| மா | பெரிய (ஒ.,) | நெடு | நீண்ட [கறுத்து |
| அஞ்சனமலைபோலே | அஞ்சநகிரிபோலேயாய | கண்ணார் | கண்களையுடையஸ்த்ரீகள் |
| மேவு | பொருந்திய [த்தாய | கைதொழ | ஸேவிக்கும்படியாக |
| சினம் | கோபத்தை யுடை | வீதி | திருவீதியிலே |
| அடல் | மிடுக்கையுடைய | வருவான் | எழுந்தருளுமவன், |
| வேழம் | குவலயாபீடம் என்னு | தேவாவணங்கு | தேவர்கள்வந்துஆஶ்ரயிக்குமதாய |
| வீழ | விழும்படி [மயானை | தண் | ஶ்ரமஹரமான |
| | | | தில்லைச்சித்திரகூடத்துள்ளானே (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (ஆவரித்யாதி) † எவரிவை செய்தறிவார்? பெரியதொரு † அஞ்சநகிரிபோலே, ஸ்வாபாவிகமான சினத்தையுடைத்தாய் யுத்தோந்முகமான ஆனை குட்டிச் சுவர்போலே விழும்படி சீறி, தர்சநீயங்களாய் காவிமலர்போலே கறுத்து நெடிய கண்ணையுடைய ஸ்த்ரீகள் கைதொழும்படி வீதியிலே வருமவன், தேவர்களாஶ்ரயிக்கும் தில்லைச்சித்திரகூடத்துள்ளானே. ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (ஆவரித்யாதி) ஆநிரை காத்தவளவேயன்றிக்கே ஸ்ரீமதுரையில் பெண்களுக்குக் களிறுதருபுணர்ச்சி கொடுத்தவன் உங்களுக்குதவுவனென்கிறுரென்று ஸங்கதி. அதாவது - ஆனையால்வந்த ஆபத்தைப்போக்கித் தன்னைக் கண்ணாரக்கண்டநுபவிக்கக் கொடுத்தானென்கை. க்ருஷ்ணன்மேலே யானைவருமதுவே பெண்களுக்காபத்திறே.

(எவரிவை செய்தறிவார்) என்றதக்கு மூன்றுயோஜனை. அதாவது - செய்தவிவை - குவலயாபீடநிரஸநாதி வ்யாபாரங்களை, எவரறிவார்? ஒருவருமறிவாரில்லை என்று ஆழ்வார் தம்மிலே தாம்நொந்து, எத்தனை நாமுபதேசித்தாலும் திருந்துவாரரிதாயிருந்ததென்று ஈடுபடுகிறுரென்னுதல்; அன்றிக்கே, ஆஶ்ரிதர்க்காக இவ்வருந்தொழில்களைச் செய்தாரார்? ஒருவருமில்லை என்று எம்பெருமானுடைய சேஷ்டிதத்திலீடுபடுகிறுரென்னுதல்; அங்ஙனுமன்றிக்கே, ஸ்ரீமதுரையில் பெண்களீடுபாடாய், "செய்தறிவார்" என்ற வநந்தரம், என்று என்றொருபதத்தை மூலவ்யாக்யாநங்களில் அத்யாஹரித்துக்கொண்டு, (கைதொழும்படி) என்றப்பதத்தோடந்வயித்துக கொள்ளவுமாம். (அஞ்சநகிரிபோலே) என்றதுக்கு - (வீதியிலே வருமவன்) என்றத்தோடந்வயம். "அஞ்சநகிரிபோலேயிருக்கிற" என்று - குவலயாபீடத்துக்கு விசேஷணமாகவுமாம். ... ... ... ... ... .. (எ)

மூ.—பொங்கி யமரிலொருகால் பொன்பெயரோனை வெருவ
அங்கவனாகம் அளைந்திட் டாயிரந்தோ ளெழுந்தாடப்
பைங்க ணிரண்டெரிகான்ற நீண்ட வெயிற்றொடு பேழ்வாய்ச்
சிங்கவுருவில் வருவான் சித்திரகூடத்துள்ளானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒருகால் | ப்ரஹ்லாதனைச் சீறினவன்று | அங்கு | அவ்விடத்திலே |
| | | அவன் ஆகம் | அவனுடையவுடம் |
| அமரில் | யுத்தத்தில் | அளைந்திட்டு | பிளந்து [டை |
| பொன்பெயரோனை | ஹிரண்யனை | ஆயிரந்தோள் | அநேகம்திருத்தோள் |
| | | எழுந்து ஆட | களும்தோற்றவ்யாபரித்து [ன்றுள்ள |
| வெருவ | (அவன்) அஞ்சும்படி | | |
| பொங்கி | கிளர்ந்து (சீறி) | எரிகான்ற | நெருப்பை யுமிழாநி |

| | | | |
|---|---|---|---|
| பை | பசுத்த | வாய் | வாயையுமுடைய |
| இரண்டுகண் | இரண்டுகண்களையும் | சிங்கவுருவில் | நாஸிம்ஹரூபியாய் |
| நீண்ட | தீர்க்கமான | வருவான் | வருமவன் |
| எயிறு | கோரைப்பற்களையும் | சித்திரகூடத்துள்ளான். (அ) | |
| பேழ் | பெரிய | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (பொங்கியித்யாதி)†யுத்தத்திலே பண்டொருகால் ஹிரண்யனை வெருவும்படி †சீறி, அவ்விடத்திலே அவனுடைய உடம்பையளைந்து, ஆயிரந்தோள்தோற்ற வயாபரித்த, ஜாத்யுசிதமாக எரிகான்ற பசுமையையுடைய கண்ணும், நீண்ட எயிறும் பெரியவாயுமான ஸிம்ஹரூபத்தை யுடையனாய் வருமவன். பொங்குகை - மிகுதி. ... ... ... ... (அ)

அநு.—எட்டாம்பாட்டு. (பொங்கியித்யாதி) கீழ்ப்பாட்டிலே - திருந்துவாரொருவருமில்லை என்றபக்ஷத்தில், தம்முடைய க்ருபாதிசயத்தாலே திருந்தாத லோகத்தார்க்கு அச்சம் பிறக்கும்படி, விலங்கிப்போனாரெல்லாரும் ஹிரண்யன்பட்டது படுவரென்கிறாரென்று ஸங்கதி; மற்றைப்பக்ஷங்களில், பெண்களுக்குதவின வளவன்றிக்கே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு வந்துதோற்றினாற்போலே யுதவுமவனென்கிறாரென்று ஸங்கதி.

"அமரிலொருகால் பொன்பெயரோனை வெருவ - பொங்கி - அங்கு" இத்யாத்யந்வயமுகேநவருளிச்செய்கிறார் (யுத்தத்திலே யித்யாதி). பொங்குகை - மிகுதியாய், கோபத்தால் வந்தமிகுதியாய், பலித்தவர்த்தம் (சீறி) என்றது. கான்ற - உமிழ்ந்த. ... ... ... ... (அ)

௯.—கருமுகில்போல்வதோர்மேனி கையன வாழியும் சங்கும்
பெருவிறல்வானவர்சூழ வேழுலகும் தொழுதேத்த
ஒருமகளாயர்மடந்தை யொருத்தி நிலமகள் மற்றைத்
திருமகளோடும் வருவான் சித்திரகூடத்துள்ளானே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கருமுகில்போல்வது | காளமேகம்போலே கறுத்து | சங்கும | ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானையும் [ஞய் |
| ஓர் | ஒப்பற்ற | கையன | திருக்கைகளிலுடைய |
| மேனி | வடிவழகையுடையருய் [யும | பெருவிறல் | மிக்கமிடுக்கையுடை |
| | | வானவர் | தேவர்கள் [ய |
| ஆழியும் | திருவாழியாழ்வானை | சூழ | சூழ்ந்து ஸேவித்துநிற்கவும |

| | | | |
|---|---|---|---|
| ஏழ்உலகும் | ஏழுலோகங்களிலுள்ளாரும் | ஒருத்தி நிலமகள் | மற்றொருத்தியான ஸ்ரீ பூமிப்பிராட்டியோடும் |
| தொழுது | ஸேவித்து | மற்றை திருமகளோடும் | இன்னும் பெரியபிராட்டியாரோடும் கூட |
| ஏத்த | ஸ்தோத்ரம்பண்ணும் படிக்கீடாக | வருவான் | வருமவன் |
| ஒருமகள் ஆயர் மடந்தை | ஒருத்தியான நப்பின்னைப் பிராட்டியோடும் | | சித்திரகூடத்துள்ளான். (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கருமுகிலித்யாதி) காளமேகம் போலேயிருக்கும் வடிவையும், கையில் திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுமுடையனாய், பெரிய மிடுக்கையுடைய ப்ரஹ்மாதிகள் சூழ்ந்து ஸேவிக்க, ஸப்தலோகத்திலுள்ளாரும் திருவடிகளிலே விழுந்தேத்த, பிராட்டிமார் மூவரோடுங்கூட வருமவன். (௯)

அநு.—ஒன்பதாம்பாட்டு. (கருமுகிலித்யாதி) கீழ் - எம்பெருமானுடைய அபதாநங்கள் சொல்லிக்கொண்டு மிடுக்கை ஆஸ்ரயணோபயுக்தமாகச்சொல்லி, இவையொன்று மில்லாவிட்டாலும் விடலாமோ இவனுடைய போக்யதையென்று திருவுள்ளம்பற்றி, வடிவழகும் ஆயுதச்சேர்த்தியழகும் பிராட்டிமாரோட்டைச் சேர்த்தியும் கண்டு துர்மாநிகளான ப்ரஹ்மாதிகளும் வணங்கும்படி பாரீரென்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதி. ... (௯)

மூ.—தேனமர் பூம்பொழில் தில்லைச்சித்திரகூடமமர்ந்த
வானவர் தங்கள்பிரானை மங்கையர்கோன்மருவார்
ஊனமர்வேல் கலிகன்றி யொண்டமிழொன்பதோடொன்றும்
தானிவை கற்று வல்லார்மேல சாரா தீவினைதானே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தேன் | வண்டுகள் | அமர் | பொருந்தித்தைக்கும்படி |
| அமர் | மொய்த்த | வேல் | வேல்தொழிலில் வல்லரான |
| பூ | அழகிய | கலிகன்றி | ஆழ்வார் அருளிச்செய்த |
| பொழில் | சோலையையுடைய | ஒண்தமிழ் | அழகிய தமிழ்ப்பாஷையாலான |
| தில்லைச்சித்திர கூடம் | தில்லைத் திருச்சித்திர கூடத்திலே | இவை ஒன்பதோடொன்றும் | இப்பத்துப்பாட்டையும் |
| அமர்ந்த | நித்யவாஸம் பண்ணுகிற | கற்று | அர்த்தத்துடன் அப்யஸித்து |
| வானவர்தங்கள் பிரானை | அயர்வறுமமரர்களுக்குத் தலைவனானவன்விஷயமாய் | வல்லார் மேல் | அதிகரிக்க வல்லவர்கள் |
| மங்கையர்கோன் | திருமங்கையிலுள்ளார்க்கு ராஜாவாய் | தீவினை | பாபங்கள் |
| மருவார் | சத்ருக்களுடைய | சாரா | கிட்டமாட்டா... (௧௦) |
| ஊன் | சரீரத்தில் | | |

வ்யா.— பத்தாம்பாட்டு. (தேனித்யாதி) வண்டுகள் படிந்து பூத்த பொழிலையுடைய தில்லையில் சித்திரகூடத்திலேயமர்ந்த †*அயர்வறுமமரர்களதிபதியை, திருமங்கைக்குராஜாவாய், †சத்ருக்கள் சரீரமே தனக்கு உறையாகவுடைய வேலையுடைய ஆழ்வாரருளிச்செய்த அழகிய தமிழான இப்பத்தும் பயஸித்தவர்கள் பக்கல், அவர்கள் பண்ணின பாபம் பலாநுபவத்துக்காகச் சாரா. ... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. (தேனித்யாதி) கீழ்ப்பாட்டில், "வானவர்" என்ற பதத்தை, ஆஶ்ரயிப்பாராகக்குறுப்பாக, தாமஸிகளும் வந்தாஶ்ரயிக்கக்கடவர்களேயென்ன வேண்டுகையால், அதுக்காகப் பரமைகாந்திகள் பரமார்த்திகளேயாகிலும், இப்பாட்டில் "வானவர்" என்றதுக்கு, "நம்கள்" என்று அஸாதாரணயம் தோற்றச்சொல்லுகையாலும், ஆழ்வார்க்கு பரமைகாந்திகளுக்குப் பிரானென்றது-அதிசயமாட்டதோற்றுமையாலும், (௧) "அமரர்க்குமெய்தாத வண்டத்திருப்பீர்" என்று பர(த்வ)ஸ்வரூபத்தைக் கீழ்த்திருமொழியிலருளிச்செய்கத்தோடு இத்திருமொழிக்கு ஏகவாக்யதையைச்சொல்லுகையாலே பராப்யமோடிகடிதான நித்யஸூரிகளேயாகவேணுமென்றருளிச்செய்கிறார் (அயர்வறுமமரர்களதிபதியை) என்று. இப்பத்துக்கு (அருளிச்செய்த) என்றதோடன்வயம். "மருவார்" என்றதினர்த்தம் (சத்ருக்கள்) என்றது (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றாம்பத்தில் மூன்றாந்திருமொழி முடிந்தது.



(௧) ௩-௨-௧

## ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி கூ - ம் பத்து, ச - ம் திருமொழி, ஒருகுறள் ப்ரவேசம்.



வ்யா.—† நீங்கள் அவனைப்பெறுகைக்குறுப்பாகப்பண்ணும் ஸாதநாநுஷ்டாநத்தை அவன்றான் உங்களைப் பெறுகைக்குறுப்பாக அவதாராதிமுகங்களாலே பண்ணிக்கொடு இங்கேவந்து நின்றானென்றார்; அவன்படியிதுவானபின்பு, ஆர்த்தித்வம் தொடக்கமாக வேறுமுள்ளவற்றையெல்லாம் அவன் கையிலேயேறிட்டு, நீங்களவனுகந்த சீராமவிண்ணகரை யாச்ரயியுங்கோளென்கிறார். இவன் பரமபக்தி பர்யந்தமாகப்பண்ணினாலும் அதடைய பராதிகூல்யநிவ்ருத்திமாத்ரத்திலே நிற்கும்படியிறே பேற்றினுடைய வைலக்ஷண்யமிருந்தபடி பாத்ரநாலிருப்பது.... ... ... .... ...

அநு.—ஒருகுறளின் ப்ரவேசம். கீழிரண்டு திருமொழியாலுமாக - நீங்களொரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேண்டா, சித்ரகூடத்துள்ளானை யாச்ரயியுங்கோளென்றுநின்றீர்; பேற்றின்கனத்தைப்பார்த்தால இவ்வளவிலே பலம் கைப்படுமென்று நாங்கள் விச்வஸிக்கும்படி யெங்ஙனேயென்னும் சங்கையிலே; வகுத்த ஸ்வாமியாகையால் உங்களைப்பெறவேணுமென்று, ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்குகப்பானு மவனாயிருக்கையாலுங்களுக்கு விச்வஸிக்கத்தட்டென்? அவனிலும் அவனுகந்த ஊரையாச்ரயிக்கையே யமையுமென்றருளிச் செய்கிறாரென்னும் ஸங்கதியை யருளிச்செய்கிறார் (நீங்களித்யாதி). ஆகதித்வயாதரமாகிலும் இவன் பக்கலிலே வேண்டாவோ? இத்தையுமவன்றலையிலே யேறிட்டு நிர்ப்பரனாயிருக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இவனித்யாதி). பேற்றுக்கு அப்ரதிஷேதமே வேண்டுவது, அதுக்கு மேற்பட்ட ஆர்த்தித்வம் முதலானவையெல்லா மிவனுக்கு வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லையென்று கருத்து. .. .. ... ...

மூ—ஒருகுறளா யிருநிலமூவடிமண் வேண்டி
யுலகனைத்து மீரடியா லொடுக்கி யொன்றும்
தருகவென மாவலியைச் சிறையில்வைத்த
தாடாளன் தாளணைவீர் தக்ககீர்த்தி
யருமறையின் திரள் நான்கும் வேள்வியைந்து
மங்கங்களவை யாறு மிசைகளேழும்
தெருவில்மலி விழாவளமும் சிறக்கும்காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒரு | அத்விதீயமான | கீர்த்தி | பெருமையையுடைத்தாய் |
| குறளாய் | வாமநவடிவைக்கொண்டு (மஹாபலிபக்கலிலேசென்று) | அரு | [மான அர்த்தமறிய அசக்ய |
| | | மறையின் | வேதங்களின் |
| இருநிலம் | பரந்தபூமியில் | திரள் | திரள்கள் |
| மூவடிமண் | மூன்றுஅடிமண்ணை | நான்கும் | நாலும் |
| வேண்டி | இரந்து | ஐந்துவேள்வியும | பஞ்சமஹாயஜ்ஞங்களும் |
| உலகனைத்தும் | லோகங்களெல்லாவற்றையும் | ஆறு அங்கங்களும் | வ்யாகரணாதிஅங்கங்களாறும |
| ஈரடியால் | இரண்டடியாலே | | |
| ஒடுக்கி | அடக்கி | எழுஇசைகளும் | ஸப்தஸ்வரங்களும் |
| ஒன்றும் | மற்றைஓரடியும் | மலி | மிக்கிருப்பதாய் |
| தருகஎனா | தரவேணுமென்று | விழா | உத்ஸவங்களின் |
| மாவலியை | மஹாபலியை | வளமும் | அழகும் |
| சிறையில்வைத்த | பாதாளமாகிறசிறையிலேவைத்தவனான | சிறக்கும் | மிகும்படியான |
| | | தெருவின் | வீதிகளையுடைய |
| தாடாளன் | ஸர்வாதிகனுடைய | காழி | காழியில |
| தாள் | திருவடிகளை | சீராமவிண்ணகர் | ஸ்ரீராமவிண்ணகரத்தை |
| அணைவீர்! | கிட்டவேண்டியிருப்பீர்! [ண | நீர் | நீங்கள் |
| தக்க | அவனுக்குத்தகுதியா | சேர்மின் | ஆஶ்ரயியுங்கோள். () |

வ்யா.—முதற்பாட்டு.—(ஒருகுறளாய்) வடிவைக்கண்டபோதே சொல்லிற்றடையக் கொடுக்கவேண்டும்படியான அத்விதீயவாமநனாய். (இருநிலம்) பரப்பையுடைத்தான பூமியை. (மூவடிமண் வேண்டி) †தனக்கென்னக்காலபாவுகைக்கு இடமில்லாதாரைப்போலே, இதுதையவனுக்காக்கி அவன்பக்கலிலேயிரந்து, இந்தலோகங்களையுடைய இரண்டடியாலே அடக்கி, "மூன்றடி தருகிறேன் என்றாய், மற்றை ஓரடியும் தாராயோ" என்று. (மாவலியைச் சிறையில் வைத்த) அநந்தரம், இந்த்ரபதம் அவன் பெறக்கடவனாக அவனைப் பாதாளத்திலே வைத்த. (தாடாளன் தாளணைவீர்) "ஆஶ்ரிதார்த்தமாகத்தானிரந்தான்" என்னும் மேன்மையையுடையவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்!

(தக்கவித்யாதி) அபௌருஷேயதவ நிபந்தநமான கீர்த்தியையுடைய வேதங்களுடைய திரள்கள்நாலும், பஞ்சமஹாயஜ்ஞங்களும், ஆறங்கங்களும், எழிசைகளும், தெருவிலேமிக்கிருந்துள்ள உத்ஸவத்தாலவந்த அழகும், இவையெல்லாமடையச் †சிறக்கும்படியான காழியில் சீராமவிண்ணகரை ஆஶ்ரயியுங்கோள். ... ...(க)

அரு.—முதற்பாட்டு. (ஒரு குறளித்யாதி) "மூவடிமண்வேண்டுமென்று இருநிலத்தை வேண்டி" என்றதிலம் தருமுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தனக்கென்ன வித்யாதி). தாடாளன் - ஸர்வாதிகன்.

(சிறக்கும்படியான) ஸம்ருத்தமாம்படியான. ... .. (க)

மூ.—நான்முகனாள் மிகத்தருக்கை யிருக்குவாய்மை
நலமிகுசீ ருரோமசனால் நவிற்று நக்கன்
ஊன்முகமார் தலையோட்டூ ணொழித்த வெந்தை
யொளிமலர்ச்சேவடியணைவீ ருழுசேயோடச்
சூல்முகமார் வளையளைவா யுகுத்த முத்தைத்
தொலகுருந்து சினையென்னச் சூழ்ந் தியங்க எங்கும்
தேன்முகமார் கமலவயல் சேல்பாய் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நான்முகன் | ப்ரஹ்மாவினுடைய | உழு | உழுகிற |
| நாள் | ஆயுஸ்ஸு | சே | எருதுகள் |
| மிக | அதிசயிக்க (அந்நாளை யுனக்குண்டான) | ஓட | (செருக்காலே) ஓட |
| | | சூல்முகமார் | ப்ரஸவகாலமாயிருக் |
| தருக்கை | கர்வத்தை, | வளை | சங்குகள் [கிற |
| இருக்கு | வேதத்தை | அளைவாய் | வங்குகளில் |
| வாய்மை | உச்சரியாநின்றவனாய் | உகுத்த | ஈன்ற |
| நலம்மிகுசீர் | மிக்க ஆசாரத்தை யுடையவனான | முத்தை | முத்துக்களை [வை |
| | | தொலகுருந்து | பெரிய குருந்துகளான |
| உரோமசனால் | ரோமசபகவானால் | சினையென்ன | தங்களுடைய முட்டையென்று |
| நவிற்று | போக்குவித்து | | |
| நக்கன் | நக்நனான ருத்ரனுடைய (கையிலேஒட்டியதாய்) | சூழ்ந்துஇயங்க | சூழப்பறவாநிற்பதாய் (அக்காற்றாலே) |
| | | எங்கும் | பார்த்தவிடமெல்லாம் |
| ஊன்ஆர் | மாம்ஸளமான | தேன் | தேன்வெள்ளத்தை |
| முகனதலையோட்டு | ப்ரஹ்மாவின்கபாலத்தில் | முகமார் | முகத்தாலேசொரிகிற [டைத்தாய் |
| ஊண் | (இரந்துண்கிற) ஊ | கமலம் | தாமரைமலர்களையு |
| ஒழித்த | போக்கின [ணை | சேல் | சேல்மத்ஸ்யங்கள் |
| எந்தை | ஸர்வஸ்வாமியினது | பாய் | பாயாநின்றுள்ள |
| ஒளிமலர் | செவ்விமலர்போன்ற | வயல் | வயல்களையுடைய |
| சேவடி | சிவந்ததிருவடிகளை | காழிச்சீராம விண்ணகரே சேர்மின் நீரே. (௨) | |
| அணைவீர் | சேரவிரும்புவீர்! | | |

வ்யா —இரண்டாம்பாட்டு. (நான்முகனித்யாதி) ரோமசபகவான், "ப்ரஹ்மாக்களென்று சிலர் நீர்க்குமிழிபோலே தோற்றுவது மறைவதாய்ப் போகக்கடவது எத்தனைபேர்" என்றுரையிற்று.

†சதுர்முகனுடைய ஆயுஸ்ஸின்மிகுதியாலுண்டான துர்மானத்தை, †வேதங்களை உச்சரியாநிற்பானாய் ஆசாரப்ராதான்யத்தால்வந்த வேற்றுமையுடையனான ரோமசபகவானாலே, †"சதுர்த்தசபுவனங்களுக்கும் கடவேன், என்னைப்போலே ஆயுஸ்ஸுடையாருண்டோ" என்கிற துர்மானத்தைத் தவிர்த்து. (நக்கனித்யாதி) †ருத்ரனுடைய பிதாவுமாய் லோககுருவுமாயிருக்கிறவனைத் தலையையறுத்து, அத்தாலே பாதகியாய் பரமஸபரகரமான தலையோட்டிலே யிரந்து அதிலே ஜீவித்துத் திரிகிற எளிவரவைத் தவிர்த்தஸ்வாமி. †ஜகத்துக்கு ஈஶ்வரர்களாக ப்ரஸித்தரிருவருமிறே; அவர்களிருவருடையவும அபிமானத்தைக் காத்தானாயிற்று (ஒளிமலர்ச்சேவடியணைவீர்) அவனுடைய ஸ்வாபாவிகமான ஈஶ்வரத்வத்தால்வந்த புகரையுடைய திருவடிகளைப் பெறவேண்டியிருப்பீர்.

(உழுசேயித்யாதி) †ஆனைபோலேயாய் பெரியமிடுக்கையுடைய சேக்களையிறே பூட்டியுழுவது. அவை தவறுவோடினவாறே, "அப்போது ப்ரஸவித்தது, இப்போது ப்ரஸவித்தது" என்று தோன்றும்படி தொட்டாமேலே தோஷமாம்படியிருக்கிற †சங்குகள், தான் கிடக்கிறவங்குகளினுடையவாசலிலே முத்துக்களையீன்றன; அவற்றைத் தொலகுருத்தண்டு - என்று மொக்கப்பழகச்செய்தேயும "இது முத்து, இது முட்டை" என்று வாசியறியமாட்டாதபடி மேத்தகுருகுகள், அவை தன்னுடைய முட்டையாகக்கொண்டு விட்டுப்போகமாட்டாதே சுற்றும பறவாநிற்குமாயிற்று. அவை பறக்கிறகாற்றாலே, பார்த்தபார்த்தவிடமெல்லாம பக்வமாய்த் தலையிலே மிக்கதேனையுடைத்தாயிருக்கிற தாமரைப்பூக்களலராநிற்குமாயிற்று, அந்த மதுவைப் பானம்பண்ணின கயல்களானவை பாயாநிற்குமாயிற்று.*

---

௫.—இரண்டாமபாட்டு. (நான்முகனித்யாதி) தன்னை இரப்பாளனாக்கி ஆஶ்ரிதாக்கரியன செய்யுமவன் வந்திருக்கும காழிச்சீராமவிண்ணகரை ஆஶ்ரயியுங்கோளென்னச் செய்தேயும, ஆறியிருந்தீர்கள், இதுக்கடி உங்களுடைய ஸ்வதந்திரத்வபுத்தியும், பெருமையுமன்றோ, ப்ரஹ்மாவினாயுஸ்ஸின்படி கேட்டிகோளே. ருத்ரனெளிவரவையும கண்டிகோளே யென்கிறாரென்று ஸங்கதி.

(என்றாளுயிற்று) என்றவநந்தரம், அந்தப்புராணப்ரஸித்தியைக் கொண்டருளிச்செய்கிறாரென்று சேஷம். நான்முகனுடைய நாளானது - ஆயுஸ்ஸானது. மிக - அதிசயிக்க, அத்தாலுண்டான, தருக்கை - கர்வத்தை, என்றுசப்

| | | | |
|---|---|---|---|
| நேர்த்தவன் | துணித்தஎம்பெருமானுடைய | குமுதமலர் | சிவந்தஆம்பல்மலரை |
| தாள் | திருவடிகளை | தம்வாயென்றும் | தங்கள்வாயாகவும் எண்ணி |
| அடைகிற்பீர் | சேரவிரும்புமவர்களே! | செய் | வயல்களில் |
| கடைசிமார்கள் | பள்ளஸ்த்ரீகள் | அணைந்து | (களைபறிக்க) இழிந்து |
| நெய்தலோடு | நெய்தலமலரையும் | களைகளையாது | களைபறியாமல் |
| மைஅணைந்த | கருமைமிகுந்த | ஏறும் | வெறுமனே கரையேறுகின்ற |
| குவளைகள் | குவளைமலரையும் | | |
| தம்கண்களென்றும் | தங்கள் கண்களாகவும் | | |

காழிச்சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. (௩)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (வையித்யாதி). கூர்மை மிக்கிருந்துள்ள முனையையுடைய கொம்பையுடைத்தான அத்விதீய மஹாவராஹமாய், பூமிபபரப்படைய இடந்தெடுத்துக்கொண்டேறி. ஈஸ்வரத்வத்தால்வந்த செருக்காலே மதகார்யமான வ்யாபாரங்களைப் பண்ணி. (நெய்) கூர்மை. †கூர்மையுடையதிருவாழி. கடைந்துநெய்யிட்டிருந்துள்ள திருவாழியாலே, தேவதாந்தரபஜநத்வதப்பண்ணி அதத்தாலே தனக்கு மிடுக்காக நினைத்திருக்கிற வாணனுடைய திண்ணிய தோள்களைநேர்த்தவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்!

நெய்தற்பூவோடேகூட கறுப்பு மிக்கிருந்துள்ள குவளைகளைத் தம்கண்களென்றும், மலரையுடைத்தான †அரக்காம்பலைத் தந்தாமுடையவாயென்றும், †கடைசிமார் களைப்பறிப்பதாக அடுத்து வயலிலேயிழிந்து, கண்ணுக்கும் வாய்க்குமவற்றோடுண்டான ஸாவதாளாய்யததாலே களைபறியாதே போந்தேறுகிற காழியில். ... (௩)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (வையணைந்தவிதயாதி). நீங்கள் ப்ரளயாபத்ரக்ஷகரான வராஹன்படி யறிந்தாச்ரயிக்காவிடில் வாணன்பட்டது படுவிகோ என்கிறாரென் . ஸங்கதி.

. . . . . ணாயுதத்தைத் தந்த்ரேண வருளிச்செய்கிறார் (கூர் . . . . . ) "நே தத" என்றது - துணித்தவென்றபடி.

(அரக்காம்பல்) சிவந்த ஆம்பல். (கடைசிமார்) கடைசியான ஜந்மத்தையுடைய பள்ளச்சிகள். ... ... ... ... (௩)

மூ.—பஞ்சிய மெல்லடிப் பின்னைதிறத்து முன்னாள்
பாய் விடைகளேழடர்த்துப் பொன்னன்மைப் பூண்
நெஞ்சிடந்து குருதியுக வுகிர்வேலாண்ட
நின்மலனை தாளணைகிற்பீர் நீலமாலைத்

தஞ்சுடைய விருள் தழைப்பத் தரளமாங்கே
தண் மதியின் நிலாக் காட்டப் பவளந்தன்னால்
செஞ்சுடர் வெயில் விரிக்கு மழகார் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மின்னீரே. ... ... ...(௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பஞ்சிய | செம்பஞ்சுபோலே | மாலை | அந்திப்பொழுதை |
| மெல்அடி | ம்ருதுவானதிருவடிகளையுடைய | தஞ்சுஉடைய | தனக்குத்தஞ்சமாகவு[டைய |
| பின்னைதிறத்து | நப்பின்னைப்பிராட்டிக்காக | இருள் | இருட்டை |
| முன்நாள் | முற்காலத்தில் [கிற | தழைப்ப | அதிசயிப்பிக்கவும் |
| பாய் | கண்டார்மேலே விழு | ஆங்கு | அவற்றின்நடுவேயழுத்தின |
| ஏழ்விடைகள் | ஏழுருஷபங்களையும் | தரளம் | முத்துக்கள் |
| அடர்த்து | அழித்து | தண் | குளிர்ந்த |
| பொன்னன் | ஹிரண்யனது | மதியின் | சந்த்ரனது |
| பைம்பூண | அழகியஆபரணங்கள் | நிலா | நிலவை |
| நெஞ்சு | மார்பை [நிறைந்த | காட்ட | காட்டவும் |
| இடந்து | பிளந்து | பவளம் | பவழங்கள் |
| குருதி | ரக்தம் | தன்னால் | இடையிடையேதாங்களழுத்தப்பட்டிருப்பதனால் |
| உக | பீறிப்புறப்படும்படி | | |
| உகிர்வேல் | நகங்களாகிறவேலை | செஞ்சுடர் | ஸூர்யனது |
| ஆண்ட | கார்யங்கொண்ட | வெயில் | காந்தியை |
| நின்மலன் | பரிசுத்தனானஎம்பெருமானது | விரிக்கும் | பரப்பவும் |
| தாள் | திருவடிகளை [களே! | அழகுஆர் | (இவற்றால்வந்த)அழகையுடைய |
| அணைகிற்பீர் | அணையவிரும்புமவர் | காழிச் சீராமவிண்ணகரே சேர்மின்னீரே. (௪) | |
| நீலம் | (மாடங்களிற்பதித்த) நீலரத்நங்கள் | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (பஞ்சியவித்யாதி) செம்பஞ்சுபோலே ம்ருதுவான திருவடிகளையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காகப், பண்டொருநாள், கண்டார் மேலேவிழுகிற ருஷபங்களேழையுமழியச்செய்து; ஹிரண்யனுடைய ஆபரணங்களாலே அலங்க்ருதமானநெஞ்சை அநாயாஸேந கிழித்துப்பொகட்டு; ரக்தமானது கொழித்துப் புறப்படும்படியாக, ஆளிட்டுச்செய்தல் ஆயுதத்தாலேயழியச்செய்தல் செய்கையன்றிக்கே, ஆஶ்ரிதவிரோதியைத்தானே கைதொட்டு, திருவுகிராகிற வேலாலே யழியச்செய்து அத்தால்வந்த சுத்தியையுடையவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்!

(நீலமித்யாதி) அவ்வூரில் மாடங்களிலழுத்தின நீலரத்நம், மாலையைத் தனக்குத் தஞ்சமாகவுடைய, அதாவது - ராத்ரியைத்

†தனக்கு அபாஶ்ரயமாகவுடைத்தாயிருக்கிற இருளைத்தழைப்ப, நடுவேயழுத்தின முத்தானது, குளிர்ந்த சந்த்ரனுடைய நிலாவைக் காட்ட, இடையிடையேயழுத்தின பவளமானது, புகரையுடைய ஆதித்யனுடைய பரகாசத்தைக்காட்டாநின்றது. †ஆக, ஏககாலத்திலே இருளும் சந்த்ரோதயமும் வெயிலுமொக்கக்கண்டநுபவிக்கும்படியான தேசமாயிற்று. ... ... ... (௪)

---

அரு.—நாலாம்பாட்டு. (பஞ்சியவித்யாதி) வாணனைப்போலே கைகழிகை மாத்ரமன்றிக்கே ஹிரண்யன் பட்டது படுவீர்கள் அவனையாஶ்ரயியாவிடில், ஆஶ்ரயித்தால் நப்பின்னையிடத்தில் போலே வ்யாமுக்தனுமவனென்கிறாரென்று ஸங்கதி.

“தனக்குத் தஞ்சமாக வுடையராத்ரியை” என்றதுக்கு விவரணம் (தனக்கபாஶ்ரயமித்யாதி). “அழகார்” என்றதின் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஆகவித்யாதி). . . . . ... ... ... (௪)

மூ.—தெவ்வாய மறமன்னர் குருதிகொண்டு
திருக்குலத்தி லிறந்தோர்க்குத்திருத்திசெய்து
வெவ்வாய மாகீண்டு வேழமட்ட
விண்ணவர்கோன்தாளணைவீர் விகிர்தமாதர்
அவ்வாயவாள்நெடுங்கண் குவளைகாட்ட
அரவிந்தம் முகங்காட்ட வருகே யாம்பல்
செவ்வாயின் திரள் காட்டும் வயல்சூழ் காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தெவ் ஆய | சத்ருக்களாகிய | அட்ட | முடித்த |
| மறம் மன்னர் | வீரமுள்ளராஜாக்களு | விண்ணவர்கோன் | அமரர்களதிபதியினது |
| குருதிகொண்டு | ரக்தத்தாலே [டைய | தாள் | திருவடித்தாமரைகளை [ளே ! |
| திருக்குலத்தில் | தன்வம்சத்தில் | அணைவீர் | சேரவிரும்புமவர்க |
| இறந்தோர்க்கு | முடிந்தவர்களுக்கு | விகிர்தம் | வேறுபாடுள்ள |
| திருத்திசெய்து | (உதகக்ரியையால்) த்ருப்திசெய்வித்து, | மாதர் | ஸ்தரீகளுடைய |
| வெம் | க்ரூரமான | அவ்வாய | அப்படிப்பட்ட |
| வாய | வாயையுடைய | வாள் | ஒளிபொருந்திய |
| மா | குதிரையுருவாய்வந்த கேசியெனபவனை | நெடு | (காதளவும்) நீண்ட |
| கீண்டு | கிழித்து [ம்யானையை | கண் | கண்களை |
| வேழம் | குவலயாபீடமென்னு | குவளை | நீலோத்பலமலர்கள் |

| | | | |
|---|---|---|---|
| காட்ட | காட்டவும் | செவ்வாயின் | சிவந்தவாயின் |
| அரவிந்தம் | தாமரைமலர்கள் | திரள் | கூட்டங்களை |
| முகம் | முகத்தொளியை | காட்டும் | தோற்றுவிக்கிற |
| காட்ட | காட்டவும் | வயல்சூழ் | கழனிசூழ்ந்த |
| அருகே | ஸமீபத்திலுள்ள | காழிச்சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. (௬) | |
| ஆம்பல் | செவ்வல்லிமலர்கள் | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தெவ்வாயவித்யாதி) சத்ருக்களாய் மறத்தையுடையராயிருக்கிற ராஜாக்களையழியச்செய்து, அவர்களுடைய ருதிரவெள்ளத்தைக்கொண்டு, வம்சத்திலே முடிந்துபோனார்க்கு †உதககக்ரியைகளைப்பண்ணி. இவ்வளவாலே - ஸ்ரீபரசுராமாழ்வானை நினைக்கிறது. வெவ்விதான வாயையுடைத்தாய்க்கொண்டு பயாவஹமாம்படி தோற்றின ஆஸ்ரிதவிரோதியான கேசிவாயை அநாயாஸேந கிழித்து, குவலயாபீடத்தை†முடித்து, *அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து, இப்படி ஆஸ்ரிதவிரோதிகளைக் கைதொட்டுப்போக்குமவன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர்.

(விகிர்தமாதர்)†விஸஜாதீயஸ்வபாவைகளாயிருந்துள்ள ஸ்த்ரீகளுடைய அப்படிப்பட்ட ஒளியையுடைத்தான பரந்த கண்களைக் குவளைகளானவை காட்ட, தாமரைப்பூவானது முகத்தில் தேஜஸ்ஸைக்காட்ட, அருகே அலர்ந்துநின்ற அரக்காம்பலானது சிவந்த அதரத்தினுடைய திரளைக்காட்டுகிற. ... ... ... (௫)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (தெவ்வாயவித்யாதி) ஹிரண்யனைப்போலே தான் பட்டுப்போன வளவன்றிக்கே, (௧) "மூவெழுகால் கொன்ற" என்கிற படியே ப்ரதிகூலரைக்குலமாக அழிக்குமவன் கிடீர், அவன் விஷயத்திலநுகூலித்து ஜீவித்துப்போங்கோளென்கிறாரென்று ஸங்கதி.

திருத்தி - த்ருப்தியென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உதகேத்யாதி). "அட்ட" என்றதினர்த்தம் (முடித்து) என்கிறது.

விகிர்தம் என்றது - விலக்ஷண விகாரமுடைய என்றாய், பலிதமருளிச் செய்கிறார் (விஸஜாதீயேத்யாதி). ... ... ... ... (௫)

மூ.—பைங்கண்விறல் செம்முகத்து வாலி மாளப்
படர்வனத்துக் கவந்தனொடும் படையார் திண்கை
வெங்கண்விறல் விராதனுக விற்குனித்த
விண்ணவர்கோன் தாளணைவீர் வெற்புப் போலும்

---

(௧) ௫ - ௩ - ௧.

துங்கமுக மாளிகைமே லாயங் கூறும்
துடியிடையார் முகக்கமலச் சோதி தன்னால்
திங்கள்முகம் பனிபடைக்கு மழகார் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பைங்கண் | பசுமையான கண்களையும் | அணைவீர் | கூடவிரும்புமவர்களே! |
| விறல் | மிடுக்கையும் | வெற்புப்போலும் | மலைகள்போலே |
| செம்முகம் | (கோபத்தால்)சிவந்த முகத்தையுமுடைய[ராம் | துங்கம் | உயர்ந்த [டைய |
| | | முகம் | முன்ப்ரதேசத்தையு |
| வாலி | வாலியென்னும்வாந | மாளிகை | மாளிகைகளின் [று |
| மாள | முடியும்படியாகவும் | மேல் | மேல்நிலத்திலேநின் |
| படர் | பரந்த | ஆயம்கூறும் | தோழமைசொல்லிய ழைக்கிற |
| வனத்து | காட்டிலுள்ள | | |
| கவந்தனொடும் | கபந்தனென்னும் ராக்ஷஸனும் | துடி | உடுக்கைபோன்ற |
| | | இடையார் | மத்யப்ரதேசத்தையுடையஸ்த்ரீகளது |
| திண் | த்ருடமான | | |
| படை | ஆயுதங்கள் | முகக்கமலம் | முகபங்கஜங்களுடைய |
| ஆர் | நிறைந்த | | |
| கை | கைகளையும் [யும் | சோதிதன்னால் | காந்திகளினாலே |
| வெம்கண் | உக்ரமானகண்களை | திங்கள் | (ஆகாசத்துலாவும்) சந்த்ரனது |
| விறல் | வெற்றியையுமுடைய | | |
| விராதன் | விராதனென்னும் ராக்ஷஸனும் | முகம் | வதநமானது |
| | | பனி | (துக்கத்தாலுண்டான) கண்ணீரை |
| உக | உயிர்விடும்படி | | |
| வில்குனித்த | வில்லைவளைத்த | படைக்கும் | இடைவிடாமற்கொண்டிருக்கும்படி |
| விண்ணவர் கோன் | தேவதேவனானசக்ரவர்த்தித்திருமகனுடைய | அழகுஆர் | அழகு நிரம்பிய |
| | | காழிச் சீராமவிண்ணகரே சேர்மின்னீரே. | |
| தாள் | திருவடிகளை | | (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (பைங்கணித்யாதி) ஜாதிப்ரயுக்தமான கண்ணில் பசுமையையும், மிடுக்கையும், சீற்றத்தாலே சிவந்த முகத்தையுமுடைய வாலி முடியும்படியாக, †பரந்த காட்டிலேயுண்டான ஸத்வங்களையடைய இரண்டுகையாலும் வாரி பக்ஷித்துக்கொண்டு வருகிற கபந்தனோடேகூட. (படையார்திண்கை)† திண்ணியபடையார்ந்தகை, வெவ்விய கண்களையும் மிடுக்கையுமுடைய விராதன் முடியும்படியாக, வில்லைவளைத்த. (விண்ணவர்கோன்தாளணைவீர்) விரோதியைப்போக்கி தேவஜாதிக்கு முடியிருப்பைப்பண்ணிக்கொடுத்த சக்ரவர்த்தித்திருமகன் திருவடிகளை ஆஶ்ரயிக்கவேண்டியிருப்பீர்!

(வெற்பித்யாதி) மலைபோலேயோங்கின †முகத்தையுடைத்தாயிருக்கிற மாளிகைகளின்மேல்நிலத்திலேநின்று †தோழமையைச் சொல்லியழைத்து விளையாடுகிறதுடிபோன்ற இடையையுடையரான ஸ்த்ரீகளுடைய முகமாகிற கமலத்திலுண்டான தேஜஸ்ஸாலே சந்த்ரனுடைய முகமானது துக்கத்தை ப்ராபியாநிற்கும்- †"நாமென்ன ஜீவநம் ஜீவிக்கிறோம், இவர்களோடொப்புச்சொல்லாநிற்கச்செய்தே ஒப்புப்போராதபடியிருப்பதே" என்று துக்கப்படாநிற்குமாயிற்று. †சந்த்ரனுக்குச் சந்த்ரனிவர்கள்; தேஜஸ்ஸைச் சந்த்ரனுக்குண்டாக்குமவர்களென்னவுமாம். ... ... ... (௬)

அரு.—ஆரும்பாட்டு. (பைங்கணித்யாதி) ராஜலோகத்தை வென்றவளவேயன்றிக்கே வரபலத்தாலே பெருமிடுக்கனாய் எதிரின்றிக்கேயிருந்த வாலியையும்வென்ற மிடுக்கன் இவரென்று ராமாவதாரத்தில் வீரசரிதத்தை இனி யிரண்டுபாட்டாலே யநுஸந்தித்து, இவனிருந்த தேசத்தைப்பற்றினவாறே உய்யலாமென்கிறாரென்று ஸங்கதி.

"படர்வனத்து" என்று விசேஷிக்கைக்கு வேறு கபந்தனுண்டோவென்ன, அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பரந்தவித்யாதி). (ஸத்வங்களை)-ஜந்துக்களை. விராதனுக்கு விறலை விசேஷணமிட்டிருக்க, திண்மை" என்னவேணுமோவென்னும் சங்கையிலே அந்வயம்காட்டுகிறார் (திண்ணியவித்யாதி). கபந்தனிடத்தில் வில்குனித்ததில்லையாகிலும், வில் குனித்தது உபலக்ஷணமாய், வாள்பிடித்ததமையும் சொல்லக்கடவது. (௧) "తతస్తౌ దేశకాలజ్ఞౌ ఖడ్గాభ్యామేవ రాఘవౌ। అచ్ఛిన్దతాం సుసంహృష్టౌ బాహూ తస్యాంసదేశతః-ததஸ்தௌ தேசகாலஜ்ஞௌ கட்காப்யாமேவ ராகவௌ । அச்சிந்தாம் ஸுஸம்ஹ்ருஷ்டௌ பாஹூ தஸ்யாம்ஸதேசதஃ" என்றிறே ப்ரமாணகதி.

(முகத்தை) அக்ரப்ரதேசத்தை. "ஆயம்கூறும்" என்றதினர்த்தம் (தோழமையைச் சொல்லியழைத்து) என்றது. "பனி" என்று கண்ணீராய், அத்தால் தோற்றின துக்கத்தின் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (நாமென்னவித்யாதி). "பனி" என்றத்தால் - குளிர்த்தியாய், ப்ரஸாதத்தை லிவக்ஷித்து, அதுபடைக்குமென்றாத்தாந்தரத்தை யருளிச்செய்கிறார் (சந்த்ரனுக்கித்யாதி வாக்யத்வயத்தாலே). ... ... ... (௭)

(௧) ரா - அர - ௭௦ அ.

மூ.—பொருவில் வலம்புரி யரக்கன் முடிகள் பத்தும்
புற்று மறிந்தனபோலப் புவிமேற் சிந்தச்
செருவில் வலம்புரி சிலைக்கை மலைத்தோள் வேந்தன்
திருவடிசேர்ந்துய்கிற்பீர் திரைநீர்த் தெள்கி
மருவி வலம்புரி கைதைக் கழியூ டாடி
வயல்நண்ணி மழைதருநீர்த் தவழ்கால் மன்னித்
தெருவில் வலம்புரி தரள மீனும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொ இல் | ஒப்பில்லாத | வலம்புரி | சங்கங்கள் [லை |
| வலம் புரி | பலத்தைக்கொண்ட | கை | அலையையுடைய கட |
| அரக்கன் | ராவணனது | நீர்த்து | விட்டு |
| முடிகள்பத்தும் | பத்துத்தலைகளும் | எள்கி | இளைத்து [ழியை |
| புற்றுமறிந்தன | புற்றைவெட்டித்திற | கைதைக்கழி | தாழையையுடைய க |
| போல | ப்பினால்புரைபுரை | மருவி | அடைந்து |
| | யாய்த்தோற்றுவன | ஊடு | அக்கழிநடுவே |
| | போல | ஆடி | அங்குமிங்குமுலாவி |
| புவிமேல் | யுத்தபூமியிலே | வயல் | (பின்பு) கழனிகளில் |
| சிந்த | சிதறிக்கிடக்க | நண்ணி | ப்ரவேசித்து |
| செருவில் | யுத்தத்தில் | மழைதருநீர் | மழைஜலம் |
| வலம் | வெற்றியை | தவழ் | வந்துவிழுகிற |
| புரி | தரத்தக்க [த்தரித்த | கால் | வாய்க்காலாலே |
| சிலை | ஸ்ரீகோதண்டத்தை | தெருவில்மன் | தெருக்களில்புக்கு (நீ |
| கை | கையையும் | னி | ர்வடிந்தவாறே) |
| மலை | பர்வதம்போன்ற | வலம்புரி | சங்கங்களையும் |
| தோள் | புஜங்களையுமுடைய | தரளம் | முத்துக்களையும் |
| வேந்தன் | ராஜபுத்ரரானபெரு | ஈனும் | பெற்றுத்தருகிற |
| | மாளது | | |
| திருவடி | சரணாம்புஜத்தை | காழிச் சீராமவிண்ணகரே சேர்மின் | |
| சேர்ந்து | கிட்டி [வர்களே! | னீரே. | (எ) |
| உய்கிற்பீர் | உஜ்ஜீவிக்கக்கருதும | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (பொருவிலித்யாதி) ஒப்பில்லாதபல (ப3ல)த்தைப் பண்ணுகின்றுள்ள ராவணனுடைய தலைகள்பத்தும், †புற்றுமறிந்துகிடக்குமாபோலே, தேவதைகளுடைய வரத்தாலே பூண்கட்டினவை பூமியிலே சிதறும்படியாக, அவனைப்போலே வஞ்சநத்தாலன்றிக்கே யுத்தத்திலே பல(ப3ல)த்தைப்பண்ணுகின்றுள்ள வில்லையுடையனும், சத்ருக்களால் சலிப்பிக்கவரிதான தோளையுடைய சக்ரவர்த்தித்திருமகனைக்கிட்டி, அவன் விரோதியைப்போக்க, அவன் திருவடிகளை யாஶ்ரயித்து உஜ்ஜீவிக்கவேண்டியிருப்பீர்!

(திரைநீரித்யாதி) †கடல்நீரிலே தேங்கிப்போந்தேறினவென்னுதல்; †அன்றிக்கே, திரை, நீத்து - விட்டு, கடலைவிட்டு, வலம்புரியானது போந்தேறிச்†சற்றிருந்து, தாழையையுடைத்தாயிருக்கிற கழியிலே போய்ப்புக்கு, அங்கே இதஸ்ததஃ ஸஞ்சரித்து, அந்தக் கழிதான் வயல்களளவும் வரவெள்ளம் கோத்தபடியாலே வயலிலே வந்துகிட்டி, அவ்விடந் தன்னிலே வர்ஷஜலம் தேங்கிநின்று, அது வாய்க்காலாலே ஊரிலேவந்து புகுர அவ்வழியாலே தெருவிலேவந்தேறி, அந்நீர்வடிந்தவாறே பின்னை போகமாட்டாதே அவ்விடந் தன்னிலேகிடந்து, வலம்புரியையும் முத்தையும் ஈனுகிற்குமாயிற்று. வலம்புரிவயிற்றிலே வலம்புரிபிறக்கததட்டிலலையிறே. ... (௭)

---

அரு.—ஏழாம்பாட்டு. (பொருவிலித்யாதி) (புற்றுமறிந்து கிடக்குமா போலே) என்றது - புற்றை வெட்டித்திருப்பினல் புரைபுரையா யிருக்குமா போலே யென்கை. புரை - பாழி.

"திரை" என்று - கடலைச்சொல்லிற்றாய், நீரில் "தெள்கி" என்று - தேங்குதலாய், அத்தால் - போந்தேறினமை பலித்ததென்றருளிச்செய்கிறார் (கடலித்யாதி). திரையை, நீத்து - நீங்கியென்றாய், விட்டென்றாய், எள்கி - இளைப்பாலே ஈடுபட்டென்றாய், பாடாந்தரத்தில் இப்படிபதவிபாகம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி). பாடபேதமில்லாமல, கேவல பதத்தைப்பிரித்து அர்த்தாந்தரம் சொன்னுரென்னலாம்படி, "நீத்து" என்று ரேபனேடே கூட சில ஸ்ரீ கோசங்களிலுண்டு. "மருவி" என்றதின் பலிதார்த்தம் (சற்றிருந்து) என்றது. ... ... ... (௭)

மூ.—பட்டரவே ரகலல்குல் பவளச் செவ்வாய்
பணைநெடுந்தோள பிணைநெடுங்கண் பாலா யின்சொல்
மட்டவிழும் குழலிக்கா வானோர் காவின்
மரங்கொணர்ந்தா னடியணைவீ ரணில்கள் தாவ
நெட்டிலைய கருங்கமுகின் செங்காய் வீழ
நீள்பலவின் தாழ்சினையில் நெருங்கு பீனத்
தெட்டபழம் சிதைந்து மதுச் சொரியும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (௮)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பட்டு | பட்டுவெஸ்த்ரமணிந்து | அகல் | பரந்த [யும் |
| அரவு | பாம்பின்படத்தை யொத்து | அல்குல் | நிதம்பப்ரதேசத்தை |
| | | பவளம் | பவழம்போல் |
| ஏர் | அழகியதாய் | செவ்வாய் | சிவந்தவாயையும |

| | | | |
|---|---|---|---|
| பணை | மூங்கில்போலே | அணைவீர் | சேரவிருப்பவர்களே! |
| நெடு | நீண்ட | அணில்கள் | அணில்களானவை |
| தோள் | தோள்களையும் | தாவ | கிளையில்நின்றும்கிளை யில்ஸஞ்சரிக்க |
| பிணை | பெண்மானின்கண் போலே [யும் | நெடு | நீண்ட |
| நெடுங்கண் | விசாலமானகண்களை | இலைய | இலைகளையுடைய |
| பால் ஆம் | அம்ருதஸத்ருசமான | கருங்கமுகின் | கறுத்தபாக்குமரங்க |
| இன்சொல் | இனியசொற்களையு முடைய,(அப்போ தலர்ந்தபூக்களின் ஸம்ருத்தியாலே) | செங்காய் | பழுக்காய்கள் [ளின் |
| | | வீழ | உதிர்வதினால் |
| | | நீள் | நீர்வளப்பத்தாலோங் கித்தழைத்த |
| மட்டு அவிழும் | மதுவெள்ளமிடாநின் றுள்ள | பலவின் | பலாமரங்களின் |
| | | தாழ் | காய்க்கனத்தால்தா |
| குழலிக்கா | அளகபாரத்தையுடை யஸ்ரீஸத்யபாமை ப்பிராட்டிக்காக | சினையில் | கிளைகளில் [ழ்ந்த |
| | | நெருங்கு | நெருங்கியிருந்துள்ள |
| | | பீனம் | பருத்த |
| வானோர் | தேவதைகளுடைய | தொட்டபழம் | பக்வபலங்கள் |
| காவின் | சோலையில்நின்றும் | சிதைந்து | நசுங்கி |
| மரம் | பாரிஜாதவ்ருக்ஷத்தை | மது | தேனை |
| கொணர்ந்தான் | பிடுங்கிக்கொணர்ந்த ஸ்ரீக்ருஷ்ணனு | சொரியும் | பொழிகிற |
| அடி | திருவடிகளை [டைய | காழிச் சீராமவிண்ணகரே சேர்மின் நீரே. (அ) | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (பட்டித்யாதி) பட்டையுடைத்தாய், அரவுபோலேயாய், அழகிதாய், அகன்றிருந்துள்ள - நிதம்பப்ரதேச த்தையுடையளுமாய், பவளம்போலே சிவந்த அதரத்தையுடையளு மாய், மூங்கில்போலே நெடிய தோள்களையுடையளுமாய், மான்போ லேயிருந்துள்ள நோக்கையுமுடையளாய், பாலென்றுசொல்லலாம் படி இனிய பேச்சையுமுடையளாயிருந்துள்ள, மதுவெள்ளமிடா நின்றுள்ள குழலையுடைய ஶ்ரீ ஸத்யபாமைப்பிராட்டிஹேதுவாக, என்றுமொக்க ஸ்வர்க்கத்திலே நிற்கக்கடவதான வ்ருக்ஷத்தை பூமி யிலே கொடுவந்து நிறுத்தினவனுடைய. இத்தால்-அரியனசெய்தும் ஆஶ்ரிதரக்ஷணம்பண்ணுமவனென்கை.

(அணிலித்யாதி) அணில்களானவை ஸ்வைரமாகத்தாவ, நெ டிதான இலையையுடைத்தாய், கறுத்தநிறத்தையுடைத்தான கமுகு களில் சிவந்தகாயானது, தொட்டார்மேலே தோஷமாகவிழ, ஓங்கின பலாவின் தாழ்ந்தபணைகளிலே நெருங்கி வஸிப்பதாய், தசைந்துபக்வ மாய், †தொட்டார்மேலே தோஷமாயிருக்கிறபழமானது, தேங்கி

நிற்கிறதுக்கொருபோக்குக் கண்டுவிட்டாற்போலே மதுவெள்ள மிடாநிற்குமாயிற்று.... ... ... ... ... ...(அ)

அநு.—எட்டாம்பாட்டு. (பட்டித்யாதி). நீங்கள் நான் சொன்னபடி அநுகூலித்திகோளாகில், ஸ்ரீ ஸத்யபாமைப் பிராட்டியிடத்திற்போலே உங்களுக்கு வ்யாமுக்த்தனாய் அரியனசெய்து கொடுக்குமென்கிறாரென்றுஸங்கதி.

தெட்டபழம் - பக்வபலம், கனியப்பழுத்த பழமென்று தாத்பர்யம் (தொட்டார்மேலேயித்யாதி). ... .. ... ... (அ)

மூ.—பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரமனைத்தன் னுந்தியிலே தோற்று வித்துக்
கறைதங்கு வேல்தடங்கண் திருவை மார்பில்
கலந்தவன் தாளணைகிற்பீர் கழுநீர் கூடித்
துறைதங்கு கமலத்துத் துயின்று கைதைத்
தோடாரும் பொதிசோற்றுச் சுண்ணம் நண்ணிச்
சிறைவண்டு களி பாடும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிறைதங்குசடையானை | சந்த்ரனைத்தன்ஜடாமகுடத்தில் அணிந்தருத்ரனை | சிறைவண்டு | இறகையுடையவண்டுகளானவை [ல் |
| வலத்தேவைத்து | வலவருகேவைத்து | கழுநீர் | செங்கழுநீர்ப்பூக்களி |
| பிரமனை | ப்ரஹ்மாவை [தில் | கூடி | சேர்ந்திருந்து(அத்தால்வந்தபரிமளமாறும்படி) [ன |
| தன்உந்தியிலே | தன்திருநாபீகமலத்த | துறைதங்கு | துறையிலேயுண்டா |
| தோற்றுவித்து | உண்டாக்கி | கமலத்து | தாமரைப்பூக்களில் |
| கறைதங்கு | (சத்ருக்கள்)ருதிரமாமஸங்கள்தங்கிய | துயின்று | பள்ளிகொண்டு (பின்பு) |
| வேல் | வேல்போன்ற | கைதை ஆரும் | பெரியமடலையுடைய |
| தடம் | விசாலமான [ய | தோடு | தாழம்பூவிலே |
| கண் | திருக்கண்களையுடை | பொதி | அதனுள்நிறைந்த |
| திருவை | பெரியபிராட்டியாரை [த் | சோறு | தாதுக்களின் |
| | | சுண்ணம் | பொடிகளில் |
| மார்பில் | தன்மார்பிலேவைத் | நண்ணி | விழுந்துபுரண்டு |
| கலந்தவன் | அவளோடேநித்யஸம்ஸ்லேஷம்பண்ணுமவனது | களி | (இவற்றாலுண்டான) ஸந்தோஷாதிசயத்தால் |
| தாள் | திருவடிகளை [ளே! | பாடும் | பாடாநின்றன |
| அணைகிற்பீர் | சேரவிரும்புமவர்க | வயல்சூழ்காழிச்சீராம விண்ணகரே சேர்மின்நீரே. | (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பிறையித்யாதி) ஸாதகனுமாய், போகப்ரதாநனுமாயிருக்கிற ருத்ரனைத் தன் திருமேனியில் வலவருகேவைத்து, ப்ரஹ்மாவைத் தன் திருநாபிகமலத்திலே உத்பாதித்து, †கறைகழுவ அவஸரமில்லாதபடியான வேல்போலேயிருக்கிற பரந்ததிருக்கண்களையுடைய பெரியபிராட்டியாரைத் †தன் திருமார்விலேசேர்த்து அவளோடே நித்யஸம்ஶ்லேஷம்பண்ணுகிறவன் திருவடிகளைக்கிட்டவேண்டியிருப்பீர்! அபிமாநிகளான ப்ரஹ்மருத்ராதிகளோடு, அநந்யபரையான பிராட்டியோடு வாசியறத் திருமேனியிலே யிடங்கொடுத்துக்கொண்டிருக்கிற சீலவானைப் பெறவேண்டியிருப்பீர்!

(கழுநீரித்யாதி) செங்கழுநீரிலேபோய்ப்புக்கு நித்யஸம்ஶ்லேஷத்தைப்பண்ணி, அத்தாலேவந்த ஶ்ரமமாறும்படி துறையிலேயுண்டான தாமரைப்பூவிலேபுகுந்து மதுபாநம்பண்ணிப் பள்ளிகொண்டு, அநந்தரம் †தாழையுடைய பெரியமடலையுடைத்தான பூவிலேபோய்ப்புக்கு, அதிலகவாயிலுண்டான தாதும் சுண்ணமும் பரிமளமுமெல்லாம் தன்னுடம்பிலேயாம்படி அதிலே கிடந்துபுரண்டு, சிறகையுடைத்தான வண்டுகளானவை மதுபாநத்தாலும் பரிமளத்தாலுமாகக் களித்துப்பாடாநின்றுள்ள. ... ... ... (௯)

---

அநு.—ஒன்பதாம்பாட்டு. (பிறையித்யாதி) ஸ்ரீ ஸத்யபாமைப்பிராட்டி அதிவிலக்ஷணையாகையாலே அவளிடத்தில் அரியன செய்தானேயாகிலும் நாங்கள் துர்மாநிகளன்றோ, எங்களுக்கு மவனரியன செய்யப்போமோ வென்ன; அவனுடைய ஸுசீலதையைப் பாரீகோள், திருவினிடத்தில் வ்யாமுக்தனுயுடம்பு கொடுத்தாற்போலே கந்தர் காபாலிகளுக்கு முடம்பு கொடுத்தான் கண்டீர்களென்கிறாரென்று ஸங்கதி.

(கறைகழுக அவஸரமில்லாதபடியான) என்றத்தாலே - ஆள்களைவெல்லுகையே ஸ்வபாவமா யிருக்கை பலிக்கையாலே, அநுக்ஷணம் எம்பெருமானை "ஜிதம்" என்னப்பண்ணவல்ல கண்களென்று தாத்பர்யம். "மார்பில்" என்றவநந்தரம் "சேர்த்து" என்று அத்யாஹாரம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (தன்திருமார்விலேயித்யாதி).

கைதை - ஆரும் - தோடு - பொதிசோறு என்றந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (தாழையுடையவித்யாதி). மடலிலேபொதிந்துகிடந்த சோறு - தாதுகள். ... ... ... ... ... ... ... (௯)

மூ.—செங்கமலத் தயனனைய மறையோர் காழிச்
சீராம விண்ணகரென் செங்கண் மாலை
அங்கமலத் தடவயல்சூ ழாலிநாட
னருள்மாரி யரட்டமுக்கி யடையார் சீயம்
கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன்
கொற்றவேல் பரகாலன் கலியன் சொன்ன
சங்கமுகத் தமிழ்மாலை பத்தும் வல்லார்
தடங்கடல்சூ ழுலகுக்குத் தலைவர் தாமே. (௧0)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செங்கமலம் | அழகியதிருநாபீகமலத்தில்பிறந்த | அரட்டு அமுக்கி | சத்ருக்கள் (தலையெடாதபடி) அமுங்கச்செய்யுமவராய் |
| அயன் அனைய | ப்ரஹ்மாவையொத்த | அடையார் | சத்ருக்களுக்கு [ராய் |
| மறையோர் | ப்ராஹ்மணர்வர்த்திக்கிற | சீயம் | ஸிம்ஹம் போன்றவ |
| காழிச்சீராமவிண்ணகர் | காழிச்சீராமவிண்ணகரில்நித்யவாஸம்பண்ணுகிற்கிற | கொங்கு | தேன்நிறைந்த |
| | | மலர் | பூக்களை [களுக்கு |
| | | குழலியர் | கூந்தலிலுடையஸ்த்ரீ |
| என் | என்னுடைய | வேள் | காமன் போன்றவரா |
| செங்கண்மாலை | புண்டரீகாக்ஷன்விஷயமாக, | மங்கை | திருமங்கைக்கு [ய் |
| | | வேந்தன் | ராஜாவாய் |
| அம் | அழகிய [றைந்த | பரகாலன் | எதிரிகளுக்கு யமன் போன்றவராய் |
| கமலம் | தாமரைப்பூக்கள்நி | | |
| தடம் | தடாகங்களும் | கொற்றம் | வெற்றிதரத்தக்க |
| வயல் | கழனிகளும் | வேல் | வேலைப்பிடித்த |
| சூழ் | சுற்றுஞ்சூழ்ந்த | கலியன் | ஆழ்வார் |
| ஆலிநாடன் | திருவாலிநாட்டுக்குத்தலைவராய் | சொன்ன | அருளிச்செய்த |
| | | சங்கம் | புலவர்கூட்டத்தார் |
| அருள்மாரி | அநுகூலர்க்கு அருள்பொழியும் மேகம் போன்றவராய் | முகம் | எதிர்கொண்டு அநுபவிக்கலாம்படியான |

| | | | |
|---|---|---|---|
| தமிழ்மாலை பத்தும் | தமிழ்த்தொடை பத்தையும் | உலகுக்கு | லோகத்தில் |
| வல்லார் | அர்த்தத்துடன் கற்க ]வல்லவர் | தலைவர் | எல்லாரும்தங்களையே ஆஶ்ரயிக்கும்படி மேலாயிருப்பர். () |
| தடம் | பரந்த | | |
| கடல்சூழ் | ஸமுத்ரம்சூழ்ந்த | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (செங்கமலமித்யாதி)(க)†"வாசஸ்ச்ஶ்ஷ்வாள் வாஸ்ஸ-வால்மீகிர்பகவாந்ருஷி:" என்னுமாபோலே. †பெருமாளுக்கு வல்லபனாயிருப்பானொரு திருவிளக்குப்பிச்சன் பலரையும் திருமுன்பே க்ஷேபிக்கிற ப்ரகரணத்திலே, ஆழ்வார்களைத் திருவுள்ளமாய், "நம்பக்தர்களுக் கொருகுறை சொல்லிக்காணாய்" என்று திருவுள்ளமானாராய்; இப்பாட்டை விண்ணப்பம்செய்து, "நாயன்தே! தேவரைக்கவிபாட" என்றுதுடங்கி "தம்மைக் கவிபாடிக்கொண்டார்" என்ன; "அதுவும் †நம்மையன்றோசொல்லிற்று" என்று திருவுள்ளமானார். சதுர்முகஸமரான ப்ராஹ்மணர் திரண்டதேசத்தில் சீராமவிண்ணகரிலே நித்யவாஸம்பண்ணுகிற புண்டரீகாக்ஷனைக் கவிபாடிற்று; அழகியதாமரைகளாலே அலங்க்ருதமான தடாகங்களையுடைத்தான வயலாலேசூழப்பட்ட திருவாலிநாட்டுக்கு ப்ரதாநரானவர்; அநுகூலவர்க்கத்துக்கு ஸர்வஸ்வதாநம்பண்ணுமவர்; எதிரிட்ட சத்ருக்கள் தலையெடாதே அமுங்கும்படிபண்ணுமவர்; சத்ருக்களுக்கு வந்தணுகவொண்ணாதபடி ஸிம்ஹம்போலே அநபிபவநீயரானவர்; †எல்லார்க்கும் ஸ்பருஹணீயரானவர்; திருமங்கைக்கு ப்ரதாநராயுள்ளவர்; ஸர்வேஶ்வரன் ஆயுதம்பிடித்தாற்போலே ஆஶ்ரிதரக்ஷணத்துக்காகப் பிடித்தவேலையுடையராய், †ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவான ஆழ்வாரருளிச்செய்த; தமிழுக்குக்கடவார் திரளவிருந்தால் இத்தையே யெப்போதுமொக்கக் கொண்டாடவேண்டும்படியிருக்கிற இத்தொடையல்பத்தும்வல்லார். (தடங்கடல்சூழுலகுக்குத் தலைவர்தாமே) ஸர்வேஶ்வரனைப்போலே எல்லார்க்கும் தாங்களே ஆஶ்ரயணீயராவர். ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



(க) ரா - பா - ௪ - க.

அ௫.—நிகமம். (செங்கமலமித்யாதி) எம்பெருமானைக் கவிபாடுகிறவர் தம்மைத்தாமேகொண்டாடுவானென்னென்ன; ஆப்திக்குடலாகக்கொண்டா டினுரென்று விவக்ஷித்து, அதுக்கு த்ருஷ்டாந்தமுகததால் பரிஹரிக்கிருர் (வால்மீகிரித்யாதி). ஆப்திக்குடலான மாதரமன்றிக்கே அதுதானே பகவத் ஸ்துதியென்று பரிஹாராந்தரத்தை ஒளைதிஹ்யமுகேந வருளிச்செய்கிருர் (பெருமாளுக்கித்யாதி). (நம்மையன்ரேசொல்லிற்று) என்றது - நம்மநுபவ த்தால்வந்த ஏற்றத்தால் தம்மைக்கொண்டாடினுல் அதுநம்மைக் கொண்டா டினபடியன்ரேவென்றபடி. "கொங்குமலர்க்குழலியர்வேள்" என்றதுக்கு- தேன் வெள்ளமிடுகிற மலரைக் குழலிலேயுடைய ஸ்த்ரீகளுக்குக் காமனைப் போலே அநுகூர்க்கெல்லாம ரூபகுணத்தாலும் த்ரஷ்டவ்யரென்று விவக்ஷித் தருளிச்செய்கிருர் (எல்லார்க்குமித்யாதி). அரட்டமுக்கி அடையார்சீய மாகையாலே பரகாலனென்று பேர்பெற்ருரென்னுமதுதோன்ற யோகார்த் தத்தைக்காட்டுகிருர் (ப்ரதிபக்ஷத்துக்கித்யாதி). .. ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்ரும்பத்தில் நாலாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி, ௩-ம் பத்து, ௫-ம் திருமொழி
## வந்துனதடியேன் ப்ரவேசம்.



வ்யா.—†எல்லாருந்தந்தாமுக்கு நன்மைவேண்டியிருக்கில் ஸர்வேஶ்வரன்பக்கலிலே ந்யஸ்தபரராய்க்கொண்டு சிராமவிண்ணகரையாஶ்ரயியுங்கோளென்றார், †அங்ஙனன்றிக்கே †தம்மளவில்வந்தவாறே திருவாலியை யிருப்பிடமாகக்கொண்டு அங்கே எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரன்தானே ஸ்வயம்வரித்துக்கொண்டு வந்திருக்கிறபடியை யநுஸந்தித்து, "பரமப்ராப்யனாயிருக்கிற நீ என்பக்கலர்த்தித்வமின்றிக்கே யிருக்கச்செய்தே என்ஹ்ருதயத்திலே வந்து புகுந்தாய், எனக்குன்னையொழியச்செல்லாமையைப்பிறப்பித்தாய், உன்†வ்யதிரேகத்திலே நான் பிழையாதபடி பண்ணினாய், இங்ஙனேயிருந்தபின்பு †இனித்தான் நீபோகில் பிழையேன், போகலொட்டேன், உனக்கு என்றனை தயநீயரில்லை, ஆனபின்பு என்னை †நித்யகைங்கர்யத்தைக்கொண்டருளவேணும்" என்று ப்ராப்யனான அவன் திருவடிகளிலே கைங்கர்யத்தை †அபேக்ஷித்து; அப்போதே கிடையாமையாலே அதில் க்ரமப்ராப்தி பற்றாமையாலுண்டான தம் த்வரையை ஆவிஷ்கரித்தாராய்த் தலைக்கட்டுகிறார். ... ... *

---

அரு.—வந்துனதடியேன்ப்ரவேசம்.—கீழே பரோபதேசத்தில் ப்ரவ்ருத்தரானவர் இப்போது திருவாலியம்மானைக்குறித்துத் தம் த்வரையையறிவிப்பிக்கிறதென்னென்கிறசங்கையிலே ஸங்கதியை யருளிச்செய்கிறார்(எல்லாருமித்யாதி). (அங்ஙனன்றிக்கே) என்றது-தமக்குத்தாம் நன்மைதேடுகையும்,ஒருவருபதேசிக்க ஒரு திவ்யதேசத்தைப்பற்றியிருக்கையுமன்றிக்கேயென்றபடி. (தம்மளவில்வந்தவாறே) தம்மைத்தாமே விசாரித்தவாறே. "ஆருயிரே" என்றத்தைப்பற்ற, (வ்யதிரேகத்திலித்யாதி)."மனம்வாடநீநினையேல்"என்றத்தைப்பற்ற (இனித்தானித்யாதி). "கைதொழுதெழும்புந்தியேன்" என்றத்தைப்பற்ற (நித்யேத்யாதி) "இனிப்போயினாலறையோ உரையாயொருமாற்றமெந்தாய்" என்னுமத்தைப்பற்ற (அப்போதேயித்யாதி). ... ... *

மூ.—வந்துனதடியேன்மனம்புகுந்தாய்புகுந்ததற்பின்வணங்குமென்
சிந்தனைக்கினியாய் திருவேயென்னாருயிரே
அந்தளிரணியாரசோகினிளந்தளிர்கள்கலந்தவையெங்கும்
செந்தழல்புரையும் திருவாலியம்மானே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அம் | அழகிய | என் ஆர்உயிரே | எனக்குதாரகனான வனே! |
| தளிர் | தளிர்களால்வந்த | வந்து | நானிருந்தவிடம் வந்து |
| அணி ஆர் | அழகுமிக்கிருக்கிற | உனது அடியேன் | உன்னுடையசேஷபூதனானவென்னுடைய |
| அசோகின் | அசோகமரத்தினது | மனம் | நெஞ்சில் |
| இளந்தளிர்களை | இளந்தளிர்களானவை | புகுந்தாய் | ப்ரவேசித்தாய் |
| எங்கும்கலந்து | எங்குமொக்கவ்யாபித்து | புகுந்ததற்பின் | நீபுகுந்தபின்பு |
| செம் | சிவந்த | வணங்கும் | ஆஶ்ரயிக்கிற |
| தழல்புரையும் | அக்னிபோலிருக்கிற | என்சிந்தனைக்கு | என்மநஸ்ஸுக்கு |
| திருவாலியம்மானே | திருவாலியையிருப்பிடமாகவுடையவனே! | இனியாய் | போக்யனானாய். (௧) |
| திருவே | எனக்குஸம்பத்தானவனே! | | |

வ்யா.—முதற்பாட்டு. † (வந்து) நிரதிசயபோக்யமான திருவாலியை இருப்பிடமாகவுடையையாய், நீயிருந்தவிடத்திலே நானே வந்து கிட்டவேண்டியிருக்க என்பக்கல் அபேக்ஷாமாத்ரமுமின்றிக்கேயிருக்கச்செய்தே, நானிருந்தவிடத்திலே நீயேவந்து. † த்வீபாந்தரசரக்குக்களிரண்டும் தன்னிலே ஸங்கதமாமிடத்தில் இரண்டும் பாதி பாதிவழிவந்துகூடுதல், ஒன்றேவருதல் செய்யவேணுமிறே, †அதில் இவருடையபேற்றுக்கு இவ்வளவாக வழிவந்தானிவனாயிற்று. (உனதடியேன்) †வருகிறபோது புகுருகைக்கடியாக அவன் கையோடு கொடுவந்த ப்ரமாணம். (க)"அடியானிவனென்றெனக்காரருள்செய்யும்" என்னுமாபோலே-†நீயோ உன்கார்யத்துக்குக்கடவாய்? நான் காண் என்று, தானே ஸர்வபரங்களையும் நிர்வஹிப்பானாகவாயிற்று ஏறிட்டுக்கொண்டு புகுந்தது. †வந்துபுகுரப்புக்கால், இசையாதே, "அல்லேன்" என்கைக்கு வாய்த்தலையான நெஞ்சிலேவந்து புகுந்தானாயிற்று. †அவன் புகுந்தபின்பு இவர்செய்ததென்னென்னில்;(வணங்கும்) †சத்ருக்ருஹம்மயாகிலும், புகுந்தால் ஆஸநமிடுவர்களிறே; அவ்வோபாதி, பின்னை வணங்கினாராயிற்று,(உ) "யதார்ஹம் கேசவம் வ்ருத்தி மவசா: ப்ரதிபேதிரே" - யதார்ஹம் கேசவே வ்ருத்தி மவசா:ப்ரதிபேதிரே" என்னுமாபோலே. (என்சிந்தனைக்கினியாய்) † இப்படிபுகுந்தவன் தானே, "போவேன்" என்றாலும் விடவொண்ணாதபடியாயிற்று நெஞ்சுக்கினிமையானபடி.(திருவே)(ரு)†"திருவுக்கும்திரு" என்கிற

(க) தி - வாய் - ௬ - ௪ - ௧0. (உ) பார - (ரு) ௭ - ௭ - ௧.

படியே இவருடைய ஸம்பத்தாயிற்று இவன். (என்னுருயிரே) ஸம்பத்துத்தானும் தாரகம் வேறொன்ருயிருக்கையன்றிக்கே, எனக்கு தாரகனானவனே! வ்யதிரேகத்தில் பிழையாதபடியாயிராநின்ருனாயிற்று.

(அந்தளிரித்யாதி) எனக்கு தாரகனுமாய் நிரதிசயபோக்யனுமானநீ திருவாலியை யிருப்பிடமாகவுடையையாய்வைத்து, தனக்கென்ன ஓரிடமில்லாதாரைப்போலே, என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்தாயே! †அழகிய தளிர்களாலேவந்த அழகு மிக்கிருக்கிற அசோகவ்ருக்ஷத்தினுடைய இளந்தளிரானவை எங்குமொக்கப் பரப்புமாறி அக்நிகல்பமாயிராநின்றதாயிற்று. † சிவந்த இளந்தளிர் எங்குமொக்கப் பரப்புமாறித் தளிர்த்துநின்றபோது, எங்குமொக்க நெருப்புக்கொளுத்தினுற்போலே தர்சநீயமாயிராநின்றதாயிற்று. இப்படி அந்யதாஜ்ஞாநஜநகமானதேசத்தை யிருப்பிடமாகவுடைய ஸர்வேஶ்வரனு யிருந்துவைத்து என் ஹ்ருதயத்திலே புகுந்திருந்தாயே!.. ... ... ... ... ... ... ... (க)

---

முதற்பாட்டு.—(வந்தித்யாதி) "அந்தளிர்" இத்யாதி "அணியாலியம்மானே வந்து" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி, வருகைக்கொருஹேதுசொல்லாமையால் பலித்தவர்த்தத்தை யருளிச்செய்கிருர் (நிரதிசயேத்யாதி). "அபேக்ஷாமாத்ரமுமின்றிக்கே" என்றத்தை விவரியாநின்றுகொண்டு "புகுந்தாய்" என்னவமைந்திருக்கவும், "வந்து" என்கையாலே வருகையில் துஷ்கரதை தோற்றுகிறதென்று விவக்ஷித்து, திருவாலியம்மானுக்குத் தம்முடைய வைமுக்யத்தால் நெடுந்தூரமாய்த் தோற்றுமென்றும், இப்படியிருக்க வருகைக்கு ப்ரயோஜநத்தையும் காட்டிக்கொண்டு வ்யாக்யாதா ஈடுபடுகிருர் (த்வீபாந்தரேத்யாதி). (அதில்) என்றது - ஒன்றே வருமிடத்திலென்றபடி. "உனதடியேன்" என்று - இவர் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவராகத் தம்மையநுஸந்திக்க, அபேக்ஷா நிரபேக்ஷமாக வந்தானென்னச் சேருமோவென்ன; வாஸ்தவாகாரத்தைப்பற்றி அவன் நினைத்தபடியை யருளிச்செய்கிருரென்கிருர் (வருகிறவித்யாதி). "உனதடியேன்" என்ற ஆழ்வாருடைய பாசுரமானது ஸர்வேஶ்வரன் கையதான ப்ரணவார்த்தமாகையாலே அவன் கையிலோலையெழுத்தைத் தாம்கண்டு அர்த்ததத்தை அநுஸந்தித்தாரித்தனையாகையால், இந்தப்பாசுரம் ப்ரமாணமென்று கருத்து. "அடியேன்" என்னவேயமைந்திருக்க, "உனது" என்கைக்குக் கருத்தருளிச்செய்கிருர் (நீயோவித்யாதி). "மனம்" என்றதுக்குக் கருத்து (வந்துபுகுராவித்யாதி). "புகுந்ததற்பின் வணங்கும்" என்கையாலே அவ்யவஹிதகாலத்திலே ஸ்வரூபஜ்ஞாந கார்யமான வணக்கமிவருக்குவர ஸம்பாவனையில்லேயே என்று ப்ரமாத்ரு சங்காது

வாதம்பண்ணுகிறார் (அவனித்யாதி). இதுக்கு உத்தரம் (சத்ருவித்யாதி). "வணங்கும்" என்கிற ப்ரதீகம் சங்கைக்குமுந்துற அநுஸந்திப்பது. இவர் அம்சமாக வணங்கிறாராகிலும் அவன் சிந்தனைக்கினியனானபடியின் எல்லைநிலத்தைக்காட்டுகிறார் (இப்படியித்யாதி). "என்னாருயிரே" என்றவிடத்தில், "என்" என்றத்தை யிங்கும்கூட்டி, "என்திரு" என்று விவக்ஷித்து, ஸத்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் (திருவுக்குமித்யாதி).

தாத்பர்யமருளிச்செய்து சப்தார்த்தமருளிச்செய்கிறார் (அழகியவித்யாதி). திருவாலிநகரை யிங்ஙன் வர்ணித்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சிவந்தவித்யாதி வாக்யத்வயத்தாலே). ... ... ... (௧)

மூ.—நீலத்தடவரை மாமணிநிகழக் கிடந்ததுபோ லரவணை
வேலைத்தலைக் கிடந்தா யடியேன் மனத்திருந்தாய் [தெங்கு
சோலைத்தலைக் கணமாமயில் நடமாடமழைமுகில்போன்றெழுந்
மாலைப் புகை கமழு மணியாலியம்மானே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆலைப்புகை | கருப்பஞ்சாறட்டபு | தடவரை | பெரியமலையானது |
| எங்கும் | எவ்விடத்தும் [கை | மாமணி | பெருவிலையனார்த் |
| மழைமுகில் | வர்ஷாகாலமேகம் | | நம் [மபடி |
| போன்று | போலே | நிகழ | தன்மேல்ப்ரகாசிக்கு |
| எழுந்து | மேலெழுவதினால் | கிடந்ததுபோல் | சாயவிருந்ததுபோலே |
| கமழும் | பரிமளத்தையுடைத்தான | வேலைத்தலை | திருப்பாற்கடலில் |
| | | அரவணை | திருவநந்தாழ்வான்மேலே (கௌஸ்துபம் விளங்க) [னே ! |
| சோலைத்தலை | சோலையிலே [கள் | | |
| மாமயில்கணம் | பெரியமயில்கூட்டங் | | |
| நடமாட | ஆடாநின்றுள்ள | கிடந்தாய் | பள்ளிகொண்டவ |
| அணி | அழகிய | அடியேன்மனத்து | (இப்பொழுது) சேதனனை *பூதனான என் ஹ்ருதயத்தில் |
| ஆலியம்மானே | திருவாலிநாட்டுக்குஸ்வாமியானவனே ! | | |
| நீலம் | நீலநிறத்தையுடைய | இருந்தாய் | புகுந்துநீங்காதபடி நின்றாய். (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (நீலமித்யாதி) ஒரு நீலகிரியானது தன்மேலே பெருவிலையனாயிருப்பதொரு ரத்நம் உஜ்ஜ்வலமாம்படி சாய்ந்தாற்போலேயாயிற்றுத திருவநந்தாழ்வான்மேலே திருப்பாற்கடலிலே அழகிய திருமேனியிலே ஸ்ரீகௌஸ்துபம்விளங்கக் கண்வளர்ந்தருளும்படி. (அடியேன் மனத்திருந்தாய்) †திருப்பாற்கடலிலே சாய்ந்தருளிற்று இவர் நெஞ்சிலே புகுருகைக்கு, விலக்காமைக்கு அவஸரம் பெறுமளவுமாயிற்று; விலக்காமைபெற்று இவர் ஹ்ருதயத்திலே புகுந்தபின்பு க்ருதக்ருத்யனாயிருந்தானாயிற்று.

(சோலையித்யாதி) சோலைத்தலையிலே பெரிய மயில்திரளானது நடமாடும்படியாக வர்ஷாகவலாஹகம்போலேதோன்றி எங்குமொக்க ஆலைப்புகை கமழுமாயிற்று. மழைமுகில்போலேயெழுகிற ஆலைப்புகையைக்கண்டு சோலைத்தலை கணமாமயில் நடமாடாநிற்குமாயிற்று. இப்படி விபரீதஜ்ஞாந ஜநகமானதேசத்தை யிருப்பிடமாகவுடையையாயிருந்துவைத்து, என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்தாயே!. ... ... ... ... (௨)

அரு —இரண்டாம்பாட்டு. (நீலமித்யாதி). கீழ்ப்பாட்டில் மனம்புகுந்தபடியை யருளிச்செய்தார்; இதில் - ஸ்த்திரனாய் மனத்திருந்தபடியை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

இப்போது திருப்பாற்கடலில் கிடக்கையைச் சொல்லுகைக்குத்தாத்பர்ய கதநபூர்வகமாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திறவித்யாதி). ... (௨)

மூ.--நென்னல்போய்வருமென்றென்றெண்ணியிராமையென்மனத்
திம்மைக்கென்றிருந்தேனெறிநீர்வளம்செறுவில் [தேபுகுந்த
செங்நெற்கூழைவரம்பொரீஇயரிவார் முகத்தெழுவாளைபோய்க்கரும்
பன்னல்காடணையு மணியாலியம்மானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எறி | அலைவீசாநின்றுள்ள | அன்னல் | செடிமிக்க |
| நீர்வளம் | நீர்வளப்பத்தையுடைய | கரும்புக்காடு | கருப்பங்காட்டை |
| செறுவில் | வயல்களிலுண்டான | அடையும் | சேருகிற |
| செங்நெற்கூழை | வயிரம்பற்றியசெந்நெற்பயிரை | அணியாலியம்மானே ! | |
| வரம்புஒரீஇ | வரம்புகளில்அதின்தலைகளைச்சேர்த்து | நென்னல்போய் | நேற்றுப்போய் |
| அரிவார் | அறுக்கிறவர்களுடைய | வரும் | நாளைவரும் |
| முகத்து | முகத்திலே | என்றென்றெண்ணி | என்றுஇப்படியேமநோரதித்து |
| எழு | எழப்பாய்கிற | இராமை | இராதபடி |
| வாளை | வாளைமத்ஸ்யங்கள் | என்மனத்தே புகுந்தது | அடியேன்மனதில் நீவந்திருந்தது [ய |
| போய் | அவ்வயலைவிட்டுப்போய் | இம்மைக்கு என்றிருந்தேன் | இவ்வுலகில்எனக்கு இனிமைவிளைக்கைக்காகஎன்றிருந்தேன். (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (நென்னலித்யாதி) "நேற்றுப்போனான், இன்றுவரும்" என்றுகொண்டு† மாறாதே மநோரதித்துக்கொண்டிராதபடியாகவென்னுதல்; "நேற்றுப்போயிற்று, இன்றுவந்தது, நாளையும்வரக்கடவது" என்று மநோரதித்துக்கொண்டு காலம்செல்லவிடவரிதாம்படியிராமேயென்னுதல். (என்னித்யாதி) இப்படிமநோ

ரதத்தாலே நான் காலக்ஷேபம் பண்ணுதபடியாக, என்ஹ்ருதயத்தி லேவந்து புகுந்தது, இஹலோகத்திலே எனக்கினிமைவிளைக்கைக் காக என்றிருந்தேன். (இம்மை) என்றபோது, இஹலோகத்திலே யென்றுகிறது; (இன்மை) என்றபோது, இனிமை என்றுகிறது

(எறிநீரித்யாதி) அலையெறியாநின்றுள்ள நீரையுடைத்தாய், †அழகியதாயிருந்துள்ள, செறுக்களுண்டு - செய்கள், அவற்றிலுண் டான, செந்நெற்கூழையென்று - செந்நெல்தலையாய், அத்தைவரம பிலே †ஒருக்கிஅரிகிறவர்களென்னுதல்;(க)"பைங்கூழ்"என்கிறபடி யே, கூழையென்றது - கூழென்றாய், செந்நெல்பயிராய், அத்தை அரிவாரென்னுதல். (வரம்பொரீஇ) நேர்கொடுநேர் சென்றிழிந்து அறுக்கவொண்ணுதபடி வயிரம்போலே யிருக்கையாலே வரம்பு களிலே தலைகளைக்கொடுபோந்து ஒதுக்கி, நுனியிலே அரிவர்களா யிற்று; அவர்கள் சேரப்பிடித்தபிடியிலே யகப்பட்ட வாளைகளான வை அவர்கள்முகத்திலே யெழப்பாய்ந்து ஸாபாயமான நிலத்தை விட்டு நிராபாயமாக வர்த்திக்கைக்காகஅருகேயுண்டான †செடிமிக்க கருப்பங்காட்டிலே சென்றடையாநிற்குமாயிற்று; போய், அரணைப் பற்றுமாயிற்று,-†அந்த அழகிய கருப்பங்காட்டிலேயடையும்....(௩)

---

அநு.—மூன்றும்பாட்டு. (நென்னலித்யாதி) கீழ்ப்பாட்டில் - "அடி யேன் மனத்திருந்தாய்" என்றார்; அந்தமனத்திருந்தபடிதானும் அவிச்சிந்ந மாகவிருந்தானென்றும், காலவிசேஷம் நெஞ்சில்படாதபடி நிரதிசய போக் யதை தோற்றவிருந்தானென்று மருளிச்செய்கிறார் என்று இரண்டுவிதமாக ஸங்கதி,

வீப்ஸாதாத்பர்யம் (மாறுதேயித்யாதி).

"கூழை" என்றது - கதிராகவும், பயிராகவும் அர்த்தத்வயம் திருவுள் ளம்பற்றி, கதிரறுக்கையும் எழுச்சி கொய்கையுமாக்கி க்ரமேண வருளிச் செய்கிறார் (அழகியதாயித்யாதி). (ஒருக்கி)என்றது - §உறுக்கி என்கை. அன் னல்பதத்துக்கர்த்தம் (செடிமிக்க) என்றது. அந்த நல் என்றர்த்தாந்தர மரு ளிச்செய்கிறார் (அந்தவித்யாதி). ... ... ... ... (௩)

மூ.—மின்னின்மன்னு நுடங்கிடைமடவார்தம் சிந்தைமறந்துவந்துநி
மன்னுசேவடிக்கே மறவாமை வைத்தாயால் [ன்
புன்னைமன்னுசெருந்திவண்பொழில்வாயகன்பணைகள் கலந்தெ
மன்ன மன்னும்வய லணியாலியம்மானே. [ங்கு

---

(க) பெரு - திரு - ௫ - எ.     § உறுக்கி - சேர்த்து.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புன்னை | புன்னைமரங்களும் | மின்னில்மன்னு | மின்னோடொத்த |
| செருந்தி | ஸுராபுன்னைமரங்களும் | நுடங்கு | ஸூக்ஷ்மமான |
| | | இடை | இடையையுடைய |
| மன்னு | நிறைந்திருக்கிற | மடவார்தம் | ஸ்த்ரீகள்பக்கலுண்டான |
| வண் | அழகிய | | |
| பொழில்வாய்அகன் | சோலையின்உள்ளே | சிந்தைமறந்து | வாஞ்சையைத்தவிர்ந்து |
| | | வந்து | உன்பக்கலிலேவந்து |
| பணைகள் | பொய்கைகளில் | மன்னு | எப்போதும் ஏகரூபமான |
| அன்னம் | ஹம்ஸங்கள் | | |
| எங்குங்கலந்து | எங்குமொக்க ஒன்றோடொன்று சேர்ந்து | நின் | உன்னுடைய |
| | | சேவடிக்கே | அழகிய திருவடிகளையே |
| | | மறவாமை | நான்மறவாதபடி |
| மன்னும் | நித்யவாஸம் பண்ணுகிற | வைத்தாய் | செய்தருளினாய் ; |
| வயல் | கழனிகளையுடைய | ஆல் | இதென்னஆஸ்சர்யம்! |

அணிஆலி அம்மானே ! (௪)

வ்யா.—நாலாம்பாட்டு. நீரிங்ஙனேகிடந்து நெஞ்சுளுக்குப்படாநிற்கிறதென்னென்ன, †ஸ்த்ரீகளைவிஸ்மரித்து, உன்திருவடிகளைமறவாதபடி பண்ணினாயாகில் இனி நீ செய்வதென்னென்கிறார்.

(மின்னித்யாதி) †மின்னோடொத்திருப்பதாய் நுடங்காநின்றுள்ள இடையையுடையரான, மடவாருண்டு - ஸ்த்ரீகள், அவர்கள் விஷயமாகவுண்டான. (சிந்தைமறந்து) †இவனெப்போதுமொக்க அவர்களை போக்யைகளாக அநுஸந்திக்குமித்தனையோக்கி †அவைதன்னை இவன்தான் லபித்தானாகை †பெரும்பணியிறே.†அப்ராப்த விஷயங்களிலுண்டான வாஞ்சையைத்தவிர்த்து ப்ராப்தவிஷயத்தையாசைப்படப்பண்ணின விதுதான் போருமிறே உபகாரம். அவற்றை நானே கைவிட்டு, உன் பக்கலிலேவந்து ஸதைகரூபமான உன் திருவடிகளிலே எனக்கு மறவாமையாகிற பேறுண்டாம்படியாக, †நானபேக்ஷிக்கவன்றிக்கே தண்ணீர்ப்பந்தல் வைப்பாரோபாதி நிர்ஹேதுகமாகச் செய்தருளினாய்.

புன்னை, செருந்தி இவை மன்னாநின்றுள்ள அழகிய †பொழிலினுள்ளே† பொய்கைகளிலே அன்னங்களானவை அந்யோந்யம் கலந்து நித்யவாஸம்பண்ணுகிற வயலையுடைத்தாய் தர்சநீயமான திருவாலியில் நிற்கிற ஸர்வேஸ்வரனே! ... ... ... (௪)

---

அரு.—நாலாம்பாட்டு. கீழ்ப்பாட்டுக்களோடு ஸங்கதியைத் தாமே காட்டுகிறார் (நீரித்யாதி). ஆர்த்தித்வாதிகளின்றிக்கே யிருக்க வந்துபுகுந்து ஸ்த்திரமாகவிருந்தாயென்று வெறுமைசொல்லி நிகர்ஷாநுஸந்தாநத்தால் நோவு

படுவானென் ? (க) "எனக்கார் பிறர் நாயகரே" என்று களித்துக்கொண்டு அநுபவித்திருக்கவொண்ணுதோ என்று சங்காதாத்பர்யம். உபகாராதிசயம் என்னை யிப்படி படுத்துகிறதென்கிறுரென்னும் பரிஹாரந்தன்னை யருளிச்செய்கிறு" (ஸ்த்ரீகளையித்யாதி).

"மின்னின்" என்றவிடத்தில், இன் - சாரியையாய், மின்னை மன்னு - அதின் ஸாதர்ம்யத்தையுடைத்தான என்றுதல, மின்னில் என்று உபமார்த்தத்தில் பஞ்சமியாய், அத்தைப்போலேயிருக்கிற என்றுதல், சப்தார்த்தம் விவக்ஷித்து பலிதார்த்தமருளிச்செய்கிறுர் (மின்னேடொத்திருப்பதாய்) என்று. கலவியைமறந்து என்னுதே, "சிந்தைமறந்து" என்பானென்னென்ன வருளிச்செய்கிறுர் (இவனித்யாதி). (அவைதன்னை) அந்தபோகங்கள்தன்னை. (பெரும்பணி) - துர்லபமென்று கருத்து. "அத்தைமறந்து" என்றும், "அடிமறவாமை" என்றும் சொன்னதுக்கு உட்கருத்தையருளிச்செய்கிறுர் (அப்ராப்தேத்யாதி வாக்யத்வயத்தாலே). "வைத்தாய்" என்ற பதவாஸனை (நானித்யாதி).

பொழில்வாய்-பொழிலிடமாய், அகன் - அதக்குள்ளேயிருக்கிற, பணைகள் என்றுசப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறுர (பொழிலினுள்ளே) என்று. "பணைகள்" என்றதினர்த்தம் (பொய்கைகளிலே) என்றது. (௪)

மூ.—நீடுபன்மலர்மாலையிட்டுநின்னிணையடிதொழுதேத்துமென்மனம்
வாடநீநினையேல் மரமெய்த மாமுனிவா
பாடலின்னெலிசங்கினேசைபரந்துபல்பணையால்மலிந்தெங்கும்
ஆடலோசையரு வணியாலியம்மானே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாடல் | பகவத்கதைகளைப் | இணைஅடி | ஒன்றுக்கொன்றுப் |
| இன் | இனிய [பாடுகிற | | பானதிருவடிகளி |
| ஒலி | த்வநியும் | பல் | பலவகைப்பட்ட [ல் |
| சங்கின்ஓசை | சங்கத்வநியும் | மலர் | புஷ்பங்களையும் [யும் |
| பரந்து | எங்கும்பரவி | மாலை | சலம்பகன்மாலையை |
| பல்பணையால் | பலவகைப்பட்டவாத் | நீடு | நெடுங்காலம் |
| | யகோஷங்களால் | இட்டு | பணிமாறி |
| மலிந்து | மிக்கு | தொழுது | ஸேவித்து [ற |
| எங்கும் | பார்த்தவிடமெங்கும் | ஏத்தும் | ஸ்தோத்ரம்பண்ணுகி |
| ஆடல்ஓசை | ந்ருத்தம்பண்ணும்த் | என் | அடியேனுடைய |
| அரு | மாறுத [வநி | மனம் | மநஸ்ஸு |
| அணியாலி அம்மானே! | | வாட | (உன்னைப்பிரிந்துதளி |
| மரம் | மராமரங்களேழை | | ர்போலே)வாடும்ப |
| | யும் [டிஎய்த | | டி [நீ |
| எய்த | ஒருகாலேவிழும்ப | நீ | ஆஸ்ரிதவத்ஸலனான |
| மாமுனிவா | மநநசீலனே! | நினையேல் | நினையாதொழியவே |
| நின் | உன்னுடைய | | ணும். (௬) |

(க) தி - வாய் - ௯ - ௭ - ௧௦.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (நீடித்யாதி) (௧) †"ஒழிவில் காலமெல்லாம்" (௨) "எண்டிசையுமுள்ள பூக்கொண்டு" †என்கிறபடியே, பலவகைப்பட்ட மலரை யுடைத்தான மாலைகளை யிட்டு, உன்னுடைய ஒன்றுக்கொன்று ஒப்பாயிருக்கிற திருவடிகளைத்தொழுதேத் துகிற என்னுடைய மநஸ்ஸானது தளிர்போலே வாடும்படியாக நீ நினையாதொழியவேணும். (மரமெய்த மாமுனிவா) †ஆஶ்ரிதர்க்கு விஶ்வாஸத்தைப்பண்ணிக்கொடுக்குமவனன்றோ! (மாமுனிவா) †எங்களுடைய நினைவுபோலே தப்பிலும்தபபி பலி(ஃலி)க்கிலும்பலி(ஃலி)க்கும்படியன்றிறே உன்னினைவிருக்கும்படி.

பாட்டிலினியத்வநி, மற்றுமுண்டான சங்கத்வநி, இவையாரம்பி, பின்னையும் பலவகைப்பட்டிருந்துள்ள வாத்யகோஷங்களும் மிக்கு, பார்த்தவிடமெங்கும் ஆடுகிறவர்களுடைய த்வநிமாறாத. பணை - முரசும், †பல்லியமும். ... ... ... ... (௫)

---

அரு—அஞ்சாம்பாட்டு. (நீடித்யாதி) கீழ்ப்பாட்டில் - அவன்செய்த மஹோபகாரத்தைச்சொல்லுகைக்காக, விஷயாந்தாங்களை மறக்கும்படிபண்ணினாய் என்றார்; அந்தப்ரஸங்கத்திலே, அவை வாஸநாபலத்தாலே மறுவலிடில் செய்வதென் என்று அஞ்சி, "மனம்வாடநினைபோலே நினைத்தாயாகில் பிழையேன்" என்று ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதி.

நீட்சி - காலக்ருதமான நீட்சியாய், அதுதானும் "இட்டு" என்றதுக்கு விசேஷணமென்று ப்ரமாணம்காட்டுகிறார் (ஒழிவிலித்யாதி). (என்கிறபடியே) என்றபின், காலமெல்லாம் என்றுசேஷம். மரமெய்த, மா - மஹத்தான, மநநத்தையுடையவனே என்று சப்தார்த்தமாய், பலிதார்த்தமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதர்க்கித்யாதி). மஹத்வத்தை விவரிக்கிறார் (எங்களுடையவித்யாதி).

(பல்லியம்) என்றதும் - வாத்யவிசேஷம். ... ... ... (௫)

௬.—கந்தமாமலரெட்டுமிட்டுநின்காமர்சேவடிகைதொழுதெழும்
புந்தியேன்மனத்தே புகுந்தாயைப்போகலொட்டேன்
சந்திவேள்விசடங்குநான்மறையோதியோதுவித்தாதியாய்வரும்
அந்தணாளரறா வணியாலியம்மானே. ... ... (௬)

(௧) தி - வாய் - ௩ - ௩ - ௧. (௨) தி - வாய் - ௪ - ௭ - ௮.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சந்தி | ஸந்த்யாவந்தநாதிகளையும் | கந்தம் | பரிமளப்ரசுரமாய் |
| | | மா | ஶ்லாக்யமான |
| வேள்வி | (நைமித்திக) யாகாதிகளையும் | எட்டுமலரும் | எண்பகர்பூக்களையும் |
| | | நின் | உன்னுடைய |
| சடங்கு | காம்யகர்மங்களையும் | காமர் | அழகிய |
| நால்மறை | நாலுவகைப்பட்டவேதங்களையும் | சேவடி | சிவந்ததிருவடிகளில் |
| | | இட்டு | ஸமர்ப்பித்து |
| ஆதியாய் | ஸ்ருஷ்டிதுடங்கி | கைதொழுது | கையாலேதொழுது |
| ஓதி | முன்புள்ளவர்களிடத்திலகற்றும் | எழும் | எத்தவேணுமென்கிற |
| | | புந்தியேன்மனத்து | அத்யவஸாயத்தையுடையஎன்நெஞ்சில் |
| ஓதுவித்துவரும் | பிறர்க்குக்கற்பித்தும்போருகிற | | |
| அந்தணாளர் | ப்ராஹ்மணர் | புகுந்தாயை | (உன்பேருகவந்து) புகுந்தவுன்னை |
| அறா | மாறாதேவர்த்திக்கிற | | |
| அணிஆலிஅம்மானே ! | | போகலொட்டேன் | இனிநான்போகவொட்டேன். (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு.(கந்தமித்யாதி) கந்த(गन्ध)வத்தான விலக்ஷணபுஷ்பங்களெட்டையுமிட்டு, அவையாவன - கருமுகை, கற்பகம், நாழல்,மந்தாரம்,ஸௌகந்தி,செங்கழுநீர்,தாமரை, கைதை.†ஸ்வாபதேசம்.†பரமபோக்யமானதிருமந்த்ரத்தாலேப்ரதிபாத்யமானவஸ்துவின்பக்கலிலே தன்னை ஸமர்ப்பித்து; (க) †"सर्वगन्धः - ஸர்வகந்தః" என்கிறவஸ்துவாகையாலே,†உன்னுடையஸ்ப்ருஹணீயமான சிவந்த திருவடிகளைக் கையாலேதொழுது உஜ்ஜீவிக்கவேணுமென்னும் அத்யவஸாயத்தையுடைய வென்னுடைய ஹ்ருதயத்திலே. (புகுந்தாயைப்போகலொட்டேன்) †நானுன்னையபேக்ஷியாதிருக்க நீயேவந்து புகுந்தபின்பு, இனிப்போகலொட்டேன், † நினைவின்றிக்கேயிருக்க வந்த ஸம்பத்தைத் தள்ளுவாருண்டோ?

(சந்தியித்யாதி) நித்யகர்மம், நைமித்திககர்மம், சடங்கு-காம்யகர்மம், நான்மறை - இவற்றினுடைய அநுஷ்டாநப்ரகாரங்களை விதியாநின்றுள்ள நாலுவகைப்பட்டவேதம், இவற்றை முன்புள்ளவர்களோடே தாங்களோதி, பின்புள்ளாரைத் தாங்களோதுவித்து, இப்படி பழையராய்ப்போருகிற ப்ராஹ்மணர் மாறாத திருவாலியிலே, அவர்களுக்காஶ்ரயணீயனாய்க்கொண்டு நிற்கிற ஸர்வேஶ்வரனே! அவர்களுமுண்டாயிருக்க நீயேவந்து என் ஹ்ருதயத்திலே புகுந்த பின்பு இனிப் போகலொட்டேன். ... ... (௬)

(க) சாந்தோ - ௩ - ௧௪.

அரு.—ஆறும்பாட்டு. (கந்தமித்யாதி) "என்மனம்வாட நீ நினையேல்" என்று - நம்மைவிட்டு விஷயாந்தர பரராய்ப்போகாமல், நினைப்பிடச்சொன்னீர், நானும்மைப் பெறுகைக்காகவந்து புகுந்திருக்க அதுக்கு ப்ரஸக்திதானுண்டோ! நீர்தானே வாஸநாபலத்தாலே நம்மைவிட்டுமீண்டுபோக நினைத்தீராகில் நாம்செய்வதென் என்னும் சங்கையிலே, நானென்னையுனக்காக்கித்ருடாத்யவஸாய நிஷ்டனாயிருக்கும்படி நீவந்தபின்பு நான் போகவொட்டுவேனோவென்கிறாரென்று ஸங்கதி.

"பன்மலர்மாலையிட்டு" என்று கீழ்ச்சொன்னவர், இப்பாட்டில், "எட்டு" என்று ஒரு ஸங்க்யாவிசேஷம் சொல்லுகைக்கு ப்ரயோஜநமென்னென்னவருளிச்செய்கிறார் (ஸ்வாபதேசம்) என்று. அத்தையருளிச்செய்கிறார் (பரமேத்யாதி). இத்தால் - பரிமள ப்ரசுரமானமலர்போலே ஓரோவெழுத்தே பரமபோக்யமாயிருக்கிற திருவெட்டெழுத்தாலே தத்ப்ரதிபாத்யவஸ்துவில் தன்னை ஸமர்ப்பிக்கை த்வநிக்கைக்காகச் சொன்னாரென்றதாயிற்று. எட்டெழுத்துக்குப் பரிமளப்ரசுரபுஷ்பஸாம்யம் வருகைக்கு மூலமென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வேதயாதி). "நின்" இத்யாதிக்கு சப்தார்த்தம் (உன்னுடையவித்யாதி). "கைதொழுதெழும்புந்தி" என்னும்படி அத்யவஸாய நிஷ்டையுண்டானபின்போ அவன்புகுந்ததென்ன வருளிச்செய்கிறார் (நானுன்னையித்யாதி). மனத்தேபுகுருகையாவது-நெஞ்சுக்கு விஷயமாகையாலே, இவருக்கு அத்யவஸாயம் பிறந்தபின்பு அவன்புகுகையென்றொன்றில்லாமையால், முதற்பாட்டில்சொன்னபடியே முன்னேபுகுந்தத்தை அருளிச்செய்தாரென்று கருத்து. "ஒட்டேன்" என்றதுக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார் (நினைவின்றிக்கேயித்யாதி).... ... ... (சு)

மூ.—உலவுதிரைக்கடல்பள்ளிகொண்டுவந் துன்னடியேன்மனம்புகு
புலவபுண்ணியனேபுகுந்தாயைப்போகவொட்டேன் [ந்தஅப்
நிலவுமலர்ப்புன்னைநாழல்நீழல்தண்டாமரைமலரின்மிசைமலி
யலவன் கண்படுக்கு மணியாலியம்மானே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நிலவு | எப்போதும்மலராநின்றுள்ள [டைய | திரைஉலவு | திரைக்கிளப்பத்தையுடைய |
| மலர் | புஷ்பஸம்ருத்தியையு | கடல் | திருப்பாற்கடலில் |
| புன்னை | புன்னைமரம் | பள்ளிகொண்டு | கண்வளர்ந்தருளி |
| நாழல் | பலிகி (இவற்றின்) | உன் அடியேன் | (பின்பு) உனக்குச்சேஷபூதனை என்னுடைய |
| நீழல் | நிழலில் | | |
| தண் | குளிர்ந்த | | |
| தாமரைமலரின்மிசை | தாமரைமலரின்மேல் [ள் | மனம் | நெஞ்சில் [ந்த |
| | | வந்துபுகுந்த | உன்பேறாகவந்துபுகு |
| மலிஅலவன் | பெரியஆண்நண்டுக | அப்புலவ | அந்தஸர்வஜ்ஞனானவனே! [னவனே! |
| கண்படுக்கும் | பள்ளிகொள்ளுகிற | | |
| அணிஆலிஅம்மானே | | புண்ணியனே | எனக்குஸுக்ருதமா |

| | | | |
|---|---|---|---|
| புகுந்தாயை | நிர்ஹேதுகமாகப்புகுந்த உன்னை | போகலொட்டேன் | நான்போகவொட்டேன். (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (உலவித்யாதி) ஸஞ்சரியா நின்றுள்ள திரையையுடைத்தான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி;† அங்குச்சாய்ந்தருளிற்று, என்பக்கல் புகுருகைக்கு அவஸரம் பெறுமளவுமாய், பிறகு என்பக்கலிலே விலக்காததொரு அவகாசம் பெற்றவாறே, உனக்குப்புகுருகைக்கு யோக்யமாயிருக்கிற என்ஹ்ருதயத்திலேபுகுந்த. (அப்புலவ) விசேஷஜ்ஞனல்லையோ! அவஸரமறியாயோ புகுருகைக்கு. (புண்ணியனே) உன்னைப் பெறுகைக்கொரு கைம்முதலில்லாதபடியிருக்கிறவெனக்கு ஸுக்ருதமானவனே! (புகுந்தாயைப்போக லொட்டேன்). நீயேவந்து புகுந்த பின்பு, உன்னை நானினிப்போக வொட்டேன்.

(நிலவித்யாதி) நித்யமான மலரையுடைத்தாயிருக்கிற புன்னை, நாழல், இவற்றினுடைய நிழலிலே † பரந்த தாமரைமலரின் மேலே. (மலியலவன் கண்படுக்கும்) அப்பரப்புக்கெல்லாம் போரும்படி பெரிய வடிவையுடையஆண்நண்டானது, மற்றொரு †நியமத்தையறியாதே படுக்கைவாய்ப்பாலே கிடந்து உறங்காநிற்குமாயிற்று. வயலாலிமணவாளனுடைய வ்யாபாரத்தோடு அங்குண்டான திர்யக்குக்களுடைய வ்யாபாரத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்று இவர்க்கு அந்நிலத்திலுள்ளவையாகையாலே. ... ... ... (எ)

---

அரு —ஏழாம்பாட்டு. (உலவித்யாதி) நீர், "போகலொட்டேன்" என்றீர் - நான் நிர்ஹேதுகமாகப்புகுந்தவனை, நானேயோகில் நீர்செய்வதென், நீர்என்ன பல(ப)ங்கொண்டு இங்ஙன்சொன்னது என்று இவர் நெஞ்சைச் சோதிக்கைக்காகச்சொல்ல; இரண்டாம்பாட்டிற்சொன்னபடியே திருப்பாற்கடலிலே என்னைப் பெறுகைக்காகவே கிடந்துவந்து நீபுகுந்த பல(ப)ங்கொண்டே "நான்போகலொட்டேன்" என்கிறாரென்று ஸங்கதி.

தாத்பர்யமருளிச்செய்கிறார் (அயகித்யாதி).

"நாழல்" என்றது - பலிகீ என்கிற வ்ருக்ஷம். தண் - தட்பமாய், பெருமையைச்சொல்லுமென்றருளிச்செய்கிறார் (பரந்த) என்று. (நியமத்தை) ஸம்ப்ரேஷத்தை. ... ... ... ... ... (எ)

மூ.—சங்கு தங்கு தடங்கடல் கடல்மல்லையுட்கிடந்தாயருள்புரிந்
திங்கென்னுள் புகுந்தா யினிப்போயினு லறையோ
கொங்குசெண்பகம்மல்லிகைமலர்புல்கியின்னிளவண்டுபோயிளந்
தெங்கின்தாதளையும் திருவாலியம்மானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இன்னிளவண்டு | இனியஇளம்வண்டுகளானவை | தடம் | பெரிய |
| கொங்கு | பரிமளம்மிகுந்த | கடலுள் | திருப்பாற்கடலிலும் |
| செண்பகமலர் | செண்பகப்பூவையும் | கடல்மல்லையுள் | திருக்கடல்மல்லையென்னும்திவ்யதேசத்திலும் |
| மல்லிகைமலர் | மல்லிகைப்பூவையும் | கிடந்தாய் | பள்ளிகொண்டருளினவனே! |
| புல்கி | (மதுபானத்துக்காகவிழுந்து) தழுவி (அவைகொதித்தவாறே) | இங்கு | இவ்விடத்திலே |
| | | என்னுள் | தாஸனுனஎன்ஹ்ருதயத்தில் |
| இளந்தெங்கின் | இளம்தெங்கிலே | | |
| போய் | சென்றுபுக்கு | அருள்புரிந்து புகுந்தாய் | க்ருபைபண்ணிவந்து ப்ரவேசித்தாய்; |
| தாதுஅளையும் | அதின்தாதைஅளையாநின்றுள்ள | இனிப்போயினல் | இனிநீயேவிட்டுப்பிரிந்துபோனுயாகில் |
| திருவாலியம்மானே! | | | |
| சங்கு | சங்கங்கள் | அறையோ | அறையோவறை(ஐயம்). (அ) |
| தங்கு | மாருதேயிருப்பதான | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (சங்கித்யாதி) சங்குமாருதே யிருப்பதாய், பரப்பையுடைத்தானதிருப்பாற்கடலிலேகண்வளர்ந்தருளினுய்; அங்குநின்றும் ஆஶ்ரிதனுக்காகத் திருக்கடல்மல்லையிலே கண்வளர்ந்தருளினுய்; இவ்வோவிடங்களுனக்கு வாஸஸ்தாநமாயிருக்க என் பக்கலிலே க்ருபைபண்ணி வந்து புகுந்தாய். (இனிப்போயினுலறையோ) உனக்கந்த க்ருபை மாருதபடி யிருக்கையாலே, இனி நீ போனுயாகில், †அறையோவறை.†ஹேது மாறிலிறே அதின் கார்யமும் மாறுவது. †உன்னுலல்லதுசெல்லாத வென்னைவிட்டு நீயிருக்கவுமாய் போகவுமாயிருப்பார்நெஞ்சிலிருக்க †வொண்ணுது.

(கொங்கித்யாதி) பரிமளத்தையுடைத்தான செண்பகம், மல்லிகைமலர், இவற்றிலே மதுபாநார்த்தமாக இழிந்தவண்டுகளானவை அவற்றோடே †தழுவி,அவை கொதித்தவாறே அந்தவெம்மையாற்றுகைக்காக, கோடையிலே நோவுபட்டவர்கள் சந்தந பங்கத்திலே கைவைத்துக்கொண்டு கிடக்குமா போலே, இளந்தெங்கிலே போய் அதின் தாதையளையும் திருவாலியம்மானே. ... ... (அ)

அ௫.—எட்டாம்பாட்டு. (சங்கித்யாதி). "போகலொட்டேன்" என்று சொன்னதைக்கேட்டு எம்பெருமான் "இவரப்போதுசொல்லும் சொலவு கேட்கவேணும்"என்றுபோக்கிலேயொருப்படவே, நீ ஸ்ரீபுண்டரீகர்க்காகத் திருப்பாற்கடலில்நின்றும்வந்து தரைக்கிடைகிடக்கிறாப்போலே என்னெஞ்சி லருளாலே புகுந்தாய், "இனிபோகிறோம்" என்று நீபோனுயாகில் நான் வென்றேன் ; என்னைவிட்டுப் பொறுக்கமாட்டாதே நீயேவருவாயென்கிறா ரென்று ஸங்கதி.

(அறையோவறை) என்றது-நீபோனால் எனக்கே ஜயமென்று ஜயங்கூறி னபடி, போனுனுகில் போனவிடத்திலிருக்கமாட்டாமையாலே க்ருபை யாலேவருகை ஸித்தமாகையால், தாம் ஜயித்தமை ஸித்தம்; அவன்போகவே மாட்டானென்று கருத்து, அவன் க்ருபையாலே போகமாட்டாதவனானல் நான்ஜயித்தேனென்னப்போமோ, இந்த உக்தியாலே அவன்போனாலோ வென்னவருளிச்செய்கிறார் (ஹேதுவித்யாதி). இவர் எத்தனைவெற்றி தோற்றச் சொன்னாலும், (க) "விதிவாய்க்கின்று காப்பாரார்" என்கிறபடியே க்ருபை அவனைக் கால்கட்டுமென்று கருத்து. க்ருபை கால்கட்டப் போகமாட்டாமை யைக்கண்டு தாமவனைவென்றாராய், அவனை நியாமயனாக்கி நியமித்தாரோ வென்ன; (உ) "பிறரொருவர் வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன்" என் றாரென்று விவக்ஷித்து, அந்தப் பாசுரார்த்தத்தை யருளிச்செய்கிறார் (உன்னு லித்யாதி). (ஒண்ணாது) என்ற வநந்தரம, என்றாரிறே என்றுசேஷம்.

"புல்லி" என்றதினர்த்தம் (தழுவி) என்றது. ... ... (அ)

மூ.—ஓதியாயிரநாமமும்பணிந்தேத்திநின்னடைந்தேற்கொருபொருள்
வேதியாவரையாவுரையா யொருமாற்றமெந்தாய்
நீதியாகியவேதமாமுனியாளர்தோற்றமுரைத்துமற்றவர்க்
காதியாயிருந்தா யணியாலியம்மானே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீதியாகிய | நாட்டாரநுஷ்ட்டிக்குமபடியைவிதிக்கக் கடவதான | அணியாலியம்மானே! | |
| வேதம் | வேதம் | வேதியா | வேதமொன்றாலே யேஅறியத்தக்கவனே! |
| மாமுனியாளர் | அவ்வேதத்துள்மந்த்ரரூபமானவற்றைக்காணவல்லரான மஹாருஷிகளுடைய | அரையா | குறும்புறுத்தாள்பவனே! |
| | | எந்தாய் | எனக்குஸ்வாமியானவனே! |
| தோற்றம் | உத்பத்தி, (ஆகியவிவற்றை) | ஆயிரநாமமும் | உன்ஸஹஸ்ரநாமங்களையுஞ்சொல்லி |
| உரைத்து | சொல்லி | ஓதி | |
| மற்றவர்க்கு | மற்றெல்லார்க்கும | பணிந்து ஏத்தி | திருவடிகளில்விழுந்துஸ்தோத்ரம்பண்ணி |
| ஆதியாய் இருந்தாய் | காரணபூதனாயிருக்கிறவனே! | | |

(க) மூ-வாய்-௫-௯-௧. (உ) எ-௨-எ.

| | |
|---|---|
| நின் அடைந்தே உன்னைத்தஞ்சமாகப் பற்றினவெனக்கு | ஒருமாற்றம் ஒருவார்த்தை |
| ஒருபொருள் அத்விதீயபுருஷார்த்த ஸாதநமான | உரையாய் அருளிச்செய்யவே ணும். (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (ஓதியித்யாதி) திருநாமங்களாயிரத்தையும் வாயாலே சொல்லித் திருவடிகளிலே விழுந்து ஸ்தோத்ரத்தைப்பண்ணி உன்னைக்கிட்டினவெனக்கு. (ஒருபொருள்)†"உனக்கென்னைப்பெறுகைக்கு ஸாதந மிதுவே" என்று ஓரர்த்தத்தைச் சொல்லவேணும். (வேதியா) வேதைகஸமதிகம்யனே! (அரையா) என்னை†வன்னியமறுத்து ஆளுகிறவனே! †எனக்கு ஸ்வாமியானவனே! ஒருவார்த்தையருளிச்செய்யவேணும்.(க) "மாஶுச:" "மாசுச:" என்று நானுஜ்ஜீவிக்கும்படி ஒருவார்த்தை யருளிச்செய்யவேணும்.

(நீதியித்யாதி)†நாட்டாரநுஷ்டிக்கும் படியை விதிக்கக்கடவ வேதம். (மாமுனியாளர் தோற்றம்) அதில் மந்த்ர ரூபமானவற்றைக்காணக்கடவராயிருக்கிற ருஷிகளுடைய உத்பத்தி, இவற்றைச் சொல்லி, எல்லார்க்கு மொக்ஷகாரணபூதனாயிருக்கிறவனே! †வேத சப்தத்தின்படியே பூர்வக்ரமத்திலே ஸ்ருஷ்டியாநிற்கிறவனென்னுதல். அதாகிறது, "பூ: (பூ:)" என்று பூமியை ஸ்ருஷ்டித்து, இவ்வகைகளிலே அத்தைச்சொல்லி ஸ்ருஷ்டிக்கை. ... * (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (ஓதியித்யாதி). "இனிப்போயினாலுறையோ" என்று தாம் வெற்றிதோற்றச்சொன்னவர் அவன் தம்மைவிட்டுப்போகாமலிருக்கச்செய்தேயும் தமக்குப்பிறந்த ப்ராப்யத்வரையாலே உபாயவிசேஷப்ரஶ்நம் பண்ணுகிறாரென்று ஸங்கதி.

திருநாமஸங்கீர்த்தநாதிகளையெல்லாம் அதிகாரி ஸ்வரூபத்திலே சேலவெழுதி ஸித்தோபாயமவனென்றிருக்கச்செய்தேயும் அநுஷ்டக்கென பலியாமையால், உன்வாயாலே, "நானே உபாயம்" என்றொருவார்த்தைசொல்லவேணுமென்று கேட்கிறாரென்றருளிச்செய்கிறார் (உனக்கித்யாதி). (வன்னியம்) குறும்பு. "எந்தாய்" என்றதினர்த்தம் (எனக்கித்யாதி).

---

(க) கீதை - கஅ - கூகூ -

வேதமுரைக்கை - நேரே வேதஸ்ருஷ்டியாய், முனிகளுடைய தோற்றத்தையுரைக்கையாவது - ப்ரஹ்மாவுக்கு ஸ்ருஷ்டிக்கும் ப்ரகாரத்தைச் சொல்லுகையாய், அதுவும் பரம்பரயா முனிகளுக்கு ஸ்ருஷ்டியாமென்று தாத்பர்யம் திருவுள்ளம்பற்றி சப்தார்த்தம்காட்டுகிறார் (நாட்டாரித்யாதி). நீதியாகிய வேதமுரைத்து அவ்வழியால் மாமுனியாளர்தோற்றமென்ன, மற்றவரென்ன, இவை யெல்லாவற்றுக்கும் ஆதியானவனே என்று யோஜநாந்தரம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேதேத்யாதி). ... (௯)

மூ.—புல்லிவண்டறையும்பொழில்புடைசூழ்தென்னாலியிருந்தமாயனைக்
கல்லின்மன்னுதிண்டோள்கலியனொலிசெய்த
நல்லவின்னிசைமாலைநாலுமோரைந்துமொன்றும்நவின்றுதாமுடன்
வல்லராயிருப்பார்க்கிடமாகும்வானுலகே. (௧௦)

திருமங்கை யாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளானவை | தோள் | தோளையுடைய |
| புல்லி | ஒன்றுக்கொன்றுஆலிங்கநம்பண்ணிக்கொண்டு | கலியன் | ஆழ்வார் |
| | | ஒலிசெய்த | அருளிச்செய்த |
| | | நல்ல | அழகிய |
| அறையும் | பாடாநின்றுள்ள | இன்இசை | இனியஇசையையுடைத்தான |
| பொழில் | சோலை | | |
| புடைசூழ் | சுற்றுஞ்சூழ்ந்து | மாலைநாலும்ஓரைந்தும்ஒன்றும் | பத்துப்பாட்டையும் |
| தென் | அழகியதான | | |
| ஆலி | திருவாலியென்னும்திவ்யதேசத்திலே | நவின்று | சொல்லி |
| இருந்த | எழுந்தருளியிருக்கிற | தாம்உடன்வல்லராய்உரைப்பார்க்கு | எப்போதும்அதினர்த்தாநுஸந்தாநம்பண்ணிக்கொண்டேயிருப்பார்க்கு |
| மாயனை | ஆஸ்சர்யபூதனானஸர்வேஸ்வரன்விஷயமாக | | |
| கல்லின் | மலைபோலே | | |
| திண் | த்ருடமாயும் | வானுலகே | பரமபதமே |
| மன்னு | நித்யமாயுமிருந்துள்ள | இடமாகும் | இருப்பிடமாகும். () |

வ்யா.—பத்தாம்பாட்டு. (புல்லியித்யாதி) வண்டுகளானவை தழுவி மதுபானமத்தமாய்க்கொண்டு† அறையாநின்றுள்ள பொழிலைப் பர்யந்தத்திலே யுடைத்தான திருவாலியிலே எழுந்தருளியிருக்கிற ஆஸ்சர்யபூதனைக் கவிபாடிற்று. மலைபோலே திண்ணியதாய் † நித்ய

மாயிருந்துள்ள தோளையுடைய ஆழ்வாரருளிச்செய்த நல்ல இன்னிசையான தொடை; இதிலுண்டான ஆதராதிசயத்தாலே விடமாட்டாமை பிரித்துப் பிரித்தருளிச்செய்கிறார். ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. (புல்லியித்யாதி) (அறையாநின்றுள்ள) . பாடாநின்றுள்ள. "மன்னு" என்றதினர்த்தம் (நித்யமாய்) என்றது; சிரகாலஸ்த்தாயியாயென்றபடி. "தாமுடன் - நவின்று வல்லராயுரைப்பார்க்கு" என்றதுக்கு - தங்கள்மனத்தோடேகூடக் கிட்டிச்சொல்ல வல்லார்க்கென்று சப்தார்த்தம் கண்டுகொள்வது. ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றும்பத்தில் ஐந்தாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி, ௩-ம் பத்து, ௬-ம் திருமொழி தூவிரிய ப்ரவேசம்.

---

வ்யா.—†நஞ்சீயருடைய நோவிலே † பெற்றி அறியப்புகுந்து, "இங்குத்தைக்கு வேண்டியிருக்கிறதென்?" என்றுகேட்க, "தூவிரிய மலருழக்கிப் பாட்டுக்கேட்கவும், பெருமாளெழுந்தருளப் பின்னும் முன்னும் சுற்றும்வந்து திருவடித்தொழவும் வேண்டியிராநின்றேன்" என்றருளிச்செய்தருளினர்; †அப்போதே வரந்தரும்பெருமாளரையரை யழைத்துவிட்டுப் பாட்டுக்கேட்டருளாநிற்க, (க) "மீனைய கொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ" என்னுமளவிலே வந்தவாறே, "காமசரங்களாலே ஏவுண்பதுக்கு முன்பே வாராவிட்டால் பட்டபுண் பரிஹரிக்கவாகிலும் வந்தாலாகாதோ!" என்றருளிச் செய்தருளினர்.

(௨) † "வந்துனதடியேன்மனம் புகுந்தாய்" என்றும், (௩) "அடியேன் மனத்திருந்தாய்" என்றும், (ச) "என்மனத்தேபுகுந்ததின்மைக்கென்றிருந்தேன்" என்றும்மாநஸாநுபவமாத்ரமாய் நின்றது கீழ்த்திருமொழி; மாநஸாநுபவமானது முதிர்ந்து, அது தான் ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய், அத்தை ப்ரத்யக்ஷஸமாநாகாரமென்றிருக்கையன்றிக்கே ப்ரத்யக்ஷமென்றே ப்ரதிபத்திபண்ணி, அநந்தரம் பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து, அதுதான் நினைத்தபடியநுபவிக்கக்கிடையாமையாலே ஆற்றாமை கரைபுரண்டு ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், அவள்பேச்சாலே ஸ்வதசையைப்பேசுகிறார். (௫)†[యథాగ్నిసఙ్గాత్కనకమపదోషం ప్రజాయతే । సంశ్లిష్టం వాసుదేవేన మనుష్యాణాం తథా మనః-யதாக்நிஸங்காத்கநகமபதோஷம்ப்ரஜாயதே।ஸம்ஶ்லிஷ்டம் வாஸுதேவேந மநுஷ்யாணாம் ததாமந:] பொன் நெருப்பிலேயிடவிட அழுக்கற்றுத் தன்னிறம்பெற்று சுத்தமாமாபோலே பகவத்விஷயத்திலே அவகாஹிக்க அபதோஷனும், பின்னை பிராட்டிமார்படியுண்டாகக் கடவதாயிற்று ஸகலாத்மாக்களுக்கும்†பிராட்டிமார் தசை பிறந்தபடிதானென்னென்னில்; அநந்யார்ஹஶேஷத்வ

---

(க) ௩-௬-௮. (௩) ௩-௫-௨. (௫)
(௨) ௩-௫-௧. (ச) ௩-௫-௩.

மென்றென்றுண்டு, அது இரண்டுதலைக்கு மொத்திருக்கும்; கலந்த போது ப்ரீதி பிறக்கையாலும், பிரிந்தபோது ஆற்றாமை பிறக்கையாலும்,ததேகபோகத்தாலும், அவன் நிர்வாஹகனாக இத்தலை நிர்வாஹ்யமாகையாலும், ஸ்வயத்நத்தாலே பேறென்றிருக்கையன்றிக்கே அத்தலையாலே பேறென்றிருக்கையாலும்,பிராட்டிமார்படியுண்டாகத் தட்டில்லை. † ஸர்வதா ஸாத்ருஶ்யம் சொல்லுகிறவிடங்களிலே வந்தால், தாமரைபோலே கண் கால் என்னுமத்தைத் தாமரைதானென்று தாமரையென்றே வ்யவஹரிக்குமிறே; (க) "ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி - நச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி" என்று ஒக்கச் சொன்னாரிறே இளையபெருமாள்; இவ்வோ வழிகளால் பிராட்டிமார் தசையை ப்ராப்தராகத் தட்டில்லை.

†நாயகனோடே இயற்கையிலே கலந்து பிரிந்து பிரிவாற்றாமை நோவுபடுகிறாளொரு பிராட்டி,அவன் வருந்தனையும் பொறுத்திருக்க மாட்டாமையாலே தூதுவிடப் பார்த்து, அதுக்குத் தன் பரிகரத்தில் கால்நடை தந்து போகவல்லாரில்லாமையாலும், இனித்தான் சேதநாசேதநவிபாகமற இரக்கவேண்டும்படியான தசையையுடையளாயிருக்கையாலும், ராமாவதாரத்துக்குப்பின்பு திர்யக்குக்கள் போன கார்யம் தலைக்கட்டிவரக்கண்ட வாஸனையாலும், கண்ணால்கண்ட பக்ஷிகளையடையத் தூதுவிட்டு, தூதர்க்குச் சொல்லுகிற வார்த்தையாலே, தன் நெஞ்சுதான் புண்பட்டிருக்கிற ஸமயத்திலே அவன்றான் ஸந்நிஹிதனாய்க்கொண்டுவர, அவனுக்குத் தன்னிழவுகளைச்சொல்லித் தலைக்கட்டிற்றாய்ச் செல்லுகிறது. ... ... *

அரு.—அவதாரிகைப்ரவேசம்.—அதிகாரிகளுக்கெல்லா மித்திருமொழியில் மிகவுமாதரமுண்டாகைக்காக அபியுக்தாபிமதமென்னுமத்தை ஐதிஹ்யத்தாலே யருளிச்செய்கிறார் (நஞ்சீயரித்யாதி). (பெற்றி) நஞ்சீயர் ஸ்ரீபாதத்திலவர். ஆளவந்தார்க்கு (உ) *அறுக்கும்வினை அபிமதமானாற்போல் இவர்க்கு இது அபிமதம். திருமொழிகளெல்லாவற்றிலும் வைத்துக்கொண்டு இத்திருமொழி அபிமதமாகைக்கு நியாமகமென்னென்ன வருளிச்செய்கிறார் (அப்போதேயித்யாதி). தாம் நோவுபட்டது பின்தசையாகையாலே நோவுபடுவதற்குமுன்பே யுதவவேணும், இதில்லாவிட்டால் நோவுபட்டபின்பாகிலும் உதவலாகாதோவென்னும் கருத்தாலே அபிமதமாயிற்றென்று கருத்து.

ஸங்கதிகாட்டுகிறார் (வந்தித்யாதி).

(க) ரா-அ-௫௩-௩௧. (உ) தி-வாய்-௯-அ.

பத்ததசையில் பிராட்டிமார்தசை பிறக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (யதேத்யாதி). அபதோஷனாய்த் தன்னிறம்பெற்றாலும் நித்யரோபாதி பேசலாமித்தனைபோக்கி, பிராட்டிமார் தசை பிறக்கக்கூடுமோவென்னும் சங்கையை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் (பிராட்டிமார்தசையித்யாதி). பிராட்டிமாரோட்டை ஸாதர்ம்யமுண்டானாலும் அவள்தானாகச் சொல்லுகை கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வதாவித்யாதி).

புதஸௌகர்யார்த்தம் திருமொழியில் ப்ரமேயத்தை உபந்யஸிக்கிறார் (நாயகனேடேயித்யாதி), ... ... ... ... .. *

மூ.—தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே
பூவிரிய மதுநுகரும் பொறி வரிய சிறு வண்டே
தீவிரிய மறைவளர்க்கும் புகழாளர் திருவாலி
ஏவரி வெஞ்சிலையானுக்கென்னிலைமையுரையாயே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. [டி |
|---|---|---|---|
| தூ | சிறகு | தீவிரிய | அக்நிவிஸ்த்ருதமாம்ப |
| விரிய | விரியும்படியாக | மறை | வைதிகமர்யாதையை |
| மலர் | கழியமலர்ந்தமலரை | வளர்க்கும்புகழ் | குறைவறநடத்துகை |
| உழக்கி | மிதித்து | ஆளர் | யால்வந்தபுகழையு |
| துணையோடும் | ஸஹசரத்தோடும் | | டையவர்களது |
| பிரியாதே | பிரியாமலே | திருவாலி | திருவாலியிலேநித்ய |
| பூ | பூக்களானவை | | வாஸம்பண்ணுகிற |
| விரிய | விகஸிக்க | ஏவரிவெஞ்சிலை | அம்பையும்அழகியவி |
| மது | அவற்றிலுள்ளதேனை | யானுக்கு | ல்லையும்கையிலேந் |
| நுகரும் | பாகம்பண்ணுகிற | | தியஸர்வேஶ்வரனு |
| பொறி | புள்ளிகளையும் | | க்கு |
| வரிய | ரேகைகளையுமுடைய | என்னிலைமை | என்தசையை |
| சிறுவண்டே | சிறுத்தவண்டே! | உரையாய் | சொல்லவேணும். (௧) |

வ்யா.—அதில் ஒருவண்டைக்குறித்துத் † தூதுவிடுகிறாள்-முதற்பாட்டில். †உனக்கு உன்கார்யம் குறையற்றிருந்தது, எனக்கென் கார்யம் குறைபட்டிருக்கிறபடி கண்டாயே! என்குறை தீர்க்கைக்காக வந்திருக்கிறவனுக்கு அறிவியாயோ என்கிறாள்.

(தூவிரிய மலருழக்கி) தூவிரிய - தூவிரியும்படியாக - சிறகு விரியும்படியாக, மலரையுழக்கி என்னுதல். அன்றிக்கே, தூய்தாக விரிந்த - கழியவலர்ந்த, மலரையுழக்கியென்னுதல். † பிரிவாலே பூக்காண விருய்த்து ஒடுங்காநின்றாளிறேதான்; அவை ஸம்ஶ்லேஷத்தால்வந்த ஹர்ஷத்தாலே சிறகை விரியாநின்றனவாயிற்று.

(க)†[నైషాప శ్యతి రాక్షస్యో నేమాన్ పుష్ప ఫలద్రుమాన్ । ఏకస్థహృదయానూనం రామమేవానుపశ్యతి-நைஷா பஶ்யதி ராக்ஷஸ்யோ நேமாந்புஷ்பபலத்ருமாந் । ஏகஸ்த்தஹ்ருதயா நூநம் ராமமேவாநுபஶ்யதி] †ராக்ஷஸீதர்சநத்தோடு புஷ்ப பலத்ருமங்களினுடைய தர்சநத்தோடு வாசியற்றிருக்கிறதிறே இவளுக்கு. (உ) †[నగోత్తమం పుష్పితమాససాద - நகோத்தமம் புஷ்பிதமாஸஸாத] எரிகிற நெருப்பைச்சென்று கிட்டுவாரைப் போலே, ஓங்கிப்பரப்படங்கலும் புஷ்பமேயாய்க்கிடக்கை, [ఆససాద- ஆஸஸாத] தன் ஜீவநத்திலே நைராஶ்யம்விளைந்தமை தோற்றியிருக்கிறது. (மலருழக்கி) இவளுக்கு நெருப்பானபூ அவற்றுக்கு †அள்ளல் சேறுபட்டது படாநின்றது. † அல்லியும், தேனும், தாதும், சுண்ணமும் ஒன்றாக உழறுகின்றதாயிற்று. † புஷ்பம் என்றால் கூசி அடியிடவேண்டாவே அவற்றுக்கு, (ங) "புன்னைமேலுறை பூங்குயில்காள்" என்னுமாபோலே. நெருப்பிலே அடியிட்டாற் போலேயிருக்குமிறே தனக்கு.

†நம்முடைய நெருப்பிலே யடியிடுகைக்குஹேதுவென்?என்று விசாரித்துப்பார்த்தாள்; அக்கிஸ்தம்பநமந்த்ரம் கையிலே யுண்டாயிருந்தது; அம்மந்த்ரந்தானிருக்கிறபடி - (துணையோடும்) இருவராயிருப்பார்க்குப் பூவும் பொறுக்குமாகாதே!†என்னைப்போலே தூதுவிடாதே கூடவர்த்திக்கப்பெறுவதே! (துணையோடும்) † தன்வாஸனையிருக்கிறபடி. துணையென்றால் ஒருதலை†கழுத்துக் கட்டியாய் ஒருதலை ரக்ஷகமாயேகாணுமிருப்பது, (ச) †" துணைபிரிந்தார் துயரமும் நினைகிலை" என்னக்கடவதிறே. † சிறியாத்தான், " துணையென்றால் தவிகிஷ்ட்டமன்றுகாண், ஏகாஶ்ரயத்திலே கிடக்கும்" என்னுமாம். †உன்னைப் பிரிந்தார் என்னவேண்டும் ஸ்த்தாநத்திலே (ச) "துணைபிரிந்தார்" என்கிறதிறே. இப்போதும் (துணை) என்கிறது - இங்குசேவலை. (பிரியாதே) † இவ்வர்த்தம் முன்னம் ஓரிடத்திலே உண்டாகப் பெற்றோமே. † (தூவிரியமலருழக்கித்துணையோடும் பிரியாதே) இதென்ன நோயாசைதான். (ரு) † [మయూరస్యవనేనూనంరక్షసాపహృతా ప్రియా - மயூரஸ்யவநே நூநம் ரக்ஷஸாபஹ்ருதாப்ரியா] இந்த மயில்களிருந்தவிடத்தில் வந்திலனோ அப்பையல் என்கிறார். இருவ

(க) ரா ஸு-கசு-உரு. (ங) தி - வாய்-சு-க-சு. (ரு) ரா-ஆர-கி-க-சo.
(உ) ரா - ஸு-கஅ-கஎ. (ச) தி - வாய்-கo-ங-ச.

ராயிருப்பாரெல்லாரையும். தனியாக்கினான் என்றே யாயிற்று இருப்பது.

(பூவிரியமதுநுகரும்) செருக்கராயிருக்கும் ராஜபுத்ரர்கள் முசிந்தபடுக்கையைக் காற்கடைகொண்டு செவ்விப்படுக்கையிலே சென்றேறுமாபோலே, கழியவலர்ந்த பூவில் நின்றும் போய் செவ்விப்பூவிலே படிந்துகாணும் மதுபானம்பண்ணுகிறது; †இவற்றினுடைய ப்ரவேசமும் பூவலருகையுமொத்தாயிற்றிருப்பது. †தென்றலோபாதி ஆதித்யகிரணத்தோபாதி, காலத்தோபாதி, இவற்றின் † ஸந்நிதியும் பூவினுடைய விகாஸத்துக்குறுப்பாயிருக்கை. † க்ருதஸங்கேதராயிருப்பார் உள்ளேநின்று கதவைத்தொட்டவாறே திறக்குமாபோலே, இவற்றின் சிறகின் காற்றாலே அலரும்படியாயிருக்கை. (பூவிரிய) †இவற்றினுடைய வரவு, புஷ்பத்தினுடைய ஸங்கோசஹேதுவாகையன்றிக்கே விகாஸஹேதுவாகாநின்றதாயிற்று. (மதுநுகரும்) (௧) †[నమాంసంరాఘవోభుఙ్క్తే నచాపిమధుసేవతే - நமாம்ஸம் ராகவோபுங்க்தே நசாபிமது ஸேவதே]உபவாஸக்ருசையாயிருக்கிற என்படிக்கு எதிர்த்தட்டாயிராநின்றதீ உன்படி!, அத்தைப்பழியிடுகிறாள். †ஒன்றுக்கொன்று ஸம்ச்லேஷார்த்தமாக பலா(బలా)தாநம்பண்ணுகிறபடி. (நுகரும்) †மதுபாநம்பண்ணிற்றாய் மீளுவதொருபோதில்லை; †தனக்குத்தான் மதுபாநம்பண்ணிலிறே மீளுவது. ஒன்றுக்கொன்று பரார்த்தமாகவிறே புஜிப்பது; †ஒன்றுக்காக †ஒருகலத்திலே யெடுக்குமாபோலே; மிடற்றுக்குக் கீழே இழியிலிறே தெகுட்டி மீளுவது. †இனித்தான் தேன்தாரகமாக விழிந்ததொன்றன்றே; † கூடவொன்றைத் தொட்டுக்கொண்டிருக்கைக்குக் † லைகதொடுமானமாகக் கொண்டதொன்றன்றோ! என்னையுமிப்படி புஜிப்பித்து புஜித்தாலன்றோ உங்கள்போகத்துக்குச் † செலவுள்ளது. இராவுண்ணுதாரை யூட்டி உண்ணவேண்டாவோ; இதென்ன குறையற்றுவர்த்திக்கைதான்!

(பொறிவரிய) †பொறியையும் வரியையுமுடைத்தானவண்டே! ஸம்ச்லேஷத்தால்வந்த புகரடங்கலும் வடிவிலே தொடைகொள்ளலாம்படியிருக்கை. †கடகராயிருப்பாருடைய †தேஹகுணத்தோடு ஆத்மகுணத்தோடு வாசியற உத்தேச்யமாகக்கடவதிறே. †சேர்ப்பார் பக்கல் ஜாத்யாவரும் தண்மை பார்க்கக்கடவதல்லவாயிற்று. (சிறு

(௧) ரா-ஸு-௩௬-௪௧.

வண்டே) †இவள்கார்யம்செய்கைக்கு முன்பேசிரமம் செய்திருப்பாரைப்போலே வடிவு சிறுத்திருந்ததாயிற்று. கார்யகாலத்தில்வந்தவாறே அனுத்வத்தை யேறிட்டுக்கொள்ளவேண்டாதே யிருக்கை. (க) "ப்ருஷதம்சகமாத்ர:-ப்ருஷதம்சகமாத்ர:" என்று சிறுக்கினானிறே. (உ) "சசார நாநாவித வேஷதாரீ-சசார நாநாவித வேஷதாரீ" என்னவேண்டாவாயிற்று இவற்றுக்கு. (பொறிவரியவித்யாதி) (ங) "ப்ராசம்ஸத மஹாகபிம்- ப்ராசம்ஸத மஹாகபிம்" என்னுமாபோலே (ச) †"ஏத்தவேத்த †வெங்கெய்தும்" என்னும் நிலையிறே இவனது; † கடலைவற்ற இறைக்கக்கோலுவாரோபாதிகிடீரென்கிறாள்.(ங)†[தஸ்யா-தஸ்யா] திருவடி ராமவ்ருத்தாந்தத்தைக் சொல்லக்கேட்டவநந்தரம் உளளானாள்.[ஹ்ரீமதீ-ஹ்ரீமதீ](ஞ) "ஸதிதர்மிணி தர்மாஸ்சிந்த்யந்தே-ஸதிதர்மிணி தர்மாஸ்சிந்த்யந்தே" இதி ந்யாயேந ஸத்தையுண்டாகா உண்டாமது உண்டாயிற்று. [பாலா-பாலா] ஹர்ஷம் பொறுக்கவொண்ணாதவளாயிற்று. [பர்த்துஸ்ஸந்தேசஹர்ஷிதா - பர்த்துஸ்ஸந்தேசஹர்ஷிதா] ரக்ஷகரானவர் வார்த்தைகேட்டு ஹ்ருஷ்டையானாள். [பரிதுஷ்டா - பரிதுஷ்டா] அந்தஹர்ஷம் புறவெள்ளமிட்டபடி. [விசாலாக்ஷீப்ராசம்ஸத - விசாலாக்ஷீப்ராசம்ஸத] ஏத்தத்தொடங்கினாள். [மஹாகபிம்-மஹாகபிம்] கடலைவற்ற இறைக்கக் கோலுவாரைப்போலே.

† இப்படிசொன்னவாறே வண்டு லஜ்ஜித்து, "நீஏவிற்றுச்செய்யவிருக்கிற வெங்களைக்கிடந்து இங்ஙனே ஸ்தோத்ரம் பண்ணுகிறதென்? உன்னோடே கலந்துபிரிந்து உன்தசையைக்கண்டு மிரங்காதே போனவன் எங்கள் வார்த்தை கேட்குமோ? என்றனன்றோ எங்களுக்கு விலம்பம்" என்றனவாகக்கொண்டு, மேல்வார்த்தை சொல்லுகிறாள். (தீவிரியவித்யாதி) நீங்கள் அது நினைக்கவேண்டா, அவ்வூரிலுள்ளார் தார்மிகராயாயிற்றிருப்பது, நீங்களென்தசையை அங்கேயறிவிக்க அவனைப்புறப்படவிடுவர்கள்; - †"ஸ்த்ரீகாதுகனாயிருக்கிறவனைவிடுவேயோ நாம் யஜிக்கிறது" என்று புறப்பட விடுவர்கள், அறிவிக்குமதுவே வேண்டுவதென்கிறாள். நொந்தாரை, "ஐயோ" என்னுமவர்களாய், யுக்தகாரிகளடங்கலும் திரண்ட தேசங்காணுங்கோள்; புறப்படவிடுவர்கள்; புறப்படவிட்டால், பின்னை அவனுக்கு

(க) ரா-ஸு-உ-௬௧. (உ) ரா-ஸு-. (ங) ரா-ஸு-.
(ச) தி-வாய்-௪-ங-௧௦. (ஞ)

நானல்லது கதியில்லை. (தீவிரியவித்யாதி) அலர்ந்த தாமரைபோலே அக்கினிஸ்த்ருதமாம்படி வைதிக மர்யாதையைக் குறைவற நடத்து கையால் வந்த புகழையுடையவர்களுடைய திருவாலியில்.

†குணவித்துக்கள் திரண்டவிடமாயிற்று; உங்கள் வடிவைக்காட்டி "ஸ்த்ரீகாதுகன் இவடிகோளிவன்" என்று பழிசொல்லிப்போருங்கோள் நீங்கள்; "நாங்கள் சென்றறிவித்தாலும், அவன்றான் வருவானானாலும், வழியிலே ப்ரபல ப்ரதிபந்தகங்களுண்டாகில் செய்யலாவதில்லையே!" என்ன; "அதுவேண்டாகாண் கையில் வில்லிருக்க" என்கிறாள். வரப்புக்கால் ப்ரதிபந்தகமொன்று கிடவாது அவனுக்கு. (ஏவரிவெஞ்சிலையானுக்கு) †ஆர்த்தத்வநி செவிப்படாமைக்கன்றோ கையிலே விற்பிடித்தது. ஆரேனையுயாகக்கையிலே விற்பிடித்தாரை யுத்தத்திலே மூட்டுமதாய், கட்டையுடைதத்தாகையாலே வரிவரிப்பட்டு தர்சநீயமாய், பிடித்தபிடியிலே எதிரிகள் குடல் குழம்பும்படியான வில்லைக்கையிலே யுடையவனுக்கு. தூது போகிற எங்கள்படி சொன்னாய், நாங்கள்போயறிவிக்கிறவன்படி சொன்னாய், உன்வார்த்தையாக நாங்களவனுக்குச் சொல்லுவதென்னென்ன; (என்னிலைமை) பாசுரமில்லாததுக்கு என்னாலே பாசுரமிடப்போமோ! என் வடிவிருக்கிறபடிகண்டிகோளே; இனி நீங்களே பாசுரமிட்டுச் சொல்லுமித்தனை. தன்னிலும் தன்னைக்கண்டார்க்குப் பாசுரமிட்டுச் சொல்லலாமென்றிருக்கிறாள். ஒரு ஐந்த்ரவ்யாகரணபண்டிதனுபாதியாகக்காணு மிவள் தானித்தை நினைத்திருக்கிறது. (உரையாயே) †ஒருகந்தர்வன் துர்யோதநனைக் கட்டிக்கொண்டு போகாநிற்கச்செய்தே தர்மபுத்ரன் பேரைச்சொல்லிக் கூப்பிட, அவனைப் பின்னை ஆந்ருசம்ஸ்யத்தாலே மீட்டான் என்னாநின்றது; அங்ஙனன்றிக்கே, தன்னையாசைப்பட்டுப் பிரிந்திருந்து நோவுபடுகிறபடியைக் கேட்டால் உதவாத ஸ்வபாவனோ என்கிறாள். (உரையாயே) கொடுவரவேண்டா, அறிவிக்குமித்தனையிறே இத்தலைக்கு வேண்டுவது; வருகை அவன்பணியே; வாராதொழியுமன்று ரக்ஷகனுக்குக் குறையாமே. நீங்களறிவித்தவநந்தரம் உங்கள்பேச்சுக் கேட்டுத் தாமே வாராநிற்கும். ... ... (௧)

---

அரு.—முதற்பாட்டு. (தூவிரியவித்யாதி). (தூதுவிடுகிறாள்) என்றது - தூதவாக்யத்தை வாய்விடுகிறாளென்றபடி. பாட்டுக்கெல்லாம் தொகுத்த பாவமருளிச்செய்கிறார் (உணக்கித்யாதி).

"மலருழக்கி" என்னவமைந்திருக்கவும், "தூவிரிய" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (பிரிவாலேயித்யாதி). பிரிவாலே பூக்காண ஒடுங்கினவிடமெங்கே யென்னவருளிச்செய்கிறார் (ஸாகேஷத்யாதி). "ராக்ஷஸ்ய:" என்கிற ப்ரதமை - த்விதீயார்த்தேயாக்கி அர்த்தமருளிச்செய்கிறார் (ராக்ஷஸீத்யாதி). "தூய்தாம்படி கழியவலர்ந்த" என்ற இரண்டாமர்த்தத்தில் இவளுக்கு அக்நிஸாத்ருஶ்யம்தோற்றிற்று என்று விவக்ஷித்து, அதுக்கு த்ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் (நகோத்தமமித்யாதி). (அள்ளல்சேற) குளிர்ந்தசேறு, சந்தநபங்கமென்கை. எறி என்றதே, உழக்கி என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அல்லியுமித்யாதி). தானும் * அலர்மேல் மங்கையன்றோ, இவற்றை "உழக்கி" என்கிறதென்னென்ன வருளிச்செய்கிறார் (புஷ்பமென்றாலித்யாதி).

மேலுக்கவதாரிகை (நம்முடையவித்யாதி)' துணையோடிருக்கை மலருழக்குகைக்குறுப்பென்று தாத்பர்யமருளிச்செய்து, தூதுவிடுகைக்கு உபயுக்தமென்று தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (என்னைப்போலேயித்யாதி). சேவலோடென்றதே, "துணை" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (தன்னித்யாதி).(கழுத்துக்கட்டி)ரக்ஷயம். நாயகனே துணையென்னுமதுக்கு ப்ரமாணம் (துணைபிரிந்தாரித்யாதி). துணை மாத்ராதிகளாகவொண்ணாதோ, நாயகனேயாகவேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (சிறியாத்தானித்யாதி). நாயகனே துணையென்னுமதுக்கு ஜ்ஞாபகமேதென்ன (உன்னையித்யாதி). "துணையோடு" என்றத்தாலே ஸாஹசர்யம் தோற்றியிருக்க, "பிரியாதே" என்றது-தான் பிரிந்திருக்கிறதசையில் மூந்துறவிவை பிரியாதிருக்கை அஸம்பாவிதம், இதென்ன ஆஶ்சர்யம்! இதுபெற்றோமே! என்றது தன் கார்யத்துக்குடலென்றநுஸந்திக்கிறாரென்றருளிச்செய்கிறார் (இவ்வர்த்தமித்யாதி). ஸம்ஶ்லேஷம் உன்மஸ்தகமானால் அது ஸாத்மிக்கைக்காகவும் பிரியாதேயிருப்பதே! இதென்ன ஆஶ்சர்யம்! என்னும் தாத்பர்யாந்தரம் சொல்லுகைக்காக ப்ரதீகக்ரஹணம் (தூவிரியவித்யாதி). தான் பிரிந்திருக்கும்போது எல்லாரும் பிரிந்திருக்கிறதாகவெண்ணின விடமுண்டோவென்ன (மயூரஸ்யேத்யாதி).

"விரிய" என்றவநந்தரம், "நுகரும்" என்கையாலே பலித்த கால ஸாமீப்யத்தைத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (இவற்றினுடைய ப்ரவேஶமுமித்யாதி). இத்தால்-காற்றும் புகுராத நூதநமான தேனை நுகர்ந்ததென்றதாயிற்று. ராஜபுத்ரர்கள் ஸமாதியாலே, முசிந்தபடுக்கையை விட்டுப்போனாற்போலே அலராமலரில்போனால் அது நிசாகாலமாயன்றோவிருப்பது, அப்போது தென்றல்முதலாக இல்லையே, இவற்றினுடைய ப்ரவேசமும் அலருகையும் ஏககாலமாம்படி விகஸிக்கைக்கு ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிறார் (தென்றலித்யாதி). (ஸந்நிதி) சிறகின்காற்று. கீழ்வாக்யவிவரணம் (க்ருதேத்யாதி). ஸ்வாபதேசார்த்தத்தை ஸூசிப்பிக்கிறார் (இவற்றினுடைய

வரவித்யாதி). பாகவதர்களுடைய ஸந்நிதி ஹ்ருதயகமலவிகாஸ ஹேதுவா யிற்றென்று கருத்து. என்னைப்பிரிந்து வருமவரைப்பிரிந்து நானுமுண்ணு திருக்க நீயும்துணையோடே மதுநுகருகை உங்களுக்குத்தகுமோ என்கிறு ளென்றருளிச்செய்கிறூர் (நமாம்ஸமித்யாதி). ப்ரமரம் தன்னைப்போலே பண்ணுமென்னும் குணத்துக்கு ஹாநிவரும் என்னிலையை வரையாயாகிலெ ன்று கருத்து. மதுநுகருகை தூதுபோகைக்குடலன்றே, பழியிடுவானென் னென்ன வருளிச்செய்கிறூர் (ஒன்றுக்கொன்று ஸம்பந்தலேஷார்த்தமாகவித் யாதி). தூதுபோகைக்குக்கால் நடைதரவேணுமென்றன்றே நீங்கள் மதுநுக ருகையென்று கருத்து. வர்த்தமாநார்த்தம் (மதுபாநமித்யாதி). மீளாதே மதுநுகரக்கூடுமோ, வாய்நோவாதோவென்ன (தனக்குத்தானித்யாதி). ஸ்வார்த்தமாகில் நோவுதெரியவதென்றுகருத்து. பரார்த்தமேயாகிலும் தெகுட் டாதோவென்ன வருளிச்செய்கிறூர் (ஒன்றுக்காகவித்யாதி). (ஒருகலத்திலே யெடுக்கை) ஒருகார்யார்த்தமாக ரஸ்யபதார்த்தங்களை ஒருபாத்ரத்திலேவைத் துக்கொடுக்குமாபோலே, நெஞ்சிலேவைத்துக்கொடுக்கையாலே பரார்த்தமு மாய், கீழ்மிழிச்சாமையாலும் தெகுட்டாதென்று கருத்து. மதுநுகருகை - ஒன்றுக்கொன்று பலா(ப்ஸா) தாநார்த்தமாகவென்றூரு தாத்பர்யமருளிச் செய்து, கூடியிருக்கையில் போக்யதயா என்று தாத்பர்யாந்தரமருளிச்செய் கிறூர் (இனித்தானித்யாதி). (கூடவொன்றை) துணையானவண்டை. (கை தொடுமானம்) என்றது - ஆலம்பநமென்றபடி. (செலவு) ப்ரயோஜநமென்ற படி.

(பொறியையும்) என்றது - மாநஸோல்லாஸத்தால்வந்த புகரையுமென் கை. ஸ்வாபதேசம் (கடகரித்யாதி). "வரி" என்றத்தைதப்பற்ற (தேஹகுணத் தோடு) என்றது. திர்யக்கானவண்டைச் சொன்னதுக்கு ஸ்வாபதேசம் (சேர் ப்பாரித்யாதி). வண்டுக்குண்டான ஸ்வாபாவிகமான சிறுமையை யிங்குச் சொல்லுகைக்குக் கருத்தருளிச்செய்கிறூர் (இவளித்யாதி). திருவடியைப் போலே கார்யகாலத்தில் சிறுக்கவேண்டாதபடி வ்ருத்த (வ்ருத்த) ஸாமந்தரான ஸேனைமுதலியார் முன்பு போகக்கூசாதே அவன்வளையத்தில் வண்டுகளோடு ஒருவண்டாய்ப்போய், என்னிலைமைசொல்லும்படி யமைந்திருந்தாயேயென் கிறுளென்று கருத்து. (மஹாகபிம்)என்றதுக்குத் தாத்பர்யம் (ஏத்தவித்யாதி). (எங்கெய்தும்) எங்கேகிட்டுவோம், கரைகாணமாட்டோமென்கை. ஆனல் ப்ரசம்ஸிக்கக்கூடுமோவென்ன (கடலையித்யாதி). எடுத்த ப்ரமாணத்துக் கெல்லாம் வ்யாக்யாநம்பண்ணுகிறூர் (ததஇத்யாதி).

மேலுக்கவதாரிகை (இப்படியித்யாதி). உத்தரார்த்தத்துக்கெல்லாம் தொகுத்ததாத்பர்யத்தை யருளிச்செய்து, அத்தை விவரிக்கிறூர் (ஸ்த்ரீகாதுக னித்யாதி).

மேலுக்கு உக்திப்ரத்யுக்திரூபேண தாத்பர்யமருளிச்செய்கிறூர் (குணே த்யாதி, கிடவாது அவனுக்கு இத்யந்தம்). சப்தார்த்தம் (ஆர்த்தத்வநியித் யாதி). உரைகேட்டு உதவுமென்கைக்கு ஸம்வாதம் (ஒருகந்தர்வனித்யாதி).

மூ.—பிணியவிழு நறு நீலமலர் கிழியப் பெடையோடும்
அணிமலர்மேல் மதுநுகரு மறுகால சிறுவண்டே
மணி கழுநீர் மருங்கலரும் வயலாலி மணவாளன்
பணியறியேன் நீசென்றென் பயலை நோயுரையாயே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிணிஅவிழும் | கட்டவிழாநின்றுள்ள | வயல் | கழனிசூழ்ந்த |
| நறுநீலமலர் | செவ்வியநீலமலர்கள் | ஆலி | திருவாலியிலேஎழுந்தருளியிருக்கிற |
| கிழிய | கிழியும்படி | | |
| பெடையோடும் | பேடையுடனே [ந்து | மணவாளன் | ஸ்வாமியினுடைய |
| அணிமலர்மேல் | செறிந்தபூக்களிலிரு | பணி | க்ரியையை |
| மதுநுகரும் | மதுபானம்பண்ணுகிற | அறியேன் | நானறியமாட்டேன், |
| அறுகால | ஆறுகால்களையுடைய | நீசென்று | நீபோய் |
| சிறுவண்டே | சிறுத்தவண்டே! | என்பயலைநோய் | என்னுடம்படையவைவர்ண்யம்பரந்திருப்பதை |
| மணி | அழகிய | | |
| கழுநீர் | செங்கழுநீர் | | |
| மருங்கு | நாற்பக்கத்திலும் | உரையாய் | அநாதரம்பண்ணாமல்சொல்லவேணும். |
| அலரும் | விகஸிக்கிற | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பிணியவிழு நறுநீலமலர்கிழிய) †இதினுடைய ப்ரவேசம்பாதியும்†காலம்பாதியுமாகவாயிற்றுப் பூவில்பிணியவிழுவது. † கழியவலர்ந்துபோனவற்றுக்கும், பிஞ்சாய்ப் பருவமிளைதானவற்றுக்கும் வாசியறிந்திருக்கை. †இத்தால்-அவன் வாய்விடும்போதே அவன்கருத்தறிந்து பரிஹரிக்கவற்றென்கை. (பிணியவிழுமித்யாதி) † கட்டவிழாநின்றுள்ள செவ்வியையுடைத்தான நீலமலர் கிழியும்படியாக †வாயிற்று மதுபானம்பண்ணுகிறது, ஆவதென்னென்னில்; போகவிடுகிறவிடத்தில் அளவறிந்து கார்யம் செய்யவற்றென்கை. (மலர்கிழிய) † பேணிக்கலக்கவறியாவாயிற்று. † தன்செருக்காலே தன்படுக்கையென்றும்பாராதே யழித்துப் பொகடுகிறதாயிற்று. † இவைதானங்கு ஜபிக்கைக்குப் புகுகிறனவன்றே! †கார்யப்பாடற்றுக் கலக்கிறவற்றுக்கு மற்றொன்று தெரியாதிறே. உன்மத்தங்காய் தின்றிருப்பார்க்கு நெஞ்சிருண்டு வேறொன்று தெரியாதிருக்குமிறே. அந்த உன்மத்தங்காய்தானேதென்றால்; (பெடையோடும்) †இவைதனக்கொரு படுக்கைவேண்டா?ஆகாசத்தே கலக்கவற்றுக்காணும், ஒன்றினுடம்பிறே ஒன்றுக்குப்படுக்கை; (க) "த்வாங்கே-ஸம்பாவிச - தவாங்கே ஸமுபாவிசம்" என்னுமாபோலே.

(க) ராஸு-௩அ-கச.

(அணிமலர்மேல் மதுநுகரும்) செறிந்தபூவிலேயிருந்து மதுபாநம்பண்ணாநிற்கும். ஒருபூவிலேயிருந்து மதுபாநம்பண்ணாநின்றால், மற்றைப்பூவிலே போம்போது பறந்துபோகவேண்டாதபடியிருக்கை. †பொய்கையடங்கப் பரப்புமாறப்பூத்து ஒன்றோடொன்று நெருங்கிக்கிடக்கையாலே, ஒன்றில் நின்றும் மற்றையதில் போம்போது நடந்துசென்று மதுபாநம்பண்ணலாயிருக்கை. † பூவில் செறிவுதேட்டமாய் மதுபாநம்பண்ணுமிதுவே யாத்ரையாயிருப்பதே! உங்களுக்கு. (அறுகால) † இரண்டுகாலுடையாரைப்போலன்றிக்கே, ஆறுகாலுடையார்க்குக் கடுகப்போய்க் கார்யம் தலைக்கட்டலாமிறே. (க) † "நித்யம் யதீய சரணௌ ஶரணம் மதீயம்-இத்யம் யதீய சரணௌ சரணம் மதீயம்" என்று சேர்ப்பார்காலேயிறே இவர்கள் ஜீவநமாக நினைத்திருப்பது, என்ஜீவநம் கூடுபூரித்துக்கிடந்தபடியென்றான்! என்கிறான். "சரணௌ - சரணௌ" என்று † மிறுக்குப்படவேண்டாதபடியாயிருக்கை. (சிறுவண்டே) † கார்யவாய்ப்புப்பெருத்து எம்பார் திருமேனிபோலே வடிவு சிறுத்திராநின்றனவாயிற்று.

(மணிகழுநீர்மருங்கலரும்) மணிகளும் செங்கழுநீருமாயாயிற்று. பர்யந்தங்களடங்கவுமிருப்பது. அன்றிக்கே, மணியென்று - அழகாய், அழகிய செங்கழுநீர் அலருமென்னுதல். (மணிகழுநீரித்யாதி) †அழகிய செங்கழுநீர்களானவை அலராநின்றுள்ள பர்யந்தங்களையுடைத்தான வயலாலேசூழ்ந்த திருவாலியிலே வந்திருந்தவன். †அன்றிக்கே, நீர்களானவை கொழித்தெறடாநின்றுள்ள மணிகளையும் செங்கழுநீரையுமுடைத்தான பர்யந்தங்களென்றுமாம். (வயலாலிமணவாளன் பணியறியேன்) †என்னையணைக்கையேதொழிலாய் இங்கேற வருகையிலே ஒருப்பட்டிருக்கிறானோ, அன்றிக்கே, ஜாம்பவதிபோல்வார்க்குப் பூப்பறித்துத் தொடாநிற்குமோ, அறியேன். அன்றிக்கே, † பணியென்று - சகுந்தலையையுபேக்ஷித்த துஷ்யந்தனைப்போலே அறியாமை†பாவித்திருக்குமோ, அதுவுமறியேன். அன்றிக்கே, நாவிலும் பல்லிலும் நீரற்று, "என்செய்தாள்?" என்பட்டாள்"? என்று கேட்கிறானோ?. உக்தியிலும் க்ரியையிலும் கொள்ளக்கடவது.

†அவன்படி நிஶ்சயிக்கவொண்ணாவிட்டாலும் நமக்கவனை யொழியச்செல்லாதிறே. (நீசென்று) நமக்கு முன்னம் அவனைப்போலே

---

(க) ஸ்தோ - ௭ - உ.

யிருக்கவொண்ணாதிறே.† அவனுக்கு நம்மையொழியச்செல்லுமென்று, நமக்குமவனை யொழியச்செல்லாதே. (நீசென்று) முறைகெடவாகிலும் நீமுறற்படச்சென்று. அவன்தானே வரப்பெறவிருக்குமதாயிற்று முறை. அங்குப்போனால் சொல்லுமதுதானேதென்னில்; (என்பயலை நோயுரையாயே) (க)† "𑌤𑌦𑌾𑌸𑍀𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌭𑍋𑌽𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌰𑌾𑌹𑍁𑌗𑍍𑌰𑌸𑍍𑌤 𑌇𑌵𑌾𑌂𑌶𑍁𑌮𑌾𑌨𑍍 - ததாஸீந்நிஷ்ப்ரபோத்யர்த்தம் ராஹுக்ரஸ்த இவாம்சுமாந்" என்று பெருமாளுடைய ஆற்றாமையை மஹாராஜர்க்கு இளையபெருமாளறிவிக்க, அவ்வார்த்தைசெவிப்பட்டு அழிந்தவழிந்தவளவுதோறு முடம்பு வெளுத்து வந்ததிறே. அப்படியே என்னுடம்பில் வைவர்ண்யமு மவனுடம்பிலே காணும்படி வார்த்தை சொல்லு. (பயலைநோயுரை) † வாசாமகோசரமிறே இவளுடைய வைவர்ண்யந்தான். வாக்குக்கு அவிஷயமானவற்றுக்கும் பாசுரமிட்டுச் சொல்லவற்றுக்காணும் இவைதான். (என்பயலை நோயுரையாயே) †என்னுடம்படைய வைவர்ண்யம் பரந்திருக்கிறபடியைச்சொல்லு. †உன்னுடையசொல்கலந்தவிடமடையவைவர்ண்யம் பரக்கும்படியாகச்சொல்லிப்போரு என்கிறாள். (என்பயலை நோயுரையாயே) †ஸ்வதந்த்ரர் படிகொண்டு கார்யமென் நமக்கு, நீசென்று இத்தனையுமறிவித்துப் போராய். ... ... ... ... (௨)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (பிணியித்யாதி) என்றும் இவர்கள் பேடையை முன்னிட்டே சேவலைக் கார்யங்கொள்ளுமவர்களாகையாலே, கீழ்ப்பாட்டில் * துணையோடும் பிரியாத பெண்வண்டைமுன்னிட்டுத் தூதுரைத்தாள்; இதில், அத்தோடுகூடின சேவலையே பார்த்துத்தூது விடுகிறாளென்றுஸங்கதி.

பிணிப்பவிழாநின்றுள்ள நறுநீலமாகிற மலர்ந்தபுஷ்பமென்று சப்தார்த்தமாகையால், அவிழாநிற்கைக்கும் மலருகைக்கும் வ்யுத்க்ரமேண ஹேதுத்வயம்காட்டுகிறார் (இதினுடையவித்யாதி). (காலம்) சந்த்ரோதயோபக்ரமம். "நறுநீலமலர்கிழிய" என்னவமைந்திருக்க, "பிணியவிழும்" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (கழியவித்யாதி). இத்தால்-கழியவலர்ந்தவற்றையும் கேவலமிளைதானவற்றையும்விட்டு, மத்யமாவஸ்த்தாபந்நமானவற்றில் வாசியறியவல்ல விசேஷஜ்ஞதையுண்டென்றதாயிற்று. இந்த விசேஷஜ்ஞதைசொன்னதுக்கு ப்ரகருதோபயோகம்காட்டுகிறார் (இத்தாவித்யாதி). அவ்வூரில் தார்மிகரானவர்கள், "ஸ்த்ரீவதம் பண்ணினான்" என்று புறப்பட விடுவர்கள் என்னாநின்றாய், அதுக்கு அவனுன்னிடத்தில் குற்றங்களைக்காட்டினால் செய்வதென்னென்ன; அவன்கருத்தை யறியுமுன்விசே

---

(க) ரா - கி -

ஷஜ்ஞதை கண்டோமே, அதுக்கு நீயே பரிஹரிக்கவல்லை என்கிறாளென்று கருத்து. சப்தார்த்த கதநபூர்வகம் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (கட்டித்யாதி) (ஆயிற்று) என்ற வநந்தரம், பேடையோடு கலந்து என்று சேஷம். கிழியாதே கலக்கவொண்ணாதோ வென்ன (பேணியித்யாதி). அதுக்குஹேது (தன்னித்யாதி), கலவாதே மதுநுகரலாகாதோ வென்ன (இவை தானித்யாதி). மதுநுகர்ந்தால் அநந்தரம்ஜபிக்கை இதின் கார்யமன்றே என்றுகருத்து. மலர்கிழியப் பெடையோடு கலந்து, அநந்தரம் மதுநுகரும்போது மூந்துறச் செருக்குவர ஹேதுவென்னென்ன (கார்யப்பாடித்யாதி.) (கார்யப்பாடு) வேறொரு கார்யம். உந்மத்தங்காயான பேடையோடே கலக்கிற வண்டை"தூது போ" என்றால் படுக்கையை விட்டுப்போமோ வென்ன; "வண்டு" என்றத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (இவைதனக்கித்யாதி).

கீழ்வாக்ய விவரணம் (பொய்கை யித்யாதி). வெறுப்பாகவிதுக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (பூவித்யாதி). வண்டானபோதே அறுகாலுமுண்டாயிருக்குமே, இப்படி விசேஷிப்பா னென்னென்ன வருளிச்செய்கிறார் (இரண்டித்யாதி). இறகாலே பறந்தும் போகச்செய்தே இவைப்பானால் காலாலே நடக்கவும் மும்மடங்காயிருக்கிறதிறே உனக்கு கமநஸாதநமென்று கருத்து. ஸ்வாபதேசத்தில் தாதபர்யம் (நித்யமித்யாதி). த்விவசந மாகையாலே (மிறுக்கு) என்றது. கீழே விசேஷஜ்ஞதையைச்சொல்லி, சிறுமையைச் சொன்னால் சேருமோவென்ன வருளிச்செய்கிறார் (கார்யவாய்ப்பித்யாதி).

மணிபதத்துக்கு அர்த்தத்வயங்காட்டி த்விதீயார்த்தாநுகுணமாக ஸமுதாயார்த்தமருளிச்செய்கிறார் (அழகியவித்யாதி). மூந்தினவர்த்தத்தில் - மணிகள் வருகைக்கு ஹேதுவைக்காட்டா நின்றுகொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி). "பிணி" என்று வ்யாபாரமும், உக்தியுமாகையாலே, வ்யாபாரபக்ஷத்தில் மூன்றர்த்தமும், உக்திபக்ஷத்தில் ஓரர்த்தமுமாக வருளிச்செய்கிறார் (என்னையித்யாதி). "மணவாளன்" என்றதுக்கு - தன்மணவாளனென்று விவக்ஷித்து மூந்தினவர்த்தமும் நாலாமர்த்தமும் நாயிகாந்தரத்துக்கு மணவாளனென்று - இரண்டர்த்தமுமாகக் கண்டுகொள்வது. (பாயித்திருக்குமோ) என்றது - மாநஸக்ரியையென்று கருத்து. சகுந்தலையென்கிற கண்வர்புத்ரியை துஷ்யந்தனென்கிற ராஜா வேட்டைக்குப் போனவிடத்திலே காந்தர்வவிவாஹம்பண்ணி ஒருபிள்ளைபிறந்தவுடனே"திரும்பிவருகிறோம்" என்று தன்னூரேபோக, அநேகநாள் வாராமையாலே இந்தப்பெண்ணை அங்கேபோகவிட, அப்போது இவளைக்கண்டு அறியாமை பாவித்திருந்தானென்று கதை கண்டுகொள்வது. (சகுந்தளையை) என்ற வாக்யத்துக்குமுன்னே யிருக்கிற (பணியென்று) என்றபதத்தை, (உக்தியிலும்) என்ற வாக்யத்துக்கு அடியிலே கூட்டுவது.

மேலுக்கவதாரிகை (அவ்வித்யாதி). விவரணம் (அவனுக்கித்யாதி). "உரையாய்" என்றது - வருகைக்கு ஹேதுவான உரையாகவேண்டுகையாலே,

அதின்கருத்தை ஸத்ருஷ்டாந்த முபபாதிக்கிறார் (ததாஹீதித்யாதி). வைவர்ண்யத்தில் ப்ரகார விசேஷம் சொல்லாமையால் பலித்தவர்த்தமருளிச் செய்கிறார் (வாசாமித்யாதி). சப்தார்த்தம் (என்னித்யாதி). ஜாம்பவதிபோல் வார்க்குப் பூப்பறித்துக் கொடுத்துக்கொண்டு அவனிருந்தால் அவனுடம்பில் வைவர்ண்ய மேறும்படி சொல்லுகை யெங்ஙனே? அவர்கள் ஸந்நிதியாலே வைவர்ண்யமேறுமோவென்ன வருளிச் செய்கிறார் (உன்னித்யாதி). துஷ்யந் தனைப்போலே உபேக்ஷித்தால் என்செய்வோமென்ன வருளிச்செய்கிறார் (ஸ்வதந்த்ரரித்யாதி). ... ... ... ... (௨)

மூ.—நீர்வானம் மண்ணெரிகாலாய் நின்றநெடுமால் தன்
தாராய நறுந்துளவம் பெறுந்தகையேற்கருளானே
சீராரும் வளர்பொழில்சூழ் திருவாலிவயல்வாழும்
கூர்வாய சிறுகுருகே குறிப்பறிந்து கூறாயே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| மண்நீர்எரிகால் வானம்ஆய் | ப்ருதிவ்யப்தேஜோ வாய்வாகாசமாகிய பஞ்ச பூதங்களாய்க்கொண்டு |
| நின்ற | அவற்றுக்கு அந்தர்யாமியாய் நின்ற |
| நெடுமால் | ஸர்வேஶ்வரனானவன் |
| தன் | தன்னுடைய |
| தாராய | மாலிகையாகிய |
| நறுந்துளவம் | செவ்வித்திருத்துழாயை |
| பெறுந்தகையேற்கு | பெறில் ஜீவிக்கும் ஸ்வபாவத்தை யுடைய அடியேனுக்கு |
| அருளானே | தாரானே; |
| சீராரும் | பெருமை மிகுந்த |
| வளர்பொழில் | வளராநின்றசோலைகளாலே |
| சூழ் | சுற்றிலுஞ்சூழப்பட்ட |
| திருவாலி | திருவாலி என்னும்நகரின் |
| வயல் | கழனியில் |
| வாழும் | வாழுகிற |
| கூர்வாயசிறுகுருகே | கூரிய வாயலகையுடைத்தான சிறுத்த பக்ஷியே! |
| குறிப்புஅறிந்து | அவன்கருத்தை யறிந்துகொண்டுவந்து |
| கூறாய் | நாம்தரிக்கும்படி அச்சொல்லைச்சொல்லவேணும். (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு (நீர்வானம்மண்ணெரிகாலாய் நின்ற நெடுமால்) ப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களையும் கார்யயோக்யமாம்படி ஒன்றோடொன்றைச்சேர்த்து, அவற்றுக்கொரு வஸ்துத்வமும் நாமமுமுண்டாம்படி தானவற்றுக்குள்ளேபுக்குநின்று, பின்னை அவற்றைச்சொன்னசொல் தன்னளவிலேவந்து பர்யவஸிக்கும்படி நிற்கிற பெரும்பிச்சன். †தன்னுடைமையைவிடமாட்டாமையாலேவேறுபடாதே கலந்து நிற்கிறவன். (நீர்வானமித்யாதி) ஆசையில்லாதஜகத்தையும் தானாசைப்படுமவனாயிற்று. †ப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களையுமுண்டாக்கி, அவற்றுக்குக் கார்யயோக்யதை யுண்டாம்படி, நீரை

யும் †சதுகையும் மண்ணையுங்கூட்டித் துகைத்து கட†சராவாதி கார்யங்களாக நிர்மிக்குமாபோலே, அத்தோடே சேதநஸமஷ்டியைக் கூட்டி தேவாதி கார்யத்தையடைய உண்டாக்கி, உண்டான விவற்றினுடைய ஸத்தாஹேதுவாகத்தான் அந்தராத்மதயா அநுப்ரவேசித்து, அவற்றைச்சொல்லும் சொல்லு தன்னையே சொல்லிற்றும்படி நிற்கும் நிலையைச்சொல்லுகிறது. †நாட்டில் கடபடாதிபதார்த்தங்கள் பரமாத்மபர்யந்தாபிதாநம் பண்ணியல்லதிராதிறே. (க) [𑌤𑌤𑍍𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 - தத்ஸ்ருஷ்ட்வா இத்யாதி] †இவற்றை ஸ்ருஷ்டித்து, இவற்றினுள்ளே அநுப்ரவேசித்து, அந்த அநுப்ரவேசத்தாலே சித்தும் அசித்தும் தானென்று சொல்லலாம்படி நிற்கிறவனாயிற்று. (நெடுமால்) தன்பக்கலாநுகூல்யலேசமில்லாத ஜகத்தின்பக்கலிலும் தான்மிக்க வ்யாமோஹத்தைப்பண்ணி யிருக்குமவன்.

(தன்தாராய நறுந்துளவம் பெறுந்தகையேற்கருளானே) †தன்பக்கலாசையில்லாதாரையும் விடமாட்டாதேயிருக்கிறவனுக்கு நான் பிரிந்திருந்தாசைப்பட்டுத் தூதுவிடுகிறதோ குற்றம். † தான்விஷயீகரிக்கில் உளேனாய், இல்லையாகில் இல்லையாம்படி யிருக்கிறவெனக்கு. †தன்தோளிலிட்ட செவ்விமாலைபெறில் ஜீவித்து, பெறுவிடில் முடியும்படியாயிருக்கிற வெனக்கு. (தன்தாராய நறுந்துளவம் பெறுந்தகையேற்கு) என்று தன் ஸ்வரூபத்தைச் சொன்னபடியென்தான்! (அருளானே) †ப்ரணயிநியார்த்தி பரிஹரிக்குமதுபோனால், நாட்டொப்பான வருளு மின்றிக்கே யொழிய வேணுமோ! (தன்தாராயவித்யாதி) †தனக்கே அஸாதாரணமாய் தாரையுடைத்தா யிருந்துள்ள செவ்வித் திருத்துழாயைப்பெறில் உளேனாய், இல்லையாகில் இல்லையாம்படி யிருக்கிற என்பக்கல் க்ருபை பண்ணானோ? † கந்தல் கழிந்தால் பின்னைத்திருத்துழாயோபாதி, கௌஸ்துபத்தோபாதி ஸ்ப்ருஹணீயமாயாயிற்று வஸ்துஸ்வபாவ மிருப்பது. (அருளானே) †ஸாமாந்ய ரக்ஷணம் தப்பநில்லாதவன் விசேஷ ரக்ஷணநிலை தப்ப நிற்குமோ? †ஆசையில்லாத ஜகத்தையும் ரக்ஷிக்குமவன், தன்னைப் பெறில் உளேனாய் இல்லையாகில் இல்லையாம்படி யிருக்கிற வென் விஷயத்தில் நெகிழ நிற்குமோ? † அவனுடைய ப்ரணயித்வத்துக்கு விஷயமாயிற்றிலோமாகிலும் அவனுடைய க்ருபைக்கு விஷயமாகாதொழிவுதோமோ?

---

(க) தை - ஆந -

(சீராருமித்யாதி) வாழ்ந்தார்க்குக் கெட்டாரை யெடுக்கவேண்டாவோ?(சீராரும் வளர்பொழில் சூழ்)(க)"ஊர்வளம் கிளர்சோலை" என்கிறபடியே ஊரில் ஸம்ருத்தியடையச்சோலையே கோட்சொல்லித்தரும்படியாயிருக்கை. (வளர்பொழில்) (உ) "வளரிளம்பொழில்" என்னுமாபோலே வளரவளர முதுமையின்றிக்கே இளகிப்பதித்திருக்கை. † ஐஶ்வர்யத்தினுடையஸம்ருத்தியைத்தெரிவியாநின்றுள்ள வளர்ந்தபொழிலாலே சூழப்பட்ட திருவாலியிலே வாழுகிற சிறுகுருகே! அங்குத்தை வர்த்தநந்தானே வாழ்ச்சியாயிருக்கை; கோயில் வாஸம்போலே. (கூர்வாயசிறுகுருகே) கூரியவாயலகையுடைய சிறுகுருகே யென்னுதல் ; அன்றிக்கே, †அறுதிப்பாடுடைத்தான வார்த்தை சொல்லவல்ல குருகே யென்னுதல். ராஜபுத்ரர்களைக் கண்டஞ்சி நாலு மூன்று யோஜனை ஓடிப்போன மஹாராஜர் வந்துகிட்டி, (ங) "ஏகம் து:கம் ஸுகம் ச நௌ - ஏகம் துஃகம் ஸுகம்ச நௌ" என்று நிற்கும்படிக் கீடாகவிறே வார்த்தை சொல்லிற்று. (குறிப்பறிந்து கூறுயே) அவன் கருத்தறிந்துவந்து எனக்குச் சொல்லென்னுதல் ; நானுற்றுமையாலே கண்ணுஞ்சுழலை யிட்டுச்சொன்னவற்றை யெல்லாம் அங்குச்சொல்லாதே, அவன்தரிக்கும்படி அளவறிந்து வார்த்தை சொல்லென்றுமாம். மிகச்சொல்லி லவனைக்கிடையாது. அவன் நைராஶ்யத்தை யறிந்துவந்து சொல்லென்றதுக்குக் கருத்தென்னென்னில்; நம்தசையை யறிவித்தால் "நமக்கத்தலைவேணும்" என்றுணில் நம்மாற்றுமை பாராதேயாகிலும் நாம் ஜீவித்துக்கிடக்க, "வேண்டா" என்றுணில் நாம்முடிந்து பிழைக்கும்படி. ... (ங)

---

அரு.—மூன்றும்பாட்டு. (நீரித்யாதி) வண்டானது, மென்மலர்ப்பள்ளியின் வாய்ப்பாலும், உன்மத்தங்காய்போலே பிச்சேற்றவல்ல பேடையின் மயக்குக்களாலும், மதுநுகருகையாலுண்டான பாரவஶ்யத்தாலும், *ஊமையரோடு செகுடர் வார்த்தைபோலேயாய்ப் போகையாலே, அவற்றைவிட்டு, கூர்வாய்க்குருகைக் கூறச்சொல்லித் தூதுவிடுகிறுளென்று ஸங்கதி.

பிச்சுத்தானென்னென்ன வருளிச்செய்கிறுர் (தன்னித்யாதி). ஆசை என்று - திக்காய், தத்யந்தரமில்லாத என்று சாடு. விவரணம் (ப்ருதிவ்யாதீத்யாதி). (சதுகு) கூளம். (சராவம்) மடக்கு. ப்ரமாணங்காட்டுகைக்காக அடிக்கோலுகிறுர் (நாட்டிலித்யாதி). ப்ரமாணார்த்தம் (இவற்றையித்யாதி).

---

(க) தி - வாய் - அ - கூ-ச. (உ) தி - வாய் - உ - கo - க.
(ங) ரா - கி - ௫ - கஅ.

அருள நமக்கு ஹேதுவேதென்ன, "கூறாய்" என்றபதத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (தன்பக்கலித்யாதி). இதுபோக்கி வேறுகுற்றம் காணாமையென்று கருத்து. வேறுகுற்றமில்லையோவென்ன (தானித்யாதி). கீழ்வாக்யவிவரணம் (தன்தோளிலித்யாதி). வ்யாக்யாதாவினீடுபாடு (தன்தாராயவித்யாதி). நாயிகையானவள், வாரானோ என்னாதே, "அருளானே" என்னக் கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ப்ரணயிநி யித்யாதி). வாக்யார்த்தம் (தனக்கேயித்யாதி). துளவத்தைப்பெறுகைக்கு யோக்யமான ஸ்வபாவத்தையுடையவளென்று சப்தார்த்தமாய்க் கீழருளிச்செய்து, துளவத்தினுடைய, பெறும் தகையேற்கு - எம்பெருமான் லபிக்கும்படியான ஸ்வபாவம்போன்ற ஸ்வபாவத்தையுடையவெனக்கு என்று சப்தார்த்தமாக்கித் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (கந்தலித்யாதி). (வஸ்து) ஆத்மவஸ்து. "அருளானே" என்றது - பிரிநிலையேகாரமாய், அருளானும் என்றாக்கி ஒரு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாமாந்யேதயாதி). விவரணம் (ஆசையில்லாதவித்யாதி). விரோதரக்ஷணத்தில் தப்பநில்லானாகில், உன்னை இப்பாடுபடுத்தினவன் நான்போனபின்பு தப்பினாலோவென்ன வருளிச்செய்கிறார் (அவனுடையவித்யாதி). ப்ரணயத்தாலே வாராவிடிலும் தயாளுவாகையாலே என்னார்த்தியைக் கேட்டு வருமென்று கருத்து.

தாத்பர்யத்தை யருளிச்செய்து, சப்தார்த்தம் (ஐஶ்வர்யத்தினித்யாதி). (அறுதிப்பாடுடைத்தான) தீக்ஷ்ணபுத்தியாலுண்டான. ... (௩)

மூ.—தானாக நினையானேல் தன்னினைந்து நைவேற்கோர்
மீனாய கொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ
தேன்வாய வரிவண்டே திருவாலி நகராளும்
ஆனாயற் கென்னுறுநோ யறியச் சென்றுரையாயே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை, |
|---|---|---|---|
| தான் ஆக | அவன்தானாகவே | திருவாலிநகர் ஆளும் | திருவாலியென்னும்திவ்யதேசத்திலேவர்த்திக்கிற |
| நினையானேல் | என்னைநினையானாகிலும் | ஆனாயற்கு | ஸ்ரீக்ருஷ்ணனாகத்திருவவதரித்தஸர்வேஶ்வரனுக்கு |
| தன்நினைந்து | அவனையேநினைத்துக்கொண்டு | என் உறுநோய் | என்சரீராந்தமான நோவை |
| நைவேற்கு | நையுமென்னை | சென்று | நீபோய் |
| ஓர்மீனாயகொடி நெடுவேள் | அத்விதீயமகரத்வஜனானமன்மதன் | அறியஉரையாய் | அவனறியும்படிசொல்லவேணும். (௪) |
| வலிசெய்ய | பீடிக்கும்படி | | |
| மெலிவேனோ | நான்இளைத்துப்போவேனோ; | | |
| தேன்வாய வரிவண்டே | இனியபேச்சையுடைய ரேகைசிறந்தவண்டே! | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (தாளுக நினையானேல்) † "வேப்பு" என்பாரைப்போலே.†உடைமையை அவனுக நினைக்கு மதூ கிடையா தாகில். முறைசெய்யானுகில். †அவனுக்கு ஆஶ்ரிதரை நினையாமை ஸத்தாப்ரயுக்தமாகில்; தன்ஸத்தை யுண்டாகைக்கீடாக நினையானுகி லென்றுமாம். (தன்னினைந்து நைவேற்கு) †நாமவனைப்போலே யாக மாட்டோமே;†நாமும் நினையாமைக்†கொரு நெஞ்சுபடைக்கப் பெற் றிலோம். †பெறவுமாய்த் தவிரவுமாயிருக்கும் விஷயமாகிலிறே அநு ஸந்தித்தால் தரித்திருக்கலாவது; இதர விஸஜாதீயமாயிருக்கும் விஷயமாகையாலே அநுஸந்தித்த வநந்தரம் நோவு படுமத்தனையிறே. (ஓர் மீனுய கொடிநெடுவேள் வலிசெய்யமெலிவேனே) † தன்னை யாசைப்பட்டு நைகிற வென்னை மகரத்வஜனே நலிவான். அவஶ் யம் நாங்கள் நோவுபடுகை தவிரோமாகில் (க) "கருளக்கொடியொ ன்றுடையீர்" என்கிறதான் நோவுபடுத்த நோவுபட்டா லென்செய்ய வேணும்.†ஜீயர் வார்த்தையை நினைப்பது.

(தேன்வாயவரிவண்டே) இனிய பேச்சையுடைய வண்டே! பிராட்டி சிம்சுபா வருக்ஷத்திலே திருக்குழலைக் கொடுபோய்ப் பிணை க்கப்புக்க ஸமயத்திலே அவளுக்குதவி, (உ) "అవగాహ్యార్ణవం స్వప్స్యే - அவகாஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே" என்கிற ஸமயத்திலே இவருக்கு வந்துதவி, இரண்டுதலையு முண்டாம்படிக் கீடாக வார்த்தைசொல்ல வற்றாயிருக்கை. அவனித்தலையில் வரநினைத்திலனுகிலும் உங்கள் பேச்சி னினிமையிலே துவக்குண்டு வரும்படி வார்தைசொல்ல வல்லிகோளிறே. (திருவாலி நகராளுமாளுயற்கு) †திருவாய்ப்பாடி யில் ஸம்பத்தோடே திருவாலியில் ஸம்பதத்தையும் கையடைப்பாகி னுல், பின்னை அவனுக்கு நொந்தாரை "ஐயோ" என்ன அவஸர முண்டோ? (என்னுறு நோயறியச் சென்றுரையாயே) அறியாமை வாராதொழிந்தானத்தனை, நீ போய் அவனறியும்படி சொலலு. அன்றிக்கே, (அறியச்சென்றுரை) உன்னடையில் தளர்த்தியிலே இத்தலையாற்றுமையடைய அவனறிந்து நாவிலும் பல்லிலும் நீரற்று உடம்பு வெளுக்கும்படி சென்று சொல்லென்றுமாம். ... (௪)

---

அரு.—நாலாம்பாட்டு. (தாளுகவித்யாதி) கீழ்ப்பாட்டில் குருகைக் குறித்து, "கூறாய்" என்றவாறே வண்டானது வந்து முகங்காட்டி, "நீ யெங் களைத் தூதுவிட நாங்கள் மெய்மறந்திருந்தோமல்லோம், அவன் உன்படி

---

(க) ௬0 - அ - ௩. (உ) ரா - யு - ௫ - அ.

யறிந்துவைத்தும் இப்பாடுபடவிட்டு நினையாதிருந்தான், நாம்போனாலும் பற்கடித்திருந்தால் என்செய்வோமென்றிருந்தோமித்தனை" என்று இனிதாகச் சொல்லிக்கொண்டுவர, அத்தைப்பார்த்து வார்த்தைசொல்லுகிறாளென்று ஸங்கதி

தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேம்பித்யாதி). (க) "வேம்பின்புழுவேம்பன்றியுண்ணாது" என்றவிடத்தில், அவன் குற்றத்தையிட்டு வேம்பென்று குறைசொன்னாற்போலே அவன் தன்னை நினையாதிருக்கை குற்றமென்று அவனுக்குக் குறைசொல்லுகிறாளென்று கருத்து. சப்தார்த்தம் (உடைமையயித்யாதி). தானாகவேநினைக்கைமுறை, அதுசெய்யாமல் போனானாகிலென்று கீழருளிச்செய்து, தானாகையாலேயென்றும், தானாகைக்காகவென்றும், சப்தார்த்தம் விவக்ஷித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுக்கித்யாதி வாக்யத்வயத்தாலே). ஸத்தையுண்டாகைக்காக நினைக்கவேணுமது செய்யாமல்போனானாகிலென்றும், ஸத்தையுண்டாகைக்காக நினையாதேயிருந்தானாகிலென்றும், மூன்றாம் தாத்பர்யத்தை யிரண்டுவிதமாக யோஜித்துக்கொள்வது. நினையாதவனை நாம் நினைப்பானென்னென்ன (நாமித்யாதி). மாட்டாமைக்கு ஹேதுவென்னென்ன (நாமுமித்யாதி). (ஒருநெஞ்சு) பேர்சொல்லப்போகாதகல்நெஞ்சு. நினைத்தால் நைவானென்னென்ன வருளிச்செய்கிறார் (பெறவுமித்யாதி வாக்யத்வயத்தாலே). விரஹிணிகளை மதநன் வலிசெய்யுமது லோகப்ரஸித்தமாயிருக்க, "மெலிவேனோ" என்று, க்லேசிக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி). யத்வா-"வேள்வலிசெய்ய" என்னவமைந்திருக்க, "ஓர்மீனாயகொடி" என்றதுக்குக் கருத்தாகவுமாம். (ஜீயர்வார்த்தை) ப்ரவேசத்தில் வார்த்தை.

அவன் நினையாமைக்கு ஹேதுவைக்காட்டுகிறதாகத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியிலித்யாதி. ... ... ... (௪)

மூ.—வாளாய கண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப
நாணாளும் நின்னினைந்து நைவேற்கோ மண்ணளந்த
தாளாளா தண்குடந்தை நகராளா வரையெடுத்த
தோளாளா என்றனக்கோர் துணையாள னாகாயே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மண் அளந்த தாளாளா | பூமியையளந்த திருவடிகளையுடையவனே! | வரையெடுத்த | கோவர்த்தநத்தைக் குடையாகவெடுத்துப்பிடித்த |
| தண்குடந்தை நகர் ஆளா | ப்ரமஹாரமான திருக்குடந்தையில்கண்வளர்ந்தருள்பவனே! | தோளாளா | திருத்தோள்களையுடையவனே! |
| | | வாளாயகண்பனிப்ப | வாள்போன்றகண்களிடைவிடாதுநீர்பெருக்கவும் |

(க) கக - அ - எ.

| | | | |
|---|---|---|---|
| பெல்றூலேகள் ய் பான் அரும் ப | மருதவானஸ்தநங்க ளில வைவர்ண்யம தோன்றவும் | நைவேற்குஎன் தனக்கு | வருந்துகின்ற அடியே னுக்கு |
| ந ணநா ம் | ப்ரதிதிநமும் | ஓர் துணையாள ன் ஆகாய் | ஒப்பற்ற ஸஹாயபூத னுகவேணும. (ரு) |
| நினைநினைந்து | ரக்ஷகனுன வுன்னை யே நினைத்துக்கொ ண்டு | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வாளாயவித்யாதி) †அத்தலை யித்தலையாய்த் தன்னைபெற வேணுமென்று நானசைப்பட்டு நோவுபடாநிறசுததான் தன்னைக் கொண்டருமைப் படுத்தினுனென்று சொல்லுங்கோளென்று தூதர்க்கு வார்த்தைசொல்லபபுக்கு, அது தான் போய், பாவநாபரகர்ஷததாலே அவன் முன்னே நின்ருனுகக்கொண்டு அவன்றனக்கு வார்தனைத சொல்லிச் செல்லுகிறது மேலிற் பாட்டுக்கள். ஸ்ரீராமாயணத்திற்படிபோலே யிருக்கிறதாயிற்று இதுவும். தூதர்க்கு வார்ந்தை சொல்லாநிற்கச்செய்தே, பாவநா ப்ரகர்ஷத்தாலே அவன்முன் ஸந்நிஹிதனுகக்கொண்டு அவனுக்கு வார்தனைசொல்லுகிருளிறே! (க) " க்ஷமஸேத்ம்மஹீபதே - க்ஷமஸே தம் மஹீபதே" என்னுமாபோலே.

(வாளாய கண்பனிப்ப) †அத்தலை யித்தலையானபடி. எதிர்த்தலையிலே காணக்கடவ கண்ணநீரிறே இவள் கண்ணிலே காண்கிறது. † பிறரைத் தோற்பிக்கைக் கீடான பரிகரமுண்டாயிருக்கக் கிடீர் நானிப்படிபட்டது. கையிலே ஆயுத மிருக்க முடிந்து கிடப்பாரைப் போலே. †அவன் போக வொருப்பட்ட ஸமயத்திலே, "போகாதே கொள்" என்று கண்ணலே விலங்கிட்டு அநுபவிக்கலாயிருக்க, லஜ்ஜையாலே கவிழ்ந்திருந்து, "கெட்டேன்" என்கிருள். † அபபோது அவனைக் கடாக்ஷித்து விட்டேனுகில் அவன்ருன் தூதுவிடவிருக்கலாயிற்றே. (வாளாயகண்பனிபப)†ஒராளுமொரு நோக்குமும் நேரான கண்கள்படு மெளிவரவே!. புலியாய்வைத்து உகிர்முறிந்தேன் என்கிருள். †திருத்தாயார் சொல்லுமாபோலே சொன்னுளே தன்னைத்தாமே ; †எல்லாரக்கு முள்ளது சொல்லலாயிருக்குமிறே. †அவன்ருன் "இதொரு கண்ணழகே" என்று சொல்லக் கேட்டிருககுமே! †அத்தலைக் குறுப்பான ஸ்வஸ்வரூபமும ப்ராபயாந்தர்க்கநமாயிற்று [illegible]. (மென்முலைகள் பொன்னரும்ப) முலைக்குக் காடிந்

(க) ரா - ஸு - ரு அ - ரு கூ.

யம் ஸ்வபாவமா யிருக்கச்செய்தேயும் மென்முலையென்கிறது - விரஹஸஹமல்லாதபடியாலே. விரஹஸஹமல்லாத முலைகள் பயலைமை பூக்க.

(வாளாய கண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப) †தன்னைக்கண்டு கொண்டிருக்க வமைந்திருக்கிறது காணுமிவள்தனக்கும். இவள்தனக்கு மமையும், அவன்றனக்கு மமையும். (௧)†"सर्वदेहिभिः- ஸர்வதேஹிபி:" இறே.

[आह्लादशीतनेत्राम्बुः - ஆஹ்லாதசீத நேத்ராம்பு:] பகவத்குணாநுபவஜநிதஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே குளிர்ந்த கண்ண நீருந் தானுமாயிருக்கை. [पुलकीकृतगात्रवान् - புளகீக்ருதகாத்ரவாந்]†த்ரிஸரமும் பஞ்சஸரமுமிட்டாற்போலே. [परगुणाविष्टः - பரகுணாவிஷ்ட:] †உள்ளீடுமுண்டாயிருக்கை. [द्रष्टव्यस्सर्वदेहिभिः - த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி:] இப்படியிருப்பானொருவனுளனானால், அவனைக் காண்கையாயிற்று சரீரபரிக்ரஹம் பண்ணிவைத்தால் ப்ரயோஜநம். [सदा द्रष्टव्यः - ஸதாத்ரஷ்டவ்ய:] இனி ஸதாதர்சநத்துக்கொருதேச விசேஷந்தேடிச் சோறு பொதிந்துகொண்டு அறுகாதப்பயணம் போகவேண்டா.† அவனுக்குப் †பொருளவையிற் பிரியவேண்டா, பிரிகிறதுதான் பொருளுக்காகவே. "இம்முத்தையும் பொன்னையும் கொள்" என்று பாரிததுக்காட்டினாற்போலேயாயிற்று கண்ணநீரும் உடம்பில் வைவர்ண்யமுமிருக்கிறபடி. (௨) "ஒண்முத்தும் பைம்பொன்னுமேந்தி" என்னக்கடவதிறே.

(நாணாளுமித்யாதி) வரவுதாழ்க்கைக்கு உன்னையொருநாள் நினைத்து மற்றொருநாள் மற்றொன்றை நினைக்கிறேனோ? (நாணாளும்) †ஒருநாள்நோவுபட்டு ஒருநாள் ஸுகித்திருக்கிறேனோ? (நின்னினைந்து நைவேற்கு)†என்னையன்றோ நீயறியாதது,†உம்மைநீரறியீரோ? "நம்மைப் பிரிந்தார் தரித்திருக்கமாட்டார்கள்" என்றிருக்கவேண்டாவோ. உன்னைக் கண்ணாடிப்புறத்திலுங் கண்டறியாயோ. (நின்னினைந்து நைவேற்கு) அநுஸந்தியா மடியேற்குமவளோநான். (௩) †"देहि मे - தேஹிமே" என்கிறவிது ஆற்றாமையிலே கிடக்கிறது.

(மண்ணளந்ததாளாளா) † அபேக்ஷையில்லாதார் தலைமேலே வைத்த திருவடிகள் இப்பொன்பூத்த முலைகளுக்கு அரிதாவதே! (ஓ

(௧) விஷ்ணுதத்வம். (௨) தி-வி-௧௧. (௩) பார-சாட-௧-௮-௮.

மண்ணளந்ததாளாளா) † ஆரபேக்ஷிக்கத்தான் நீ அன்றெல்லார்தலை மேலும் திருவடிகளை வைத்தது. ஆர்கண்ணில் கண்ணநீரும் ஆருடம்பில் வைவர்ண்யமும் கண்டுதான் திருவடிகளைக் கொண்டுவந்து வைத்தது. உன்னைப்பெறாதே விவர்ணமாயிருக்கிற இம்முலைமேலே திருவடிகளை வைத்தாலாகாதோ. (தண்குடந்தைநகராளா) அதற்குப் பிற்பட்டாருமிழவாமைக்கு வந்திருக்கிற தன்னேற்றந்தான் பெறலாகாதோ. (தண்குடந்தைநகராளா) †"இன்னமெல்லை நடப்பித்துக்கொள்வாராரேனுமுண்டோ" என்று ப்ரமஹரமான திருக்குடந்தையிலேவந்து சாய்ந்தபடி. (வரையெடுத்ததோளாளா) அங்ஙன், "பிற்பாடர்" என்கிற பொதுவன்றிக்கே, விசேஷித்து என் பருவத்திற் பெண்களையுமிடையரையும் ரக்ஷித்தவனன்றோ! (வரையெடுத்ததோளாளா) பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே தொலையப்புக, மலையையெடுத்துப் பரிஹரித்தானாயிற்று. †ஆஶ்ரிதர்க்குப் பணிசெய்த தழும்பாயாயிறுத் திருமேனியடையக் கிடப்பது; (க) "தழும்பிருந்த" இத்யாதி.

†"நாமைச் சிலர் கட்டுகையாவதென்? நாம் சிலர்க்குக் கட்டுண்கையாவதென்? இது பின்னை நாடறிகையாவதென்"? என்று அதனை மறைக்கப்புக்கான். ஒருதழும்பாகிலன்றோ உன்னால் மறைக்கலாவது, உன்னுடம்படங்கலும் ஆஶ்ரிதர்க்காகக் கார்யம்செய்தத்தால்வந்த தழும்பன்றோ என்கிறாள். (க) [தழும்பிருந்தசார்ங்க நாண் தோய்ந்தவாமங்கை] அழகிய திருக்கையானது ஜ்யாகிணகர்க்கசமாய்க்கிடக்கும்; அழகிய திருக்கையானது, ஸ்ரீசார்ங்கத்தைப் பிடிக்கையால்வந்த தழும்பைச்சுமந்தது; திருவடிகளானவை, சகடாஸுர நிரஸநம்பண்ணி அத்தால் வந்த தழும்பைச் சுமந்தது. இனி, * வீங்கோதவண்ணர் விரல் செய்ததென்னென்றால், [பூங்கோதையாளித்யாதி] கொத்தியையுடைத்தான ஒதம்போலேயிருந்துள்ள வடிவையுடையரானவருடைய திருவிரலானது, பிராட்டிக்காகவிறே சிறுக்கனுக்கு விரோதியான ஹிரண்யனைப் பிளந்துபொகட்டது; அப்படிப்பட்டவருங்கூட, விளைவதறியாதே "இதென்னாய்ப்புகுகிறதோ" என்று அஞ்சும்படி. ஹிரண்யன் மார்வைப் பிளந்துபொகட்டதழும்பிருந்த. உன்னையழித்து ஆஶ்ரிதர்க்காகப் பார்த்தநீ.(என்றனக்கோர் துணையாளனாகாயே)†அங்நொய்ய கோவர்

(க) க - திரு - உங.

த்தந கிரியைப்பொகட்டு, என்றாற்றாமையிலே†பாதியைச்சுமக்கவல்லையே! (துணையாளனாகாயே) என்றது - ஆகவேணுமென்றபடி. ()

அரு.— அஞ்சாம்பாட்டு. (வாளித்யாதி). இவ்வளவெல்லாம் தூதுவிட்டவள் இப்போது முன்னிலையாகச்சொல்லி நோவுபடுகையெங்ஙனேயென்ன; பேடிகாஸங்கதி யருளிச்செய்கிறார் (அத்தலையித்யாதி).

வ்யாக்யாதாவினுடைய ஈடுபாடு (அத்தலையித்யாதி வாக்யத்வயம்). தாத்பர்யம் (பிறைரயித்யாதி). கண்ணானது ஆயுதமாகிற வழியென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி). ஹார்த்தபாவமருளிச்செய்கிறார் (அப்போதித்யாதி). சப்தார்த்தம் (ஓராளுமித்யாதி). (க)“ குவளையங்கண்ணி ” (உ) “ பனிநெடுங்கண்ணீர்ததும்ப ” என்று திருத்தாயார் சொன்னாற்போலே என்று வ்யாக்யாதா அருளிச்செய்கிறார் (திருத்தாயாரித்யாதி). தாய்சொல்லிற்றைத் தான்சொல்லலாமோவென்ன வருளிச்செய்கிறார் (எல்லார்க்குமித்யாதி). தன் கண்ணழகு தான் கண்டபடியெங்ஙனேயென்ன (அவன்றானித்யாதி). தான்சொல்லப்போமோ வென்றதுக்குப் பரிஹாராந்தரம் (அத்தலைக்கித்யாதி).

“பனிப்ப” என்றும், “அரும்ப” என்றும் சொன்னத்தால் பலித்தது அழகி னெல்லை நிலத்தை யருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி). பகவதநுபவ பாருடைய வடிவு வைத்தகண் வாங்கவொண்ணாதிருக்குமென்கைக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி). ஆஹ்லாத சீதநேத்ராம்பு - பிந்துக்களிரண்டு பார்ஶ்வத்திலும் விழுகையாலும் புளகீக்ருத காத்ரனானுனென்று விவக்ஷித்து, த்ருஷ்டாந்தமருளிச் செய்கிறார் (த்ரிவாமுமித்யாது). முத்துத்தார்வடங்கள் குளிர்த்தியால் மயிர்க்கூச்சுண்டாகப் பண்ணுமென்று திருவுள்ளம். வெளியிலாபரணம் பூண்டாற்போலே கண்ணீராய், இதுக்கு ஹேதுவான பகவத்குணாநுபவம் உள்ளுக்காபரணமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உள்ளீடித்யாதி). வினைமேல் பிரிவென்றும், பொருள்மேல் பிரிவென்றும் சில பிரிவுண்டு; அதில், வினைமேல் பிரிவாவது - ப்ரணயிநியை விட்டுப் போகவேண்டும்படி வேறொரு கார்யத்தைக் குறித்துப் பிரிகை; பொருள்மேல் பிரிவாவது - ப்ரணயிநியோட்டை போகத்துக் குறப்பாக த்ரவ்யார்ஜநம்பண்ணப்போகை; அவற்றில் வினைமேல் பிரிவில்லை என்னுமதைக் கீழருளிச்செய்தாராய், பொருள்மேல் பிரிவும்வர ஸம்பாவனையில்லை என்னுமத்தை உபபாதிக்கைக்காக, இரண்டுவிதமான பிரிவுவர ப்ரஸக்தியில்லை என்கிறார் (அவனுக்கித்யாதி). (பொருளவையில்) பொருள்வினையென்று சொல்லப்படுமவையில்.

“நாளும்” என்றத்தை “நினைந்து” என்றத்தோடு கூட்டித் தாத்பர்யமருளிச்செய்து, “ நைவேற்கு ” என்றத்தோடேகூட்டித் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (ஒருநாளித்யாதி). “நின்” என்றதுக்குக் கருத்து

(க) உ - எ - க.　　　　(உ) தி - ௭ - கக.

(என்னேயித்யாதி). § ("நைவேற்கு" என்று - நைகிறவெமக்கு என்ருய், எமக்கு என்கிற பஹுவசநத்தால் தோற்றுகிற கௌரவத்தை யருளிச்செய்கிருர் (உம்மையித்யாதி).) (க) * யாசநாந்தம்ஹி கௌரவமன்ருே, நீ "துணையாளனுகாயே" என்று ப்ரார்த்திக்கிருயேயென்ன வருளிச்செய்கிருர் (தேஹீத்யாதி).

"மண்" என்றபதம் - லக்ஷணயா மநுஷ்யரைச் சொல்லிற்ருய், உட்கருத்தை யருளிச்செய்கிருர் (அபேக்ஷயித்யாதி). "ஓ" என்ற விஷாதத்தின்படியை விவரிக்கிருர் (ஆரித்யாதி). உட்கருத்தை யருளிச்செய்து, கீழ்ப்பதத்தோட்டை ஸமபிவ்யாஹார தாத்பர்ய கதநபூர்வகம் சப்தார்த்தமருளிச்செய்கிருர் (இன்னமித்யாதி). வரையெடுத்தமை தோளாலேயாயிருக்க "தோளாளா" என்று விசேஷிக்கையால், திருமேனியெல்லாம் ஆச்ரிதர்க்காகச் செய்தசெயலில் தழும்பேறினமை தோற்றுகையாலே விசேஷித்தாளென்று விவக்ஷித்தருளிச்செய்கிருர் (ஆச்ரிதர்க்கித்யாதி).

எடுத்த பாசுரத்துக்கு வ்யாக்யாநம்பண்ணுவதாகக் கீழ்ப்பாட்டோடு ஸங்கதிகாட்டுகிருர் (நம்மையித்யாதி). (அந்நொய்ய) அந்தநொய்ப்பமான. தன்நோயைப்பார்த்தால் மலை ஸூக்ஷ்மமென்னலாமென்று கருத்து, (பாதி) என்றது - "துணை" என்றத்தைப்பற்ற. ... ... ... (ரு)

மூ.—தாராயதண்டுளவ வண்டுழுத வரைமார்பன்
போரானைக் கொம் பொசித்த புட்பாக னென்னம்மான்
தேராரும் நெடுவீதித் திருவாலி நகராளும்
காராயனென்னுடைய கனவளையும் கவர்வானே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளானவை | தேர்ஆரும் | ரதநிலையையுடைத் |
| தாராய | மாலிகையாகிய | நெடு | பெரிதான [தாய் |
| தண்துளவம் | திருத்துழாயிலுள்ள (தேனும்சுண்ணமும்வாஸனையுங்கொண்டு) | வீதி | திருவீதியையுடைய |
| | | திருவாலிநகர் | திருவாலிநகரத்தில் |
| | | ஆளும் | நித்யவாஸம் பண்ணுநிற்பவனுய் |
| உழுத | சேருக்கின | | |
| வரைமார்பன் | அகன்றதிருமார்பையுடையனுய் | காராயன் | ச்ரமஹரமான திருமேனியையுடையனுமான ஸர்வேச்வரன் |
| போர்ஆனை | யுத்தோந்முகமானகுவலயாபீடத்தின் | | |
| கொம்புஒசித்த | தந்தத்தைமுறித்தவனுய் | என்னுடைய | தன்னேயேநினைந்துநையும் அடியேனுடைய |
| புள்பாகன் | பெரியதிருவடியைவாஹநமாகவுடையவனுய் [வனுய் | கனவளையும் | கையிலிட்டபொன்வளைகளையும் |
| என்அம்மான் | எனக்குஸ்வாமியான | கவர்வானே | அபஹரியாநிற்பனே. |

(க) § குண்டலிதம்பர்யாலோசநீயம்.

வ்யா.—ஆறும்பாட்டு. (தாராயவித்யாதி வரைமார்பன்) †தனக்கஸாதாரணமான திருத்துழாய்மாலையானது மதுவெள்ளமிட்டுச் சேறுயாயிற்றுத் திருமார்விருப்பது. †திருமார்வில் சாத்தின திருத்துழாய்மாலையில் தேனும் சுண்ணமும் பரிமளமும் புறப்பட்டுத் திருமார்வடங்கலும் வண்டலிட்டு வண்டுகளுழுது சேறுசெய்து கிடக்குமாயிற்று. இனி இவள் பொன்னரும்பின முலைகளைக்கொண்டுவந்து நடுகைக்கு நல்லவளவாயிற்று; இனி முலைகளைக்கொண்டுபோய் நடுமத்தனை. † ஆசையில்லாதாரே வேணும்போலே காணும் பார்வுக்கு; எப்போதுமொக்க அணைக்கலாம்படியாயிற்று அம்மார்விருப்பது. (போரானைகொம்பொசித்த) யுத்தோந்முகமான குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேந முறித்தவன். வருமிடத்தில் வழியில் ப்ரதிபந்தகந்தானுண்டோ. (புட்பாகன்) பெரியதிருவடியை வாஹநமாகவுடையவன். விரோதிநிரஸந ஸ்வபாவனுமாய், தான் வரும்போதே தூரத்திலே கண்டு விடாய் தீரலாம்படியான பரிகரத்தையுடையவன். (என்னம்மான்) †சோளேந்த்ரஸிம்ஹனிலிருப்பைக் காட்டியாயிற்று இவளை அநந்யார்ஹையாக்கிற்று.

(தேராரும்நெடுவீதி) தனக்கும் தன் பரிகரத்துக்கும் இணைந்து வருகைக்குவேண்டும் பரப்புப்போருமாயிற்று திருவீதி. (க)†*தன்னேராயிரம் பிள்ளைகளோடே வரலாமாயிற்று. (காராயன்) ஶ்ரமஹரமான வடிவைக்காட்டி பஞ்சலக்ஷம் குடியிற்பெண்கள் வளை கவர்ந்தவன், என்கையில் வளை பெறுவிடில் உண்டதுருக்காட்டாறு யிராநின்றான். †ஸமகாலத்தில் பிறவாதார் வளையுங் கொள்ளவேணுமோ? † இவனுக்கு ஒரூராக வளைகொண்டதுவும் உண்டதருக்காட்டுகிற தில்லைகாணும் இவள்கையில் வளை சேஷிக்கில். ... (௬)

அரு.—ஆறும்பாட்டு. (தாரித்யாதி). கீழ்ப்பாட்டில் "துணையாளனாகாயே" என்று முன்னிலையாகச் சொல்லாநிற்கச்செய்தேயும் அது உருவு வெளிப்பாடுமாத்ரமாகையாலே கைவளைகழலக் கண்டபடியாலே, முன்னிருந்தவன் கழற்றிக்கொண்டு மறைந்தானென்று தன்னிலேதான் நொந்துபடுகிறாளென்று ஸங்கதி.

"தண்டுளவவண்டு" என்னவமைந்திருக்க, "தாராய" என்றத்தாலே - (௨) "மதுவிரிதுழாய்முடி" என்று நிருபகமாயிருக்குமென் றருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி). சேறுகைக்கு மண்வேண்டாவோவென்ன வருளிசெய்கி

(க) பெரி-திரு-௩-க-க. (௨) தி-வாய்-க0-௬--௪.

ருர் (திருமார்விலித்யாதி). இளமுலை நடுமத்தனையானால் நடலாகாதோ, "வளைகவர்வானே" என்று நோவுபடவிடுவானென்னென்ன வருளிச்செய்கிருர் (ஆசையித்யாதி). இதுசாடு: ஆசையுடையனானலாகாதோ, ஆசையில்லாதாரே வேணுமோ என்று த்வநி. யத்வா - ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்னுமாசையில்லாத வண்டேயாகவேணுமோ என்னும் த்வநியாகவுமாம். "புட்பாகன்" என்ற பதஸமபிவ்யாஹார தாத்பர்யம் (சோளேந்த்ரேத்யாதி). ஶ்ரீசத்ருஞ்ஜயன் என்றாற்போலே, சோளேந்த்ரஸிம்ஹனென்று நம்பெருமாளானைக்குத் திருநாமம். (க) "[Grantha] - கஜேந மஹதா யாந்தம்" என்று அயோத்யா ஜநங்களை ஈடுபடுத்தினாற்போலே, கோயில்பெருமாளும் அரங்கன் திருமுற்றத்தடியாரை ஈடுபடுத்துவர்; அப்படியே இவளும் பெரிய திருவடிமேலிருப்பி லீடுபட்டாளென்று கருத்து.

ஆயன் என்றபதத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிருர் (தன்னேரித்யாதி). "வளையும்" என்ற சகாரதாத்பர்யம் (ஸமகாலத்திலித்யாதி). வ்யாக்யாதாவினீடுபாடு (இவனுக்கித்யாதி). ... ... ... ... (௬)

மூ.—கொண்டரவத் திரையுலவு குரைகடல்மேல் குலவரைபோல்
பண்டரவி னணைக்கிடந்து பாரளந்த பண்பாளா
வண்டமரும் வளர்பொழில்சூழ் வயலாலி மைந்தா என்
கண்டுயில்நீ கொண்டாய்க்கென் கனவளையுங் கடவேனே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பண்டு | மஹாபலிமுதலானவர்களால் இப்பூமிக்கு அநர்த்தமுண்டாவதற்கு முன்னே | பாரளந்த | பூமியை அளந்த |
| அரவம்திரைஉலவு | கோஷத்தையும் அலைகளையுமுடைய | பண்பாளா | நீர்மையையுடையவனே! |
| குரைகடல்மேல் | பரந்த திருப்பாற்கடலில் | வண்டு அமரும்வளர்பொழில் சூழ் | வண்டுகள்படிந்து ஓங்கின மரச்சோலைசூழ்ந்த |
| அரவினணை | திருவநந்தாழ்வான் மேலே | வயல் | கழனியையுடைய |
| குலவரைபோல் | ஓர்பெரியகுலபர்வதம் சாய்ந்திருந்தாற்போல்கிடந்து | ஆலி | திருவாலியிலிருக்கிற |
| கொண்டு | அத்தேசத்தைத் திருவுள்ளத்திலே பாங்காகக்கொண்டு (பின்பு அம்மஹாபலியால் அநர்த்தம்விளைந்தவாறே) | மைந்தா | யுவாவானவனே! |
| | | என்கண் துயில் | என் தூக்கத்தை |
| | | நீகொண்டாய்க்கு | முற்றுமபஹரித்தவனுக்கு |
| | | என்கனவளையும் | என்கையிலுள்ளபொன்வளையும் |
| | | கடவேனோ | இழக்கக்கடவேனோ. |

(க) ரா-அ-௨-௨௨.

வ்யா.—ஏழாம்பாட்டு. (கொண்டு) ரக்ஷணத்துக்குப் பாங்காய் ஆர்த்தருடைய கூக்குரல் கேட்கும் தேசமிதுவென்று திருவுள்ளத்திலேகொண்டு. †ஆரவாரத்தை யுடைத்தாய்-கோஷியா நிற்பதாய், திரைகளானவை ஸஞ்சரியாநிற்பதாய், பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே ஒருகுலகிரி சாய்ந்தாற்போலேயாயிற்றுத் திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறபடி. குரையென்று-பரப்புக்குப்பேர். அக்கடல் பாழ்தீரும்படி ஒருகுலகிரி சாய்ந்தாற்போலே. (பண்டு) மஹாபலிபோல்வாரால் பூமி நோவுபடுவதற்கு முன்பாயிற்று அப்படுக்கையில் கண்ணுறங்குவது. (பாரளந்தபண்பாளா) படுக்கையைவிட்டுவந்து இத்தையடைய அளந்துகொண்டானாயிற்று. ஆக, மஹாபலியாலே அபஹ்ருதமான பூமியைமீட்டு இந்த்ரனுக்குக் கொடுத்த நீர்மையை யுடையவனே!.

(வண்டமருமித்யாதி) அந்நீர்மைக்குப் பிற்பாடரானரு மிழவாமைக்காகவாயிற்றுத் திருவாலியிலேவந்து நிற்கிறது. பரிமளம் படிந்தாற்போலே வண்டுகள்படிந்து மதுபாநம் பண்ணுநின்றுள்ள ஓங்கின பொழிலாலே சூழப்பட்டவயலை யுடைத்தான திருவாலியிலே நிற்கிறவனே! திருப்பாற்கடலில் நின்றும் ஸ்ரீவாமநனாயவதரித்து பூமியையகப்படுத்திக்கொண்டாற்போலே யாயிற்று திருவாலியிலே வந்து நிற்கிற தன் யௌவநத்தைக்காட்டி இவரையகப்படுத்தினபடி. (என் கண்டுயில் நீ கொண்டாய்க்கு) திருவாலியிலே உத்தேஸ்ய வஸ்து ஸுலபமாயிற்றென்றவாறே, கண்ணுறக்கம் குடிபோயிற்றாயிற்று. (என்கனவளையுங்கடவேனோ) என்†னுடம்பிலுள்ளது வேணுமாகில் கொள்ளுகிறாய். †நான் பொன்னிட்டுக் கொண்டவளையிலென்னப்ராப்தியுண்டு. †அவனும் †பொன் கொடுத்திறே கொண்டுபோகிறது. † இவனுக்கும் இவளுடம்பிலுள்ளது கொள்ளும்போது இவள் * மேலெழுத்திட வேண்டாகாணும். ஸ்வாபாவிகமானத்தோடு ஔபாதிகமானத்தோடு வாசியின்றிக்கே, என்னதென்னுமித்தனையோ நீ கொள்கைக்கு வேண்டுவது. †அவனித்தை விரும்பப்புக்கவாறே என்னது என்று ஒருதலை தானும் பற்றுகிறாள். (எ)

* "மேலெழுந்தது வேண்டாகாணும" என்று சில ஸ்ரீகோசங்களில் பாடம். அதுக்கநுகுணமாக, மேலெழுந்தவளையைக்கொள்ளுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவனுக்குமித்யாதி வாக்யத்வயத்தாலே). மேலெழுந்தது வேண்டாகாணுமென்றது - ஸாமாந்யமானதாகாது, ப்ராத்யமான வளையாகவேணுமென்றபடி": என்று அரும்பதாந்தரம்.

**அரு.**—ஏழாம்பாட்டு. (கொண்டித்யாதி). கீழ்ப்பாட்டிலே, "கனவளையுங் கவர்வானே" என்று தன்னிலே நொந்தவாறே, கழற்றிக்கொண்டு போனவளையைக் குலுக்கிக்கொண்டு முன்னே தோற்ற, அவனைப்பார்த்து, என்வளைக்கு நான் கடவளல்லேனோ என்று பறிக்கத் துடங்குகிறாளென்று ஸங்கதி.

விவரணம் (இவ்விடமித்யாதி). "அரவம்" என்றதினர்த்தம் (ஆரவாரத்தை) என்றது.

(உடம்பிலுள்ளது) நித்ரை. கடவளல்லேனோ என்று சப்தார்த்தம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நர்ணித்யாதி). ஸ்த்ரீதநமான பொன்னிட்டுக்கொண்டவளையை அவன் கொள்ளக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அவனுமித்யாதி). (பொன்கொடுத்து) வைவர்ண்யத்தைக்கொடுத்து. ஆகில், இவளிசைவு வேண்டாவோவென்ன (இவனுக்குமித்யாதி). ப்ராப்தனாகையால் அவன் பொன்னிட்டே அவள் கைவளையைக்கொண்டானென்று கருத்து. அவனப்படி கைக்கொண்டால் இவள் என்னது என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி). ... ... ... (எ)

மூ.—குயிலாலும் வளர்பொழில்சூழ் தண்குடந்தைக் குடமாடி
துயிலாத கண்ணிணையேன் நின்னினைந்து துயர்வேனோ
முயலாலு மிளமதிக்கே வளையிழந்தேற் கிதுநடுவே
வயலாலி மணவாளா கொள்வாயோ மணிநிறமே. (அ)

| பதம். | உரை. |
|---|---|
| குயில் ஆலும் | குயில்கள்பாடாநின்ற |
| வளர்பொழில் சூழ் | ஓங்கினசோலைசூழ்ந்த |
| தண்குடந்தை | குளிர்ந்ததிருக்குடந்தையில்வர்த்தியாநிற்கிற |
| குடமாடி | குடக்கூத்தாடினவனே! |
| துயிலாத | உறக்கங்கொள்ளாத |
| கண்ணிணையேன் | கண்ணிணையுடைய அடியேன் |
| நின்நினைந்து | உன்னையே நினைத்துக்கொண்டு |
| துயர்வேனோ | துக்கக்கடவேனோ; |
| முயலாலும | தன்னுடம்பில்துள்ளுகிறமுயலையுடையதாய் |
| இளமதிக்கே | பருவம்நிரம்பாத சந்த்ரனுக்கே |
| வளையிழந்தேற்கு | வளைகளையிழந்தவடியேனுக்கு |
| வயலாலிமணவாளா | கழனிசூழ்ந்ததிருவாலியிலுள்ளஸ்வாமியே! |
| இதுநடுவே | இப்பாதக வர்க்கத்தின்நடுவே (நீயும்வந்து) |
| மணிநிறமேகொள்வாயோ | அழகியநிறத்தையும்கைக்கொண்டு துன்பத்தைப்பண்ணுவாயோ. (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (குயிலாலு மித்யாதி)† அவ்வூரில்குயில்கள் ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணாநிற்குமாயிற்று. †அவ்வூரில் குயில்களானவை மதுபாநம்பண்ணிக்களித்தாலியா நிற்குமாயிற்று.†இவ்வூரில் குயில்களொன்றுமிறே உறங்கிக்கிடக்கிறது. இடைப்பெண்களடையக் காணலாம்படிமன்றிலே குடக்கூத்தாடி தன்னழகை ஸர்வஸ்வதாநம் பண்ணினவன் பிற்பாடரிழவாமைக்காகத் திருக்குடந்தையிலே ஸுலபனானனென்றவாறே உறக்கம் குடிபோயிற்றாயிற்று. அவன் ப்ரத்யாஸந்நனானனென்றவாறே உறக்கம் குடிபோயிற்றாயிற்றிவளுக்கு. †உறங்காமைக்கு இரண்டு லக்ஷ்மணர்களைப்போலேயாயிற்றுக் கண்களிரண்டும். இளையபெருமாள் பிறந்த முஹூர்த்தத்திலேயாயிற்று இவள் கண்களும் பிறந்தது. (க) † "ஜக்ஷா-ஜஹௌ" என்று ஒருநாளாக விடவேண்டாவாயிற்று.†ஆந்தர த்ருஷ்டியுமுறங்காதபடி பண்ணவேணுமோ. இக்கண்ணுக் கிலக்காகாவிட்டால் உட்கண்ணுக்கிலக்காகவேணுமோ. (உ) "நெஞ்சென்னுமுட்கண்" என்னக்கடவதிறே. அணைக்கவொட்டா விட்டால் அகவாய் பெரியதிருநாளாய்ச் செல்லவேணுமோ. (துயர்வேனோ) மறந்து † பிழைத்தாலோ நாங்கள்.

(முயலாலுமித்யாதி)†நீ †கைதொடனாய் நலியவேண்டும்படியோ என் தசை யிருக்கிறபடி.†தன் கறைகழுவவும் மாட்டாதே தன்குறை பரிஹரிக்கவும் மாட்டாத சந்த்ரனுக்கு வளையிழந்தன்றோ நானிருக்கிறது. †தன்னுடம்பிலே துள்ளுகிற †முயலைப்போக்கவும் மாட்டாதே, பருவம் நிரம்பாதேயிருக்கிறவனுக்கு வளையிழந்தேற்கு. (இதநடுவேயித்யாதி) †விபூதியையிட்டு நலிகையன்றிக்கே, நீரும் தூசியேறப் புக்கீரோ; - †போரிலே த்வந்த்வயுத்தம் பண்ணாநிற்கச் செய்தே நடுவேவந்து பொருவாரைப்போலே. †விடுநகமும் சம்மட்டியுமிட்டு நலியாநிற்க "அதுபோராது" என்று உடையவன்தானே நலியுமாபோலே. விபூதியையிட்டு நலிகைதவிர்ந்து நீதானே கைதொடனாய் நலியப்பார்த்தாயோ. (கொள்வாயோமணிநிறமே) அவன் கூடவிருந்தபோது, "இதொரு நிறமே!" என்று வாய்புலற்றக்கேட்டிருக்குமே; அல்லது, தன்வடிவைத்தானே ச்லாகிக்கிறாளன்றே.(அ)

(க) ரா.     (உ). பெரியதிருவ-உ.அ.

அ௩.—எட்டாம்பாட்டு. (குயிலித்யாதி) கீழ்ப்பாட்டில், "என் கனவளையும் கடவேனே" என்று தானுமொருதலைபற்றி மன்றுடாநிற்குமளவிலே, சந்த்ரோதயமாக, அவனிவளுக்கு உத்தீபகனாய் நலியவே கைவளைகழன்று வீழ, அவ்வளவிலும் அவளைக்கொண்டுபோகாதே முன்னிலையாய்த் தோற்றி நின்றபடியைக்கண்டு நிறமிழக்கிறவளவுமாய், அவனைப்பார்த்து, நீ "நிறக் கேடாக்கிக்கொள்வாயோ" என்றுசொல்லுகிறாளென்று ஸங்கதி.

(அவ்வூரில்) திருக்குடந்தையிலென்றபடி. ஹேதுகதநபூர்வகம் விவரிக்கிறார் (அவ்வூரிலித்யாதி). உட்கருத்து (இவ்வூரிலித்யாதி). துயிலாதநான் என்னவமைந்திருக்கவும் கண்ணிணைகள் துயிலாதவென்று விசேஷித்ததுக்கு ஸத்ருஷ்டாந்தம் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உறங்காமைக்கித்யாதி). காண்கையிலாசை கண்களுக்கு ஸ்வாதந்த்ர்யேண பிறந்ததென்று கருத்து. இளையபெருமாள் பிறந்த முஹூர்த்தத்திலே பிறந்தனவாகில், பிறந்தநாள் தொடங்கி உறங்காதவரன்றிக்கே காட்டுக்கெழுந்தருளின போதன்றோ நித்ரையின்றிக்கேயிருந்ததென்ன; ஆம், இங்கு விசேஷமுண்டென்று விசேஷத்தையருளிச்செய்கிறார் (ஜஹாவித்யாதி). "நினைந்து" என்றபதத்துக்குத் தாத்பர்யம் (ஆந்தரேத்யாதி வாக்யசதுஷ்டயமும்). (பிழைத்தாலோ) பிழைத்தாலாகாதோவென்றபடி.

"இளமதிக்கே" என்கிற அவதாரண தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீயித்யாதி). (கைதொடனாய்) ஸஹாயமாய், மதிக்குவிசேஷணமிட்டதால் பலித்தவர்த்தமருளிச்செய்கிறார் (தன்னித்யாதி). வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (தன்னுடம்பிலேயித்யாதி). (புயலை) சசத்தை. (விபூதி) என்றது - சந்த்ரனை. கீழ்வாக்ய விவரணம் (போரிலேயித்யாதி). (விடுகம்) விரல்கிட்டி. ... (அ)

மூ.—சிலையாளா நின்வணங்க வேண்டாயே யாகிலுமென்
முலையாள வொருநாளுன் னகலத்தா லாளாயே
சிலையாளா மரமெய்த திறலாளா திருமெய்ய
மலையாளா நீயாளவளை யாளமாட்டோமே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சிலையாளா | ஸ்ரீகோதண்டக்கையனே! | என்முலையாள | என்முலைகளாட்செய்யும்படி |
| மரமெய்ததிறலாளா | மராமரம் வேரோடு விழக்கணைவிடவல்லவனே! | ஒருநாள் | ஒருநாளாகிலும் |
| திருமெய்யமலையாளா | திருமெய்யத்தில் கணவளருமவனே! | உன் அகலத்தால் ஆளாய் | உன் அகன்றமார்பாலணைத்து என்னை நிர்வஹிக்கவேணும்; |
| சிலையாளாநின் வணங்க | நான் அநந்யப்ரயோஜனையாயுன்னையாஶ்ரயிக்க | நீ ஆள | நீ பரிக்ரஹித்தபின் |
| வேண்டாயேஆகிலும் | வேண்டேனென்றிருந்தாயேயாகிலும் | வளையாளமாட்டோமே | வளைகளை நிர்வஹிக்க சக்தி தேடமாட்டோமே. (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கிலையாளாவித்யாதி) †ஸத்தையுள்ள தனையுமவன் திருவடிகளிலே வணங்கி வர்த்திக்கு மிதுவேயாயிற்று ஸ்வரூபத்தோடு சேர்ந்த செயலாவது. (கின்னித்யாதி)†அதப்படியே யானாலும், "இவனுமிப்பேற்றைப் பெறுவான்" என்று அவன் கினைக்கிலிறே அது ஸித்திப்பது. (கிலையாளா கின்வணங்க §(வேண்டாயேயாகிலும்)) †கிடைக்கில்பெறவேண்டியிருப்பது இதுகாணும். †கடக்ககின்று †ஒரு ப்ரயோஜநங்களைக்கொண்டு போகையன்றிக்கே கிட்டகின்று அவன்திருவடிகளிலே கித்யகைங்கர்யம் பண்ணவாயிற்று ஆசைப்படுவது.†ப்ராஹ்மணர் பிச்சேறினாலும் ஓத்துச்சொல்லுமாபோலே, தலைமகளான ஸமயத்திலும் சேஷத்வாநுரூப வ்ருத்தியையே யாசைப்படுகிறாளிறே, (கிலையாளா கின்வணங்க) என்றதாலே ப்ராப்ய கிஷ்கர்ஷம் பண்ணிற்று ; (வேண்டாயேயாகிலும்) என்கையாலே ப்ராபககிஷ்கர்ஷம் பண்ணிற்று. அவன் வேண்டியிராதவன்று இப்பேறு கிடையாதிறே.† இதுநமக்கு உபேக்ஷாவிஷயம்-†வேம்பென்றிருந்தாயே யாகிலும். (என்முலையாள) நான் ஸதைதை கொண்டு கிர்வஹித்தேனும்படியாக; (க)†"கொங்கைகிளர்ந்துகுமைத்து" என்று க்ஷாமகாலத்தில் ப்ரஜைகள் "சோறு சோறு" என்று அலைக்குமாபோலே இம்முலைகளுக்காற்ற மாட்டாதே நோவுபடுமது தவிர்ந்து என்னுடைய ஸ்த்ரீத்வங்கொண்டு கிர்வஹித்தேனும்படி. (என்முலையாள) மத்தகஜததைக்கட்டி ஆள்வாரைபபோலே என்முலையை நான் கிர்வஹிக்கைக்காக. †நமக்கபேக்ஷையின்றிக்கே யிருக்கச்செய்தே உன் ப்ரயோஜநத்துக்காக நம்மையிப்படி செய்யச்சொன்னாலது செய்யப்போமோ வென்ன, (ஒருநாள்) கித்யமாய்வருமது தவிருகிறது; ஒருநாள் பிறருகந்தவகைகளிலே பரிமாறினாலாகாதோ. (ஒருநாள்) பலநாள்வேணுமென்றிருக்கவேண்டா, †ஒருநாளாகிலுமமையும். †அவ்வொருநாள் என்னெஞ்சிலில்லையாகில செய்யப்போமோவென்ன, (உன்கைலத்தாலாளாமே) உன்னெஞ்சை நீ உகந்தார் பக்கலிலேவைத்து உடம்பைக் கொண்டணையவமையும்.

† நெஞ்சை கினைத்தார்க்கு வைப்பது, வேறு மார்வாலெங்களை யணைவது, இப்படிதான் செய்யவேண்டுகிறதென், † வேண்டியிராத விஷயத்திலே †யொருநாள்தான் செய்யவேண்டுவதென்னென்ன, (சிலையாளா) என் †ஆர்த்ததவகி கேளாமைக்காக. (உ)†"[illegible]

---

§ குண்டலிதம் க்வாசித்கம். (க) நா-தி-ரு-எ. (உ)

க்ஷத்ரியைர்த்தார்யதே" என்கிறபடியே ஆர்த்தத்வநி கேளாமைக் கன்றோ நீர்விற்பிடித்துக் கொண்டிருக்கிறது. நாம் விற்கொண்டு எங்கே 'கார்யங்கொள்ளக்கண்டு வளைக்கிறதென்ன; (மரமெய்ததிறலாளா) உன்னை விஸ்வஸியாதார்க்கும் மழுவேந்திக் கார்யம் செய்யுமவனன்றோ; உன்னையாஸ்ரயித்த மஹாராஜரார்த்தி போக்குகைக்காக மராமரங்களையெய்து மழுவேந்திக் கொடுத்திலேயோ. பின்னை நீரும் அவ்வவதாரத்திலே வந்து உதவிற்றிலீரே யென்ன; (திருமெய்யமலையாளா) அவ்விழவு தீர்க்கைக்காக வன்றோ திருமெய்யத்திலே வந்துசாய்ந்தருளிற்று.† இருந்தபடியால் உன் பரிக்ரஹமாகையும் கையில் வளைதொங்குகையு மென்றொரு பொருளுண்டோ? †இப்போது தன்னாற்றாமையாலே யொன்றைச் சொல்லுகிறாளத்தனைபோக்கி, ஒருகாலும் கையில் வளைதொங்குகைக்கு விரகில்லைகாணும். கிட்டினால் தானேஹர்ஷத்தாலே பூரித்து நெரிந்திற்றுப்போம்; பிரிந்தானாகில், தானேகழன்றுபோம். † உன்னுடைய பரிக்ரஹமாய் எங்களுடைய ஸ்த்ரீத்வங்கொண்டு நோக்குகையென்றொரு பொருளுண்டோ? †அம்மங்கியம்மாளுடைய சரமதசையிலே நஞ்சீயரறியவெழுந்தருளினவர், அவர்படுகிற க்லேசங்களைக்கண்டு, "இங்ஙனத்தை ஆசார்யஸேவைகளும் பகவத் குணங்களைக்கொண்டு போதுபோக்கினபடிகளெல்லாங் கிடக்க அல்லாதாரைப்போலே † இப்படிபடவேண்டுவதே!" என்ன, "நீயாளவளையாள மாட்டோமே" என்றன்றோ-பகவத்பரிக்ரஹமானால் க்லேசப்பட்டே போமித்தனைகாணும்" என்றார். †புறப்பட்ட பின்பு, நஞ்சீயர் பிள்ளையைப்பார்த்து, "முடிகிற விவ்வளவிலேயு மிவ்வார்த்தை சொல்லுகிறது விஸ்வாஸத்தின் கனமான பாவபந்தத்தி னூற்றமிறே" என்றருளிச்செய்தார்.

ஆக, இப்பாட்டால் - ப்ராப்ய நிஷ்கர்ஷமும், ருசியுடையார் படியையும், சரண்யன்படியையும், அவனுக்கு ரக்ஷகத்வம் கண்ணழிவற்றிருக்கிற படியையும், இத்தலையில் அபேக்ஷை குறைவற்றிருக்கிறபடியையும், இவையெல்லாவற்றையும் சொல்லுகிறது. (நிலையாளா) என்கையாலே - நித்யகைங்கர்யம் பெறுகையே ப்ராப்யமென்னுமிடஞ்சொல்லுகிறது; (வேண்டாயேயாகிலும்) என்கையாலே - உபாயபாவமு மவன்பக்கலிலே யென்னுமிடம் சொல்லிற்று. (என்முலையாள ஒருநாள்) என்கையாலே-ருசியுடையார் படிசொல்லிற்று; (சிலையாளா) என்கையாலே - சரண்யதைசொல்லிற்று; (மரமெய்த)

ஏன்கையாலே - ரக்ஷகத்வம் கண்ணழிவற்றிருக்கிறபடியையும், இத் தலையிலபேக்ஷை குறைவற்றிருக்கிறபடியையும், இவையெல்லா வற்றையும் சொல்லுகிறது. ... ... ... (சு)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (நிலையாளாவித்யாதி) கீழ்ப்பாட்டில், "கொள் வாயோ மணிநிறமே" என்னச்செய்தேயும், அவனிவளுக்கு முன்னிலையாய்த் தோற்றின மாத்ரமாகையாலே ஒருபடியே தோற்றிக்கொண்டுநிற்க, அது முன்னிலையாகத்தோற்றினமாத்ரமென்றறியாதே அவன்றானே தன்னை வேண்டாதிருக்கிறானாகக்கொண்டு, தான் திருமுலைத்தடங்கள் அணைக்கை யிலே கணிசிக்க, செய்வதறியாதே அவனைக் கலவியிரக்கிறாளென்றுஸங்கதி.

நிலைநின்ற ஆளாய்க்கொண்டு நின்னைவணங்கி நித்யகைங்கர்யம்பண்ண உனக்குவேண்டாவிட்டாலும் என்று சப்தார்த்தமாய்த் தாத்பர்யமருளிச்செய் கிறார் (ஸத்தையித்யாதி). கைங்கர்யத்தை வேண்டுமவர் தாமாயிருக்க அவனை "வேண்டாயேயாகிலும்" என்கிறதென்னென்ன வருளிச்செய்கிறார் (அது வித்யாதி). "ஆகிலும்" என்றதுக்குத் தாத்பர்யம் (கிடைக்கிலித்யாதி), நிலை யாளாய் வணங்குகையே பரமபுருஷார்த்தம், அதுகிடையாமையால், "அக லத்தால் ஒருநாள் ஆளாய்" என்கிறாளென்று கருத்து. விவரணம் (கடக்க வித்யாதி). (ஒருப்ரயோஜநம்) என்று - ஸ்வார்த்தமான காதாசித்க ஸம்ஶ்லே ஷமென்றபடி. நாயிகையாயிருக்குமிவளுக்கு ஸம்ஶ்லேஷத்தை ப்ரார்த்திக் கையே புருஷார்த்தமாமித்தனைபோக்கி, சேஷவ்ருத்தியை யபேக்ஷிக்கக் கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ப்ராஹ்மணரித்யாதி). ப்ராஸங்கிகமாக ப்ரமேயசிக்ஷைசெய்தருளி, வேண்டாயாகிலுமென்னாதே, "வேண்டாயே" என்கிற ஏவகாரத்துக்குக் கருத்தருளிச்செய்கிறார் (இதுநமக்கித்யாதி). (வே ம்பு) என்றது - தாத்பர்யாந்தரம். அதாவது - த்யாஜ்யமென்றபடி. கீழ்வாக் யத்தை விவரிக்கிறார் (கொங்கையித்யாதி). மேலுக்கவதாரிகை (நமக்கித் யாதி). (உபேக்ஷாவிஷயம்) என்றத்தைப்பற்ற, "ஒருநாள்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்து, (வேம்பு) என்ற தாத்பர்யாநுகுணமாக, "ஒருநாள்" என்றதுக்கு உக்திப்ரத்யுக்திரூபேண வருளிச்செய்கிறார் (வேண்டியித்யாதி). (வேண்டியிராதவிஷயத்தில்) வேம்பானவிஷயத்தில். (ஒருநாள்தான்) என் றது - ஒருநாளாகிலுமென்றபடி. (ஒருநாளாகிலுமமையும்) என்றது-உனக்கு வேம்பானாலும் வேப்பங்குடிநீர்போலே ஸ்வீகரிக்கலாமென்றபடி. இத்தால் - உனக்குக் கைதவம், எனக்கு இனிதானத்தைச் செய்யவேணுமென்று ப்ரார்த்திக்கிறாளென்றதாயிற்று. பரார்த்தமாகவாகிலும் செய்யவேணும் என் னும் நினைவு வேண்டாவோ என்னும் சங்கையையநுவதித்து, "அகலத்தால்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வொருநாளித்யாதி).

அநுவாதபூர்வகம் மேலுக்கவதாரிகை (நெஞ்சையித்யாதி). கீழ்ப்பண் ணின ப்ரஶ்நத்துக்குத்தரம் (ஆர்த்தத்வநி கேளாமைக்காக) என்றது. இவ்

வார்த்தம் இந்தபதத்தில் பலிக்குமோவென்ன வருளிச்செய்கிறார் (க்ஷத்ரியை ரித்யாதி). "நீயாள" இத்யாதிக்குக்கருத்து (இருந்தபடியாலித்யாதி). (இருந்தபடியால்) என்றது - நீமெய்ய மலையாளனாய்வைத்தும் என்முலையாள ஒருநாளாளாதே யிருந்தபடியாலென்றபடி. நீ யென்னையாளவும் நான்வளையாளவும் இருவரும் மாட்டோமேயென்று சப்தார்த்தமாகையால், அவனிவளையாளமாட்டினால், அத்தால் இவள் இவ்வளையை ஆளவல்லளோவென்ன; வ்யாக்யாதா பரிஹரிக்கிறார் (இப்போதித்யாதி). ஆற்றாமையால்சொன்ன பாசுரமத்தனையென்று கருத்து. நான் திருமெய்யமலையாளனாய் உன்போல்வார்க்கு வந்திருக்கிறேனென்றறிந்துவைத்து, "உன்னகலத்தாலாளாயே" என்று நாணமற்றுச்சொல்லுகை உன் ஸ்த்ரீத்வத்துக்குச் சேருமோவென்னும் சங்கைக்குப் பரிஹாரமாக, "நீயாள வளையாளமாட்டோம்" என்கிறாளென்று தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உன்னுடையவித்யாதி). நீயாளுகையாலே நாங்கள் வளை யாண்டிருக்கமாட்டோமென்று சப்தார்த்தம். இத்தால் - குணாதிக விஷயமாகையால் ஆறியிருக்கமாட்டோமென்கை. "வளையாளமாட்டோமே" என்கிற அவதாரணத்துக்கு - பகவத்பரிக்ரஹமானார்க்கு துகேமேசேஷிக்குமென்றுகருத்தாய், அதுக்கு ஸம்வாதம்காட்டுகிறார் (அம்மங்கியித்யாதி). (இப்படிபடவேண்டுவதே) என்றது - ஆசார்யஸேவை,பகவத்குணாநுபவம், இவையேகாலக்ஷேபமாயிருக்கிற உமக்கு, அதுக்கவகாசமில்லாதபடி ஸம்ஸாரிகளைப்போலே நோவுபடவேண்டிற்றேயென்கை. "க்லேசப்பட்டேபோமித்தனை" என்னப்போமோவென்ன ; பாவபந்தத்திலுறைப்பாலே அங்ஙன்சொன்னாரென்று கருத்தை வெளியிட்டபடியையுங்காட்டுகிறார் (புறப்பட்டவித்யாதி).

மூ.—மையிலங்கு கருங்குவளை மருங்கலரும் வயலாலி
நெய்யிலங்கு சுடராழிப் படையானை நெடுமாலைக்
கையிலங்கு வேற்கலியன் கண்டுரைத்த தமிழ்மாலை
ஐயிரண்டு மிவைவல்லார்க் கருவினைக ளடையாவே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கையிலங்குவேல்கலியன் | கையிலேப்ரகாசிக்கிறவேலையுடையஆழ்வார் | சுடர் | புகரையுடைய |
| மைஇலங்குகருங்குவளை | அஞ்சநம்போல்விளங்குகிறகறுத்தகுவளைமலர்கள் | ஆழிப்படையானை | திருவாழியைக்கையிலேந்திய |
| மருங்கு | பர்யந்தத்திலே | நெடுமாலை | ஸர்வேஶ்வரனை |
| அலரும் | விகஸியாநின்றுள்ள | கண்டு | எதிரில்கண்டு |
| வயல் | கழனிசூழ்ந்த | உரைத்த | அருளிச்செய்த |
| ஆலி | திருவாலியிலேயிருக்கிற | தமிழ்மாலைஐயிரண்டும்இவை | தமிழ்த்தொடைபத்தும்நன்றாக அறிய |
| நெய் | கூர்மையுடைத்தாய் | வல்லார்க்கு | வல்லவர்களுக்கு |
| இலங்கு | விளங்காநின்ற | அருவினைகள் அடையாவே | துஷ்கர்மங்கள் சேரமாட்டா. (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மையிலங்கித்யாதி) † இதுவாயிற்று பயிரேறுதேதரிசான நிலமிருக்கும்படி. †ஊரில் தரிசுகிடக்கும் நிலமிருக்கும்படியிதுவாயிற்று.†மையானது மிகவும் விளங்காநின்றுள்ள கறுத்த குவளைப்பூக்களலர்ந்து கிடக்குமாயிற்று பர்யந்தங்களடைய. † நாள்செல்ல நாள்செல்லக் குறைந்துவருகையன்றிக்கே நிறமுஜ்ஜ்வலமாகாநின்றுள்ள கருங்குவளைகளானவை அலருகிற பர்யந்தங்களையுடைத்தான வயலையுடைய திருவாலி. (நெய்யிலங்கித்யாதி) † புறம்பு அவையும் உள்ளில் அவனுடையநிறமுமாய் முன்னடிதோற்றுதாயிற்று கையில் திருவாழியன்றாகில். (நெய்யிலங்கித்யாதி) † வடிவிலிருட்சிக்கும், குவளைப்பூவால்வந்த இருட்சிக்கும், கையில் திருவாழியால்வந்தவொளியல்லவாகில்முன்னடிதோற்றுதுகாணும். (நெடுமாலை) தூதுவிடவும் வார்த்தைசொல்லவும்மாட்டாதே நிற்கிறான்போலேகாணும். தூதுவிடமாட்டாதபடியாயிற்று அத்தலை பட்டுக்கிடக்கிறது. இத்தலை (க) "ఊర్ధ్వంమాసాన్నజీవిష్యే - ஊர்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே" என்றால், (உ) "నజీవేయమ్-நஜீவேயம்" என்னுமத்தனையிறே அத்தலை. (கையிலங்கு) †பட்டர், "ஸர்வேஸ்வரன் திருமங்கையாழ்வார்க்குப் பக்கக்குதிரை யேறிப் போமாகாதே! அவன்கையில் திருவாழி அழகுக்குடலாக ஒப்பித்திருக்குமத்தனை, இவர்கையில் வேல் சத்ருநிரஸநத்தாலே கறைகழுவ அவஸரமின்றிக்கே யிருக்குமாயிற்று". † அவன் சேஷித்வ ஸூசகமாகத் திருவாழியைப்பிடித்தாற்போலேயாயிற்று, இவர் சேஷத்வஸூசகமாகத் திருவேலைப்பிடித்தபடி. (கண்டுரைத்த) † தூதர்க்கு வார்த்தைசொன்னபடிகேட்டு அவன்முன்னேவந்துநிற்கக் கண்டுசொன்ன. (அருவினைகளடையாவே) அவனைப்பிரிந்து நோவுபட்டுத் தூதுவிடுகைக்கு ஹேதுவான பாபங்கள்கிட்டாது. ஸர்வேஸ்வரனைப்பிரிந்து தூதுவிடப்புக்கு அதுதானுங்கூட மாட்டாதே படும் வ்யஸநம் படவேண்டா. இப்பத்தையுமப்யஸித்தார்க்குத், தூதுவிடுவானவன்றானாயிற்று. ... ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (மையித்யாதி) உட்கருத்தைமூந்துற வருளிச்செய்கிறார் (இதுவித்யாதி). செங்கமலங்களுண்டாயிருக்கலாமே, இதுவேயென்று சொல்லுகைக்கு நிமித்தமென்னென்ன வருளிச்செய்கிறார் (ஊரி

---

(க) ரா - ஸுந் - ௩௮ - ௬௭. (உ) ரா - ஸுந் - ௬௬ - ௧௦.

லித்யாதி). தேசவிப்ரக்ருஷ்டமான பரமபதமன்றிக்கே காலவிப்ரக்ருஷ்டங்களான விபவங்களுமன்றிக்கே, கரண விப்ரக்ருஷ்டமான அந்தர்யாமியுமன்றிக்கே, தாமிருந்த திருவாலியிலிருந்தவனைக் குறித்துத் தூதுவிடுகையும்; அவன் முன்னிலையாகத் தோற்றினானாகக்கொண்டு தன்தசையை யறிவிக்கையுமாம்படி ஜ்ஞாநவிபாககார்யமான அஜ்ஞாநம் விளைந்தமைக்கு த்ருஷ்டாந்தமாகக் குவளைகளின் ஸம்ருத்தியைச் சொல்லுகிறாரென்று கருத்து. ஒருபடுக்கையில் பிரிவு பிறந்தாற்போலே இவர்க்கு இத்திருமொழியிலநுபவம் ; அத்தை யுட்கொண்டு வ்யாக்யாதா ஈடுபடுகிறாரென்று கொள்ளுவது. "ஊர்" என்கையாலே - ஆழ்வார் தாமுமிப்படி யிருக்கிறாரென்று ஸூசிதமாகிறது; இங்ஙனன்றாகில் இரண்டு வாக்யமும் புநருக்தமாமிறே. இவ்வாழ்வாருடைய பக்திகார்யமான அஜ்ஞாநத்தின் சரமாவதிக்குப் போரும்படி குவளைக்குள்ள நிறத்தின் மிகுதியைச் சொன்னத்தை நியாமகமாகக் காட்டுகிறார் (மையான தித்யாதி). "குவளை" என்றபோதே கருமை தோற்றுமே, இங்ஙனிருக்கச் செய்தேயும், "கரும்" என்றும், "மையிலங்கு" என்றும் விசேஷணத்வய மிடுகையாலே, தம்முடைய தசைக்கு த்ருஷ்டாந்தமாகச்சொன்னாரென்னுமிடம் ஸூசிதமிறேயென்று திருவுள்ளம். வாக்யார்த்தமருளிச் செய்கிறார் (நாளித்யாதி). இப்போது சுடராழியையிட்டு விசேஷிக்கைக்கு உட்கருத்தருளிச் செய்கிறார் (புறம்பித்யாதி), இத்தால்-விஶ்லேஷித்தாராக வெண்ணியிருக்கிறதம்படியாலும்,அவனும் வ்யாமோஹாதிசயத்தாலே "*மயர்வற மதிநலம்பெற்றவர் இங்ஙன் விஶ்லேஷித்துப் படுகிறபாடு காண்கையாலே நான்றானும் விஶ்லேஷித்தேனாகவேணும்"என்று கலங்கித் தூதுவிடவும் மாட்டாதே உருவுவெளிப்பாட்டால் வாய்விடவும் மாட்டாதே யிருக்கிறதசையிலே, நெஞ்சறியுமவனான திருவாழியாழ்வான் இருவருக்கும் வெளிச்செறிப்பைக் கொடுத்தானென்றநுஸந்திக்கிறாரென்று திருவுள்ளம். கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (வடிவிலித்யாதி). இவ்வாழ்வார் திருவாலியம்மானை விஶ்லேஷித்தாராகக்கொண்டு நோவு படுகிறவேளையிலே திருவாழியாழ்வான் நெய்யூட்டிப் புகர்படைத்துத் திருவுள்ளத்தைக் குடிகொள்ள, இவர் அவ்வழகில் கண்வைத்து அவனுள்ளத்தையுங்கண்டு க்ருதார்த்தராய், "இச்சேர்த்திக்கென் வருகிறதோ" என்று கையில்வாள்பற்றி யிருக்கிறாரென்று விவக்ஷித்து, "நெய்யிலங்கு" என்று விசேஷணமிடாமையாலே பலித்தகறையைச் சொல்லுகையாலே இப்படி சொல்லலாமென்று ஸம்வாதம் காட்டுகிறார் (பட்டரித்யாதி இருக்குமாயிற்று என்னுமளவும்). சத்ரு நிரஸநத்துக்குடலாக வேலைப்பிடித்தாரென்றருளிச்செய்து, சேவகனுக்கு வேல் நிரூபகமென்று ஸத்ருஷ்டாந்தம் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (அவனித்யாதி). பாட்டுக்களெல்லாம் கண்டு சொன்னதுகளன்றே யென்னவருளிச்செய்கிறார் (தூதர்க்கித்யாதி). (௧௦

ஜீயர் திருவடிகளேசரணம்.

மூன்றாம்பத்து ஆறாந் திருமொழிமுடிந்தது.



ஆழ்வார்திருவடிகளேசரணம்.

# பெரியதிருமொழி, ௩-ம் பத்து, எ-ம் திருமொழி, கள்வன்கொல் ப்ரவேசம்.



வ்யா.—† தூதுவிட்டுத் தூதர்க்குச்சொன்ன பாசுரம் நெஞ்சிலே யூற்றிருந்து அத்தை பாவித்து, பாவநாப்ரகர்ஷத்தாலே அவன்றான் முன்னின்றானாகக்கொண்டு அவனுக்கு வார்த்தைசொல்லும்படி பிறந்த தசாவிசேஷம் அவன் திருவுள்ளத்திலேபட்டு, அது பொறுக்க மாட்டாதவனாகையாலே தானேவந்து† முகம்காட்டி, இவளைக்கூட்டக் கொண்டுபோக;† ஆதிவாஹிகரை வரக்காட்டிக்கொண்டுபோம் சிலரை, பெரியதிருவடியை வரக் காட்டிக் கொண்டுபோம் சிலரை. (க) "[grantha] - நயாமி" என்று தானேகொடுபோம் சிலரை; அப்படியே தானேவந்து† அத்தவாளத்தலையாலே மறைத்துக்கொண்டுபோக; அந்தரங்கமாகக் காத்துக்கொடுகிடந்த திருத்தாயாருணர்ந்து படுக்கையி லிவளைக்காணாமையாலே, போனவள்படிகளையும், தனக்கவளையொழியச்செல்லாமையையும், எதிர்த்தலை இப்படிபட வேண்டும்படியிருக்கிற இவளுடைய வைலக்ஷண்யத்தையும், தன்னிழவையும் சொல்லிக் கூப்பிடுகிறாளாய்ச் செல்லுகிறது.

அவனிவளைக்கொடுபோகையாவதென் - †ஸ்வாபதேசத்திலோடுகிற தென்னென்னில்; மாநஸாநுபவமாயிருக்கச்செய்தே பாஹ்ய ஸம்ச்லேஷம்போலேயிருக்கப் பண்ணிக்கொடுத்ததொரு வைசத்யத்தைச்சொன்னபடியிறே. (க) †[[grantha] - ஸ்த்திதேமநஸி](உ)*நின்ற வாநில்லாமனதும் ஓரிடத்திலேநிற்கப்பெற்று, அபசயாத்மகமானசரீரமுமங்கேயிங்கே சிதிலமாகாதே ஒருபடிப்பட்டு, தாது ([grantha]) க்களுமொன்று முடங்கி ஒன்று நிமிருகையன்றிக்கே ஸாம்யாவஸ்த்தையை பஜித்து, †இப்படி சரீரத்திலேயொரு லாகவம்பிறந்து ஸத்வமுத்ரிக்தமானஸமயத்திலே, ஆரேனுமொருவனாகவுமாம், தான் கீழ் ஸம்ஸாரியாய் நின்றநிலையையும், இத்தைக்கழித்துக்கொள்ளுகைக்கீடாயிருப்பதொரு கைம்முதல் தன்பக்கலின்றிக்கேயிருக்கிறபடியையும், அவனைப்பற்றியே கழிக்கவேண்டும்படியிருக்கிறபடியையும், இதில்நின்றும் கரையேற்றுகைக்கீடான சக்தியும் ப்ராப்தியு மவன்பக்கலிலே

(க) வராஹசரமம் - (உ) க - க - ச.

யுண்டாயிருக்கிறபடியையு மநுஸந்தித்து அவன்பக்கலிலே பரந்யா ஸத்தைப்பண்ணுவது.† பின்னைபேற்றுக்கு இவ்வளவமையுமோவெ ன்னில், சரீரத்தைப்பற்றிவருமவற்றுக்கு ஆத்மா ஸுகதுக்கா நுபவம் பண்ணுமாபோலே இவற்றுக்குவருமவை தன்னதாம்படி விஸ்வசரீ ரனுமாய், இவன்தன்னை ஒருகாலநுஸந்தித்தால் பின்பிவனைப்போ லே மறக்கைக்கடியான ஜந்மஙிபந்தநமான கலக்கமின்றிக்கேயிருக்கு மவனுமாகையாலே, அவ்வளவமையும்.† இப்படி ஒருநாளநுஸந்தித்த வன் ப்ரக்ருதிவஶ்யனாய், பின்பு தன்தேஹயாத்ரையிலே அந்யபர னாய்த்திரிந்து, பின்பு ஸ்மரிக்கைக்குங்கூட யோக்யதையில்லாதபடி * காஷ்ட்டபாஷாணஸந்நிபனாய்க்கிடக்குமன்று, இவனைப்போலே ஒருகால் ஸ்மரித்தால் பின்பு விஸ்மரிக்குமவனன்றிக்கேயிருக்கிற நான் ஸ்மரித்தபடியே யிருப்பன். [ மத்பக்தம் - மதபக்தம்] †ஸ்மரிக் கைக்கு யோக்யதையில்லாதவன்று ஸ்மரித்திலேனென்று கைவிடுந் தனை துராராதனையோ அவன்பற்றிற்று. [அஹம் ஸ்மராமி - அஹம் ஸ்மராமி]† ஐஶ்வர்யகாமனுக்கும், ஆத்மபராபதிகாமனுக்கும், † பக்தி காமனுக்கும், அந்திமஸ்மருதியுண்டு; இவன் முதலிலே தொடங்கி ஸர்வ பரந்யாஸம் பண்ணினவனாகையாலே இவனுக்காக நான்நினைப்பன். [நயாமி பரமாம் கதிம் - நயாமிபரமாம்கதிம்] † இபபடிநினைத்து நானே கைதொடனாய்வந்து கொடுபோவன். ஶ்லோகதவயம் †என்று; எம் பெருமானுடைய ஸர்வஸ்வமுமிதேயிவை. ஆளவந்தார் ஸ்ரீபாதத் திலேவர்த்தித்த வைஷ்ணவன் அந்திமஸமயத்தில் பட்ட க்லேசத் தைக்கண்டு பெரியநம்பிக்கு மெயபெருமாளாகும் நடந்த ஸம்வா தத்தை நினைபபது. "மத்பக்தம் - மத்பக்தம்" என்கிறவிடமும் பக்தி மானையே சொல்லிற்றனாலோ, ப்ரபந்நனைச்சொல்லிற்றென்கைக்கு நியாமகராரென்ன; அவனுக்கு அந்திமஸ்ம்ருதிவிதிக்கிறசாஸ்தரம்.*

---

அரு —கள்வன்கொல் ப்ரவேசம். கீழ்த்திருமொழியில் பாவநாப்ரகர் ஷத்தாலே, (க) "என்முலையாள-உன்னகலத்தாலாளாயே" என்று ப்ரார்த்திக் கச்செய்தேயும் அவன் செய்யாமலிருக்கையால், "வளை ஆளமாட்டோமே" என்று கிடந்த பெண்பிள்ளை, இத்திருமொழியில் பின்தொடர்ந்து போனாளாகக் கொண்டு திருத்தாயார் சொல்லுகைக்கு ஸங்கதியென்னென்ன, வ்ருத்தவர் த்திஷ்யமாண கதநமுகேந வருளிச்செய்கிறார் (தூதுவிட்டித்யாதி). இத்தால்,

(க) ௩-௧-௯.

மாநஸாநுபவத்தில் ஒருவைசத்யத்தாலே அவன வந்தானாகவும், தன்மகளும் வயலாலி மணவாளனும் ஒருபடுக்கையில் சேர்ந்தார்களாகவும், தான்கிட்டக் காத்துக்கொண்டிருந்தாளாகவும், இங்ஙனிருக்கத் தான் கண்ணுறங்க, அப்போது (க) "நிலையாளா நின்வணங்க வேண்டாயேயாகிலும்" என்று இவள் சொன்ன இழவு திருவுள்ளத்திற்பட்டு அதுதீர இப்பெண்பிள்ளையைக்கொண்டு புறப்பட, படுக்கையிற்காணமல் தானும புறப்பட்டு, கண்டு கொண்டிருக்கவே கொண்டுநடந்தான் என்று ஒருதசை பிறந்து அநுபவிக்கிறாளென்றதாயிற்று. (முகங்காட்டி) என்றவநந்தரம், ஸம்ப்ஸ்லேஷித்து என்றுசேஷம். தானேவந்து கொடுபோனபடியை த்ருஷ்டாந்த கதநபூர்வகம் விவரிக்கிறார் (ஆதிவாஹிகரையித்யாதி) "கள்வன்" என்றத்தைப்பற்ற (அத்தவாளத் தலையாலேயித்யாதி). அத்தவாளத்தலை - தலைமுன் தானே.

"இவளைக் கொடுபோகையாவதென்" என்றத்தை விவரிக்கிறார் (ஸ்வாபதேசத்திலித்யாதி). த்ருஷ்டாந்தமாகக் கீழ்ச்சொன்ன ஶ்லோகத்துக்கு வ்யாக்யாநம் (ஸ்த்தித இத்யாதி). மநஸ்ஸ்வாஸ்த்யாதிகளைச்சொன்ன வித்தால் பலித்த வர்த்தத்தை யருளிச்செய்கிறார் (இப்படி சரீரததலே யித்யாதி)."ஸ்த்திதே மநஸி" என்று இப்போது சொல்லுகையால் - முன்பு விஷயப்ரவணமாயிருந்தமை தோற்றுகையாலே, அத்தைப்பற்றிவரும் ஸ்மரண விசேஷத்தையும், "சரீரே - ஸாஸ்வஸ்த்தே" என்கையால்தோற்றின பூர்வத்தி லஸ்வஸ்த்ததையால் பலித்த கர்மயோகோத்யோகத்தைப் பற்றிவரும் ஸ்ம்ருதியையும், "மாம்" என்ற பதத்தில் விவக்ஷிதமான உபாயபாவத்தைப்பற்றிவரும் நினைவையும்* அஜபதத்திலும்* விஶ்வரூப பதத்திலும் ஆர்த்த(ரூ)மான சக்திப்ராப்திகளைப்பற்றி வருமநுஸந்தாநத்தையும,"ஸ்மர்த்தா" என்ற பதத்துக்கு அர்த்தமாகத் திருவுள்ளம்பற்றி, அத்தால் பிறந்த நைரப்பர்யாநுஸந்தாநத்தளவு மர்த்தமாக வருளிச்செய்கிறார் (பின்னை யித்யாதி அமையுமென்னுமளவும்). "தம்" என்றத்தால, ஸக்ருத்தாக ஒருநாள் ஸ்மரிததுமறந்திருந்தவவனென்று அர்த்தமருளிச்செய்கிறார் (இப்படி யொருநாளித்யாதி). "மத்" என்கையாலே தேவதாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறானென்றருளிச்செய்கிறார் (ஸ்மரிக்கைக் கித்யாதி). அந்திமஸ்ம்ருதிதானு மிவனுக்குவேண்டா, இவன் பரந்யாஸம் பண்ணுகையாலே நானே அந்திமஸ்ம்ருதி தன்னையு மேறிட்டுக்கொள்ளுவ னென்கிறானென் றருளிச்செய்கிறார் (ஐஶ்வர்யேத்யாதி). (பக்திகாமன்" என்றது - பக்திஸாத்ய பகவத் ப்ராப்திகாமனென்றபடி. "நதாமி" என்றதே, "நயாமி" என்கையாலே பலித்த அஸஹாயபாவத்தை யருளிச்செய்கிறார் (இப்படி நினைத்தியாதி). (என்று) என்றவநந்தரம், போராய் என்றுசேஷம். ... ... ... ... *

(க) ௩-௬-௧.

மூ.—கள்வன்கொல்யானறியேன் கரியானொருகாளைவந்து
வள்ளிமருங்குலென்றன் மடமானினைப்போதவென்று
வெள்ளிவளைக்கைபற்றப் பெற்றதாயரைவிட்டகன்று
அள்ளலம்பூங்கழனி யணியாலிபுகுவர்கொலோ. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கள்வன்கொல் | கள்ளனோ (உடையவனோ) | பெற்றதாயரை | பெற்றதாயானஎன்னை |
| யான் அறியேன் | நானறியமாட்டேன், | இட்டு அகன்று | தனியேகிடக்கவிட்டுப்போய்(ஒன்றுசேர்ந்த அவ்விருவரும்) |
| கரியான்ஒருகாளைவந்து | கறுத்தவனுயொரு யௌவநபுருஷன் வந்து | அள்ளல் | சேற்றிலுண்டான |
| வள்ளிமருங்குல் | நுண்ணிடையையுடைய | அமபூங்கழனி | அழகியபூக்கள்நிறைந்தநீர்நிலங்களையுடைய |
| என்தன்மடமானினை | நல்லயுவதியானஎன்பெண்ணை | அணிஆலி | பூமிக்குஆபரணமான திருவாலியிலே |
| போதஎன்று | வாவாஎன்றுத்வரைபண்ணி | புகுவர்கொலோ | புகுவாரோ?. (௧) |
| வெள்ளிவளைக்கைபற்ற | வெள்ளிவளைகளணிந்தகையைப்பிடிக்க (உடனே அவள்) | | |

வ்யா.—முதற்பாட்டு. (கள்வன்கொல்) (௧) †" ஸ்தேநஸ - சோரேண" என்று இவனுடைய ஆத்மாபஹாரத்தோபாதியாயிருக்கிறதாயிற்று உடையவன் தன்னுடைமைகொண்டுபோனதும், †என்னதென்றுபோந்தவாஸநையாலே. (கொல்) †உடையவன் உடைமைகொண்டுபோனானகையாலும், காணக்கொடுபோகையாலும், "கள்வன்" என்னப்போகிறதில்லை; ஆகிலும், கள்வன் என்னனுமாயிராநின்றது மமகாரத்திலூற்றத்தாலே. (யானறியேன்) †கார்த்துக்கிடக்கிற தானறியாளாகில் கொண்டுபோனவனைப்போலே காணும்கேட்பது.

†அறியாயாகிலும் அறிந்த அம்சத்தைச் சொல்லலாகாதோவென்ன, (கரியானித்யாதி) †பிள்ளையமுதனார், "கூடுகிடக்க வாளையுருவிக்கொடுபோவாரைப்போலே, தாயாரணைத்துக்கொடுகிடக்கக் கொண்டுபோனான்" என்று நிர்வஹித்தார்; †அத்தை பட்டர்கேட்டருளி, "அத்தனை †பணிப்படவேண்டாகாண், சிலகள்ளர் விளக்குக்களையும்பிடித்து, †'பிள்ளை, பிள்ளை' என்கிறவளவிலே கொண்டுபோமாபோலே கொண்டுபோனான்காண்" என்றருளிச்செய்தார். (ஒரு) வாய்

(௧) பார - ஆதி -

புகுநீரிலே புக்காரைப்போலே, நிறத்தைச்சொல்லாநிற்கச்செய்தே யும் இன்னதென்று நிர்த்தரிக்கமாட்டாதே, "ஸ்த்ரீ - கம்ஸிதஸ்தி" என்னுமத்தனையாயிற்று. (காளை) போனவிடம் அவன் குற்றமன் றென்கிறாள்; அவன் பருவத்தின்குற்றம். †இவள்போனவிடம் பழி யென்று குற்றமாகச்சொல்லுகிறவிவள் தனக்கொரு ப்ராப்தியின் றிக்கேயிருக்கச்செய்தே, அப்பருவத்தைச்சொல்லும்படியிறே அது இவள்தன்னையும் துவக்கினபடி. †போன என்மகள்தானும், "இது பழி" என்று நினையாமையில்லை, அநர்த்தம்பார்த்து மீளவொண்ணாத படியான பருவத்திற்குற்றமென்கிறாள். †வைரூப்யத்தை விளைத்து விட்டார்கள் என்று முறைப்படச்சென்றவளிறே, (க) "தருணௌ" என்றாள். பின்புசொன்னது பூர்வவாஸனையே அநு வர்த்தித்தபடியாலே. †அன்றாகில் தான் பட்டத்தை முறைப்படுகிற துக்கு இது எங்கே உபயோகியாய்ச்சொல்லுகிறாள். நடுவு பிறந்த வற்றையும் ஸம்போகத்தில் †நடுவுபிறந்த விமர்த்த (விமர்த)த்தோபாதி யாகநினைத்திருந்தாள். (வந்து) நிறமும் பருவமுமிவையானால், ஸர்ப்ப யாகத்தில் ஸர்ப்பங்கள்போலே தானிருந்தவிடத்திலே பெண்பிறந்தா ரடையச் சென்று விழவேண்டும்படியிருக்க, வரவுமத்தலையிலே யானால் இவள்போகாதிருப்பாளோ? †ஆரேனுமாகவுமாம், பகவல்லா பமுண்டாகில் அத்தலையில் வரவல்லதில்லை.

(வள்ளியித்யாதி) †அவனைக்கொடுவந்த விஶ்வாமித்ரனைச் சொ ல்லுகிறது. இவளுடைய அழகாயிற்று அவனையழைப்பித்தது. †அவனுக்கு அநேகத்தைச் சொல்லிவைத்து இவளுக்கு ஓரழகைச் சொல்ல அமைந்திருக்கிறதிறே; (உ) "மாலுக்கு" என்றுதுடங்கி அவனுக்கு அநேகத்தைச்சொல்லி, இவளை (உ) "கொங்கலரேலக் குழலி" என்னுமாபோலே. (என்றன்மடமானினை) என்மகளாவது, †முக்த்தை(முக்தை)யாவது;-†தன் ஸௌகுமார்யத்தையாதல்,ஸ்த்ரீத்வ த்தையாதல்,போகிற வழியிலருமையையாதல், இவையொன்றையும் நினைக்கமாட்டாத முக்த்தை (முக்தை) கிடீர். (என்றன்) †அவன்வந்து கொடுபோகப்புக்கவாறே, "என்மகள்" என்று தானுமொருதலை பற் றுகிறாள், (போதவென்று) (ந) "உத்தமர்த்தமிம்சர-உக்தமர்த்தமிம்சர" என்றாளாயிற்று. கரியான் காளைவந்து "போத, போத" என்றதா

(உ) ரா ஆ,ப-கக-கஉ. (உ) தி-வாய்-கூ-௯-க. (ந)

யிற்று. ஸர்வேஶ்வரனைப் பெறுகைக்கு இவன்பண்ணும் கர்மஜ்ஞா நம்போலே அவன்றானிவனைப் பெறுகைக்குப்பண்ணின ஸாதநாநுஷ்டாநமிருக்கிறபடி. (வெள்ளிவளைக்கைபற்ற) †உக்தியிலே துவக்குண்டு ஸ்தப்தையாய்நின்றாள்; அவ்வளவிலேவந்து கையைப்பிடித்தான்; (க) †"న ప్రమాణీకృతః పాణిర్బాల్యే బాలేన పీడితః - நப்ரமாணீக்ருத: பாணிர்பால்யே பாலேந பீடித:" என்கிறபடியே - பிடித்தபிடியிலே (உ) "அங்கண்ணனுண்டவென்னாருயிர்க்கோதிது" என்னும்படியாயிற்றுப் பிடித்தது. முன்பு நெடுங்காலம் தாய்பக்கல்பண்ணின வாஸனை முதலடியிலேவந்து கழியும்படியாயிற்று பற்றினபற்று. § இடைச்சிகள் பொன்னையும் மாணிக்கத்தையுமழியமாறி வெள்ளிவளையையாயிற்று இடுவது.

பற்றினபற்றிலூற்றமெவ்வளவு போருமென்னில், (பெற்றதாயரை) நான் வளர்த்துக்கொண்டதாயோ நினைத்தபோது பொகட்டுப்†போகைக்கு. (இட்டு) †பொகட்டுப்போகாநின்றாலும் பொகட்டோமென்றும் அநுதாபமும் நெஞ்சிலே கிடக்கவுமாமிறே. சில அசேதநங்களைப்பொகட்டுப்போமாபோலே பொகட்டு. (அகன்று) தான்விட்டாலும் நமக்குத் தொடாந்துகென்று பற்றவொண்ணாதபடி கைகழியப்போய. (அளளலமித்யாதி) †இவ்வூரெல்லை கழிந்தால் பின்னை மாறியிடுமடி பூவின்தலையிலேயாம்படியான தேசமாயிற்று. (௩) †"పాదారూఢమేవపంకజరజః - பாதாருந்துதமேவ பங்கஜரஜ:" என்னும்படியாலே அதுதானவளுக்கு பாதக (బాధక) மாகிறது. (அணியாலி) ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான திருவாலி. (புகுவர் கொலோ) இருவருமிரண்டுமுக்த (ముక్త) ராயிற்று - மாயாம்ருகத்தைப்பிடித்துத் தாவென்பாரும், அதைப்பிடிப்பதாக அதன்பின்னே போவாரும். லங்காத்வாரத்திலேசென்று நிற்கலாகாதோ என்றுநில்லாதே உத்தேஶ்யபூமியிலே பகலே புக்கார்களாக வல்லர்களோ. இருவருமொருவர்க்கொருவராழங்காலாயிற்று. .. (க)

---

அரு —முதற்பாட்டு - வயலாலி மணவாளன்வந்து கலந்து கைக்கொண்டு போனானாகில், அவனை, "கள்வன்" என்பானென்னென்ன வருளிச்செ

---

(க) (உ) தி-வாய ௯-௬-௮. (௩) ஸ்ரீகுணரத்ந-௪௧.

§ ஐஶ்வர்யமில்லையோ "வெள்ளி" என்கிறதென்னென்ன வருளிச்செய்கிறார் (இடைச்சிகளித்யாதி). என்று அரும்பதாந்தரம்.

ய்கிறார் (சோரேணேத்யாதி). "என்றன் மடமானினை" என்று திருத்தாயார் பண்ணின மமகாரத்தை யருளிச்செய்கிறார் (என்னதென்றித்யாதி). ஆனால் "கொல்" என்று ஸம்சயிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (உடையவனித்யாதி). "யானறியேன்" என்கைக்கு இனியறியத்தக்காருண்டோ, இது ஆரைக்கேட்கிறாளென் றருளிச்செய்கிறார் (காத்நித்யாதி). "யானறியேன்" என்கையால் அறிந்தாரைக்கேட்கை தோற்றுமென்று திருவுள்ளம். இனி அவனைத்தானே கேட்கிறாளாகவேணுமென்று ரஸோக்தி.

இப்படி அவனையே கேட்கிறாளாய்க்கொண்டு இவள் புறப்பட, அசலகத்து நங்கைவந்து ப்ரஶ்நம் பண்ணுகிறாளாக, மேல் "இட்டகன்ற" என்னுமளவுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (அறியாயாகிலுமித்யாதி). கரியான் காணக்கொடுபோகச்செய்தே இவள் கொடுபோகவொட்டியானென்னென்ன வருளிச்செய்கிறார் (பிள்ளையமுதனு ரித்யாதி). (கூடு) கத்தியுகூற. (அணைத்துக்கொடுகிடக்க) என்றது - பெண்ணிடத்தில் மமதையாலே கொடுபோகவொட்டாமல் கட்டிக்கொண்டிருக்க வென்றபடி. யத்வா - பிள்ளையமுதனார்க்கு, பெண்ணும் தானுமாய்ப் படுக்கையிலே கிடக்கக் காணுதபடிவந்து அவன் கொடுபோனுனென்று கருத்தாகவுமாம். இப்பக்ஷத்தில், "கரியான்" இத்யாதிகளும், "கைப்பற்ற" என்றதும் திருவாலி மணவாளன்மேல் பித்தேறினவள் தன்னைவிட்டுப் போகையாலே அவனே வந்தானுக வேணுமென்று ஊஹித்துச் சொல்லுகிறாளென்று நிர்வஹித்துக்கொள்வது. "இப்படி யருமைப்படவேணுமோ, பர்யதோஹரனுய், தானேகொண்டு நடந்தானென்னலாம்" என்னும் பட்டர் நிர்வாஹத்தை யருளிச்செய்கிறார் (அர்தையித்யாதி). (பணிப்படவேண்டா) காணுமல் கொண்டுபோனுனென்று சொல்லி இத்திருமொழியில் பதங்களுக்குப் பொருள்கட்டி அருமைப்பட வேண்டாவென்கை. (பிள்ளை பிள்ளையென்கிற வளவிலே) பிள்ளை பிள்ளையென்று கூப்பிட்டுக்கொண்டு பின்தொடரச்செய்தே யென்றபடி. மாமியாரான தான் பருவத்தைச் சொல்லக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இவள் போனவிடமித்யாதி). மகள்தான் தன்னைவிட்டுப்போகை பழியென் றறியாளோவென்ன(போனவித்யாதி). அநர்த்தமுண்டானுலும் விடவேண்டாதபடியா யிருக்குமோ பருவமென்ன வருளிச்செய்கிறார் (வைரூப்யத்தை யித்யாதி). "நறுநெள" என்றவள் பின்பு தன் வைரூப்யத்தைச்சொல்லி முறைப்படுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (அன்றாகிலித்யாதி). ஆனாலும் நாஸிகாச்சேதத்தை மறந்து இநஙன் சொல்லக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (நடுவித்யாதி). "வந்து" என்கையாலே - ஸ்வாபதேசத்தில் பரகத ஸ்வீகாரமே உத்தேஶ்யமென்று தோற்றுமென்கிறார் (ஆரேனுமித்யாதி).

வல்லி என்றது - "வள்ளி" என்றுகிடக்கிறதாய், அதுபோலேயிருக்கிற இடையை வர்ணிக்கைக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனையித்யாதி). அழகு அழைப்பித்ததென்கைக்கு நியாமகமென்னென்ன வருளிச்செய்

ருர் (அவனுக்கித்யாதி). (முக்த்தையாவது) என்றவநந்தரம், "போத" என்கைக்கு ஹேதுஎன்றுசேஷம். காளையானவன் கருதிவரும்படியான பருவத்தால்பலித்த ஸௌகுமார்யத்தையும், "மடம்" என்றபதத்தால் பலித்த ஸ்த்ரீத்வத்தையும்,"அள்ளலம்பூங்கழனி" என்றபதத்தையும் கடாக்ஷித்து முக்த்தையை விவரிக்கிறுர் (தன்னித்யாதி). பிள்ளையமுதனுர் நிர்வாஹத்தில் முந்தின யோஜனையைப்பற்ற வருளிச்செய்கிருர் (அவன்வந்தித்யாதி). "உக்தமர்த்தமிமஞ்சர" என்று - தன்கீழ் ஸ்த்ரீயைத்தானே ஸங்கோசமற வ்யவஹரித்தாற்போலே, தன்கீழ்ப் பெண்பிள்ளையைத்தான் "போத" என்று விதித்தானென்கை. கீழ்தான் ஸாதநாநுஷ்டாநம் பண்ணியிருக்க கையைப் பற்றுவானென்னென்ன (உக்தியிலேயித்யாதி). கையைப்பிடித்தானுகிலும் தாய்க்கஞ்சி விடுவித்துக்கொள்ளவொண்ணுதோவென்ன (நப்ரமாணீக்ருத இத்யாதி). இளம்பருவத்தில் பிடித்தபிடியிலே அளவுபடப் பிடிக்கப்பட்டதில்லையாயிற்று. "கை" என்கையாலே - ஸம்ஶ்லேஷ ரஸமநுபவிக்குமளவும் பற்றினபற்று விட்டானில்லையென்று தோற்றுகையால், அப்படி இவளையுமுண்டு கோதாக்கினுனென்கிருளென்று திருவுள்ளம்.

(போனீகக்கு) என்ற வநந்தரம், க்ருஷ்ணனைப்போலே யென்றுசேஷம். "அகன்று" என்று மேலிருக்கச்செய்தே, "இட்டு" என்றதுக்குக் கருத்து (பொகட்டித்யாதி). "அள்ளல்" என்று சேறுய், அதிலேயிருக்கிற அழகிய பூக்களையுடைய கழனியென்று புஷ்பஸம்ருத்திக்குத் தாத்பர்யமருளிச்செய்கிருர் (இவ்வூரித்யாதி). (இவ்வூர்) என்றது - திருமங்கையென்றபடி. தன் பெண்பிள்ளையின் ஸௌகுமார்யத்தையறிந்து அவனுக்குத்தக்கபடி மடிப்புடைவை இவ்வூரிலிடுவித்துவைத்தாளாகக்கொண்டு அவ்வூரில் பூவிலே அடியிடுகைக்குத் தான்முன் க்லேசிக்கிறதென்னென்ன வருளிச்செய்கிருர் (பாதேத்யாதி).§ ... ... ... (க)

மூ.—பண்டிவனுயன் நங்காய் படிறன் புகுந்தென்மகள்தன்
தொண்டையஞ் செங்கனிவாய் நுகர்ந்தானை யுகந்தவன்பின்
கெண்டையொண் கண் மிளிரக் கிளிபோல் மிழற்றிநடந்து
வண்டமர் கானல்மல்கும் வயலாலி புகுவர்கொலோ. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நங்காய் | அசலகத்துப் பெண்களே! | ஆயன்படிறன் | (திருவாய்ப்பாடியில் பெண்களைத் திருடும்) இடையக்களனுயிருந்தான்; (இப்போது) |
| இவன் | இந்தயுவாவானவன் | | |
| பண்டு | முன்னெல்லாம் | | |

§ ஸம்சயமென்னென்ன வருளிச்செய்கிருர் (இருவருமித்யாதி). (முக்த்தை) ஒருவர்க்கொருவர் வைலக்ஷண்யத்திலேயீடுபட்டு அறிவழிந்திருக்கை. (போவாரும்) ஆயிற்றேஎன்று பூரிப்பது. என்று அரும்பதாந்தரம்.

| | |
|---|---|
| புகுந்து | (அகத்தில்ப்ரத்யக்ஷமாக) ப்ரவேசித்து |
| என்மகள்தன் | பருவம்நிறைந்த என் பெண்ணினது |
| தொண்டைசெங்கனிஅம்வாய்நுகர்ந்தானை | கோவையின் சிவந்தகனிபோல் அழகிய அதரத்திலம்ருதத்தைப் பாநம்பண்ணின அவனை |
| உகந்து | (என்பெண்ணானவள்) விரும்பிக்கொண்டு |
| கெண்டை | கெண்டைபோலே |
| ஒண்கண் | அழகியதிருக்கண்கள் |
| மிளிர | (அபூர்வதர்சநத்தாலே) அகன்றொளிவிட |
| கிளிபோல் | கிளிபோலே |
| மிழற்றி | சிலவார்த்தைகள் பேசிக்கொண்டு |
| அவன்பின்நடந்து | அவனுடையபின்னேயே நடந்துபோய் (சேர்ந்துகொண்ட அவ்விருவரும்) |
| வண்டு அமர் | வண்டுகள்நிறைந்த |
| கானல்மல்கும் | கடற்சோலைசூழ்ந்த |
| வயல் | கழனியையுடைய |
| ஆலி | திருவாலியிலே |
| புகுவர்கொலோ | புகுவாரோ என்னவோ. (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பண்டிவனுயன்றங்காய்) †பண்டிவன் சக்ரவர்த்தித்திருமகனென்னுமாபோலே இப்போதை அவஸ்த்தை. †வெண்ணெய்களவுகாணப்புக்கு அக்களவு தலைக்கட்டமாட்டாத இளிம்பன்கிடீர் என்மகளை யிப்படிசெய்தான். †அங்ஙன்ன்றிக்கே, பண்டிவன் (க)*காடுவாழ்சாதி இப்போது நாகரிகனானான். (படிறன்புகுந்து) †பண்டு காணமல் களவுகாணுமித்தனை; இப்போது பஶ்யதோஹரனானான். (என்மகளித்யாதி) ஸௌந்தர்யாதிகளால் தோற்பிக்கையன்றிக்கே †ப்ரணயஸிரையில் வைதக்த்யத்தாலே தோற்பிப்பதே! (அவன்பின்) (௨) †*பேதைநின்னைப்பிரியேனினியென்றகன்றவன் பின்பு தோற்கும்படி சில வ்யாபாரங்களைப் பண்ணினானத்தனையல்லது, †"போரு"என்றழைத்திலன்.†வாகம்ருதமான அம்மான்பொடியை யிட்டுக்கொண்டுபோனபடி. (கெண்டையொண்கண்மிளிர)அபூர்வதர்சநங்களாலே கண்ட பதார்த்தங்களை. "இவை என்ன,†வினவு" என்று கண்ணாலேகேட்கை. (கிளிபோல்மிழற்றி) கண்ணால் கேட்டுக்கேளாதவற்றை வாயாலேகேட்டு. (நடந்து) †அவனுக்கு முன்னேக்கிப்போகவொண்ணாதபடி அவன்பின்னே நடந்து. (வண்டித்யாதி) (௩)†"ந ச புநராவர்த்ததே - நசபுநராவர்த்ததே" என்று புக்க திர்யக்குக்களுங்கூட மீளாத ஊரிலே புகுவர்கொலோ. தனக்காசைப்பட வேண்டாவென்கிறாள். ... ... ... (௨)

---

(க) நா-தி-௧௨-அ. (௨) (௩) சாந்தோ-அ-௧௫.

அரு.—இரண்டாம்பாட்டு. (பண்டித்யாதி) கீழ்ப்பாட்டில் தன் ஸௌந்தர்யாதிகளைக்காட்டி வரச்சொல்லிக் கையைப்பிடித்தானுகையாலே என்னை யிட்டுப்போனுளென்ருள்; அங்ஙனன்றுகாண், அவன் தூர்த்தவ்யாபாரங்களாகிற அம்மான் பொடிபோட தானேநடந்தாள் கிடாயென்று அசலகத்து நங்கையோடு சொல்லுகிருளென்று ஸங்கதி.

இவன் - இப்போது பெண்பிள்ளையைக்கொண்டு நடந்தசதுரன், பண்டு இடையன்கிடாய் என்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிருர் (பண்டித்யாதி). பண்டுஆயனுனவன் இப்போதைஅவஸ்த்தையில் சக்ரவர்த்தித்திருமகனைப்போலே சதுரனுனென்கை. முன்புத்தைதயில் அசாதுர்யத்தையும் இப்போதையில் சாதுர்யத்தையும்காட்டுகிருர் (வெண்ணெயித்யாதி). இவன்-திருவாலிதிருநகரியில் வஸிக்கும் இவன், பண்டுஆயன் - காடழகர் கிடாயென்று சப்தார்த்தம் விவக்ஷித்துத் தாத்பர்யார்த்தமருளிச்செய்கிருர் (அங்ஙனன்றிக்கேயித்யாதி). படிறன் - தூர்த்தனென்ருய், பட்டர்நிர்வாஹத்தில் தாத்பர்யமருளிச்செய்கிருர் (பண்டுகாணுமலித்யாதி). (ப்ரணயஸிரையில்) ப்ரணயதாரையில், கீழே "இவன்" என்றுசொல்லிவைத்து, இப்போது "அவன்" என்றுசொன்னதுக்கு உட்கருத்தருளிச்செய்கிருர் (பேதையித்யாதி). (போருஎன்று) வாஎன்று. பின்னை என்செய்தானென்ன(வாகித்யாதி). (வினவென்று) சொல்லென்றபடி. இவள் முன் நடந்தாளாகில் உன்மத்தப்ரவ்ருத்திக்கு க்ரமப்ராப்திபோலே ஒருபடி திருவாலியிற்புகலாயிருக்கும், இவள் பின் நடக்கையாலே புகுகையில் ஸம்சயிக்கவேண்டிற்று என்னும் பாவம் ஸ்புரிக்கத் தாத்பர்யமருளிச்செய்கிருர் (அவனுக்கித்யாதி). "கானல்" என்று காடாய், காடுபோலேயிருக்கிற தோப்புகளின் ஸம்ருத்தியைச்சொல்லி, அத்தை "வண்டமர்" என்று விசேஷித்ததுக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிருர் (நசேத்யாதி). ... ... ... ... (௨)

௩.—அஞ்சுவன் வெஞ்சொல்நங்கா யரக்கர்குலப் பாவைதன்னை
வெஞ்சின மூக்கரிந்த விறலோன்திறம் கேட்கில் மெய்யே
பஞ்சிய மெல்லடியெம் பணைத்தோளி பரக்கழிந்து
வஞ்சியந்தண் பணைசூழ் வயலாலி புகுவர்கொலோ. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நங்காய் | அசலகத்துப்பெண்ணே! | வெஞ்சினம் | வெவ்விய கோபமடியாக |
| வெஞ்சொல் | இது கொடுஞ்சொல்லாயிராந்தது. | மூக்கு | அவள்மூக்கினை |
| அரக்கர்குலப்பாவைதன்னை | ராக்ஷஸகுலத்துக்கெல்லாமொருபெண்ணுய் கொண்டாடப்பட்ட சூர்ப்பணகையினது | அரிந்த | அறுத்த |
| | | விறலோன் | மிடுக்கையுடைய அந்தயுவாவினது |
| | | திறம் | ப்ரகாரத்தை |
| | | கேட்கில் | இப்போதுகேட்டால் |

| | | | |
|---|---|---|---|
| மெய்யேஅஞ்சுவன் | அதை இப்போதாக நினைத்து பயப்படுவேன்; (அப்படியிருக்க) | பரக்குஅழிந்து | அடக்கமின்றி (அவனோடுசேர்ந்துகொள்ள, அவ்விருவரும்) |
| பஞ்சுமெல்அடி | செம்பஞ்சூட்டியம்ருதுவானபாதங்களையும் | வஞ்சி | கொடிக்கூட்டங்களாலும் |
| எம்பணைத்தோளி | மூங்கில்போன்றபுஜங்களையுமுடைய எம்பெண்ணானவள் | அம் | அழகிய |
| | | தண்பணை | குளிர்ந்தமூங்கில் புதர்களாலும் |
| | | சூழ் | சூழப்பட்ட |
| | | வயல் | கழனியையுடைய |
| | | ஆலி | திருவாலியிலே |
| | | புகுவர்கொலோ | புகுவாரோ? (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (அஞ்சுவனித்யாதி) †(அரக்கர்குலப் பாவை தொடங்கி, மெய்யே - அஞ்சுவன்) †பட்டர் இப்பாட்டையருளிச்செய்து, "ஒருஸ்த்ரீயை விரூபையாக்கினவனுடைய திறம்கேட்கில் அஞ்சுவன் என்கையால், †இத்தலைக்கு குணஹாநியாய்த் தோற்றுகின்றது, இது ஆழ்வாரருளிச்செய்யக்கூடாது, இதெங்ஙனே சேரும்படி?" என்று ஆச்சானைக்கேட்க, "துடுப்பிருக்கக் கை வேக வேணுமோ, எம்பெருமானார் தாமே யருளிச்செய்துவைத்தாரிறே" என்ன, "அருளிச்செய்தபடி யெங்ஙனே" என்றுகேட்க; †"முன்பொரு†புணர்ந்துடன்போக்கிலேபிறந்த ப்ரமாதத்தைக்கேட்டு அத்தை நினைத்து இபபோது பயப்படுகிறாள்" என்றருளிச்செய்தார். (மெய்யே அஞ்சுவன்) அது பூதகாலத்திலே, இது வர்த்தமாந காலத்திலேயென்று தோற்றுகிறதில்லை, ஏககாலத்திற்போலே பயமாகாநின்றது. (பஞ்சியமெல்லடி) †இது §படுக்கையிலிருக்கிலும் பயப்படவேண்டும்படி ம்ருதுவான காலையுடையவள். (எம்பணைத்தோளி) சுற்றுடைமை, பசுமை, ஒழுகுநீட்சி, இவையெல்லாவற்றாலும் மூங்கில்போன்றிருந்துள்ள தோளையுடையவள். (பரக்கழிந்து) †பழியஞ்சாதே. பரக்கழிவு - †மிகவும் கழிவென்றுமாம். (வஞ்சியித்யாதி) தனக்கு †உபமாநமுள்ள தேசத்தேறப்புகுமோ?. (௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (அஞ்சுவனித்யாதி). கீழ்ப்பாட்டிலே, "அவன் பின் கெணடையோண் கண்மின்னாக்கிளிபோல் மிழற்றி" என்கையாலே, (ச) "అగ్రతః ప్రయయౌ రామః సీతామధ్యే సుమధ్యమా - அக்ரதஃ ப்ரயயௌ ராமஃ ஸீதாமத்யே ஸுமத்யமா" என்று கூடப்போனபோது வழியில்கண்டவற்றை யெல்லாம் கேட்டுக்கொண்டு நடந்தாற்போலேபோனபடி தோற்றுகையால், அநந்தரம் அவ்விடத்திலே சூர்ப்பணகைவந்தது இருவர்க்கும் பிரிவுவருகைக்கு மூலமானபடியை நினைத்துத் திருத்தாயாரஞ்சுகிறாளென்று ஸங்கதி.

§ (பா) கையிலிருக்கிலும். (ச) ரா-அர-கக-கூ.

அந்வயம்காட்டுகிறூர் (அரக்கரித்யாதி). தன்னையாசைப்பட்டுவந்த ஸ்த்ரீயை மூக்கரிந்தாற்போலே இவளையும் செய்துவிடுகிறூரோ என்றஞ்சுகிறூளென்றூல் கீழ்ச்சொன்ன ப்ரணயித்வத்துக்கு குணஹாநிவாராதோ, இது ப்ரகரணத்தோடு சேரும்படியென்னென்னும் சங்கையை ஸம்வாதமுகத்தாலே யருளிச்செய்கிறூர் (பட்டரித்யாதி). (இத்தலைக்கு) பகவத்விஷயத்துக்கு. உடன்போக்கிலேபிறந்த ப்ரமாதமாவது - சக்ரவர்த்தித்திருமகனும் பிராட்டியும் கூடப்போகிறபோது சூர்ப்பணகைவந்ததேயாய், அவள்வந்து ப்ரமாதத்தை விளைத்தாற்போலே, இவர்களுடையபோக்கிலு மென்ன ப்ரமாதம்வருமோ என்று பயப்படுகிறூளென்று எம்பெருமானூர் நிர்வாஹம்; அத்தையருளிச்செய்கிறூர் (மூன்பித்யாதி). (புணர்ந்து) திருவயோத்யையிலே, (க) "ஸமாத்வாதச தத்ராஹம் - ஸமாத்வர்தசதத்ராஹம்" என்கிறபடியே ஸம்ஶ்லேஷித்து. அரக்கருடையகுலத்துக்கு, கொல்லிமலைப்பாவைபோலே கொண்டாடப்படுமவளான சூர்ப்பணகைதன்னை அவளுடைய வெவ்வியசினமடியாக மூக்கரிந்திட்ட மிடுக்கையுடையவன் விஷயத்தைக்கேட்டால் மெய்யேஅஞ்சுவன், இது வெஞ்சொல்கிடாய், நங்காய்! என்று வாக்யார்த்தம் கண்டுகொள்வது.

"பஞ்சிய" என்று விசேஷித்திருக்கவும், "மெல்" என்றதுக்குக் கருத்தருளிச்செயகிறூர் (இதித்யாதி). (இதுபடுக்கையில்) என்று சில ஸ்ரீகோசங்களில் பாடமுண்டு; (இதுகையில்) என்று சிலவற்றிலுமுண்டு; இப்போது, (இது) இவ்வடி, (கையிலிருக்கிலும்) மடியிலிருக்கிலும, என்றர்த்தம்கொள்வது. "பரக்கு" - பழியாய், அத்தால்வரும்பயமழிந்து என்று சப்தார்த்தமாயருளிச்செய்கிறூர் (பழியஞ்சாதே) என்று. பர - மிகவும், கழிந்து என்று பிரித்தருளிச்செய்கிறூர் (மிகவுமித்யாதி). (உபமாநம்) என்றது - வஞ்சிக்கொம்பும், மூங்கிலுமென்றபடி. ... ... ... (௩)

மூ.—ஏதவன்தொல் பிறப்பிளையவன் வளையூதி மன்னர்
தூதுவனாயவனூர் சொல்லுவீர்கள் சொல்லீரறியேன்
மாதவன்றன் துணையாநடந்தாள் தடஞ்சூழ்புறவில்
போதுவண்டாடு செம்மல் புனலாலி புகுவர்கொலோ. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அவன் | அந்தயுவாவின் | வளையூதி | (சத்ருக்களஞ்சும்படி) சங்கநாதம் செய்யுமவனாய் |
| தொல்பிறப்பு | பூர்வஜந்மமானது | மன்னர் | ராஜாக்களுக்கு |
| ஏது அறியேன் | க்ஷத்ரியஜந்மமோ இடையர் ஜந்மமோ ஈதென்றுநானறியமாட்டேன்; (ஆகிலும்) | தூதுவனாயவன் | தூதுபோனவனுமான அவனுடைய |
| இளையவன் | பாலிசன், | ஊர் | ஜந்மத்தை |

(க) ரா-ஸு-௩௩-௧அ.

| | |
|---|---|
| சொல்லுவீர்கள் | ஈதென்று அறிந்து சொல்ல வல்லவர்களே! |
| சொல்லீர் | உண்மையாக இதுவென்றுசொல்லுங்கள்; (ஆனால் என் பெண்ணோ) |
| மாதவன் | ஸ்ரீயப்பதியை |
| தன்துணையாநடந்தாள் | தனக்குஸஹாயமாகக் கொண்டுநடந்துபோனாள், (போன அவ்விருவரும்) |
| வண்டு | வண்டுகளானவை |
| தடஞ்சூழ் | தடாகங்களால் சூழப்பட்ட |
| புறவில் | பர்யந்தத்திலே அலர்ந்த |
| செம்மல்போது | பெரியபூக்களிலே |
| ஆடு | (மதுபாநத்துக்காக இழிந்து) ஆடாநின்றுள்ள |
| புனலாலி | நீர்வளம்நிறைந்த திருவாலியிலே |
| புகுவர்கொலோ | புகுவாரோ. (௪) |

வ்யா—நாலாம்பாட்டு. (ஏது அவன் தொல்பிறப்பு)† க்ஷத்ரிய ஜந்மமோ? இடையர் ஜந்மமோ? அறிகிலேன். (இளையவன்)† பாலிசன். (வளையூதி)† தான் நின்றிருந்தவிடத்தை வெளியிடுமவன். (மன்னர் தூதுவனாயவனூர்)† உகவாதாரிருந்தவிடத்தே வெறுங்கையே செல்லுமவனுடையவூர். (அவனூர் சொல்லுவீர்கள் சொல்லீரறியேன்)† க்ஷத்ரியஜந்மத்திலே பிறந்தானென்றாசைப்படுவார் இடையனாய்ப்பிறந்தானென்றாசைபபடுவாராய், ஆசைப்படாநின்றீர்கோள்; எனக்கு† இரண்டும் தோற்றுகிறதில்லை.

(மாதவனிதயாதி) "ஆழங்காலை மிதப்பென்று புத்திபண்ணினாள். †அளவுடையவர்களகப்பட்ட விஷயமென்றால், தனக்கு நிலமன்றென்று மீளவறியாதே போனாள். (தடஞ்சூழ்த்யாதி) அவ்வூரில் பூக்களலர்ந்தபோது தேன்வெள்ளத்தாலே வண்டுகளுக்கு இழிந்து பானம்பண்ணப்போகாது; கழியவலர்ந்து மதுவெள்ளம் அரையாறு பட்டாலாயிற்று வண்டுகளுக்குப் பாநம்பண்ணலாவது. கழியவலர்ந்த பூக்கள்தேடி வண்டுகள் மதுபாநம்பண்ணும் திருவாலியிலே புகுவர்கொலோ. போது - புதுபபூ. அப்போதலர்ந்தபூ. செம்மல் - பெருமையும், பழமையும், பூவும். ... ... ... (௪)

---

அரு.—நாலாம்பாட்டு. (ஏதவனித்யாதி), நங்கையானவள், "நீயேனஞ்சுகிறாய், அவன் ரகுகுலத்தில்பிறந்த ஆண்பிள்ளையன்றோ, விரோதிகளைக் கிழங்கெடுக்கவல்லவனன்கிடாய்" என்ன; அதுக்குத்தரமாக, அவன்பிறக்கனான சக்ரவர்த்தித்திருமகனோ இடையனோ எனக்குத் தெரிகிறதில்லை, நீங்கள் என்னச்சந்நிர அவன் க்ஷத்ரியன் என்றுசொன்னால் சொல்லுங்காள், எனக்கு நிர்த்தரிக்கப்போகிறதில்லை யென்கிறாளென்று ஸங்கதி.

"அவன் தொல்பிறப்பு-ஏது" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றித தாத்பர்யமருளிச்செய்கிறார் (க்ஷத்ரியேத்யாதி), நீயறிந்தபடிதானேதென்ன, சொ

ல்லுகிறதாகத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (பாலிசன்) என்று. விளைவு தறியாதே யொன்றைச்செய்யுமவனென்கை. இதெங்கே கண்டாயென்னச் சொல்லுகிறாளாகத் திருவுள்ளம்பற்றி, ஸ்ரீருக்மிணிப் பிராட்டிக்காக, அந்த புறச்சோலையிலே சிசுபாலாதிகளறியும்படி சங்கூதவில்லையோ என்னும் பாவத்தை யருளிச்செய்கிறார் (தானித்யாதி). (௧)* அதிர்குரல் முரசங்களன்றோ, விரோதிகள் மண்ணுண்ணார்களோவென்ன; ஆயுதங்களைப் பொகட்டுத் தூது போனவனன்றோ என்கிறாளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உசவாதாரித்யாதி). வெறுங்கையோடுபோகிலும் (௨) "கஞ்சன் குஞ்சிபிடித்தடித்த பிரான்" என்கிறபடியே - முடிக்கவல்ல குடியிற்பிறந்தவன்கிடாய் யாதவகுலத்தில் பிறந்தானென்ன; நீங்கள் வேண்டினபடிசொல்லுங்கோள்: எனக்கச்சந் தீருகைக்குடலல்ல வென்கிறாளென்றருளிச்செய்கிறார் (க்ஷத்ரியேத்யாதி). "ஊர்" என்றது - குடியாய், ஜந்மத்தைச்சொல்லுகிறது. (இரண்டும் தோற்றுகிறதில்லை) என்றது - இடையனானாலும் க்ஷத்ரியனானாலும் நிர்ப்பயமாயிருக்கைக்குடலாகத் தோற்றுகிறதில்லையென்கை.

க்ஷத்ரியனானாலென்பயம் தீராதென்ன "மாதவனித்யாதி" சொல்லுகிறாளாக உட்கருத்து (ஆழங்காலித்யாதி). பிராட்டி பாஹுபலத்தை விஸ்வஸித்துப்போயிருக்கச்செய்தேயும் அதுதானே மூக்கரிகைக்குடலாய்ப் பிரிவு விளைத்ததே; அவள், (௩) "ஶீதோ ப⁴வ - சீதோபவ" என்னவல்லவள், ப⁴ஸ்மீ ப⁴வ - பஸ்மீபவ" என்னவும் வல்லள்; இவள் "மடமான்" என்னும் பாவத்தையுமுட்கொண்டு கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (அளவித்யாதி). (௪)

மூ.—தாயெனை யென்றிரங்காள் தடந்தோளி தனக்கமைந்த
மாயனை மாதவனை மதித்தென்னை யகன்றவிவள்
வேயன தோள்விசிறிப் பெடையன்ன மென நடந்து
போயின பூங்கொடியாள் புனலாலி புகுவர்கொலோ. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தடம்தோளிஇவள் | பெரியதோள்களையுடையஇவள், | மாயனைமாதவனை | ஆஸ்சர்ய பூதனை ஸ்ரிய:பதியையே |
| எனை | மனம்வருந்தும் என்னை | மதித்து | தஞ்சமாகநினைத்து |
| தாய்என்று இரங்காள் | பெற்றதாயென்று க்ருபைபண்ணிப்பாராள்- | என்னையகன்று | என்னைத்தனியேவிட்டுநீங்கி |
| தனக்குஅமைந்த | தன்ஸௌந்தர்யாதி குணங்களுக்குத் தகுந்த ரூபலாவண்யாதிகளையுடையவளாகிய | வேயனதோள் விசிறி | மூங்கில்போன்றதோளைவீசிக்கொண்டு |
| | | பெடைஅன்னம்என | அன்னப்பேடைபோல் |
| | | நடந்துபோயின | அவன்பின்னையேநடந்துபோன |

(௧) தி-வாய்-௧௦-௯-௩, (௨) ௩-௧௦-௩. (௩) ரா-ஸு-

| | |
|---|---|
| பூங்கொடியாள் அழகியகொடிபோலு மிடையையுடைய என்பெண்ணும்(அவனும்) | புனல்ஆலி நீர்வளம்மிகுந்த திருவாலியிலே |
| | புகுவர்கொலோ புகுவாரோ. (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தாயெனையென்றிரங்காள்) தாய் வயிறெரியும் என்றிரங்குகிறிலள். (தடந்தோளி தனக்கமைந்தமாயனை) அவனுடைய ஸர்வாங்க ஸௌந்தர்யமும், இவளுடைய தோள பூகொன்றுக்கும் போருமத்தனை. (மாதவனைமதித்தென்னை யகன்றவிவள்) †ப்ரணயஸிரையில் ஶ்ரோத்ரியனென்னுமித்தை யொன்றையும்நினைத்து என்னைக் கைவிட்டவிவள். (வேயனதோள்விசிறி) மூங்கில்போன்றிருந்துள்ள தோள்வீசி. (பெடையன்னமெனநடந்து) வெறும் அன்னமென்னில்†ஆணுறுமென்று, (பெடையன்னம்) என்றாள். (போயினவித்யாதி) இருவருங்கூட ஜலக்ரீடைபண்ணி வர்த்திக்கலாம் தேசத்திலே புகுவர்கொலோ. ... ... (௫)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (தாயெனையித்யாதி). நீ "மாதவன்றன் துணையாநடந்தாள்" என்று வயிறுபிடிக்கிறதென், இப்படிப்பட்ட வுன்னைவிட்டு அவன்பின் போகைக்குஹேதுவென்னென்ன ; அவன் ஸௌந்தர்யத்தையேபார்த்து ப்ரணயித்வத்தைநச்சிநடந்தாள்கா ணென்கிறுளென்று ஸங்கதி.

" அகன்றவிவள்" என்றும், " அகன்றவன்பின்" என்றும் பாடத்வயமுண்டு ; அதிலே முந்தினபாடாநுகுணமாக வருளிச்செய்கிறார் (ப்ரணயேத்யாதி). மற்றைப்பாடம் - வ்யாக்யாநாந்தரஸித்தம். (ஆணுறும்) என்றது-ஆண் காறும் என்றாய், பும்ஸ்த்வகந்தமுண்டாமென்று சப்தார்த்தம். ... (௫

மூ—என்துணை யென்றெடுத்தேற் கிறையேனுமிரங்கிற்றிலள்
தன்துணையாயவென்றன் தனிமைக்கு மிரங்கிற்றிலள்
வன்துணை வானவர்க்காய் வரஞ்செற்றரங்கத்துறையும்
இன்துணைவ னொடும் போயெழிலாலி புகுவர்கொலோ. (௬)

| பதம். | உரை: | பதம். | உரை, |
|---|---|---|---|
| என்துணைஎன்று | எனக்குத்துணையென்று | என்தன்தனிமைக்கும் | நான்தனியேயிருப்பதற்காகவும் |
| எடுத்தேற்கு | பெற்றெடுத்தவெனக்[காக | இரங்கிற்றிலள் | இரக்கங்கொண்டிலள் (இப்படிப்பட்ட வென்பெண்) |
| இறையேனும் | கொஞ்சமாகிலும் [ள், | | |
| இரங்கிற்றிலள் | இரக்கங்கொண்டில | | |
| தன்துணைஆய | தனக்குத்துணையான | வானவர்க்கு | தேவதைகளுக்கு |

| | | | |
|---|---|---|---|
| வன்துணையாய் | வலியதுணையாகப் போய் | இன்துணைவனொடும்போய் | இஷ்டமானஸஹாயபூதனோடுங் கூடப்போய் (சேர்ந்துகொண்ட அவ்விருவரும்) |
| வரம்செற்று | இலங்கையிலுள்ளராக்ஷஸர்களின்வரபலத்தை அடக்கி | எழில்ஆலி | அழகியதிருவாலியிலே |
| அரங்கத்துஉறையும் | கோயிலிலேநித்யவாஸம்பண்ணுகிற | புகுவர்கொலோ | புகுவாரோ. (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (என்துணையித்யாதி)† எனக்குத் தஞ்சமான துணையென்று கொண்டாடிவளர்த்தேன் என்றொருசற்று மிரங்கிற்றிலள். (தன்துணையித்யாதி)† ஸ்நேஹமில்லையாகிலும்,நோவுபட்டாரை "ஐயோ!" என்று இரங்குவர்களிறே, அதுவும் செய்திலள்.

(வன்துணைவானவர்க்காய்) தேவர்களுக்காகத் தன்னைப்பேணாதே அம்புக்கிலக்காக்குகை வன்துணையாவது. (வரம்செற்று) தேவர்கள்கொடுத்த வரங்களையுமழித்து.† தங்கள் தலையாலுள்ளவையெல்லா மழித்தாலாகாதே அவன்துணையாவது. (அரங்கத்துறையுமித்யாதி)† நிரதிசயபோக்யனுமாய்†ஸுலபனுமாய் ரக்ஷகனுமானவனோடுகூட,† ராவணவதம்பண்ணி மீண்டெழுந்தருளுகிறபோது திருவயோத்யை கோடித்தாற்போலே, திருவாலியுங் கோடிக்கப்பண்ணிப் புகுகிறார்களிறே. ... ... ... (௬)

அரு.—ஆறும்பாட்டு. (என்னித்யாதி). "தாயெனையென்றிரங்காள்" என்றத்தை விவரிக்கிறதிப்பாட்டென்று ஸங்கதி.

பெண்பிள்ளை யானவள் தன்ஸ்நேஹத்தாலே இவளெனக்குத்துணையென்றும் எடுத்துவளர்த்தாளென்றும இரங்காமல்போனாளென்றும் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி). தனக்கு ஸ்நேஹமிலலாவிட்டாலும் தன்னையே துணையாகவெண்ணியிருக்கிற 'என்னுடைய தனிமைக்காகிலு மிரங்காமற்போனாளென்னும் பாவத்தை யருளிச்செய்கிறார் (ஸ்நேஹமித்யாதி).

ஸ்வாபதேசம்த்வநிக்கும்படி தாத்பர்யமருளிச்செய்கிறார் (தங்களித்யாதி). "இன்" என்றதினர்த்தம் (நிரதிசயேத்யாதி). "அரங்கத்து" என்றத்தால் பலிதம் (ஸுலபனுமாய்) என்றது. "எழில்" என்றதுக்கு பாவம் (ராவணேத்யாதி). ... ... ... ... ... (௬)

மூ —அன்னையுமத்தனு மென்றடியோமுக்கிரங்கிற்றிலள்
பின்னைதன் காதலன்றன் பெருந்தோள் நலம்பேணினளால்
மின்னையும் வஞ்சியையும் வென்றிலங்கு மிடையாள்நடந்து
புன்னையு மன்னமுஞ்சூழ் புனலாலி புகுவர்கொலோ. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| அன்னையும் | தாயும் | வென்று | தோற்பித்து |
| அத்தனும் | தமப்பனும் | இலங்கும் | விளங்காநின்றுள்ள |
| என்று | என்றுநினைத்து | இடையாள் | மத்யதேசத்தையுடையஎன்மகள் |
| அடியோமுக்கு | எங்கள்விஷயத்திலே | நடந்து | நடந்துபோய் (சேர்ந்துகொண்டஅவ்விருவரும்) |
| இரங்கிற்றிலள் | இரக்கங்கொண்டிலள், | | |
| பின்னைதன் | நப்பின்னைப்பிராட்டிக்கு | | |
| காதலன்தன் | நாயகனுடைய | புன்னையும் | புன்னைப்பொழிலும் |
| பெருந்தோள் நலம் | மஹாபுஜாலிங்கநஸுகத்தை | அன்னமும் | ஹம்ஸக்கூட்டங்களும் |
| | | சூழ் | சூழ்ந்த |
| பேணினள் | விரும்பினவளாய், | புனல் ஆலி | நீர்வளமுள்ளதிருவாலியிலே |
| மின்னையும்வஞ்சியையும் | மின்னலையும்வஞ்சிக்கொம்பையும் | புகுவர்கொலோ | புகுவாரோ. (௭) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (அன்னையுமித்யாதி) †போகநினைத்தால் பழியிட்டுப் போகவேணுமோ? †அடியோமான வெங்களைத் தாயும் தமப்பனுமென்று †பேரிட்டு இரங்கிற்றிலள். †நியாம்யரை நியாமகரென்று பேரிட்டுப் போகவேணுமோ? (பின்னையித்யாதி) †இங்கே யிருவரைக்கைவிட்டால் அங்கே யிருவரைப்பற்றவேணுமிறே. †நம்மை விடுகைக்கடி அங்கு அநுபாவ்ய விஷயத்தினுடைய பெருமையாகாதே.

(மின்னையுமித்யாதி) மின்னையும் வஞ்சிக்கொம்பையும் தோற்பிக்குமிடையையுடையவள் நடந்து. (புன்னையித்யாதி) ஸம்போகஸ்த்தாநங்களும் தன்னினங்களுமுள்ளவூரிலே புகுவர்கொலோ? ()

அரு.—எழாம்பாட்டு. (அன்னையுமித்யாதி)- கீழிரண்டுபாட்டிலும் - தாயென்றிரங்காமற்போனாளென்றுசொல்ல, (க) “ [illegible] - பிதரம்மாதரம்” என்று - விட்டுப்பற்றவேண்டும் விஷயமாகையாலே உங்களைவிட்டுப் போனாள், இதுக்கு நீ கரையவேணுமோ ? என்று நங்கைக்குக்கருத்தாக ; நானங்ஙன்நினைத்திருக்குமவளோ, வயிற்றில்பிறந்தாரையும் பெண்ணென்று எண்ணுவதுண்டோ, நாங்கள் பாதந்த்ரரன்றோவென்கிறாளென்று ஸங்கதி.

உட்கருத்து (போகவித்யாதி). சப்தார்த்தம் (அடியோமித்யாதி). பேரிடுகை-பழியென்கை. கீழ்வாக்யவிவரணம் (நியாமயரையித்யாதி); நப்பின்னைப்பிராட்டிக்குப்பித்தனாயிருக்கும் க்ருஷ்ணன் பெரியதோளழகை, பேணினள்-ஆசைப்பட்டாளென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (இங்கேயித்யாதி). ஆல் - அசை. “பெருந்தோள்” என்று விசேஷித்ததுக்கு பாவம் (நம்மையித்யாதி). ... ... ... (௭)

(க) கந்யத்ர-க-

மூ.—முற்றிலும்பைங்கிளியும் பந்துமூசலும் பேசுகின்ற
சிற்றில்மென்பூவையும் விட்டகன்ற செழுங்கோதைதன்னைப்
பெற்றிலேன் முற்றிழையைப் பிறப்பிலி பின்னேநடந்து
மற்றெலலாம் கைதொழப்போய் வயலாலி புகுவர்கொலோ. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முற்றிலும | முச்சிலேயும் | பெற்றிலன் | நான் கண்ணாற்காண ப்பெற்றிலேன்; (அவள்) |
| பைங்கிளியும் | பச்சைக்கிளியையும் | | |
| பந்தும் | கந்துகத்தையும் | | |
| ஊசலும் | உஞ்சலேயும் | மற்றெல்லாம் கைதொழ | ஸ்வவ்யதிரிக்தரெல்லாம் கண்டுஸேவிக்கும்படி |
| சிற்றில் | சிறுகூட்டிலிருந்து | | |
| பேசுகின்ற | பேசுகிற | | |
| மென்பூவையும் | ம்ருதுஸ்வபாவமான நாகணவாய்ப்பக்ஷியையும் | பிறப்பிலிபின்னே | ஹேயப்ரதிபடனானவன்பின்னே |
| விட்டுஅகன்ற | விட்டுநீங்கிப்புறம் போன | நடந்துபோய் | நடந்துசென்று (ஒன்றுசேர்ந்த அவ்விருவரும்) |
| செழுங்கோதை தன்னை | அழகியமாலேபோன்றவளாய் | வயல்ஆலி | ஸஸ்யஸம்ருத்தியையுடைய திருவாலியிலே |
| முற்றிழையை | பூர்ண ஆபரணமணிந்த என்பெண்ணை | புகுவர்கொலோ | புகுவாரோ. (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (முற்றிலித்யாதி) †சிறுகூட்டிலே நின்று பேசாநின்ற ம்ருதுஸ்வபாவமான பூவையையும் விட்டகன்ற. (செழுங்கோதைதன்னை) †லீலோபகரணங்களைவிட்டு அவனைப்பற்றினபின்பு உடம்பிலே பிறந்த பௌஷ்கல்யம். (பெற்றிலேன் முற்றிழையை) †முன்னேபோகவிட்டு, கடைப்பணியும் கொக்குவாய்க் கூட்டமும் கண்டு பின்னே போகப்பெற்றிலேன்.

(பிறப்பிலி பின்னேநடந்து) "உனக்கிதுகுணஹாநிகாண்" என்று சொல்லி மீட்கைக்குமொரு பிறப்புடையனன்றிக்கே யிருக்கிறவன்பின்னேநடந்து. (மற்றெல்லாம் கைதொழப்போய்) †தாயான குற்றத்தாலே எனக்கொருத்திக்குமிறே தொழவொண்ணாதது, அல்லாதார்க்கெல்லாம் தொழுதுபின்னே போகலாமிறே. (வயலாலிபுகுவர்கொலோ) தன்னைக்காண்பார்க்குக் காட்சிகொடுக்கவிடமுள்ள தேசத்திலேபுகுமோ? அங்ஙனன்றிக்கே, எலலாபோகங்களுமுண்டாப்படியான தேசமென்னவுமாம். ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (முற்றிலித்யாதி). நீ இப்போதுவிட்டுப்போன பின்பு, "அடிபோமுக்கு" என்றுசொல்லுமதத்தனைபோக்கி, அவள் நாயகனை வேண்டிப்போகவொருப்பட்டபோது "படிகடந்து புறப்படுகை குலமர்யாதைக்குப்போராது காண்" என்று தகைய வில்லேயே, ஆகையால் சொல்லாதே

நடந்தாளென்னை; ஆகில் என்னைப்போலே நியாமகோடிகடிதங்களன்றே லீலோபகரணங்கள், அவற்றையும் விட்டுப்போனாளென்கிறாளென்று ஸங்கதி.

முற்றிலும் - முச்சிலையும், பைங்கிளியும் - பச்சைக்கிளியையும், பந்தையும், ஊசலும் - ஊஞ்சலையுமென்றர்த்தம் கண்டுகொள்வதென்றவிவக்ஷித்து, "பேசுகின்ற, இத்யாதிக்கர்த்தமருளிச்செய்கிறார் (சிறகூட்டிலேயித்யாதி). செழுங்கோதை - அழகியமாலைபோன்ற பெண்பிள்ளையென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (லீலேத்யாதி). இவை முற்றமுடையவளைப் பெற்றிலேனென்றால் பெற்றவளான தான் அங்ஙன் சொல்லவொண்ணாதென்று (பின்னேபோக) என்று கூட்டியருளிச்செய்கிறார் (முன்னேயித்யாதி).

கீழ்ப்பாட்டில், "அடியோமுக்கு" என்றவள் இங்கே தாயாகை - தொழக்கூடாமைக்குடலென்று, மற்றெல்லாரும் தொழப்போயினாளென்கிறாள், இதுக்குக்கருத்து - ஸ்வரூபஜ்ஞானத்தாலே பகவத்விஷயத்தில் கைவைத்தவளென்று எனக்கும் தொழலாயிருந்தாலும், வழிநடையாகையாலே நாட்டார்க்காகத்தாயானமுறையிலே நிற்கவேண்டிற்றே! என்றுசொல்லுகிறாளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (தாயானவித்யாதி). ... ... (௮)

௯.—காவியங் கண்ணியெண்ணில் கடிமாமலர்ப் பாவையொப்பாள்
பாவியேன் பெற்றமையால் பணைத்தோளி பரக்கழிந்து
தூவிசேரன்னமன்ன நடையாள் நெடுமாலொடும்போய்
வாவியந்தண்பணைசூழ் வயலாலி புகுவர்கொலோ. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காவியம்கண்ணி | காவிபோலே அழகிய கண்ணையுடையவளாய் | பணைத்தோளி | மூங்கில்போன்றதிருத்தோள்களையுடையவளாகிய என்பெண் |
| எண்ணில் | விசாரிக்கப்புகில் | | |
| கடிமாமலர் | பரிமளம்மிக்க தாமரைப்பூவில வஸிக்கிற | பாவியேன் | பாபிஷ்ட்டையான நான் ல் |
| | | பெற்றமையால் | பெற்றதோஷத்தினு |
| பாவையொப்பாள் | பெரியபிராட்டியாரை ஒப்பவளாய் | பரக்கு அழிந்து | அடக்கம் சிறிதுமில்லாமல் |
| தூவிசேர் | இறகையுடைய | நெடுமாலொடும் | தீர்க்கவ்யாமோஹமுடையவனோடு |
| அன்னம்அன்ன | அன்னப்பெடையோடு ஸத்ருசமான | போய் | தனியேபோய் (ஒன்றுசேர்ந்த இருவரும்) |
| நடையாள் | நடையையுடையவளாய் | | |
| | | வாவி | தடாகங்களும |

| | | | |
|---|---|---|---|
| தண் அம்பணை | குளிர்ந்து அழகியநீர் நிலங்களும் | ஆலி | திருவாலியிலே |
| சூழ் | சுற்றும் சூழ்ந்த | புகுவர்கொலோ | புகுவாரோ என்னவோ? (கூ) |
| வயல் | ஸஸ்யஸம்ருத்தியையுடைய | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (காவியித்யாதி) †ஈஶ்வரனிற்காட்டில் பிராட்டி * அஸிதேக்ஷணையென்னுமேற்றத்தையுடையளானாற்போலே பிராட்டியிலேற்றமுமிவளுக்கு. (காவியங்கண்ணி) என்று இருவரையும் சேர அநுபவிக்கிற கண்ணிறே இவளுடையகண்கள். (பாவியேனித்யாதி)†என்வயிற்றில் பிறக்கையிறே இவளுக்குத் தனியே போகவேண்டிற்று. (தூவிசேரித்யாதி)† நடையாலே பிச்சேற்ற வல்லவள். (நெடுமாலொடும்போய்) நடைக்குப் பிச்சேறி வ்யாமோஹிக்குமவன். (வாவியித்யாதி)† ஸஹநாஸஹிக்ரியைபண்ணிவிளையாடலாம் தேசத்திலே புகுவர்கொலோ? ... .... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (காவியித்யாதி), "இப்படி பெற்றாரையும் உற்றாரையும்விட்டு லீலோபகரணங்களையும் காற்கடைகொண்டு, உன்மகளைப்போலே போருவாருண்டோ" என்று நகைபழியிட; அதுக்கு, பிறந்தகத்தையும் திருவயோத்யையில் லீலோபகரணங்களையும்விட்டு. (க) "யஸ்த்வயா ஸஹ ஸஸ்வர்க்க:-யஸ்த்வயாஸஹ ஸஸ்வர்க்க:" என்று போனவளைப்போலே போனாள், என்செய்கேன், பரக்கழிந்தாளென்கிறாளென்றுஸங்கதி.

காவியிற்காட்டிலும்-கருநெய்தலிற்காட்டிலும், அழகியகண்ணுடையவளென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஈஶ்வரனித்யாதி). பிராட்டி, தாஸதாஸீஜநங்களைக்கொடுத்தனுப்பவும், இளையபெருமாள் குறைப்பட்டுக்கொண்டு வரவுமிறே தொடர்ந்துபோனாள், உன் பெண்ணைப்போலே ஒருவரோடும் சொல்லாதே தனியே நடந்தாளோவென்ன "பாவியேனித்யாதி" சொல்லுகிறாளென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்வயிற்றிலித்யாதி). போனாளாகில்,நீ"வயலாலிபுகுவர்கொலோ" என்றுபுலம்புவானென்னென்ன, "தூவிசேரித்யாதி" சொல்லுகிறாளென்றுதாத்பர்யமருளிச்செய்கிறார் (நடையாலேயித்யாதி). இத்தால் - அவன் புரிந்துபார்த்து இவள் நடையில் பித்தேறி முன்னடிதோற்றாதேயிருக்கையால் "இனி திருவாலியில் சேர்த்துவிடுவாரில்லை" என்று புலம்புகிறேனென்றபடி, (ஸஹநா ஸஹிக்ரியை பண்ணி) என்றது - புஷ்பங்களைக்கொண்டு ஒன்றுக்கொன்றெறிந்து ஜலக்ரீடைபண்ணியென்கை. ... ... ... ... (கூ)

மூ.—தாய்மனம் நின்றிரங்கத் தனியே நெடுமால்துணையாய்
போயின பூங்கொடியாள் புனலாலி புகுவரென்று
காய்சின வேற் கலியனொலிசெய் தமிழ்மாலைபத்தும்
மேவிய நெஞ்சுடையார் தஞ்சமாவது விண்ணுலகே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தாய் | தாயானவள் | புகுவரென்று | புகுவரோஎன்னவோ என்று |
| நின்றுமனம் இரங்க | வயிறெரிந்திரங்காநிற்க | காய்சினம் | ப்ரதிபக்ஷத்தின்மேல் மிக்ககோபத்தையும் |
| நெடுமால் | தன்னிலுங்காட்டில் வ்யாமோஹத்தால் கலங்கியிருக்கிறவனை | வேல் | அவற்றைநிரஸிக்கத்தக்கவேலையுமுடைய |
| துணையா | ஸஹாயமாகக்கொண்டு | கலியன் | ஆழ்வார் |
| தனியேபோயின | ஸஜாதீயரில்ஒருவரும் துணையின்றிப்போன | ஒலிசெய் | அருளிச்செய்த |
| | | தமிழ்மாலைபத்தும் | தமிழ்த்தொடைபத்தையும் |
| பூங்கொடியாள் | அழகியகொடியையொத்தஎன்மகளும்(அவனும்ஆகிய இருவரும்) | மேவியநெஞ்சுடையார் | ஸஹ்ருதயமாக அப்யஸிக்கவல்லவர்க்கு |
| | | விண்ணுலகு | பரமபதத்திலுள்ளார்க்கு நிர்வாஹகனானவன் |
| புனல்ஆலி | நீர்வளம்மிகுந்த திருவாலியிலே | தஞ்சமாவது | ரக்ஷகனும்(பரமபதத்தைக்கொடுக்கும்). |

வ்யா—(தாய்மனமித்யாதி)தாயார்வயிறெரிந்திரங்காநிற்க,†தன்னிலுங்காட்டில் வ்யாமோஹத்தாலே கலங்கியிருக்கிறவன் துணையாகப்போன†விலக்ஷணையான பெண்பிள்ளை, ஜல ஸம்ருத்தியையுடைத்தான திருவாலியிலே †புகுமென்று, பிராட்டிபேச்சாலேயாகையன்றிக்கே திருத்தாயார் பேச்சாம்படி, பகவத்விஷயத்திலே ப்ரவணராய், †ப்ரதிபக்ஷத்திலே சினத்தையுடையராய், அத்தைத் துணிக்கவல்லவேலையுடையரான திருமங்கையாழ்வாரருளிச்செய்த. (பத்தும்மேவிய நெஞ்சுடையார்க்குத் தஞ்சமாவது விண்ணுலகே) †இப்பத்தும் ஸஹ்ருதயமாகக் கற்கவல்லார்க்குப் பரமபதம் நிஶ்சிதம். †தாயார் தனிவழியேபோனளென்று பயப்படப்போகவேண்டா,ஆதிவாஹிக கணத்தோடே †தானே வழிகாட்டிக்கொடுபோம்.... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அரு.—நிகமம். (தாய்மனமித்யாதி). "நெடு" என்றதினர்த்தம் (தன்னிலுமித்யாதி), அத்தால் - இவன் துணையாகமாட்டானென்றுகருத்து. "பூ" என்று - அழகாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (விலக்ஷணையான) என்று. "புகுவர்" என்ற பஹுவசநம் பூஜ்யோக்தியென்று விவக்ஷித்து, (புகும்) என்கிறார். காயாநின்றுள்ள சினத்தையுடையாரென்று சப்தார்த்தமாய், அதுக்கு விஷயம் ப்ரதிபக்ஷமாகையாலேயருளிச்செய்கிறார் (ப்ரதிபக்ஷத்திலே) என்று. "விண்ணுலகு" என்று விண்ணிலுள்ளார்க்கு நிர்வாஹகனென்றாய், தஞ்சமாவது - பரமபதத்தைக்கொடுப்பனென்று விவக்ஷித்து பலிதார்த்தமருளிச்செய்கிறார் (இப்பத்துமித்யாதி). தஞ்சமாம் ப்ரகாரத்தையருளிச்செய்கிறார் (தாயாரித்யாதி வாக்யத்வயத்தாலே). (தானே) எம்பெருமானே.(க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றும்பத்து, ஏழாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி, ௩-ம் பத்து, அ-ம் திருமொழி, நந்தாவிளக்கு ப்ரவேசம்.



வ்யா.—†பகவத்விஷயத்தில் தமக்குப்பிறந்த ப்ராவண்யாதிசயத்தைப் பார்ஶ்வஸ்த்தர்பேச்சாலேயநுபவித்தார்; அதாகிறது - மாதாபிதாக்களுக்காகாதே வயலாலிமணவாளனுக்கேயாயிருக்கிற இருப்பைத் திருத்தாயார்பேச்சாலே அநுபவித்தாராய்நின்றார்கீழ்; இப்படி திருவாலியில்புக்கு அநுபவித்தவிடத்திலும் ஆராமையாலே தமக்குப்பிறந்த ப்ராவண்யம், உகந்தவிஷயத்தைக் கண்ணாலே கண்டு ஸ்பர்சாதிகளை அபேக்ஷிக்குமாபோலே †அநுபவிக்கையிலே மூட்ட, அப்போதே பெருமையாலே திருவுள்ளம்பதற, திருவுள்ளத்தைக்கொண்டாடி, "அப்பேறு பெறுந்தனையும் இங்கேயநுபவிக்கைக்காகவன்றோ உகந்தருளின நிலங்கள்" என்று, ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்குத்தந்தாமபிமதங்களபேக்ஷிக்கலாய், அவ்வோகாலங்களிலிருந்தாரெல்லார்க்கும் எல்லா இழவுகளும் தீர்க்கைக்காகத் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், அங்கேசென்றநுபவி என்று திருவுள்ளத்தை †அநுசாஸிக்கிறார் ... *

அரு.—நந்தாவிளக்கின்ப்ரவேசம். திருவாலியிலெம்பெருமானை யநுபவித்தும் த்ருப்தி பிறவாமையாலே திருமணிமாடக்கோயிலிலே அநுபவிக்கிறாரென்னும் ஸங்கதியை வ்ருத்தவர்த்திஷ்யமாணசங்ரஹேண வருளிச்செய்கிறார் (பகவதித்யாதி). (அநுபவிக்கையிலே) தழுவிமுழுசிப்பரிமாறுகையிலே. (அநுசாஸிக்கிறார்) விதிக்கிறார். ... ... ...

மூ.—நந்தாவிளக்கே யளத்தற்கரியாய்
நரநாரணனே கருமாமுகில்போ
லெந்தாயெமக்கே யருளாயெனநின்
றிமையோர் பரவுமிடம் எத்திசையும்
கந்தாரமந்தேனிசை பாட மாடே
களிவண்டு மிழற்ற நிழல் துதைந்து
மந்தாரநின்று மணமல்கு நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (௧)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நந்தாவிளக்கே | நித்யமாய் ஸ்வயம்ப்ரகாசமான ஜ்ஞாநத்தை ஸ்வரூபமாகவுடையவனே! | அம்தேன் | அழகியவண்டுகள் |
| அளத்தற்குஅரியாய் | பரிச்சேதிக்க அசக்யனானவனே! | எத்திசையும் | ஸர்வதிக்குக்களிலும் |
| நரநாரணனே | நரநாராயணாவதாரமெடுத்தவனே! | கந்தாரம்இசைபாட | தேவகாந்தாரி ராகம் பாடவும் |
| கருமாமுகில் போல்எந்தாய் | கறுத்த மஹாமேகம் போன்ற திருமேனியையுடைய என்ஸ்வாமீ! | களிவண்டு | [கீள் மதுபாநமத்தப்ரமரங் |
| எமக்கே | அநுகூலராய் அநந்யசரணரான எங்களுக்கே | மாடே | பர்யந்தத்திலே |
| அருளாயென | ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணுமென் [று | மிழற்ற | ஆளத்திவைக்கவும் |
| இமையோர் | தேவதைகள் | நிழல்துதைந்து | அவ்வண்டுகளுக்கு நிழலைக்கொடுத்து |
| நின்று | பூமியில்வந்துநின்று | மந்தாரம்நின்று மணம்மல்கும் | மந்தார வ்ருக்ஷங்கள் எல்லாக்காலத்திலும் மலர்ந்துநின்று பரிமளம் ஸம்ருத்தமாகாநிற்கிற |
| பரவும்இடம் | ஸ்தோத்ராதிகளைப் பண்ணி ஆஶ்ரயிக்கிற ஸ்தாநமாய், | நாங்கூர் | திருநாங்கூரிலேயுள்ள |
| | | மணிமாடக் கோயில் | திருமணிமாடக்கோயிலை |
| | | என்மனனே | என்மநஸ்ஸே! |
| | | வணங்கு | ஆஶ்ரயி. (க) |

வ்யா.—முதற்பாட்டு. (நந்தாவிளக்கே) †ப்ரஹ்மாதிகள், "எங்களபிமதங்கள் செய்யவேணும்" என்று ப்ரார்த்திக்கிறதிருமணிமாடக்கோயிலிலே நெஞ்சே! நீயும் சென்றநுபவியென்கிறார்.

(நந்தாவிளக்கே)விச்சேதியாதவிளக்கு. ப்ரபா ப்ரபாவான்களாயிருக்கையிறே†விளக்காகிறது.நித்யமாய் ஸ்வயம்ப்ரகாசமான†ஜ்ஞாநத்தை ஸ்வரூபமாகவுடையவனென்றபடி. (அளத்தற்கரியாய்)†விபுத்வத்தாலும், மற்றுமுண்டான குணவிபூத்யாதிகளாலும், அபரிச்சேத்யனானவனே!†"(க)'సత్యంజ్ఞానమనన్తంబ్రహ్మ - ஸத்யம்ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' என்கிறார்காண்" என்று ஆழ்வான்பணிக்கும்.† இப்படியிருக்கிறவன்றான் நரநாராயணப்ராதுர்ப்பாவத்தாலே தன்னை வெளியிட்டபடி. (கருமாமுகில்போலெந்தாய்) அப்போதை யநுபவயோக்யமான வடிவு. †அன்றிக்கே, கீழ்ச்சொன்ன ஸ்வபாவங்களிற்காட்டில் ஆகர்ஷகமாய் மேகம்போலே ஶ்ரமஹரமானவடிவைக் காட்டி எங்களை யநந்யார்ஹமாக்கினவனே! (எமக்கேயருளாயித்யாதி). (உ) "దేవానాం దానవానాంచ సామాన్యమధిదైవతమ్ - தேவாநாம்

(க) தை - ஆந.  (உ) ஜி - ஸ்தோ - உ.

தாநவாநாம்ச ஸாமாந்யமதிதைவதம்'' என்கிற ஸம்பந்தஸாமாந்யத்தைப்பார்த்து அஸுரர்களுக் கருள்செய்கை தவிர்ந்து அநுகூலராய் அநந்யசரணரான எங்களுக்கே ப்ரஸாதத்தைப் பண்ணியருளவேணுமென்று தேவர்கள்வந்து ஸ்தோத்ராதிகளைப்பண்ணி யாஶ்ரயிக்கிற ஸ்தாநம்.

(எத்திசையுமித்யாதி). பார்த்த பார்த்த விடமெங்கும் கந்தாரம் என்கிறபண்ணை, அந்தேனுண்டு - தர்சநீயமான வடிவையுடைத்தாய் தேனென்று பேரையுடைத்தான வண்டுகளானவை மதுபாநம்பண்ணி யிசைசொல்ல. (மாடேயித்யாதி) அதினுடைய பர்யந்தத்தே, ஸம்ஶ்லேஷத்தாலே ஹ்ருஷ்டமாய்க் களிக்கிற வண்டுகளானவை. (மிழற்ற) நிரம்பா மென்சொல்லாலே யாளத்திவைக்க. (நிழல்துதைந்து) அவற்றுக்குபோக (ஶ்ரமா) யோக்யமாம்படி நிழலைச்செறியப் பண்ணி; பாடுவார்க்குக்†காவணமிட்டுக் கொடுப்பாரைபபோலே. மந்தாரமென்று - கல்பகவ்ருக்ஷத்திலே யொருவிசேஷம். எல்லாக்காலமும்நின்று மணத்தை மிகவுமுண்டாக்காநின்றுள்ள. (மணம்நல்கும்) என்னவுமாம். பாடுவார்க்குப் பரிசில் கொடுப்பாரைப்போலே கந்தத்ரவ்யங்களைக் கொடாநின்றது. இப்படிப்பட்ட திருநாங்கூரில் திருமணிமாடக்கோயிலை யாஶ்ரயியென்கிறார். ... .(க)

---

அரு.—முதற்பாட்டு. (நந்தாவித்யாதி) பாட்டுகளெல்லாம் தொகுத்த பாவம் (ப்ரஹ்மாதிகளித்யாதி).

(விளக்காகிறது) என்றவநந்தரம், ஆகையால் என்றுசேஷம். (ஜ்ஞாநத்தை) என்றவநந்தரம், குணமாகவும் ஸ்வரூபமாகவும் என்று கூட்டுவது. அளத்தற்கு - அளக்கைக்கு - பரிச்சேதிக்கைக்கு, அரியாய் - அருமைப்படும்படி யிருக்கிறவனேயென்றாய், அர்த்தமருளிச்செய்கிறார் (விபுத்வேத்யாதி). ஆதிசப்தத்தாலே விக்ரஹசேஷ்டிதங்களைச் சொல்லுகிறது. (ஸத்யம்) ஸ்வரூபதோ குணதஸ்ஸதைகரூபம் என்றாய், "நந்தா" என்றதினர்த்தம், ஜ்ஞாநம் - ஸ்வயம்ப்ரகாசம்; இதுவும் ஸ்ரூபதோ குணதஸ்ஸ்வயம்ப்ரகாசம் என்றாய், "விளக்கு" என்றபதார்த்தம். "அநந்தம்" என்றத்தாலும் - ஸ்வரூபதோ குணதோ ரூபாதிதஶ்ச பரிச்சேதராஹித்யமாய், "அளத்தற்கரியாய்" என்றதினர்த்தமென்று விவக்ஷித்து, ஸம்வாதம் காட்டுகிறார் (ஸத்யமித்யாதி). இப்பதங்களாலே பரத்வம் பலித்ததாய், இத்தால் ஆஶ்ரயணோபயோகியான ஸௌலப்யம் சொல்லிற்றென்கிறார் (இப்படியித்யாதி). நரநாரணரூயிருக்கும்போதையில் வடிவாகக் கீழருளிச்செய்து, மணிமாடக்கோயிலெம்பெருமான் வடிவாக அர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி).

(பண்ணை - இசைசொல்ல) என்றந்வயம். (காவணம்) பந்தல். ... (க)

மூ —முதலைத் தனிமா முரண்தீர வன்று
முதுநீர் தடத்துச் செங்கண் வேழமுய்ய
விதலைத் தலைச் சென்றதற்கேயுதவி
வினை தீர்த்த வம்மானிடம் விண்ணணவும்
பகலைக்கபோதத்தொளிமாட நெற்றிப்
பவளக்கொழுங்கால பைங்கால்புறவம்
மதலைத்தலை மென் பெடை கூடு நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | அக்காலத்திலே | ஒளி | இழைத்த ரத்நகாந்திகளையுமுடைத்தான |
| முதுநீர் | பழையநீரையுடைய | மாடநெற்றி | உப்பரிக்கைகள் மேலே |
| தடத்து | தடாகத்திலே (யானையின்காலைக் கவ்வின) | பவளக்கொழுங்கால | பவளத்தின் கொழுவிதான காலைப்போன்ற |
| தனிமாமுதலை | ஒப்பற்றபெரிய முதலையினது | பைங்கால்புறவம் | பசுமையான காலையுடைய புறுவானது |
| முரண்தீர | கரைகாணவொண்ணாதமிடுக்கறும்படியாகவும், | மதலைத்தலை | பிள்ளைத்தூண்களின் தலையிலே |
| செங்கண்வேழம் | சீற்றத்தால் சிவந்தகண்களையுடைய அவ்வானை [கவும் | மென்பெடை | ம்ருதுஸ்வபாவமான தன்பேடையோடே |
| உய்ய | உஜ்ஜீவிக்கும்படி யா | கூடும் | கூடிக்கலந்திருக்கிற |
| விதலைத்தலைச் சென்று | வ்யஸநப்படுகிற தசையிலேவந்து [ரித்து | நாங்கூர் | திருநாங்கூரிலேயுள்ள |
| அதற்கே உதவி | அந்த யானைக்கு உபக | மணிமாடக்கோயில் | திருமணிமாடக்கோயிலை |
| வினைதீர்த்த | அதின் வ்யஸநத்தை நீக்கின | என்மனனே | என் மநஸ்ஸே! |
| அம்மான் | ஸர்வேஸ்வரனுடைய | வணங்கு | நீபோய் ஆஸ்ரயி. () |
| இடம் | ஸ்த்தாநமாய், [யும் | | |
| விண் அணைவும் | ஸ்வர்க்கத்தையளாவி | | |
| பகலை | கலசங்களையும் | | |
| கபோதம் | கபோத ஒழுங்குகளையும் | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (முதலையித்யாதி) †ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆபத்துப்போக்கினவன் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! உன் து:கமெல்லாங்கெட அங்கேசென்று பணியென்கிறார்.

(முதலையித்யாதி) முதலையினுடைய, உபமாநரஹிதமாய், கரைகாணவொண்ணாத மிடுக்கறும்படிக்கீடாக. (முதுநீர்த்தடத்து)

பழைதான நீரையுடைத்தென்று ப்ரஸித்தமிறே. (செங்கண்வேழ முய்ய) மிடுக்கையுடைத்தாயிருக்கச்செய்தே தன்னிலமல்லாமையாலே அம்மிடுக்குக்கொண்டு வ்யாபரிக்கவொண்ணாதபடியால் வந்த சீற்றத்தாலே சிவந்த கண்ணையுடைத்தான ஆனை உய்யும்படி. செங்கணென்று - †செயலறுதியாலே சிவந்த கண்ணையுடைய ஆனையென்றுமாம். (சென்று) கைகழிந்ததென்று மீளாதே ஆபத்திலேயுதவி. (விதலைத்தலை) †விதனப்படுகிறவளவிலே. (வினைதீர்த்தவம்மானிடம்) அதினுடைய வ்யஸநத்தைப்போக்கின ஸர்வேஶ்வரனுடைய ஸ்தாநம். வினைதீர்க்கையாகிறது - அது நினைத்தபடியே திருவடிகளிலே பூவைப் பணிமாறலாம்படிசென்று முகங்காட்டுகை.

(விண்ணணவுமித்யாதி). ஸ்வர்க்கத்திலேசென்ற ஓக்கத்தையுடைத்தாய், †கும்பநிரைகளையும் கபோதவொழுங்குகளையுமுடைத்தாய், பொன்னாலும் ரத்நங்களாலும் சமைக்கையாலே ஒளியையுடைத்தான மாடத்தினுடைய நெற்றியுண்டு -†புலிமுகங்களில், பதலையென்று- கும்ப நிரை. (பவளக்கொழுங்கால பைங்கால் புறவம்) பவளம்போலே சிவந்து கொழுவிதான காலையுடைத்தாய், பசுமையையுடைத்தான புறுவானது. (மதலைத்தலை) †பிள்ளைத்தூண்களின தலையிலே. (மென்பெடைகூடும்) ஸம்ஶ்லேஷிக்கவும் பொறாத ம்ருதுவான பேடையோடேகூடக் கலந்து வர்த்திக்கிற திருநாங்கூரிலே. (௨)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (முதலையித்யாதி) ஸங்கதி ஸூசிப்பிக்கிறார் (ஸ்ரீகஜேந்த்ரேத்யாதி). "ப்ரஹ்மாதிகளான ப்ரயோஜநாந்தரபராஶ்ரயிக்குமளவன்றிக்கே" என்று வாக்யாதியில் கூட்டுவது.

(செயலறுதியாலே) என்றவநந்தரம், வந்ததுக்கத்தாலே என்றுகூட்டுவது. (விதனப்படுகிற) வ்யஸநப்படுகிற.

(கும்பநிரை) மாடங்களின்மேலில் மகுடாகாரங்களான கும்பபங்க்தி. (புலிமுகங்களில்) என்றதுக்கு, (புறுவானது) என்றத்தோடு அந்வயம். (பிள்ளைத்தூண்) தூண்மேலேநிற்கிற சிறுதூண். ... ... (௨)

மூ.—கொலைப்புண் டலைக் குன்றமொன்றுய்ய வன்று
கொடு மா முதலைக் கிடர்செய்து கொங்கா
ரிலைப் புண்டரீகத் தவளின்பமன்போ
டணைந்திட்டவம்மானிடம் ஆளரியா
லலைப்புண்ட யானை மருப்பு மகிலு
மணிமுத்தும் வெண்சாமரையோடு பொன்னி
மலைப்பண்ட மண்டத் திரையுந்து நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| அன்று | அக்காலத்தில் |
| கொலை | கொலைத்தொழிலையும் |
| புண்தலை | பாகன் தோட்டியால் குத்துண்டபுண் தலையையுமுடைய |
| குன்றம்ஒன்று | ஓர்பெருமலைபோன்ற கஜேந்த்ராழ்வான் |
| உய்ய | உஜ்ஜீவிக்கும்படியாக |
| கொடுமாமுதலைக்கு | (அதின் காலைக் கவ்வின)க்ரௌர்யத்தையும் மிக்கபலத்தையுமுடைத்தான முதலைக்கு |
| இடர்செய்து | துக்கத்தைப்பண்ணி * |
| கொங்குஇலை ஆர் | தேனும் இலைகளும் மிக்கிருந்துள்ள |
| புண்டரீகத்தவள் | தாமரைப்பூவிலிருக்கும் பெரியபிராட்டியாருடைய |
| இன்பம் | ஸம்ஶ்லேஷ ஸுகத்தை |
| அன்போடு அணைந்திட்ட | ஸ்நேஹாதிக்யத்தோடநுபவித்துக் கொடுவர்த்திக்கிற |

| பதம். | உரை. |
|---|---|
| அம்மான் | ஸர்வஸ்வாமியானவனது |
| இடம் | ஸ்த்தாநமாய், |
| பொன்னி | காவேரியானது |
| ஆள்அரியால் | பௌருஷமுள்ளஸிம்ஹங்களாலே |
| அலைப்புண்ட | ஸம்ஹரிக்கப்பட்ட |
| யானை | யானைகளினுடைய |
| மருப்பும் | தந்தங்களையும் |
| அகிலும் | அகருவ்ருக்ஷங்களையும் |
| அணிமுத்தும் | அழகியமுத்துக்களையும் |
| வெண்சாமரையோடு | வெளுத்த சாமரங்களோடுகூட |
| மலைப்பண்டம் அண்ட | பர்வதங்களில் மற்றுமுண்டான வஸ்துக்களையெல்லாம் |
| திரைஉந்து | அலைகளாலே தள்ளிக்கொண்டுவந்து கொடுக்கிற |

நாங்கூர் மணிமாடக்கோயில் என்மனனே! வணங்கு. (௩)

வ்யா.—மூன்றாம்பாட்டு. †ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு விரோதியான முதலையைப்போக்க அத்தாலே ப்ரீதையான பிராட்டி காவதத்தில்போலேயணைக்க, அவளோட்டை ஸம்ஶ்லேஷத்தைப்பெற்ற எம்பெருமான் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அங்கேசென்றநுபவியென்கிறார்.

(கொலைப்புண்தலைக்குன்றமொன்று) கொலை - கொலைத்தொழிலையும், புண்ணுருத்தலையையுமுடைய, குன்றம்போலேயிருக்கிற ஆனையுண்டு - ஸ்ரீகஜேந்த்ராழ்வான். †துறோட்டியிட்டுக்கொத்துகையாலே புண்ணுமென்னுதல்; காட்டானையாகையாலே ஆனைகளோடேபொருது புண்ணுயிருத்தல்;†ஜாதிப்பண்பாகையாலே சொல்லிற்றாகவுமாம். (உய்ய) †அதிடர்பட்டவன்று அது உஜ்ஜீவிக்கும்படியாக. (கொடுமாமுதலைக்கிடர் செய்து) க்ரௌர்யத்தையும் மிக்கபலத்தையுமுடைத்தான முதலைக்கு துக்கத்தைப்பண்ணி. (கொங்காரித்யாதி) ப்ரஜைகளினுடைய துக்கத்தைப்போக்கித் தாய் பாடே முகம்

பெறுவாரைப்போலே. (கொங்கார்) கொங்கென்று - தேனுதல், பரிமளமாதல். தேனாலே மிக்கிருப்பதாய். (இலைப்புண்டரீகத்து). ஸ்ரமஹரமான இலையையுடைத்தான தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய. (அவளின்பமித்யாதி). பெரிய பிராட்டியாரோட்டை ஸம்ஶ்லேஷஸுகத்தை, தன்னுடைய ப்ரேமமுண்டு - ஸ்நேஹம், அதனோடேகூட அநுபவித்த ஸர்வேஶ்வரனுடைய ஸ்தாநம்.

(ஆளரியித்யாதி). ஆண்பிள்ளைத்தனத்தையுடைத்தான ஸிம்ஹங்களானவை ஆனைகளைப்பிடித்து அலைத்திட்டுவைக்கும்; அலைக்கை- கொல்லுகை. அவ்வளவிலே ஆறுநீர்வந்து கொம்புகளைப்பறித்துக் கொண்டுபோயிற்றது. (அகிலுமணிமுத்தும்) அதின்மஸ்தகத்தில் நின்று முதிர்ந்த அழகிய முத்துக்களும் வெண்சாமரைகளையுங்கொண்டு. (பொன்னியித்யாதி) காவேரியானது †சொல்லிச்சொல்லாத மலைச்சரக்குக்களையும் கொண்டுவந்து, கொள்ளைச்சரக்குக்கொடுப்பாரைப்போலே திரைக்கைகளாலே கொண்டுவந்து கொடாநின்றதாயிற்று; அப்படிப்பட்ட திருநாங்கூர். ... ... (௩)

---

அந்.—மூன்றாம்பாட்டு. (கொலையித்யாதி) கீழ்ப்பாட்டில் ஸ்ரீகஜேந்த்ர ரக்ஷணத்தை யநுபவித்துக்கொண்டு, அத்தால் திருமுகம்பெற்றானென்னும் ஸங்கதியைக்காட்டுகிறார் (ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கித்யாதி).

(துரேட்டி) அங்குசம். ஸத்வஸ்த்தரான ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குப் புண்தலைகூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஜாதிப்பண்பித்யாதி). "அன்று-உய்ய" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (அதித்யாதி).

"அணட" என்றதுக்கு - சேரஎன்று அர்த்தம் திருவுள்ளம்பற்றி, அதனால் எல்லாம் என்றாய், அத்தையருளிச்செய்கிறா (சொல்லியித்யாதி). (௩)

மூ.—சிறையா ருவணப்புள் ளொன்றேறி யன்று
திசை நான்கும் நான்கு மிரியச் செருவில்
கறையார் நெடுவேலரக்கர் மடியக்
கடல் சூழிலங்கை கடந்தானிடந்தான்
முறையால் வளர்க்கின்ற முத்தீயர் நால்வேத
ரைரவேள்வி யாறங்க ரேழினிசையோர
மறையோர் வணங்கப் புகழெய்து நாங்கூர
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | கொடுமைமிகுந்தகாலத்திலே | கடந்தான் | ஜயித்தவனான எம்பெருமானுடைய |
| சிறை | கமநஸாதநமான சிறகுகள் | இடம் | ஸ்தாநமாய் |
| ஆர் | குறைவற்றிருந்துள்ள | முறையால் | வேதோக்தக்ரமத்தாலே |
| ஒன்று | ஒப்பற்ற | வளர்க்கின்ற | ஹோமம்செய்கிற |
| உவணப்புள் | கருடனென்னும் பெரிய திருவடியின் மேலே | முத்தீயர் | மூன்றுஅக்நியையுடையராய் |
| ஏறி | ஏறிக்கொண்டெழுந்தருளி | நால்வேதர் | அப்படியேநாலுவேதத்தை உத்தரித்திருப்பாராய் |
| செருவில் | யுத்தத்திலெதிர்த்த | | |
| கறையார் | கறையினால் பூர்ணமாய் | ஐவேள்வி ஆறு அங்கர் | பஞ்சமஹாயஜ்ஞ ஷடங்கஸம்பந்நராய் |
| நெடுவேல் | நெடிதானவேலையுடைய | ஏழினிசையோர் | ஸப்தஸ்வரங்களையுமுள்ளபடியேயறிந்திருப்பவருமான |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் | | |
| திசைநான்கும் நான்கும் | எட்டுத்திக்குக்களிலும் | மறையோர் | விலக்ஷணரான ப்ராஹ்மணர்கள் |
| இரிய | (சிலர்) ஓடிப்போம்படியாகவும் | வணங்க | ப்ரணாமபூர்வகமாக ஆஸ்ரயிப்பதினால் |
| மடிய | (சிலர்)முடியும்படியாகவும் | | |
| கடல்சூழ் | கடலாகிய அகழாற் சூழப்பட்ட | புகழ்எய்தும் | மிக்கபுகழ்பெற்றிருக்கிற |
| இலங்கை | லங்கையென்னும் ஊரை | நாங்கூர்மணிமாடக்கோயில் என்மனனே! வணங்கு. ... (௪) | |

வ்யா.—நாலாம்பாட்டு. (சிறையித்யாதி) †மாலி ஸுமாலி துடக்கமான ராக்ஷஸரையடையப் பண்டு லங்கையிலேவென்ற ஸர்வேஶ்வரன் திருமணிமாடக்கோயிலிலேவந்து நின்றருளினான், நெஞ்சே! அங்கேசென்றநுபவியென்கிறார்.

(சிறையாருவணப்புள்) சிறையென்று - சிறகு. கமநஸாதநமான சிறகு குறைவற்றிருந்துள்ள. (உவணப்புள்) உவணமாகிறபுள். உவணமென்று பெரியதிருவடிக்குப்பேர், புள்ளென்று பருந்து ஜாதிக்குப்பேர். (ஒன்றேறி) அத்விதீயமான புள்ளையேறி. (திசைநான்கும் நான்குமிரிய) †எட்டுத்திக்குக்களும் †இரியும்படியாக. (செருவில்) யுத்தத்திலே. (கறையாரித்யாதி) கறை கழுவவொண்ணாதபடியாய் நெடிதானவேலையுடைய ராக்ஷஸஜாதி மடிய. †ஒளித்துப்போவாரும், முடிவாருமாகை. (கடல் சூழித்யாதி) கடலாலே சூழப்பட்டிருப்பதாய், புற்றுக்கள் பாம்பறுதேயிருக்குமாபோலே துர்வர்க்கங்கள் சேரும்படியான லங்கையைக்கடந்தான். மாலி, ஸுமாலி, மால்யவான் துடக்கமானாரைப் பெரியதிருவடிமேலே யெழுந்தருளி நிரஸித்த

தாகச்சொல்லக்கடவதிறே. (கடந்தானிடந்தான்) அவ்வூரை ஜயித்தவன் வாஸஸ்த்தாநம்.

(முறையாலித்யாதி) ப்ராப்தமானபடியேயென்னுதல்; வேதோக்தமான க்ரமத்தாலே வளர்க்கின்ற அக்நித்ரயங்களையுமுடையராய், (நால்வேதர்) † அப்படியேநாலுவேதத்தை உத்தரித்திருப்பாராய், பஞ்சமஹாயஜ்ஞாத்யநுஷ்ட்டாநங்களில் வைகல்யமின்றிக்கே அங்கங்களாறும் கைவந்திருப்பாருமாய், ஸப்தஸ்வரங்களையுமுள்ளபடியேயறிந்திருக்கும் ப்ராஹ்மணர். (வணங்கவித்யாதி) இப்படிப்பட்ட விலக்ஷணராச்ரயியாநின்றார்களென்கிற புகழையுடைத்தான திருநாங்கூர். ... ... ... ... ... (ச)

---

அரு.—நாலாம்பாட்டு. (சிறையித்யாதி) ஒருநீர்ப்புழுவை வென்றவளவன்றிக்கே, ப்ரபலரான மாலிமுதலானோரைவென்றான் கிடாயென்று, வீரவாசியறியுமவராகையாலே அத்தையருளிச் செய்கிறாரென்று ஸங்கதியை ஸூசிப்பிக்கிறார் (மாலியித்யாதி).

(எட்டுதிக்குக்களும்) எட்டுதிக்குக்களிலும். (இரியும்படி) சிதறும்படி. "இரியும்படி" என்றத்தால் பலிதார்த்தமருளிச்செய்கிறார் (ஒளித்தித்யாதி).

"முறையால்" என்றது - மேலெல்லா மநுஷங்கிக்கிறதென்று திருவுள்ளம்பற்றி (அப்படியே) என்றது. ... ... ... (ச)

மூ.—இழையாடு கொங்கைத்தலை நஞ்சமுண்டிட்
டிளங்கன்றுகொண்டு விளங்காயெறிந்து
தழைவாட வன்தாள் குருந்தமொசித்துத்
தடந்தாமரைப்பொய்கை புக்கானிடந்தான்
குழையாட வல்லிக்குலமாட மாடே
குயில் கூவ நீடு கொடிமாடமல்கு
மழையாடுசோலை மயிலாலுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இழை | ஆபரணங்கள் | எறிந்து | அவ்விருவருமிறும் படிமோதி, |
| ஆடு | ஆடாநின்ற | | |
| கொங்கைத்தலை | பூதனையின்ஸ்தநாக்ர | வன்தாள் | வலியதாளையுடைய |
| நஞ்சம் | விஷத்தை[த்திலுள்ள | குருந்தம் | குருந்தமரத்தை |
| உண்டிட்டு | உண்டு, | தழைவாட | அதின்தழைகளெல்லாம்வாடியுலரும்படி |
| விளங்காய் | விளங்காயாய்நின்ற அஸுரன்மேல் | | |
| இளங்கன்று கொண்டு | சிறுகன்றாய்வந்த அஸுரனைத்தூக்கி | ஒசித்து | முறித்து, (பின்பு) |
| | | தடம் | பெரிதான |

| | | | |
|---|---|---|---|
| தாமரைப்பொய்கை | பத்மஸரஸ்ஸிலே | மாடு | பர்யந்தங்களில் |
| புக்கான் | போய்அங்கு க்ரீடைபண்ணும் கோபீஜநவஸ்த்ராபஹாரம் பண்ணின கண்ணனுடைய | குயில் | கோகிலங்கள் |
| இடம் | ஸ்த்தாநமாய், | கூவ | கூவவும் |
| குழை | வ்ருக்ஷங்களின் தளிர்கள் | மழைஆடு | மேகங்கள் ஸஞ்சரிக்கிற |
| ஆட | (மந்தமாருதத்தால்) அசைந்தாடுவதினால் | சோலை | சோலையிலே |
| வல்லிக்குலம் | (அவைகளின்மேல்படர்ந்த) புஷ்பக்கொடிக்கூட்டங்கள் | மயில்ஆலும் | மயில்கள்நர்த்தநம்பண்ணப்பெற்றதுமாய் |
| ஆட | ஆடவும் | நீடு | நீண்ட |
| | | கொடி | த்வஜங்கள் நாட்டப்பட்ட |
| | | மாடம் | ஸௌதங்கள் |
| | | மல்கும் | நெருங்கியிருக்கப்பெற்றதுமான |

நாங்கூர் மணிமாடக்கோயில் என் மனமே! வணங்கு. (௫)

*வ்யா.—அஞ்சாம்பாட்டு. †ப்ரதிகூலவர்க்கத்தைப்போக்கி இடைப்†பெண்களோடே ஸம்ஶ்லேஷித்தவன் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அத்தேசத்தை யாஶ்ரயியென்கிறார்.

(இழையாடித்யாதி) இழையென்று - ஆபரணம். ஆபரணங்களாடாநின்றுள்ள கொங்கைத்தலை நஞ்சையுண்டு. பூதனை பேய்வடிவைமாற்றி யசோதைப்பிராட்டி வடிவாக ஒப்பித்துவர, அந்த ஆபரணங்களாலே அலங்க்ருதமான முலையில் நஞ்சையுண்டானாயிற்று. (இளங்கன்றித்யாதி) கன்றாய்நின்ற அஸுரனைக்கொண்டு - விளாவாய்நின்ற அஸுரனையெறிந்து, இருவரையும் தங்களிலே முடியும்படிபண்ணி. (தழையித்யாதி) †அஸுராவேசத்தாலே உயிரையுடைத்தாயிருந்த மரமானது இவன்கிட்டச் சென்றவாறே தழைவாடிற்றாயிற்று. வலியதாளையுடைத்தான குருந்தை முறித்து. (தடந்தாமரையித்யாதி) †தனக்கும் பெண்களுக்கும் ஜலக்ரீடைபண்ணுகைக்கு யோக்யமான இடத்தைக் காளியன்புக்கு தூஷித்துக்கிடக்க, அங்கேபோய்ப் புக்கானாயிற்று; † பெண்கள் நீராடப்புக்கவிடத்தையுமுடைத்தாய், தாமரையையுமுடைய பொய்கையிலேபுக்கு அவர்கள் துகிலை வாங்கினபடியாகவுமாய்; அவன் வர்த்திக்கிறதேசம்.

(குழையித்யாதி) தழைகளானவையும் பூங்கொடிகளும் மந்தமாருதத்தாலே அசைந்துவர. (மாடேகுயில்கூவ) பர்யந்தங்களிற் சோலையில் புஷ்பங்களினுடைய பரிமளத்தை ஆக்ராணம்பண்ணி, முக்தர் ஸாமகாநம்பண்ணுமாபோலே குயில்கள் கூவாநின்றனவா

யிற்று. (நீடுகொடிமாடமல்கு) நெடிய கொடிகளையுடைத்தான மாடங்களாலே நெருங்கியிருப்பதாய். (மழையாடுசோலை மயிலாலு நாங்கூர்) உயர்ந்த சோலையின் தலையிலே மேகங்கள் ஸஞ்சரிக்க அவற்றைக்கண்டு †வர்ஷாவாகக்கொண்டு சோலையில் வர்த்திக்கிற மயில்களானவை ஆடத்துடங்கும். இப்படிப்பட்ட திருநாங்கூரில். (௫)

---

அ௫.—அஞ்சாம்பாட்டு. (இழையித்யாதி) பரத்வப்ரகாசகமான பெரிய திருவடிமேலேறி மாலிமுதலானரைவென்ற வீரத்திலும் பிள்ளைச்சேவகத்தில் திருவுள்ளம் குடிபோயநுபவிக்கிறாரென்று ஸங்கதி திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (ப்ரதிகூலேத்யாதி). (பெண்களோடே) என்றது, "தாமரைப்பொய்கைபுக்கான்" என்றத்தைப்பற்ற.

"தழைவாட" என்று விசேஷித்ததுக்கு பாவம் (அஸுரேத்யாதி). விரோதி நிரஸநப்ரகரணாநுகுணமாகக் காளியன்பொய்கையாக விவக்ஷித்து, அப்போது "தாமரை" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (தனக்குமித்யாதி); ஸுநாஸுநிக்ரியைக் கநுகுணமாக விசேஷித்தாரென்று கருத்து. அர்த்தாந்தரம் (பெண்களித்யாதி).

(வர்ஷாவாக) வர்ஷர்துவாக. ... ... ... (௫)

மூ.—பண்ணேர்மொழி யாய்ச்சிய ரஞ்ச வஞ்சப்
பகுவாய்க் கழுதுக் கிரங்கா தவள்தன்
உண்ணாமுலை மற்றவளாவியோடு முடனே
சுவைத்தானிடம் ஓங்கு பைந்தாள்
கண்ணார் கரும்பின் கழை தின்று வைகிக்
கழுநீரில் மூழ்கிச் செழுநீர்த் தடத்து
மண்ணேந்திள மேதிகள்வைகு நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பண்நேர் | கானத்தோடொத்த | உண்ணா | விஷம் தடவியிருப்பதால் அயலாராலுண்ண முடியாத |
| மொழி | பேச்சையுடைய | முலை | முலைப்பாலை |
| ஆய்ச்சியர் | இடைச்சிகள் | மற்று | அதுக்குமேலே |
| அஞ்ச | பயப்படும்படி | அவள் ஆவியோடு | அவளுயிருடனேகூட |
| வஞ்சம் | தாயுருக்கொண்டுவந்த வஞ்சனையையும் | உடனே சுவைத் தான் | ஏககாலத்திலே அமுதுசெய்த க்ருஷ்ணனுடைய |
| பகுவாய் | பெருத்தவாயையுமுடைய | இடம் | ஸ்தானமாய், |
| கழுதுக்கு | பூதனையிடத்தில் | | |
| இரங்காது | தான்நோவுபடாமல் | | |
| அவள்தன் | அப்பூதனையினது | | |

| | | | |
|---|---|---|---|
| இளமேதிகள் | எருமைநாகுகள் | மூழ்கி | புக்குமுழுகி (அநந்தரம்) |
| ஓங்கு | உயர்த்தியையும் | செழுநீர்த்தடத்து | அழகிய நீரையுடைய தடாகத்திலே போய்முழுகி |
| பைந்தாள் | பசியதாளையும் | மண்ணேந்து | கொம்புகளில் மண்ணைத்தரித்துக்கொண்டு [ற |
| கண் ஆர் | குறுகினகணுக்களையுமுடைய [ன் | வைகும் | கரையேறுதேகிடக்கி |
| கரும்பின் | இக்ஷுதண்டங்களி | நாங்கூர் மணிமாடக்கோயில் என்மனனே! வணங்கு. (கூ) | |
| கழைதின்று | குருத்தைத்தின்று | | |
| வைகி | சிலகாலமவ்விடத்திலேயேகிடந்து (பின் அவ்வெம்மையாற்றுகைக்காக) ல் | | |
| கழுநீரில் | செங்கழுநீர்ப்பணையி | | |

வ்யா.—ஆறும்பாட்டு.†பூதனையை அப்போதே ப்ராணன்போம்படி முலையுண்ட ஸர்வேஶ்வரன் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அங்கே சென்றநுபவியென்கிறார்.

(பண்ணேர்மொழியாய்ச்சியரஞ்ச) பண்ணோடொத்தமொழியையுடைய இடைச்சிகளஞ்சும்படி. (வஞ்சமித்யாதி) வஞ்சநத்தையுடையளாய், பயாவஹமாம்படி ஜாத்யுசிதமான †பெரியவாயையுடையளான, கழுதுண்டு - பேய், அதுக்கிரங்காதே, இரங்குகையாவது-நோவுபடுகையாய், அதின்லகையில்தான் நோவுபடாதே. (அவள் தனுண்ணுமுலை) விஷமாகையாலே வேறு சிலருண்டாரில்லையிறே; அப்படிப்பட்டமுலை. (மற்றவளாவியோடுமுடனே சுவைத்தானிடம்) விஷத்தை வாங்குகையன்றிக்கே † அதுக்காஶ்ரயமான ப்ராணனையுங்கூட ஒருகாலே அமுதுசெய்தவன் வர்த்திக்கிறதேசம்.

(ஓங்குபைந்தாளித்யாதி) உயர்த்தியையுடைத்தாய், பசுமையையுமுடைத்தாய்,தாளையுமுடைத்தாய், கண்†குறுகின கரும்பினுடைய கழையுண்டு-†தலையாடி,அத்தைத்தின்று †தன்னளவல்லாதபடி மிகத்தின்கையாலே ஸஞ்சரிக்கமாட்டாமை அவ்விடந்தன்னிலே இடம்வலம்கொண்டு விடாயாறி, பின்னைப்போய் அந்த உஷ்ணமாறும்படி செங்கழுநீர்ப்†பணையிலே புக்கு முழுகி. (செழுநீரித்யாதி) அழகிய நீரையுடைத்தாயிருக்கிற தடாகத்திலே புக்கு முழுகி, கோட்டுமண்கொண்டு அததைச் சுமந்து †கிளறுமாயிற்று; மஹாவராஹம் கிளர்ந்தாற்போலே. (வைகுநாங்கூர்) பின்னை அடித்து ஏறவிடவும்போகாதபடி அவ்விடந்தன்னிலே கிடக்குமாயிற்று. அப்படிப்பட்ட திருநாங்கூரில். இவ்விடத்தைப் பிள்ளைவிழுப்பரையரும் ஆப்பானுங்கூட அநுஸந்தித்து, "இரண்டிடத்திலே 'வைகி' என்றுண்டாயிருந்தது,

†இது செய்யும்படியென்?'' என்று பட்டரைக்கேட்க; ''ஸௌகுமார்யத்தாலே இரண்டிடத்திலும் கிடந்தது'' என்றருளிச்செய்தார். (௬)

---

அரு.—ஆரும்பாட்டு. (பண்ணேரித்யாதி) பிள்ளைச்சேவகங்களில்வைத்துக்கொண்டு கேவலம் பால்யத்தில்செய்த சேவகமாகையாலே பூதநாநிரஸநம் பின்னாட்டிற்றென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (பூதனையையித்யாதி).

''பகு'' என்றதினர்த்தம் (பெரிய) என்றது. ''மற்று'' என்றத்தாலே வைலக்ஷண்யம் தோற்றுகையாலே, அதைப்பற்ற வருளிச்செய்கிறார் (அதுக்காச்ரயமான) என்று.

ஆர்தல் - மிகுதியாய், அதினர்த்தம் (குறுகின) என்றது. (தலையாடி) கொழுந்தாடை. ''வைகி'' என்றதுக்குத் தாத்பர்யம் (தன்னளவித்யாதி). (பணையிலே) நீர்நிலத்திலே. (கிளருமாயிற்று) என்றவநந்தரம், ''இளமேதிகள்'' - எருமைநாகுகள் என்று கூட்டுவது. (இதுசெய்யும்படியென்) என்றது- இரண்டிடத்திலும் கிடந்து காலத்தைப்போக்கிற்றென்றத்தால் ப்ரயோஜநமென்னென்னவென்றபடி. ... ... ... (௬)

மூ.—தளைக்கட்டவிழ் தாமரை வைகு பொய்கைத்
தடம் புக் கடங்கா விடங்கா லரவம்
இளைக்கத் திளைத்திட்ட தனுச்சிதன்மே
லடிவைத்த வம்மானிடம் மாமதியம்
திளைக்கும் கொடி மாளிகைசூழ் தெருவில்
செழுமுத்து வெண்ணெற் கெனச்சென்று முன்றில்
வளைக்கை நுளைப்பாவையர் மாறுநாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தளைத்தாமரை | மொட்டுத்தாமரையும் | இளைக்க | இளைத்துப்போம்படி |
| கட்டு அவிழ் தாமரை | அலர்ந்ததாமரையும் | திளைத்திட்டு | (அவனோடு) விளையாடி |
| வைகு | தங்குகிற | அதன் உச்சிதன் மேல் | அதன் சிரஸ்ஸிலே [டி |
| பொய்கைத்தடம் | ஸரஸ்ஸிலே | அடிவைத்த | திருவடிகளையிட்டு கர்வபங்கம்பண்ணின |
| புக்கு | ப்ரவேசித்து | அம்மான் | ஸர்வேஶ்வரனுடைய |
| அடங்கா | (அதனுள்ளே) அடங்காதே கிளர்ந்தெழாநிற்பதாய் | இடம் | ஸ்தாநமாய், |
| | | வளைக்கை | வளையணிந்த கையையுடைய |
| விடம்கால் | விஷத்தைக் கக்குகின்ற | நுளைப்பாவையர் | நுளைச்சிகள், |
| அரவம் | காளியன் | மாமதியம் | சந்த்ரனவன் |

| | | | |
|---|---|---|---|
| திளைக்கும் | (தாண்டிப்போகப்பெறாதே) அங்கேவிளையாடும்படி | என | தருகிறோமென்று கூவிக்கொண்டுபோக (ஒருவருங் கேளாமையாலே) |
| கொடி | கொடிகளையுடைய | முன்றில் | ஒவ்வொருவர் வீட்டுவாசல்தோறும் |
| மாளிகைசூழ் | மாளிகைகளாலே சூழப்பட்ட | சென்றுமாறும் | தாமே வலியப்போய் மாற்றித்திரிகிற |
| தெருவில் | வீதிகளிலே | | |
| செழுமுத்து | பெருமுத்துக்களை | | |
| வெண்ணெற்கு | வெளுத்த நெல்லுக்கு | நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கென்மனனே! (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. †காளியனால்வந்த ஆபத்தைப்போக்கின எம்பெருமான் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அங்கே சென்றநுபவி என்கிறார்.

(தளைக்கட்டவிழ் தாமரைவைகுபொய்கைத் தடம்புக்கு) தளைத்தாமரையும் கட்டவிழ் தாமரையும்;-†மொட்டுத்தாமரையும் அலர்ந்த தாமரையும், தங்குகிறபொய்கைக்கரையிலே புக்கென்னுதல்; †பொய்கையினுள்ளேபுக்கென்னுதல். (அடங்காவிடங்காலரவம்) அடங்காதே கிளர்ந்தெழாநிற்பதாய், விஷத்தைக் காலாநின்றுள்ள, அரவமுண்டு-காளியன், அது இளைக்கும்படி வ்யாபரித்து அதனோடே †விளையாடி, (க) †"அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்" என்று ப்ரார்த்திக்கும்படியான திருவடிகளை அதின் தலையிலேயாயிற்று வைத்தது. (அம்மானிடம்) †இப்படி ஸர்வரக்ஷணங்களையும் பண்ணும் ஸர்வேஶ்வரன் வர்த்திக்கிற தேசம்.

(மாமதியமித்யாதி) சந்த்ரனானவன் ஜகத்ரக்ஷணத்துக்காக ஸஞ்சரிக்கிறவன் கொடிகளிலே துவக்குண்டு போகப்பெறாதே அவற்றோடே விளையாடுமாயிற்று; இப்படியேயிருக்கிற கொடிகளையுடைத்தான மாளிகைகளாலே சூழப்பட்ட தெருவில். (செழுமுத்து வெண்ணெற்கென) "பொகடுகிற நெல்லையும், அழகிய முத்து" என்னாநின்றார்கள்." (வெண்ணெற்கென) செந்நெல்வேண்டா, †வெண்ணெல்லையும் என்னாநின்றார்கள். (சென்று) வந்துகொள்வாரில்லை மிகுதியாலே; கொண்டுசென்று விற்கும்தனையாயிற்று. முன்றில்களிலே - வாசல்களிலே. (வளைக்கைநுளைப் பாவையர்மாறும்) இடைச்சிகள் ஒப்பித்துத் தயிர்கடையுமாபோலே, நுளைச்சி

(க) தி - வாய் - ௧௦ - ௩-

களும் ஒப்பித்தாயிற்று முத்துவிற்கப்போவது; இப்படி அலங்க்ருதைகளான நுளைச்சிகள் முத்துவிற்கைக்கு ஸஞ்சரிக்கிற திருநாங்கூரிலே. ... ... ... ... ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (தளையித்யாதி) கீழ்ச்சொன்ன பூதநாஸ்தநவிஷம் அம்ருதமென்னும்படி பஹுமுகமாக விஷத்தைக் கக்குகிற காளியன் தடத்திலே (௧) ‘‘[illegible] - அபியாதா ப்ரஹர்த்தாச’’ என்கிறபடியே தானே போய் நிரஸித்த செயலாகையாலே இவ்வபதாநத்திலே நெஞ்சு சென்று அநுபவிக்கிறாரென்னும் ஸங்கதியை ஹ்ருதீகரித்துக்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (காளியனுலித்யாதி).

கீழ்ச்சொன்னவிரண்டையும் க்ரமேண விவரியாநின்றுகொண்டு, ‘‘தடம்’’ என்று - கரையாகவருளிச்செய்கிறார் (தளையித்யாதி). ‘‘புக்கு’’ என்ற பதத்தின் ஸ்வாரஸ்யத்தைப்பற்ற ‘‘தடம்’’ என்றதுக்கு இடம் என்றாய், அத்தால் பலித்தது ஸப்தம்யர்த்தமாய், அத்தையருளிச்செய்கிறார் (பொய்கையித்யாதி.) (காலாநின்றுள்ள) கக்காநின்றுள்ள. ‘‘திளைத்திட்டு’’ என்றதினர்த்தம் (விளையாடி) என்றது. மிதித்த என்னாதே, ‘‘அடிவைத்த’’ என்றத்தால் தோன்றின ஏற்றப்பாட்டையருளிச் செய்கிறார் (அடிச்சியோமித்யாதி). அதிப்ரதிகூலன் தலையிலும் திருவடிகளை வைக்கைக்கு ஹேது அம்மானுகையென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (இப்படியித்யாதி).

(வெண்ணெல்லமையும்) என்றது - அஶ்லாக்யமான நெல்லமையுமென்கை. ... ... ... ... .. (எ)

மூ.—துளையார் கருமென் குழலாய்ச்சியர்தம்
துகில் வாரியும் சிற்றில் சிதைத்தும் முற்றா
விளையார் விளையாட் டொடு காதல் வெள்ளம்
விளைவித்த வம்மானிடம் வேல்நெடுங்கண்
முளைவாளெயிற்று மடவார் பயிற்று
மொழி கேட்டிருந்து முதிராத வின்சொல்
வளைவாய கிள்ளை மறை பாடு நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துளை ஆர் | துளைமிக்கிருந்த | முற்றாவிளையார் | யௌவநம்வாராத |
| கருமென்குழல் | கறுத்து மருதுவான கூந்தலையுடைய | விளையாட்டொடு | (அந்த) பாலிகைகளோடுண்டான பாலக்ரீடையோடே [ஸாகாரத்தை |
| ஆய்ச்சியர்தம் | கோபஸ்த்ரீகளின் | காதல்வெள்ளம் | (அவர்களுக்கு) ப்ரேம |
| துகில்வாரியும் | வஸ்த்ரங்களை யபஹரித்தும் | விளைவித்த | பிறப்பித்த |
| சிற்றில்சிதைத்தும் | (அவர்கள்) சிற்றில்களையழித்தும் | அம்மான் இடம் | ஸர்வேஸ்வரனது ஸ்தானமாய், |

(௧) ரா -

| | | | |
|---|---|---|---|
| முதிராத இன் சொல் | கடினமாகாத இனிய சொல்லையும | மடவார் | வைதிகஸ்த்ரீகள் |
| வளை வாய | வளைந்தவாயையுமு | பயிற்று | அப்யஸிப்பிக்கிற |
| கிள்ளை | கிளிகள், [டைய | மொழி | வேதபதங்களை |
| வேல் | வேல்போலேகூர்மை யுடைத்தாய் | கேட்டிருந்து | கேட்டுக்கொண்டிருந்து (பின்பு அவர்கள் சொன்னபடியே) |
| நெடுங்கண் | நெடிதான கண்களையும் | மறைபாடும் | வேதபாராயணம் பண்ணுகிற |
| முளை | முளைக்கிறவளவாய் | நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (அ) | |
| வாள் | காந்தியையுடைத்தான | | |
| எயிறு | தந்தபங்க்தியையுமுடைய | | |

வ்யா—எட்டாம்பாட்டு. திருவாய்ப்பாடியிற் பெண்களோடே நிரவதிக ஸம்ஶ்லேஷத்தைப்பண்ணின க்ருஷ்ணன் திருமணிமாடக் கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அங்கே சென்றநுபவி யென்கிறார்.

(துளையார் கருமென்குழலாய்ச்சியர்தம்) துளையாரென்று-துளை மிக்கிருக்கை. அதாவது-சுருண்டு கறுத்து ம்ருதுவான குழலையுடையராய், கரையிலே பரியட்டங்களையிட்டுவைத்து முழுகியேறும் பருவமாயிருந்துள்ள இடைப்பெண்களுடைய. †துளையாகிற்கிற என்றுமாம். (துகில்வாரியும் சிற்றில்சிதைத்தும்) அவர்கள் கரையிலே யிட்டுவைத்த பரியட்டங்களை, (க) "மசிமையிலீகூறைதாராய்" என்னும்படி வாரிக்கொண்டுபோய்க் குருந்திலேயேறியும், (உ) "தீமை செய்யும் சிரீதரா எங்கள் சிற்றில்வந்து சிதையேல்" என்னும்படி சிற்றில் சிதைத்தும். (முற்றாவிளையார் விளையாட்டொடு) விளையாட்டுக்கு அவ்வருகு கார்யங்கொள்ளவொண்ணாதபடி பருவத்தையுடையவர்கள். யௌவநம்§ஊசாடாத பருவம்; அவர்களோடேயுண்டான விளையாட்டோடேகூட. (காதலித்யாதி) அவர்களுக்கு ப்ரேமஸாகரத்தை விளைத்த ஸர்வேஶ்வரனுடைய வாஸஸ்தாநம்.

(வேல்நெடுங்கணித்யாதி) வேல்போலே கூர்மையையுடைத்தாய் நெடிதான கண்களையுமுடையராய், முளைக்கிறவளவாய் ஒளியையுடைத்தான தந்தபங்க்திகளையுமுடையரான ஸ்த்ரீகளானவர்கள். (பயிற்றும் மொழிகேட்டிருந்தும்) அவர்கள் "முத்தமிடீர்"

(க) நா-தி-௩-௧. (உ) நா-தி-௨-௧.

§ ஊசாடுதல் - ஸஞ்சாரடுதல், நடமாடுதல்.

என்றாற்போலே சிலவார்த்தைகள்சொல்லிக் கற்பிப்பர்களே, அவற்றைக் கேட்டிருந்தேயும்; அவை கிடக்கச்செய்தே. (முதிராதவித்யாதி) முற்றாதேயிருக்கையாலே ம்ருதுவாய் இனிதான சொல்லையுடைத்தாய் வளைந்த வாயையுமுடைத்தான கிளியானது. (மறை பாடும்) தனக்கு வாஸிதமான வேதத்தைப் பாடாநிற்கும், அவ்வூரிலுள்ளார் வேதபாராயணம் பண்ணிப்போருகையாலே அதுவேயிறே இவற்றுக்கு வாஸிதமாயிருப்பது; ஆகையாலே இவாகள் சொல்லுகிறது கிடக்க அவற்றைச் சொல்லாநின்றனவென்னுதல். அன்றிக்கே, இவர்கள் தாங்கள் உபாத்யாயருடைய பெண்களாகையாலே வேதபதங்களை அப்யஸிப்பிக்க அவற்றைச் சொல்லாநின்றனவென்னுதல். (முதிராதவின்சொல்) கற்பிக்கிறவர்கள் பேச்சுப்போலேயன்றிறே இவற்றினுடைய பேச்சு; இப்படியிருக்கிற திருநாங்கூர். ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (துளையாரித்யாதி) அஞ்சாம்பாட்டில் ப்ரஸ்துதமான "தடந்தாமரைப் பொய்கைபுக்கான்" என்றதுக்கு இரண்டு தாத்பர்யத்தாலே யருளிச்செய்தாராகையாலே முந்தின தாத்பர்யத்தைக் கீழ்ப்பாட்டிலருளிச்செய்தார்; இரண்டாம் தாத்பர்யத்தை இப்பாட்டிலே வெளியிடுகிறாரென்றாதல்; அன்றிக்கே, கீழ்ப்பாட்டில் பொய்கைபுக்கது ப்ரஸ்துதமாகையாலே ஸ்ம்ருத்தமான வஸ்த்ராபஹரணத்தை யநுஸந்திக்கிறாரென்றாதல் ஸங்கதி திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடியிலித்யாதி).

(துளையாகிற்கிற) ஜலத்திலே துளையாநிற்கிறவர்களானவென்றபடி, (அ)

௯.—விடையோட வென்றாய்ச்சி மென்றோள் நயந்த
விகிர்தா விளங்கு சுடராழி யென்னும்
படையோடு சங்கொன்றுடையாயென நின்
றிமையோர் பரவுமிடம் பைந்தடத்துப்
பெடையோடு செங்கால வன்னம் துகைப்பத்
தொகைப் புண்டரீகத்திடைச் செங்கழுநீர்
மடையோடநின்று மதுவிம்மு நாங்கூர்
மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விடை | ஸப்தரிஷபங்களும், | மென்தோள் | ம்ருதுவான புஜாவின் |
| ஓட | ஓடிநசிக்கும்படி | நயந்த | விரும்பின [நத்தை |
| வென்று | (அவற்றை) ஜயித்து, | விகிர்தா | வ்யாவர்த்தகமானசெ |
| ஆய்ச்சி | நப்பின்னைப்பிராட்டியினது | | யல்களையுடையவனே! |

| | |
|---|---|
| விளங்கு | விளங்காநின்றுள்ள |
| சுடர் | புகரையுடைய |
| ஆழியென்னும் படையோடு | திருவாழியாகிறஆயுதத்தோடேகூட |
| ஒன்று சங்குஉடையாய் | அத்விதீயமாயிருக்கும்ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடையவனே! |
| எனநின்று | என்றுசொல்லாநின்றுகொண்டு |
| இமையோர் | ப்ரஹ்மாதிதேவர்கள் |
| பரவும | இடைவிடாதே ஸ்தோத்ரம்பண்ணுகிற |
| இடம் | ஸ்தாநமாய், [ன |
| பெடையோடு | பெட்டையோடு கூடி |
| செங்கால | சிவந்தகாலையுடைய |
| அன்னம் | ஹம்ஸமானது (மதுபாநத்தால்முன்ன |
| | டிதோற்றுமையாலே) [யுள்ள |
| பைந்தடத்து | அழகியதடாகத்திலே |
| தொகைப்புண்டரீகம் | திரண்டதாமரைப்பூக்களை |
| துகைப்ப | துகைக்க(அத்தாலே) |
| இடை | அத்தாமரைகளின்நடுவேயுள்ள |
| செங்கழுநீர் | செங்கழுநீர்ப்பூக்களானவை |
| மடை ஓட | மடைகள் நிரம்பியோடினபோதிலும் |
| நின்றுமதுவிம்மும் | உள்ளேநின்று மது வெள்ளம்தேங்கும்படியான |

நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கென்மனனே. (௯)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. †நப்பின்னைப்பிராட்டிக்காக எருதேழடர்த்த செயலையும் திவ்யாயுதங்களோட்டைச் சேர்த்தியழகையும் சொல்லி தேவர்களேத்தத் திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினான், நெஞ்சே! அங்கேசென்றநுபவியென்கிறார்.

(விடையோட) நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு ப்ரதிபந்தகமான ருஷபங்கள் †ஓடும்படிவென்று. (ஆய்ச்சி மென்தோள் நயந்தவிகிர்தா) அவளுடைய ம்ருதுவான தோளை விரும்பின வ்யாவ்ருத்தமான செயல்களையுடையவனே! (விளங்கித்யாதி) திருநிறத்துக்குப் †பகைத்தொடையாக விளங்காநின்றுள்ள சுடரையுடைய திருவாழியாகிற ஆயுதத்தோடேகூடின அத்விதீயமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடையவனே! (எனநின்று) இப்படிசொல்லாநின்றுகொண்டு. (இமையோர்பரவுமிடம்) ப்ரஹ்மாதி தேவர்கள் விடாதே ஸ்தோத்ரம்பண்ணுகிறவிடம்.

(பைந்தடமித்யாதி) அழகிய பொய்கைகளிலே மதுபாநம் பண்ண இழிந்த சிவந்த காலையுடைய அன்னமானது, பேடையோடேகூட இழிகையாலே மதுபாநத்தாலே முன்னடிதோற்றுமையாலே †ஆஶ்ரயத்தைப்பேணிப் பரிமாற வறிகிறனவில்லை; அத்தாலே துகைக்கப்பட்ட, (தொகையித்யாதி) †திரண்ட தாமரைப்பூவின் நடுவே செங்கழுநீரின் மதுவெள்ளமானது மடையாலே போகாநிற்கச்செய்தேயும், அதினுடைய மிகுதியாலே உள்ளேநின்று †விம்மா

நிற்குமாயிற்று. திரண்ட புண்டரீகங்களின்நடுவே அன்னங்கள் துகைக்க, நடுவுநிற்கிற செங்கழுநீரானது மதுவெள்ளமிடாநிற்கும். இப்படியிருக்கிற திருநாங்கூரிலே. ... ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (விடையித்யாதி) பலகாலும் க்ருஷ்ணாவதாரத்தோடு ஐக்யம்சொல்லாநின்றீர், மணிமாடக்கோயிலிலிருக்குமவன் க்ருஷ்ணனோவென்ன; ப்ரஹ்மாதிகள் அங்ஙன் ஏத்துகிறார்கள் கேளாயென்கிறாரென்று ஸங்கதி யுட்கொண்டருளிச்செய்கிறார் (நப்பின்னையித்யாதி).

(ஓடும்படி) தோற்கும்படி. (பகைத்தொடையாக) பரபாகமாக.

(ஆஶ்ரயத்தை) கமலத்தை. "தொகை" ஸமூஹமாய், அதினர்த்தம் (திரண்ட) என்றது. (விம்மாநிற்கும்) - தேங்காநிற்கும். ... (௯)

மூ.—வண்டார் பொழில்சூழ்ந் தழகாய நாங்கூர்
மணிமாடக்கோயில் நெடுமாலுக் கென்றும்
தொண்டாய தொல் சீர் வயல் மங்கையர்கோன்
கலிய னொலிசெய் தமிழ்மாலை வல்லார்
கண்டார்வணங்கக் களியானைமீதே
கடல்சூழுலகுக் கொரு காவலராய்
விண்டோய் நெடு வெண் குடை நீழலின் கீழ்
விரிநீ ருலகாண்டு விரும்புவரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வண்டு ஆர் | வண்டுகள்மிக்கிருந்துள்ள | | மாக அப்யஸிக்கவல்லவர்கள், |
| பொழில்சூழ்ந்து | சோலைகளாலேசூழப்பட்டு | கண்டார்வணங்க | கண்டவரெல்லாம் தங்கள்காலிலேவிழுந்துஸேவிக்கும்படி |
| அழகாய | அழகாயிருக்கும் | | |
| நாங்கூர் | திருநாங்கூரில் | | |
| மணிமாடக்கோயில் | திருமணிமாடக்கோயிலிலேநித்யவாஸம்பண்ணுகிற | களியானைமீதே | மத்தகஜத்தின்மேலே (நகரிவலம்வந்து) |
| நெடுமாலுக்கு | ஸர்வேஶ்வரனுக்கு | கடல்சூழுலகுக்கு | சதுஸ்ஸாகரபர்யந்தையானபூமிக்கு |
| என்றும்தொண்டாய | நித்யகைங்கர்யத்தில் அதிகரிக்கையாலே வந்த | ஒருகாவலராய் | தாங்களே அத்விதீயநிர்வாஹகராய் |
| | | விண்தோய் | அப்ரங்கஷமான |
| தொல்சீர் | நிரவதிகஸம்பத்தையுடையராய் | நெடுவெண்குடைநீழலின்கீழ் | நெடியமுக்தாதபத்ரச்சாயையின்கீழிருந்து |
| வயல்மங்கையர்கோன் | கழனிசூழ்ந்த திருமங்கைக்குராஜாவான | விரிநீருலகாண்டு | ஆவரணஜலவேஷ்டிதப்ரஹ்மாண்டத்தையாண்டு கொண்டு |
| கலியன் | ஆழ்வார் | | |
| ஒலிசெய் | அருளிச்செய்த | | |
| தமிழ்மாலைவல்லார் | தமிழ்த்தொடைபத்தையும் ஸஹ்ருதய | விரும்புவர் | நிரவதிகப்ரீதியுக்தர்களாயிருப்பர்கள். () |

வ்யா.—பத்தாம்பாட்டு. இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லுகிறது.

(வண்டார்பொழில்சூழ்ந்து) சோலையென்று பேர்மாத்ரமாய் மதுபானம்பண்ண இழிந்த வண்டேயாய்க் கிடக்குமாயிற்று. (அழகாயவித்யாதி) தர்சநீயமான திருநாங்கூரில் திருமணிமாடக்கோயிலிலே நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வேச்வரனுக்கு. (என்றும் தொண்டாயதொல்சீர்) நித்யகைங்கர்யத்திலே அதிகரிக்கையாலேவந்த நிரவதிக ஸம்பத்தையுடையராய். (வயல்மங்கையர்கோன்) நல்ல வயலையுடைய திருமங்கைக்கு ராஜாவான ஆழ்வார். (ஒலிசெய் தமிழ்மாலை வல்லார்) ஒலியையுடைத்தாக வருளிச்செய்த தமிழ்த் தொடையாகிற இத்திருமொழியைக் கற்றவர்கள்.

(கண்டார்வணங்க) அநுகூலப்ரதிகூலோதாஸீநரென்று வாசியின்றிக்கே, லோகமாகத் தங்கள்காலிலேவந்து விழும்படி மத்தகஜத்தின்மேலே யேறி. (கடல்சூழுலகுக்கொரு காவலராய்) க்ஷத்ரிய ஜந்மத்திலே பிறந்து, சதுஸ்ஸாகரபர்யந்தையான பூமிக்குத்தாங்களே நிர்வாஹகராய். (விண்டோயித்யாதி) ஆகாசத்திலே சென்று கிட்டும்படியான முத்துக்குடையின்கீழே கடல்சூழ்ந்த பூமியையாண்டு, விரும்பப்படுவர்; †நிரவதிக ப்ரீதியுக்தராவர்கள்.

"ஐச்வர்யத்தைப் புருஷார்த்தமாகச்சொல்லுவானென்?" என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க; "ஈச்வரனேயாகிலும் ஒருகால் பிறந்து அபிஷேகம்பண்ணவமையும் பாகவதசேஷமாக்கலாமாகில் என்று காணும் திருமங்கையாழ்வார்*இருப்பது" என்றருளிச்செய்தருளினார்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. நிகமம். (வண்டாரித்யாதி) "விரும்புவர்" என்றதுக்கு எல்லாராலும விரும்பப்படுவரென்ன றர்த்தமருளிச்செய்து, விருப்பத்தையுடையராவரென் றர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதி).

*(இருப்பது) என்றவநந்தரம், இனி தம்முடைய ப்ரபந்தம கற்றவர்க்கு பாகவத கைங்கர்யோபயோகியான மண்டலாதிபத்யம்வேண்டா என்றிருப்பரோ என்று இவ்வளவு பூரித்துக்கொள்வது. ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றாம்பத்து எட்டாந் திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# மூன்றும்பத்து ஒன்பதாந்திருமொழி, சலங்கொண்ட ப்ரவேசம்.



†அபிமதவிஷயத்தை யநுபவிக்குமிடத்தில் அவயவங்கள்தோறும் விரும்பியநுபவிக்குமாபோலே, †அங்குள்ளதெல்லாம் †உத்தேஶ்யமாய், †ஆபத்ஸகனாய், ஸர்வஜகத்துக்கும் ரக்ஷகனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், "ரக்ஷணத்துக்குப் பாங்கானதேசம்" என்று விரும்பி வர்த்திக்கிற தேசமாகையாலே அங்குண்டான திர்யக்குக்களுமகப்பட, முக்தர் பகவதநுபவத்தாலே களிக்குமாபோலே களித்து வர்த்திக்கும் தேசம், ஆனபின்பு நீயுமத்தேசத்தை ப்ராபியென்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார். ... ... ... *

அரு.—சலங்கொண்டவின் ப்ரவேசம்.—திருநாங்கூரில் திருமணிமாடக்கோயிலை யநுபவித்த ஆழ்வார் அங்குள்ள மற்றைத் திருப்பதிகளையு மநுபவிக்கிறார் இனிப் பத்துத் திருமொழியாலேயென்று திருவுள்ளம்பற்றி, அவையெல்லாவற்றுக்கும் ஸங்கதி யருளிச்செய்கிறார் (அபிமதேத்யாதி). (அங்குள்ளதெல்லாம்) திருநாங்கூர் திருப்பதிகளெல்லாம். (உத்தேஶ்யமாய்) என்றவநந்தரம், தோற்றி என்றுசேஷம். இத்திருமொழியில் ப்ரமேயத்தை யருளிச்செய்கிறார் (ஆபத்ஸகனாயித்யாதி). ... ... ... ... *

மூ.—சலங்கொண்ட விரணிய னதகல்மார்வங் கீண்டு
தடங்கடலைக் கடைந்தமுதங் கொண்டுகந்த காளை
நலங்கொண்ட கருமுகில்போல் திருமேனி யம்மான்
நாடோறும் மகிழ்ந்தினிது மருவி யுறை கோயில்
சலங்கொண்டு மலர் சொரியும் மல்லிகை யொண் செருந்தி
செண்பகங்கள் மண நாறும வண் பொழிலினூடே
வலங்கொண்டு கயலோடி விளையாடு நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சலம்கொண்ட | (ப்ரஹ்லாதன்பக்கல்) சீற்றத்தையுடைய | அகல்மார்வம் | விசாலவக்ஷஸ்தலத்தை |
| இரணியன் | ஹிரண்யனுடைய | கீண்டு | அநாயாஸேந கிழித்துப்பொகட்டும், [லீ |
| அது | அப்படி வரபலத்தாலே பூண்கட்டப்பட்ட | தடம்கடலை | பெரிய திருப்பாற்கடலை |
| | | கடைந்து | மதநம்பண்ணி |

அமுதம் — அதிற்பிறந்த அம்ருதத்தை
கொண்டு — தேவதைகளுக்குப் பங்கிட்டுக்கொடுத்தும் [ருந்த
உகந்த — ஸந்தோஷயுக்தனாயி
காளை — யுவாவாய்,
நலங்கொண்ட கருமுகில் போல் — அழகிய நீலமேகம் போன்ற
திருமேனி அம்மான் — திவ்யதேஹத்தையுடையனான ஸர்வேஶ்வரன்
நாடோறும் — ப்ரதிதினமும்
மகிழ்ந்து — ஸந்தோஷித்துக்கொண்டு [படி
இனிது — ஆஶ்ரிதருக்கினிதாம்
மருவியுறைகோயில் — அநந்ய ப்ரயோஜநனாய்நித்யவாஸம்பண்ணுகிறதேசமாய்,
கயல் — (நீரைவிட்டால் தரிக்கமாட்டாத) கயல் மத்ஸ்யங்கள்
ஓடி — தனக்குவாஸஸ்தானமான நீரைவிட்டு ஓடி
சலங்கொண்டு — இசலி இசலி
மலர் சொரியும் — மலரைச்சொரிகிறம்
ஒண் மல்லிகை — அழகிய மல்லிகைகளும்
செருந்திசெண்பகங்கள் — செருந்திகளும்சம்பகங்களும்
மணம்நாறும் — வாஸனையைப்பரப்பவிடுகிற
வண் — வளமிகுந்த
பொழிலினூடே — சோலையிலே
வளங்கொண்டு விளையாடும் — (அப்புஷ்பவாஸநாக்ராணபலத்தாலே) துள்ளிவிளையாடுகிற
நாங்கூர் வைகுந்தவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே! (க)

வ்யா.—முதற்பாட்டு. (சலங்கொண்ட)†சீற்றத்தையிட்டாயிற்று வகுத்தது. †சீற்றத்தையுடையனாயிருக்கிற ஹிரண்யனுடைய, †வரபலத்தாலே திண்ணியதாய் அகன்றமார்வைத் தன்னுடைய †சீற்றத்தைக்காட்டி வெதுப்பிப் பதஞ்செய்யப்பண்ணி பின்னை அநாயாஸேந கிழித்து,†ஒருவரால் பரிச்சேதிக்கவொண்ணாத கடலை க்ஷுத்ரபதார்த்தங்களைப்போலே பரிச்சேதித்துக்கடைந்து, அதில் நல்லுயிரான அம்ருதத்தைவாங்கி, "நம்மை ஆஶ்ரயித்த தேவஜாதிகார்யம் தலைக்கட்டப்பெற்றோமிறே!" என்று அதுபெற்றால் அவர்களுக்கு வருமுகப்பைத் தானுடையனாய்,†அவ்வம்ருதத்தை புஜித்தார்க்குக் கழியக் கடவ ஜராதிகளைத் தானுடையனாயிருக்கிறவன். (நலங்கொண்டவித்யாதி). †அவ்வம்ருதத்தை நாய்க்கிடாய் என்னும்படியான வடிவை யுடையவன். (க) "धूमज्योतिः - தூமஜ்யோதிஃ" என்கிறபடியே, உபசயாத்மகமான வடிவையுடைய மேகம் திருமேனிக்கொப்பாகப் போராமையாலே, வ்யாவ்ருத்தமான வழகையுடைத்தாய் ஶ்ரமஹரமாயிருப்பதொருமேகம்போலேதிருமேனியையுடையனாய்,அத்தாலே

(க) மேகஸந்தேசம்.

"இவனே ஸர்வேஶ்வரன்" என்று தோற்றும்படியிருக்கிறவன். ப்ரமாதங்கள் புகுந்தபோதாக ஹிரண்யனை கிரஸிக்கவும் கடல்கடையவுமொண்ணுது என்று ஏற்கவேவந்து † பெரிய ஹாஷத்தோடே நித்யவாஸம்பண்ணுகையாலே ஆஶ்ரிதர்க்கு இனிதான தேசம்.

(சலங்கொண்டித்யாதி) † அதுக்கு ஹேதுவிருக்கிறபடி. (க) "ஸங்கர்ஷாதிவபுஷ்பிதா:" என்கிறபடியே, இசலி இசலி மலரைச்சொரிகிற மல்லிகை, அழகிய செருந்தி, அப்படிப்பட்ட செண்பகம், இவை பரிமளத்தைப் புறப்படவிட. (வணபொழிலித்யாதி) † நீரிலேகிடந்தால் மிடுக்கையுடைத்தாய்க் கரையிலேயேறினல் அதின்றிக்கே யிருக்கக்கடவ மத்ஸ்யங்களானவை, அந்ர தானுறுத்தும்படி அதிற்காட்டிலும் நிலமிதிதானே நன்றாயிருக்கையாலே அச்சோலையில, மணத்தை ஆக்ராணமபண்ணி அதனாலே மிடுக்குடைத்தாய், முக்தர் பகவதநுபவத்தைப பண்ணி, (உ) "அஹமந்நமஹமந்நம்" என்று களிக்குமா போலே கயல்களானவை அங்கேயிங்கே துள்ளி விளையாடாநின்றுள்ள திருநாங்கூர். ... ... ... (க)

அரு—முதற்பாட்டு. (சலமித்யாதி) "சலங்கொண்ட" என்று ஆவணை விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிருர் (சீற்றத்தையிட்டித்யாதி). வாக்யார்த்தம் (சீற்றத்தையுடையனுயித்யாதி). "அது"-என்றதினர்த்தம் (வரபலத்தாலேயித்யாதி). பிளந்து என்னுதே "கீண்டு" என்று - அநாயாஸம் தோற்றச் சொன்னதுக்கு பாவம் (சீற்றத்தைக்காட்டியித்யாதி). தடம் - விஸ்தாரமென்றருளிச்செய்கிருர் (ஒருவராலித்யாதி). "காலை" என்று இப்போது சொல்லுகைக்குத் தாத்பர்யமருளிச்செய்கிருர் (அவ்வம்ருதத்தை புஜித்தார்க்கிதயாதி). ஸமபிவ்யாஹார தாத்பர்யம் (அவ்வமருதத்தை நாயகனாயித்யாதி). "நாடோறும்மகிழ்ந்து - மருவியுறை இனிது கோயில்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிருர் (பெரியவித்யாதி).

(அதுக்கு) எம்பெருமான் பெரியஹார்ஷத்தோடே பர்த்திக்கைக்கு. கயல்கள் பொழிலில விளையாடக்கூடுமோவென்ன வருளிச்செய்கிருர (நீரிலேயித்யாதி). ... ... ... ... ... (க)

மூ—திண்ணியதோரரியுருவாய்த் திசையனைத்தும் நடுங்கத்
தேவரொடு தானவர்கள் திசைபப விரணியனை
நண்ணி யவன்மார்வகலத் துகிர் மடுதத நாதன்
நாடோறும் மகிழ்ந் தினிது மருவி யுறை கோயில

(க) (உ) தை - ப்ரு.

எண்ணில்மிகு பெருஞ்செல்வத் தெழில் விளங்கு மறையும்
ஏழிசையும் கேள்விகளு மியன்ற பெருங்குணத்தோர்
மண்ணில்மிகு மறையவர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| திசையனைத்தும் | எல்லாத்திக்கிலுள்ளவர்களும் |
| நடுங்க | பயப்படவும் |
| தேவரொடுதானவர்கள் | தேவதாநவாதிகள் |
| திசைப்ப | கலங்கவும் |
| திண்ணியதோர் அரியுருவாய் | த்ருடமாய் அத்விதியமான நரஸிம்ஹரூபியாய் |
| இரணியனை | ஹிரண்யாஸுரனை |
| நண்ணி | கிட்டி |
| அவன் | அவ்வஸுரனது [தில் |
| மார்வகலத்து | விசாலவக்ஷஸ்தலத் |
| உகிர்மடுத்த | நகங்களை ஊன்றிக்கிழித்த |
| நாதன் | ஸ்வாமி |
| நாடோறும்மகிழ்ந்தினிதுமருவியுறை கோயில், | |

| பதம். | உரை. |
|---|---|
| எண்ணில்மிகு | கணநாதீதமான |
| பெரும்செல்வத்து | மஹத்ஸம்பத்தையுடைத்தாய், [ள்ள |
| எழில்விளங்கு | அழகுவிளங்காநின்று |
| மறையும் | வேதங்களும் |
| எழிசையும் | ஸப்தஸ்வரங்களும் |
| கேள்விகளும் | (இவற்றின்) அர்த்தஶ்ரவணங்களும் |
| இயன்ற | நிறைந்தவராய் (அத்தால்) |
| பெருங்குணத்தோர் | ஆத்மகுண ஸம்பந்நராய் [தவரான |
| மண்ணில்மிகு | பூஸுரருக்குள் சிறந் |
| மறையவர்கள் | ப்ராஹ்மணர்கள் |
| மலிவெய்தும் | நெருங்கிவர்த்திக்கிற |
| நாங்கூர்வைகுந்தவிண்ணகரம்மடநெஞ்சே! வணங்கு. (உ) | |

வ்யா.—(திண்ணியதோரரியுருவாய்) ஹிரண்யனுடைய சீற்றமென்றால் பிற்காலியாதபடியான நரஸிம்ஹமாய், திக்குக்களெல்லாமஞ்ச, அநுகூல ப்ரதிகூல விபாகமின்றியே எல்லாருமொக்கக்கலங்க. (இரணியனைநண்ணி) எரிகிறபெருநெருப்பிலே சென்று கிட்டுவாரைப்போலே க்ரூரனை பையலைத்தீண்டி. (அவன்மார்வகலத்துகிர்மடுத்த) போக்குத்தேடி இடங்காணாமையாலே சுழித்துவருகிற ருதிரவெள்ளத்துக்கு ஒருவழிகண்டுவிட்டாற்போலே, அவனுடைய ப்ரந்தமார்பிலே திருவுகிரையூன்றி அவனையழியச்செய்து, தன்னுடைய ஈஶ்வரத்வத்தை நிலைநிறுத்தினவன் நித்யவாஸம்பண்ணுகிறதேசம்.

(எண்ணில்மிகுவித்யாதி) எண்ணிறந்திருப்பதாய், நிர்த்தோஷத்வாதிகளால்வந்த நிரவதிக ஸம்பத்தையுடைத்தாய், அவ்வழியாலே அழகு விளங்காநின்றுள்ள வேதமும், ஸப்தஸ்வரங்களும், †அங்கங்களும மற்றும்†உள்ளவற்றால்வரும் கேள்விகளும், இவற்றை †வாஸனைபண்ணி அத்தால்வந்த ஆத்மகுணங்களால் மிக்கிருப்பாராய். (மண்ணில்) பூமியில் "இதுக்கு இவனேகடவான், இதுக்கு இவனேகட

வான்'' என்னும்படி சமைந்த ப்ராஹ்மணர் நெருங்கி வர்த்திக்கிற தேசம். ... ... ... ... ... (௨)

அரு.—இரண்டாமபாட்டு. (திணைணியதோரித்யாதி) கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதமான ஹிரண்யசிரஸநத்தை ஸப்ரகாரமாகவநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

''எழிசை'' என்றது - ஆறங்கங்களுக்கும் மீமாம்ஸாதிகளுக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (அங்கங்களும் மற்றும்) என்று. ''கேள்வி'' அர்த்தஶ்ரவணமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உள்ளவற்றுலித்யாதி). (வாஸனைபண்ணி) என்றது - மநநத்தை; இது, ''இயன்ற'' என்றதினர்த்தம். ... . ... ... ... (௨)

மூ.—அண்டமு மிவ்வலைகடலு மவனிகளு மெல்லாம்
அமுதுசெய்த திருவயிற்ற னரன் கொண்டு திரியும்
முண்டமது நிறைத்தவன்கண் சாபமது நீக்கும்
முதல்வனவன்மகிழ்ந்தினிது மருவி யுறைகோயில்
எண்டிசையும் பெருஞ்செந்நெ லிளந்தெங்கு கதலி
யிலைக்கொடி யொண் குலைக்கமுகோடிசலிவளம்சொரிய
*வண்டு பல விசை பாட மயிலாலு நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| அண்டமும் | அண்டங்களையும் |
| இவ்வலைகடலும் | இந்த அலையெறிகிற ஸமுத்ரங்களையும் |
| அவனிகளுமெல்லாம் | (ஸப்தத்வீப) பூமிகளெல்லாவற்றையும் |
| அமுதுசெய்த | கபளீகரித்த |
| திருவயிற்றன் | திருஉதரமுடையவனும், |
| அரன் | (சாபத்தாலுபஹதனை) ருத்ரன் |
| கொண்டு | பரிக்ரஹித்துக்கொண்டு |
| திரியும் | திரிகிற |
| முண்டமது | தலையோட்டை |
| நிறைத்து | நிறையச்செய்து |
| அவன்கண்சாபமதுநீக்கும் | அவனையொருகாலும் விடாதேயிருக்கிற சாபத்தைப்போக்கியருளிய |
| முதல்வனவன் | ஸர்வநியந்தாவானஸ்வாமி |
| மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில், | |
| எண்டிசையும் | பார்த்தவிடமெங்கும் |
| பெருஞ்செந்நெல் | பெரியசெந்நெற்களும் |
| இளந்தெங்கு | இளமையையுடைத்தானநாரிகேளங்களும் |
| கதலி | வாழைகளும் |
| இலைக்கொடி | வெற்றிலைக்கொடிகளும் |
| ஒண்குலைக்கமுகோடு | அழகிதாகக்காய்த்த பாக்குமரங்களோடே |
| இசலி | ஸ்பர்த்தித்துக்கொண்டு |
| வளம்சொரிய | ஸம்ருத்தியைச்சுரக்க (இவற்றிலேபுக்கு மதுபானம்பண்ணி) |
| வண்டு | வண்டுகள் |
| பலஇசைபாட | அநேகராகங்களைப் பாடாநிற்க (அவற்றைக்கேட்டு) |
| மயில்ஆலும | மயூரங்கள் நர்த்தநம் பண்ணுகிற |
| நாங்கூர்வைகுந்தவிண்ணகரம்மடநெஞ்சே! வணங்கு. (௩) | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (அண்டமித்யாதி) அண்டமும், இந்த லோகத்தைச் சூழப்போந்து அலையெறிகிற கடலும், த்வீபங்களோடு மெல்லாமமுதுசெய்த திருவயிற்றையுடையவன். (அரனித்யாதி) சாபத்தாலே உபஹதனாயிருக்கிற ருத்ரன் கொண்டுதிரிகிற தலையோட்டை நிறைத்து, அவனை யொருநாளும் விடாதேயிருக்கிற சாபத்தைப்போக்கி, இப்படி ஸர்வநியந்தாவானவன் வர்த்திக்கிறகோயில்.

(எண்டிசையித்யாதி) பார்த்த பார்த்தவிடமெங்கும், பெரியசெந்நெல், முக்தர் பஞ்சவிம்சதிவார்ஷிகராயிருக்குமாபோலே இளைதாயிருக்கிற தெங்கு, வாழை, வெற்றிலைக்கொடி, அழகிதாகக் காய்த்த கமுகுகளோடேகூடி, ஒன்றுக்கொன்று இசலி ஸம்ருத்தியைச்சுரக்க, இவற்றிலேபுக்கு மதுபானம்பண்ணி, உள்ளுப்புக்கத்ரவ்யம் இருந்தவிடத்திலிருக்கவொட்டாமையாலே, வண்டுகளானவை பல இசைகளையும்பாட, அவற்றைக்கேட்டு மயில்களானவை ஆடாநின்றுள்ள.()

---

அரு.—மூன்றாம்பாட்டு. (அண்டமித்யாதி) ஓராஸ்ரிதனான ப்ரஹ்லாதனுக்குதவினவளவன்றிக்கே, ஸகலலோகங்களையும் வயிற்றிலேவைத்து, தன்னாலேதானே யிடர்ப்பட்ட துர்மாநிக்குமுதவினானென்று ஸௌஹார்த்யத்தையருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"அண்டமும்" என்றது - ஆகாசமென்றாய், உபரிதநலோகங்களையெல்லாம் சொல்லுகிறது. ... ... ... ... (௩)

மூ.—கலை யிலங்கு மக லல்கு லரக்கர்குலக்கொடியைக்
காதொடு மூக்குட னரியக் கதறி யவளோடித்
தலையி லங்கை வைத்து மலையிலங்கை புகச்செய்த
தடந்தோளன் மகிழ்ந்தினிது மருவி யுறைகோயில்
சிலை யிலங்கு மணி மாடத்துச்சி மிசைச் சூலம்
செழுங் கொண்ட லகடிரியச் சொரிந்த செழுமுத்தம்
மலையிலங்கு மாளிகைமேல் மலிவெய்து நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இலங்கும்கலை | விளங்காநின்றுள்ள பரியட்டத்தையுடைய | கொடியை | கொடிபோலு மிடையையுடைய சூர்ப்பணகையினது |
| அகல் அல்குல் | அகன்றநிதம்பப்ரதேசத்தையுடையளாய் [ங்க | காதொடுமூக்கு உடன் அரிய | கர்ணநாஸிகைகளை [க ஏககாலத்திலே அறுக் |
| அரக்கர் குலம் | ராக்ஷஸகுலத்திற்பிற | அவள் | அச்சூர்ப்பணகையானவள் |

| | |
|---|---|
| கதறி | கோவெனக்கூப்பிட்டு |
| தலையில் | தன் தலைமேலே |
| அம்கைவைத்து | அழகியகையைவைத்துக்கொண்டு |
| ஓடி | ஓடோடி |
| மலை | மலையின்மேலேயிருக்கிற |
| இலங்கைபுகச்செய்த | லங்கையிலே புகும்படிபண்ணின |
| தடமதோளன் | மஹாபாஹுவான சக்ரவர்த்தித்திருமகன் |
| மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில், | |
| சிலைஇலங்கு | ஒளிவிளங்குகிற |
| மணிமாடத்து | ரதநங்களிழைத்தக்ருஹங்களுடைய |
| உச்சிமிசை | சிகரத்தின்மேலேயிருக்கும் |
| சூலம் | சூலங்கள் |
| செழுங்கொண்டல் | ஸம்ருத்தமானமேகங்களினுடைய |
| அகடுஇரிய | கீழ்வயிற்றைபேதிக்க (உடனே) |
| சொரிந்த | ஸ்ரவித்த |
| செழுமுத்தம் | அழகியமுத்துக்களானவை |
| மலையிலங்கு | மலைபோலேவிளங்குகிற |
| மாளிகைமேல் | மாளிகைகளின்மீது |
| மலிவெய்து | குவிந்துகிடக்கிற |

நாங்கூர்வைகுந்தவிண்ணகரம்மடநெஞ்சே! வணங்கு. (ச)

வ்யா.—நாலாம்பாட்டு. (கலையித்யாதி) விளங்காநின்றுள்ள பரியட்டத்தையுடைததான அகன்ற நிதம்பப்ரதேசத்தையுடையளாய்க்கொண்டுதோற்றின, ராக்ஷஸஜாதியாகக்கொண்டாடும்படியிருக்கிற பெண்ணை.† தனக்கொரு பரியட்டமும் பெண்மையுமுடையளாய் வந்துதோற்றினளாயிற்று. (காதித்யாதி) அவன் † எறிட்டுக்கொண்டுவந்த வடிவைப்போககித் † தானும்படி பண்ணிவிட்டானாயிற்று. (கதறியித்யாதி) அநந்தரம் அவளும் கூப்பிட்டுக்கொடு † தலையிலே கையைவைதது மலையின்மேலேயான லங்கையிலே புகும்படிபண்ணின தோள்வலியையுடையவன் நித்யவாஸம்பண்ணுகிற கோயில்.

(சிலையித்யாதி) சிலையென்று வில்லுக்குப்பர்யாயசபதமாய், வில்லென்று ஒளியாய், ஒளி விளங்காநின்றுள்ள மணிமயமான மாடங்களினுச்சியின்மேலே யுண்டான † சூலமும், இதாயிற்று அவ்வூரில் க்ருஹங்களுடைய விருக்கும்படி. மேகங்களானவை கடலிலே போய்ப்புக்கு முத்தையடையவாரிக்கொண்டு§நகழ்ந்து நகழ்ந்து நடக்கமாட்டாதேவரும்; மாளிகைகளின் சூலங்களானவை இவற்றினுடைய கீழ்வயிற்றைப†போழும்; முன்பே தொட்டார்மேலே தோஷமாயிருக்கிறவவை முததைச்சொரியும். (மலையிலங்குமாளிகைமேல் மலிவெய்தும்) அப்போது ஒருமலைமேலே மலைசெய்துவைத்தாற்போலேயாயிற்றுக் குவிததுக்கிடப்பது. ... ... ... (ச)

அரு.—நாலாம்பாட்டு. (கலையித்யாதி) சாட்டாராபத்தைப்போக்கினவனன்றிக்கே, நித்யாநபாயிநியான பிராட்டிக்குதவினவனென்றநுஸந்தித்து, அந்தப்பிராட்டி பிரிவு வருகைக்கடியான சூர்ப்பணகையின் மூக்கறுத்த

§ நகழ்ந்து - நகாநது.

தோள்வலியை இப்பாட்டிற்சொல்லி, மேலிற்பாட்டிலே பிராட்டிக்குதவின மையை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

ராக்ஷஸியை இவரிப்படி வர்ணிக்கைக்கு ப்ரக்ருதோபயோக மென்னென்ன வருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி). (எதிர்கொண்டுவந்தவடிவை) என்றது - அலங்கரித்துக்கொண்டு ஆபிரூப்யத்தோடு வந்தவடிவையென்றபடி. (தானும்படி) விரூபையாம்படி. ராக்ஷஸிகளுக்கு வைரூப்யம் ஸஹஜமென்று திருவுள்ளம். இத்தால் கள்ளவேஷத்தைக் காதலித்துக்காட்டிவிட்டாரென்றதாயிற்று. அக்கையென்றது - "அங்கை" என்று மெல்லொற்றாகக் கிடக்கிறதாய், சூர்ப்பணகையென்றுபேர்போம்படி கோரமானகையென்றுதல், அம் - என்று. அழகாய், விபரீதலக்ஷணயா, கோரமானகையென்றுதல் சப்தார்த்தம் கண்டுகொள்வதென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (தலையிலேகையைவைத்து) என்று.

(சூலமும்) க்ருஹாலங்காரமான பொற்குடங்களின் நுனியும். (போழும்) பொதுக்கும்; பிளுமென்றபடி. ... ... ... ... (௪)

மூ.—மின்னனைய நுண் மருங்குல் மெல்லியற்கா விலங்கை
வேந்தன் முடி யொருபதும் தோளிருபதும் போயுதிரத்
தன்னிகரில் சிலை வளைத்தன்றிலங்கை பொடிசெய்த
தடந்தோளன் மகிழ்ந் தினிது மருவி யுறை கோயில்
செந்நெலொடு செங்கமலம் சேல் கயல்கள் வாளை
செங்கழுநீரொடு மிடைந்து கழனி திகழ்ந்தெங்கும்
மன்னு புகழ் வேதியர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | அக்காலத்திலே \|த்த | இலங்கை | லங்காநகரத்தை |
| மின் அனைய | கொடிமின்னலையொ | பொடிசெய்த | பொடியாக்கின |
| நுண்மருங்குல் | சிற்றிடையையும் | தடமதோளன் | மஹாபாஹுவான சக்ரவர்த்தித்திருமகன் |
| மெல்லியற்கா | ம்ருதுஸ்வபாவத்தையு முடையளான பிராட்டிக்காக. | மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில், | |
| இலங்கைவேந்தன் | லங்காதிபனான ராவணனுடைய | செநநெலொடு | செந்நெற்களும் |
| முடியொருபதும் | கிரீடமிலகும் பத்துத் தலைகளும் | செங்கமலம் | செந்தாமரைப்பூக்களும் |
| தோளிருபதும் | இருபதுகைகளும் | சேல்கயல்கள் வாளை | சேல்மீன் கயல்மீன் வாளைமீன்களும் ஆகிய இவைகள் |
| போயுதிர | சதசகலங்களாகியுதிர்த்துபோம்படி | செங்கழுநீரொடு | செங்கழுநீர்ப்பூக்களுடனே |
| நிகர்இல் | ஒப்பற்ற | மிடைந்து | சேர்ந்துகொண்டு |
| தன் சிலைவளைத்து | ஒங்கியதன்கோதண்டத்தைவளைத்து | கழனியெங்கும் | கழனிகளெல்லாம் |

| | | | |
|---|---|---|---|
| திகழ்ந்து | ப்ரகாசிக்கவும் | மலிவெய்தும் | வீதியெங்கும்நெருங்கிவர்த்திக்கும்படியாகவுமிருக்கிற |
| மன்னுபுகழ் | நித்யமானகீர்த்தியையுடைய | நாங்கூர்வைகுந்தவிண்ணகரம் மடநெஞ்சே! வணங்கு. | (௬) |
| வேதியர்கள் | ப்ராஹ்மணர்கள் | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மின்னனையவித்யாதி) மின்போலேயிருக்கிற நேரிய இடையையுடையளாய், ம்ருதுஸ்வபாவையாயிருக்கிற பிராட்டிக்காக, லங்கைக்கு நிர்வாஹகனாயிருக்கிற ராவணனுடைய பத்துத்தலையும் இருபதுதோளும் போயுதிரும்படியாக, தனக்கு ஒப்புண்டாகிலும் உபமாநரஹிதமாயிருக்கிற வில்லைவளைத்து அன்று லங்கையைப்பொடிபடுத்தின தோள் மிடுக்கையுடையவன், பிராட்டிக்குப்பண்ணின வ்யாபாரத்தை ஆச்ரிதரெல்லார்க்கு பொக்கப்பண்ணிற்றாக அவன் ப்ரீதியோடேவர்த்திக்கிற தேசமாகையாலே, கண்டார்க்கெல்லா மினிதாம்படியிருக்கும் தேசம்.

(செந்நெலித்யாதி) இதுவாயிற்று கழனியான ப்ரதேசமடையவிருக்கும்படி. செந்நெலோடேகூட, தாமரை, சேல், கயல்கள், வாளை, செங்கழுநீரோடு †மிடைந்து விளங்காநிற்குமாயிற்று வயலடங்க. (மன்னுபுகழித்யாதி) இதுவாயிற்று ஸ்தலமான ப்ரதேசமிருக்கும்படி. நித்யமானபுகழையுடையராயிருக்கிற ப்ராஹ்மணாமிக்கிருக்கிற. இதுவாயிற்று ஊரும் †பிடாகையுமிருக்கும்படி. ... (௫)

அரு.—அஞ்சாம்பாட்டு. (மினனிதயாதி) மிடைந்து - நெருங்கி. (பிடாகையும்) - வயலும. ... ... ... ... ... (௫)

மூ.—பெண்மை மிகு வடிவுகொடு வந்தவளைப் பெரிய
பேயினது வுருவுகொடு மாள வுயிருண்டு
திண்மைமிகு மருதொடு நற்சகட மிறுத்தருளும்
தேவனவன் மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
உண்மைமிகு மறையொடு நற்கலைகள நிறைபொறைகள்
உதவுகொடையென்றிவற்றிறொழிவில்லாப் பெரிய
வண்மைமிகு மறையவர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| பெண்மைமிகு வடிவுகொடு | உத்தமஸ்த்ரீசரீரத்தைத்தரித்துக்கொண்டு | உண்மைமிகுமறையொடு | யதாபூதவாதிகளான வேதங்களும் |
| வந்தவளை | வஞ்சிக்கவந்தபூதனையானவளை | நற்கலைகள் | (அவற்றின்) நல்ல அங்கங்களும் |
| பெரியபேயினதுஉருவுகொடு | தன்நிஜமான பெரிய பிசாசத்தினுடைய விக்ருதரூபமகொண்டு | நிறை | (இவற்றின்வாஸனையால்வந்த) குணபூர்த்தியும் |
| மாள | மாயும்படி | பொறைகள் | க்ஷமை (முதலியவை)களும் |
| உயிர்உண்டு | அவள்ப்ராணனைஸ்வீகரித்தும் | உதவுகொடையென்றிவற்றின் | கேட்டபோதே உதவுமபடியான ஔதார்யமுமென்கிற இவற்றையுடைய |
| திண்மைமிகு | மிக்கதிண்மையையுடைய | ஒழிவில்லா | ஓயாதே (எப்போதும்) உடையவர்களாய் |
| மருதொடு | மருதமரத்தையும் | பெரியவண்மை | மஹௌதார்யம் (ஆத்மஸமர்ப்பணம்) |
| நற்சகடம் | துடங்கினகார்யத்தை முடியத்தலைக்கட்டவல்ல சக்தியையுடையசகடத்தையும் | மிகு | நிறைந்த |
| இறுத்தருளும் | முறித்த | மறையவர்கள் | ப்ராஹ்மணர்கள் |
| தேவனவன் | ஸ்ரீக்ருஷ்ணன் | மலிவெய்தும் | நெருங்கிவர்த்திக்கிற |
| மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில், | | நாங்கூர்வைகுந்தவிண்ணகரம்மடநெஞ்சே! வணங்கு. | (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (பெண்மையித்யாதி) நாரீணாமுத்தமை யான யசோதைப்பிராட்டி வடிவைக்கொண்டுவந்த பூதனையை, பெரிய பேயின்வடிவையுடையளாய்க்கொண்டுமுடிந்து பிணமாய்க்கிடக்கும்படியாக அவளைமுடித்து, அஸுராவேசத்தாலே மிக்க திண்மையையுடைய மருது, † துடங்கினகார்யத்தைமுடியத் தலைக்கட்டவல்ல சக்தியையுடைய சகடம், இவற்றையிறுத்தருளி "விரோதி போகப்பெற்றோமிறே!" என்று அத்தாலே திருத்தனான † ஸர்வேஶ்வரன் விரும்பி வர்த்திக்கிற தேசம்.

(உண்மையித்யாதி) யதாபூதவாதியான வேதங்களோடேகூட அவற்றினுடைய நன்றான அங்கங்கள், இவற்றிலுண்டான வாஸனையாலே வரக்கடவ ஆத்மகுணங்களையுடைய, † அடக்கம், க்ஷமை, † ஆர்த்திகளர்த்தித்தபோதே அபேக்ஷிதங்களைக் கொடுக்கையாகிற ஔதார்யம் என்றாப்போலேசொல்லுகிற இவற்றொழிவின்றிக்கேயிருக்கிற உதாரரானவர்களால் மிக்கிருக்கிற. † வண்மை - ஆத்மஸமர்ப்பணம். ... ... ... ... (௬)

அரு.—ஆறும்பாட்டு. (பெண்மையித்யாதி) ஸ்ரீபூ நப்ஸிமஹாவதாரமும், அந்தரய ராமாவதாரமுமாகவநுபவித்தார ; அநந்தரம்....

மாய் ஆழ்வார்களை யெல்லாமீடுபடுத்தும் க்ருஷ்ணவதாரத்தை மேல் மூன்று பாட்டாலுமநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

சகடத்துக்கு நன்மையேதென்ன, நல்லபாம்பு என்னுமாபோலே க்ரௌர்யாதிசயத்தைச் சொல்லுமென்றருளிச் செய்கிறார் (தொடங்கினவித்யாதி). "அவன்" என்றதால் தோற்றின வேதாந்த ப்ரஸித்தியைப்பற்ற வருளிச் செய்கிறார் (ஸர்வேஶ்வரன்) என்று.

"நின்ற" என்றதினர்த்தம் (அடக்கம்) என்றது. உதவுகொடை - உதவும்படியான கொடையென்றர்த்தமருளிச் செய்கிறார் (அர்த்திகளித்யாதி). கீழே ஔதார்யத்தைச் சொல்லி, மீளவும் உதாரரான என்றால் புநருக்த மன்றோவென்ன வருளிச் செய்கிறார் (வண்மையித்யாதி). ... (௬)

மூ — விளங்கனியை யிளங்கன்று கொண்டுதிர வெறிந்து
வேல்நெடுங்க ணாய்ச்சியர்கள்வைத்ததயிர்வெண்ணெய்
உளங்குளிர வமுதுசெய்திவ்வுலகுண்ட காளை
யுகந்தினிது நாடோறும் மருவியுறைகோயில்
இளம்படி நற்கமுகு குலைத்தெங்கு கொடிச்செந்நெல்
ஈன்கரும்பு கண்வளரக் கால்தடவும் புனலால்
வளங்கொண்ட பெருஞ்செல்வம் வளருமணிநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (எ)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| இளங்கன்று கொண்டு | இளம்பருவமுடைய வத்ஸாஸுரனைத் தூக்கி | இளம்படி நல் கமுகு | இளமையைஸ்வபாவமாகவுடைய அழகிய பாக்குமரங்களும |
| விளங்கனியை உதிரஎறிந்து | விளாவாய்நின்றஅஸுரன்உதிர்ந்து உயிர் மாயும்படிவீசியும், | குலைத்தெங்கு | குலையையுடைத்தானதென்னைமரங்களும் |
| வேல் | வேல்போல [டைய | கொடி | வெற்றிலைக்கொடிக [ளம் |
| நெடுங்கண் | நீண்டகண்களையு | செந்நெல | செந்நெற்பயிரும் |
| ஆய்ச்சியர்கள் வைத்த | இடைச்சிகள் (உறிகளிலே) சேமித்து வைத்த | ஈன்கரும்பு | இனியகரும்புகளும ஆகியஇவைகள |
| தயிர்வெண்ணெய் | தயிர்வெண்ணெய்களை | கண்வளர | [illegible] |
| | | கால்தடவும் | அடியிலேபாயாநின்ற |
| உளம்குளிர | தன்திருவுள்ளம்குளிரும்படி | புனலால்வளங்கொண்டபெருஞ்செல்வம் | ஜலஸம்ருத்தியால்வந்த நன்மையையுடைய பெரிய ஐஸ்வர்யம |
| அமுதுசெய்து | உண்டும். (பின்னும்) | | |
| இவ்வுலகுண்ட | இந்தலோகத்தையடைய வமுதுசெய் | வளரும | வ்ருத்தியடையாநின்றுள்ள |
| காளை | நவயௌவனன் [உ | | |
| கந்தினிதுநாடோறும மருவியுறை | கோயில், | அணிநாங்கூர் வைகுந்தவிண்ணகரம் மடநெஞ்சே! வணங்கு. (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (விளங்கனியித்யாதி) வத்ஸாஸுரனைக் கொண்டு விளாவாய் நிற்கிற அஸுரன்மேலே உதிரும்படியெறிந்து, வேல்போலே †பரந்த கண்ணையுடையராயிருக்கிற இடைச்சிகள் சேமித்துவைத்த தயிரையும் வெண்ணெயையும், †ஆஶ்ரிதஸ்பர்ச முள்ளதொரு த்ரவ்யமாகையாலே திருவுள்ளமானது குளிரும்படியாக வமுதுசெய்து, அநந்தரம், இந்தலோகத்தையடையத் திருவயிற்றிலேவைத்து ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தைப்பண்ணுகையாலே இளகிப்பதித்திருக்கிறவன்.

(இளம்படி) இளமையை ஸ்வபாவமாக வுடைத்தாயிருக்கிற கமுகு, குலையையுடைத்தாயிருக்கிற தெங்கு, வெற்றிலைக்கொடி, செந்நெல், †இனியகரும்பானது கண்வளரும்படியாகப் புனலானது †கால்தடவா நிற்குமாயிற்று, †கரும்பானது நாள்தோறும் ஒருகண்ணேறி வரும்படி கால் தடவுமாயிற்றுப் புனலானது. †நிரவதிக ஸம்பத்தானது மாறாதே செல்லுகிற. ... ... ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (விளங்கனியித்யாதி) "வேல்" என்றத்தால் நெடுமை ஆர்த்தமாயிருக்க, நெடுமையைச்சொன்னது லக்ஷணயா வைபுல்யவாசியென்று (பரந்த) என்கிறார். தயிரும் வெண்ணெயு மமுதுசெய்தால் உள்ளம்குளிருகை அர்த்தஸித்தமாயிருக்க, விசேஷித்ததுக்குபாவம் (ஆஶ்ரிதேத்யாதி).

இன்கரும்பு என்றது நீட்டிக்கிடக்கிறதாய், அர்த்தமருளிச்செய்கிறார் (இனியகரும்பு) என்று. (கால்தடவாநிற்கும்) என்றது - சாடு. ஸ்வபாவார்த்தம் - கால்வழிகளாலே பரம்பாநிற்குமென்று. "கண்வளரும்" என்றதுக்கும் சாட்வர்த்தம் ஸ்பஷ்டமென்று திருவுள்ளம்பற்றி, ஸ்வபாவார்த்தத்தை யருளிச்செய்கிறார் (கரும்பானதித்யாதி). அணி நாங்கூராகைக்கு ஹேது கீழ்ச்சொன்னதெல்லாமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதி) ... ... ... ... ... (எ)

மூ.—ஆறாத சினத்தின் மிகு நரகனுரமழித்த
அடலாழித் தடக்கைய னலர்மகட்கு மரர்க்கும்
கூறாகக் கொடுத்தருளும் திருவுடம்ப னிமையோர்
குலமுதல்வன் மகிழ்ந்தினிது மருவி யுறை கோயில்
மாறாத மலர்க்கமலம் செங்கழுநீர் ததும்பி
மதுவெள்ள மொழுக வயலுழவர் மடையடைப்ப
மாறாத பெருஞ்செல்வம் வளரு மணிநாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (அ)

| பதம். | உரை. | உரை. | பதம். |
|---|---|---|---|
| ஆறுத | ஒருகாலாறக்கடவதன்றிக்கேயிருக்கிற | இமையோர்குல முதல்வன் | நித்யஸூரிகள்திரளுக்குநிர்வாஹகனுன ஸர்வேஸ்வரன் |
| சினத்தின் | கோபத்தையுடைய | மகிழ்ந்தினிது மருவியுறைகோயில், | |
| மிகு | மிகைத்துவாராநின்றுள்ள | மாறுதமலர்க்கமலம் | இடைவிடாதமலரையுடையதாமரை |
| நரகன் | நரகாஸுரனது | செங்கழுநீர் | செங்கழுநீர் (முதலியபூக்கள்ஆகிய இவைகளில்நின்றும்) |
| உரம் | மிடுக்கை | | |
| அழித்த | போக்கின | | |
| அடல்ஆழி | யுத்தோந்முகமானதிருவாழியை | ததும்பி | நெருங்கிப்புறப்பட்ட |
| தடக்கையன் | தன்பெருங்கையிலேயுடையனுய், | மதுவெள்ளமொழுக | தேன்வெள்ளமெங்கும்(தலைதெரியாது)பா |
| | | உழவர் | கர்ஷகர் [ய்வதினுல் |
| அலர்மகட்கும் | பெரியபிராட்டியாருக்கும் | வயல்மடையடைப்ப | தங்கள்தங்கள்கழனிமடைகளை அடைக்கவும் |
| அரர்க்கும் | ருத்ரனுக்கும் [க்கும் | | |
| கூறுஆக | என்னதென்றுகூறிட்டநுபவிக்கலாம்படி | மாறுத | மாறுதேவளர்ந்துகொண்டுவருகிற |
| கொடுத்தருளும் திருவுடம்பன் | தன்திருமேனியைக் கொடுத்துக்கொண்டிருக்கிற சீலத்தையுடையனுய், | பெருஞ்செல்வம்வளரும் | மிக்கநீர்ச்செல்வம் நிறைந்த |
| | | அணிநாங்கூர் | வைகுந்தவிண்ணகரம் |
| | | மடநெஞ்சே! வணங்கு. (அ) | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (ஆறுதவித்யாதி)ஒருகாலாறக் கடவதன்றிக்கே யிருக்கிற சினத்தையுடையனுய், மிகைத்து வாராநின்றுள்ள நரகனுடைய†மிடுக்கையழித்த யுத்தோந்முகமான திருவாழியைக் கையிலே யுடையவன், பெரிய பிராட்டியார்க்கும் ருத்ரனுக்கும் என்னதென்று கூறிட்டநுபவிக்கலாம்படி திருமேனியைக் கொடுத்துக்கொண்டிருக்கிற †சீலத்தையுடையவன், நித்யஸூரிகள் திரளுக்கு நாதனுனவன்.

(மாறுதவித்யாதி) மாறுதமலரை யுடைத்தான தாமரை, செங்கழுநீர், இவற்றுல் †மிக்கு மதுவெள்ளமிட்டுப்பாய, வயலிலுண்டான கர்ஷகரானவர்கள் பரிராழிய வெள்ளம் போமளவானவாறே மடைகளையடைப்பர்கள். (மாறுத பெருஞ்செல்வம் வளரும்) †“அங்கேயுடைத்தது” “இங்கேயுடைத்தது கிடாய்” என்று, “ஸஹ்யப் பெருக்குக் கிடாய்” என்று கூப்பிடுகிற ஆரவாரமேயாய்க் கிடக்குமாயிற்று. ... ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (ஆறுதவித்யாதி) “உரம்” என்றதினர்த்தம் (மிடுக்கை) என்றது. “அலர்மகட்கு” என்றதாலே மஹத்வமும் “அரர்க்கு”

என்ற பூஜ்யோக்தியாலே - அவனுடைய ஸ்வோத்கர்ஷாபிமாநமும், "கூருக" என்கையாலே - மந்தஸம்ஸ்லேஷமும் தோற்றுகையாலே யருளிச்செய்கிருர் (சீலத்தையுடையவன்) என்று.

"ததும்பி" என்றதினர்த்தம் (மிக்கு) என்றது. கீழ்ச்சொன்னதுக் கநுகுணமாக செல்வத்தை விசேஷிக்கிருர் (அங்கேயித்யாதி). ... (அ)

மூ.—வங்கமலி தடங்கடலுள் வானவர்களோடு
மாமுனிவர் பலர்கூடி மாமலர்கள்தூவி
எங்கள்தனி நாயகனே யெமக்கருளா யென்னும்
ஈசனவன் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில்
செங்கயலும் வாளைகளும் செந்நெலிடைக் குதிப்பச்
சேலுகளும் செழும்பணைசூழ் வீதிதொறு மிடைந்து
மங்குல்மதி யகடுரிஞ்சு மணிமாட நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்கு மட நெஞ்சே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| வங்கம்மலி | மரக்கலங்களால்நிறைந்திருக்கிற |
| தடங்கடலுள் | பெரியதிருப்பாற்கடலிலே |
| வானவர்களோடுமாமுனிவர்பலர்கூடி | தேவர்களோடே ஸநகாதிமஹர்ஷிகள் பலருங் கூடிக்கொண்டுவந்து |
| மாமலர்கள்தூவி | ஶ்லாக்யமான புஷ்பாத்யுபகரணங்களைத்தூவி |
| எங்கள்தனிநாயகனே | எங்களுக்குநாதனுன ஸர்வேஶ்வரனே ! |
| எமக்கு அருளாய் | எங்கள்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணும் |
| என்னும் | என்றுப்ரார்த்திக்கும்படியிருக்கிற |
| ஈசனவன் | ஸ்வாமி |
| மகிழ்ந்தினிதுமருவியுறை கோயில், | |
| செங்கயலும் | செவ்வியகயல்மத்ஸ்யங்களும் |
| வாளைகளும் | வாளைமத்ஸ்யங்களும் |
| செந்நெலிடை | செந்நெற்பயிர்களினிடையே |
| குதிப்ப | துள்ள |
| சேலுகளும் | (அப்பயிரினிடையேயிருந்த)சேல்மத்ஸ்யங்களும் (கூடவே) களித்துவர்த்திக்கிற |
| செழும்பணைசூழ் | பெரியமருதநிலம்சூழ்ந்திருப்பதாய், |
| வீதிதொறும் | தெருக்கள்தோறும் |
| மிடைந்து | நெருங்கியிருப்பதாய் |
| மங்குல்மதி | ஆகாசத்திலேஸஞ்சரிக்கிறசந்த்ரனுடைய |
| அகடுஉரிஞ்சும் | கீழ்வயிறுதேயும்படியாயுயர்ந்த |
| மணிமாடம் | மணிமயமான மாடங்களையுடையதாயிருக்கிற |
| நாங்கூர்வைகுந்தவிண்ணகரம் மடநெஞ்சே! வணங்கு. (கூ) | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வங்கமித்யாதி) மரக்கலங்களால் குறைவற்றிருக்கிற பெரிய திருப்பாற்கடலிலே. †மலைக்குச் சிறப்பாக ஆனையையிட்டுச் சொல்லுமாபோலே, கடலுக்குச் சிறப்பாக மரக்க

லங்களையிட்டுச் சொல்லக்கடவது. தேவர்களோடே ஸநகாதிகளுங் கூட புஷ்பாத்யுபகரணங்களைத் தூவி, "எங்களுக்கு நாதனான ஸர்வே ஸ்வரனே! எங்கள் பக்கலிலே க்ருபையைப்பண்ணி யருளவேணும்" என்னும் ஸர்வேஸ்வரன் ப்ரீதிபூர்வகமாக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

(செங்கயலித்யாதி) அழகிய கயலும் வாளைகளும் குளிர்த்தி யைப்பற்றச் செந்நெலிடையிலே தாவ, சேல்களானவை களித்து வர்த்தியா நின்றுள்ள மருதநிலம் சூழ்ந்திருக்குமாயிற்று. †தெருவு கள் தோறும்,† ஆகாசத்திலே ஸஞ்சரிக்கிற சந்த்ரனுடைய கீழ்வயிறு தேயும்படியான மணிமயமான மாடங்களையுடைய. ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (வங்கமித்யாதி) கீழ்ப்பாட்டில் ஸௌசீல் யத்தை யநுஸந்தித்தவுடனே அவனுடைய பரத்வம் திருவுள்ளத்திலூற்றிரு ந்து அத்தையருளிச் செய்கிறாரென்றுதல், கீழ் க்ருஷ்ணாவதாரம் ப்ரஸ்துத மாகையால்(க) "[Grantha script] - நாகபர்யங்க முத்ஸ்ருஜ்யஹ்யாகதோ மதுராம்புரீம்" என்கிறபடியே அதுக்கடியான திருப் பாற்கடலானை யநுபவிக்கிறாரென்றுதல் ஸங்கதி.

வங்கங்களைச்சொன்னதுக்கு ப்ரக்ருதோபயோகமென்னென்ன வருளி ச்செய்கிறார் (மலைக்கித்யாதி). கவிஸமாதியாலே சொன்னாரென்று கருத்து.

(தெருவுகள்தோறும்) என்றவநந்தரம், மிடைந்திருக்கிற-நெருங்கியிருக் கிற என்று கூட்டியநுஸந்திப்பது. "மங்குல்" என்றதினர்த்தம் (ஆகாசத் திலே) என்றது. ... ... ... ... (௯)

மூ.—சங்கு மலி தண்டு முதல் சக்கரமு னேந்தும்
தாமரைக் கண்ணெடிய பிரான் தானமருங்கோயில்
வங்கமலி கடலுலகில் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகர்மேல் வண்டறையும் பொழில்சூழ்
மங்கையார் தம் தலைவன் மருவலர் த முடல்துணிய
வாள் வீசும் பரகாலன் கலிகன்றி சொன்ன
சங்கமலி தமிழ்மாலை பத்திவை வல்லார்கள்
தரணியொடு விசும்பாளும் தன்மை பெறுவாரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

(க) ஹரிவம்சம் - கக௰ - ௬௨.

| பதம். | உரை. |
|---|---|
| சங்கு | சங்கமும் |
| மலி | த்ருடமான |
| தண்டு | கதையும் |
| சக்கரம் | சக்கரமும் |
| முதல் | இவைமுதலானகட்க சார்ங்கங்களும் ஆகியஇவற்றை |
| முன் | கண்முன்னே |
| ஏந்தும் | தரித்துக்கொண்டிருக்கிற |
| நெடிய | நீண்ட |
| தாமரைக்கண் | தாமரைபோன்றதிருக்கண்களையுடைய |
| பிரான் | மஹோபகாரகனான ஸர்வேஶ்வரன் |
| அமரும்கோயில் | நித்யவாஸம்பண்ணும்திவ்யதேசமாய், |
| வங்கம் | மரக்கலங்கள் |
| மலி | நிறைந்த |
| கடல் | கடல்சூழ்ந்த |
| உலகில் | பூமியில் |
| மலிவுஎய்து | ஸம்ருத்திமிக்கிருக்கிற |
| நாங்கூர் | திருநாங்கூரில |
| வைகுந்தவிண்ணகர்மேல் | வைகுந்தவிண்ணகர் விஷயமாக, |
| வண்டு | வண்டுகள் |
| அறையும் | சப்தியாநின்றுள்ள |

| பதம். | உரை. |
|---|---|
| பொழில | சோலைகளாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| மங்கையர்தம் | திருமங்கையிலுள்ளார்க்கு |
| தலைவன் | ப்ரதாநராய் |
| மருவலர்தம்உடல் | சத்ருக்கள் சரீரங்கள் |
| துணிய | சின்னம் பின்னமாம்படி |
| வாள்வீசும் | கட்கத்தைவீசுகிற |
| பரகாலன் | சத்ரும்ருத்யுவாய் |
| கலிகன்றி | கலிவைரியான ஆழ்வார் |
| சொன்ன | அருளிச்செய்ததாய் |
| சங்கம்மலி | கவிஸங்கமகொண்டாடத்தக்க |
| தமிழ்மாலை | த்ராவிடசப்தஸந்தர்ப்பத்தையுடைத்தானவைகளையும் |
| இவைபத்து | இப்பத்துப்பாட்டுகளை |
| வல்லார்கள் | அப்யஸிக்கவல்லவர்கள், |
| தரணியொடு | பூமியையும் |
| விசும்பு | பரமாகாசத்தையும் |
| ஆளும | ஆளும்படியான |
| தன்மை | அதிசயத்தை |
| பெறுவார் | உடையராகப்பெறுவர்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (சங்கித்யாதி) †ஆஶ்ரிதார்த்தமாக ஸ்ரீபஞ்சாயுதங்களையும் தரித்துக்கொண்டிருக்கிற புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம். மரக்கலத்தை யுடைத்தான கடல் சூழ்ந்த பூமியில் ஸம்ருத்தி விஞ்சியிருக்கிற திருநாங்கூரிலே வைகுந்த விண்ணகரிலே கவிபாடிற்று. கவிபாடினவர் - மதுபாநமத்தமான வண்டுகள் த்வநியாநின்றுள்ள பொழிலாலே சூழப்பட்ட திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநரான ஆழ்வார், சத்ருக்களுடல் துணியும்படியாக வாள்வீசுகிற, பரகாலன் - ஆழ்வாரருளிச்செய்த, † சங்கப்புலவர்கள் திரளவிருந்து தமிழ் கொண்டாடப் புககால் இத்தையே கொண்டாடும்படியான தமிழ்த்தொடை

பத்தையும் வல்லவர்கள், உபயவிபூதியும் தாங்களிட்ட வழக்காம்படியான ஸ்வபாவத்தையுடையராகப் பெறுவர். ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. (சங்கித்யாதி) சங்கும், மலிவுடைய - மிடுக்கின் மிகுதியுடைய, தண்டும், சக்கரமும், முதல் என்றத்தாலே - மற்றை வாளும் வில்லுமான இவற்றைக்கொண்டு கண்முன்னே பூவேந்தினாற்போலே தரித்துக்கொண்டிருக்கிற தாமரைபோன்ற நெடியகண்ணுடைய பிரான்றானென்று வாக்யார்த்தமுட்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதி). (சங்கப்புலவர்) என்றது - கவிஸங்கத்தையுடைத்தான சங்கப்பலகையில் வித்வான்களென்றபடி. ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றாம்பத்து ஒன்பதாந்திருமொழி முடிந்தது.





ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி, மூன்றாம்பத்து பத்தாந்திருமொழி திருமடந்தைப்ரவேசம்.



வ்யா.—†ஆஶ்ரித †விரோதி நிரஸநசீலனாய், ஆஶ்ரிதர்க்கு †ஆபத்துக்களிலேவந்து உதவும் ஸ்வபாவனுமான ஸர்வேஶ்வரன்,†தான் சரண்யனாமிடத்தில் புருஷகாரமாம் பிராட்டிமாரோடே கூடவந்து கிற்கிறபடியை யநுஸந்தித்து நித்யஸூரிகள் "இதொருசீல்குண ப்ராசுர்யமிருந்தபடியென்!" என்று இதிலே ஈடுபட்டு ஆஶ்ரயிக்கும் படியாக அரிமேய விண்ணகரிலே நித்யவாஸம் பண்ணுகின்றான், ஆனபின்பு நீயுமங்கே சென்று அவனை யாஶ்ரயித்து உன்னுடைய குறைகளெல்லாவற்றையும் தீர்த்துக்கொள்ளப் பாராயென்று திருவுள்ளத்தைக் குறித்தருளிச் செய்கிறார். ... ... *

அரு.—திருமடந்தைப்ரவேசம். கீழ் வைகுந்தவிண்ணகரில் நரஸிம்ஹ ராம க்ருஷ்ணாவதாரசேஷ்டிதங்கள் முதலானவற்றை யநுஸந்தித்த ஆழ்வார், அடுத்த அரிமேயவிண்ணகரிலிருக்கு மவனையு மநுபவிக்கவேணுமென்னுமாசையால் அவ்வபதாநங்களை மாறிமாறிப் பேசாநின்றுகொண்டு அநுபவிக்கிறாரென்னும் ஸங்கதியையுட்கொண்டு, திருமொழியில் ப்ரமேயத்தை உபந்யஸிக்கிறார் (ஆஶ்ரிதவிரோதிநிரஸநேத்யாதி). இத்திருமொழியில் நரகாஸுர ப்ரப்ருதிகளை நிரஸித்தபடிகளைப்பற்ற (விரோதிநிரஸநசீலனாய்) என்பது. (௧) "கடலைக்கடைந்தமுதளிக்கும்" என்றும், (௨) "உண்டபிரான்" என்றும், (௩) "சிறுகுறளாய்" என்றும் சொன்ன அபதாநங்களைப்பற்ற வருளிச்செய்கிறார் (ஆபத்துக்களிலே வந்துதவும் ஸ்வபாவனுமான) என்று. முதற்பாட்டைப்பற்ற வருளிச்செய்கிறார் (தானித்யாதி). ... ... *

மூ.—திருமடந்தை மண்மடந்தை யிருபாலும் திகழத்
தீவினைகள் போயகல வடியவர்கட்கென்றும்
அருள்நடந் திவ்வேழுலகத் தவர் பணிய வானோர்
அமர்ந்தேத்த விருந்தவிடம் பெரும்புகழ் வேதியர்வாழ்
தருமிடங்கள் மலர்கள் மிகு கைதைகள் செங்கழுநீர்
தாமரைகள் தடங்கடொறு மிடங்கடொறும் திகழ
அருவிடங்கள் பொழில்தழுவி யெழில்திகழு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மட நெஞ்சே. (௧)

(௧) ௩-௧௦-௨. (௨) ௩-௧௦-௩. (௩) ௩-௧௦-௫.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திருமடந்தை | பெரியபிராட்டியாரும் | வாழ்தரும் | வர்த்திக்கிற [ய், |
| மண்மடந்தை | ஸ்ரீபூமிப்பிராட்டியும் | இடங்கள் | இடங்களையுடைத்தா |
| இருபாலும் | இரண்டுபார்ஶ்வங்க [ளிலும் | மலர்கள்மிகு | புஷ்பஸம்ருத்தியையு |
| திகழ | ப்ரகாசிக்க, | கைதைகள் | தாழைகளும் [டைய |
| அடியவர்கட்கு | ஆஶ்ரிதர்பக்கல் | செங்கழுநீர் | ரக்தோத்பலங்களும் |
| என்றும் | எப்போதும் | தாமரைகள் | தாமரைகளும் |
| அருள்நடந்து | க்ருபைபண்ணி | தடங்கள்தொறும | தடாகங்கள்தோறும் |
| தீவினைகள் | கொடியபாபங்கள் | இடங்கள்தொறும் | பார்த்தபார்த்தவிட மெல்லாம் |
| போய்அகல | விட்டோடும்படி | திகழ | விளங்கவும், |
| இவ்வேழ்உலகத்தவர் | இந்தஸப்தலோகங்களிலுள்ளாரும் | பொழில் | சோலையானது |
| பணிய | ஆஶ்ரயிக்கவும், | அருவிடங்கள் | ஆகாசாவகாசமடைய |
| வானோர் | நித்யஸூரிகள் | தழுவி | இடமடைத்தாகக்கொண்டு ஓங்கி |
| அமர்ந்து | இஸ்ஸம்ஸாரவிபூதியில்கால்பொருந்தி | எழில்திகழும் | அழகுவிளங்காநின்ற |
| ஏத்த | ஸ்தோத்ரம்பண்ணவும் [ற | நாங்கூர் | திருநாங்கூரில் [ளை |
| இருந்த | நித்யவாஸம்பண்ணுகி | அரிமேயவிண்ணகரம | அரிமேயவிண்ணகரிலெம்பெருமானை |
| இடம் | திவ்யதேசமாய், | மடநெஞ்சே | எனக்குவிதேயமான நெஞ்சே! |
| பெரும்புகழ் | மஹாப்ரஸித்தரான | | |
| வேதியர் | ப்ராஹ்மணர் | வணங்கு | ஆஶ்ரயி. (௧) |

முதற்பாட்டு.—(திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந்திகழ) (௧) †“ந கஶ்சிந்நாபராத்யதி” என்று குற்றத்தைப் பொறுப்பிக்கும் பிராட்டியும், “முதலிலே குற்றந்தன்னைக் காண்கிறதென், பின்னைப்பொறுப்பிக்கிறதென்” என்று, குற்றங்கண்டு பொறுக்கையுங்கூட மிகையாம்படி யிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டியும், இரண்டிடத்திலும் விளங்க. † குற்றத்தைப் பொறுப்பிக்கைக்குப் பிராட்டி, குற்றங்கண்டு கைவிடவொண்ணாத விடத்தில், “குற்றம் கணக்கிடுகிற விதுக்கு பலமென்” என்றிருக்கும் ஸ்ரீபூமிப்பிராட்டி. (தீவினைகள் போயகல) இப்படிப்பட்ட பிராட்டிமாருடைய நித்ய ஸந்நிதியாலே, ஸர்வேஶ்வரனுக்கு ஆஶ்ரித விஷயத்து, (௨) “ஸம்ஸாரேஷு நராதமாந் க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு” என்கைக்கு விஷயமற்றிருக்குமாயிற்று. † பொறுப்பிக்குமவளும் பொறைக்கு உவாத்தானவளும் எப்போதுமொக்க அருகே யிருக்கையாலே, ஆஶ்ரிதர்பக்கல் எப்போது மவனருளே நடந்து, அத்தாலே கொடிய அபராதங்கள் “இவ்வோவிடங்கள் நமக்கிருப்பிட-

(௧) ரா-யு-௧௧௬-௪௪. (௨) கீதை-௧௬-௧௯.

மல்ல," என்று விட்டோட, "இப்படியிருக்கிற விவனல்லது லோகத்திலே வேறு ஆஸ்ரயணீயரில்லை" என்று ஏழுவகைப்பட்ட லோகங்களிலுள்ளாருமடைய ஆஸ்ரயிக்க, தேவர்களுங்கூடக் கால் பொருந்தவரிதாம்படியான இஸ்ஸம்ஸார விபூதியிலே, அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்தரான நித்யஸூரிகள் பொருந்தி ஆஸ்ரயிக்கும்படியாக விருக்கிறதேசம்.

(பெரும்புகழித்யாதி) இவனை யநுபவிக்கையே யாத்ரையாம்படி சமைகையாலே மிக்கபுகழையுடைய ப்ராஹ்மணர்வர்த்திக்கிற விடங்களையுடைத்தாய், மலர்கள் மிகு கைதைகள் தொடக்கமானவற்றையுடைத்தா யிருக்கிற திருநாங்கூரென்னுதல்; வாழ்தருமிடங்களிலே யுண்டாய் † அவர்களுக்குறுப்பாயிருக்கிற மலர்கள் மிகு கைதைகள் தொடக்கமானவற்றை யுடைத்தாயிருக்கிற வென்னுதல். பூக்கள் மிக்கிருந்துள்ள, தாழைகள், செங்கழுநீர், தாமரைகள், இவைபரந்த பொய்கைகள் தோறும் அவகாசங்கள்தோறும் விளங்க, இங்கிடமில்லாமையாலே சோலையானது ஆகாசத்தில் †பரப்படைய இடமடைத்துக் கொண்டோங்கி அழகு விளங்காநின்றுள்ள. † அருமிடமென்று ஸூக்ஷ்மதையைப்பற்ற ஆகாசத்தைச் சொல்லுகிறது.

---

அந.—முதற்பாட்டு. (திருவித்யாதி) "தீவினைகள்போயகல" என்றபதத்தைக்கடாக்ஷித்து, பிராட்டிமாரிருவரையும் சொன்னதுக்கு உட்கருத்தையருளிச்செய்கிறார் (நகஸ்சிதித்யாதி). இவர்களுக்கிவை ஸ்வாபாவிகங்களோவென்ன (குற்றத்தையித்யாதி). "திருமடந்தை மண்மடந்தையிருபாலும் திகழ - அடியவர்கட்கு என்றுமருள்நடந்து - தீவினைகள்போயகல இவ்வேழுலகு" இத்யாதியாலே அந்வயம் திருவுள்ளம்பற்றி, ததநுகுணமாக வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (பொறுப்பிக்குமித்யாதி).

(அவர்களுக்குறுப்பாய்) அவர்கள்பண்ணும் ஸமாராதநங்களுக்குறுப்பாய். "தழுவி" என்றதினர்த்தம் (பரப்படையவித்யாதி). "[illegible] அத்ரக்ருத்ரபததி" என்று தோற்றுகையாலே மூர்த்தமான ஆகாசத்தை "அரு" என்று அமூர்த்தமாகச் சொல்லக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அருவிடமென்றித்யாதி). ... ... ... ... (௧)

மூ.—வென்றி மிகு நரகனுரமது வழிய விசிறும்
விறலாழித் தடக்கையன் விண்ணவர்கட்கன்று
குன்றுகொடு குரைகடலைக் கடைந்தமுத மளிக்கும்
குருமணியென் னாரமுதம் குலவி யுறை கோயில்

என்றுமிகு பெருஞ்செல்வத் தெழில்விளங்கு மறையோர்
ஏழிசையும் கேள்விகளு மியன்ற பெருங் குணத்தோர்
அன்றுலகம் படைத்தவனே யனையவர்கள் நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மட நெஞ்சே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வென்றிமிகு | ஜயம்மிக்க | குலவியுறை | விரும்பிவர்த்திக்கிற |
| நரகன் | நரகாஸுரனுடைய | கோயிலு | திவ்யஸ்த்தாநமாய், |
| அது உரம் | அப்படிப்பட்டபலம் | என்றும் | ப்ரதிதிநமும் |
| அழிய | நசிக்கும்படி | மிகு | மிகுத்துவருகிற |
| விசறும் | வீசாநின்றுள்ள | பெரும்செல்வத்து | நிரவதிகஸம்பத்தையுடையராய் [ராய் |
| விறல் | மிடுக்கையுடைய | | |
| ஆழி | திருவாழியை | எழில்விளங்கும் | அழகுவிளங்காநிற்பா |
| தடம் | பெரிய [யவனாய், | மறையோர் | வேதத்தைக்கரைகண்டிருப்பாராய் |
| கையன் | திருக்கையிலேயுடை | | |
| அன்று | தேவஜாதி ஆர்த்தித்தவன்று | ஏழ்இசையும் | ஸப்தஸ்வரங்களும் |
| | | கேள்விகளும | மற்றுமுண்டான அங்கோபாங்கங்களும் |
| விண்ணவர்கட்கு | இந்த்ராதிதேவர்களுக்காக [ட்டு | | |
| | | இயன்ற | அதிகரித்த |
| குன்றுகொடு | மந்தரபாவதத்தைந | பெருங்குணத்தோர் | மஹாகுணப்ரசுரராய் |
| குரைகடலை | கோஷிக்கிற ஸாகரத் | | |
| கடைந்து | மதநம்பண்ணி [தை | அன்று | அக்காலத்தில் |
| அமுதம் | அம்ருதத்தை | உலகம்படைத்தவனே அனையவர்கள் | ஜகத்ஸ்ருஷ்டிபண்ணின ப்ரஹ்மாவைப்போலேஜகத்ஸ்ருஷ்டிபண்ண வல்லரான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற |
| அளிக்கும் | (அவர்களுக்கு) க்ருபை பண்ணின | | |
| குருமணி | ஶ்லாக்யமான மணிபோன்றவனாய் | | |
| என் ஆர்அமுதம் | என்னுடைய அதருப்தாமருதமானவன் | நாங்கூர் | அரிமேயவிண்ணகரம் மட நெஞ்சே! வணங்கு. (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வென்றி யித்யாதி) புக்க புக்க துறைதோறும் வெற்றிகொள்ளக்கடவனாய், † இந்த்ராதிகள் குடியிருப்பழித்துத் திரிகிற நரகாஸுரனுடைய மிடுக்கழியும்படியாக வீசாநின்றுள்ள மிடுக்கையுடைய திருவாழியைத் திருக்கையிலே யுடையவன். நரகாஸுரனை நிரஸித்து தேவஜாதிக்குக் குடியிருப்புப்பண்ணிக் கொடுத்துவிட்ட வளவன்றிக்கே, அவர்கள் "எங்களுக்குக் கடல்கடைந்து அம்ருதத்தை வாங்கித்தரவேணும்" என்ன; அவர்களுக்காக மந்தரத்தை நட்டு கோஷத்தை யுடைத்தாயிருக்கிற கடலைக்கடைந்து, அவர்களுக்கு அம்ருதத்தைக் கொடுத்தவன். (குருமணி) † அவர்கள். "நீவேண்டா, எங்களுக்கு உப்புச்சாறமையும்"

என்ன; பெருவிலையனை தன்படி யொன்றும்பாராதே, தன் தோள் நோவும்படி கடலை நெருக்கிக் கடைந்து அவர்களுக்கு அம்ருதத்தை உபகரித்தவன். (என்னுரமுதம்) அவர்களம்ருதம்போ லன்றிக்கே தம்முடைய அம்ருதமிருக்கிறபடி. † கொண்டாடிக்கொண்டு வர்த்திக்கிறதேசம்.

(என்றுமித்யாதி) நாள்செல்ல நாள்செல்ல மிக்குவாரா நின்றுள்ள நிரவதிகஸம்பத்தையுடையராய், அத்தாலே அழகு விளங்கா நிற்பாராய், வேதத்தைக் கரைகண்டிருப்பாராய், ஸப்த ஸ்வரங்களையும் மற்றுமுண்டான அங்கங்களையும், "இவர்களில் மேற்பட அதிகரித்தாரில்லை" என்னும்படி அதிலுண்டான வாஸனையாலே ஆத்ம குண ப்ரசுரருமாய், தனித்தனியே ஜகத்ஸ்ருஷ்டி க்ஷமருமானவர்கள் வர்த்திக்கிற திருநாங்கூரில். ... . ... (உ)

அரு.—இரண்டாம்பாட்டு. (வென்றியித்யாதி) முதற்பாட்டிற் சொன்ன தீவினைகள் போயகலப் பண்ணுகைக்குறுப்பான விரோதிநிரஸநசீலதையையும், எழுலகத்தவர் பணிகைக்கு உபயுக்தமான உதவிகளையும் மேற்பாட்டுக்களிலே அருளிச்செய்யக்கோலி, அதில் கீழ்த்திருமொழியில்(க) "ஆருதசினத்தில்" என்கிறபாட்டிலும் முதற்பாட்டிலும் ப்ரஸ்துதமான நரகநிரஸநத்தையும் அம்ருதமதநத்தையுமருளிச் செய்கிறாரிப்பாட்டிலென்று ஸங்கதி.

"உரமது" என்ற விடத்தில் உத்கர்ஷத்தை யருளிச்செய்கிறார் (இந்த்ராதிகளித்யாதி). குருவானமணி - ச்லாக்யமான மணியென்றாய், அர்த்தமருளிச்செய்கிறார் (அவர்களித்யாதி). "குலவி" என்றதுக்கர்த்தம் (கொண்டாடிக்கொண்டு) என்றது. ... ... ... ... (உ)

மூ.—உம்பருமிவ் வேழுலகு மேழ்கடலு மெல்லாம்
உண்டபிரா னண்டர்கள்முன் கண்டு மகிழ்வெய்தக்
கும்பமிகு மதயானை மருப்பொசித்துக் கஞ்சன்
குஞ்சி பிடித்தடித்த பிரான்கோயில் மருங்கெங்கும்
பைம்பொனொடு வெண்முத்தம் பலபுன்னை காட்டப்
பலங்கனிகள் தேன்காட்டப் படவரவேரல்குல்
அம்பனைய கண்மடவார் மகிழ்வெய்து நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மட நெஞ்சே. (ங)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உம்பரும் | தேவர்களும் | ஏழ்கடலும் | ஸப்தஸமுத்ரங்களும் |
| இவ்வேழுலகும் | இச்சப்தலோகங்களும் | எல்லாம் | இவையெல்லாவற்றையும |

(க) [illegible]

| | |
|---|---|
| உண்ட | ப்ரளயத்தில்அமுது செய்த |
| பிரான் | உபகாரகனாய், (க்ருஷ்ணனாய்வந்தவதரித்து) |
| அண்டர்கள் | இடையர்கள் |
| கண்டுமகிழ்வெய்த | கண்டுஉகக்கும்படி |
| முன் | அவர்கள்முன்னே |
| கும்பமிகு | குடம்போன்றபெரிய மஸ்தகத்தையுடைய |
| மதயானை | மதமுதிதமானகுவலயாபீடத்தின் |
| மருப்பு | கொம்பை |
| ஒசித்து | முறித்து |
| கஞ்சன் | கம்ஸனுடைய |
| குஞ்சிபிடித்து | மயிரைப்பிடித்து |
| அடித்த | அழியச்செய்த |
| பிரான் | உபகாரகனுடைய |
| கோயில் | ஸ்தாநமாய், |
| மருங்குஎங்கும் | பக்கமெல்லாம் |
| பலபுன்னை | பலவானபுன்னைகள் (மொட்டும்பூவுமாய்ப்பூத்துநின்று) |
| பைம்பொனொடு | அழகியபொன்னையும் |
| வெண்முத்தம் | வெளுத்தமுத்துக்களையும்கூட்டினாற் [போல் |
| காட்ட | காண்பிக்க, |
| பலங்கனிகள் | பலாப்பழங்கள் |
| தேன்காட்ட | மதுசொரிந்துகாட்ட, |
| படம் | படத்தையுடைய |
| அரவு | ஸர்ப்பம்போலும் |
| ஏர் | அழகிய |
| அல்குல் | நிதம்பத்தையும் |
| அம்புஅனைய | சரங்கள்போன்ற |
| கண்மடவார் | கண்களையுமுடைய ஸ்த்ரீகள் |
| மகிழ்வெய்தும் | ஸந்தோஷிக்கிற |

நாங்கூர் அரிமேயவிண்ணகரம் மட நெஞ்சே! வணங்கு. (௩)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (உம்பருமித்யாதி) தேவஜாதியும், இந்த ஏழுவகைப்பட்ட லோகங்களும், இத்தைச்சூழப் போந்திருக்கிற கடல்களேழும், இவையடைய ப்ரளயத்திலே நோவுபடப்புக வயிற்றிலேவைத்து நோக்கின உபகாரகன், க்ருஷ்ணனாய் வந்தவதரித்து, † இடையர்கண்டு ப்ரீதராம்படியாக, குடம்போலே பெரிய மஸ்தகத்தை யுடைத்தாய் மதமுதிதமாயிருந்துள்ள குவலயாபீடத்தினுடைய கொம்பைமுறித்து அநந்தரம் கம்ஸனுடைய மயிரைப் பிடித்துத் தலைகீழாகத்தள்ளி முதுகிலேயறைந்து அவனையழியச் செய்த உபகாரகனுடைய கோயில்.

பரிஸரமடைய. (பைம்பொனொடு வெண்முத்தம் பலபுன்னை காட்ட) புன்னைகளானவை மொட்டும் பூவுமாய்ப்பூத்து நின்றபோது பொன்னிலே முத்தைபழுத்தினாற்போலே காட்டாநின்றது; பலாப் பழங்கள் தேன் காட்டாநின்றது; படத்தையுடைத்தான அரவுபோலே † அழகிய அல்குலையுமுடையராய், அம்போடொத்த கண்களையுமுடையரான ஸ்த்ரீகளானவர்கள், †"இன்னம்போதின்னது, † இன்னதிலேதின்னதுண்டாம் என்னும் வ்யவஸ்தை யின்றிக்கேயிருந்ததீ!" என்று அவர்ஜை(?)யக்கண்டு த்ருப்தராகிற. ... ... (௩)

அ௩.—மூன்றாம்பாட்டு. (உம்பரித்யாதி) இத்திருமொழியில் (௧)"அண்டமும்" என்கிற பாட்டில் ஆபத்ரக்ஷணமும் (௨) "பெண்மைமிகு" என்கிறபாட்டில் ப்ரஸ்துத பூதநா நிரஸநத்தால் அவ்வளவேயின கம்ஸநிரஸநமும் திருவுள்ளத்தில் தோன்றி அவற்றை யிப்பாட்டிலே யருளிச் செய்கிறாரென்று மூதற்பாட்டோடே ஸங்கதி.

"அண்டர்கள்" என்றதினர்த்தம் (இடையர்) என்றது.

"ஏர்" என்ற தினர்த்தம் (அழகிய) என்றது. "காட்ட-மகிழ்வெய்தும்" என்ற வர்த்தமான நிர்த்தேசத்தால் - எப்போதும் பழுத்து மதுசொரிந்திருக்கு மென்கை பலிக்கையாலே யருளிச்செய்கிறார் (இன்னபோதின்னது) என்று. "புன்னை - பொன் - முத்தம் - காட்ட" என்கையாலே (இன்னதிலின்னது) என்றது. ... ... ... ... (௩)

மூ—ஓடாத வாளரியி னுருவமது கொண்டன்
றுலப்பில் மிகு பெருவரத்த விரணியனைப் பற்றி
வாடாத வள்ளுகிரால் பிளந்த வன்றன் மகனுக்
கருள்செய்தான் வாழுமிடம் மல்லிகை செங்கழுநீர்
சேடேறு மலர்ச்செருந்தி செழுங் கமுகம்பாளை
செண்பகங்கள் மணநாறும் வண்பொழிலி னூடே
ஆடேறு வயலாலைப் புகை கமழு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மட நெஞ்சே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்று | ப்ரஹ்லாதனை நிர்ப்பந்திக்கிரகாலத்திலே | உகிரால் | நகங்களால் |
| ஓடாத | பிற்காலியாத | பிளந்து | (அவன்மார்வை) இருபிளவாம்படி பண்ணி |
| அது | அப்படிபலிஷ்ட்டமான | அவன்றன்மகனுக்கு | அவன்பிள்ளையான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு |
| ஆளரியின்உருவமகொண்டு | நரஸிம்ஹத்தின்வடிவைகொண்டு | அருள்செய்தான் | அருளைப்பண்ணின ஸ்வாமி |
| உலப்புஇல் | ஸங்க்யாரஹிதமான | வாழும்இடம் | வர்த்திக்கிறஸ்தானமாய், |
| மிகுபெருவரத்த | மிகவும்பெரியவரங்களையுடைய | மல்லிகை | மல்லிகைகளும் |
| இரணியனை | ஹிரணயனை | செங்கழுநீர் | ரக்தோத்பலங்களும் |
| பற்றி | பிடித்து | சேஎறுமலர் | திரளப்பூத்தபூவையுடைய |
| வாடாத | வளையாத | | |
| வள் | தீக்ஷ்ணமான | | |

(௧) ௩-௧-௩. (௨) ௩-௧-௫.

| | | | |
|---|---|---|---|
| செருந்தி | ஸுரபுன்னைகளும் | ஆடுஎறுவயல் | கரும்புஆடுகைக்காக ஏறினவயலில் |
| செழு | அழகிய | ஆலைப்புகைகமழும் | ஆலைப்புகைபரிமளிக்கிற |
| கமுகம்பாளை | பாக்குப்பாளைகளும் | | நாங்கூர்.— (ச) |
| செண்பகங்கள் | செண்பகப்பூக்களும் | | |
| மணம்நாறும் | பரிமளம்கமழுகிற | | |
| வண்பொழிலின் ஊடே | அழகியசோலையின் நடுவே | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (ஓடாத வித்யாதி) ஹிரண்யனுடைய முருட்டுடலைக் கண்டால் பிற்காலியாதபடியான நரஸிம்ஹத்தினுடைய வென்னுதல்; அன்றிக்கே, நாட்டில் நடையாடாத நரஸிம்ஹமென்னுதல். (உலப்பில்) அஸங்க்யேயமாய், † ஓரோவரங்களே முடிவுகாண வொண்ணாதபடியா யிருப்பதாய், வரங்கொடுத்த தேவதைகளுக்குங்கூடக் குடியிருப்பரிதாம்படி பெரியவரத்தையுடைய ஹிரண்யனைப்பற்றி. (வாடாத) † ஹிரண்யனுடைய முருட்டுடலிலே தைத்தால் வளையக்கடவதன்றிக்கே கூர்மை மிக்கிருக்கிற திருவுகிராலே இரண்டுகூறும்படி பிளந்து, †, அவன்பக்க லிழவுதீரும்படி "அவன்மகன்" என்று ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே அருளைப் பண்ணினவன் வர்த்திக்கிற தேசம்.

மல்லிகை, செங்கழுநீர், சேடு - திரட்சி. திரளப்பூத்த பூவையுடைத்தான செருந்தி, அழகிய கமுகம்பாளை, செண்பகம். இவை பரிமளத்தைப் புறப்பட விடாநின்றுள்ள அழகிய பொழிலின்நடுவே † ஆடுகைக்காக ஏறின வயலில் ஆலைப்புகையானது கமழுமாயிற்று.

---

அரு.—நாலாம்பாட்டு. (ஓடாதவித்யாதி) கீழ்த்திருமொழியில் முதற்பாட்டிலும் இரண்டாம்பாட்டிலும் ப்ரஸ்துதமான நரஸிம்ஹாவதாரத்தாலே விரோதிநிரஸநமும் ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு உதவினமையுமருளிச் செய்கிறாரென்று, இதுக்கும் முதற்பாட்டோடே ஸங்கதி.

"மிகு" என்றதுக்குத்தாத்பர்யம் (ஓரோவித்யாதி). உகிருக்கு வாட்டமாவது - வளைகையென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஹிரண்யனுடைய வித்யாதி). (அவன்பக்கலிழவு தீரும்படி) என்றது - ஹிரண்யன் தன்னருளுக்கு விஷய மாகாமல் முடிந்தானே! என்னும் திருவுள்ளத்தில் குறைதீரும்படியென்றபடி.

(ஆடுகைக்காக) - கரும்பாடுகைக்காக. ... ... ... (ச)

மூ.—கண்டவர்தம் மனம்மகிழ மாவலிதன் வேள்விக்
களவில்மிகு சிறுகுறளாய் மூவடியென் றிரந்திட்
டண்டமு மிவ்வலைகடலு மவனிகளு மெல்லாம்
அளந்தபிரா னமருமிடம் வளங்கொள் பொழிலயலே
அண்டமுறு முழவொலியும் வண்டினங்க ளொலியும்
அருமறையி னொலியும் மடவார் சிலம்பினொலியும்
அண்டமுறு மலை கடலி னொலி திகழு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்கு மட நெஞ்சே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கண்டவர்தம்மனம் | கண்டவரெல்லாருடையநெஞ்சகம் | அமரும் | நித்யவாஸம்பண்ணுகிற |
| மகிழ | ஆநந்திக்கும்படி | இடம் | தேசமாய், |
| மாவலிதன்வேள்வி | மஹாபலியஜ்ஞவாடத்திலே | வளங்கொள் | ஸம்ருத்தியையுடைத்தான |
| களவுஇல் | க்ருத்ரிமமில்லையென்றுதோற்றுமவனாய் | பொழில்அயலே | பொழிலின்அருகே |
| மிகுசிறுகுறளாய் | வடிவில் மிகவும் சிறுத்தவாமநனாய்க்கொண்டு | அண்டம்உறும் | ஆகாசத்திலேசென்று வ்யாபரிக்கிற |
| மூவடியென்று | மூன்று அடிகள் தரவேணுமென்று | முழவுஒலியும் | வாத்யகோஷங்களும் |
| இரந்திட்டு | யாசித்து | வண்டினங்கள்ஒலியும் | மதுபானம் பண்ணிக்களித்துப்பாடுகிற வண்டுகளின் தவநியும் |
| அண்டமும் | ஆகாசத்தையும் | அருமறையின்ஒலியும் | துர்க்ரஹவேதகோஷமும் |
| இ | இவ்வருகான | மடவார் | (ஆடுகிற) ஸ்த்ரீகளுடைய |
| அலைகடலும் | அலையெறியாநின்றுள்ள ஸாகரங்களையும் | சிலம்பின்ஒலியும் | நூபுரத்வநியும் |
| அவனிகளும் | ஸப்தத்வீபமான பூமிகளையும் | அண்டம்உறும் | அண்டபித்தியிலே சென்று |
| எல்லாம் | இவையெல்லாவற்றையும் | அலை | அலையெறிகிற |
| அளந்த | அநாயாஸேந அளந்துகொண்ட | கடலின்ஒலி | ப்ராளயார்ணவ கோஷம்போலே |
| பிரான் | உபகாரகன் | திகழும் | விளங்குகிற |
| | | நாங்கூர்.— | (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கண்டவர்தம் மனம்மகிழ) அநுகூல ப்ரதிகூல விபாகமின்றிக்கே கண்டவர்கள் நெஞ்சானது மகிழும்படியாக, மஹாபலியுடைய யஜ்ஞவாடத்திலே, † "இவன் தேவகார்யம் செய்கிறான்" என்று தோற்றாதபடியாக "காட்டில் வாமநர்கள் திருவுலகளந்தருளின விடம்" என்னும்படியான வாமநவேஷத்தைப் பரிக்ரஹித்து, "எனக்கு மூன்றடிவேணும்" என்று அர்த்தித்து,

ஆகாசத்தையும் அலையெறியா நின்றுள்ள கடலையும் த்வீபங்களையும் எல்லாம் அநாயாஸேந அளந்துகொண்ட உபகாரகன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

(வளமித்யாதி) ஸம்ருத்தியை யுடைத்தாயிருக்கிற பொழிலி †னருகே, ஆகாசத்தி லவகாசமுள்ள விடமெங்கும்போய் வ்யாபரிக்கிற †வாத்யகோஷமும், மதுபாநம் பண்ணுகிற வண்டுகளினுடைய த்வநியும், வேதகோஷமும், ஆடுகிற ஸ்த்ரீகளினுடைய சிலம்பொலியும் அண்டபித்தியிலே சென்று அலையெறிகிற ப்ரளயார்ணவ கோஷம்போலே விளங்கா நின்றுள்ள. ... ... ... (ரு)

அரு.—அஞ்சாம்பாட்டு. (கண்டவரித்யாதி) கீழ்த்திருமொழியில் நரஸிம்ஹாவதார மநுபவித்தவர் ராமாவதாரத்தில் போயநுபவித்தார், அப்படியே இங்கும் நரஸிம்ஹாவதாரா நுஸந்தாநாநந்தரம், ராமாவதாரத்தில் போகவொருப்பட, நடுவே வழிபறிக்காரரைப்போலே களவில் மிக்க குறள் வந்து நெஞ்சை வஞ்சிக்க, அங்கே யகப்பட்டநுபவித்துக்கொண்டு தேவர்க்குத வினதும் எல்லார்க்கு முதவித் திருவடிகளைப் பரப்பினமையும் அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி. ஆகையிறே "கண்டவர்தம் மனம் மகிழ" என்று தன்னெஞ்சு அபஹ்ருதமானத்தையும் ஸூசிப்பித்தது.

களவில் - களவில்லை என்னும்படி தோற்றுமவனாய், மிகவும் சிறிசாய்க் குறளான வேஷத்தையுடையனாய் என்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி பலிதார்த்தமருளிச்செய்கிறார் (இவனித்யாதி). லோகத்தில் வாமநர்களெல்லாரும் த்ரிவிக்ரமனோடொப்பாரென்னும்படி மிகவும் குள்ளே என்றபடி.

"அயல்" என்றதினர்த்தம் (அருகே) என்றது. "முழவொலி" என்றதினர்த்தம் (வாத்யகோஷம்) என்றது. ... ... ... ... (௬)

மூ.—வாணெடுங் கண் மலர்க் கூந்தல் மைதிலிக்கா விலங்கை
மன்னன் முடி யொருபதும் தோளிருபதும் போயுதிர
தாணெடுந் திண் சிலைவளைத்த தயரதன்சே யென்றன்
தனிச்சரண் வானவர்க்கரசு கருதுமிடம தடமார்
சேணிடங்கொள் மலர்க்கமலம் சேல் கயல்கள் வாளை
செங்கெலொடு மடுத்தரிய உதிர்ந்த செழுமுத்தம்
வாணெடுங்கண் கடைசியர்கள் வாருமணி நாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| வாள் | வாள்போலேகூரியதா[ய் | மலர் | பூஅணிந்த [லுடைய |
| நெடு | நீண்ட | கூந்தல் | மயிர்முடியையுமு |
| கண் | திருக்கண்களையும் | மைதிலிக்கா | பிராட்டிக்காக |

அா

| | | | |
|---|---|---|---|
| இலங்கைமன்னன் | லங்காதிபனுனராவணனுடைய | சேண்இடம் கொள் | ஆகாசமுள்ளவிடமெங்கும்ஓங்கி யிருக்கிற |
| ஒருபதுமுடியும் | பத்துத்தலைகளும் | மலர் | பூக்களையுடைத்தான |
| இருபதுதோளும் | இருபதுதோள்களும் | கமலம் | தாமரையையும் |
| போய்உதிர | உதிர்ந்துபோம்படி | சேல்கயல்கள் வாளை | சேல் கயல் வாளை என்னும் மத்ஸ்யங்களையும் |
| தாள் | பூட்டப்பட்டநாணையுடைத்தாய் | செந்நெலொடும் | செந்நெல்லோடே |
| நெடு | நீண்ட | அடுத்து அரிய | அடுத்துப்பிடித்து அறுக்க |
| திண் | த்ருடமான | | |
| சிலை | வில்லை | உதிர்ந்த | அவற்றினின்றுமுதிர்ந்த |
| வளைத்த | வளையப்பண்ணின | செழு | அழகிய |
| தயரதன்சேய் | தசரதன்பெற்றமகனாய் | முத்தம் | முத்துக்களை |
| என்றன் | எனக்கு | வாள் | வாள்போலேகூரிய |
| தனிச்சரண் | அத்விதீயரக்ஷகனாய் | நெடு | நீண்ட |
| வானவர்க்கரசு | நித்யஸூரிநிர்வாஹகனானவன் | கண் | கண்களையுடைய |
| கருதும்இடம் | விரும்பி வர்த்திக்கிறஸ்த்தானமாய், | கடைசியர்கள் | கர்ஷகஸ்த்ரீகள் |
| | | வாரும் | திரட்டியெடுக்கிற |
| தடம்ஆர் | பொய்கைகள்நிறைந்திருப்பதாய் | அணி | ஸௌந்தரமான |
| | | நாங்கூர். | (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (வாளித்யாதி) ஊரினைச்சொல்லுதல்; வாள்போலேயிருக்கிற நெடிய திருக்கண்களையும் மலரையுடைத்தான மயிர்முடியையுமுடைய ஸ்ரீஜநகராஜன்திருமகளுக்காக, லங்கைக்கு நிர்வாஹகனாயிருக்கிறவனுடைய பத்துத்தலையும் இருபதுதோளும் உதிரும்படியாகத், †தாளையுடைத்தாய் நெடிதாய்த் திண்ணிதாயிருக்கிற வில்லை வளைத்த தசரதாத்மஜன். சேய் - பிள்ளை. (என்றன்தனிச்சரண்) (௧) "தயரதற்கு மகன்றன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே" என்னுமாபோலேகாணுமிருப்பது. ✽அயர்வறுமமரர்களதிபதி வர்த்திக்கிற ஸ்த்தானம்.

† பொய்கைகள் நிறைந்திருப்பதாய் ஆகாசமுள்ளவிடமெங்கும் வளர்ந்திருக்கிற மலரையுடைத்தான தாமரை, சேல், கயல்கள், வாளை, இவற்றைச் செந்நெலோடே அடுத்தறுக்க, உதிர்ந்த † அழகிய முத்துக்களைக் கதிரொறுக்கவிழிந்தவர்கள் வாருவர்களாயிற்று. ()

---

அரு.—ஆறும்பாட்டு. (வாளித்யாதி). நடுவேவழிபறித்தவர் மாண்வேஷத்தை யநுபவித்தவநந்தரம், "மின்னனைய நுண்மருங்குல" என்கிற பாட்டிலநுபவித்த ராமாவதாரத்தை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

---

(௧) தி - வாய் - ௩ - ௬ - அ.

"தாள்" என்று - பூட்டாய், பூட்டப்பட்ட நாணைச்சொல்லு மென்று கொள்வது.

(பொய்கைகள் நிறைந்திருப்பதாய்) என்றது-பொய்கை யெல்லாம் வ்யாபித்திருப்பதாயென்று தாமரைக்கு விசேஷணம். முத்துக்கள் தாமரையிலும் மீன்களிலு முண்டென்னும் ப்ரஸித்தியைப்பற்ற வருளிச் செய்கிறார் (அழகிய வித்யாதி). ... ... ... ... ... ... (சு)

மூ.—தீமனத்தான்கஞ்சனது வஞ்சனையில் திரியும்
தேனுகனும் பூதனைதன்னாருயிரும் செகுத்தான்
காமனைத்தான் பயந்த கருமேனியுடை யம்மான்
கருதுமிடம் பொருது புனல் துறைதுறை முத்துந்தி
நாமனத்தால் மந்திரங்கள் நால்வேத மைந்து
வேள்வியோடாறங்கம் நவின்று கலை பயின்றங்
காமனத்து மறையவர்கள் பயிலுமணி[1]நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| தீமனத்தான் | பொல்லாதநெஞ்சையுடையனை [லே |
| கஞ்சனது | கம்ஸன் ப்ரேரணையா |
| வஞ்சனையில் | க்ருத்ரிமவேஷங்கொ |
| திரியும் | திரிகிற [ண்டு |
| தேனுகனும் | தேனுகாஸுரனுடையவும் |
| பூதனைதன் | பூதனையுடையவும் |
| ஆருயிர் | நற்சீவனை |
| செகுத்தான் | முடித்தவனாய், |
| காமனை | ஸர்வலோகஸுந்தரனை மன்மதனை |
| பயந்த | பெற்ற |
| கருமேனியுடை | கறுத்த திருமேனியை |
| அம்மான் | யுடையனை ஸ்வாமி |
| கருதும்இடம் | விரும்பிவாழ்கின்ற தேசமாய் |
| பொருதுபுனல் | திரையோடுதிரை பொராநின்றுள்ள புனலானது |
| துறைதுறை | ப்ரதிதுறையிலும் |

| பதம். | உரை. |
|---|---|
| முத்துஉந்தி | முத்துக்களைத்தள்ளா நிற்பதாய், |
| நா | நாவாலும் |
| மனத்தால் | மநஸ்ஸாலும் [ம் |
| மந்திரங்கள் | பசவந்மந்த்ரங்களையு |
| நால்வேதம | சதுர்வேதங்களையும |
| ஐந்துவேள்வியோடு | பஞ்சமஹாயஜ்ஞங்களையும் |
| ஆறுஅங்கம் | ஷடங்கங்களையும் |
| நவின்று | அப்யஸித்து |
| கலைபயின்று | மற்றுமுள்ள சாஸ்த்ரங்களையும் ஓதி |
| அங்கு ஆம் மனத்து | பகவத விஷயத்துக்குத் தகுதியான பரிசுத்தாந்தக்கரணத்தையுடையரான |
| மறையவர்கள் | வைதிகர் |
| பயிலும் | நெருங்குகையினால்வ |
| அணி | அழகையுடைய [ந்த |
| நாங்கூர். —— | (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (தீமனத்தானித்யாதி) தீதான நெஞ்சையுடையனாய்-†பகவத்தத்வம் ஓரிடத்திலேயுண்டென்னப்பொறாத நெஞ்சையுடைய கம்ஸன்; அவனுக்குறுப்பாய் க்ருத்ரிமத்தாலே கவிவா

னாகத்திரிந்த தேனுகன், பூதனை, அவர்களை முடித்துப்போகட்டவன். அழகில்வந்தால் காமனுக்கு முதபாதகனாய், அவ்வளவல்லாதபடி ஶ்ரமஹரமான திருமேனியையுடையனாயிருக்கிற ஸர்வேஶ்வரன் விரும்பி வர்த்திக்கிற தேசமாயிற்று.

திரையோடு திரை பொராநின்றுள்ள புனலானது துறைதோறும்துறைதோறும் முத்துக்களைத் தள்ளாநிற்பதாய், நாவாலும் மநஸ்ஸாலும், பகவந்மந்த்ரங்கள், நாலுவகைப்பட்ட வேதம், பஞ்சமஹாயஜ்ஞம், அங்கங்கள் தொடக்கமானவற்றைப் பலகாலுமப்யஸித்துப் †பரிசுத்தாந்தஃகரணர் நெருங்குகையால்வந்த அழகையுடைய. (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (தீமனத்தானித்யாதி) கீழ் ராமாவதாரத்தில போனவரையும் வஶீகரிக்கும்படியான விரோதிநிரஸந பரம்பரையுள்ளது க்ருஷ்ணாவதாரத்திலேயாகையாலே, கீழ் "கஞ்சன் குஞ்சி பிடித்தடித்த பிரான்" என்று சொன்னத்தால் த்ருப்திபிறவாமையாலே, இனி மேற்பாட்டுக்களி லெல்லாம் க்ருஷ்ணபதாநங்களை வாய்வந்தபடியே பேசியநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

விவரணம் (பகவத்தத்வமித்யாதி.)

அங்கு - ஆமனத்து - பகவத் விஷயத்துக்காயிருக்கிற மனத்தென்றாய், அதினர்த்தமருளிச் செய்கிறார் (பரிசுத்தாந்தஃகரணா) என்று. ... (எ)

மூ.—கன்றதனால் விளவெறிந்து கனியுதிர்த்த காலை
காமருசீர் முகில்வண்ணன்காலிகள் முன் காப்பான்
குன்றதனால் மழைதடுத்துக் குடமாடு கூத்தன்
குலவுமிடம் கொடி மதிள்கள் மாளிகை கோபுரங்கள்
துன்றுமணி மண்டபங்கள் சாலைகள் தூமறையோர்
தொக்கீண்டித் தொழுதியொடு மிகப் பயிலும் சோலை
அன்றலர்வாய் மதுவுண்டங் களிமுரலு நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்கு மடநெஞ்சே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கன்றதனால் | வத்ஸாஸுரனாலே | முகில்வண்ணன் | காளமேகம்போன்ற வடிவழகையுடையனாய், |
| விளவெறிந்து | விளாவாய்நின்ற அஸுரனையெறிந்து | | |
| கனி | அதின்பழத்தை | முன் | முன்னே |
| உதிர்த்த | உதிரும்படி பண்ணின | காலிகள் | பசுக்களை |
| காலை | ஸமயமானவனாய், | காப்பான் | ரக்ஷிக்கைக்காக |
| காமரு | எல்லாராலும் விரும்பப்பட்ட | குன்றதனால் | பர்வதத்தாலே |
| சீர் | அழகிய | மழை | வர்ஷத்தை |

| | |
|---|---|
| தடுத்து | நிரோதித்து |
| குடமாடுகூத்தன் | குடக்கூத்தாடினவன் |
| குலவும்இடம் | கொண்டாடிவர்த்திக்கும்தேசமாய், |
| கொடி | த்வஜங்களையுடைத்தான |
| மதிள்கள் | ப்ராகாரங்களையும் |
| மாளிகை | மாளிகைகளையும் |
| கோபுரங்கள் | கோபுரங்களையும் |
| துன்று | நெருங்கின |
| மணி | மணிமயமான |
| மண்டபஙகள் | மண்டபங்களையும் |
| சாலைகள் | யாகசாலைகளையுமுடைத்தாய் |
| தூ | பரிசுத்தரான |
| மறையோர் | ப்ராஹ்மணர் |
| தொக்குஈண்டி | கூடித்திரளுகையாலுண்டான |
| தொழுதியொடு | ஆரவாரத்தால்மிக்கிருப்பதாய் |
| மிகப்பயிலும் | மிகவும்நெருங்கின |
| சோலை | சோலையிலுண்டான |
| அன்றுஅலர்வாய் | அப்போதுவிகஸித்த செவ்விப்பூவில் |
| மதுஉண்டு | மதுவைப்பாநம்பண்ணி |
| அங்கு | அவ்விடத்தில் |
| அளி | வண்டுகள் |
| முரலும் | காநம்பண்ணுகிற |
| நாங்கூர். | (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (கன்றதனுலிதயாதி) கன்றாய்நின்ற அஸுரனைக்கொண்டு விளாவாய்நின்ற அஸுரனை முடியும்படி பண்ணி லீலாரஸமநுபவித்த செல்வப்பிள்ளை; காமருவபபடுவதாய்- ஆசைபடப்படுவதான, சீருண்டு - குணம், அத்தையும் ஸ்ரமஹரமாயிருக்கிற திருமேனியையுமுடையவன், பசுக்களை ரக்ஷிக்கைக்காக கோவர்த்தநத்தாலே மழைதடுத்து, மன்றிலே ஸர்வாநுபவயோக்யமாம்படி குடக்கூத்தாடினவன் கொண்டாடி வர்த்திக்கிறதேசம்.

கொடியையுடைத்தான மதிள்கள், மாளிகைகள், கோபுரங்கள், நெருங்கினமணிகளையுடைத்தான மண்டபங்கள், † சாலைகள் இவற்றையுடைத்தாய்; ப்ராஹ்மணாகூடித்திரண்ட ஆரவாரத்தால் மிக்கிருப்பதாய், சோலையிலுண்டான செவ்விபபூவிலே மதுபாநம்பண்ணி வண்டுகள்பாடாநிற்பதுமான. ... ... ... ... (அ)

அரு.—எட்டாமபாட்டு. (கன்றித்யாதி) "விளங்கனியை" என்றது பின்தொட்டி, பின்னும் சில கூட்டியநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

சாலைகள் - யஜ்ஞசாலைகள். ... .. ... ... (அ)

மூ.—வஞ்சனையால் வந்தவள்தனுயிருண்டு வாய்த்த
தயிருண்டு வெண்ணெயமுதுண்டு வலிமிக்க
கஞ்சனுயிரதுவுண் டிவ்வுலகுண்ட காளை
கருதுமிடம் காவிரி சந்தகில் கனகமுந்தி
மஞ்சுலவு பொழிலூடும் வயலூடும் வந்து
வளங்கொடுப்ப மாமறையோர் மாமலர்கள்தூவி
அஞ்சலித்தங் கரிசரணென் றிறைஞ்சு மணி நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே. (௯)

| பதம். | உரை. |
|---|---|
| வஞ்சனையால் | க்ருத்ரிமவேஷங்கொண்டு |
| வந்தவள்தன் | வந்தபூதனையுடைய |
| உயிர் | ப்ராணனை |
| உண்டு | க்ரஸித்து, |
| வாய்த்த | அருகேயிருந்த |
| தயிர்உண்டு | தயிரைப்பானம்பண்ணி, |
| வெண்ணெயமுதுஉண்டு | வெண்ணெயைஅமுதுசெய்து, |
| வலிமிக்க | மிடுக்குமிக்கிருந்த |
| கஞ்சன்உயிரது | கம்ஸனுடையப்ராணனை |
| உண்டு | பக்ஷித்து |
| இவ்வுலகு | இந்தலோகத்தை |
| உண்ட | திருவயிற்றிலேவைத்தருளின |
| காளை | யுவாவானவன் |
| கருதும்இடம் | விரும்பிவர்த்திக்குமிடமாய், |
| காவிரி | காவேரிநதியானது |
| சந்து | சந்தநமரங்களையும் |
| அகில் | அகருவ்ருக்ஷங்களையும் |
| கனகம் | ஸ்வர்ணத்தையும் |

| பதம். | உரை. |
|---|---|
| உந்தி | தள்ளிக்கொண்டுவந்து |
| மஞ்சுஉலவுபொழிலூடும் | மேகத்தளவும்ஓங்கினசோலையிலும் |
| வயலூடும் | வயலினுள்ளும் |
| வந்து | ப்ரவேசித்து |
| வளம்கொடுப்ப | ஸம்பத்தையுண்டாக்க |
| மாமறையோர் | மஹாவேதிகளான ப்ராஹ்மணர் |
| மாமலர்கள்தூவி | ஸ்லாக்யமான புஷ்பங்களைஸமர்ப்பித்து |
| அங்குஅஞ்சலித்து | அங்கே அஞ்சலிபண்ணிக்கொண்டுநின்று |
| அரிசரண்என்று | ஹரி! உன்திருவடிகளேசரணம்என்று |
| இறைஞ்சும் | ஸ்தோத்ரபூர்வகமாக ஆஸ்ரயிக்கிற |
| அணிநாங்கூர் | அழகியதிருநாங்கூரில் |

அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௯)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வஞ்சனையித்யாதி) க்ருத்ரிமத்தையுடையளாய்வந்த பூதனையுயிரையுண்டு, கிட்டினதயிரையமுதுசெய்து, வெண்ணெயமுதுண்டு - வெண்ணெயையமுதுசெய்து, பெருமிடுக்கனாயிருக்கிற கம்ஸனுடைய உயிரை உண்டு. †அநுகூலஸ்பர்சமுடைய த்ரவ்யத்தோடு ப்ரதிகூலருடைய ப்ராணன்களோடு வாசியற்றிருந்தபடி. (இவ்வுலகுண்ட) வெண்ணெயமுதுசெய்தவோபாதியாயிற்று, பூமியையெடுத்து வயிற்றிலே வைத்ததுவும்.

(காவிரியித்யாதி) காவிரியானது, சந்தநம், அகில், பொன், இவற்றைக்கொடுவந்துதள்ளி, மேகபதத்தளவும் செல்லவோங்கினபொழிலூடும் வயலுள்ளிட்டும்வந்து இரவதிகஸம்பத்தையுண்டாக்க, ஆற்றுவரவைக்கண்டு ப்ராஹ்மணர் புஷ்பங்களைத்தூவி அஞ்சலிபண்ணி "ஸர்வேஸ்வரன் நம்முடைய ஜீவநத்துக்குறுப்பாக வரவிட்டான்" என்று அவனை ஆஸ்ரயித்து வர்த்திக்கிற. ... (௯)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (வஞ்சனையித்யாதி). "ஆய்ச்சியர் வைத்த தயிர் வெண்ணெ யுளங்குளிர வமுதுசெய்து" என்றது பின்னாட்டி உண்டவனையெல்லாம் சொல்லி யநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

தயிர் வெண்ணெய்களோடொக்க உயிர்களை ஊணாகச்சொல்லுகையெங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் (அநுகூலேத்யாதி). ... (௯)

மூ.—சென்று சினவிடையேழும் பட வடர்த்துப்பின்னை
செவ்வித் தோள் புணர்ந்துகந்த திருமால்தன் கோயில்
அன்றயனுமரன்சேயு மனையவர்கள் நாங்கூர்
அரிமேயவிண்ணகரமமர்ந்த செழுங்குன்றை
கன்றி நெடு வேல்வலவன் மங்கையர்தம் கோமான்
கலிகன்றி யொலிமாலை யைந்தினொடுமூன்றும்
ஒன்றினொடு மொன்றுமிவை கற்று வல்லா ருலகத்
துத்தமர்கட்குத்தமராயும்பருமாவர்களே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| சென்று | தானேசென்று [ய |
| சினம் | க்ரௌர்யத்தையுடை |
| எழுவிடையும் | ஏழுருஷபங்களையும் |
| பட அடர்த்து | முடியும்படிபொருது |
| பின்னை | நப்பின்னைப்பிராட்டியுடைய |
| செவ்வித்தோள் | அழகியதோளோடே |
| புணர்ந்து | ஸம்ஶ்லேஷித்து |
| உகந்த | ஸந்தோஷித்த |
| திருமால்தன் | ஶ்ரிய:பதிவர்த்திக்கிற |
| கோயில் | ஸ்தாநமாய், |
| அயனும் | ப்ரஹ்மாவையும் |
| அரன்சேயும் | ருத்ரன்பிள்ளையான ஸுப்ரஹ்மண்யனையும் |
| அனையவர்கள் | ஒத்தசாந்தியையும் அழகையுமுடையவர்கள்வர்த்திக்கிற |
| நாங்கூர் | திருநாங்கூரில் |
| அரிமேயவிண்ணகரம் | அரிமேயவிண்ணகரத்தில் [இற |
| அமர்ந்த | நித்யவாஸம்பண்ணு |
| செழுங்குன்றை | அழகியபர்வதம்போன்றஸ்வாமியை, |
| கன்றிநெடுவேல்வலவன் | கறைமாறாதநெடியவேலைக்கையிலேயுடையராய் |
| மங்கையர்தம் கோமான் | திருமங்கையிலுள்ளார்க்குத்தலைவராய் |

| பதம். | உரை. |
|---|---|
| கலிகன்றி | கலிவைரியான ஆழ்வார் கவிபாடின |
| ஒலிமாலை | ஒலியுடையதொடையான |
| ஐந்தினொடு | (க்ருஷ்ணபதாநங்கள் விஷயமான)ஐந்து பாட்டுமே |
| மூன்றும் | நரஸிம்ஹவாமநராமாபதாநங்கள்விஷயமானமூன்று பாட்டுமே |
| ஒன்றினொடும் | அர்ச்சாவதாரபரமானமுதற்பாட்டும் |
| ஒன்றும் | பலஶ்ருதியானஇப் பாட்டும் |
| இவை | ஆகஇப்பத்துப்பாட்டுக்களையும் |
| கற்று | அப்யஸித்து |
| வல்லார் | அர்த்ததர்சநம்பண்ணவல்லவர்கள் |
| உலகத்து | இஹலோகத்திலே |
| உத்தமர்கட்குஉத்தமராய் | வைஷ்ணவர்களுக்குத்தலைவராய் (பின்பு) |
| உம்பரும்ஆவர்கள் | நித்யஸூரிகளோடொருகோஷ்டியுமாவர்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (சென்றித்யாதி) அவைநின்றவிடத்திலே தானே சென்று, சினத்தையுடைத்தாயிருக்கிற ருஷபங்களேழையும் முடியும்படி அடர்த்து, நப்பின்னைப்பிராட்டியுடைய செவ்வியையுடைத்தான தோளோடே அணைந்துகந்த ஸ்ரியஃபதி வர்த்திக்கிற கோயில். (அன்றித்யாதி) சாந்திக்கு ப்ராஹ்மாவும், அழகுக்கு ஸுப்ரஹ்மண்யனும் ஒப்பாம்படியிருக்கிறவர்கள் வர்த்திக்கிற திருநாங்கூரில் அரிமேயவிண்ணகரமமர்ந்தசெழுங்குன்றைக்கலிபாடிற்று.(கன்றிநெடுவேல்) சத்ருசரீரங்களிலே தைத்துக் கறைகழுவவு மவஸரமின்றிக்கேயிருக்கிற வேலை ஆயுதமாகவுடையராய், திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநரான ஆழ்வாரருளிசெய்த ஒலியையுடைத்தான தொடை†எட்டும்† இரண்டும் பத்தானவிவற்றைஅப்யஸிக்கவல்லவர்கள், இஹலோகத்திலே வைஷ்ணவர்கள்;(க)"பயிலும்திருவுடையார் எவரேலும் - எம்மையாளும் பரமரே" என்னும்படி அவர்களுக்குத் தலைவராய், பின்னை உமபருமாவர்கள - திருவடி, திருவநந்தாழ்வானோடே ஒரு கோவையாகப்பெறுவர். ... ... (௰)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அ௩.—நிகமத்தில, தந்திருவுள்ளத்தை முன்னிட்டுச்சொன்ன க்ருஷ்ணாவதாரங்கள் விஷயமான ஐந்துபாட்டையும், நரஸிம்ஹ வாமந ராமாவதாரங்கள் விஷயமான மூன்றுபாட்டையும், விபவவிஷயத்வாவிசேஷேண க்ரோடீகரித்து, (எட்டும்) என்றது. ப்ரஸ்துதமான அர்ச்சாவதாரபரமான முதற்பாட்டையும் பலஸ்ருதியுமாகப் பிரித்தருளிச் செய்தவற்றை ப்ரதிபாத்ய விஷயப்ரதிபாதகதயா க்ரோடீகரித்து (இரண்டும) என்றது. இங்ஙனன்றாகில், (பத்தானவிவற்றை) என்றால மூலஸ்வரஸபரிகணனையிலருமை யிலலையிறே. ஆக ஆழ்வாருமிவரும் ஸாபிப்ராயமாக இங்ஙன் ப்ரயோகித்தாகவென்னத் தட்டில்லை. ... ... ... ... .. (௰)

ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றும்பத்து பத்தாந் திருமொழி முடிந்தது.

ஆக, திருமொழி ௩௰ - க்கு, பாட்டு ௩௦௦.

---

(க) தி - வாய் - ௩ - எ .



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# பெரியதிருமொழி - நாலாம்பத்து - ௧ - ம் திருமொழி

## முதற்பாட்டு போதலர்ந்த வ்யாக்யாநம்.



ப்ரவேசம்.—†தனக்கஸாதாரணரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ப்ரதிபந்தகத்தைப் போக்கி அவர்கள்பக்கலிலே ப்ரஸாதத்தைப் பண்ணுகைக்காக அரிமேயவிண்ணகரிலே ஸந்நிஹிதனானனென்றார்; அவ்வளவன்றிக்கே, ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகளுக்கும் திருப்பாற்கடலிற்போலே அபிமதங்களைக்கொடுக்கைக்காக ஸர்வேச்வரன்வந்து வர்த்திக்கிறதேசம் †திருத்தேவனார்தொகை யென்கிறார். ... *

---

அரு.—போதலர்ந்தப்ரவேசம்.—கீழ்த்திருமொழியில் - முதற்பாட்டில் "அருவினைகள் போயகல வடியவர்கட்கென்றுமருள்நடந்து" என்றத்தையும், இத்திருமொழியில் - "இந்திரனுமிமையவரும்" என்கிற பாட்டையும்கடாக்ஷித்து ஸங்கதியருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி). (திருத்தேவனார் தொகை) என்றவநந்தரம், நெஞ்சே! அங்கேசென்றநுபவி என்று கூட்டுவது. ... ... ... ... ... ... ... ...

மூ.—போதலர்ந்தபொழில்சோலைப்புறமெங்கும்பொருதிரைகள்
தாதுதிர வந்தலைக்கும் தடமண்ணித் தென்கரைமேல்
மாதவன்றானுறையுமிடம் வயல் நாங்கை வரி வண்டு
தேதெனவென்றிசைபாடும் திருத்தேவனார்தொகையே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| போது | பூக்கள் | தடம் | பரந்த |
| அலர்ந்த | விகஸியாநின்ற | மண்ணி | மண்ணியென்னும் ஆற்றினுடைய |
| பொழில்சோலை | நெருங்கின தோட்டங்களினால்நிறைந்த | தென்கரைமேல் | தெற்குக்கரையின் மேல் |
| புறம்எங்கும் | ப்ரதேசங்கள் முழுதும் | மாதவன்தான் | ஸ்ரீயப்பதியான ஸர்வேச்வரன் |
| தாது | பூக்களின் தாதுகள் | உறையும் | நித்யவாஸம் பண்ணு |
| உதிர | உதிரும்படியாக | இடம் | ஸ்தாநமானது. [இற |
| பொரு | ஒன்றோடொன்று பொராநின்ற | வயல் | கழனிகள்சூழ்ந்த |
| திரைகள்வந்து | அலைகளானவைவந்து | நாங்கை | திருநாங்கூரில |
| அலைக்கும் | எறியாநின்ற | வரி | ரேகைகளையுடைய |

| | | | |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகள் [று | பாடும் | பாடாநின்ற |
| தேதென | தென்னதென்ன என் | திருத்தேவனு | திருத்தேவனார் தொ |
| இன்இசை | இனிமையான பாட்டை | ர்தொகை | கையென்னும் திவ்யதேசமாம். (க) |

வ்யா.— முதற்பாட்டு. (போதலர்ந்த) காலத்திலே யலர்ந்தவென்னுதல்; பூக்களலர்ந்தவென்னுதல். (பொழில்சோலைப்புறமெங்கும்)†செறிந்தபொழிலை யுடைத்தான பர்யந்தங்களெங்கும், தன்னில் தான்பொராநின்றுள்ள திரைகளானவை, அப்பொழிலில் தாது உதிரும்படியாகவந்து அலையெறிகிற தடமண்ணித்தென்கரைமேல்.(மாதவன்றானுறையுமிடம்) ரஸிகனானவன் நித்யவாஸம் பண்ணுகிறதேசம்; பிராட்டியுந் தானுமாகத் திருச்சித்திரகூடத்திலே †வர்த்தித்தாற்போலே. வயலையுடைத்தான திருநாங்கூரில், வரியையுடைத்தான வண்டானது மதுபானத்தைப்பண்ணி, முக்தர் ஸாமகானம்பண்ணுமாபோலே தேதென என்று இசைபாடாநின்றுள்ள திருத்தேவனார்தொகை. (தேதென) "தென்ன, தென்ன" என்று இங்ஙனேசொல்லக்கடவது. ஆளத்திவைக்கையைச் சொன்னபடி. ... ... ... (க)

---

அரு.—முதற்பாட்டு. (போதித்யாதி). "பொழில்" என்றும் "சோலை" என்றும் பர்யாயமாகையாலே, பொழில் பொழிலாயிருக்கிறப்ரதேசமெல்லாமென்று விவக்ஷித்து, பலிதார்த்தமருளிச்செய்கிறார் (செறிந்தவித்யாதி). (வர்த்தித்தாற்போலே - ரஸிகனானவன்) என்று கீழோடே அந்வயம். (க)

மூ.—யாவருமா யாவையுமா யெழில் வேதப் பொருள்களுமாய்
மூவருமாய் முதலாய மூர்த்தி யமர்ந்துறையுமிடம்
மாவரும் திண் படை மன்னைவென்றிகொள்வார்மன்னுநாங்கைத்
தேவரும்சென்றிறைஞ்சு பொழில் திருத்தேவனார்தொகையே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| யாவருமாய் | சேதநரெல்லாரையும் தனக்கு ப்ரகாரமாகவுடையனாய் | பொருள்களுமாய் | வஸ்துக்களை ப்ரகாரமாகவுடையனாய் |
| யாவையுமாய் | அசேதநங்களெல்லாவற்றையும் ப்ரகாரமாகவுடையனாய் | மூவருமாய் | ஸ்ருஷ்டிஸம்ஹார கர்த்தாக்களானப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தர்யாமியாகவும் அவர்கள்நடுவில் ஸ்திதிகர்த்தாவான விஷ்ணுவவதாரமுடையனாய் |
| எழில் | அழகுபொருந்திய | | |
| வேதம் | வேதங்களில் ப்ரதிபாதிக்கப்பட்ட | | |

| | | | |
|---|---|---|---|
| முதலாய | அந்த ப்ரஹ்மருத்ரர்களுக்குக் காரணபூதனாய் | வென்றிகொள்வார் | ஜயிக்கவல்லரான ப்ராஹ்மணர். [ற |
| மூர்த்தி | ப்ரதாநனான ஸர்வேஶ்வரன் | மன்னு | பொருந்தி வர்த்திக்கி |
| அமர்ந்து | பொருந்தி | நாங்கை | திருநாங்கூரில் [ம் |
| உறையும் | நித்யவாஸம்செய்கிற | தேவரும் | இந்த்ராதி தேவர்களு |
| இடம் | ஸ்த்தாநமானது, | சென்று | கிட்டி |
| மா | குதிரைமேலேறி | இறைஞ்சும் | ஆஶ்ரயிக்கும்படியிருப்பதாய் |
| வரும் | வருகிற | பொழில் | சோலைகளையுடையதுமான |
| திண் | த்ருடமான | திருத்தேவனார்தொகை | திருத்தேவனார் தொகையென்னும் திவ்யதேசம். (உ) |
| படை | ஆயுதங்களையுடைய | | |
| மன்னை | ராஜகுலத்தை | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (யாவருமாய் யாவையுமாய்) †பாத்யகூஷ யோக்யமாயிருக்கிற †சேதநாசேதநங்களடங்கத் தான் என்கிற சொல்லுக்குள்ளே யடங்கும்படி இவற்றை ப்ரகாரமாகக்கொண்டு தான் ப்ரகாரியாயிருப்பானுமாய். (எழில்வேதப் பொருள்களுமாய்) †தேஹாதிரிக்தமான ஆத்மவஸ்து, காரணவஸ்துவான சிதசித்துக்கள், கல்யாணகுணங்கள், †பகவத்ஸ்வரூபம், இவற்றைப்ரதிபாதிக்கக்கடவ வேதைகஸமதிகம்யமான அர்த்தங்களுமம் தானாய். (மூவருமித்யாதி) ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்குக் கடவரான ப்ரஹ்மாதிகளுக்கந்தராத்மாவாய்ப் புக்குநின்று அவ்வவ கார்யங்களை நடத்திக்கொடுத்தும ஸ்வேநரூபேண நின்று பாலநத்தை நடத்தியும் போருகையாலே மூவருமாய் நிற்கிறான் தானேயென்று சொல்லலாம்படியாய், †அவர்களுக்கும் காரணபூதனாய் †ப்ரதாநனானவன் வந்து நித்யவாஸம் பண்ணுகிறதேசம்.

(மாவித்யாதி) மாவின்மேலே வரும் - குதிரைமுதுகிலேவருவாராய், திண்ணிய ஆயுதத்தையுடையராயிருக்கிற ராஜலோகத்தை எதிரே புறப்பட்டோடி வெற்றிகொள்ளக்கடவராயிருக்கிற †ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திருநாங்கூரில். (க) "ஒண்டிறல்தென்னனோட வடவரசோட்டங்கண்ட, திண்டிறலாளர்" என்னக்கடவதிறே அவ் வூரிலுள்ளாரை. உடையபிள்ளை என்கிறவன் "அங்குத்தை ஆலய...

(க) ௪-௰-௧.

தைக்கவிபாட" என்றுவர, அவனையெதிரேசென்றடித்தோட்டி பின்னை பாடப்பெறுதேபோந்தான் என்றொரு ப்ரஸித்தியுண்டிறே.(தேவரித்யாதி) தேவர்களும் தந்தாமுடைய அதிகாரார்த்தமாக வந்தாஸ்ரயியா நிற்பதாய், பொழிலையுடைத்தான திருத்தேவனார்தொகை. ... (௨)

அரு.—இரண்டாம்பாட்டு. (யாவருமித்யாதி). நிழல்வாய்ப்பும் நீர்வாய்ப்புமான தேசமென்று பரமரஸிகன் வர்த்திக்கிறதேசமென்றார் கீழ்; அவ்வளவன்றிக்கே, ஸர்வவ்யாபகனானவன் ஆஸ்ரயணீயனாகைக்காக விருக்கிற விடமென்றநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"எழில்வேதப் பொருள்களுமாய்" என்றத்தோடு பௌநருக்த்யம் வாராமைக்கு கோபலீவர்த்தந்யாயேந பிரித்தருளிச் செய்கிறார் (ப்ரத்யக்ஷேத்யாதி). (சேதநாசேதநங்கள்) என்றது- தேவாதிஸரீராவிஷ்டங்களையும் கடாதிகளையும் சொல்லுகிறது. அதீந்த்ரியார்த்த ப்ரதிபாதகத்வமே எழில் என்று சொல்லாநின்றுகொண்டு, அவற்றுக்கும் ப்ரகாரியென்னுமிடம் சொல்லுகிறதென்கிறார் (தேஹேத்யாதி). (பகவத்ஸ்வரூபம்)என்றது- ஸ்வாஸாதாரணவிக்ரஹமென்கை. (அவர்களுக்கும்) ப்ரஹ்மருத்ரர்களுக்கும். * மூர்த்திஸப்தம் - ஸ்வரூபவாசியாய், அத்தால் பலித்த ப்ராதாந்யத்தை விவக்ஷித்து (ப்ரதாநனானவன்) என்றது; "முதலாயமூர்த்தி" என்று ஸ்வரூபத்தையநுஸந்தித்த ஆழ்வார்க்குக் காரணத்வப்ரயுக்த ப்ராதாந்யம் விவக்ஷிதமென்று திருவுள்ளம்.

"அருமறையோர்" என்று - மேற்பாட்டில் ப்ராஹ்மணர் ப்ரஸ்துதராகையாலே, "வென்றிகொள்வார்" என்றாலும்- அவர்களைச்சொல்லுகை உசிதமென்றருளிச்செய்கிறார்(ப்ராஹ்மணர்)என்று; (க) "धिग्बलं क्षत्रियबलं ब्रह्मतेजोबलं बलम् - திக்பலம் க்ஷத்ரியபலம் ப்ரஹ்மதேஜோபலம் பலம்" என்று மதிக்கும்படியான ப்ராஹ்மணருண்டென்று திருவுள்ளம்.

மூ.—வானாடும் மண்ணாடும் மற்றுள்ள பல்லுயிரும்
தானாய வெம்பெருமான் தலைவனமர்ந்துறையுமிடம்
ஆனாத பெருஞ்செல்வத்தருமறையோர் நாங்கைதன்னுள் *
தேனாரும் மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தொகையே.(௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வானாடும் | பரமாகாசத்திலுள்ள பரமபதமும் | மற்றுஉள்ள | அதுக்குமேலே அவ்வவலோகங்களிலுள்ள ப்ரஹ்மாக்களும் |
| மண்ணாடும் | பூலோகத்தோடுகூடிய லீலாவிபூதியும் | பல்உயிரும் | பலவகைப்பட்ட ஜீவா |

(க) ரா-பா-௫௬-௨௩.

| | | | |
|---|---|---|---|
| தான்ஆய | (இவையெல்லாம்) தனக்கு ப்ரகாரமாய் இவற்றுக்குத்தான் அந்தராத்மாவாயி | மறையோர் | வேதங்களைப் பூர்ணமாக அத்யயநம் பண்ணின ப்ராஹ்மணர்வர்த்திக்கிற |
| தலைவன் | ப்ரதானனை [ருக்கிற | நாங்கைதன்னுள் | திருநாங்கூரில் |
| எம்பெருமான் ஸர்வேஸ்வரன் அமர்ந்து உறையுமிடம், | | தேன்ஆரும் | தேன்நிறைந்த |
| ஆறாத | அழிவில்லாத | மலர் | பூக்களையுடைய |
| பெரும் | அபரிச்சிந்நமான (ய் | பொழில் | சோலைகளினால் |
| செல்வத்து | ஸம்பத்தையுடையரா | சூழ் | சூழப்பட்ட |
| அரு | கற்கவரிதான | | திருத்தேவனார்தொகை. (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (வாறும்மண்ணும்) பரமபதமும், ஸம்ஸாரமும், அவ்வவதேசங்களையன்றிக்கே அவற்றிலுண்டான பலஆத்மாக்களும், தான் என்கிற சொல்லுக்குள்ளே தனக்கு ப்ரகாரமாயடங்கும்படியிருக்கிற ஸர்வேஸ்வரன்.† தானும் குடும்பமுமாய் கலநெல் ஜீவிப்பானொருவனை "உனக்கென்னவேணும்"என்றால், "எனக்குக்கலநெல்வேணும்" என்னுமிறே தன்னபிமாநத்துக்குள்ளே யடங்குகையாலே; அப்படியே, தானேயிதுக்கெல்லா மபிமாநியாயிருக்கிற ஸர்வேஸ்வரன். (தலைவனமர்ந்துறையுமிடம்) ஸவ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துக்களும் தனக்கு ப்ரகாரமாய் புறம்போராவின்றிக்கே உபயவிபூதியும் தன்னிழலிலேயொதுங்கும்படி யிருக்கையாலே தலைவனானவன்வந்து நித்யவாஸம்பண்ணுகிறதேசம்.

(ஆறாகவிந்யாதி) அழியாத நிரவதிக ஸம்பத்தையுடையராயிருக்கிற ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திருநாங்கூரில். தேன்மிக்கிருந்துள்ளமென்னுதல். வண்டுகள்நெருங்கியிருந்துள்ளமென்னுதல்.(௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (வாறுமெத்யாதி). கீழ்ப்பாட்டில - ஸத்தால ஸ-ரக்ஷமசிதசித்ப்ரகாரபாவத்தை யருளிச்செய்தார்; இனி இப்பாட்டில்,-நித்யவிபூதிக்கும் அங்குள்ளநித்யமுக்தர்க்கும் ப்ரகாரத்வத்தை விசிஷ்யவருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

இங்கு "மண்ணும்" என்றது-த்ருஷ்டாந்தார்த்தம். நிரவாதிய நிர்வாஹகபாவத்தைப்பற்ற ஸாமாநாதிகரண்யமென்றருளிச்செய்கிறார் (தானுமித்யாதி).

"ஆன" என்றதுக்கு-மாண்டுபோனவென்று பதார்த்தமாய், அப்படி ஆகாததானதாய், அத்தால் பலித்தது (அழியாத) என்றது. ... (௩)

மூ.—இந்திரனுமிமையவரும்முனிவர்களுமெழில்மைந்த
சந்தமலர்ச் சதுமுகனும் கதிரவனும் சந்திரனும்
எந்தையெமக்கருளென நின்றருளுமிடமெழில்நாங்கை
சுந்தர நற்பொழில் புடை சூழ் திருத்தேவனார்தொகையே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இந்திரனும் | தேவேந்த்ரனும் | எமக்கு | எங்கள்விஷயத்தில் |
| இமையவரும் | (மற்றுமுள்ள) தேவர்களும் | அருள்என | க்ருபைபண்ணியருளவேணுமென்று ப்ரார்த்திக்க, |
| முனிவர்களும் | (ஸநகாதி) மஹர்ஷிகளும் | | |
| எழில்அமைந் | (எப்போதும் வேதாத்யயநத்திலே ஊண்டான) அழகுபொருந்தியிருப்பானாய் | நின்றருளும் இடம் | (அவர்களபீஷ்டத்தைக் கொடுக்கைக்காக) எழுந்தருளியிருக்கிற ஸ்தலமாய் |
| சந்தம் | வேதங்களை (ஸம்பூர்ணமாகக்) கற்றவனாய் | எழில் | அழகுபொருந்திய |
| | | நாங்கை | திருநாங்கூரில் |
| மலர் | தாமரைமலரைப் பிறப்பிடமாக வுடையனாய் | சுந்தரம் | ஸுந்தரமாய் |
| | | நல் | விலக்ஷணமான |
| | | பொழில் | சோலைகளாலே |
| சதுமுகனும் | நான்முகனுமான ப்ரஹ்மாவும் | புடை | பக்கப்ப்ரதேசங்களெங்கும் |
| கதிரவனும் | ஸூர்யனும் | | |
| சந்திரனும் | சந்த்ரனும் | சூழ் | சூழப்பட்ட |
| எந்தை | எமக்கு ஸ்வாமியானவனே! | | திருத்தேவனார்தொகை. (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (இந்திரனிமையாரி) இந்த்ரனும், தேவர்களும், ஸநகாதிகளும், எழிலமைந்திருப்பானாய் சந்தஸ்ஸையுடையனாய் தாமரைமலரைப் பிறப்பிடமாக வுடையனான சதுர்முகனும். †வேதத்தை எப்போதுமொக்க அத்யயநம் பண்ணுதல் கொடுத்தல் செய்யக்கடவனாயிருக்குமிறே. கதிரவனும், சந்திரனும். ச்ருதியில் †தலைவலித்தாரடங்கலும், "எங்களுக்கு ஸ்வாமியானநீ எங்கள்பக்கலிலே ப்ரஸாதத்தைப்பண்ணியருளவேணும்" என்ன; அவர்களுடைய அதிகாரங்களை நடத்திக்கொடுக்கைக்காகவந்து நின்றருளுகிறதேசம்.

(எழிலித்யாதி) இப்படியொருகார்யப்பாட்டாலன்றிக்கே, சோலைவாய்ப்புக்கண்டு விடாதே வர்த்திக்கிறதேசமாய்த்து. ... (௪)

அ௫—நாலாம்பாட்டு. (இந்திரனித்யாதி). இப்படி உபயவிபூதிநாதன் இங்கார்க்காக வர்த்திக்கிறனென்னவருளிச்செய்கிறரென்று ஸங்கதி.

எழிலேதென்னவருளிச்செய்கிறர் (வேதத்தையித்யாதி). (தலைவலித்தார்)என்றது - சாடு, பெருந்தலையாரென்னுதல், தந்தாமதிகாரத்துக்கு பாதக(ஶாத்ரவ)முள்ளவரென்னுதல். ... ... ... ... (௪)

மூ.—அண்டமுமிவ்வலைகடலுமவனிகளுங் குலவரையும்
உண்டபிரானுறையுமிடமொளி மணி சந்தகில் கனகம்
தெண்டிரைகள் வரத் திரட்டும் திகழ்மண்ணித் தென்கரைமேல்
திண்டிறலார் பயில் நாங்கைத் திருத்தேவனார்தொகையே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அண்டமும் | ஆகாசமும் | கனகம் | ஸுவர்ணங்களையும் |
| அலை | அலையெறிகிற | தென் | தெளிந்து நிர்மலமான |
| இக்கடலும் | இந்தஸமுத்ரங்களும் | திரைகள் | அலைகளினுடைய |
| அவனிகளும் | (ஜம்பூத்வீபம் முதலிய) த்வீபங்களும் | வர | வரவிலே |
| குலவரையும் | (ஹிமவான் முதலிய ஏழு) குலபர்வதங்களும் | திரட்டும் | ராசிராசியாகக் குவியாநின்றதாய் |
| உண்ட | (ஆகிய இவற்றை ப்ரளயகாலத்திலே) அமுதுசெய்த | திகழ் | விளங்காநின்ற |
| பிரான் | உபகாரகன் | மண்ணி | மண்ணியாற்றினுடைய |
| உறையும் இடம், | | தென்கரை மேல் | தெற்குக்கரையினமேலேயிருப்பதாய் |
| ஒளி | காந்தியையுடைய | திண் | த்ருடமான |
| மணி | ரத்நங்களையும் | திறலார் | பலமுடையவர்கள் |
| சந்து | சந்தநமரங்களையும் | பயில் | நெருங்கிவாஸம் செய்யுமிடமான |
| அகில் | தேவதாருக் கட்டைகளையும் | நாங்கை | திருநாங்கூரில் |
| | | | திருத்தேவனார் தொகை. (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (அண்டமித்யாதி) ஆகாசம், கடல்கள், த்வீபங்கள், குலகிரிகள், இவையெல்லாவற்றையும், ப்ரளயகாலத்திலே திருவயிற்றிலேவைத்துரக்ஷித்த உபகாரகன் வர்த்திக்கிறதேசம்;—ஒளியையுடைத்தான மணிகள், சந்தநம், அகில், பொன் இவற

றை, தெளிந்த திரைகள் வரத்திரட்டுகிற திகழ்மண்ணித்தென்கரை மேல். (திண்டிறலார்) "ஸிம்ஹம்வர்த்திக்கும்†முழஞ்சு" என்னுமா போலே - ஒருவரால் ஜயிக்கவொண்ணாத பெருமிடுக்கையுடையரா யிருக்கிறவர்கள் நெருங்கி வர்த்திக்கிற. ... ... ... (௫)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (அண்டமித்யாதி). தேவர்கள் தந்தாமதிகாரங்களை நடத்துமென்று ஆஶ்ரயிக்கைக்கு இவன் ஆபத்ஸகனோவென்ன; அத்தையருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

(முழஞ்சு) லதாக்ருஹம். ... ... ... ... ... (௫)

மூ.—ஞாலமெல்லாமமுதுசெய்து நான்மறையும் தொடராத
பாலகனாயாலிலையில் பள்ளிகொள்ளும் பரமனிடம்
சாலிவளம் பெருகிவரும் தடமண்ணித் தென்கரைமேல்
சேலுகளும் வயல்நாங்கைத் திருத்தேவனார்தொகையே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நால்மறையும் | ப்ரமாணதமமாய் நாலுவகைப்பட்டிருந்துள்ளவேதங்களாலும் | பரமன் | ஸர்வாதிகன் |
| தொடராத | அநுஸரித்துப் பேசப்போகாத பெருமையை யுடையனான [கொண்டு | இடம் | நித்யவாஸம் பண்ணுகிறஸ்த்தானமானது, |
| | | தடம் | விசாலமான |
| | | மண்ணித்தென்கரைமேல் | |
| | | சாலி | செந்நெற்பயிரினுடை |
| | | வளம் | செழுமை [ய |
| பாலகனாய் | இளம் பிள்ளையாய்க் | பெருகிவரும் | மிக்குவாராநிற்பதாய் |
| ஞாலம்எல்லாம் | பூமியைமுழுதும் | சேல் | சேலென்னும் மத்ஸ்ய |
| அமுதுசெய்து | விழுங்கி | உகளும் | துள்ளாநின்ற [ங்கள் |
| ஆல்இலையில் | ஆலந்தளிரில் | வயல் | கழனிகளை யுடைத்தான |
| பள்ளிகொள்ளும் | கண்வளர்ந்தருளுகிற | நாங்கைத் திருத்தேவனார் தொகை. | |

வ்யா.—ஆறும்பாட்டு. (ஞாலமெல்லாமமுதுசெய்து) பூமிப்பரப்படையவமுதுசெய்து. (நான்மறையித்யாதி)†"ஸர்வேஶ்வரன் அபரிச்சேத்யன்" என்றறியக்கடவ வேதங்களுக்கு மெட்டவொண்ணாதபடியான அதியாநுஷசேஷ்டிதத்தை யுடையனாய், ஒருபவனை ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வாதிகன் வர்த்திக்கிறதேசம்.

(சாலியித்யாதி)† தடமண்ணித்தென்கரைமேல்-சாலிவளம்பெருகாநிற்பதாய், சேல் உகளாநிற்பதான வயலையுடைத்தான திருநாங்கூரில்.

அரு.—ஆரும்பாட்டு. (ஞாலமித்யாதி). கீழ்ச்சொன்ன ஆபத்ஸகத்வந் தன்னை வேதங்களும் பேசியளவிடமாட்டாதென்று, அதுதன்னையே மீளவு மநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"நான்மறையும்" என்ற சகாரம்-ப்ராதாந்யத்தைச்சொல்லுகிறதாய், அது தானும் - இவன் சிறுவடிவால் பெரியவற்றை வயிற்றிலேவைத்திருக்கிறபடியைப் பேசமாட்டாதென்று தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனித்யாதி).

அந்வயமுகேந வர்த்தமருளிச்செய்கிறார் (தடமித்யாதி). ... (௬)

மூ.— ஓடாத வாளரியி னுருவாகி யிரணியனை
வாடாத வள்ளுகிரால் பிளந்தளைந்த மாலதிடம்
ஏடேறு பெருஞ்செல்வத் தெழில்மறையோர் நாங்கைதன்னுள்
சேடேறு ‡பொழில் தழுவு திருத்தேவனார்தொகையே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஓடாத | (நாட்டில்) நடையாடாத(அபூர்வமான) | பெரும் | அபரிச்சிந்நமா யிருக்கிற |
| ஆள் அரியின் | நரஸிம்ஹத்தினுடைய | செல்வத்து | ஸம்பத்தையுடையராய் |
| உருவாகி | வடிவை யுடையனாய்க்கொண்டு, [ன)தாய் | எழில் | பகவத்ஸ்வரூபாதிப்ரதிபாதகமாகிற அழகையுடைய |
| வாடாத | வளையாத (த்ருடமா | | |
| வள் | கூர்மைமிக்க | | |
| உகிரால் | நகங்களினால் | மறையோர் | வேதங்களுக்கு நிர்வாஹகரான ஸ்ரீவைஷ்ணவர்கள் நித்யவாஸம்செய்கிற |
| இரணியனை | ஹிரண்யாஸுரனை | | |
| பிளந்து | கிழித்து | | |
| அளைந்த | (அவ்வவயவங்களைக் கைகளால்) கலக்கிக்கொண்டிருந்த | நாங்கை தன்னுள் | திருநாங்கூரில் |
| மாலது | ஆஶ்ரித வ்யாமோஹமுள்ள ஸர்வேஶ்வரனுடைய | சேடு | இளமை |
| | | ஏறு | வளராநின்றதாய் |
| இடம், | [ரனுடைய | மலர் | பூக்களையுடைய |
| ஏடு | புஸ்தகத்தில் | பொழில் | சோலைகளினால் |
| ஏறு | ஏறிட்டு (எழுதி)க் காணவேண்டும்படி, | சூழ் | சூழப்பட்ட |
| | | | திருத்தேவனார்தொகை. (எ) |

‡ (பா) மலர்ப்பொழில்சூழ்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (ஓடாதவித்யாதி)நாட்டில் நடையாடாத நரஸிம்ஹவேஷத்தைப் பரிக்ரஹித்து, ஹிரண்யனுடைய முரட்டுடலிலே வ்யாபரியாநிற்கச்செய்தேயும் †வாடக்கடவதல்லாத கூரியதிருவுகிராலே, (பிளந்தளைந்தமாலதிடம்)†ஒன்றுசெய்தானைப் விடுகையன்றிக்கே (க)"உதிரமளைந்த கையோடிருந்தானை" என்கிறபடியே சிறுக்கன்மேலே சீறினவன்பக்கல் தனக்குச் சீற்றம்மாறுமையாலே பிளந்து, பின்னை யளைந்திருந்த வ்யாமோஹத்தையுடையவன் வர்த்திக்கிறதேசம்.

(ஏடேறித்யாதி)† அவ்வூரில் ப்ராஹ்மணருடைய ஸம்பத்தைக் கண்டு விடுமதன்றிக்கே புத்தகத்திலே யெழுதிப்பார்க்க வேண்டும்படியாய்த்திருப்பது ஸ்ரீராமாயணம்போலே. ஏறுகை - போகை, ஏடு - குற்றம்; குற்றமற்ற பெரிய வைஶ்வர்யம். அன்றிக்கே, ஏடு ஏறிப்போம்படியான வைஶ்வர்யம். ஏடேறுகையாவது - ஏடு மாண்டுபோகை. (சேடேறுபொழில்தழுவு) இளமைமிக்க பொழில் தழுவியிருக்குமுள்ள. அன்றிக்கே, (சேடேறுமலர்ப்பொழில்சூழ்) மலரையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட; (௨)†"வளரிளம்பொழில்" என்னுமாபோலே ... ... ... ... ... ... (௭)

அரு—ஏழாம்பாட்டு. (ஓடாதவித்யாதி) ஸகலலோகங்களுக்கும் வந்த வாபத்தைப் பாலனுமொருபடியாலே யுசவினேனென்றா, அவ்வளவன்றியே,ஓரர்ப்பகனுக்காக இருபடியாலுதவின நரஸிம்ஹத்தினுடைய ஆபத்ஸகத்வத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

(வாடக்கடவதலலாத) வியாயக்கடவதல்லாத "அளைந்த" என்றதுக்கு ஸம்வாதபூர்வகம் தாத்பாயமருளிச்செய்கிறா (ஒன்றுசெய்தானையித்யாதி).

ஏட்டிலேயெழுதிப்பார்க்கவேண்டும்படியான வைஶ்வர்யமென்றும், குற்றமற்றவைஶ்வர்யமென்றும், ஏட்டிலெழுதினாலும் முடியாதவைஶ்வர்யமென்றும், மூன்றர்த்தமடைவே யருளிச்செய்கிறார் (அவ்வூரித்யாதி). சேடானது - இளமையானது, ஏறிவருமோவென்ன, ஸம்வாதமருளிச்செய்கிறார் (வளரித்யாதி), வளரவளர இளமை மிகும்பொழிலென்றாரிறே ஆழ்வாரென்று திருவுள்ளம். ... ... ... ... ... (௭)

மூ.—‡வாராரு மிளங்கொங்கை மைதிலியை மணம்புணர்வான்
காரார்திண் சிலையிறுத்த தனிக்காளை கருதுமிடம்

(க) பெரி-தி-௩-௪-௧-௯. (௨) தி-வாய்-௨-௧௦-௧. ‡ (பா) வாராரும்.

ஏராரும் பெருஞ்செல்வத்தெழில் மறையோர்நாங்கைதன்னுள்
சீராரும் மலர்ப்பொழில் சூழ் திருத்தேவனார்தொகையே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வார் | கச்சாலே | கருதும்இடம் | விரும்பி வர்த்திக்கிற ஸ்தாநமானது, |
| ஆரும் | தாங்கப்படுமதாய் | ஏர்ஆரும் | அழகுமிக்கிருந்துள்ள |
| இளம்கொங்கை | இளம்பருவத்தையுடைய ஸ்தநங்களையுடையளான | பெரும் | நிரவதிகமான |
| மைதிலியை | மிதிலாதிபனுடைய பெண்ணான பிராட்டியை | செல்வத்து | ஐச்வர்யத்தையுடையராய் |
| மணம்புணர்வான் | விவாஹம்செய்துகொள்ளுகைக்காக, | எழில் மறையோர் | அழகிய வேதங்களைப் பரிசீலநம் பண்ணாநின்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் நிறைந்திருக்கிற |
| கார்ஆர் | கருமைமிக்க (முற்றின)தாய் | நாங்கைதன்னுள் | திருநாங்கூரில் |
| திண் | த்ருடமான | சீர்ஆரும் | அழகுவிஞ்சியிருக்கிற |
| சிலை | வில்லை | மலர் | பூக்களையுடைய |
| இறுத்த | முறித்தவனாய் | பொழில் | சோலைகளாலே |
| தனி | அத்விதீயமான | சூழ் | சூழப்பட்ட |
| காளை | யௌவநப்பருவத்தையுடையனான சக்ரவர்த்தித் திருமகன் | | திருத்தேவனார்தொகை. (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (வாராரித்யாதி) தோற்றுகிறபோதே வாராலே தாங்கவேண்டும்படியான முலையையுடைய ஸ்ரீஜநகராஜன் திருமகளை மணம்புணருகைக்காக, † வயிரம்பற்றி ஒருவரால் சலிப்பிக்கவொண்ணாதிருக்கிற வில்லைமுறித்த உபகாரதூஹிதமான பருவத்தையுடையவன் விரும்பி வர்த்திக்கிறதேசம்.

அழகு மிக்கிருந்துள்ள நிரவதிக ஸம்பத்தையுடைய ப்ராஹ்மணர் வர்த்திக்கிற நாங்கைதன்னில். (சீராரித்யாதி) அழகுமிக்க மலரையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட. ஊரில் ஸம்பத்தைக்கோட் சொல்லிக்கொடுக்குமாய்த்து சோலை. ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (வாராரித்யாதி). ஓராண்பிள்ளைக்குதவினவளவன்றியே, (க) పతిసంయోగసులభం వయో దృష్ట్వా చ మే పితా । చిన్తార్ణవగతః పాపం నాఽఽససాదాఽఽప్లవం యథా - பதிஸம்யோகஸுலபம் வயோ

(க). ரா-அயோத்ய-கக அ-ங ஶ்லோ.

த்ருஷ்ட்வாசமேபிதா ! சிந்தார்ணவகதஃ பாரம் நாஸஸாதாப்லவோயதா" என்கிறபடியே-கொடியைக்கொள்கொம்பிலே சேர்க்கவேண்டும்படியான பருவத்திற்பெண்பிள்ளைக்குதவவந்து சிலைமுறித்த உதவியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"காரார்" என்றது - கருமைமிக்கதென்று ஃபலிதார்த்தமாய், அத்தை இப்போதுசொல்லுகைக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (வயிரமித்யாதி).

மூ.—கும்ப மிகு மத யானை பாகனொடும் குலைந்து வீழக்
கொம்பதனைப் பறித்தெறிந்த கூத்தனமர்ந் துறையுமிடம்
வம்பவிழும் செண்பகத்தின் மணங்கமழும் நாங்கைதன்னுள்
செம்பொன்மதிள்பொழில்புடைசூழ்திருத்தேவனார்தொகையே

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மிகு | பெருத்த, [தாய் | | உறையுமிடம், |
| கும்பம் | மஸ்தகத்தை யுடைய | செண்பகத்தின் | செண்பகப் பூவினுடைய |
| மதம் | கொழுப்பேறி யிருக்கிற | வம்பு | புதுமையிலே |
| யானை | குவலயாபீடமானது | அவிழும் | அலராநின்ற |
| பாகனொடும் | (தன்னுடைய) பாகனோடுகூட | மணம் | பரிமளமானது |
| குலைந்து | நடுங்கி [னோடுகூட | கமழும் | வாஸியாநின்ற |
| வீழ | விழும்படி | | நாங்கைதன்னுள், |
| அதன்கொம்பை | அதினுடைய தந்தத்தை | செம்பொன் | சிவந்த பொன்னாலே செய்யப்பட்ட |
| பறித்து | பிடுங்கி | மதிள் | ப்ராகாரங்களும் |
| எறிந்த | வீசிப்பொகட்ட | பொழில் | தோப்புக்களும் |
| கூத்தன் | அழகிய திவ்யசேஷ்டிதங்களையுடையக்ருஷ்ணன் | புடை | தனக்குள்ளே யடங்கும்படி |
| அமர்ந்து | பொருந்தி [ஷ்ணன் | சூழ் | பரந்திருக்கிற [ம்படி |
| | | | திருத்தேவனார்தொகை. (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கும்பமித்யாதி) பெரியமஸ்தகத்தையுடைத்தான மத்தகஜம் பாகனோடேகூட † நட்டாற்றில் கோரைபோலே நடுங்கி விழும்படியாக அதின்கொம்பைக் குப்பைக்கீரைபோலே அநாயாஸேந பிடுங்கிப்பொகட்ட மநோஹாரியான சேஷ்டிதத்தையுடையவன் வர்த்திக்கிறதேசம்.

†செவ்வியிலே யலருகிற செண்பகத்தின் மணங்கமழுகிற நாங்கைதன்னில், மதிளையும் அத்தை வளைந்த சோலையையும் †உள்ளடக்கியிருக்கிற. ... ... ... ... ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (கும்பமித்யாதி). ஒரு பெண்கொடிக்காக மூச்சுவிட்ட வசேதநமான வில்லை முறித்ததிலுங்காட்டிலும், மதுரையில் பெண்கொடிகளுக்கெல்லா முதவும்படி மத்தகஜத்தின் கொம்பைமுறித்து அவர்களுக்குதவினமையை யநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

(க) "నకర శ్రీకలాలాపమధు శ్రోత్రేణ పాస్యతి-நகரஸ்த்ரீகலாலாப மதுஶ்ரோத்ரேணபாஸ்யதி" என்று சொல்லுகிறபடியிறே அவர்களுக்காய் இவன் களிறுதருபுணர்ச்சி கொடுத்தது. "குலைந்து" என்றதினர்த்தம் (நட்டாற்றிலித்யாதி).

வம்பு-புதுமையாய், அத்தால் பலிதார்த்தம் (செவ்வியிலே) என்றது. புடையிலே - தன்னுள்ளேயாம்படி, சூழ்ந்ததிருத்தேவனார்தொகை என்று எல்லைப்பரப்பைச்சொல்லிற்றென்று விவக்ஷித்தருளிச்செய்கிறுர் (உள்ளடக்கியிருக்கிற) என்று. ... ... ... ... ... (௯)

மூ.— காரார்ந்த திருமேனிக் கண்ணனமர்ந் துறையுமிடம்
சீரார்ந்த பொழில் நாங்கைத் திருத்தேவனார்தொகைமேல்
கூரார்ந்த வேல் கலியன் கூறு தமிழ் பத்தும் வல்லார்
ஏரார்ந்த வைகுந்தத் திமையவரோ டிருப்பாரே. (க0)

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

—oo:❖:oo—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கார் | மேகத்தோடு | வேல் | வேலாயுதமுடைய |
| ஆர் | ஸத்ருசமான | கலியன் | திருமங்கையாழ்வார் |
| திருமேனி | திவ்யவிக்ரஹத்தை யு | கூறு | அருளிச்செய்த |
| கண்ணன் | க்ருஷ்ணன் [டைய | தமிழ் | த்ராவிடரூபமான திவ் |
| அமர்ந்து | பொருந்தி | | யப்ரபந்தத்தில் |
| உறையும் | வர்த்திக்கிற | பத்தும் | (இந்தப்) பத்துப்பா |
| இடம் | தேசமாய், | | ட்டையும் |
| சீர் ஆர்ந்த | எழில் நிறைந்த | வல்லார் | அப்யஸித்தவர்கள் |
| பொழில் | சோலைகளையுடைய | ஏர் ஆர்ந்த | நன்மைமிக்க |
| நாங்கை | திருநாங்கூரிலுள்ள | வைகுந்தத்து | ஸ்ரீவைகுண்டத்தில் |
| திருத்தேவனா | திருத்தேவனார் தொ | இமையவ | நித்யஸூரிகளுடன்கூ |
| ர் தொகை | கையென்னும் திவ் | ரோடு | டி |
| மேல் | யதேச விஷயமாக, | இருப்பார் | நித்யவாஸம் பண்ணு |
| கூர் ஆர்ந்த | கூர்மைமிக்க | | வர்கள். (க0) |

(க) வி-பு-இ-கஅ-கரு.

வ்யா.—பத்தாம்பாட்டு. (காரார்ந்தவித்யாதி) மேகம்போலே ஶ்ரமஹரமான வடிவையுடைய க்ருஷ்ணன்விரும்பி வர்த்திக்கிறதேசமான அழகுமிக்க பொழிலையுடைத்தான திருநாங்கூரில் திருத்தேவனார்தொகைமேல்.

(கூரார்ந்த) †ஶத்ருக்கள் பக்கல் வேல்கொண்டு வ்யாபரிக்குமிடத்தில் தலைமைபெற்றிருக்குமாபோலேயாய்த்துக் கவிபாட்டிலும தலையாயிருக்கும்படி. இப்பத்தையு மப்யஸிக்கவல்லவர்கள், நன்மைக்கவதியின்றிக்கே யிருக்கிற ஸ்ரீவைகுண்டத்திலே திருவடி திருவநந்தாழ்வானோடே ஒருகோவையாய், (க) "நசபுநராவர்த்ததே - நசபுநராவர்த்ததே" என்கிறபடியே ஒருநாளும்பிரியாதே யிருக்கப்பெறுவர்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

—oo:o:oo—

அரு—பத்தாம்பாட்டு. (காராந்தவித்யாதி) இப்படி ப்ரபந்தகாத்ருத்வத்தை ஆப்த்யர்த்தம் சொல்லும்போது "கூரார்தவேலகலியன்" என்னவேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஶத்ருகளித்யாதி) (௧௦)

ஜீயா திருவடிகளே சரணம்

—oo:o:oo—

நாலாம்பத்து முதல்திருமொழி முடிந்தது.



(க) சா [illegible] ௮-௧௫



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி - நாலாம்பத்து - உ - ம் திருமொழி

## முதற்பாட்டு கம்பமாகடல் வ்யாக்யாநம்.



ப்ரவேசம்.—†ப்ரஹ்மாதிகளுக்கு †உத்பாதகனுமாய், அவர்கள் தாங்கள் தங்களுக்கு அநர்த்தத்தைச் சூழ்த்துக்கொள்ளுமன்று அவற்றைப்போக்கிரக்ஷிக்கும்ஸ்வபாவனுமாய், †அவர்கள்தாங்கள்‡†அஸுரர்களோடேகூடிவருமன்றும் அவர்களைஜயித்து ஜகத்தை†ரக்ஷிக்குமவன் வந்தெழுந்தருளியிருக்கிறதேசம் வண்புருடோத்தமமென்று அத்தேசத்தினுடைய வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்து அத்தைப்பேசி யநுபவிக்கிறார். ... ... ... ... ... ... *

அரு.— கம்பமாகடலின் ப்ரவேசம்.— திருநாங்கூர் திருப்பதிகளுக்கெல்லாம் ஸங்கதி பூர்வமுக்தமாகையாலே, திருமொழியில் ப்ரமேயத்தை உபந்யஸிக்கிறார் (ப்ரஹ்மாதியித்யாதி). "இந்துவார்சடை" என்கிற ஒன்பதாம்பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (உத்பாதகனுமாய்) என்று. "வாளையார்" என்கிற எட்டாம்பாட்டில் ப்ரமேயம் (அவர்கள்தாங்களித்யாதி). "ஈசன்தன்" இத்யாதியைப்பற்ற வருளிச்செய்கிறார் (அஸுரர்களோடித்யாதி). மற்ற எல்லாப்பாட்டிலும் பலித்தவர்த்தம்(ரக்ஷிக்குமவன்) என்றது. ... ... ... ... ... ... ... *

மூ.— கம்பமா கடலடைத்திலங்கைக்குமன் கதிர் முடியவைபத்தும்
அம்பினாலறுத்தரசவன் தம்பிக்களித்தவனுறைகோயில்
செம்பலா நிரை செண்பகம் மாதவி சூதகம் வாழைகள் சூழ்
வம்புலாங்கமுகோங்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கம்பம் | சலியாநின்ற (அலைகளையுடைத்தான) | கதிர் | ஒளிவிடாநின்றுள்ள |
| மா | பெரிய | அவை | அப்படிப்பட்ட |
| கடல் | ஸமுத்ரத்தை | முடிபத்தும் | சிரங்கள்பத்தையும் |
| அடைத்து | அணைகட்டி, | அம்பினால் | பாணங்களினால் |
| இலங்கைக்கு | லங்காநகரத்துக்கு | அறுத்து | சே(ச்)தித்து, |
| மன் | ஸ்வாமியான ராவணனுடைய | அவன்தம்பிக்கு | அந்தராவணன் தம்பியான விபீஷணாழ்வானுக்கு |

‡ அஸுரர்களோடே கூடிவருகை- பாணாஸுர யுத்தத்திலே ருத்ரன் கூடிவந்தது.

| | | | |
|---|---|---|---|
| அரசுஅளித்த வன் | ராஜ்யத்தை க்ருபை செய்த சக்ரவர்த்தித்திருமகன் | வாழைகள் | வாழைமரங்களும் (ஆகிய இவற்றால்) |
| உறை | பொருந்தி வர்த்திக்கிற | சூழ் | சூழப்பட்டதாய் |
| தேசம் | ஸ்த்தாநமானது, | வம்பு | பரிமளம் |
| பலா | பலாமரங்களுடைய | உலா | வ்யாபியாநின்ற (வீசாநின்ற) |
| செம் | சிறந்த | கமுகு | பாக்குமரங்கள் |
| நிரை | வரிசைகளும் | ஓங்கிய | உயர்ந்திருப்பதான |
| செண்பகம் | செண்பகமரங்களும் | நாங்கூர் | திருநாங்கூரில் |
| மாதவி | குருக்கத்தியும் | வண்புருடோத்தமம் | வண் புருடோத்தமமென்கிறதிவ்யதேசமாம். (௧) |
| சூதகம் | மாமரங்களும் | | |

வ்யா.—முதற்பாட்டு. (கம்பமித்யாதி) †இட்டதடையைக் கரைந்து போம்படி அலையெறியாநின்றுள்ள பெரியகடலை யணைசெய்து, "அரணுடைத்தானலங்கைக்கு நான் நிர்வாஹகனல்லேனோ" என்று அத்தாலே துர்மாநத்தைப்பண்ணியிருக்கிற ராவணனுடைய. (கதிர்முடியவைபத்தும்) †திக்விஜயம்பண்ணிச்சூடினமுடியையுடைத்தான தலைபத்தையும். (அம்பினாலறுத்து) ப்ரஹ்மாஸுத்ராதிகளுக்கும் கேளாதபடி வரபலத்தாலே பூண்கட்டியிருக்கிற தலைகளை க்ஷத்ரியத்வத்துக்கே காந்தமான அம்பாலே யழியச்செய்து. (அரசித்யாதி) "ராக்ஷஸருடைய ஐஶ்வர்யத்தை நம்முடையானொருவன் கடவனாகப்பெற்றோமிறே" என்று அந்த ஐஶ்வர்யத்தை அவன்தம்பியான விபீஷணனுக்குக்கொடுத்தருளினவன் வந்து நித்யவாஸம் பண்ணுகிறதேசம்.

(செம்பலாவித்யாதி) பலாக்களுடைய செவ்வியநிரை, செண்பகம், குருக்கத்தி, தேமா, வாழைகள் இவை சூழ்ந்திருக்குமாய்த்து புறச்சோலைகள். உட்சோலைகளிருக்கும்படி, (வம்புலாங்கமுகோங்கிய) எப்போது மொக்கப் பாளைநாற்றத்தை யுடைத்தான திருநாங்கூரில். ... ... ... ... ... ... ... (௧)

---

அரு.—முதற்பாட்டு. (கம்பமித்யாதி) "கம்பம்" என்று சலநமாய், அத்தால் அலையைச்சொல்லிற்றாய், இப்படி விஶேஷித்ததாலே அணைசெய்கை துஷ்கரமென்று தோற்றத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இட்டதித்யாதி). கதிர்முடிகள் பத்துமென்னவமைந்திருக்க "அவை" என்றத்தாலே தோற்றுகிற உத்கர்ஷந்தன்னை யருளிச்செய்கிறார் (திக்விஜயமித்யாதி). அவன்தலையறுத்து அவன்தம்பிக் கரசளிக்கக் காரணமென்னெ

[illegible]வருளிச்செய்கிறார் (ராக்ஷஸருடையவித்யாதி). ராக்ஷஸராஜ்யம் ஈரவா நரஜாதிக் காரஹமாகையாலே அராஜகமாய்ப் போகாதே ஸ்வாதீநமாக ஒருநல்லவரக்க னுண்டாவதே! என்று கொடுத்தமைதோற்ற "அவன் தம்பி" என்று விசேஷித்தாரென்று திருவுள்ளம். ... ... (க)

மூ.—பல்லவம் திகழ் பூங்கடம்பேறி யக்காளியன் பண வரங்கில்
ஒல்லைவந்துறப்பாய்ந்தரு நடஞ்செய்தவும்பர்கோனுறைகோயில்
நல்ல வெந்தழல் மூன்று நால்வேத மைவேள்வியோடாறங்கம்
வல்ல வந்தணர் மல்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பல்லவம் | தளிர்கள் | செய்த | பண்ணின [ன் |
| திகழ் | விளங்காநின்ற | உம்பர்கோன் | தேவாதிநாத னைவ |
| பூ | பூத்த | | உறைகோயில், |
| கடம்பு | கடம்பென்னும் மரத்தின் மேலே | நல்ல | கர்மாநுஷ்டாநயோக்யமான நன்மையை யுடையதாய் |
| ஏறி | ஏறி | | |
| அ காளியன் | அப்படிப்பட்ட காளியனுடைய | வெம் | வெப்பத்தையுடைய |
| | | தழல்மூன்று | த்ரேதாக்நிகளையும் |
| பணம் | படங்களாகிற | நால்வேதம் | சதுர்வேதங்களையும் |
| அரங்கில் | ரங்க (நர்த்தந) ஸ்தாநத்தில், | ஐ வேள்வி | பஞ்சமஹா யஜ்ஞங்களையும் |
| உற | அவன்சேரும்படி (தப்பிப்போகாதபடி) | ஆறுஅங்கம் | (வேதங்களினுடைய) ஷடங்கங்களையும் |
| வந்து | கிட்டிவந்து [யாக | வல்ல | பிறாக்குக்கற்பிக்க வல்லரான |
| ஒல்லை | சீக்ரமாக | | |
| பாய்ந்து | குதித்து | அந்தணர் | ப்ராஹ்மணர் |
| அரு | அருமையான | மல்கிய | நிறைந்திருக்கிற |
| நடம் | நாத்தநங்களை | | நாங்கூர்வண்புருடோத்தமம். (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பல்லவமித்யாதி) காளியனுடைய விஷத்தாலே தக்த (ௐ) மாய்க்கிடந்து திருவடிகளின் ஸ்பர்சத்தாலே தளிரும் பூவுமாய்த் தழைத்ததாய்த்து. தளிர் விளங்கா நிற்பதாய்ப் பூத்த கடம்பின்மேலே யேறி காளியனுடைய பணங்களாகிற ரங்கத்தின்மேலே †அவன் தப்பாதபடியாக நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே வந்து கடுகப்பாய்ந்து. (அருநடஞ்செய்த) அந்த ந்ருத்தத்திலே வன்மைக் கூத்தென்றும் மென்மைக் கூத்தென்றும் சிலவுண்டு, †அவ

ற்றை யடையப்பண்ணின* அயர்வறு மமரர்க ளதிபதியானவன் வந்து வர்த்திக்கிற கோயில்.

(நல்ல வித்யாதி) அக்நித்ரயம், நாலுவகைப்பட்ட வேதம், பஞ்சமஹாயஜ்ஞம், அங்கங்க ளாறும் இவற்றைத் தாங்கள் வருந்தி யநுஷ்டித்தார்களாகையன்றிக்கே பிறரையு மநுஷ்டிப்பிக்கைக்கு க்ஷமரான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற தேசம் ... ... (௨)

அரு.—இரண்டாம்பாட்டு (பல்லவமித்யாதி). ரணரங்கத்தில் தச(ஜீ) கண்டன் பத்துத்தலையறுத்தத்திலும் விஷகண்டன் நூறுதெருருதலையிலும் அடியிட்டபடியை யநுஸந்திக்கிருரென்று ஸங்கதி.

"உற வந்து ஒல்லை பாய்ந்து" என்றந்வயித்து அர்த்தமருளிச்செய்கிருர் (அவனித்யாதி). (அவற்றை) அநுநடங்களை. ... ... (௨)

ரு.—அண்டரானவர்வானவர்கோனுக்கென்றமைத்தசோறதுவெல்லா
முண்டுகோனிரைமேய்த்தவை காத்தவனுகந்தினிதுறை கோயில்
கொண்டலார்முழவில் குளிர்வார்பொழில் குலமயில்நடமாட
வண்டுதானிசைபாடிடு நாங்கூர் வண்புருடோத்தமமே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| அண்டரான வர் | இடையர்கள் |
| வானவர் கோனுக்கு என்று | தேவேந்த்ரனுக்குப் பலியிட வேணுமென்று |
| அமைத்த | சமைத்த |
| அது சோறு | அந்த சோற்றை |
| எல்லாம் | முழுதும் |
| உண்டு | அமுது செய்து |
| கோ நிரை | பசுக் கூட்டங்களை |
| மேய்த்து | மேயச் செய்து |
| அவை | அப்பசுக்களை |
| காத்தவன் | ரக்ஷித்த க்ருஷ்ணன் |
| உகந்து | ஸந்தோஷித்து |
| இனிது | இனிமை யுடனே |

| பதம். | உரை. |
|---|---|
| உறை | கோயில், |
| கொண்டல் | மேகங்களி னுடைய |
| ஆர் | நிறைந்த |
| முழவு | காஜநங்களை யுடையதும் |
| குளிர் | ப்ரமரமானதுமாய் |
| வார் | பெருகி யிருக்கிற |
| பொழில் | தோப்புகளில் |
| மயில் குலம் | மயில் களினுடைய ஸமூஹமானது |
| நடம் ஆட | நர்த்தநம் செய்ய |
| வண்டு தான் | வண்டுகள் |
| இசை | கானத்தை |
| பாடிடும் | பாடாநின்ற |
| நாங்கூர்வண்புருடோத்தமம். | (௩) |

வ்யா.—மூன்றும் பாட்டு. (அண்டரித்யாதி) பசுக்களுக்கும்பசுக் குப் புகந்தோற்றநின்று வர்த்திக்கிற† இவனுக்கு மேல்பட ஒரு தேவதையுண்டோவென்று மண்டதுக் கவ்வருகமியாநபடி †செவ்வியா

யிருக்கிற இடையரானவர்கள், தேவஜாதிக்கெல்லாம் நியாமகனாய்ப் போந்தவனான இந்த்ரனுக்கென்று சமைத்த சோற்றையெல்லாம் தானமுதுசெய்து. (கோநிரைமேய்த்து) அநந்தர மவற்றினுடைய ரக்ஷணமும் தனக்கே பரமாகையாலே அவற்றை மேய்த்து அவற்றினுடைய ஆபத்தைப் போக்கி ரக்ஷிக்கிறவன். (உகந்தினி துறைகோயில்) இன்னமு மிப்படி ரக்ஷிக்கைக்குப் பாங்கான தேசமென்று அவனுகந்து நித்யவாஸம்பண்ணுகிற தேசம்.

(கொண்டலித்யாதி) மேகங்களினுடைய மிக்க கோஷமானதுவே வாத்யமாக ஸமஹரமாய்ப் பரந்திருந்துள்ள பொழிலின் நடுவே மயிலினுடைய ஸங்கமானது ஆட, அங்கே மதுபாநம்பண்ணுகிற வண்டுகளானவை இவற்றினுடைய காலுக்கிடாக இசைபாடாநின்றுள்ள ... ... ... ... ... ... (௩)

அ௩.—மூன்றும்பாட்டு. (அண்டரித்யாதி) எதிரிட்ட திர்யக்ஜாதியனையடக்க வடியிட்டவளவன்றியே, "தேவஜாதிக்காகக்கடவன்" என்றிருப்பானைக் கையோயப்பண்ணின அதிமாநுஷசேஷ்டிதத்தை யநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(இவனுக்கு) கோவர்த்தநாபிமாநியானவனுக்கு. (செவ்வியராய்) கவடறியாராய். (உண்டோவென்று) என்றதுக்கு (தானமுதுசெய்து) என்றத்தோடந்வயம். யத்வா (இவனுக்கு) என்றது-வாஷமுகேந முகங்காட்டின இந்த்ரனுக்கென்கை. இப்போது நாராந்வயமில்லை. ... ... (௩)

மூ.—பருங்கையானையின் கொம்பினைப்பறித்ததன்பாகனைச் சாடிப்புக்
கொருங்கமல்லரைக்கொன்று பின் கஞ்சனையுதைத்தவனுறை
கரும்பினூடுயர்சாலிகள் விளைதருகழனியில் மலிவாவி[ுங்கோயில்
மருங்கெலாப்பொழில்லோங்கிய நாங்கூர்வண்புருடோத்தமமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பரும் | பருத்திருக்கிற | சாடி | கொன்று, |
| கை | துதிக்கையை யுடைத்தான ய | புகு | உள்ளே நுழைந்து |
| | | ஒருங்க | ஏகீபவித்துவந்த |
| | | மல்லரை | சாணூர முஷ்டிகர்களை |
| யானையின் | குவலயாபீடத்தினுடை | கொன்று | அழியச்செய்து |
| கொம்பினை | தந்தங்களை | பின் | அநந்தரம் |
| பறித்து | பிடுங்கி | கஞ்சனை | கம்ஸனை |
| அதன் பாகனை | அந்த யானையை நடத்த வல்லவனான பாகனை | உதைத்தவன் | உதைத்த க்ருஷ்ணன் |

| | | | |
|---|---|---|---|
| உறை | கோயில், [டைய | மலி | ஸம்ருத்தமாயிருக்கிற. |
| கரும்பின் | கருப்பஞ் சோலையினு | வாவி | கிணறுகளுடைய |
| ஊடு | நடுவிலே | மருங்கெலா | பக்கங்களிலெங்கும் |
| உயர் | ஓங்கி வளராநின்ற | ம் | |
| சாலிகள் | செந்நெல் பயிர்கள் | ஓங்கிய | உயர்ந்து வளராநின்ற |
| விளைதரு | விளையாநின்ற | பொழில் | தோட்டங்களை யுடைய |
| கழனியில் | கழனிகளில் | | நாங்கூர்வண்புருடோத்தமம். (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (பருங்கையித்யாதி) பெரிய துதிக்கையை யுடைத்தான, குவலயாபீடத்தினுடைய கொம்பை முறித்து, அது முடிந்தாலும் நடத்தவல்ல சக்தியையுடைத்தான பாகனை யழியச்செய்து, அநந்தரம் சாணூர முஷ்டிகாதி மல்லவர்க்கத்தை யழியச்செய்து, உள்ளேபோய்ப் புக்குக் கமஸன் தலைமயிரைப்பிடித்து முகங் கீழ்ப்படவலித்துத் திருவடிகளாலே யுதைத்து முடித்தவன், இன்னு மிப்படிப்பட்ட விரோத்யம்சத்தைப போக்குகைக்காக நித்ய வாஸம் பண்ணுகிற தேசம.

(கரும்பித்யாதி) கரும்பினுள்ளே அத்தோடொத்து இசலி†வளராநின்றுள்ள செநநெலை யுடைத்தான வயலிலே மிக்க பொய்கைகளில் பரிஸரமெல்லாம், ஆகாசாவகாசம வெளி யடையும்படி ஓங்கின பொழிலாய்க் கிடக்குமாய்தது ... ... ... (௪)

அரு.—நாலாம்பாடடு (பருங்கையிதயாதி) பசிக்கோபத்தாலே வந்த வினைக் கை ஓயந்துபோகப்பணணின வளவன்றிக்கே, கைவிஞ்சின கைம்மாவையும் எதிரிட்ட முருடரையும் ஜந்மஶத்ருவான கம்ஸனையுமொருகாளிலே வென்றவிஜயத்தைப்பேசி யநுஸந்திக்கிறரென்று ஸங்கதி.

இசலி - ஸ்பர்தையைபண்ணி. ... ... ... ... (௪)

மூ.—சாடுபோய்விழத்தாள்நிமிர்த்தீசன்தன்படையோடுங்கிளையோடு மோடவாணனையாயிரம தோள்களும துணிததவனுறைகோயில் ஆடுவான்கொடியகல்விசும்பணவிப்போய்ப பகலவனொளிமறை மாடமாளிகைசூழ்தரு நாங்கூர்வண்புருடோததமமே. [க்கும்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சாடு | அஸுராவிஷ்டமான சகடமானது | தாள் | திருவடிகளை |
| | | நிமிர்த்து | நீட்டி. |
| போய் | தூரத்திலே போய் | ஈசன் | ருத்ரன் |
| விழ | விழுந்து முடியும்படியாக | தன் படையோடும் | தன்னுடைய ஸேனைகளோடும் |

| | |
|---|---|
| இளையோடும் | ஷண்முகன் கணபதி முதலிய மற்று முள்ள பரிகரங்களோடும் கூட |
| ஓட | தோற்றோடும்படி செய்து |
| வாணனை | பாணாஸுரனுடைய |
| ஆயிரம்தோள்களும் | ஆயிரம் புஜங்களையும் |
| துணித்தவன் | வெட்டிப் பொகட்ட க்ருஷ்ணன் உறை கோயில், |
| ஆடு | அசையாநின்ற |
| வான் | பெரிய |

| | |
|---|---|
| கொடி | த்வஜங்கள் |
| அகல் | பரந்த |
| விசும்பு | ஆகாசத்தை |
| அணவி | தழுவிக்கொண்டு |
| போய் | உயரக்கிளம்பிப்போய் |
| பகலவன் | ஸூர்யனுடைய |
| ஒளி | கிரணங்களை |
| மறைக்கும் | காணாதபடி மறையாநின்ற |
| மாடம் | மண்டபங்களாலும் |
| மாளிகை | க்ருஹங்களாலும் |
| சூழ்தரு | சூழப்பட்ட |

நாங்கூர்வண்புருடோத்தமம். (ரு)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (சாடித்யாதி) முலைவரவு தாழ்த்த ஸமயத்திலே சகடாஸுரன்வந்து கிட்ட, அவன் முடியும்படியாகத் திருவடிகளை நிமிர்த்து, ஈஸ்வராபிமாநியான ருத்ரன், (க)* முண்டநீறன் தொடக்கமான பரிகரத்தோடே வந்தெதிரிட்டு, பின்னை யவற்றை யடையக்கொண்டு கெட்டோட, இதர ஸமாஸ்ரயணம் பண்ணின பாணனுடைய ஆயிரம் தோளையும் துணித்தவன், இன்னும் ஆஸ்ரிதருடைய விரோதிகளைப் போக்குகைக் கீடாகவந்து வர்த்திக்கிறதேசம்.

(ஆடித்யாதி) அசையாநின்றுள்ள பெரிய கொடிகளானவை, பரப்புடைத்தான ஆகாசத்தைத் தழுவிக்கொண்டுபோய், ஆதித்ய கிரணங்களை மறையாநின்றுள்ள மாடங்களாலும் மாளிகைகளாலும் சூழப்பட்ட... ... ... ... ... ... ... (ரு)

அரு —அஞ்சாம்பாட்டு. (சாடித்யாதி) இவன் விரோதி நிரஸந சீலனானது அடிதொடங்கி ஸித்தமென்று கொண்டு, ஈஸ்வராபிமாநியாயும் துர்மாநியாயு மிருக்கிற இந்த்ர கம்ஸாதி நிரஸநங்களைப் பண்ணின வளவன்றிக்கே, அந்த ஈஸ்வராபிமாநிகளில் தலையானவனும் கைவிஞ்சின துரபிமாநியும் கூடி எதிரிட, கெட்டோடவும் கைகழியவும் பண்ணின பெருமிடுக்கனென்றநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி ... .. ... ... (ரு)

மூ.—அங்கையாலடி மூன்று நீரேற்றயனலர் கொடுதொழுதேத்தக்
கங்கைபோதரக்கால் நிமிர்த்தருளியகண்ணன் வந்துறைகோயில்
கொங்கை கோங்கவைகாட்ட வாய்குமுதங்கள்காட்ட மாபதுமங்
மங்கைமார்முகங்காட்டு நாங்கூர்வண்புருடோத்தமமே, [கள்

(க) தி-ச-வி-எக.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மூன்று அடி | மூன்றடி நிலத்துக்காக | கோங்கு | கோங்கு மரத்தினரும் |
| அம் | அழகிய | அலை | புகளானவை |
| கையால் | திருக் கையினால் [ன்பு] | மங்கைமார் | (அவ்வூரிலுள்ள) பெண் களுடைய |
| நீர் ஏற்று | தாநஜலத்தைவாங்கி,(பி | கொங்கை | ஸ்தநங்களை |
| அயன் | ப்ரஹ்மாவானவன் | காட்ட | தர்சிப்பியாநிற்க |
| அலர்கொடு | புஷ்பங்களை ஸம்பாதித் துக்கொண்டு | குமுதங்கள் | செவ்வாம்பல்களான வை |
| தொழுது | ஆஸ்ரயித்து | வாய்காட்ட | அதரங்களைக் காட்டா நிற்க |
| ஏத்த | ஸ்தோத்ரம் பண்ணும் படி யாகவும் | மா | அழகிய [வை |
| கங்கை | கங்காநதியானது | பதுமங்கள் | தாமரைப் பூக்களான |
| போதர | புறப்படும்படி யாகவும் | முகம் | முகத்தை |
| கால் | திருவடிகளை | காட்டிடும் | காட்டாநின்றுள்ள(அவ் வவ அவயவங்கள் போல் தோற்றுநின்ற கோங்கு முதலியவை களையுடைய) |
| நிமிர்த்த ருளிய | நீட்டின | | |
| கண்ணன் | ஸர்வேஸ்வரன் | | |
| வந்து | (இன்னும்) ஆஸ்ரித ர க்ஷணார்த்தமாகவந்து | | |
| உறை கோயில், | | நாங்கூர்வண்புருடோத்தமம். (௬) | |

வ்யா.—ஆறும்பாட்டு. (அங்கை இத்யாதி (௧) “గోసహస్ర ప్రదాతారమ్- கோஸஹஸ்ரப்ரதாதாரம்” என்கிறபடியே கொடுத்து வளர்ந்த அழகிய கையைக்கொண்டு மூவடியை நீரேற்று, திருக்கையிலே நீர் விழுந்த வநந்தரம் வளர்ந்தருளுகிறபோது ப்ரஹ்மபதத்தளவும் செ ன்று அவன்கையிலே திருவடிகளிருக்க, அவன் புஷ்பாத்யுபகரணங் களைக் கொண்டு ஆஸ்ரயிக்கும்படியாகவும், கங்கை புறப்படும்படியாக வும் திருவடிகளை நிமிர்த்தருளின ஸர்வேஸ்வரன் நித்யவாஸம் பண் ணுகிற தேசம்.

(கொங்கை இத்யாதி) அங்குத்தைக் கோங்குகளினுடைய அரு ம்புகளானவை அவ்வூரில் ஸ்த்ரீகளுடைய ஸ்தநங்களைக்காட்ட, அங் கே அலர்ந்துநிற்கிற அரக்காம்பலானவை அவர்களுடைய அதரத் தைக்காட்ட, †செவ்விபெற வலர்ந்த செந்தாமரைப்பூக்கள் முகங்களைக் காட்டாநிற்குமாய்த்து. † இத்தால் சொல்லிற்றாய்த்து தென்னென்

---

(௧) ரா-யு-௨௧-௭.

ளில், ஊருக்கும் வயலுக்கும் வாசி தெரிந்து ப்ரதிபத்தி பண்ணுகை அரிதாயிருக்கு மென்றபடி. ... ... ... ... (௬)

அ௫.—ஆரும்பாட்டு. (அங்கையாலித்யாதி)கீழ்ப்பாட்டில். ஈஸ்வராபிமாநியான ருத்ரனையும் அவனைப்பற்றின தேவதாந்தர பரனையு மடக்கின படி சொன்னார், இதில், அவருக்குங்கூட ஜநகனாயிருக்கிற ப்ரஹ்மா தன்னீஸ்வராபிமாநம் கொலைந்து தொழும்படியையும், எல்லாரையு மடிக்கிழிட்டபடியையு மநுஸந்தித்து, த்ரிவிக்ரமாபதாநத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி. அன்றிக்கே, "சாடுபோய் விழத்தாள் நிமிர்த்து" என்று ப்ரஸ்துதமான தாள் நிமிர்த்தபடியை த்ரிவிக்ரமாபதாநத்திலும் காண்கையாலே அத்தை யநுபவிக்கிறாரென்னுதல் ஸங்கதி கண்டு கொள்வது.

"மா" என்று சோபா (ஸ்ரீ) நிசயமாய், அத்தை யருளிச்செய்கிறார் (செவ்வியித்யாதி). திவ்யதேசத்துக்குச் சிறப்பு சொல்லவேண்டிற்றாகில் வேறே சில சொல்லவேண்டாவோ, வீதராகரான விவா மங்கைமார்களை இப்படி வர்ணிக்கவேணுமோ வென்னும் ப்ரஸ்நத்தை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் (இத்தாலித்யாதி). இவர்க்கு திவ்யதேசத்திலுள்ள மரங்களோடு மங்கைமாரோடு வாசியில்லை, அங்குள்ளதெல்லாம் ததீயமாகையாலே அவற்றில் பரஸ்பர ஸாரூப்யத்தைக்கண்டு பேசுகிறாரென்று பரிஹாரத்துக்குக் கருத்து... ... ... ... ... ... ... (௬)

மூ.—உளையவொண்டிறல் பொன்பெயரோன் றனதுரம்பிளந்துதிரத்
யளையும் வெஞ்சினத்தரிபரிகீறியவப்பன் வாழுறைகோயில் [தை
இளையமங்கையரிணையடிச் சிலம்பினோடெழில்கொள்பந்தடிப்போ
வளையில்நின்றொலிபல்கிய நாங்கூர்வண்புருடோத்தமமே. [ர்கை

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒள் | அதிகமான | வெம் | க்ரூரமான [ளுன |
| திறல் | பலத்தையுடைய | சினத்து | கோபத்தை யுடைய |
| பொன் பெயரோன் | ஹிரண்யனுனவன் [யாக | அரி | நரஸிம்ஹனுய், [யை |
| உளைய | மனம் வருந்தும்படி | பரி | குதிரையாய்வந்த கேசி |
| (அவன்)தன து | அவனுடைய | கீறிய | கிழித்துப்பொகட்டவனுன |
| உரம் | மார்வை | அப்பன் | உபகாரகன் |
| பிளந்து | கிழித்து | வாழ்ந்து உறை கோயில், | |
| உதிரத்தை | ரக்தத்தை | இளைய மங்கையர் | பெண்கள் (ஆடும் போது) |
| அளையும் | கைகளிறுல் கலக்கானின்றவனுய் | இணை அடி | இரண்டு கால்களிலு மணிந்த |

| | | | |
|---|---|---|---|
| சிலம்பினொடு | தண்டைச் சிலம்பினொலியோடு கூட | கைவளையில் | கைகளிலணிந்த வளைகளில் நின்றும் புறப்ப |
| எழில்கொள் | அழகுடைத்தான | ஒலி | கோஷமானது [டாநின்ற |
| பந்து அடிப் | பந்தடிப்பவர்களுடைய | மல்கிய | அதிசயித்திருக்கிற |
| போர் | | | நாங்கூர்வண்புருடோத்தமம். (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (உளைய) †ஒருநாளு மச்சமிருக்கும்படி புதியதுண்டறியாதானாய் மிக்க மிடுக்கையுடையனா யிருக்கிற ஹிரண்யனானவன் நெஞ்சுளையும்படியாக †அவன் மார்வை இருகூறும்படி பிளந்து. (உதிரத்தையளையும் வெஞ்சினத்தரி) அவன் முடிந்துபோகச்செய்தேயும், சிறுக்கன் பக்கலுண்டான வாத்ஸல்யத்தாலே சீற்றம் மாறாதே ருதிரவெள்ளத்தை வெண்ணெய்போலே யளைந்த நரஸிம்ஹம். எல்லாருமொக்க அஞ்சும்படி வந்து தோற்றின கேசிவாயைக் கிழித்துத் தன்னைத்தந்த மஹோபகாரகன் வர்த்திக்கிறதேசம்.

அவ்வூரில் பா (ல) லைகளான ஸ்த்ரீகளாடுகிற காலில் சிலம்பினுடைய த்வநியோடேகூட அழகிய பந்துகளை யடியாநின்றுள்ளார் கைகளி லாபரணங்களுடைய த்வநியானது மிக்கு மற்றுமுண்டான நகர கோ(஘ோ)ஷத்தை அபிபவித்துத் தான் மேற்படாநிற்குமாய்த்து... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (உளைய வித்யாதி) த்ரிவிக்ரமாவதாரம் பண்ணி எங்கும் வ்யாபித்த படியை யநுஸந்தித்தவாறே (க) "எங்குமுளன் கண்ணன்" என்கிறபடியே அந்தர்யாமித்வம் ப்ரத்யபிஜ்ஞாவிஷயமாய், அத்தை இசையாத வன்னெஞ்சனான பொன்னன் நெஞ்சிடந்த கேசவனை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"ஒண்டிறல் பொன் பெயரோன், உளைய, அவன் றனது உரம்பிளந்து" என்று கூட்டி யர்த்த மருளிச்செய்கிறார் (ஒருநாளுமித்யாதி). பிளந்திருக்கச் செய்தேயும் அளையவேண்டுவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி). ... ... ... ... ... ... (எ)

மூ.—வாளையார்தடங்கணுமைபங்கன் வன்சாபமற்றதுநீங்க [யில்
மூளையார்சிரத்தைய முன்னளித்தவெம்முகில் வண்ணனுறைகோ
பாளைவான்கமுகூடுயர்தெங்கின் வன்பழம்விழவெருவிப்போய்
வாளைபாய்தடஞ்சூழ்தரு நாங்கூர் வண்புருடோத்தமமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வாள் | ஒளியானது | தடம் | விசாலமான |
| ஆர் | நிறைந்திருக்கிற | கண் | கண்களையுடைய |

(க) தி-வா-உ-அ-கூ.

| | | | |
|---|---|---|---|
| உமை | பார்வதியை | | உறை கோயில், |
| பங்கன் | (தன் சரீரத்தில்) ஒரு பக்கத்தி லுடையனான ருத்ரனுடைய | பாளை | பாளைகளை யுடைத்தாய் |
| | | வான் | ஆகாசத்தில் ஓங்கி வளர்ந்திருக்கிற |
| வன் | க்ரூரமான | கமுகு | பாக்கு மரங்களுடைய |
| சாபம் | சாபமானது | ஊடு | நடுவில் |
| நீங்க | தொலைந்துபோம்படி. | உயர் | உயர்ந்திருக்கிற |
| அது | அந்தச்சாபத்துக்கீடான பாபமானது | தெங்கின் | தென்னை மரங்களுடைய |
| அற்று | தீரும்படியாக, | வன் | பெரிதான |
| மூளை | எலும்பானது | பழம் | பழமானது |
| ஆர் | பூர்ணமாயிருக்கிற | விழ | (குளத்தில்) விழ |
| சிரத்து | (அவன் கையிலொட்டிய) ப்ரஹ்ம கபாலத்தில் | வாளை | (அங்குள்ள) மத்ஸ்யமானது |
| | | வெருவி | பயந்து |
| ஐயம் | பிச்சையை | போய் | அவ்விடத்தை விட்டுப் போய் |
| முன் | முற்காலத்திலே | | |
| அளித்த | இட்டவனாய் | பாய் | மற்றொரிடத்தில் குதித்துச் சேராநின்ற |
| எம் | எமக்கு உபகாரகனாய் | | |
| முகில் வண்ணன் | மேகம்போன்ற ஸ்வபாவத்தை யுடையனான ஸர்வேஸ்வரன் | தடம் | தடாகங்களினால் |
| | | சூழ்தரு | சூழப்பட்ட |
| | | | நாங்கூர்வண்புருடோத்தமம். (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (வாளையித்யாதி) †மிக்க ஒளியையுடைத்தாய்ப் பரந்திருந்துள்ள கண்களையுடைய தேவிக்குத் தன்னுடம்பிலே ஒரு பார்ஸ்வத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கிற தேவனுடைய வலிய சாபமானது நீங்க, லோககுருவுமாய் பிதாவுமாயிருக்கிறவனுடைய தலையை ஒரு ஹேதுவின்றிக்கே யிருக்க அறுக்கையாலே, ஒன்றால் பரிஹரிக்கவரிதாம்படியான பாதகமானது அவனைவிட்டுப் போம்படி, ரக்தஸ்பர்சமொன்றுமின்றிக்கே வெறும் அஸ்த்தி(மஜ்ஜா)யேயாயிருக்கிற தலையோட்டில் பிக்ஷையை முன்பருளின மஹோதாரனானவன், வர்த்திக்கிற தேசம்.

(பாளையித்யாதி) பாளையையுடைத்தாய் ஆகாசாவகாச மிட மடையும்படி ஓங்கின கமுகின்நடுவே யுண்டான தெங்குகளினுடைய பெரிய பழங்களானவை, பொய்கைக்கும் தெங்குக்குமுண்டான †அண்ணுமையாலே பொய்கையிலேவந்துவிழ, தன்னை யுத்தேசித்து

விழுகிறதாகக்கொண்டு வாளையானது அவ்விடத்தைவிட்டுத் தனக்கு அரணுடைத்தா யிருப்பதொரு ப்ரதேசத்தை யடையாநிற்கு மூரய்த்து ... ... ... ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (வாளையித்யாதி) சிறுக்கன் பக்கல்வாத்ஸல்யத்தாலே உதிரமளைந்த கையோடிருந்தபடியை யநுஸந்தித்தவாறே, இதிற்காட்டில் அதிசயித குணமாகையாலே மஹா பாதகியானவனுக்குக் கை ஓடுகழிய உதிரத்தைக் கொடுத்த கையோடிருந்த படியை யநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

ஐகாரம் அவ்யயமாய், வாளார்தடங்கணுமையைப் பக்கத்திலே யுடைத்தான ருத்ரனுடைய வன் சாபம்நீங்க, அது-சாப ஹேதுவான பாதகமானது, அற்று - தீரும்படியாக, மூளை - எலும்பானது, ஆர் - பூர்ணமாயிருக்கும்படியான, சிரத்தில், ஐயத்தை - உதிரத்தைக் கொடுக்கையாகிற பிச்சையைக் கொடுத்து முகில்போன்ற ஸ்வபாவத்தை யுடையவனென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறுர் (மிக்கவித்யாதி). (அண்ணுமையாலே) ஸாமீப்யத்தாலே... ... ... (அ)

மூ.—இந்துவார்சடையீசனைப்பயந்த நான்முகனைத்தன்னெழிலாரும்
உந்திமாமலர் மீமிசைப்படைத்தவனுகந்தினிதுறை கோயில்
குந்திவாழையின் கொழுங்கனிநுகர்ந்துதன் குருளையைத்தழுவிப்போய்
மந்திமாம்பணைமேல்வைகுநாங்கூர்வண் புருடோத்தமமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இந்து | சந்த்ரனை யுடைத்தா | | உறைகோயில், |
| வார் | நீண்டிருக்கிற [ய் | மந்தி | பெண் குரங்கானது |
| சடை | ஜடையையுடைய | வாழையின் | வாழை மரத்தினுடை |
| ஈசனை | ருத்ரனை | கொழு | ஸம்ருத்தமான [ய |
| பயந்த | ஸ்ருஷ்டித்த | கனி | பழங்களை |
| நான்முகனை | ப்ரஹ்மாவை | குந்தி | கால்களைக் குந்திக் |
| தன் | தன்னுடைய தாய் | | கொண்டு |
| எழில் | அழகு | நுகர்ந்து | புஜித்து |
| ஆரும் | நிறைந்திருக்கிற | தன் | தன்னுடைய |
| உந்தி | திரு நாபியிலுள்ள | குருளையை | குட்டியை |
| மா | பெரிய | தழுவி | அணைத்துக்கொண்டு |
| மலர் | கமலப்பூவினுடைய | போய் | அங்கு நின்றும்போய் |
| மீமிசை | மேலே [ஸ்வரன் | மாம்பணைமே | மாமரத்தின் கிளைக |
| படைத்தவன் | ஸ்ருஷ்டித்த ஸர்வே | ல் | ளின்மேல் |
| உகந்து | களித்து | வைகு | உறங்காநின்ற |
| இனிது | விருப்பத்துடன் | நாங்கூர்வண் | புருடோத்தமம், (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (இந்து வித்யாதி) சந்த்ரனையுடைத்தான ஜடையையுடைய ருத்ரனை ஸ்ருஷ்டித்த சதுர்முகனைத் தன்னுடைய அழகு மிக்கிருந்துள்ள திருவுந்தியில் பெரிய மலரின்மேலே ஸ்ருஷ்டித்தவன், தன்னாலே ஸ்ருஷ்டனான சதுர்முகனாலே ஸ்ருஷ்டமான ஜகத்தென்று அதினுடைய ரக்ஷணத்துக்குறுப்பாக, அவன் விரும்பி வர்த்திக்கிற தேசம்.

அங்குண்டான வாழைகளானவை தரையிலே தட்டப்பழுத்துக் கிடந்தபடியாலே, அங்குண்டான மந்திகளுண்டு-பெண்குரங்கு, "இது அணித்திறே" என்று, வாராக்கிட்டத்துடங்கும்; அதுதான் பின்னையும் தனக்கெட்டாதே ஓங்கி நிற்கையாலே காலைக்குந்தி அதினுடைய அழகிய ப(ஃ)லங்களை புஜித்து, அநந்தரம் தன் குட்டியை யணைத்துக்கொண்டுபோய் மாம்பழங்களை புஜிப்பதாக உத்யோகித்த விது, அந்தக் குட்டியினுடைய ஸ்பர்சத்தாலும் புக்கத்ரவ்யம் ஸாத்மிக்கைக்காகவும் மாம்பணைகளிலே உறங்காநின்றுள்ள. (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (இந்துவித்யாதி) கீழ்ப்பாட்டில், அரன் சாபம் தீர்க்கைக்கடி ஏதென்னு மாகாங்க்ஷை பேரனான முறையாலே யென்னுமிடம் தோற்ற அஜ்ஜகதத்வத்தை யநுஸந்திக்கிறார் என்றுஸங்கதி. (கூ)

மூ.—மண்ணுளார்புகழ்வேதியர் நாங்கூர் வண் புருடோத்தமத்துள்
அண்ணல்சேவடிக் கீழடைந்துய்ந்தவனாலிமனருள்மாரி
பண்ணுளார்தரப்பாடிய பாடலிப்பத்தும் வல்லாருலகில்
எண்ணிலாதபேரின்பமுற்றிமையவரோடும் கூடுவரே. (கo)

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மண்ணுள் | பூலோகத்தில் | நாங்கூர் | திரு நாங்கூரிலுள்ள |
| ஆர் | அதிசயித்திருக்கிற | வண்புருடோத்தமத்துள் | வண்புருடோத்தமமென்ற திவ்யதேசத்தில் எழுந்தருளியிருக்கிற |
| புகழ் | கீர்த்தியையுடையராய் | அண்ணல் | ஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய |
| வேதியர் | வேதாத்யயநம் பண்ணுவதே ஸ்வபாவமாக வுடையரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் வர்த்திக்கிற | சே | ஸுந்தரமான |
| | | அடிக்கீழ் | திருவடிகளின் கீழ |

| | | | |
|---|---|---|---|
| அடைந்து | சேர்ந்து | பாடல் | பாசுரமான [டையும் |
| உய்ந்தவன் | உஜ்ஜீவித்தவராய் | இப்பத்தும் | இந்தப் பத்துப்பாட் |
| ஆலி | திருவாலியி லுள்ளா | வல்லார் | அப்யஸித்தவர்கள், |
| மன் | ராஜாவாய் [ர்க்கு | உலகில் | இந்த லோகத்தில் |
| அருள்மாரி | க்ருபாவர்ஷியான | எண் இலாத | அஸங்க்யேயமான |
| | மேகமாயிருக்கிற | பேர் இன்பம் | மஹாநந்தத்தை |
| | திருமங்கையாழ் | உற்று | அடைந்து(அநந்தரம்) |
| பண்ணுள் | காநத்திலே [வா | இமையவரோ | நித்ய ஸூரிகளோடு |
| ஆர்தர | பூர்ணமாயிருக்கும் | டும் | |
| பாடிய | கீர்த்தித்த [படி | கூடுவர் | சேரப்பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மண்ணுளாரித்யாதி) மண்ணுள் ஆர் புகழ் வேதியர் என்னுதல், மண்ணுளார் புகழ்என்னுதல்.—†பூமியிலே மிக்க புகழையுடையராயிருக்கிற ப்ராஹ்மணரென்னுதல்; பூமியிலுள்ளாரால் புகழப்பட்ட வென்னுதல். †ஸர்வேஸ்வரன் திருவடிகளிலே கிட்டி (௧) "அஸந்நேவ ஸபவதி-அஸந்நேவ ஸபவதி" என்னும் நிலை தவிர்ந்து உஜ்ஜீவிக்கப்பெற்றவர். (ஆலிமன்) திருவாலியிலுள்ளார்க்குப் ப்ரதாநரான ஆழ்வார். (அருள்மாரி) ஆஸ்ரிதர்க்கு ப்ரஸாதத்தைப் பண்ணுமிடத்தில் மேகம்போலே மஹோதாரரான ஆழ்வார், பண்ணிலே ஆரும்படியாகப் பாடிய பாடலிபபத்தையும் வல்லவர்கள், லோகத்திலே நிரவதிகமான ஆநந்தத்தை யுடையராய், அநந்தரம் நிரவதிக ப்ரீதியுக்தரான நித்ய ஸூரிகளோடு ஒரு கோவையாகப் பெறுவர். ... ... ... ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு.—பத்தாம் பாட்டு. (மண்ணித்யாதி) யதாக்ரமமிரண்டு நிர்வாஹத்தையும் விவரிக்கிறார் (பூமியிலே மிக்க வித்யாதி). "அண்ணல்" இத்யாதிக் கார்த்தம் (ஸர்வேஸ்வரனித்யாதி). ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

நாலாம்பத்து இரண்டாம்திருமொழி முடிந்தது.



(௧) தை-ஆந-ரு-க.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# நாலாம்பத்து - மூன்றாம் திருமொழி

## பேரணிந்து ப்ரவேசம்.



வ்யா.—†ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனாய் †நிரதிசய போக்யனாய் †என்று மொக்கவுளனாயிருக்கிற ஸர்வேஶ்வரன் †தன்னை யாஶ்ரயிக்குமிடத்தில் புருஷகாரமாம் பிராட்டிமாரோடே கூடவந்து நித்யவாஸம்பண்ணுகிற செம்பொன் செய்கோயிலினுள்ளே நான் காணப்பெற்றேனென்று தாம் பெற்ற பேற்றை யநுபவித்தினியராகிறார். ... *

---

அரு.—பேரணிந்தின் ப்ரவேசம்.—"பேதியா வின்பவெள்ளத்தை" என்றத்தைக் கடாக்ஷித்து (ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனாய்) என்றது. "ஏழிசையின் சுவைதன்னை" "உள்ளத்து ளூறியதேனை" இத்யாதியைப்பற்ற (நிரதிசய போக்யனாய்) என்றது. "இறப்பெதிர் காலக்கழிவுமானானை." என்றத்தை யுட்கொண்டு (என்று மொக்கவுளனாய்) என்றது முதற்பாட்டைத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (தன்னை யித்யாதி). ... ... *

மூ.—பேரணிந்துலகத்தவர்தொழுதேத்தும்பேரருளாளனெம்பிரானை
வாரணிமுலையாள்மலர்மகளோடு மண்மகளுமுடன்நிற்ப
சீரணிமாடநாங்கை நன்னடுவுள்செம்பொன்செய்கோயிலினுள்ளே
காரணிமேகம்நின்றதொப்பானைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உலகத்தவர் | லோகத்திலுள்ளாரனைவரும் | மேகம் ஒப்பானை | மேகத்தோடு ஸத்ருசனாயிருப்பானாய் |
| பேர்அணிந்து | பெருங் கூட்டமாகக் கூடி | எம்பிரானை | எமக்கு உபகாரகனானவனை, |
| தொழுது | ஆஶ்ரயித்து | வார் அணி | கச்சைபூண்ட [ளாய் |
| ஏத்தும் | ஸ்துதிக்கும்படியிருப்பானாய் | முலையாள் | ஸ்தநங்களை யுடைய |
| பேர் அருளாளன் | (அவர்கள் விஷயத்தில்) நிரவதிகமான க்ருபையைப் பண்ணுமவனாய் [டாய் | மலர் மகளோடு | புஷ்பத்தில் அவதரித்தவளாய் நித்ய யுவதியான பெரிய பிராட்டியாரோடு கூட |
| கார் | மழைகாலத்திலுண் | மண் மகளும் | ஶ்ரீ பூமிப்பிராட்டியும் |
| அணிநின்றது | அழகியதாயிருக்கிற | உடன் நிற்ப | கூட நிற்கச்செய்தே, |

| | | | |
|---|---|---|---|
| சீர் | ஸம்பத்தை யுடைத்தாய் | செம்பொன் செய்கோயி லினுள்ளே | செம்பொன் செய்கோயிலென்கிற திவ்ய தேசத்திலே |
| அணி | அழகியதான | கண்டு கொண்டு | கண்களாலநுபவித்து |
| மாடம் | மாடங்களை யுடைய | உய்ந்து | உஜ்ஜீவித்து |
| நாங்கை | திரு நாங்கூரில் | ஒழிந்தேன் | க்ருதார்த்தனானேன். |
| நல் நடுவுள் | நன்றான மத்யப்ரதேசத்தி லிருக்கிற | | |

வ்யா. — முதற்பாட்டு. (பேரணிந்தித்யாதி) †லௌகிகரடங்கலும் திரண்டு †என்றுமவன் திருவடிகளிலேவிழுந்து திருநாமத்தைச் சொல்லி ஸ்தோத்ரம்பண்ணி யாஶ்ரயிக்க, அவர்களாஶ்ரயணத்தள வல்லாதபடி ப்ரஸாதத்தை யவர்கள் பக்கலிலேபண்ணி அப்படி யெனக்கு உபகாரகனானவனை. நித்யமான யௌவநத்தையுடையளாய், அத்தாலே ஸர்வேஶ்வரன் திருவுள்ளத்தைத் தன்பக்கலிலே துவக்கி ஆஶ்ரிதருடைய குற்றத்தை (௧) ‹‹ந கஶ்சிந்நாபராத்யதி- நகஶ்சிந்நாபராத்யதி'' என்னும் பெரிய பிராட்டியாரோடேகூட, †“முதல் தன்னிலே குற்றத்தைக் காண்கிறதென், பொறுத்தோமென்று தலை துலுக்குகிறதென்'' என்று இவ்வழியாலே அவன்றனக்குங்கூடப் பொறைக்கு உவாத்தாயிருக்கும் ஸ்ரீ பூமிப்பிராட்டியும் கூடநிற்க.

(சீரித்யாதி) முதல் தன்னிலே, லோகத்திற்காட்டில் ஐஶ்வர்யம் விஞ்சி யிருக்குமாய்த்து அவ்வூரில், அதடையத் தோற்றும்படி தர்சநீயமான மாடங்களையுடைய திருநாங்கூரில் நன்றான நடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே. (காரணியித்யாதி) கார்காலத்திலே வர்ஷோந்முகமாய்க் கொண்டு அழகிய வடிவையுடைத்தாயிருப்பதொரு மேகம்போலே யிருக்கிறவனைக் கண்ணாலேகண்டநுபவிக்கப் பெற்று (௨) ‹‹அஸந்நேவ-அஸந்நேவ'' என்னுமநிலைதீர்ந்து, (௨) ‹‹ஸந்தமேநம்-ஸந்தமேநம்'' என்கிறபடியே உஜ்ஜீவித்து க்ருதார்த்தனானேனென்கிறார். ... ... ... ... ... ... (௧)

அரு —முதற்பாட்டு. (பேரணிந் தித்யாதி) பேரணிந்து - பெருக்கத் திரண்டு என்று சப்தார்த்தமாயருளிச்செய்கிறார் (லௌகிக மித்யாதி). (என்றும்) என்றது “தொழுதேத்தும்'' என்கிற வர்த்தமான பலிதார்த்தம். மலர்மகளோடு மண்மகளுடன் நிற்ப என்ன வமைந்திருக்க, “மண்மகளும்'' என்கிற சகாரத்துக்கு ப்ராதாந்ய மர்த்தமாய், அத்தை யருளிச்செய்கிறார் (முதல் தன்னிலேயித்யாதி). ... ... ... ... (௧)

(௧) ரா-யு-௧௧௬-௪௪. (௨) தை-ஆ௩-௬.

மூ.—பிறப்பொடு மூப்பொன்றில்லவன் றன்னைப்
பேதியா வின்பவெள்ளத்தை
இறப்பெதிர்காலக்கழிவுமானானை
யேழிசையின்சுவைதன்னைச்
சிறப்புடைமறையோர்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
மறைப்பெரும்பொருளை வானவர்கோனைக்
கண்டு நான் வாழ்ந்தொழிந்தேனே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிறப்பொடு | ஜநநமும் | ஏழ்இசையின் | ஸப்தஸ்வரங்களினுடைய |
| மூப்பு | வார்த்தகமும்(முதலான விகாரங்கள்) | சுவை தன்னை | ரஸம்போல் போக்யபூதனாய் |
| ஒன்று | சிறிதும் | மறை | வேதப்ரதிபாத்யமா[ன |
| இல்லவன் தன்னை | இல்லாதவனாய் | பெரும் பொருளை | ப்ரதாநார்த்தமானவனாய் |
| பேதியா | ந்யூநாதிகபா (ஞ) வமாகிற பேத (஭ேத) மில்லாத (எப்போது மொருபடிப் பட்ட) | வானவர்கோனை | நித்யஸூரிகளுக்குத் தலைவனை ஸர்வேஶ்வரனை, |
| இன்ப வெள்ளத்தை | ஆநந்தத்துக்கு ஸமுத்ரம்போல் நிலையிடமானவனாய் | சிறப்பு உடை | ஆதிக்யத்தை யுடைய |
| இறப்பு | பூதகாலத்திலும் | மறையோர் | ப்ராஹ்மணோத்தமர்கள் நித்யவாஸம் பண்ணுகிற |
| எதிர்காலம் | பவிஷ்யத்காலத்திலும் | நாங்கைநல் நடுவுள் செம்பொன் செய்கோயிலினுள்ளே, | |
| கழிவும் | வாத்தமான காலத்திலும் (காலத்ரயத்திலும்) | நான் கண்டு | நான் கண்களாலநுபவித்து |
| ஆனானை | வர்த்திக்குமவனாய், | வாழ்ந்து | உஜ்ஜீவித்து |
| | | ஒழிந்தேன் | க்ருதார்த்தனானேன். |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பிறப்பித்யாதி) பிறப்பது மூப்பதாகைக்கு ஹேதுவில்லாமையாலே ஜந்மஜராதிகளாகிற ப்ரஸங்கமுமின்றிக்கே யிருக்கிறவனை, பிறப்பது மூப்பதாகா நிற்கச்செய்தே ஒரு ப்ராஹ்மகல்பமாத்ரமிருந்து முடிகிறத்தைக் கொண்டு, பிறப்பும் மூப்புமில்லையென்று சொல்லாநின்றதிறே ப்ராஹ்மாதிகளை; முதலிலே அவ்விடையாட்டமும் சொல்லவொண்ணாதிருக்கிறவனை, (பே

தியா வின்பவெள்ளத்தை) பேதியாத ஆநந்தஸமுத்ரத்தை. (க)"ஆநந்த மய: - ஆநந்தமய:" என்னக்கடவதிறே. ஆநந்தப்ராசுர்யத்தைச் சொல்லுகிறது. ஜீவாத்மாவினுடைய ஸ்வரூபமும் நித்யமாய், தர்ம பூதஜ்ஞாநமும் நித்யமாயிருக்கச்செய்தேயும், ஜ்ஞாநப்ரஸரத்வாரத்தி னுடைய ஸங்கோசவிகாஸத்தைப் பற்ற ஜ்ஞாநத்துக்கு உதயாஸ்த மய வ்யவஹாரம் பண்ணுகின்றதிறே. அவ்வோபாதி ஸ்வரூபமும் நித்யமாயிருந்ததேயாகிலும் கர்மநிபந்தநமாக உண்டான அசித்ஸம் ஸர்க்க வியோகங்களால் "பிறந்தான்," "முடிந்தான்," என்கிற வ்யப தேசத்துக்கு அர்ஹமாகா நின்றதிறே; அப்படியிருப்பதொரு கர்ம மில்லாமையாலே ஒருநாளும் பேதிக்கக்கடவதன்றிக்கே என்றுமொ க்க ஏகரூபமான ஸ்வரூபத்தை யுடையவனை.

இப்படி யிருக்கையாலே, காலத்ரயத்திலு முள்ளவனை. இறந்த வென்கிறவிது-பூதகாலத்தை; எதிர்-பவிஷ்யமானகாலத்தை; கழிவு-வர்த்தமாநகாலத்தை; காலத்ரயத்திலு முளனானவனை. ஜந்மஜராதிகளை யுடையவனன்றிக்கே, என்றுமொக்க ஏகரூபமான ஸ்வரூபத்தை யுடையனாய்க்கொண்டு காலத்ரயத்திலு முளனானவனை. (ஏழிசை யின் சுவைதன்னை) ஸப்தஸ்வரங்களிலுமுண்டான ரஸவஸ்துதானொ ரு வடிவுகொண்டாப்போலே நிரதிசய போக்யபூதனா யிருநதுள்ள வனை. (பேதியா வின்பவெள்ளம்) என்றவிடம் ஸ்வரூபத்தினுடைய போக்யதை சொல்லிற்று; இங்கு, குணயோகத்தால்வந்த போக்யதை சொல்லுகிறது.

(சிறப்பித்யாதி) சிறப்பால், மிகுதியைசசொல்லுகிறது. ஆக, ப்ராஹ்மண்யத்தால் வந்த ஆதிக்யத்தையுடைய ப்ராஹ்மணருடைய திருநாங்கூரில் நன்றான நடுவுள். (செம்பொன்செய் கோயிலினுள் ளே) பரமபதத்திலே போயன்றிக்கே. (மறைப்பெரும்பொருளை) மறைக்குப் பொருளாயிருபபார்களிறே ஜீவாத்மாக்களும, ப்ரஹ்மாதி களும்; அவர்களைப்போலன்றிக்கே, ஸ்வேதர ஸமஸ்தவஸ்துக்களும் தனக்குப்ரகாரமாய்த் தான் ப்ரகாரியாயிருக்கையாலே வேதத்துக்கு ப்ரதாந தயா வாசயபூதனாயுள்ளவனை. (உ)"வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:- வேதைஶ்சஸர்வை ரஹமேவவேத்ய:" (௩) "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி-ஸர்வேவேதா யத்பத மாமநந்தி." (வானவர்கோனை) இப்படியிரு

(க) தை-ஆந-கு. (உ) கீதை. (௩) கடோப-உ-கரு.

க்கிறவன் றான் *அயர்வறுமமரர்களதிபதியாய்த்து; இனி வேதந்தானும், (௧) "తద్విప్రాసో విపన్యవో జాగృవాంస స్సమింధతే - தத்விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே" என்றிறே ஓதுவது; இப்படியிருக்கிறவனை, வேதைகஸமதிகம்யனைக் கேட்கையன்றிககே கண்ணாலே காணப்பெற்று. (வாழ்ந்தொழிந்தேன்) இனி வாழுகைக்கு ஒரு தேசவிசேஷம் தேடிப் பொதிசோறு கட்டி அறுகாதபபயணம போகவேண்டாதே க்ருதார்த்தனைப் பெற்றேனென்கிறார். ... (உ)

அ௩—இரண்டாம்பாட்டு. (பிறப்பித்யாதி) கீழ்ப்பாட்டில் திவ்ய மங்கள விக்ரஹத்தை யநுபவித்தார், இதில், அதுக்குள்ளீடான திவ்யாத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை யநுபவித்து ஹ்ருஷ்டராகிறாரென்று ஸங்கதி.

மூப்பில்லை என்ன வமையாதோ, "ஒன்றில்லை" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறா (பிறப்பது மூப்பதாகாநிறக வித்யாதி). "பேதியா" என்கைக்கு, பேதிக்கிற வின்பத்தையுடைய தொரு வஸ்துவுண்டோவென்ன வருளிசசெய்கிறா (ஜீவாதமாவினுடைய வித்யாதி).

வேதப்ரதிபாத்யன் வானவர்கோனேவென்ன வருளிச்செய்கிறார், (இனி வேதந்தானு மித்யாதி) ... ... ... ... ... (உ)

மூ.—திடவிசும்பெரி நீர் திங்களும் சுடருமம
செழு நிலத்துயிர்களும மற்றும
படர் பொருள்களுமாய் நின்றவன்றன்னைப்
பங்கயத்தயனவனனைய
திடமொழி மறையோர் நாங்கை நன்னடுவுள்
செமபொன்செய்கோயிலினுள்ளே
கடல்நிறவண்ணன் றன்னை நானடியேன்
கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௩)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திடம் | த்ருடமான | நிலத்து | பூமியிலுள்ள |
| விசும்பு | ஆகாசமும் | உயிர்களும் | ப்ராணிகளும் |
| எரி | அக்நியும் | மற்றும் | இன்னுமுள்ள |
| நீர் | ஜலமும் | படர் | விஸ்த்ருதமான |
| திங்களும் | சந்த்ரனும் | பொருள்களும் | பதார்த்தங்களும் (ஆகிய இவற்றுக்கு) |
| சுடரும் | ஸூர்யனும் | ஆய் | அந்தராத்மாவாய்க் கொண்டு |
| செழு | வளம் மிக்க | | |

(௧) புருஷஸூ.

| | | | |
|---|---|---|---|
| நின்றவன்தன் | இருக்குமவனாய் | திடம் | அதிசாஸ்யமான |
| ஊை | | மொழி | உக்தியையுடையனை |
| கடல் | ஸமுத்ரத்தினுடைய | அயன் அனைய | ப்ரஹ்மாவோடொத்த |
| நிறம் | வர்ணத்தோடொத்த | மறையோர் | ப்ராஹ்மணோத்தமர் வஸிக்கிற |
| வண்ணன் | மேனியையுடையனு | நாங்கைநல் நடுவுள் செம்பொன் செய் கோயிலினுள்ளே, | |
| தன்னை | னவனை, | | |
| பங்கயத்து | திரு நாபிகமலத்தில் பிறந்தவனாய் [னாய் | அடியேன் | தாஸபூதனான |
| | | நான் | நான் |
| அவன் | அப்படி ப்ரஸித்த | கண்டுகொண்டுய்ந் தொழிந்தேன். | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (திடவிசும்பு) †லோகாயதிகன், முதலிலே "ஆகாசமென்றொரு தத்வமில்லை" என்றான், அவனுடைய மதத்தை நிரஸிக்கைக்காக வைதிகப்ரக்ரியையின்படியே (க) "ஆகாசாத்வாயு:" என்கிற க்ரமத்திலே அல்லாதவையெல்லாமுண்டாவதுக்கு முன்னே யுண்டாவதுமாய், அவையழிந்தாலும் சில நாள் நின்றழியுமதுவுமாயிருக்கையாலும்,(திடவிசும்பு) என்கிறாராகவுமாம். †அன்றிக்கே, பதார்த்தங்களுக்கெல்லாம் ஓரோஸ்வபாவம் நியதமாயிருக்கையாலே வ்யவஸ்திதஸ்வபாவமான பூதபஞ்சகத்தைச்சொல்லுதல். †இம்மூன்றும் அநுக்குமுபலக்ஷணமாய், இதுதன்னில் ஒன்றில் சொன்னஸ்வபாவம் மற்றைநாலிலு மேறக்கடவதாயிருக்குமாய்த்து. (திங்களும்சுடரும்)கார்யவர்க்கத்துக்கெல்லா முபலக்ஷணம். கார்யகோடியில் சந்த்ரஸூர்யர்களும், பூமியில்மநுஷ்யர்களும், மற்றும் அநுக்தமான தேவ திர்யக் ஸ்தாவரங்களுமாய்க்கொண்டு விஸ்த்ருதனாய் நின்றவனை. (உ) †"தத்ஸ்ருஷ்ட்வா" இத்யாதியிற்படியே இவற்றையடையவுண்டாக்கி, இவற்றினுள்ளே தானநுப்ரவேசித்து, அத்தாலே இவையெல்லாம் தானென்னலாம்படி நிற்கிறவனை. (௩) "தத்வமஸி - தத்வமஸி" (௪) "அயமாத்மா ப்ரஹ்ம - அயமாத்மாப்ரஹ்ம" (௫) "ப்ரஹ்மதாஸா: - ப்ரஹ்மதாஸா:" என்றும் சொல்லுகிறபடியே.

(பங்கயமித்யாதி) திருநாபிகமலத்தைப் பிறப்பிடமாகவுடைய ப்ரஹ்மாவைபபோலே, பழுதுபோகாதவார்த்தையை யுடையராயிருப்பார்கள். †தானென்றைச்சொன்னால் தன்னாலுமது பேதிக்கப்போ

---

(க) தை-ஆ௩-க. (உ) தை-ஆ௩-௬. (௩) சாந்தோ-௬-அ-எ.
(௪) ப்ரு-உப-௬-௪-௫. (௫)

காதே வேறே யதுக்கொரு போக்கடி தேடவேணுமிறே. நீசொன்னது பழுதுபோகாமையாலே நாங்கள் †மிறுக்குப்படாநின்றோமிறே என்றார்கள் தேவர்கள். (கடலித்யாதி) காணவே தாபத்ரயமாறும்படி ஸ்ரமஹரமான வடிவையுடையவனைக் கண்டநுபவித்து நான் உஜ்ஜீவிக்கப் பெற்றேனென்கிறார். ... ... ... ... (௩)

---

அ௩.—(திடமித்யாதி) கீழ்ப்பாட்டில் அநுஸந்தித்த திவ்யாத்ம ஸ்வரூபத்தினுடைய ஸர்வவ்யாபக சீலதையை யநுஸந்தித்து இனியராகிறாரென்று ஸங்கதி.

எரி, நீர், இவற்றுக்கு விசேஷணமிடாமல், *விசும்பொன்றுக்கும் "திடம்" என்று விசேஷிப்பானென் னென்ன வருளிச்செய்கிறார் (லோகாயதிக னித்யாதி) இப்போது பரமதநிரஸநத்துக்கு ப்ரஸக்தியில்லாமையாலே, இப்பதம் எல்லாவற்றுக்கும் விசேஷணமென்று யோஜநாந்தரமருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி) "திடம்" என்றது, வ்யவஸ்த்தித ஸ்வபாவமா யிருக்கையைச் சொல்லுமென்கை. மற்றை யிரண்டுக்கும் இது விசேஷணமாகைக்குப் பதங்களில்லையே யென்ன வருளிச்செய்கிறார் (இம்மூன்று மித்யாதி). நின்றவனை என்ன வமைந்திருக்க, "தன்னை" என்றத்தால் தோற்றின காரணத்வ நிபந்தநமான அதிசயத்தையுபபாதிக்கிறார் (தத்ஸ்ருஷ்டவேத்யாதி). தாசா: - சம்படவர்களும், ப்ரஹ்ம-ப்ரஹ்மமென்றபடி.

இவ்வூரில் ப்ராஹ்மணர்க்குப் போலியாகச் சொல்லுகைக்கு ப்ரஹ்மாதான் திடமொழியோ வென்ன வருளிச்செய்கிறார் (தானொன்றை யித்யாதி). ஒன்றைச் சொல்லுகை - ராவணாதிகளுக்கு வரம் கொடுக்கை. (மிறுக்குப்பட) என்றது, ராவணாதிகளாலே பீடைபட வென்றபடி. இத்தால். ப்ரஹ்மாவைப்போலே அங்குள்ள ப்ராஹ்மணர் வரப்ரதாந ஸமர்த்தமான வசந தார்ட்யமுடையராயிருப்பரென்றதாய்த்து. ... (௩)

 மூ.—வசையறுகுறளாய் மாவலிவேள்வியில்
மண்ணளவிட்டவன்றன்னை
அசைவறு மமரரடியிணை வணங்க
வலைகடல் துயின்ற வம்மானை,ந
திசைமுகனனையோர் நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
உயர்மணிமகுடம்சூடி நின்றானைக்
கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வசை | தோஷம் | கடல் | திருப்பாற்கடலில் |
| அறு | அற்ற | துயின்ற | கண்வளர்ந்தருளின |
| குறளாய் | வாமநனாய்க்கொண்டு | அம்மானை | உபகாரகனாய் |
| மாவலி | மஹாபலியினுடைய | உயர் | ஶ்லாக்யமான [த |
| வேள்வியில் | யாகத்தில் | மணி | மாணிக்கங்க ளிழைத் |
| மண் | பூமியை | மகுடம் | திருவபிஷேகத்தை |
| அளவிட்டவ | அளந்தவனாய் | சூடி | அணிந்து [வனை, |
| ன் தன்னை | | நின்றானை | எழுந்தருளி யிருக்கிற |
| அசைவு | சாஞ்சல்யம் | திசைமுகன் | சதுர்முகனோடு |
| அறும் | அற்றிருக்கிற | அனையோர் | ஒத்தப்ரபாவமுடைய |
| அமரர் | நித்யஸூரிகள் | | ரான ப்ராஹ்மண |
| அடி இணை | ஸ்ரீபாதத்வந்த்வத்தில் | | ருடைய |
| வணங்க | ஆஶ்ரயித்து அடிமை | நாங்கைநல் நடுவுள்செம்பொன்செய் | |
| | செய்யும்படியாக | கோயிலினுள்ளே | |
| அலை | அலை யெறிகிற | கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன். | |

வ்யா.—நாலாம்பாட்டு. (வசையறுகுறளாய்) வாமநவேஷத்தைப்பரிக்ரஹிக்கிறவிடத்தில்† ஒருகுறை சொல்லவொண்ணாதபடியான குறள்வடிவை யுடையனாய், மஹாபலியுடைய யஜ்ஞவாடத்திலே பூமிப்பரப்படைய வளந்தவன் றன்னை. (அசைவித்யாதி) †ப்ரஹ்மாதிகள் திருப்பாற்கடலிலே சென்று கூப்பிட்டால், இக்கரையிலேநின்று கூப்பிடுகையொழிய உள்ளுப்புக்கு ஒருபரிசர்யைபண்ணவொண்ணாதபடியிருக்கையாலே, அஸ்ப்ருஷ்டதோஷகந்த(ஜ்ஞ)ரான நித்யஸூரிகள் வந்தடிமைசெய்யும்படி அலையெறியாநின்றுள்ள திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனை. அசைவறுகையாவது - ஒருநாளுத்க்ருஷ்டராகா ஒருநாளாகத் தாழ்ச்சிசெய்யுமதன்றிக்கேயிருக்கை.

(திசைமுகனித்யாதி) தனித்தனியே ஸ்ருஷ்டிக்ஷமராயிருக்கிற ப்ராஹ்மணர்வர்த்திக்கிற. (உயர்) பசுக்களையுமிடையரையும் நோக்குகைக்காகக் கோவிந்தாபிஷேகம் பண்ணி நின்றாப்போலே, ஸம்ஸாரிகளுடைய ரக்ஷணத்துக்காக முடி சூடிநிற்கிறவனை. ... ... (௪)

அரு.—நாலாம்பாட்டு. (வசையித்யாதி) கீழ்ப்பாட்டில் அந்தர்யாமித்வத்தை யநுஸந்தித்தவர், இப்பாட்டில் விபவத்தையும் அதுக் கடியான வ்யூஹத்தையு மநுஸந்தித்து உகக்கிறாரென்று ஸங்கதி.

"வரை" என்றதினார்த்தம் (ஒருகுறை) என்றது; வாமநவ(டு)வாய் நடந்தவிடத்தில் அதுக்கு விரோதியான ஸ்ரீய:பதித்வாதி லிங்கங்களால்

ஈஶ்வரத்வ சங்கைபண்ண வொண்ணுதபடியாயிருக்கை என்று கருத்து. அசைவு - சாஞ்சல்யமாய், அதுதானும் சேஷத்வம் போகையாய், அதில்லாதாரென்று விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறுர் (ப்ரஹ்மாதிக ளித்யாதி). ... ... ... ... ... ... (௪)

மூ - தீமனத்தரக்கர்திறலழித்தவனேயென்று
சென்றடைந்தவர்தமக்குத்
தாய்மனத்திரங்கி யருளினைக் கொடுக்கும்
தயரதன்மதலையைச்சயமே
தேமலர்பபொழில்சூழ் ராங்கை நன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
காமனைப்பயந்தான்றன்னைநானடியேன்
கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தீ | துஷ்டமான | தயரதன | தசரதனுடைய |
| மனத்து | மநஸ்ஸையுடைய | மதலையை | புத்ரனுனவனுய் |
| அரக்கர் | ராக்ஷஸர்களுடைய | காமனை | மந்மதனை |
| திறல் | பலத்தை | பயந்தான் தன்னை | பெற்றவனு னாவே மவனை, |
| அழித்தவனே | நாசம் செய்தவனே! | சயம் | ஸமூஹமாகச் சூழ்ந்திருப்பதாய் |
| என்று | என்றுசொல்லிக்கொண்டு | தே | தேன் நிறைந்த |
| சென்று | கிட்டி | மலர் | புஷபங்களை யுடைத்தான |
| அடைந்தவர் தமக்கு | அநந்ய கதிகளாய் ஆமரயித்தவர்கள் விஷயத்தில் | பொழில | சோலைகளாலே |
| தாய்மனத்து | மாதாவினுடைய மநஸ்ஸுபோலே | சூழ் | சூழப்பட்ட |
| இரங்கி | கரைந்து | நாங்கைநல்நடுவுள் செம்பொன்செய் கோயிலினுளளே, | |
| அருளினை | க்ருபையை | அடியேன் நான் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன். (௫) | |
| கொடுக்கும் | செய்யாநின்ற | | |

வ்யா.—அருசாம்பாட்டு. (தீமனத்தியாதி) தண்ணியநெஞ்சையுடைய ராக்ஷஸருடைய. †ஜநநி என்று வாசிவைத்து ப்ரதிபத்திபண்ணமாட்டாத பொல்லாத செருநசையுடைய ராக்ஷஸர்மிடுக்கைப்போக்கினவனே! என்று. (சென்றடைந்தவர்தமக்கு) "அப்படியே எங்கள் ப்ரதிபந்தகத்தைப் போக்கி ரக்ஷிக்கவேணும்" என்று கிட்டினவர்களுக்கு, தாயினுடைய நெஞ்சின்படியே இரங்கி, †"புறம்பொரு புகலின்

றிக்கே நம்பக்கலிலேவந்து கிட்டினவர்களிறே!" என்று ப்ரஸாதத்தைப் பண்ணியருளும் சக்ரவர்த்தித்திருமகனே.

(சயமே) ஸ்வயமென்றபடியாய், அவன் தானேவந்து வர்த்திக்கிறவென்னுதல்; அன்றிக்கே, ஜயஶப்தமாய், சொன்னசொன்னவிஜயங்களெல்லாம் பொறுக்கும்படி யிருக்கிற திருநாங்கூரென்னுதல்; (சயமேதேமலர்ப்பொழில்)†ஸமூஹமானதேமலர்ப்பொழிலையுடையவென்னுதல். (காமனைபயந்தான்றன்னை) நாட்டிலழகுக்குத்தன்னை மதிக்கும்படி திரிவான்காமனிறே; அவனுக்குங்கூட உத்பாதகனானவனை, சேஷபூதனான நான்கண்டுகொண்டு. ... ... (௫)

அரு.—அஞ்சாம்பாட்டு. (நீமனததித்யாதி) கீழ்ப்பாட்டில் விபவத்திலே நெஞ்சு செல்லுகையாலே, விபவந்தான் பலபடி யிருக்கையாலே அவற்றில் ராமக்ருஷ்ணாவதாரங்களைப் பேசி யநுபவித்துக் களிக்கிறாரென்று ஸங்கதி.

கீழ்ச்சொன்ன நெஞ்சின்தன்மையை விவரிக்கிறா (ஜநநியித்யாதி). அடைந்தவர்க்கு என்னாதே, "தமக்கு" என்கையாலே ஆஸிஞ்சந்யாநந்யகதித்வங்களாகிற தானான தன்மை தோற்றுகையாலே, அத்தை யுட்கொண்டருளிச்செய்கிறார் (புறம்பித்யாதி).

"சயம்" என்றது-ச (ஸ) யசப்தமாக மூன்றும்யோஜனை யருளிச்செய்கிறார்*(ஸமூஹமான வித்யாதி) ... ... ... ... (௬)

மூ.—மல்லை மா முந்நீ ரதர்பட மலையா
லணைசெய்து மகிழ்ந்தவன்றன்னை
கல்லின்மீதியன்றகடி மதி ளிலங்கை
கலங்க வோர்வாளி தொட்டானைச்
செல்வநான்மறையோர் நாங்கை நன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
அல்லிமாமலராள்தன்னொடுமடியேன்
கண்டுகொண்டல்லல் தீர்ந்தேனே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மல்லை | ஸம்ருத்தமான | மகிழ்ந்தவன் | த ஸந்தோஷித்தவனாய் |
| மா | ஸம்பத்தையுடைய | ன்னை | [லையின்மேலே |
| முந்நீர் | ஸமுத்ரமானது | கல்லின்மீது | த்ரிகூடமென்கிற ம |
| அதர்பட | வழிபடும்படியாக | இயன்ற | கட்டப்பட்ட |
| மலையால் | பாவதங்களினால் | கடி | ரக்ஷையான |
| அணைசெய்து | அணைகட்டி | மதிள் | ப்ராகாரத்தையுடைய |

| | | | |
|---|---|---|---|
| இலங்கை | லங்கையானது | நாங்கைநல்நடுவுள் செம்பொன்செய் கோயிலினுள்ளே, | |
| கலங்க | வ்யாகுலமாகும்படி | அல்லி | இதழ்களையுடைய |
| ஓர் | அத்விதீயமான | மா | மலாக்யமான |
| வாளி | பாணத்தை [னை, | மலராள் தன்னொடும் | கமலப்பூவில் வாஸம் செய்கிற பெரியபிராட்டியோடு கூட |
| தொட்டானை | ஸ்பர்சித்து விட்டவ | | அடியேன் கண்டுகொண்டு |
| செல்வம் | ஸம்பத்தையுடைய | அல்லல் | துக்கமானது |
| நால்மறையோர் | நாலுவேதங்களையுமோதின ப்ராஹ்மணருடைய | தீர்ந்தேன் | தீரப்பெறறேன். (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (மல்லையித்யாதி) நிரவதிகமான ஸம்பத்தையுடைத்தாய்ப் பரந்திருந்துள்ள, முந்நீருண்டு-கடல், அதுவழிபடும்படியாக, †ரத்நாதிகளால் குறைவற்றிருக்குமிறே. நீரிலேயாழக்கடவமலையாலே மல்லைமாமுந்நீர தர்படவணைசெய்து, †லீலாரஸமநுபவித்து ஹ்ருஷ்டனானவனை. த்ரிகூடசிகரததிலேயிறே லங்கை; அதுக்குமேலே, அரணாகப்போரும்படி மதிளையுடைத்தான லங்கை †ஒருவர் கூறை எழுவருடுக்கும்படி, கைக்கெட்டிற்றோம்பை விட்டவனை.

நிரவதிகமான ஸம்பத்தையுடைய ப்ராஹ்மணருடைய. (அல்லியித்யாதி) அவர்களைஸ்வர்யத்துககு நிதாநபூதையான பெரியபிராட்டியாரோடேகூடக் காணப்பெற்று, ஸாமஸாரிக ஸகல துரிதங்களும் தீரப்பெற்றேன்.... ... ... ... ... ... (௬)

அரு —ஆறும்பாட்டு. (மல்லையித்யாதி) தீமனததரக்கர்திற லழித்தப்ரகாரந் தன்னை யநுஸந்தித்து மகிழ்கிறுரென்று ஸங்கதி

கடலுக்கு ஸம்பத்தென்னென்ன வருளிச்செய்கிறுர் (ரத்நாதிகளாலித்யாதி). "தன்னை" என்றத்தால் பலிதம் (லீலாரஸ மநுபவித்து) என்றது. "கலங்க" என்றதினர்த்தம் (ஒருவா கூறையித்யாதி). ... (௬)

மூ.—வெஞ்சினக்களிறும் வில்லொடுமல்லும்
வெகுண்டிறுத்தடர்த்தவன் றன்னைக்
கஞ்சனைக்காய்ந்த காளையம்மானைக்
கருமுகில் திருநிறததவனைச்
செஞ்சொல் நான்மறையோர் நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
அஞ்சனக்குன்றம் நின்ற தொப்பானைக்
கண்டுகொண்டல்லல்தீர்ந்தேனே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெம் | க்ரூரமான | கரு | நீலவர்ணமான |
| சினம் | கோபத்தையுடைய | முகில் | மேகம் போன்ற |
| களிறு | குவலயாபீடத்தை | திருநிறத்தவனை | ஸ்லாக்யமான மேனியை யுடையனாய் |
| வெகுண்டும் | கோபித்தும் | அஞ்சனக்குன்றம் | மைமலை யானது |
| வில் | தநுஸ்ஸை | நின்றது ஒப்பானை | நின்றாற்போல் ப்ரகாசியாநின்றவனை, |
| இறுத்தும் | முறித்தும் | செம் சொல் | அழகிய (யதார்த்தமான) சொல்லையுடையரான |
| மல்லும் | மல்லாகளையும் | | |
| அடர்த்தவன் தன்னை | நெருக்கினவனுமாய் | | |
| கஞ்சனை | கம்ஸனை | | |
| காய்ந்த | கோபித்து நிரஸித்த | | |
| காளை | யுவாவான | | |
| அம்மானை | ஸ்வாமியாய் | | |

நால்மறையோர் நாங்கைநல் நடுவுள் செம்பொன்செய் கோயிலினுள்ளே கண்டுகொண் டல்லல்தீர்ந்தேன்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (வெம்சினமித்யாதி) வெவ்விய சினத்தை யுடைத்தாயிருக்கிற குவலயாபீடத்தையும், அதுக்கவ்வருகே யிட்டு வைத்த வில்லையும், அதுக்குள்ளாக நிறுத்தின மல்லவர்க்கத்தையும்; குவலயாபீடத்தைச் சீறி; வில்லை முறித்து, மல்லை யடர்த்தவன்றன்னை; அதுக்குள்ளே நின்ற கம்ஸனை நிரஸித்த காளை. பருவம்நிரம்பாத வளவிலேயாய்த்து ஈஸ்வரன் செய்ததைச்செய்தது. கம்ஸனை நிரஸித்து, "ஆஸ்ரிதவிரோதி போகப்பெற்றோம்" என்று ஸ்ரமஹரமான வடிவோடே நின்றவனை.

(செஞ்சொலித்யாதி) செவ்வியசொல்லையுடையராய்த்து அவ்வூரில் ப்ராஹ்மணரிருப்பது. கண்டபடியே சொல்லக்கடவராய், பூதஹிதமே சொல்லக்கடவரான ப்ராஹ்மணர். (அஞ்சநம்) கண்டார்கண் குளிரும்படி ஓரஞ்ஜநகிரி நின்றாப்போலே நிற்கிறவனை. ... (எ)

---

அரு — ஏழாம்பாட்டு. (வெஞ்சினமித்யாதி) "காமனைப்பயந்தான்" என்று ப்ரஸ்துதமாய், அக்க்ருஷ்ணாவதாரத்தில பதாநபரம்பரைகளிலே இருவுள்ளம் மூண்டு, மேல் மூன்றுபாட்டிலும் அநுஸந்தித்து ஹ்ருஷ்டராகிறாரென்று ஸங்கதி.

"அம்மானை" என்றதுக்குத் தாத்பர்யம் (பருவமித்யாதி) ... (எ)

மூ.—அன்றியவாணனாயிரந்தோளும்
துணியவன்றாழி தொட்டானை
மின்திகழ்குடுமி வேங்கடமலைமேல்
மேவிய வேத நல் விளக்கைத்

தென்திசைத் திலதமனையவர் நாங்கைச்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
மன்றது பொலிய மகிழ்ந்து நின்றானை
வணங்கி நான் வாழ்ந்தொழிந்தேனே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்றிய | கோபித்த (கலஹித்த) | விளக்கை | தீபம்போலேஸ்வயம் ப்ரகாசனாய் [யில் |
| வாணன் | பாணாஸுரனுடைய | மன்று | (பாகவத) கோஷ்டி |
| ஆயிரம் தோளும் | ஆயிரம் தோள்களும் | அது | அந்த கோஷ்டியானது [க |
| துணிய | அறுந்துவிழும்படி | பொலிய | ஸம்ருத்த மாம்படியா |
| அன்று | அக்காலத்திலே | மகிழ்ந்து | ஸந்தோஷித்து |
| ஆழி | ஸுதர்சநத்தை | நின்றானை | எழுந்தருளி யிருக்குமவனை, |
| தொட்டானை | ஸ்பர்சித்து ப்ரயோகித்தவனாய் | தென்திசை | தென்திக்குக்கு |
| மின் | ஒளி | திலதமனையவர் | திலகம்போலே ப்ரகாசகரான ப்ராஹ்மணோத்தமருடைய |
| திகழ் | விளங்காநின்ற | | |
| குடுமி | சிகரங்களையுடைய | | |
| வேங்கடமலைமேல் | திருவேங்கடமென்னும் திருமலையின் மேல் [கிறவனாய் | நாங்கைச்செம்பொன்செய்கோயிலினுள்ளே, | |
| மேவிய | நித்யவாஸம் பண்ணு | | |
| வேதம் | வேதப்ரதிபாத்யனாய் | வணங்கி | ஆஶ்ரயித்து |
| நல் | விலக்ஷணமான | நான்வாழ்ந்தொழிந்தேன். | (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (அன்றியவித்யாதி) †தன்பேரோடே பகைத்த பாணனுடைய தோள்களாயிரமும் கழியும்படி அன்று திருவாழியை ஸ்பர்சித்தவனை. "இன்னமும் பாணன்போல்வார் விரோதிகள்வந்து முளைக்கில் செய்வதென்?" என்று, மின்விளங்காநின்றுள்ள சிகரத்தையுடைத்தான திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிற வேதைகஸமதிகம்யனாய், ஸ்வயம்ப்ரகாசமான ஸ்வரூபதசை யுடையனாயுள்ளவனை.

தெற்குதிக்குக்குத் திலகமபோலே யிருக்கிறவர்களுடைய. (மன்றதுபொலியமகிழ்ந்துநின்றானை)எல்லாரும் திரளுமிடத்திலே, அவ்விடம் ஸம்ருத்தமாம்படியாகப் பரமபதவிபூதியிற்போலே நிரவதிக ப்ரீதியுக்தனாயுள்ளவனை. ... ... ... .. ... (அ)

அ௫.—எட்டாம்பாட்டு. (அன்றியவித்யாதி) பாலோடு சர்க்கரையைச் சேர்த்துப் பருகுவாரைப்போலே, க்ருஷ்ணவதாராநுபவத்தில் திருவேங்கடமுடையானையும் சேர்த்தநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

"அன்றிய" சீறிய என்ருய், அருளிச்செய்கிறுர் (தன்னித்யாதி). (அ)

மூ.—களங்கனிவண்ணு கண்ணனே என்றன்
கார்முகிலே என நினைந்திட்டு
உளங்கனிந்திருக்குமடியவர் தங்க
ளுள்ளத்துளூறிய தேனைத்
தெளிந்த நான்மறையோர் நாங்கை நன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
வளங்கொள் பேரின்பம் மன்னி நின்ருனை
வணங்கி நான் வாழ்ந்தொழிந்தேனே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| களங்கனி | களாப்பழம்போன்ற | உள்ளத்துள் | ஹ்ருதயத்தில் [கிற |
| வண்ணு | வர்ணத்தையுடையவனே! | ஊறிய | ஊற்றுமாருதே யிருக் |
| கண்ணனே | க்ருஷ்ணனே! [னிற | தேனை | தேன்போலே போக்யபூதனுய் |
| என்றன் | எனக்கு ப்ரகாசியா | வளம்கொள் | அழகையுடைத்தாய் |
| கார்முகிலே | வர்ஷாகால மேகம்போல் ஶ்ரமஹரமான வடிவையுடையவனே! | பேர் இன்பம் | அபரிச்சிந்நமான ஆந ந்தத்தை |
| என | என்று | மன்னி | அடைந்து [ந்தத்தை |
| நினைந்திட்டு | த்யாநித்து | நின்ருனை | எழுந்தருளி யிருக்குமவனை, |
| உளம் | ஹ்ருதயமானது | தெளிந்த | தத்வார்த்த நிஶ்சயமுடையரான |
| கனிந்திருக்கும் | பக்வமாயிருக்கிற | நான்மறையோர் நாங்கை நன்னடுவுள் செம்பொன்செய் கோயிலினுள்ளே | |
| அடியவர் தங்கள் | சேஷபூதருடைய | நான்வணங்கி வாழ்ந்தொழிந்தேன். | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (களங்கனியித்யாதி) சிவந்திருத்தல் வெளுத்திருத்தல் செய்கையன்றிக்கே கண்ணுக்குகுளிர்ந்து களாப்பழம்போலேயிருக்கிற வடிவையுடையவனே!, க்ருஷ்ணனே! ஶ்ரமஹரமான வடிவை எனக்கு முற்றூட்டாக்கினவனே! என்று நினைத்து, ஹ்ருதயமானது பக்வமாயிருக்கும் சேஷபூதருடைய ஹ்ருதயத்திலே யூறின தேன்போலே நிரதிசயபோக்யனானவனை.

(தெளிந்த) ஒருகால் "ஸர்வேஶ்வரன்ரக்ஷகன்" என்றிரா, மற்றொருபோது "வேறொன்று ரக்ஷகம்" என்றிருக்கை யன்றிக்கே, என்று மொக்க "ஸர்வேஶ்வரனே நமக்கு ரக்ஷகன்" என்று தெளிந்திருக்கிற ப்ராஹ்மணர். அழகியதாய் நிரவதிகமான ஆநந்தத்தை யுடையவனாய் நிற்கிறவனை. ... ... ... ... ... (௯)

அநு.—ஒன்பதாம்பாட்டு. (களங்கனியித்யாதி) பாலும் சர்க்கரையு மநுபவித்தவன் அதில் ரஸ்யதாதிசயத்தைக் கொண்டாடுமாபோலே, தமக்கினிதாகையாலே எல்லார்க்கும் ரஸித்தவனென்றுகொண்டு, இப்படி பரமபோக்யத்தைப் பெறுகையாலே க்ருதார்த்தராய் ஆநந்திக்கிறாரென்று ஸங்கதி. ... ... ... ... ... ... ... (௯)

மூ.—தேனமர் சோலை நாங்கை நன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே
வானவர்கோனைக் கண்டமை சொல்லும
மங்கையார் வாள் கலிகன்றி
ஊனமில் பாடலொன்பதோடொன்று
மொழிவின்றிக் கற்று வல்லார்கள்
மான வெண் குடைக்கீழ் வையகமாண்டு
வானவராகுவர் மகிழ்ந்தே. (௧௦)

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தேன் | வண்டுகள் | சொல்லும் | ப்ரதிபாதியா நின்றவராய் |
| அமர் | நிறைந்த [தான | மங்கையார் | திருமங்கையிலுள்ளார்க்கு ரக்ஷகமான |
| சோலை | பொழில்களையுடைய | வாள் | வலிய வாளையுடையரான |
| நாங்கை | திருநாங்கூரில் | கலிகன்றி | ஆழ்வாருடைய |
| நல் | அழகியதான [வுள்ள | ஊனம் இல் | லக்ஷணங்களில்குறை[வற்ற |
| நடுவுள் | மத்யப்ரதேசத்தி | பாடல் | பாசுரமான |
| செம்பொன் செய் கோயி லினுள்ளே | செம்பொன் செய் கோயிலென்கிற திவ்யதேசத்திலே | ஒன்பதோடு ஒன்றும் | (இப்)பத்துப்பாட்டுக்களையும் |
| வானவர் | நித்யஸூரிகளுக்கு | ஒழிவு இன்றி | பதவாக்யங்களொன்றும் தவறாமல் |
| கோனை | ஸ்வாமியான ஸர்வேஶ்வரனை [யை | | |
| கண்டமை | ஸாக்ஷாத்கரித்த படி | | |

| | | | |
|---|---|---|---|
| கற்று வல்லார்கள் | அப்யஸிக்க வல்லவர்கள், | ஆண்டு | பரிபாலநம் பண்ணி (பின்பு) |
| மானம் | பரப்பை யுடைத்தாய் | மகிழ்ந்து | ப்ரீதியுக்தராய் |
| வெண் | வெண்மையான [து | வானவர் ஆகுவர் | நித்ய ஸூரிகளோடொருவராகப் பெறுவர். (௧௦) |
| குடைக்கீழ் | குடையின்கீழேயிருந் | | |
| வையகம் | பூமியை | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (தேனித்யாதி) வண்டுகள் நெருங்கியிருந்துள்ள சோலையையுடைத்தான திருநாங்கூரிலே செம்பொன்செய் கோயிலினுள்ளே †*அயர்வறுமமரர்களதிபதியைக் கண்டமையாய்த்து சொல்லிற்று. திருமங்கையிலுள்ளார்க்கு மிடுக்கான வாளை யுடையரான ஆழ்வார், லக்ஷணங்களில் குறையறச சொன்னபத்தும், †ஒன்றும் ‡வழுவவிடாதே அப்யஸிக்கவல்லவர்கள், †பரப்பையுடைத்தான வெண்கொற்றக் குடைக்கீழே, பூமியையடைய பாகவதசேஷமாக்குகைக்காக நிர்வஹித்து, அநந்தரம நிரவதிக பரீதியுக்தராய், நித்யஸூரிகளோடே ஒரு கோவையாகப்பெறுவர். ... ... ... (௧)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு —பத்தாம்பாட்டு. (தேனமரித்யாதி) முதறபாட்டில் "பேரருளாள னெம்பிரானை" என்று உபக்ரமித்து நிகமத்தில் "வானவாகோனை" என்று உபஸம்ஹரிக்கையாலே, தேவராஜாபிதா(ஃதா)நமுடைய தேவப்பெருமானைத தாம் செம்பொன்செய் கோயிலில் கண்டாராக வருளிச்செய்தாரென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (அயர்வறுமித்யாதி). போ(ஸ்ரீ)கமண்டபத்தை "நலமுடையவன்" என்றும், *அருள் கொடுக்கும்படிக்கேழில்லாப்பெருமானை "அருளினன்" என்றும், கோயில் திருமலைகளி லெம்பெருமானை யநுஸந்தித்த வநந்தரம், பெருமாள்கோயில் தேவராஜனை "அயர்வறு மமராகளதிபதி" என்றருளிச்செய்தாரிறே என்று திருவுள்ளம்; இங்ஙனன்றாகில், "கண்டமையாய்தது சொல்லிறறு" என்னவொண்ணாது, பரமபதநாதனைச் சொல்லிறறென்றால், கண்ணாலேகாணவும் கூடாது, "தொழுது" என்னவும் கூடாதிறே தேசவிப்ரகர்ஷத்தால்; ஆகையால் இங்ஙனே நிர்வஹிக்க வடுக்கும், "உய்ந்தொழிந்தேனே" "வா

---

‡ (பா) விழவிடாதே

ழ்ந்தொழிந்தேனே" "அல்லல் தீர்ந்தேனே" என்கிற ஒன்பதுபாட்டு மொருதட்டும், ப(ல)லஶ்ருதியான விப்பாட்டு ஒருதட்டுமாகத் திருவுள்ளம்பற்றி "ஒன்பதோடொன்றும்" என்கிறுரென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (ஒன்றும் வழுவவிடாதே) என்று இததால இததிருமொழியெல்லாம் ஹர்ஷப்ரகாஷததால சொன்னதாகையாலே எலலாமநுஸந்திக்கத்தக்கதென்றதாய்தது. "மானம்" என்று அளவாய் (பரப்பையுடைத்தான) என்றது. (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம



நாலாம்பத்து மூன்றும்திருமொழி முடிந்தது.







ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நாலாம்பத்து - நாலாம் திருமொழி

### மாற்றரசர் ப்ரவேசம்.



வ்யா.—ஆஶ்ரிதவிரோதி நிரஸநசீலனாய் ஸர்வரக்ஷகனாயிருக்கிற ஸர்வேஶ்வரன் திருத்தெற்றியம்பலத்திலே நம்முடைய விரோதியைப்போக்கி †நம்மையடிமை கொள்ளுகைக்காக வந்து நின்றானென்று ஹ்ருஷ்டராகிறார். ... ... ... ... ... *

அநு.—மாற்றரசர் ப்ரவேசம் (நம்மை யடிமைகொள்ளுகைக்காக வந்து நின்றானென்று ஹ்ருஷ்டராகிறார்) என்றது - "என்செங்கண்மால்" என்று பாட்டுத்தோறும் சொன்னத்தைப்பற்ற. ... ... ... *

மூ.—மாற்றரசர் மணி முடியும் திறலும் தேசும்
மற்றவர்தம் காதலிமார் குழையும் தந்தை
கால் தளையு முடன்கழல வந்து தோன்றிக்
கதநாகம் காத்தளித்த கண்ணர்கண்டீர்
நூற்றிதழ்க்கொளரவிந்தம் நுழைந்த பள்ளத்
திளங்கமுகின் முதுபாளை பகுவாய் நண்டின்
சேற்றளையில் வெண்முத்தம் சிந்து நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பள்ளத்து | பள்ளத்திலே முளைத்த [யுடைய | வெண்முத்தம் | வெளுத்தமுத்துக்களை |
| | | சிந்து | இறையாநின்ற |
| நூறு இதழ் கொள் | அநேகம் இதழ்களை [வை | நாங்கூர் | திருநாங்கூரிலுள்ள |
| அரவிந்தம் | தாமரைப் பூக்களான | திருத்தெற்றியம்பலத்து | திருத்தெற்றியம்பலமென்கிற திவ்யதேசத்திலெழுந்தருளியிருக்கிற |
| நுழைந்த | ப்ரவேசித்த | | |
| பகுவாய் | பெரியவாயையுடைய | | |
| நண்டின் | நண்டினுடைய | என் | எனக்கு ஸ்வாமியாய் |
| சேறு அளையில் | சேற்றை யுடைத்தான வளையிலே | செங்கண் மால் | சிவந்த கண்களையுடையனான ஸர்வேஶ்வரன், |
| இளங்கமுகின் | இளையதான பாக்கு மரங்களுடைய | மாற்று அரசர் | சத்ருக்களான துர்யோதநாதிகளுடைய |
| முதுபாளை | முற்றின பாளையானது | | |

| | | | |
|---|---|---|---|
| ம்ணி | மாணிக்கங்களிழைத் [த | கால் | காலிலேகட்டப்பட்ட |
| முடியும் | கிரீடங்களும் | தளையும் | விலங்கும் |
| திறலும் | ப(ப)லமும் | உடன் | ஒருபொழுதே |
| தேசும் | மதிப்பும் | கழல | கழன்று விழும்படியாக |
| மற்று | அதுக்குமேலே | | |
| அவர்தம் | அந்த துர்யோதநாதிகளுடைய | வந்து | பரமபதத்தில் நின்றும் வந்து |
| காதலிமார் | ஸ்த்ரீகளின் | தோன்றி | அவதரித்தவனுமாய் |
| குழையும் | காதணியோடுகூடின மங்கள ஸூத்ராதிகளும் | கதம் | கோபத்தையுடைய |
| | | நாகம் | கஜேந்த்ராழ்வானை |
| | | காத்து | ரக்ஷித்து |
| தந்தை | (தன்) தகப்பனாரான வஸுதேவருடைய | அளித்த | க்ருபைபண்ணின |
| | | கண்ணர் | தயாவானான க்ருஷ்ணன் |
| | | கண்டீர் | கிடீர். (௧) |

வ்யா.—முதற்பாட்டு. (மாற்றரசரித்யாதி) (௧)†“ദ്വിഷദന്നം ന ഭോക്തവ്യം ദ്വിഷന്തം നൈവ ഭോജയേത் - த்விஷதந்நம் நபோக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத்” என்று பாண்டவர்களுக்கு சத்ருக்களான துர்யோதநாதிகளை “நீங்களெனக்கு சத்ருக்கள்; உங்கள் சோறுமெனக்குண்ணலாகாது, உங்களுக்கு என்னை (பு)புஜிப்பிக்கலுமாகாது” என்றருளிச்செய்தபடியே, தனக்கு மாற்றாரான துர்யோதநாதிகளுடைய, ரத்நங்களாலே சமைக்கப்பட்ட முடியும், மிடுக்கும், திக்விஜயம் பண்ணிப்பெற்ற மதிப்பும். (மற்றவரித்யாதி) (௨) †‡“சந்தமர்குழலாள்”என்னும்படியே - அவர்கள் ஸ்த்ரீகளுடைய மங்களஸூத்ரமும். (தந்தை கால்தளையுமுடன் கழலவந்துதோன்றி) ஸ்ரீவஸுதேவர்காலில்தளையும், இவையெல்லாம் போம்படியாக வந்தவதரித்து. (கதநாகம்) சீற்றத்தையுடைய ஆனையை ரக்ஷித்த கண்ணர்கிடீர். †சீற்றமாவது- முதலையாலேயிடர்பட்டவளவிலேவந்து உதவிற்றிலன் என்று “எனக்கு நான் கடவேனாயிடர்பட்டேனே, ஒருவரில்லாதாரைப்போலே † இடர்படுவதே!” என்று.

†“நாற்றிதழ்க்கொள்”என்று பாட்டைமுடியச்சொல்லி†;†பள்ளத்திலே அநேகமிதழ்களை யுடைத்தாயிருந்துள்ள தாமரையிலே நுழைந்த பகுவாய்நண்டினுடைய சேற்றளையிலே இளங்கமுகினுடைய முதுபாளையானது வெண்முத்தைச் சிந்தாநின்றுள்ள திருநாங்கூர்.

(௧) பார-உத்யோ. (௨) ௯௦-எ-ரு. ‡ (பா) சந்தமல்.

†அன்றிக்கே,(பகுவாய் இளங்கமுகின்முதுபாளை) பக்வமான வாயையுடைத்தாயிருந்துள்ள இளங்கமுகினுடைய முதுபாளை என்று கமுகுக்கு விசேஷணமாய், நண்டினுடைய சேற்றளையிலே என்னவுமாம். †அன்றிக்கே, பள்ளத்திலே யுண்டாயிருந்துள்ள நூற்றிதழ்க் கொளரவிந்தமானது நுழைந்த பகுவாய் நண்டின் சேற்றளையிலே; †தாமரையானது நண்டினுடைய சேற்றளையிலேநுழைந்து அலர்ந்து தன் பரிமளத்தைக்கொடுக்க, இளங்கமுகின் முதுபாளை வெண்முத்தைச் சிந்துகிற திருநாங்கூரென்னவுமாம்... ... ... (க)

அரு.—முதறபாட்டு (மாற்றரசரித்யாதி) (க) "ந மே த்வேஷ்யோஸ்தி – நமே த்வேஷ்யோஸ்தி" என்ற கண்ணனுக்கு மாற்றுருண்டோவென்ன வருளிச்செய்கிறார் (த்விஷந்தமித்யாதி) மற்று-அது ஒழிய வென்று சப்தார்த்தமாய், அவர் தம் காதலிமாருண்டு-அந்த துர்யோதநாதிகளுடைய ஸ்த்ரீகள், குழை-காதுப்பணியும்; அது உபலக்ஷணமாய், மங்கள ஸூத்ரமுமென்று விவக்ஷிதகருளிச்செய்கிறார் (சந்தமலித்யாதி)."சந்தமல் குழலாளலக்கண நூற்றுவர் தம் பெண்டிரு மெய்தி நூலிழப்ப" என்றதில், "நூலிழப்ப" என்றதிலே நோக்கு. முதலையின்மேல் சீற்றமென்றால் காத்தளிக்கைக்கு ஹேதுவாகாமையால், சீற்றத்தை விவரிக்கிறார (சீறறமித்யாதி). (பவதே) என்ற வநந்தரம், உண்டாமது என்று சேஷம்.

அந்வயப்ரகாரத்தை தாசிப்பிக்கிறா (நூறறிதழித்யாதி). (சொல்லி) என்ற வநந்தரம், அந்வயித்துக்கொள்வது என்று சேஷம். தமக்கநுபா(ஸூ)வ்யரான திருததெற்றியம்பலத்தி லெம்பெருமானுக்கு விரோதிநிரஸநசீலதை முதலான குணங்களை அநுஸந்திக்கைக்காக இவற்றை யநுஸந்திக்கையாலே உத்தேஸ்யம் முன்னாக வநுஸந்திக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, பூர்வார்த்தம் பின்பநுஸந்திப்பதென்று மருளிச்செய்ததென்று கொள்வது."பள்ளத்து-நூறறிதழ்க் கொளரவிந்தத்திலே நுழைந்த, பகுவாய்-பெரிய வாயையுடைய, நண்டினுடைய சேறுடையவளையிலே - இளங்கமுகின் முதுபாளை-வெண்முத்தம் சிந்து நாங்கூர்" என்று முதலொரு யோஜநை யருளிச்செய்கிறா (பள்ளததிலே யித்யாதி). இத்தால்-பகவச்சரணாரவிந்தங்களிலே புக்க ஜந்துவின் ஸம்பந்திகளிடத்தில் பஞ்சவிம்சதிவார்ஷிகரான ஸூரிகள் ப்ரஸாதத்தைப் பண்ணுவரென்று ஸ்வாபதேசம் த்வநிக்கும். "பகுவாய்-இளங்கமுகின் முதுபாளை-பள்ளத்து-நூற்றிதழ்க்கொளரவிந்தத்தில் நுழைந்த-நண்டின் சேற்றளையில் வெண்முத்தம் சிந்துநாங்கூர்" என்று யோஜநாந்தர மருளிச்செய்கிறார் (அன்றிக்கே பகுவாயித்யாதி) தவர்யாத்தம்-பூர்வவத். "பள்ளத்து-நூற்றிதழ்க் கொளரவிந்

(க) கீதை-௯-உ௯.

தமரானது தான் நுழைந்த-பகுவாய் நண்டின் சேற்றளையில் - இளங்கமுகின் முதுபாளையானது - வெண்முத்தம் சிந்து நாங்கூர்" என்று மூன்றும் யோஜனையருளிச்செய்கிறார் (அன்றிக்கே பள்ளத்திலே யித்யாதி). இப்போது பகவச்சரணாரவிந்த திவ்யபரிமளம் யாதொரு ஜந்துவிடத்தி லுண்டாகிறது, அங்கு ஸூரிகள் ப்ரஸாதமும் குறைவற வுண்டாமென்று த்வநி. அரவிந்தமளையில் நுழைந்தமை பாளைமுத்துச் சொரிகைக்கு ஹேதுவென்னு மிடத்தைக் காட்டுகிறார் (தாமரையான தித்யாதி). ... ... (௧)

மூ.—பொற்றொடித் தோள் மடமகள் தன் வடிவுகொண்ட
பொல்லாத வன் பேய்ச்சி கொங்கை வாங்கிப்
பெற்றெடுத்த தாய் போல் மடுப்ப வாரும்
பேணா நஞ்சுண்டுகந்த பிள்ளைகண்டீர்
நெற்றொடுத்த மலர் நீலம் நிறைந்த சூழ
லிருஞ்சிறைய வண்டொலியும் நெடுங்கணார்தம
சிற்றடிமேல் சிலம்பொலியும் மிழற்று நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (௨)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெல் | நெல்கதிர்களின் மேலே [கட்டப்பட்ட | ஒலியும் | சப்தமும் [நின்ற |
| தொடுத்த | வரிசை வரிசையாகக் | மிழற்று | அவ்யக்தமாக ஒலியா நாங்கூர்த்திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மால், |
| நீலம் மலர் | கருநெய்தல் புஷ்பங்களாலே | பொன் | ஸ்வர்ணமயமான |
| நிறைந்த | பரிபூர்ணமான | தொடி | முன்கை வளைகளையுடைய |
| சூழல் | பர்யந்த ப்ரதேசங்களிலே | தோள் | புஜங்களையுடையளாய் |
| இரும் | அழகியதான [ன | மடம் | ஆத்மகுண ஸம்பந்நையான |
| சிறைய | சிறகுகளை யுடைத்தான | மகள் தன் | யசோதையினுடைய |
| வண்டு | வண்டுகளினுடைய | வடிவு | ரூபத்தை |
| ஒலியும் | சப்தமும் | கொண்ட | பரிக்ரஹித்துக்கொண்டு வந்தவளாய் |
| நெடும் | தீர்க்கமான | பொல்லாத | துஷ்டையாய் |
| கணார்தம் | கண்களை யுடையரான ஸ்த்ரீகளுடைய | வன் | க்ரூரஹ்ருதயையான |
| சிறு | சிறிதான [த | பேய்ச்சி | பூதனையானவள் |
| அடிமேல் | பாதங்கள் மேலணிந் | கொங்கை | (தன்) ஸ்தனத்தை |
| சிலம்பு | தண்டைச் சிலம்பினுடைய | | |

| | | | |
|---|---|---|---|
| வாங்கி | கச்சையில் நின்றும் வெளியிலே யெடுத்து | ஆரும் பேணு நஞ்சு | ஒருவரும் ஆதரியாத (அந்த ஸ்தநத்திலுண்டான) விஷத்தை |
| பெற்றெடுத்த | பெற்றெடுத்த | | |
| தாய்போல் | மாதாவைப்போலே | உண்டு | அமுதுசெய்து |
| மடுப்ப | (இவன்வாயில்) கொடுக்க, (அப்பொழுது) | உகந்த பிள்ளைகண்டீர் | ஸந்தோஷித்த பாலன் கிடீர். (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பொற்றொடி) பொன்னாலேபண்ணப்பட்ட முன்கையில் வளையையுடைய தோளையுடையளாய், ஆத்மகுணபேதையாயிருந்துள்ள யசோதைப்பிராட்டி "பிள்ளைமகள்ல வாடும்"என்று மாறுதேயொப்பித்த வொப்பனையை யநுகரித்த.(வடிவு கொண்ட பொல்லாதவன்பேய்ச்சி)†எவ்வடிவை எவ்வடிவுடையவளநுகரிக்கிறாள்!. †பொல்லாதவன்பேய்ச்சி-தான்; அவள் - பொற்றொடித் தோள்மடமகள். (கொங்கைவாங்கிப் பெற்றெடுத்ததாய்போல்மடுப்ப) தன்முலையைப்பிடித்துப்பெற்றெடுத்த தாய்போல் கொடுக்க. (ஆரும் பேணுநஞ்சுண்டுகந்தபிள்ளைகண்டீர்) ஒருத்தரும் விரும்பாத நஞ்சை யுண்டு அறிவு குடிபுகுராமையாலே யுகந்தபிள்ளைகண்டீர். அறிவு டையாடில் செய்யுமதன்றிறே.

(நெற்றொடுத்த)நெல்லின்மேலே தொடுத்த பூக்களையுடைத்தான குவளையானது†நிறைந்த சூழலிலே,அழகிய சிறகையுடைத்தான வண்டினுடைய ஒலியும், விலக்ஷணமான கண்ணையுடையரான ஸ்த்ரீகளுடைய சிற்றடிமேல் சிலம்பொலியும். (மிழற்றுநாங்கூர்) இரண்டும், எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாத திரம்பா மென்சொற்களாகையாலே, சிலம்பொலிக்கும் வண்டினுடைய ஒலிக்கும் வாசி தெரிக்கப்போகிறதில்லை. ... ... ... ... ... (௨)

---

அ௫ —இரண்டாம்பாட்டு. (பொற்றொடியித்யாதி) பூபா (ரா) நிரஸநார்த்தமாக வஸுதேவர் காலில் விலங்கு கழல வந்தவதரித்தபடியை யருளிச்செய்து, இனி வளர்ந்தவிடத்தில் செய்த வபதாநங்களில் ப்ரதமம்செய்த பூதநாநிரஸநத்தின் படியை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

மடமகள் வடிவுகொண்ட என்ன வமைந்திருக்க, "தன்" என்றதாலே-அவளுக்கஸாதாரணமான வேஷங்கொள்ளுகை எங்ஙனே என்று ஆழ்வார்க்கு ஈடுபாட்டிலே திருவுள்ளமென்று அத்தைக் காட்டுகிறா (எவ்

வடிவை யித்யாதி). கீழ்வாக்ய விவரணம் (பொல்லாத வித்யாதி). (நிறைந்த சூழலிலே) என்றது-புஷ்பங்கள் நிறைந்த பர்யந்தங்களிலே என்றபடி. ... ... ... ... ... ... ... ... (௨)

மூ.—படலடைத்த சிறு குரம்பை நுழைந்து புக்குப்
பசு வெண்ணெய் பதமாரப் பண்ணை முற்றும்
அடலடர்த்த வேற்கண்ணார் தோக்கை பற்றி
யலந்தலைமை செய்துழலு மையன்கண்டீர்
மடலெடுத்த நெடுந்தெங்கின் பழங்கள் வீழ
மாங்கனிகள் திரட்டுருட்டா வரு நீர்ப் பொன்னி
‡ திடலெடுத்து மலர் சுமந்தங்கிழியுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மடல் எடுத்த | பாளைகளாலே மிகுந்ததாய் | நாங்கூர்த் திருத்தெற்றி யம்பலத்தென் செங்கண்மால், | |
| நெடு | உயர்ந்திருந்துள்ள | பசுவெண்ணெய் | அப்போது கடைந்து வைத்த வெண்ணெயை |
| தெங்கின் | தென்னை மரங்களில் நின்றும் | பதம் | பக்வமாக (பக்வமழிவதற்கு முன்னே) |
| பழங்கள் | பழங்களானவை | ஆர | அமுதுசெய்கைக்காக |
| வீழ | (தன்மேல்) விழ (அதிலே உதிர்ந்த) | படல்அடைத்த | தட்டி யடைத்துவைத்த |
| மாங்கனிகள் | மாம்பழங்களை | சிறு | சிறிதான |
| திரட்டு | கும்பலாகச் சேர்த்து | குரம்பை | குடிசைகளில் |
| உருட்டா | உருட்டிக்கொண்டு | நுழைந்து | ப்ரவேசித்து |
| வரு | வாராநின்ற | புக்கு | உள்ளெங்கும் ஆராய்ந்துகொண்டு புகுந்து |
| நீர் | ஜலத்தையுடைய | அடல்அடர்த்த | யுத்தோந்முகமான |
| பொன்னி | காவேரியானது | வேல் | வேல்போலே தீக்ஷ்ணமான |
| திடல் | மேடுகளை | | |
| எடுத்து | எடுத்துவிட்டு | | |
| அங்கு | முன் மேடாயிருந்த அந்த ப்ரதேசங்களிலே | | |
| மலர் | புஷ்பங்களை [வந்து | | |
| சுமந்து | வஹித்துக்கொண்டு | | |
| இழியும் | இழியாநின்ற | | |

‡ (பா) திடரெடுத்து.

| | | | |
|---|---|---|---|
| கணார் | கண்களையுடையரான இடைச்சிகளுடைய | செய்து | பண்ணி |
| | | பண்ணைமுறும் | இடைச்சேரியெங்கும் |
| நோக்கை | முன்றனையை | உழலும் | திரியாநின்ற |
| பற்றி | பிடித்து (இழுத்து) | ஐயன்கண்டீர் | ஸ்வாமி கிடீர் (௫) |
| அலந்தலைமை | அலமாப்பை | | |

வ்யா.—மூன்றும்பாட்டு. (படலித்யாதி) இடைச்சிகள் சிறு குடில்களின் வாசலில் படலைத்திருக்கிவைத்துப்போனால், படலைத் திறந்து நுழைந்துபுக்கு. இவனுக்கு நுழைந்து புகுகையாகைபிறே குடிலினுடைய †பெருமை. (பசுவெண்ணெய்பதமார) அன்று கடைந்தவெண்ணெய் செவ்வியழியாமலமுது செய்கைக்காக. ‡(பண்ணை-இடைச்சேரி) (அடலடர்த்த) யுத்தோந்முகமான வேல்போன்ற கண்ணையுடையவர்கள். ஓராளுமொருநோக்கும் நேரான கண்ணை யுடையவர்களுடைய. (பண்ணைமுற்றும்) திரள்களடங்கலும். (நோக்கை பற்றி) அவர்கள் கண்ணாலே †யொடியெறிவர்கள். முன்றனையைப்பற்றி. (அலந்தலைமை)† ஒருராக ஒருவர்கூறை யெழுவருடுக்கப பண்ணுமவன்கிடீர்.

(மடலெடுத்த) ஓங்கினமடல்களை யுடைத்தான நெடியதெங்கினுடைய பழம் மாவிலேவிழ, மாமபழங்களெல்லாமுதிர, அவற்றை வாரித் திரளவிட்டு உருட்டிக்கொண்டுவருகிற நீரையுடைத்தான பொன்னியானது† திடர்களையெடுத்துப் பொகட்டுப பூக்களைப் பாப்பாநின்றுள்ள திருநாங்கூர். ... ... ... ... ... (௬)

அரு.—மூன்றும்பாட்டு (படலித்யாதி) கீழ்ப்பாட்டில் நஞ்சுண்டபடியை யருளிசசெய்த வநந்தரம், அவ்வூரில் வெண்ணெயுண்டபடியை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி

(பெருமை) என்றது-வ்யதிரேகலக்ஷணயா சிறுமையைச் சொல்லுகிறது (ஒடியெறிவர்கள்) போகவொட்டாமல் தகைவர்கள். "அலந்தலைமை" அலமாப்பாய், தாதபர்ய மருளிச்செய்கிறா (ஒருராக வித்யாதி). (திடாகளை) மேடுகளை. ... ... ... .. ... (௬)

மூ.—வாராரும் முலை மடவாள் பின்னைக்காகி
வளைமருபபில் கடுஞசினத்து வன்றாளார்ந்த
காரார்திண் விடையடர்த்து வதுவையாண்ட
கருமுகில்போல் திருநிறத்தென் கண்ணர்கண்டீர்

‡ குணடவிதம் க்வாசித்கம்.

ஏராரும்மலர்ப்பொழில்கள் தழுவி யெங்கு
மெழில்மதியைக் கால் தொடர விளங்குசோதிச்
சீராருமணிமாடம் திகழு நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| ஏர் ஆரும் | பூர்ணமான அழகை யுடைய [தான |
| மலர் | புஷ்பங்களை யுடைத் |
| பொழில்கள் | சோலைகளிலே [லும் |
| எங்கும் | எல்லா ப்ரதேசங்களி |
| தழுவி | அணைந்துவந்து |
| எழில் | அழகை (பரிமளத்தை) யுடைத்தான |
| கால் | காற்றானது |
| மதியை | சந்த்ரனை |
| தொடர | போகவொட்டாமல் கால்கட்ட |
| விளங்கு | (அதினால்) விளங்காநின்ற |
| சோதி | தேஜஸ்ஸை யுடைத்தாய் [மாய் |
| சீர் ஆரும் | ஸம்பத்தினால் பூர்ண |
| மணிமாடம் | ரத்நங்களாலிழைத்த மாடங்களாலே |
| திகழும் | விளங்காநின்றதான |
| நாங்கூர்த் திருத்தெற்றி யம்பலத்தென் செங்கண்மால், | [ட்ட |
| வார் ஆரும் | கச்சாலே தாங்கப்ப |
| முலை | ஸ்தநங்களை யுடைய ளாய் [ளான |
| மடவாள் | மடப்பத்தை யுடைய |

| பதம். | உரை. |
|---|---|
| பின்னைக்காகி | நப்பின்னைப்பிராட்டிக்காக |
| வளை | வளைந்த |
| மருப்பில் | கொம்புகளை யுடையதாய் |
| கடும் | க்ரூரமான |
| சினத்து | கோபத்தை யுடையதாய் |
| வன் | பலிஷ்டமான |
| தாள் ஆர்ந்த | கால்களையுடையதாய் |
| கார் ஆர் | (யௌவநத்தினால்) கறுத்திருந்துள்ள |
| திண் | த்ருடமான |
| விடை | ருஷபங்களை |
| அடர்த்து | நெருக்கி நெரித்து |
| வதுவை ஆண்ட | விவாஹ மங்களத்தை நிர்வஹித்தவனாய் |
| கருமுகில் போல் | காளமேகம்போலே |
| திருநிறத்து | அழகிய ஸௌந்தர்யத்தை யுடையனாய் |
| என் | அவ்வடிவைக் காட்டி என்னை அடிமை கொண்ட |
| கண்ணர் கண்டீர் | க்ருஷ்ணன்கிடீர். (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (வாராரும்) ப்ராப்தயௌவநையாகையாலே வாராலே தாங்கப்பட்ட முலையையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக, வளைந்த கொம்புகளை யுடைத்தாய் கடிய சினத்தை யுடைத்தாய் வலிய தாள்களையுடைத்தாய் கறுப்பு ஆர்ந்து திண்ணிதான ருஷ

பங்களையடர்த்து விவாஹமங்களத்தை நிர்வஹித்த கருமுகில்போல் திருநிறத்தென்கண்ணர்.

(ஏரார்) அழகார்ந்திருந்துள்ள பூக்களையுடைத்தான பொழிலெங்கும் தழுவி பரிமளத்தை யெறட்டிக்கொண்டு காற்று சந்த்ரனைக்†காற்கட்ட, விளங்காநின்றுள்ள ஜ்யோதிஸ்ஸை யுடைத்தாய் ஸம்பத்து ஆர்ந்து மாணிக்கங்களாலே யலங்கரிக்கப்பட்ட மாடங்கள் திகழுகிற திருநாங்கூர். ... ... ... ... ... ... (௪)

---

அரு.—காலாம்பாட்டு (வாரித்யாதி) கீழ்ப்பாட்டிலே * வேறுகளுரான இடைப்பெண்களெல்லா மொருதட்டும் நப்பின்னை யொருதட்டு மாகையாலே, அவளுக்காக இவன் தன்னைப் பேணுதே விடைகொண்டபடியை யநுஸந்திக்கிருரென்று ஸங்கதி.

(காற்கட்ட) என்றது-பரிமளத்தில் நச்சிப் போக மாட்டாமல் கிடக்கும்படி பண்ணவென்றபடி. ... ... ... ... (௪)

மூ.—கலையிலங்குமகலல்குல் கமலப்பாவை
கதிர்முத்த வெண்ணகையாள் கருங்கணாய்ச்சி
முலையிலங்குமொளி மணிப்பூண் வடமுமதேய்ப்ப
மூவாத வரை நெடுந்தோள் மூர்த்திகண்டீர்
மலையிலங்கு நிரைச் சந்தி மாடவீதி
யாடவரை மடமொழியார் முகத்திரண்டு
சிலையிலங்கி மனம் சிறை கொண்டிருக்கு நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (௫)

| பதம். | உரை. | பதம் | உரை |
|---|---|---|---|
| மலை இலங்கு | மலைகள்போலே விளங்காநின்றதாய் | இரண்டு சிலை | இரண்டு விற்கள்போன்ற புருவங்களானவை |
| நிரை | வரிசை வரிசையாக | விலங்கி | வளைந்து |
| சந்தி | ஒன்றோடொன்று ஸம்பந்தித்திருக்கிற | ஆடவரை | நாயகர்களுடைய |
| மாடம் | க்ருஹங்களை யுடைத்தான | மனம் சிறை கொண்டு இருக்கும் | மனஸ்ஸைக் காவலிலே வைத்திருக்கிற |
| வீதி | வீதிகளிலே | | |
| மடம் | அவ்யக்த மதுரமான | நாங்கூர்த்திருத்தெற்றி யம்பலத்தென் செங்கண்மால், | |
| மொழியார் | சொறகளையுடைய ஸ்த்ரீகளுடைய | கலை | மேகலையினால் |
| முகத்து | முகத்திலே விளங்காநின்ற | இலங்கும் | விளங்காநின்றதாய் |
| | | அகல் | விசாலமான |

| | | | |
|---|---|---|---|
| அல்குல் | நிதம்பப்ரதேசத்தை யுடையளாய் | ஒளிமணி | காந்தியையுடைய மாணிக்கங்களாலே செய்யப்பட்ட |
| கதிர் | கிரணங்களையுடைய | | |
| முத்த | முத்துப்போலே | பூண் | கண்டாபரணமும் |
| வெண் | வெளுத்த [யளான | வடமும் | முத்துமாலையும் |
| நகையாள் | தந்தபங்க்திகளையுடை | தேய்ப்ப | (மார்பிலே) உரசாநிற்க (அதிலே) |
| கமலப்பாவை | பெரியபிராட்டியி னுடையவும் [ய | மூவாத | முறுத - (செவ்வி [ழியாத) |
| கருங்கண் | கறுத்தகண்களையுடை | | |
| ஆய்ச்சி | நப்பின்னைப்பிராட்டியி னுடையவும் | வரை | மலைபோன்ற |
| | | நெடும் | தீர்க்கமான |
| | | தோள் | புஜங்களையுடைய |
| முலை | ஸ்தநங்களிலே | மூர்த்தி கண்டீர் | ஸ்வாமிகிடீர். (௫) |
| இலங்கும் | விளங்காநிற்பதாய் | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கலையிலங்கும்) கலைகளிலங்காநின்றுள்ள அகன்ற நிதம்பப்ரதேசத்தை யுடையளாய், ஒளியை யுடைய முத்துப்போலே வெளுத்த தந்தபங்க்தியையுடைய பெரியபிராட்டியார். (கருங்கணாய்ச்சி) அவன் திருமேனியைப் பார்த்தபடியே யிருக்கையாலே திருமேனியில் கறுப்பு கண்ணிலே யூறின நப்பின்னைப்பிராட்டி. (முலையிலங்கும்) இருவருடைய முலைகளிலும் விளங்காநின்றுள்ள வொளியை யுடைத்தான மாணிக்கங்களாலே சமைக்கப்பட்ட ஹாரமானதுவும் த்ரிஸரம் பஞ்சஸரமான முத்துவடமும் உரச, அத்தாலே †மூவாதேயிருக்கிற மலைபோன்ற நெடுந்தோள்மூர்த்தி கண்டீர்.

மலைபோலே யிலங்காநின்ற, நிரையாய் ஒன்றோடொன்று சந்தித்துச் செறிந்திருந்துள்ள மாடங்களை யுடைத்தாயிருந்துள்ள வீதியிலே, மடமொழியார் முகத்திலேநின்ற சிலைகள், ஆடவரை-காந்தரை, விலங்கி, மநஸ்ஸைச் சிறையிட்டுவைக்கிற திருநாங்கூர். சந்தி என்று-ஸாயம்ஸமயத்துக்குப் பேராய், ஸாயம்ஸமயத்திலே காந்தருடைய மநஸ்ஸைச் சிறையிட்டுவைக்கிற திருநாங்கூரென்னவுமாம். சிலைவிலங்கி என்றது - புருவம் வளைகை. ... ... (௫)

---

அரு —அஞ்சாம்பாட்டு. (கலையிலங்கித்யாதி) கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதையான நப்பின்னைப்பிராட்டி இடைக்குலத்துக்கடுத்த தேவியாகையாலே அவன் ப்ரஸ்துதையானவாறே, யதுகுலத்துக்கடுத்த தேவியான ருக்மிணிப் பிராட்டியைத் திருமணப்புணர்ந்ததும் திருவுள்ளத்திலோடி, இருவரோடும் ஸம்ஶ்லேஷித்தபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(க) ‘‘[Grantha] நீளாகுலேந ஸத்ருசீ தவ ருக்மிணீச’’ என்னக்கடவதிறே

‘‘நகை’’ என்றது - தந்தபங்க்தியை லக்ஷிக்கிறது. (மூவாதே) மூத்திப்போகாதே, இளைப்பதிக்கிற வென்றபடி. ... ... ... (௫)

மூ.—தான்போலுமென்றெழுந்தான் தரணியாள
    னதுகண்டு தரித்திருப்பானரக்கர்தங்கள்
கோன்போலுமென்றெழுந்தான் குன்றமன்ன
    விருபதுதோளுடன் துணித்த வொருவன்கண்டீர்
மான்போலுமென்னோக்கிற் செய்ய வாயார்
    மரதகம்போல் மடக்கிளியைக் கைமேற்கொண்டு
தேன்போலுமென்மழலை பயிற்று நாங்கூர்த்
    திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (௬)

| பதம். | உரை. |
|---|---|
| மான்போலும் | மானோடொத்த |
| மெல் | ம்ருதுவான |
| நோக்கில் | பார்வையையும் |
| செய்ய | சிவந்த |
| வாயார் | அதரத்தையு முடைய [ஸ்த்ரீகள் |
| மரதகம்போல் | மரகதமணிபோன்ற பசுமையை யுடைத்தாய் |
| மடம் | மௌக்த்யத்தை யு[டையதான |
| கிளியை | கிளியை |
| கைமேல்கொண்டு | தங்கள் கைகள்மேலே வைத்துக்கொண்டு |
| தேன்போலும் | தேனோடொத்து |
| மெல் | இனிதாய் |
| மழலை | ம்ருதுவானபேச்சை |
| பயிற்றும் | கற்பியாநின்ற |
| நாங்கூர்த்திருத்தெற்றியம்பலத் தென்செங்கண்மால், | |
| தரணியாளன் | பூபதியான சக்ரவர்த்தித் திருமகன் |
| தான்போலும் | க்ஷத்ரியனைப்போலே |
| என்று | கிளர்ந்து |

| பதம். | உரை. |
|---|---|
| எழுந்தான் | எதிரிட்டுவந்தான |
| என்று | என்றிப்படி எளிதாக எண்ணி |
| அதுகண்டு | அந்த எளிமையைக் கண்டு |
| தரித்திருப்பான் | நிர்ப்பயனா யிருப்பானாய் |
| அரக்கர்தங்கள் | ராக்ஷஸர்களுடையவர் |
| கோன்போலும் | ராஜாவைப்போலே (தன்னை மதித்து) |
| என்று | கிளர்ந்து |
| எழுந்தான் | எதிரிட்டுவந்த ராவணனுடைய |
| குன்றமன்ன | மலைகள்போலே யிருக்கிற |
| இருபதுதோள் | இருபதுபுஜங்களையும் |
| உடன் | ஏககாலத்திலே |
| துணித்த | அறுத்துப்பொகட்ட |
| ஒருவன்கண்டீர் | அத்விதீயன்கிடீர் (௬) |

(க) ஸ்ரீ ந த ர - ஸ்த - க௦ எ.

சொல்லுப்பயிற்று மென்னாதே "மென்மழலை பயிற்றும்" என்கையா
ல் - இவர்கள் வார்த்தையும் அவ்யக்தமதுரம் என்றத்தால் பலித்தவர்த்
தத்தை யருளிச்செய்கிறார் (ஒருகிளியையித்யாதி). "மென்மழலை" என்
றத்தால் அவ்யக்தமதுரம் தோற்றுமே, "தேன்போலும்" என்று விசே
ஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (கற்றவித்யாதி). (௬)

மூ.—பொங்கிலங்கு புரிநூலும் தோலும் தாழப்
பொல்லாத குறளுருவாய்ப் பொருந்தா வாணன்
மங்கலம்சேர் மறை வேள்வியதனுட்புக்கு
மண்ணகலம் குறையிரந்த மைந்தன்கண்டீர்
கொங்கலர்ந்த மலர்க்குழலார் கொங்கை தோய்ந்த
குங்குமத்தின் குழம்பளைந்த கோலந்தன்னால்
செங்கலங்கல் வெண்மணல்மேல் தவழு நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொங்கு | பரிமளமானது | நாங்கூர்த்திருதெற்றி யம்பலத்தென் செங்கண்மால், | |
| அலர்ந்த | பரவாநின்ற | பொங்கு | அபிவ்ருத்தமான காந்தியை யுடையதா [ய் |
| மலர் | பூக்களைமுடித்த | இலங்கு | விளங்காநின்ற |
| குழலார் | கேசங்களை யுடையரான பெணகளுடைய | புரி | புரிகளை யுடைய |
| கொங்கை | ஸ்தநங்கள்மேல் | நூலும் | யஜ்ஞோபவீதமும் |
| தோய்ந்த | படிந்திருக்கிற | தோலும் | க்ருஷ்ணாஜிநமும் |
| குங்குமத்தின் | குங்குமத்தினுடைய | தாழ | தொங்காநிற்க |
| குழம்பு | சேறோடு | பொல்லாத | ஸுந்தரமான |
| அலைந்த | கலந்திருக்கிற | குறள் உருவாய் | வாமந வேஷத்தையுடையனாய், |
| கோலந்தன்னால் | அழகாலே | பொருந்தா | தன்னோடொவ்வாத ஜந்மத்தை யுடையனான |
| செம் | சிவந்திருக்கிற | வாணன் | மஹாபலியினுடைய |
| கலங்கல் | காலுஷ்யத்தை யுடைத்தான ப்ரவாஹமானது | மங்கலம் | மங்களங்கள் [ய் |
| வெண் | வெளுத்த [மேலே | சேர் | பொருந்தி யிருப்பதா |
| மணல்மேல் | மணற் குன்றுகள் | மறை | வேதகோஷத்தை யுடையதான |
| தவழும் | மெள்ளமெள்ளப் பாயாநின்ற | வேள்வியதனுள் | யாகத்தில் |

| | | | |
|---|---|---|---|
| புக்கு | ப்ரவேசித்து [ருந்த | இரந்த | யாசித்த |
| குறை | தனக்குக் குறையாயி | மைந்தன் க ண்டீர் | பாலன்கிடீர் (எ) |
| மண் அகலம் பூமியை | | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (பொங்கிலங்கு) மிக்கிலங்காநின்ற- ஒளி விடாநின்ற திருயஜ்ஞோபவீதமும், க்ருஷ்ணாஜிநமும் தாழ. (பொல் லாதகுறளுருவாய்) "அழகிது" என்னில் நாட்டார் கண்ணெச்சில்படு வர் என்று, விபரீதலக்ஷணையாலே சொல்லிற்றாகவுமாம்; †அன்றிக்கே, வைரூப்யத்தாலே வைத்தகண் வாங்கப்போகாதபடி யிருக்குமென்ன வுமாம். (பொருந்தாவாணன்) (க) "ஆஸுரம் பாவமாஶ்ரிதா:- ஆஸுரம் பாவமாஶ்ரிதா:" என்று ஹ்ருதயம் தண்ணிதாகை யன்றிக்கே ஜந்ம மே தண்ணிதானவாணன். (மங்கலம்சேர்) ஸர்வேஶ்வரன் செல்லும் படியான யாகமிறே; மங்களங்கள் சேரத்தட்டில்லையிறே. (மண்ண கலம்) மஹாபலி உடையவனாய் தான் குறைவாளனாயிரந்த. (மைந் தன்கண்டீர்) †என்ன பிள்ளாத்தான்.

(கொங்கலர்ந்தவித்யாதி) பரிமளம் மாறாதேயிருநதுள்ள மலரை யுடைத்தான குழலையுடைய ஸ்த்ரீகளுடைய கொங்கைதோய்ந்த குங் குமத்தினுடைய குழம்பையளைந்த கோலந்தன்னாலே, செங்கலங்கல் வெண்மணலிலே தவழுநாங்கூர்; நாரை †ஸ்க்கலித்து நடந்தாப்போ லே (க) "ஸாப்ரஸ்கலந்தீ - ஸாப்ரஸ்க்கலந்தீ" என்னும்படியே.. (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (பொங்கிதயாதி) கீழ்ப்பாட்டில்-பிராட்டிக்காக ராவணனைக் கைகழியவிட்டானென்றார்; அப்படிப்பட்ட பிராட்டியையும் க்ருஷ்ணாஜிநத்தில் மறைததுக்கொண்டு இந்த்ரனுக்காகக் கையேறுன், அதிமாத்ர ப்ரதிகூலரை யழியச்செய்யவும் அநுகூலாபாஸரை உபாயத் தாலே வெல்லவும் வல்லனென்று வாமநாவதாரத்தை யநுஸந்திக்கிறு ரென்று ஸங்கதி.

குறளாயிருக்கிற வைரூப்யந்தானே ஆகர்ஷகமாகையாலே - நிந்தா ஸ்துதியென்று அர்த்தாந்தரமருளிச் செய்கிறார் (அன்றிக்கேயித்யாதி). "மைந்தன்" என்றத்தை விவரிக்கிறார் (என்னபிள்ளாத்தான்) என்று. (பிள்ளா) பிள்ளைத்தனம்.

*மாங்கனிகள் திரட்டுருட்டாவருநீர்ப்பொன்னியிலே அவ்வூரில் ஸ்த்ரீ ஜநங்கள் நீராட, அக்குங்குமத்தை யளைந்தத்தாலே சிவந்த கலங்கலான

(க) கீதை எ-கரு. (க) ரா-கி-கூ-கூ-கூஅ

வெள்ளமானது மெள்ளவருகைக்கு த்ருஷ்டாந்த மருளிச்செய்கிறார் (நா ரையித்யாதி). ... ... ... ... ... ... ... (எ)

மூ.—சிலம்பினிடைச்சிறுபரல்போல்பெரியமேரு
திருக்குளம்பில் கணகணப்பத்திருவாகாரம்
குலுங்க நிலமடந்தைதனை யிடந்து புல்கிக்
கோட்டிடை வைத்தருளிய வென்கோமான்கண்டீர்
இலங்கிய நான்மறையனைத்துமங்கமாறு
மேழிசையுமகேள்விகளுமெண்டிக்கெங்கும்
சிலம்பிய நற்பெருஞ்செல்வம் திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (அ)

| பதம் | உரை |
|---|---|
| இலங்கிய | விளங்காநின்ற |
| நான்மறை யனைத்தும் | நாலுவகைப்பட்ட ஸமஸ்த வேதங்களும் |
| அங்கம் ஆறும் | ஆறங்கங்களும் |
| ஏழிசையும் | ஸப்தஸ்வரங்களும் |
| கேள்விகளும் | இதிஹாஸாதிகளும் (ஆகிய இவை) |
| எண்டிக்கு | எட்டுத்திக்குகளில் |
| எங்கும் | எல்லா ப்ரதேசங்களிலும் |
| சிலம்பிய | சப்தியாநிற்பதாய் |
| நல் | விலக்ஷணமாய் |
| பெரும் | அபரிச்சிந்நமான |
| செல்வம் | ஸம்பத்து |
| திகழும் | விளங்காநின்ற |
| நாங்கூர்த்திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மால், | |
| சிலம்பினிடை | தண்டைச் சிலம்பினுடைய நடுவிலிட்ட |
| சிறுபரல்போல் | சிறிய பருக்கைபோல் |

| பதம் | உரை |
|---|---|
| பெரிய மேரு | மிகவும் உயர்ந்து பெருத்திருக்கிற மேருமலையானது |
| திருக்குளம்பில் | அழகிய குளம்பிலே |
| கணகணப்ப | கணகணவென்று சப்திக்கும்படியாகவும் |
| திரு | (மார்பிலெழுந்தருளியிருக்கும்) பிராட்டியினுடைய |
| ஆகாரம் | ஸந்நிவேசமானது |
| குலுங்க | அசையும்படியாகவும் |
| இடந்து | (பூமியை) குத்தியெடுத்து |
| நிலமடந்தைதனை | பூமிப்பிராட்டியை |
| புல்கி | தழுவிக்கொண்டு |
| கோட்டிடை | தந்தத்தின்மேல் |
| வைத்தருளிய | எழுந்தருளுவித்துக்கொண்ட |
| என் கோமான் | என்னுடைய ஸ்வாமி |
| கண்டீர் | கிடீர். (அ) |

வ்யா—எட்டாமபாட்டு. (சிலம்பினிடையித்யாதி) சிலம்பினிடையிட்ட சிறுபரல்போல் பெரிய மஹாமேருவானது திருக்குளம்

யிலே (க) "மேரௌ ஸ்ருங்கௌ ஸ்ரிதௌ - மேருஸிகைரகணையப்தே" என்னும்படியே கணகணப்ப. (திருவாகாரம்குலுங்க) (உ) *"அகலகில்லேனிறையும்" என்று பிராட்டியிருக்குமிருப்புக் குலுங்கும்படிக்கீடாக. (நிலமடந்தை) பூமியையிடந்து அதுக்கபிமாநிநியான ஸ்ரீபூமிப்பிராட்டியைப்புல்கி, கோட்டிடையிலே நீலமணியழுத்தினாப்போலே வைத்த செயலாலே †யென்னையடிமைகொண்டவன்கிடீர்.

(இலங்கியவித்யாதி) ப்ராமாண்ய ப(ப)லத்தாலே யொளிவிடாநின்றுள்ள வேதங்களாலும், ஆறங்கமும், ஸப்தஸ்வரங்களும், இதிஹாஸபுராணங்களும், எட்டுத்திக்குக்களும். (சிலம்பிய நற்பெருஞ்செல்வம் திகழுநாங்கூர் †(சப்திக்கக்கடவதாய் நன்றாய்ப்பெரியசெல்வம். .. ... ... ... ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (சிலம்பித்யாதி) கீழ்ப்பாட்டுக்களிலே-நீளைக்காகச் செய்த செயலையும் பெரிய பிராட்டியாருக்காகச் செய்த செயலையும் சொல்லி, அவற்றோடொக்க இந்த்ரன் கார்யத்தைச் செய்தமையை ப்ராஸங்கிகமாகச் சொன்னார், ஸ்ரீ பூமிநீளைகளில் மத்யஸ்த்தையான பூமிப்பிராட்டி யிடையாட்டத்தில் செய்த சேஷ்டிதத்தையு மநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி. அன்றிக்கே, மண்ணளந்த செயல்தானே மண்ணிடந்த செயலுக்கு ஸ்மாரகமாய் அத்தை யநுஸந்திக்கிறாரென்னவுமாம்.

"என்கோமான்" என்றதின் கருத்தை யருளிச்செய்கிறார் (என்னையடிமைகொண்டவ'ன்) என்று.

"சிலம்பிய" என்றதினர்த்தம், (சப்திக்க) என்றது. (அ)

மூ.—எழுலகும் தாள்வரையுமெங்குமூடி
யெண்டிசையுமண்டலமுமண்டியண்டம்
போழ்ந்தெழுந்தாழிமிகுமூழிவெள்ளம்
முன்னகட்டிலொடுக்கிய வெம்மூர்த்திகண்டீர்
ஊழிதொறு மூழிதொறு முயர்ந்தசெல்வத்
தோங்கிய நான்மறையனைத்தும் தாங்குநாவர்
சேழுயர்ந்த மணிமாடம் திகழு நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஊழிதொறூழிதொறும் | காலங்கள் செல்லும்தோறும் | உயர்ந்த செல்வத்து | அபிவ்ருத்த(த்)மான ஸம்பத்தை யுடையதாய் |

(க) (உ) தி-வாய்-சு-௧௦-௧௦.

| | | | |
|---|---|---|---|
| ஓங்கிய | கிளர்த்தியை யுடைத்தான | ஊடி | எறிப்பாய்ந்து [லும் |
| நால்மறை யனைத்தும் | நாலுவகைப்பட்ட ஸமஸ்த வேதங்களை | எண்திசையும் | எட்டுத்திக்குக்களி |
| தாங்கும் | தரியாநின்ற [யும் | மண்டலமும் | எல்லா ப்ரதேசங்களிலும் |
| நாவர் | நாவையுடைய ப்ராஹ்மணரை யுடையதாய் [கிற | அண்டம் | ப்ரஹ்மாண்டத்திலும் |
| | | மண்டி | அதிசயித்து |
| | | மோழை எழுந்து | மோழைகிளம்பி |
| சேழுயர்ந்த | மிகவும் உயர்ந்திருக் | ஆழி | ஸமுத்ரமானது |
| மணி | மணிமயமான | மிகும் | பொங்கிவாராநின்ற |
| மாடம் | க்ருஹங்களாலே | ஊழிவெள்ளம் | ப்ரளய காலத்தில் வெள்ளத்தை |
| திகழும் | விளங்காநின்ற | முன் | முற்காலத்தில் |
| நாங்கூர்த்திருத்தெற்றி யம்பலத்தென் செங்கண்மால், [லும் | | அகட்டில் | திரு வுதரத்தில் |
| ஏழுலகும் | ஸப்தத்வீபங்களி | ஒடுக்கிய | அடக்கின |
| தாள் | பர்யந்த பர்வதங்களை யுடைய | எம்மூர்த்தி கண்டீர் | எங்கள் ஸ்வாமிகிடீர். (கூ) |
| வரையும் | மலைகளிலும் [லும் | | |
| எங்கும் | எல்லா ப்ரதேசங்களி | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (ஏழுலகம்)ஸப்தத்வீபங்களும் †தாள்களையுடைத்தான மலைகளும் எங்குமேறி, எட்டுத்திக்குக்களும் மண்டலமும் அண்டமும் †மிக்கு மோழையெழுந்து, ஆழியானது மிக்கிருக்கிள்ள ஊழிவெள்ளத்தைப்பண்டு திருமேனியி லேகதேசத்திலே யடக்கின ஸர்வேச்வரன்கிடீர்.

(ஊழிதொறுமித்யாதி) காலம் செல்லச்செல்லக் குறைந்து காட்டாதே (க) "ஸௌம்யாத்யாப - கலௌக்ருதயுகம்தஸ்ய" என்னும்படியே உயர்ந்தசெல்வத்தை யுடையராய், ஓங்கியிருந்துள்ள நான்மறையை நாவாலே தாங்கவல்ல ப்ராஹ்மணரை யுடைத்தாய், ஆகாசத்திலேதட்ட உயர்ந்த மணிமாடங்களை யுடைத்தான திருநாங்கூர். (கூ)

அரு.—ஒன்பதாம் பாட்டு. (ஏழுலகு மித்யாதி) கீழ்ச்சொன்ன அபதாநங்களெல்லா மொருதட்டும், ஊரவிரிஞ்சி முக ப்ரபஞ்சமெல்லாம் கீழ் வயிற்றிலே வைத்த அபதாநமொருதட்டுமாய்படி அத்புதமாகையாலே, அத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(க)

(தாள்களையுடைத்தான) என்றது - (க) "ப்ரத்யந்த பர்வதா: - பாதா:ப்ரத்யந்த பர்வதா:" என்கிறபடியே பர்யந்த பர்வதங்களையுடைத்தான வென்றபடி. "மண்டி" என்றதினர்த்தம், (மிக்கு) என்றது .. (௬)

மூ — சீரணிந்த மணிமாடம் திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலைக்
கூரணிந்த வேல் வலவனாலிநாடன்
கொடியாட மங்கையர்கோன் குறையலாளி
பாரணிந்த தொல் புகழான் கலியன் சொன்ன
பாமாலையிவை யைந்துமைந்தும் வல்லார்
சீரணிந்த வுலகத்து மன்னராகிச்
சேண்விசும்பில் வானவராய்த் திகழ்வர்தாமே. (௧௦)

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சீர் | ஸம்பத்தானது | கொடி | த்வஜங்களையுடைய |
| அணிந்த | அடைந்திருக்கிற | மாடம் | க்ருஹங்கள்நிறைந்த |
| மணி | மணிமயமான | மங்கையர் | திருமங்கையிலுள்ளா |
| மாடம் | க்ருஹங்கள் | கோன் | ராஜாவாய் [க்கு |
| திகழும் | விளங்காநின்ற | குறையல் | திருக்குறையலூரை |
| நாங்கூர் | திருநாங்கூரிலுள்ள | ஆளி | பரிபாலநம் பண்ணு மவராய் |
| திருத்தெற்றியம்பலத்து | திருதெற்றியம்பலமென்கிற திவ்யதேசத்திலெழுந்தருளியிருக்கிற | பார் அணிந்த | பூமியெங்கும் வ்யாப்தமான |
| | | தொல் | ஸ்வாபாவிகமான [ன |
| என் | எனக்கு ஸ்வாமியான | புகழான் | கீர்த்தியை யுடையரா |
| செம்கண் | சிவந்த திருக்கண்களையுடைய | கலியன் | ஆழ்வார் |
| | | சொன்ன | அருளிச்செய்த |
| மாலை. | ஸர்வேஶ்வரன் விஷயமாக, | பாமாலை | பாசுரங்களுடைய ஸந்தர்ப்பரூபமான |
| கூர் அணிந்த | கூர்மையையுடைய | இவை ஐந்துமைந்தும் | இப்பத்துப் பாட்டையும் [கள் |
| வேல் | வேலாயுதத்தை | வல்லார் | அப்யஸிக்க வல்லவர் |
| வலவன் | ஆளுமவராய் | சீர் அணிந்த | ஸம்பத்தை யுடையதான |
| ஆலிநாடன் | திருவாலிநாட்டுக்கு நிர்வாஹகராய் | | |

(க) அமரகோசம்-உ-௬.

| | |
|---|---|
| உலகத்து | இந்த லோகத்தில் |
| மன்னர் ஆகி | ராஜாக்களாயிருந்து (அநந்தரம்) |
| சேண்விசும்பில் | பரமபதத்தில் |
| வானவராய் | நித்யஸூரிகளோடு ஒரு கோஷ்டியில் அந்வயமுடையவர்களாய் |
| திகழ்வர் | விளங்கப் பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (சீரணிந்த) ஐச்வர்யமணிந்த மணிமயமான மாடத்தையுடைய திருநாங்கூர்த் திருத்தெற்றியம்பலத்திலே நிற்கிற †புண்டரீகாக்ஷனை ஸர்வேச்வரனை. (கூரணிந்த) †வேலில் கூர்மைபோலேயிருக்கும் கவிபாட்டில் கூர்மை என்கை. திருவாலிக்கு நிர்வாஹகரானவர், கொடிகளையுடைத்தான மாடங்களையுடைய திருமங்கைக்கு ராஜாவானவர், குறையலாளி. (பாரணிந்த) ‡இட்டளத்தில் வெள்ளம்போலே பூமியெல்லாம் நெருங்கின புகழையுடைய ஆழ்வாரருளிச்செய்த† பாமாலை யிவையைந்துமைந்தும் வல்லார். (சீரணிந்தவித்யாதி) ஐஹிகத்தி லைச்வர்யமும் குறைவற புஜித்து, பரமபதத்திலே நித்யஸூரிகளோடொரு கோவையாய் விளங்குவர். (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு—பத்தாம்பாட்டு. (சீரணிந்தவித்யாதி) அணிந்த-அடைந்த (புண்டரீகம்) ரக்தாப்ஜம் வேலின்கூர்மை சொன்னதுக்குக் கருத்து (வேலினித்யாதி). "குறையலாளி" என்றது-திருக்குறையலூரை யாளுமவரென்றபடி. க்ருஷ்ணவதாரா பதாநங்களுக்கு ப்ரதிபாதகங்களைந்தும், அது கலசாத வைந்துமாக வொரு சேரத்தி திருவுள்ளமென்னு மிடந்தோன்ற மூலஸ்த்தபதங்களையே யருளிச்செய்கிறார் (பாமாலை யித்யாதி) .. (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.



நீலாம்பத்து நாலாம்திருமொழி முடிந்தது.



‡ இட்டளம்-நெருங்கினவிடம்.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நாலாம்பத்து - அஞ்சாந் திருமொழி

### தூம்புடை ப்ரவேசம்.



வ்யா.—†ஸர்வநிர்வாஹகனாய், †ஸர்வாபேக்ஷிதப்ரதனாய், ஆஶ்ரித †விரோதி நிரஸநசீலனாய், விரோதியைப் போக்குமிடத்தில் தானே வந்தவதரித்துப் போக்குமவன் திருமணிக்கூடத்தில் நின்றானென்று, க்ருதஜ்ஞராகையாலே இவையெல்லாம் தமக்குச்செய்கைக்கு வந்திருக்கிறானென்று ஹ்ருஷ்டராகிறார்... ... ... ... *

---

அரு.—தூம்புடையின் ப்ரவேசம் -“குன்றமும்” “சங்கையும்” “பாவமும்” என்கிற மூன்றுபாட்டில் ப்ரமேயத்தை யருளிச்செய்கிறா (ஸர்வநிர்வாஹகனாய்) என்று. “கெண்டையும்” என்கிறபாட்டில் அவதாரபல (ஃல) மான ஸர்வரக்ஷகத்வத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (ஸர்வாபேக்ஷித ப்ரதனாய்) என்று. இரண்டாம்பாட்டு முதல் நாலுபாட்டின் ப்ரமேயம் (விரோதி நிரஸநசீலனாய்) என்றது. ... ... ... ... *

மூ.—தூம்புடைப் பனைக்கை வேழம் துயர்கெடுத்தருளி மன்னு
காம்புடைக் குன்ற மேந்திக் கடு மழை காத்த வெந்தை
பூம்புனலபொன்னி முற்றும் புகுந்து பொன்வரண்ட வெங்கும்
தேம்பொழில் கமழு நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (க)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| தூம்புஉடை | துளைகளையுடைத்தாய் | ஏந்தி | குடையாகவேந்தி |
| பனை | பனைமரம்போலே | கடு | க்ரூரமான |
| | பெருத்திருக்கிற | மழை | கலமாரியை [ரக்ஷித்த |
| கை | துதிக்கையையுடைய | காத்த | தடுத்து கோகுலத்தை |
| வேழம் | கஜேந்த்ராழ்வானு | எந்தை | என்னுடைய ஸ்வாமி |
| துயர் | துக்கத்தை [டைய | | யானவன், |
| கெடுத்தருளி | போக்கியும் | பூ | அழகியதான |
| மன்னு | (பூமியிலே) பொருந் | புனல் | ஜலத்தையுடைய |
| | தி (லோபாய்ந்து) | பொன்னி | திருக்காவேரியானது |
| | இருக்கிற | முற்றும் | எல்லாவிடங்களிலும் |
| காம்பு உடை | மூங்கில்களையுடைய | புகுந்து | ப்ரவேசித்து |
| குன்றம் | கோவர்த்தநமலை | பொன் | (அங்குள்ள) ஸுவா |
| | யை | | ணங்களை |

| | | | |
|---|---|---|---|
| வரண்ட | தள்ளிக்கொண்டுவர, | நாங்கூர் | திருநாங்கூரிலுள்ள, |
| எங்கும் | எல்லாப்ரதேசங்களி லும் [ள்ளனவை | திருமணிக் கூடத்தான் | திருமணிக் கூடத்தில எழுந்தருளி யிருக் கிறான். (க) |
| தேம்பொழில் நீர்நிறைந்த | சோலைக | | |
| கமழும் | பரிமளம் வீசாநின்ற | | |

வ்யா.—முதற்பாட்டு. (தூம்புடையித்யாதி) துளையை யுடைத்தாய், (க) "பனைத்தாள்மதகளிறு" என்னுமாபோலே பனைபோலே இருந்துள்ள கையையுடைய ஆனையினுடைய துயர்கெடுத்தருளி. (பணைக்கை) என்று பாடமாய்த்ததாகில் †அகப்பட்டாரை †யிடையற வீசும் கையையுடைய ஆனை. இத்தால் - என்றும் மதித்துப்போந்த வித்தனை; பரிபவப்பட்டறியாத ஆனையென்று கருத்து. (மன்னுவித்யாதி) பூமியிலே வேர்பாய்ந்த †மூங்கிலையுடைத்தான மலையை ஏந்தி, பரிஹரிக்கப்போகாத மழையைக்காத்த வென்ஸ்வாமி.

(பூம்புனலித்யாதி) பூத்தபுனலையுடைத்தான பொன்னியானது. அழகியவென்றுமாம். (முற்றும்புகுநது) ஒருகாலால் புகுருகையன்றிக்கே அடையப்பரந்துபுகுந்து. (முற்றம்) என்று பாடமாய்த்ததாகில், வெளியுள்ளவிடமெல்லாம் புகுநது. (பொன்வரண்டவெங்கும்) †கிடந்தபொன்னை எல்லாமுருட்டிக்கொண்டு தள்ள. (தேம்பொழிலித்யாதி) நீர்மாறுதே பாய்கையாலே பொழிலானது பரிமளம் கமழாநின்ற திருநாங்கூர். ... ... ... ... ... (க)

அரு.—முதற்பாட்டு (தூம்பித்யாதி) "பணைக்கை" என்று - தழைக்கை; அத்தால் - பருமனைச்சொல்லுகிறதென்று விவக்ஷித்து பலிதார்த்தமருளிச்செய்கிறார் (அகப்பட்டாரையித்யாதி). (இடையற) நடுவொடிய. "காம்பு" என்றதினாத்தம் (மூங்கிலை) என்றது.

"வரண்ட" கொழிக்கவென்று சப்தார்த்தமாயருளிச்செய்கிறார் (கிடந்த வித்யாதி) ... .. ... ... ... ... ... (க)

மூ.—கவ்வைவாளெயிற்றுவன்பேய்க்கதிர்முலைசுவைத்திலங்கை
மன்னிய விடும்பை தீரக் கடுங்கணை துரந்த வெந்தை
கொவ்வைவாய்மகளிர் கொங்கைக்குங்குமம் கழுவிப்போந்த
தெய்வநீர்க் கமழு நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கவ்வை | பேரொலியை யுடையளாய் | எயிறு | பற்களையுடையளாய் |
| | | வன் | க்ரூரசித்தையான |
| வாள் | வாள்போன்ற | பேய் | பூதனையினுடைய |

(க) திருவாய் ௪-க-௪.

| | | | |
|---|---|---|---|
| கதிர் | (விஷம்மிக்கு) ஒளிவிடாநின்ற | கொவ்வை | கோவைப்பழம்போன்ற |
| முலை | ஸ்தநத்தை | வாய் | அதரத்தையுடையரான |
| சுவைத்து | அமுதுசெய்தும் | மகளிர் | ஸ்த்ரீகளுடைய |
| இலங்கை | லங்கையினுடைய | கொங்கை | ஸ்தநங்களின்மேல் பூசப்பட்ட |
| மன்னிய | நித்யமான | குங்குமம் | குங்குமச்சேறுகளை |
| இடும்பை | துர்வாக்க ஸம்பந்தமாகிற தாரித்ர்யமானது | கழுவி | அலம்பிக்கொண்டு |
| தீர | துலையும்படி | போந்த | ப்ரவஹியாநின்ற |
| கடும் | க்ரூரமான (கொல்ல | தெய்வம் | விலக்ஷணமான |
| கணை | பாணங்களை [வல்ல) | நீர் | ஜலமானது |
| துரந்த | விட்டவனுமான | கமழும் | பரிமளியாநின்ற |
| எந்தை | என்னுடைய ஸ்வாமியானவன், | நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. | (க) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கவ்வையித்யாதி) †யசோதைப்பிராட்டி விக்ருதையாய் வாயாலே ஏத்துமென்றுகொண்டு அவளை யநுகரித்து ஆர்ப்பரவத்தையுடையளாய், வாள்போலே யிருந்த வெயிற்றையுடைய திண்ணிய பேய்ச்சியுடைய, விஷத்தாலே விம்மிப் புகரையுடைய முலையைச்சுவைத்து. (இலங்கைமன்னியவிடும்பைதீர) லங்கைக்கு நித்யமாயிருப்பதொரு தாரித்ர்யமுண்டு - புற்று பாம்பற்றதாயிருக்குமாபோலே துர்வர்க்கமான ராக்ஷஸஜாதி மாறாதே யிருக்கையாகிற தாரித்ர்யம் தீர. †ஒருருக்கு நன்மையாவது-வஸ்துபூதர்வர்த்திக்கை; ஊருக்குக் ‡கீழ்மையாவது - அவஸ்துக்கள் வர்த்திக்கை. (கூர) என்று பாடமாய்த்ததாகில்-இடும்பைமிக, அத்தை அம்பாலே போக்கின வெந்தை. (கடுங்கணைதுரந்தவெந்தை) ப்ரதிபக்ஷத்தின்மேலே கண் பாராதே அம்பைவிட்டவென்ஸ்வாமி. (வல்வியவிடும்பைதீர) என்று பாடமாய்த்ததாகில் - லங்கையைப்பற்றின துக்கமானது போம்படியாக. ராவணஸம்பந்தத்தால்வந்த துக்கம் போம்படியாக.

(கொவ்வையித்யாதி) கோவைப்பழம்போலே யிருக்கிற வாயையுடையரான ஸ்த்ரீகளுடைய கொங்கையிற்குங்குமத்தைக கழுவிக்கொண்டுபோந்து †அப்ராக்ருதமான நீரானது பரிமளத்தைப புறப்படவிடாநின்றுள்ள திருநாங்கூர். ... ... ... (உ)

அரு.—இரண்டாம்பாட்டு. (கவ்வையித்யாதி) ஆச்ரிதனான ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கும் ஆய்ச்சியாக்கும் பசுக்களுக்கும் வந்தவாபத்தைப்போக்கினவளவன்றியே, தனக்கும் தன்தேவியான வைதேவிக்கும் வந்தவா

‡ (பா) கீழ்மையாவது.

பத்தைப் போக்கி எனக்கு அச்சேர்த்தியை யநுபவிக்கத்தந்த உபகாரக னென்று அநுஸந்திக்கிருரென்றுஸங்கதி

கல்லை - ஆர்ப்பரவமாய், அதுதானும் - ஒரு விக்ருதியாலே சப்தித்துக்கொண்டு வருகையாய், அத்தாலே - பிள்ளையிடத்தில் பரிவாலேவந்த விக்ருதியால் பிறந்த சப்தமாய், இது இவன் முலை சுவைக்கைக்கு ஹேது வென்று விவக்ஷித்துத் தாத்பர்யமருளிச்செய்கிருர் (யசோதையித்யாதி). ரர்க்ஷஸர்மாருதே யிருக்கை ரிக்ததாரூபமான தாரித்ர்யமாமோவென்ன வருளிச்செய்கிருர் (ஓரூருக்கித்யாதி). (௧) "సన్తమేనం తతో విదుః - ஸந்தமேநம் ததோவிதுঃ" என்கிறபடியே ப்ரஹ்மஜ்ஞாநிகள் வர்த்திக்கையில்லாமையாலே, அவஸ்துக்களிருந்தாலும் (௨) "నేయమస్తి పురీ లఙ్కా - நேயமஸ்தி புரீ லங்கா" என்னுமாபோலே ரிக்தமான ஸ்த்தலமென்னலாமே என்று கருத்து

(௩) "కావేరీ విరజా సేయం - காவேரி விரஜா ஸேயம்" என்றிருக்கையாலே (அப்ராக்ருதமான) என்றது . . . ... ... (௨)

மூ.—மாத்தொழில்மடங்கச் செற்று மருதிற நடந்து வன்தாள் [தை
சேத்தொழில்சிதைத்துப பின்னைசெவ்வித்தோள் புணர்ந்தவெந்
நாத்தொழில் மறை வல்லார்கள் நயந்தறம பயந்த வண்கைத்
தீத்தொழில் பயிலு நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௩)

| பதம். | உரை | பதம். | உரை |
|---|---|---|---|
| மா | கேசியென்னும் அஸுரனுடைய | பின்னை | நப்பின்னைப்பிராட்டி |
| தொழில் | வ்யாபாரமானது | செவ்வி | அழகியதான[யுடைய |
| மடங்க | முடங்கும்படி | தோள் | புஜங்களோடு [மான |
| செற்று | நிரஸித்தும், | புணர்ந்த | ஸம்ஶ்லேஷித்த வனு |
| மருது | மருதமரங்கள் | எந்தை | என்னுடைய ஸ்வாமியானவன், |
| இற | முறியும்படியாக | நா தொழில் | நாவினுடைய வ்யாபாரமான அத்யயநம்பண்ணப்பட்ட |
| நடந்து | அவற்றின் நடுவே போயும் | | |
| வன் | த்ருடமான | மறை | வேதங்களை |
| தாள் | கால்களையுடைத்தான | வல்லார்கள் | நிர்வஹிக்கவல்ல ப்ராஹ்மணர்கள் |
| சே | ருஷபங்களுடைய | | |
| தொழில் | வ்யாபாரத்தை | நயந்து | ஆதரித்து |
| சிதைத்து | அழித்து | அறம் | தாமத்தை |

(௧) தை-ஆ௩- (௨) ரா-ஸு-ச௩-௨௫ (௩)

| | | | |
|---|---|---|---|
| பயந்த | உத்பாதித்த (செய்ய | தீ தொழில் | அக்நிகர்மங்களை |
| வண் | உதாரமான [வல்ல) | பயிலும் | அநுஷ்டியாநின்ற |
| கை | கைகளினாலே | நாங்கூர்த்திருமணிக் கூடத்தானே. | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மாத்தொழிலித்யாதி) கேசியுடைய வ்யாபாரமடங்கும்படி நிரஸித்து, நடைகற்கிறபோதே மருதுகளிற் றுப்போம்படி நடைகற்று, வலிய தாளேயுடைத்தாயிருக்கிற சேக்களுடைய வ்யாபாரத்தை †மணற்கொட்டக மழிக்குமாபோலே யழித்து, நப்பின்னைப்பிராட்டியுடைய செவ்வியையுடைத்தான தோளோடே புணர்ந்தவென்ஸ்வாமி.

நாவுக்குத் தொழிலான மறைவல்லவர்கள், ஆதரித்துக்கொண்டு தர்மத்தையுத்பாதித்த உதாரமான கையைக்கொண்டு தீத்தொழில்பயிலாநிற்பர்களாய்த்து. †" 'வ்ருத்த (ஸ்ரு த்) வானுய்ப்போந்தவன் வ்ருத்த (ஸ்ரு த்) ஹீநனுனன்' என்னுமாபோலே, தீத்தொழில் என்ற த்வநி விசேஷத்தைப்பற்றச் சொன்னவார்த்தை†" என்றருளிச்செய்தார். தீயினுடைய தொழிலென்றபடி. †அத்யயநத்தைப்பண்ணி, அத்யயநத்தாலே விதேயமாயிருக்கிற கர்மங்களையு மநுஷ்டியாநிற்பர்களாய்த்து. †அத்யயநத்தைப்பண்ணி, ஆந்ருசம்ஸ்ய ப்ரதாநராகையாலே ஆர்த்த (ர்) விஷயங்களிலே யிரக்கத்தையுடையராய், தர்மங்களை யுத்பாதிக்கிற உதாரமான கையைக்கொண்டு ‡அக்நித்ரயங்களையும் அநுஷ்டியாநிற்பர்கள் †அவ்வூரிலுள்ளார்க்கு அத்யயநமும் அநுஷ்டாநமும் யாத்ரையாயிருக்குமாபோலே யாய்த்து அவனுக்கு விரோதிநிரஸநம் யாத்ரையாயிருக்கும்படி. ... ... ... (ங)

அரு.—மூன்றாம்பாட்டு. (மாத்தொழிலித்யாதி) தன்மேல்வந்த விரோதியையும் பெரிய பிராட்டியார்க்கு வந்த விரோதியையும் போக்கினவளவு மன்றிக்கே, திர்யக் ஸ்தாவரங்களுங்கூட தனக்கும் நப்பின்னைக்கும் ப்ரதிபந்தகங்களாக அவற்றை அநாயாஸேந நிரஸித்து நப்பின்னையும் தானுமாயிருக்கிற சேர்த்தியை எனக்குத்தந்த வெந்தை என்கிறுனென்று ஸங்கதி.

(க) "சிற்றில் சிதைத்து" என்றாப்போலே யிருக்க, "சிதைத்து" என்கையாலே யருளிச்செய்கிறா (மணலித்யாதி).

"அறம் பயந்த" என்று சொல்லிவைத்து "தீத்தொழில்" என்னும்போது, வ்ருத்தவானென்று சொல்லிவைத்து வ்ருத்தஹீநனென்றாப்போ

(க) பெரி-திரு-ங-உ-உ.      ‡ (பா) அக்நி ஹோத்ரங்களையும்.

லே பரஸ்பர வ்யாஹதம்போலே யிருக்கிறதே என்னும் சங்கையைப் பரி ஹரிக்கிறார் (வ்ருத்தவாறு யித்யாதி). (சொன்னவார்த்தை) என்ற வநந்த ரம், அல்ல என்றொருபதம் கூட்டுவது. நீதான தொழிலென்றர்த்தமல்ல வாகிலும், நீயினுடைய தொழில் என்றபோதும் தாஹகத்வாதி குணஹீந தை ஸ்ப்புரியாதோ, "அறம் பயந்த" என்றத்தோடே விருத்தமன்றோ வெ ன்ன வருளிச்செய்கிறார் (அத்யயநத்தை யித்யாதி). திருமணிக்கூடத்தி லிருக்கும் வேதார்த்த வித்துக்கள் பகவத்பாரதந்த்ர்ய ஜ்ஞாநவான்களா யிருக்க, வேத விதேயங்களான கர்மங்களை யநுஷ்டிக்கைக்கு ப்ரயோ ஜநமென்னென்ன வருளிச்செய்கிறார் (அத்யயநத்தைப் பண்ணி ஆந்ருசம் ஸ்யேத்யாதி). ஆந்ருசம்ஸ்யப்ரதாநராய் லோகோஜ்ஜீவநார்த்தம் அநுஷ் ட்டிப்பர்களென்று கருத்து. எம்பெருமானுடைய வபதாநங்களிலே யீடு பட்ட விவர அவர்களுடைய வநுஷ்ட்டாந விசேஷத்தைச் சொல்லுகைக் குக் கருத்தென்னென்ன வருளிச்செய்கிறார (அவ்வூரி லித்யாதி). இத் தால் - இவர்களைப்போலே எம்பெருமான் ஆச்ரிதர்க்காகவே தங்களு டைய விரோதிகளைப் போக்கினுனென்று பரார்த்ததை தோற்றுகைக்கரு ளிச்செய்தா ரென்றதாய்த்து ... ... ... ... ... (௩)

மூ.—தாங்கரும் சினத்து வன்தாள் தடக்கை மா மருப்பு வாங்கிப்
பூங்குருந்தொசித்துப் புள்வாய்பிளந்தெருதடர்த்த வெந்தை
மாங்கனிநுகர்ந்து மந்தி வந்து வண்டிரிய வாழைத்
தீங்கனி நுகரு நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தாங்கு அரும் | (ஒருவரால்) பொறுக்க வரிதான | பூம் | பூத்திருக்கிற |
| | | குருந்து | குருந்தமரத்தை |
| சினத்து | கோபத்தை யுடையதாய் [யதாய் | ஒசித்து | முறித்தும் |
| | | புள் | பகாஸுரனுடைய |
| வன் தாள் | வலிய கால்களையுடை | வாய் | வாயை |
| தடம் கை | பெருத்த துதிக்கையை யுடையதுமான குவலயாபீடத்தினுடைய | பிளந்து | கிழித்தும் |
| | | எருது | ருஷபங்களை |
| | | அடர்த்த | நெருக்கி ஸம்ஹரித்தவனுமான |
| மா | பெரிதான | எந்தை | என்னுடைய ஸ்வாமியானவன், |
| மருப்பு | கொம்பை | | |
| வாங்கி | பிடுங்கியும் | மாங்கனி | மாம்பழங்களை |

| | | | |
|---|---|---|---|
| நுகர்ந்த | புஜித்த | இரிய | சிதறிப்போம்படியாக |
| மந்தி | பெண்குரங்கானது | வாழை | வாழையினுடைய |
| வந்து | அங்குநின்றும் வந்து | தீ | இனிதான |
| வண்டு | (மதுபாநார்த்தமாக இழிந்த) வண்டுகளானவை | கனி | பழங்களை |
| | | நுகரும் | புஜியாநின்ற |
| | | நாங்கூர்த்திருமணிக் கூடத்தானே. | |

வ்யா.—நாலாம்பாட்டு. (தாங்கித்யாதி) ஒருவரால்தாங்கவரிதான சினத்தையுடைத்தாய், வலியதாளையுடைத்தாய், பெரியகையையுமுடைத்தாயிருக்கிற குவலயாபீடத்தினுடைய பெரியகொம்புகளை அநாயாஸேந குப்பைக்கீரைபோலேவாங்கி, அடியேபிடித்துத் தலையளவும் செல்லப்பூத்து தர்சநீயமாம்படிநின்ற குருந்தை முறித்து, பகாஸுரன் வாயைக்கிழித்து, எருதுகளேழையுமடர்த்த வென்ஸ்வாமி.

(மாங்கனி) மாம்பழத்தை புஜித்த மந்தியானது, "இனிரஸாந்தரத்தாலே போதுபோக்கவேணும்" என்றுபார்த்து, மதுபாநத்துக்காகப் படிந்த வண்டுகளானவை சிதறிப்போம்படியாக, வாழையினுடைய இனியகனியை புஜியாநின்றுள்ள. †அவன் விரோதிநிரஸநத்தாலல்லது போதுபோக்க மாட்டாதாப்போலே யாய்த்து இவையும் ரஸாநுபவத்தாலல்லது போதுபோக்கமாட்டாதே யிருக்கும்படியும். ... (௪)

அந.—நாலாம்பாட்டு. (தாங்கரு மித்யாதி) தனக்கும் நப்பின்னைக்கு முள்ள விரோதிகளை நிரஸித்தமை பின்னூட்டச் செய்தே, மதுரையிற் பெண்களுக்குதவினமையு மருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"நுகரும்" என்கிற வர்த்தமாநார்த்தத்தை ஸத்ருஷ்டாந்த முபபாதிக்கிறார் (அவனித்யாதி). ... ... ... ... ... ... (௪)

மூ.—கருமகளிலங்கையாட்டி பிலங்கொள்வாய்திறந்து தன்மேல்
வருமவள் செவியும் மூக்கும் வாளினால் தடிந்த வெந்தை
பெருமகள்பேதைமங்கை தன்னொடும் பிரிவிலாத
திருமகள்மருவு நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கருமகள் | சண்டாள ஸ்த்ரீபோல் அதி நீசையாய் | தன்மேல | தன்னுடையமேலே |
| இலங்கையாட்டி | லங்கைக்கு நிர்வாஹகையாய் | வருமவள் | வந்தவளான சூர்ப்பணகையினுடைய |
| | | செவியும் | காதையும் |
| பிலங்கொள் | குஹைபோன்ற[ண்டு | மூக்கும் | நாஸிகையையும் |
| வாய்திறந்து | வாயைத் திறந்துகொ | வாளினால் | வாளாயுதத்தினால் |

| | | | |
|---|---|---|---|
| தடிந்த | அறுத்துப் போகட்ட | மங்கை | பூமிப்பிராட்டியும் (ஒ |
| எந்தை | என்னுடைய ஸ்வாமியானவன், | தன்னொடும் | ருக்ஷணமும் (அவனை |
| பெருமகள் | நிருபாதிக ஸ்த்ரீத்வத்தை யுடையவளாய் | பிரிவு இலாத | விஸ்லேஷத்தை (ஒருக்ஷணமும்) உடையனாகாத (எப்போதும் ஸம்ச்லிஷடையான) |
| பேதை | ஆஸ்ரித தோஷத்தில் அஜ்ஞாநமுடையளான | திருமகள் | ஸ்ரீதேவியும் [இற |
| | | மருவும் | நித்யவாஸம் பண்ணு |
| | | நாங்கூர் ... | நாங்கூரத்திருமணிக் கூடத்தானே. |

வ்யா:—அஞ்சாம்பாட்டு. (கருமகள்) †தண்ணிய ஸ்த்ரீ, †ராவணனுடன் பிறந்தாளாகையாலே லங்கையிலுள்ளாரடையக் கொண்டாடும்படி யிருக்கிறவள், பிலம்போலே யிருக்கிற வாயைத்திறந்து. (தன்மேல்வருமவள்) †அநநயையானவனை நோக்கி வநதபடியாலே தன்மேலே வந்ததாயிருந்தபடி. (செவி) †ஏறிட்டுக்கொடுவந்த துர்மாநத்தைப் போக்கித் †தானானபடியே யாக்கிவிட்டபடி. †இவனை புஜிக்கைக்கு விரோதியிவளிறே என்று பிராட்டியை நலிவதாக வாயையங்காநது கொண்டு வந்தாளாய்த்து; அவளுடைய செவியையும் மூக்கையும் வாளாலே யறுத்தவென்ஸ்வாமி.

(பெருமகள்) நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடையவள். (பேதைமங்கை) பிறர்குற்றமறிகைக்கு அறிவில்லாதபடி யிருக்கிறவள். ஸ்ரீபூமிப்பிராட்டியைச் சொன்னபடி. (தன்னொடும்பிரிவிலாததிருமகள்) (௧) "அகலகில்லேனிறையும" என்கிறபடியே - ஒருகாலும் பிரியக்கடவளன்றிக்கேயிருக்கிற பெரியபிராட்டியார். † ஸ்ரீபூமிப்பிராட்டியும் பெரியபிராட்டியாரும் நித்யவாஸம பண்ணுகின்றுள்ள. ... (௫)

---

அரு.—அஞசாம்பாட்டு. (கருவித்யாதி) இரண்டாம்பாட்டில *இலங்கை வவ்விய விடும்பைகூரக் கடுங்கணை துரந்ததுக்குக் காரணமான சூர்ப்பணகையின் துர்மாநத்தைப் போககின செயலைச்சொல்லி, இததால்-அநந்யரை யநாதரித்துத் தன்னை யாசைப்பட்டார்க்கு முகங்கொடாதவனென்னு மர்த்தததை எனக் கறிவித்தவ னென்கிறாரென்று ஸங்கதி.

(தண்ணியஸ்த்ரீ) சண்டாளியென்றபடி. இலங்கையாட்டி-மண்டோதரியன்றோ, இவள் நிர்வாஹகையோ வென்ன வருளிச்செய்கிறார் (ராவணனித்யாதி). பிராட்டிமேலென்ன வேண்டாவோ வென்ன வருளிச

---

(௧) தி-வாய்-௬-௰-௰.

செய்கிறார் (அரக்கியையானவளை யித்யாதி). (எறிட்டுக்கொடுவந்த துர்மாநத்தை) என்றது - காமரூபையாய்வந்து, "எனக்கெதிரில்லை" என்றிருந்த துர்மாநத்தை யென்றபடி. (தாஞனபடியே) முன்புத்தை ராக்ஷஸவேஷத்துக்கடுத்த வைரூப்யம் ப்ரகாசிக்கும்படியே.

விவரணம் (இவளை யித்யாதி) தொகுத்தவர்ததம் (ஸ்ரீபூமி யித்யாதி) ... ... ... ... ... ... .. ... (௫)

அவ. — ஆரும்பாட்டு. (கெண்டையித்யாதி) தனக்குப் போராத ஜந்மங்களிலே பிறந்து ரக்ஷகனானவன் தானா நிலையிலே காணலாம்படி திருமணிக் கூடத்திலே வந்து ஸந்நிஹிதனானனென்கிறார். ... ... ... ... ... ... .. *

மூ.—கெண்டையும் குறளும் புள்ளும் கேழலு மரியு மாவும
அண்டமும் சுடரு மல்லா வாற்றலுமாய வெநதை
ஒண்டிறல் தென்னனேட வடவரசோட்டங் கண்ட
திண்டிறலாளர் நாங்கூர்த் திருமணிக்கூடத்நானே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கெண்டையும் | மத்ஸ்யமும் | ஒண்திறல் | மிக்க பலத்தை யுடையனாய் |
| குறளும் | வாமநனும் [ம் | தென்னன் | தென்தேசத்துக் கரசனான பாண்ட்யனானவன் |
| புள்ளும் | பக்ஷியான ஹம்ஸமு | ஓட | ஓடும்படியாகவும் |
| கேழலும் | வராஹமும் | வடவரசு | பாண்ட்ய தேசத்துக்கு வடக்கிலுள்ள சோள தேசததுக்குராஜாவான சோழனை |
| அரியும் | நரஸிம்ஹமும் | ஓட்டங்கணட | தோறறோடும்படி யாகவும் பண்ணின |
| மாவும் | ஹயக்ரீவனும் (ஆகிய இவ்வவதாரங்களை யுடையனாய்) | திணதிறலாளர் | தருடமான பலத்தை யுடையரான ப்ராஹ்மணருடைய |
| அண்டமும் | ப்ரஹ்மாண்டமும் | | |
| சுடரும் | ஸூர்ய சந்த்ராகளும் | | |
| அல்லா | மற்றுமுண்டான | | |
| ஆற்றலும் | ஶ்ரேஷ்ட்ட வஸ்துக்களும் | | |
| ஆய | தனக்குப்ரகாரமாம்படி யெழுந்தருளியிருப்பவனுமான | | |
| எந்தை | என்னுடைய ஸ்வாமியானவன், | நாங்கூர்த்திருமணிக் கூடத்தானே. | |

வ்யா.—(கெண்டையும்) மத்ஸ்யமும், ஸ்ரீவாமநனும், அன்னமும், ஸ்ரீவராஹமும், நாஸிம்ஹமும், ஹயக்ரீவமும், விபூதியும,

அது தனக்கு ப்ரகாசத்தைப்பண்ணக்கடவ சந்த்ர ஸூர்யர்களும். மற்றும், (க) "யத்யத்விபூதிமத்ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவவா" - யத்யத் விபூதிமத ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவவா" என்கிறபடியே - விபூதியில் உச்ச்ரிதமான பதார்த்தங்களுமெல்லாம் தானென்று சொல்லலாம்படியாயுள்ளவன். (ஆற்றலுமாய) வலியுடைத்தாய் நித்யமான பதார்த்தங்களாய் நின்றவென்ஸ்வாமி.

(ஒண்டிறலித்யாதி) ஒள்ளியதிறலையுடைய பாண்ட்யனோடொக்கும்படியாக, வடவரசான ராஜாவையோட்டங்கண்ட திண்ணியமிடுக்கையுடைய ப்ராஹ்மணர் வர்த்திக்கிற. அவனைவதரித்துச் செய்ததெல்லாம் தாங்களேசெய்ய வல்லராயாய்த்து அவ்வூரிலுள்ளாரிருப்பது. (௬)

அரு — ஆறும்பாட்டு. (கெண்டையித்யாதி) கீழெல்லாம் ராமக்ருஷ்ணாவதார சரித்ரத்திலே மண்டினவர்க்கு, அவன் ஸர்வாபேக்ஷித ப்ரதனைக்காக மத்ஸ்யாத்யவதாரங்களைச் செய்தபடியைப் பார்க்கவே, அவையிரண்டும் பரத்வத்தோடொக்குமென்று தோன்றுகையாலே அவற்றை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதியை ஸ்ப்புரிப்பிக்கிறார் (தனக்கித்யாதி). (போராத) தகாத.

ராஜாக்களா யிருப்பாரை ப்ராஹ்மணராயிருப்பார் பராஜிதராம்படியடிக்கைக்கு ஹேதுவென்னென்ன; அவர்களர்யயம் பண்ணி பகவத்வேஷிகளாகில் (க) "அறுப்பதே கருமம்" என்கிறபடியே வெல்லவல்ல மிடுக்குடையரா யிருப்பரென்னு மத்தை ஸத்ருஷ்டாந்த முபபாதிக்கிறார் (அவனித்யாதி). ... ... ... ... ... ... ... (௬)

அவ. — ஏழாம்பாட்டு. (குன்றமித்யாதி) பரார்த்தமான பதார்த்தங்களுக்கு நியந்தாவான ஸர்வேஸ்வரனிங்கேவந்து வர்த்தியாநின்றானென்கிறார் ... ... ... ... ... ... ...

மூ.—குன்றமும் வானும் மண்ணும் குளிர்புனல் திங்களோடு
நின்ற வெஞ்சுடரு மல்லா நிலைகளுமாய வெந்தை
மன்றமும வயலும் காவும் மாடமும் மணங்கொண்டெங்கும்
தென்றல் வந்துலவு நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குன்றமும் | மலைகளும் | குளிர் | சைத்யத்தையுடைய |
| வானும் | ஆகாசமும் | புனல் | ஜலமும் |
| மண்ணும் | பூமியும் | திங்களோடு | சந்த்ரனும் |

(க) கீதை-அ-சக. (க) திருமாலை-அ.

| | | | |
|---|---|---|---|
| நின்ற | நிலைநின்றவனும் | காவும் | தோட்டங்களும் |
| வெம்மையும் | உஷ்ண கிரணனுமா | மாடமும் | க்ருஹங்களும் (ஆகிய |
| | ன ஸூர்யனும் | | இவற்றி லுண்டா |
| அல்லா நிலைக மற்றுமுண்டான நக்ஷ | | | ன) |
| ளும் | த்ரங்களும் (ஆகிய இவற்றை) | மணம் | பரிமளத்தை |
| | | கொண்டுவந்து | க்ரஹித்துக் கொண்டு வந்து |
| ஆய | தனக்கு ப்ரகாரமாக வுடையனான [வன், | எங்கும் | எல்லா ப்ரதேசங்களிலும் |
| எந்தை | எனக்கு ஸ்வாமியான | தென்றல் | மலய மாருதமானது |
| மன்றமும் | பெரிய வீதிகளும் | உலவும் | ஸஞ்சரியாநின்ற |
| வயலும் | கழனிகளும் | நாங்கூர்த்திருமணிக் கூடத்தானே. | |

வ்யா.—(குன்றம்) சேதநர்க்கு போக்ய போகோபகரண போக ஸ்த்தாநங்களைப் பண்ணிக்கொடுக்கக் கடவதான மலைகளும், அவர்களுக்கு அவகாசப்ரதாநம்பண்ணுகிற ஆசாசமும், போக்யங்களைத்தரக்கடவதான பூமியும், சைத்யத்தைப்பண்ணக்கடவதான ஜலமும், சந்த்ரனும், அவனுல்வந்தவல்லவை ஆற்றுமாதித்யனும், சேதநருடைய ஜீவநத்துக் குறுப்பான நன்மை தீமைகளைத் தெரிவியாநின்றுள்ள நக்ஷத்ரங்களுமாய் நின்ற.

(மன்றமும்) மன்றிலேதானே சோலையுண்டாயிருக்குமே, வயலிலே பொய்கைகளுமுண்டாயிருக்குமே, சோலையிலும், மாடங்களிலே ஸ்த்ரீகளிருப்பர்களே, அவ்வோவிடங்களிலுண்டான பரிமளத்தைக் கொண்டுவந்தெங்கும் தென்றலுலாவாநின்றுள்ள வென்னுதல்; எங்குமுண்டான பரிமளத்தைக் கொண்டுவந்துலாவாநின்றுள்ள வென்னுதல் ... ... ... ... ... ... ... (எ)

அ௫—ஏழாம்பாட்டு. (குன்றமித்யாதி) "அண்டமும் சுடரும்" என்று கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதமான ஸர்வநிர்வாஹகத்வத்தை, மேல் மூன்று பாட்டிலே யருளிச்செய்கிறரென்று திருவுள்ளம்பற்றி, அதில், இதில் சொல்லுகிற அம்சத்தை யருளிச்செயகிறா (பரார்த்தமான வித்யாதி).

"நிலைகள்" சேதநருடைய ஸ்த்திதிகளாய், அவறறுக்கு ஜ்ஞாபகங்களான நக்ஷத்ரங்களை சந்த்ர ஸூர்ய ஸமபிவ்யாஹார பலத்தாலே சொல்லலாமென்றருளிச்செய்கிறார் (சேதநருடைய வித்யாதி).

காவில் பரிமளம் சொல்லலா மித்தனை போக்கி, மன்றிலும் வயலி லும் மாடத்திலும் பரிமளப்ரஸக்தி எங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் (மன்றிலே யித்யாதி). ஸ்த்ரீகள் ஸ்வதஃ பத்மகந்திநிகளா யிருப்பரென்று கருத்து. (எங்குமுண்டான) என்றது-மன்று முதலானவிவற்றி லெங்கு முண்டான வென்றபடி... ... ... ... ... ... (எ)

அவ.—எட்டாம்பாட்டு. (சங்கையும்) த்யாஜ்யமாயும் உபாதேய மாயும் பௌதிகமாயுமுள்ள பதார்த்தங்களுக்கு நியந்தாவானவனிங் கே வந்து வர்த்தியாநின்றானென்கிறார். ... ... ... *

மூ.—சங்கையுந் துணிவும் பொய்யும் மெய்யு மித்தரணியோம்பும்
பொங்கிய முகிலு மல்லாப் பொருள்களு மாய வெந்தை
பங்கய முகுத்த தேறல் பருகிய வாளை பாயச்
செங்கய லுகளு நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சங்கையும் | ஸம்சயமும் | எந்தை | என்னுடைய ஸ்வாமி |
| துணிவும் | நிஸ்சயமும் | | யானவன், [றும் |
| பொய்யும் | அஸத்யமும் | பங்கயம் | தாமரைப்பூவில் நின் |
| மெய்யும் | ஸத்யமும் | உகுத்த | பெருகாநின்ற |
| இத்தரணி | இந்தபூமியை | தேறல் | தேனை |
| ஓம்பும் | ரக்ஷிக்கத்தக்கதாய் | பருகிய | பாநம்பண்ணின |
| பொங்கிய | அபிவ்ருத்தமாகா | வாளை | பெரியமீனானது [கு) |
| முகிலும் | மேகமும் [நின்ற | பாய | துள்ளாநிற்க, (அதுக் |
| அல்லா | மற்றுமுண்டான | செம் | சிவந்த |
| பொருள்க | வஸ்துக்களும் (ஆகிய | கயல் | சிறுமீனானது [நின்ற |
| ளும் | இவற்றை) | உகளும் | (அஞ்சி)குதித்து ஓடா |
| ஆய | நியமிக்க வல்லவனான | நாங்கூர்த்திருமணிக் கூடத்தானே. | |

வ்யா.—(சங்கையும்) (க) "ஸம்ஶயாத்மா விநஶ்யதி-ஸம்சயாத்மா விநஶ்யதி" என்கிறபடியே - விநாசத்தைப் பண்ணக்கடவதான ஸம்ச யமும், துணிவும்-(உ) "வ்யவஸாயாத்மிகா புத்தி:-வ்யவஸாயாத்மிகாபுத் திரேகா" என்கிற துணிவும், பொய்யும் - ப்ரயோஜநநிரபேக்ஷமாகச் சொல்லும் அஹிதமான பொய்யும், ஹிதரூபமான மெய்யும். (இத்த ரணியித்யாதி) ப்ரயோஜந நிரபேக்ஷமாக பூமியை ரக்ஷிக்கக்கடவதாய் விஸ்த்ருதமாயிருக்கிற மேகங்களும், மற்றும் இடி மின் தொடக்கமா னவை எல்லாவற்றுக்கும் நியந்தாவான ஸர்வேஶ்வரன்.

---

(க) கீதை-௪-௪௦. (உ) கீதை-௨-௪௧

(பங்கயமித்யாதி) தாமரைப்பூவானது நிறைந்து உகுத்த தேனை ப்பருகின வாளையானது களிப்பாலேபாய, சிவந்த கயலானது அஞ்சி ஸ்வஸ்த்தாநத்தில்நின்றும் பேராநின்றுள்ள. ... ... (அ)

அரு—எட்டாம்பாட்டு. (சங்கையு மித்யாதி) பரார்த்தமான பதா ர்த்தங்களுக்கெல்லாம் நிர்வாஹகனுகில், லோகத்தில் இவ்வர்த்தத்தில் ஸம் சயிப்பார் சிலர், நிஃசயிப்பார் சிலர், பொய்யும் மெய்யும் சொல்லிக்கொ ண்டு திரிவாராய் கேவல தைவிகமான வ்ருஷ்ட்யாதிகளில் ஜீவிப்பாரும் முடிவாருமாய், இப்படி நாடு கிடப்பானென்னென்கிற சங்கைக்குப் பரி ஹாரமாக, சேதநகர்மாநுஸாரியாய் அவனே நிர்வஹிக்கிறனென்று ஸங் கதியை ஸ்ப்புரிப்பிக்கிறுர் (த்யாஜ்யமாயு மிதயாதி).

"ஓம்பும்" என்றதினர்த்தம் (ரக்ஷிக்கக் கடவதாய்) என்றது. உகுத் த-ப்ரவஹித்த. வாளை-பெரியமீன். கயல்-சிறுமீன். ... ... (அ)

அவ.—ஒன்பதாம்பாட்டு. (பாவமுமித்யாதி) நிஷித்தாநுஷ்ட் டாநம், விஹிதாநுஷ்ட்டாநம், மோக்ஷம், மோக்ஷத்துக்கு உபயோகி யான ஆத்மகுணங்கள், அதுக்கு விரோதியான அநாத்ம குணங்கள், இவற்றுக்கெல்லாம் நியந்தாவானவன் இங்கே வந்து வர்த்தியாநின்ரு னென்கிருர் ... ... ... ... ... ... ... *

மூ.—பாவமு மறமும் வீடு மின்பமும துன்பந்தானும்
கோவமு மருளு மல்லாக் குணங்களு மாய வெந்தை
மூவரி லெங்கள் மூர்த்தி யிவனென முனிவரோடு
தேவர் வந்திறைஞ்சு நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாவமும் | பாபமும் | மூவரில் | ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களில் |
| அறமும் | புண்யமும் | | |
| வீடும் | மோக்ஷமும் | எங்கள் | எங்களுக்கு ஆஶ்ரயணீயனை |
| இன்பமும் | ஸுகமும் | | |
| துன்பந்தானும் | துஃக்கமும் | மூர்த்தி | ஸ்வாமியானவன் |
| கோவமும் | க்ரோதமும் | இவன் என | இந்த விஷ்ணுவே என்று தெளிந்து |
| அருளும் | அநுக்ரஹமும் | | |
| அல்லா | மறறுமுள்ள | முனிவரோடு | ஸநகாதி ருஷிகளோடு கூட [கள் |
| குணங்களும் | ஸத்வாதி குணங்களும் (ஆகிய இவற றை) [னை | தேவர் | இந்த்ராதி தேவதை |
| | | வந்து | கிட்டி [ருக்கிற |
| ஆய | நிர்வஹிக்க வல்லவ | இறைஞ்சும் | ஆஶ்ரயிக்கும்படி யி |
| எந்தை | என்ஸ்வாமியானவன், | நாங்கூர்த்திருமணிக் கூடத்தானே. | |

வ்யா.—(பாவமும்) நிஷித்தாநுஷ்டாநமும், விஹிதாநுஷ்டாநமும், மோக்ஷமும், ஸுகமும், இதுதான் நிலைநில்லாமையாலே வரக்கடவதான துக்கமும், அறிவுடையார்க்கு த்யாஜ்யமானகோபமும் ப்ரஸாதமும்; மற்றும் ஸத்வாதி குணங்களுமெல்லாம் தானென்று சொல்லலாம்படி யிருக்கிற வென்ஸ்வாமி.

(மூவரில்) ப்ரஹ்மாதிகளுக் கந்தராத்மாவாய் நின்றும் ஸ்வேந ரூபேணநின்று ரக்ஷித்தும் போருகையாலே ஜகத்துக்கு ப்ரதாநராய்த் தோற்றுகிற மூவரில் ஸத்வப்ரசுரரானவெங்களுக்கு ஆஶ்ரயணீயனிவனென்று, ஸநகாதிகளோடே தேவர்கள் வந்தாஶ்ரயிக்கும்படி நிற்கிற.

---

அரு.—ஒன்பதாம் பாட்டு. (பாவமுமித்யாதி) சேதநா ஸம்சயாதிகளோடே கூடியிருக்கும்படி காமாநுகுணமாக ஈஶ்வரனே யவற்றுக்கெல்லாம் நிர்வாஹகனுகைக்கு மூலமான க்ரியைகளுக்கும் தத்பலங்களுக்கும் நிர்வாஹகராரென்னும் சங்கையிலே, சேதநப்ரதம ப்ரயத்நாபேக்ஷனை யிக்கொண்டு அவற்றுக்கு மவனே நிர்வாஹகனென்னு மர்த்தத்தை யருளிச்செய்கிறரென்னும் ஸங்கதியை ஸூசிப்பிக்கிறர் (நிஷித்தாநுஷ்டாநமித்யாதி). ... ... ... ... ... ... ... (௯)

மூ.—திங்கள் தோய் மாட நாங்கூர்த் திருமணிக்கூடத்தானை
மங்கையர்தலைவன் வண்டார் கலியன் வாயொலிகள் வல்லார்
பொங்கு நீருலகமாண்டு பொன்னுலகாண்டு பின்னும்
வெங்கதிர்ப் பருதிவட்டத் தூடுபோய் விளங்குவாரே. (௰)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம் | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| திங்கள் | சந்த்ரமண்டலத்திலே (போய்) | மங்கையர் | திருமங்கையிலுள் |
| | | தலைவன் | ராஜாவாய் [ளார்க்கு |
| தோய் | படிந்திருக்கிற | வண் | ஸுந்தரமான [ன |
| மாடம் | க்ருஹங்களையுடைய | தார் | மாலையை யுடையரா |
| நாங்கூர் | திருநாங்கூரிலுள்ள | கலியன் | ஆழ்வார |
| திருமணிக் கூடத்தானை | திருமணிக் கூடமென்கிற திவ்யதேசத்திலெழுந்தருளியிருக்கிற எம்பெருமான் விஷயமாக, | வாய் | அருளிச்செய்த |
| | | ஒலிகள் | சப்த ஸந்தாப்பமான இந்தப் பத்துப்பாட்டையும் [கள், |
| | | வல்லார் | அப்யஸிக்க வல்லவர் |

| | | | |
|---|---|---|---|
| பொங்கு | வ்ருத்தியடையாநின்ற ஜலத்தையுடையஸமுத்ரத்திறைல் சூழப்பட்ட | பின்னும் | அதுக்குமேலே |
| உலகம் | பூமியை | வெம்கதிர் | ஸூர்யனது |
| ஆண்டு | பரிபாலநம்பண்ணி | பருதிவட்டத்து | மண்டலத்தினுடைய |
| பொன் உலகு | ஸ்வர்க்கலோகத்தை | ஊடுபோய் | நடுவழியாக(அர்ச்சிராதி மார்க்கமாகப்) போய் |
| ஆண்டு | அநுபவித்து | விளங்குவார் | (பரமபதத்தில்) உஜ்ஜ்வல ராவாகள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. ( திங்கள் ) சந்த்ரபதத்தளவும செல்லவோங்கின மாடங்களையுடைத்தான திருநாங்கூரில் திருமணிக்கூடத்திலேவந்து ஸந்நிஹிதனானவனை. (மங்கையர்) திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநர், வண்மையையுடைத்தான தாரையுடையரான ஆழ்வாரருளிச்செய்தவித்தை வல்லவர்கள், கடல்சூழ்ந்த பூமியையாண்டு, ஸ்வர்க்கத்தை நிர்வஹித்து, அதுக்குமேலே ஆதித்யமண்டலத்தின் நடுவிட்டு அர்ச்சிராதிமார்க்கமேபோய் பரமபதத்திலேசென்று ஸ்வஸ்வரூபத்தைப்பெற்று உஜ்ஜ்வலராவர். ... ... ... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



---

அரு.—பத்தாம்பாட்டு. (திங்களித்யாதி) இத்திருமொழியில் ப்ரமேயம்-ஸர்வநிர்வாஹகனானவன், ஸர்வாபேக்ஷிதப்ரதன், விரோதி நிரஸநசீலன் என்கிறவை யாகையாலே, அந்தவந்த வதிகாரிகளுக்கு விரோதிநிவ்ருத்தி பூர்வக பலப்ரதத்வம்சொல்லவேணுமென்று அதிகாரி பேதத்தைப் பற்ற வருளிச்செய்கிருர் (கடல்சூழ்ந்த வித்யாதி) .. ... (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்



நாலாம்பத்து அஞ்சாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# நாலாம்பத்து - ஆறும் திருமொழி

## தாவளந்து ப்ரவேசம்.

வ்யா.— ஸுகுமாரராயிருப்பார் வழிபோகப்புக்கால் நீர்கண்ட விடமெங்கும் மேலே யேறிட்டுக்கொள்ளுமாபோலே, இவரும், தம்முடைய மார்த்தவத்தாலே அவனையொழியச் செல்லாமையாலே ஸம்ஸாரத்தில் பொருந்தாமையுமுடையராய், இவ்விரோதியைப்போக்கி அவனைப்பெறுகைக் குடலாகப் பலகாலும் ப்ரபத்திபண்ணுகிறபராய்த்து. கடுக பலிப்ப தோருபாயத்தைப்பற்ற வேணுமிறே; ஒரு வ்யபிசாரமாதல் விளம்பமாதலில்லாத ஸாதநத்தைப் பரிக்ரஹிக்கவேணுமிறே. அதாகிறது-(க) "ത്വമേവോപായഭൂതോ മേ ഭവ- த்வமேவோபாயபூதோமேபவ" என்கையிறே. (க) "അഹമസ്മ്യപരാധാനാമാലയഃ, അകിഞ്ചനഃ - அஹமஸ்ம்யபராதாநாமாலயஃ, அகிஞ்சநஃ" என்கையாலே - தானுமுபாயமல்லாமை சொல்லிற்று; "அகதிஃ" என்கையாலே - பிறருபாயமாக மாட்டார்களென்றது. தன்னை முற்படச்சொல்லுவானென்னென்னில்; தன்னநர்த்தத்துக்கு ஹேது தானேயிறே. இவ்வளவும் வர ஸம்ஸரிக்கைக்குக் கார்யம்பார்த்தான் தானேயன்றோ, இனி பிறர்தானே அநுக்ரஹம் பண்ணுவாரைப்போலே யிருந்து அநர்த்தத்தை விளைக்குமத்தனையல்லது ரக்ஷகராகமாட்டார்களே. பித்தோபஹதன் உணர்த்தியுண்டான வளவிலே "நானே என் தலைமயிரைப் பறித்துக்கொள்ளுதல் கண்ணைக் கலக்கிக்கொள்ளுதல்செய்து என்விநாசத்தைச் சூழ்த்துக்கொள்ளுவன், அவ்வளவில் நீ எனக்கு ரக்ஷகனுகவேணும்" என்று தெளிந்திருப்பா னொருவன்கையிலே தன்னைக் காட்டிக்கொடுக்குமாபோலே யிருப்பதொன்றிறே ப்ரபத்திபண்ணுகையாவது தான். மத்யமபதத்தாலே தன்னைக்கழித்திறே ப்ரபத்திபண்ணுவது; ஆகையாலே, நானு மெனக்கில்லை, பிறருமெனக்கில்லை, நீயே ரக்ஷகனுகவேணும் என்று, திருக்காவளம்பாடி நாயனார்திருவடிகளிலே சரணம் புகுகிறாராயிருக்கிறது.

---

(க) பாஞ்சரா-

கீழ்த் திருமொழியோடிதுக்குச் சேர்த்தியென்னென்னுல; ச ண்யனுனவன் பிராட்டியாரோடேகூடத் திருமணிக்கூடத்திலே வர்த்தியா நின்றுனென்றுர்; லக்ஷ்மீபதியிறே ஆஸ்ரயணீயனுவான், இங்கே சரணம்புகுகிறுர், ... ... ... ... ... *

---

அரு.—தாவளந்தின் ப்ரவேசம்.—திருநாங்கூர திருமணிமாடக் கோயில்துடங்கி இவ்வளவு மநுபவித்துக்கொண்டு வந்தவர், இங்கே திருக்காவளம்பாடியிலே "களைகணீயே" என்று சரணம் புகுகைக்கு ஸங்கதியென்னென்னு மாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறுர் (ஸுகுமாரராயித்யாதி). (மார்த்தவத்தாலே) என்றது-விரஹாஸஹிஷ்ணுத்வத்தாலே என்கை. இத்தால்-அவயவங்கள்தோறு மநுபவிப்பாரைப்போலே அநுபவியாநிறகச் செய்தே, அதின் மிகுதியாலே, இங்கே "இது நமக்குத் தொங்கப்புகுகிறதோ" என்று மதிசங்கையாலே சரணம் புகுகிறுரென்றதாய்த்து. அதிசங்கையாலே கலங்கினுல் ஸாதநாநுஷ்ட்டாநங்களைப் பண்ணலாகாதோ, ப்ரபத்தி பண்ணவேணுமோ வென்ன வருளிசசெய்கிறுர் (கடுகவித்யாதி). விவரணம் (ஒருவித்யாதி). (அதாகிறது) என்றது-அந்த ஸாதநமாகிறதென்றபடி. "த்வமேவ" என்கிற அவதாரணத்தின் கருத்தை ப்ரமாணமுகேந வெளியிடுகிறுர் (அஹமித்யாதி). ப்ரபத்தியின் ஸ்வரூபந்தன்னை ஸத்ருஷ்டாந்த முபபாதிக்கிறுர (பித்தோபஹத னித்யாதி). இந்த வர்த்தத்துக்கு மூலமானப்ரமாணம் காட்டுகிறுர் (மத்யமேத்யாதி). திருமொழியின் ப்ரமேயத்தைக் காட்டுகிறுர் (ஆகையாலே யித்யாதி).

சரணம் புகுகிறுராகில் பிராட்டி முன்னுகவிறே சரணம் புகுருவது, மந்த்ரரத்நத்திலங்ஙனேயிறே யிருப்பதென்னு மதிசங்கை தீரவேணுமென்று திருவுள்ளம்பற்றி, கீழ்த் திருமொழியோடித் திருமொழிக்கு விசேஷஸங்கதியை ப்ரஸ்நப்ரதிவசந ரூபேண தாசிப்பிக்கிறுர (கீழ்த்திருமொழியோடித்யாதி). கீழ்த்திருமொழியில் அஞ்சாம்பாட்டில் "ஏன்றுமெம் பிரிவிலாத திருமகள்" என்றநுஸந்தித்தாரிறே என்று கருத்து. இத்திருமொழியில் அஞ்சாம்பாட்டிலே "மடவரல் மங்கைதன்னை" என்றிருக்கிறதே யென்னில், முதறபாட்டிலே "கண்ணனே களைகணீயே" என்று சரணம்புகுருகைக்கு முன்பேயன்றே பிராட்டியை முன்னிடவேணுமென்று திருவுள்ளம். ... ... ... ... ... ... ...

௧.—தாவளந்துலக முற்றும் தடமலர்ப பொய்கை புக்கு
நாவள நவின்றங்கேத்த நாகத்தின் நடுக்கம தீர்த்தாய்
மாவளம் பெருகி மன்னு மறையவர் வாழும் நாங்கைக்
காவளம்பாடி மேய கண்ணனே களைகணீயே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உலகம்முற்றும் | (ஸ்ரீ கஜேந்த்ராழ்வான்) எல்லா லோகங்களையும் | நடுக்கம் | பயத்தை |
| தாவளந்து | தாவித்திரிந்து (அப்பொழுது காணப் | தீர்த்தாய் | போக்கினவனே! |
| தடம் | பெரிதான [பட்ட) | மாவளம் | அதிக ஸம்பத்தானது |
| மலர் | பூவையுடைய | பெருகி | வ்ருத்தியடைந்து |
| பொய்கை | (ஒரு) மடுவிலே | மன்னு | பொருந்தியிருக்கிற |
| புக்கு | இழிந்து | மறையவர் | ப்ராஹ்மணர்கள் |
| அங்கு | அந்தப் பொய்கையிலே (இருந்து) | வாழும் | ஸுகமாகவர்த்திக்கிற |
| நா | நாவுக்கு [நாமத்தை | நாங்கை | திருநாங்கூரிலுள்ள |
| வளம் | அலங்காரமான திரு | காவளம்பாடி | திருக்காவளம்பாடியென்னும் திவ்யதேசத்திலே |
| நவின்று | சொல்லி [நிற்க | மேய | பொருந்திவர்த்திப்பவனை |
| ஏத்த | ஸ்தோத்ரம் செய்யா | கண்ணனே | க்ருஷ்ணனே ! |
| நாகத்தின் | (அந்த) ஆனையினுடைய | நீயே | ஆஸ்ரித பக்ஷபாதியான நீயே |
| | | களைகண் | ரக்ஷகனாகவேணும். |

வ்யா.—முதற்பாட்டு. (தாவளந்தித்யாதி) முதலையாலே யிடர்பட்ட ஆனை தன்னை நோக்கிக்கொள்ளுதல், அம்முதலை இத்தை நோக்குதல் செய்ததோ; பாதக (ஸ்பர்சு) மானது ரக்ஷகமாகமாட்டாதே. அந்த ஆனையினுடைய ஸ்த்தானேயாய்த்து நான்; முதலையினுடைய ஸ்த்தானேயாய்த்து பிறர். (தாவளந்துலகமுற்றும்) என்கிற விது தன்னையும் ஆனை தனக்கேயாக்கி-ஓரிடத்திலே யொருபூமலர் காணுமையாலே பூமிப்பரப்படங்கலும் தாவித்திரிந்ததென்னவுமாம்; அன்றிக்கே, திருவுலகளந்தருளினபடியையாக்கி, பூமிப்பரப்படங்கலும் அநாயாஸேந அளந்து கொண்டானென்னுதல். நீபூமியளந்துகொள்ளுகைக்கு அந்த பூமியிலுள்ளார் தாங்களேதேனும் யத்நித்ததுண்டோ? (தாவளந்தித்யாதி) "ஒருபூமலர் காணலாமோ" என்னுமாசையாலே பூமிப்பரப்படங்கலும் தட்டித்திரிந்து, பின்பு ஒருப்ரதேசத்திலே பெரியமலரையுடைத்தாயிருப்பதொரு பொய்கையைக்கண்டு, அதிலே முதலையுண்டென்றறியாதே போய்ப்புக்கு அதின்வாயிலே யகப்பட்டு ஒருபோக்கடியறியாதே தடுமாறி, முன்பாய்ந்தால் "அயமே" என்னுமாபோலே பூர்வஜந்மவாஸனையாலே, நாவுக்கலங்காரமான திருநாமத்தைச

சொல்லி. (க) "நாவாயிலுண்டே நமோநாரணவென்று ஓவாதுரைக்கு முரையுண்டே" என்னக்கடவதிறே. அதுவும் (உ) "நாராயணவோ" என்றிறே கூப்பிட்டது. (அங்கு) தானகப்பட்ட பொய்கையிலே நின்று, திருநாமத்தைச்சொல்லுகிற ஆனையினுடைய அச்சத்தைப் போக்கினவனே! ஆனைதான் தனக்குதவுநல் முதலை யுநவுதல் செய்ததோ நீயேயன்றோ மடுவின்கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்துதவினாய்.

(மாவளம்) நிரவதிக ஸம்பத்தானது, ஆற்றுவாயில்நீர் மேன்மேல் நெடுகுமாபோலே பெருகிவாராநிற்பதாய், அது தனக்கொரு விச்சேதமின்றிக்கே யிருக்கிற ப்ராஹ்மணர், வேதைகஸமதிகம்யனானவனைக் கண்ணாலேகண்டு வர்த்திக்கிற திருநாங்கூரில் திருக்காவளம்பாடியிலே நித்யவாஸம்பண்ணுகிற க்ருஷ்ணனானவனே! (மேய) அவதாரங்களில் வ்யாவ்ருத்தி. ஓரோகாலவிசேஷங்களிலேயாய் தீர்த்தம் ப்ரஸாதித்ததென்னுமே, நித்யவாஸம் பண்ணுகிற. (கண்ணனேகளைகண்நீயே) உன்னை யுகந்தாரைவிடமாட்டாதே வர்த்திக்கிற நீயே ரக்ஷகனாகவேணும். அவன் (க) "மாமேகம் - மாமேகம்" என்றவார்த்தை இவர்தாமே யருளிச்செய்கிறார். ... ... ... ... ... (க)

அரு.—முதறபாட்டு. (தாவளந்தித்யாதி) "கண்ணனேகளைகணீயே" என்று சரணம் புகுகிறவிடத்தில் ஸ்ரீகஜேந்த்ரரக்ஷணம் சொல்லுகைக்கு உபயோகம் காட்டுகிறார் (முதலையாலே யித்யாதி). (பிறர்)என்றவநந்தரம், ஆகையாலே நீயே களைகணென்கிறார் என்று கூட்டுவது.

திருவுலகளந்த வபதாநத்தைச் சொன்னதுக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (நீபூமியித்யாதி). நாவுக்கலங்காரமோ திருநாமமென்ன வருளிச்செய்கிறார் (நாவாயிலித்யாதி). வாயில் நாவுண்டே அதுக்குத்தான் உரையுண்டே என்று தோற்றுகையாலே நாவுக்கலங்காரமாமென்று திருவுள்ளம். ஸ்ரீகஜேந்த்ராழ்வானும் ஆதிமூலமென்று கூப்பிட்டதென்றன்றோ ப்ரஸித்தி, நாராயணசப்தத்தாலே கூப்பிட்டதோ வென்ன வருளிச் செய்கிறார் (அதுவு மித்யாதி).

"மன்னும்" என்றதின் பொருளருளிச்செய்கிறார் (அது தனக்கித்யாதி). "கண்ணன்" என்றத்தால்-நீ சொன்னவர்த்தத்தையே யுனக்கு நான் உபதேசிக்க வேண்டிற்றே! என்னும் தாத்பாயத்தை ஸ்ப்புரிப்பிக்கிறார் (அவனித்யாதி) ... ... ... ... ... ... (க)

(க) க-திரு-சுஈ. (உ) சிறியதிரு-ருO.
(ங) கீ-கஅ-சுசு.

மூ.—மண்ணிடந்தேனமாகி மாவலி வலி தொலைப்பான்
விண்ணவர் வேண்டச் சென்று வேள்வியிற் குறையிரந்தாய்
துண்ணெனமாற்றார் தம்மைத் துலைத்தவர் நாங்கைமேய
கண்ணனே காவளந்தண் பாடியாய் களைகணீயே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏனமாகி | ஆதிவராஹமாய்க் கொண்டு | துலைத்தவா | ஸம்ஹரித்த வீரர்கள் வர்த்திக்கிற |
| மண் | அண்டபித்தியி லழுந்தின பூமியை | நாங்கை | திருநாங்கூரில் |
| இடந்து | குத்தியெடுத்து, | காவளந்தண் பாடியாய் | திருக்காவளம் பாடியென்னும் திவ்ய தேசத்தில் ஸந்நிஹிதனயிருப்பவனே! |
| மாவலி | மஹாபலியினுடைய | மேய | (அந்ததிவ்ய தேசத்தில்) நித்யவாஸம் பண்ணுமவனை |
| வலி | பலத்தை | கண்ணனே | க்ருஷ்ணனே! [னும். |
| தொலைப்பான் | போக்குகைக்காக | நீயேகளைகண் | நீயே ரக்ஷகனுகவே |
| விண்ணவா | தேவாகள் | | காவளந்தண்பாடி யென்று-கா-சோலைகளுடைய, வளம்-ஸம்ருத்தியினாலே, தண்-குளிர்ந்திருக்கிற, பாடி - திவ்யதேசம் என்று சப்தார்த்தம் கண்டுகொள்வது. (௨) |
| வேண்ட | ப்ரார்த்திக்க | | |
| சென்று | போய் [தில் | | |
| வேள்வியில் | (அவனுடைய) யாகத் | | |
| குறை | தனக்குக் குறையாயிருந்த பூமியை | | |
| இரந்தாய் | யாசித்தவனே! | | |
| துண்ணென | சீக்ரமாக | | |
| மாற்றார்தம்மை | சத்ருக்களை | | |

வ்யா —இரண்டாம்பாட்டு. (மண்ணிடந்தேனமாகி) காவலாக இட்டுவைதத கடல்தானே பாதக (ஸாதக) மானவாறே நீருக்கும் சேற்றுக்கு மிறுயாத வடிவைக்கொண்டு பூமியை யிடந்தெடுத்து. (மாவலி வலிதொலைபபான்) மஹாபலி பக்கலிலே ஔதார்யமென்றொரு குணம கிடக்கையாலே, ராவணாதிகளைபபோலே தலையை யறுக்கவேண்டிற்றில்லை; ஆனாலும், தேவர்களை நெருக்குகையாலே, ராவணன்செய லுண்டாயிருந்தது; நிரஸிக்கவேண்டி யிருக்கசெய்தே யாட்டிற்றிலன்; அவனை யழிக்கமாட்டாதே தன்னையழித்தானாய்த்து. கொடுத்து வளர்ந்தகையைக்கொண்டு தானிரந்தானாய்த்து. மஹாபலியினுடைய மிடுக்கை யழிக்கைக்காக, அவனாலே நோவுபட்ட தேவர்களர்த்திக்க. (சென்று) அவனுடைய யஜ்ஞவாடத்திலேசென்று. (வேள்வியில்)

தனியிருப்பிலன்றிக்கே. (குறையிரந்தாய்) அவாப்த ஸமஸ்தகாமனை தான் குறைப்பட்டிரந்தானாய்த்து. தேவர்கள் குறை கண்டவாறே, தான் குறைவாளனாயிரந்தானாய்த்து.

(துன்னெனவித்யாதி) அவ்வூரிலுள்ளார்க்கு இந்த்ராதிகள் படியில்லையாய்த்து. அவனை இரப்பாளனாக்கித் தாங்கள் வயிறு வளரார்களாய்த்து. மஹாராஜரைப்போலே தங்களை யழியமாறிநோக்குவர்கள். (க) "அதஹரிவரநாதঃ ப்ராப்ய ஸங்க்ராமகீர்த்திம் நிசிசரபதி மாஜௌ யோஜயித்வா ச்ரமேண" - அதஹரிவரநாதঃ ப்ராப்ய ஸங்க்ராமகீர்த்திம் நிசிசரபதி மாஜௌ யோஜயித்வா ச்ரமேண" அவன் கண்டறியாத பயத்தோடே தனுக்கென்னும்படி பண்ணி. (காவளந்தண்பாடியாய்களைகணீயே) அவ்வூரிலுள்ளாரிலே யொருவனாய்ப் புகுந்திருக்கிற நீயே யெனக்கு ரக்ஷகனாகவேணும். ... ... ... ... ... (உ)

அரு.—இரண்டாம்பாட்டு. (மன்னித்யாதி) கீழ்ப்பாட்டிலே - ஸ்ரீகஜேந்த்ரரக்ஷணம் பண்ணுமத்தை யநுஸந்தித்தார், அது தானும், பெரிய திருவடியை மேறகொண்டு கையுந் திருவாழியுமாய் தன் நிறம் குலையாமே யுதவினதாயிருந்தது, தம்மார்த்தியின் மிகுதியாலே தன்னை யழிய மாறிச்செய்த ஆபத்ரக்ஷணங்களைச் சொல்லிக்கொண்டு மீளவும் சரணம் புகுகிறாரென்று ஸங்கதி.

ராவணாதிகளைப்போலே முடிக்கவொண்ணாதோ, வலிதொலைப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (மஹாபலியித்யாதி). தன்னை யழிக்கையாவதென்னென்ன வருளிச்செய்கிறா (கொடுததித்யாதி).

துன்னென - சீக்ரமாக, மாறுஸர்தம்மை - சத்ருக்களை, துலைத்தவர் - ஸம்ஹரித்தவரென்று சப்தார்த்தமாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அவ்வூரிலித்யாதி). விவரிக்கிறா (அவனை யித்யாதி வாக்யத்வயத்தாலே) ... ... ... ... ... ... ... ... (உ)

மூ.—உருத்தெழு வாலி மார்வி லொருகணை யுருவ வோட்டிக்
கருத்துடைத்தம்பிக்கின்பக் கதிர் முடி யரசளித்தாய்
பருத்தெழு பலவும் மாவும் பழம் விழுந்தொழுகு நாங்கைக்
கருத்தனே காவளந்தண்பாடியாய் களைகணீயே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எழு | வ்ருத்தியடையாநின்ற | வாலி | வாலியினுடைய |
| உருத்து | கோபத்தை யுடையவனை | மார்வில் | மார்பில் |
| | | ஒருகணை | ஒருபாணத்தை |

(க) ரா-யு-௭௦-உ௯.

| | | | |
|---|---|---|---|
| உருவ | நன்றாகத் தைக்கும்படியாக | பருத்து | பருமனைக்கொண்டு |
| ஓட்டி | ப்ரயோகித்து | எழு | முளையாகின்றவும் |
| கருத்துடை | உன் திருவுள்ளத்துக்கு விஷயமாய் | பலவும் | பலாமரத்தி னுடைய |
| தம்பிக்கு | (அந்த வாலியினுடைய) தம்பியானமஹாராஜாக்கு | மாவும் | மாமரங்களுடையவும் |
| இன்பம் | ஸுகாவஹமாய் | பழம் | பழங்களானவை |
| கதிர் | தேஜஸ்ஸை யுடைத்தான | விழுந்து | கீழே விழுந்து |
| முடி | கிரீடத்தையும் | ஒழுகும் | தேன் வெள்ளமிடாநின்ற |
| அரசு | ராஜ்யத்தையும் | | நாங்கைக் காவளந்தண் பாடியாய்! |
| அளித்தாய் | க்ருபை பண்ணினவனே! | கருத்தனே | ஸமர்த்தனானவனே! |
| | | | களைகண்நீயே. (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (உருத்தித்யாதி) உருவென்று - சீற்றம். (௧) வெஞ்சினத்தவேழ வெண்மருப்பொசித்துருத்தமாகஞ்சனைக்கடந்து" என்றதிறே. மிக்கசீற்றத்தை யுடையனாய், "அகாலத்திலே வந்து அறைகூறுகிறவன்றானோ" என்று பெரிய கிளர்த்தியோடே வந்து தோற்றின. (வாலிமார்விலொருகணையுருவவோட்டி) விட்டார் விட்டவம்புகளடங்கலும் வாய்மடிந்து போமித்தனையாய், தனக்கோரழிவில்லாதபடியிருக்கிற வாலியுடைய திண்ணிய மார்விலே (௨) ‹‹ஏகேந மஹேஷுணா-ஏகேந மஹேஷுணா›› என்கிறபடியே-கைக்கெட்டிற்றொரம்பைவாங்கி மறுபாடுருவத் தைக்கும்படி விட்டு. ஓசழக்காக விட்டவம்புதானே மறுபாடுருவும்படி நடத்தி. (கருத்தித்யாதி) வாலிசெலுத்திப்போந்த ராஜ்யத்தை அப்படி நடத்துகைக்கீடான கருத்தையுடையவனென்னுதல்; வாலிபேர்கேட்க வந்மடைந்து கிடந்த ஸுக்ரீவன்றன்னையே (௩) ‹‹நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண-நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண›› என்னச் செய்தேயிறே பின்னையுமவர்களை ஜயிப்பித்தது. உன்திருவுள்ளமுடைய மஹாராஜர்க்கென்றுமாம். (௪) [தத்ராஜ்யே - தத்ராஜ்யே] ஸிம்ஹம்கின்ற முழஞ்சிலே யான்பேடையைக் கொடுபுக்கு நிறுத்தினாப்போலே யாய்த்து. [ராகவ:-ராகவ:] அளவுடையார் அளவில்லாதார் என்றொருவாசியின்றிக்கே, ஆரேனுமாகத் தாங்கள் கொடுத்தாரது ராஜ்யமாம்படி மதிப்புடைய குடியிலே பிறந்தவர்.

---

(௧) இ-௪-வி-௪௩. (௨) ரா-பா-௧-௯௯. (௩) கி-௧-௩௨.
(௪) ரா-பா-௧-௭௦.

(க) "𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑌾 𑌰𑌾𑌜𑌰𑌾𑌜𑍇𑌨 𑌲𑌙𑍍𑌕𑌾𑌯𑌾𑌮𑌭𑌿𑌷𑍇𑌚𑌿𑌤𑌃 - ஸ்ரீமதா ராஜராஜேந லங்காயாமபிஷேசித:" என்றார்களிறே அவன்றன் பரிகரமான சுக ஸாரணர் தாங்களே. [𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑌾 - ஶ்ரீமதா] உனக்கு முடி தந்த ப்ரஹ்மாதிகளுடைய ஐஶ்வர்யம் போலன்றிக்கே, ஊற்றுமாறாத ஸம்பத்துடையவனாலேகாண் அவன் முடிபெற்றது. [𑌰𑌾𑌜𑌰𑌾𑌜𑍇𑌨-ராஜராஜேந] உனக்கு முடிதந்தவர்களுக்கு முடிகொடுக்கப் பிறந்தவனாலே காண். [𑌲𑌙𑍍𑌕𑌾𑌯𑌾𑌮𑌭𑌿𑌷𑍇𑌚𑌿𑌤𑌃 - லங்காயாமபிஷேசித:] இனி உனக்கு ஒருகுடியிருப்புத் தேடிக்கொள்ளாய். அவன்பரிகரமாயிருந்துவைத்து அவன் மிடுக்கையும் ஐஶ்வர்யத்தையும் காணநிற்கச்செய்தே இப்படி சொல்லுகைக்கடி-அவர் கையும் வில்லும் கண்டுபோந்த நாளானமையாலே; "இக்கொசுகு நம்மை என்செய்யப்புகாநின்றதோ" என்று இவன் மதிப்பற நினைத்திருந்தபடியாலே. (இன்பக்கதிர் முடியரசளித்தாய்) இன்பத்தை விளைப்பதாய் ஆநந்தாவஹமாய் மதிப்புடைத்தான முடியையும் அதுக்கு விஷயமான ராஜ்யத்தையும் கொடுத்தருளினாய்.

(பருத்தித்யாதி) ஸ்ரீவாமநன்படியாய்த்து அங்குள்ளவையெல்லாமிருப்பது. அதாவது-தோற்றத்தில் காரியப்பாடுண்டாயிருக்கை. (பழம்) போ (𑌭𑍋) க்யம் குறைவற்று போக்தாக்கள் தேட்டமாயாய்த்திருப்பது. (கருத்தனே) அசக்தன் சக்தனையன்றோ அபாஶ்ரயமாகப் பற்றுவது. (காவளந்தண்) இப்படி சக்தனை நீயே ஸங்கிஹிதனை பின்பு நீயே ரக்ஷகனாகவேணும் ... ... ... ... (௩)

அ௩—மூன்றாம்பாட்டு. (உருத்தித்யாதி) ஶ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆர்த்தியும் மண்ணினுடைய விலக்காமையும் இந்த்ரனுடைய விலக்காமையும் பற்றாசாக ரக்ஷித்தவளவன்றிக்கே, விரோதியான வாலியின் ப(𑌬)லமும் பெருமாளுடைய ஸௌகுமார்யமும்கண்டு இவர் ரக்ஷகராகமாட்டாரென்றிருந்த மஹாராஜருக்கும், ‡ மழுவேந்திக்கொடுத்தாகிலும் அவர் விரோதியைப்போக்கின வபதாநத்தைச் சொல்லிக்கொண்டு சரணம் புகுகிறாரென்று ஸங்கதி.

"உருத்து" என்றது சீற்றத்தைச் சொன்னவிடமுண்டோ வென்னவருளிச்செய்கிறார் (வெஞ்சினத்த வித்யாதி). வாலிமாளக் கணையைப் பொகட்டென்னாதே, "மார்வில்" என்றும் "ஒருகணை" என்றும் விசேஷித்ததுக்குக் கருத்து (விட்டாரித்யாதி) (ஓசழக்காக) அஶ்ரத்தையாக. யோஜநாந்தர மருளிச்செய்யக் கோலி தாத்பர்ய மருளிச்செய்கிறார் (வாலியித்

(க) ரா-யு-௨௮-௨௮. ‡ மழுவேந்துகை-ஸத்யம்பண்ணுகை.

யாதி). (தன்னையே) என்ற வகந்தரம், ஆளாக்கி ஐயிப்பித்தாய், என்று சேஷம். இதுக்கு த்ருஷ்டாந்தம் (ககாங்க்ஷ விஜயமித்யாதி). அர்த்தாந்தரந்தன்னை யருளிச்செய்கிறார் (உன்னித்யாதி). இந்த விரண்டாமர்த்தத்துக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (தத்ராஜய இத்யாதி). "ஸுக்ரீவமேவ தத்ராஜ்யே ராகவ: ப்ரத்யபாதயத் - ஸுக்ரீவமேவ தத்ராஜ்யே ராகவ: ப்ரத்யபாதயத்".

வாலியையாகே தமக்கிஷ்டமானாரை ராஜ்யத்தில் வைத்தமைகண்டவிடமுண்டோ வென்ன (ஸ்ரீமதேத்யாதி). (அடி) என்ற வகந்தரம், என்னெண்ணில என்று சேஷம். "கதிர" தேஜஸ்ஸாய், அத்தாலே-மதிக்கப்பட்டவென்று பலித்த வர்த்ததை யருளிச்செய்கிறார (மதிப்புடைத்தான) என்று.

முளைததன்றே பருக்கவேண்டுவது, பருத்த முளைகூடுமோ வென்ன வருளிச்செய்கிறார (ஸ்ரீவாமந வித்யாதி). தோறறத்தில் காரியப்பாடுண்டாகையாவது-வாமநன்றான் பிறந்தவுடனே வளர்ந்தாப்போலே, இவையும் முளைத்தவுடனே ப(ஃ)ல பர்யந்தமாகை.... ... ... (௩)

மூ.—முளைமுகத்தரக்கன்மாளமுடிகள் பத்தறுத்து வீழ்த்தாங்
கனையவற் கிளையவற்கே யரசளித்தருளினானே
சுனைகளில் கயல்கள் பாயசுரும்பு தேனுகருநாங்கைக்
கனைகழல் காவளந்தண்பாடியாய் களைகணீயே. (௪)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| முளைமுகத்து | போர்முகத்திலே | சுனைகளில் | நீர்நிலைகளில் |
| அரக்கன் | ராவணன் | கயல்கள் | மத்ஸ்யங்கள் |
| மாள | முடியும்படியாக | பாய | (பயந்து) அப்புறத்தே ஓடும்படியாக |
| பத்துமுடிகள் | (அவனுடைய) பத்துத்தலைகளையும் | சுரும்பு | வண்டுகளானவை |
| அறுத்து | சேதித்து [ணி | தேன் | மதுவை |
| வீழ்த்து | கீழே விழும்படிபண் | நுகரும் | (ஆரவாரத்துடனே) பாநம் பண்ணுகின் |
| ஆங்கு | அந்தவிடத்திலே | | |
| அனையவற்கு | அப்படிப்பட்ட ராவணனுக்கு | நாங்கைக்காவளந்தண்பாடியாய்! [ற | |
| இளையவற்கே | தம்பியான விபீஷணனுக்கே | கனை | ஒலியாநின்ற |
| அரசு | ராஜ்யத்தை [ | கழல் | வீரத்தண்டையை யுடையவனே! |
| அளித்தருளினானே | க்ருபை பண்ணினவனே! | களைகண்நீயே. (௪) | |

வ்யா.—நாலாம்பாட்டு. — (முனைமுகத்து) பூசல் நெற்றியிலே.
(அரக்கன்மாள) வஞ்சநத்தாலே பொருதழிக்கப் பார்க்குமவர்கள் தங்க
ளைப்போலன்றியே, பூசல்நெற்றியிலே அவனழியும்படியாக.(முடிகள்
பத்தறுத்து வீழ்த்து) தலைகளையறுத்து ஹோமம்பண்ணி அவ்வழி
யாலே பூண்கட்டின தலைகளையறுத்து விழவிட்டு. (ஆங்கு) அந்தயுத்த
பூமிதன்னிலே, உயிரையுமுடலையும் பிரித்தாப்போலே இருவருமிர
ண்டிடத்திலேயாம்படி ப்ராதிகூல்யத்திலே கைவளர்ந்த அப்படிப்
பட்டவனுக் கிளையவனுக்கே. (அரசளித்தருளினனே) ராஜத்ரோஹத்
தைப்பார்த்தால் ஸம்பந்தமுள்ள விடமெங்கு மழியச்செய்யவேண்டி
யிருக்க, அவன்தம்பிக்கே கொடுத்தாயித்து. அவன்றானும், தோஷ
த்துக்கு (க) "தஸ்யாஹமநுஜோ ப்ராதா-தஸ்யாஹ மநுஜோ ப்ராதா" என்
றிறே சொல்லுவது. மஹாராஜரருளப்பாடிட்ட வநந்தரம் அந்த ப்ரீ
தியிலே நெஞ்சு செல்லாதே, "ஆர்பின்னே பிறந்தவென்னை இப்படி
யருளப்பாடிடுவது" என்று அதிலே தரைப்பட்டானிறே.

(சுனை) சுனைகளிலே வர்த்தியாநின்றுள்ள கயல்களானவை, சுரும்
புகள் மதுபாநம் பண்ணுகிறபோதை ஆர்ப்பரவத்தை யநுஸந்தித்து,
தன்மேலே விழுகிறனவாகக்கொண்டு பாயாநின்றுள்ள திருநாங்கூரி
லே. (கனையித்யாதி) ஆபரணவொலியைச் சொல்லுதல்; செறிந்த
வீரக்கழலை யுடையவென்னுதல். (உ) "ஏதத்வ்ரதம் மம - ஏதத்வ்ரதம்
மம" என்கிறபடியே ரக்ஷிக்கைக்கீடாக வீரக்கழலிட்டு அதுக்கீடாக
ஸந்நிஹிதனுமாயிருக்கிற உன்னையொழிய வெனக்கபாஶ்ரயமுண்
டோ? ... ... ... ... ... ... ... (௪)

அரு.—நாலாம்பாட்டு. (முனையித்யாதி) வாலியை யெதிரிடாதே
ஒளியம்பாலேயழித்து அவன் தம்பிக் கரசளித்த வனவன்றியே, எதிரம்பு
கோத்துப்பூசல் தலையிலே வெற்றிபெற்று அவன்தம்பிக் கரசளித்த வப
தாநத்தை யநுஸந்தித்து சரணம் புகுகிறாரென்று ஸங்கதி.

அரக்கன் மாளப்பண்ணி என்ன வமைந்திருக்க, "முடிகள் பத்தறுத்
து வீழ்த்து" என்று இத்தனை யருளிச்செய்கையாலே தோற்றின துஷ்கர
த்தையை யுபபாதிக்கிறார் (தலைகளை யித்யாதி). "ஆங்கனையவற்கு" என்ற
துக்கு-அந்த யுத்தரங்கத்தில் நின்ற தம்மோடொத்தவற்கென்று சப்தா
ர்த்தமாய், அதாவது-தாமவனுடைய உடலையு முயிரையும் பிரித்தாப்போ
லே (ங) "ப்ராணேப்யோபி கரீயஸீம்-ப்ராணேப்யோ பிகரீயஸீம்" என்னும்படி

(க) ரா-யு-கஎ-கஉ. (உ) ரா-யு-கஅ-௩௩. (ங) ரா-கி-உ-எ-௩௩.

வான பிராட்டியையும் தம்மையும் பிரித்த ராஜத்ரோஹிக்கென்று கருத்தாய், அத்தை யருளிச்செய்கிறார் (அந்த வித்யாதி). (௧) "[Grantha] - விபீஷணஸ்து தர்மாத்மா" என்று அவரைக் கொண்டாடி யிருக்க, குற்றந்தோன்ற தத்ஸம்பந்தத்தை முன்னிட்டுச் சொல்லுகை சேருமோ வென்ன வருளிச்செய்கிறார் (அவன்றனுமித்யாதி). தாம் சரணம்புகுகிறவ ராகையாலே தமக்கு த்ருஷ்டாந்த பூதரிடத்தில் குணந்தன்னைச் சொல்லாரிறே; அவர் கருத்தையே சொல்லவடுக்குமென்று கருத்து. தோஷாநுஸந்தாநமானவழி எங்ஙனே, ஸ்வரூபகதநமாக வொண்ணாதோ வென்ன வருளிச்செய்கிறார் (மஹாராஜரித்யாதி). அபயப்ரதாநாநந்தரம் தத்ஸம்பந்தத்தைச் சொல்லுகைக்கு தோஷாநுஸந்தாநம் விநா சொல்லவொண்ணாதென்று திருவுள்ளம்.

சுரும்புகள்-வண்டுகள். களையாநின்றுள்ள, கழல்-திருவடிகளை யுடையவென்று கிழருளிச்செய்த பதத்வயத்துக் காத்தாந்தரம் (செறிந்தவித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௪)

மூ.—படவரவுச்சிதன்மேல் பாய்ந்து பன்னடங்கள்செய்து
மடவரல்மங்கை தன்னை மார்வகத்திருத்தினானே
தடவரை தங்கு மாடத் தகு புகழ் நாங்கைமேய
கடவுளே காவளந்தண் பாடியாய் களைகணீயே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| படம் | (விரிக்கப்பட்ட)படங்களையுடைய ஞன | இருத்தினானே | நித்யமாக வைத்தவனே! |
| அரவு | காளியனுடைய | தடம் | விசாலமான |
| உச்சிதன்மேல் | சிரஸ்ஸில் | வரை | பர்வதங்கள் போன்ற |
| பாய்ந்து | குதித்து | மாடம் | மாளிகைகள் |
| பல்நடங்கள் | அநேக விதங்களான நர்த்தநங்களை | தங்கு | தங்காநிற்பதாய் |
| செய்து | பண்ணி [வளாய் | தகு | தகுதியான |
| மடவரல் | மடப்பத்தை யுடைய | புகழ் | கீர்த்தியானது |
| மங்கைதன்னை | நித்யயௌவந முடையளான பெரிய பிராட்டியை | மேய | சேர்ந்திருக்கிற |
| | | நாங்கைகாவளந்தண்பாடியாய்! | |
| | | கடவுளே | ஸர்வாதிகனே! |
| மார்வகத்து | திருமார்பிலே | களைகண்நீயே. (௫) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (படவரவித்யாதி) மடுவின்கரையிலே சென்று உவப்புத்தட்டி ஆர்த்துக்கொண்டபோது, "ஆர்தான் என்கல

(௧) ரா-யு-௧௭-௨௪.

விருக்கையில் நின்று என்னைத் துரந்துவருகிறவன்" என்று சீறி, படம் விரித்துக்கொண்டு வந்துதோற்றின காளியனுடைய உச்சியிலே இலக்காகப்பாய்ந்து, பரதசாஸ்த்ரத்தில் இத்தைக்கொண்டே இன்னும் வேண்டும் லக்ஷணங்களெழுதிக்கொள்ளலாம்படி பலவுகைப்பட்ட கூத்துக்களையாடி. (மடவரல்மங்கைதன்னை) ஆஸ்ரிதஸம்ரக்ஷணத்துக்கும் அநாஸ்ரிதஸம்ஹாரத்துக்கு முறுப்பாகப் பிராட்டியோடே நித்யஸம்ஸ்லேஷமாய்ச் செல்லாநிற்கும்; அன்றியே, அவளோடணைகைக்கீடான ஸௌகுமார்யத்தை யுடையவன்கிடீர் ப்ரதிகூலனான காளியன் தலையிலே பாய்ந்தானென்னுதல். ஆத்மகுணோபேதையாய் நித்யயௌவந ஸ்வபாவையான பெரியபிராட்டியாரைத் திருமார்விலே வைத்தவனே!

(தடவரையித்யாதி) அவ்வூரில் மாடங்களைக்கண்டால் குலகிரிகள் நீஸ்த்த (நீச்ச) மாம்படியிருக்குமாய்த்து. அன்றிக்கே, தடவரை போலே யிருந்துள்ள மாடங்கள் தங்காநிற்பதாய், சொன்னசொன்ன ஏற்றங்களெல்லாம் தகும்படி யிருக்கிற திருநாங்கூரில். (கடவுளே) கடவுளென்று - பரதேவதையென்றபடியாய், ஸர்வாதிகனான ஸர்வேஸ்வரனே! ஸர்வாதிகனான நீயே ஸந்நிஹிதனுமாயிருக்க நான் வேறொருவரைத் தேடிப்போகவோ? ... ... ... ... (ரு)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (படவரவித்யாதி) கீழெல்லாம்-ஆஸ்ரிதர்க்கு விரோதிகளைப்போக்கி ரக்ஷித்தபடி சொன்னார், அவ்வளவன்றிக்கே, எதிரிட்ட ஜந்துவே சரணமடையும்படி பண்ணி அதுக்கு சரண்யனானுயென்று அவ்வபதாநத்தைச் சொல்லிக்கொண்டு சரணம்புகுகிறாரென்று ஸங்கதி.

அரவானபோதே படமுண்டாயிருககை, விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (மடுவித்யாதி). (உவப்புத்தட்டி) ஹர்ஷித்துக்கொண்டு. (துரந்து) துடர்ந்து. உச்சிமேலென்னாதே, "உச்சிதன்மேல்" என்கையாலே அதின் நடுவே யென்று தோற்றி, அதின் பலிதார்த்தம் (இலக்காக) என்றது. ... ... ... .. ... ... ... (ரு)

கூ.—மல்லரை யட்டு மாளக் கஞ்சனை மலைந்து கொன்று
பல்லரசவிந்து வீழப் பாரதப்போர் முடித்தாய்
நல்லரண் காவின் நீழல் நறை கமழ் நாங்கைமேய
கல்லரண் காவளந்தண் பாடியாய் களைகணீயே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மல்லரை | சாணூராதி மல்லவர்கத்தை | அரண் | அழகை (நிழலை) டைத்தான |
| அட்டு | யுத்தம்பண்ணி | காவின் | சோலைகளுடைய |
| மாள | முடியச்செய்தும் | நீழல் | நிழலிலே |
| கஞ்சனை | கம்ஸனை | நறை | பரிமளமானது |
| மலைந்து | எதிரிட்டு | கமழ் | வாஸியாநின்ற |
| கொன்று | ஸம்ஹரித்தும் | நாங்கை | திருநாங்கூரிலே |
| பல் அரசு | அநேகக்ஷத்ரியர்களை | மேய | பொருந்தி வர்த்திக்கிற |
| அவிந்து வீழ | நசித்துப்போம்படியாக | கல் | த்ருடமான |
| பாரதப்போர | பாரதயுத்தத்தை | அரண் | ரக்ஷையையுடையரைக் கொண்டு |
| முடித்தாய் | நிறைவேற்றினவனே! | | |
| நல் | விலக்ஷணமான (நெருங்கிய) | காவளந்தண்பாடியாய்! | களைகண் நீயே. (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (மல்லரையட்டுமாள) பெரிய கிளர்த்தியோடேவந்து தோற்றின சாணூரமுஷ்டிகாதி மல்லவர்க்கத்தைப் பொருது, இளைப்பித்து விடுகையன்றிக்கே முடியும்படி யழியச்செய்து. மல்லர் முடிந்தார்களென்று கேட்டவநந்தரம், பெரியசீற்றத்தோடே வந்து தோற்றின கம்ஸனை யெதிரிட்டுச சென்றுகொன்று. இது பருவம் நிரம்புவதற்கு முன்பு செய்த காரியம; இனிமேல் பருவம் நிரம்பினபின்பு செய்தகாரியம் சொல்லுகிறது.(பல்லரசித்யாதி) துர்வர்க்கமடையக்கூடு கொண்டதாய்த்து. துர்யோதநாதிகளோடே க்ஷத்ரியரென்று பேர்பெற்றாரடங்கலும் முடிந்துபோம்படியாக பாரதஸமரத்தை நடத்தி பூபாரத்தைப் போக்கினவனே!

(நல்லரணித்யாதி) செறிந்த நிழலையுடைத்தான சோலைநிழலிலே (க)''ஸர்வகந்த:-ஸர்வகந்த:'' என்கிறவஸ்து நித்யவாஸம பண்ணுகிற தேசமென்று தோற்றும்படி மிக்க பரிமளத்தையுடைத்தா யிருக்கிற திருநாங்கூரில். (கல்லரண்) இவருடைய உபாயம் ஸுரக்ஷிதமாகப்பெற்றதாய்த்து ஸுரக்ஷிதமான உபாயத்தைவிட்டு வேறேயொன்றைத் தேடிப்போகவோ? ... ... ... ... ... (௬)

அரு.—ஆறும்பாட்டு. (மல்லரையித்யாதி) ஒரு காரியரக்ஷணம் மாத்ரமன்றியே,பொறைக்கு உவாத்தாய் குற்றங்களைகாட்டக்கடவனல்லாத ஸர்

(க) சாந்தோ-௩-௧௪.

வம். ஸஹிக்கும் பொறுக்கவொண்ணாதபடி ஸ்வாமித்ரோஹிகள்மிக்கபடியாலே தானே சென்று முறையிட்ட பூமிக்காக வந்து பிறந்து, இளம்பருவமே பிடித்துச்செய்த வபதாநங்களைச் சுருக்கி யநுஸந்தித்துக்கொண்டு, "கண்ணனே களைகண்" என்றத்தை ஸ்த்திரீகரித்து சரணம்புகுகிறுரென்று ஸங்கதி.

நல்லவரணுயிருக்கிற காவினுடைய நிழலில், நிறை-பரிமளமானது, கமழாநின்றுள்ள நாங்கையென்று சப்தார்த்தமாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (செறிந்த வித்யாதி) ... ... ... ... (௬)

மூ.—மூத்தவற்கரசுவேண்டி முன்பு தூதெழுந்தருளி
மாத்தமர் பாகன்வீழ மதகரி மருப்பொசித்தாய்
பூத்தமர் சோலையோங்கிப் புனல் பரந்தொழுகு நாங்கைக்
காத்தனே காவளந்தண் பாடியாய் களைகணீயே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை |
|---|---|---|---|
| மூத்தவற்கு | பெரியோரான தாமபுத்ரனுக்கு | மருப்பு | கொம்பை |
| அரசுவேண்டி | ராஜ்யத்தை (கொடுக்க) இச்சித்து | ஒசித்தாய் | முறித்தவனே! |
| முன்பு | முதலிலே | பூஅமா | பூக்கள்நிறைந்த |
| தூதுஎழுந்தருளி | தூதுபோயும் | சோலை | சோலைகள் |
| மாத்து | ஆனையின்மேல் | ஓங்கி | உயர்ந்து |
| அமர் | பொருந்தியிருக்கிற | புனல் | ஜலமானது |
| பாகன் | ஆனைக்காரன் | பரந்து | (அச்சோலையைச் சுற்றி) வ்யாபித்து |
| வீழ | விழுந்து முடியும்படி | ஒழுகும் | பாயாநின்ற |
| மதம் | கொழுப்படைந்த | நாங்கைக்காவளந்தண்பாடியாய்! | |
| கரி | குவலயாபீடத்தினுடைய | காத்தனே | ரக்ஷகனே! |
| | | களைகண் நீயே. | (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மூத்தவற்கித்யாதி) "ப்ராப்தனானவனிருக்க அப்ராபதன் தலையிலே முடியை வைக்கவொண்ணாது, ஜ்யேஷ்டனானவனுக்கு ராஜ்யம்வேணும்" என்று அதுக்காக முன்பு தூதுபோயருளி. த்ருதராஷ்ட்ரன் ஜ்யேஷ்டனாயிருக்கச்செய்தே ராஜ்யம் பண்ணுகைக்கு யோக்யதையில்லாதபடி அவயவத்திலே வைகல்யம் பிறந்திருக்கையாலே பாண்டு ராஜ்யம் பண்ணிப்போந்தான், அவனு

டைய வநந்தரத்திலே "எங்களதிறே ராஜ்யம்" என்று தாங்கள் பண்ணத் துடங்கினார்கள். "அங்ஙன் மர்யாதாபங்கம்பண்ணவொண்ணாது, பிதாவினுடைய ராஜ்யம் புத்ரன் பண்ணவேணும்" என்று அதுக்காகத்தூதெழுந்தருளினான். (மாத்தமரித்யாதி) தான்முடிந்தாலும் ஆனைக்கழுத்திலிருப்பு இளகாதபடி அதிலே மிகவும் பொருந்தினபாகனானவன் விழுந்து முடிந்துபோம்படி, மதமுதிதமாயிருந்துள்ள குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேந முறித்தாய்!

( பூத்தமரித்யாதி ) மிக்க பூக்களையுடைத்தாய் ஓங்கியிருந்துள்ள சோலையும், அத்தை வளர்க்கைக்கீடான ஜலமும் பரந்துபாயாநின்றுள்ள திருநாங்கூரில். (காத்தனே) (க) "ஏதத் வ்ரதம் மம"என்கிறபடியே-இத்தையடைய ரக்ஷிக்கைக்காகக் காவல்பூண்டிருக்கிறவனே ! (காவளமித்யாதி) ரக்ஷிக்கக்கடவதாக ஏறிட்டுக்கொண்டு அஸந்நிஹிதனாயிருக்கை யன்றிக்கே, திருக்காவளம்பாடியிலே ஸந்நிஹிதனான நீயே எனக்கு ரக்ஷகனாகவேணும். ... ... (எ)

அந.—ஏழாம்பாட்டு. (மூத்தவற்கித்யாதி) பாரதப்போர் முடிக்கைக்கு முன்செய்த ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தையும், மல்லரை யட்டதுக்கு முன்பான குவலயாபீட நிரஸநத்தால் தோற்றின விரோதி நிவர்த்தகத்வத்தையு மநுஸந்தித்து சரணம் புகுகிறாரென்று ஸங்கதி.

மூத்தவரான பாண்டுபுத்ரற்கு ராஜ்யம்வேண்டி என்று சப்தார்த்தம் விவக்ஷித்தருளிச் செய்கிறார் (ப்ராப்தனானவனிருக்க வித்யாதி). பாண்டு மகனாகையாலே ப்ராப்தனென்று கருத்து. த்ருதராஷ்ட்ரனன்றோ பாண்டுவுக்கு மூத்தவன், அவன் ஸந்ததிக்கு ப்ராப்தியில்லையோ வென்ன வருளிச்செய்கிறார் (த்ருதராஷ்ட்ர வித்யாதி). "மா" என்று-ஆனையாய், "அத்து"-ஸப்தம்யர்த்தத்திலேயாய், ஆனையிலமர்ந்த பாகனென்றாய், பாகனானபோதே ஆனையின் மேலிராநின்றே, இங்ஙன் விசேஷித்ததுக்குக் கருத்தென்னென்ன வருளிச்செய்கிறார் (தானித்யாதி). (இளகாதபடி) நழுவாதே.(எ)

மூ.—எவிளங் கன்னிக்காகி யிமையவர்கோனைச் செற்றுக்
காவளம் கடிதிறுத்துக் கற்பகங்கொண்டு போந்தாய்
பூவளம் பொழில்கள் சூழ்ந்த புரந்தரன் செய்த நாங்கைக்
காவளம்பாடி மேய கண்ணனே களைகணீயே. (அ)

(க) ரா-யு-கஅ-௩௩.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏவு | யுத்தத்திலே | கொண்டு | கொண்டுவந்தவனே! |
| இளங்கன்னிக் | பாலையான ஸத்யபா | போந்தாய் | |
| காகி | மைக்காக | வளம் | ஸௌந்தரமான |
| இமையவர் | தேவேந்த்ரனை | பூ | புஷ்பங்களையுடைய |
| கோனை | | பொழில்கள் | சோலைகளாலே |
| செற்று | நிரஸித்து | சூழ்ந்த | சூழப்பட்டதாய் |
| கா | தோட்டத்தினுடைய | புரந்தரன் | இந்த்ரனாலே |
| வளம் | அழகை | செய்த | நிர்மிக்கப்பட்டதான |
| கடிது | சீக்ரமாக | நாங்கை காவளம்பாடி மேயகண் | |
| இறுத்து | அழியச்செய்து | ணனே கணகணீயே! (அ) | |
| கற்பகம் | கற்பகவ்ருக்ஷத்தை | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (ஏவிளங்கன்னியித்யாதி) ஏவிலே-யுத்தத்திலே; (இளங்கன்னிக்காகி) எல்லாம்பட்டும் அபேக்ஷிதம்செய்து கொடுக்க வேண்டும்படியிருக்கிற ஸ்ரீஸத்யபாமைப் பிராட்டிக்காகவென்னுதல்; அன்றிக்கே, சசி (ஶசீ) யும் ஸத்யபாமைப்பிராட்டியுங்கூடவிருக்கச்செய்தே கல்பக வ்ருக்ஷத்தின் பூ வந்ததாய், அத்தை அவள் கையிலேவாங்கி, தேவஸ்த்ரீயான வபிமாநம்தோற்ற, "நீங்கள் மநுஷ்யரிறே, உங்களுக்கிதுபொருந்து, தலைநோம்" என்றுப்போலே சில அநாதரோக்திகளைப்பண்ண, அநந்தரம் அவளும்போந்து "இப்படிசெய்தாள்" என்ன, "நீயிப்போதே அந்த கல்பகவ்ருக்ஷத்தைக் கொடுவந்து என்முற்றத்திலே நட்டுத்தரவேணும்" என்று அவளேவ என்னவுமாம். (இமையவர்கோனைச்செற்று) தேவஜாதிகளுக்கெல்லாம் நியாமகனையிருக்கிற இந்த்ரனை யழியச்செய்து, சோலையழகைச் சடக்கென வழியச்செய்து, கல்பகவ்ருக்ஷத்தைக் கொண்டுபோந்தாய்.

(பூவளமித்யாதி) தர்சநீயமான பூக்களையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட இந்த்ரனேற்றின திருநாங்கூரில். ஸ்வர்க்கத்திலுண்டான வேண்டப்பாடு பூமிக்குமுண்டாகவேணும் என்று அக்கட்டளையிலே இந்த்ரனாலே சமைக்கப்பட்டது திருநாங்கூரென்று சொல்லக்கடவது. அன்றப்படி ஸத்யபாமைப்பிராட்டிக்குதவினது,எல்லார்க்கு மொக்க உதவுகைக்காகத் திருக்காவளம்பாடியிலே வந்து ஸந்நிஹிதனை நீயே ரக்ஷகனாகவேணும். ... ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (ஏவிளமித்யாதி). பூமிப்பிராட்டி இரக்க பூ பாரநிரஸநார்த்தமாக அவதரித்து ஆஶ்ரித பரதந்த்ரனாய்ப் பல்லரசவிந்து வீழப்பண்ணின வளவன்றியே, ஸ்ரீஸத்யபாமைப் பிராட்டிக்காக தேவர்களுடைய துர்மாநத்தைப் போக்கினாய்! நீயே ரக்ஷகனாகவேணுமென்று சரணம் புகுகிறாரென்று ஸங்கதி.

"ஏவிளங்கன்னி" என்றவிடத்தில் வகாரம் குறைந்திருக்கிறதாய்த் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி). (அழியச்செய்து) என்றது-கர்வபங்கம் பண்ணி யென்றபடி.

பாரிஜாதத்தைக் கொடுத்தாப்போலே ஆஶ்ரித பாரிஜாதத்தைக் கொடுக்கவந்தாயென்று ப்ரக்ருதோபயோகத்தைக் காட்டுகிறார் (அன்றப்படியித்யாதி.) ... ... ... ... ... ... ... (௮)

மூ.—சந்தமாய்ச் சமயமாகிச் சமயவைம்பூதமாகி
அந்தமா யாதியாகி யருமறை யவையு மானாய்
மந்தமார் பொழில்கடோறும் மடமயிலாலு நாங்கைக்
கந்தமார் காவளந்தண்பாடியாய் களைகணீயே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சந்தமாய் | ச(ச்ச)ந்தஸ்ஸுக்கு நியாமகனாய் | அரு | அர்த்தமறிவதற்கு அஶக்யமான |
| சமயமாகி | (அந்த சந்தஸ்ஸுக்களுடைய ஆறெழுத்து எட்டெழுத்தென்கிற) வ்யவஸ்தைக்கு நியாமகனாய் | மறையுமானாய் | வேதங்களுக்குநிர்வாஹகனானவனே! |
| | | மந்தம் | மந்தார வ்ருக்ஷங்கள் |
| | | ஆர் | நிறைந்திருக்கிற |
| | | பொழில்கள் தோறும் | சோலைகளெங்கும் |
| சமயம் | வ்யவஸ்திதஸ்வபாவங்களான | மடம்மயில் | மடப்பத்தை யுடைய பெண் மயில்களானவை [ற |
| ஐம்பூதமாகி | பஞ்சபூதங்களுக்கு நியாமகனாய் | ஆலும் | நர்த்தநம் பண்ணுகின் |
| அந்தமாய் | லயத்துக்குக் காரணபூதனாய் [பூதனாய் | நாங்கை | திருநாங்கூரிலே |
| ஆதியாகி | ஸ்ருஷ்டிக்குக்காரண | கந்தம் ஆர் | பரிமளம் மிக்கிருந்துள்ள |
| அவை | அவ்வர்த்தங்களை ப்ரதிபாதிக்கிற | | காவளந்தண் பாடியாய் களைகண்நீயே. (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (சந்தமாய்) ச (ழ்) ந்தஸ்ஸுக்கு நியந்தாவாய். (சமயமாகி) இன்னதனை அக்ஷரங்கள் கூடினது அநுஷ்டுப்பு, த்ருஷ்டுப்பு, ஜகதி என்றுப்போலே சொல்லப்படுகிற இந்த வ்யவஸ்த்தைக்கு நியாமகனாய். (சமயவைம்பூதமாகி) எல்லாவற்றுக்குமடியாய் வ்யவஸ்த்தித ஸ்வபாவமான ப்ருதிவ்யாதி பூதபஞ்சகத்துக்கும் நியாமகனாய். (அந்தமாய்) இவ்வருகுண்டான கார்யவர்க்கமடைய அழிந்து கிடந்தவன்று, (க)"ஸதேவ-ஸதேவ" என்கிறபடியே இவையடங்கத் தன் பக்கலிலே லயித்துத் தானொருவனுமே என்னும்படி யிருக்குமவனுமாய்; இவற்றையடங்க விபக்தமாக்கிக் கார்யங்கொள்ள நினைத்தவன்றைக்கு, அப்படி கார்யங்கொள்ளலாம்படி இவற்றுக்கடங்கலும் காரணபூதனுமாய். ஆத்யந்தங்களுக்கு நியாமகனாயென்றபடி. (அருமறையவையுமானாய்) இப்படி கார்யாவஸ்த்தமாயும் காரணாவஸ்த்தமாயும் போருகிறது ப்ரஹ்மமொன்றுமே என்று வேதங்களாலே ப்ரதிபாதிக்கப்படுமவனுமாய். (மந்தமார்)‡ (மநதாரமார்ந்த) பொழில்களெங்கும் பேடைமயிலானது ஆலியாநின்றுள்ள திருநாங்கூரில். (கந்தமார்) (உ) "ஸர்வகந்தஃ - ஸர்வகந்தஃ" என்கிறவஸ்து நித்யவாஸம்பண்ணுகிற தேசமென்று தோற்றும்படி யிருக்குமாய்த்து, (களைகணீயே) இப்படி நிரதிசயபோக்யனை நீயே ரக்ஷகனாகவேணும். ... ... (கூ)

---

அரு —ஒன்பதாம்பாட்டு (சந்தமித்யாதி). சரணாகதிக் கபேக்ஷிதங்களான சரண்யனானவனுடைய விரோதி நிரஸந அபேக்ஷித பலப்ரதத்வங்களுக்கு உபயுக்தங்களான வபதாநங்களாலே - கார்யாபாதக குணங்களையும், "காவளம்பாடி மேயகண்ணனே" என்கையாலே-ஸௌகர்யாபாதக குணங்களில ஸௌலப்யத்தையு மருளிச்செய்தாராய், இப்பாட்டில்-நிகரில் புகழான வாத்ஸல்யதனதை யநுஸந்திக்கைக்காக, தத்கார்யமான ஸர்வாந்தராத்மதையை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"அந்தம்" நாசமாய், "ஆதி" உத்பத்தியாய், அதுக்கு நியாமகனானபடியை யருளிச்செய்கிறார் (இவ்வருகுண்டான வித்யாதி). "மந்தம்" என்று - மந்தாரவ்ருக்ஷமாய, "ஆர்தல்" மிகுதியாய், அருளிச்செய்கிறார் (பொழில்களித்யாதி) ... ... ... ... ... ... (கூ)

மூ.—மாவளமபெருகி மனனு மறையவர் வாழு நாங்கைக்
காவளம்பாடிமேய கண்ணனைக் கலியன் சொன்ன

---

(க)சாந்தோ-கூ-௨-க. ‡குணடலிதம் ப்ரக்ஷிப்தம் (உ)சாந்தோ-௩-௧௪-௨.

பாவளம் பத்தும் வல்லார் பார்மிசை யரசராகிக்
கோவிளமன்னர் தாழக் குடைநிழல் பொலிவர்தாமே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—ooo—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாவளம் | பெரியஸம்பத்தானது | வளம் | அழகியதான |
| பெருகி | வ்ருத்தியடைந்து | பாபத்தும் | பாசுரங்கள் பத்தையும் |
| மன்னும் | பொருந்தியிருக்கிற | வல்லார் | அப்யஸிக்க வல்லவர்கள், |
| மறையவர் | ப்ராஹ்மணோத்தமர் | | |
| வாழும் | ஸுகமாகவர்த்திக்கிற | பார்மிசை | பூமியிலே |
| நாங்கை | திருநாங்கூரிலே | அரசராகி | ராஜாக்களாயிருந்து, |
| காவளம்பாடி | திருக்காவளம்பாடி என்னும் திவ்யதேசத்திலே | கோ | பூமியிலும் |
| | | இளமன்னர் | யுவராஜாக்களடங்க |
| | | தாழ | கீழ்ப்படும்படியாக |
| மேய | பொருந்தி வர்த்திக்கிற | குடைநிழல் | குடையின்நிழலிலே |
| கண்ணனை | க்ருஷ்ணன் விஷயமாக | பொலிவர் | ஸம்ருத்தரா யிருப்பர்கள். (௧௦) |
| கலியன் | ஆழ்வார் | | |
| சொன்ன | அருளிச்செய்ததாய், | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மாவளமித்யாதி) நிரவதிகமான ஸம்பத்து மேன்மேலன் கரைபுரண்டு அதொருநாள்வரையிலே மாறுகையன்றிக்கே நித்யமாய்ப்போருகிற ப்ராஹ்மணர் வேதார்த்தபூதனான ஸர்வேஶ்வரனைக் கண்ணாலேகண்டு வாழாநின்றுள்ள திருநாங்கூரில் திருக்காவளம்பாடியிலே வந்து நித்யவாஸம்பண்ணுகிற க்ருஷ்ணனை. க்ருஷ்ணாவதாரம் பரதசையோடொக்கச் சொல்லலாம்படியிறே இங்குத்தை ஸௌலப்யம். "ஆழ்வாருளிச்செய்த விதுதன்னை வாயாலே சொல்லுமதுதானே ப்ரயோஜநமாகப்போரும்" என்னும்படி நல்ல ச(ஃ)ந்தஸ்ஸையுடைத்தான இப்பத்தையும் வல்லவர். பாவளமென்றது-பாவினமென்றபடி. பாவளம் பத்தும் வல்லார் பூமியிலே அரசராகி. (கோவிளமன்னர் தாழவித்யாதி) "போகத்தை ப(ஃ)லமாகச் சொல்லில் அதிகாரிகளைக் கிடையாது" என்று, "அபிமதஸாதநமென்னவே கற்பர்கள், பின்னை போகத்திலே கொடுபோய் மூட்டுகிறோம்" என்று, ஐஶ்வர்யத்தை ப(ஃ)லமாகச் சொல்லிற்று. ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

—ooo—

**அரு.**—பத்தாம்பாட்டு. (மாவளமித்யாதி). "பாவளம்" - வளமான பா - அழகிய சந்தஸ்ஸென்று திருவுள்ளம்பற்றி, அழகின்படியை யருளிச் செய்கிறார் (ஆழ்வாரித்யாதி). "வளம்" என்று-ஸம்ருத்தியாய், ‡ இனம் முற்றின ஸம்ருத்தியாக வர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (பாவளமென்ற தித்யாதி). ... ... ... ... (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

—ooo—

நாலாம்பத்து ஆறாந்திருமொழி முடிந்தது.

—ooo—

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நாலாம்பத்து - ஏழாம் திருமொழி

### கண்ணார்கடல் ப்ரவேசம்.



வ்யா.— "காவளம்பாடிமேய கண்ணனே களைகணீயே" என்று சரணம்புக்கவிடத்திலும், ஸம்ஸாரத்திலே சப்தாதிவிஷயங்கள் நடையாடுகிற விடத்தில் தம்மையிருக்கக்கண்டார்; (க) "ప్రియంజనమపశ్యన్తీం పశ్యన్తీం రాక్షసీగణమ్ । స్వగణేన మృగీం హీనాం శ్వగణైరావృతామివ- ப்ரியஞ்ஜநமபஶ்யந்தீம் பஶ்யந்தீம் ராக்ஷஸீகணம்! ஸ்வகணேந ம்ருகீம்ஹீநாம் ஶ்வகணைராவ்ருதாமிவ" என்னும்படியே - இழக்கிறது - நித்ய ஸூரிகளோடேகூட விருக்கிறவிருப்பையும், பெறுகிறது - சப்தாதி விஷயங்களையும் அவற்றுக்குப்பணிசெய்து திரிகையுமாயிராநின்றது. "நீ அசக்தனாயிருந்து என்னபிமதமிழக்கிறேனன்று, நீசக்தனாயிருக்க நானிழப்பதே!" என்ன; "உனக்கபிமதமேது"? என்ன; த்வத்ப்ராப்தி விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை யறுத்துத் தரவேணுமென் கிறார். ... ... ... ... ... ... ... *

**அரு.**—கண்ணார் கடலின்ப்ரவேசம்.— "கண்ணனே களைகணீயே" என்று சரணம் புக்காராகில் இனி அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வ கேஷ்டப்ராப்தி பண்ணிக் கொடுக்கை அவன் கார்யமாயிருக்கத்தானே செய்யாநின்றது, "இடரைக் களையாயே" என்று இவர் ப்ரார்த்திப்பானென்னென்கிற சங்

(க) ரா-ஸு-கரு-௨ ௯.

‡ இது ஸந்திக்தம்.

கையிலே; வ்ருத்த வர்த்திஷ்யமாண கதந பூர்வகம் ஸங்கதியை யருளிச் செய்கிறார் (காவளமித்யாதி). இவ்வாழ்வார், (க) வாடி தொடங்கி திருமந்த்ரத்தைப் பெற்ற ஹர்ஷத்தாலே, ததர்த்தாநு ஸந்தாந பூர்வகமாகத் திருப்பிரிதி முதலாய் திருமலைநடுவாகத் திருநாங்கூரளவும் தமக்கு ப்ராப்யதயா திருவுள்ளம் பற்றியும், இத்திருப்பதிகளில் மண்டின ஸ்ரீ வைஷ்ணவர்களையே ப்ராப்யமாக வெண்ணியும், திருவுள்ளத்தைக் குறித்து மற்றும் ஸம்ஸாரிக ளறியும்படி உபதேசித்துக்கொண்டுவந்தவர், பதறி, திருக்காவளம்பாடியிலே ஒருகால் சொன்னாப்போலே ஒன்பதின்கால் சரணம்புக்கு, அவன் (க) "மாமேகம் ஶரணம் வ்ரஜ-மாமேகம் சரணம்வ்ரஜ" என்ற வர்த்தத்தை அவன் திருவுள்ளத்திலே படுத்த; அவனும், ஸர்வஜ்ஞனாகிலும் இவர் பாசுரம்கேட்டு உகக்குமவனாகையாலே, "இத்தனைநாளும் திவ்யதேசங்களிலே மண்டியிருந்த உமக்கு வேறு அபிமதமேது" என்னும் ப்ரஸ்நரூபத்தாலே (க) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி - ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்ற வர்த்தத்தை இவரையிட்டு வெளியிடப் பண்ணுகிறானென்று திருவுள்ளம். ... ... ... ... ... (க)

மூ.—கண்ணார் கடல்போல் திருமேனி கரியாய்
நண்ணார் முனை வென்றி கொள்வார் மன்னு நாங்கூர்த்
திண்ணார் மதிள்சூழ் திருவெள்ளக்குளத்து
ளண்ணா வடியே னிடரைக் களையாயே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை |
|---|---|---|---|
| கண் ஆர் | இடமுடைத்தான | திண் ஆர் | த்ருடமான |
| கடல்போல் | ஸமுத்ரம்போன்ற (அமுகையும் காம்பீர யத்தையுமுடைய) | மதிள் | ப்ராகாரங்களாலே |
| | | சூழ் | சூழப்பட்ட |
| திருமேனி | திவ்ய விக்ரஹத்தையுடையனை | திருவெள்ளக் குளத்துள் | திருவெள்ளக் குளமென்கிற திவ்யதேசத்தி லெழுந்தருளியிருக்கிற [வனே! |
| கரியாய் | கண்ணனே! | | |
| நண்ணார் | சத்ருக்களுடைய | அண்ணா | நிருபாதிக பந்துவான |
| முனை | யுத்தத்திலே | அடியேன் | அநந்யகதியான அடியேனுடைய |
| வென்றிகொள்வார் | (சத்ருக்களை) ஜயிக்க வல்லரான ப்ராஹ்மணோத்தமர் [கிற | இடரை | துக்கங்களை (ப்ரக்ருதி ஸம்பந்தத்தை) |
| மன்னு | நித்யவாஸம் பண்ணு | களையாய் | அறுத்துத்தரவேணும். |
| நாங்கூர் | திருநாங்கூரில், | | |

(க) க-க-க. (உ) கீதை-கஅ-௬௬.

வ்யா.—முதற்பாட்டு. (கண்ணாரித்யாதி) இவ்வடிவையநுபவிக்கையை யிழக்கப்போமோ. வைத்த கண் வாங்கப் போகாதபடியான, கடல்போலேயிருக்கிற திருமேனியை யுடையவனே! அன்றிக்கே, இடமுடைத்தான கடல்போலே யிருந்துள்ள திருமேனியை யுடையவனே என்றுமாம். ஒருகால், அழகிலே, ஒருகால், காம்பீர்யஸ்வபாவத்திலே. — (நண்ணார்முனைவென்றிகொள்வார் மன்னுநாங்கூர்) சத்ருக்களுடைய யுத்தத்திலே முதுகு காட்டாதே வென்றிகொண்டல்லது மீளாதவர்கள் மன்னுகிற திருநாங்கூர். (திண்ணார்மதிளித்யாதி) பயப்ரஸங்கமில்லாத தேசத்திலே யிருக்கிற நிருபாதிகபந்துவே! (அடியேன்) புறம்பு புகலுண்டென்றிருக்கில்ன்றோ ஆறியிருக்கலாவது; அநந்யகதியாயிருக்கிற என்னிடரைக் களையாய். ... ... (௧)

---

அரு.—முதற்பாட்டு (கண்ணாரித்யாதி) இத்தால் காம்பீர்யம் தோற்றுமென்று திருவுள்ளம்; இப்போது நான் "களைகணீயே" என்னச்செய்தேயும் நீ கம்பீரனாயிருக்கையாலே உன்திருவுள்ள மறியப்போகிறதில்லை, அடியேனிடரைக் களையாயே என்கிறானென்று தாதபாயம்.... (௧)

மூ.—கொந்தார் துளவ மலர் கொண்டணிவானே
நந்தாத பெரும் புகழ் வேதியர் நாங்கூர்ச்
செந்தாமரை நீர்த் திருவெள்ளக்குளத்து
ளெந்தா யடியே னிடரைக் களையாயே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொந்து ஆர் | பூங்கொத்துக்கள் நிறைந்திருக்கிற | வேதியர் | ப்ராஹ்மணோத்தமருடைய |
| துளவம் | திருத்துழாயினுடைய | நாங்கூர் | திருநாங்கூரில், |
| மலர்கொண்டு | புஷ்பங்களை மாலையாகக்கட்டி | செந்தாமரை | செந்தாமரைப் பூக்களையுடைய |
| அணிவானே | (திருமுடியில்) சாத்தியருளுமவனே! | நீர் | தடாகங்கள் சூழ்ந்த |
| நந்தாத | அழிவில்லாத | திருவெள்ளக் குளத்துள் | திருவெள்ளக் குளத்திலெழுந்தருளியிருக்கிற |
| பெரும் | அபரிச்சின்னமான | எந்தாய் | என்னுடைய ஸ்வாமியே! |
| புகழ் | கீர்த்தியையுடைய | அடியேனிடரைக் களையாயே. (௨) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கொந்தாரித்யாதி) ரக்ஷணத்துக்கு வளையம்வைத்திருக்கிறாயே. திருக்குழலில் ஸ்பர்சத்தாலே கொந்தாராநின்றுள்ள துளவமலரை யணிந்தவனே! (நந்தாத பெரும்புகழ்த்

யாதி) விச்சேதியாதே ஸாவதியன்றிக்கே யிருந்துள்ள புகழையுடைய ப்ராஹ்மணருடைய திருநாங்கூர். அவ்வூரிலுள்ளார்படி யுனக்கு வேண்டாவோ வென்கை. (செந்தாமரைநீரித்யாதி) திருமேனிக்கும் அவயவசோபைக்குமொப்பாயிராநின்றது ஊரில்பொய்கையில்நீரும் தாமரையும். ... ... ... ... ... ... (௨)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (கொந்தாரித்யாதி) அவன் திருமேனியழகை யிழக்கமாட்டாதே "அண்ணா வடியேனிடரைக் களையாய்" என்னச்செய்தேயும், இவர் இன்னும் சொல்லும் வார்த்தை கேட்கவேணுமென்றிருக்க; இவர், நீரக்ஷணத்துக்குத் தனிமாலையிட்டு ஆஶ்ரிதரக்ஷணத்தால் புகழ்படைத்தார் நடுவேயிருக்கிறாயே என்று சொல்லுகிறாரென்றுஸங்கதி.

(புகழை) என்றது-ஆஶ்ரித ரக்ஷணத்தால் வந்த கீர்த்தியை என்றபடி.

மூ.—குன்றால் குளிர் மாரி தடுத்துகந்தானே
நன்றாய பெரும்புகழ் வேதியர் நாங்கூர்
சென்றார் வணங்கும் திருவெள்ளக்குளத்துள்
நின்றாய் நெடியா யடியேனிடர் நீக்கே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குன்றால் | கோவர்த்தந மலையை யெடுத்து | வணங்கும் | ஆஶ்ரயியாநின்ற |
| குளிர்மாரி | வவ்வலிடப் பண்ணுவதான மழையை | திருவெள்ளக் குளத்துள் | திரு வெள்ளக்குளத்திலே |
| தடுத்து | நிரோதித்து | நின்றாய் | எழுந்தருளி யிருக்குமவனே! |
| உகந்தானே | ஸந்தோஷித்தவனே! | நெடியாய் | அபரிச்சிந்ந ஸ்வரூப குணாதிக ளுடையவனே! |
| நன்றாய | விலக்ஷணமான | | |
| பெரும்புகழ் வேதியர் நாங்கூர், | | அடியேனிடர் | அடியேனுடைய துக்கத்தை |
| சென்றார் | போமவர்க ளெல்லாரும் | நீக்கு | போக்கி யருளவேணும். (௩) |

வ்யா,—மூன்றாம்பாட்டு. (குன்றாலித்யாதி) இன்னத்தாலே இன்னத்தைக் காப்பதென்னும் நியதியில்லை. மலையைக் குடையாகக் கொண்டு மழையைக்காத்து, "இவற்றுக்குறுப்பாகப்பெற்றோம்!" என்று உகந்தவனே! மழையிலகப்பட்ட இடையரிடருக்கும் என்னிடருக்கும் வாசிபார்த்துக்கொள்ளாய். (நன்றாயவித்யாதி) ஸர்வேஶ்வரனுக்கு ஹேயப்ரத்யநீகமாய் கல்யாணைகதாநமான புகழாயிருக்கும்; அப்படியே அவ்வூரில் ப்ராஹ்மணர் புகழும்.

(சென்றார்வணங்குமித்யாதி) (க) "யதார்ஹம் கேசவே வ்ருத்திமவசா: ப்ரதிபேதிரே - யதார்ஹம் கேசவே வ்ருத்தி மவசா: ப்ரதிபேதிரே" துர்யோதனன், பாண்டவர்கள்பக்கல் பக்ஷபாதத்திலே க்ருஷ்ணன் வாரா நின்றானென்று, தானும் தன்னுடைய பரிகரமுமாக ஒப்பித்துக் கொண்டிருந்து, ஒருத்தனெழுந்திருத்தல் வணங்குதல் செய்யக்கடவ தன்றென்று வ்யவஸ்த்தை பண்ணிக்கொண்டிருக்க, தந்தாம்வசமன்றிக்கே வணங்கினார்கள். சருகெல்லாம்கூடி "காற்றடித்தால் பறக்கக்கட வோமல்லோம்" என்று பண்ணும் வ்யவஸ்த்தைபோலேயிறே சேஷி முன்பு சேஷபூதர் "அநுகூலிக்கக் கடவோமல்லோம்" என்னும் வ்ய வஸ்த்தை; அப்படியே, சென்றாரெல்லாரும் வணங்காநின்ற திருவெ ள்ளக்குளத்துள்நின்றாய். (நெடியாய்) ஸ்வரூப ரூபகுணங்களா லெல்லை காணவொண்ணாதவனே! (அடியேனிடர்நீக்கே) இரண்டுதலையு மொக்க ஆற்றாமை யுண்டாகிலன்றோ ஆறியிருப்பது. ... (௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (குன்றாலித்யாதி) நான் ரக்ஷணத்துக்குத்தனி மாலை யிட்டிருந்தமை நீரென்கொண்டு சொல்லுகிறீரென்னவருளிச் செய் கிறாரென்று ஸங்கதி.

இவ்வபதாநத்தை யிங்குச் சொன்னதுக்கு உட்கருத்தருளிச்செய்கி றார் (மழையிலித்யாதி).

(ஆறியிருப்பது) என்றது - அடியேனறியிருப்பதென்றபடி. (௩)

மூ.—கானார் கரி கொம்ப தொசித்த களிறே
நாநாவகை நல்லவர் மன்னிய நாங்கூர்
தேனார் பொழில்சூழ் திருவெள்ளக்குளத்து
ளானா யடியேனுக் கருள் புரியாயே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கான் | காட்டிலே | களிறே | மத்தகஜமே! |
| ஆர் | பருவம் நிரம்பியிருக்கிற (எப்போதும் காட்டிலே ஸஞ்சரியாநின்ற) [டைய | நாநாவகை | எல்லாப்ரகாரங்களாலும் பரிபூர்ணமாயிருக்கிற |
| கரி | குவலயாபீடத்தினு | நல்லவர் | வைலக்ஷண்யத்தையுடைய ஸத்புருஷர்கள் [ற |
| அதுகொம்பு | அப்படி பெருமை பொருந்திய கொம் | மன்னிய | பொருந்தி வர்த்திக்கி |
| ஒசித்த | முறித்த [பை | நாங்கூர் | திருநாங்கூரிலே, |

(க) பாரதம்!

| | | | |
|---|---|---|---|
| தேன்ஆர் | வண்டுகள் நிறைந்த | ஆனாய் | மத்தகஜம் போன்ற வனே! |
| பொழில் | சோலைகளாலே | அடியேனுக்கு | அடியேனிடத்தில் |
| சூழ் | சூழப்பட்ட | அருள்புரியாய் | க்ருபைபண்ணி யருளவேணும். (௬) |
| திருவெள்ளக் குளத்துள் | திருவெள்ளக்குளத்தி லெழுந்தருளி யிருக்கிற | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (காணார்கரியித்யாதி) (க)"பொற்றையுற்ற முற்றல்யானை" என்னும்படியே - புகும் வயஸ்ஸெல்லாம் காட்டிலே புக்கு மனிச்சரோடே முகம்பழகாதே யிருக்கிற ஆனையினுடைய கொம்பை முறித்தகளிறே! ஒருமத்தகஜம் ஓரானையின் கொம்பை முறித்தது.

(நாநாவகையித்யாதி) ஜந்மத்தால், வ்ருத்தத்தால், ஜ்ஞாநத்தால், ஆண்பிள்ளைத்தனத்தால், எல்லாவற்றாலும் கரைபுரண்டுவருகிற நன்மையையுடையவர்கள் மன்னுகிற திருநாங்கூர். (தேனாரித்யாதி) வண்டுகளார்ந்த பொழில் சூழ்ந்திருந்துள்ள திருவெள்ளக்குளத்தானாய்! செல்லநின்றதுவும் வரநின்றதுவுமாகர்ஷகமாயிருக்கைக்கும், கிட்டினார் குற்றம் காணக் கண்ணிட்டிருக்கும்படியாலேயும், (ஆனாய்) என்கிறார் அடியேனுக்கருள்புரியாயே. ... ... ... (௬)

அரு —நாலாம்பாட்டு. (காணாரித்யாதி) இடையரிடா நீரமாரிதடுத்தவளவோ, மதயானையைவென்ற சக்திமானல்லையோ, என்னிடத்தில் ஆறியிராதே க்ருபையைச் சொரியவேணுமென்று ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதி. நீரக்ஷணத்துக்குத் தனிமாலையிட்டதுக்கு கோவர்த்தநோத்தரணமாத்ரமன்றியே இதுவுமொரு ஸூசகமன்றோ வென்கிறாரென்று கருத்து.

பொற்றையை - காட்டை, உற்ற - அடைந்து அங்கேதானே முற்றின ஆனையென்று சப்தார்த்தம். காணிலே, ஆர் - வயঃபூர்த்தியுடையவென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (புகுமித்யாதி). "கொம்பது" என்கையாலே-அந்தக் கொம்புக்குப் பெருமைதோற்றுகையால், அத்தை இக்களிறு ஒசித்தபடி எங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (ஒருவித்யாதி).

"வேதியர்" என்ற பதத்தையும், "நண்ணாமுனைவென்றிகொள்வார" என்றத்தையுமுட்கொண்டு நாநார்த்தர் தன்னையருளிச்செய்கிறார் (ஜந்மத்தாலித்யாதி). கீழே "களிறே" என்றுவைத்து, இங்கு மீளவும் "ஆனாய்" என்கைக்குக் கருத்தென்னென்ன வருளிச்செய்கிறார் (செல்லநின்றதுவுமித்யாதி). ஆனையினுடைய கமநாகமநங்களுடைய ஆகர்ஷகத்வத்தாலும்,

(க) தி-௬-வி-௫௨.

மத்தமாயிருக்கையாலே ஒன்றும் தெரியாதிருக்கையாலும், த்ருஷ்டாந்தமாக மீளவும் சொன்னரென்றபடி. ... ... (ச)

மூ.—வேடார் திருவேங்கடம் மேய விளக்கே
நாடார் புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்
சேடார் பொழில் சூழ் திருவெள்ளக்குளத்தாய்
பாடா வருவேன் வினையாயின பாற்றே. (ரு)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| வேடு ஆர் | வேடர்களாலே நிறைந்திருக்கிற | திருவெள்ளக்குளத்தாய் | திருவெள்ளக் குளத்துள் எழுந்தருளியிருக்குமவனே! |
| திருவேங்கடம் | திருவேங்கட மலையில் [இற | பாடா | (உன்னை)ப் பாடிக்கொண்டு |
| மேய | நித்யவாஸம் பண்ணு | | |
| விளக்கே | ஸ்வயம் ப்ரகாசனானவனே! | வருவேன | வாராநின்ற என்னுடைய |
| நாடு ஆர | தேசமெங்கும் நிறைந்திருக்கிற | வினையாயின | பாபங்களெல்லாவற்றையும் |
| புகழ் | கீர்த்தியையுடைய | பாற்று | ஓடவடித்தருளவேணும் (நசிப்பிக்கவேணும்). (ரு) |
| வேதியர் மன்னியநாங்கூர், | | | |
| சேடு ஆர் | தளிர்கள் நிறைந்த | | |
| பொழில் சூழ் | சோலைகள் சூழ்ந்த | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வேடாரித்யாதி) பரிவுக்கும் ஆண்பிள்ளைத்தனத்துக்கும் குறைவற்று, திருமலையில் நின்றும பூமியிலே இழியில் குடிப்பழியாயிருக்கும் திருவேடுவராலே நிறையப்பட்ட திருமலையிலே மேவின விளக்கே! தன் ஸ்வரூப ரூப குணங்களுக்குத் தானே ப்ரகாசகனானவனே!

(நாடாரித்யாதி) குளப்படியிலே கடலை மடுத்தாபபோலே, அவ்வூரில் ப்ராஹ்மணருடைய புகழுக்கு பூமியிலிடம் போராதென்கை. (சேடாரித்யாதி) சேடு- திரட்சியும், தளிரும். (பாடாவருவேன்) உன்னுடைய குணங்கள் பாடிவருகிற வென்னுடைய வினைகளை. (பாற்றே) அவயவியாய்க் காணப்போகாதபடி சிதறப்பண்ணு. அன்றிக்கே, (பாடாவருவேன்) நீ எதிர்சூழல்புக்குத் திரியாநின்றால், இருயாதே பாங்காக வருவேன். ... ... ... ... ... ... (ரு)

அநு.—அஞ்சாம்பாட்டு. (வேடாரித்யாதி) நான் விபவமா யிருந்த போது செய்தவற்றைக் கொண்டு நீர் வளைக்கிறதென், திருவெள்ளக்குளத்தில் ஜந்ம வ்ருத்தாதிகளால் குறைவற்றார்க்கு முகங்காட்டிக்கொண்டிருக்கு மவனன்றோ, நீரு மவர்களைப் போலே சில தர்மங்களைச் செய்து விரோதியைப் போக்கிக்கொள்ள வொண்ணாதோவென்ன; கானமும் வாநரமும் வேடுமானவற்றுக்கு முகங்கொடுத்துக் கொண்டிருந்தவனல்லையோ, நீ என்னுடைய விரோதிகளையெல்லாம் போக்கவேணு மென்கிறாரென்று ஸங்கதி.

வேடு-வேடுவருடைய ஜாதியானது, ஆர்-பொருந்தியிருக்கும்படி யிருக்கிற திருவேங்கடமென்றாய், அவர்க ளங்கே பொருந்துகைக்கு ஹேதுவான பரிவையும், ஜாதிப்ரயுக்தமான சௌர்யத்தையும், பொருந்தியிருக்கையினெல்லை நிலத்தையும் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (பரிவுக்கு மித்யாதி).

"பாடாவரு" - பாடிக்கொண்டு வருகிறவென்றும், பாடு - பார்ஶ்வத்திலே, ஆம்படி வருகிறவென்றும் இரண்டர்த்த மருளிச்செய்கிறார் (உன்னுடைய வித்யாதி). ... ... ... ... ... ... (௫)

மூ.—கல்லால் கடலை யணைகட்டி யுகந்தாய்
நல்லார் பலர் வேதியர் மன்னிய நாங்கூர்ச்
செல்வா திருவெள்ளக்குளத் துறைவானே
எல்லாவிடரும் கெடுமாறருளாயே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கல்லால் | மலைகளினாலே | திருவெள்ளக் குளத்து | திருவெள்ளக் குளத்தில் |
| கடலை | ஸமுத்ரத்தை [ணி | உறைவானே | நித்யவாஸம் பண்ணுமவனே! |
| அணைகட்டி | ஸேதுபந்தநம் பண் | செல்வா | ஶ்ரீமானே! |
| உகந்தாய் | ஸந்தோஷித்தவனே! | எல்லா இடரும் | ஸமஸ்த பாபங்களும் |
| நல்லார் | ஆந்ருசம்ஸ்யமான நன்மையை யுடையராய் | கெடுமாறு | நசிக்கும்படி |
| பலர் | அநேகரான | அருளாய் | அருள்புரியவேணும். |
| வேதியர் மன்னிய நாங்கூர், | | | |

வ்யா.—ஆறாம்பாட்டு. (கல்லால் கடலையணைகட்டியுகந்தாய்) நீரிலாழும் கல்லாலே கடலிலே யணைகட்டி, "ஸம்ஸாரிகளுக் குறுப்பாகச் செய்யப்பெற்றோம்!" என்றுகந்தாய். (நல்லார்பலர் வேதியர் மன்னியநாங்கூர்) பரஸம்ருத்த்யைக ப்ரயோஜநராய் ஆந்ருசம்ஸ்ய ப்ரதா

நரான ப்ராஹ்மணர் மன்னுகிற திருநாங்கூர். (செல்வாவித்யாதி)(எல்லாவிடரும்)அவித்யா கர்ம வாஸநா ருசி பகவத்அபசாராதிகள்,ப்ராரப்த கர்மம்,இவை துடக்கமான வெல்லாவிடரும் கெடுமாறருளாயே. (௬)

அ௫.—ஆறும்பாட்டு.(கல்லாலித்யாதி). "திருவேங்கடத்தில் வேடுவர் பாபவிநாசம் முதலான புண்யதீர்த்தங்களாலே நிரஸ்தபாபராகையாலே அவர்களுக்கு முகங்கொடுத்த நிருதனை போக்கி, உம்முடைய விரோதிகளைப் போக்குகை யரிதன்றோ" என்று, இவர் சொல்லுமது கேட்கமீளவும் "இது நமக்கரிது"என்ன, "கல்லேநீரிலே மிதக்கப்பண்ணின உனக்கு ஒன்று அரிதுண்டோ? ஸமஸ்த ப்ரதிபந்தகங்களையும் போக்கி யருளவேணும்" என்கிறாரென்று ஸங்கதி.

(ஸம்ஸாரிகளுக்குறுப்பாக) என்றது-ஸேது தர்சநாதிகளாலே ஸம்ஸாரிகளுக்குப் பாபம் போக்கிக்கொள்ளுகைக்காக வென்றபடி. ... (௬)

மூ.—கோலால் நிரைமேய்த்த வெங் கோவலர் கோவே
நாலாகிய வேதியர் மன்னிய நாங்கூர்
சேலார் வயல்சூழ் திருவெள்ளக்குளத்துள்
மாலே யென வல்வினை தீர்த்தருளாயே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கோலால் | கோலை ஸாதநமாகக் கொண்டு | சேல் ஆர் | சேல் என்னும் மத்ஸ்யங்கள் நிறைந்திருந்துள்ள |
| நிரைமேய்த்த | பசுக்களை மேய்த்தவனாய்க்கொண்டு | வயல்சூழ் | கழனிகள் சூழ்ந்த |
| எம் | என்னை வசமாக்கிக் கொண்ட | திருவெள்ளக் குளத்துள் | திருவெள்ளக்குளத்திலெழுந்தருளியிருக்கிற |
| கோவலர் கோவே | கோபால ஸ்ரேஷ்டனே! | மாலே | பெரியோனே! |
| நால் ஆகிய | நாலுவகைப்பட்ட | எனவல்வினை | என்னுடைய க்ரூரமான பாபங்களை |
| வேதியர் | வேதங்களை யோதின ப்ராஹ்மணோத்தமர்கள் | தீர்த்தருளாய் | போக்கியருளவேணும். (௭) |
| மன்னியநாங்கூர், | | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (கோலாலித்யாதி) ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை ஸங்கல்பத்தாலே செய்யும் நீ, அந்த ஈச்வரத்வப்பிடாரலன்றிக்கே, கையிலே கோலைக்கொண்டு ஜாத்யுசிதமான வ்ருத்தியைச் செய்

தாயென்று இடைச்சாதியாக வெழுதிக்கொடுத்திருக்குமத்தாலே என்னை அநந்யார்ஹனுகப் பண்ணினவனே!

(நாலாகியவித்யாதி) நாலுவகைப்பட்ட வேதத்தைக் கரைகண்டிருக்கிற ப்ராஹ்மணர் மன்னுகிற திருநாங்கூர். (சேலாரித்யாதி) நீர்மாறுமையாலே சேல்களார்ந்திருந்துள்ள வயல்சூழ்ந்த திருவெள்ளக்குளத்திலே நிற்கிற பெரியோனே! (எனவல்வினை தீர்த்தருளாயே) என்னால் பொறுக்கவொண்ணுத பாபத்தைப்போக்கி யருளாய். ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (கோலாலித்யாதி) திருவணை யணித்தாயிருந்தால் நீருழங்கே சென்று தவிர்த்துக்கொள்ள வொண்ணுதோ, என்னையே "எல்லாவிடரும் கெடுமாறருள்" என்கிறதென்? நான்ருனத்தனை யெளியனே என்று மேன்மையைக் காட்ட; இவர், நாட்டார்க்குச் சிலஇடக்கச் சில போக்குமாபோலே எனக்காக வொண்ணுது, அது ஸகல விரோதி நிவ்ருத்திக்கு முறுப்பாகமாட்டாது, நீ இடையர் கையில் கோலைக்கொடுத்துப் பசு மேய்க்கப்போக விட்டால் போனவனல்லையோ, நான் சொல்லிற்றுக் கேட்கலாகாதோ என்று ப்ரார்த்திக்கிருரென்று ஸங்கதி.

"மாலே" என்றதை யுட்கொண்டு "கோலால்" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிருர் (ஸ்ருஷ்டி யித்யாதி).

சேல்கள்—மத்ஸ்யங்கள். ... ... .. ... ... (எ)

மூ.—வாராகமதாகி யிம்மண்ணை யிடந்தாய்
நாராயணனே நல்லவேதியர் நாங்கூர்ச
சீரார் பொழில்சூழ் திருவெள்ளக்குளத்து
ளாராவமுதே யடியேற் கருளாயே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அது | அப்படி விலக்ஷணமான | வேதியர் நாங்கூர், | |
| வாராகமாகி | வராஹாவதாரமெடுத்தவனுய்க்கொண்டு | சீர் ஆர் | செல்வம் நிறைந்த |
| இம்மண்ணை | இந்த பூமியை | பொழில்சூழ் திரு வெள்ளக்குளத்துள் | |
| இடந்தாய் | (அண்டபித்தியில் நின்றும்) குத்தியெடுத்தவனே! | ஆராவமுதே | த்ருப்திபிறவாத (நிரதிசயமான) போக்யபூதனே! |
| நாராயணனே | (ப்ராணிகளிடத்தில்) வாத்ஸல்யமுடையவனே! | அடியேற்கு | தாஸபூதனுன வெனக்கு |
| நல்ல | ஆசாரப்ரதாநரான | அருளாய் | க்ருபை பண்ணவேணும். (அ) |

வ்யா.— எட்டாம்பாட்டு. (வாராகமித்யாதி) பூமியை ப்ரளயம் கொள்ள, பிறப்பே பூமியையிடக்கவல்ல வராஹமாய் பூமியை யிடந்தாய்!(நாராயணனே)ப்ரஜை அறியாதேயிருக்கக்கட்டிக்கொண்டு கிடக்கும் தாயைப்போலே, ஸம்ஸாரிகளறியாதேயிருக்க வத்ஸலனானவனே! (நல்லவேதியர்) ஆசாரப்ரதாநரான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திருநாங்கூர். (சீராரித்யாதி) ஊரினைஸ்வர்யத்தைக் கோட்சொல்லா நின்ற பொழில்சூழ்ந்த திருவெள்ளக்குளத்திலே அபூர்வவத் போக்யனானவனே! (அடியேற்கருளாயே) ஆருடைய வஸ்து இங்ஙனலமாக்கிறது. ... ... ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (வாராகமித்யாதி). இடையரும் இங்குள்ள ப்ராஹ்மணருமிவ்விபூதியி லிருந்தாப்போலே நீரும் நம்மை யநுபவித்துக் கொண்டிருக்கலாகாதோ, நீரித்தனை பதறுகைக்குக் காரணமென்னென்ன; பூமியை ப்ரளயங்கொண்டாப்போலே என்னை ஸம்ஸார ப்ரளயங்கொண்டது, என்னையெடுக்கவேணும், நீ வத்ஸலனல்லையோ வென்கிறாரென்று ஸங்கதி. இடையர் உன் குணசேஷ்டிதங்களைக் கண்டு மண்டியிருந்தார்கள், ப்ராஹ்மணர் வேதங்களைக் கரைகண்டவராகையாலே மன்னியிருந்தார்கள், எனக் கங்ஙனொரு திடரில்லாமையால் ஸம்ஸார ப்ரளயத்தில் மக்நனானேனென்று கருத்து.

(இடக்கவல்ல) - ஒட்டு விடுவிக்கவல்ல. ... ... ... (அ)

மூ.—பூவார் திருமாமகள் புல்கிய மார்பா
நாவார்புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்த்
தேவா திருவெள்ளக் குளத்துறைவானே
ஆவா வடியானிவ னென்றருளாயே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பூ ஆர் | கமலப்பூவில் பொருந்தி வஸிக்கிற | புகழ் | கீர்த்தியை யுடையரான |
| திருமாமகள் | பெரிய பிராட்டியார் | | வேதியர் மன்னியநாங்கூர், |
| புல்கிய | ஸம்ஶ்லேஷித்த | | திருவெள்ளக் குளத்துறைவானே! |
| மார்பா | திருமார்பை யுடையவனே! | தேவா | ஸௌசீல்யத்தால்விளங்கா நின்றவனே! |
| நா ஆர் | (லோகத்தாருடைய) நாவிலே நிறைந்திருக்கிற | இவன் | இந்த |
| | | அடியான் | தாஸபூதன் |

| | | | |
|---|---|---|---|
| ஆ ஆ | ஐயோ! ஐயோ! (ஸம்ஸாரத்தில் நலிவுபடாநின்றான்) | என்று அருளாய் | என்று க்ருபை பண்ணியருளவேணும். |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பூவாரித்யாதி) பூவிலேபிறந்தவள், பூ அடிக்கொதித்து விரும்பி யணைக்கும்படி மார்வுபடைத்தவனே! (நாவாரித்யாதி) கண்டபோது புகழ்ந்து, காணாதபோது "என்செய்தோம்" என்றுவெறாதே, "இவர்கள் குணங்களைப்புகழப்பெற்று நாப்படைத்தப்ரயோஜநம் பெற்றோம்" என்னும்படியான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திருநாங்கூர். (தேவாவித்யாதி) பரமபதத்தில் நின்றும் வந்து ஸம்ஸாரிகள்பக்கலிலே உறைகையாலே தீப்யமாநனாயிருக்கிறவனே! (ஆவாவித்யாதி) ஸம்ஸாரத்திலே வர்த்திக்கிறேன்! ஐயோ! ஐயோ! என்றருள்புரியாயே. ... ... ... ... (௯)

அரு—ஒன்பதாம்பாட்டு. (பூவாரித்யாதி). ஸம்ஸார ப்ரளயம் தீர்க்க வல்லனாய் வத்ஸலனான நாராயணனை பரீமாணாக வநுஸந்தித்து, (௧) "ஸீதோவாச - ஸீதாமுவாச" என்னுமாபோலே *அலர்மேல் மங்கையை முன்னிட்டு ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதி.

லோகத்தார் நாவிலே பொருந்தும்படியான புகழையுடைய ப்ராஹ்மணரென்று சப்தார்த்தம் விவக்ஷித்தருளிச் செய்கிறார் (கண்டபோதித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௯)

மூ.—நல்லன் புடை வேதியர் மன்னிய நாங்கூர்ச்
செல்வன் திருவெள்ளக்குளத் துறைவானைக்
கல்லின் மலி தோள் கலியன் சொன்னமாலை
வல்லரென வல்லவர் வானவர்தாமே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—∞—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நல் அன்புஉடை | பரமபக்தி யுக்தரான | திரு வெள்ளக்குளத்து | திரு வெள்ளக்குளமென்னும் திவ்யதேசத்தில் |
| வேதியர் | ப்ராஹ்மணோத்தமர் | உறைவான் | நித்யவாஸம் பண்ணுமவனை |
| மன்னிய | வர்த்திக்கிற | | |
| நாங்கூர் | திருநாங்கூரிலே | | |

(௧) ரா-அயோ-௬௧-௨.

| | | | |
|---|---|---|---|
| செல்வனை | ஸ்ரீமான் விஷயமாக | | டையும் |
| கல்லில் | மலையைக் காட்டிலும் | வல்லர் என | அப்யஸிக்க வல்லவர்கள் என்று |
| மலி | அதிசயித்த (பலமுடைய) [ன | வல்லவர் | (பிறரால்) சொல்லத்தக்கவர்கள் |
| தோள் | புஜங்களை யுடையரா | | |
| கலியன் | ஆழ்வார் | வானவர் | நித்யஸூரிகளுடைய கோஷ்டியில் ஒருவராகப் பெறுவர். |
| சொன்ன | அருளிச்செய்த | | |
| மாலை | சப்த ஸந்தர்ப்பமான இப்பத்துப் பாட் | | |

வ்யா.—பத்தாம்பாட்டு (நல்லன்புடையித்யாதி) பரமபக்தியுக்தரான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திருநாங்கூர்ச்செல்வனை, திருவெள்ளக்குளத்துறைவானை. (கல்லின்மலியித்யாதி) தோள்வலிபோலே கவிபாடவல்ல வலியும். (வல்லரெனவித்யாதி) தங்களுக்குப போய்த்தில்லையாகிலும் பிறர்போமென்னும்படியாக வல்லவர்கள், நித்யஸூரிகளோடொரு கோவையாவர்கள். ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

—oo:※:oo—

---

அரு—பத்தாம்பாட்டு. (நல்லன்புடை யிதயாதி). கல்-மலையாய், மலையில் மிக்க தோள்பலமுடைய வாழ்வாரென்று இப்போது விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தோளித்யாதி). (போய்த் தில்லையாகிலும்) விசதமாக வாராதே போனாலும். ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

—oo:※:oo—

நாலாம்பத்து ஏழாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# நாலாம்பத்து - எட்டாந் திருமொழி

## கவளயானை ப்ரவேசம்.



வ்யா.—திருவடிகளிலே விழுந்து சரணம்புக்கு, "அடியேனிடரைக் களையாய்" என்று - தேவரோட்டை யநுபவத்துக்கு விரோதியைப்போக்கித் தரவேணுமென் றபேக்ஷித்தார்; அவனு மப்படியே செய்வானாக வொருப்பட, அது பற்றாமல், ப்ராப்யத்தி லுண்டான த்வரையாலே, தாமான தன்மைபோய் எம்பெருமானோடே இயற்கையிலே, கலந்து பிரிந்து பிரிவாற்றாமையாலே நோவுபட்டு அவன் படிகளை யநுஸந்தித்து †வாய்புலத்துகிற வொருபிராட்டி தசையை யநுஸந்தித்த திருத்தாயார் பாசுரமாகச் செல்லுகிறது. ... *

அரு.—கவளயானையின் ப்ரவேசம்.—கீழிரண்டு திருமொழியில் ப்ரமேயத்தையு மநுவதித்துக்கொண்டு ஸங்கதி யருளிச்செய்கிறார் (திருவடிகளிலே யித்யாதி). (செய்வானாக வொருப்பட) என்றது - (க)"மாகவைகுந்தம் காண்பதற் கென்மன மேகமெண்ணும்" என்று ஆழ்வார்க்கு அதிலே உத்கடேச்சை பிறந்தாப்போலே, இவர்க்கு உகந்தருளின நிலங்களில் உத்கடேச்சை யுண்டாயிருக்கையாலே, பரமபத ப்ராப்தியிலே உத்கடமாக இச்சை பிறப்பித்துக்கொடுப்போமென்று உத்யோகிக்க என்றபடி. *

மூ.—கவளயானை கொம்பொசித்த கண்ணனென்றும் காமருசீர்க்
குவளை மேகமன்னமேனி கொண்டகோனென்றானை யென்றும்
தவளமாட நீடுநாங்கைத் தாமரையாள் கேள்வனென்றும்
பவளவாயா ளென்மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பவளம் | பவழம்போல் ஸுந்தரமான | கவளம் | க்ராஸத்தை யுடைத்தான (அதிகமாக பக்ஷிக்கவல்ல) |
| வாயாள் | அதரத்தையுடைய | | |
| என்மடந்தை | என்னுடைய பெண்ணானவள் | யானை | குவலயாபீடத்தினுடைய |

(க) தி-வாய்-௯-௩-எ. ‡ (பா) வாய்புலற்றுகிறாள்.

| | |
|---|---|
| கொம்பு | தந்தங்களை |
| ஒசித்த | முறித்த |
| கண்ணன் என்றும் | க்ருஷ்ணன் என்றும், [தான |
| காமரு | ஆசைப்படத் தகுந்த |
| சீர் | அழகையுடையதாய் |
| குவளைஅன்ன | கருநெய்தலோடொத்தும் |
| மேகமன்ன | மேகத்தோடொப்பானது மான |
| மேனி | விக்ரஹத்தை |
| கொண்ட | பரிக்ரஹித்த |
| கோன் | ஸ்வாமியாய் |
| என் ஆனை என்றும் | என்னுடைய மத்தகஜம்(போன்ற வ்யாபாரத்தையுடையவன்)என்றும், |
| தவளம் | வெண்மையான |
| மாடம் | க்ருஹங்களினுடைய |
| நீடு | உயர்த்தியை யுடைய தான |
| நாங்கை | திருநாங்கூரில் நித்ய வாஸம்பண்ணுகிற |
| தாமரையாள் கேள்வன் என்றும் | பெரியபிராட்டியார்க்கு வல்லபனென்றும் வாய்புலத்தி (அதுக்குமேலே) |
| பார்த்தன் பள்ளி | பார்த்தன் பள்ளியென்கிற திவ்யதேசத்தை |
| பாடுவாள் | பாடாநின்றாள். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (கவளயானையித்யாதி) அவன் வாய்புலத்தும்படியான அவயவ சோபையையுடையளான இவளுகப்பு முதிர்ந்தபடி-அவனுகந்தவூரை வாய்புலத்தும்படியானுளென்கிறாள். கவளங்கொண்டிருப்பதாய், கண்டார் மேலேவிழும்படி மதமுதிதமாயிருந்துள்ள குவலயாபீடத்தினுடைய கொம்பை அநாயாஸேந போக்கின க்ருஷ்ணனென்றும். (காமருசீர்) விரோதியை போக்காதே வர்த்தித்(ர்)ப்பிக்கிலும் விடவொண்ணாதாய்த்து வடிவழகு கண்டார்க்கு ஸ்ப்ருஹை பண்ணவேண்டும்படியான அழகையுடைத்தான,குவளை மேகம என்றாப்போலே இன்னுமிப்புடைகளிலே சொல்லப்படுகிற வடிவைப் பரிக்ரஹித்த ஸ்வாமி, எனக்கெப்போதும் கண்டுகொண்டிருக்கவேண்டும்படியான வ்யாபாரத்தை யுடையவனென்றும். வடிவழகுக் கொன்றே உபமாநமாகப் போராமையாலே அங்குமிங்கும் கதிர்பொறுக்குகிறார்.

(தவளமாடமித்யாதி) அவ்வூரில் மாடங்களெப்போது மொக்கச் சாந்திட்டிருக்கு மாய்த்து. த (ர்) வளமாயிருந்துள்ள மாடங்களினுடைய ஒக்கத்தை யுடைத்தான திருநாங்கூரிலே நித்யவாஸம் பண்ணுகிற ஶ்ரிய:பதியென்றும். (பவளவாயாளித்யாதி) தன்னதரத்தில் பழுப்புக்கண்டு அவன் வாய்புலத்துமத்தை இவள்தான் அவனூரைச் சொல்லி வாய்புலத்தாநின்றாள். ... ... ... (க)

அ௩ —முதற்பாட்டு. (கவளமித்யாதி) "பவளவாயாளென்மடந்தை - கவளமித்யாதி, கேள்வனென்று மோதி, அவ்வளவன்றியே, பார்த்தன் பள்ளி பாடுவாள்" என்று கூட்டித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அவனித்யாதி) "என்றனை" என்றதுக்கர்த்த மருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி).

அவ.— இரண்டாம்பாட்டு. நித்யஸூரிகள் பரியவிருக்கிறவன் தன்னைப்பெறாதே விரோதிகளை நிரஸித்தபடியைச்சொல்லி, மார்த்தவத்தையுடைய இவள் அவனிருந்த ஊரைச்சொல்லாநின்றாளென்கிறாள்.

மூ.—கஞ்சன் விட்ட வெஞ்சினத்த களிறடர்த்த காளையென்றும்
வஞ்ச மேவி வந்த பேயினுயிரையுண்ட மாயனென்றும்
செஞ்சொலாளர் நீடு நாங்கைத் தேவதேவனென்றென்றோதிப்
பஞ்சியன்ன மெல்லடியாள் பார்த்தன் பள்ளி பாடுவாளே. (௨)

| பதம். | உரை | பதம். | உரை |
|---|---|---|---|
| பஞ்சிஅன்ன | பஞ்சோடொத்த | பேயின் | பூதனையினுடைய |
| மெல் | ம்ருதுவான | உயிரை | ப்ராணனை |
| அடியாள் | ஸ்ரீபாதங்களை யுடைய இப்பெண்ணானவள், | உண்ட | புஜித்த (முடித்த) |
| | | மாயன்என்றும் | ஆஸ்சர்ய பூதன் என்றும், [மான) |
| கஞ்சன் | கம்ஸனாலே | செம் | ஸுந்தரமான (ஸத்ய |
| விட்ட | ஏவப்பட்டதாய் | சொலாளர் | சொல்லையுடைய ப்ராஹ்மணர் |
| வெம் | க்ரூரமான | | |
| சினத்த | கோபத்தையுடைய | நீடு | நித்யவாஸம் பண்ணு [கிற |
| களிறு | குவலயாபீடத்தை | | |
| அடர்த்த | நிரஸித்த | நாங்கை | திருநாங்கூரில் எழுந்தருளி யிருக்கிற |
| காளைஎன்றும் | யுவாவென்றும், | | |
| வஞ்சம் | கபடத்தோடே | தேவதேவன் | தேவாதிதேவன் என்றும், |
| மேவி | பொருந்திய (மநஸ்ஸையுடையளாய்) | என்று | [ல்லி |
| | | என்று ஓதி | இப்படி பலகால்சொ |
| வந்த | கிட்டின | பார்த்தன்பள்ளி பாடுவாளே. (௨) | |

வ்யா.—(கஞ்சன்) குவலயாபீட நிரஸநம்பண்ணி உதவின உபகாரஸ்ம்ருதி, பின்பும் க்ருஷ்ணாவதாரத்தோடே மூட்டிற்று. (கஞ்சன் விட்ட) துஷ்ப்ரக்ருதியான கம்ஸனாய்த்து ஏவுகிறான். ஒருவனேவ வேண்டாதபடி தானே மேல்விழவேண்டும்படியான சினத்தையுடைய குவலயாபீடமாய்த்து வந்து மேல்விழுகிறது. ஏவுகிறவன்படியைய்

பார்த்தால் தப்பவிரகில்லை, அவனுடைய ஏவலை யொழிந்தாலும் தப்ப விரகில்லை வருகிறதின்படி. கம்ஸ ப்ரேரிதமாய் மிக்க சினத்தையு டைத்தாயிருந்துள்ள குவலயாபீடத்தை நிரஸித்தது பருவம் நிரம்பா தவளவிலேயாய்த்து. (வஞ்சம்) வஞ்சநத்தை யொழியவே பராக்ருத்யா பேயாய்த்து; அதுக்குமேலே, வஞ்சநத்தோடே பொருந்திவந்த பூத நையுடைய உயிரை முடித்த ஆஸ்சர்யபூதனென்றும். அவன் கோவி வந்த காரியத்தை அவள் தன்னோடே போக்கின ஆஸ்சர்யமான குண சேஷ்டிதங்களை யுடையவனென்றுமாம.

(செஞ்சொலாளர்) அவ்வூரிலுள்ளாரடங்கலும செவ்விய சொல் லை யுடையாராயிருப்பார்கள். ஊரிலுள்ளார்படி யுண்டாகவேணுமிறே அவ்வூரில் வர்த்திக்கிறவனுக்குப்; "பிரியேன்" என்று சொல்லிவை த்து அவர்கள் கீழ்ப் பிரியவொண்ணாதாய்த்து; இநாய்ந்து இவளுக்கு ப்பற்றுசு. செவ்விய சொல்லையுடைய ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திரு நாங்கூரில் * அயர்வறுமமரர்களதிபதி யென்றசொல்லி. (பஞ்சி யன்ன) தன்காலில் மார்த்தவத்தைக் கண்டு அவன் வாய் வெருவ வே ண்டியிருக்க அது தவிர்ந்து, இவள் தான் அவனிருந்த ஊரைச்சொல்லி வாய் வெருவாநின்றாள். ... ... ... ... ... (உ)

---

அரு —இரண்டாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) கீழ்ப்பாட்டில்- மதுரை யிற் பெண்களுக்கு உதவக்களிறடர்த்த செயலில் நெஞ்சுறைத் திருக்கை யாலே, அத்தை மீளவும் வாய்புலத்தும்படியையும், இடைச்சேரியில் பெ ண்களுக்கெல்லா முறுப்பாக வஞ்சகப்பேயைக் கொன்றபடியையச சொன் னபடியையும் சொல்லுகிறுளென்று ஸங்கதி.

பூதனை உயிரையுண்டதே ஆஸ்சாய மென்று கீழ தாத்பர்ய மருளிச் செய்து, "மாயன்" என்றதுக்கு - அதுமாத்ரமன்றியே ஸகலகுண சேஷ் டிதங்களால் வந்த ஆஸ்சர்ய பூதத்வம் சொல்லலாமென்றருளிச்செய்கிறார் (அவனித்யாதி). (போக்கின)வனைய் மற்றுமுண்டான என்று கூட்டுவது.

(செவ்விய) ருஜுவான. இப்படி விசேஷிக்கிற பெண்பிள்ளையின் கருத்தை யருளிச்செய்கிறார் (ஊரிலித்யாதி வாக்யத்ரயத்தாலே) வாக் யார்த்த மருளிசசெய்கிறார் (செவ்விய வித்யாதி) ... ... (உ)

அவ.—மூன்றும்பாட்டு. இவளவன் படிகளிப்போது சொல்லு கிறபடியாலே போதுபோக்குகைக்குச சொல்லுகிறாளல்லள்; அவன் வாராவிடில் தானங்கே போவாளாயிருநதமை தோற்றச் சொல்லா நின்றுளென்கிறாள்.

மூ.—அண்டர்கோனென்னானை யென்று மாயர் மாதர் கொங்கைபுல்கு
செண்டனென்றும் நான்மறைகள் தேடியோடும் செல்வனென்றும்
வண்டுலவு பொழில்கொள் நாங்கை மன்னுமாயனென்றென்றோதிப்
பண்டுபோலன்றென் மடந்தை பார்த்தன் பள்ளிபாடுவாளே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| என்மடந்தை | என் பெண்ணானவள், | ஓடும் | மேல்மேலும் செல்லாநின்ற |
| அண்டர்கோன் | அண்டாந்தர் வர்த்திகளுக்கு நிர்வாஹகனாய் | செல்வன்என்றும் | ஐஸ்வர்யத்தை யுடையவனென்றும், |
| என் ஆனையென்றும் | எனக்கு அநுபாவ்யமான மத்தகஜத்தினுடைய வ்யாபாரங்களை யுடையவனென்றும், | வண்டு உலவு | வண்டுகள் ஸஞ்சரியாநின்ற |
| ஆயர்மாதர் | இடைப் பெண்களுடைய | பொழில்கொள் | சோலைகளையுடையன் |
| கொங்கை | ஸ்தநங்களோடு | நாங்கை | திருநாங்கூரில் [இற |
| புல்கும் | ஸம்ஶ்லேஷியாநின்ற | மன்னு | நித்யவாஸம் பண்ணு |
| செண்டன் என்றும் | புஷ்பச்செண்டையுடையவனென்றும், | மாயன்என்று | ஆஶ்சர்யபூதனென்றும், [சொல்லி |
| நான்மறைகள் | நாலு வேதங்களும் | என்று ஓதி | இப்படி பலகால் |
| தேடி | விசாரித்துக்கொண்டு | பண்டுபோல் அன்று | முன்போலன்றிக்கே |
| | | | பார்த்தன் பள்ளிபாடுவாள். (௬) |

வ்யா.—(அண்டர்கோனென்னானையென்றும்) அண்டாந்தர்வர்த்திகளா யிருப்பார்க்கெல்லாம் நியாமகனாய், எனக்கெப்போதுமொக்க தர்ஶநீயமான வ்யாபாரத்தை யுடையவனென்றும். (ஆயர்) தன்னுடைய லீலாபரிகரத்தைக்காட்டித் தன்னோடொத்த பருவத்தையுடைய இடைப்பெண்களை வஶீகரித்து அவர்களோடே நித்ய ஸம்ஶ்லேஷத்தைப்பண்ணும் ஸ்வபாவனென்றும். (நான்மறை) இப்படி இடைப்பெண்களுக்குக் கையாளாயிருக்கிறவன்றான், வேதங்களுக்கு எட்டவொண்ணாதபடியான ஐஶ்வர்யத்தை யுடையவனென்றும்.

(வண்டுலவு) வண்டுகள் ஸஞ்சரியாநின்றுள்ள பொழில்களையுடைத்தான திருநாங்கூரிலே, அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணுகிற ஆஶ்சர்ய பூதனென்றுசொல்லி. (பண்டுபோலன்றென் மடந்தை) எல்லாருமை பால்யத்திலே ஓரோ

ஊர்களைச்சொல்லிப் பாடார்களோ, இவளுக்கு வாசியென்னென்னில்; அவ்வளவன்றிக்கே, இவளோரிடத்திலே அடியுடைமை தோற்றப் பாடாநின்றாள். ... ... ... ... (௩)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (அண்டரித்யாதி) நித்ய ஸூரிகளுக் கவ்வருகானவன் வஞ்சகப்பேய் முலையுண்டு அவளுயிரை முடித்தபின்பு ப்ரஹ்மாதிகளாஶ்ரயிக்கச்செய்தே தான் செண்டும் கையுமாய் இடைப்பெண்களோடு ஸம்ஶ்லேஷித்தானென்று தன் சாபல்யத்தாலே அத்தைப் புலத்தாநின்றாளென்கிறாளென்று ஸங்கதி. "பண்டுபோலன்று" என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (இவளித்யாதி).

(லீலாபரிகரத்தை) செண்டை.

(அடியுடைமை தோற்ற) நாயகன் வர்த்திக்கிற ஊரென்னு மதுதோற்றவென்றபடி. ... ... ... ... ... ... ... (௩)

மூ.—கொல்லையானாள் பரிசழிந்தாள் கோல்வளையார் தம்முகப்பே
மல்லைமுந்நீர் தட்டிலங்கை கட்டழித்த மாயனென்றும் [திப்
செல்வம்மல்கு மறையோர்நாங்கைத் தேவதேவனென்றென்றோ
பல்வளையாளென் மடந்தை பார்த்தன் பள்ளி பாடுவாளே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பல்வளையாள் | அநேகங்களான வளைகளை யுடையளான | முன் | பழையதான |
| என்மடந்தை | என்னுடைய பெண்ணானவள், | நீர் | ஜலத்தையுடைய முத்ரத்தை |
| கோல் | ஸுந்தரமான | தட்டு | அணைதடுத்து |
| வளையார்தம் | வளைகளையுடையரான பெண்களுடைய | இலங்கை | லங்கையை |
| முகப்பே | முன்னே | கட்டழித்த | கட்டுக் குலையப்பண்ணின |
| கொல்லையானாள் | வரம்பழிந்தாள் (தனியே வெளிப்புறப்பட்டாள்), | மாயன் என்றும் | ஆஶ்சர்ய பூதனென்றும், |
| பரிசு அழிந்தாள் | ஸ்த்ரீத்வலக்ஷணமான லஜ்ஜாதி ஹீநையானாள், | செல்வம் | ஐஶ்வர்யமானது |
| மல்லை | ஸம்ருத்தமாய் | மல்கும் | ஸம்ருத்தமாயிருக்கிற |
| | | மறையோர் | ப்ராஹ்மணோத்தமர்களுடைய |
| | | நாங்கைத்தேவதேவனென்றென்றோதி பார்த்தன்பள்ளிபாடுவாளே. | |

வ்யா.—நாலாம்பாட்டு. (கொல்லையானாள்) வரம்பழிந்த செயலைச்செய்தாள். (பரிசழிந்தாள்) ஸ்த்ரீத்வமே ப்ரகாரமாய்க் காணுமிவள்

த்தைக்கிருப்பது; தன்னுடைய ஸ்த்ரீத்வ மர்யாதைகளையுடைய வழித்தாள், தன்பருவத்திற் பெண்கள்முன்னே. (மல்லைமாநீர்தட்டு) ஸம்ருத்தமாய்ப் பழைதான நீரையுடைத்தான கடலையடைத்து, லங்கையை ஒருவர்கூறை யெழுவருடுக்கும்படி பண்ணின பரமப்ராணயியென்றும். (செல்வம்மல்கு மிதயாதி) ஐஸ்வர்யமானது கரை புரண்டு வாராநின்றுள்ள ப்ராஹ்மணரதான திருநாங்கூரில் ஸர்வேஶ்வரனென்றுசொல்லி.(பல்வளையாள்)தன்கையிலொரு வளைகண்டு அவன்படக்கிடவபாட்டை, அவனை யப்படி படுத்த வல்ல வளைகளெல்லாவற்றையு மிட்டுக்கொண்டு தான் வாய்வெருவாநின்றாள். ... ... (௪)

அரு —நாலாம்பாட்டு (கொல்லையித்யாதி) (க) "நீ யொருவர்க்கும் மெய்யனல்லை" என்னும்படி எசுவுமவனை பட்டிமேயு மவன்படிகளை அநுஸந்திக்கையை விட்டு, (உ) *உண்ணு துறங்காதொலி கடலை யூடறுத்த (௩) *மனத்துக்கினியானைப் பாடத்துடங்கினாள், இனி இவள் வரம்பழிந்தாளென்கிறாளென்று ஸங்கதி.

(வரம்பழிந்தசெயல்) படி கடந்து புறப்பட்டு நிறகை (ஸ்த்ரீத்வமர்யாதைகள்) நாண் மட மசச மென்கிறவை. "தட்டு" தடுத்தென்றாய், (அடைத்து) என்றது. ... ... ... ... (௪)

ரூ.—அரக்கராவி மாளவன்றாழ் கடல்சூழிலங்கைசெற்ற
குரக்கரசனென்றும கோலவில்லியென்றும் மாமதியை
நெருக்குமாட நீடுநாங்கை நின்மலனென்றென்றோதிப்
பரக்கழிந்தாளென் மடந்தை பார்த்தன் பள்ளி பாடுவாளே. (௫)

| பதம் | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| என்மடந்தை | என்பெண்ணானவள், | செற்ற | அழித்த |
| அன்று | ராவணன் யுத்தத்துக்குவந்த அக்காலத்தில | குரக்கு | வாநரங்களுக்கு |
| | | அரசன்என்றும் | ஸ்வாமியானவனென்றும், |
| | | கோலம் | தர்சநீயமான |
| அரக்கா | ராக்ஷஸாகளுடைய | வில்லிஎன்றும் | தநுஸ்ஸை யுடையவனென்றும், |
| ஆவி | ப்ராணன்கள் | | |
| மாள | நசிக்கும்படியாக | மாமதியை | ஸௌந்தரனை சந்த்ரனை |
| ஆழ் | அகாதமான | நெருக்கும் | ஸஞ்சரிக்க வொட்டாமல் தடைசெய்கிற |
| கடல் | ஸமுத்ரத்தினாலே | | |
| சூழ் | சுற்றப்பட்ட | மாடம் | க்ருஹங்களினால் |
| இலங்கை | லங்கையை | நீடு | ஓங்கியிருக்கிற |

(க) பெரி-திரு-௫-௩-உ. (உ) நா-தி-கக-எ. (௩) தி-பா-கஉ.

| | | |
|---|---|---|
| நாங்கை | திருநாங்கூரில் எழுந்தருளியிருக்கிற | என்று ஓதி இப்படிப்பலகால்சொல்லி |
| நின்மலன் என்று | ப்ரயோஜநநிரபேக்ஷனை சுத்த ஸ்வபாவன் என்றும் | பரக்கழிந்தா ஸ்த்ரீத்வ மழிந்தவளாய் பார்த்தன்பள்ளி பாடுவாள். (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (அரக்கரித்யாதி) பிரித்த பையலொருவனையு மழியச்செய்கை யன்றிக்கே, ராக்ஷஸஜாதியாக முடியும்படி. (அன்று) அவனை திர்த்தவன்று, ஆழத்தை யுடைத்தான கடலை யகழாக யுடைத்தாயிருக்கிற லங்கையை யழியச்செய்த வாநரஜாதிக்கு நிர்வாஹகனென்றும். ப்ரஹ்மாதிகள் குடியிருப்பையழித்த ராவணனுடைய குடியிருப்பை யழித்தது - இடக்கை வலக்கை வாசியறியாத குரங்குகளைப் பரிகரமாகக் கொண்டாய்த்து. (கோலவில்லியென்றும்) ஆண்பிள்ளைத்தனத்துக் கடிமாகிகளா யிருப்பாரடங்கலும் தோற்று மதிக்கும்படி தர்ஸநீயமான வில்லைக் கையிலே யுடையவனென்றும்.

(மாமதியை) இதஸ் ததஸ் ஸஞ்சரியாநின்றுள்ள சந்த்ரனை ஸஞ்சரியாதபடியாக நெருக்காநின்றுள்ள மாடங்களினுடைய ஒக்கத்தை யுடைத்தான திருநாங்கூரிலே நித்யவாஸம் பண்ணுகிற, ப்ரயோஜநநிரபேக்ஷனுமுதவும் ஸ்வபாவனென்று சொல்லி. இவர்களுடைய உபாஸநத்துக்கு முகங்காட்டுகை யன்றிக்கே, அர்த்தித்வ நிரபேக்ஷயாக உதவுமவனாய்த்து. (பரக்கழிந்தாள்) கெட்டேன்! இவள் பழிக்கஞ்சாதபடியானாள். இதென்கொண்டறிவோமென்னில்; (பார்த்தன்பள்ளி பாடுவாளே) அவனிருந்தவூரை நானும் கேட்கும்படி இவள் தன்வாய் விட்டுப் பாடாநின்றாளாகில் இனியிவள் செய்வதென். (க)“ தேந து:கேந ருததீ நைவ மா கிஞ்சிதப்ரவீத்” அவர்வடிவழகைக் கண்ணாலேபார்த்துக் கவிழ்ந்துநின்று கண்ணநீரை விழவிடுமவளிறே. ... ... ... ... (௫)

அநு.—அஞ்சாம்பாட்டு. (அரக்கரித்யாதி) இலங்கை கட்டழித்த ப்ரகாரமே இவளுடைய நெஞ்சிலூற்றிருந்து, அதுதன்னையே வெருவுகின்றாளென்கிறாளென்று ஸங்கதி.

“நின்மலன்” என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரயோஜநேத்யாதி). வாய்விட்டாளென்று துக்கப்படுகைக்கு வாய்விடாதே யிருக்

(க) ரா-அயோ-௫அ-௩௫.

குமோ வென்னவருளிச் செய்கிறார் (தேநேத்யாதி). அப்படியிவளுமி ருக்கவேணுமென்று கருத்து. ... ... ... (ரு)

மூ.—ஞாலமுற்று முண்டுமிழ்ந்த நாதனென்றும் நானிலம்சூழ்
வேலையன்ன கோலமேனி வண்ணனென்றும் மேலெழுந்து
சேலுகளும்வயல்கொள்நாங்கைத்தேவதேவனென்றென்றோதிப்
பாலின்நல்லமென்மொழியாள்பார்த்தன்பள்ளிபாடுவாளே. (சு)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| பாலில் | பாலைக்காட்டிலும் | சூழ் | சுற்றிக்கொண் டிருக்கிற [ததாய் |
| நல்ல | மதுரமாய் | வேலைஅன்ன | ஸமுத்ரத்தோ டொத் |
| மெல் | ம்ருதுவான | கோலம் | ஸௌந்தரமான |
| மொழியாள் | சொல்லையுடைய இப் பெண்ணானவள், | மேனி | நிறத்தையுடைய |
| ஞாலம்முற்றும் | பூமியையெல்லாம் | வண்ணன் என்றும் | வடிவை யுடையவ னென்றும், |
| உண்டு | (ப்ரளயகாலத்தில்)அமுதுசெய்து | சேல் | சேல்மத்ஸ்யங்கள் |
| உமிழ்ந்த | (ஸ்ருஷ்டிகாலத்தில்) வெளிப் புறப்பட விட்ட | மேலெழுந்து | மேலேயெழும்பி |
| | | உகளும் | துள்ளாநின்ற |
| | | வயல்கொள் | கழனிகளையுடைய |
| நாதன் என்றும் | ஸ்வாமியானவனென் றும், [மியை | நாங்கைத் தேவதேவ னென்றென்றோதி பார்த்தன் பள்ளிபாடுவாளே. (சு) | |
| நால்நிலம் | நாலுவகைப்பட்ட பூ | | |

வ்யா. — ஆறும்பாட்டு. (ஞாலமித்யாதி) ஆபந்நராமித்தனையே வேண்டுவது, ரக்ஷிக்குமிடத்து இவற்றின் பக்கலொரு ஸாதநாநுஷ்ட்டாநம் வேண்டாவாய்த்து. வரையாதே ஸர்வவித ரக்ஷணங்களையும் பண்ணுகைக்கடியான ஸ்வாமியென்றும். ஆபத்துக்கு மேற்பட இவற்றின்பக்கலொன்றின்றிக்கே யிருக்க, ரக்ஷிக்கைக்கடி - நிருபாதிகசேஷியாகையிறே. உடையவனிறே உடைமையைத்தேடுவான். (நானிலமித்யாதி) நெய்தல், மருதம், முல்லை, குறிஞ்சி, என்றாப்போலே சொல்லப்படுகிற நாலுவகைப்பட்ட பூமியைச் சூழப்போந்திருந்துள்ள, வேலையுண்டு - ஸமுத்ரம், அதினுடைய படியையுடைத்தாய், தர்ஶநீயமான நிறத்தையுடைய வடிவை யுடையவனென்றும்.

(மேலெழுந்து) அங்குத்தைச்சேல்களானவை, ஜலத்தோடொரு ஸ்பர்சமின்றியே மேலேதுள்ளி வர்த்தியாநிற்குமாய்த்து. ஜலசாஸத்வங்களுங்கூடக் களித்து வர்த்திக்கும் தேசமாய்த்து. (பாலித்யாதி )

பாலிற்காட்டிலென்னுதல்; பாலோடொத்தவென்னுதல். தன்பேச்சி னினிமையிலே தோற்று அவன் வாய்வெருவ விருக்கக்கடவவிவள், இப்போது தான் அவனிருந்த ஊரைச்சொல்லி வாய்வெருவாநின்றாள். (க) ''மதுரா மதுராலாபா- மதுராமதுராலாபா'' என்று இவள் பேச்சுக்கேட்டு வாய்வெருவுவானவனிறே. ... ... ... (௬)

அ௫.—ஆரும்பாட்டு. (ஞாலமித்யாதி) ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கு ஸ்வஜநமின்றிக்கே லங்கையில் ராக்ஷஸர்கையி லகப்பட்டபடியாலே உதவினான், உனக்கித்தனைபேர் நாங்களிருக்க உனக்கென்ன இத்தனைவாய் புலத்துவா னென்னென்ன; ''ஜகத்துக்கெல்லாம் வந்த ப்ரளயாபத்தோ டொவ்வாதோ அவன் கோலமேனி காணாத வெனக்கு'' என்னுமிடந்தோன்ற, அவனுடைய ஆபத்ஸகத்வத்தைச் சொல்லுகிறா ளென்கிறாளென்று ஸங்கதி.

கீழ் தாத்பர்ய மருளிச்செய்து வாக்யார்த்த மருளிச்செய்கிறார் (வரையாதே யித்யாதி). சேஷித்வம் ஹேதுவென்னு மத்தை லோகங்யாயத்தாலே ஸ்த்திரீகரிக்கிறார் (உடையவனித்யாதி).

''மேலெழுந்து'' என்று விசேஷிக்கையாலே - நீர்சுடும் என்னும்படியான குளிர்த்தியை யுடைய நிலவண்மையைச் சொல்லுகிறவளுக்கு, உங்களோடிருக்கை எனக் கடிக்கொதிப்பாம்படி அவன் வர்த்திக்கிற தேசமெனக்கு ஸ்ரமஹரமாயிருந்ததீ என்னு மபிப்ராயம் ஸ்ப்புரிக்கும்படி ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (ஜலசரேத்யாதி). (ஸத்வங்களுங்கூட) என்ற சகாரம் - இவ்வர்த்தத்துக்கெல்லாம் ஸூசகம் ... ... (௬)

௭.—நாடியென்றனுள்ளங்கொண்ட நாதனென்றும் நான்மறைகள்
தேடியென்றும்காணமாட்டாச்செல்வனென்றும்சிறைகொள்வண்டு
சேடுலவு பொழில்கொள் நாங்கைத் தேவதேவனென்றென்றோதிப்
பாடகம்சேர் மெல்லடியாள் பார்த்தன் பள்ளிபாடுவாளே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாடகம் | பாடகமென்னும் பாதாபரண மானது | என்றன்உள்ளம் | என்மநஸ்ஸை |
| சேர் | பொருந்தியிருக்கிற | கொண்ட | வசமாக்கிக் கொண்ட |
| மெல் | ம்ருதுவான | நாதன்என்றும் | ஸ்வாமியென்றும், |
| அடியாள் | ஸ்ரீபாதங்களை யுடையபெண்ணானவள், | நான்மறைகள் | நாலுவகைப்பட்ட வேதங்களானவை |
| நாடி | தேடிக்கொண்டு வந்து | என்றும் | ஸர்வகாலமும் |

(க) ரா-ஸு-௬௬-௧௫.

| | | | |
|---|---|---|---|
| தேடி | ஆராய்ந்துபார்த்து | சேடு | ஸமூஹமானது |
| காணமாட்டா | காணப்போகாதபடியான | உலவு | ஸஞ்சரியாநின்ற |
| செல்வனென்றும் | ஸ்ரீமான் என்றும், | பொழில்கொள் | சோலைகளையுடைய |
| சிறைகொள் | ப்ரசஸ்தமான இறகுகளையுடைய | நாங்கைத் தேவதேவனென்றென்றோதி பார்த்தன்பள்ளி பாடுவாளே. (எ) | |
| வண்டு | வண்டுகளுடைய | | |

வ்யா.—ஏழாம்பாட்டு (நாடி) எதிர்சூழல் புக்கு என்னைத்தேடி என்னெஞ்சைத் தனக்காக்கிக்கொண்ட சேஷியென்றும். (நான்மறை) என்னைத் தேடி வருந்தித் தனக்காக்குகிறவன், தன்னை வேதங்கள் தேடிக்காணப்போகாத ஸ்ரீயை யுடையவனென்றும். (சிறைகொள்) சிறகை யுடைத்தாயிருந்துள்ள வண்டுகள் சோலைத் தலையிலே உலாவாநின்ற திருநாங்கையிலே வர்த்திக்கிற தேவதேவனென்றென்றோதி. (பாடகம்) காலும் பாடகமும் பொருந்தினபடியை அவன் பாடவிருக்குமவள், அவனுடைய பாடாநின்றாள். ... ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு (நாடியிர்யாதி) ஜகத்துக்கு வந்த ஆபத்தை அவன்றானேவந்து போக்கிறாப்போலே உனக்கு மவனேவந்து உதவுமத்தனையும் நெஞ்சை வருந்தி ஆறியிருக்க வொண்ணாதோ, நீ வாய்புலத்துவானென்னென்ன என்னை யங்ஙனிருக்க வொட்டாதபடி நெஞ்சைக் கைக்கொண்டான், வேதங்களவனைப் புலத்துமாபோலே நானும் புலம்பாநின்றேனென்று மிடம் தோறறச்சொல்லா நின்றாளென்கிறாளென்று ஸங்கதி.

(ஸ்ரீயை) ஸம்பத்தை சிறைகொள் வண்டுகளினுடைய, சேடு - திரட்சியானது, உலாவாநின்றுள்ள பொழிலென்று சப்தார்த்தம் திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார் (சிறகையித்யாதி). ... ... ... (எ)

மூ.—உலகமேத்துமொருவனென்று மொண்சுடரோடும்பரெய்தா
நிலவுமாழிப்படையனென்றும் நேசனென்றும் தென்திசைக்குத்
திலதமன்ன மறையோர்நாங்கைத்தேவதேவனென்றென்றோதிப்
பலருமேசவென்மடந்தை பார்த்தன் பள்ளிபாடுவாளே. (அ)

| பதம் | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| என்மடந்தை | என்பெண்ணானவள், | ஒருவனென்றும் | அத்விதீயனென்றும், |
| உலகம் | லோகமெல்லாம் | ஒள் | அழகிய |
| ஏத்தும் | ஸ்தோத்ரம் பண்ணத்தகுந்தவனான | சுடரோடு | சந்த்ரஸூர்யர்களோடு [கூட |

| | | | |
|---|---|---|---|
| உம்பர் | தேவர்களால் | தென்திசைக் | தெற்கு திக்குக்கு |
| எய்தா | கிட்டப்போகாதபடி | திலதம்அன்ன | திலகம்போலேயிருக்கிற |
| நிலவும் | ப்ரகாசியாநின்ற | மறையோர் | ப்ராஹ்மணர்களுடைய |
| ஆழி | திருவாழியை | நாங்கைத்தேவதேவன் என்றென்றோதி | |
| படையன் என்றும் | திவ்யாயுதமாக உடையன் என்றும் | பலரும் | எல்லாரும் |
| நேசன் என்றும் | ஆஶ்ரிதர் பக்கல் ஸ்நேஹமுடையவன் என்றும், | ஏச | பழிக்கும்படியாக |
| | | பார்த்தன்பள்ளி பாடுவாளே. (அ) | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (உலகமித்யாதி) லோகமாக ஆஶ்ரயிக்கைக்கு அத்விதீயனான ஸர்வஸமாஶ்ரயணீயனென்றார். (ஒண்சுடர்) சந்த்ராதித்யர்களோடேகூடின தேவர்களால் கிட்டப்போகாதே யிருக்கிற திருவாழியை, (க) "எப்போதும் கைகழலாநேமியான்" என்னும்படி உடையனாயிருக்கிறவனென்றும். (நேசனென்றும்) ஆஶ்ரிதர்பக்கல் ஸ்நேஹம் ஒருவடிவு கொண்டவனென்றும். (தென்திசை) தெற்குதிக்குக்குத் திலகபூதரான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திருநாங்கையிலே நின்றருளின தேவதேவனென்றென்றோதி. (பலருமேச) பலரும் தன்னைப்பழிக்க, அவர்களைத் தனக்குக் கூட்டென்று அவனுரைப்பாடுவாளானாள். ... ... ... ... ... (அ)

அரு—எட்டாம்பாட்டு. (உலகமித்யாதி) அவன் உள்ளம்கொண்டான் என்று நீயவனைப் புலம்பினால் லோகத்தார உன்னை ஏசாரகளோ, இங்ஙன் நெஞ்சழிந்து புலம்ப வொணாதென்ன, நானொருத்தியோ அவனைப் பற்றினது, ஸர்வருமவனை ஏத்தவில்லையோ, ப்ரஹ்மாதிகளால் கிட்டக்கூடாத ஆழியானும் ஸ்நேஹிக்குமவனன்றோ, அவனைப் பிரிந்திருக்கக்கூடுமோ என்னும் தாத்பர்யம் தோற்றச்சொல்லுகிறாளென்கிறாளென்று ஸங்கதி.

(க) "ஊரவர்கவ்வை யெருவிட்டு" என்கிறபடியே பலரு மேசுகை பாடுகைக்குடலென்னுமது தோன்ற அருளிச்செய்கிறார் (அவர்களை யித்யாதி). ... ... ... ... ... ... ... ... (அ)

மூ.—கண்ணனென்றும் வானவர்கள் காதலித்துமலர்கள்தூவும்
எண்ணனென்று மின்பனென்று மேழுலகுக் காதியென்றும்
திண்ணமாட நீடுநாங்கைத் தேவதேவனென்றென்றோதிப்
பண்ணினன்னமென் மொழியாள் பார்த்தன் பள்ளிபாடுவாளே.

(க) பெரியதிருவ-அஎ. (உ) தி-வாய்-௬-௬-௪.

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| பண் அன்ன | காநத்தோடொத்த | எண்ணன் என்றும் | (அவர்களுடைய) எண்ணத்திலே வஸிக்குமவனென்றும், |
| மெல் | ம்ருதுவான | இன்பனென்றும் | ஸுகப்ரதனென்றும், |
| மொழியாள் | சொல்லையுடைய இப்பெண்ணானவள் | ஏழ்உலகுக்கு | ஸப்த லோகங்களுக்கும் |
| கண்ணன் என்றும் | ஸ்ரீக்ருஷ்ணனென்றும், | ஆதியென்றும் | காரண பூதன் என்றும், |
| வானவர்கள் | தேவர்கள் | திண்ணம் | த்ருடமான |
| காதலித்து | ஸ்நேஹத்தை யுடையவர்களாய் | மாடம்நீடுநாங்கைத் தேவதேவனென்றென்றோதி பார்த்தன் பள்ளிபாடுவாளே. | (௯) |
| மலர்கள் | புஷ்பங்களை | | |
| தூவும் | ஸமர்ப்பிக்கும்படியாக | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கண்ணனித்யாதி) க்ருஷ்ணனென்றும், ப்ரஹ்மாதிகள் ஸ்நேஹத்தைப்பண்ணி புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டாச்ரயிக்கும்படியாக அவர்கள் மநோரதத்தே நிற்கிறவனென்றும், (இன்பனென்றும்) ஆநந்தாவஹனென்றும், (ஏழுலகுக்காதியென்றும்) ஜகத்காரணபூதனென்றும், (திண்ணமித்யாதி) திண்ணமான மாடங்கள் நீடின நாங்கையிலேவர்த்திக்கிற தேவதேவனென்றென்றோதி. ... ... ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (கண்ணனித்யாதி) இவன் நேசனென்று நீ கண்டதெங்கே, உலகர்தானிவனை யாச்ரயித்தார்களோ, ஆச்ரயிக்கைக்கு ஹேதுதானென்னென்று, ஏசவந்த பலரும் கேட்க; அவர்களுக்கும் தெரியும்படி பெண்பித்த னென்ன ப்ரஸித்தனான க்ருஷ்ணன்றன்னையே (க) "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநா முத்பத்தி ரபி சாப்யய: - க்ருஷ்ண ஏவ ஹி லோகாநா முத்பத்தி ரபிசாப்யய:" என்றதில்லையோ என்று தம் துறையான க்ருஷ்ணாவதாரத்தை மீளவும் பிதத்துகிறாளென்று சொல்லுகிறாளென்று ஸங்கதி.

"எண்ணன்" என்றதினர்த்தம் (மநோரதத்தே நிற்கிறவன்) என்றது. (நீடின) - நீண்டிருக்கிற. ... ... ... ... ... (௯)

மூ.-பாருள்நல்லமறையோர்நாங்கைப்பார்த்தன்பள்ளிச்செங்கண்மாலை
வார்கொள் நல்லமுலைமடவாள் பாடலைத்தாய் மொழிந்தமாற்றம்

(க) பார-ஸபா-ராஜஸூ-மய-௩௮-௨௩.

கூர்கொள் நல்லவேற்கலியன் கூறுதமிழ்பத்தும் வல்லார்
ஏர்கொள் நல்ல வைகுந்தத்து ளின்பநாளுமெய்துவாரே. (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—ooXoo—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாருள் | பூமியிலே | பாடலை | ஸ்ரீஸூக்திகளை |
| நல்ல | விலக்ஷணராயுள்ள | தாய் | தாயாரானவள் |
| மறையோர் | ப்ராஹ்மணோத்தமர் வர்த்திக்கிற | மொழிந்த | சொன்ன [தை, |
| | | மாற்றம் | உக்தியின் ப்ரகாரத் |
| நாங்கை | திருநாங்கூரில் | கூர்கொள் | கூர்மையாய் |
| பார்த்தன்பள்ளி | பார்த்தன் பள்ளியென்னும் திவ்ய தேசத்தில் எழுந்தருளியிருக்குமவனாய் | நல்ல | ஸ்லாக்யமான [ய |
| | | வேல் | வேலாயுதத்தையுடை |
| | | கலியன் | ஆழ்வார |
| | | கூறும் | அருளிச்செய்த |
| செம்கண் | (வாத்ஸல்யத்தால்) சிவந்த கண்களையுடையனாய் | தமிழ் | த்ராவிடரூபமான |
| | | பத்தும் | இப்பத்துப்பாட்டுகளையும் [கள், |
| மாலை | ஆஸ்ரித வ்யாமுக்தனான ஸர்வேஸ்வரன் விஷயமாக, | வல்லார் | அப்யஸிக்க வல்லவர் |
| | | ஏர்கொள் | அழகுபொருந்தி |
| | | நல்ல | அவிஸ்லேஷமாகிற நன்மையையுடைய |
| வார்கொள் | கச்சையுடைத்தாய் | | |
| நல்ல | விலக்ஷணமான | வைகுந்தத்து | ஸ்ரீவைகுண்டத்தில் |
| முலை | ஸ்தநங்களையுடைய | நாளும் | ப்ரதிதிநமும் |
| மடவாள் | பெண்ணானவள் (பாடின) | இன்பம் எய்துவார் | ஸுகிக்கப் பெறுவார்கள். (கO) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (பாருள்நல்ல) பூமியில் நல்லவிலக்ஷண ப்ராஹ்மணரெல்லாம் திரண்ட திருநாங்கையில் பார்த்தன் பள்ளியிலே வர்த்திக்கிற வாத்ஸல்யத்தையும் வ்யாமோஹத்தையு முடையனானவனை. (வார்கொள்நல்ல) ப்ராப்தயௌவனையானவள் பாடலைத்தாயார் சொன்னமாற்றத்தை. (கூர்கொள்) அப்பிராட்டி தசைவந்து ஆழ்வாரருளிச்செய்த விப்பத்தும் வல்லவர். (ஏர்கொள்) ஒருத்தி வாய்வெருவ ஒருத்தி கூப்பிட்ட எளிவரவுதீர, ஒருநாளும் பிரியவேண்டாதே இருக்கிற தேசத்திலே இருக்கப்பெறுவர். ... (கO)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

—ooXoo—

அரு.—பத்தாம்பாட்டு. (பாரித்யாதி) "செங்கண்" என்றத்தாலே - வாத்ஸல்யம். "மாலை - மொழிந்த - பாடலை" என்று இங்கும் கூட்டுவது. கூர்மைமிக்க வேலையுடைய கலியனென்று சப்தார்த்த முட்கொண் டருளிச்செய்கிறார் (அப்பிராட்டி யித்யாதி). ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

நாலாம்பத்து எட்டாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நாலாம்பத்து ஒன்பதாந் திருமொழி

### நும்மைத்தொழுதோம் ப்ரவேசம்.

வ்யா.—பெறவேணுமென்னு மபேக்ஷையில் கண்ணழிவில்லாமை சொல்லிற்றிறே - கீழிற்றிருமொழியிலே; "பார்த்தன்பள்ளிபாடுவாள்" என்று உகந்தருளின நிலங்களைசசொல்லி வாய்வெருவுகைக்கு மேற்படவில்லையிறே அபேக்ஷைக்கு; (௧) "மாகவைகுந்தங் காண்பதற்கென்மனமேகமெண்ணும்" என்றும், (௨) கண்ணன் விண்ணூர் தொழவே சரிகின்றனசங்கம்" என்றும் சொல்லுகிறவையடைய இவர்க்கு உகந்தருளின நிலங்களிலே யாய்த்து; ஆகையாலே, "பரமபதம் கலவிருக்கையாயிருக்க அவ்விடத்தைவிட்டு ஆஸ்ரிதர்க்கு ஸர்வாபேக்ஷித ப்ரதனுகைக்காகத் திருவிந்தளூரிலேவந்து ஸந்நிஹிதனானன், நாமங்கேபோய்ப்புகவே நினைத்த வகைகளெல்லாம் பெறலாம்"என்று பெரியபாரிப்போடே போய்ப்புக்க விடத்து, ஒரு ஸ்ரீபுண்டரீகன் அக்ரூரன் என்றாப்போலே சொல்லுகிற இவர்கள்பக்கல் பண்ணின விசேஷகடாக்ஷத்தைத் தம்பக்கலிலேயும் பண்ணி, திருக்கண்களாலே குளிரநோக்குதல், அணைத்தல், வினவுதல், இவர் (௩) "வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்று பாரித்துக்கொடு புக்கபடியே அடிமையிலே ஏவுதல் செய்யக்கண்டிலர், அத்தாலே மிகவுமவஸந்நராய், ஒரு(௪)*மின்னிடைமடவார்(௫)*காதில் கடிப்பில் பிராட்டிமார் தசை

---

(௧) தி-வாய்-௯-௩-௭. (௨) தி-வி-௪௭. (௩) தி-வாய்-௩-௩-௧.
(௪) தி-வாய்-௬-௧. (௫) ௧௦-௮.

பிறந்தால் ப்ரணய கலஹத்தாலே கிலாய்த்துச் சொல்லும் பாசுரமுடைய ஆழ்வார் தாமான தன்மையிலே சொல்லலாம்படியான பா(வ)வம்பிறந்து, ஸந்நிதியு முண்டாய், எனக்கபேக்ஷையிலும் கண்ணழிவற்று ப்ராப்தனுமாயிருக்க என்னை அடிமை கொள்ளாதொழிவதே! என்னுமின்னாப்புடனே சிவிட்குப் பிறந்து வார்த்தை சொல்லுகிறார். ... ... ... ... ... ... ... *

அரு. — நும்மையின் ப்ரவேசம். — தாவளந்துலகில் - சரணம்புக்கு, *கண்ணார்கடலில்-ப்ரக்ருதி ஸம்பந்தத்தை யறுத்துத்தரச்சொல்லி, ப்ராப்யத்வரையாலே உகந்தருளின நிலத்தில் உத்கடமான அபேக்ஷையைக் கீழில்திருமொழியிலே அருளிச்செய்தவர்க்குத் திருவிந்தளூரில் ஊடல் தலையெடுக்கைக்கு ஸங்கதியிடுகிறார் (பெறவேணுமித்யாதி). (பெறவேணும்) என்றதுக்கு முன்னே, ப்ராப்யத்தை என்று கூட்டுவது. ப்ரக்ருதி ஸம்பந்தத்தை யறுத்துத் தரவேணுமென்று ப்ரார்த்தித்தவர்க்கு முன்பு போலே உகந்தருளின நிலத்திலே தானே ப்ராவண்யம் பிறக்கையாலே, இவரபேக்ஷித்தபடியே கொடுக்கக்கடவனாய் சரீராந்தத்தில் ப்ரக்ருதி ஸம்பந்தத்தை நிவர்த்திப்பிக்க நினைத்து திவ்யதேசத்தில் நிலையைக்காட்டிக் கொடுக்க; இவனர்ச்சாவ்யவஸ்தையாலே வாய்திறவாதிருக்கையை எண்ணியிராதே, ஆசையாலே, "ஸர்வாபேக்ஷித ப்ரதனன்றோ, என்னபேக்ஷையும் தலைக்கட்டிற்றலாகாதோ" என்று கிலாய்க்கிறாரென்று கருத்து. அபேக்ஷை பரமபதத்திலே யன்றோ பிறக்கவேண்டுவது, இங்குப் பிறப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (மாகமித்யாதி). (௧) "பண்டைநாளாலே" என்கிற திருவாய்மொழியில் ஆழ்வார்க்குப் பிறந்தாப்போலே அர்ச்சாவதாரத்தில் சில பரிமாற்றங்களை யாசைப்பட்டு "நம்மை யொருகால்காட்டி நடந்தால்" என்று ப்ரார்த்திக்கை யுண்டாகையாலே, அதில், (௧) "சோதிவாய்திறந்துன் தாமரைக்கண்களால் நோக்காய்" (௨) "நின் பாதபங்கயமே தலைக்கணியாய்" இத்யாதி பரிமாற்றத்திலாசை இவர்க்கு மர்த்தஸித்த மென்றருளிச்செய்கிறார் (திருக் கண்களாலே யித்யாதி). (ஏவுதல்) என்றது-"கருமமருளி" என்றத்தைப்பற்ற. (தாமானதன்மையிலே) என்கையால்-இவ்விடத்தில் தாமாயிருந்து ஊடுகை ப்ராப்யத்திலுத்கடேச்சாக்ருதமான கலக்கத்தின் மிகுதியின் கார்யமென்கை. ...

மூ.-நும்மைத்தொழுதோம்நுந்தம்பணிசெய்திருக்கும்நும்மடியோம்
இம்மைக்கின்பம் பெற்றோமெந்தா யிந்தளூரீரே

(௧) தி-வாய்-௬-௨-௧. (௨) தி-வாய்-௯-௨-௨.

எம்மைக்கடிதாக் கருமமருளி யாவாவென்றிரங்கி
நம்மையொருகால் காட்டிநடந்தால் நாங்களுய்யோமே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நும்மை | தேவரீரை [தோம்; | எம்மை | என்விஷயத்தில் |
| தொழுதோம் | உபாயமாக ஆஶ்ரயித் | கடிதா | சீக்ரமாக |
| நுந்தம் | தேவரீருடைய | கருமம் | பரம ப்ரயோஜநமான கைங்கர்யத்தை |
| பணி | கைங்கர்யத்தை | அருளி | க்ருபைபண்ணி [று |
| செய்து | அநுஷ்டித்தே [க | ஆவாவென்று | ஐயோ! ஐயோ! என் |
| இருக்கும் | தரித்திருக்கும் படியா | இரங்கி | இரக்கமுற்று, |
| நும் அடியோம் | தேவரீருக்கு தாஸபூதராணோம்; | நம்மை | நம்மைக்குறித்து |
| இம்மைக்கு | இப்பொழுது | ஒருகால் | ஒருகாலத்திலே |
| இன்பம் பெற்றோம் | ஜ்ஞாந லாபமாகிற ஸுகத்தைப் பெற்றோம்; | காட்டி | உம்முடைய திவ்யமங்கள விக்ரஹத்தைக்காட்டி |
| இந்தளூரீர் | திருவிந்தளூரிலே எழுந்தருளி யிருக்கிற | நடந்தால் | எழுந்தருளினால் |
| | | நாங்கள் | அநந்ய ப்ரயோஜநரான நாங்கள் |
| எந்தாய் | எனக்குத் தாய்போன்றவரே! | உய்யோமோ | உஜ்ஜீவிக்க மாட்டோமா? (க) |

வ்யா.—முதற்பாட்டு. (நும்மைத்தொழுதோம்) இதரதேவதைகளுக் கந்தர்யாமியாயிருக்கிற நிலையை புத்திபண்ணித்தொழுதோமோ ஆறியிருக்கைக்கு. (க) "யோயோ யாம்யாம் தநும் ப⁴க்த:- யோயோ யாம்யாம் தநும்பக்தஃ" இத்யாதி. "இந்த்ராதிதேவர்கள் அவனுக்கு தநுபூதர், அவர்களுக் கிவனந்தர்யாமி" என்று ஆஶ்ரயித்தால், அவ்வவருடைய அதிகாரத்தளவிலே ப(ஃ)லமாகையால் விளம்பம் பிறந்திருக்கவு மாமிறே. அன்றிக்கே, (நும்மைத்தொழுதோம்) படுகுலைப் பட்டோமென்னவுமாம். அதாவது - பிரிந்தாலும் ஒருகூது சதுரங்கத்தாலே போதுபோக்கித் தரிக்கலாவதொரு விஷயத்தை யாஶ்ரயிக்கப் பெற்றிலோமே. (தொழுதோம்) முன்பெல்லா மீரரசென்றிருந்து கார்யகாலத்திலே கைங்கர்யமே யமையுமென் றிருப்பார்க்கன்றே தாழ்த்திருக்க லாவது.

(க) கீதை-எ-உக.

(நுந்தம்பணிசெய் திருக்கும்நும்மடியோம்) கைங்கர்யத்தை யொழியச்செல்லுவதாதல், கைங்கர்யம் பண்ணுகைக்கீடான ப்ராப் தியின்றிக்கே யொழிதல் செய்யிலன்றோ தரித்திருக்கலாவது. தேவு ரீர் திருவடிகளிலுண்டான கைங்கர்யத்தைப் பண்ணி அது பெறில் ஜீ வித்தல் இல்லையாகில் முடிதல் செய்யும்படி தேவர்க்கநந்யார்ஹர். (௧) [ந௪ஸீதேத்யாதி - நசஸீதேத்யாதி] தேவரை யொழிந்தவன்று பிராட்டியு முளளாகாள், அடியேனுமுளனுகேன். தேவரை யொழிந்தவன்று முத லிலே ஜீவிக்குமது தானில்லை. [அபிஜீவாவ: - அபிஜீவாவஃ] யதிஜீவாவ:- யதிஜீவாவஃ, [முஹூர்த்தம் - முஹூர்த்தம்] ஒருக்ஷணகாலம். [ஜலாந் மத்ஸ்யாவிவ - ஜலாந் மத்ஸ்யாவிவ] ஜலத்தைப்பிரிந்த மத்ஸ்யம்ஜீவிப்பது அந்நீர் நசையறுமளவுமிறே; அப்படியே, நில்லென்று சொன்னவார்த் தை உம்முடைய திருவுள்ளத்திலேயு முண்டென்றறியு மளவுங்கா ணும் நாங்கள் ஜீவிப்பது. இவருடைய ஸத்தையுண்டு-உண்மை, அது நிலா தென்றல் சந்தநம் தண்ணீர்போலே பரார்த்தமாயாய்த்து இருப் பது; சேஷிக்கதிசயத்தைப் பண்ணியாய்த்து இவர்க்கு ஸ்வரூபஸித் தி. (அடியோம்) அத்தலைக்கதிசயத்தைப் பண்ணுகையே ஸ்வரூப மாம்படி யாய்த்து ப்ராப்தியிருப்பது.

(இம்மைக்கின்பம்பெற்றோம்) அடிமையாலே ஸ்வரூபலாபமாம் படி யிருக்கிற எங்களுக்கு, அழகிதாக விடாய்த்தவிடத்தே தண் ணீர் வார்த்தீர். அன்றிக்கே, ஜ்ஞாநலாபத்தாலே வந்ததரிப்பைச்சொல் விற்றாகவுமாம். அலாபத்தையே சொல்லாநிற்க இப்போது இந்த த்ரு ப்திகூடுமோவென்னில்; இந்த ஜ்ஞாநலாபந்தானிறே கிலாய்க்கப் பண் ணுகிறது, இல்லையாகில் அல்லாதாரோபாதி உண்டுடுத்துப் போது போக்கித் திரியலாமே.

(எந்தாயித்யாதி) அதுக்கடியாக ஸ்ரீவைகுண்டத்தைவிட்டுத் திரு விந்தளூரிலே வந்து ஸந்நிதிபண்ணின ஸ்வாமீ! "இவ்வஸ்து உனக்கு சேஷம்" என்னுமிம்முறையை அறிவித்தவனே! இன்றிப்படி ஆறி யிருக்கிற நீ முன் தீம்புசெய்து ஸம்பந்தஜ்ஞாநத்தை எனக்குப்பிறப் பிப்பானென்?

ஸம்பந்தஜ்ஞாநத்தைப பிறபபித்தோமென்றீர், பெற்ற திவ்வம் சமாகில் நீர் பெறுததாகச் சொல்லுகிற தெவ்வம்சமென்ன, (எம்மைக்

(௧) ரா-அயோ-௫௯-௩௧.

கடிதாக்கருமமருளி) சேஷத்வ ஜ்ஞாநத்தைப் பிறப்பித்தருளிற்று; அந்த சேஷத்வாநுரூபமான வ்ருத்தியை என்னைக் கொண்டருள வேணும். (எம்மை). "க்ரமத்திலே ஒரு தேசவிசேஷத்தே கொடுபோய்க் காரியம் செய்கிறோம்" என்றுறியிருக்கலாம்படியோ என்தசை. (க) ‹‹க்ஷிப்ரம் நிவேதயத மாம் - க்ஷிப்ரம் நிவேதயதமாம்" என்னுமாபோலே ராவணபவநத்தில் பொருந்தாமையும், ராமகோஷ்ட்டியில் புகுரப்பெறாமையும், இரண்டாலும் நோவுபட்ட ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே, ஜ்ஞாநலாபத்தாலே ஸம்ஸாரத்தில் பொருந்தாமை யுண்டாகப் பெறுவது, ப்ராபதிபலமான கைங்கர்யத்தில் அந்வயிக்கப் பெறுதொழிவதாய் நோவுபடுகிறபடி. (கடிதாக்கருமமருளி) ஸர்வஜ்ஞனவனுக்குமறிவிக்கவேண்டும்படி யிருக்கிறதுகாணும் க்ரமப்ராப்தி பற்றாதபடியான இவருடைய ஸௌகுமார்யம். அது செய்யுமிடத்திலும் (ஆவாவென்றிரங்கி) "அடிமை பெறாமையாலே உறாவின அகிஞ்சநன், அநந்யகதி" என்று என்னுடைய தயநீய தசையை புத்திபண்ணி, ஐயோ! ஐயோ! என்று க்ருபைபண்ணியருளி. "தொழுதோம்" என்று வளைப்பிடவொண்ணாது காணும், அபிமதம் பெறும்போது அவனுடைய இரக்கமே வேணும.

(நமமை) உம்மை நீர் கண்ணுடிபபுறத்திலே கண்டறியாமையில்லையே; "நமமைப பிரிநதார் பிழையார்கள்" என்றிருக்கவேண்டாவோ. (ஒருகால் காட்டி நடநதால்) ஒருகால்காட்டினால் பின்னையிவன் வளைப்பிடுகிறான் என்றிருக்கவேண்டா; ஜ்வாஸந்நிபதிதர் "ஒருகால் நாக்கு நினைக்கவமையும்" என்னுமாபோலே. (காட்டி) (உ) ‹‹ஏஷ ஸர்வஸ்வ பூதஸ்து - ஏஷ ஸர்வஸ்வ பூதஸ்து" என்கிறபடியே-"நாமிருந்தபடிகண்டாயே!" என்று வடிவைக்காட்டி. (நடந்தால்)என்கிறது-போனாலென்கிறதல்ல, என் முன்பே நாலடியிட்டு நடந்து காட்டினால். (௩) ‹‹அக்ரதః ப்ரயயௌ ராமః - அக்ரதః ப்ரயயௌ ராமః" என்கிறபடியே-பிராட்டிக்கிட்ட விருந்திடவேணுங் காணுமிவர்க்கு. இப்படி நடந்தால் பெறும்பேறென்னென்னில் (நாங்களுய்யோமே)போனஉயிர் மீளும். உறாவினபயிரிலே ஒருபாட்டம் மழைவிழுந்தால் அது ஜீவிக்கச் சொல்லவேணுமோ? ... ... ... ... ... (௧)

(௧) ரா-யு-௧௯-௧௯. (உ) ரா-யு-௧-௧௩. (௩) ரா-ஆர-௧௧-௧.

அநு.—முதற்பாட்டு. (நும்மை யித்யாதி). "இந்தளூரீரே" என்ற பதத்தைக் கடாக்ஷித்து 'நும்மை" என்றதுக்கு ப்ராபகத்வ விவக்ஷயாதாத்பர்ய மருளிச்செய்கிறார் (இதரேத்யாதி). அஸாதாரண விக்ரஹ விசிஷ்டதை தோற்றுகையாலே ஸாதாரணமான அந்தர்யாமித்வ வ்யாவ்ருத்தி தோற்றுமென்று திருவுள்ளம். அந்தர்யாம்யாஶ்ரயணம் பண்ணினவனுக்கு விளம்பம் ஸித்தமாமென்று ஆறியிருக்கவேணுமோவென்ன வருளிச்செய்கிறார் (யோயோயாம் யாமித்யாதி). கர்மயோக நிஷ்டன் அக்நீந்த்ராத்யந்தர்யாமியைத் தன்னுடைய பலார்த்தமாகத் தொழுகையால், அந்த கர்மயோகந்தானும் பக்தித்வாரக மாகையாலும், வஸ்வாத்யுபாஸநம் பண்ணினவனுக்கு வஸ்வாத்யதிகாராநந்தரத்திலே பலமாக வேண்டுகையாலும், விளம்பம்ஸித்தமென்று கருத்து. "எந்தாய்" என்றத்தால் தோற்றின சேஷத்வ நிபந்தநமான ப்ராப்யத்வம் "நும்மை" என்றதுக்கர்த்தமாக விவக்ஷித்தருளிச்செய்கிறார் (படுகுலேயித்யாதி). (பெற்றிலோமே) என்ற வநந்தரம், என்கைஎன்று சேஷம். "தொழுதோம்" என்கிற பூத நிர்த்தேசத்தாலே-(க) "அடியேனடைந்தேன் முதல் முன்னம்" என்கிறபடியே அநாதியாகத் தொழுதோ மென்கை தோற்றுகையாலே, ஈஶ்வரனையும் தன்னையும் சேஷியென்று புத்திபண்ணி தத்விஷயத்தில் கைங்கர்யத்தை ஸ்வார்த்தமாக்கி, ஸ்வாதிசயத்தைப்பெற விருப்பாராய், இன்றுமாஶ்ரயித்திருக்கும் ப்ரபந்நரை வ்யாவர்த்திக்கிறதென்கிறார் (முன்பெல்லா மித்யாதி). *மயர்வற்றவராகையாலே அவனுக்கே சேஷமாயிருக்கும் வஸ்துவென்று தெளியக் கண்டாரென்று கருத்து.

நம்மையே ப்ராபகமாகவும் ப்ராப்யமாகவு மெண்ணி அநாதியான ஈரரசு தவிர்த்தீராகில் நம்மைக் கிலாய்க்கைக்கடி ஏதென்னு மாகாங்க்ஷையிலே "நுந்தம்" இத்யாதி யருளிச்செய்கிறாரென்று திருவுள்ளம் பற்றி யருளிச்செய்கிறார் (கைங்கர்யத்தை யித்யாதி). கைங்கர்யாலாபத்தில் தரிக்கமாட்டாமையாலே கிலாய்க்கிறேனென்கிறாரென்று கருத்து. வாக்யார்த்தந்தன்னை யருளிச்செய்கிறார் (தேவரீத்யாதி). பணிசெய்தால் தரிக்கையும் அதில்லாவிட்டா லில்லாதபடியுமா யிருக்குமோ ஸ்வரூபமென்ன வருளிச்செய்கிறார் (நசேத்யாதி). "அஹமபி" என்கிறவிடத்தில், அபி-சார்த்தகமாய், ஸீதாத்வயாஹீநா-அஹஞ்சத்வயாஹீநோந" என்று விவக்ஷித்து, ஸ்வரூபஸ்த்திதியைப் பற்ற வருளிச்செய்கிறார் (தேவரை யித்யாதி வாக்யத்வயத்தாலே). இனி சகாரத்வய மிருக்கையாலே - "த்வயாஹீநாஸீதா நஜீவதி, அஹஞ்ச நஜீவாமி" என்னுமர்த்தம் ஸ்ப்புரிக்கையாலே, அத்தை யருளிச்செய்கிறார் (தேவரையொழிந்த வித்யாதி). இளையபெருமாளைப்போலே இவ்வாழ்வாருடைய ஸ்வரூபமும் பரார்த்தமா யிருக்குமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவருடைய வித்யாதி). பரார்த்தமாக

(க) தி-வாய்-உ-௩-௪.

வேண்டுவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (சேஷிக்கித்யாதி). "நும்மைத் தொழுதோம், பணிசெய்திருக்கும்" என்றத்தாலே ஸித்தமாயிருக்க, "அடியோம்" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அத்தலைக் இத்யாதி).

பரார்த்தமான கைங்கர்யமே புருஷார்த்தமாகில் நமக்கு வேண்டும்போது கைக்கொள்ளுகிறோ மென்னு மபிப்ராயத்தின்மேலே கிலாய்ப்புப் பிறந்து சொல்லுகிறாரென்னு மிடம்தோன்ற விபரீத லக்ஷணயா தாத்பர்ய மருளிச்செய்கிறா (அடிமையாலே யித்யாதி). விபரீதலக்ஷணையாகாமல் யதாவஸ்த்திதத்துக்கே தாத்பர்ய மருளிச்செய்கிறா (அன்றிகே யித்யாதி).

(அதுக்கு) அந்தஜ்ஞாநலாபத்துக்கு. (எந்தாய்) என்று முழுச்சொல்லாய், ஸ்வாமிவாசகமாக வருளிச்செய்து, என்னுடைய, தாய் - தாயைப்போலே உபகரித்தவனே என்றர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (இவ்வஸ்து வித்யாதி)

"என் தகை" என்றத்தை விவரிக்கிறார் (க்ஷிப்ரமித்யாதி). *கடிதுக்குத்தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸர்வஜ்ஞனித்யாதி). "கரும மருளி" என்றால் போராதோ, "ஆவாவென்றிரங்கி" என்ன வேணுமோவென்ன (தொழுதோ மித்யாதி). அன்றிக்கே, கிலாய்க்கும்போது இங்ஙன் சொல்லுகிறதென்னென்ன வருளிச்செய்கிறாராகவுமாம்.

நம்மைக்குறித்து ஒருகால் வடிவைக்காட்டி நடந்தாலென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, வடிவுஇத்தனை போக்யமா யிருந்ததோ என்னு மாகாங்க்ஷயில் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உம்மை யித்யாதி). ... (௧)

மூ.—சிந்தைதன்னுள் நீங்காதிருந்த திருவே மருவினிய
மைந்தா வந்தணாலி மாலே சோலை மழகளிறே
நந்தா விளக்கின் சுடரே நறையூர்நின்ற நம்பீ யென்
னெந்தா யிந்தளூரா யடியேற்கிறையு மிரங்காயே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சிந்தைதன்னுள் | நெஞ்சிலே [மல் | அம் | ஸௌந்தரமாய் |
| நீங்காது | எப்போதும் பிரியா | தண் | குளிர்ந்திருக்கிற |
| இருந்த | வாஸம்பண்ணுகின்ற | ஆலி | திருவாலியில் எழுந்தருளி யிருக்கிற |
| திருவே | ஸம்பத்தே! | மாலே | ஆஶ்ரித வ்யாமுக்தனே! |
| மருவ இனிய | அநுபவிக்க அநுபவிக்க போக்யனாயிருக்கிற | சோலை | சோலைகளிலே ஸஞ்சரிக்கிற |
| | | மழ களிறே | ஆனைக்குட்டிபோன்றவனே! |
| மைந்தா | யுவாவானவனே! | நந்தா | அவியாத |

| | | | |
|---|---|---|---|
| விளக்கின் | தீபத்தினுடைய | என் எந்தாய் | எனக்கு ஸ்வாமியான வனே! |
| சுடரே | தேஜஸ்ஸுபோலே உஜ்ஜ்வலனானவனே! | அடியேற்கு | [கு தாஸபூதனான எனக் |
| நறையூர் | திருநறையூரில் | இறையும் | (அடிமை கொள்ளு கையாகிற) இவ்வ ல்பத்தையும் |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற | இரங்காய் | க்ருபை பண்ணு கி றிலை (உ) |
| நம்பீ | பூர்ணனே! | | |
| இந்தளூராய் | திருவிந்தளூரிலே எழு ந்தருளி யிருந்தவ னாய்க் கொண்டு | | |

வ்யா.— இரண்டாம்பாட்டு. (சிந்தை தன்னுள் நீங்காதிருந்த திருவே) அகவாயில் ப்ரகாசிக்கிற இதுக்கு நானேதேனும் க்ருஷிபண்ணிற்றுண்டாகிலன்றோ ப்ராப்திக்கென்றால் க்ருஷி பண்ணலாவது. ஹ்ருதயத்திலே எப்போதுமொக்க ப்ரகாசியா நின்றானாய்த்து. (திருவே) இவருடைய ஸம்பத்து அவனாய்த்து; (க) *திருவுக்கும் திருவிறே. (மருவினிய) அவ்விருப்புத் தானிவர்க்கினிதாகிறபடி. மருவ மருவ விட்டுப் பற்றவேண்டும்படி யிருக்கையன்றிக்கே நிரதிசயபோக்யனாக நின்றானாய்த்து. (மைந்தா) நித்யமான யௌவநத்தை யுடையவனே! தர்சநீயமாய் ஸ்ரமஹரமான திருவாலியிலே நித்யவாஸம்பண்ணி வ்யாமோஹத்தைத் தெரிவித்தவனே! (சோலையித்யாதி) சோலைக்குள்ளே வளர்ந்ததொரு இளவானைக் கன்றுபோலே யாய்த்து செய்ததடைய இனிதாயிருக்கிறபடி.

(நந்தா விளக்கித்யாதி) ஒரு விச்சேதமில்லாத தீபத்தில் திரியுமெண்ணெயும் புகையுமான அழுக்கின்றிக்கே, புகர்தானொருவடிவு கொண்டாப்போலே யிருக்கிற ஸ்வரூபத்தை யுடையவனே! (நறையூரித்யாதி) திருநறையூரிலே வந்து ஸந்நிஹிதனாய், "ஆஸ்ரயணீய வஸ்துவுக்கு இன்னமொன்று ‡கூட்டுப்பெற்றதில்லை" என்னும் குறைதீரும்படி யிருக்கிற பூர்ணனே! (என்னெந்தா யிந்தளூராய்) திருவிந்தளூரிலே வந்து ஸந்நிதிபண்ணி, எனக்கு ஸம்பந்த ஜ்ஞாநத்தைப் பிறப்பித்தவனே! (அடியேற்கித்யாதி) ஸம்பந்தஜ்ஞாநத்தைப் பிறப்பித்த உனக்கு, என்னுடைய ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தி விசேஷத்தைக் கொள்கையாகிற இம்மாத்ரமித்தனையும் செய்கை பெரிய பணியோ. ... ... ... ... ... ... (உ)

(க) எ-எ-க.    † (பா) கூடப்பெறறதில்லை.

அ௩.—இரண்டாம்பாட்டு. (சிந்தையித்யாதி) "நும்மடியோம்" என்று வைத்து, "நம்மை யொருகால் காட்டி நடக்கவேணும், இல்லையாகில் நாங்களுய்யோம்" என்று இங்ஙனே நம்மைக் கிலாய்க்கைக்கடியென்? வேணுமாகில் பேறுக்கொரு கைம்முதல் செய்துகொள்ளலாகாதோ என்னும் பகவதபிப்ராயத்தின்மேலே, நிரதிசய போக்யனுயிருக்கு மிருப்பை நீயே காட்டினுய், இனி நானொன்று செய்யவேணுமோ, குறையும் நீயே செய்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிருரென்று ஸங்கதி.

"மருவினிய" என்றது கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறதென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிருர் (மருவ வித்யாதி). அம் - அழகியதாய், தண்-குளிர்ந்த, ஆலி நகரிலிருக்கிற, மாலே-(க)"கள்வன்கொல்" என்னும்படி கைப்பிடித்து வ்யாமோஹத்தை யறிவிப்பித்தவனே! என்றுவிவக்ஷித்தருளிச்செய்கிருர் (தர்சநீயேத்யாதி).

(உ)"நண்ணு நறையூர் நான்தொழுது மெழுநெஞ்சமே" என்று இவர் ப்ராபகத்வேந பற்றப்போகிருராகையாலே அத்தைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு, ஸித்தோபாயத்தினுடைய ஸஹாயாந்தர நைரபேக்ஷ்யம் *நம்பி பதத்துக்குப் பொருளாக விவக்ஷித்தருளிச் செய்கிருர் (திருநறையூரிலே யித்யாதி). திருவாலியானைக் கைப்பிடித்தவனுகவும், திருநறையூரானை உபாயபூதனுகவும், திருவிந்தளூரானை சேஷித்வஸம்பந்தத்தை யறிவிப்பித்தவனுகவும் விவக்ஷிதது "எந்தாய்" என்றதுக்குத் தாத்பர்யத்தை யருளிச்செய்கிருர் (திருவிந்தளூரிலே யித்யாதி). இத்திருமொழியில் ஸம்பந்தஜ்ஞாநம் குறைவற்றபடியாலே கிலாய்த்தாகிலும் பேறுபெறவேணுமென்று த்வரைபிறந்ததென்று திருவுள்ளம். ... ... (உ)

மூ.—பேசுகின்றதிதுவே வைய மீரடியாலளந்த
மூசி வண்டு முரலும் கண்ணி முடி யீரும்மைக் காணு
மாசையென்னும் கடலில் வீழ்ந்திங்கயர்த்தோமயலாரு
மேசுகின்றதிதுவே காணு மிந்தளூரீரே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இந்தளூரீரே | திருவிந்தளூரிலே எழுந்தருளி யிருக்கு | முரலும் | சப்தியாநின்ற |
| | | கண்ணி | மாலையை |
| வையம் | பூமியை [மவரே! | முடியீர் | திருவபிஷேகத்தில் சூ |
| ஈரடியால் | இரண்டடியினுல் | உம்மை | உம்மை [டினவரே! |
| அளந்த | ஆக்ரமித்தவராய்க் கொண்டு, | இங்கு | இந்தலோகத்தில் |
| | | காணும் | காணவேணுமென்கிற |
| வண்டு | வண்டுகளானவை | ஆசையென்னும் | ஆசையாகிற |
| மூசி | மொய்த்துக்கொண்டு | | |

(க) ௩-௭-௧. (உ) ௬-௭-௧.

| | | | |
|---|---|---|---|
| கடலில் | ஸமுத்ரத்தில் | இதுவே | இந்த விஷயத்தைப் பற்றியே |
| வீழ்ந்து | விழுந்து | ஏசுகின்றது | பழிசொல்லுகிறது, |
| அயர்த்தோம் | அறிவுகெட்டோம், | நான் | நானும் [பற்றியே |
| அயலாரும் | அண்டையி லுள்ளவர்களும் | இதுவே | இந்த விஷயத்தைப் |
| | | பேசுகின்றது | சொல்லுகிறதும். (ங) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பேசுகின்றதிதுவே) உமக்கு வருமவத்யத்தைப் பரிஹரிக்கவேணு மென்னுமிதுவே நாங்கள் சொல்லுகிறது. (வையம்) நீர் குணார்ஜ்ஜநம் பண்ணுகைக்குப் பட்டபாடெல்லாமறிவீரே; இப்போதொரு வ்யக்தியிலே அல்பம் நெகிழநின்று அப்பெரிய குணமெல்லா மிழக்கவன்றோ புகுகிறீர்; வரையாதே நோக்கின உமக்கு இப்போது ஒருவனை நெகிழநின்றீரென்றால் குணஹாநி விளையாதோ? பூமிப்பரப்பை ஈரடியாலே யளந்துகொண்ட. மூசுகையாவது - மொய்க்கை. வண்டுகளானவை மதுபாநம்பண்ணி அத்தாலே ஆளத்தி வையா நின்றுள்ள மாலையை யுடைய திருவபிஷேகத்தை யுடையீர்! உம்முடைய வடிவு பரார்த்தமென்றன்றோ ப்ரஸித்தி; நீர் ஸர்வரக்ஷகராயன்றோ முடிசூடிற்று.

அதெல்லாமப்படியே, அதுக்கிப்போது வந்ததென்னென்ன; அதுக்கு வந்ததன்றோவிது, (உம்மை) உம்மைக் காணவேணுமென்றாசைப்பட்டுப் பெருமையாலே சிலர் முடிந்தார்களென்றால், உமக்கிதுபோக்கி அவத்யமுண்டோ? உம்மைக் காணவேணுமென்கிற ஆசையாகிற பெருங்கடலிலே புக்கு அகப்பட்டு அறிவுகெட்டோம். இத்தால் நமக்கு வருவதோரவத்யமுண்டோ வென்ன, (அயலாரித்யாதி) புறம்புள்ளார், "அழகியதாக ஆசைப்பட்டான், ஆசைப்பட்டவனுக் கழகிதாக முகங்கொடுத்தார், இதுவோதான் சில ராசைப்பட்டால் ப(ஃ)லிக்கும் படி" என்று உம்மைப் பழிசொல்லாநின்றார். அயலாரு மேசுகின்றதிதுவே, நான் பேசுகின்றதுமிதுவே. (இந்தளூரீரே) உகவாதார்சொல்லும் பழியைப் பரிஹரிக்கைக்கும், உகப்பார் நினைத்த வகைகளெல்லாம்பரிமாறுகைக்குமாகவன்றோ திருவிந்தளூரிலே வந்து நித்யவாஸம் பண்ணுகிறது... ... ... (ங)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (பேசுகின்ற தித்யாதி) ஸம்பந்த ஜ்ஞாநத்தையும் நானே யுண்டாக்கி உபாயோபேயங்களும் நானேயாய் உம்முடைய திருவுள்ளத்தில் நீங்காதிருந்தேனாகவும் சொல்லிவைத்தீர், "இறையு மிரங்காய்" என்கிறதென்? உம்மைக்கண்டு பரமபதத்திறபோலே இங்கே பரி

மாறக்கூடுமோ, அப்படியாகில் நமக்கவத்யமன்றோ என்னு மபிப்ராயத்திலே, உமக்கு வருமவத்யத்தைப் பரிஹரிக்கைக்காகவே நானிரங்கச் சொல்லுகிறே னென்கிறாரென்று ஸங்கதி.

கீழ்தாத்பர்ய மருளிச்செய்து சப்தார்த்த மருளிச்செய்கிறார் (பூமியித்யாதி). வண்டுகளைச்சொல்லி கண்ணியை விசேஷித்ததுக்கு ப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (உம்முடைய வித்யாதி). வண்டுக்காகக் கண்ணியிருக்குமாபோலே யன்றோ எங்களுக்காக நீரிருக்கும்படி யென்கை. "முடியீர்" என்றதுக்கு பா(ஃரு)வம் (நீரித்யாதி).

நீர் காணவாசைப்பட்டு நீரயர்த்தால் இது நமக்கவத்யமாமோ, இத்தைச் சொல்லுவார்தானுண்டோ வென்னும் சங்கையை யநுவதிக்கிறார் (இத்தாலித்யாதி). இப்படி வரும்பழிக்கு நாமஞ்சுகிறோமோ வென்ன; இந்தளூரீரே யென்கிறாரென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார (உகவாதாரித்யாதி) ... ... ... ... ... ... ... ... (௩)

மூ.—ஆசைவழுவாதேத்து மெமக்கிங்கிழுக்காய்த் தடியோர்க்குத்
தேசமறிய வுமக்கே யாளாய்த் திரிகின்றோமுக்குக்
காசினொளியில் திகழும் வண்ணம் காட்டீரெம்பெருமான்
வாசிவல்லீரிந்தளூரீர் வாழ்ந்தே போம் நீரே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இங்கு | இந்த உம்முடைய விஷயத்தில் | ஆளாய் | தாஸபூதராய் |
| ஆசை | உம்மை ஸேவிக்கவேணுமென்னும் ஆசையானது | திரிகின்றோமுக்கு | திரிகிற எங்களுக்கு |
| வழுவாது | தவறாமல் (விச்சேதியாமல்) | காசின் | (உருக்கின) பொன்காசினுடைய |
| ஏத்தும் | ஸ்தோத்ரம் பண்ணும் ஸ்வபாவத்தையுடையவராய் [ன | ஒளியில் | ப்ரகாசத்தைக் காட்டில் |
| அடியோர்க்கு | உமக்கு தாஸபூதரா | திகழும் | விளங்காநின்ற |
| எமக்கு | எங்களுக்கு | வண்ணம் | வடிவழகை |
| இழுக்காய்த் | (ஸ்தோத்ரம் பண்ணுகை) அவத்யமாய்த் தலைக்கட்டிற்று; | காட்டீர் | காட்டுகிறிலீர்; |
| தேசம் | தேசமெல்லாம் | எம்பெருமான் | எமக்குஸ்வாமியாய்க்கொண்டு |
| அறிய | அறியும்படியாக | இந்தளூரீர் | திருவிந்தளூரிலெழுந்தருளி யிருக்குமவரே! [ரான |
| உமக்கே | சேஷியான உமக்கே | வாசிவல்லீர் | தாரதம்யமறியுமவ |
| | | நீரே | நீரே |
| | | வாழ்ந்துபோம் | ஸுகித்திரும் (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (ஆசையித்யாதி) நமக்கவத்யம் வருமென்றிறே நீர்தாமிப்படிபடுகிறது, நாம் அத்தைப்பொறுக்கிறோமென்ன; உமக்குப் பொறுக்கவொண்ணுததுமொன்றுண்டு, எங்களுக்கு மவத்யமென்கிறார்; (க) † "ந தேநரூப:-நதேநரூப:" என்னக்கடவதிறே.

(ஆசையித்யாதி) நாட் செல்ல நாட்செல்ல (உ) "அஹந்யஹநி வர்த்ததே - அஹந்யஹநி வர்த்ததே" என்கிறபடியே ஆசையானது கரைபுரண்டு, ஏத்துகையே ஸ்வபாவமாமபடியான மஹாபாபத்தைப் பண்ணின எங்களுக்கு இழுக்காய்த்து. (அடியோர்க்கு) சேஷபூதன் சேஷியை ஆசைப்பட்டு ஏத்துகை முறையன்றே என்றிருக்கையன்றிக்கே, இது தன்னை அவத்யமாக உபபாதிக்கும்படியாய் வந்து விழுந்தது. (எமக்கு) உமக்கு வருமதில் வேணுமாகிலாறியிருக்கிறீர், எங்களுக்கு வருமதில் உமக்காறி யிருக்கப்போமோ? (தேசமித்யாதி) பாவியோம் விழுக்காடறியப்பெற்றிலோம். இப்படி விளைவதறிந்தோமாகில் நீரும் நாங்களு மறிந்ததறிவாக ஸ்நேஹித்துவிடலாய்த்தே. லோகமடங்க இருந்ததே குடியாக வறியும்படி உமக்கே யாளாய்த்திரிகின்றோமுக்கு. இன்னமும் வேறேயொரு ரக்ஷகனுண்டாய் அவன் வாசலிலேசென்று தான் தன்காரியம் குறையும் தலைக்கட்டிக் கொள்ளுகிறானென்று தான் ஆறி யிருக்கிறீரோ.

(காசித்யாதி) உமக்கே அநந்யார்ஹராயிருக்கிற எங்களுக்கு, (௩) "சுட்டுரைத்த நன்பொன்னுன் திருமேனியொளி யொவ்வாது" என்கிறபடியே-பொன்னொளியிற் காட்டிலும் விளங்காநின்றுள்ள வடிவழகைக்காட்டுகிறிலீர். (எம்பெருமான் வாசிவல்லீர்) உம்முடைய வடிவில் வீறும் ஆசைப்பட்ட எங்கள் சிறுமையும் நேராகக் கணக்கிடவல்லீர். (இந்தளூரீர்) நித்யஸூரிகளுக்குப் படிவிடும் வடிவை ஸம்ஸாரிகளுக்கு மொக்கப் படிவிடுகைக்காகவன்றோ திருவிந்தளூரிலே வந்து நிற்கிறது. வாசியற முகங்கொடுக்க வந்துநிற்கிற விடத்தே வாசிவையாநின்றீர். (வாழ்ந்தே போம்நீரே) உம்முடைய உடம்பு உம்மை ஆசைப்பட்டார்க்காகக் கண்டதென்றிருந்தோம், அங்ஙனன்றாகில், அத்தை நீர் கட்டிக்கொண்டு வாழும். ... ... ... (௪)

அரு.—நாலாம்பாட்டு. (ஆசை யித்யாதி) கீழ்ப்பாட்டோடே ஸங்கதி தன்னைக் காட்டுகிறார் (நமக்கித்யாதி). (பொறுக்கவொண்ணுததும்) என்ற

(க) ஸ்தோ-ர-௨-௫. † (பா) நாதேரூபம்.

து-அன்பற்றாரைப் பின்பற்றித் திரிகிறுனென்று எங்களைச் சொல்லுகிறது உமக்குப் பொறுக்கவொண்ணுது; உம்மை அன்பற்றுரென்று நாட்டார் சொல்லுகிறது எங்களுக்கவத்யம், அது எங்களுக்குப் பொறுக்கவொண்ணு தென்றபடி. ஆஶ்ரிதபரிபவம் பொறுக்கவொண்ணுதோ வென்ன வருளிச்செய்கிறுர் †(நசேத நரூபஃ) என்று. ஸ்வரூபாதிகளெல்லாம் ஆஶ்ரிதரிட்ட வழக்காம்படி பண்ணி யிருக்கு மவனுக்குப் பொறுக்கப்போமோ வென்று கருத்து.

காசு-பொறகாசு. "நீரே-வாழ்ந்துபோம்" என்றந்வயம் திருவுள்ளம் பற்றி யருளிச்செய்கிறுர் (உம்முடைய வித்யாதி). ... ... (௪)

மூ.—தீ யெம்பெருமான் நீரெம்பெருமான் திசையு மிருநிலனு
மா யெம்பெருமானுகி நின்றாலடியோம் காணேமால்
தாயெம்பெருமான் தந்தைதந்தை யாவீரடியோமுக்
கே யெம்பெருமானல்லீரோ நீரிந்தளூரீரே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை |
|---|---|---|---|
| தீ | அக்நிக்கந்தர்யாமியாய் | காணேமால் | ஸேவியாதொழிந்தோமாகில் (என்ன உபயோகமுண்டு); |
| எம்பெருமான் | அதுக்கு நிர்வாஹகராய் | தாய் | மாதாவாகவும் |
| நீர் | ஜலத்துக்கந்தர்யாமி | எம்பெருமான் | ஸ்வாமியாகவும் |
| எம்பெருமான் | அதுக்கு நிர்வாஹகராய் | தந்தை தந்தை யாவீர் | பிதாவுக்கும் பிதாவுமானவராய்க் கொண்டு (குலநாதனாய்க் கொண்டு) |
| திசையும் | திக்குக்களுக்கும் | | |
| இரு | விசாலமான | | |
| நிலனும் | பூமிக்கும் | இந்தளூரீர் | திருவிந்தளூரிலே யெழுந்தருளியிருக்கு |
| ஆய் | அந்தர்யாமியாய் | | |
| எம்பெருமான் ஆகி | அவற்றுக்கும் நிர்வாஹகனாய்க்கொண்டு | நீர் | தேவரீர் [மவரான |
| நின்றால் | (நீர்) எழுந்தருளி யிருந்தீராகிலும் | அடியோமுக்கு | அநந்யகதிகளான எங்களைக் கைங்கர்யம் கொள்ளுமவரான |
| அடியோம் | தாஸபூதரான நாங்கள் | எம்பெருமானல்லீரோ | ஸ்வாமியன்றே. (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தீயித்யாதி) இங்கே ஸந்நிஹிதரானோமாகில், ஜகதாகாரனுயிருக்கிற விருப்பைக் காட்டித் தந்தோமாகில், நாமும்முடைய விஷயத்திலே யொன்றும் செய்யாதோமாக நீரிங்ஙனே கிடந்து படாநிற்கிற தென்னென்ன; கண்ணாலே குளிரநோக்கி வாயாலே வினவி அடிமை கொள்ளவேணு மென்றாசைப்பட்ட எனக்கு இத்தா லென்செய்ததாய்த் தென்கிறுர்.

† (பா) நாசேரூப மித்யாதி

வ்யா.—(நீயெம்பெருமான் நீயெம்பெருமான்) இவையிரண்டும் ஐந்துக்கு முபலக்ஷணமாய், இத்தாலே - காரணவர்க்கத்தை யடைய நினைத்து, காரணபூதனு யிருக்கு மிருபடியைச் சொல்லுகிறது. (திசையு மிருநிலனுமாய்) இத்தால் கார்யவர்க்கத்தை நினைக்கிறது. இப்படி காரணபூதனுயும் கார்யபூதனுயு மிருக்கிற இவ்வாகாரத்தாலே நீ உன்னுடைய ஸ்வாம்யத்தை நிர்வஹிப்பதாக வொருப்பட்டால். (அடியோம் காணுமால்) தேவரோடே கலந்தநுபவிக்க வேணுமென்று சைப்பட்ட அடியோங்கள் என்பெற்றோ மாவுதோம். (தாயெம்பெருமான்) தேவர் நெகிழவிருந்தால் புறம்பு போகைக்கோ ரிடமுண்டோ? (தந்தை தந்தையாவீர்) இதுதான் என்னளவிலேயு மாயிருந்ததோ? (அடியோமிதயாதி) அநந்யகதிகளாயிருக்கிற எங்களுக்கு ருசிபிறந்தபோதே நினைந்தபடிகளெல்லா மநுபவிக்கைக்காகவன்றே தேவர் திருவிந்தளூரிலே வந்து கிட்டி நிற்கிறது. பூவலரும் போதைச் செவிப்பார்த்துப் பறித்துக்கொடுவாராநிற்பாரைப்போலே, ருசிபிறந்தபோதே அடிமைகொள்ளுகைக் கீடாகக் காலம்பார்த்தன்றோ தேவர் இங்கேவந்து நிற்கிறது. பரத்வம், நித்யஸூரிகளுக் கநுபாவ்யமாயிருக்கும்; வ்யூஹம், ஸநகாதிகளுடைய கூக்குரல் கேட்கைக் கீடாயிருக்கும்; ராமக்ருஷ்ணாத்யவதாரம், தசரத வஸுதேவாதிகளுடைய பாக்யபலமாயிருக்கும்; உகந்தருளின நிலங்கள், தங்களுக்கு ஹித மின்னதென்று மறியாதே ஸம்ஸாரம த்யாஜ்யமென்று மறியாதே ஸர்வேச்வரன் ப்ராப்யனென்று மறியாதே யிருக்கிற ஸம்ஸாரிகளுக்கே முகங்கொடுக்கைக்காகவாயிருக்குமிறே. குருடர்க்கு வைத்த இறையிலியில் விழித்தார்க்கு ப்ராப்தி யில்லையிறே; (க)"பின்னானார் வணங்கும் சோதி" என்னக்கடவதிறே. . . ... ... (ரு)

அநு—அஞுசாம்பாட்டு. (நீயித்யாதி) நீரே வாழ்ந்துபோமென்னவே இவரை பஹுமுகமாக ஸமாதாநம்பண்ண வொருப்பட்ட எம்பெருமானபிப்ராயத்தை வெளியிடாநின்று கொண்டு ஸங்கதியை யருளிச்செய்கிறார் (இங்கே யிதயாதி).

நான் ஜகதாகாரன், இருந்ததெல்லாம் என் ஸ்வாம்யத்தை நிறுத்திக்கொண்டவளவேயாய் நீரொன்றுங் காணாதே போனீராகில் பெற்றார் வளர்த்தா ரண்டைகொண்டிருக்கலாகாதோ, நம்மைக் கிலாய்ப்பானென்னென்கிற சங்கையில் உத்தரார்த்தமென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தேவரித்யாதி) . ... .. .. ... (ரு)

(க) தி-நெ-௧௦.

மூ.—சொல்லாதொழியகில்லே னறிந்த சொல்லில் நும்மடியா
ரெல்லாரோடு மொக்க வெண்ணியிருந்தீரடியேனை
நல்லாரறிவீர் தீயாரறிவீர் நமக்கிவ்வுலகத்து
எல்லாமறிவீரீதே யறியீரிந்தளூரீரே. (௬)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| இந்தளூரீரே | திருவிந்தளூரிலெழுந்தருளி யிருக்கும் ஸ்வாமியே! | அறிவீர் | அறிந்திருப்பீர்; |
| சொல்லாது | (தேவரீரை நிர்ப்பந்தித்துச்) சொல்லாமல் | தீயார் | தேவரீருடைய விரஹ ஸஹிஷ்ணுத்வமாகிற தீமையையுடையவர்களுடையப்ரக்ருதியையும் |
| ஒழியகில்லேன் | இருக்கமாட்டுகிறிலேன், | | |
| அறிந்த சொல்லில் | (நான்) அறிந்தவற்றை சொல்லப்புகில் | அறிவீர் | அறிந்திருப்பீர், |
| அடியேனை | பிரிவாற்றமாட்டாத என்னை | இவ்வுலகத்து | இந்த லோகத்தில் |
| நும் அடியார் | தேவரீருடைய தாஸபூதாகளான | எல்லாம் | மற்றை யெல்லாவற்றையும் |
| எல்லாரோடும் ஒக்க | மற்றை எல்லாரோடும் ஸமானமாக | அறிவீர் | அறிந்திருப்பீர், |
| எண்ணியிருந்தீர் | நினைத்திருக்கிறீர், | நமக்கு | விரஹாஸஹிஷ்ணுக்களாகிற எங்களுக்குள்ள |
| நல்லார் | தேவரீருடைய விரஹாஸஹிஷ்ணுத்வமாகிற நன்மையையுடையவர்களுடைய ப்ரக்ருதியையும் | ஈதே யறியீர் | இந்த மார்த்தவமொன்றையுமே அறியமாட்டீர். (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (சொல்லாதொழிய கில்லேன்) சேஷிஸந்நிதியில் சேஷபூதன் பரியாறும் முறையில் பரிமாறக்ஷமனுகிறிலேன். சேஷிசெய்தபடி கண்டிருக்கைக்கு மேற்பட சேஷபூதன் நிர்பந்திக்கக்கடவனன்றிறே; இப்படியிருக்க மாட்டுகிறிலேன். (அறிந்த சொல்லில்) அறிந்தவற்றைச் சொல்லில். முறை செய்யக்கடவதல்லதாகப் பார்த்தபின்பு இனி அதுக்கீடாக ப்ரதிபந்நங்களைச் சொல்லில். (உம்மடியாரித்யாதி) உம்மைப்பிரிந்து பின்னையும் "காணலாம்" என்னும் நசையாலே பத்துமாஸம் தரித்திருக்கைக் கீடான எலுப்பு முற்றின பிராட்டி போபாதியாக நினைத்திராநின்றீர்; உம்மை அரைக்ஷண

மும் காணுவிடில் ஜீவிக்கமாட்டாத அடியேனையும். அவள் முன்னாகப் பற்றினார்க்கு இத்தனைவாசியுண்டு போலேகாணும். ஜீவிக்கிலும் சில நாள் தரித்திருக்கும்படி ஜீவித்து, பட்டினிவிடிலும் சிலநாள் பொறுக்கவல்லாரைப்போலேயாய்த்து நம்பாழ்வார் போல்வார் ப்ரக்ருதி; உண்ணவும் பொறாது பட்டினி விடவும் பொறாது என்னும் ஸுகுமாரரைப்போலே யாய்த்து இவருடைய ஸௌகுமார்யம். தூதுவிடப் புக்கு விட்டதூது அத்தலைப்பட்டு மீளுவதற்கு முன்பே பற்றாமை தாம்கிடந்து கூப்பிடுகிறாரிறே (க) *தூவிரிய மலருழக்கியிலே.

(நல்லாறிவீ ரித்யாதி) தேவரை யொழியச்செல்லாதார் ப்ரக்ருதியு மறிவீர்; தேவரை யொழியவும் ஜீவித்திருப்பார் ப்ரக்ருதியுமறிவீர். இங்ஙன் தனித்தனி பிரித்துச்சொல்லுகிறதென், (இவ்வுலகத்தெல்லா மறிவீர்) (உ) ‹‹అజ్ఞాతం నాస్తి తే కించిత్ త్రిషు లోకేషు రాఘవ - அஜ்ஞாதந்நாஸ்திதே கிஞ்சித்த்ரிஷு லோகேஷு ராகவ'' இந்த லோகத்தில் உம்முடைய ஜ்ஞாநத்துக்கு அவிஷயமா யிருப்பதொன்றில்லை. (ஈதே யறியீர்) ஸர்வஜ்ஞனையும அஜ்ஞனாக்க வேண்டும்படி காணும் இவருடைய ப்ரக்ருதி மார்த்தவம். (இந்தளூரீரே) "தம்மை ஆசைப்பட்டார் பருவமறிந்து முகங்காட்டிற்றிலர்" என்னு மவத்யத்தைப் பரிஹரிக்கைக்காக வன்றோ நீர் திருவிந்தளூரிலே வந்து நிற்கிறது; போந்த காரியத்தை மறக்கிறதென்? ... ... ... ... (சா)

---

**அரு.**—ஆறும்பாட்டு. (சொல்லாதித்யாதி). நீரே வாழ்ந்துபோமென்பது, "அடியோமுக்கே எம்பெருமானல்லீரோ" என்பது, இப்படி நீர ஸ்வரூபத்துக்குச் சேராதவற்றைச் சொல்லக்கடவீரோ வென்ன வருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

இவருடைய ம்ருதுப்ரக்ருதித்வத்துக்குச் சேர கிலாய்ப்பில் தளர்த்தி தோற்ற அநுதபிக்கிறாராக விவக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறா (சேஷி ஸந்நிதியி லித்யாதி). கீழ்வாக்ய விவரணம் (சேஷியித்யாதி). (எலும்பு முற்றின) சக்தையான என்றபடி. பிராட்டியைக்காட்டிலும் நீர தரியாமைக்கு ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிறா (அவள் முன்னாகவித்யாதி). அவள் ஏகாந்தசேஷியாகையாலே அவள் அவன் ஸ்வாதந்த்ர்யத்தைஅறிந்து வேறு கடக (ఘటక్) ரில்லாமையாலும் அவனே வரவேணுமென்று ஆறியிருக்கவேணும், இவர்க்கது வேண்டாவிறே என்று கருத்து. "எல்லாரோடும்" என்று சொன்னதுக்கு - ஒரு பிராட்டியை வ்யாவர்த்த

---

(க) ரு-ச- (உ) ரா-

திப்பித்தமை போராமையாலே, மற்றை யாழ்வாரையும் வ்யாவர்த்திப்பிக்கிறுர் (ஜீவிக்கிலும்) ஸம்ஶ்லேஷிக்கிலும் என்றபடி. இவர் ப்ரக்ருதி இதுவென்று நாமறியும்படி எங்ஙனே யென்ன வருளிச்செய்கிறுர் (தூதித்யாதி). ... ... ... .. ... ... ... ... (௬)

மூ.—மாட்டீரானீர் பணி நீர் கொள்ள வெம்மைப்பணியறியா
வீட்டீ ரிதனை வேறே சொன்னே மிந்தளூரீரே
காட்டீ ரானீர் நுந்தமடிக்கள் காட்டி லுமக்கிந்த
நாட்டேவாது தொண்டரான நாங்களுய்யோமே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இந்தளூரீரே | திருவிந்தளூரிலெழுந்தருளியிருக்கும் ஸ்வாமியே! | நுந்தம் | தேவரீருடைய |
| நீர் | தேவரீர் | அடிக்கள் | திருவடிகளை |
| பணிகொள்ள | (எங்கள்) கைங்கர்யத்தை ஸ்வீகரிக்க | காட்டீரானீர் | காட்டாமல் போனீர், |
| மாட்டீரானீர் | இச்சியாமல்போனீர், | காட்டில் | காண்பித்தீராகில் |
| எம்மை | எங்களை | இந்தநாட்டே | சேஷத்வத்துக்கிசையாத இந்த லோகத்திலே |
| பணி | கைங்கர்ய ரஸத்தை | வந்து | இசைந்துவந்து |
| அறியா | அறியும்படி பண்ணி | உமக்கு | தேவரீருக்கு |
| வீட்டீர் | கைவிட்டு விட்டீர்; | தொண்டரான | அடிமையி லுற்றவர்களான |
| இதனை | இதனை [மாக] | நாங்கள் | நாங்கள் |
| வேறே | தனியே (வ்யாவ்ருத்த | உய்யோமே | ஜீவிக்க மாட்டோமோ? (எ) |
| சொன்னோம் | விண்ணப்பம் செய்தோம்; | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மாட்டீர்) நமக்கொருகுற்றமுமில்லையாகவன்றோ (க) “யஸ்ஸர்வஜ்ஞ ஸ்ஸர்வவித் - யஸ்ஸர்வஜ்ஞ ஸ்ஸர்வவித்” இத்யாதி ப்ரமாணங்கள் சொல்லுகிறது, நம்மை “ஸர்வஜ்ஞன், ஸர்வசக்தி” என்று ப்ரமாணங்கள் சொல்லாநிற்க நீர்நமக்கு ஜ்ஞாநசக்திகளில் வைகல்யம் சொல்லுகிறதென்கொண்டென்னில்; அதொரு வ்யக்தியிலே பலிக்கக் கண்டேனென்கிறுர். பருவமறிந்து வந்து முகங்காட்டாமையைக்கொண்டு ஸர்வஜ்ஞனை அஜ்ஞனாக உபபாதித்தார், தம்தசைக்கீடாக உதவாமையைக்கொண்டு ஸர்வசக்தியை அசக்தனாக உபபாதிக்கிறுர்.

(க) முண்ட-க-க.

வ்யா.—(மாட்டீரானீர்பணிநீர்கொள்ள) சேஷத்வத்தை இப்போது உம்மாலே உண்டாக்குதல் ஒழித்தல் செய்யவொண்ணாதே! இதினுடைய ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திவிசேஷத்தைப் பண்ணுவித்துக் கொள்ள மாட்டீரானீர். (எம்மைப்பணியறியாவீட்டீர்) உம்மையொழியச்செல்லாத ஸ்வபாவத்தையுடைய எங்களை, உம்முடைய திருவடிகளிலடிமைச்சுவட்டையறிவித்துப்பொகட்டீர். (இதனை வேறேசொன்னோம்) இத்தை அல்லாதவைபோலன்றியே வ்யாவ்ருத்தமாகச்சொன்னோம். (சொன்னோம்) நம்மாற்றாமைக்கு வேண்டுமளவன்றியே கண்ணுஞ்சுழலையிட்டு இனி இவ்வஸ்துவைப் பிறர் நம்பாதபடி தொட்டோம். (இந்தளூரீரே) பரமபதம் கலவிருக்கையாயிருக்க அடிமைகொள்ளுகைக் கீடாகத் திருவிந்தளூரிலே வந்து ஸந்நிதிபண்ணின உம்மையன்றோ நானிவ்வார்த்தை சொல்லுகிறது. இவ்வுபகார ஸ்ம்ருதியு மநுவர்த்தியாநின்றதாகில் பின்னை நீரிப்படி சொல்லுவானென்னென்னில்; அதுக்கு ஹேதுவுண்டு. (காட்டீரானீர் நுந்தமடிக்கள்) பரார்த்தமான வஸ்துவை உமக்கென்றிராநின்றீர். உம்முடைய திருவடிகளைக்காட்டாமையே ஸ்வபாவமாம்படியானீர். அவ்வபிஸந்தியைக் குலைத்து அத்தை யப்படிசெய்யப் பெறில். (இந்தாட்டேவந்து தொண்டரான நாங்களுய்யோமே) "நாமுபேக்ஷித்தால் தான் இவற்றுக்கவ் வருகு போக்குண்டோ, ஆனபின்பு நாம் நினைத்தபோது காரியம் செய்கிறோம்" என்றுறியிருக்கைக்கு உம்முடைய பரமபதத்தில் நித்யஸூரிகளோ; மருபூமியில் தண்ணீர்போலே உம்மையொழிய உண்டுடுத்துப் போதுபோக்குகிற இஸ்ஸம்ஸாரத்திலே உம்மாலல்லது செல்லாதபடியிருக்கிற நாங்களுமுஜ்ஜீவியோமோ. ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (மாட்டீரித்யாதி) கீழ்ப்பாட்டோடிப் பாட்டுக்கு ஸங்கதியைக் காட்டுகிறார் (நமக்கித்யாதி). கீழ்வாக்ய விவரணம் (பருவமித்யாதி),

"நீர்-பணி-கொள்ள-மாட்டீர்" என்றந்வயித்து வ்யாவ்ருத்தி பூர்வகம் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (சேஷத்வேத்யாதி). பணி யறியாநிற்கச் செய்தே, "எம்மை-வீட்டீர்" என்றந்வயித்துத்தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உம்மையொழிய வித்யாதி) (இத்தை) என்றது-"அறியீர" என்றும் "மாட்டீர்" என்றும் "வீட்டீர்" என்றும் சொன்னவற்றை யென்றபடி. வ்யாவ்ருத்தமாகச்சொன்னபடியைக் காட்டுகிறார் (நம்மித்யாதி). (தொட்டோம்) பிறர்க்கர்ஹமாகாதபடி ஸ்பர்சித்தோம். குற்றம் சொன்னோமென்றபடி. நீரிந்த

ளூரராய் வந்திருக்கச்செய்தே இங்ஙன் சொன்னது தப்பச்சொன்னோமென்றபடி.

இப்படியறிந்த நீர் முன்னே அப்படி சொன்னதுக் கடியென்னென்னும் சங்கையை யநுவதிக்கிறார் (இவ்வுபகாரேத்யாதி). தாத்பர்ய மருளிச்செய்து, சப்தார்த்த மருளிச்செய்கிறார் (உம்முடையவித்யாதி). "காட்டில்" என்றதுக்கர்த்தம் (அவ்வபிஸந்தியை யித்யாதி). "இந்த நாட்டேவந்து தொண்டர்" என்று விசேஷித்ததுக்கு உட் கருத்தருளிச் செய்கிறார் (நாமித்யாதி). இத்தால் - நீர் (க) "அவாக்யநாதர:-அவாக்யநாதர:" என்று இங்கிருந்தால், நாங்கள் ஸ்வரூபஜ்ஞானத்தாலே அதிலே துவக்குண்டு, கண்டுகொண்டிருக்க மாட்டோமே, வாய்திறந்து சொல்லிக் காரியம் கொள் உஜ்ஜீவிப்போ மென்றதாய்த்து ... ... ... ... ... (எ)

மூ.—முன்னைவண்ணம் பாலின்வண்ணம் முழுதும் நிலைநின்ற
பின்னைவண்ணம் கொண்டல்வண்ணம் வண்ணமெண்ணுங்கால்
பொன்னின் வண்ணம் மணியின்வண்ணம் புரையும் திருமேனி
இன்னவண்ணமென்று காட்டீர் இந்தளூரீரே. (அ)

| பதம். | உரை | பதம். | உரை |
|---|---|---|---|
| இந்தளூரீரே! | [வழகை | மணியின்வண்ணம் | (பின்பு த்வாபரயுகத்தில் வடிவழகு) நீலமணியினுடைய வர்ணத்தை யுடைத்தாயிருக்கும், |
| வண்ணம் | (தேவரீருடைய) வடி | முழுதும் நிலைநின்ற | ஸர்வகாலத்திலும் ஸ்த்திரமாயிருக்கிற |
| எண்ணுங்கால் | நினைக்கப்புகில், | வண்ணம் | வடிவழகானது |
| முன்னை வண்ணம் | முன்பு க்ருதயுகத்திலுள்ள வடிவழகு | கொண்டல் வண்ணன் | மேகத்தினுடைய நிறமாயிருக்கும், |
| பாலின் வண்ணம் | பாலினுடைய நிறமான வெண்மையாயிருக்கும், | புரையும் | (இப்படி நாலுவர்ணங்களோடு) சேர்ந்திருக்கிற |
| பின்னை வண்ணம் | பின்பு த்ரேதாயுகத்திலுண்டான வடிவழகு | திருமேனி | திவ்ய விக்ரஹத்தை |
| பொன்னின் வண்ணம் | பொன்னினுடைய சிவந்த வர்ணத்தை யுடைத்தாயிருக்கும், | இன்ன வண்ணம் என்று | இப்படிப்பட்ட நிறத்தையுடையதென்று |
| | | காட்டீர் | காட்டியருளீர். (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (முன்னையித்யாதி) சேதநருகந்தத்தையே நிறமாகக்கொள்ளும் ஸ்வபாவரான நம்பக்கல் உம்முடைய அபேக்ஷிதம் பெற்றுப்போகையில் குறையுண்டோ, உம்முடைய அபேக்ஷித

(க) சாந்தோ-௩-௧௪.

ந்தன்னைச் சொல்லீரென்ன; நீ உகந்தாருகந்தவடிவுகளைக் கொண்டு வந்து அவர்களுக்குக் காட்டிக்கொடுத்தாயே யாகிலும், உன்னுடைய * இச்சாக்ருஹீதமான அஸாதாரண விக்ரஹத்தை "இதுசாணிருக்கும்படி" என்று கொடுவந்து எனக்குக் காட்டவேணுமென்கிறார்.

(முன்னை வண்ணம் பாலின்வண்ணம்) க்ருதயுகத்தில் புருஷர்கள் ஸத்வப்ரசுரராகையாலே வெளுத்த நிறத்தை யுகப்பர்களென்று, அதுக்காக வெளுத்த நிறத்தைக் கொண்டானாய்த்து, அவர்களுகந்தத்தை நாம் செய்யவே "நாமுகந்தத்தை இவன் செய்தான், நாமுமிவன் றன்னை யுகப்போம்" என்றுதரிப்பார்களென்று பார்த்து; அவ்வளியாலே, அநந்தரத்திலுள்ளார்க்கு ரஜோகுண மளாவி யிருக்கையாலே அவர்களுகந்த சிவந்த நிறத்தையுடையனானான்; அதுக்கநந்தரம், மணியின் வண்ணத்தையுடையனானான். (வண்ணமெண்ணுங்கால்) இவனுடைய வடிவை ஆராயப்புக்கால், நித்யமான அஸாதாரண விக்ரஹம் நீர் கொண்டெழுந்த காளமேகம்போலே யாய்த்திருப்பது. "இவன் யுகங்கள்தோறும் அவ்வவருகந்த வடிவுகளைக் கொள்ளும், இவனுடைய அஸாதாரண விக்ரஹம் காளமேகம்போலே யிருக்கும்" என்று சாஸ்த்ரங்களிலே கேட்டுப் போகையன்றியே, "நீ இப்படி சாஸ்த்ரங்களிலே கேட்டுப் போந்தவடிவு தானிருக்கும்படி இதுகாண்" என்றொருவார்த்தை யருளிச்செய்து, அவ்வடிவைக் காட்டவேணும். (இந்தளூரீரே) நீர் கொள்ளும் வடிவுகளுக்கெல்லாம் சாஸ்த்ரங்களில்லையோ, "ப்ரமாணங்களிலே கேட்டுப்போக வொண்ணாது, நம்முடையார்க்கு, 'இவ்வடிவு தான் இது காணுங்கோள்' என்று காட்டவேணும்" என்று அதுக்காகவன்றோ நீர் திருவிந்தளூரிலே வந்து நிற்கிறது. (௮)

௮௩.—எட்டாம்பாட்டு. (முன்னையித்யாதி) இந்தளூரில வந்ததெல்லாம் நம்மைக் காட்டவேயன்றோ! நீர "காட்டீராளீர்" என்று சொல்லுகைக்கு உமக்கு இது வன்றிக்கே அபேக்ஷிதமுண்டோ? என்னும் ப்ரஸ்நத்தின்மேல் ஓப்பாட்டு நடக்கிறதென்று மிடந்தோன்ற ஸங்கதி யருளிச்செய்கிறார் (சேதநரித்யாதி).

"வண்ண மெண்ணுங்கால் - முன்னை வண்ணம் பாலின் வண்ணம், பின்னை வண்ணம்-பொன்னின் வண்ணம், அதுக்குப் பின்னை வண்ணம் - மணியின்வண்ணம், ஸ்வாபாவிகமான வண்ணம்-முழுதும் நிலநின்ற-கொண்டல் வண்ணம், புரையும் திருமேனி-நாலுவண்ணத்தோடொத்திருக்கிற திருமேனியை, சாஸ்த்ரங்களிலே கேட்டுப் போகையன்றிக்கே, இன்ன

வண்ணமென்று காட்டீர்" என்றந்வயம் விவக்ஷித்தர்த்த மருளிச்செய்கிருர் (க்ருதேத்யாதி). தாமஸப்ரக்ருதிகளுக்கு (க) "ந ஸேவ்யம் - நநமேயம்" என்றிருக்கையேஸ்வபாவமாய் பகவத்விஷயத்தில் ருசிபிறக்கைக்கு போக்யதையிலலாமையாலே, (உ) *பாசியின்பசும் புறம்போலும் நீர்மையாய், ஜ்ஞாநவிபாக காரயமான அஜ்ஞாநத்தாலே இருண்டு கலங்குமவருக்கும்படி (௩) "மல்லாண்டதிண் டோள்மணிவண்ணு" என்னும்படி கருடப்பச்சையான மணிவண்ணத்தைக் கொண்டானென்று திருவுள்ளத்தில் வைத்துக்கொண் டருளிச்செய்கிருர் (அதுக்கநந்தர மித்யாதி). ... (௮)

மூ.—எந்தை தநதை தமமானென்று‡ எமரேழளவும்
வந்து நின்ற தொண்டரோர்க்கே வாசிவல்லீரால்
சிந்தைதன்னுள் முந்திநிற்றிர் சிறிதும் திருமேனி
இந்தவண்ணமென்று காட்டீரிந்தளூரீரே. (௯)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| இந்தளூரீரே! | | தொண்டரோர்க்கே | அடியோங்கள் விஷயத்திலேயே |
| எந்தை | எனக்கும் என்னுடைய தகப்பனுக்கும் | வாசிவல்லீர் | (ஸேவை ஸாதிக்கவொண்ணாதென்று) விசாரியாநின்றீர், |
| தந்தை | அவருடைய தகப்பனுக்கும் (இப்படி எங்கள் குலத்துக்கெல்லாம்) | சிந்தைதன்னுள் | (என்) நெஞ்சுக்குள்ளே |
| தம்மான் | ஸ்வாமியானவன் | முந்தி | சிரகாலமாக லும்) |
| என்று | என்று சொல்லிக்கொண்டு | நிற்றிர் | நில்லாநின்றீர், (ஆகி |
| எமர் | எங்களுடைய பூர்வபுருஷர்கள் | திருமேனி | திவ்ய விக்ரஹத்தை |
| ஏழளவும் | ஏழு தலைமுறையாக | இந்தவண்ணம் என்று | இவ்விதமான வர்ணத்தையுடையதென்று |
| வந்து | (தேவருடைய) கைங்கர்யத்துக்கிசைந்து வந்து | சிறிதும் | அல்பமும் |
| நின்ற | ஒருபடிப் பட்டுநின்ற | காட்டீர் | காட்டுகிறிலீர். (௯) |

வ்யா. — ஒன்பதாம்பாட்டு. (எந்தையித்யாதி) என்னுடைய குலநாதனென்று ஏழுபடிகால் தேவர் திருவடிகளில் கைங்கர்யத்தையொழியச் செல்லாதே வந்துநிற்கிற எங்களுக்கே நோகக் கணக்கிடவல்லீராகாநின்றீர். (சிந்தை தன்னுள் முந்திநிற்றிர்) "அணைக்கைக்கிடாகக் கைக்கெட்டாதே யிருக்கிற நீர் இத்தைப்போர வளர்க்கிற தெ

(க) ரா-யு-௬௭-௧௧ (உ) தி-ச-வி-௪௪. (௩) தி-பல்லா-௧.
‡ (பா) என்றெமரேழளவும், எமரேழேழளவும்.

ன்?" என்று பிள்ளான். நாமென்ன† வாசிவைத்தோமாகத் தான் இப்படி சொல்லுகிறதென்ன; இவருக்கு ஹ்ருதயப்ரகாசமே அமையும் என்று அறியிராதே, நெஞ்சிலே ப்ரகாசிக்கிற வோபாதி அணைக்கைக்கு மெட்டுதல், அணைக்கைக் கெட்டாதாப்போலே ஹ்ருதயத்திலே ப்ரகாசியாதிருத்தல் செய்யப்பெற்றிலோம். (சிறிதும்) நெஞ்சுக்குக் குறைவறக் காட்டுகிறாப்போலே யாய்த்து கண்ணுக்கு ஒன்றும் காட்டாதொழிகிறபடி. பண்டொரு ராஜா விஷய ப்ரவணனாய் நாட்டுக்குக் காட்சி கொடாதொழிய, இவனுடைய ஸத்பாவத்திலே அதிசங்கை பண்ணின ராஜலோகத்தைக் கண்ட மந்த்ரிகள் வாசலிலே வந்து கூப்பிட, ஜாலகத்வாரத்தாலே காலை நீட்டிவிட்டானிறே. (இந்தளூரீரே) நெஞ்சில் ப்ரகாசத்தை யொழியவே, நித்யஸூரிகளுக்குக் காட்சி கொடுக்கும் வடிவை அங்குள்ளாரோபாதி முழுக்கக் காட்சி கொடுக்கைக்காக வன்றோ இங்கு வந்து நிற்கிறது. ... ... (௯)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (எந்தை யித்யாதி) அவ்வவ காலாநு குணமாக அவர்களுகந்தபடிக்கெல்லாம் காட்டவேணுமோ, உம்முடைய பேராசை ஒருவரா லாற்றப்போமோ, உமக்காக ஆஸ்ரிதரிட்ட வழக்காகக்கொண்டு நின்ற அர்ச்சாவதாரத்தைக் காட்டிக்கொடுத்திருக்கவும் த்ருப்தியின்றிக்கே யிருந்தீரே என்ன: நீர் ப்ரயோஜநாந்தர பரர்க்காக (க)*மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய்க் காநேனமுமாய்ப் பிறக்கலா மித்தனை போக்கி, * குடி குடியாட் செய்யும் தொண்டரான எங்களுக்குக் காட்டக்கூடுமோ, ஆனால் நெஞ்சிலே நீ ப்ரகாசிப்பானென் என்னுசை வளரும்படி என்று இலாய்த்து, சிறிதும் காட்டாதே போனீரென்கிறாரென்று ஸங்கதி,

எந்தைக்கும் தந்தைக்கும் தம்மான ஸ்வாமியென்றெண்ணி என்று சப்தார்த்தமா யருளிச்செய்கிறார் (என்னுடைய வித்யாதி). (கணக்கிட வல்லீர்) என்றது-என்னெஞ்சில் தோற்றுகை போக்கி அத்தைக் கண்ணுக்குக் காட்டவொண்ணாதென்று விசாரிக்க வல்லீரென்கை. (இதனைப்போர வளர்க்கிறதென்) பேராசையை வளர்க்கிற தென்னென்றபடி. கீழ்ச்சொன்ன ஸம்வாதாநுகுணமாக ப்ரஸ்ந ப்ரதிவசந முகேந அர்த்த மருளிச்செய்கிறார் (நாமென்ன வித்யாதி). (ஹ்ருதய ப்ரகாசமே) என்றது - அந்தர்யாமியா யிருக்கையே யென்கை; (நெஞ்சிலே ப்ரகாசிக்கிற) என்றது-(உ)*அரவத்தமளிப்படியே ஸவிக்ரஹனாய் விளங்குகை யென்கை. அன்றிக்கே, ஹ்ருதயப்ரகாச மென்றதும் - ஸவிக்ரஹ ப்ரகாசமேயாய், அவ்வ

---

† (பா) வாசியறிந்தோ மாகத்தான். வாசி யடித்தோமாகத்தான.
(க) தி-வாய்-நி-க-கூ. (உ) பெரி-திரு-நி-உ-கூ.

ளவு போருமென்றிராதே யென்று பகவதபிப்ராயத்தைச் சொன்னபடியாகவுமாம். சிறிது காட்டினால் போருமென்கைக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (பண்டொருவித்யாதி). ... ... ... ... ... ... (௯)

வ்யா.—ஏரார்பொழில் சூழிந்தளூரிலெந்தை பெருமானைக்
காரார்புறவில் மங்கை வேந்தன் கலியனொலிசெய்த
சீராரின் சொல் மாலை கற்றுத் திரிவாருலகத்து
ஆராவரே யமரர்க்கென்று மமரராவாரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—◦◇◆◇◦—

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| ஏர் ஆர் | அழகு மிக்கிருந்துள் | மாலை | சப்தஸந்தர்ப்பரூபமான இப்பத்துப் பாசுரத்தையும் |
| பொழில் | சோலைகளாலே [ள | | |
| சூழ் | சூழப்பட்ட | | |
| இந்தளூரில் | திருவிந்தளூரி லெழுந்தருளியிருக்கிற | கற்று | அப்யஸித்து |
| எந்தை | எனக்கு ஸ்வாமியான | திரிவார் | நிர்ப்பயமாக ஸ்வைரஸஞ்சாரம் பண்ணு |
| பெருமானை | ஸர்வேஶ்வரன் விஷயமாக, [ருக்கிற | உலகத்து | லோகத்தில் [மவர்கள் |
| கார் ஆர் | மேகங்கள் நிறைந்தி | ஆர் ஆர் | எவர் (எவர்கள், ஏதேனும் ஜந்மவ்ருத்தாதிகளை யுடையராயினும்), |
| புறவில் | பர்யந்த ப்ரதேசங்களோடு கூடிய | | |
| மங்கை | திருமங்கைக்கு | | |
| வேந்தன் | ராஜாவாகிய | அவரே | அவர்களே |
| கலியன் | ஆழ்வார் | அமரர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| ஒலிசெய்த | அருளிச்செய்ததாய், | என்றும் | ஸர்வகாலத்திலும் |
| சீர் ஆர் | பகவத்குணங்கள் நிறைந்திருப்பதாய், | அமரராவார் | கொண்டாடத் தகுந்தவர்களா யிருப்பர்கள். (௧௦) |
| இன்சொல் | மதுரமான ஸூக்தியை யுடையதாய், | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (ஏரார்) அழகுமிக்கிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட திருவிந்தளூரிலே வந்து ஸந்நிஹிதனாய் எனக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரனைக் கவிபாடிற்று. (காராரித்யாதி) நிரந்தர மேக ஸஞ்சாரத்தை யுடைத்தான பர்யந்தத்தோடு கூடின திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்தார். ஸவிதாவேனுவென்றால்

(சீராரித்யாதி) பகவத்குணங்களை நிறையத்தொடுத்த தொடை. (௧) "ஏஷாம் வக்தா பவாந் ஸ்ரோதா வாச்யோ யோகோ விமுக்தித:-அஹம் வக்தா பவாந் ஸ்ரோதா வாச்யோயோகோ விமுக்தித:." (௨) [रघुवरचरितम्- ரகுவரசரிதம்] ரகுகுலத்தில் ரக்ஷகரான பெருமாளுடைய வ்ருத்தாந்தம் சொல்லிற்று. [मुनिप्रणीतम् - முநிப்ரணீதம்] ஆப்ததமனானவனாய்த் துச் சொன்னான். [दशशिरसश्च वधम् - தசசிரஸஸ்சவதம்] நாட்டுக்குக் களையறுத்துக் கொடுத்தபடியாய்த் சொல்லிற்று. (கற்றுத்திரிவார்) இவற்றை அப்யஸித்து, அந்த கர்வத்தாலே யமாதிகள் தலைமேலே அடியிட்டுத் திரியுமவர்கள். (ஆரார்) இவற்றை அப்யஸிக்கு மித்தனையே வேண்டுவது; அவர்களுக்கு ஜந்மவ்ருத்தாதிகளோதேனுமாகவுமாம். (அவரே யமரர்க்கென்று மமரராவாரே) அந்த ஜந்மத்திலே அந்த வ்ருத்தத்திலே அந்த ஜ்ஞாநத்திலே அந்த ஜந்மாதிகளால் வருமுத்கர்ஷம் வேண்டாதே, ஸ்வத: உத்கர்ஷத்தை யுடையரான நித்யஸூரிகளே சிரஸா வஹிக்கப் பெறுவர்.... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அ௫.—பத்தாம்பாட்டு. (ஏராரித்யாதி) ப்ரபந்த ப்ரதிபாத்ய தத்வத்ரு வைலக்ஷண்யங்களைச் சொல்லுவாருண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (அஹமித்யாதி). (௩) "நமன்றமர் தலைகள்மீதே நாவலிட்டுழிதருகின்றோம்" என்றத்தை யுட்கொண்டு, "திரிவார" என்றதுக் கர்த்த மருளிச்செய்கிறார் (இவற்றை யித்யாதி) ... .. ... .. (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

நாலாம்பத்தில் ஒன்பதாந்திருமொழி முடிந்தது.

---

(௧) (௨) ரா-பா-உ-௪௪- (௩) தி-மா-௧.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# நாலாம்பத்து பத்தாந் திருமொழி.

## ஆய்ச்சியர் ப்ரவேசம்.

---

வ்யா — "நினைத்த வகைகளெல்லாம் பரியாறப் பெற்றிலோம்" என்றின்னுதானுர் - கீழ்; நீரிப்படி இன்னுதாகிற தென்? நம்மை ஆசைப்பட்டார்க்கு நினைத்த வகைகளெல்லாம் பரிமாறலாம்படி ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப் பண்ணி முகங்கொடுத்த நாமன்றே திருவெள்ளியங்குடியிலே வந்து ஸந்நிஹிதரானேம், ஆனபின்பு நினைத்த வகைகளெல்லாம் பரிமாறத்தட்டென்? என்று ஸமாதாநம்பண்ண, ஸமாஹிதராய் அவனைப்பேசி அநுபவிக்கிருர். (௧) "த்தேவ கோபாய யத: ப்ரஸாதாயச ஜாயதே-ததேவ கோபாய யதஃ ப்ரஸாதாயச ஜாயதே" இறே.

---

அரு.—ஆய்ச்சியின்ப்ரவேசம். கீழு மிங்கு மர்ச்சாவதார மாகை ஒத்திருக்க, அங்கே வெறுப்பும் இங்கே ஸந்தோஷமும் கூடுமோ வென்ன வருளிச்செய்கிருர் (ததேவேத்யாதி). ஒரு குணுவிஷ்காரத்தைத் தோற்றுவித்தா னென்கை ... ... ... ... ... (௧)

மூ.—ஆய்ச்சியரழைப்ப வெண்ணெயுண்டொருகா
லாலிலை வளர்ந்தவெம்பெருமான்
பேய்ச்சியைமுலையுண்டிணை மருதிறுத்துப்
பெருநிலமளந்தவன்கோயில்
காய்த்த நீள் கமுகும் கதலியும் தெங்கு
மெங்குமாம் பொழில்களின்நடுவே
வாய்த்த நீர் பாயும் மண்ணியின் தென்பால்
திருவெள்ளியங்குடி யதுவே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆய்ச்சியர் | இடைச்சிகள் | ஆலிலை | ஆலந்தளிரில் |
| அழைப்ப | முறையிடும்படியாக | வளர்ந்த | கண்வளர்ந்தருளினவனைக்கொண்டு |
| வெண்ணெய் | வெண்ணெயை | | |
| உண்டு | அமுதுசெய்து, | எம்பெருமான் | எனக்கு ஸ்வாமியானவனாய், |
| ஒருகால் | ஒருகாலத்திலே (ப்ரளயகாலத்திலே) | பேய்ச்சியை | பூதனையினுடைய |

| | | | |
|---|---|---|---|
| முலை | ஸ்தநத்தை | தெங்கும் | தென்னைமரங்களும் |
| உண்டு | அமுதுசெய்தும் (அவளை முடித்து) | எங்குமாம் | எங்கும் நிறைந்திருக்கிற |
| இணை | சேர்ந்திருக்கிற | பொழில்களின் | சோலைகளினுடைய |
| மருது | மருதமரங்களை | | |
| இறுத்து | முறித்தும், | நடுவே | நடுவில் |
| பெருநிலம் | விசாலமானபூமியை | வாய்த்த | ஸம்ருத்தமான |
| அளந்தவன் | (மஹாபலியிடத்தில் நின்றும்) அளந்து கொண்டவனுமான ஸர்வேஶ்வரன் நித்யவாஸம் பண்ணுகி | நீர் | ஜலமானது |
| | | பாயும் | பாயாநின்றுள்ள [ய |
| | | மண்ணியின் | மண்ணியாற்றினுடை |
| | | தென்பால் | தென் கரையிலிருக்கிற |
| கோயில் | திவ்யதேசமானது,[ற | திருவெள்ளியங்குடி | திருவெள்ளியங்குடியென்கிற |
| காய்த்த | காயாநின்றுள்ள | | |
| நீள் | உயர்த்தியை யுடைய | அதுவே | அந்த திவ்யதேசமேயாம். (௧) |
| கமுகும் | பாக்குமரங்களும் | | |
| கதலியும் | வாழைமரங்களும் | | |

வ்யா.—முதற்பாட்டு. (ஆய்ச்சியரழைப்ப) பஞ்சலக்ஷம் குடியில் இடக்கை வலக்கை வாசியறியாத இடைச்சிகள் கையெடுத்துக் கூப்பிடும்படி வெண்ணெயை யமுதுசெய்து. (ஒருகாலாலிலைவளர்ந்த) அப்பருவத்தில் ஜகத்தை யடங்கலும் வயிற்றிலேவைத்து, கூப்பிடுகைக்கு மொருவரில்லாத ஸமயத்திலே, ஒருபவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின. (எம்பெருமான்) ஆஶ்ரித ஸ்பர்சமுள்ள த்ரவ்ய மொழியச்செல்லாமையையும், அகடித கடநாஸாமர்த்த்யத்தையும் காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவன். (பேய்ச்சியை) துரபிஸந்தியோடே வந்த பூதனையுடைய முலையையுண்டு அவளை முடித்து, பொல்லாத அபிஸந்தியை யுடைத்தாய் தன்னிலே புணர்ந்துநின்ற மருதுகளை முறித்து. (பெருநிலமித்யாதி) மஹாபலியாலே அபஹ்ருதமான பூமிப்பரப்பையடைய அநாயாஸேந அளந்துகொண்டவன் வர்த்திக்கிறதேசம்.

(காய்த்த) "ஆஶ்ரயணீய வஸ்து ஸந்நிஹிதமான விடம்" என்று தோற்றும்படியாய்த்து அத்தேசத்தில் போக்யதை யிருப்பது. எல்லாமெங்குமொக்க பக்வமாயாய்த்து அங்கிருப்பது. (வாய்த்த நீர்பா

யும) சேர்ந்து குளிர்ந்த தண்ணீரே குடிக்கும் செருக்கரைப்போலே யாய்த்து. (திரு வெள்ளியங் குடியதுவே) அவன் கோயில்தானே யென்கையாலே - ஆஶ்ரயணீயஸ்தலமதுவே என்கை. ... (க)

அரு. — முதற்பாட்டு (ஆய்ச்சியரித்யாதி) யசோதாஸ்தநந்தயமும் வடதளசிசுவும் திருக்குறளனும் ஒத்தவடிவும் செயலுமாயிருப்ப ராகையாலே, தமக்குக் கீழ்த்திருமொழி லிலாய்ப்பெல்லாம் தீரும்படி பரிவுபிறந்து தம்மை யெழுதிக்கொடுத்தது, அவன் வந்திருக்கிற தேசத்தைப் பற்றுகிறாரென் றவதாரிகை.

வெண்ணெயுண்டு என்னவே யமைந்திருக்க, "ஆய்ச்சியரழைப்ப" என்று மவர்க்குக் கருத்தென்னென்ன வருளிச்செய்கிறார் (பஞ்சலக்ஷமித்யாதி). ஆக்களையிட்டுச் சொல்லும்படியான ஆயருடைய ஸ்த்ரீகளகப்படப் பரிந்து (க) "வயிறு பிள்ளை பரமன்று" என்று கூப்பிடும்படி யுண்டானென்று, தம்பரிவாலே அங்ஙனே விசேஷித்துச் சொன்னாரென்று கருத்து. வெண்ணெயுண்டபோது பரிவருண்டாய்க் கூப்பிடுவாருண்டாய்த்து, மண்ணையெல்லா முண்ணும்போது பரிவரில்லாத காலமாய்த்தென்னும் கருத்தாலே "ஒருகால" என்கிறாரென்றருளிச்செய்கிறார (அப்பருவத்திலித்யாதி). மண்ணையுண்டபோது ஒருவருமில்லாமை துஷ்டரில்லை யென்றிருக்கலாமென்று அத்தைவிட்டு, மீளவும் இளம்பிள்ளையாய் முலையுண்டதிலேயும், இருவராய் க்ருதஸங்கேதரான விரோதிகளை முடித்த செயலினு மாறியிருக்க வொண்ணாதென்று சொல்லுகிறாரென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார (துரபிஸந்தி யித்யாதி). விரோதியென்று நிரஸிக்கவும் கூடாதே தன்னைச் சிறுக்கி யிரக்க வேண்டும் செயலாகையாலே அத்தை யருளிச்செய்கிறாரென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (மஹாபலி யித்யாதி). ... . ... ... ... ... ... ... (க)

மூ.—ஆனிரைமேய்த்தன் றலைகடலடைத்திட்
டரக்கர் தம சிரங்களை யுருட்டிக்
கார் நிறைமேகம் கலந்ததோருருவக்
கண்ணனார் கருதிய கோயில்
பூ நிரைச் செருந்தி புன்னை முத்தரும்பிப
பொதும்பிடை வரி வண்டு மிண்டித்
தேனிரைத்துண்டங் கின்னிசை முரலும்
திருவெள்ளியங்குடி யதுவே. (உ)

(க) கா-எ-௩.

| பதம். | உரை. |
|---|---|
| ஆநிரை | பசுக்கூட்டங்களை |
| மேய்த்து | ரக்ஷித்தவனாய், |
| அன்று | அந்த ராமாவதாரகாலத்தில் |
| அலை | அலைமோதாநின்ற |
| கடல் | ஸமுத்ரத்தை |
| அடைத்திட்டு | அணைசெய்து |
| அரக்கர்தம் | பலிஷ்டரான ராக்ஷஸர்களுடைய |
| சிரங்களை | தலைகளை [னாய் |
| உருட்டி | அறுத்துத்தள்ளினவ |
| கார் | வர்ஷாகாலத்தில் |
| நிரை | அடர்ந்திருக்கிற |
| மேகம்கலந்து | மேகத்தோடொத்திருக்கிற |
| ஓர் | அத்விதீயமான |
| உருவம் | வடிவையுடையனான |
| கண்ணனார் | ஸ்ரீக்ருஷ்ணன் |
| கருதிய | விரும்பி வர்த்திக்கிற |
| கோயில | திவ்யதேசமானது, |
| நிரை | கொத்துக்கொத்தாக |
| பூ | புஷ்பியாநின்ற |

| பதம். | உரை. |
|---|---|
| செருந்தி | செருந்தி மரங்களினுடையவும் |
| அரும்பி | அரும்பு விடாநின்ற (மேல்மேல் உண்டாகாநின்ற) [தான |
| முத்து | முத்துக்களை யுடைத் |
| புன்னை | புன்னை மரங்களினுடையவும் |
| பொதும்பு | பொந்துக்களுடைய |
| இடை | நடுவிலே |
| வரி | ரேகைகளையுடைய (ஸௌந்தரமான) |
| வண்டு | வண்டுகள் |
| மிண்டி | நெருங்கியிருந்து |
| தேன் | மதுவை |
| இரைத்து | சப்தித்துக்கொண்டு |
| உண்டு | புஜித்து |
| அங்கு | அவ்விடத்திலே |
| இன் | மதுரமாக |
| இசை | காநத்தை |
| முரலும் | பாடாநின்ற |
| திருவெள்ளியங்குடியதுவே (௨) | |

வ்யா.—இரண்டாமபாட்டு. (ஆநிரை) கோரக்ஷணம்பண்ணி, க்ஷோபித்தமான கடலை அணைசெய்து, வாபலத்தாலே திண்ணிதான ராக்ஷஸருடைய தலைகளையுருட்டி. (கார்நிரை) கார்காலத்தில் நிறைந்த மேகம்போலே யிருக்கிற வடிவையுடைய க்ருஷ்ணன், "ரக்ஷணத்துக்குப் பாங்கானவிடம்' என்று திருவுள்ளம்பற்றி வர்த்திக்கிறகோயில்.

(பூநிரை) நிரை நிரையான பூக்களையுடைத்தான செருந்தி, அரும்பின முத்தையுடைத்தான புன்னை, இவற்றிலுண்டான, பொதும்பு களிலே - த்வாரங்களிலே, தர்சநீயமான வடிவையுடைய வண்டுகள் நெருங்கிக்கொண்டு, மதுவாநத்திற்புக்க முதலிகளைபபோலே பெரிய ஆரவாரத்தோடே மது பாநத்தைப்பண்ணி, உள்ளேப்புக்க த்ரவ்யம் இருந்தவிடத்தி லிருக்கவொட்டாதே ஆளத்திவையாநிற்கும்-ஸ்வேச்சையிலே பாடாநிற்குமாய்த்து. ... ... ... ... (௨)

அரு.—இரண்டாம்பாட்டு. (ஆநிரையித்யாதி) அகடிதகடநம் பண்ணின ஸ்ரீவாமநாவதாரத்தோடும் வடதளசாயியோடும் சேர்த்து க்ருஷ்ணாவதாரத்தைத் திருவெள்ளியங்குடியிலே அநுபவித்தவர், க்ருஷ்ணாவதாரத்தை, அப்படியே, நீரில் கல் மிதக்கும்படி அகடிதகடநம் பண்ணினீரென்று, விரோதி நிரஸநசீலனான சக்ரவர்த்தித் திருமகனை அநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

"அரக்கர் தம்" என்று-தாமான தன்மை சொல்லுகையாலே அத்தை அருளிச் செய்கிறுர் (வரபலத்தாலே யிதயாதி).... ... ... (உ)

மூ.—கடுவிடமுடைய காளியன்தடத்தைக்
கலக்கி முன்னலக்கழித்தவன்றன்
படமிறப் பாய்ந்து பன் மணி சிந்தப்
பல்நடம் பயின்றவன் கோயில்
படவரவல்குல் பாவை நல்லார்கள்
பயிற்றிய நாடகத் தொலிபோய்
அடைபுடை தழுவி யண்டநின்றதிரும்
திருவெள்ளியங்குடியதுவே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன் | முறகாலத்திலே | கோயில் | திவ்யதேசமானது, |
| கடு | க்ரூரமான [ன | படம் | அகன்றபடத்தை யுடைய |
| விடம்உடைய | விஷத்தை யுடையனு | அரவு | ஸர்ப்பம்போன்ற |
| காளியன் | காளியனுடைய | அல்குல் | ஜகநப்ரதேசத்தை யுடையராய் |
| தடத்தை | மடுவை | நல்லார் | விலக்ஷணரான |
| கலக்கி | சேறுக்கி(அவனை)[ணி | பாவைகள் | ஸ்த்ரீகள் |
| அலக்கழித்து | க்லேசப் படும்படிபண் | பயிற்றிய | அப்யஸிக்கிற |
| அவன்றன் | அந்தக்காளியனுடைய | நாடகத்து ஒலி | நாடகத்திலுண்டான சப்தமானது |
| படம் | படமானது | போய் | உயரப்போய் |
| இற | முறியும்படியாக | அடைபுடை | அஹோராத்ரம் |
| பாய்ந்து | குதித்து | தழுவி | சேர்ந்திருந்து |
| பல்மணி | (அவன்தலைகளிலுள்ள) அநேகமான மணிகளும் | அண்டம் | ஆகாசத்திலே |
| சிந்த | சிதறும்படியாக | நின்று | ஒருபடிப்பட்டிருந்து |
| பல்நடம் | அநேகவிதமான நர்த்தநங்களை | அதிரும் | கோஷியாநின்ற |
| பயின்றவன் | பண்ணுகின்ற ஸ்ரீக்ருஷ்ணன் வர்த்திக்கிற | திருவெள்ளியங்குடி யதுவே! | (௩) |

வ்யா.—மூன்றும்பாட்டு. (கடுவிடமுடைய) நாலைந்துயோஜநத்தூக்கல்வருகே பறக்கிற பக்ஷிகள் சிறகற்று விழும்படி க்ரூரமான விஷத்

த்தையுடைய காளியனுடைய தடாகத்திலே மதியாதே போய்ப்புக்கு, அது குழம்பாம்படிபண்ணி, அலமந்து க்லேசப்படும்படியாக்கி. (அவன்றன்படமிறப்பாய்ந்து) கரையிலேநிற்கிற கடம்பினுச்சியிலே போயேறி, அவனுடைய பணங்களிறும்படியாகப்பாய்ந்து, அதிலுண்டான பலவகைப்பட்ட ரத்நங்கள் சிதறும்படி. (பல்நடம்பயின்றவன்கோயில்) அன்றுதுடங்கி பரதசாஸ்த்ரத்துக்கு வேண்டும் லக்ஷணங்களெல்லா மெழுதிக்கொள்ளலாம்படி பலவகைப்பட்ட ந்ருத்தங்களைப்பண்ணினவன் வந்து வர்த்திக்கிறதேசம்.

(படவரவிந்யாதி) படத்தை யுடைத்தான பாம்போடொத்திருக்கிற நிதம்பப்ரதேசத்தையுடைய ஸ்த்ரீகள் சிரமஞ்செய்கிறபோதை நாடக த்வநியானது போய். (அடைடுடைகழுவி) அஹோராத்ரமணைந்து ஆகாசத்திலே நின்று கோஷிபாநிற்குமாய்த்து. ... (௩)

---

அரு —மூன்றும்பாட்டு. (கடுவிந்யாதி) மற்றோரவதாரத்திலே போகவொட்டாதபடியான அகடித கடநமான காளிய நிரஸநத்தை யநுபவிக்கிறாரென்றவதாரிகை.

"முன்-பூர்வகாலத்திலே, நடம் பயின்றவன்" என்றந்வய முட்கொண்டு வாக்யார்த்த மருளிச்செய்கிறார் (நாலேந்நித்யாதி). மேலே சொன்ன* பாவை நல்லாருடைய நடநத்துக்கு இவன் நடநம் ஹேதுவென்னுமிடம் தோன்ற பாவ மருளிச்செய்கிறார் (அன்றித்யாதி).

(சிரமம்செய்கை) பழகுகை. ... ... ... ... (௩)

மூ.—கறவை முன் காத்துக் கஞ்சனைக் காய்ந்த
காளமேகத் திருவுருவன்
பறவைமுன்னு பர்த்துப் பாற்கடல்துயின்ற
பரமனார் பள்ளிகொள் கோயில்
துறைதுறைதோறும் பொன்மணி சிதறும்
தொகு திரை மண்ணியின்தென்பால்
செறி மணி மாடக் கொடி கதிரணவும்
திருவெள்ளியங்குடியதுவே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கறவை | பசுக்களை [லே | காய்ந்த | சீறி யருளினவனுமாய் |
| முன் | க்ருஷ்ணவதாரத்தி | காளமேகம் | கறுத்த மேகம் போ |
| காத்து | ரக்ஷித்தும், | திரு | ஸௌந்தர்யமான [ன்ற |
| கஞ்சனை | கம்ஸனை | உருவன் | நிறத்தை யுடையவனுமாய். |

| | | | |
|---|---|---|---|
| முன் | முற்காலத்திலே | மணி | ரத்நங்களையும் |
| பறவை | பெரிய திருவடியை | சிதறும் | கொழியாநின்ற |
| உயர்த்து | கொடியாக எடுத்துக் கட்டி | தொகு | சேர்ந்துவருகிற |
| | | திரை | அலைகளையுடைய மண்ணியின்தென்பால், |
| பாற்கடல் | திருப்பாற்கடலிலே | | |
| துயின்ற | கண்வளர்ந்தருளினவனுமாய், | செறி | நெருங்க இழைக்கப்பட்ட [த்தான |
| பரமனார் | ஸர்வாதிகனுமான ஸர்வேச்வரன் | மணி | மாணிக்கங்களை யுடை- |
| | | மாடம் | க்ருஹங்களிலே கட்டின |
| பள்ளிகொள் | கண்வளர்ந்தருளுகிற | | |
| கோயில் | திவ்யதேசமானது, | கொடி | த்வஜங்களானவை |
| துறை துறை தோறும் | எல்லாத் துறைகளிலும் | கதிர் | ஸூர்யமண்டலத்தை |
| | | அணவும் | அளாவியிருக்கிற |
| பொன் | ஸுவர்ணங்களையும் | திருவெள்ளியங்குடி யதுவே. | (௪) |

வ்யா.—நாலாமபாட்டு. (கறவை) கோரக்ஷணத்தைப் பண்ணி, அந்த கோவம்ருத்திமையைப் பொறுத கம்ஸனை யழியச்செய்த. (காளமேகத் திருவுருவன்) அழிவுக்கிட்ட வடிவுதானிருக்கிறபடி. ரக்ஷணத்துக்கீடாகப் பெரியதிருவடியை த்வஜமாகவெடுத்து, ப்ரஹ்மாதிகள் கூக்குரல் கேட்கும்படியாக அடுத்தணித்தாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளின ஸர்வாதிகன் வந்து சாய்ந்தருளின கோயில்.

(துறைதுறையித்யாதி) துறைகள்தோறும் துறைகள்தோறும் பொன்மணிகள் கொழிததுக்கொடுவந்து எறடாநின்றுள்ள திரண்ட திரைகளை யுடைத்தான மண்ணியின்தென்பால், செறிய அழுத்தின மணிகளையுடைத்தான மாடங்களிலே கட்டின கொடிகளானவை ஆதித்யபதத்தளவும் சென்று அவனுக்கு இதஸ்ததஃ ஸஞ்சரிக்கவொண்ணாதபடி தகையாநிற்குமாய்த்து. ... ... ... ... (௪)

---

அரு—நாலாம்பாட்டு. (கறவையித்யாதி) (க) "ஏஷ நாராயண ஸ்ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:- ஏஷநாராயண ஸ்ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதநஃ" என்றபடியே-க்ருஷ்ணாவதாரத்துக் கடியான க்ஷீரார்ணவ சாயித்வத்தையுங் கூட்டி யநுஸந்திக்கிறாரென் றவதாரிகை.

(அழிவுக்கிட்ட) * கரியதிருமேனி வாடப்பசு மேய்க்கைக் கிட்ட.
(மண்ணியின்) மண்ணியென்கிற நதியின்.... ... ... (௪)

---

(க) ஹரிவம்சம்-௧௧௩-௬௨.

மூ.—பாரினையுண்டு பாரினையுமிழ்ந்து
பாரதம் கையெறிந்தொருகால்
தேரினையூர்ந்து தேரினைத்துரந்த
செங்கண்மால் சென்றுறைகோயில்
ஏர் நிரை வயலுள் வாளைகள்மறுகி
எமக்கிடமன்றிதென்றெண்ணிச
சீர்மலிபொய்கை சென்றணைகின்ற
திருவெள்ளியங்குடியதுவே. (௫)

| பதம். | உரை. |
|---|---|
| பாரினை | பூமியை |
| உண்டு | (ப்ரளயகாலத்தில்) அமுதுசெய்தும் |
| பாரினை | பூமியை |
| உமிழ்ந்து | (ஸ்ருஷ்டிகாலத்தில்) வெளிப்படுத்தியும் |
| ஒருகால் | க்ருஷ்ணாவதாரத்தில |
| பாரதம் | பாரதயுத்தத்திலே |
| கையெறிந்து | ஸேனையை வகுப்புவகுப்பாகப் பிரித்தும், [தேரை |
| தேரினை | அர்ஜுனனுடைய |
| ஊர்ந்து | நடத்தியும் [தேரை |
| தேரினை | பீஷ்மாதிகளுடைய |
| துரந்த | பின்னே ஓடும்படி துரத்தினவனுமாய |
| செம்கண் | (வாத்ஸல்யத்தாலே) சிவந்த கண்களையுடையவனுமாய் |
| மால் | ஆச்ரித வ்யாமுக்தனுமான ஸர்வேச்வரன் |
| சென்று | வந்து [நித்ய |
| உறை | நித்யவாஸம் பண்ணு |
| கோயில் | திவ்யதேசமானது, |
| ஏர் | உழுகிற ஏர்களுடைய |
| நிரை | வரிசைகளையுடைத்தா |
| வயலுள் | கழனிகளிலுள்ள [ன |
| வாளைகள் | வாளை மத்ஸ்யங்களா |
| மறுகி | பயந்து [னவை |
| இது | இந்த வயலானது |
| எமக்கு | நாம் வாஸம் பண்ணுகைக்கு |
| இடம் அன்று | ஸ்தலம் அன்று |
| என்று எண்ணி | என்று நினைத்து, |
| சீர் | அழகாலே |
| மலி | ஸம்ருத்தமாயிருக்கிற |
| பொய்கை | தடாகங்களை |
| சென்று | கிட்டி |
| அணைகின்ற | அடையாநின்ற |
| திருவெள்ளியங்குடி அதுவே. (௫) | |

வ்யா.— அஞ்சாம்பாட்டு. (பாரினையுண்டு இத்யாதி) பரப்பையுடைத்தான பூமியைத் திருவயிற்றிலே வைத்து, உள்ளுக்கிடந்து தளராதபடி வெளிநாடு காணப்புறப்படவிட்டு, பாரதஸமரத்திலே கையுமணியும்வகுத்து, ஒருகாலாச்ரிதன்பக்கல் வாத்ஸல்யத்தாலே

ஸாரத்யம்பண்ணி, அதிரதர்† (மஹாரத)ரான பீஷ்மாதிகள் தேரை விட்டோடும்படி துடர்ந்த. (செங்கண்மால் சென்றுறைகோயில்) ஆஸ்ரிதவாத்ஸல்யமடங்கலும் கண்ணிலே தோற்றும்படியிருப்பானாய், ஆஸ்ரித வ்யாமுக்த்தனானவன் வந்து வர்த்திக்கிறதேசம்.

(ஏர்நிரை) ஏரினுடைய நிரையையுடைத்தான வயலிலுண்டான வாளைகளஞ்சி, எப்போதும் மாறாதே உழப்புக்கவாறே "இப்படி ஸாபாயமானவிடம் நமக்கு வாஸஸ்தாநமல்ல" என்றெண்ணி, நிரபாயமாக வர்த்திக்கலாம்படியான தேசத்திலே போய்ப் புகுவோமென்று, சீர் மலிபொய்கை சென்றணையுமாய்த்து; ஏர்கள்விட்டுக் கொடுபோய்ப் பொய்கைகளிலுழவாரில்லையே. "ஸம்ஸார மஹித்யர், துக்கம்" என்று அத்தைவிட்டு விரஜையைச்சென்று பற்றுவாரைப்போலே. (௫)

அரு.—அஞ்சாம்பாட்டு. (பாரித்யாதி) க்ருஷ்ணாவதாரத்துக்கு ப்ரதாந ப்ரயோஜநமான பூபார (भूभार) நிரஸநத்தைச் சொல்லப்புக்கு, பூமிக்கு உபகரித்தபடியும் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

பீஷ்மர் தேரைவிட்டோடினதில்லையாகிலும், இங்ஙன் போகவேணுமென்று தொடர்ந்ததுண்டாகையைப்பற்ற வருளிச்செய்கிறார் (அதிரதேத்யாதி).

ப்ரஹ்ம ருத்ராதிகளான வ்ருக்ஷபர்களை அதிஷ்டித்து கர்மபாசங்களைக் கொண்டு கட்டியுழற்ற ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்டிக்கிற லீலாவிபூதியைவிட்டு, பகவத்க்ருபா ஜலஜங்களான பாகவதர் நிரபாயமான விரஜா ஜலத்தில் போககமயையுட்கொண்டருளிச்செய்தாரென்னுமிடம் தோன்ற வருளிச்செய்கிறார் (ஸம்ஸாரமித்யாதி). ... ... ... ... (௫)

மூ.—காற்றிடைப்பூளை கரந்தனவாந்தை
யுறக்கடலரக்கர் தம்சேனை
கூற்றிடைச்செல்லக் கொடுங்கணைதுரந்த
கோலவில்லி ராமன்றன்கோயில்
ஊற்றிடை நின்ற வாழையின்கனிக
ளூழ்த்துவீழ்ந்தன வுண்டு மண்டிச
சேற்றிடைக்கயல்களுகள் திகழ் வயல்சூழ்
திருவெள்ளியங்குடியதுவே. (௬)

† குண்டலிதம் க்வாசித்கம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காற்றிடை | பெருங்காற்றிலே | கோயில் | திவ்யதேசமானது, |
| பூளை | பூளைப்பூவானது | ஊற்றிடை | நீரூற்றுக்களுள்ள நிலங்களிலே |
| கரந்தன | உருமாய்ந்து போமாபோலே | நின்ற | முளைத்திருக்கிற |
| கடல் | ஸமுத்ரம்போன்ற | வாழையின் | வாழை மரங்களினுடைய |
| அரக்கர்தம் | ராக்ஷஸர்களுடைய | | |
| சேனை | ஸைந்யமானது | ஊழ்த்து | (கனியப்பழுத்து) இற்று |
| அரந்தைஉற | துன்பமுறும்படியாகவும் | வீழ்ந்தன | கீழேஉதிர்ந்த |
| | | கனிகள் | பழங்களை |
| கூற்றிடை | யமாலயத்தை | மண்டி | மேல்விழுந்து |
| செல்ல | கிட்டும்படியாகவும் | உண்டு | புஜித்து |
| கொடு | க்ரூரமான | கயல்கள் | கயல் மத்ஸ்யங்களானவை |
| கணை | பாணங்களை | சேற்றிடை | சேற்று நிலங்களிலே |
| துரந்த | ப்ரயோகித்த | உகள் | துள்ளா நின்றுள்ளன |
| கோல | ஸௌந்தரமான | திகழ் | விளங்காநின்ற [வாய் |
| வில்லி | தநுஸ்ஸையுடைய | வயல் | கழனிகளினுடலே |
| ராமன் தன் | சக்ரவர்த்தித் திருமகனுடைய | சூழ் | சுற்றப்பட்ட |
| | | திருவெள்ளியங் குடியதுவே. (௬) | |

வ்யா.—ஆறும்பாட்டு. (காற்றிடையித்யாதி) பெருங் காற்றிலே பூளையானதுபறந்து உருமாய்ந்து போமாபோலே. (அரந்தையுற) துன்பமுற. ஓதங்கிளர்ந்த கடல்போலே மிகைத்து வந்து தோற்றின ராக்ஷஸஸேனை யெல்லாம். (கூற்றிடைசெல்ல) முன்பு யமனைத்†திறைகொண்டு பரதந்த்ரனுக்கி வர்த்தித்தவர்கள், இப்போது அவனுக்குக்குடிமக்களாக. திக்விஜயம் பண்ணுகிறபோது முதுற அழியச்செய்தது யமனையிறே. (கொடுங்கணைதுரந்த) பெருமாள் கண்பார்க்கிலும் கண்பாராத க்ரௌர்யத்தையுடைய அம்பைவிட்ட. (கோலவில்லி ராமன்றன்கோயில்) கையில் விற்பிடித்த பிடியிலே முடிந்துபோகிற ராக்ஷஸரடங்க "இவன்கையிலே நாம் பட்டுப்போனாலாகாதோ' என்னும்படி தர்ஶநீயமான வில்லையுடைய சக்ரவர்த்தித திருமகன் வர்த்திக்கிறகோயில். (௧) "[Telugu-script quotation] - ரகுஸிம்ஹஸ்ய விக்ரமைஃ" என்றுனிறே. (௨) [[Telugu-script quotation]- சாபஞ்சபூபோச] கருவி வேணுமென்று பொகடுவாரைப்போலே. அங்ஙனேயாக வேணுமிறே பொகட்டவிடத்திலே [[Telugu-script word] - வீரஃ] என்னும்போது.

(௧) ரயு-௧௦ ௬-௬. (௨) ரா-யு-௫௬-௧௪௦.

† திறைகொண்டு-ஜயித்து.

(ஊற்றிடையித்யாதி) நீர் நிலங்களிலே நின்ற வாழைகளானவை முற்றிப்பழுத்து அந்தப்பழங்கள் பேர்ந்துவிழும்; ஆமிஷமானது கிடந்தவிடத்தே வந்துகிட்ட, அதனை மேல்விழுந்து புஜிந்து, சேற்றிலே யுண்டான வாளைகளானவை தன்செருக்குக்குப் போக்குவிட்டு உகளா நின்றுள்ள விளங்குகின்ற வயலாலே சூழப்பட்ட. நீர் நிலத்திற்போலேயாய்த்து சேற்றிலுமுள்ள ஸம்ருத்தி. டாளயத்தில் விழிலும் செருக்கவற்றுக்கு [illegible] செருக்காலே. ... (௬)

---

௬ — ஆறாம்பாட்டு (காரிசையித்யாதி) திருவெள்ளியங்குடியிலிருந்த கோலவில்லிராமனை கல்யாணகுணங்களாலே அநுபவித்துக்கொண்டுவந்து இரண்டாம்பாட்டில் * அரக்கர் சிரங்களுருட்டினபடி தன்னைக்காட்டிக்கொண்டு, அத்திவ்யதேசத்திலெம்பெருமானை யநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

பூளையானது - பூளைப்பூவானது (துன்பமுற) என்றது - அலைந்துபோம்படி துக்கப்படவென்றபடி (சுணபாகஸிலும்) தயைபண்ணினும் வில்லுக்குக் கோலமாவது - பிடித்த பிடியிலே எதிரி மண்ணுண்ணும்படி யிருக்கை. வஜ்ராதிகளுக்கு அசக்யமாதவென்றுமே *ப்ருசார்த்தனாய் சலித்தபடி காணுகையாலே பெருமாள் விற்பிடியிலழகைக்கண்டு "நான் விற்பிடித்ததுமொருபடியோ" என்று தன்னைத்தானே கறுவி வில்லையெறிந்து பொகட்டானென்று விவக்ஷித்து ப்ரமாணாந்தர மருளிச்செய்கிறார் (சாபஞ்சேத்யாதி) (கறுவி) என்றது-அவர் விற்பிடித்த வழகைக்கண்டு, "இவர் முன்னே நாம் என்ன விற்பிடித்தோம்" என்று "சீ" என்று வில்லைப் பொகட்டானென்கை இப்படி அழகிலே ஈடுபட்டானென்கைக்கு ஜ்ஞாபகமென்னென்ன வருளிச்செய்கிறார் (அங்ஙனே யித்யாதி) (௧) "யோவஜ்ரபாத" இத்யாதியாலே - வீரத்வம் சொல்லி, ப்ருசார்த்தனென்றும் சொல்லி, புந: "வீர:" என்னும்போது - அவர் விற்பிடித்த பிடியில் சாதுர்யம் தன்னிடத்திலே தானே காணுமையாலே உகந்து தன்னை வெறுத்துவிட்டானென்னத் தட்டில்லை என்று கருத்து. "வில்லைக் காறகட்டென்று பொகட்டான்" என்று நம்மாசார்யர்கள் அருளிச்செய்தத்தோடு சேராதே யென்னில், இதுவுமொரு யோஜனையென்று கொள்வது.

ஊழ்த்து - இற்று, வீழ்ந்தபழங்களென்று சப்தார்த்தம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் (நீரித்யாதி). மீன்கள் சிறியவற்றைப் பெரியவை தின்னுமென்று ப்ரஸித்தியுண்டாகையாலே, வாழைப்பழங்களையு மவையாக புத்திபண்ணி உண்ணுகின்றன வென்னுமிடந்தோன்ற வருளிச்செய்கிறார்

---

(௧) ரா-யு-௫௯-௧௪௦.

(ஆமிஷமித்யாதி),வாளைகளை "சேற்றிடை" என்பானென், நீரில் என்னவொன்றுதோ வென்ன; மத்ஸ்யங்களுடைய மிடுக்குத் தோற்றவேண்டி விசேஷித்தாரென்றொரு பரிஹார மருளிச்செய்கிறார் (நீர்நிலத்திலித்யாதி). நீரிலே என்று தான்சொல்ல வழியில்லை, இவை இருந்தவிடமெல்லாம் தானே சேருக்குகையாலே என்றொருபரிஹாரமருளிச்செய்கிறார் (ப்ரளயத்திலித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௬)

மூ.—ஒள்ளிய கருமம் செய்வனென்றுணர்ந்த
மாவலி வேள்வியிற்புக்குத்
தெள்ளியகுறளாய்மூவடி கொண்டு
திக்குற வளர்ந்தவன் கோயில்
அள்ளியம்பொழில் வாயிருந்து வாழ்குயில்க
ளரியரியென்றவையழைப்ப
வெள்ளியார்வணங்க விரைந்தருள்செய்வான்
திரு வெள்ளியங்குடியதுவே. (௭)

| பதம். | உரை. |
|---|---|
| ஒள்ளிய | அழகியதான |
| கருமம் | ஸர்வஸ்வதாநமாகிற கர்மத்தை |
| செய்வன் | செய்யக்கடவேன் |
| என்று உணர்ந்த | என்று நினைத்த |
| மாவலி | மஹாபலியினுடைய |
| வேள்வியில் | யாகத்திலே |
| தெள்ளிய | தெளிவை (த்ருடமான நிஶ்சயத்தை) யுடைத்தான |
| குறளாய் | வாமநனாய்க் கொண்டு |
| புக்கு | ப்ரவேசித்து |
| மூவடி | (அந்த மஹாபலியினிடத்தில் நின்றும்) மூன்றடி பூமியை |
| கொண்டு | தாநம்வாங்கி |
| திக்கு உற | எல்லாத் திக்குக்களிலும்சேரும்படியாக |
| வளர்ந்தவன் | திருமேனியிலே வளர்ந்தவனுடைய |
| கோயில் | திவ்யதேசமானது, |
| அள்ளி | தாதுகளையுடையதாய் |
| அம் | ஸௌந்தரமான |
| பொழில்வாய் | சோலைகளிலே |
| இருந்து | வாஸம் செய்து கொண்டு |
| வாழ் | ஸுகியாநின்ற |
| அவை குயில்கள் | அந்தக் குயில்களானவை |
| அரிஅரி என்று | ஹரி: ஹரி: என்று |
| அழைப்ப | அழைக்கும்படியிருப்பதாய் |
| வெள்ளியார் | ஸத்வ ஸ்வபாவமானவர்கள் |
| வணங்க | வணங்காநிற்க |
| விரைந்து | அதிசீக்ரமாக |
| அருள்செய்வான் | அவர்களுக்கு க்ருபை செய்யாநின்ற ஸர்வேஶ்வரனுடையதான |

திருவெள்ளியங்குடியதுவே. (௭)

வ்யா.—ஏழாம்பாட்டு. (ஒள்ளியகருமம்) யாகமென்றொரு வ்யாஜத்தையிட்டு "என்னுடைய ஸர்வதநத்தையும் பரார்த்தமாக்கக் கடவேன்" என்றநுஸந்தித்த மஹாபலியுடைய வென்னுதல். (உணர்ந்து) என்றாகில், "என்னை இரந்த இந்த்ரனுக்காக நானென்னை இரப்பாளனாக்குவன்" என்று மஹாபலி யஜ்ஞவாடத்திலே போய்ப்புக்கு. (தெள்ளியகுறளாய்) சுக்ரன்மற்றையார் "இவன் தேவகார்யம் செய்யவந்தானித்தனை, அகப்படாதேகிடாய்" என்று உபதேசித்தால், "நான்கொண்டல்லதுபோகேன், புக்க காரியம் தலைக்கட்டாதே மீளுவனோ" என்னும் தெண்மையையுடைய வாமநனாய். அவன் நிரோதித்தாலும், இவன் "கொடேன்" என்றாலும், தான் "கொண்டல்லது போகேன்" என்று போய்ப் புக்கானாய்த்து. "மூன்றடி தரவேணும்" என்றபேக்ஷித்து அநந்தரம் திக்குக்களை யடையத் தன்வடிவாலே பாரித்தானாய்த்து.

(அள்ளி யித்யாதி) அள்ளியென்று - அல்லியாய் - தாதுகளை யுடைத்தாய், அழகிதாயிருந்துள்ள பொழிலிடத்திலே யென்னுதல்; அன்றிக்கே, அளியை - அள்ளியென்றதாய், அத்தாலே - தண்ணளியாய், குளிர்ந்து தர்ஶநீயமான பொழிலிடத்திலேயிருந்து அங்குள்ள ப(ஷ்)லாதிகளைபுஜித்து வர்த்திக்கிற குயில்களானவை, ஸத்வநிஷ்டர் ப்ராஹ்ம முஹூர்த்தத்திலே எழுந்திருந்து "ஹரிঃ, ஹரிঃ - ஹரிঃ, ஹரிঃ" என்னுமாபோலே திருநாம ஸங்கீர்த்தநம் பண்ணுமாய்த்து. ப்ராஹ்மணருடைய யாத்ரையாயிருக்கு மாய்த்து அங்குத்தை திர்யக்குக்களுக்கும். (வெள்ளியார்) சுத்தபாவரானவர்களாஶ்ரயிக்கிற வென்னுதல்; அன்றிக்கே, சுக்ரன் அத்தேசத்தை உபாஸித்தான் என்றொரு ப்ரஸித்தியுண்டு, அத்தைச் சொல்லிற்றாகவுமாம். வெள்ளியாரென்கிறது - அவனை ஆதரித்துச் சொன்னபடி. (வெள்ளியார் வணங்க) ருத்ரன் வந்தாஶ்ரயிக்க, (க) "ஸ்வப்நலப்³ஃம் த⁴நம் யதா² - ஸ்வப்நலப்த்தம் தநம்யதா" என்கிறபடியே - சடக்கென அவன் பாதகத்தைப் போக்கினவன். (விரைந்தருள்) வணங்கி யெழுந்திருப்பதுக்கு முன்னே அவர்களுக்கு பலத்தைக் கொடுக்குமாய்த்து. ... ... (௭)

---

அரு.—ஏழாம்பாட்டு. (ஒள்ளியவித்யாதி) *கோலவில்லி ராமன்றானே பெருநிலமளந்தவனாக முதற்பாட்டிலே ப்ரஸங்கித்தா ராகையாலே, அளந்த ப்ரகாரத்தை இங்கே விசதமாக வநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

---

(க)

"உணர்ந்த்" என்று ப்ரடம் விவக்ஷித்து ப(ந)லிக்கு விசேஷணமாக அருளிச்செய்து,"உணர்ந்து" என்று ல்யபந்தமாக பாடமான பக்ஷத்திலே ஸ்ரீவாமநனுக்கு விசேஷணமான படியை யருளிச்செய்கிறார் (உணர்ந்தித்யாதி). நான் கொண்டல்லது போகேனென்று நிஸ்சயரூப ஜ்ஞாநத்தை "தெளிவு" என்று விவக்ஷித்து, கலக்குவார் நூறுயிரம் பேரிருந்தாலும் இவன் கார்யத்தில் ஸம்சயத்தாலே கலங்காம லிருந்தானென்றருளிச் செய்கிறார் (சுக்ரனித்யாதி). (அவன்) சுக்ரன். (இவன்) மஹாபலி.

வெள்ளி மலையை யுடையவனென்றும், மூன்றுமர்த்த மருளிச்செய்கிறார் (ருத்ரனித்யாதி). ... ... ... ... ... ... (எ)

மூ.—முடியுடையமரர்க்கிடர் செய்யுமசுரர்
தம்பெருமானை யன்றரியாய்
மடியிடைவைத்து †மார்வை முன்கீண்ட
மாயனார் மன்னியகோயில்
படியிடை மாடத்தடியிடைத்தூணில்
பதித்த பன்மணிகளி னொளியால்
விடிபகலிரவென் றறிவரிதாய
திருவெள்ளியங்குடி யதுவே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முடியுடை | கிரீடம்பூண்டு(அபிமானித்து) இருக்கிற | மாயனார் | ஆஸ்சர்யபூதரான ஸர்வேஸ்வரன் |
| அமரர்க்கு | தேவர்களுக்கு | மன்னிய | பொருந்தியிருக்கிற |
| இடர் | துன்பத்தை | கோயில் | திவ்யதேசமானது, |
| செய்யும் | விளையாநின்ற | படியிடை | பூமியிலே யுண்டான |
| அசுரர்தம் | அஸுரர்களுக்கு | மாடத்து | க்ருஹங்களிலே |
| பெருமானை | ராஜாவாகிய ஹிரண்யனை, | அடியிடை | நாட்டியிருக்கிற |
| அன்று | ப்ரஹ்லாதன் நலிவுபட்ட அக்காலத்தில் | தூணில் | ஸ்த்தம்பங்களில் |
| அரியாய் | நரஸிம்ஹமாய்க் கொண்டு | பதித்த | இழைக்கப்பட்ட |
| முன் | முன்னமே | பல் | நாநாவிதமான |
| மடியிடை | மடியிலே | மணிகளின் | ரத்நங்களுடைய |
| வைத்து | எடுத்துக்கொண்டு | ஒளியால் | காந்திகளாலே |
| மார்வை | அவனுடைய மார்வை | விடி | விடிவுகாலமென்றும் |
| கீண்ட | கிழித்துப் பொகட்ட | பகல் | பகல்காலமென்றும் |
| | | இரவு என்று | ராத்ரிகாலமென்றும் |
| | | அறிவு அரிதாய | அறிகைக்கு அசக்யமான |
| | | திருவெள்ளியங்குடியதுவே. (அ) | |

† (பா) மார்வம்.

வ்யா —எட்டாம்பாட்டு.(முடியித்யாதி)"ஈம்ஸவரோஹம்"என்று அபிமாநித்திருக்கிற தேவஜாதிக்கு க்லேசத்தை விளைக்கிற, அஸுரேந்த்ரனுண்டு - ஹிரண்யன், அவனை, (அன்று) சிறுக்கனுக்கு அவன் நலிவைப்பண்ணினவன்று, நரஸிம்ஹமாய், (மடியிடைவைத்து) பிராட்டிபோல்வாரை ஏறிட்டுக்கொள்ளக்கடவ மடியிலே, துஷ்ப்ராக்ருதியான ஹிரண்யனை ஏறிட்டு. "(க)'தன்னுடைய தாள்மேல் கிடாத்தி' என்கிற விடத்துக்கு பட்ட ரருளிச்செய்ய நான் கேட்டேன்" என்று பிள்ளை யருளிச்செய்வர்; "ப்ரதிகூலனான ஹிரண்யனைவிட்டு, ஆசையுடைய வென்னையன்றே அம்மடியிலே ஏறிட்டுக்கொள்ள வடுப்பது" என்று தம்மைப் பார்த்தருளிச் செய்தாராக. அவனுடைய பரந்த மார்வைக் கிழித்துப் பொகட்ட ஆஸ்ரிதவ்யாமோஹத்துக்கு அவதியில்லாதவர் நித்யவாஸம் பண்ணுகிறதேசம்.

(படி) பூமியிலே யுண்டான மாடங்களில் நட்ட தூணடியிலே அழுத்தின [illegible]வான ரதநங்களினொளியாலே அங்குள்ளார்கு திவாராத்ர விபாகம் பண்ணவொண்ணாதபடி யாயிருக்கு மாய்த்து. இவை தான் ஒரு காலவிசேஷங்களிலே யுண்டாகையால் சொல்லிற்றாகவுமாம். அன்றியே, இவருடைய உகப்புக்கு அவதியில்லாமையாலே யாகவுமாம். உகந்த விஷயங்களில் எல்லா நன்மைகளு முண்டாகத் தோற்றுமிறே. ... ... ... ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (முடியித்யாதி) ஸ்ரீவாமநனபடியநுஸந்திக்க, அது ஒருபடியன்றிக்கே இருபடியாலே படியெல்லா மளக்க, இப்படி இன்ன மொருபடியுண்டோ வென்றுராய, ஒருபடி இருபடியான நரஸிம்ஹத்துன்படியை யநுபவிக்கிறுரென்று ஸங்கதி. பலபடியநுபவிப்பார்க்கு ஒருஸங்கதி படவேணுமே.

"அரியாய் - மார்வவ - கீண்ட" என்ன வமைந்திருக்க "முன் - மடியிடைவைத்து" என்று விசேஷிக்க வேணுமோவென்ன வருளிச்செய்கிறுர் (பிராட்டி யித்யாதி). இப்படி "மடி" என்றத்தாலே கருத்தாக வேணுமோ, வரபலத்தால் தரையில் கொல்லக்கூடாமையாலே வைத்தானென்கிறு ரென்றதாலோ வென்ன; இவர்க்கிப்படி விவக்ஷிதமாகலாமென்கைக்கு ஸ்தலாந்தரத்தில் பாசுரத்துக்குத் தாத்பர்யம் ஆப்தோபதிஷ்டமாய்த் தாகையாலே,ப்ரேமபரவசர்க்குத் தம்மைப்போல்வாரிருக்கத்தக்க மடியிலே முர்துற ஏறப்பெறுவதே என்ற அம்சம் புருஷார்த்தமாகத் தோற்றுமென்று ஸம்வாதந் தன்னை யருளிச்செய்கிறுர் (தன்னுடையவித்யாதி).

(க) பெரியதிருமடல்

(இடாத்தி) ஏறிட்டு. (தம்மைப்பார்த்து) ஆழ்வார் தாமே தம்மைப்பார்த்து அருளிச்செய்தாரென்கை. ... ... ... ... ... (அ)

மூ.—குடிகுடியாகக் கூடி நின்றமரர்
குணங்களேபிதற்றி நின்றேத்த
அடியவர்க்கருளி யரவணைத்துயின்ற
வாழியானமர்ந்துறை கோயில்
கடியுடைக்கமல மடியிடைமலரக்
கரும்பொடு பெருஞ் செந்நெலசைய
வடிவுடையன்னம் பெடையொடுஞ்சேரும்
வயல் வெள்ளியங் குடியதுவே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அமரர் | ப்ரஹ்மாதிதேவர்கள் | கடியுடை | பரிமளத்தை யுடைத்தான |
| குடிகுடியாக | பார்யாபுத்ராதி ஸஹிதராய் | கமலம் | தாமரைப் பூவானது |
| கூடிநின்று | சேர்ந்திருந்து | அடியிடை | கரும்பி னுடையவும் செந்நெ லுடையவும் அடியிலே |
| குணங்களே | (தன்) கல்யாணகுணங்களையே | | |
| பிதற்றிநின்று | சொல்லிக்கொண்டு | மலர | விகஸியாநிற்க (அதினால்) |
| ஏத்த | ஸ்தோத்ரம் பண்ணாநிற்க, | | |
| அடியவர்க்கு | தாஸபூதரான அவர்களுக்கு [ண்டு | கரும்பொடு | கரும்போடேகூட |
| | | பெரும் | பெருத்த [னது |
| | | செந்நெல் | செந்நெல் தாங்யமா |
| அருளி | க்ருபைபண்ணிக்கொ | அசைய | அசையாநிற்க, |
| அரவணை | அநந்தசயநத்தில் | வடிவுடை | ஸௌந்தரமான ஆகாரத்தை யுடைத்தான |
| துயின்ற | கண்வளர்ந்தருளினவனாய் | | |
| | | அன்னம் | ஹம்ஸமானது [கூட |
| ஆழியான் | திருவாழி ஏந்தினவனான ஸர்வேஶ்வரன் | பெடையொடும் | தன் பேடையோடு |
| | | சேரும் | அந்தத்தாமரைப்பூவில் வாஸம் பண்ணாநின்ற |
| அமர்ந்து | பொருந்தி [இற | | |
| உறை | நித்யவாஸம் பண்ணு | வயல் | கழனிகளையுடைய |
| கோயில் | திவ்யதேசமானது, | வெள்ளியங்குடியதுவே (௯) | |

வ்யா. — ஒன்பதாம்பாட்டு. (குடியித்யாதி) 'ப்ரஹ்மாதிகள், (௧) "ஸ்வபத்நீஸஹிதா: ஸர்வே - உமயாஸார்த்த மீசாந:" என்கிறபடியே பார்யாபுத்ராதிகளோடே திரண்டு, "நாங்க ளாயர்க்கானவன்றைக்கு

---

(௧)

தேவரை யொழிய ஒரு புகலிடமுண்டோ" என்று அவன் குணங்களைச்சொல்லி நின்றேத்த, தன் திருவடிகளில் அஸாதாரணராயிருப்பார் பக்கலிலே க்ருபையைபபண்ணி இவர்கள் கூக்குரல் கேட்கைக்கு அடுத்தணித்தாகத் திருப்பாற்கடல் சாயியிலே கண்வளர்ந்தருளினவ னென்னுதல்; (அழியான்) அம்பரிஷோ, ஆபத்துக்குப் பரிகாரமான திருவாழியை யுடையவன் பொருந்தி வர்த்திக்கிற தேசமென்னுதல்.

(கடி) பரிமள ப்ரசுரமான தாமரையானது, கரும்புக்கும் செந்நெல்லுக்கு மடியிலே மலர, அக்காலே கரும்பும் பெருஞ் செந்நெலு மசைய, அதின்மேலே தர்சநீயமான வடிவை யுடைத்தான அன்னம் பேடையோடே வர்த்திக்கிறபோது, ஓங்கின ஸிம்ஹாஸநத்தின் மேலே சாமரமிட்ட மஹிஷியோடேகூட விருக்கும் ராஜபுத்ரனைப் போலே யிராநின்ற தாய்த்து. ... ... ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு (குடியிசயாதி) * கோலவில்லி ராமன்றன்னை நாலாம்பாட்டில் "பாற்கடல் துயின்ற" என்றது பவித்திருந்தவர், இழ்ப்பாட்டில் - * அமரர்க்கிடர்செய்த வாளரக்கரை நிரஸித்தமையை யநுஸந்தித்தார்; அந்த ப்ரஸங்கத்திலே, அமர ரேசத்துபடியை ஸப்ரகாரமாக உபபாதித்துக்கொண்டு, திருப்பாற்கடலானே அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"ஆழியான்" என்றதுக்கு - ஸமுத்ரத்தை யுடையவனென் றர்த்த மருளிச்செய்து, அர்த்தாந்தர மருளிச்செய்கிறார (அன்றிக்கே யித்யாதி). இரட்ட) வீச. ... ... ... ... ... ... ... (௯)

மூ.—பண்டு முனேனயாகி யன்றொருகால்
பாரிடந்தெயிற்றினிற் கொண்டு
தெண்டிரை வருடப் பாற்கடல் துயின்ற
திருவெள்ளியங்குடியானை
வண்டறைசோலை மங்கையர்தலைவன்
மானவேற்கலியன் வாயொலிகள்
கொண்டிவைபாடும் தவமுடையார்கள்
ஆள்வரிக்குரைகடலுலகே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—oo:o:oo—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பண்டு | வராஹகல்பத்தின ஆதியிலே | வண்டு | வண்டுகளானவை |
| முன் | பூமியழிந்துபோவதற்கு முன்னே | அறை | ஒலியாநின்ற [ன |
| ஏனமாகி | மஹா வராஹமாய்க்கொண்டு | சோலை | சோலைகளையுடைத்தா |
| அன்றுஒருகால் | ப்ரளயார்ணவங்கோக்ரும காலத்தில் (நான் உதவப்பெற்றிலேன் என்றதிருவுள்ளத்துடன்) | மங்கையர் | திருமங்கையிலுள்ளவர்களுக்கு |
| | | தலைவன் | நிர்வாஹகராய் |
| | | மானம் | வைஷ்ணவாபிமானத்தைப் பிறப்பிக்கவல்ல |
| பார் | பூமியை | வேல் | வேலாயுதத்தையுடையரான |
| இடந்து | குத்தியெடுத்து | | |
| எயிற்றினில் | தந்தத்தின் மேலே | [illegible] | அளவுடைய |
| கொண்டு | வைத்துக் [illegible] | [illegible] | [illegible]திகளான |
| தெள் | நிர்மலமான | இவை | இப்பத்துப் பாசுரத்தையும் |
| திரை | அலைகளானவை | | |
| வருட | (திருவடிகளை) ஸ்பர்சிக்கும்படி | கொண்டு | ஆதரித்துக்கொண்டு |
| | | பாடும் | அப்யஸியாநின்ற |
| பாற்கடல் | திருப்பாற்கடலிலே | தவமுடையார் | பாக்யவான்கள், |
| துயின்ற | கண்வளர்ந்தருளின | சூழ | சப்தியாநின்ற |
| திருவெள்ளியங் குடியானை | திருவெள்ளியங்குடி என்னும் திவ்யதேசத்தில் எழுந்தருளியிருக்கும் ஸர்வேச்வரன்விஷயமாக | கடல் | ஸமுத்ரத்தாலே சூழப்பட்ட |
| | | இவ்வுலகு | இந்தலோகத்தை |
| | | ஆள்வர் | பரிபாலநம் பண்ணப் பெறுவர்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (பண்டு) வராஹகல்பத்தினுதியிலே. (முன்) அண்டபித்தியிலே யொட்டினபூமி உருமாய்வதற்குமுன்னே, மஹாவராஹமாய்.(அன்று) அன்றைக்கு நான் உதவப்பெற்றிலேனென்னு மர்த்தத்திலே. பூமியை யிடந்து, திருவெயிற்றிலே கொண்டு, அந்த ஶ்ரமமாறும்படியாக, கடல்திரைகளில் குறுந்திவலைகள் துடைகுத்தி உறக்கத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனுய்த்துத் திருவெள்ளியங்குடியிலே ஸந்நிஹிதனுனன்.

(வண்டித்யாதி) மதுபாநமத்தமான வண்டுகள் த்வநியாநின்றுள்ள சோலையையுடைத்தாய் திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகன். (மானவேல்) அளவுடைய வேலென்னுதல்; வைஷ்ணவாபிமானத்தை

ப்பண்ணிக்கொடுக்கும் வேலென்னுதல். (கொண்டித்யாதி) இவற்றை ஆதரித்துக்கொண்டு அப்யஸிக்கைக்கீடான பாக்யாதிகர், கடல்சூழ்ந்த பூமியைத் தாங்களிட்ட வழக்காம்படி ஆளப்பெறுவர். பரிந்து பாகவதசேஷமாக்கப் பெறுகையாலே, ஐஸ்வர்யத்தைத் தாம் புருஷார்த்தமாக நினைத்தார்; அத்தாலே-இது கற்றார்க்கு மப்படி கூடில் இதுதானே யமையும் என்றிருந்தபடியாலே ராஜ்யஸ்ரீயைப் பெறுவரென்கிறார். அன்றிக்கே, இது தன்னை ஸர்வாதிகாரமாக்குகைக்காகச் சொல்லிற்றாகவுமாம். ஐஸ்வர்யகாமரில்லையாகில் இத்தை அதிகரியார்களே; அவர்களிழக்கவொண்ணாது என்னுமுகப்பாலே சொல்லுகிறார். ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அ௩ —பத்தாம்பாட்டு. (பண்டித்யாதி). "பண்டு" என்றும் "முன்" என்றும் புநருக்தமாகையாலே அர்த்தபேதம் காட்டுகிறார் (வராஹேத்யாதி). மீளவும் "அன்றொருகால்" என்றால் இதுக்குப்பொருளென்னென்ன; ஸர்வேஸ்வர ஸ்ரீபாடாலே அர்த்தோக்தி சொன்னானென்று விவக்ஷித்
டதவபபெற்றிலேன்" என்று இவ்வளவும் கூட்டிக் கருத்தருளிச் செய்கிறார் (அன்றைக்கித்யாதி) (அன்றைக்கு) ப்ரளயம் வந்தவன்றைக்கு. ப்ரளயார்ணவமக்நையான பின்பு (௧) * மானமிலாப் பன்றியாயிருந்த போது திருவுள்ள மீடுபட்டிருக்குமென்று திருவுள்ளமென்று கருத்து. (அர்த்தத்திலே) என்ற வநந்தரம், கிடக்கிறது என்று சேஷம்.

(சோலையையுடைத்தாய்) என்றவநந்தரம், இருக்கிற என்று சேஷம். (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.



நாலாம்பத்தில் பத்தாந்திருமொழி முடிந்தது.



நாலாம்பத்து ஸம்பூர்ணம்.



(௧) நா-தி-௪௧-அ.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# அஞ்சாம்பத்து முதல் திருமொழி.

## அறிவதரியான் ப்ரவேசம்.



வ்யா. — ஒருகாலோரிடத்தே ஆசை பண்ணிப் பெறுவிட்டால் ''கிடைத்ததில்லை' என்று மீளலாம்படியன்றிறே இவர் ஆசை இருப்பது; ஆசைபண்ணாம லிருக்கவொண்ணாதபடி யிருக்குமிறே விஷய ஸ்வபாவத்தைப் பார்த்தாலும். இனித்தான், உகந்தருளின நிலங்களிலே வந்து நிற்கிறது - தன்பக்கல் ருசியுடையாரோடே நினைத்தபடிகளெல்லாம் பரிமாறவிறே. ராஜாக்கள் தோப்புக்கள் பல சமைத்தால், "இன்னதோப்பிலே இன்னானுக்கு முகங்கொடுக்கக்கடவோம்" என்றறுதியிட்டிருக்குமாபோலே, உகந்தருளின நிலங்கள் பலவிடங்களிலும் நிற்கிறது - ஒன்றல்லாவோரிடத்திலே ஒவ்வொருத்தருக்கு முகங்கொடுக்கைக்காக; ஆனபின்பு, நமக்கிவ்விடத்திலே முகந்தர நினைத்திலனாகில் மற்றோரிடத்திலே யாகிறது என்று உகந்தருளின நிலங்கள் தோறும் புக்குத்திரிவர்; "இன்னவிடத்திலே முகந்தரும்" என்றறியாரே; ஆகையால், திருப்புள்ளம்பூதங்குடியிலே ஸந்நிஹிதனானவன், அங்கு நிற்கிறவன்றான் ஆஶ்ரிதர்க்குத் தானே அர்த்தியாய்க்கொண்டு காரியம் செய்யும் ஸ்வபாவன், ஆஶ்ரிதரோடு பிராட்டியோடு வாசியற முகங்கொடுப்பானொருத்தன், தன்னை யறிகைக்கீடான ஸுக்ருதம் பிறக்கைக்கும் தான் ப்ரவர்த்தகன், அதுக்குமேலே நிரதிசயபோக்யனும் என்று அவன்படிகளைப்பேசி யநுபவிக்கிறார். ... ... *

---

அரு.—அறிவதின்ப்ரவேசம் — "சிறிதும் திருமேனி இந்த வண்ணமென்று காட்டீரோ" என்று இந்தளூரில் லொய்த்தவர், இங்குச் செய்யாதே போனாலும் திருவெள்ளியங்குடியிலே நினைத்தவைகளெல்லாம் பரிமாறலாமென்று புக்கநுபவித்த விடத்தில், அங்கும் அர்ச்சாஸமாதி குலையாமலிருக்கக் கண்டவர், இன்னும் புள்ளம்பூதங்குடியிலே போகைக்குக் காரணமென், கைவிடவன்றோ வடுப்பது என்னும் ப்ரஸங்கத்தின்மேலே, இன்னும் நாலு திருப்பதிகளிலே போய்ப் பார்க்கிறோமென்று விவக்ஷித்து, அதுக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார்; (ஒருகாலித்யாதி). (இவ்விடத்திலே) திருவெள்ளியங்குடியிலே. *மயர்வற மதிநலம் பெற்றவிவர், இன்னவிடத்

இல் செய்வன், செய்யான் என்றறியாரோ வென்ன; ஆசாபரவச ராகையாலே கலங்கியிருப்ப ரென்றருளிச்செய்கிறார் (இன்னவிடத்திலே யித்யாதி). தம்மாலறியப் போகாமையாலேயிறே முந்துற "அறிவதரியான்" என்றருளிச் செய்கிறாரென்று கருத்து. (௧) "மாணுருவாகிய" இத்யாதிகளைப்பற்ற (ஆஶ்ரிதாக்கித்யாதி). (௨) "வெற்பால்மாரி" என்கிறபாட்டைக் கடாக்ஷித் தருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதரோடித்யாதி). (௩) "அன்னமாகி யருமறைக ளருளிச்செய்த வமலன்" என்றத்தை யுட்கொண் டருளிச்செய்கிறார் (தன்னை யித்யாதி). (௧) "கூத்தன்" (௪) "நேமியங்கை மாயன்" என்னு மவற்றை நோக்கி யருளிச்செய்கிறார் (அதுக்கித்யாதி). ... *

மூ.—அறிவதரியானனைத் துலகு முடையானென்னை யாளுடையான்
குறிய மாணுருவாகிய கூத்தன் மன்னி யமருமிடம்
நறியமலர்மேல் சுரும்பார்க்க வெழிலார் மஞ்ஞை நடமாடப்
பொறிகொள் சிறைவண் டிசைபாடும் புள்ளம் பூதங்குடி தானே.

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அறிவது | ஸ்வயத்நத்தாலே அறிவசக்கு | இடம் | திவ்யதேசமானது, |
| அரியான் | துர்லபனானவனும், | நறிய | பரிமளமுடைத்தான |
| அனைத்துலகும் | ஸமஸ்த லோகங்களையும் | மலர்மேல | புஷ்பங்களின்மேலே |
| உடையான் | தனக்கு சேஷமாக வுடையவனும் | சுரும்பு | சுரும்புஎன்னும் வண்டுகளானவை |
| என்னை | என்னை | ஆர்க்க | ஒலியாநிற்க, |
| ஆளுடையான் | அடிமை கொண்டவனும் | எழில்ஆர | அழகுமிக்க |
| குறிய | வாமநமான | மஞ்ஞை | மயில்களானவை |
| மாணுருவாகிய | ப்ரஹ்மசாரி வேஷங்கொண்ட | நடமாட | ஆடாநிற்க, |
| கூத்தன் | மநோஹரமானசேஷ்டிதங்களை யுடையவனுமான ஸர்வேஶ்வரன் | பொறிகொள் | ரேகைகளை யுடையதும் |
| மன்னி | அமர்ந்து | சிறை | இறகுகளையுடையதுமான |
| உறையும் | வர்த்திக்கிற | வண்டு | வண்டுகளானவை |
| | | இசைபாடும் | கானம் பண்ணுகின்ற |
| | | புள்ளம்பூதங்குடி | புள்ளம்பூதங்குடிஎன்னும் திவ்யதேசமாம். (௧) |

(௧) ௫-௧-௧. (௨) ௫-௧-௮. (௩) ௫-௧-௩.
(௪) ௫-௧-௫.

வ்யா.—முதற்பாட்டு. (அறிவதரியான்) ஸ்வயத்நத்தாலே அறியப்பார்ப்பார்க்கு, என்றுமொக்க அறியவரிதாம்படி யிருக்கும் ஸ்வபாவன். (அனைத்துலகு முடையான்) அறிகையும் அறியாதொழிகையுமாகிற இவ்வர்த்தம் கிடக்க, ஸர்வலோகேச்வரனாக ஸர்வர்க்கும் ஸம்ப்ராப்யன். (என்னையாளுடையான்) விசேஷித்து என்னை யடிமை கொண்டவன்; (க) "ஶஸ்மத் ஸ்வாமிந் - அஸ்மத் ஸ்வாமின்". (குறியவித்யாதி) இப்படி ஸர்வாதிகனானவன் வாமநவேஷத்தைப் பரிக்ரஹித்து, இரப்பிலே தகணேறின வடிவோடேகூட மஹாபலி யஜ்ஞவாடத்திலே புக்கு மநோஹாரியான சேஷ்டிதத்தையுடையவன் நித்யவாஸம்பண்ணி "விடேன்" என்று வர்த்திக்கிறதேசம். யஜ்ஞவாடத்திலே நடந்தபோது வல்லாராடினாப்போலே யாய்த்திருந்தது.

(நறியவித்யாதி) பரிமளத்தை யுடைத்தான மலரின்மேலே, சுரும்பென்று - வண்டிலே ஒரு அவாந்தரஜாதி, அவை ஆரவாரத்தைப்பண்ண, அழகுமிக்கிருந்துள்ள வடிவையுடைத்தான மயில்களாட; (பொறியித்யாதி) வரியையும் சிறகையு முடைத்தான வண்டுகளானவை, அவற்றின் காலுக்கீடாகப் பாடாநிற்குமாய்த்து. ... (க)

---

அரு.—முதற்பாட்டு. (அறிவதித்யாதி). தாம் கிலாய்த்துப் பின்பு செய்வானென்றெண்ணித் திருவெள்ளியங்குடியில் புக, பின்பு செய்யாமையாலே அறிவதரியானென்கிறாரென்று விவக்ஷித்துத்தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸ்வயத்நத்தாலே யித்யாதி). துர்ஜ்ஞேயனானகில் விடலாகாதோ, புள்ளம்பூதங்குடியிலும் போய்த் துடருவானெனென்னும் சங்கையிலே யருளிச்செய்கிறாரென்று விவக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அறிகையித்யாதி). அனைத்துலகில் தாமும் கூட்டன்றோ, விசேஷித்துச் சொன்னாருண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (அஸ்மதித்யாதி). (க) "அகில ஜகத் ஸ்வாமிந் - அகிலஜகத் ஸ்வாமின்" என்று வைத்து, மீளவும் "அஸ்மத்ஸ்வாமின்" என்றாரே யென்று கருத்து. "மன்னி" என்னச்செய்தே "அமரும்" என்னவேணுமோ வென்ன; பேதம்காட்டுகிறார் (நித்யேத்யாதி).

"பொறி - சிறை - கொள்" என்றந்வயித்தருளிச் செய்கிறார் (வரியித்யாதி). ... ... ... ... ... ... ... ... (க)

---

(க) கத்யத்ரயம்-க-

மூ.—கள்ளக்குறளாய் மாவலியை வஞ்சித்துலகம் கைப்படுத்துப்
பொன்னைக்கரத்த போதகத்தின் துன்பந்தவிர்த்த புனிதனிடம்
பள்ளச்செறுவில் கயலுகளப் பழனக்கழனியதனுட்போய்ப்
புள்ளுப் பிள்ளைக்கிரைதேடும் புள்ளம் பூதங்குடி தானே. (௨)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| கள்ளம் | வஞ்சகமான [டு | இடம் | திவ்யதேசமானது, |
| குறளாய் | வாமநனாய்க் கொண் | பள்ளம் | தாழ்ந்திருக்கிற |
| மாவலியை | மஹாபலியை | செறுவில | கழனிகளில் |
| வஞ்சித்து | வஞ்சனைபண்ணி | கயல் | மத்ஸ்யங்களானவை |
| உலகம் | (அவனுடையதாயிருந்த) லோகத்தை | உகள | துள்ளாநிற்க, |
| கை படுத்து | ஸ்வாதீந மாக்கிக்கொண்டும், | புள்ளு | பக்ஷிகளானவை |
| பொன்னை | த்வாரத்தை யுடைய | பழனம் | நீர்நிலைகளையுடைய |
| கரத்த | துதிக்கையை யுடைத்தான [டைய | கழனியதனுள் | வயல்களினுள்ளே |
| போதகத்தின் | கஜேந்த்ராழ்வானு | போய் | ப்ரவேசித்து [கு |
| துன்பம் | து:க்கத்தை | பிள்ளைக்கு | (தம் தம்) குட்டிகளுக் |
| தவிர்த்த | போக்கினவனுமான | இரை | ஆஹாரத்தை |
| புனிதன் | பரிசுத்தனை ஸர்வேஶ்வரன் நித்யவாஸம் பண்ணுகிற | தேடும் | ஆராயாநின்ற |
| | | | புள்ளம்பூதம் குடிதானே. (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கள்ளமித்யாதி) "இவன் ஸர்வேஶ்வரன், தேவர்கள் ஹிதம்செய்யவந்தான், அகப்படாதேகிடாய்"என்று சுக்ராதிகள் சொன்னவார்த்தை அவன் நெஞ்சில்படாதபடியான வாமந வேஷத்தைப் பரிக்ரஹித்து, தன்னதல்லாதத்தை "தன்னது" என்றிருந்தவன்பக்கல் நின்றும் தன்னதாக்கிக்கொண்டானாய்த்து. (பொன்னை யித்யாதி) துளைக்கையையுடையனான ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய து:க்கத்தைப்போக்கிந் தன் து:க்கம் தீர்ந்தானாயிருக்கிறவன் வர்த்திக்கிற தேசம்.

(பள்ளமித்யாதி) தாழ்ந்த செய்களிலே கயல்களானவை செருக்குக்குப் போக்குவிட்டு உகள, நீர்நிலையையுடைத்தான கழனிகளினுள்ளிட்டுப்போய். (புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும்) ஆகிறது - "ஆலவாயுடையான் கேட்க, பட்டர் அருளிச்செய்தார்" என்று நாம் பரிஹஸிக்கபாசச் சொல்லிப்போருகிறோம்; - "கயலுகளாநின்றதாகில் புள்ளுக்குத் தேடப்போகவேண்டுகிறதென்?" என்ன; 'பிள்ளை, அவ்விடம் நிருதிலையோ; பிள்ளைகள்தேடுகிறது, ...ப்ரீதியாலே அவை

தான் தூணும் துலாமும்போலே வளர்ந்திருக்கும்; அதிலிதுக்கு ஸாத்மிக்கு மவை தேடிப் போசாநிற்கும்". ... ... ... (௨)

அரு.—இரண்டாம்பாட்டு. (கள்ளமித்யாதி) கீழ்ப்பாட்டில் தேவர்களுக்காகத் தன்னை இரப்பாளனாக்கினவன் செயலில் நசையாலே மீளவும் சொல்லிக்கொண்டு, இதிலும் ஒரு திர்யக்கு இரக்க வந்துதவினத்தையு மநுஸந்தித்து, தம்முடைய இரப்பும் தலைக்கட்டு மென்றிருக்கிறு ரென்று ஸங்கதி.

"புனிதன்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தன்னித்யாதி).

"பழனம்" என்றதி னர்த்தம் (நீர்நிலையை யுடைத்தான) என்றது.(௨)

மூ.—மேவாவரக்கர் தென்னிலங்கை வேந்தன் வீயச்சரந்துரந்து
மாவாய் பிளந்து மல்லடர்த்து மருதம் சாய்த்தமாலதிடம்
காவார்தெங்கின் பழம் வீழக் கயல்கள் பாயக் குருகிரியும்
பூவார்கழனி யெழிலாரும் புள்ளம்பூதங்குடி தானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மேவா | (தன்னோடு) பொருந்தாத [ன | ஆர் | நெருங்கியிருக்கிற |
| | | கா | தோட்டங்களில் |
| அரக்கர் | ராக்ஷஸர்களுடையதா | தெங்கின் | தென்னைமரங்களில்நின்றும் |
| தென் | தெற்குத்திக்கிலுள்ள | | |
| இலங்கை | லங்கைக்கு | பழங்கள் | பழங்களானவை |
| வேந்தன் | ராஜாவான ராவணன் | வீழ | விழ;(அதைக்கண்டு) |
| வீய | முடியும்படியாக | கயல்கள் | மத்ஸ்யங்களானவை (பயந்து) |
| சரம் | பாணங்களை | | |
| துரந்து | ப்ரயோகித்தும், | பாய | வேறோரிடத்தில் துள்ளியோட, (அதைக்கண்டு) |
| மா | குதிரையான கேசியி | | |
| வாய் | வாயை [னுடைய | | |
| பிளந்து | கிழித்தும், | குருகு | நாரைகளானவை |
| மல் | மல்லர்களை [யும், | இரியும் | சிதறியோடா நிற்பதாய், |
| அடர்த்து | நெருக்கிச் சூர்ணமாக் | | |
| மருதம் | மருதமரங்களை | பூ ஆர் | கமலம்முதலிய பூக்கள் நிறைந்த |
| சாய்த்த | விழச்செய்தவனுமான | | |
| மாலது | ஆச்ரித வ்யாமுக்தனை ஸர்வேச்வரனுடைய | கழனி | வயல்களுடைய |
| | | எழில் | அழகினாலே |
| | | ஆரும் | பூர்ணமான |
| இடம் | திவ்யதேசமானது, | புள்ளம்பூதங்குடி தானே | (௩) |

வ்யா.—மூன்றும்பாட்டு. (மேவாவித்யாதி) ஒரு உபாதியாலன்றிக்கே த்வேஷமே ப்ரக்ருதியாயிருக்கிற ராக்ஷஸர் வர்த்திக்கிற லங்கைக்கு நிர்வாஹகனான ராவணன் முடியும்படியாக அம்பையோட்டி, கேசிவாயைக்கிழித்து, மல்லவர்க்கத்தை யடர்த்து, ஒன்றோடொன்று சேர்ந்துநின்ற மருதுகளை முறித்தருளின. (மாலதிடம்) பிராட்டிபக்கலிலும் ஆஶ்ரிதர் பக்கலிலுமொக்க வ்யாமோஹம் பண்ணுகிறவன் வர்த்திக்கிறதேசம்.

(காவாரித்யாதி) செறிந்தசோலையில் தெங்கின்பழம்வீழ, அது தன்னை உத்தேசித்து விழுகிறதாகக்கொண்டு கயல்களானவை பாய. (குருகிரியும்) அக்கயல்தன்னை யுத்தேசித்துப் பாய்கிறதாகக்கொண்டு குருகுகள் சிதறியோடா நிற்குமாய்த்து. இரண்டுக்கு மொக்குமாய்த்துக்கலக்கம்; - தன்னைக்குறித்தன்றிக்கே யிருக்கச்செய்தே அஞ்சா நிற்குமாய்த்துக்கயல்; குருகு, அது தனக்கு ஆமிஷமாய் தானதுக்கு பாத (ஸ்ப)க மாகா நிற்கச்செய்தேயும் அஞ்சியோடா நிற்குமாய்த்து. ... ... ... ... ... ... ... (௩)

---

அரு—மூன்றும்பாட்டு (மேவாவித்யாதி) ஒருநீர்ப்புழுவுக்கும் ஆனைக்கும் வந்த விரோதத்தைப் பரிஹரித்துப் புகுதனை வளவன்றிக்கே, தலைபத்துப் படைத்தவன் அபலையான பிராட்டிக்கு விரோதிக்க நிரஸித்தபடியும், அது தானும் பருவம் நிரம்பி வில்லுங்கையுமாக "எதிரிநான்" என்று வந்தவனை வென்றதாகையாலே அதிலுமாஶ்சர்ய மாம்படி, திர்யக்காயும் ஸ்த்தாவரமாயுமிருந்த விரோதிகளைக் கையாலும் காலாலும் பிள்ளைத்தனத்திலே நிரஸித்த விது விஞ்சினதாகையால் இவையிரண்டையு மநுஸந்திக்கிறரென்று ஸங்கதி.

மேவுதல் - பொருந்துதலாய், அதில்லாமையை நிரூபகமாக வருளிச்செய்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருவித்யாதி).

மருதுகளிரண்டா யிருக்கவும் ஏகவசநமாக வருளிச்செய்தத்தாலே ஒன்றிலே வெளிகண்டு போனனென்னும்படி க்ருதஸங்கேதர்களாயிருந்தன வென்னுமர்த்தந் தோற்றுகிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஒன்றோடொன்றித்யாதி). ... ... ... ... (௩)

மூ.—வெற்பால் மாரி பழுதாக்கி விறல்வாளரக்கர் தலைவன்றன்
வற்பார் திரடோளை நான்கும் துணித்த வல்வில்லிராமனிடம்
கற்பார் புரிசை செய் குன்றம் கவினார்கூடம் மாளிகைகள்
பொற்பார் மாட மெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெற்பால் | கோவர்த்தந மலையிஞல் | வல் | த்ருடமான |
| மாரி | மழையை | வில் | தநுஸ்ஸையுடைய |
| பழுதாக்கி | (கோ கோபர்க்கு பாதக(பாதக) மாகாதபடி) வீணும்படி பண்ணி, | இராமன் | சக்ரவர்த்தித் திருமகனுடைய |
| | | இடம் | திவ்யதேசமானது, |
| விறல் | பலத்தையுடையராய் | கற்பு ஆர் | ஶ்லாக்யமான வேலைப்பாட்டை யுடையவைகளாய் |
| வாள் | வாளாயுதத்தை யுடையரான | புரிசைசெய் | மதிள்களாகச் செய்யப்பட்டிருக்கிற |
| அரக்கர் | ராக்ஷஸர்களுக்கு | குன்றம் | மலைகளென்ன |
| தலைவன்தன் | நிர்வாஹகனை ராவணனுடைய | கவின் ஆர் | அழகுமிக்க |
| வற்பு | திண்மையிஞல் | கூடம் | க்ருஹங்களென்ன |
| ஆர் | மிக்கிருந்துள்ளவைகளும் | மாளிகைகள் | அரண்மனைகளென்ன |
| திரள் | (மாம்ஸளங்களாய்) திரண்டவைகளுமான | பொற்பு ஆர் | ஸ்ப்ருஹணீயங்களான |
| | | மாடம் | மண்டபங்களென்ன (இவற்றினுடைய) |
| ஐ நாங்கு தோளையும் | இருபது புஜங்களையும் | எழில் | அழகிஞலே |
| துணித்த | தறித்துப் பொகட்ட | ஆரும் | ஸம்ருத்தமான |
| | | புள்ளம்பூதங்குடிதானே. (ச) | |

வ்யா.—நாலாம்பாட்டு. (வெற்பால்மாரி பழுதாக்கி) மலையாலே, இந்த்ரன் அபிஸந்திபூர்வகமாக வர்ஷித்த வர்ஷத்தை வ்யர்த்தமாம்படி பண்ணி; பெருமிடுக்கராய் ஸாயுதருமாயிருந்துள்ள ராக்ஷஸர்க்கெல்லாம் வழியடித்துப் புக்கொதுங்கலாம்படி அஞ்சிஞன் புகலிடமாயிருந்துள்ளவனுடைய, வன்மைமிக்குத் திரண்டிருந்துள்ள தோள்களிருபதையும் துணித்த, மிடுக்கையுடைத்தான வில்லையுடைய சக்ரவர்த்தித்திருமகன் வர்த்திக்கிறதேசம்.

(கற்பாரித்யாதி) தொழில்மிக்கிருந்துள்ள மதிள்செய் குன்றங்கள், அழகுமிக்கிருந்துள்ள கூடங்கள், மாளிகைகள், அழகுமிக்கிருந்துள்ளமாடம், இவற்றினுடைய எழில் மிக்கிருந்துள்ள. ... (ச)

---

அரு.—நாலாம்பாட்டு. (வெற்பாலித்யாதி) க்ருஷ்ணவதாரத்தில் மிகவும் மாத்ஸர்யாவஹமாய் திர்யக்ஸ்தாவரங்களை நிரஸித்த வளவன்றியே, தேவஜாதிக்கு நிர்வாஹகனை அநுகூலன் விரோதித்ததை, மலையைச்

சுமந்தாகிலும் கையோயும்படி பண்ணின செயலும், ராமாவதாரத்தில் கை யோயாதே கைவிஞ்சி சரவர்ஷத்தை வர்ஷித்துக்கொண்டு நின்றவனிடத் திலும் வீய ஒருசரம் துரந்து முடித்துவிட மாட்டாதே "அநுகூலிக்கு மோ" என்னும் நசையாலே கைகழியவிட்டுக்கொண்டு வந்ததும் இவரை ஈடுபடுத்துகையாலே அவ்வவதாரத்வயத்தை யநுஸந்திக்கிறரென்று ஸங்கதி.

(அஞ்சினன் புகலிடம்) என்றது - பயந்தார்க்கு அபயப்ரதாநம் பண் ணவல்லனென்கை. வற்பு - வல்லமை, ஆர் - மிகுந்திருந்துள்ள வென்று பதபேதம் திருவுள்ளம் பற்றி தாத்பர்யமருளிச்செய்கிறர் (வன்மையித் யாதி).

"கற்பு, ஆர்" என்றுபதபேதமாக்கி யருளிச்செய்கிறர் (தொழிலித் யாதி). (மதிள்செய்குன்றங்கள்) என்றது-மதிளாகச் செய்யப்பட்ட பர்வ தமென்கை. "கவின்" என்றதினர்த்தம் (அழகு) என்றது. "பொற்பு" ஸப் ருஹணீயதையாய் அருளிச்செய்கிறர் (அழகித்யாதி). ... ... (௪)

மூ.—மையார்தடங்கண் கருங்கூந்தலாய்ச்சி மறையவைத்த தயிர்
நெய்யார் பாலோடமுதுசெய்த நேமியங்கை மாயனிடம்
செய்யாராரலிரை கருதிச்செங்கால் நாரை சென்றணையும்
பொய்யாநாவில் மறையாளர் புள்ளம் பூதங்குடிதானே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மை ஆர் | அஞ்சநத்தினலே பூர் ணமாக அலங்கரிக் கப்பட்டு | மாயன் | ஆச்சர்யபூதனன ஸர் வேச்வரனுடைய |
| தடம் | விசாலமான [ம் | இடம் | திவ்யதேசமானது, |
| கண் | கண்களையுடையவளு | செய் | கழனிகளிலே |
| கரு | கறுத்தவர்ணமுடைய | ஆர் | நிறைந்திருக்கிற |
| கூந்தல் | கேசங்களையுடையவ ளுமான | ஆரல் | ஆரல் என்னும் மத்ஸ் யங்களை |
| | | இரை | (தனக்கு) ஆஹாரமாக |
| ஆய்ச்சி | யசோதையானவள் | கருதி | எண்ணி [ய |
| மறைய | க்ருஷ்ணன் கண்படா தபடி | செங்கால் | சிவந்தகால்களையுடை |
| | | நாரை | நாரையானது |
| வைத்த | சேமித்துவைத்த | சென்று | போய் |
| தயிர் | தயிரையும் | அணையும் | சேராநிற்பதாய் |
| ஆர் | ஸம்ருத்தமான | பொய்யா | பொய்யில்லாத |
| நெய் | நெய்யையும் | நாவில் | நாக்களிலே |
| பாலோடு | பாலோடுகூட | மறை | வேதங்களை |
| அமுதுசெய்த | அமுதுசெய்தவனும் | ஆளர் | ஆளுமவர்களானப்ரா ஹ்மணோத்தமர் கள் வர்த்திக்கிற |
| நேமி | திருவாழியாலே | | |
| அம் | அழகியதான | | |
| கை | கையையுடைய | | புள்ளம்பூதங் குடிதானே. (ரு) |

**வ்யா.**—அஞ்சாம்பாட்டு. (மையார்) பிள்ளை பக்கலுண்டான வாத்ஸல்யத்தாலே, அவனனுங் காமைக்காக, எப்போது மொக்க அஞ்ஜநங்கொண்டு கண்களை அலங்கரித்தும், மயிர்முடியைப் பேணியும் போருமாய்த்து. (ஆய்ச்சி மறையவைத்த தயிர்) இவனறியாத தோரிடம் தேடிவைக்குமாய்த்து. சாந்துப்பரணியிலே தயிரை வைக்குமாய்த்து. (நெய்யாரித்யாதி) நெய்யும் பாலு மமுதுசெய்த. (நேமியங்கை மாயனிடம்) யசோதைப் பிராட்டியைப் பேணியும் போருமாய்த்து.

(செய்யார்) செய்கள் நிறைந்திருந்துள்ள ஆரலாகிற மத்ஸ்யவிசேஷத்தை, கலியர் "கலவரிசிச் சோறுண்ணவேணும்" என்னுமா போலே, ஆமிஷமென்று புத்திபண்ணி, சிவந்த காலையுடைத்தான நாரைகள் சென்று கிட்டாநிற்குமாய்த்து. (பொய்யா) யதாபூதவாதிகளான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற... ... ... ... (ரு)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (மையித்யாதி). கீழ்ப்பாட்டில்-இந்த்ரன் விரோதிததுக்கு பேறது "ஆஸ்ரிதருடைய கரஸ்பர்சமுள்ள அடிசிலை தேவதாந்தரததுக்கு ஆக்கவொண்ணுது" என்று, தானே (க) "గోవర్ధనోస్మి - கோவர்ததநோஸ்மி" என்றநுபவித்ததாகையாலே, அத்தை நியமித்து, இவனுக்கு ஆஸ்ரித கரஸ்பாஸமுள்ள த்ரவ்யத்திலே இத்தனை நசையோவென்ன; யசோதை மறையவைத்தத்தையெல்லா மமுதுசெய்தபடி கண்டோமென்று அதிலே ஈடுபட் டநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

ஆய்ச்சியை இங்ஙன் விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறுர்(பிள்ளை யித்யாதி) (அனுங்காமைக்காக) வேற்றுருக்கண் டஞ்சி பிள்ளைநோய் வாராமைக்காக. மறையவைக்கைக்கு இவனறியாத விடமுண்டோ வென்ன அருளிச்செய்கிறா (சாந்தித்யாதி); இத்தால் - தரையிலே வைத்தாலும் உறியிலே வைத்தாலும் இவனறியாத விடமில்லையே, ஆகையாலே, இடங்காணுமல் சாந்துப் பரணியில்வைததா லத்தனை போக்கி அவளாலே மறைக்கவொண்ணு தென்றதாய்த்து. தன்னிலே தான் மறையவைத்ததாக எண்ணியிருக்கிறு ளித்தனை, *நேமியங்கையனுன நாராயணனுக் கொளிக்கப்போமோ வென்று கருத்து. (உ) "பூசும் சாந்தென்னெஞ்சமே" என்னும்படியான நெஞ்சுக் காஸ்ரயமான தம்முடம்பிலே, விருப்பத்தை - ஸ்நேஹத்தையும் போக்யதாபுத்தியையும் பண்ணிலும் அவன் விடாதே தனக்காக்கிக்கொள்வனென்னு மது ஸ்ப்புரிக்க, (சாந்துப் பரணியிலே) என்கிறுரென்று கண்டுகொள்வது. கையும் திருவாழியுமாய் அவன் முன்னே கூத்தாடி உகப்பிக்குமென்னும் தாத்பர்யத்தை யருளிச்செய்கி

---

(க) (உ) தி-வாய்-ச-௩-க.

றார் (யசோதை யித்யாதி). (பேணியும்) என்ற சகாரத்தாலே - மறைய வைத்ததையும், பண்டுதானறியாதவனைப்போலே ஆதரித்துப் போரு மென்றதாய்த்து.

(கல்வியர்) க்ருதார்த்தர். பொய்யாகாத நாவிலே மறையை ஆளவ ரென்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (யதேத்யாதி). ... ... (௫)

மூ.—மின்னினன்ன நுண்மருங்குல்வேயேய்தடந்தோள் மெல்லியற்
மன்னுசினத்த மழவிடைகளேழன்றடர்த்த மாலதிடம் [காய்
மன்னுமுது நீரரவிந்தமலர்மேல் வரிவண் டிசை பாட
புன்னைபொன்னேய் தாதுதிர்க்கும்புள்ளம்பூதங்குடி தானே. (௬)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மின்னினன்ன | மின்னோடொத்த | இடம் | திவ்யதேசமானது, |
| நுண் | ஸூக்ஷ்மமான | மன்னு | (வற்றாமல்)பொருந்தியிருப்பதாய் |
| மருங்குல் | இடையையும் [தாய் | முது | பழையதான |
| வேய் ஏய் | மூங்கிலோ டொத்த | நீர் | ஜலத்திலுண்டான |
| தடம் | விசாலமான [ளான | அரவிந்தமலர் மேல் | தாமரைப் பூக்களின் மேலே |
| தோள் | புஜங்களையு முடைய | வரி | ரேகைகளையுடைய |
| மெல்லியற்காய் | பெண்ணான நப்பின்னைப்பிராட்டிக்காக | வண்டு | வண்டுகளானவை [ய் |
| மன்னு | (மாறாதே) பொருந்தியிருக்கிற [தாய் | இசைபாட | கானம் பண்ணுகிறபதா |
| சினத்த | கோபத்தை யுடைத் | புன்னை | புன்னை மரங்களானவை |
| மழம் | இளம் பருவத்தை யுடையனவான | பொன் ஏய் | பொன்னோடொத்த வர்ணத்தை யுடைய |
| ஏழ்விடைகள் | ஏழு ருஷபங்களையும் | தாது | தாதுகளை |
| அடர்த்த | நெரித்தவனாய் | உதிர்க்கும் | உதிரப்பண்ணுவதான |
| மால்அது | வ்யாமோஹத்தை யுடையவனுமான ஸர்வேச்வரனுடைய | | புள்ளம்பூதங்குடிதானே. (௬) |

வ்யா.—ஆறாம்பாட்டு. (மின்னித்யாதி) மின்னோடொத்த நேரியவிடையையும், வேய்போலே இருந்துள்ள பெரிய தோளையுமுடையளான நப்பின்னைப் பிராட்டிக்காக, கருமாரி பாய்ந்தும் அணைய வேணுமாய்த்து வடிவழகு. (மன்னு) மாறாத சினத்தையுடைத்தாய், "காட்டு, காட்டு" என்று வருகிற இளமையை யுடைத்தான ருஷபங்களேழையும் ஊட்டியாக நெரித்த பரமப்ரணயியானவன் வர்த்திக்கிறதேசம்.

(மன்னித்யாதி) மாறுத முது நீரில் தாமரைப்பூவின்மேலே, வரியையுடைத்தான வண்டு மதுபாநமத்தமாய்க் கொண்டிசைபாட, புன்னையானது பொன்னையொத்த தாதுகளை உதிராநிற்குமாய்த்து; பொன் பொடிக்களைக் கொண்டு தூவுவாரைப்போலே பாடுவார்க்கு. ... (௬)

---

அரு —ஆறாம்பாட்டு. (மின்னித்யாதி). கீழே-வெண்ணெயமுதுண்ட படியை அநுஸந்தித்தவர், தம்மைப்போலே மெல்லியளான ஒரு பெண்ணமுதை யுண்டபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

விடைகளின் கொம்புகளின் நடுவே இவன் குதிக்கைக்கு ஹேதுவாக வர்ணிக்கிறாரென்கிறார் (கருமாரி யித்யாதி). கருமாரி பாய்கையாவது-காஞ்சீபுரத்திலே சக்தியினாலயத்திலே குளத்தி லிரண்டுகூச்சுக்கள்நடுவே குதிக்கை. ... ... ... ... ... ... ... (௬)

மூ.—குடையா விலங்கல் கொண்டேந்திமாரி பழுதா நிரைகாத்து
சடையானோட வடல் வாணன் தடந்தோள் துணித்த தலைவனி
குடையாவண்டுகளுண்ணக் கோலநீலம் மட்டுகுக்கும் [டம்
புடையார்கழனி யெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விலங்கல் | கோவர்த்தந மலையை | தலைவன் | ஸர்வ நிர்வாஹகனான க்ருஷ்ணனுடைய |
| குடையாகொண்டு | குடையாக அங்கீகரித்து | இடம் | திவ்யதேசமானது, |
| ஏந்தி | அநாயாஸேந தரித்து | குடியா | குடும்பமாகவிருந்து |
| மாரி | மழையை | வண்டுகள் | வண்டுகளானவை |
| பழுதா | வீணாக்கி | உண்ண | பாநம் பண்ணும்படியாக |
| நிரை | பசுக்கூட்டங்களை | | |
| காத்து | ரக்ஷித்தும், | கோலம் | ஸௌந்தரமான [னது |
| சடையான் | ருத்ரனானவன் | நீலம் | கருநெய்தல் புஷ்பமா |
| ஓட | (யுத்தத்தில் முதுகுகாட்டி) ஓட | மட்டு | தேனை |
| | | உகுக்கும் | பெருக்காநிற்பதாய் |
| அடல் | யுத்தோந்முகனான | புடை ஆர் | பரப்பையுடைத்தான |
| வாணன் | பாணாஸுரனுடைய | கழனி | வயல்களினுடைய |
| தடம் | விசாலங்களான | எழில் | அழகினாலே |
| தோள் | புஜங்களை [வனுமான | ஆரும் | நிறைந்த |
| துணித்த | சேதித்துப் பொகட்ட | புள்ளம்பூதங்குடிதானே. (௭) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (குடையாவித்யாதி) கல்வர்ஷத்துக்குப் பரிஹாரமாகக் கல்லைக் குடையாகத் தரித்து. (ஏந்தி) பாரார்த்தமான

வ்யாபாரயாகையாலே வருத்தமற்றிருந்தபடி. (மாரி) ப்ரதாநனை இந்த்ரன் வ்யாபாரம் வ்யர்த்தமாம்படி, பண்ணின உபகார மறியாத பசுக்களை ரக்ஷித்து, ஈச்வராபிமாநி யானவன் முதுகுகாட்டியோட, யுத்தகண்டூதியையுடைய பாணனுடைய தோள்களைத்துணித்த. "ரக்ஷகனும் பொகட்டுப்போனான், நாமிவனைத் தலையறுக்கலாகாது" என்றிரங்கி தோள்களைக்கழித்துவிட்டானாய்த்து. அவன் விட்டுப்போனதாய்த்து இவனுக்கிரங்கத்துக்கடி. (௧) [முண்டநீறனித்யாதி] பஸ்மத்தாலே உடம்படங்கலும் அலங்கரித்துக்கொண்டு வந்து தோற்றின ருத்ரன், அவனுடைய மக்கள், ஜ்வரம், பிடாரி, அக்நி, இவையடங்க ஓடி மடங்கக்கண்டு. [நாணி]"எதிரியைக்கண்டவாறே ஓடுகிறவர்களைப் பற்றி வந்தவனையோ நாமழியச்செய்யப் பார்ப்பது" என்று லஜ்ஜித்து, பாணனுக்கிரங்கினான்; பர்த்ரு ஹீநையான ஸ்த்ரீயைக்கண்டிரங்குவாரைப்போலே. (தலைவனிடம்) மாறுத இவ்வாதிக்யத்தை யுடையவன் வர்த்திக்கிறதேசம்.

(குடியாவித்யாதி)புத்ர பௌத்ராதிகளோடும் பார்யாதிகளோடுங்கூட வண்டுகளானவை மதுபாநத்தைப்பண்ண. ஒரு கொசுகு கடலிலே இழிந்ததென்னு அதிலே ஒருமூலை சுவறுதிறே. தர்மநீயமான நீலமானது மது வெள்ளமிடாகின்றுள்ள பரந்த கழனியிலுண்டான எழில் மிக்கிருக்கிற புள்ளம்பூதங்குடிதானே. ... ... (எ)

அ௫.—ஏழாம்பாட்டு. (குடையாவித்யாதி) கீழ்ப்பாட்டில்-ஒரிடைச்சிக்காக விடைகொண்டபடியை அநுஸந்தித்தார்; இடைசாதிக்காகக் கொடைபிடித்து இடையர்களோடு கூடின பசுக்களை நோக்கி, அவ்வளவன்றி, விடையோன் என்றபிமாநித்த சடையானைக் கடாக்ஷிக் கொண்டவாணன் கரங்கழித்தபடி தன்னையுமநுஸந்திக்கிறரென்று ஸங்கதி.

தலையறுக்கவொண்ணுதோ வென்ன (ரக்ஷகனு மித்யாதி). ஓட, அத்தை ஹேதுவாக்கி அருளிச்செய்கிறா (அவனித்யாதி) ஓடுகை இவனிரக்கத்துக்கு ஹேதுவென்னு மதுக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (முண்டனித்யாதி).

"மட்டுருக்கும்" என்றதினர்த்தம் (மதுவெள்ள மிடாகின்றுள்ள) என்றது. .. ... ... ... ... ... ... (எ)

மூ.—கறையார்நெடுவேல் மறமன்னர்வீய விசயன் தேர்கடவி
இறையான்கையில் நிறையாதமுண்டம் நிறைத்த வெந்தையிடம்

(௧) தி-ச-வி-எக.

மறையால்முத்தீயவை வளர்க்கும் மன்னுபுகழால் வண்மையால்
பொறையால்மிக்க வந்தணர்வாழ் புள்ளம்பூதங்குடி தானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கறை ஆர் | ரக்தக்கறை மாருத | நிறைத்த | பூர்ண மாக்கினவ |
| நெடு | நீண்ட | | னுமான [ய |
| வேல் | வேலாயுதத்தை யுடை யவர்களும் | எந்தை | என் ஸ்வாமியினுடை |
| | | இடம் | திவ்யதேசமானது, |
| மறம் | கோபத்தை யுடையவ ர்களுமான | மறையால் | வேதங்களினாலே |
| | | முத்தீ அவை | த்ரேதாக்நிகளையும் |
| மன்னர் | ராஜாக்கள் | வளர்க்கும் | வளர்த்தாநிற்பாராய் |
| வீய | நசிக்கும்படியாக | மன்னு | (அதினால்) ஸ்த்திர மான |
| விசயன் | அர்ஜுநனுடைய | | |
| தேர் | ரதத்தை | புகழால் | கீர்த்தியினாலும் |
| கடவி | நடத்தியும், | வண்மையால் | ஔதார்யத்தினாலும் |
| இறையான் | ஈஶ்வராபி மாநியான ருத்ரனுடைய | பொறையால் | க்ஷமையினாலும் |
| | | மிக்க | அதிசயித்திருக்கிற |
| கை | கையிலே யொட்டின தாய் | அந்தணர் | ப்ராஹ்மணோத்தமர் |
| | | வாழ் | நித்யவாஸம் பண்ணு கின்ற |
| நிறையாத | ஒருவராலும் நிறைக் கப்போகாத [தை | புள்ளம்பூதங்குடிதானே. (அ) | |
| முண்டம் | ப்ரஹ்ம கபாலத் | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (கறையாரித்யாதி) சத்ருநிரஸநத்தால் வந்த கறை கழுவ அவஸரமில்லாமையாலே மாருத கறையையுடைய நெடிய வேலையும் மறத்தையு முடையரான ராஜாக்க ளுடைய முடியும்படி அர்ஜுநனுக்கு ஸாரத்யத்தைப் பண்ணி, ஈஶ்வராபிமாநியான ருத்ரன்கையில் ப்ரஹ்மாவினுடைய சாபத்தாலே ஒருகாலும் நிறையாதே யிருக்கிற தலையோட்டைத் தன் திருமேனியில் ஜலபிந்துவாலே நிறைத்த வென்ஸ்வாமி வர்த்திக்கிறதேசம்.

(மறையாலித்யாதி) வேதத்தாலே அக்நித்ரயத்தையும் வளர்க்கும் மாருத புகழால், ஔதார்யத்தால், க்ஷமையால், இவை யெல்லாவற்றாலும் மிக்கிருந்துள்ள ப்ராஹ்மணர் வர்த்திக்கிறதேசம். ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (கறையித்யாதி). கீழ்ப்பாட்டில்-இந்த்ரனை நிரிடவும், அவனிலும் விஞ்சினசடையானைத் துணையாக்கி வாணனை நிரிடவும், இருவரையும் கையொழியப் பண்ணிவிட்டானென்றார்; இதில் - அந்த இந்த்ரன் சிறுவனுக்குக் கையாளாயும், அந்த சடையானுடைய கை

யோடு ஒழியவும் பண்ணினான், இதென்ன ஆஶ்சர்யம்! என்றீடு படுகிரு ரென்று ஸங்கதி.

"முண்டம்" என்றதினர்த்தம் (தலையோட்டை) என்றது... (அ)

மூ.—துன்னிமண்ணும் விண்ணாடும் தோன்றாதிருளாய் மூடியநாள்
அன்னமாகி யருமறைக ளருளிச்செய்த வமலனிடம்
மின்னுசோதி நவமணியும் வேயின்முத்தும் சாமரையும் [னே.
பொன்னும் பொன்னி கொணர்ந்தலைக்கும் புள்ளம்பூதங்குடிதா

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| மண்ணும் | பூலோகமும் | அமலன் | பரிசுத்தனை ஸர்வேஶ்வரனுடைய |
| விண்ணாடும் | ஆகாசத்திலுள்ள ஸ்வர்க்காதி லோகங்களும் | இடம் | திவ்யதேசமானது, |
| | | மின்னு | விளங்காநின்ற |
| தோன்றாது | தெரியாமற்படி | சோதி | காந்தியையுடைய |
| இருளாய் | அந்தகாரமேயாய் | நவமணியும் | நவரத்நங்களையும் |
| துன்னி | நெருங்கி | வேயில் | மூங்கிலில்நின்று முதிர்ந்த |
| மூடிய | கப்பியிருக்கிற | முத்தும் | முத்துக்களையும் |
| நாள் | நாளிலே [ண்டு | சாமரையும் | சாமரங்களையும் |
| அன்னமாகி | ஹம்ஸரூபியாய்க்கொ | பொன்னும் | ஸுவர்ணங்களையும் |
| அரு | துர்லபமான | கொணர்ந்து | கொண்டுவந்து |
| மறைகள் | வேதங்களை | பொன்னி | திருக்காவேரியானது |
| அருளிச்செய்த | க்ருபைபண்ணி உபதேசித்த | அலைக்கும் | தள்ளாநின்றுள்ள |
| | | | புள்ளம்பூதங்குடிதானே. (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (துன்னி யித்யாதி) மண்ணும் விண்ணும் தோன்றாது துன்னி, இருள்தானே மூடினநாள். (அன்னமாகி) "ஆசார்யாநுவர்த்தநம்பண்ணிக் கேட்கைக்கு அநதிகாரிகளாயிருக்கவும் கூடும்" என்று திர்யக்வேஷ பரிக்ரஹம் பண்ணினானாய்த்து; ஸாரதியாய் நின்று உபதேசித்தாப்போலே. அஸுரர்களோடே கலந்து உருமாய்ந்துபோனத்தைப் பிரிக்கைக்காக, நீரையும் பாலையும் பிரிக்கும் பதார்த்தத்தின் வடிவைக் கொண்டானாய்த்து. (அமலனிடம்) ப்ரத்யுபகார நிரபேக்ஷயாகவு முபகரித்த சுத்தியு மொருசுத்தியே! சிலரபேக்ஷிக்க வன்றிக்கே தன் பேறாக உபகரித்தானாய்த்து.

(மின்னித்யாதி) ப்ரத்யுபகார நிரபேக்ஷமாக உபகரிக்குமவன் படியுண்டாய்த்து காவேரிக்கும். புகரையுடைத்தாய் உள்ள மண்பற்

றன்றிக்கே யிருக்கும் நவரத்நங்களும். புறம்பே புகரூட்டி உள்ளு மண்பற்றுயிருக்கை யன்றிக்கே எங்குமொக்க ஒளியாயிருக்கும். ஜ்ஞாதாவும் ஜ்ஞாநமும் போலே இரண்டும் ஸ்வயம்ப்ரகாசமாயிறே இருப்பது. வேய்களுதிர்க்கிற முத்தையும், சாமரத்தையும், பொன்னையும், பொன்னி, கொணர்ந்தலைக்கும் - "இவற்றைக் கொள்ளு, கொள்ளு" என்று கொடுவந்து தள்ளாநிற்கும். ... ... ... ... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (துன்னியித்யாதி). கீழ்ப்பாட்டில்-* இறையான்கையில் நிறையாத் முண்டம் நிறைத்தான்" என்று குருபாதகவிமோசநத்தைப் பண்ணினபடி சொன்னார்; இதில் - அவனுக்குங் கூட ஜநகனாய் பஹு (ಬಹು) முகமான ஈஸ்வராபிமாநியா யிருக்குமவனுக்குக் கண்கொடுத்தாப்போலே வேதப்ரதாநம் பண்ணினமையை அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

தேவஸஜாதீயனாய் வந்து மறையைக் கொடுக்கலாகாதோ, அன்னமாவானென்னென்ன அருளிச்செய்கிறார் (ஆசார்யேத்யாதி); (க)"ஈஸ்வரோ ஹம்" என்றிருப்பாரில் தலைவனாகையாலே ஆசார்யோபஸத்திப்ரகாரங்களைப்பண்ணு னென்று கருதி, இப்படிப்பட்டவனுக்கு முபதேசிக்க வேணுமென்று, திர்யக்கானால் அதிகாரிக் கொழியச்சொல்லலாகா தென்கிற நியமமில்லாமையாலே அப்படியா யுபதேசித்தானென்று கருத்து இப்படித் தாழ்ந்தாகிலு மிவ னுபதேசித்த விடமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (ஸாரதி யித்யாதி). திர்யக்காகவேண்டினால், வேதோத்த(த்)ரணம் பண்ணின மத்ஸ்யமான வேஷத்தாலே கொடுக்கலாகாதோ, ஹம்ஸமாக வேணுமோவென்ன அருளிச்செய்கிறா (அஸுரரித்யாதி). இத்தால்-அஸுரர்கள் கையி லகப்பட்டு விஸ்வராதிகளாலே கெட்டு அர்த்தாந்தர ப்ராமகங்களானவற்றை, க்ஷீரநீர விபாகம் பண்ணுமாபோலே யதாவஸ்த்திதமாகவிபஜித்துக் கொடுத்தானென்றதாய்த்து. வேதரூப சப்தராசியை அபஹரிக்கை யாவதென்? அத்தைக் கொண்டுவந்து கொடுக்கையாவதென்னென்னில்; வேதாபிமாநி தேவதையை அபஹரிக்க, அவ்வழியாலே இவனுக்கு வேதம் மறக்க, அஸுரரில் ஸஹவாஸத்தாலே வேதபுருஷன் ப்ரஸந்நனன்றிக்கே யிருக்க, அவர்கள் பலாத்காரத்தாலே சில அப்யஸிக்க, அது உருமாய, இவன் அவ்வஸுரனை ஸம்ஹரித்து, வேதாபிமாநி புருஷனைக்கொடுத்து, யதாவஸ்த்திதமாக வேதாநுபூர்வியு முண்டாக்கிக் கொடுத்தானென்னத் தட்டில்லை யிறே. அமலத்வத்துக்கு ஹேத்வந்தர மருளிச்செய்கிறார் (சிலரித்யாதி). ப்ரஹ்மா தானும் ஆசார்யோபஸத்தி பண்ணாதே திர்யக்கென்றெண்ணி யிருக்கவும் உபகரித்தானென்று கருத்து. (கூ)

---

(க) கீதை-கசு-கச.

மூ.—கற்றுமறித்துக் காளியன்றன் சென்னிநடுங்க நடம்பயின்ற
பொற்றாமரையாள் தன் கேள்வன் புள்ளம் பூதங்குடிதன்மேல்
கற்றார்பரவும் மங்கையர்கோன் காரார்புயற்கைக் கலிகன்றி
சொற்றானீரைந்திவைபாடச் சோர நில்லா துயர்தானே. (௧௦)

திருமங்கையாழ்வார்திருவடிகளே சரணம்.

—oo※oo—

| பதம். | உரை. |
|---|---|
| ஆ | பசுக்கள்போலே வளர்த்தியையுடைய |
| கன்று | கன்றுகளை [னும்) |
| மறித்து | வளைத்து (மேய்த்தவ |
| காளியன் தன் | காளியனுடைய |
| சென்னி | சிரஸ்ஸானது |
| நடுங்க | குலுங்கும்படியாக |
| நடம் | ந்ர்த்தநத்தை |
| பயின்ற | செய்தவனுமாய், |
| பொன் | ஸ்ப்ருஹணீயமான |
| தாமரையாள் தன் | தாமரைப்பூவை இருப்பிடமாக வுடைய பெரியபிராட்டியாக்கு |
| கேள்வன் | வல்லபனுன ஸர்வேஶ்வரன் நித்யவாஸம் பண்ணுகிற |
| புள்ளம்பூதங்குடி தன்மேல் | புள்ளம்பூதங்குடியென்னும் திவ்யதேச விஷயமாக, |
| கற்றார் | பாகவத வைபவமறிந்து கற்க வல்லவர்களாலே |

| பதம். | உரை |
|---|---|
| பரவும் | ஸ்தோத்ரம்பண்ணப் பட்டவராய் |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார்க்கு |
| கோன் | நிர்வாஹகராய், |
| கார் ஆர் | கருமைநிறைந்த |
| புயல் | மேகம்போன்ற |
| கை | ஔதார்யத்தையுடையரான |
| கலிகன்றி | ஆழ்வாருடைய |
| இவை | இந்த |
| ஈரைந்து | பத்தான |
| சொல்தான் | பாசுரங்களை |
| பாட | அப்யஸிக்கவே |
| சோர | ஆத்மாவை நரகாதிகளில் விழப்பண்ணுமதாய் |
| துயர் | துக்கப்ரதமான பாபமானது |
| நில்லா | நில்லாது. (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (கற்றுமறித்து) பசுமேய்க்கை நித்யஸூரிகளுக்கு ஓலக்கங் கொடுத்தவோபாதியாய், கன்றுகளை மேய்க்கிறவிடத்திலே, * நல்லதோர் பொய்கை காளியனாலே தூஷிதமாய்க் கிடக்க, "அவனை அங்கு நின்றுமோட்டவேணும்" என்று அவன் தலை நடுங்கும்படி கூத்துக்களை யாடின. (பொற்றாமரையாள் தன்

கேள்வன்) தன்னைப்பாராதே யாய்த்து அழிவுக்கிட்டது. ஶ்ரியঃபதியான தன் ஸௌகுமார்யத்துக்குச் சேராதிறே இஸ்ஸாஹஸம். (கற்றுரித்யாதி) (க) "ராமோ ராமோ ராம: - ராமோ ராமோ ராம:" என்கிற படியே - இரண்டக்ஷரம் பிணைக்கவல்லா ரெங்குமுண்டு, ஆழ்வாருமொருவரோ! என்னுகிற்கு மத்தனையாய்த்து. (காராரித்யாதி) நீர் கொண்டெழுந்த காளமேகம்போலே யாய்த்துக் கொடையிருப்பது. இத்திருமொழியை உபகரித்தவரிறே. (சொற்றுணீரைந் திவைபாட)இதுக்கு மேற்பட்டதில்லை யிறே ரஸ்யதைக்கு. (சோரமில்லா துயர்தானே) இவ்வாத்ம வஸ்துவைச் சோரக்கொடுக்கும் வினை யில்லாது. (க௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அ௫.—பத்தாம்பாட்டு. (கற்று வித்யாதி). வளர்த்தியாலே ஆக்களென்னும்படியான கன்றுகளை யென்று சப்தார்த்தம் விவக்ஷித்து, இப்படி விசேஷித்தத்தாலே ஸௌசீல்யம் தோற்றிற்றென் றருளிச்செய்கிறார் (பசு வித்யாதி). விவரணம் (ஶ்ரிய: பதி இத்யாதி). பரவுகை-ஸ்துதிக்கையாய், அத்தாலே - கற்றிருக்கை அர்த்தஸித்தமன்றோ, "கற்றார்" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (ராம இத்யாதி). பகவத்விஷயத்தி லிரண்டெழுத்தாகிலும் கூட்டாதாரில்லை, அதுவன்று கற்பது, பாகவத வைபவமறிந்து தத்விஷயத்திலே இரண்டெழுத்துக் கூட்டப்பெற்றாருண்டாகில் அவர்களிறே கற்றாரென்னத் தக்கவரென்றுகருத்து. "பாட" என்ற பதவாஸனை (இதுக்கித்யாதி). ... ... ... ... (க௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அஞ்சாம்பத்தில் முதல்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## அஞ்சாம்பத்து இரண்டாந்திருமொழி
## தாந்தம் ப்ரவேசம்.

வ்யா.—"வெள்ளியார்வணங்க விரைந்தருள் செய்வான்" என்றார் - கீழ்திருமொழியில்; "பிறரும் பரவிக்க விரைந்தருள் செய்வான்,

(க) ரா-யு-க௱க-க௦௪.

என்று இதொரு பழங்கதை சொல்லவேணுமோ, தானே வந்து என் ஹ்ருதயத்திலே புகுந்து விரைந்தருள் செய்தவனன்றோ" என்று அவன்படிகளை அநுஸந்தித்து, இப்படிப்பட்டவன்றான் திருக்கூடலூரிலே வந்து ஸந்நிஹிதனானான், அவனாகிறான்- ஸர்வாதிகனாயிருந்து வைத்துத் தன்மேன்மைபாராதே ஆஸ்ரிதர்க்காகத் தாழநின்று கார்யம் செய்யும் ஸ்வபாவன், அவன் வர்த்திக்கிற தேசந்தான்- நிரதிசயபோக்யம் என்று, அத்தைப்பேசி யநுபவிக்கிறார். ... ... *

அரு —தாந்தம்பெருமையின் ப்ரவேசம்.— (கீழ்த்திருமொழியில்) என்றது- *அறிவதரியானுக்குக் கீழ்ந்ததிருமொழியிலே என்றபடி. (அவன் படிகளை யநுஸந்தித்து) என்றது-"அறிவதரியான்"-ஸ்வயத்நபராக்கு துஷ்ப்ராபன், "என்னை யாளுடையான்" - எனக்குத் தன் ஸ்வாமித்வத்தை நிர்ஹேதுகமாகக் காட்டினவன் என்று, இப்புடைகளிலே புள்ளம்பூதங்குடியோனிடத்திலே அநுஸந்தித்தென்றபடி. முதற்பாட்டில் ப்ரமேயத்தை அருளிச்செய்கிறா (அவனாகிற னித்யாதி). ... ... ... (*)

மூ.—தாந்தம் பெருமை யறியார் தூது
வேந்தர்க்காய வேந்தரூர்போல்
காந்தள் விரல் மென்கலை நன்மடவார்
கூந்தல்கமழும் கூடலூரே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தாம் | ஸர்வஜ்ஞரான தாமும் | விரல | விரல்களையுடையராய் |
| | [யை | மெல் | ம்ருதுவான |
| தம்பெருமை | தம்முடைய மேன்மை | கலை | வஸ்த்ரங்களை அணிந்தவராய் |
| அறியார் | அறியாதவராய் | | |
| வேந்தர்க்கு | பாண்டவர்களுக்காக | நல | விலக்ஷணர்களான |
| தூது ஆய | தூதுபோனவருமாய் | மடவார் | ஸ்த்ரீகளுடைய |
| வேந்தர் | ராஜாதி ராஜனுமான | கூந்தல் | குழல்களானவை |
| | க்ருஷ்ணனுடைய | கமழும் | பரிமளியாநின்றுள்ள |
| ஊர் | திவ்யதேசமானது, | கூடலூர் | கூடலூரென்னும் திவ்ய தேசமாம். (க) |
| காந்தள் | காந்தள் புஷ்பம்போலே யிராநின்ற | | |

வ்யா.—முதற்பாட்டு. (தாம்) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞரா யிருந்தாரேயாகிலும். (க) "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" - யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" (உ) "பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாந பல க்ரியா ச" - பராஸ்யசக்திர் விவி

(க) முண்ட-கோப-கக (உ) ஶ்வேதாஶ்வ-௬.

தைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாந பலக்ரியாச" என்று ஶ்ருதிஸ்ம்ரு திகளோதாநின்றனவே யாகிலும். (தம்பெருமையறியார்) ஆஶ்ரிதரா யிருப்பார் தம்மையநுபவித்து, "ஆஶ்ரிதர்க்காகத் தாழநிற்கிற இதுவு மொரு நீர்மையே!" என்று ஆழங்கால் படுமதொழிய, தமமாலறியப் போகாது. (தூதித்யாதி) (க) "இன்னார் தூதனென நின்றான்" என் றும், (உ)"நாடுடைமன்னர்க்குத் தூதுசெல் நம்பி" என்றும சொல்லு கிறபடியே - பிறர்க்காகத்தன்னைத் தாழவிட்டுத் தூதுபோகாநிற்குமாய் த்து. எத்தனையேனும் தாழ்ந்தாரும், பிறர்க்காகத் தாங்கள் தூதுபோக இசையார்களிறே; அங்ஙனன்றியே, இவனறிவித்துத் திரிகிற ராஜாக் களுக்காகத் தூதுபோகாநிற்குமாய்த்து. (வேநதஶூர்போல்) இவனிப்ப டியே தன்னைத் தாழவிட்டாலும் இவனை நாழநினைத்திருப்பாரைக் கிடையாதே!; ராஜாதிராஜன் என்கிற பெருமையாலும மிகவுந்தோன் றுகிறது.

(காந்தளித்யாதி) செங்காந்தள்போலே யிருநதுள்ள விரலையுடை யருமாய், ம்ருதுவான பரியட்டத்தையுமுடையராய், ஸர்வப்ரகாரத் தாலும் விலக்ஷணைகளான ஸ்த்ரீகளுடைய. (கூநதல்கமழுமகூடலூரே) (௩) "ஸர்வகந்த: - ஸர்வகந்த:" என்கிறவஸ்து நித்யவாஸம பண்ணுகிற தேசமாயிருக்கச்செய்தேயும், அத்தையமுக்கி, இவர்களுடைய குழ லில் பரிமளமே விஞ்சிவாராநிற்குமாய்த்து. ... ... (௧)

௮௫ —முதறபாட்டு. (தாமித்யாதி) "தம்பெருமை யறியார்" என்ன வமைந்திருக்க, "தாம்" என்றதுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (ஸ்வத இத் யாதி). ப்ரமாண கதநபூர்வகம் விவரணம் (யஸ்ஸர்வேத்யாதி). ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனைய னறியாவிட்டால் அவனுக்குப் பெருமை யுண்டென்று மீ து அறிவார்தாரென்ன வருளிச்செய்கிறார் (ஆஶ்ரித ரித்யாதி); *மயர் வற மதிநல மருளப்பெற்றவர் அவன் பெருமையைக் கரைகண்டு, ஸௌ லப்யத்தைக் கரைகாண மாட்டாதே (௪) "எத்திறம்!" என்று மோஹிக் கையாலே, அவன் பெருமை யறிவாருண்டென்று கருத்து. (அங்ஙனன்றி யே) என்றது - தாழ்மையில்லாத மாத்ரமன்றியே என்றபடி. (இவனறி வித்து) என்றது - "இவன் ஸர்வாதிகன்" என்று ருஷிகள் வாக்யங்களா லும் அதி மாநுஷ சேஷ்டிதங்களாலும் அறிந்து லோகத்தார்க் கறிவித்துத் திரிகிற என்றபடி. அன்றிக்கே, தானே இவர்களுக்கு சதுர்ப்புஜத்வாதிக ளாலே பரத்வத்தை யறிவிக்க அறிந்து திரிகிற வென்னுதல். இரண்டாத்

(க) உ-௨-௩.          (உ) தி-வாய்-௬-௬-௪.
(௩) சாந்தோ-௩-௧௪.   (௪) தி-வாய்-௧-௩-௧

நத்தாலும் - தன் பெருமையறிந்தவர்க்கே தாழ்மை செய்தானென்றதாய்த்து. தூதுபோவானை "தூதன்" என்னாதே, "வேந்தர்" என்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவனிப்படி யித்யாதி). ... ... (௧)

மூ.—செறுந் திண் டிமிலேறுடைய பின்னை
பெறுந்தண் கோலம் பெற்றாரூர்போல்
நறுந்தண்டீன் தேனுண்ட வண்டு
குறிஞ்சி பாடும் கூடலூரே. (௨)

| பதம். | உரை. | பதம் | உரை |
|---|---|---|---|
| செறும் | மேல்விழாநிற்பனவாய் | பெற்றார் | லபித்தவரான க்ருஷ்ணனுடைய |
| திண் | பலிஷ்டங்களான | ஊர் | திவ்யதேசமானது, |
| திமில் | முசுப்புக்களையுடைய | நறு | பரிமளமுடைத்தாய் |
| ஏறு | ருஷபங்களை [யான | தண் | குளிர்ந்தும் |
| உடைய | பந்தயமாக வுடைய | தீன் | போக்யமுமான |
| பின்னை | நப்பின்னைப்பிராட்டியினுடைய | தேன் | மதுவை |
| | | உண்ட | பாநம்பண்ணுகின்ற |
| பெறும் | அவளை யெறத்தகுந்ததாய் [படியான | வண்டு | வண்டுகளானவை |
| | | குறிஞ்சி | குறிஞ்சியென்னும் காநத்தை |
| தண் | கண்டார்கண் குளிரும் | பாடும் | பாடாநின்ற |
| கோலம் | அழகை | கூடலூர். | (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (செறும்) எதிரிகள்மேலே செறுநிற்பனவாய், திண்ணிதான கழுத்துக்களையுடைய ருஷபங்களுடைய. (பின்னைபெறுந்தண்கோலம் பெற்றாரூர்போல்) நப்பின்னைப்பிராட்டி ஒருத்திக்குமேயாய் - வேறோராஸ்ரயத்தில் கிடவாதபடியான, அழகை லபித்துப் பெறுப்பேறு பெற்றானாய் அவன் வர்த்திக்கிற தேசம் போலே;

நறுவிதாய்க் குளிர்ந்து இனிதாயிருந்துள்ள தேனைப் பாநம்பண்ணின வண்டுகள், உள்ளுப்புக்க த்ரவ்யம் இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே, காலநியதி பாராதே எப்போதுமொக்க குறிஞ்சி என்கிற பண்ணைப்பாடா நிற்குமாய்த்து. ... ... ... (௨)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (செறுமித்யாதி) *தாம் தம்பெருமை அறியாமைக்குத தூதுபோன வளவன்றியே, ஓரிடைச்சிக்காகத் தன்னைப் பேணாதே கருமாரி பாயத்துடங்கினானென்கிறாரென்று ஸங்கதி.

(செறுநிற்பனவாய்) என்றது - கிட்டாநிற்பனவாய் என்றாய், மேல் விழாநிற்பனவாய் என்றபடி. "திமில்" என்றதினர்த்தம் (கழுத்துக்களை)

என்றது. உடையவென்றது - சிதிலமாக வென்னுதல்; சுல்கமாக வுடைய வென்னுதல். நப்பின்னையே பெறத்தக்கதாய், தண் - குளிர்ந்த, கண்குளிரப் பார்க்கத்தக்கதான, நப்பின்னையின் கோலத்தைப் பெற்றவரென்று சப்தார்த்தம் விவக்ஷித் தருளிச்செய்கிறார் (நப்பின்னை யித்யாதி). கீழ்வாக்ய விவரணம் (வேறித்யாதி).

"தீன்" என்றதினர்த்தம் (இனிதாய்) என்றது. ... ... (உ)

மூ.—பிள்ளை யுருவாய்த் தயிருண்டடியே
னுள்ளம் புகுந்த வொருவரூர்போல்
கள்ள நாரை வயலுள் கயல்மீன்
கொள்ளை கொள்ளும் கூடலூரே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிள்ளையுருவாய் | பாலனுடையவடிவை யுடையராய்க் கொ[ண்டு] | ஊர் | தேசமானது, |
| தயிர் | தயிரை | கள்ளம் | வஞ்சகமான |
| உண்டு | அமுதுசெய்து | நாரை | நாரையென்னும் பக்ஷியானது |
| அடியேன் | தாஸபூதனான என்னுடைய | வயலுள் | கழனிகளிலே |
| உள்ளம் | ஹ்ருதயத்திலே | கயல்மீன் | கயலென்னும் மத்ஸ்யங்களை |
| புகுந்த | ப்ரவேசித்த | கொள்ளை | அபஹரியாநின்ற |
| ஒருவர் | அத்விதீயரான க்ருஷ்ணன் வர்த்திக்கிற | கொள்ளும் | |
| | | கூடலூர். | (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பிள்ளையுருவாய்த் தயிருண்டு) ஸர்வேஸ்வரனாயிருந்து வைத்து வெண்ணெயமுதுசெய்யப் பார்த்தால் இசைவாரில்லை; அதுக்காக, பிள்ளைவடிவுகொண்டு தயிரமுதுசெய்து, இப்படி ஆஸ்ரித ஸ்பர்சமுடைய த்ரவ்யத்தாலல்லது செல்லாத நீர்மையைக் காட்டி அநந்யார்ஹனாக்கி, விலக்காததோரவகாசம் பெற்றவாறே ஹ்ருதயத்திலேவந்து அவன் வர்த்திக்கிற தேசம்போலே.

(கள்ளமித்யாதி) அங்குத்தை நாரைகளானவை, காலிலே மத்ஸ்யங்கள் குத்தாநிற்கச்செய்தேயும், அவற்றிலோரபேக்ஷை யில்லாதாப்போலே அநாதரித்திருந்து, தான்கணிசித்த ஆமிஷம்வந்து கிட்டினவாறே மேல்விழுந்து கொள்ளைகொள்ளுமாய்த்து. யசோதைப்பிராட்டி தயிரையும் வெண்ணெயையும் சேமிக்கும்போது (க) * ஓராதவன்

(க) சிறிய திருமடல்-௩௨.

போலுறங்கி, அவள் போகின்றவாறே தான்கண்டபடி கொள்ளுமொள்ளுமாபோலே யாய்த்து இவற்றின் ஸ்வபாவமும். அவன் நகரக்ஷாபத்தை விளக்குமாபோலே யாய்த்து இவையும். ... ... (௩)

அரு.—மூன்ரும்பாட்டு. (பிள்ளையித்யாதி) *தாந் தம்பெருமை யறியாமைக்கு நீளாதேவியான நப்பின்னைக்காகத் தன்னைப் பேணுமையே யன்றிக்கே, ஒரு சிறுப்பிள்ளையாய் கள்ளத்தனத்தாலே தயிருண்டு என்னுள்ளம் புகுந்தானென்கிருரென்று ஸங்கதி.

(இசைவாரில்லை) ப்ராப்த சேஷியென்று ஸம்மதிப்பா ரொருவருமில்லை யென்கை.

நாரையின் கள்ளத்தனத்தை விவரிக்கிறா (அங்குத்தை யித்யாதி). நாராயணன் படியாய்த்து நாரைகளின்படியு மென்கிருர் (யசோதை யித்யாதி). (ஓராதவன் போல்) அறியாதவன்போ லென்கை.... (௩)

மூ.—கூற்றே ருருவில் குறளாய் நிலநீ
ரேற்ரு னெந்தை பெருமானூர்போல்
சேற்றே ருழவர் கோதைப் போதூண்
கோற்றேன் முரலும் கூடலூரே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கூறு | சொல்லுகைக்கு(கொள்ளுகைக்கு) | ஏர் | ஏர்கட்டி உழவல்ல |
| ஏர் | தகுதியான | உழவா | கர்ஷகருடைய [ரான |
| உருவில் | வடிவையுடைய | கோதை | மயிர்முடியிலே வைக்கப்பட்ட |
| குறளாய் | வாமநனுய்க்கொண்டு | போது | புஷ்பங்களிலேயுள்ள தேனை |
| நிலம் | பூமியை | | |
| நீரேற்ருன் | தாநம்வாங்கினவனுய் | ஊண் | உண்ணுநிற்பதாய் |
| எந்தை | எனக்கு ஸ்வாமியாய் | கோல் | சோலைகளிலே வாஸம் பண்ணுகின்ற |
| பெருமான் | என் ஸ்வாமியான க்ருஷ்ணனுடைய | தேன் | வண்டுகளானவை |
| ஊர் | ஊரானது, | முரலும் | பாடாநின்ற |
| சேறு | சேறுகளிலே | | கூடலூர். (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (கூற்றேரித்யாதி) "மமேதம்- மமேதம்" என்னுமபேக்ஷையுடைய வாமநவேஷத்தைப் பரிக்ரஹித்து என்னுதல்; அன்றியே, கண்டாரடைய நலும் "இதொருகுறள் வடிவிருக்கும் படியே!" என்று கூறப்பட்ட வடிவையுடையனு யென்னுதல். தன்னதல்லாதகொன்று பெற்ருப்போலேயிருக்க, பூமிப்பரப்படைய நீரே

ற்று அச்செயலாலே என்னை எழுதிக்கொண்ட என்குலநாதனுனவன் வர்த்திக்கிற தேசம்போலேயிருந்தது.

(சேற்றேரித்யாதி) மிக்க சேறுகளிலே ஏரை நடத்தவல்லராயிருந்துள்ள உழவருடைய மயிர்முடியில் வைத்தமாலையில் பூக்களிலே யுண்டான மதுவைப பாநம்பண்ணின வண்டுகளானவை, மரத்திலே நின்றலர்ந்த போதைச்செவ்வியிலே மதுபாநம் பண்ணினதிற்காட்டிலும், இவர்கள் குழலிற்போதைச் செவ்வியிலே மதுபாநம்பண்ணி ஆளத்தி வையாநிற்கும். (கோல்தேன்) சோலையிலே படிந்த வண்டென்றபடி. ... ... ... ... ... ... (௪)

---

அரு.—நாலாம்பாட்டு. (கூற்றேரிதயாதி). பிள்ளையாய் கள்ளத்தனத்தால் தயிருண்டு அடியேனுள்ளம் புகுந்ததிலும், தன்னை இரப்பாளனுக்கினத்தாலே தம்பெருமை யறியாரென்னுமது ஸ்பஷ்டமாக அறியலாமென்கிறுரென்று ஸங்கதி.

கூறுகைக்கு-"தேஹி (தேஹி)" என்று கேட்கைக்கு, ஏர் - தகுதியான, உரு - ப்ரஹ்மசாரி வேஷத்தையுடைய, குறளாய் என்று சப்தார்த்தம் விவக்ஷித்துத் தாத்பாய மருளிச்செய்கிறுர் (மமேத மித்யாதி) . (௪)

மூ.—தொண்டர் பரவச்சுடர் சென்றணவ
அண்டத்தமரு மடிகளூர்போல்
வண்டலலையுள் கெண்டை மிளிரக்
கொண்ட லதிரும் கூடலூரே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டர் | ஆஸ்ரிதரானவர்கள் | வண்டல் | வண்டல்கள் பாய்ந்திருப்பதாய் |
| பரவ | ஸ்தோத்ரம் பண்ணுகிறக, | அலையுள் | அலைகளையுடைத்தான நீர்நிலங்களிலே |
| சுடர் | ஸூர்ய மண்டலத்தை (திருமேனியானது) | கெண்டை | கெண்டைமத்ஸ்யங்களானவை |
| சென்று | கிட்டி | | |
| அணவ | ஸ்பர்சிக்கும்படியாக | மிளிர | (தன்னொளியாலே) மின்னுகிற்க (அதைக் கண்டு) |
| அண்டத்து | ஆகாசமெல்லாம் | | |
| அமரும் | வ்யாபித்திருக்கிற | | |
| அடிகள் | ஸ்வாமியான க்ருஷ்ணனுடைய | கொண்டல் | மேகங்களானவை |
| | | அதிரும் | கர்ஜநம்பண்ணுகின்ற |
| ஊர | ஊரானது. | கூடலூர | (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தொண்டரித்யாதி) (௧) "ஸ்ஸ்ஷ்ஜைஸ்ஸ்ரா ஜாஸி - ஸங்க்கைஸ்ஸராணும்" என்கிறபடியே ஆஸ்ரிதரானவர்கள் திரண்டேத்த, திருமேனியில் ஏகதேசமானது ஆதித்யபதத்தளவிலே சென்று ஸ்பர்சிக்க, ஆகாசாவகாசமுள்ள இடமடையத் தன்திருமேனியாலே பாரித்த ஸ்வாமிகள் வர்த்திக்கிற ஊர்போலே. (அண்டத்தமரும்) அண்டபித்தியிலே செல்ல வளர்ந்த வென்னுதல்.

(வண்டலித்யாதி) வண்டலலேமிக்கிருந்துள்ள நீர் நிலங்களிலே கெண்டையானது செருக்காலே மிளிர. (கொண்டலதிரும் கூடலூரே) உடம்பில் புகரைக்கண்ட மேகமானது தன்னுடம்பின் மின்னைக் கொண்டு, அதுக்கநந்தரமான முழக்கத்தை முழங்காநிற்குமாய்த்து. நீர் விழுகிறபோது இங்கே கண்டு, கார்யகாலத்திலே அங்கே கண்ட ஸ்ரீவாமநனைபபோலே யாய்த்து இவையும. ... ... (௫)

அரு.— அஞ்சாம்பாட்டு. (தொண்டரித்யாதி) கையில் நீர்விழுந்த உடனே, அல்பனைப்போலே, கார்யம்பெற்ற ஸந்தோஷாதிசயத்தாலே ஆகாசத்தை எட்டினதும் - தம் பெருமையைத் தாமறியாமைக்கு ஸூசகமென்று விவக்ஷித்து, த்ரிவிக்ரமன்படியையு மநுஸந்திக்கிறரென்று ஸங்கதி. ஏகரூபனையிருப்பான் இத்தனை யுகந்து பெருக்கையும் பெருமை யறியாமைக்குடலிறே.

"சுடரை" திருமேனி, சென்றணவ என்றத்யாஹாரம் திருவுள்ளம் பற்றி யருளிச்செய்கிறர் (திருமேனியி லித்யாதி). (பாரித்த)-வ்யாபித்த.

வண்டலிட்டிருக்கிற, அலையுள் - ப்ரசுரமாக அலைகளையுடைய, நீர் நிலத்தி லென் றருளிச்செய்கிறர். (வண்டலித்யாதி). ... ... (௬)

மூ.—தக்கன்வேள்வித் தகர்த்ததலைவன்
துக்கந்துடைத்த துணைவரூர்போல்
எக்கலிடு நுண்மணல்மேலெங்கும்
கொக்கின் பழம் வீழ் கூடலூரே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| தக்கன் | தக்ஷ ப்ரஜாபதியினு | தலைவன் | தன்னை ப்ரதாநனுக |
| வேள்வி | யாகத்தை [டைய | | அபிமாநித்திருக்கி |
| தகர்த்த | அழித்தவனாய், | | ற ருத்ரனுடைய |

(௧) விஷ்ணுதத்வம்

| | | | |
|---|---|---|---|
| துக்கம் | துக்கத்தை | எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| துடைத்த | போக்கின | கொக்கின் ப | மாம்பழங்களானவை |
| துணைவர் | ஆபத்ஸகனான க்ருஷ்ணன் வர்த்திக்கிற | ழம் | |
| ஊர் | தேசமானது, [ற | வீழ் | விழாநின்ற |
| எக்கல் இடு | வண்டல் ஓடியிருக்கி | கூடலூர். | (௬) |
| நுண் மணல் மேல் | சிறு மணற்களின்மேலே | | |

வ்யா.—ஆறும்பாட்டு. (தக்கனித்யாதி) "दक्षाध्वरध्वंसक् - தக்ஷாத்வர த்வம்ஸன்" என்னக்கடவதிறே ருத்ரனை; "எல்லாரையும் அழிக்கின்றானே மேலாகவேணும்" என்று அபிமாநித்திருக்கிறவனுடைய துக்கத்தைப் போக்கின ஆபத்ஸகனானவன் வர்த்திக்கிற ஊர்போலே யிருந்தது.

(எக்கலித்யாதி) வண்டலிட்ட நுண்ணிய மணல்களிலே மாம்பழங்கள் விழுந்து சேரக்கிடக்கிறபோது, பழுக்கைக்குச் சேரப்பதித்து வைத்தாப்போலே யிருந்ததாய்த்து. ... ... ... (௬)

அரு.—ஆறும்பாட்டு. (தக்கனித்யாதி) தம் பெருமையறியாதே இந்த்ரனுக்காக இரப்பாளனாய் அது பெறாத் திருவுடம்பு பூரித்த வளவன்றிக்கே. யஜ்ஞ விக்ககரனாய் "எனக் கெதிரில்லை" என்றிருந்து தம்மையும் நிர்ஜிதராம்படி பண்ணினவன் சாபம் தீர்த்ததும் ஒரு பெருமை யறியாமைக்குடலென்று அத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

அவன் தன்னை "தலைவன்" என்றெண்ணி யிருக்கவும், அவனுக்குத் தலைவனான தன் பெருமை பாராதே அவன் துக்கமே பார்த்தென்கை. இத்தால் - இச்சேதநரெத்தனை துர்மாநிகளாகிலும் தன்னீச்வரத்வப் பிடாராலே நிக்ரஹிக்கமாட்டாதே, இவர்களாபத்துக்கு செப்பேடாக உதவுகைக்கு இவனைப்போலில்லை என்றதாய்த்து.

"எக்கலிடு நுண்மணல்" என்று விசேஷிக்கையாலே - சில கொக்கின் பழங்கள் விழ, மேல் எக்கலிட, மீளவும் விழவும் அதின்மேலே எக்கலிட, [இங்ஙனிருப்பது தோற்றுகையாலே அத்தை யருளிச்செய்கிறார் (பழுக்கைக்கித்யாதி). ... ... ... ... ... ... (௬)

மூ.—கருந்தண்கடலும் மலையு முலகும்
அருந்து மடிகளமருமூர்போல்
பெருந்தண் முல்லைப் பிள்ளை யோடிக்
குருந்தம் தழுவும் கூடலூரே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கரு | நீலவர்ணமாய் | ஊர் | ஊரானது, |
| தண் | குளிர்ந்திருந்துள்ள | பெரு | பெருத்தும் |
| கடலும் | ஸமுத்ரங்களையும் | தண் | குளிர்ந்துமிருக்கிற |
| மலையும் | பர்வதங்களையும் | முல்லைப்பிள் | முல்லைக் கொடியான |
| உலகும் | (மற்றுமுள்ள)லோகங் களையும் | ளை | து [த்து |
| | | ஓடி | எங்குமொக்க வ்யாபி |
| அருந்தும் | அமுதுசெய்யாநின்ற | குருந்தம் | குருந்தமரத்தை |
| அடிகள் | ஸ்வாமியான ஸர்வே ச்வரன் [நின்ற | தழுவும் | மூடும்படியாக ஸம்ச் லேஷித்திருக்கிற |
| அமரும் | நித்யவாஸம் பண்ணு | கூடலூர். | (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (கருந்தண்) கறுத்து ச்ரமஹரமாயிருந் துள்ள கடலும், பூமிக்கு ஆணியடித்தாப்போலே நிற்கிற பர்வதங்க ளும், மற்றுமுண்டான லோகங்களும், இவற்றை யடையக் கட்டளை குலையாதபடி புஜித்த ஸ்வாமியானவன், இன்னுமிங்ஙனொத்த ஆபத் துக்களைப்போக்கி ரக்ஷிப்பதாகப் பொருந்தி வர்த்திக்கிற தேசம்போ லே யிருந்தது.

(பெருந்தணித்யாதி) பெருத்து ச்ரமஹரமாயிருந்துள்ள முல் லைக்கொடியானது ஓடி குருந்தை முட்டாக்கிடப் படராநின்றுள்ள.

---

அரு.—ஏழாம்பாட்டு. (கருமிதயாதி) ஒரு துரபிமாநியான ருத்ரன் துக்கத்தைப் போக்கினவளவன்றிக்கே, மண்ணும் கல்லுமான லோகத் தை எல்லாம் தன்வயிற்றிலே வைத்துத் தன் ஸௌகுமார்யத்தைப் பா ராதே ரக்ஷித்தவனென்றருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"உலகு மருந்துமடிகள்" என்ன வமைந்திருக்க * கடலும் மலையும் சொல்லுவானென்?, கடலுக்குக் கருமையையும் தண்மையையு மிட்டதுக் குத் தானும் கருத்தென்னென்கிற சங்கையிலே, கடல் கலங்காதே இருந்த படியே யிருக்கும்படியும், மலையானது சலியாதே ஆணியடித்தாப்போலே இருந்தபடியே வயிற்றிலே வைத்தானென்று தோற்றுகைக்காக என்றும் விவக்ஷிதது, மலைக்குமொரு விசேஷண மிட்டருளுகிறார் (பூமிக்கித்யாதி).

"பிள்ளை" - பெண்பிள்ளையாய், அதுபோன்ற கொடியென்று மரு ளிச்செய்கிறார் (முல்லைக் கொடியானது) என்று. ... ... (எ)

மூ.—கலைவாழ் பிணையோ டணையும் திருநீர்
மலைவாழெந்தை மருவு மூர்போல்
இலைதாழ் தெங்கின் மேல் நின்றிளநீர்
குலைதாழ் கிடங்கின் கூடலூரே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கலை | ஆண்மானானது | தாழ் | தழைத்திருக்கிற |
| பிணையோடு | பெண்மானோடு | இலை | இலைகளையுடைய |
| அணை | சேர்ந்து | தெங்கின்மேல் | தென்னை மரங்களின் மேலே |
| வாழும் | வாழாநின்ற | நின்று | இருக்கிற [வை |
| திருநீர்மலை | திருநீர் மலையென்னும் திவ்யதேசத்திலே | இளநீர்க்குலை | இளநீர்க்குலைகளான |
| வாழ் | ஸுகமாக எழுந்தருளியிருக்கிற | தாழ் | (தன்மேல்) தாழ்ந்திருக்கிற |
| எந்தை | என்ஸ்வாமியானவன் | கிடங்கின் | வெற்றிலைத்தோட்டங்களையுடைய |
| மருவும் | பொருந்தி வர்த்திக்கிற | கூடலூர். | (அ) |
| ஊர் | திவ்யதேசமானது, | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (கலைவாழ்) கலைகளானவை, பிணையோடே - மானோடே, அணைந்து வாழாநின்றுள்ள திருநீர்மலையைத் தனக்கு வாஸஸ்தாநமாகக் கொண்டு வர்த்திக்கிற வென் ஸ்வாமியானவன்; அத்தேசமும் தனக்குண்டாயிருக்க, பொருந்தி வர்த்திக்கிற தேசம் போலே யிருந்தது.

(இலைதாழ்) படர்ந்த இலைகளையுடைத்தான தெங்குகள் கிடங்கின்கரையிலே நிற்கும்; அவற்றிலுண்டான இளநீர்க் குலைகளானவை தாழ்ந்து நிற்கிறபோது, கிடங்கை இளநீராலே நிறைந்த இலையாலே மறைத்துவைத்தாப்போலே யிருக்குமாய்த்து. ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (கலையித்யாதி) இந்தப்ராக்ருதமான லோகத்தை வயிற்றிலே வைத்து நோக்கினவளவன்றிக்கே, "இவை ஈடுபடுமோ" என்று நிற்பதிருப்பது கிடப்பது நடப்பதாய் திருநீர்மலையிலப்படி கிடந்தான் தன் பெருமை யறியாதே யென்கிறுரென்று ஸங்கதி. (க) "நின்றிருந்தான் கிடந்தான் நடந்தானகிடம் மாமலையாவது நீர்மலையே" என்னக்கடவதிறே.

புருஷோத்தமனை தான் ஸ்த்ரீப்ராயரான இவர்களோடே ஒரு நீராகக் கலக்கவேணு மென்று மிதுக்குக் குருகுலவாஸம் பண்ணவேணுமென்று திருநீர்மலையிலே வந்தானென்று தோன்ற, அங்குள்ள திர்யக்குக்களை விசேஷிக்கிறுரென்று உட்கொண்டு தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அத்தேச மித்யாதி). அங்குப் பலபடியிருந்தும் போராமே இங்கும் வந்தானே என்று கருத்து.

கிடங்கு - வெற்றிலைக்கொடிக்கால். ... .. ... (அ)

---

(க) உ-ஈ-க.

மூ.—பெருகு காத லடியேனுள்ள
முருகப் புகுந்த வொருவரூர்போல்
அருகு கைதை மலரக் கெண்டை
குருகென் றஞ்சும் கூடலூரே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பெருகு | வளராநின்ற | அருகு | ஸமீபத்திலே |
| காதல் | ஆசையை யுடையன | கைதை | தாழையானது |
| அடியேன் | அடியேனுடைய | மலர | புஷ்பியாநிற்க(அதைக்கண்டு) |
| உள்ளம் | மநஸ்ஸானது | | |
| உருக | கரையும்படியாக | கெண்டை | கெண்டை யென்னும் மத்ஸ்யமானது |
| புகுந்த | ப்ரவேசித்த | | |
| ஒருவர் | அத்விதீயனான ஸர்வேஶ்வரன் வர்த்திக்கிற | குருகு என்று | நாரைப்பக்ஷியென்று எண்ணி |
| | | அஞ்சும் | பயப்படாநின்ற |
| ஊர் | திவ்யதேசமானது, | கூடலூர். | (௯) |

வ்யா.— ஒன்பதாம்பாட்டு. (பெருகுகாதல்) நாட்செல்ல நாட்செல்ல ஆற்றுப்பெருக்குப்போலே பெருகாநின்றுள்ள காதலையுடைய அடியேனுடைய ஹ்ருதயமானது உருகும்படியாகப் புகுந்த அத்விதீயனானவன் வர்த்திக்கிற தேசம்போலே யிருந்தது.

அருகே தாழையானது மலர, கெண்டைகளானவை அதைக் கண்டு குருகென்றஞ்சாநிற்கு மாய்த்து. இரண்டும் நித்யமாயிருக்கச் செய்தே, பயமும் நித்யமாய்ச் செல்லாநிற்குமாய்த்து. ... (௯)

---

அ௫.—ஒன்பதாம்பாட்டு. (பெருகித்யாதி) தம்பெருமை பாராதே "அடியேனுள்ளம் புகுந்த வொருவர்" என்றநுஸந்தித்திருந்தார்-மூன்றாம் பாட்டில்; அது உயிர்ப்பாட்டாகையாலே அதுவே திருவுள்ளத்திற்கிடந்து, மீளவும் அதிலுண்டான ஈடுபாடுதோன்ற அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"அஞ்சாநிற்கும்" என்கிறதென், ஒருகால் கண்டஞ்சினால் "இது குருகன்று" என்று அஞ்சாதிருக்கவும் கூடுமே யென்னில் (இரண்டு மித்யாதி). குருகுக்கும் கைதைக்குமுள்ள ஸாதர்ம்யாதிசயத்தாலே பயம் மாறுமதென்று கருத்து.... ... ... ... ... ... (௯)

மூ.— சாலிப்பெரு நீ ரெண்ணான் கண்ணானை
பேலிக திரபுமை கூடலூர்பேல

கோவைத்தமிழால் கலியன்சொன்ன
பாவைப்பாடப் பாவம்போமே (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காவி | கருநெய்தல்போலவும் | கூடலூர்மேல் | கூடலூரென்னும்திவ்யதேச விஷயமாக |
| பெரு | ஸம்ருத்தமான | கோவை | லக்ஷணக்ரமத்தை யுடைத்தான |
| நீர் | ஜலத்தையுடையஸமுத்ரம்போலவும் | தமிழால் | தமிழ்பாஷையினாலே |
| வண்ணன் | வர்ணத்தை யுடையனான | கலியன் | ஆழ்வார் |
| கண்ணன் | க்ருஷ்ணனானவன் | சொன்ன | அருளிச்செய்த |
| மேவி | பொருந்தி | பாவை | பாசுரங்களை |
| திகழும் | உஜ்ஜ்வலனாய் நித்யவாஸம்பண்ணுகிற | பாட | பாடவே |
| | | பாவம் | பாபங்களானவை |
| | | போம் | நசித்துவிடும். (கO) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (காவியித்யாதி) காவிபோலேயும் பெருங்கடல்போலேயு மிருந்துள்ள வடிவையுடைய க்ருஷ்ணன் திருவுள்ளத்தோடே பொருந்தி உஜ்ஜ்வலனாய் வர்த்திக்கிற திருக்கூடலூர் மேல். (கோவைத்தமிழால்) அடைவே, ஆழ்வா ரருளிச்செய்த. (பாவைப்பாடப் பாவம்போமே) "பால்குடிக்க நோவு போம்" என்பாரைப்போலே. ... ... ... ... ... ... (கO)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அரு.—பத்தாம்பாட்டு. (காவியித்யாதி) காவிபோலே - கருநெய்தல் போலே, "கோவை -" கோக்கையாய், லக்ஷணக்ரமத்திலென்று யருளிச்செய்கிறார் (அடைவே) என்று. "பாட" என்றபதத்தாலே ஸூசிதமான ஸுலபதையை யுட்கொண்டருளிச்செய்கிறார் (பாவித்யாதி). ... (கO)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அஞ்சாம்பத்தில் இரண்டாம்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# அஞ்சாம்பத்து மூன்றாந் திருமொழி

## வென்றிமா மழு ப்ரவேசம்.



வ்யா. — "அடியேனுள்ள முருகப்புகுந்த வொருவரூர்போல்" என்று தம்முடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்த உபகாரத்தை அநுஸந்தித்து ஹ்ருஷ்டரானார் - கீழ்த்திருமொழியிலே; அவ்விருப்புத்தான் பேறாய்த்தோற்றுவது - திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப்பண்ணி வர்த்திக்கப் பெறிலிறே; அது பெருமையாலே, க்லேசத்துக்குடலாய்த் தோற்றிற்று; - முதலிலே செய்யாதொழிந்திருந்ததல்ல, குறைவறச்செய்ததல்ல, ஒருவாசி செய்தருளப் பார்த்தால் அது முடியச்செய்து தலைக்கட்ட வேண்டாவோ, ஆனபின்பு, த்வத்ப்ராப்தி ப்ரதிபந்தகத்தைப்போக்கி தேவர் திருவடிகளிலுண்டான கைங்கர்யத்தை நான் பெறவேணும்படி என் பக்கலிலே க்ருபைபண்ணி யருளவேணு மென்கிறார். ... ... ... (*)

---

அரு.—வென்றிமாமழுவின் ப்ரவேசம்.—(அது பெருமையாலே) திருக்கூடலூரில் அது பெருமையாலே யென்கை. க்லேசத்துக்கு உடலாவானென்னென்ன வருளிச்செய்கிறார் (முதலிலே யித்யாதி). (வாசி)நாட்டாரில் வாசி. (வேண்டாவோ) என்ற வநந்தரம், "என்றெண்ணிக் கூடலூரில் பெறவிட்டால் திருவெள்ளறையில் பெறலாம்" என்று கூட்டுவது. (*)

மூ.—

வென்றி மாமழுவேந்தி முன் மண்மிசைமன்னரை மூவெழுகால் [யே
கொன்ற தேவ நின் குரைகழல் தொழுவதோர்வகையெனக் கருள்புரி
மன்றில்மாம்பொழில்நுழைதந்து மல்லிகைமௌவலின்போதலர்த்தித்
தென்றல்மாமணம் கமழ்தரவரு திருவெள்ளறை நின்றானே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தென்றல் | தென்றல்காற்றானது | நுழைதந்து | ப்ரவேசித்தும் |
| மன்றில் | இடை வெளிகளிலேயுள்ள | மல்லிகை | மல்லிகையி னுடையவும் |
| மாம்பொழில் | மாந் தோட்டங்களி[லே | மௌவலின் | முல்லைகளுடையவும் |

| | | | |
|---|---|---|---|
| போது | புஷ்பங்களை | மழு | பரசுவென்னும் ஆயுத |
| அலர்த்தி | விகஸிப்பித்தும் | ஏந்தி | தரித்து [த்தை |
| | த்திருக்கிற | மண்மிசை | பூலோகத்திலுள்ள |
| | ந்தை | மன்னரை | ராஜாக்களை [றை |
| | தில் பரிமளி | மூவெழுகால் | இருபத்தோரு தலைமு |
| | ்கைக்காக | கொன்ற | கொன்ற |
| | வாநின்ற | தேவ | தேவனே! |
| | ்ளறை என் | நின் | உன்னுடைய |
| | திவ்யதேசத்தி | குரை | சப்தியாநின்ற |
| | | கழல் | திருவடிகளை [க |
| | ளியிருக்கும் | தொழுவது | ஆச்ரயிக்கும்படியா |
| | மியே! | ஓர்வகை | ஒரு ப்ரகாரத்தை |
| | த்திலே, | எனக்கு | எனக்கு |
| | மாய் | அருள்புரி | க்ருபைபண்ணாய்.(க) |
| | ன | | |

ாட்டு. (வென்றியித்யாதி) பூமிக்கு ராஜாக்களால்
கி ரக்ஷித்த அருமை வேணுமோ என்னுடைய
பாக்கி என்னை அடிமைகொள்ளுகைக் கென்கி
ராதியைப்போக்கப் புக்கது இன்றே. (வென்றி

யித்யாதி) ஆரேனும் கையிலே கொடுக்கிலும் வெற்றியைப் பண்ணிக் கொடுக்கக்கடவதாய், எதிரிக ளளவல்லாதபடியான பெருமையை யுடைத்தாயிருக்கிற மழுவை, அழகுக்குத் தரிப்பாரைப்போலே தரித்து, முன்பொருநாள், பூமியில் ராஜாக்களை இருபத்தொருபடிகால் வாரி யறுத்துப் பொகட்டு, ப்ரதிபந்தகத்தைப் போக்கின விது பிறர்க்கு உபகரித்தா யாகையன்றிக்கே உன்பேறென்னு மிடம் வடிவில் புகரிலே தோற்றும்படி யிருக்கிறவனே! (க) "ఐజ్వర్యః ప్రముమోదహ - விஜ்வரः ப்ரமுமோதஹ" என்கிறபடியே. அப்போது அதுசெய்தமை யுண்டு, உமக்குச் செய்யவேண்டுவதென்னென்ன; (நின்னித்யாதி) உன்னுடைய, ஆபரணங்களாலே அலங்க்ருதமாய் அவற்றால் வந்த த்வநியை யுடைத்தான திருவடிகளிலே, நான் என்னுடைய ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தி விசேஷத்தைப் பண்ணுவதொரு ப்ரகாரம் எனக்கலிலே க்ருபைபண்ணி யருளவேணும்.

---

(க) ரா-பால-க-அரு.

(மன்றிலித்யாதி) அவ்வூரில் பதார்த்தங்க ளடங்கலும் பார்த்த மாயாய்த்திருப்பது. தனக்காயிருக்குமதன்றி பிறர்க்காயிருக்கை யே தனக்குப் பேறாயிருக்கை. மன்றுகளிலே செறியப்பூத்துப் பழுங் களையுடைத்தான மாமரங்களிலேபோய்ப்புக்கு அதிலுண்டான பரிம ளத்தை வாஸித மாக்கிக்கொண்டு, மல்லிகை மௌவல் என்கிற இவற் றின் புஷ்பங்களை அலர்த்தி அவற்றிலுண்டான பரிமளத்தைத் தன் னுடம்பிலே ஏறிட்டுக்கொண்டு, தென்றலானது மிக்க பரிமளத்தை யுடைத்தாய்க்கொண்டு வர்த்திக்கிற திருவெள்ளறை நின்றானே! அவ்வூரிலுள்ளார்க்கு அபிமதஸித்திக்கு நின்றநிலையில்நின்றும் போக வேண்டாதபடி யன்றோ இருக்கிறது. சைத்ய ஸௌரப்ய ஸௌகந் தய மார்தவங்களை யுடைத்தாயிறே காற்றிருப்பது.

(௧) [పద్మకేసరసంస్పృష్టః- பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டः] தூரலான அம்சத்தைக் கழித்து பூத்தன்னிலும் ஸம்ஸர்க்கத்துக்கு மேற் பட ஆழ்விழியுமதன்றிக்கே யிருக்கை. [వృక్షాన్తర వినిస్సృతః - வ்ருக்ஷாந்தர விநிஸ்ஸ்ருதः] வெய்யிற்படப் பொறாத செல்வாலே சோலைக் குள்ளிட்டாய்த்து †வழிபோந்தது. (௨) [குன்றாடுபொழில் நுழைந் து] சந்தநகிரியிலே போய்ப்புக்கு. [கொடியிடையார் முலையணவி] கறுவினவிடத்திலே முகங்காட்டி. [மன்றாடு தென்றலுலா] அதுகை புகுந்த கர்வத்தாலே வெளிநிலத்திலே புறப்பட்டு உலாவாநின்றதாய்த் து. சேதநஸமாதியாலே சொல்லுகிறாராய்த்து. ... (௧)

அ௩.—முதற்பாட்டு. (வென்றியித்யாதி) "மாமழுவேந்தி" என்றும் "மூவெழுகால்" என்றும் விசேஷித்து விரோதி நிரஸநத்தை இப்போதரு ளிச்செய்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பூமிக்கித்யாதி). மன்ன ரைக்கொன்றது முன்னேயிருக்க, "முனை" என்று விசேஷித்ததுக்குக்காத் தருளிச்செய்கிறார் (நீசானித்யாதி) வாக்யார்த்த மருளிச்செய்கிறார் (ஆரே னுமித்யாதி). "தேவ" என்றதாலே - காந்திமத்தை தோற்ற வருளிச் செய்கிறார் (பிறர்க்கித்யாதி). மேலுக்கவதாரிகை (அப்போதித்யாதி).

(பதார்த்தங்களடங்கலும்) என்றது - பொழிலில் மரங்களோடு, கொ டிகளோடு, அவற்றைச் சூழ்விவரும் தென்றலோடு வாசியற எல்லாப்பதா ர்த்தங்களும்மென்கை மௌவல்-முல்லை. கமழ்தருஎன்னலாயிருக்க, "வரு" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அவ்வூரிலுள்ளார்க் கெத்யாதி).

(௧) ரா-கிஷ்-கி-௪-௭௧. (௨) பெரி-திரு-௫-௩-௩.
† (பா) இழிந்துபோந்தது.

காற்று எவ்வாகாரத்தால் அபிமதமென்ன வருளிச்செய்கிறார் (சைத்யேத்யாதி).

இது அபிமதமென்று கொண்டாடினருண்டோ வென்ன அருளிச்செய்கிறார் (பத்மேத்யாதி). "பத்ம - ஸம்ஸ்ருஷ்டஃ" என்றதே * கேஸரபதப்ரயோகத்தாலும், அதிலும் "ஸம்ஸ்ப்ருஷ்டஃ" என்றதே *ஸம்ஸர்க்கமாத்ரம் சொன்னத்தாலும் - பாஹ்யதள ஸம்பந்தமின்றிக்கே கேஸரங்களிலும் உள்ளில் தூள்படியும்படி, ஸம்பந்தியாதே வந்ததென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (துராலித்யாதி). துரால் - ருஜீஷம். அஸாரமென்றபடி. (செல்வாலே) செல்வத்தாலே. "எனக் கருள்புரியே" என்று கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கிற இவ்வாழ்வாருக்கு ஒரு நாயிகாதசையின்றிக்கேயிருக்க, காமுகர்க்கு அபிமதமான தென்றலின்படிகளைச் சொல்லுவானென்னென்ன; பெரியாழ்வார் திருப்பதிக்கு அதிசயமாக வர்ணித்தாப்போலே இவருமருளிச்செய்தாரென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (குன்றாடித்யாதி). (கறுவினவிடத்திலே) என்றதுக்கு-காற்று முலையில்புக, அத்தாலே முலைகளுக்கு நாயிகாந்தராவயவவிசேஷ ஸம்ஶ்லேஷ மிதுக்குண்டாய்த்தென்று கறுவுதல் வருமென்னும் விவக்ஷையாலே அருளிச்செய்தாரென்று கருத்து.‡ காற்றை, ஒரு மலையைக்கிட்ட, வேறொருமலைக்குக் கறுவுதல் வர, அது தீரப்பெற்றவாறே உலாவிற்றென்று சொல்லுகை சேருமோவென்ன வருளிச்செய்கிறார் (சேதநேத்யாதி). ... .. ... (௧)

மூ.—வசையில்நான்மறைகெடுத்தவம்மலரயற்கருளிமுன்பரிமுகமாய்
இசைகொள்வேதநூலென்றிவைபயந்தவனேயெனக்கருள்புரியே
உயர்கொள்மாதவிப்போதொடுலாவியமாருதம் வீதியின்வாய்த்
திசையெல்லாம்கமழும்பொழில்சூழ்திருவெள்ளறைநின்றானே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உயர்கொள் | ஆகாசத்தில் ஓங்கி வளராநின்ற [லே | சூழ் | சூழப்பட்ட |
| | | | திருவெள்ளறை நின்றானே! |
| மாதவி | குருக்கத்தி மரங்களி | வசை இல் | குற்றமற்றதான |
| போதொடு | அவை பூக்கும் காலங்களிலே(அணைந்து) | நால் மறை | நாலு வேதங்களையும் |
| | | கெடுத்த | போக்கடித்துக் கொண்டவனாய் |
| வீதியின்வாய் | வீதிகள்தோறும் | | |
| உலாவிய | ஸஞ்சரியாநின்ற | அம்மலர் | அந்தத் திருநாபீகமலத்திலே இருக்கிற |
| மாருதம் | காற்றானது | | |
| திசையெல்லாம் | திக்குக்களெங்கும் | அயற்கு | ப்ரஹ்மாவின் விஷயத்தில் |
| கமழும் | பரிமளியாநிற்பதாய் | அருளி | க்ருபைபண்ணி |
| பொழில் | சோலைகளாலே | முன் | பூர்வகாலத்திலே |

‡ இது ஸந்திக்தம்.

| | |
|---|---|
| பரிமுகமாய் ஹயக்ரீவனாய்க் கொண்டு | பயந்தவனே உண்டாக்கிக் கொடுத் த்தான |
| | தவனே! |
| இசைகொள் நல்ல த்வநியை யுடை | எனக்கு என்விஷயத்தில் |
| வேதம் வேதங்களென்ன | அருள்புரி க்ருபைபண்ணி யரு |
| நூல் சாஸ்த்ரங்களென்ன | ளாய். (உ) |
| என்று இவை என்கிற இவற்றை | |

வ்யா.— இரண்டாம்பாட்டு. (வசையில்யாதி) விப்ரலம்பாதி தோஷ ஸம்பாவனையில்லாத நாலுவேதத்தைக்கொடுத்து, (க) "𑌧𑌾𑌤𑌾 𑌯𑌥𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍 - தாதா யதாபூர்வ மகல்பயத்" என்று - "முன்பு போலே இவற்றையுண்டாக்கு" என்றுவிட, அவனும், வேதத்தை அஸுரர்கள் கையிலே பறிகொடுத்து (உ) "𑍇𑌵𑌦𑌾 𑌮𑍇 𑌪𑌰𑌮𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌾 𑌮𑍇 𑌪𑌰𑌮𑌂 𑌧𑌨𑌮𑍍 - வேதா மே பரமஞ் சக்ஷுர் வேதா மே பரமம் தநம்" என்று கண்ணும் கண்ணநீருமாய் நின்றுகூப்பிட; அவன்பக்கலிலே க்ருபையைப்பண்ணி. (அம்மலரயற்கருளி) அவன் தன்னதிகாரத்தில் குலையாதே நின்றுய்த்து அபேக்ஷித்தது. (முன்பரிமுகமாய்) "ஓராசார்யாநுவர்த்தநம் பண்ணிக்கேட்கவென்றால் இவனிருய்க்கும்" என்று தன்னைத் தாழவிட்டு ஹயக்ரீவனாய் நின்றுய்த்து உபதேசித்தது. ஸாரதியாய் நின்று உபதேசித்தாப்போலே யாய்த்து. (இசைகொள்) நல்லநாதத்தை யுடைத்தாயிருந்துள்ள வேதம், இதிஹாஸாதிகள், இவற்றையுண்டாக்கினவனே! என்பக்கலிலே க்ருபையைப்பண்ணி யருளவேணும். நூலென்று - சாஸ்த்ரங்களைச் சொல்லவுமாம். அன்றிக்கே, அல்லாத இதிஹாஸபுராணங்களைச் சொல்லிற்றனபோது, (ங) "𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍈𑌹𑌰𑍇𑌸𑍍𑌤𑌨𑍁𑌃 - தத்ஸர்வம் வைஹரேஸ்தநு:" என்கையாலே - அவர்களை சரீரமாகக்கொண்டு நின்று தான் சொல்லுகையாலே அவன் சொன்னனென்னத்தட்டில்லை.

(உயர்கொள்மாதவி) ஆகாசாவகாசமிட மடையும்படி வளர்ந்த குருக்கத்தியிலே, காலங்களிலே. (வீதியின்வாய்) வீதியிலே. (உலாவியமாருதப்) ஸஞ்சரியாநின்றுள்ள காற்றானது திக்குக்கள்தோறும் கமழாநிற்பதாய், பொழிலாலே சூழப்பட்டிருப்பதாய். (உ)

---

அரு —இரண்டாம்பாட்டு. (வசையில்யாதி) ஸ்ரீபரசுராமனாய் விரோதிகளைக் கிழங்கெடுத்தவளவன்றிக்கே, அதிகாரிபுருஷனை அயனுக்குக் கண்கொடுத்தாப்போலே வேதப்ரதாநம் பண்ணினவனல்லேயோ, தத்ப்ர

(க) தை-நா-ரா-க-௲அ. (உ) (ங) வி-பு-க-உ-உ-௱அ.

திபாத்யமான கைங்கர்யத்தை ஆசைப்பட்ட எனக்கு மத்தைத் தந்தருள வேணுமென்கிறுரென்று ஸங்கதி.

"அயற்கு" என்னுதே, "அம்மலர்" என்று விசேஷிக்கையாலே - தாய்கையில் குழந்தை என்றாப்போலே, திருநாபி கமலத்தில் பிறந்தபோதையில் செவ்வியழியாத சைசவம் தோற்றுகையாலே, அவன் கெடுக்கும்போது முன்பவன் கையில் கொடுத்தாருண்டாக வேணுமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறுர் (விப்ரலம்பேத்யாதி). "அயன்" என்றத்தாலே - லோக ஸஜாதிய ஜந்மராஹித்யம் விவக்ஷிதமாய், அப்படி யருளிச்செய்தது க்குக் கருத்தருளிச்செய்கிறுர் (அவனிதயாதி). வேதம் போனவுடனே கொடுத்தவனைத் தேடித்தரச்சொல்லி ப்ரார்த்தித்தான் சிசுவைப்போலே என்று கருசது. (சாஸ்த்ரங்களை) பகவச்சாஸ்த்ரங்களை. (அவர்களை) வ்யாஸாதிகளை

'வீதியின்வாய்" என்னவேணுமோ, "திசையெல்லாம்" என்றால் போராதோ வென்ன, அதுக்காக, உயர்கோள் மாதவிப்போதொடு - வீதியின்வாய்-உலாவின மாருதம், அவ்வளவில் நில்லாதே, திக்குக்களெல்லாம் வ்யாபித்ததென் றருளிச்செய்கிறுர் (ஆகாசேத்யாதி). (உ)

மூ.—வெய்யனாயுலகேழுடன் நலிந்தவனுடலக மிருபிளவாக்
கையில் நீளுகிர்ப்படையது வாய்த்தவனே யெனக்கருள்புரியே
மையினார் தருவராலினம்பாய வண்டடத்திடைக்கமலங்கள்
தெய்வநாறுமொண்பொய்கைகள் சூழ் திருவெள்ளறை நின்றானே.

| பதம். | உரை. | பதம். | உரை |
|---|---|---|---|
| மை ஆர் தரு | கறுப்புமிக்கிருந்துள்ள | உலகு ஏழ் | ஸப்தலோகங்களையும் |
| வரால் | மத்ஸ்யங்களுடைய | உடன் | ஏககாலத்தில் |
| இனம் | திரளானது | நலிந்தவன் | உபத்ரவித்த ஹிரண்யனுடைய |
| வண் | ஸுந்தரமான | | |
| தடத்து இடை | தடாகங்களிலே | உடல் | சரீரத்திலே யுள்ள |
| பாய | துள்ளிவிழாநிற்க, | அகம் | உள்ப்ரதேசமும் |
| கமலங்கள் | (அங்குள்ள) தாமரைப்பூக்கள் (அலர்ந்து) | இருபிளவா | இரண்டு கூறும்படி |
| | | கையில் | திருக்கைகளிலே |
| தெய்வம் | ஶ்லாக்யமாக | நீள் | நீண்டிருக்கிற |
| நாறும் | பரிமளியாநின்ற | உகிர் | நகங்களையே |
| ஒண் | ஸுந்தரமான | அது | அப்படிப்பட்ட |
| பொய்கைகள் | தடாகங்களாலே | படை | ஆயுதமாக |
| சூழ் திருவெள்ளறை நின்றானே! | | வாய்த்தவனே | பெற்றவனே! |
| வெய்யனாய் | அதிக்ரூரனாய்க்கொண்டு | | எனக்கருள்புரி. (௩) |

வ்யா.—மூன்றும்பாட்டு. (வெய்யனாயித்யாதி) மிக்க க்ரௌர்ய த்தையுடையனாய் ஸகலலோகங்களையு மொருகாலே நலிந்த ஹிரண்ய னுடைய சரீரமானது இரண்டு கூறும்படியாக, திருவாழியைக்கொண்டு கார்யம் செய்யப்பெறாதபடி அவன் வரம் பெற்றிருக்கையாலே திரு வுகிரே ஆயுதமாகக்கொண்டு வ்யாபரித்தவனே! (எனக்கருள்புரியே) என்னுடைய விரோதியைப்போக்கி என்பக்கலிலே க்ருபையைப் பண்ணி யருளவேணும்.

(மையித்யாதி) கறுப்பு மிக்கிருந்துள்ள வராலினமுண்டு, இவற் றினுடைய திரளானவை பூக்களைக் கிழித்துக்கொண்டு அழகிய தடா கங்களிலேபாய, அக்கமலங்கள் மணம் நாறாநின்றுள்ள பொய்கைகள் சூழ்ந்த திருவெள்ளறை நின்றானே. ... ... ... (௩)

---

அரு.—மூன்றும்பாட்டு. (வெய்யனாயிதயாதி) ப்ரஹ்மாவுக் கபேக்ஷித மான வேதப்ரதாநம் பண்ணுகைக்கு பரிமுகமா யிரண்டு வடிவுகொண்ட வளவன்றிக்கே, ஒரு சிறுக்கனுக்காக விரோதி கழிக்கவேண்டி அரிமுகமா யிரண்டுவடிவு கொண்டு நகாக்ரத்தாலே விரோதியைக் கழித்தவனல்லை யோ வென்கிறாரென்று ஸங்கதி.

உடலில், அகம் - அந்தஃப்ரதேசமுங்கூட, இருபிளவாக, கையில் நீண்ட உகிராகிற அப்படிப்பட்ட படை, வாய்த்தவனே- பல(ஃல)வத்தாம் படி பெற்றவனே என்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி தாத்பர்ய மருளி ச்செய்கிறார் (மிக்கவித்யாதி).

"இன்" - சாரியைச்சொல்லாய், "மையார்தரு" என்றதுக்கர்த்தம் (கறுப்பிதயாதி). வரால் - மத்ஸ்யம். "தெய்வம்" என்றது - திவ்யமென் றாய், ஶ்லாக்யமான நாறுகையைச் சொல்லுமென்கிறா (மணம் நாறாநின் றுள்ள) என்று ... ... .. ... ... ... (௩)

மூ.—வாம்பரியுகமன்னர்தமுயிர் செகவைவர்கட் கரசளித்த
காம்பினார் திருவேங்கடப் பொருப்ப நின் காதலையருளெனக்கு
மாம்பொழில்தளிர் கோதியமடக்குயில்வாயது துவர்ப்பெய்த
தீம்பலங்கனி தேனதுநுகர் திருவெள்ளறை நின்றானே. (௪)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாம்பொழில் | மாந்தோட்டங்களிலே | மடம் | பவ்யதையை யுடைத்தான |
| தளிர் | அவற்றின் தளிர்களை | குயில் | குயில்களானவை |
| கோதிய | கொந்தாநின்றுள்ள | வாயது | தமது வாய்களிலே |

| | |
|---|---|
| துவர்ப்பு | துவர்ப்பென்னும் ரஸத்தை |
| எய்த | அடைய (அந்த ரஸத்தை மாற்றுகைக்காக) |
| தீ | மதுரமான |
| பலங்கனி | பலாப்பழத்திலுள்ள |
| தேனது | மதுவை |
| நுகர் | பாநம் பண்ணுகின்ற |
| திருவெள்ளறை நின்றானே! | |
| வாம் | மேல்விழுந்து வராநின்ற |
| பரி | குதிரைகள் |
| உக | நசிக்கும்படியாகவும் |
| மன்னர்தம் | ராஜாக்களுடைய |
| உயிர் | ப்ராணன்களானவை |
| செக | அழியும்படியாகவும் செய்து |
| ஐவர்கட்கு | பஞ்சபாண்டவர்களுக்கு |
| அரசு | ராஜ்யத்தை |
| அளித்த | க்ருபை பண்ணினவனுய், |
| காம்பு ஆர் | மூங்கில்கள் நிறைந்த |
| திருவேங்கடப் பொருப்ப | திருவேங்கடமென்னும் திருமலையிலெழுந்தருளியிருக்குமவனே! |
| நின்காதலை | உன்விஷயமான பரமபக்தியை |
| எனக்கு | எனக்கு |
| அருள் | க்ருபைபண்ணியருளவேணும். (௪) |

வ்யா.— நாலாம்பாட்டு. (வாம்பரி) தாவிவாராநின்றுள்ள குதிரைகள் உக்கிப்போம்படியாக, அவற்றை மேற்கொண்டு தோற்றின ராஜாக்கள் முடியும்படி, பாண்டவர்களுக்கு முடியைக்கொடுத்த, பரிகரத்தையுடையவர்கள் தங்களையழியச்செய்து, பாண்டவர்கள் பக்கலிலே ஓரத்தைப்பண்ணின. (காம்பினூர்) மூங்கில்மிக்கிருந்துள்ள திருவேங்கடமாகிற மலையையுடையவனே! (நின்காதலையருளெனக்கு) தேவர் திருவடிகளிலுண்டான கைங்கர்யத்துக்கு பூர்வக்ஷணவர்த்தியான பரமபக்தியை எனக்குப் பண்ணியருளவேணும்.

(மாம்பொழில்) மாம்பொழிலிலேபோய்ப்புக்கு அதிலுண்டான தளிரைச் செருக்காலே தன்வாயாலே கோதின, மடக்குயிலானது - பெண்குயிலானது. (வாயது துவர்ப்பெய்த) "அத்தை ரஸாந்தரத்தையிட்டு மாற்றவேணும்" என்று, இனிய பலாப்பழத்திலே சென்று அதிலுண்டான தேனை புஜியாநின்றுள்ள. ... ... (௫)

---

அரு.—நாலாம்பாட்டு. (வாமித்யாதி) பக்தாக்ரேஸரரான ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்காக நரஸிம்ஹமா யுதவின வளவன்றியே, ராஜ்யார்த்திகளா யிருப்பாரிடத்திலும் பக்ஷபதித்து *ஆதியஞ்சோதி யுருவுகொண்டே தூத்யஸாரத்யாதிகளைப் பண்ணியருளி, அவ்வளவன்றிக்கே, த்ருஷ்டார்த்திகளுக்கு இஷ்டங்களைக் கொடுக்கவேணுமென்று ஸ்ரீவேங்கடாசலத்தில்

நின்று உதவினவனல்லேயோ, ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யோபயோகியானப்ரீதியைத் தந்தருள வேணுமென்கிறரென்று ஸங்கதி.

(அழியச்செய்து) என்ற வநந்தரம், அதில்லாத என்று கூட்டுவது.(ச)

மூ.—மானவேலொண்கண் மடவரல்மண்மகளழுங்க முந்நீர்ப்பரப்பில்
ஏனமாகியன்றிருநில மிடந்தவனே யெனக்கருள்புரியே
கானமாமுல்லைகழைக்கரும்பேறி வெண்முறுவல்செய்தலர்கின்ற
தேனின்வாய்மலர் முருகுகுக்கும் திருவெள்ளறை நின்றானே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கானம் | காட்டிலேயுள்ள | கண் | கண்களை யுடையளாய் |
| மா | பெரிய [து | | |
| முல்லை | முல்லைக் கொடியான | மடவரல் | க்ஷமைமுதலிய ஆத்மகுணங்களை யுடையளான |
| கரும்பு | கரும்பினுடைய | | |
| கழை | நுனியளவும் | | |
| ஏறி | சென்று படர்ந்து | மண்மகள் | பூமிப்பிராட்டி |
| வெண் | வெண்மையான | அழுங்க | ப்ரளயார்ணவத்தில் மூழ்கிக்கிடக்க [லே |
| முறுவல் | புன்சிரிப்பை | | |
| செய்து | செய்வதுபோல் | அன்று | அந்த ப்ரளய காலத்தி |
| அலர்கின்ற | விகஸியாநின்ற | முந்நீர் | அந்தப்ரளயார்ணவத்தினுடைய |
| மலர் | (முல்லைப்) பூவானது | | |
| தேனின் | வண்டுகளுடைய | பரப்பில் | மஹாஜலத்திலே |
| வாய் | வாயிலே | ஏனமாகி | மஹாவராஹமாய்க் கொண்டு (இழிந்து) |
| முருகு | தேனை | | |
| உகுக்கும் | பெருக்காநின்ற | இருநிலம் | விசாலமான பூமியை |
| திருவெள்ளறை நின்றானே! | | இடந்தவனே | அண்டபித்தியில் நின்றும் குத்தி எடுத்தவனே! |
| மானம் | பரப்பையுடைத்தான | | |
| வேல் | வேலாயுதம் போன்றதாய் | | |
| | | எனக்கு | அர்த்தியான எனக்கு |
| ஒள் | ஸௌந்தரமான | அருள்புரி | க்ருபைபண்ணாய் (டு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மானவேலித்யாதி) இலைகன்றவேல் போலேயாய் தர்சநீயமாயிருக்கிற திருக்கண்களையுடையளாய், க்ஷமை துடக்கமான ஆத்மகுணங்களால் மிக்கிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டி, தன் விபூதிமுகத்தாலே புக்கழுந்த. (முந்நீர்ப்பரப்பில்) ப்ரளயத்திலே யகப்பட நீருக்கும் சேற்றுக்குமிறாயாத வராஹவேஷத்தைப் பரிக்ரஹித்து, அண்டபித்தியிலே யொட்டினபூமியை இடந்தெடுத்துக்கொண்

டேறினவனே! (எனக்கருள்புரியே) அர்த்திக்கவும் மாட்டாதபூமியை ரக்ஷித்த உனக்கு, அர்த்தித்த என்னுடைய ரக்ஷணம் பண்ணுகை பெரியபணியோ?

(கானமாமுல்லை) நெய்தல், மருதம், குறிஞ்சி, பாலை, முல்லை என்கிற நிலங்களெல்லாம் தன்னிலே கலந்தாய்த்திருப்பது. ஊரைய ணைந்த வயலருகுண்டான காட்டில் பெரியமுல்லையானது, கரும்பின் நுனியளவும் மூடப்படர்ந்து, ஏறின ஒக்கத்தாலுண்டான ஹர்ஷத் தாலே ஸ்மிதம்பண்ணினாப்போலே அலருகிற மலரானது, தன்னிலே மதுபானார்த்தமாகப்படிந்த வண்டினுடைய வாயிலே தேனை ஒழுக்கா நின்றுள்ள. ... ... ... ... ... ... (௫)

அரு.—அஞ்சாம்பாட்டு. (மானவேலித்யாதி) (க) "ద్రౌపద్యా సహితా స్సర్వే నమశ్చక్రుర్జనార్దనమ్ - த்ரௌபத்யா ஸஹிதாஸ்ஸர்வே நமஸ்சக்ரு ர்ஜநார்த்தநம்" என்று ப்ரார்த்தித்தவர்க்காகத் தான் இஷ்டத்தைக் கொ டுத்த வளவன்றிக்கே, பூமி அர்த்தியாதே யிருக்க ஆபத்தையே செப்பே டாக்கி உதவினவனல்லையோ, எனக்கு மருளவேணுமென்கிறாரென்று ஸங் கதி.

காட்டிலிருக்கிற முல்லைக்கும் வயலிலிருக்கும் கரும்புக்கும் என்ன சேர்த்தியுண்டென்ன வருளிச்செய்கிறார் (நெய்தலித்யாதி). "முருகு" என்றதினர்த்தம் (தேனை) என்றது. உருக்கை - கொடுக்கையாய், பலி தம் (ஒழுக்காநின்றுள்ள) என்றது. ... ... ... ... (௫)

௬.—

பொங்குநீண்முடியமரர்கள் தொழுதெழவமுதினைக்கொடுத்தளிப்பான்
அங்கோராமையதாகியவாதி நின்னடிமையையருளெனக்கு
தங்குபேடையோடூடிய மதுகரம் தையலார் குழலணைவான்
திங்கள்தோய் சென்னிமாடம் சென்றணை திருவெள்ளறைநின்றானே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தங்கு | பூவிலே தங்கியிருக்கிற | குழல் | கேசபாசங்களை |
| பேடையோடு | பெண் வண்டோடு | அணைவான் | கிட்டி (அங்கே மறைந்திருக்கைக்காக) |
| ஊடிய | ப்ரணயகலஹம்செய்[த | திங்கள் | சந்த்ரமண்டலத்திலே |
| மதுகரம் | வண்டானது,* | தோய் | படிந்திருக்கிற |
| தையலார் | ஸ்த்ரீகளுடைய | சென்னி | சிகரங்களையுடைய |

(க) பார-

| | | | |
|---|---|---|---|
| மாடம் | க்ருஹங்களை | அமுதினை | அம்ருதத்தை |
| சென்று | கிட்டி | கொடுத்து | கொடுத்து |
| அணை | சேரா நின்ற | அளிப்பான் | ரக்ஷிக்கைக்காக |
| திருவெள்ளறை நின்றானே! [ய் | | ஓர் | அத்விதீயமாய் [ன |
| பொங்கு | அபி(4)வ்ருத்த(4)ரா | அது | அப்படி பலிஷ்டமா |
| நீள் | சிரகாலஸ்த்தாயி யான [ரான | ஆமையாகிய | கூர்மாவதாரத்தை ப்பரிக்ரஹித்த |
| முடி | கிரீடங்களை யுடைய | ஆதி | காரணபூதனே! |
| அமரர்கள் | இந்த்ராதி தேவர்கள் | நின் | உன்விஷயமான |
| தொழுது | (தன்னை) ஆஶ்ரயிக் கைக்காக | அடிமையை | கைங்கர்யத்தை |
| எழ | உத்யோகிக்க,[ளுக்கு) | எனக்கு | எனக்கு |
| அங்கு | அக்காலத்திலே(அவர்க | அருள் | தந்தருளவேணும். |

வ்யா.—ஆறும்பாட்டு. (பொங்குநீண்முடியித்யாதி) விஸ்த்ருதராய், நிலைநின்ற முடியையுடையராயிருக்கிற தேவர்கள், திருவடிகளிலே விழுந்து உஜ்ஜீவிப்பதாக மநோரதிக்க; அவர்களுக்கு அஸுரர்களால் வந்த வினையைப்போக்கி ரக்ஷிக்கைக்காக, மந்தரத்தைத் தரிக்கவல்ல ஆமையின்வேஷத்தைப் பரிக்ரஹித்து அவர்களைரக்ஷித்து, அவர்களுக்கு ஸத்தாஹேதுவானவனே! (நின்னடிமையையருளெனக்கு) எனக்கு, தேவர் திருவடிகளிலுண்டான அடிமையைத் தந்து என்ஸத்தையைத் தந்தருளவேணும்.

(தங்கு) பூவிலே தங்கின பேடையோடே, அத்தை இத்தைச்சொல்லி ஊடினவண்டானது, "இதுக்குத் தெரியாததோரிடந்தேடி மறையவேணும்" என்று, அதுக்காக ஸ்த்ரீகளுடைய குழலிலே மறையக்கோலி, சந்த்ரபதத்தளவும் செல்ல ஓங்கின சிகரத்தையுடைத்தான மாடங்களிலே சென்றணையா நிற்குமாய்த்து. ... ... (௧)

---

அரு.—ஆறும்பாட்டு. (பொங்கித்யாதி) கீழ்ப்பாட்டில்-பூமிப்பிராட்டிக்கு விபூதியாகையாலே தான் பூதர (भूधर) னானென்றார்; ப்ரயோஜநாந்தர பரர்க்காக பூதர(भूधर)த்தைத் தரித்து அமுதளித்தானென்று, வராஹாவதாரத்துக்கு முன்னாகச் சொல்லப்பட்ட கூர்மாவதாரத்தை அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

அம்ருதரூப பலத்துக்குத் தொழுதெழுகை ஸாதநமாக வேண்டுகையாலே, தொழுகைக்கு, எழ - உத்யோகிக்க என்றாய், அருளிச்செய்கிறார் (மநோரதிக்க) என்று. (மந்தரத்தைத் தரிக்கவல்ல) என்றது-"அது" என்றதினர்த்தம். (என்ஸத்தையைத் தந்தருளவேணும்) என்றது-* ஆதிபதஸமபிவ்யாஹார லப்யார்த்தம்.

(அத்தை இத்தைச் சொல்லி) என்றது - "நானொரு பூவில்நின்று மொரு பூவில் போக வொருப்பட்டால் (க) ‹‹ [Grantha] - அக்ர தஸ்தே கமிஷ்யாமி" என்று புறப்படாதே யிருந்த உனக்கு, பூவில் கால்தங் கிற்றோ? என்னிலு முனக்குத் தேனினிதாய்த்தோ" என்றாப்போலே சொல்லுகை. ... ... ... ... ... ... ... ... (௬)

மூ.—ஆறிறேடொருநான்குடை நெடுமுடியரக்கன்றன்சிரமெல்லாம்
வேறுவேறாக வில்லது வளைத்தவனே யெனக்கருள்புரியே
மாறில் சோதிய மரதகப்பாசடைத் தாமரைமலர்வார்ந்த
தேறல் மாந்திவண்டின்னிசைமுரல் திருவெள்ளறை நின்றானே

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாறுஇல் | ஒப்பில்லாத | ஆறிறேடு | ஆறுதலைகளோடு |
| சோதிய | தேஜஸ்ஸை யுடைய னவாய் | ஒருநான்கு உடை | ஒருநாலு தலைகளையு டையனாய் |
| மரதகம் | மரதக மணிபோன்ற | நெடு | தீர்க்கமான [ஞன |
| பாசு | பசுமை வாணத்தை யுடைத்தான | முடி | கிரீடங்களை யுடைய |
| அடை | இலைகளையுடைய | அரக்கன்தன் | ராவண ஸாரனு டைய |
| தாமரை | தாமரைகளினுடைய | சிரமெல்லாம் | எல்லாத்தலைகளையும் |
| மலர் | புஷ்பங்களில் நின்றும் | வேறுவேறாக | வெவ்வேறாக (அறுந் துவிழும்படியாக) |
| வார்ந்த | பெருகாநின்ற | | |
| தேறல் | தேனை | அது | அப்படிப்பட்ட |
| மாந்தி | பானம்பண்ணி | வில் | தநுஸ்ஸை |
| வண்டு | வண்டுகளானவை | வளைத்தவனே | வளைத்தசக்ரவர்த்தித் திருமகனே! |
| இன் | ஸ்ராவ்யமான | | |
| இசை | கானங்களை | எனக்கு | என்விஷயத்தில் |
| முரல் | பாடாநின்றுள்ள | அருள்புரி | க்ருபைபண்ணாய்.(எ) |

திருவெள்ளறை நின்றானே!

வ்யா.—ஏழாம்பாட்டு. (ஆறிறேடித்யாதி) பத்துத்தலையையு டைய ராவணனுடைய தலைபத்தையும் சிந்நம் பிந்நமாய்ப் போம்படி யாக வில்லை வளைத்தவனே! என் பக்கலிலே க்ருபையைப் பண்ணி யருளவேணும்.

(மாறிலித்யாதி) ஒப்பில்லாத புகரையுடைய வாய் மரதகம்போ லே யிருந்துள்ள பச்சையிலையையுடைத்தான தாமரைமலரில் நின்று மொழுகாநின்றுள்ள தேனைப்பருகி வண்டுகளானவை இனிய இசை யைப் பாடாநின்றுள்ள.... ... ... .. ... (எ)

(க) ரா-அயோ-உஎ-௬.

அரு.—ஏழாம்பாட்டு. (ஆறித்யாதி) தேவர்களுக்கு அமுதூட்டின படி சொன்னார் - கீழ்; அவர்களுக்குக் குடியிருப் பரிதாம்படி தலைபத்துப் படைத்தானாய் மிகுந்த ராவணனை வென்று, அவர்களை ரக்ஷித்த குணத்தை யநுஸந்திக்கிறு ரென்று ஸங்கதி.

"வார்ந்த" என்றதினர்த்தம் (ஒழுகாநின்றுள்ள) என்றது. "மாந்தி" என்றதினர்த்தம் (பருகி) என்றது. ... ... ... ... (எ)

மூ.—முன்னிவ்வேழுலகுணர்வின்றி யிருள்மிகவும்பர்கள் தொழுதேத்த
அன்னமாகியன்றருமறை பயந்தவனே யெனக்கருள்புரியே [த
மன்னு கேதகை சூதக மென்றிவை வனத்திடைசுரும்பினங்கள்
தென்னவென்றுவண்டின் னிசைமுரல் திருவெள்ளறை நின்றானே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மன்னு | மாறுதேபுத்திருக்கிற | முன் | முற்காலத்திலே |
| கேதகை | தாழைகளென்ன | இவ்வேழுலகு | இந்த ஸப்தலோகங்களும் |
| சூதகம் | மாமரங்களென்ன | உணர்வுஇன்றி | ஜ்ஞாந சூந்யமாய்க்கிடக்க |
| என்று இவை | என்கிற இவற்றை யுடைத்தான | இருள்மிக | அந்தகாரம் மேலிட்டு |
| வனத்துஇடை | சோலைகளின் நடுவே | உம்பர்கள் | ப்ரஹ்மாதிதேவர்கள் |
| சுரும்பு | சுரும்பு என்னும் வண்டுகளுடைய | தொழுது | (உன்னை) ஆச்ரயித்து நிற்க, |
| இனங்கள் | கூட்டங்களானவை | ஏத்த | ஸ்தோத்ரம் பண்ண |
| தென்ன என்று | தென்ன தென்ன என்று பாடாநிற்க, (அதைக்கேட்டு) | அன்று | அக்காலத்திலே |
| வண்டு | வண்டுகளானவை | அன்னமாகி | ஹம்ஸரூபியாய்க்கொண்டு |
| இன் இசை | (அப்பாட்டில் பரிசயமாய்) போக்யமான காநத்தை | அருமறை | துர்லபமான வேதத்தை |
| முரல் | பாடாநின்ற | பயந்தவனே | உண்டாக்கிக் கொடுத்தவனே! |
| திருவெள்ளறை நின்றானே! | | எனக்கு | என்விஷயத்தில் |
| | | அருள்புரி | க்ருபைபண்ணு (அ) |

வ்யா — எட்டாம்பாட்டு. (முன்னிவ்வேழுலகித்யாதி) பண்டு இந்த லோகங்களெழும் வெளிச்செறிப்பின்றியே இருளானது மிக ப்ரஹ்மாதிகள் திருவடிகளிலே விழுந்து ஸ்தோத்ரம்பண்ண, அஸுரர்களோடே கலந்து உருபாய்ந்துபோன வேதத்தைப் பிரிக்கைக்குடலாக, நீரையும் பாலையும் பிரிக்கவல்ல அன்னத்தின்வடிவைக்கொண்டு, தன்னைப்பெறினும் பெறவரிதான, தன்படிகளை யடங்கதும் பேசவற்

ளுயிருக்கிற வேதத்தை யுண்டாக்கினவனே! என் பக்கலிலே க்ருபை யைப்பண்ணி யருளவேணும்.

மாருத பூக்களையுடைத்தான தாழை தேபா என்கிற இவற்ருலே நெருங்கின சோலையினுள்ளே, சுரும்புகளானவை மதுபானம்பண்ணி, உள்ளுப் புக்க த்ரவ்யம் இருந்த விடத்திலிருக்க வொட்டாமையாலே "தென்ன,தென்ன" என்று ஆளத்திவைக்க, வண்டுகளானவை அதில் முறுகினபாட்டைப் பாடா நிற்குமாய்த்து. ... ... (அ)

அரு—எட்டாம்பாட்டு. (முன்னித்யாதி) ஊண் கொடுத்தும் குடியிருப்புப் பண்ணிக்கொடுத்தும் ரக்ஷித்த வனவன்றிக்கே, தேவர்களை ஓ. வித்தவனும் நீயே யல்லையோ, எனக் கருளவேணு மென்கிருரென்று ஸங்கதி.

இரண்டாம்பாட்டில "பரிமுகமாய் வேதப்ரதானம் பண்ணிஞன்" என்றதுக்கும், இங்கே "அன்னமாய் வேதப்ரதானம் பண்ணிஞன்" என்றதுக்கும் தோற்றுகிற விரோதத்தை, கல்பபேதேந கூடுமென்று பரிஹாரம் பண்ணிக்கொள்ளுதல்; அன்றிக்கே, இரண்டும் வித்யாப்ரதங்களான அவதாரங்களாகையாலே தர்ம்யைக்யத்தைப் பற்ற ஒன்று செய்தவை மற்றையதுக்கும் சொல்லலாமென்ருதல் கண்டுகொள்வது.

(முறுகினபாட்டை) பரி பக்வமான பாட்டை. ... ... (அ)

மூ.—ஆங்குமாவலிவேள்வியிலிரந்து சென்றகலிட முழுதினையும்
பாங்கினுற்கொண்ட பரமநிற்பணிந்தெழுவே னெனக்கருள்புரியே
ஓங்குபிண்டியின் செம்மலரேறி வண்டுழி தர மாவேறித்
தீங்குயில்மிழற்றும் படப்பைத் திருவெள்ளறை நின்ருனே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஓங்கு | உயர்ந்து வளராநின்ற [டைய | மிழற்றும் | அவ்யக்தமதுரமாகக் கூவாநின்ற |
| பிண்டியின் | அசோக மரத்தினு | படப்பை | கொடித் தோட்டங்களை யுடைத்தான |
| செம்மலர் | சிவந்த புஷ்பங்கள் மேலே | திருவெள்ளறை நின்ருனே! | |
| வண்டு | வண்டுகளானவை | மாவலி | மஹாபலியினுடைய |
| ஏறி | ஏறி [தைக்கண்டு) | வேள்வியில் | யாகத்திலே [லே |
| உழிதர | ஸஞ்சரியாநிற்க (அ | ஆங்கு | அந்த மஹாஸபையி |
| தீன் | மதுரமான ஸ்வரத்தை யுடைய | சென்று | போய் |
| குயில் | குயில்களானவை | இரந்து | யாசித்து |
| மா ஏறி | மாமரங்கள் மேலேறி நின்று | அகல் | பரந்த |

| | | | |
|---|---|---|---|
| இடம் முழுதினையும் | பூமி யெல்லாவற்றையும் | கொண்ட | தானம்வாங்கி ஸ்வாதீநமாக்கிக்கொண்ட |
| பாங்கினால் | செவ்வையினாலே (அந்த மஹாபலியினுடைய இடமாக எண்ணி) | பரம | ஸர்வாதிகனே! |
| | | நின் | உன்னை |
| | | பணிந்து | பணியவேணுமென்று |
| | | எழுவேன் | உத்யோகித்திருக்கிற |

எனக்கு அருள்புரி. (௯)

வ்யா—ஒன்பதாம்பாட்டு. (ஆங்குமாவலி யித்யாதி) மஹாபலியினுடைய யஜ்ஞவாடமான அவ்விடத்தில் தன்னை இரப்பாளனாக்கிக் கொண்டுசென்று, பூமிப்பரப்பை யடங்கலும் அவனதாகக்கொண்ட ஸர்வாதிகனே! ராவணாதிகளைப் போலே தலையையறுத்துப் பொகட்டு வாங்கிக்கொள்ளலா யிருக்கச்செய்தே ஔதார்யத்துக்குச்சமைந்திருந்தபடியாலே, தன்னை இரப்பாளனாக்கி அவனதாகக்கொண்டானாய்த்து. (நிற்பணிந்தெழுவே னெனக்கருள்புரியே) இந்த்ரனுடைய ஆஶ்ரயணத்தோபாதி போராதோ என்னுடைய ஆஶ்ரயணம்.

(ஓங்கித்யாதி) ஆகாசாவகாசம் வெளியடையும்படி வளர்ந்த அசோகமானது சிவக்கப்பூத்துக்கிடக்க, "இதிலே மதுபானம் பண்ணலாம்" என்று அதுக்காக வண்டுகள் ஸஞ்சரிக்க, அத்தைக்கண்ட குயில்களானவை "நெருப்பு" என்று அருகுசெல்ல அஞ்சி நின்ற மாவிலே ஏறி, இவை நெருப்பிலே அகப்பட்டனவாகக் கொண்டு அநக்ஷரரஸமான பேச்சாலே "படுகுலை கிடிகோள்" என்றாப்போலே கூப்பிடா நின்றதாய்த்து. இதில் வாஸமும் நித்யமாயிருக்கச் செய்தே, பயமும் நித்யமாய்ச் செல்லாநிற்குமாய்த்து. ... ... (௯)

---

அரு—ஒன்பதாம்பாட்டு. (ஆங்கித்யாதி) அமரர்களை யமுதூட்டிக் குடியிருப்புப் பண்ணிக்கொடுத்து வேதாத்யயநத்தைப் பண்ணுவித்த வளவன்றியே, அவர்களுக்காகத் தானிரந்திட்டான் என்று ஸ்ரீ வாமநாவதாரத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"ஆங்கு" என்றதுக்கு - ஒரு தேச விசேஷமும், அவ்விடத்திலே மாவலி வேள்வியும்,‡(அருகேயொருப்ரதேசமுமாகத்)தோன்றுகையால் அதுக்கு ப்ரயோஜநமில்லாமையாலே, "மாவலி வேள்வியில் - ஆங்கு" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (மஹாபலி யித்யாதி). இப்போது, (அவ்விடத்தில்) என்றதால் - மஹா ஸதஸ்ஸென்று தோன்றுகையாலே, அப்படிப்பட்ட ஸதஸ்ஸி லிரந்ததாலே ஆஶ்ரித வாத்ஸல்யம் தோன்றுகை ப்ரயோஜநமாகவுமாம். அன்றிக்கே, இரப்பும் கார்யகரமாக

‡ குண்டலித மாநக்விதம்.

வொட்டாத சுக்ராதிக ளிருந்தவிடமென்றுதல் ப்ரயோஜநம் கொள்ளலாமென்று திருவுள்ளம். அவனுடையபாங்கிறுலென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச்செய்கிறுர் (அவனதாகவித்யாதி). இத்தால்-அவன் "என்னது" என்று அபிமாநித்திருந்தத்தை அப்படியே தானுமெண்ணிக் கையேற்றபடி சொல்லிறுய்த்து பரஸ்வத்தைத் "தன்னது" என்றிருந்தால் தலையறுக்க வொண்ணுதோ, பிச்சையெடுக்கவேணுமோ வென்ன வருளிச்செய்கிறுர் (ராவணுதி யித்யாதி). "கொடுக்கவேணும்" என்று இச்சை யுண்டாகையாலே பிச்சை யெடுத்தானென்று கருதது.

படப்பை - கொடித்தோட்டம். ... ... ... ... (௯)

மூ.—மஞ்சுலா மணி மாடங்கள் சூழ் திருவெள்ளறை யதன்மேய
அஞ்சனம் புரையும் திருவுருவனை யாதியை யமுதத்தை
நஞ்சுலாவிய வேல்வலவன் கலிகன்றி சொல்லையிரண்டும்
எஞ்சலின்றி நின்றேத்தவல்லா ரிமையோர்க்கரசாவர்களே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மஞ்சு | மேகமண்டலத் தளவும் | அமுதத்தை | போக்ய பூதனுமான ஸர்வேஸ்வரன் விஷயமாக, |
| உலா | சென்று ஓங்கியிருக்கிற | நஞ்சுஉலாவிய | விஷம்போலே திரியாநின்றுள்ள |
| மணி | ரத்நங்களிழைத்த | வேல்வலவன் | வேலை ஆளுமவரான |
| மாடங்கள் | க்ருஹங்களிலுலே | கலிகன்றி | ஆழ்வார் |
| சூழ் | சூழப்பட்ட | சொல் | அருளிச்செய்த |
| திருவெள்ளறையதன் | திருவெள்ளறை என்னும் அந்தத் திவ்ய தேசத்திலே | ஐயிரண்டும் | இந்தப் பத்துப்பாட்டுக்களையும் |
| மேய | நித்யவாஸம் பண்ணுகிறவனுய் | எஞ்சலின்றி | குறைவின்றி |
| அஞ்சநம் புரையும் | அஞ்ஜநத்தோடொத்த | நின்று | ஒருபடிப் பட்டுநின்று |
| திரு | ஸுந்தரமான | ஏத்தவல்லார் | ஸ்தோத்ரம்பண்ணத் தகுந்தவர்கள் |
| உருவனை | வடிவை யுடையவனுய் | இமையோர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| ஆதியை | ஜகத்காரண பூதனுய் | அரசாவர்கள் | ராஜாக்கள் போலே ஆதரணீயராவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மஞ்சித்யாதி) மேகபதத்தளவும் செல்ல வோங்கியிருப்பதாய் மணிமயமான மாடங்களாலே சூழப்பட்ட

திருவெள்ளறையதன், மேய - நித்யவாஸம் பண்ணுகிற. (அஞ்சன மித்யாதி) அஸந்நிஹிதனே யாகிலும் விடவொண்ணுதாய்த்து வடிவழகு; அழகில்லையே யாகிலும் விடவொண்ணுதாய்த்து ப்ராப்தி; ப்ராப்தியில்லையே யாகிலும் விடவொண்ணுதாய்த்து போக்யதை. (நஞ்சித்யாதி) த்ருஷ்டி விஷம்போலே யிருக்கிற வேலையுடைய ஆழ்வாரருளிச்செய்த இபபத்தையும் ஒன்றும்விடாதே ஏத்த வல்லவர்களை, நித்யஸூரிகள் ஸ்ரீ வைகுண்டநாதனைவிட்டு இவர்களை ஆதரியா நிற்பார்கள். ... ... ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (மஞ்சித்யாதி) (போக்யதை) என்றது- மற்றை ஸர்வப்ரகாரததாலு முள்ள போக்யதை. "எஞ்சலின்றி" என்றதினர்த்தம் (ஒன்றும் விடாதே) என்றது. ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அஞ்சாம்பத்தில் மூன்றுந்திருமொழி முடிந்தது.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## அஞ்சாம்பத்தில் நாலாந்திருமொழி

### உந்திமேல் ப்ரவேசம்.

---

வ்யா.—"நின்குரைகழல் தொழுவதோர்வகை யெனக்கருள்புரியே" என்றார்-கீழிற்றிருமொழியிலே; " 'அருள்புரியே' என்று நீரிங்ஙனே இழவாளராய் ப்ரார்த்திக்கிறதென், நாமுமக்கொன்று முபகரித்திலோமோ, உபகரிக்கவன்றோ நாம் கோயிலிலே வந்து ஸந்நிஹிதராய்த்து" என்று இங்ஙனே ஸந்நிஹிதனானபடியைக் காட்டிக்கொடுத்தான்; அத்தை யநுஸந்தித்து ஹ்ருஷ்டராய் *இனித்தான் அறிவுடையாரடங்கலும் ப்ராப்யபுத்தி பண்ணி விடாதே வர்த்திக்கிற தேசமென்று அது தன்னைப்பேசி இனியராகிறார். ... ... ... (*)

---

அரு.—உந்திமேலின் ப்ரவேசம்.—"அருள்புரியே" என்று ஒருகால் சொன்னபோலே ஒன்பதின்கால் சொன்னவிடத்திலும் வாய்திறவாதே

யிருக்கவும், இவர் "இன்னமொரு தேசத்திலே யாகிலும் முகங்கொடுப்ப ன்" என்னும் நசையாலே யிருக்குமளவில், அரங்கத்தம்மான் அப்படியே சி(-ம)த்த ஸமாதாநம் பண்ண, ஸமாஹிதராநூரென்று ஸங்கதி யருளிச் செய்கிறர் (நின்குறைகழலித்யாதி) (உபகரித்திலோமோ) என்ற வநந்த ரம்"அப்படியே மேலும்"என்று சேஷம். *(இனித்தான்)ஹ்ருஷ்டராயநு பவிக்கு மிடத்திலே. ... ... ... ... ... ... (*)

மூ.—உந்திமேல் நான்முகனைப் படைத்தானுலகுண்டவ
னெந்தைபெம்மா னிமையோர்கள் தாதைக்கிடமென்பரால்
சந்திஞேடு மணியும் கொழிக்கும் புனல் காவிரி
அந்திபோலும் நிறத்தார் வயல்சூழ் தென்னரங்கமே. (க)

| பதம். | உரை. |
|---|---|
| உந்திமேல் | (தன்னுடைய) திருநாபியிலே |
| நான்முகனை | சதுர்முகனை ப்ரஹ்மாவை |
| படைத்தான் | ஸ்ருஷ்டித்தவனும் |
| உலகு | (ப்ரளயகாலத்திலே) லோகங்களை |
| உண்டவன் | அமுதுசெய்து தன் வயிற்றிலே வைத்தவனும் |
| எந்தை | என்னுடைய தகப்பன் முதலானபெரியோர்களுக்கு |
| பெம்மான் | ஸ்வாமியானவனும் |
| இமையோர்கள் | நித்யஸூரிகளுக்கு |
| தாதைக்கு | நாதனானவனுமான ஸர்வேஶ்வரனுக்கு |
| இடம் என்பர் | வாஸஸ்தாநம் என்றுசொல்லுவர்கள். |
| சந்திஞேடு | சந்தநக்கட்டைகளோடு கூட |
| மணியும் | ரத்நங்களையும் |
| கொழிக்கும் | தள்ளிக்கொண்டு வாராநின்ற |
| புனல் | ஜலத்தையுடைய |
| காவிரி | திருக்காவேரி நதியிஞலும், |
| அந்திபோலும் | ஸந்த்யாகாலம் போன்ற |
| நிறம் | வர்ணத்திஞல் |
| ஆர் | பூர்ணமான |
| வயல் | கழனிகளாலும் |
| சூழ் | சூழப்பட்ட |
| தென் | ஸுந்தரமான |
| அரங்கம் | திருவரங்கமென்னும் திவ்ய தேசமானது, |

வ்யா.—முதற்பாட்டு. (உந்திமேல் நான்முகனைப் படைத்தான்) ப்ரஹ்ம ஸ்ருஷ்டிக்கவ்வருகுள்ளசடங்களும் தானே கைகொட்டாக் கி, பின்னை "இவ்வருகுண்டான கார்யவர்க்கத்தை இவன்வழியா லே யுண்டாக்கவேணும்" என்று தன்னுடைய திருநாபீகமலத்திலே சதுர்முகனை ஸ்ருஷ்டித்தவன். (உலகுண்டவன்) அப்படி கார்யங்

கொள்ளுமவர்களை ப்ரளயங்கொண்டவாறே பூமியை யெடுத்து வயிற்றிலேவைத்து ரக்ஷித்தவன். (எந்தை பெம்மான்) ஸர்வஸ்ரஷ்டாவாய் ஆபத்ஸகனுமாயிருக்கிற விருப்பைக்காட்டி என் குலத்துக்கு நாதனானவன். (இமையோரித்யாதி) அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்ய ஸூரிகளுக்கு நாதனானவன் வர்த்திக்கிறதேச மென்னுநிற்பர்கள். (க) "அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதென்றுகொலோ" என்று சொல்லும் நித்யஸூரிகளும இவ்விடத்தை விரும்பி, இங்கே படுகாடு கிடப்பர்களாய்த்து.

(சந்தித்யாதி) சந்தநத்தோடே கூட மணிகளையும் கொழித்தெறடா நின்றுள்ள புனலையுடைத்தான காவேரி; அந்தியுண்டு -ஸந்த்யை, அதுபோலே யிருண்ட நிறத்தையுடைத்தான வயல்; இவற்றாலே சூழப்பட்ட தென்னரங்கமே. (உ)"கருநெற் சூழ் கண்ணமங்கை" என்னுமாபோலே - கருவடைந்த பயிராகையாலே எங்குமொக்க இருண்டு தோற்றுமாய்த்து. ஸந்த்யை சிவந்தன்றோ விருப்பது என்னும் நிர்ப்பந்தமுண்டாகில், நுனி நெல் பழுத்த வயலாலே சூழப்பட்ட என்றுகிறது. ... ... ... ... ... (க)

அரு.—முதற்பாட்டு. (உர்தியித்யாதி) (ந) "ఈశ్వరాయనివేదితుం - ஈஶ்வராயநிவேதிதும்" என்கிறபடியே - தமக்குக் கரண களேபரப்ரதாநம் பண்ணினது தமக்குபகாரமாகத் தோற்றுவிக்க, இப்படி உபகரித்தவன்றோ னே ஆடகொள்ளானோ என்று ஹ்ருஷ்டராய், அவன் கரணகளேபரப்ரதாநம் பண்ணுகைக்குப் பட்டபாடெல்லா மநுஸந்திக்கிறாரென்று தாத்பர்ய மருளிச்செய்கிறார (ப்ரஹ்ம ஸ்ருஷ்டிக் இத்யாதி). எந்தைகளுக்குப் பெம்மான் என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி). தம்மைக்கொண்டு மேல் கைங்கர்யம் கொள்ளுவ னென்கைக்கு ஸூசகம் "இமையோர்கள்" எனற தென்று விவக்ஷித்துத், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அடியார்களித்யாதி). அவர்களைக் கொண்டு கைங்காயம் கொள்ளுமாபோலே, ருசியுடைய தம்மையும் கொண்டு கைங்கர்யம் கொள்ளுவரென்று ஹ்ருஷ்டரானு ரென்கை. ... ... ... ... ... (க)

மூ.—வையமுண்டாலிலை மேவுமாயன் மணி நீண்முடிப்
பைகொள் நாகத் தணையான் பயிலுமிடமென்பரால்
தைய நல்லார் குழல் மாலையும் மற்றவர் தடமுலைச்
செய்ய சாந்தும் கலந்திழி புனல்சூழ் தென்னரங்கமே. (உ)

(க) தி-வாய்-உ-ரு-கo- (உ) கo-அ-க. (ந) விஷ்ணுதத்வம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நல் | ஸாத்விகாசாரமுடைய | உண்டு | (ப்ரளயகாலத்திலே) அமுதுசெய்து |
| தையலார் | ஸ்த்ரீகளுடைய[ரான | | |
| குழல் | கேசங்களிலே குட்டப் | ஆலிலை | ஆலந்தளிரிலே |
| மாலையும் | பூமாலையும், [பட்ட | மேவும் | பொருந்தி கண்வளர்ந்தருளாநின்ற |
| மற்று | அதுக்குமேலே | | |
| அவர் | அந்தஸ்த்ரீகளுடைய | மாயன் | ஆஶ்சர்ய சக்தியுக்தனாய், |
| தடம் | விசாலமான | | |
| முலை | ஸ்தநங்களிலே பூசப் | மணி | ரத்நங்களிழைத்த |
| செய்ய | சிவந்த [பட்ட | நீள் | தீர்க்கமான [னாய் |
| சாந்தும் | சந்தநமும் (ஆகிய இவற்றோடு) | முடி | கிரீடத்தை யுடைய |
| | | பைகொள் | விசாலமான [கிற |
| கலந்து | சேர்ந்து (கலங்கி) | நாகம் | திருவநந்தாழ்வானு |
| இழி | ப்ரவஹியாநின்ற | அணையான் | படுக்கையை யுடையனுமான ஸர்வேஶ்வரன் |
| புனல் | (காவேரி) ஜலத்திலே | | |
| சூழ் | சுற்றப்பட்ட | பயிலும் | நித்யவாஸம் பண்ணுநின்ற |
| தென்னரங்கம், | | | |
| வையம் | பூமியை | | இடம் என்பர். (உ) |

**வ்யா.**—இரண்டாம்பாட்டு. (வையமுண்டித்யாதி) ப்ரளயத்திலே பூமிப்பரப்படங்க எடுத்து வயிற்றிலேவைத்து ஒருபவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின ஆஶ்சர்ய சக்தியுக்தன். (மணியித்யாதி) ஆதிராஜ்ய ப்ரகாசகமான திருவபிஷேகத்தை யுடையனாய் கண்வளர்ந்தருளுகைக் கிடான பரப்பையுடையனா யிருக்கிற திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறவன் விடாதே வர்த்திக்கிற தேசமென்று சொல்லாநிற்பர்கள்.

(தையல் நல்லாரித்யாதி)குழலிலே பூக்களை வைத்து முலைகளைக் குங்குமத்தாலே அலங்கரித்திருந்துள்ளவர்கள், படுக்கையைவிட்டு ப்ராஹ்மமுஹூர்த்தத்திலே ஸ்நாநார்த்தமாக இழிவர்கள்; குழலில் மாலையும் குங்குமமுமாய்க் கலங்கி யோடாநிற்குமாய்த்து. ... (உ)

---

**அரு.**—இரண்டாம்பாட்டு. (வையமித்யாதி) கீழ்ப்பாட்டில் "உலகுண்டவன்" என்று சொன்ன உபகாரத்தை அருளிச்செய்துகொண்டு, "இமையோர்கள் தாதை" என்கைக்கு ஜ்ஞாபகமான அநந்த சாயித்வத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

நையலாரென்னாதே, 'நல்லார்' என்கையாலே - (க) "வெள்வரைப் பதன் முன்னம் துறைபடிந்து" என்கிறபடியே-ஸாத்விக காலத்தில் துறை படிந்தமை நன்மையென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (ப்ராஹ்ம முஹூர்த்தத்திலே)என்று. மற்று-அதுவொழிய, அவர்களுடைய தடமுலைச் செய்ய சாந்தும் என்று சப்தார்த்த முட்கொண்டருளிச் செய்கிறார் (குழலி வித்யாதி). ... .. ... ... ... ... .. (உ)

மூ.—பண்டிவ்வையமளப்பான் சென்று மாவலி கையில் நீர்
கொண்ட வாழித் தடக்கைக் குறளனிடமென்பரால்
வண்டு பாடும் மது வார் புனல் வந்திழி காவிரி
அண்டம் நாறும் பொழில் சூழ்ந்தழகார் தென்னரங்கமே. (௩)

| பதம். | உரை | பதம் | உரை |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளானவை | இவ்வையம் | இந்தபூமியை |
| பாடும் | பாடும்படியாக | அளப்பான் | அளந்து வசப்படுத்திக் கொள்ளுகைக்காக |
| மது | தேனானது | | |
| வார் | ஒழுகாநின்ற | | |
| புனல் | ஜலமானது | சென்று | போய் [டைய |
| வந்து | வந்து | மாவலி | மஹாபலியினு |
| இழி | ப்ரவஹியாநின்ற | கையில் | கையில்நின்றும் |
| காவிரி | திருக்காவேரியினாலும், | நீர் | தாநஜலத்தை |
| | | ஆழி | திருவாழியை ஏந்தத்தக்க |
| அண்டம் | ஆகாசமெங்கும் | | |
| நாறும் | பரிமளியாநின்ற | தடம் | விசாலமான |
| பொழில் | சோலைகளாலும் | கை | ஶ்ரீஹஸ்தத்திலே |
| சூழ்ந்து | சூழப்பட்டு | கொண்ட | ஏந்தின |
| அழகு ஆர் | மிக அழகியதான தென்னரங்கம், | குறளன் | வாமநனுடைய |
| பண்டு | பூர்வகாலத்தில | இடம் என்பர். | (௩) |

வ்யா—மூன்றாம்பாட்டு. (பண்டித்யாதி) மஹாபலியாலே அபஹ்ருதமான பூமியை மீட்டுக்கொள்ளுகைக்காக அவனுடைய யஜ்ஞவாடத்திலே சென்று, திருவாழியைப் பிடிக்கக்கடவ கையாலே நீரை ஏற்ற ஶ்ரீவாமநன் வர்த்திக்கிற தேசமெனறிருப்பர்கள்.

(வண்டித்யாதி) ஜலத்திலுண்டான ரஸ்யதையாலே வண்டுகளானவை பொய்த்துக்கிடக்குமாய்த்து. வண்டுகளானவை மதுபாந மத்தமாய்க்கொண்டு பாடுகைக்கிடான மதுவொழுகாநின்றுள்ள புனலானது

(க) நா-தி-க-?

வர்த்திழிகாவிரியாலும், அண்டாவகாசமடைய கந்தி(ஆ)யாநின்றுள்ள பொழிலாலும் சூழப்பட்டு தர்ஸநீயமான தென்னரங்கமே. அண்டநாறு மென்று - நாவி கஸ்தூரி தடக்கமானவற்றைச் சொல்லவுமாம்.

அரு.—மூன்றாம்பாட்டு. (பண்டித்யாதி) தமக்குக் கரணகளேபரப்ரதாநம் பண்ணியும் வயிற்றிலே வைத்து ரக்ஷித்த உபகாரத்தையும் கீழ்ப் பாட்டுக்களி லருளிச்செய்து, "எந்தை பெம்மான" என்று சொல்லும்படி என்னைத் தனக்காக்கிக்கொண்டானென்னு முபகாரத்தை யநுஸந்தித்து, அதுக்கு த்ருஷ்டாந்தமாக வையங்கொண்டசெயலை அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"அண்டம்" என்றபதம் - ஆகாச வாசக மன்றிக்கே, புழுகுபூனையின் பீஜவாசகமாய், அது உபலக்ஷணமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அண்டமித்யாதி). .. ... ... ... .. ... (௩)

௪.—விளைத்த வெம்போர் விறல் வாளரக்கன் நகர் பாழ்பட
வளைத்த வல் வில் தடக்கையவனுக் கிடமென்பரால்
துளைக் கை யானை மருப்புமகிலுங் கொணர்ந்துந்தி முன்
திளைக்கும் செல்வப் புனல் காவிரிசூழ் தென்னரங்கமே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துளை | த்வாரத்தையுடைய | விறல் | பலிஷ்டனுமாய் |
| கை | துதிக்கையை யுடைத்தான | வாள் | வாளாயுதத்தை யுடையனுமான |
| யானை | யானையினுடைய | அரக்கன் | ராவணனுடைய |
| மருப்பும் | தந்தங்களையும் [யும் | நகர் | பட்டணமான லங்கையானது [க |
| அகிலும் | அகில் கட்டைகளை | | |
| கொணர்ந்து | அடித்துக்கொண்டு வந்து | பாழ்பட | அழிந்து போம்படியா |
| | | வளைத்த | வளைக்கப்பட்ட |
| முன் | முன்னே | வல் | த்ருடமான |
| உந்தி | தள்ளி [ஸ்வர்யத்தை | வில் | தநுஸ்ஸை |
| செல்வம் | (லீலாரஸமாகிற) ஐ | தடம் | விசாலமான |
| திளைக்கும் | அநுபவியாநின்ற | கை | கையிலேயுடையனான |
| புனல் | ஜலத்தையுடைத்தான | அவனுக்கு | அந்தச் சக்ரவர்த்தித் திருமகனுக்கு |
| காவிரிசூழ் தென்னரங்கம், | | | |
| வெம்போர் | க்ரூரமான யுத்தத்தை | இடம் என்பர். (௪) | |
| விளைத்த | செய்யுமவனாய் | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (விளைத்தவித்யாதி) வெய்போரை விளைப்பானாய், பெருமிடுக்கனாய், அந்தாலே வழிகெட வர்த்திப்பானாய்,

ஸாயுதனுயிருக்கிற ராக்ஷஸனுடைய நகரயானது (க) "శ్మశాన సదృశ - ம்மசாந ஸத்ருசியாகவேணும்" என்றபடியே - பாழ்பட்டுப் போம்படியாக வளைத்த பெருமிடுக்கையுடைத்தான வில்லையும், அதுக்காஶ்ரயமாகப் போரும்படியான கையையுமுடைய சக்ரவர்த்தித் திருமகன் சாய்ந்தருளுகிற தேசமென்று நிற்பர்கள். (உ) "செருவிலே யரக்கர் கோனைச்செற்ற நம் சேவகனார் மருவிய பெரியகோயில்" என்பர்களிறே.

(துளைக்கை) துளையையுடைத்தான கையையுடைய ஆனைக்கொம்பும் அகிலும் துடக்கமானவற்றைக் கொடுவந்து, "கொள்வாருண்டோ" என்று கொடுப்பாரைப்போலே தள்ளி, தன் செருக்காலே லீலாரஸ மநுபவியா நின்றுள்ள புனலையுடைத்தான. சக்ரவர்த்தித் திருமகன்படி யுண்டாய்த்து காவேரிக்கும். ... ... (ச)

அரு.—நாலாம்பாட்டு (விளைத்தவித்யாதி) "எந்தை பெம்மான்" என்னும்படி என்னைத் தனக்காகக் கொள்ளுகையாலே ஸம்ஸார ஸமுத்ர மத்யகதமான (ங) *ஆக்கையின்வழி யுழலுகையைப் போக்கின உபகாரத்தையு மெண்ணி, இதுக்கு தருஷ்டாந்தமாக ிலங்கை யழித்தமையை யருளிச்செய்கிருரென்று ஸங்கதி

(ச) "సహపత్న్యా విశాలాక్ష్యా నారాయణముపాగమత్ - ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயண முபாகமத்" என்கிறபடியே பெருமாளுக்கு உபாஸ்யரான பெரிய பெருமாளை அவராகச் சொன்னுருண்டோ வென்ன வருளிச்செய்கிருர் (செருவிலே யிதயாதி).

"முன்-உந்தி" ‡வேர்த்து-ந்ருத்தம்பண்ணி யென்ருய் அருளிச்செய்கி (கொள்வாரித்யாதி) லீலாரஸாநுபவத்திலே தருஷ்டாந்தமருளிச்செய்கிரு(சக்ரவாத்தியித்யாதி) ஓரம்பாலே இலங்கையழிக்க வல்லராயிருக்கச் செய்தேயும் செருக்காலே சர(ஶர)பரம்பரையாலே விளையாடினுப்போலே, அலைகளை மேன்மேலுமெறிந்துகொண்டு விளையாடுகிற தென்று கருத்து. .. ... ... ... ... ... ... (ச)

மூ.—வம்புலாம் கூந்தல் மண்டோதரி காதலன் வான்புக
அம்புதன்னால் முனிந்த வழகனிட மென்பரால்
உம்பர்கோனு முலகேழும் வந்தீண்டி வணங்கும் நற்
செய்பொனேரும் மதிள் சூழ்ந்தழகார் தென்னரங்கமே. (ரு)

(க) ரா-ஸு-உ-சு-உசு. (உ) திருமா-கக.
(ங) தி-வாய்-ங-உ-க. (ச) ரா-அயோ-சு-க.
‡ (பா) நிறு.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உம்பர் | தேவதைகளுக்கு [ம் | வம்பு | பரிமளமானது |
| கோனும் | நாதனை ப்ரஹ்மாவு | உலாம் | உலாவாநின்ற [ளான |
| உலகு ஏழும் | ஸப்தலோகங்களும் | கூந்தல் | மயிர்முடியை யுடைய |
| வந்து | இட்டி | மண்டோதரி | மண்டோதரிக்கு [ன் |
| ஈண்டி | ஒன்றாகத்திரண்டு | காதலன் | வல்லபனை ராவண |
| வணங்கும் | ஆம்ரயிக்குமதாய், | வான் | வீரஸ்வர்க்கத்தை [க |
| நல் | ஸ்ப்ருஹணீயமாய், | புக | ப்ரவேசிக்கும் படியா |
| செம்பொன் | பசும்பொன்னோடு | அம்புதன்னால் | பாணத்தினாலே [ற) |
| ஆரும் | ஒத்திருக்கிற காந்தி யை யுடையதுமா ன [லே | முனிந்த | சீறி (அவனைக்கொன் |
| மதிள் | ப்ராகாரங் களினா | அழகன் | வீரம்ரீயை யுடைய னை சக்ரவர்த்தி த் திருமகனுடைய |
| சூழ்ந்து அழகுஆர் தென்னரங்கம், | | இடம் என்பர். | (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வம்புலாம்கூந்தல்) பிராட்டியோடே கூட சக்ரவர்த்தித்திருமக னநுபவிக்கத் தானும் மண்டோதரியோடே அநுபவிக்கை யன்றிக்கே வழிகெட வநுபவிப்பதாகப்பாரித்த ராவண னையவன் சித்ரவதத்தாலே வீரஸ்வர்க்கத்தைப்ராபிக்க,அவர்களைப்போ லே வழிகெடவன்றிக்கே நேர்கொடு நேரே அம்பாலே அழியச்செய்த வீரம்ரீயால் குறைவற்ற சக்ரவர்த்தித் திருமகன் வர்த்திக்கிறதேசமெ ன்று நிற்பர்கள். எதிரிகளும் (க) “రఞ్జనీయస్య విక్రమైః - ரஞ்ஜநீயஸ்ய விக்ரமைஃ” என்றுநிற்பர்களிறே.

(உம்பரித்யாதி)தேவர்களுக்கு நிர்வாஹகனை ப்ராஹ்மாவும் அவ னாலே ஸ்ருஷ்டமான ஜகத்திலுள்ளாரும் திரண்டு ஆம்ரயிக்கும்படி யாய், ஸ்ப்ருஹணீயமாய், உள்ளுச்சாய்ந்த வஸ்துவுக்கு அரணாகப் போரும்படியான மதிளாலே சூழப்பட்டு தர்மநீயமான தென்னரங் கமே. ... ... ... ... ... ... ... (ரு)

அரு.—அஞ்சாம்பாட்டு. (வம்பித்யாதி) எந்தை பெம்மானுகையாலே (உ) “என்னைத் தீமனம் கெடுத்தாய்”என்று சொன்ன உபகாரத்தை அநு ஸந்தித்து, அதுக்கு த்ருஷ்டாந்தமாக, (ங) “దశేన్ద్రియాననం ఘోరం యోమనో రజనీచరమ్ - தசேந்த்ரியாநநம் கோரம் யோ மநோ ரஜநீசரம்” என்று சொல்லத்தக்க ராவண நிரஸநத்தை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

(க) ரா-யு-கO ஈ-ஈ. (உ) தி-வாய்-உ-எ-அ. (ங)

ராவணனை இங்ஙன் விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (பிராட்டி யித்யாதி). ... ... ... ... ... ... (ரு)

மூ.—கலை யுடுத்த வகலல்குல் வன் பேய்மகள் தாயென
முலை கொடுத்தா ளுயி ருண்டவன் வாழுமிடமென்பரால்
குலையெடுத்த கதலிப் பொழிலூடும் வந்துந்தி முன்
அலையெடுக்கும் புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. ... (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எடுத்த | உயர வெடுக்கப்பட்ட | அகல் | விசாலமான |
| குலை | குலைகளை யுடைத்தான | அல்குல் | நிதம்ப ப்ரதேசததை யுடையளாய் |
| கதலி | வாழைகளுடைய | | |
| பொழில் ஊடும் | சோலைகளினுள்ளே | தாயென | தாயான யசோதை யைப்போலே |
| வந்து | ப்ரவேசித்து (அம்மரங்களைப்பறித்துக் கொண்டு) | முலைகொடுத்தாள் | முலையைக் கொடுத்தவளுமாய், [ய் |
| | | வன் | க்ரூர ஸ்வபாவையுமா |
| முன் | முன்னே | பேய்மகள் | பேய்ச்சியுமான பூதனையினுடைய |
| உந்தி | தள்ளி | | |
| அலையெடுக்கும் | அலைவீசி யடியாநின்ற | உயிர் | ப்ராணனை |
| | | உண்டவன் | பக்ஷிதத கண்ணன் |
| புனல் | ஜலத்தையுடைத்தான | வாழும் | நித்யவாஸம் பண்ணுகிற |
| காவிரிசூழ் தென்னரங்கம், | | | |
| கலை | பட்டவஸ்த்ரத்தை | இடம் என்பர். | (௬) |
| உடுதத | அணிந்த | | |

வ்யா.—ஆரும்பாட்டு. (கலையுடுத்தவகலல்குல்) யசோதைப் பிராட்டியைப்போலே அலங்கரித்துக்கொண்டு கலையை யுடுத்து அகன்ற நிதம்பப்ரதேசத்தை யுடைய. (வன்பேய்மகள்) யசோதைப்பிராட்டியி லிவளுக்கோரேற்றம் - வன்மையாய்த்து. (தாயித்யாதி) யசோதைப் பிராட்டியைப்போலே பரிவெல்லாம் தோற்ற ஒசழுக்காகத் தூக்கியெடுத்து. (முலைகொடுத்தாளுயிருண்டவன்) அவள்முலை கொடாவிடில் தரியாதாளாய் வந்தாப்போலே, இவனும் முலையுண்ணுவிடில் தரியாதானுய் அவளுயிரை முடித்தவன். இன்னு மிங்ஙனொத்த விரோதிகளைப் போக்குகைக்காக அணித்தாகவந்து வர்த்திக்கிற தேசமென்னு நிற்பர்கள்.

(குலை) ஓங்கின குலைகளையுடைத்தாயிருந்துள்ள வாழைச்சோலைக்குள்ளே வந்துபுகுந்து அவற்றையடையப் பறித்துக் கொடுபோந்து

சுமை தள்ளுவாரைப்போலே தள்ளாநின்றுள்ள புனலை யுடைத்தான காவிரிசூழ் தென்னரங்கமே. க்ருஷ்ணன் விரோதிகளைப்போக்குமாபோலே, நேரேநின்ற மரங்களைப் பறித்துக் கொடுவந்து பொகடாநிற்குமாய்த்து. ... ... ... ... ... (சு)

அரு.—ஆரும்பாட்டு. (கலை யித்யாதி) (க) * கள்ளத்தே நானும்தொடாய்த்தொண்டுக்கே கோலம்பூண்ட யாதொரு கள்ளமனமுண்டு, அத்தையும் தவிர்த்து, (உ) * மருவித்தொழும் மனமேதந்த உபகாரத்தை எண்ணி, இதுக்கு நேரான த்ருஷ்டாந்தமாக பூதநா நிரஸநத்தை யருளிச்செய்கிறரென்று ஸங்கதி.

(ஓசமுக்காகத்தூக்கி) சற்றே தூக்கி. ... ... ... (சு)

மூ.—கஞ்சன் நெஞ்சும் கடுமல்லரும் சகடமும் காலினால்
துஞ்ச வென்ற சுடராழியான் வாழுமிடமென்பரால்
மஞ்சு சேர் மாளிகை நீடகிற்புகையும் மறையோர்
செஞ்சொல்வேள்விப் புகையும் கமழும் தென்னரங்கமே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மஞ்சு | மேகமண்டலத்தை | கமழும் | பரிமளியாநின்ற தென்னரங்கம், |
| சேர் | (ஓங்கி) அளாவியிருக்கிற [டாய் | கஞ்சன் | கம்ஸனுடைய |
| மாளிகை | க்ருஹங்களிலே யுண் | நெஞ்சும் | மநஸ்ஸும் |
| நீடு | ஓங்கிப்போகா...ற | கடு | க்ரூரமான |
| அகில்புகையும் | அகில் தூமமும் | மல்லரும் | சாணூராதிகளும் |
| மறையோர் | ப்ராஹ்மணர்களாலநுஷ்டிக்கப் பட்டதாய் | சகடமும் | சகடாஸுரனும் |
| | | துஞ்ச | அழியும்படியாக |
| | | காலினால் | திருவடிகளினாலே |
| செம் சொல் | அழகிய சொல்லான வேதத்திலே ப்ரதிபாதிக்கப் பட்டதான | வென்ற | (உதைத்து) ஜயித்தவனாய் |
| | | சுடர் | உஜ்ஜ்வலமான |
| | | ஆழியான் | திருவாழியை யுடையவனுமான ஸர்வேஶ்வரன் |
| வேள்வி | யாகத்திலேயுண்டான | | |
| புகையும் | தூமமும் | | வாழும் இடம் என்பர். (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) கஞ்சனுடைய திண்ணிய நெஞ்சும், அவன்றன் கார்யத்தில் அவன்றன்னிலும் பரிவரானகை

(க) திருமா-கச. (உ) தி-வாய்-உ-எ-எ.

யாலே கடியராயிருக்கிறமல்லரும்,கடுமைதோன்றுதபடி மறையநின்ற சகடமும். (காலினால்) திருவாழியும்' கையிலே யுண்டாயிருக்கச் செய்தே அதுகொண்டு வ்யாபரிக்கப் பற்றாமையாலே, (க) "திருக்கா லாண்ட பெருமான்'' என்கிறபடியே - திருவடிகளாலே யழியச்செய் தவன் வர்த்திக்கிற தேசமென்பர்கள். தலைமயிரைப்பிடித்துக் கீழே விழவிட்டு முதுகிலே திருவடிகளாலே பாய்ந்தும், மல்லவர்க்கத்தைத் தானே திருவடிகளாலே நெருக்கியும், முலைவாவு தாழ்த்து நீட்டின வ்யாஜத்தாலே உதைத்தும் திருவடிகளாலே யிறே நிரஸித்தது.

(மஞ்சித்யாதி) மேகபதத்தளவும் செல்ல ஓங்கின மாளிகைகளி லே அகில்களாலே ப்ரவர்த்திப்பித்த ஓங்கின புகையும், வேதவிஹித மானபடியே அங்குத்தை ப்ராஹ்மணர் யாகாதிகளிலே யுண்டாக்கின ஹோமதூமமும், இவை தன்னிலே விரவிக்கொண்டு கமழாநின்றுள்ள தென்னரங்கமே. ... ... ... ... ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) தம்முடைய ஸகலவிரோதி பாபங்களையும் போக்கினது தன் கால்வலத்தாலே என்றெண்ணி, இவ்வுப காரத்துக்கு மொரு த்ருஷ்டாந்த மருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

கஞ்சனும் என்னவேண்டி யிருக்கவும் "நெஞ்சும்" என்று சொல்லு கை இவனுடைய நெஞ்சே அதிக்ரூரமென்று தோற்றுகைக்கென்று விவ க்ஷித் தருளிச்செய்கிறார் (திண்ணியநெஞ்சு' என்று. காலினால் பாய்ந்தது சகடத்தையன்றோ வென்ன வருளிச்செ[illegible] (தலையித்யாதி). (திருவடி களாலே) என்ற வநந்தரம், "கஞ்சனை" என்று கூட்டுவது.

(விரவி) பரவியென்கை. ... ... ... ... ... (எ)

மூ.—ஏன மீனாமையோடரியும் சிறு குறளுமாய்த்
தானுமாய தரணித் தலைவனிட மென்பரால்
வானும் மண்ணும் நிறையப் புகுந்தீண்டி வணங்கும் நல்
தேனும் பாலும் கலந்தன்னவர் சேர் தென்னரங்கமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வானும் | பரமபதத்திலுள்ள நித்யஸூரிகளும் | புகுந்து | வந்துப்ரவேசித்து |
| | | ஈண்டி | ஒன்றாகத்திரண்டு |
| மண்ணும் | பூமியிலுள்ள ஸம்ஸாரிகளும் | வணங்கும் | ஆஶ்ரயியாநிற்க (அப்பொழுது) |
| நிறைய | ஸம்பூர்ணமாக | நல் | மதுரமான |

(க) தி-வாய்-௬-௯-௪.

| | | | |
|---|---|---|---|
| தேனும் | தேனும் | சிறு | மிகவும் சிறியனான |
| பாலும் | பாலும் | குறளும் | வாமநனாகவும் |
| கலந்தன்னவா | ஒன்றாகச் சேர்ந்தாப் போலே ஏகரஸரா யிருக்கிற பக்தஜந ங்கள் | ஆய் | அவதரித்தவனாய், |
| சேர் | அடைந்திருக்கிற | தானும் ஆய | தானே பூர்ணாவதார மெடுத்தவனாய்க் |
| தென்னரங்கம், | | தரணி | பூமிக்கு |
| ஏனம் | மஹாவராஹமாகவும் | தலைவன் | [கொண்டு நிர்வாஹகனான சக்ர வர்த்தித் திருமக னாக அவதரித்தவ னுமான ஸர்வேச்வரனுக்கு |
| மீன் | மத்ஸ்யரூபியாகவும் | | |
| அரியும் | நரஸிம்ஹமாகவும் | | இடம் என்பர். (அ) |

வ்யா—எட்டாம்பாட்டு. அநேகாவதாரங்களைப் பண்ணிக்கொண்டு வந்து ரக்ஷகனானவன் அவ்வவதாரகாலங்களில் பிற்பாடர்க்கு மிழக்க வேண்டாதபடி வந்து ஸந்நிஹிதனான தேசம் கோயிலென்கிறார்.

(ஏனமித்யாதி) ப்ரளயங்கொண்ட ஜகத்தை யெடுத்துக்கொண் டேறுகைக்காக வராஹவேஷத்தைப் பரிக்ரஹித்தும், அப்படிப்பட்ட ப்ரளயந்தன்னைத் தன் செலுவிலே யடக்கவற்றான மத்ஸ்யமாயும், மந்தரம் கீழ்விழாதபடி தரிக்கவல்ல ஆமையாயும, இப்படி யொருவ டிவு கொண்டுவந்து உதவுகையன்றிக்கே, சேராத வடிவைச்சேர்த்துக் கொடுவந்து தோற்றின நரஸிம்ஹமாயும், நாட்டில் வாமார்க ளடங்க லும் வளர்ந்தருளினவிடம் என்னும்படி குறள்வடிவைக் கொண்டும். (தானுமாய) (க) "முன்னு மிராமனாய்த்தானாய்ப் பின்னு மிராமனாய்" என்னக்கடவதிறே. அல்லாத விடங்கள் சக்த்யைக தேசம், அவன் றானே வந்தானென்னக் கடவதிறே ராமாவதாரத்தை. அப்படியே பூமிப்பரப்படங்கலுக்கும் நிர்வாஹகனான சக்ரவர்த்தித் திருமகன் வர்த்திக்கிற தேசமென்பர்கள்.

(வானுமித்யாதி) பரமபதத்தில் நித்யஸூரிகளும் பூமியிலுள்ள ஸம்ஸாரிகளும் நிறையப்புகுந்து திரண்டு ஆஶ்ரயிக்க, நன்றான தே னும்பாலும் கலந்தாப்போலே யாய்த்து இங்குள்ளாரெல்லாரும் தங்க ளிலே ஒருமிடறா யினியராயிருக்கும்படி. விஜாதீயத்ரவ்யம் கலந் தாப்போலன்றியே, ஸஜாதீயம கலந்தாப்போலே யாய்த்து. நித்ய ஸூரிகள் ஸம்ஸாரிகள் என்கிற வாசிதெரியாதே ஒரு நீராய்ப்பரி

(க) அ-அ-கo.

மாறுநிற்பர்கள். தேசாந்தரங்களில் முன்பு கண்டறியாதார் வந்து போகப்புக்கால, "பிரிந்துபோகா நின்றோம்" என்று கண்ணும் கண்ணீருமாயிறே யிருப்பது. ... ... ... ... (அ)

அந —எட்டாம்பாட்டு (ஏனமீதயாதி) கீழெல்லாம் தமக்கு பஹுவிதோபகாரங்களைப் பண்ணினவன் பலபடிகளைக் கொண்டானென்றதுவு மொரு தமக்கு உபகாரமென்றநுஸந்திக்கிறாரென்னும் ஸங்கதி தன்னை ஸூசிப்பிக்கிறார (அநேகேத்யாதி).

(தன்செலுவிலே) தன் கீழ்வயிற்றிலே ப்ரளயஜலத்தைக் கீழ்வயிற்றிலே அடக்கி ப்ராணிகளைத் தன்மேலே வைத்தான் மதஸ்யாவதாரத்திலே யென்று கருத்து. 'தரணிதகலைவன்" என்றால் போராதோ, "தானுமாய" என்று விசேஷண மிடவேணுமோவென்ன, அஸாதாரண விக்ரஹ விசிஷ்டமாய் ஸகல கல்யாணகுணஙகளுக்கு மாகரமாயிருக்கு மிருப்பு ராமாவதாரத்தில் ஸ்ப்படமாகையாலே விசேஷித்தாரென்று திருவுள்ளம்பற்றி, இவர்க்கிப்படி கருதவென்கைக்கு நியாமக மென்னென்ன வருளிச்செய்கிறார (முன்னு மிகயாதி, அப்பாட்டில் தானும் அல்லாதவவதாரத்தைப் பறறத தானான தன்மை யருளிச்செய்வானென்னென்ன வருளிசசெய்கிறார் (அல்லாத வித்யாதி) ராமாவதாரம் பூர்ணவதார மாகையால் மற்றை யவதாரங்களை சக்த்யாவேசமெனறு சொல்லலாம்படி யிருக்குமென்று கருத்து. இததால - மறறையவற்றுககு அபூர்த்தி சொல்லவந்ததில்லை; *நஹிநிந்தாந்யாயேந ராமாவதாரததி லேறறம் சொன்ன தித்தனை யென்றதாய்த்து

தேனும்பாலும் கலந்தால மாதுர்ய ரஸமொன்றுமே விஞ்சியிருக்குமா போலே ஏகரஸமாக விருந்தவர்களென்று ஒருயோஜனை யருளிச்செய்து, தேனும் தேனும் பாலும் பாலும் தன்னில தான் கலந்தாப்போ லிருந்தவர்களென்று அர்ததாந்தர மருளிச்செய்கிறார் (விஜாதீயேத்யாதி). ... (அ)

மூ.—சேயனெனறும மிகபபெரியன் நுண்ணேர்மையினுயவிம்
மாயையை யாரு மறியாவகையானிடமென்பரால்
வேயின்முததுமமணியும் கொணர்நதார் புனல்காவிரி
ஆய பொன மா மதிள் சூழ்ந் தழகார் தென்னரங்கமே. (கூ)

| பதம் | உரை | பதம் | உரை. |
|---|---|---|---|
| வேயின | மூஙகிலநினறு முதிர்ந்த | ஆர் | ஸம்ருத்தமான |
| முததும் | முத்துககளையும் | புனல் | ஜலத்தையுடைய [ம், |
| மணியு ம | ரதநஙகளையும் | காவிரி | திருக் காவேரியினுலு |
| கொணாநத | கொணடுவந்து தள்ளினறுள்ள | ஆய | தகுதியாய் |
| | | பொன் | பொன்போலே ஸ்ப்ருஹணீயமாய் |

| | | | |
|---|---|---|---|
| மா | பெரிதுமான | இம்மாயையை இந்த ஆம்சாய சக் | |
| மதிள் | ப்ராகாரங்களினுலும் | யாரும் | எவராலும் [தியை |
| சூழ்ந்து அழகு ஆர் தென்னரங்கம், | | என்றும் | எக்காலத்திலும் |
| சேயன் | தூரஸ்தனயிருந்தும் | அறியா | அறியக்கூடாத |
| மிகப்பெரிய | ஸர்வாதிகனு யிருந் | வகையான் | ப்ரகாரத்தை யுடைய |
| ன் | தும் [களிலும் | | னை ஸர்வேஸ்வர |
| நுண் | ஸூக்ஷ்ம பதார்த்தங் | | னுடைய |
| நேர்மையி | உட்புக்கு அதிஸூக்ஷ | | |
| னுய | மமா யிருக்கையா கிய | இடம் என்பர். | (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (சேயனித்யாதி) தூரஸ்த்தனுய் ஸர்வேஸ்வரனுயிருக்கு மிருப்பு, ஸூக்ஷ்மத்வத்தி லதி ஸூக்ஷ்மமான பதார்த்தங்க ளெங்கும் புக்கு வ்யாபித்துத் தரித்துக் கொடுநிற்கையாகிற இந்த ஆம்சர்ய சக்தியோகம், எத்தனையேனுமளவுடையாராலு மொருநாளு மறியவொண்ணுதபடி யிருக்கிறவன் வர்த்திக்கிற தேசமென்பர்கள்.

(வேயித்யாதி) ஸஹ்யபர்வதத்தி லுண்டானவேய்க ளுதிர்த்த முத்தும், அதிலுண்டான மணிகளையும் கொண்டுவந்து ‡ஈறுடாநின்றுள்ள மிக்க புனலையுடைத்தான காவிரி. உள்ளுசசாய்நத வஸ்துவுக்கு அரணுகப் போரும்படியான ஸ்பருஹணியமா யிருநதுள்ள மதிள்களாலே சூழப்பட்ட தர்ஸநீயமான கோயில். ... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (சேயனித்யாதி) கீழ் அவதாரங்களை யெல்லாம் ஸ்வார்த்தமாக அநுஸந்தித்தாப்போலே வ்யாப்தியையும் ஸ்வார்த்தமாக வநுஸந்தித்து, தம்மைப்பிடிக்க வளைத்தானென்று அவ்வுபகாரத்தை யநுஸந்திக்கிருரென்று ஸங்கதி.

"என்றும்" என்றபதத்தை "ஆரும்" என்றவநந்தரம் அந்வயித்து அர்த்த மருளிச்செய்திருர் (ஒருநாளும்) என்று.

"ஆய" என்றதினர்த்தம் (அரணுகப் போரும்படியான) என்றது. (கூ)

மூ.—அல்லிமாதுாமரும் திருமார்வ னரங்கத்தைக்
கல்லின் மன்னுமதிள் மங்கையர் கோன்கலிகன்றிசொல்
நல்லிசை மாலைகள் நாலிரண்டு மிரண்டுமுடன்
வல்லவர் தாமுலகாண்டு பின்வானுலகாள்வரே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

‡ (பா) திரட்டாநின்றுள்ள.

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அல்லி | தாமரைப்பூவைப் பிறப்பிடமாக வுடைய [பிராட்டியார் | சொல் | அருளிச்செய்ததாய் |
| மாதர் | பெண்ணான பெரிய | நல் | அழகியதாய் |
| அமரும் | பொருந்தி நித்யவாஸம் பண்ணுகின்ற | இசை | கானத்தோடு கூடின |
| திரு | அழகிய | மாலைகள் | சப்த ஸந்தர்ப்ப ரூபமான |
| மார்வன் | திருமார்பை யுடையனான ஸர்வேஸ்வரன் நித்யவாஸம் பண்ணுகிற | நால்இரண்டும் இரண்டும் | பத்துப் பாட்டுக்களையும் [தோடு |
| அரங்கத்தை | திருவரங்கமென்னும் திவ்யதேச விஷயமாக, [டு | உடன் | அர்த்தாநு ஸந்தானத் |
| கல்லில் | கல்லாலே கட்டப்பட் | வல்லவர்தாம் | அப்யஸிக்குமவர்கள், |
| மன்னு | டிருடமாயிருக்கிற | உலகு | பூலோகத்திலுள்ள திருவரங்க மென்னும் திவ்யதேசத்திலே (இருந்து) |
| மதிள் | ப்ராகாரத்தையுடைய | ஆண்டு | பகவத்குணங்களை அநுபவித்து, |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளா [ர்க்கு | பின் | இந்த சரீரம் கழிந்தவாறே |
| கோன் | ஸ்வாமியான | வானுலகு | பரமபதத்தை |
| கலிகன்றி | ஆழ்வார் | ஆள்வர் | ஆளக்கடவர்கள். ௧0) |

வ்யா. — பத்தாம்பாட்டு. அல்லிமாதரமரும் திருமார்வனரங்கத்தை யாய்த்துக் கவிபாடிற்று. "இம்மார்வைவிட்டு, பழையதாமரைப் பூவிலே போயிருக்க வேண்டில் செய்வதென்?" என்று அஞ்சும்படியான மார்வைப்படைத்தவன். (க) "அகலகில்லேன்" என்றிறே வார்த்தை. (கல்லிலித்யாதி) அரணாகப் போரும்படியான மதிளாலே சூழப்பட்ட திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த, நன்றான இசையோடே கூடின தொடை நாலிரண்டுமிரண்டினையும். இதிலுண்டான ஆதரத்தாலே சேர்த்தநுபவிக்கிறார். இவற்றை ஸாபிப்ராயமாக அப்யஸிக்க வல்லவர்கள், கோயிலிலே யிருந்தநுபவித்து, பின்னை சரீர ஸமநந்தரம் பரமபதம் தாங்களிட்ட வழக்காகப் பெறுவர்கள். ... ... ... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

(க) தி-வாய்-௬-௧0-௧0..

அரு.—பத்தாம்பாட்டு. (அல்லியித்யாதி) "அல்லி" என்று - தாமரை யிதழாய், அதில் "மாதரம்ரும்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமரு ளிச்செய்கிருர் (இம்மார்வை யித்யாதி). கல்லாலே, மன்னு - த்ருடமாயி ருக்கிற வென்று சப்தார்த்தமா யருளிச்செய்கிருர் (அரணித்யாதி). பத்து என்ருதே இப்படிப் பிரித்துச் சொன்னதுக்குத் தாத்பர்ய மருளிச்செய் கிருர் (இதிலித்யாதி). இத்தால் - இரண்டிரண்டாக வொருநாலும் தனி யே ஓரிரண்டுமாகப் பிரிக்கைக்கு,"உந்தி" "வையம்" என்கிற விரண்டும், உலகுண்ட வடதளசாயி விஷயதயா ஒரு சேர்த்தியுடைத்தாய்,"விளைத்த" "வம்பு" என்கிற விரண்டும் - ராமன் விஷயமாகையால் ஒரு கோவையுடை த்தாய், "கலை" "கஞ்சன்" என்றிரண்டும் - க்ருஷ்ண விஷயமாகையால் அதொரு சேருடைத்தாய், பரத்வ ப்ரதிபாதகமாய்க்கொண்டு அதுக்குறுப் பான ஸ்ரியஃபதித்வத்தை ப்ரதிபாதிக்கிற "சேயன்" "அல்லி" என்கிற பாட்டுக்கள் ஒரு சேர்வை, இப்படி நாலு த்விகத்தில் ஒருப்ரேமமும் திருக் குறளன் விஷயம் ஒருபாட்டும் ஸகலாவதாரஸமுதாய விஷயமாக ஒரு பா ட்டுமாயிருக்கிற "பண்டு" "ஏனம்" என்கிற விரண்டில் தனித்தனியே ஒரு ப்ரீதியு முடையராய், இப்படி விசேஷித்தா ரென்றதாய்த்து. "உடன்" என்றதுக்கு உக்தப்ரகாரமான சேர்த்தியில் கருத்துடன் என்றர்த்தம் விவக்ஷித் தருளிச்செய்கிருர் (ஸாபிப்ராயமாக) என்று. அரங்கத்தை ப்ரதி பாதிக்கிற திருமொழிக்கு *அரங்கன் திருமுற்றத்தடியாரோடிருக்கையை பல(ஃப)மாகச் சொல்லவேணுகையாலே, "உலகாண்டு" என்றது - பூலோகத்தில் ஸ்ரீமந்மந்திரமான விடத்தி லிருப்பைச் சொல்லுமென்று விவக்ஷித் தருளிச்செய்கிருர் (கோயிலிலே யித்யாதி). . . ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.



அஞ்சாம்பத்தில் நாலாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## அஞ்சாம்பத்து அஞ்சாந் திருமொழி

### வெருவாதாள் ப்ரவேசம்.



வ்யா.—தன்னைபபேருதே ரக்ஷிக்குமவன் ஸந்நிஹிதனுயிருக்க, அபேக்ஷை யுண்டாயிருக்க, அபிமதமான கைங்கர்யம் பெருமையா லே தமக்குப்பிறந்த அவஸாதாதிசயத்தை, பகவத் விரஹத்தால் வந்த ஆற்ருமையோடே இருக்கிற வொரு பிராட்டி தசையை யது

ஸந்தித்து, "அவனை இவளோடே கூட்டமாட்டுகிறிலேன், இவளை நோவுபடாதபடி பண்ணமாட்டுகிறிலேன், எத்தைச் செய்வேன்!" என்று நோவுபடுகிறு ளொரு திருத்தாயார் பாசுரத்தாலே யருளிச் செய்கிறார். ... ... ... ... ... ... (*)

---

அரு — வெருவாதாளின் ப்ரவேசம்.—கீழ்த்திருமொழியில் தமக்கு பஹுப்ரகாரமாக அவன் பண்ணின உபகாரங்களை அநுஸந்தித்தவர், இதில் அவஸாதத்தாலே நோவுபடுகைக்கு ஸங்கதி யென்னென்ன; தாம் பல திருப்பதிகளிலும் நுழைந்தவிடத்திலும் நினைத்தபடி பரிமாற முகங் கொடாதிருக்க, அவன் *எனமீனமையோ டரிகுறளாய் பலபடியுடைய னாய் அபேக்ஷித்தா ரபேக்ஷித்தபடி செய்யுமவன் என்னபேக்ஷிதம் செய் யாமல் போனனென்று நோவுபட்டு பிராட்டி தசையை யடைந்து வாய் வெருவுகிறு ரென்னும் ஸங்கதியை யருளிசசெய்கிறார் (தன்னை யித் யாதி). ... ... .. .. .. .. .. ... (*)

மூ.—

வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே வேங்கடமே யென்கின்றாளால்
மருவாளாலென்குடங்கால் வாணெடுங்கண்டுயில் மறந்தாள்வண்டார்கொ
ளுருவாளன்வானவர்தமுயிராளனொலிதிரைநீர்ப்பௌவம்கொண்ட [ண்ட
திருவாள னென்மகளைச செய்தனகளெங்ஙனம நான் சிந்திக்கேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெருவாதாள் | (எனமகள) அச்சமற றவளாய்க் கொ ண்டு | துயில் | உறக்கத்தை |
| | | மறந்தாள் | மறந்துவிட்டாள் (நித் ரை போகிறிலள்), |
| வாய்வெருவி | வாய்புலற்றினவளாய் | வண்டு | வணடுகளினலே |
| வேங்கடமே வேங்கடமே என்கின்றாள் | திருவேங்கடமே என்று பலகாலும் சொல்லாநின்றாள், | ஆர | பூர்ணமான |
| | | கொண்டல் | மேகம்போன்ற [ய், |
| | | உருஆளன் | திருமேனி யுடையனு |
| ஆல் | கஷ்டம், | வானவர்தம் | நித்யஸூரிகளுக்கு |
| என்குடங்கால் | என்மடியில் | உயிராளன் | ப்ராணபூதனுய், |
| மருவாள் | பொருந்துகிறிலள், | ஒலி | சப்தியாநின்ற |
| ஆல் | கஷ்டம்; [ணமாய் | திரை | அலைகளினுடைய |
| வாள் | வாள்போலே தீக்ஷ் | நீர் | ஜலத்தையுடைத்தான |
| நெடு | பரப்பையுடைத்தான | பௌவம் | ஸமுத்ரத்திலே [ன |
| கண் | கண்களிலே | கொண்ட | பிறப்பை யுடையனா |

| | | | |
|---|---|---|---|
| திரு | பெரிய பிராட்டியார்க்கு [வேஸ்வரன் | செய்தனகள் | செய்தவகைகளை |
| | | நான் | நான் |
| ஆளன் | வல்லபனுமான் ஸர் | எங்ஙனம் | எப்படி |
| என்மகளை | என்னுடைய பெண்பிள்ளையை | சிந்திக்கேன் | நினைப்பிடுவேன்? (க) |

வ்யா.—முதற்பாட்டு. (வெருவாதாளித்யாதி) பெருமாளுடைய இங்குத்தை வரவாறே பிடித்து ஆற்றாமைக் குடலாமபடி காணும் பிறந்த ப்ராவண்யாதிசயம. "திருப்பாணாழ்வார் (க) 'அன்று நேர்ந்த நிசாசரரை' என்று - ராவணவதமேதுடங்கிப் பெருமாளை அடியொத்தினார், அது தெற்குத் திருவாசலாலே புகுந்து கிடந்தது; (உ) 'மந்திபாய்' என்று - பரமபதமே துடங்கி அடியொத்தினார், திருமலையிலே புகுந்துகிடந்தது; அங்கே பார்த்தவாறே நின்றபடியைக் கண்டார், இன்னமும போக்கிலே ஒருப்பாடுதோற்றி யிருந்தது என்று அவ்விடமேதுடங்கி அடியொததினவாறே வடக்குத் திருவாசலாலே புகுநது, படுக்கை இங்கேயாயிருந்தது' என்று, பட்டர் *அமலனாதிபிரானருளிச்செய்யாநிற்க நான் கேட்டேன்" என்று பிள்ளை அருளிச செய்தார் (வெருவாதாள்) அஞ்சாதாளென்றபடி; நெஞ்சில்†களவு கலசாமையாலே. தனக்கோடுகிறது சிலர்க்கு அஞ்சி மறைத்தல், சிலர்க்கு வெளியிடுதல் செய்யும் பருவமல்லாதவள்.‡அஞ்சவறியாதவளென்கை. நன்றால் மறைக்கலாவதெல்லாம் மறைத்தாள், மறைக்க முடியாமை. அவ்வளவேயோ, பரத்வத்தைவிட்டு, வ்யூஹதலை விட்டு, விபவங்களைவிட்டு, உகந்தருளின தேசத்தையே வாய்வெருவி யிருக்கும்படியாய் விழுந்தது. ஒருகால் "திருமலை" என்னு, பின்னையும் உள்ளுப்புக வறிகிறிலள். (ங) *"காட்கரையேத்தும் அதனுட் கண்ணு" என்கிறிலள். (என்கின்றாளால்) அப்பேச்சு தனக்காகர்ஷகமாயிருக்கிறபடி. (ச) "സീതേതി മധുരാം വാണീം - ஸீதேதி மதுராம் வாணீம்" என்று வாய் வெருவுவானவனு யிருக்க, அத்தலை யித்தலையாய்விட்டது. "ஸீதேதி மதுராம்வாணீம்" என்று சொல்லுகிறவர் தாம் *தீமதாம் (ധീമതാം) வராய், வார்த்தை தான் பிராட்டி விஷயமான பேச்சாய், பிரிவால் வநத மிடற்றில் துவட்சியாலே சொல்லுகிறது சால மதுரமாயிருக்குமிறே. "பட்டர் 'அழகிய மணவாளப்

(க) அமல-உ. (உ) அமல-ங. (ங) தி-வாய்-கூ-சு-எ. (ச) ரா-ஸு-ருசு-உஉ.
† களவு-யௌவநம். ‡ (பா) அஞ்சிமறையாதவள்

பெருமாள்' என்னும் போதும், அநந்தாழ்வான் 'திருவேங்கடமுடை யான்' என்னும் போதும், பா(ஃ)வபந்தமடையத் தோற்றி யிருக் கும்படி காண்!'' என்று ஜீயர்.

மற்றொன்றை வாய்வெருவாள்; ஏதேனு மளவிலும் முன்பு உன் மடியிலே வைத்து ஆற்றப்பார்க்கில் ஆறும், நீ அப்படி ஆஶ்வஸிப் பித்தாலோவென்ன; பண்டு மருவிப்போந்தவள் என்மடியிலிப்போது மருவுகிறிலள். அதுதான் செய்யாமையு மில்லை; இவளிசையாமை யுமில்லை; அப்படி இவளால் செய்து தலைக்கட்டப் போகிறதில்லை. "தாய்மடி" என்று ‡மனிச்சடித்து நெருப்பிலே யிருக்கப்போகாதி றே; தாய்மடியும் பொருந்தாதபடி ஆர்மடி இவளை இப்படிதுஶ்ஶி க்ஷை பண்ணிவிட்டதோ! அறிகிறிலேன். என் மடியல்லது அறியா தவள் என்மடியில் பொருந்துகிறிலள். மடியிலிராளாகில் படுக்கை யிலே வளர்த்தி உறங்குமாகில் பார்த்தாலோ வென்ன (வாணெடுங்க ணித்யாதி) அது, முதலிலே பிடித்து வ்யுத்பத்தி பண்ணுவிக்கவே ணும். (வாள்) ஓராளு மொருநோக்கும் நேராயிருக்கை. (நெடுங்கண்) போக்தாவால் புஜித்துக் கரைகாண வொண்ணுதகண். பெரிய ஊர் குடி வாங்கினாப்போலே கண்ணில் பரப்பித்தனையும் நித்ரை குடிபோ னபடி. ஆகையால், கண்ணில் பரப்பித்தனையும் தலைச்சுமையாய்த்து.

(க) "நோபஜநம் ஸ்மரந் - நோபஜநம் ஸ்மரன்" என்னப்பண்ணினா ரைச் சொல்லுகிறதுமேல். (வண்டாரித்யாதி) வடிவழகாலும் சேஷ்டி தங்களாலுமாகவாய்த்து இப்படி பண்ணிற்று. அகவாயில் ஜலத்தி னுடைய ரஸ்யதையாலே மேகத்திலே வண்டுகள் படிந்திருக்குமென் றுமாம். (வண்டு) (உ) "செங்கட்கருமுகிலின் திருவுருப்போல் மலர் மேல் தொங்கிய வண்டினங்காள்" என்று வண்டை வடிவுக்குப் போலி யாகச் சொல்லிற்றிறே. (வானவரித்யாதி) இவ்வடிவு தன்னை அரைக்ஷ ணம் கண்ணுக்கிலக்காகாதபடி மறைவைக்கில், ஒருநாடாக ஜீவியாத படி பண்ணுமவன். (ஒலியித்யாதி) கடலைக்கடைந்து பிராட்டியை லபித்தவன். (என்னித்யாதி) அவளைப் பெறுகைக்குச் செய்ததித்த னையும் போருமாய்த்து இவளை நோவுபடுத்துகைக்குச் செய்ததும். (எங்ஙன மிதயாதி). இவள் தன் ஸர்வஸ்வத்தையும் நேர்ந்து செய்தத் தை என்னாலே நினைக்கப்போமோ? அவனகப்படுத்த இவள் குமிழி

(க) சாந்தோ-அ-கஉ. (உ) நா-தி-கூ-ரு.

‡ மனிச்சடித்து-முனையாலே சலிகைபண்ணி. சலிகை-செல்வாககு.

நீருண்ணுமித்தனை யொழிய, கரையிலே நிற்கிற வென்ருல் "இன்ன படி" என்று நினைக்கப்போமோ? ... ... ... ... (௧)

அரு.—முதற்பாட்டு. (வெருவாதாளித்யாதி) கீழே திருவரங்கத்தை அநுபவித்தவராயும், மேலும் அரங்கத்தையே அநுபவிக்கையாலும், இத் திருமொழி நிகமத்திலே - "திருவரங்கத் தம்மானைச் சிந்தைசெய்த" என்றிருக்கையாலும், கோயிலையன்ரே வாய்வெருவ வேண்டுவது, திருமலையை வெருவுகைக்குக் காரண மென்னென்ன வருளிச்செய்கிருர் (பெருமாளுடைய வித்யாதி). (௧) "విధేరిక్ష్వాకులబ్ధాయ విభీషణకృతే పునః । దత్తాయ - விதேரிக்ஷ்வாகு லப்த்தாய விபீஷணக்ருதேபுநః । தத்தாய" என்றன்ரே வரவாறு, திருமலை வரவாருவானென்னென்ன வருளிச் செய்கிருர் (திருப்பாணாழ்வாரித்யாதி). *அமலனாதிபிரானில் முதற்பாட்டில் - பரமபதத்தையும் திருமலையையும் திருவரங்கமுமாக அநுபவித்த வநந்தரம், திருவுலகளந்தவனையும் காகுத்தனையு மநுபவித்தும், மூன்ரும்பாட்டில் - திருவேங்கடத்தை யநுபவித்தும், இங்ஙனே அரியுருவையும் ஆலினிலையானையும் வெண்ணெயுண்டவாயனையு மநுபவித்துப் போந்ததெல்லாம், (௨) "மற்றொன்றினைக் காணாவே" என்ற அதிமாத்ர ப்ராவண்யத்துக்குச் சேர அடியொத்தினதித்தனை யொழிய, இவர்க்கு அவற்றிலும் ப்ராதாந்யேந ப்ரேமமில்லையென்ன வேண்டுகையாலே, பட்டர் திருவாசற்களாலே புகுந்ததாக அநுபவமுண்டாய்த்தென்று அருளிச்செய்தாராகையாலே, இவ்வாழ்வாரும், கீழ்த்திருமொழியில் - ஆலிலைமேவு மாயன் முதலாக ராமக்ருஷ்ணாதயவதாரங்களை எல்லாம் பெரியபெருமாளாக அநுபவித்தபடி சொல்லுகையால், பாரிசேஷ்யாத் திருமலையை அடியொத்தின படியையும் சொல்ல வேண்டுகையாலே அத்தை இப்பாட்டி லருளிச்செய்தாரென்று திருவுள்ளம். "மந்திபாயென்று" என்றத்தை, "நின்றபடியைக்கண்டார்" என்றத்தோ டந்வயிப்பது. அஞ்சாமைக்கு ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிருர் (நெஞ்சி லித்யாதி) களவு கலசாமையாவ தென்னென்ன வருளிச்செய்கிருர் (தனக்கித்யாதி). †பால்யத்தாலே மறைக்கமாட்டாமையன்றிக்கே, அவஸ்த்தை முறுகி அத்தாலும் மறைக்கமாட்டாளென்கிருர் (அஞ்ச வித்யாதி). எத்தனைதசை முறுகினாலும் தாய்க்கு ஒளிக்கவேண்டாவோ வென்ன வருளிச்செய்கிருர் (தன்னுவித்யாதி). (முடியாமை) என்றவநந்தரம், வெருவுகிருள் என்று சேஷம். (அவ்வளவேயோ) என்

(௧)- (௨) அமல-௧0.

† தாய்க்கு மறைக்கையும் தோழிக்கு வெளியிடுகையும். பால்யத்தாலே மறைக்கமாட்டாமை யன்றிக்கே அவஸ்த்தைமுறுகி அதினாலும் மறைக்கமாட்டாளென்கிருர (அஞ்சி மறையாதவளென்கை) என்று அரும்பதாந்தரம், இதுக்கநுகுணமாக, "அஞ்சி மறையாதவள்" என்று சில வ்யாக்யாந ஸ்ரீகோசங்களில் பாடம் காண்கிறது.

றது- அவன் பேரைச்சொல்லி வாய்வெருவுகிற மாத்ரமேயோ என்றபடி. வீப்ஸாதாத்பர்யம் (ஒரு காலித்யாதி). உள்ளுப்புக - திருவேங்கடத்தான் பேர்சொல்ல. வெருவாநின்றாள் என்று ஒரு சொல்லால் சொல்லாதே, கீழே 'வெரூவி'' என்றுவைத்து ''என்கின்றாள்'' என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அப்பேச்சித்யாதி), ''ஆல்'' என்று ஆஸ்சர்யமாய், அதின் தாத்பர்ய மென்னவுமாம் ''என்கின்றாள்'' என்கிற வர்த்தமாந நிர்த்தேசத்தாலே - பெண்பிள்ளைக்கு இதிலினிமை தோற்றுகையால், அத்தைத் திருத்தாயார் சொல்லுகிறாளாக யோஜிக்கவுமாம் பெண்பிள்ளை பேச்சினிதானப்போலே அழகிய மணவாளப்பிள்ளை பேச்சு மினிதாயிருக்குமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஸீதேத்யாதி) அன்றிக்கே, ஆல் - விஷாதத்திலே அதின் தாத்பர்யமாகவுமாம். இடைவிடாம லநுஸந்திக்கைக்கு போக்யதை குறைவற்றிருக்கு மென்றதுக்கு த்ருஷ்டாந்தகதந பூர்வகமாக வ்யாக்யாதா ஈடுபடுகிறாரென்னவுமாம். ''ஸீதே'' என்று இரண்டெழுத்துக கூட்டினால் இதில் மாதுர்ய முண்டாகைக்கு நியாமக மென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸீதேத்யாதி) இப்பெண்பிள்ளை தனக்கினிமை தோற்றச் சொன்னாளென்கைக்கு த்ருஷ்டாந்த மருளிச்செய்கிறார் (பட்டரித்யாதி). அன்றிக்கே, பாவபந்தமுடையார் சொல் எல்லார்க்கும் போக்யமாயிருக்கு மென்கைக்கு நியாமக மாகவுமாம்.

மேலுக்கவதாரிகை (மற்றொன்றை யித்யாதி). (வெருவாள்) என்ற வாந்தரம், ஆகிலும் என்று சேஷம். இப்போது ''மருவாள்'' என்றதுக்கு, முன்பு மருவுதலுண்டாகவேணுமென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (பண்டித்யாதி) இப்போது மருவாமைக்கு ஹேது என்னுடங்காலாகை யென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (அதுதானித்யாதி) நான் தாயாராகையாலே ஆஸ்வஸிப்பியாதே உபேக்ஷித்தவளுமன்று, பெண்ணாகையாலே அவன் வந்திராதே போனவளுமன்று, மடியிலிருப்பு அவள்மடியிலிருப்புக்கு ஸ்மாரகமாய் பாதக ([illegible]) மாகையாலே இருக்கமாட்டாதே போனாளென்று கருத்து. ''ஆல்'' என்று விஷாதப்படுகைக்குக் கருத்தருளிச்செய்கிறார் (தாயித்யாதி) தாய் மடியிலிருக்கப் போகாதிருப்பா னென்னென்ன வருளிச்செய்கிறாராகவுமாம். பிண்டிதார்த்தம் (என்மடி யித்யாதி). ''நெடும்'' என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (பெரிய வித்யாதி)

வண்டோடொத்த உருவமென்று சப்தார்த்தமாக்கி யருளிச்செய்கிறார் (செங்கணித்யாதி). (சொல்லிற்றே) என்ற வாந்தரம், அப்படியாகவுமாம் என்று சேஷம். பௌவத்திலே பிறப்பைக்கொண்ட திருவாளனென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (கடலையித்யாதி). ''நான் சிந்திக்கேனே'' என்கையாலே - அவனையு மிவளையும் வ்யாவர்த்திக்கிற தென்கிறார் (இவள் தன்னித்யாதி). . ... ... ... ... (க)

மூ.—

கலையாளா வகலல்குல் கனவளையும் கையாளா வென்செய்கேன் நான்
விலையாளாவடியேனை வேண்டுதியோ வேண்டாயோவென்னும் மெய்ய
மலையாளன் வானவர்தம் தலையாளன் மராமரமேழெய்த வென்றிச்
சிலையாளனென் மகளைச் செய்தனகளெங்ஙனம் நான் சிந்திக்கேனே.

| பதம். | உரை. |
|---|---|
| அகல் | பரந்த [து |
| அல்குல் | நிதம்பப்ரதேசமான |
| கலை | வஸ்த்ரத்தை |
| ஆளா | தரிக்கிறதில்லை; |
| கனம் | ஸ்வர்ணமயமான |
| வளையும் | வலயங்களும் [பற்றி |
| கை | (இவள்) கைகளைப் |
| ஆளா | ஆளமாட்டுகிறதில்லை; (தங்குகிறதில்லை); |
| நான் | நான் [ன்? |
| என்செய்கேன் | எத்தைச்செய்வே [ருந்தின என்னை |
| அடியேனை | தாஸ்யத்திலே பொ |
| விலையாளா | க்ரய விக்ரயார்ஹை யாம்படி கொள் ளுகைக்கு |
| வேண்டுதியோ | இச்சிப்பாயோ? [யோ? |
| வேண்டாயோ | இச்சிக்கமாட்டா |

| பதம். | உரை. |
|---|---|
| என்னும் | என்று சொல்லாநின் ருள்; |
| மெய்யம் | திருமெய்யமென்கிற |
| மலை ஆளன் | திருமலையையாஸ்த் தானமாக உடைய ளுய் |
| வானவர்தம் | நித்யஸூரிகளுக்கு |
| தலை ஆளன் | ஸ்வாமியாய்க் கொ [ண்டு |
| ஏழ் | ஏழான |
| மராமரம் | ஸால வ்ருக்ஷங்களை |
| எய்த | பிளந்துவிட்டதும் |
| வென்றி | ஜயசீலமுமான |
| சிலை ஆளன் | பாணத்தை யுடையவ னுமான சக்ரவர் த்தித் திருமகன் |

என்மகளைச் செய்தனகள் எங்ஙனம் நான் சிந்திக்கேனே. (உ)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கலையாளாவகலல்குல்) அடியில், அகன்றிருக்கும் நிதம்பப்ரதேசமானது இப்போது விரஹக்ருசமாகையாலே பரியட்டத்தை ஆளுகிறதில்லை. (கனவளையுங்கையாளா) ஸ்லாக்யமானவளை கையில் தங்குகிறதில்லை. (என்செய்கேன்நான்) இவள் பரியட்டப்பண்பும் கையும் வளையுமே ஜீவநமாயிருக்கக்கடவ நான் எத்தைச்செய்வேன்? பரியட்டத்தையும் வளையையும் தங்கும்படி பண்ணுவேனோ, இவளை ஈடுபடாதபடி பண்ணுவேனோ, அவனை ஆளாகக்கொள்ளும்படி பண்ணுவேனோ, எத்தைச்செய்வேன். (விலையாளாவித்யாதி) இது இரண்டுபடி,- விலையை ஆளாத அடியேனை - ஒன்றாலும் பிரக்காக்கவொண்ணாதபடி அநர்ஹையான என்னை; அன்றிக்கே, விலையாளாக - உனக்கு க்ரயவிக்ரயார்ஹையாக -

இஷ்டவிநியோகார்ஹையாக, என்னைக்கொள்வுதியோ? கொள்ளாயோ? நான் ஜீவியாதொழிய என்னும்; (க) "ஸாவத்யூ ஹம் - தாவத்ய ஹம்" இத்யாதிவத்.

(மெய்யமித்யாதி) * அயர்வறு மமரர்களதிபதியா யிருந்துவை த்துத் தன்ஸௌலப்யத்தைக் காட்டி "விலையாளாவடியேனை வேண்டு தியோ?" என்று இவளையிட்டுச் சொல்லுவித்துக் கொள்கைக்காகத் திருமெய்யத்திலே வந்து ஸந்நிஹிதனானவன்; (உ)*பின்னானார் வணங் குஞ் சோதியிற்போலே;- (ங) "யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா: - யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவாஃ" என்கிறபடியே-முற்பாடரான ஸூரி களுக்கு மவ்வருகாயிருந்துவைதது, இவ்வருகுண்டான பிற்பாடர்க் கும் உதவுகைக்காகவிறே இங்கு வந்ததும். (மராமரமித்யாதி) தன் னைக்கொண்டு காரியங்கொள்ளாதார்க்கும் மழுவேந்திக்கொடுத்துக் காரி யம் செய்யுமவனன்றே. (என்மகளித்யாதி) மஹாராஜரை விஸ்வஸி ப்பிக்கைக்குச செய்ததித்தனையும் போருமாய்த்து இவளை விஸ்வா ஸம் குலைக்கைக்குச் செய்ததும். தானேரக்ஷகன் என்றிருக்குமிவளை, வாய்விட்டுக் கூப்பிடும்படி பண்ணினானே. பெறுவிக்குமத்தைப் பார் த்தால், "நமக்கொன்று செய்யப்ராப்தியுண்டோ" என்றிருக்கிறாளி வள்; "பெறுவதவனையானால் இருந்தவிடத்தே யிருக்கப்போமோ" என்றிருக்கிறாள் மகள். ... ... ... ... ... (உ)

அரு—இரண்டாம்பாட்டு. (கலையித்யாதி) கீழ்ப்பாட்டில் வடவேங்கட த்தை வாய் வெருவினவளாவன்றிக்கே, தெற்கில் திருமெய்ய மலையாளனை முன்னிட்டு வந்து ஸம்ஸ்லேஷியாமையால் பொய்யமலை யனைறெண்ணி, "வேண்டுதியோ வேண்டாயோ" என்னும்படி விரஹகார்ஸ்யம் மிகுத்து வாய்வெருவினமையைச் சொல்லித் திருத்தாயார கூப்பிடுகிறாளென்று ஸங்கதி.

அல்குல் அகன்றிருந்ததாகில கலையாளாதே யிருக்குமோ வென்ன வருளிச்செய்கிறார் (அடியிலித்யாதி). அடியில்- விஸ்லேஷத்துக்கு முன்பு என்றபடி. கையில் தங்கி நிறம்பெற விருக்கும் வளைகளும் கையைப்பற்றி ஆளமாட்டாதாய்த் தென்று விவக்ஷிததுத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸ்லாக்யேத்யாதி) "கனம்" என்றது - கடைக்குறைத்தலாய், கநகமென்ற படி. "நான்" என்றதுக்குத் தாதபர்யம் (இவளித்யாதி). (பண்பும்) உடையழகும். இத்தால்-"கனவளை அஹம் மமக்ருதிகள்" என்கிறபடியே த்யாஜ்யமானவை இரண்டும் ஆகாராந்தரத்தாலே (ச) "தாஸோஹம் - தாஸோஹம்" என்கிறபடியே உபாதேயங்களாய், நானென்று அபிமானித்

(க) ரா-ஸு-ந௪-௩௯, (உ) தி-மொ-௯௨, (ங) பு-ஸூ- (ச) ரா-ஸு.

துக்கொண்டு கையும் கைங்கர்யமுமா யிருக்கை உபாயாத்ய(த்ய)வஸாயத்துக்கு அபேக்ஷிதமென்ற ஸ்வாபதேசம் ஸூசிதமாய்த்து.(ஆளாகக்கொள்ளும்படி) இவனை அடிமை கொள்ளும்படி. (கொள்வுதியோ) என்ற வநந்தரம், ஜீவிக்கும்படி என்று சேஷம். அவனாளாவிட்டால் ஜீவியேனென்றவிடமுண்டோ வென்ன (தாவத்த்யஹமித்யாதி);“నచాస్యమాతా న పితా న చాన్యస్స్నేహో ద్విశిష్టోస్తి మయా సమో వా। తావద్ధ్యహం దూత జిజీవిషేయం యావత్ప్రవృత్తిం శృణుయాం ప్రియస్య- நசாஸ்ய மாதாநபிதா நசாந்யஸ்ஸ்நேஹாத் விசிஷ்டோஸ்தி மயாஸமோவா। தாவத்த்யஹம்தூத ஜிஜீவிஷேயம் யாவத்ப்ரவ்ருத்திம் ஶ்ருணுயாம் ப்ரியஸ்ய”என்று - பெருமாளிடத்தில் ஸ்நேஹத்தில் வந்தால், தாயும் தகப்பனும் மற்றுமுள்ள பந்துஜநமும் என்னிலும் மிகுத்தாரும் ஒத்தாருமில்லை, ஆகையாலே, பெருமாளுக்கு நானும் வேணும் வேண்டாவென்னும் ப்ரக்ருஷ்டையான மநோவ்ருத்தி கேட்குமளவும் ஜீவித்திருக்க நினையாநின்றேன் என்கையாலே - வேண்டாதபோது ஜீவியாமை ஸித்தமிறே என்று கருத்து.

“வானவர்தம் தலையாளன், மராமரமேழெய்த வென்றிச்சிலையாளன்-மெய்யமலையாளன்”என்றர்வயித்தருளிச்செய்கிறார்(அயர்வித்யாதி).(ஸௌலப்யத்தை) என்றது - மஹாராஜர்க்காக மராமரமெய்த ஸௌலப்யத்தை என்கை. உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம்(பின்னுமித்யாதி). “இமையோர்க்கென்றும் முன்னோய்” என்றத்தையும் கூட்டி ப்ரமாண பூர்வகம் பாசுரத்துக்கர்த்த மருளிச்செய்கிறார் (யத்ரேத்யாதி). ஸௌலப்யத்தைக் காட்டினமையை ப்ரதீக பூர்வகம் விவரிக்கிறார் (தன்னையித்யாதி). “என்மகளைச் செய்தனகள்” என்று வெறுத்திருக்கிற திருத்தாயார், கீழே விஶ்வாஸஹேதுவான அபதாநத்தைச் சொல்லுகை எங்ஙனே சேருமென்ன வருளிச்செய்கிறார் (மஹாராஜரை யித்யாதி). விஶ்வாஸம் குலையும்படி பண்ணின தென்னென்ன (தானேரக்ஷகனித்யாதி); இத்தால் ருஶ்ய(ஶ்ய)மூக பர்வதத்தில் தன்னுடைய இஷ்டாநிஷ்ட ப்ராப்தி பரிஹார்த்ருத்வமாகிற உபாயத்வத்தில் விஶ்வாஸம் பிறக்கைக்கு மழுவேந்திக்கொடுத்து உபாயத்வத்தை நிலைநிறுத்திக்கொண்டதெல்லாம், ஸத்யபர்வதமான மலையில்வந்து ப்ராப்யவைலக்ஷண்யத்தைக்காட்டி, “அவனே உபாயம்” என்றிருக்கிற பெண்பிள்ளை அத்யவஸாயத்தைப் போக்கி, ஸ்வயத்ந பரையாக்க வந்தானென்னும்படி வந்தாலும், ததநுகுணமாக ஆளாதே கூப்பிடப் பண்ணினானென்று வெறுக்கிறாளென்று தாத்பர்யம் சொல்லிற்றாய்த்து. இவள் ப்ராப்யவைலக்ஷண்ய மடியாகக் கூப்பிடுகிறாளென்றறிந்தானாகில் “எங்ஙனம் நான் சிந்திக்கேன்” என்று விசாரப்பட்டு வெறுப்பா னென்னென்ன வருளிச்செய்கிறார் (பெறுவிக்கு மத்தை யித்யாதி). இத்தால் - இவள் கூப்பிடு உபாய கோடியிலேயாய் விழுமோ என்னு மதிசங்கையாலே விசாரப்படுகிறாளென்றதாய்த்து. பெறுவிக்குமது - உபாயம், பெறுவது - ப்ராப்யம். ... ... ... ... ... ... ... ... (உ)

மூ.—
மானையமென்னோக்கி வாணெடுங் கண்ணீர்மல்கும் வளையும் சோரும்
தேனைய நறுந்துழா யலங்கலின் திறம்பேசி யுறங்காள்காண்மின்
கானயன் கடிமனையில்தயிருண்டு நெய்பருக நந்தன்பெற்ற
ஆனயனென்மகளைச் செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| மானைய | மானோடொத்ததாய் |
| மெல் | ம்ருதுவான |
| நோக்கி | கண்களையுடையளன் பெண்ணானவள் |
| வாள் | ஒளியை யுடைத்தாய் |
| நெடு | தீர்க்கமான |
| கண் | கண்களிலே |
| நீர் | ஜலத்தை |
| மல்கும் | விழவிடாநின்றாள், |
| வளையும் | வலயங்களும் |
| சோரும் | ( கைகள் நின்றும் ) நழுவாநின்றன, |
| தேனைய | தேனைப் பரிபூர்ணமாக உடையதாய் |
| நறு | பரிமள ப்ரசுரமான |
| துழாய் | திருத்துழாயாலே கட்டப்பட்ட |
| அலங்கலின் | மாலையினுடைய |
| திறம் | ப்ரகாரங்களை |
| பேசி | சொல்லிக்கொண்டு |

| பதம். | உரை. |
|---|---|
| உறங்காள் காண்மின் | தூங்குகிறிலள் கிடிகோள்; [ளுய் |
| கான் ஆயன் | காட்டிலே தங்குமவ |
| கடி | ரக்ஷையை யுடைத்தான |
| மனையில் | இடையர்களுடைய க்ருஹங்களிலே |
| தயிர் | தயிரை [யுள்ள |
| உண்டு | புஜித்து |
| நெய் | நெய்யை [யாக |
| பருக | பானம் பண்ணும்படி |
| நந்தன் | நந்தகோபர் |
| பெற்ற | லபித்த [னன் |
| ஆனயன் | இடையனை க்ருஷ் |
| என்மகளை | என் பெண்பிள்ளையை வசீகரிக்கைக்கு |
| செய்தனகள் | செய்தவைகளை |
| அம்மனைமீர் | ஓ தாய்மார்களே! |
| அறிகிலேன் | அறிய மாட்டுகிறிலேன். (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மானைய) முக்த (ம்ருக) யாய் ம்ருதுவான நோக்கையுடையவள். (வாணெடியாதி) எதிர்த்தலையிலே கண்ணநீரை யுண்டாக்கக் கடவ கண். வாளென்று - ஒளியாகவுமாம்; ஓராளு மொருநோக்கும் நேரானதென்றுமாம். (நெடும்) போக்தாவினளவல்லாத கண். கண்ணநீரையும் தாங்கப்போகிறதில்லை; வளையையும் தாங்கப்போகிறதில்லை. நித்ரையாலே போதுபோக்கப் பார்த்தாலோவென்ன (தேனையவித்யாதி) ஒரு தேன்வெள்ளமே! ஒரு செவ்வியே! ஒரு தொடையழகே! ஒரு குளிர்த்தியே! ஒரு மணமே! என்னாநின்றாள்.

( கானயனித்யாதி ) தானென்னகார்யத்துக்கு வந்தான், இப்போது செய்து திரிகிறதென்னம்புது என்று ஒன்று மறிகிறிலேன்.

(கானுயன்) (க) "கானம்சேர்ந்து" என்னும்படி-காட்டிலே தங்குமவன் நாகரிகர் செயலிலே அந்வயிப்பதே!. காட்டில் மரங்களின் வாசியறியக்கடவவன், பெண்களின் வாசியறிவதே! கடி என்று-அரண் *துன்னுபடல்களை யிட்டடைத்துச் சேமித்துவைப்பர்களிறே. (தயிரித்யாதி) (உ) "மஹாதபஸா - மஹாதபஸா" என்று சக்ரவர்த்தி "நாடாளவொருபிள்ளை பெறவேணும்" என்று ஒருநோன்பு நோற்றுபெற்றாப்போலே, "க(*)வ்யங்கள் பாழ்போகவொண்ணாது, இவற்றை புஜிப்பானொரு பிள்ளைவேணும" என்று இதுக்சன்றோ இவளைப் பெற்றது. (ஆனுயன்) பசுக்களை மேய்க்குமவனேதான். (என்மகளித்யாதி) (௩) "யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ-யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ" என்கிற பரவதுத்சர்ஷத்தைச் சிறிதறியலாம், ப்ரணயதாரையில் அவன் செய்துநிற்கிறவிவை என்னுலொன்று மறியப்போகிறனவில்லை. (அறிகிலேன்) கீழ்ச்சொன்னவை ஒரு திங்மாத்ரமித்தனை, என்னுலறியப்போகாது ...　　...　　(௩)

அரு.—மூன்ரும்பாட்டு (மாறுயவித்யாதி) திருமலையிலும் மெய்யமலையிலும் வாய்வெருவி மகளீடுபட்டபடிக்கு "நான்-என்செய்கேன்" என்று சிந்திக்கிற திருத்தாயாரைத்தேற்றுகைக்காக, சில அசலகத்தார்வந்து, "பதினுருமாயிரவர் முதலான பெண்களை யாண்டவனன்ரே, வாசியறிந்து தானே வருவன்" என்று உணர்த்தி உறங்கப்பண்ணிக்கொண்டிருக்கலாகாதோ" என்று முந்துறததோற்றினவாறே, அவர்களைக்குறித்து.*காடுவாழ்சாதியை விஶ்வஸிததுத் தேற்றக்கூடுமோ, அவன் செய்தனகள் எனக்குத் தெரிந்ததில்லை என்கிருளென்று ஸங்கதி.

"மாறுய" என்றது - மான் நோக்குப் போலேயாய் என்று விவக்ஷித்து, பலிததஸௌந்தர்யத்தை யருளிச்செய்கிருர (முக்த்தமாய்) என்று. கண்ணையிப்போது விசேஷித்ததுக்குத் தாதபர்யம் (எதிரித்யாதி). "வாள்"-ஆயுதமாய், அாத்தாந்தரம் (ஓராளுமித்யாதி). ஒருவெட்டுக்கு ஓராள் விழுமாபோலே ஒருபார்வைக்கு ஒருவன் வசப்படுமென்கை தேனேயென்னலாம்படி தத்ப்ரசுரமாய், என்றும் பரியளத்தை யுடைத்தாய், துழாயலங்கலின் - திருத்துழாய்மாலையின், திறம் - ப்ரகாரங்களை, பேசி என்று சப்தார்த்தமாய், உக்தாநுக்தப்ரகாரங்களை எல்லாம் பேசி ஈடுபடுகிருளென்று தாத்பர்யமருளிச்செய்கிருர் (ஒருவிதயாதி).

இவளிப்படி துழாயின்திறங்களிலே ஈடுபட்டு உறங்காமைக்கு அவன் செய்தவை என்னென்றும், வாராமைக்கு ஹேதுவென்னென்றும் வரும்

(க) தி-பா-உஅ.　　(உ) ரா-ஆர-௬௬-கரு.　　(௩) தை-ஆக-௯.

சங்கையிலே, "காணுயன்" இத்யாதி என்று விவக்ஷித்து, தாத்பர்யமருளிச் செய்கிறார் (தானித்யாதி) (என்னகாரியத்துக்கு) என்றது-காட்டில் வஸிக்கைக்கும், மரங்களின் வாசியறிகைக்கும், நந்தன்மனையில் நெய்யும் பாலுமுண்கைக்கும், பசுமேய்க்கைக்கும் என்றபடி (செய்துதிரிகிறது) என்றது - ப்ரணயதாரையில் தாழ்ந்து பரிமாறின செயல்களைச்செய்து திரிகிறதென்றபடி இவரிப்படி படுகைக்குஹேது - ப்ரணயதாரையில் செயல்களும், வருவனென்று நிஸ்சயியாமைக்குஹேது - காட்டில் வஸிக்கை முதலானவையு மாகையாலே, என்பெண்ணைத் தேற்றப்போகிறதில்லை என்று கருத்து. மேலே "ஆனுயன்" என்று சொல்லாநிற்கவும், இங்கே "ஆயன்" என்றதுக்குத்தாத்பர்யமருளிச்செய்கிறா (காநமித்யாதி). "கான்" என்று விசேஷித்ததுக்கு உட்கருத்தருளிச்செய்கிறா (காட்டிலேயித்யாதி). (அவனோதான்) என்ற வநந்தரம், இங்கு வரப்புகுகிறான் என்றுசேஷம். "கண்ணீர்மல்கும்" என்று-ப்ரணயதாரையிலவன் செய்தமை கிடையாமையால் வந்தவிகாரங்களைச் சொல்லியிருக்க, நீ "அறிகிலேன்" என்பானென்னென்ன வருளிச்செய்கிறா (கீழித்யாதி). † (திங்மாத்ரம்-) ஏகதேசம்.

மூ.—

தாய்வாயிற்சொற்கேளாள்தன்னாயத்தோடணையாள்தடமென்கொங்கை
யேயாரசசாந்தணியா ளெம்பெருமான் திருவரங்க மெங்கேயென்னும்
பேய்மாயமுலையுண்டிவ்வுலகுண்ட பெருவயிறன் பேசில்நங்காய்
மாமாயனென்மகளைச செய்தனகள் மங்கைமீர் மதிக்கிலேனே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை |
|---|---|---|---|
| தாய் | தாயான என்னுடைய | அணியாள் | (முன்புபோலே) அலங்கரிக்கிறிலள், |
| வாயில் | வாயினால் மொழிந்த | | |
| சொல் | சொல்லையும் | எம்பெருமான் | எனக்கு ஸ்வாமியானவன் எழுந்தருளியிருக்கிற |
| கேளாள் | கேட்கிறிலள், | | |
| தன் | தன்னுடைய | | |
| ஆயத்தோடு | ஸகிஜநங்களோடும் | திருவரங்கம் | திருவரங்கம் என்னும் திவ்யதேசமானது |
| அணையாள் | சேரமாட்டாள், | | |
| தடம் | பரந்தும் | | |
| மெல் | ம்ருது ஸ்வபாவமுமான | எங்கேஎனும் | எங்கேயென்று கேளாநின்றாள், |
| கொங்கையே | ஸ்தநங்களையே | | |
| ஆர | ஸம்பூர்ணமாக | மங்கைமீர் | யுவதிகளான |
| சாந்து | சந்தநத்தினாலே | நங்காய் | பெண்களே! |

† "(திங்மாத்ரம்) திக்கு என்று - ஏகதேசமாய், அல்பமென்றபடி" என்று அரும்பதாந்தரம்.

| | | | |
|---|---|---|---|
| பேய் | பூதனையானவள் | மாயன் | ஆஶ்சர்யசக்தி யுடையனான அவன் |
| மாய | முடியும்படியாக | என்மகளை | என்னுடைய பெண்பிள்ளை விஷயமாக |
| முலை | அவள் முலையை | செய்தனகள் | செய்தவற்றை |
| உண்டு | புஜித்து, | பேசில் | சொல்லப்புகில |
| இவ்வுலகு | இந்தபூமியை | மதிக்கிலேன் | பரிச்சேதித்துச் சொல்ல மாட்டுகிறிலேன். (ச) |
| உண்ட | (ப்ரளய காலத்தில்) விழுங்கின | | |
| பெருவயிற்றன் | பெரிய திருவுதரத்தை யுடையனாய் | | |
| மா | அபரிச்சிந்நமான | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (தாய்வாயிலித்யாதி) ஏதேனும் தசையிலும், தாய்சொல்லிற்றுச் செய்யவேணுமிறே; (க) ‹‹ ஜீவதோர் வாக்யகரணாத் - ஜீவதோர் வாக்யகரணாத்'', தனக்கோடுகிற ப்ரேமத்துக்கு அபிமதமாக நான் வார்த்தைசொல்லிலும், தாய்வார்த்தையன்றோ! என்றிராநின்றாள். (கேளாள்) அநுஷ்டிக்கவொழிய வமையாதோ? ஹிதம்சொல்லும் த்யாஜ்யகோடியை விடுகிறாள்; ப்ரியம்சொல்லும் உபாதேயரை உபேக்ஷிக்கவேணுமோ? தோழிமாரும் தாய்மாரோபாதியாய்விட்டது. (உ) ‹‹மாதரம் - மாதரம்'' என்றவோபாதி * ‹‹ஸகீந் - ஸகீந்'' இறே. இங்குவந்தால், அன்னைபக்கலணைவுண்டு, வார்த்தை கேளாதொழிகிற வித்தனை; அவர்கள்பக்கல் அணைகையேபிடித்துச் செய்கிறிலள். அவர்களையிட்டு வளைத்துக்கொள்ளலா மென்னுமிடமும் போய்த்து. (தடமித்யாதி) தாய்மாரையும் தோழிமாரையும் விட்டால், அவனை உபேக்ஷிக்கவேணுமோ? அவன் வரக்கடவனே, தத்தர்மாகப் பண்ணும் வ்யாபாரங்களைத் தவிர்ந்தாளென்றபடி. போக்யதையாலும் பெருத்து விரஹஸஹமல்லாதபடி ம்ருதுவுமாயிருக்கையாலே அத்தையே பேணுமாய்த்து அல்லாத காலங்களில். (கொங்கையே ஆர) அவன்வந்திருந்தாலும் அவனை த்ருணீகரித்து இத்தையே பேணுமித்தனைகாணும். (எம்பெருமானித்யாதி) தாயையும் அல்லாதாரையுமொக்க உபேக்ஷிக்கும்படி நிருபாதிகபந்துவான தன்பக்கலிலே பாவ(ஶ)பந்தத்தைப் பிறப்பிக்கிறவன் வர்த்திக்கிற தேசமெங்கே? என்னாநின்றாள். ஸ்வாமித்வம் இவைபோல் ஔபாதிகமல்லவிறே. (எம்பெருமான்) என்னைத் தோற்பித்தவன் என்றேகாணும் அவனையறிவது; இதிறே * நமஸ்ஸப்தார்த்தம்.

(க)     (உ) விஹகேந்த்ரஸம்ஹிதை-உ உ-படலம்.

(பேயித்யாதி) பேயினுடைய, தாய்முலையாக வஞ்சித்துக்கொடு வந்த முலையென்னுதல்; பேய்மாயும்படியாக வென்னுதல். (இவ்வுலகித்யாதி) அநுகூலரக்ஷணத்தோடு விரோதிநிரஸநத்தோடு வாசியில்லையாய்த்து அவனுக்கு ஊணாகை. (நங்காய்) (க) "𑌮𑍈𑌤𑍍𑌰𑍇𑌯-மைத்ரேய" என்னுமாபோலே. (மாமாயன்) பிரிவில்முடியவொண்ணாத ஆஸ்சர்யங்களையுடையவன். ஒருபால்யத்திலே பேய் முலையையுண்பதாம். செய்வதறியாதே என்மகளைச்செய்தன. (மங்கைமீர்) நீங்களுமெல்லாம் ஒருபருவம் ஸ்த்ரீத்வமுடையிகோளாயிருக்கிறிகோளிறே. (மதிக்கிலேனே) என்றால் "இவ்வளவு' என்று பரிச்சேதிக்கப்போகிறதில்லை. ... ... ... ... ... ... (௪)

அ௫.—நாலாம்பாட்டு. (தாயித்யாதி) இங்ஙனே நீ "அறிகிலேன்" என்று சொல்லக்கடவையோ, ஹிதபரையான நீயும் ப்ரியபரரான தோழிமாரு மிருக்கப் பெண்ணை வசப்படுத்த வொண்ணாதோ வென்ன; அங்ஙன் சொல்லவொண்ணாதபடி த்யாஜ்யகோடியிலே யாக்கி, *வெண்ணெயுண்டவாயன் பள்ளிகொண்டருளும் போகமண்டபத்தைப் பிதற்றாநின்றாளென்கிறாளென்று ஸங்கதி.

என்வாய் என்னாதே, "தாய்" என்றதுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (ஏதேனுமித்யாதி). தாய்வார்த்தை கேட்கவேணுமென்னு மிதுக்கு ப்ரமாணம் (ஜீவதோரித்யாதி). 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑍀𑌚 - 𑌜𑍀𑌵𑌂𑌶𑍍𑌚 𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑍌, 𑌤𑌯𑍋𑌰𑍍𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑍍𑌰𑍋𑌃 - ஜீவந்தீச ஜீவம்ஶ்ச ஜீவந்தௌ, தயோர்மாதா பித்ரோ: என்றிறே இதுக்கர்த்தம். தாய்ச்சொல் என்ன வமையாதோ, "வாயில்" என்பானென்னென்ன; அஹ்ருதயமாக வாயிலே ப்ரியமானவார்த்தை வந்தாலும் அதுவும் என்வாய்என்று நினைத்துக்கேளாளென்கிறாள் என்றருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி). செய்யாள்என்னாதே, "கேளாள்" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (அநுஷ்டியாதித்யாதி). தன் - தனக்கு அஸாதாரணரான, ஆயத்தோடு, ஸகீஜநத்தோடு - சேராளென்று சப்தார்த்தம் விவக்ஷித்து, தாத்பர்யங்களை அருளிச்செய்கிறார் (ஹிதமித்யாதி). உட்கருத்தருளிச்செய்கிறார் (அவாகளையித்யாதி). அவனை உபேக்ஷிக்கை யாவதென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனிதயாதி). ததர்த்தமாகப் பண்ணும் வ்யாபாரமாவது- (உ) "கொங்கைமேல் குங்குமத்தின குழம்பழியப் புகுந்தொருநாள் தங்குமேல்" என்கிறபடியே விரஹதசையிலும் வருவன் என்றெண்ணித் தன்னை அலங்கரித்திருக்கை என்கை. "ஆரச்சாந்தணியாள்" என்றால் - சிறிதணியாநின்றாளென்று தோற்றுமே, அது கூடுமோ வென்ன அருளிச்செய்கிறார் (போக்யதையாலுமித்யாதி). "தடம்" என்றதினர்த்

(க) வி-பு-௧-௧-௧௨. (உ) நா-தி-அ-எ.

தம் (போக்யதையாலும் பெருத்து) என்றது. இத்தால் - முன்பெல்லா மாரச் சாந்தணியுமவள் இப்போது சிறிது மணியாளென்றதாய்த்து. ஏவகாரார்த்தம் (அவனித்யாதி). தாய்முதலாக எல்லாரையும் விடுவானென்? நீ அலங்கரியாதிருப்பானென்? என்று கேட்டார்க்குச் சொல்லும் வார்த்தையைக் கேளீர்களென்று சொல்லுகிறாளென்னு மிடந்தோற்ற அருளிச்செய்கிறார் (தாயையு மித்யாதி); இத்தால் எம்பெருமானுகையாலே தாய் முதலானாரை விட்டேனென்றும், திருவரங்கத்தில் புகுராமையாலே அலங்கரிக்கவில்லை என்றும் சொன்னாளென்றதாய்த்து.

இப்படி தசைமுறுகினால் இவள் தரித்திருக்கும்படி எங்ஙனே என்னு மபேக்ஷயிலே, "பேய்மாய" இத்யாதி என்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (பேயினுடைய வித்யாதி). மாயமுலை - வஞ்சகமான முலையென்று சப்தார்த்தம். (மைத்ரேய என்னுமாபோலே) என்றது - மேலே "மங்கைமீர்" என்று பருவத்தைச் சொல்லி ஸம்போதித்ததிலும், ஆத்மகுணமான பூர்த்திக்கு வாசகமான இதுவே விசேஷ்யபதமென்றபடி. "மாமாயன்" என்றதுக் கர்த்தாந்தரம் (ஒருவித்யாதி). மேலுக்குத் தாத்பர்யம் (செய்வதறியாதே) என்றது; செய்யலாம் செய்யப்போகாது என்றறியாதே என்றபடி. "நங்காய்" என்றது- ஜாத்யேகவசநமாய், [மங்கைமீரான - நங்கைகாள், பேய்முலையித்யாதி, பெருவயிற்றன் - மாமாயன், என்மகளைச் செய்தன - பேசில் - மதிக்கிலேன்] என்றந்வயம். ... ... ... (௪)

மூ —

பூண்முலைமேல்சாந்தணியாள் பொருகயற்கண்மையெழுதாள்பூவைபேணா
ஏணறியாளெத்தனையுமெம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும் [ள்
நாண்மலராள் நாயகனாய் நாமறிய வாய்ப்பாடி வளர்ந்தநம்பி
ஆண்மகனாயென்மகளைச் செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பூண் | அலங்கரிக்கப்பட்ட | பேணாள் | ஆதரிக்கிறிலள்; |
| முலைமேல் | ஸ்தநங்கள்மேல் | எத்தனையும் | ஏதேனுமொரு வஸ்துவையும் |
| சாந்து | சந்தநத்தை | | [ள்; |
| அணியாள் | பூசுகிறிலள்; | எண் அறியாள் | எண்ண மாட்டுகிறில |
| பொரு | ஒன்றோடொன்று ஸத்ருசமான | எம்பெருமான் | உபகாரகனான ஸர்வேஸ்வரனுடைய |
| கயல் | மத்ஸ்யங்கள்போன்ற | திருவரங்கம் | திருவரங்கமென்னும் திவ்யதேசமானது |
| கண் | கண்களிலே | | |
| மை | அஞ்சநத்தை | எங்கே என்னும் | எங்கே யிருக்கிறது என்னுகின்றாள்; |
| எழுதாள் | இடுகிறிலள்; | | |
| பூவை | லீலாசுகத்தை | நாள் | செவ்வியழியாத |

| | | | |
|---|---|---|---|
| மலராள் | கமலப்பூவில் வாஸம் பண்ணுகின்றபிராட்டிக்கு | வளர்ந்த | வளர்த்தருளின |
| நாயகனை | வல்லபனை | நம்பி | பூர்ணனுமானவன் |
| நாம்அறிய | நாமெல்லாரும் அறியும்படியாக | ஆண்மகனை | புருஷஶ்ரேஷ்டனையக்கொண்டு |
| ஆய்ப்பாடி | திருவாய்ப்பாடியிலே | என்மகளைச் செய்தனகள் அம்மனைமீரறிகிலேன். (௫) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பூண்முலை) முத்தாரம் பூண்டிருக்கிறவென்னுதல்; தானே ஆபரணமான முலையென்னுதல்' (பொரு) வேறொன்றால் ஒருதன்னேற்றம் செய்யவொண்ணாத கண்களில், மங்களார்த்தமாகவும் அஞ்ஜநமெழுதுகிறிலள். (பூவை) "தன்னது" என்னத்துடங்குவதுக்கு முன்னே பேணிப்போரு மவற்றையும் பேணுகிறிலள். ( ஏணறியாள் ) அநுஸந்தேயபதார்த்த மின்னதென்று, லோகயாத்ரையிலொன்று மநுஸந்திக்கிறிலள். ( எம்பெருமானித்யாதி ) அதில் மாஸ்ஸஹகாரமும் வேண்டுகிறதில்லை.

(நாண்மலராளித்யாதி) ஶ்ரியஃபதி என்று ஒருத்தியை யிட்டன்றோ தம்மைவ்யபதேசிப்பது. (நாமறிய)இதொருபழங்கிணறு கண்வாரவேணுமோ; இவ்விசைவிருந்தபடி எல்லாருமறியோமோ?(நம்பி) பெண்களுக்குக்கையாளாய், அத்தாலே தன்னைப்பூர்ணனாகநினைத் திருக்குமவனன்றோ? (ஆண்மகனை) இவ்வளவிலே வந்தவாறே,(க)"பதிம் விஶ்வஸ்ய - பதிம்விஶ்வஸ்ய" என்று ப்ரபுத்வம் கொண்டாடாநின்றான். பெண்ணடியான் முதன்மை கொண்டாடுவதே! (என்மகளித்யாதி) † இவளொருத்தியளவும் குறையுங்காட்டில் தம்முடைய முதன்மை ஒறுவாய்ப்போமோ? ... ... ... ... ... (௫)

---

அநு. — அஞ்சாம்பாட்டு. (பூணித்யாதி) தாய்மார் தோழிமாரெல்லாரும் த்யாஜ்யகோடியிலேயாம்படி தசை முறுகிற்றென்னுகின்றயாகிலும், சிறுபருவமே துடங்கி தானே ஆதரித்து வளர்த்த பூவைமுதலான லீலோபகரணங்களைக் காட்டி ஆற்றவொண்ணாதோவென்ன; அதுவும் செய்யவொண்ணாதபடி யானனென்கிறுளென்று ஸங்கதி.

"பொரு" என்று-ஒப்பாய், ஒன்றுக்கொன்று ஒப்பாமதொழிய வேறுப்பில்லாம லிருக்கிற கயல்கள்போலே யிருக்கிற கண்க ளென்கையா

---

(க) தை-நா-கக. † இவளொருத்தியளவும் குறையுங்காட்டில்- இவளொருத்திக்கும் தாழுங்காட்டில்.

லே - அதிசய ஸௌந்தர்யம் ஸூசிதமாகையாலே - மையால் இதுக்கொரு அதிசயம் ஸம்பாதிக்க வேண்டாமை பலிக்கையாலே, அத்தைத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (வேறித்யாதி).* பூவையைச் சொன்னது - லீலோபகரணங்களுக்கெல்லா முபலக்ஷணமாக்கி, எம்பெருமானோடே "உன்னது, என்னது" என்று ப்ரணயகலஹம் பிறக்கைக்கு முன்புதானே பால்யந்தொடங்கி விரும்பப்படு மவை என்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (தன்னதித்யாதி). "எத்தனையும் - எணறியாள்" என்றந்வயித்தர்த்த மருளிச்செய்கிறார் (அநுஸந்தேயேத்யாதி). எத்தனையும் - ஏகதேசமும். இத்தால் அநுஸந்தேயமான எம்பெருமானையும் மற்றும் லோகயாத்ரையிலொன்றும் எண்ணமாட்டா ளென்றதாய்த்து. எண்ணமாட்டாளாகில், "எம்பெருமான் திருவரங்கமெங்கே?" என்னக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (அதி லித்யாதி).

தம்பெண்ணை இப்படி படுத்தின கொடுமையாலே திருத்தாயார் இப்போது ஸ்ரீயஃபதித்வத்தைச் சொல்லுகைக்கு வெறுப்பாகத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸ்ரீயஃபதி யித்யாதி), இத்தால் - இப்படி என்மகளைப் படுத்தில் அவன் முகம்கொடுப்பனோ, அவளாலன்றோ தன்ஸ்வரூபம், அதறியாதே இப்படி படுத்தலாமோ வென்று கருத்து. (பழுஙிணறு கண்வார) என்றது - (௧) " ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ - ஹ்ரீஸ்சதே லக்ஷ்மீஸ்ச பத்ந்யௌ " இத்யாதியான அநாதிஸ்ருதியில் விபரீதார்த்த நிரஸந பூர்வகமாக, ஊற்றுகண் இளம்ப தூர்வாரவேணுமோ வென்றபடி. (இவ்விசைவிருந்தபடி) - இப்படி பெண்கள் இன்றாக இசைந்த ப்ரகாரம். (இவ்வளவிலே) - இப்போது இவ்வளவிலே என்றபடி. (பெண்ணடியான்) - இப்பெண்பிள்ளை முதலான். "ஆண்டீகளோய்" என்ற பதத்தோடே கூட்டித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இவளித்யாதி). (ஒறுவாய்ப்போமோ) மூளியாமோ வென்றபடி. ... ... ... ... ... ... (௩)

மூ.—தாதாடுவனமாலைதாரானோவென்றென்றேதளர்ந்தாள் காண்மின்
யாதானுமொன்றுரைக்கிலெம்பெருமான்திருவரங்கமென்னும்பூமேல்
மாதாளன்குடமாடிமதுசூதன்மன்னர்க்காய்முன்னம்சென்ற
தூதாளனென்மகளைச் செய்தனகளெங்ஙனம் நான்சொல்லுகேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தாது | தாதுகளானவை | வனம் | காட்டிலேயுண்டான |
| ஆடு | நடையாடாநின்ற (தாதுகள் நிறைந்த) | மாலை | பூமாலையை |
| | | தாரான் | தாராதொழிந்தான், |

(௧) பு-௩௱-௫-

| | | | |
|---|---|---|---|
| ஓ | கஷ்டம்! | மாது | பெண்ணான பெரியபி ராட்டியார்க்கு |
| என்று என்றே | என்று பலகாலும் சொலவி | ஆளன் | வல்லபனாய், [னாய், |
| தளர்ந்தாள் | சிதிலை யாகாநின்றாள் | குடம்ஆடி | குடக்கூத் தாடினவ |
| காண்மின் | காணுங்கோள், | மதுசூதன் | மதுவென்னும் அஸுரனை ஸம்ஹரித்த வனாய், |
| யாதானும் | ஏதாவது | | |
| ஒன்று | ஒருவித வசநத்தை | | |
| உரைக்கில் | சொல்லப்புகில் | மன்னர்க்காய் | பஞ்ச பாண்டவர்களுக்காக |
| எம்பெருமான் திருவரங்கம் | ஸர்வேஸ்வரன்எழுந் தருளி யிருக்கிற திருவரங்கம் | முன்னம் | முற்காலத்தில் |
| என்னும் | என்றுஅதுக்குப்பதில் உரையாநின்றாள்; | தூதுசென்ற | தூதுபோன |
| பூமேல் | தாமரைப்பூவின்மேல் நித்யவாஸம் பண் ணுகின்ற | ஆளன் | ஸ்வாமியானவன் |
| | | என்மகளைச்செய்தனகள் எங்ஙனம் நான் சொல்லுகேனே. (சு) | |

வ்யா.—ஆறும்பாட்டு. (தாதாடு) தாதுமாறுத. 'ஆடுகையாவது-நடையாடுகை. காட்டிலேதானும் (க) * தன்னேராயிரம்பிள்ளைகளுங் கூடப்பறித்துச் செவ்வியழியாதமாலையை. அது பார்த்தமென்றிருந்தோம்; அத்தை "தாராளே" என்று வெண்கலத்வநிபோலே ஒரு சொல்லுக்கொருசொல்லு ஓயாநின்றாள். இனி இத்த்வநிதானும் கேளாதொழியப் புகுகிறேனே. (யாதானுமித்யாதி) "இத்தனை அதிமாத்ர ப்ராவண்யமாகாதுகாண், இதுகுடிப்பிறப்புக்குப் போராதுகாண், இது தர்மி(ர்ம)லோபத்தை பலி(ல)ப்பிக்குங்காண், அவன் ஸ்த்ரைணன் காண்" என்று ஒருஹிதவசநம்பண்ணினால், அதுக்கு உத்தரமாக, என்னை அநந்யார்ஹையாக்கினவன்வர்த்திக்கிறதேசமென்னாநின்றாள்

(பூமேல்) ஒருத்தியை அநபாயிநியாம்படி பண்ணுவிக்கிறவனன்றோ. பிரிவென்றறியாதபடி பண்ணுவிக்கிறவனன்றோ. (குடமாடி) பெண்களுக்காக மன்றிலே தன்னை ஸர்வஸ்வதாநம் பண்ணினவனன்றோ. (உ) [மங்கையர்தம் கண்களிப்பக் கொன்னவிலும் கூத்தனாய்] அவன் கையில்படுமது நன்றாய்த்து. அக்கூத்திற்காட்டிலும் (மதுசூதன்) ஆச்ரிதவிரோதிநிரஸநமே என்று மொக்கயாத்ரையாய்ப் போருமவன். (மன்னர்க்கித்யாதி) உகந்தார்க்குத் தன்னை அழிவுக்கிடுமவன். (என்மகளை) இப்போது இவளை அழிவுக்கிட்டுத் தன்னைக்கொண்டு எழுகிற்கிறபடியை என்னபாசுரமிட்டுச் சொல்லுவேன். (சு)

(க) பெரி-திரு-ங-க-க. (உ) பெரியதிருமடல்-சஉ.

அரு.—ஆறும்பாட்டு. (தாதித்யாதி) லீலோபகரணங்களை முதலா உபேக்ஷிக்கும்படி இத்தனை கைகழியவிடலாமோ, நீங்கள் தாய்மாராயிருந்துவைத்து நாநாமுகமாக ஹிதம்சொல்லி அடக்கவேண்டாவோ வென்ன; நாங்க ளெத்தைச்சொன்னாலும் காதில்புகுராதே "திருவரங்கம்" என்னு மித்தனை, வேறுரைக்கவில்லை, என்ன சொல்லுவே னென்கிறாளென்று ஸங்கதி.

வரத்திலுண்டாக்கின மாலைஎன்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (காட்டிலே யித்யாதி). "தாரான் ஓ!" என்று பதத்தைப் பிரித்து, "ஓ" என்று - விஷாத ஸூசகத்வநியாய், அதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அதித்யாதி). இங்ஙனன்றாகில் மிகவும் தளர்த்தி சொல்லக்கூடாதிறே என்று கருத்து. முன்னிலையாக இவளைப் பார்த்திருப்பார்க்கு "காண்மின்" என்று காட்டவேணுமோ வென்ன; தன்னுடைய அவஸாதத்தாலே சொல்லுகிறாளென்று விவக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இனி யித்யாதி).

கீழ்வாக்ய விவரணம் (பிரிவித்யாதி). கொல்லுகையை நவிலுமதான கூத்தென்று எடுத்த பாசுரத்தில் பதத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அவனித்யாதி). ... ... ... ... ... ... (௬)

மூ.—

வாராளுமிளங்கொங்கை வண்ணம்வேறாயின வாறெண்ணாளெண்ணில்
பேராளன்பேரல்லால்பேசாளிப்பெண்பெற்றேனென்செய்கேன்நான்
தாராளன் தண்குடந்தை நகராளனைவர்க் காயமரிலுய்த்த
தேராளனென் மகளைச் செய்தனகளெங்ஙனம் நான்செப்புகேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வார் | கச்சாலே | பேரல்லால் | திருநாமமல்லது |
| ஆளும் | ஆள(கட்ட)த்தகுந்தடைய தாய் | பேசாள் | உரைக்கமாட்டாள், |
| இளம் | இளம்பருவத்தை யு | இப்பெண்பெற்றேன் | இவ்விதமான பெண்ணைப்பெற்ற |
| கொங்கை | ஸ்தநத்தினுடைய | நான் | நான் |
| வண்ணம் | வர்ணமானது | என்செய்கேன் | என்னசெய்வேன்; |
| வேறாயின | வேறுபட்ட படியை | தார் ஆளன் | திருமாலையைத் தரித்தவனாய் |
| ஆறு | | தண் | குளிர்ந்த |
| எண்ணாள் | நினைக்கிறிலள், | குடந்தைநகர் | திருக்குடந்தையிலே |
| எண்ணில் | நினைக்கப்புகில் | ஆளன் | சேர்ந்தருளினவனாய் |
| பேர் | பெரியோனான | | |
| ஆளன் | ஸ்வாமியினுடைய | | |

| | | |
|---|---|---|
| ஐவர்க்காய் | பஞ்ச பாண்டவர்களுக்காக | ஆளன் ஸ்வாமியானவன் |
| அமரில் | யுத்தத்தில் | என்மகளைச்செய்தனகள் எங்ஙனம் நான் செப்புகேனே. |
| தேர் | ரதத்தை | |
| உய்த்த | நடத்தின | செப்புகை - சொல்லுகை. (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (வாராளும்) போகயோக்யமாய், "இலக்கைக்காட்டு, காட்டு" என்று கிளர்ந்துவருகிற சொற்கேளாப்பருவமான முலையானது. வாராலே தாங்கவேண்டும்படியாய், "காட்டு, காட்டு" என்று வளருகிறமுலையானது, அபேக்ஷிதம் பெருமையாலே தன்னிறம்மாறி விவர்ணமாகிறபடி யொன்று மெண்ணுகிறிலள். ஸ்வவிஷயத்தில் ஜ்ஞாநமொன்றுமில்லை. (க) [ஸ்மார ததாத்மாநம் - விஸ்மார ததாத்மாநம்] தன்தசையை எண்ணுதவள் வேறொன்றை எண்ணுகையில்லையிறே; (எண்ணில்) எண்ணுதிருக்கும் போதாய்த்துப் பெரிது; அர்த்தாத் ஒன்றை எண்ணில், ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரன் திருநாமமல்லது சொல்லாள். (உ) "அவாப பரமாம் காஷ்டாம் மநஸஶ்சாபி ஸம்யமே -அவாப பரமாம் காஷ்ட்டாம் மநஸஶ்சாபி ஸம்யமே" இறே; ஆகையாலே எண்ணுவது மில்லை; மநঃபூர்வகமாகச் சொல்லுவதுமில்லை. (இப்பெண்ணித்யாதி) புறம்பொன்றை நினையாமையும், பகவத்விஷயத்தில் நினைவும் சொலவும் மாறுதிருக்கிறபடியையு மநுஸந்தித்து, பிறர்க்கு வெறுக்கிறாளாய், தன்களிப்புத்தோற்ற வார்த்தை சொல்லுகிறாள். ஸ்வவிஷயத்திலும் இதரவிஷயத்திலும் விரக்தியும் பகவத்விஷயத்தில் ப்ரீதியும்மாறுதே செல்லும்படியாயிருப்பாளொரு பெண்பிள்ளையை, என்னைப்போலே புறப்பு பெற்றாருண்டோ வென்கிறாள்.

(தாராளன்) ரக்ஷணத்துக்குத் தனிமாலையிட்டிருக்கிறவன் கிடீர் ஸ்த்ரீவதம் பண்ணுகிறான்!. (தண்குடந்தை) குறைவற்றாரான நித்யஸூரிகளுக்காக வன்றிக்கே, குறைவாளருடைய ரக்ஷணத்துக்காகக் கிட்டப் படைவீடுசெய்துகொடு கிடக்கிறவன்கிடீர்!. (ஐவர்க்கித்யாதி) அத்தை அநுஷ்ட்டாந பர்யந்தமாக்கி, உகந்தார்க்குத் தன்மார்விலே அம்பேற்குமவன்கிடீர்!. (ங) "தேசமறியவோர் சாரதியாய்" என்று எல்லாருமக் காணத்தன்னை ஸாரதியாக்கி ஆஶ்ரிதர்க்காகத் தன்னை அழியமாறுமவனிறே. ( என்மகளையித்யாதி ) அப்போது பீஷ்மாதிகளம்

(க) (உ) (ங) தி-வாய்-எ-தி-கூ.

புக்குத்தன்னை இலக்காக்கினுப்போலே, இப்போது தனக்காக இவளைக் காமசரத்துக்கு இலக்காக்குகிருன்; இப்போதிவளை அழிவுக்கிட்டபடி என்ருலே பேசப்போமோ வென்கிருள். ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (வாராளுமித்யாதி) ஹிதவசநம் கேளாதபடியிருப்பாருண்டோ, மெய்மறந்தாளோ, நாங்களும் பெண்களைப் பெறவில்லையோ வென்ன; இப்படிப்பட்ட பெண் பெற்றேன், என்செய்கேன் என்கிருளென்று ஸங்கதி.

கீழ்விசேஷணங்களுக்குத் தாத்பர்ய மருளிச்செய்தாராய், வாக்யார்த்த மருளிச்செய்கிருர் (வாராலேயித்யாதி). உட்கருத் தருளிச்செய்கிருர் (ஸ்வவிஷயத்தி லித்யாதி). மேலுக்குத் தாத்பர்யம் சொல்லுகைக்காக கீழ்பலித்த வர்த்தத்தை யருளிச்செய்கிருர் (தன்னித்யாதி). யதி(த)சப்தத்தாலே பலித்தவர்த்தம் (எண்ணுதித்யாதி). (ஒன்றை யெண்ணில்) என்றவநந்தரம், சொல்லி என்று கூட்டுவது. பேர் - பெரியோனை, ஆளன் - ஆளுமவனென்று சப்தார்த்தமாய், அத்தை யருளிச்செய்கிருர் (ஸர்வாதிகனை) என்று. (அல்லது) என்ற வநந்தரம், எண்ணுள் என்றும் கூட்டுவது. இப்படி மூலத்திலும் அத்யாஹரித்துக்கொள்வது. "மாஸஸ்சாபி" என்கையாலே-வாங் நியமமும் சொல்லுமென்று விவக்ஷித் தருளிச்செய்கிருர் (ஆகையாலே யித்யாதி). "தாயைப் பார்த்து மகளைக்கொள்" என்கிற கணக்கிலே, பெண்பிள்ளை இப்படி அதிப்ரவணையாளாகில் தாய்க்கும் பகவத்விஷய ப்ராவண்ய முண்டாயிருக்கவேண்டாவோ, கேவலம் வெறுத்துக்கொண்டே யிருக்கக்கூடுமோ வென்ன; அங்ஙனன்று,உள்ளே உகப்புண்டு என்று விவக்ஷித்து, அத்தை "இப்பெண்" என்கிற பதத்தில் ஏறிட்டு அர்த்த மருளிச்செய்கிருர் (புறம்பித்யாதி வாக்யதவயத்தாலே). (களிப்பு) என்ற வநந்தரம், தனக்கு என்று சேஷம்.

"அமா" என்று - யுத்தமாய், பலிதார்த்தம் (அம்பேற்குமவன்) என்றது. ... . ... ... ... .. ... ... (எ)

மூ.—உறவாது மிலளென்றென்ருழியாது பலரேசுமலராயிற்ருல்
மறவாதேயெப்பொழுதும்மாயவனே மாதவனேயென்கின்ருளால்
பிறவாத பேராளன் பெண்ணுளன் மண்ணுளன் விண்ணோர்தங்க
ளறவாள னென்மகளைச் செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆதும் | எவ்விதமுமான | ஒழியாது | நீராமல் |
| உறவு இலள் | சுற்றததாரை யுடையளாயிருக்கிறிலள், | பலர் | அநேகரும் |
| | | ஏசும் | குறறம் சொல்லும்படி |
| என்றென்று | என்று இவ்வளவுமாத்ரத்திலேயே | அலா | பழியானது (மேலாகமெங்கும்) |

| | |
|---|---|
| ஆயிற்று உண்டாயிற்று, | பெண் ஆளன் பெண்களுக்கு நிர்வாஹகனாய் |
| ஆல் கஷ்டம்! | மண் ஆளன் பூமிக்கு ரக்ஷகனாய் |
| மறவாதே விஸ்ம்ருதி யில்லாமல் | விண்ணோர் தங்கள் நித்யஸூரிகள் விஷயத்தில் |
| எப்பொழுதும் ஸர்வகாலமும் | அறவாளன் ஆந்ருசம்ஸ்யத்தை யுடையனான அவன் |
| மாயவனே ஆஶ்சர்யபூதனே! | என் மகளைச் செய்தனகள் அம்மனைமீர் அறிகிலேனே. (அ) |
| மாதவனே ஶ்ரிய:பதியே! | |
| என்கின்றாள் என்று சொல்லாநின்றாள், | |
| பிறவாத ஜந்மத்தைப் போக்குமதானாய் | |
| பேர் ஆளன் திருநாமத்தை யுடைய | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (உறவாதுமிலளென்று) பெற்றாரோடு தோழிமாரோடு வாசியற இவளிப்படி கண்ணறுவதே என்பர்கள்; பழமைகள்பார்த்து ஒன்றும் உறவுடையளாயிருக்கிறிலள். (க) "பிதா நாம மூர்த்த ஶிரோரோகः - பிதாநாமமூர்த்தஶிரோரோக:" என்றாய்த்திருக்கிறது. (உ) [த்ருஷ்ட்வா ஸ்த்ரீத்வா பஹிர் - த்ருஷ்ட்வா ஸ்த்ரீத்வா பஹிர்குரும்] இதுக்கு பட்டர் "இவள் க்ருஷ்ணவிஷய ப்ரேமத்தில் புதியதுண்டிலள் காண்" என்றருளிச்செய்தார் சிலரைக் கண்ணுக்குத்தோற்றிற்றிறே என்று. (ங) [காசித் - காசித்] ஒருத்தி புறப்பட்டு க்ருஷ்ணன் பாடேறப்போனாள். வழிகாட்டிரானரென்ன; ப்ரேமத்தாலேயிருண்டது, அவ்விருட்சி வழிகாட்டப்போனாள். (என்றித்யாதி) இத்தையே சொல்லிவிடாதே பலருமேசும்படி பழியாய் விழுந்தது. (மறவாதே) ஸ்பர்ஶகருண்டாக மறப்பு வாராதிறே. இவளையும் அவனையும் சொல்லி அடுத்திறே பழிசொல்லுவது. இப்படி பழிசொல்லுகிறபோது அவள் செய்கிற தென்னென்னில்; (மாயவனே) ஆஶ்சர்ய குணசேஷ்டி தங்களை யுடையவனே! (மாதவனே) ப்ரணயதாரையில் அவளுக்கு ஆனைக்குக் குதிரைவைக்கையாலே பரமாவிகனானவனே! என்னாநிற்கும். அதாவது- கலக்கிறவிடத்தில் தாழநின்று பரிமாறினபடியையும், அதுக்கடியான சீலத்தையும், கலந்தபோதை பரிமாற்றத்தின் வகைகளையும், இதில் ஶ்ரோத்ரியனைக்கு வ்யுத்பத்திபண்ணினவிடத்தையும் சொல்லாநிற்கும்.

(க) (க) வி-பு-ரு-ரு௯.௨௰. (உ) வி-பு-ரு-௯௩-௯௬.

(பிறவாத) ஆஸ்ரிதார்த்தமாக நூறுயிரம்படி பிறவாநிற்கச்செய் தேயும் ஒன்றும் செய்திலனுய், (க) "ருணம் ப்ரவ்ருத்தமிவ" என்னுமபடியான ஆஸ்ரிதவிஷயத்தில் வ்யாமோஹாதிசயத்தை யுடையவன். பெரியோனென்றபடி. அன்றிக்கே, பிறவியை அறுப்பதான திருநாமத்தையுடையவன். துக்கநிவர்த்தகமான திருநாமங்கள் கிடீர்! இவளுக்கு துக்கத்தைப பண்ணுகிறது. (பெண்ணுளன்) பெண்பிறந்தாரையடைய இபபடிபண்ணுமவன்; (உ)†("நங்கை மீர்" இத்யாதி). (மண்ணுளன்) (ங) "ரக்ஷிதா ஜீவலோகஸ்ய". (விண்ணோரித்யாதி) நித்யஸூரிகள் தன் ஆநருசம்ஸ்யத்தைக்கொண்டாட, அவர்களுக்கு ஒலக்கம் கொடுக்குமவன். (என்மகளித்யாதி) இவளளவில் அவன்பண்ணின ஆநருசம்ஸ்ய பரவ்ருத்திகள் என்னுல் பேசிமுடியபபோகாது. ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (உறவித்யாதி). "இப்பெண் பெறறேன்" என்று - கூடபாவை(கோஷ்டீ)யாய், உகப்பு உள்ளிருக்க மேலாக வெறுத்தவாறே, அவாகள் ‡பாவ (பாவ)ஜ்ஞராய், தாய்மாரையும் தோழிமாரையும் மற்றுமெல்லாரையும் விட்டு நாயகனையே விரும்பினுல் நாட்டார் பழிசொல்லாரோ, நீ உபேக்ஷிக்கலாமோ வென்ன; பழியும் விளைந்து அத்தாலே மிகவும் ப்ராவண்ய மிரட்டித்தது, எனக்கொன்றும் தெரிகிறதில்லையென்கிறுளென்று ஸங்கதி.

இப்படி பகவத்விஷயத்திலே உறவுகளற்று வர்த்தித்தாருண்டோ வென்ன (பிதாநாமேத்யாதி ப்ரமாணத்ரயம்). "காசிதாவஸதஸ்யாந்தே த்ருஷ்ட்வா ஸ்த்ரீ பஹிர்குரும்। தந்மயத்வேந கோவிந்தம் தத்யௌ மீலிதலோசநா - காசிதாவஸதஸ்யாந்தே தருஷ்ட்வா ஸ்த்திதவா பஹிர்குரும் । தந்மயத்வேந கோவிந்தம் தத்யள மீலிதலோசநா" இத்யாதி. ப்ரேமம் விஞ்சினுல் குருதர்சநம் இவளுககுக் கூடுமோவென்ன (இதுக்கித்யாதி). "யயௌ சகாசித் ப்ரேமாந்தா தத்பார்ஸ்வ மவிலம்பிதம் - யயௌசகாசித் ப்ரேமாந்தா தத்பார்ஸ்வ மவிலம்பிதம்" என்றதுக் கர்த்த மருளிச்செய்கிறுர் (ஒருத்தி யித்

† குண்டலிதக்ரந்தம் க்வாசித்கமாகிலும் "பெண்பிறந்தாரை அப்படி படுத்துமோ வென்ன வருளிச்செய்கிறா (நங்கைமீரித்யாதி)' என்று, அரும்பதாந்தரத்தில் காண்கையால், ப்ரக்ஷிப்தமன்று.

‡ இது ஸந்திக்த்தம். பாவ (பாவ) நபிஜ்ஞராய் என்றிருக்கலாமோ?

(க) பார-உத்யோ-நிஅ. (உ) தி-வாய்-ரு-உ-ரு. (ங) ரா-ஸு-கூ-கூ0.

யாதி). (ஸ்மாரகர்)-பழியிடுவார். (ஶ்ரோத்ரியன்)-ப்ரணயதாரையில் ஸமர்த்தன்.

(ஆந்ருசம்ஸ்ய ப்ரவ்ருத்திகள்) என்றது-விபரீதார்த்த லாக்ஷணிகம். ... ... ... ... ... ... ... (அ)

மூ.—

பந்தோடுகழல்மருவாள் பைங்கிளியும்பாலூட்டாள் பாவைபேணுள்
வந்தானோ திருவரங்கன் வாரானோ வென்றென்றே வளையும்சோரும்
சந்தோகன் பவுழியனைந்தழலோம்பு தைத்திரியன் சாமவேதி
அந்தோவந் தென்மகளைச் செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பந்தோடு | பந்தோடுகூட | சோரும் | இழவாநின்றாள்; |
| கழல் | கழல்என்கிற (பெண்களாடுகிற) காய்களை | சந்தோகன் | ஸாம விசேஷத்தின் அர்த்த மறிந்தவனும் |
| மருவாள் | விரும்புகிறிலள், | பவுழியன் | கௌஷீதகி ப்ராஹ்மணத்தின் அர்த்த மறிந்தவனும் [யும் |
| பை | பசுமையான | | |
| கிளியும் | கிளிக்கும் [றிலள், | | |
| பாலூட்டாள் | க்ஷீரபாநம் செய்விக்கி | ஐந்துஅழல் | பஞ்சாக்நிமத்யவர்த்தி |
| பாவை | பொம்மையை | ஓம்பு | ஹோமம் பண்ணுமவனும் |
| பேணுள் | ஆதரிக்கிறிலள், | | |
| திருவரங்கன் | அழகிய மணவாளன் | தைத்திரியன் | தைத்திரீயோபநிஷத்தினர்த்த மறிந்தவனும் |
| வந்தான் | எழுந்தருளினான் | | |
| ஓ! | அதிசயம் | சாமவேதி | ஸாமவேதார்த்தமறிந்தவனுமான அவன் |
| என்று | என்றுசொல்லியும், | | |
| வாரான் | வருகிறிலன் | வந்து | இவளிருக்குமிடம் வந்து |
| ஓ! | கஷ்டம் | | |
| என்றே | என்று சொல்லியும் | என்மகளைச்செய்தனகளம்மனைமீரறிகிலேனே. | |
| வளையும் | (கைகளில்) வலயங்களையும் | அந்தோ | கஷ்டம். (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பந்து) நித்ராஸமயத்திலும் ஒன்றல்லாவொன்று கைவிடாதவள் இரண்டையும் விட்டாள். (பைங்கிளியும்) பெற்றாரை உபேக்ஷிக்கையன்றியே, பிறந்தாரையும் உபேக்ஷியாநின்றாள். (பாவைபேணுள்) முன்பு இவளுக்குச் சிலர் அநபிமதம் செய்கையாவது - பாவைபேணுதொழிகையாய்த்து; அத்தைத் தானே செய்யாநின்றாள். (க) * [illegible]

(க) † (பா) [illegible]-ஸதா.

தஸ்யாத்பால்யே விவேகாத்மா யதேத ஶ்ரேயஸே நரঃ ஆனபடியைச் சொல்லிற்றுய்த்து. ஆக, பழைய யார் ...யடையக் கைவிட்டா ளென்றபடி. (க) [பரித்யக்தா மயா லங்கா - பரித்யக்தா மயா லங்கா] ப்ராபகவிஷயத்தில் தன்னையே உபாயமாகப் பற்றினல் இதரோபாயங் களோபாதி, ப்ராப்யவிஷயத்திலும் அல்லாதவை ப்ராப்யாபாஸமாய் த்யாஜ்யமாயிருக்குமிறே.

புறம்புள்ளவற்றையடையக் கைவிட்டாள்; அவன்வரவு நிஶ்சித மென்றிருந்தாள்; தன்தசையே செப்பேடாக (வந்தானே! திருவரங் கன் என்று) புறம்புள்ளபற்றறுக்க வந்திருக்கிறவன் பற்றற்றாலும் வந்து முகங்காட்டானே என்னுமாய்த்து. (வாரானோ!) நானித்தசை யோடே முடியுமித்தனையோ என்னும். குறைநிகரல்லாதார் விஷயத் தில் பற்றோபாதியாய் விழுந்ததே நமக்கு இவ்விஷயத்தில் பற்றும் என்னும். (வளையும்)பந்து கழல்கள் பாவையோபாதியாய் விழுந்தது வளையும். (உ) "ஶைதில்ய முபயாந்த்யாஶு - சைதில்ய முபயாந்த்யாசு".

(சந்தோகனித்யாதி) இத்தை ஒரு அஜ்ஞன்செய்தானகில் பொ றுக்கலாய்த்திறே; (௩) "வேதவித்தேவஸாஹம்-வேதவித்தேவசாஹம்" என் றவன் கிடீர் இத்தைச்செய்கிறான். (சந்தோகன்) என்கிறவிது - சந் தோக ஸாமத்தைப் பிரித்துச்சொல்லுகிறதாகவுமாம்;அன்றிக்கே, இத் தால் - வேதைக ஸமதிகம்ய னென்றபடியாய், மேல் - வேதாந்தவித் தமனென்றதாகவுமாம். (அந்தோவித்யாதி) ஒருஸர்வஜ்ஞன், அஜ்ஞன் செய்வத்தைச்செய்தால், இதுக்குமேல் என்றால் போக்கடி நடப் போமோ? (வந்து) இவள் தன் திறத்துப்படாதிருக்கத் தானேவந்து இப்படிபண்ணி, தானே உபேக்ஷிப்பதே!. முன்தீமை செய்வானும் தானேயாய் உபேக்ஷிப்பானும் தானேயாவதே!. (என்பொன்மகள்) என்றுபாடமானபோது - ஶ்லாக்யையான பெண்பிள்ளையென்றபடி.

அரு—ஒன்பதாம்பாட்டு. (பத்தித்யாதி) உன் பெண்பிள்ளை பழியே ஹேதுவாக ப்ராவண்ய மதிசயித்து இப்பாடு பட்டால் "அவனென்மக ளைச் செய்தனகள்" என்று வெறுப்பானென், "குறை மென்பெண்ணாது" என்று ஆறியிருக்கலாய்த்தே என்ன; ஸர்வஜ்ஞ னறியானோ, பழி விளையா மல் பண்ணி ஆளவேண்டாவோ, உபேக்ஷித்தவரை யொழிய வெறுப்பது ஆரை என்கிறாளென்று ஸங்கதி.

(க) ரா-யு-க௬-௫. (உ) வி-பு-௫-க௩-உ௬. (௩) ஸ்ரீ-க௫-க௫.

பந்தோடு மருவாள் கழலோடு மருவாள் என்று சப்தார்த்தமாய், மருவு-ஸதா(సదా)பரிசயமாய், அதினெல்லைநிலத்தளவும் தாத்பர்யமருளிச் செய்கிறார் (நித்ரேத்யாதி). "கிளியும்" என்ற சகாரத்தாலே தோற்றின ப்ராதான்யத்தை, "உறவாது மிலள்" என்கிறத்தைக்கடாக்ஷித்துத் தாத்பர்யமாக வருளிச்செய்கிறார் (பெறுமுரை யித்யாதி). மரப்பாவையை ஆதரியாளென்று சப்தார்த்தமாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார்(முன்பித்யாதி). இத்தால் ஸ்வாபதேசமேதென்ன வருளிச்செய்கிறார் (தஸ்மாதித்யாதி); "బాల్యే క్రీడనకాసక్తాః యౌవనే విషయోన్ముఖాః। అజ్ఞా నయన్త్యశక్త్యా చ వార్ధక్యం సముపస్థితాః ॥ తస్మాద్బాల్యే వివేకాత్మా యతేత శ్రేయసే నరః - பால்யே க்ரீடநகாஸக்தாः யௌவநே விஷயோந்முகாः। அஜ்ஞா நயந்த்யசக்த்யாச வார்த்தக்யம் ஸமுபஸ்த்திதாः। தஸ்மாத் பால்யேவிவேகாத்மா யதேத ஶ்ரேயஸே நரः" என்றபடியே - க்ரீடநகங்களான பந்தும் கழலும்-விஷயங்களுக்கு உபலக்ஷணமாக, கிளி பாவை இவறறையெல்லாம் விட்டாளென்றதாய்த்து. ஶ்ரேயஸ்ஸுக்கு இவள் யத்நம் பண்ணுகை யாவதென்னென்ன வருளிச்செய்கிறார் (ஆகவித்யாதி). இப்படிவிட்ட பேருண்டோ வென்ன (பரித்யக்தேத்யாதி) ப்ராபகாந்தரத்யாக மன்றோ வேண்டுவது; ப்ராப்யாந்தரத்யாகமும் பண்ணவேணுமோ அவன் வருகைக்கென்ன வருளிச்செய்கிறார் (ப்ராபகேத்யாதி).

மேலுக்கவதாரிகை (புறம்பித்யாதி). "வந்தானோ!" என்றவிடத்தில் "ஓ!" என்றது-ஹர்ஷத்திலே. "வாரானோ!" என்றதுக்குத் தாத்பர்யம் (புறம்புள்ள பற்றித்யாதி). "வாரானோ" என்கிற ஓகாரத்துக்கு - அவன் வரக்காணாமையாலே விஷாதத்திலேயாய், அதுக்குத்தாத்பர்ய மருளிச்செய்கிறார (நாணித்யாதி). "திருவரங்கன்-வந்தானோ - என்று, திருவரங்கன்-வாரானோ - என்றேவளையும் சோரும்" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி "என்றே" என்ற ஏவகாரத்துக்கு பலிதார்த்த மருளிச்செய்கிறார் (குறுகிகரித்யாதி) தானே வளைகள்சோர்ந்த வி-முண்டோ வென்ன (சைதில்ய மித்யாதி); "అనురాగేణ శైథిల్య మస్మాసు వ్రజతో హరేః। శైథిల్య ముపయాన్త్యాశు కరేషు వలయాన్యపి- அநுராகேண சைதில்யமஸ்மாஸு வ்ரஜதோ ஹரேः। சைதில்ய முபயாந்த்யாசு கரேஷு வலயாந்யபி" என்று வசநசேஷம். "ஹரேள வ்ரஜதிஸதி-அஸ்மாஸு-சைதில்யமுபயாதி" இத்யந்வயः.

"వేదైశ్చ సర్వైరహమేవ వేద్యః వేదాన్తకృద్వేదవిదేవ చాహమ్ - வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்யः வேதாந்தவித் வேதவிதேவசாஹம்" என்கிறபடியே-வேதவேத்யனாகையாலும், வேதவேதாந்தார்த்த வித்தமனாகையாலும், ஸாவஜ்ஞனாக ப்ரவ்ருத்தனானவனே செய்தால் பொறுக்கவொண்ணாதென்னு மாத்தத்தை வ்யதிரேகமுகேந வருளிச்செய்கிறார் (இத்தை யித்யாதி) "சந்த்ராகன்" என்றது - ஸாம விசேஷார்த்தவித்தென்றும்,

''பவுழியன்'' என்றது- கௌஷீதகிப்ராஹ்மணதநி ஷாத்த வித்தென்றும், ''ஐந்தழல்'' - பஞ்சாக்நி மத்யவாஸியாய், ''ஓம்பு-'' ஹோமசீலனாய், இத தால் - வேதார்த்தாநுஷ்டாதாவென்றும், ' தைததிரியன்-'' தைத்திரீய சாகார்த்த வித்தென்றும், ''சாமவேதி'' ஸாமார்யோ ஸாமவேதார்த்த வித்தென்றும் ஒரு யோஜனை அருளிச்செய்தாராய், *சந்தஸ்ஸப்தம்-ஸா மாங்யோ வேத பரமாக்கி, அத்தாலே - ஸகல வேதங்களை யடைந்தவ னென்றதாய், ததப்ரகிபாதய னென்ருக்கி, மேலசொலலுகிற ''பவுழியன்'' என்றது - உபநிஷத்தாகையாலே வேதாந்தார்த்த விதனென்றும், ''ஐந்தழ லோம்பு தைத்திரியன் சாமவேதி'' என்றதுக்கு - முன்புபோலே வேதார் த்தாநுஷ்டாதாவாய்க்கொண்டு வேதார்த்த வித்தென்றும் திருவுள்ளம் பற்றி யோஜநாந்தர மருளிச்செய்கிறார் (அன்றிக்கே யிதயாதி) ஆக, இத் தால் - ''சந்தோகன்'' என்றதுக்கு - இரண்டர்த்தம் சொல்லிற்றாய்த்து. எல்லாவற்றாலும் - ஸர்வஜ்ஞனென்றதாய்த்து. இவையெல்லாவற்றாலும் தோ ற்றின விஷாதாதிசயத்தை ''அந்தோ!'' என்கிற பதாரூடமாக்கிக் காட்டு கிறார் (ஒருவித்யாதி). ''வந்து'' என்கிற பதமில்லாமல் வேறு பாட (வ்ரு) முண்டென்று காட்டி அர்த்த மருளிச்செய்கிறார் (என்னிர்யாதி). (க)

மூ.-சேலுகளும்வயல்புடைசூழ் திருவரங்கத்தம்மானைச்சிந்தைசெய்த நீலமலர்க்கண்மடவாள் நிறைவழிவைத் தாய் மொழிந்தவதனை நேரார் காலவேல் பரகாலன் கலிகன்றி யொலியாலை கற்றுவல்லார் [தாமே. மாலைசேர் வெண்குடைக்கீழ் மன்னவராய்ப் பொன்னுலகில் வாழ்வர்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. |
|---|---|
| சேல் | மத்ஸ்யங்களானவை |
| உகளும் | துள்ளாநின்ற |
| வயல் | கழனிகளாலே |
| புடை | பர்யந்த ப்ரதேசங்களெங்கும் |
| சூழ் | வ்யாப்தமான |
| திருவரங்கத்து | திருவரங்கமென்னும் திவ்ய தேசத்தில் கண்வளர்ந்தருளுகிற |
| அம்மானை | ஸ்வாமியான நம்பெருமான் விஷயமாக |
| சிந்தைசெய்த | நினைப்பிட்ட |
| நீலமலர் | கருநெய்தல்போன்ற |
| கண் | கண்களையுடைய |
| மடவாள் | பெண்ணினுடைய |

| பதம். | உரை. |
|---|---|
| நிறைவு | ஸ்த்ரீத்வ பூர்த்தி |
| அழிவை | அழிந்தமையை |
| தாய் | தாயானவள் |
| மொழிந்த | சொன்ன |
| அதனை | அந்த அவஸ்த்தாவிஷயமாக, |
| நேரார் | எதிரத்துவந்த சத்ருக்களுக்கு [இறயன்போலே யிருக் |
| காலன் | |
| வேல் | வேலாயுதத்தையுடையராய்(அதிருலே) |
| பரகாலன் | சத்ருக்களுக்குக் காலன்போன்றவரான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த |

| | | | |
|---|---|---|---|
| மாலை | சப்தஸந்தர்ப ரூபமான இப்பத்துப் பாட்டையும் | வெள் | வெளுத்திருக்கிற |
| கற்று | ஆசார்ய ஸகாசத்தில் அப்யஸித்து | குடைக்கீழ் | குடையின் கீழிருந்து |
| வல்லார் | அறிய வல்லவர்கள் | மன்னவராய் | ராஜாக்களாய் ராஜ்ய பரிபாலநம் பண்ணி (அநந்தரம்) |
| மாலைசேர் | முத்துமாலைகள் ஸரம் ஸரமாக சேர்ந்திருக்கிற | பொன்உலகில் | பரமபதத்தில் |
| | | வாழ்வர் | ஸுகாநுபவம் பண்ணுகிற்பர்கள்.(௧௰) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (சேலுகளும்) திர்யக்குக்களுங்கூடக் களித்து வர்த்திக்கும்படியான வயல்சூழ்ந்த கோயிலிலே வர்த்திக்கிற ஸர்வேஶ்வரனைச் சிந்தைசெய்தபடியாய்த்து. (நீலமலரித்யாதி) எதிர்த்தலை சிந்திக்கும்படியான வடிவழகையுடையவள். (நிறைவழிவை) ஸ்த்ரீத்வமழிந்தபடியை. (தாய்) அவள்தான் அறிவுநிறைவுகள் அழிந்துகிடக்க, திருத்தாயார் அவள்தசையைச் சொன்னபாசுரமாய்த்து. (நேராரித்யாதி) "நானெதிரி" என்று மார்தட்டி நேரேநிற்கும் எதிரிகளுக்கு ம்ருத்யுவான வேலை யுடையராகையாலே - பரகாலனென்று பேர்பெற்ற ஆழ்வாரருளிச்செய்த சொல்தொடையைக் கற்றுவல்லார்கள். கைப்பறிபறிக்கையன்றிக்கே, இதின்பொருளை ஆசார்யர்களோடே கற்றறியுமவர்கள். (மாலையித்யாதி) தனிமுத்துக் குடைக்கீழே இதிலபேக்ஷையுண்டாகில் ஐஶ்வர்யத்தை அநுபவித்து, பரமபதத்திலே நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள். ... ... (௧௰)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (சேலித்யாதி) பெண்பிள்ளை திருவரங்கத்தை "சேலுகளும்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (திர்யக்கித்யாதி). திர்யக்குக்களும் களிக்கும் தேசமாகையாலே நாமிங்கே களிக்கவேணுமென்று சிந்தை செய்தாளென்றதாய்த்து. "வல்லார்" என்றபோதே கற்கை அர்த்த[illegible]த்தமா யிருக்க, "கற்று" என்றதுக்குக் கருத்தருளிச் செய்கிறார் ([illegible]யித்யாதி). ஶ்ரீகோசத்தைப் பற்றி பலாத்காரத்தாலே தன் புத்தி ப[illegible]ந்நாலே, ஸ்வரஸமான அர்த்தம் இடக்க, அதிலர்த்தத்தை அறிகையன்றிக்[illegible]க என்றபடி. "மாலை"-முத்துமாலையாக்கி அருளிச்செய்கிறார் (தனியித்யாதி). ... ... (௧௰)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அஞ்சாம்பத்தில் அஞ்சாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# அஞ்சாம்பத்து ஆறாந் திருமொழி

## கைம்மானம் ப்ரவேசம்.

—ooXoo—

வ்யா.— "மறவாதே எப்பொழுதும் மாயவனே மாதவனே என்கின்றாள்" என்று - திருநாமங்களைப் பலகாலும் தானே சொல்லியும், திருத்தாயார் அவற்றை அநுபாஷிக்கக்கேட்டும், ஆக இப்படி திருநாமங்களிலே வாஸனை பிறந்தது; ஸத்தாதாரகமாயிறே திருநாமங்கள் தானிருப்பது; அத்தாலே உணர்ந்து தரித்தார். தரித்தவநந்தரம், "நீரிங்ஙனேகிடந்து படுகிறதென், பரமபதம் கலவிருக்கையாயிருக்க நாமிங்கே வந்து ஸுலபராகிறது உமக்காகவன்றோ" என்று அவதார ஸௌலப்யங்களையும்காட்டி, "அங்ஙன் காதாசித்கமாகவன்றிக்கே கோயில்களிலே வந்து ஸந்நிஹிதராகிறதும் உமக்காக, அந்தப்போதுவுமன்றிக்கே விசேஷித்துக் கோயிலிலே வந்து ஸந்நிஹிதராய்த்ததும் உமக்காக, நம்முடைய ஸந்நிதியாலுள்ள பல(ஃல)ந்தான் நீர் பெறுவதும் செய்தீர், நாமே உம்முடைய கார்யத்துக்குக் கடவோம் என்று நம் தலையிலே ந்யஸ்தபரராயிருக்கப் பெற்றீரிறே, இனி அலமாக்கிறதென்" என்ன; ஸ்ரீகௌஸலையார், பெருமாள் காடேறப்போகிறபோது, "ஏகபுத்ரையாயிருக்கிற நான் உம்மைவிட்டிருக்கமாட்டேன்" என்று புறப்பட; ஒருகால் அவர் முகத்தைப்பார்த்து, "ஆச்சி! நீர் சொல்லுகிறது தர்மஹாநிகிடீர்', இனி பர்த்தாவிருக்க புத்ரனை அநுவிதாநம் பண்ணவும் கடவதல்ல, ஆனபின்பு, இனி மீளும்' என்ன; அவள் காப்பிட்டு மீண்டாளிறே; அப்படியே, இவர் அவ்வார்த்தையாலே ஹ்ருஷ்டராய், பெற்றதிலே லாபாய்சத்தைச்சொல்லி க்ருதார்த்தராகிறார். ... ... ... ... ... ... ... *

---

அரு —கைம்மானம் ப்ரவேசம் —*வெருவாதாளில்-நிறைவழிந்தபடியைத் தாய்மொழியும்படி அவஸாதமுண்டாயிருக்க, "யான் கண்ட தணிநீர்த்தென்னரங்கத்தே" என்று களிக்கக்கூடுமோ வென்ன; ஸத்ருஷ்டாந்தமாக, அவஸாதம்தீர்ந்து ஹர்ஷித்ததுக்கு ஹேதுவைக் காட்டுகிறார் (மறவாதே யித்யாதி). ... ... ... ... .. . ... *

மூ.—கைம்மான மழ களிற்றைக் கடற்கிடந்த கருமணியை
மைம்மான மரதகத்தை மறையுரைத்த திருமாலை
எம்மானை யெனக்கென்று மினியானைப் பனி காத்த
வம்மானை யான் கண்டதணிநீர்த் தென்னரங்கத்தே. (க)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| மானம் | நீண்டிருக்கிற [தாய் | எனக்கு | (அவனை அநுஸந்தியா |
| கை | துதிக்கையை யுடைத் | | நின்ற) எனக்கு |
| மழம் | இளம்பருவத்ததான | என்றும் | ஸர்வகாலத்திலும் |
| களிற்றை | யானை போன்றவனை | இனியானை | போக்யபூதனாய், |
| கடல் | ஸமுத்ரத்தில் [ய், | பனி | கல்மழையை |
| இடந்த | கண்வளர்ந்தருளுகிற | காத்த | (கோவர்த்தநமலையை |
| கருமணியை | நீலரத்நம் போன்றவ | | யெடுத்துத்)தடுத்து |
| | னாய், | | ரக்ஷித்த [வனை |
| மை | ஸ்யாமவர்ணமானது | அம்மானை | எனக்கு ஸ்வாமியான |
| மானம் | அதிசயித்திருக்கிற | யான் | நான் |
| மரதகத்தை | மரதகப்பச்சை போ | அணி | அழகியதான [டு |
| | ன்றவனாய், | நீர் | ஜலத்தினால் சூழப்பட் |
| மறை | வேதங்களாலே | தென் | ஸுந்தரமான |
| உரைத்த | ப்ரதிபாதிக்கப்பட்ட | அரங்கத்து | திருவரங்கமென்னும் |
| திருமாலை | ஸ்ரியஃபதியாய், | | திவ்யதேசத்தில் |
| எம்மானை | எனக்கு ஸ்வாமியாய், | கண்டது | காணுகின்றேன். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (கைம்மானமித்யாதி) (க) "ஆனையில் கிடந்தகிடக்கை" என்று ஓரானை கைகளையும் கால்களையும் பரப்பிக் கொடு கிடக்குமாபோலே கிடக்கிற கிடை. நீண்ட துதிக்கையையுடைத்தாய், பருவத்தால் இளையதாயிருப்பதொரு ஆனை சாய்ந்தாப் போலே யிருக்கிறவனை. (கடலித்யாதி) கடலில் பாழ்திரும்படி ஒரு நீலரத்நம் சாய்ந்தாப்போலே திருப்பாற்கடலிலே கிடந்தவனை. (மை யித்யாதி) ஸ்யாமத்வம் மிக்கிருந்துள்ள மரதகரத்நம்போலே யிருக்குமவனை. (மறை) வேதங்களாலே ஒருமிடறுசெய்து பேசப்பட்ட ஸ்ரியஃபதியை. (உ) "ஹ்ரீஶ்ச தே - லக்ஷ்மீஶ்ச" (ங) "அஸ்யேஶாநா".

(எம்மானை) இருவருமான சேர்த்தியைக்காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவனை. (எனக்கு) ஏதேனும் நொந்ததசையிலும் தன்னை

(க) பெரு-திரு-எ-உ. (உ) பு-ஸூ- (ங) ஸ்ரீஸூ.

அநுஸந்தித்தால் எனக்கினியனாயிருக்குமவனை. ( பனி ) இப்படியே தானல்லது ரக்ஷகரில்லாதாரை அரியன செய்தும ரக்ஷிக்குமவனை; “ஒருகால் மலையை எடுத்துப பசுக்களையும் இடையரையும் ரக்ஷித்தான், திருப்பாற்கடலிலே கிடந்தான்” என்று கேட்டார் வாய் கேட்கையன்றிக்கே, நான் கோயிலிலே காணப்பெற்றேன். ... (௧)

---

அரு.—முதற்பாட்டு.(கைம்மானமித்யாதி). தாத்பர்யமருளிச்செய்து, சப்தார்த்த மருளிச்செய்கிறார் ( நீண்டவித்யாதி ), மானமான கையை யுடைய மழலையான ஆனையென்று சப்தார்த்தமென்று கருத்து. ஏகதேசத்தைச் சொல்லாமல், “கடல்” என்ற ஸாமாந்யோக்திக்குத் தாத்பர்யம் (கடலித்யாதி).

“பனி” என்று - கல்மாரியை லக்ஷணயா சொல்லுகிறதென்றருளிச்செய்கிறார் (இப்படியே யித்யாதி). இத்தால் - தம்முடைய விஶ்லேஷவ்யஸந ஜநிதமான கண்பனி காத்தமை ஸூசிதமென்று திருவுள்ளம் பற்றி, மேலுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஒருகா லித்யாதி). ... (௧)

மூ.—பேரானைக் குறுங்குடியெம்பெருமானைத் திருத்தண்கா
லூரானைக் கரம்பனூருத்தமனை முத்திலங்கு
காரார் திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுண்டு
ஆராதென்றிருந்தானைக் கண்டது தென்னரங்கத்தே (௨)

| பதம். | உரை. |
|---|---|
| பேரானை | திருப்பேர்என்னும் திவ்யதேசத்திலே ஸந்நிஹிதனாய், |
| குறுங்குடி | திருக்குறுங்குடியிலே எழுந்தருளியிருக்கிற |
| எம்பெருமானை | ஸ்வாமியாய், |
| திருத்தண்கால் ஊரானை | திருத்தண்கால் என்னும் திவ்யதேசத்தில் நித்யவாஸம் பண்ணுமவனாய், |
| கரம்பனூர் | திருக்கரம்பனூரில் எழுந்தருளியிருக்கும் |
| உத்தமனை | ஸர்வாதிகனாய், |
| முத்து | முத்துக்களானவை |
| இலங்கும் | ஒளிவிடாநிற்பதாய் |

| பதம். | உரை |
|---|---|
| கார் ஆர் | கருமைமிக்கதாய் |
| திண் | த்ருடமான (அநபிபவநீயமான) |
| ஏழ்கடலும் | ஸப்தஸமுத்ரங்களையும் |
| ஏழ்மலை | ஸப்தகுலாசலங்களையும் |
| ஏழ் இவ்வுலகு | ஸ்பதத்வீபங்களையுமுடைய இந்தலோகத்தை |
| உண்டு | அமுதுசெய்து |
| ஆராது என்று | த்ருப்தி பிறக்கவில்லை என்று |
| இருந்தானை | ரக்ஷணத்தில் அபூர்த்தி தோற்ற இருந்தவனுமான ஸர்வேஶ்வரனை |
| கண்டது தென்னரங்கத்தே (௨) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பேரானை) ஆற்றங்கரையிலே, ஸர்வ போக்யமாம்படி திருப்பேரிலே ஸந்நிஹிதனானவனை. (குறுங்குடி) திருக்குறுங்குடியிலே ஒரு விசேஷ ப்ராப்தியுண்டிறே இவர்க்கு; - ஆழ்வார் ஸ்வாதந்த்ர்யமிறே அங்கு நடப்பது. (திருத்தண்காலூரானை) அவ்வூரிலுள்ளவர்களிலே தானுமொருவனாய், தன் வ்யாவ்ருத்தி தோற்றாதபடி யிருந்தவனை (கரம்பனூர்)வழிக்கரையிலே திருவாசலுக்கொரு கதவிடாதே வந்து கிடக்கிறவனை.

(முத்தித்யாதி) முத்துக்கள் ஒளிவிடாநிற்பதாய், கருமைமிக்கு, தான் கரையை அதிக்ரமிக்கக் கடவதன்றிக்கே நிற்கிறநிலையை ஒருவரால் கொலைக்கவொண்ணாதபடி அதில் திண்ணிதாயிருக்கிற கடல்களேழும், பூமிக்கு ஆணியடித்தாப்போலே இருக்கிற மலைகளேழுமான இந்த லோகங்களேழையும் தன் வயிற்றிலே வைத்து ரக்ஷிக்கச் செய்தேயும் ஒன்றும் செய்திலனாயிருக்கையாலே, உபகாரம் கொண்டார்க்கு ப்ரத்யுபகாரம்தேடி நெஞ்சாறல் படவேண்டாதபடி யிருந்தவனை. ... ... ... ... ... ... (௨)

---

அரு.—இரண்டாம்பாட்டு.(பேரித்யாதி) கீழ்ப்பாட்டில் பெரியபெருமாள் கிடையழகிலேயீடுபட்டாலே, பாற்கடல் கிடக்கையையும், தம்முடைய *ஸந்ததது:க்கவர்ஷம் - ஸந்ததது:க்க வாஷத்தைப் போக்கினதுக்கு ஜ்ஞாபகமான பணிகாத்தமையு மநுஸந்தித்தவராகையாலே, அத்தோடு தோள் தீண்டியான திருப்பேரிலும் திருக்கரம்பனூரிலும் கிடந்தபடியை அநுபவித்துக்கொண்டும், "தெற்கு வீட்டிலே உம்மபேக்ஷிதம் செய்கிறோம்" என்று பெரிய பெருமாள் அருள்பாடிட்ட திருக்குறுங்குடிக்குப் போகிற வழியில் திருத்தண்காலூரானோடு கூடத் திருக்குறுங்குடியெம்பெருமானை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"எம்" என்று விசேஷிததற்குத் தாத்பர்யம் (திருக்குறுங்குடியித்யாதி) விசேஷப்ராப்தி ஏதென்னவருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி). இத்தால், பெரிய பெருமாள், இவர் திருமேனியில் சாபல்யத்தாலே, இங்கே இவர் (௧)"மங்கவொட்டு" என்று சொன்னவளவிலும் ஸம்மதியாதேயிருந்து, *திருநாரணன்றாளிடும்படியான பாகம்(பக்வம்)முதிர்ந்தவாறே இருக்கமாட்டாமல் தெற்குவீட்டுக்கு அருள்பாடிட, அவர் "நமக்கு ஆஸ்ரிதபாரதந்த்ர்ய மன்றோ ஸ்வரூபம், இஷ்டம் செய்கையும் அநிஷ்டம் தவிருகையு மன்றோ க்ருத்யம்" என்று வீடு கொடுக்கையாலே, ஆழ்வார் ஸ்வாதந்த்ர்யம் நடந்ததென்று கருத்து தன்னைக் கொடுக்கும் ஔதார்யத்

---

(௧) தி-வாய்-௧0-எ-௧0.

தாலே உத்தமனென்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (வழியித்யாதி). எல்லாரும் நடக்கும் வழியாகையாலே ஸேவிப்பார் மிகுகையால் கதவிட அவஸரமில்லை யென்று கருத்து. ... ... ... ... (௨)

மூ.—ஏனாகி யுலகிடந்தன் றிருநிலனும் பெருவிசும்பும்
தானாய பெருமானைத்தன்னடியார் மனத்தென்றும
தேனாகி யமுதாகித் திகழ்ந்தானை மகிழ்ந்தொருகால்
ஆனாய னானானைக் கண்டது தென்னரங்கத்தே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| அன்று | வராஹகல்பாதியில் |
| ஏனாகி | மஹா வராஹமாய்க் கொண்டு |
| உலகு | பூலோகத்தை |
| இடந்து | (அண்டபித்தியில் நின்றும்) குத்தியெடுத்தவனுமாய், |
| இரு | விசாலமான |
| நிலனும் | பூமியையும் |
| பெரு | பரந்த |
| விசும்பும் | ஆகாசத்தையும் |
| தானாய | தனக்கு ப்ரகாரமாகவுடையவனாய |
| பெருமானை | ஸ்வாமியுமாய், |

| பதம். | உரை. |
|---|---|
| தன் அடியார் | தன் தாஸபூதருடைய |
| மனத்து | மநஸ்ஸில் |
| என்றும் | ஸர்வகாலத்திலும் |
| தேனாகி | தேன்போலவும் |
| அமுதாகி | அம்ருதம் போலவும் போக்யபூதனாக |
| திகழ்ந்தானை | விளங்குமவனாய், |
| மகிழ்ந்து | ப்ரீதியுடனே |
| ஒருகால் | த்வாபராந்தத்தில் [ல |
| ஆன் | பசுக்களைமேய்க்க வல் |
| ஆயனானானை | இடையனான க்ருஷ்ணனுமானவனை |
| கண்டது தென்னரங்கத்தே. (௩) | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (ஏனாகி) பூமியை ப்ரளயங்கொண்டவன்று ஏனமாய் இத்தை இடந்தெடுத்து. (இருநிலனும்) பூம்யந்தரிக்ஷாதிகளுடைய "நான்" என்கிற சொல்லிலே அடங்கும்படி இத்தை ப்ரகாரமாகவுடைய ஸர்வேஶ்வரனை. (தன்னடியாரித்யாதி) ஒருவன் காலிலே முள்பாய்ந்தால் சரீரியானவன் நோவுபடுமாபோலே, ஜகத்துக்கு வந்த ஆபத்து தன்னதாம்படி இதுக்கபிமாநியாயிருக்கிற இருப்பை யநுஸந்தித்திருக்கும்.

தனக்கஸாதாரணரானார்க்கு ஸர்வவிதபோக்யனாய், அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்குமவனை. (மகிழ்ந்தித்யாதி) க்ருஷ்ணனாயவதரித்து, "பரமபதம் கலவிருக்கையாயிருக்க நமக்கிங்கே வந்து குறையநிற்க வேண்டாநின்றது" என்னும் இன்னாப்போடன்றிக்கே, "இப்படியாகிலு மிவர்களுக் குழப்பாகப்பெற்றோம்!" என்னும் ப்ரீதிப்ரகர்ஷத்

தோடே, பண்டொருநால் பசுக்களையும் கன்றுகளையும் மேய்க்குமி டையனாய், அதில் புரையற வர்த்தித்தவனை. ... ... (ச)

அரு.—மூன்றாம்பாட்டு. (ஏனாகியித்யாதி). கீழ்ப்பாட்டில் - திருக்கு றுங்குடி எம்பெருமான் தம்மை ஸம்ஸார ப்ரளயத்தில் நின்றுமெடுத்தமை க்கு த்ருஷ்டாந்தயா வராஹநாயனார் வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிறு ரென்றுதல்; "ஒருபாகவதனுக்கு போக்யபூதனாய்த் திருக்குறுங்குடியிலே யிருந்தேன்" என்று பூமிப்பிராட்டிக்கு உரைத்த கைசிக வ்ருத்தாந்தத்தை ப்பற்றவாதல் ஏனத்தை அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி. ... (ரு)

மூ.—வளர்ந்தவனைத் தடங்கடலுள் வலியுருவில் திரிசகடம்
தளர்ந்துதிர வுதைத்தவனைத் தரியாதன்றி ரணியனைப்
பிளந்தவனைப் பெருநில மீரடிநீட்டிப் பண்டொருநா
ளளந்தவனை யான் கண்டதணிநீர்த் தென்னரங்கத்தே. (ச)

| பதம். | உரை. |
|---|---|
| தடம் | விசாலமான |
| கடலுள் | ஸமுத்ரத்தில் |
| வளர்ந்தவனை | கண் வளர்ந்தருளின |
| வலி | த்ருடமான [வனாய், |
| உரு | சரீரத்தையுடைத்தாய் |
| திரி | ஊர்ந்துவாரா நின்ற |
| சகடம் | சகடாஸுரனை [ய் |
| தளர்ந்து | ஸந்திபந்தம் சிதிலமா |
| உதிர | விழும்படி |
| உதைத்தவனை | உதைததவனாய், |
| தரியாது | ப்ரஹ்லாதனுடைய து:க்கத்தைப் பொறுக்க மாட்டாதவனாய்க் கொண்டு |
| அன்று | அக்காலத்தில் |
| இரணியனை | ஹிரண்யாஸுரனை |
| பிளந்தவனை | கிழித்துப் பொகட்டவனாய், |
| பண்டு ஒருநாள் | முன்பு ஒருகாலத்திலே |
| பெரு | விசாலமான |
| நிலம் | பூமியை [க்கும்படி |
| ஈரடி | இரண்டடியிலே யட |
| நீட்டி | திருவடிகளை நீட்டி |
| அளந்தவனை | அளந்த த்ரிவிக்ரமனுமானவனை |
| யான்கண்டது அணிநீர்த் தென்னரங்கத்தே. | (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (வளர்ந்தவனை) பரப்பையுடைய கட லிலே, அவதாரங்களுக்கு நாற்றங்காலாம்படி வந்து கண்வளர்ந்தவனை. (வலியித்யாதி) பின்பு, "அஸுரர்கள் மிகைத்தார்கள்" என்று கேட்ட வாறே வந்தவதரித்து, அஸுராவேசத்தாலே திண்ணிய வடிவையு டைத்தாய் ஊர்ந்துவருகிற சகடம் சின்னம் பின்னமாய்ப் போம்படி திரு வடிகளாலே உதைத்தவனை. (தரியாது) சிறுக்கனைக் கடலிலே தள்ளு

வது, மலையிட்டு அமுக்குவதாகப் புக்கவாறே, அத்தைப் பொறுக்க மாட்டாதபடியாலே, நரஸிம்ஹமாய் ஹிரண்யனைப் பிளந்து பொகட்டவனை.

(பெருநிலமித்யாதி) பரப்பையுடையபூமி இரண்டடியிலே யடங்கும்படி திருவடிகளை நீட்டி யளந்துகொண்டவனை. ... (௪)

அரு —நாலாம்பாட்டு. (வளர்ந்தவனை யித்யாதி). கீழ்ப்பாட்டில்-ஆனையையும் ஏனத்தையும் அநுபவித்தவராகையாலே. (க) "ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந: - ஏஷநாராயண ஸ்ஸ்ரீமான் க்ஷீரார்ணவ நிகேதந:" என்கிறபடியேயாய், அதுக்கடியான திருப்பாற்கடலையும், ஏனத்துக்கு அநந்தராவதாரங்களான நாரஸிம்ஹ வாமநாவதாரங்களையு மநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"திரிசடகம்" என்னவேணுமோ, சகடமானபோதே திரியாதோ வென்ன வருளிச்செய்கிறார் (அஸுரேத்யாதி). ... ... (௪)

மூ.—நீரழலாய் நெடுநிலனாய் நின்றானை யன்றரக்க
னூரழலாலுண்டானைக் கண்டார் பின்காணுமே
பேரழலாய்ப் பெருவிசும்பாய்ப் பின்மறையோர் மந்திரத்தின்
ஆரழலாலுண்டானைக் கண்டது தென்னரங்கத்தே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீராய் | ஜலஸ்வரூபியுமாய் | உண்டானை | அழித்தவனாய், |
| அழலாய் | அக்நிரூபியுமாய் | பேர் | பெரிய |
| நெடு | விசாலமான | அழலாய் | பட(வட) பாக்நி ஸ்வரூபியாய் |
| நிலனாய் | பூமியுமாய் | பெரு | அபரிச்சிந்நமான |
| நின்றானை | இப்படி பஞ்சபூதங்களுக்கும் அந்தர்யாமியா யிருக்குமவனாய், | விசும்பாய் | பரமபதத்துக்கு நிர்வாஹகனாய், |
| அன்று | ராமாவதார காலத்தில் | பின் | அதுக்குமேலே |
| அரக்கன் | ராவணாஸுரனுடைய | மறையோர் | ப்ராஹ்மணர்களுடைய |
| ஊர் | லங்காநகரத்தை | மந்திரத்து | மந்த்ர(பூ)பூதமான ஹவிஸ்ஸை |
| கண்டார் | (முன்னே) கண்டவர்கள் | ஆர் அழலால் | (அந்த ஹவிஸ்ஸுக்களாலே) த்ருப்தனான அக்நிமுகத்தாலே |
| பின் | அநந்தரத்தில் | | |
| காணுமே | (அவ்வழகுடன்) காணுமற்படி | உண்டானை | அமுதுசெய்தவனை |
| அழலால் | அக்நியினால் | கண்டது | தென்னரங்கத்தே. (ரு) |

(க) ஹரிவம்சம்-ககரு-சுஉ.

வ்யா.—அஞசாம்பாட்டு. (நீரழலித்யாதி)த்ரிவ்ருத்கரணத்தாலே பஞ்சீகரணத்தைச் சொன்னபடி. (அன்றித்யாதி) ராவணன் மிகைத்த வன்று, அவனூரை அரணும் அட்டாலேயும் தெருவுமாகக்கண்டவர்கள், அநந்தரக்ஷணத்திலே அப்படி காணுதே (க) *ஶ்மஶாநஸத்ருஶ-ப்ரமமாந ஸத்ருசமாகக்காணும்படி அக்கியாலே அத்தை முடித்தவனே.

(பேரழலாய்) படடபா(படபா)முகாக்நியாய். இங்குத்தை மர்யாதைகளைத்தப்பி அவ்வருகு பட்டார்க்கு ப்ராப்யமான பரமபதமுமாய். (மறையோரித்யாதி) அத்தை அவர்கள் பெறுகைக் குறுப்பாக, ப்ராஹ்மணருடைய யாகங்களிலே மந்த்ரபூதமான ஹவிஸ்ஸுக்களை த்ரேதாக்நிமுகத்தாலே புஜிக்குமவனே; (௨) "அஹம் ஹி - அஹம் ஹி". (ரு)

அரு.—அஞ்சாம்பாட்டு. (நீரித்யாதி) கீழ்ப்பாட்டில்-வாமநனுய் மண்ணளந்த த்ரிவிக்ரமாபதாந வ்யாப்திக்கு ப்ரத்யபிஜ்ஞாபக மாகையாலே காரணவஸ்த்தையில் வ்யாப்தியோடு, பேரழலானது உபலக்ஷணமாய் கார்யாவஸ்த்தையில் வ்யாப்தியோடு வாசியற அந்தர்யாமித்வத்தை அநுஸந்தித்துக்கொண்டு, கீழ்ச்சொன்ன நரஸிம்ஹாவதாரத்தில் ஹிரண்யனை ஹிரண்யனுடைய மறுபிறவியில் ப்ராதிகூல்யத்தைப்போக்கின ராமாவதாரத்தில் (ங) *சராசரங்களை வைகுந்தத்தேற்றின செயலோடு, தத்ஸாதந பூதகர்மாராத்யத்வத்தையு மநுஸந்திக்கிருரென்று ஸங்கதி.

"நீராய், அழலாய், நிலனுய்" என்று மூன்றைச் சொன்னது - மற்றையிரண்டுக்கு முபலக்ஷணமானமைக்கு ஶ்ருதியை த்ருஷ்டாந்தமாக்குகிருர் (த்ரிவ்ருதித்யாதி). சாந்தோக்யத்திற் சொன்ன த்ரிவ்ருத்கரணம் உபலக்ஷணமானுப்போலே இதுவு முபலக்ஷணமென்று கருத்து. "அன்றரக்கனூர், கண்டார் பின்காணுமே - அழலாலுண்டானே" என்றந்வயித்து அர்த்த மருளிச்செய்கிருர (ராவணனித்யாதி). (அட்டாலே) மேல் தளம்.

*இன் - சாரியைச் சொல்லாய், "மந்திரத்து" என்ற பதம் - லக்ஷணயா ஹவிஸ்ஸைச்சொல்லிற்ருய், ஆரழல் - ஹவ்யங்களால் த்ருப்தி பிறந்த அழலென்று விவக்ஷித் தருளிச்செய்கிருர் (அத்தை யித்யாதி) அத்தை - பரமபதத்தை. .. ... ... .. ... (ரு)

மூ.—தஞ்சினத்தைத் தவிர்த்தடைந்தார் தவநெறியைத்தரியாது
கஞ்சனைக்கொன்றன்றுலகமுண்டு மிழ்ந்த கற்பகத்தை
வெஞ்சினத்த கொடுந்தொழிலோன் விசையுருவை யசைவித்த
அஞ்சிறைப் புட்பாகனை யான் கண்டது தென்னரங்கத்தே. (சு)

(க) ரா-ஸு-௨௪-௨௪. (௨) கீதை-௯-௨௪ (ங) பெரு-திரு-௧௦-௧௦.

| பதம். | உரை. | பதம் | உரை |
|---|---|---|---|
| தம் | தங்களுடைய | வெம் | அத்யுக்ரமான [ளுய் |
| சினத்தை | கோபத்தை | சினத்த | கோபததை யுடைய |
| தவிர்த்து | விட்டுவிட்டு [ளுடைய | கொடும் | க்ரூரமான |
| அடைந்தார் | தன்னை அடைந்தவர்க | தொழிலோன் | வ்யாபாரத்தை யுடையவனுமான ருத்ரனுடைய [ன |
| தவம் | அத்யவஸாயரூபமான | | |
| நெறியை | உபாயததை நிர்வஹிக்குமவனாய், | | |
| | | விசை | வேகததை யுடைத்தா |
| தரியாது | (தாய்தமப்பன்மார் பட்ட துக்கத்தைப்) பொறுமல் | உருவை | சரீரததை |
| | | அசைவித்த | (பாணயுத்தத்தில்) சலிக்கப் பண்ணினவனுமாய், |
| கஞ்சனை | கம்ஸனை | | |
| கொன்று | ஸம்ஹரிததவனுமாய், | அம் | அழகிய |
| அன்று | அப்ப்ரளயகாலத்தில் | சிறை | இறகுகளையுடைய |
| உலகம் | லோகத்தை | புள் | பெரிய திருவடியை |
| உண்டு | விழுங்கி | பாகனை | நடத்துமவனுமானஸர்வேஶ்வரனை |
| உமிழ்ந்த | ஸ்ருஷ்டிகாலத்தில்வெளிப்படுத்தின | யான்கண்டது | தென்னரங்கததே. சு |
| கற்பகத்தை | பரமோதாரனாய், | | |

வ்யா.—ஆறும்பாட்டு. (தம்சினத்தை) (க) "மைநஸூயவே- அநஸூயவே" என்று-"உன்றனை அதிகாரிகளைக் கண்டிலேன்காண், என் வைபவத்தைச் சொன்னவிடத்தில் சிவீலென்றிருநதிலே, இன்னமும் எனக்கு வைப்பானவற்றைச சொல்லுகிறேன், செவிதாழ்த்துக்கேட்டுக்காண்" என்றுனிறே. ப்ரத்வேஷம் பண்ணுதொழியு மத்தனையாய்த்து வேண்டுவது, த்வேஷத்தைத் தவிர்நது தன்னை யடைந்தவர்களுக்கு ஸ்வப்ராப்த்யுபாயத்தைத் தானே நிர்வஹிததுக் கொடுக்குமவனை. (தரியாது) த்வேஷமேயாயிருப்பா ரளவிலிருக்கும்படி. ஸ்ரீவஸுதே வரையும் தேவகியாரையும் நலியப்புக்கவாறே, அதனைப்பொறுதே, "இனி அரைக்ஷணமிவனை வைக்கவொண்ணுது" என்று அவனைக் கொன்றுனய்த்து. (அன்றித்யாதி) த்வேஷமும பண்ணுதே தன்னை யடைவதும் செய்யாதேயிருப்பா ரளவிலிருக்கும்படி. ஆபத்தை அடையாளமாக ரக்ஷிக்குமித்தனை யாய்த்து. தானறிந்த ஸம்பந்தத்தை யேபார்க்கு மித்தனை. (கற்பகத்தை) "இப்படி உபகரிததோம்" என்று நினைத்திராதவனை.

(க) கீதை-கூ-க.

(வெஞ்சினத்தவித்யாதி) வெவ்வியசினத்தையுடையனாய், ப்ராணி ஹிம்ஸாரூபமான உபஸம்ஹாரத்தைத் தொழிலாகவுடைய ருத்ரனுடைய, பெரியவேகத்தையுடைய வடிவை அசைவித்தானாய்த்து. ருஷபம் வாலையெடுத்துக்கொண்டோட, தான் ஜடையைவிரித்துக்கொண்டு முதுகுகாட்டி, (க) "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ-க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ" என்றாப்போலே சொல்லிக்கொண்டோடும்படி பண்ணின, திருவடியை வாஹநமாகவுடையவனை. இது, † (பாணனை என்றும் சொல்லுவர்கள்). நரகனையென்றும் சொல்லுவர்கள். ... (௬)

அரு.—ஆரும்பாட்டு. (தம்சினதைதயித்யாதி) கீழ்ப்பாட்டில்-மோக்ஷ ஸாதநமான கர்மாராத்யதையையும், அதுக்குறுப்பான அந்தர்யாமித்வத்தையும், மோக்ஷத்தை பூரி (பூரி)தாநம் பண்ணின ராமனையு மநுபவித்தவர், இப்பாட்டில் - மோக்ஷத்துக்குத்தானே உபாயபூதனானென்னுமதுக்குறுப்பாக, விரோதி நிரஸநசீலனாய், ஆபத்ஸகனாய், ரக்ஷகாந்தரத்தில் நசையறப் பண்ணின க்ருஷ்ணாவதாரத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

சினத்தை - குணங்களில் தோஷபுத்தியாகிற அஸூயா ஹேதுவான த்வேஷத்தை, தவிர்த்து, தன்னை யடைந்தவருடைய, தவமாகிற - அத்யவஸாய ரூபமாகிற, நெறியை - மார்க்கமானவனை என்று அர்த்தமாக விவக்ஷித்து, ததேகோபாயத்வத்துக்கு வேண்டு மதிகாரம் - த்வேஷமின்றிக்கே யிருக்கையே என்றதுக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (அநஸூயவே இத்யாதி). "ఇదన్తు తే గుహ్యతమం ప్రవక్ష్యామ్యనసూయవే। జ్ఞానవిజ్ఞాన సహితం యద్జ్ఞాత్వా మోక్ష్యసేऽశుభాత్-இதந்துதே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே। ஜ்ஞாநவிஜ்ஞாந ஸஹிதம் யத்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத்" என்கிறதுக்குத தாதபர்ய மருளிச்செய்கிறார் (என்னித்யாதி). (கிளீல்) அஸஹ்யப்படுகை. ப்ரக்ருதத்திலே ஏறிடுகிறார் (ப்ரத்வேஷ மித்யாதி). அந்வயமுகேந வாக்யார்த்த மருளிச்செய்கிறார் (த்வேஷத்தை யித்யாதி). (அடையாளம்) ரக்ஷணத்துக்கு வேண்டினகுறி. ஆபத்து ரக்ஷணத்துக்குக் குறியாகைக்கு ஹேதுவேதென்ன வருளிச்செய்கிறார் (தாணித்யாதி). (உ) "மாம் - மாம்" என்கிற ஸமாதிக்குச் சேரப் பொருள் (இப்படி யித்யாதி).

அசைவித்தபடி தன்னை விவரிக்கிறார் (ருஷபமித்யாதி). "கொடுந்தொழிலோன்" என்றது - ஸாமாந்ய சப்தமாகையாலே, நரகாஸுரனைச் சொல்லவுமாமென்கிறார் (இதித்யாதி). ... ... ... ... (௬)

(க) வி-பு-ரு-ருக-௬௧. † குண்டலிதம் க்வாசிதகம்.

(உ) கீதை-௧அ-௬௬

மூ.—சிந்தனையைத் தவநெறியைத் திருமாலைப் பிரியாது
வந்தெனது மனத்திருந்த வடமலையை வரிவண்டார்
கொந்தணைந்த பொழிற் கோவலுலகளப்பானடிநிமிர்த்த
வந்தணனை யான் கண்டதணிநீர்த் தென்னரங்கத்தே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சிந்தனையை | என்னுடைய மநோரதத்துக்கு விஷயமானவனும், | வண்டு | வண்டுகளினாலே |
| தவம் | அத்யவஸாய ரூபமான | ஆர் | நிறைந்த |
| நெறியை | உபாயத்தை நிர்வஹிக்குமவனும், | கொந்து | பூங்கொத்துக்கள் |
| திருமாலை | ஶ்ரிய:பதி யானவனும், | அணைந்த | நெருங்கியிருக்கிற |
| வடமலையை | திருவேங்கடத்தை | பொழில் | சோலைகளாலே சூழப்பட்ட |
| பிரியாது | விஶ்லேஷியாமல (அங்கேநின்று) | கோவல் | திருக்கோவலூரில் |
| வந்து | அங்குநின்றும் வந்து | உலகு | லோகங்களை |
| எனது | என்னுடைய | அளப்பான் | அளக்கைக்காக |
| மனத்து | மாநஸ்ஸில் | அடி | திருவடிகளை |
| இருந்த | நித்யவாஸம் பண்ணுமவனும், | நிமிர்த்த | நீட்டிய |
| வரி | ரேகைகளையுடைய | அந்தணனை | ஸ்வாமியுமானவனை |
| | | யான் கண்டதணிநீர்த்தென்னரங்கத்தே. (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (சிந்தனையை) (க) "வழுவிலா வடிமை செய்யவேண்டு நாம்" என்றுண்டான என்மநோரதத்துக்கு விஷயமாய் ப்ராப்யமாயுள்ளவனை. (தவநெறியை) அத்தைப் பெறுவிக்குமுபாயம் தானேயாயுள்ளவனை. இப்படி ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் தானேயாயிருக்கிறவஸ்து தானேதென்ன (திருமாலை) ப்ராபகத்தில் புருஷகாரமுமாய், ப்ராப்யத்துக்கு அவச்சேதோபாதி யாயிறேயிருப்பது. (பிரியாதித்யாதி) திருமலையைத் தனக்கு வாஸஸ்த்தாநமாக உடையனாயிருந்துவைத்து, இவ்வவஸ்த்தைகளை என்னெஞ்சிலே பிறப்பிக்கைக்காகத்தானே வந்து மாநஸ்ஸிலே விடாதே பொருந்தியிருக்கிறவனை.

(வரியித்யாதி) நல்லநிறத்தையுடைய வண்டுகள் படிந்திருக்கும் பூங்கொத்துக்கள் நெருங்கின பொழிலையுடைய திருக்கோவலூரிலே, இந்தலோகங்களை அளக்கைக்காகத் திருவடியை நீட்டிக்கொடு நிற்கிற

(க) தி-வாய்-௩-௩-க.

விபரீதவேஷத்தைக்காட்டி இத்தையடையத் தன்னதாக்கிக் கொண்டவனை. (யான்கண்டது) தானே அர்த்தியாய்க்கொண்டிருக்க, நான்கண்டது கோயிலிலே. ... ... ... ... ... (எ)

அரு—ஏழாம்பாட்டு (சிந்தனையை யித்யாதி) கீழ்ப்பாட்டில்- எம்பெருமானுடைய உபாயத்வத்தை ஸப்ரகாரமாக அநுஸந்திக்க, அத்தால் பெறும் ப்ராப்யமும், பெறுவிக்குமவனோடேச் சேர்த்தியும், இதெல்லாம் காணலாம்படி வடவேங்கடத்திலிருந்து திருவடிகளின் கீழிட்டுக்கொண்டபடி யெல்லாம் திருவுள்ளத்திலோடி, த்வயத்தின் பதங்களின் பொருளை அநுஸந்தித்திருக்கும்படி கடாக்ஷித்த பெரிய பெருமாளிடத்தில் க்ருதஜ்ஞதாநுஸந்தாநம் பண்ணுகிறாரென்று ஸங்கதி.

விசிஷ்டத்துக்கு ப்ராபகத்வம் சொல்லும்போது விசேஷணமான திருவுக்கும் ப்ராபகத்வம் வாராதோவென்ன வருளிச்செய்கிறார் (ப்ராபகேத்யாதி). (இவ்வவஸ்த்தைகள்) என்றது-த்வயத்தில் பதங்களில் தோற்றின ப்ராப்யத்வ ப்ராபகத்வ ப்ரதிபத்திகள்.

“அந்தணனை” என்று - வேதத்தைக் காக்குமவனை என்று அவனைச் சொல்லுகையாலே, ப்ரஹ்மசாரியானவிபரீத வேஷத்தைச் சொன்னதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தானே யித்யாதி). ... ... (எ)

மூ.—துவரித்த வுடையவர்க்கும் தூய்மையில்லாச்சமணர்க்கும்
அவர்கட்கங்கருளில்லா வருளானைத் தன்னடைந்த
எமர்கட்கு ‡ மடியேற்கு மெம்மாற்கு மெம்மனைக்கும்
அமரர்க்கும் பிரானாரைக் கண்டது தென்னரங்கத்தே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துவரித்த | செகப்பாகப் பண்ணின | தன் அடைந்த | தன்னையே ஆஶ்ரயித்த |
| உடையவர்க்கும் | காஷாயவஸ்த்ர மணிந்த புத்தர்க்கும் | எமர்கட்கும் | என் ஸம்பந்த முடையார்க்கும் |
| தூய்மை இல்லா | பாரிசுத்ய மில்லாத | அடியேற்கும் | அடியேனுக்கும் ‡ |
| சமணர்க்கும் | *ஜைநர்க்கும் | எம்மாற்கும் | என்னுடைய தந்தைக்கும் |
| அவர்கட்கு | இப்படி வேதபாஹ்யரான அவர்கள் விஷயத்தில் | எம்மனைக்கும் | என்னுடைய தாய்க்கும் |
| அருள் இல்லா | க்ருபைபண்ணாத | அமரர்க்கும் | நித்ய ஸூரிகளுக்கும் |
| அருளானை | க்ருபாவானுமாய், | பிரானாரை | உபகாரகரு மானவரை |
| | | கண்டது தென்னரங்கத்தே. | (அ) |

‡ “அடியேற்கும்” என்றே மூலஸ்ரீகோசங்களில் காண்கிறது; அரும்பதத்துக்கு “அடியேர்க்கு” என்று பஹுவசனமாக பாடமாம்.

வ்யா.—எட்டாம்பாட்டு (துவரித்த) சிவந்தவாஸஸ்ஸைத்தரிக்கக் கடவ புத்தர்க்கும், வைதிகரல்லாமையாலே ஸ்பர்ஶயோக்யரல்லாத அமணர்க்கும், வேதோக்தமான கர்மத்தாலே தன்னை ஆஶ்ரயியாதா ரளவிலொருகாலும் க்ருபைபண்ணக்கடவ தன்றிக்கேயிருக்குமரு ளையுடையவனை. பால்மாமே யாகிலும் அகாலத்திலே குத்தினால் பால் மறுத்திருக்குமாபோலேயாய்த்திருபபது.

(தன்னடைந்தவித்யாதி) தன்னையேபறறின என்னோடு ஸம்பந்த முடையார்க்கும்;- வைஷ்ணவர்களுக்கு மென்றபடி; எனக்கும், எனக் குத்தாயும் தமப்பனுமென்றிருக்கிற விவர்களுக்கும், நித்யஸூரிகளுக் கு மொக்கத் தரம் வையாதே சேஷியாயிருக்குமவனை. ... (அ)

அரு—எட்டாம்பாட்டு.(துவரித்தவித்யாதி) கீழ்ப்பாட்டிற சொன்ன த்வயார்த்த நிஷ்ட்டரிடததில் எம்பெருமானுக்குள்ள க்ருபையை யநுஸந் தித்து, இப்படி பரம வைதிகரான தம்மிடததில் (க)*கேசவன் றமரிற்படி யே திருவடிகளின் ஸம்பந்தமுடையாரோடு திருமேனி ஸம்பந்தமுடையா ரோடு வாசியற எல்லாரிடத்திலும் 'நித்யஸூரிகளிடத்திற் போலே பரி மாறினபடியைக் கண்டு, தம்மோடெதிரிட்ட பத்தாதிகளிடத்தில் பத்த (பத்த)வைரராயிருந்தபடியை அநுஸந்தித்தினியரா ருரென்று ஸங்கதி.

"துவரித்த வுடையவர்க்கும்" என்றும் "சமணர்க்கும்" என்றும் எடு த்திருக்க, மீளவும் "அவர்கட்கு" என்று அநுவதிக்கைக்கு ப்ரயோஜநம் ஸ்வப்ரதி கோடிதவம் தோற்றுகைக்காக என்று விவக்ஷித்து, "அவர்கட் கங்கு" என்றது- அவர்களிடததி லென்றுப்போலே ஸப்தம்யர்த்த மாக்கித் தாத்பர்ய மருளிச்செய்கிறார (வேதோக்தமான வித்யாதி). "அருளானை" என்று - அருளே நிரூபகமானால் அவர்களிடத்தி லருளில்லாதவரா யிருக் கக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (பால்மர மித்யாதி).

விவரணம் (வைஷ்ணவரிதயாதி). "அடியோக்கும்" என்றது-ஸ்வா பாவிக பகவத்தாஸ்ய ப்ரபாவத்தாலே பூஜார்த்தம் பஹுவசநமென்று திரு வுள்ளம்பறறி யருளிச்செய்கிறார். (எனக்கும்) என்று. "எம்மனைக்கும்" என்றதினர்த்தம் (தாயும்) என்றது. "எம்மாற்கும்" என்றதி னர்த்தம் (தமப்பனும்) என்றது. ... ... ... ... ... ... (அ)

மூ.—பொய்வண்ணம் மனத்தகற்றிப் புலனைந்தும் செலவைத்து
மெய்வண்ணம் நினைந்தவர்க்கு மெய்நின்றவித்தகனை
மைவண்ணம் கருமுகில்போல் திகழ்வண்ணமரதகத்தின்
அவ்வண்ணவண்ணனை யான் கண்டது தென்னரங்கத்தே. (கூ)

(க) தி-வாய்-2-எ.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொய் | அநித்யங்களான ப்ராக்ருத வஸ்துக்களினுடைய | வித்தகனை | ஆஶ்சர்ய பூதனும், |
| வண்ணம் | ஸ்வபாவத்தைப்பற்றி | மைவண்ணம் | அஞ்ஜநத்தின் நிறம் போலவும் |
| மனம் | மநஸ்ஸை [யிருக்கிற | கருமுகில்போல் | இருண்ட மேகம்போலவும் |
| அகற்றி | நீக்கி [யும் | திகழ் | விளங்காநின்ற |
| ஐந்துபுலன் | பஞ்சேந்த்ரியங்களை | வண்ணம் | வாணத்தையுடைய |
| செலவைத்து | விஷயங்களில் நின்றும் புறம்பாக்கி | மரதகத்தின் | மரதகமென்னும் ரத்நத்தினுடைய |
| மெய்வண்ணம் | யதார்த்தமாக | அவ்வண்ணம் | அப்படிப்பட்ட நிறம் போன்ற [னவனை |
| நினைந்தவர்க்கு | தன்னையத்யாநித்தவர்களுக்கு | வண்ணனை | நிறத்தையுடையனுமா |
| மெய்நின்ற | யதார்த்த பூதனை | யான்கண்டது | தென்னரங்கத்தே. ௯ |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பொய்வண்ணம்) பொய்யென்றது-ப்ராக்ருதிப்ராக்ருதங்களை (க) "ஸத்யஞ்சாந்ருதஞ்ச - ஸத்யஞ்சாந்ருதஞ்ச" பொய்யினுடைய வண்ணத்தைப்பற்றின மநஸ்ஸை. (அகற்றி) ப்ராக்ருதிப்ராக்ருதங்களை "நன்று, ஸ்த்திரம்" என்றுபபோலே நினைத்திருக்கு மவற்றைவிட்டு. (புலனித்யாதி) மநஸ்ஸை அகற்றினாலும் பின்னையு மவற்றிலே கொடுபோய் மூட்டுமவையிறே - பாஹ்யேந்த்ரியங்கள்; அவை விஷயங்களில் போகாதபடி பண்ணி. (மெய்யித்யாதி) ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநபூர்வகமாகத் தன்பக்கலிலே பக்தியைப்பண்ணுமவர்களுக்கு. (மெய்நின்றவித்தகனை) தன்ஸ்வரூபாதிகளை உள்ளபடியே காட்டிக்கொடுக்கும் விஸ்மயநீயனை.

அவர்களுக்கு உள்ளபடியேகாட்டிக் கொடுப்பதெத்தை என்ன, (மையித்யாதி) (உ) "விஷ்ணுதே தநூம் ஸ்வாம் - விஷ்ணுதே தநூம் ஸ்வாம்" அஞ்ஜநத்தினுடைய நிறம் இருண்டமேகமபோலே விளங்காநின்றுள்ள நிறத்தையுடைய மரதகத்தினுடைய அந்த நிறம்போலேயிருக்கிற நிறத்தையுடையவனை.... ... ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. (பொய்யித்யாதி) கீழ்ப்பாட்டில்-புத்தாதிகளான பொய்யர்க்கெல்லாம் பொய்யனானபடியும், தம்மிடத்தில் மெய்யராய் ஸம்பந்திகளளவும் க்ருபை பண்ணுமவனென்றநுபவித்தவர், தம்

(க) தைத்திரீ-ஆந-௬. (உ) கடோப-௩-௨௩.

மைப்போலே நிரதிசயபக்தி நிஷ்டரான ஆழ்வார்களிடத்தில் (க) * அரவத்தமளிப்படியே யெழுந்தருளி யிருக்கும்படியை அநுஸந்தித்து ஈடுபடுகிறாரென்று ஸங்கதி. அன்றிக்கே, பரிநிஷ்பந்நமான ஸாதநபக்தி நிஷ்டரிடத்திலே யிருந்தாப்போலே என்பக்கலிலே அநுக்ரஹித்தாரென்று த்ருஷ்டாந்தார்த்தமாக அநுஸந்திக்கிறாரென்னவுமாம்.

(அந்ருதம்) என்றது-அஸத்திரங்களான ப்ரக்ருதி ப்ராக்ருதங்களைச் சொல்லுகிறது. "செல" என்றது-செல்லவென்றாய், விஷயங்களில் நின்றும் புறம்பே போம்படி பண்ணியென்னு மர்த்தத்தை யருளிச்செய்கிறார் (அவையித்யாதி). ... ... ... ... ... (கூ)

மூ.—ஆமருவி நிரைமேய்த்த வணியரங்கத்தம்மானைக்
காமரு சீர்க் கலிகன்றி யொலிசெய்த மலிபுகழ்சேர்
நாமருவு தமிழ்மாலை நாலிரண்டோடிரண்டினையும்
தாமருவி வல்லார் மேல் சாரா தீவினைதானே. (க0)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆ நிரை | பசுக்கூட்டங்களை | நாமருவு | நாவிலே பொருந்தியிருக்குமதாய் |
| மருவி | பொருந்திநின்று | தமிழ்மாலை | த்ராவிடகாதா (ஈ‌ஃ‌து) ரூபமான |
| மேய்த்த | ரக்ஷித்தவனாய், | நால் இரண்டோடு இரண்டினையும் | பத்துப் பாசுரங்களையும் |
| அணி | பூலோகத்துக் கலங்காரமான | தாம் | தாங்கள் |
| அரங்கத்து | திருவரங்கத்திலே கண் வளர்ந்தருளுகிற [ஷயமாக, | மருவி | பொருந்தியிருந்து |
| அம்மானை | ஸ்வாமியானவன் வி | வல்லார்மேல் | அப்யஸித்தவர்களிடத்தில் |
| காமரு | ஆசைப்படத்தகுந்த | தானே | ஸ்வயமே |
| சீர் | ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீ | தீவினை | பாபங்களானவை |
| கலிகன்றி | ஆழ்வார் [யையுடைய | சாரா | அணையமாட்டா. க0 |
| ஒலிசெய்த | அருளிச்செய்ததாய் | | |
| மலி | ஸம்ருத்தமான [ய் | | |
| புகழ்சேர் | கீர்த்தியை யுடையதா | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (ஆமருவி) ஸ்வரக்ஷணத்துக்கு ஒரு கைம் முதலில்லாத பசுக்களை அவற்றோடேபொருந்தி ரக்ஷித்து, "அது

(க) பெரி-திரு-தி-உ-க0.

தான் பரதசை" என்னும்படி கோயிலிலேவந்து ஸுலபனானவனை. எல்லார்க்கும் ஸ்ப்ருஹை பண்ணவேண்டும்படியான வைஷ்ணவலக்ஷ்மியையுடைய ஆழ்வார், ஒலியுடைத்ததாகச்செய்த தமிழ்மாலை. (நாமருவு) பரஸ்ஸஹகாரம் வேண்டாதே, இத்தை ஒருகால் நாக்கிலேயிட்டால், பின்னை நா விடாதே யிருக்குமாய்த்து. (மருவிவல்லார்) மநஸ்ஸோடே இத்தை யநுஸந்தித்துக் கற்றவர்கள்மேல், இவர்கள் "போக்கவேணும்" என்று நினையாதிருக்க, துஷ்கர்மங்கள், தானே "இது நமக்கு நிலமல்ல" என்று விட்டோடிப்போம். ... ... (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



அரு.—பத்தாம்பாட்டு. (ஆமருவி யித்யாதி) "ஆ - நிரையை - மருவி - மேய்த்த" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (ஸ்வரக்ஷணத்துக் கித்யாதி). (நாவிடாதே) என்றது - நாக்கானது ரஸ்யதையாலே விடாதே யென்கை. ... ... .. ... (க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அஞ்சாம்பத்தில் ஆறாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## அஞ்சாம்பத்து ஏழாந் திருமொழி

### பண்டை ப்ரவேசம்.



வ்யா.—ஜகத்காரணபூதனாய், ப்ரஹ்மாதிகளுக்கும் ஆஶ்ரயணீயனாய், ஸகலசேதநர்க்கும் து:க்கநிவர்த்தகனாய், ஆஶ்ரிதர்க்கு அபேக்ஷிதஸமயங்களிலேவந்து உதவும் ஸ்வபாவனான ஸர்வேஶ்வரன், அவ்வவதாரங்களைப்பண்ணியருளுகிற காலங்களிலுதவாதாரு மிழக்கவேண்டாதபடி, அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே கோயிலிலே வந்து நித்யவாஸம்பண்ணியருள, கண்டநுபவிக்கப்பெற்றேன் என்றினியராய்ப் பேசுகிறார்.

அரு—பண்டைநான்மறையின் ப்ரவேசம். கீழ்த்திருமொழியில் தாம் கண்டுகளித்தமையை அநுபவித்தவர், இத்திருமொழியில் அவன் ஸ்த்தாவர

ப்ரதிஷ்டையா யிருந்தமையை அநுஸந்தித்து இனியராகிறரென்னும் ஸங்கதி யுட்கொண்டு, ப்ரமேயோபந்யாஸம் பண்ணுகிறார் (ஜகதித்யாதி).

மூ.—

பண்டைநான்மறையும்வேள்வியும் கேள்விப்பதங்களும்பதங்களின்பொரு
பிண்டமாய் விரிந்த பிறங்கொளியனலும் பெருகியபுனலொடுநிலனும்[ளும்
கொண்டல்மாருதமும்குரைகடலேழுமேழுமாமலைகளும்விசும்பும்
அண்டமும் தானாய்நின்ற வெம்பெருமா னரங்கமாநகரமர்ந்தானே.

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| பண்டை | அநாதியான | கொண்டல் | மேகமும், |
| நால் மறையும் | சதுர்வேதங்களும், | மாருதமும் | காற்றும், |
| வேள்வியும் | யாகங்களும், | குரை | சப்தியாநின்ற |
| கேள்வி | கேட்டறியவேண்டிய | ஏழ்கடலும் | ஸப்தஸமுத்ரங்களும், |
| பதங்களும் | வ்யாகரண சாஸ்த்ரமும், | மா | பெரிய [ளும், |
| | | ஏழ்மலைகளும் | ஸப்தகுல பர்வதங்க |
| பதங்களின் | சப்தங்களினுடைய | விசும்பும் | ஆகாசமும், |
| பொருளும் | அர்த்தமான (சாஸ்த்ர ப்ரதிபாத்யமான) | அண்டமும் | ப்ரஹ்மாண்டமும் (ஆகிய இவற்றை) |
| | ஜீவ ஸமஷ்டியும், | தானாய் | தனக்கு ப்ரகாரமாக வுடையனாய்க்கொண்டு |
| பிண்டமாய் | காரணாவஸ்த்தமாயிருந்து | | |
| விரிந்த | (பின்பு) விஸ்த்ருதமாகா நின்றுள்ளதாய் | நின்ற | எழுந்தருளி யிருக்கிற |
| | | எம்பெருமான் | ஸர்வேஶ்வரன் |
| பிறங்கு | விளங்காநின்ற [ன | | |
| ஒளி | காந்தியை யுடைத்தா | அரங்கமாநகர் | திருவரங்கமென்னும் பெரிய திவ்யதேசத்தில் |
| அனலும் | அக்நியும், | | |
| பெருகிய | ப்ரவாஹியாநின்ற | | |
| புனலொடு | ஜலத்தோடுகூடின | அமர்ந்தான் | கண்வளர்ந்தருளாநின்றான். (௧) |
| நிலனும் | பூமியும், | | |

வ்யா.—முதற்பாட்டு. (பண்டைநான்மறையித்யாதி)(௧). "பூர்வே பூர்வேப்யோ வச ஏதத்தூசு:" என்கிறபடியே - பூர்வபூர்வோச்சாரண க்ரமத்தைப்பற்ற உத்தரோத்தரோச்சார்யமாணமாகையாலே, புருஷபுத்த்யதீநமாலல் வரக்கடவ தோஷங்களொன்றுமில்லாத வேதங்களும், அவ்வேதங்களாலே விதிக்கப்படுகிற யாகாதிக்ரியைகளும், பதரூபத்தாலும் அக்ஷரரூபத்தாலும் ஶ்ரவணம் பண்ணி யறியவேண்டும்படியிருக்கிற வ்யாகரணசாஸ்த்ரமும், அவ்

(௧)

வோபதங்களாலே யறியப்படுகிற ஜீவஸமஷ்டியும், நாநாவான கார்யங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கிற அசித்ஸமஷ்டியில் நின்றும் விஸ்த்ருதமாகாநின்றுள்ள தேஜஃபதார்த்தம், ஜலதத்வம், பூமி என்றுப்போலேசொல்லுகிற ப்ருதிவ்யாதிபூதபஞ்சகமும், சேதநர்க்கு அபேக்ஷித ஸமயங்களிலே முகங்காட்டி உபகரிக்கக்கடவமேகங்கள், அப்படி உபகரிப்பதான வாயுதத்வமும், பூமிக்குவேலியிட்டாப்போலேயாய் மிக்க கோஷத்தையுடைத்தான ஸப்தஸமுத்ரங்களும், பூமிக்கு ஆணியடித்தாப்போலேயிருக்கிற குலபர்வதங்களும், இத்தனைக்கும் அவகாசப்ரதாநம்பண்ணுகிற ஆகாசமும், இவை எல்லாமாயிருக்கிற அண்டமெங்கும்புக்கு அநுப்ரவேசித்து, (க) "ஸர்வாணி தத்வபுஃ - தாநிஸர்வாணி தத்வபுஃ" என்கிறபடியே இவற்றைச்சொன்னபாசுரம் தன்னளவும் வரும்படியாயிருக்கையாலே இவையடைய "தான்" என்று சொல்லும்படி சரீரதயா சேஷமாகத்தான் சேஷியாயிருக்கிற ஸர்வேஶ்வரன், கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளக்கண்டு அநுபவிக்கப்பெற்றேனென்கிறார். ... ... ... ... ... (க)

அரு.—முதற்பாட்டு. (பண்டையித்யாதி) பண்டை- அநாதியான, நாலுவகைப்பட்ட மறைகளென்று சப்தார்த்தமாய், அப்போதைக்கப்போது உச்சார்யமாணமாயிருக்க அநாதித்வ மெங்ஙனே என்கிற சங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு, தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பூர்வ இத்யாதி). கேள்விக்கே யோக்யமாய் பதஸமுதாயாத்மகமான வ்யாகரணமென்றருளிச் செய்கிறார் (பதேத்யாதி). (அக்ஷர ரூபத்தாலும்) என்றது "அ இ உண்" இத்யாத்யக்ஷரரூபத்தாலும் என்றபடி. மேல் அசித்தைச் சொல்லுகையாலே "பொருள்" என்று சேதந ஸமஷ்டியாக்கி அருளிச்செய்கிறார் (அவ்வோவித்யாதி). கட(ஃப்ட)சராவாதிகளுக்குக் காரணாவஸ்த்தமான பிண்டாவஸ்த்தைபோலே காரணாவஸ்த்தாபந்நமான அவ்யக்தாவஸ்த்தமாய், விரிந்த- மஹதாதி ரூபேண விஸ்த்ருதமாய், பிறங்கு - விளங்காநின்றுள்ள, ஒளியையுடைய அனலும், ப்ரவஹிக்கை ஸ்வபாவமான ஜலமும், பூமியுமான தேஜோஃபந்நங்களை மற்றை இரண்டுக்கு முபலக்ஷணங்களாக்கி, காரணாவஸ்த்தங்களான பஞ்சீக்ருதங்களைச் சொல்லுகிறதென்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (நாநாவித்யாதி) ... ... (க)

மூ.—

இந்திரன்பிரமனீசனென்றிவர்க ளெண்ணில் பல்குணங்களேயியற்ற
தந்தையும் தாயும் மக்களும் மிக்க சுற்றமும் சுற்றிநின்றகலாப்

(க) வி-பு-க-உ௨-அக.

பந்தமும்பந்தமறுப்பதோர்மருந்தும் பான்மையும்பல்லுயிர்க்கெல்லா
அந்தமும் வாழ்வு மாய வெம்பெருமா னரங்கமாநகரமர்ந்தானே. [ம்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இந்திரன் | இந்த்ரன் | சுற்றமும் | ஜ்ஞாதிகளும், |
| பிரமன் | ப்ரஹ்மா | சுற்றிநின்று | சூழ்ந்திருந்து |
| ஈசன் | ருத்ரன் | அகலா | விட்டுநீங்காத |
| என்று | என்றுசொல்லப்பட்ட | பந்தமும் | பந்துக்களும், [தை |
| இவர்கள் | இவர்கள் | பந்தம் | ஸம்ஸார ஸம்பந்தத் |
| எண்இல் | அஸங்க்யேயமான | அறுப்பது | போக்காநின்ற |
| பல்குணங்க | அநேக குணங்களைச் | ஓர் | அத்விதீயமான |
| ள் | சொல்லி [நிறகு | மருந்தும் | ஔஷதமும், [ம் |
| இயற்ற | ஸ்தோத்ரம் பண்ணு | பான்மையும் | ப்ராப்ய ஸ்வபாவமு |
| பல்லுயிர்க் | அநேக ஜீவ கோடிக | அந்தமும் | லயஸ்தாநமும், |
| கெல்லாம் | ளுக்கும் | வாழ்வும் | ஸுகமும், |
| தந்தையும் | தகப்பனும், | ஆய | ஆகிய இந்த ஸ்வரூபி |
| தாயும் | மாதாவும், | | யா யிருக்கிற |
| மக்களும் | பிள்ளைகளும், | எம்பெருமான் அரங்கமாநகர் அமர் | |
| மிக்க | அதிகமான | ந்தானே. | (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (இந்திரனித்யாதி) தன்னாலே ஸ்ருஜ்யரான இந்த்ரன், ப்ரஹ்மா, ருத்ரன் என்று ப்ரதாநராகச்சொல்லுகிற இவர்கள். இதில், இந்த்ரனை முற்படவெடுத்து பின்னை இவர்களைச் சொல்லுகையாலே-இவனோடு அவர்களோடு வாசியில்லை; சதுர்முகனை ஈஶ்வரன் என்று சிலர் சொல்லுமன்று ருத்ரன்பக்கல் ஈஶ்வரத்வமுள்ளது; இப்படி ஜகத்துக்கு ப்ரதாநராயிருக்கிற விவர்கள், பக்ஷாபிமாநராய்க்கொண்டு, அஸங்க்யேயமான பலகுணங்களையுமசொல்லி ஸ்துதியாநின்றுகொண்டு ஆஶ்ரயிக்க; ப்ராணிகளுக்கெல்லாம் ஹிதப்ரவர்த்தகராயிருக்கக்கடவ பிதாவும், ப்ரியத்திலே நடக்கக்கடவ தாயும், நிரயநிஸ்தாரகரான புத்ரர்களும், அளவிறந்திருந்துள்ள ஜ்ஞாதிவர்க்கமும், கிட்டிவிடாதே நிற்கக்கடவ பந்துவர்க்கமும்,இப்படிப்பட்ட ஸம்ஸார ஸம்பந்தத்தைப் போக்கக்கடவதான பேஷஜமும், இஸ்ஸம்ஸாரஸம்பந்தமற்றால் இருக்கக்கடவ நிஷ்களஸ்வபாவமும், ஸகலசேதநர்க்கும் லயபூத்தி விருப்பிடமாயிருக்குமவனும், பாலநத்தால் வரக்கடவதான ஸுகமும், இவ்விரண்டாலும் ஸ்ருஷ்டியையும் நினைக்கிறது. இப்படி ஸகலப்ராணிகளுடைய ஸ்ருஷ்டிஸ்த்திதி ஸம்ஹாரங்களுக்கும் கடவனாயிருக்கிற ஸர்வேஶ்வரன். ... ... ... ... (உ)

அரு.—இரண்டாம்பாட்டு. (இந்திரனித்யாதி) (க) "வாழ்த்துவார் பலராக நின்னுள்ளே நான்முகனை மூழ்த்த நீருலகெல்லாம் படையென்று முதல் படைத்தாய்" என்கிறபடியே - எத்துகைக்காக, கீழ்ப்பாட்டில் - ஜகத்ஸ்ருஷ்டி ப்ரகாரேண ஸர்வவ்யாபகத்தைச் சொல்லும்வகையாலே ஸகல ஜகத்காரணத்வம் சொன்னராய், அந்த ஸ்ருஷ்டி ப்ரயோஜநமான ப்ரஹ்மாத்யாஶ்ரயணத்தை இப்பாட்டி லருளிச்செய்கிறுரென்று ஸங்கதி.

(உள்ளது) என்ற வநந்தரம், "என்று சிலர் சொல்லும்" என்று அநுஷங்கித்துக்கொள்வது. "பந்தமும்" என்றது-ஸம்பந்தமுடைய பந்துவர்க்கத்தைச் சொல்லுகிற தென்கிருர் (கிட்டியித்யாதி). (நிஷ்கள ஸ்வபாவம்) முக்தஸ்வரூபம். "அந்தம்" என்கிற நாசவாசகமான சப்தம் - அதிகரண வாசகமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிருர் (லயத்தி லீத்யாதி). ... ... ... ... ... ... ... (உ)

மூ.—

மன்னுமாநிலனும் மலைகளும் கடலும் வானமும்தானவருலகும் [ய
துன்னுமாயிருளாய்த்துலங்கொளிசுருங்கித்தொல்லைநான்மறைகளும்மறை
பின்னும்வானவர்க்கும்முனிவர்க்கும்நல்கிப் பிறங்கிருள்நிறங்கெடவொருநா
அன்னமாயன்றங்கருமறை பயந்தானரங்கமாநகரமர்ந்தானே. [ள்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மன்னு | த்ருடமாய்(கடிநமாய்) | துலங்கு | ப்ரகாசியாநின்ற |
| மா | விசாலமான | ஒளி | தேஜஸ்ஸானது |
| நிலனும் | பூமியும், | சுருங்கி | ஸங்கோசமடைந்து, |
| மலைகளும் | குலபர்வதங்களும், | தொல்லை | அநாதியான |
| கடலும் | ஸமுத்ரமும், | நால் மறைகளும் | நான்கு வேதங்களும் |
| வானமும் | ஆகாசமும், | | |
| தானவர் | அஸுரர்களுடைய | மறைய | அந்தர்த்தாநமாய்விட (அக்காலத்தில்) |
| உலகும் | லோகமும் (குடியிருப்பும்) (இவையெல்லாம்) | பின்னும் | மறுபடியும் |
| | | வானவர்க்கும் | தேவர்கள் விஷயத்திலும் |
| துன்னு | நெருங்கியிருக்கிற | முனிவர்க்கும் | ருஷிகள் விஷயத்திலும் |
| மா | பெரிய | | |
| இருளாய் | அந்தகார(த்தினுல் ஆவ்ருத)மாய்க்கொண்டு, | நல்கி | ஸ்நேஹத்தைப் பண்ணி |
| | | பிறங்கு | மிக்குவாராநின்ற |
| | | இருள் | அந்தகாரமானது |

(க) தி-வாய்-௩-க-எ.

| | | | |
|---|---|---|---|
| நிறம் கெட | கழியும்படியாக | அரு | பெறுதற் கரிதான |
| அன்று ஒருநா ள் | அப்போதொரு கால த்தில் [கொண்டு | மறை | வேதங்களை |
| அன்னமாய் | ஹம்ஸ ரூபியாய்க் | பயந்தான் | கொடுத்தருளினவன் |
| அங்கு | அவர்கள்விஷயத்தில் | அரங்கமா நகரமர்ந்தான். | (ங) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மன்னுமாநிலனித்யாதி) கடினையான ப்ருதிவியும், குலபர்வதங்களும், ஸமுத்ரமும், ஆகாசமும், அஸுரர்களுடைய குடியிருப்பும், இவையடைய நெருங்கினபேரிருளாய், பராகாசதத்வந்தான்போய், ஸங்குசிதமாய், ப்ரகாசத்தைப்பண்ணித் தரக்கடவதாயிருந்துள்ள வேதங்களும் மறைய. (பின்னும்) பின்னையும். (க) ‹‹யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி - யோவைவேதாம்ஶ்ச ப்ரஹிணோதி›› என்கிறபடியே - ஒருகால் ஓதுவித்துவிட்டோமாகில் அத்தைப்பறிகொடுத்தபின்பு இனி நம்மால் செய்யலாவதுண்டோ! என்று கைவாங்குகையன்றிக்கே, தேவர்கள்பக்கலிலும் ப்ராஹ்மணர்கள் பக்கலிலும் ஸ்நேஹத்தைப்பண்ணி, மிக்கவிருளானது கழியும்படியாக, தன்னைப்பேணுதே கேட்கிறவனுக்கு ஆசார்யாநுவர்த்தநம் பண்ணவேண்டுகிறதோ! என்று கூசவேண்டாதவடிவைக்கொண்டு, தன்னைப்பெறிலும் பெறவொண்ணுத வேதங்களை வெளியிட்டவன். (அரங்கமாநகரமர்ந்தானே) அன்று ப்ரமாணத்தை வெளியிட்டுத்தந்தவன், இன்று ப்ரமேயபூதனை தன்னை வெளியிட்டுக்கொண்டு வந்து கண்வளர்ந்தருளினான். ... ... ... ... ... ... ... (ங)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (மன்னுமித்யாதி) கீழ்ப்பாட்டில் - ப்ரஹ்மாதிகளுக் காஶ்ரயணீயனு யிருக்கும்படியைச் சொன்னாராய், இதில் - அதுக்குறுப்பாக வேதப்ரதாநாதி முகேந துஃக்கநிவர்த்தகத்வம் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

‘‘துன்னு’’ என்றதினர்த்தம் (நெருங்குதல்) என்றது.... ... (ங)

மூ.—மாயிருங்குன்றமொன்று மத்தாக மாசுணமதனோடுமளவி
பாயிரும்பௌவம்பகடுவிண்டலறப்படுதிரைவிசும்பிடைப்படர
சேயிருவிசும்புந்திங்களும் சுடரும்தேவரும்தாமுடன்திசைப்ப
ஆயிரந்தோளாலலைகடல் கடைந்தானரங்கமாநகரமர்ந்தானே.

---

(க) ஶ்வேதாஶ்வ-ஶு.

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| மா | அகன்றும் | சே | தூரஸ்த்தமாய் |
| இரும் | உயர்ந்துமிருக்கிற | இரு | பரந்திருந்துள்ள |
| ஒன்று | அத்விதீயமான | விசும்பும் | ஸ்வர்க்காதிலோகங்க |
| குன்றம் | மந்தரபர்வதத்தை | திங்களும் | சந்த்ரனும் [ளும் |
| மத்தாக | கவ்வமாகநாட்டி, | சுடரும் | (மற்றஎல்லாத்) தேஜஸ்ஸுக்களும் |
| அதனொடும் | அத்தோடும் (அந்த பர்வததத்தில்) | தேவரும் | தேவதைகளும் |
| மாசுணம் | வாஸுகி யென்னும் | உடன் | ஏககாலத்திலே |
| அளவி | சுற்றி, [பாம்பை | திசைப்ப | ஆஶ்சர்யப் படும்படியாகவும், |
| பா | பரந்தும் | அலை | அலை யெறியாநின்ற |
| இரும் | நீண்டுமிருக்கிற | கடல் | ஸமுத்ரத்தை |
| பௌவம் | ஸமுத்ரமானது | ஆயிரம் தோளால் | ஆயிரம் தோள்களாகத்தோற்றும்படியான நாலு திருத்தோள்களினால் |
| பகடுவிண்டு | வாய்திறந்து [வும், | கடைந்தான் | மதநம்பண்ணினவன் |
| அலற | கூப்பிடும்படி யாக | | அரங்கமாநகர் அமர்ந்தான்.(௪) |
| படு | (அதில்) உண்டாகாநின்ற | | |
| திரை | அலைகளானவை | | |
| விசும்பிடை | ஆகாசத்தின் நடுவே | | |
| படர | வ்யாபிக்கும்படியாகவும், | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (மாயிருமித்யாதி) அகலத்தாலும் அளவாலும் குறைவற்றிருந்துள்ள மந்தரபர்வதமானது மத்தாக, வாஸுகியினுடம்பை அத்தோடேசுற்றி, பரந்து நீண்டிருந்துள்ள கடலானது ஆனை பிளிறுமாபோலே கிடந்து கோஷிக்க, அப்போதை க்ஷோபத்திலேயுண்டான திரைகள் ஆகாசத்தை இடமடைத்துக்கொண்டு படர; தூரஸ்த்தமாய் விஸ்த்ருதமாயிருந்துள்ள ஸ்வர்க்காதிலோகங்களும், சந்த்ரனும, மற்றுமுண்டான தேஜஃபதார்த்தங்களும், மற்றுமுண்டான தேவஜாதியும், ஏககாலத்திலே விஸ்மயப்படச்செய்த கார்யம். (ஆயிரந்தோளால்) நாலுதோள்கொண்டு வ்யாபரித்தபடி தான், ஆயிரந்தோள்கொண்டு வ்யாபரித்தான் என்னலாம்படி யாய்த்து. (௪)

---

அரு.—நாலாம்பாட்டு. (மாயிருமித்யாதி) கீழ்ப்பாட்டில் - வேதப்ரதாநமுகேந துஃக்கநிவர்த்தகத்வத்தை யருளிச்செய்து, இதில் - அம்ருதப்ரதாநமுகேந துஃக்கநிவர்த்தகத்வத்தை அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

(அளவால்) என்றது - ஔந்நத்யத்தால் என்றபடி. "மாசுணம்" என்றது - பாம்பாய், அதினர்த்தம் (வாஸுகி) என்றது. பகடு - வாயாய், வி

ண்டு - திறந்தென்று சப்தார்த்தமா யருளிச்செய்கிறார் (ஆணையித்யாதி). (ஸ்வர்க்காதி லோகங்களும்) என்றது - தத்ரத்யரைச் சொல்லுகிறது. (௪)

மூ.—எங்ஙனேயுய்வர்தானவர் நினைந்தா லிரணியனிலங்கு பூணகலம்
பொங்குவெங்குருதிபொன்மலைபிளந்துபொழிதருமருவியொத்திழிய
வெங்கண்வாளெயிற்றோர்வெள்ளிமா விலங்கல்விண்ணுறக் கனல்விழித்தெ
அங்ஙனேயொக்கவரியுருவானானரங்கமாநகரமர்ந்தானே. [ழுந்தது

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தானவர் | அஸுரர்கள் | அருவிஒத்து | மலையாறுபோலே |
| நினைந்தால் | (இந்த ஹிரண்யவதத்தை) நினைந்தார்களாகில் | இழிய | பெருகும்படியாக, |
| | | வெம் | சிவந்திருக்கிற |
| | | கண் | கண்களையும் |
| எங்ஙனே உய்வர் | எப்படி ப்ராணதாரணம் பண்ணுவார்கள்? [டைய | வாள் | வாளாயுதம்போன்ற |
| | | எயிறு | பறகளையுமுடையதாய் |
| | | மா | பெரிதாய் |
| இரணியன் | ஹிரண்யாஸுரனு | ஓர் | அத்விதீயமான |
| பூண் | ஆபரணங்களாலே | வெள்ளிவிலங்கல் | வெள்ளிமலையானது |
| இலங்கு | விளங்காநின்றுள்ள | | |
| அகலம் | மார்பில்நின்றும், | விண் உற | ஆகாசத்தைக்கிட்டி |
| பொங்கு | வ்ருத்தியடையாநிற்பதாய் | கனல்விழித்து | தீவிழி விழித்து |
| | | எழுந்தது ஒக்க | தோற்றினதுபோலிராநின்ற |
| வெம் | உஷ்ணமாயிருக்கிற | | |
| குருதி | ரத்தமானது, | அங்ஙன் | அப்படிப்பட்ட |
| பொன்மலை | ஸ்வர்ணமயமான மேரு மலையை | அரி உரு ஆனான் | நரஸிம்ஹாவதாரம் பண்ணினவன் |
| பிளந்து | பிளந்துகொண்டு | அரங்கமாநகர் அமர்ந்தான். (௫) | |
| பொழிதரும் | ப்ரவஹியாநின்ற | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (எங்ஙனே) நம்மைப்போலே அநுகூலித்து, ப்ரஹ்லாதனைப்போலே “இது நமக்காகச்செய்தசெயல்” என்றிருப்பார் உஜ்ஜீவிக்குமத்தனைபோக்கி, சத்ருபக்ஷமான அஸுரவர்க்கம் இவ்வபதாநத்தை ஸ்மரித்தால் எங்ஙனே உஜ்ஜீவிக்கும்படி? ஹிரண்யனுடைய, ஆபரணங்களாலே அலங்க்ருதமாகா நின்றுள்ள மார்வானதில். (பொங்குவெங்குருதி) போக்கிடம் காணாமையாலே பெரியகிளர்த்தியோடே கோஷித்துக்கொண்டுவருகிற ருதிரவெள்ளமானது, மேருவைப்பிட்டுக்கொடு வெள்ளமிடாநின்றுள்ள அருவிபோலே வந்திழிய. அவனும் ஹிரண்யனிறே. நாநாவான தாதுக்களா

லே கலங்கி மேருவைப்பிட்டுக்கொடு இழிகிறது, ஹிரண்யனுடலைப் பிளந்து கிழித்துக்கொடு இழிகிற ருதிரம்போலே யிராநின்றதாய்த்து. வெவ்விதான கண்ணையும், ஒளியையுடைத்தான எயிற்றையுமுடைத்தாய், வெள் ரிபாலே சமைந்த தொரு பெரியமலையானது, ஆகாசத்தை ஊடுருவி பக்நிகல்பமாகப் பாராநின்றுகொண்டு தோற்றினது போலேயிருக்க, நரஸிம்ஹவேஷத்தைக் கொண்டவன், இன்னமப்படிக்கொத்த விரோதிவர்க்கம் வந்து கிட்டினால் போக்குகைக்காக இங்கேவந்து ஸந்நிஹிதனானான். ... ... ... ... (௫)

---

அ௫ — அஞ்சாம்பாட்டு. (எங்ஙனேயித்யாதி) கீழிரண்டு பாட்டாலும்-வேதப்ரதாநத்தாலும் அம்ருத ப்ரதாநத்தாலும் ப்ரஹ்மாதிகளுடைய துக்கம் போக்கினபடி யருளிச்செய்தாராய், இனி அஞ்சு பாட்டாலும் - துக்க நிவர்த்தகனான மாத்ரமன்றிக்கே ஆஶ்ரித ரபேக்ஷித்தபோது முகங்காட்டி உதவும் ஸ்வபாவங்களைச் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

(பிட்டுக்கொடு) பிளந்துகொண்டு. பொன்மலையை த்ருஷ்டாந்தமாக்கினதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (அவனுமித்யாதி). அருவி வெளுத்தன்றோ விருப்பது, குருதிக்கு த்ருஷ்டாந்தமாகக் கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (நாநாவான வித்யாதி). ... ... ... ... (௫)

மூ.—

ஆயிரம்குன்றம்சென்ற தொக்கனையவடல்புரையெழில்திகழ்திரடோள்
ஆயிரந்துணியவடல் மழுபபற்றி மற்றவனகல்விசும்பணைய
ஆயிரம்பெயராலமரர் சென்றிறைஞ்சவறிதுயிலலைகடல்நடுவே
ஆயிரம்சுடர்வாயரவணைத் துயின்றானரங்கமாநகரமர்ந்தானே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆயிரம்குன்றம் | ஆயிரம் மலைகள் | துணிய | அறும்படியாக, |
| தொக்கு | சேர்ந்து | அடல் | யுத்தத்திலே |
| சென்றது அனைய | சென்றாப்போலே யிருந்ததாய் [யாய் | மழு | மழுவென்னும்ஆயுதத் [தை |
| அடல்புரை | யுத்தத்துக்குத் தகுதி | பற்றி | கையிலே தரித்து, |
| எழில் | காந்தியானது | மற்று | அதுக்குமேலே |
| திகழ் | விளங்காநின்றதாய் | அவன் | அந்தகார்த்த வீர்யனானவன் |
| திரள் | திரண்டிருக்கிற | அகல் | பரந்திருந்துள்ள |
| தோள்ஆயிரம் | (கார்த்த வீர்யனுடைய) ஆயிரம் புஜங்களும் | விசும்பு | வீரஸ்வர்க்கத்தை |
| | | அணைய | அடைய, (அநந்தரம்) |
| | | அமரர் | தேவர்கள் |
| | | சென்று | கிட்டி |

வ்யா.—எட்டாம்பாட்டு. (ஊழியாய்) காலோபலக்ஷிதமான ஸகல பதார்த்தங்களுக்கும் நிர்வாஹகனாய், (க) "𑌅𑌹𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾-அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா" (௨) "𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂-போக்தாரம் யஜ்ஞதபஸாம்" என்கிறபடியே - ஸர்வ கர்ம ஸமாராத்யனாய், ஏகசக்ரமான ரதத்தையுடைய ஆதித்யனுக்கு அந்தராத்மாவாய்க்கொண்டு அவ்வழியாலே உபாஸ்யனாய், லோகத்திலே, முகப்பட்டத்தை யுடைத்தாய் மத முதிதமாய்க்கொண்டு ஸஞ்சரியாநின்றுள்ள ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய துக்கத்தைப் போக்கி, லங்கையானது ஒருவர்கூறை எழுவருடுக்கும்படி கொலையம்பு நடத்தி, பல (ப³ல)த்தால் மிக்கிருந்துள்ள அர்ஜுநனுக்குக் க்ருபைபண்ணி, ஆதித்யனை வெளிமறைக்கும்படியாக, அவனுடைய ப்ரகாசத்துக்கு அடைத்த காலந்தன்னிலே, அநேகமாயிரம் ஆதித்யர்கள் சேர உதித்தாப்போலே யிருந்துள்ள புகரையுடைய திருவாழியைக்கொண்டு அந்த ஆதித்யனை மறைத்தவன். இந்த ஆதித்யனுடைய தேஜஸ்ஸு கண்ணாலே முகக்கலாம்படி அளவுபட்டிருக்கையாலே, தமஸ்ஸை போம்படியாயிருக்கும், அங்ஙனன்றிக்கே, திருவாழி யாழ்வான் தேஜஸ்ஸு நேர் கொடு நேர்கண்கொண்டு பார்க்க வொண்ணாதபடி மிக்கிருக்கையாலே பளபளத்துக் கண்ணை இருளப்பண்ணிற்று. பகலே - பகலை வெளிகெட. . . ... ... ... ... (அ)

---

அ — எட்டாம்பாட்டு (ஊழியாயித்யாதி) ஏமத்துக்குச்சி - ஆராத்யதயா ப்ரேஷ்டனென்றருளிச்செய்கிறார் (அஹம்ஹியித்யாதி). கர்மாராத்யனைக் குறிப்பாக இந்த்ராத்யந்தராத்மத்வம் சொல்லவேண்டுகையால், "ஊழியாய்" என்றதனை யருளிச்செய்தாராய். இங்கே ஆதித்யாந்தர்வர்த்தித்வம் சொன்னது-கர்மாங்கியான ஸர்வவித்யோபாஸ்யத்வம் சொல்லுகிறதென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (அவ்வழியாலே யித்யாதி). கீழ் - அந்தர்யாமித்வம் சொல்லி, இத்தால் ஸர்வஸ்மாத்பரனானவன் இவ்வுலகில் வந்து செய்த செயல்களை அருளிச்செய்கிறாராகையாலே, "உலகில்" என்றது-"மறைத்தான்" என்னுமளவும் அந்வயிக்குமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (லோகத்திலே யித்யாதி). "சூழி" - முகப்பட்டமென்றருளிச்செய்கிறார் (முகப்பட்டத்தை யித்யாதி). "பாழியால்" என்றதினர்த்தம் (பலத்தால்) என்றது. நிரவதிக தேஜஸ்ஸையுடைய திருவாழியால் ஆதித்யனை மறைத்தால் இருளுண்டாம் வழியென்னென்ன வருளிச்செய்கிறார் (இந்த வித்யாதி) அந்வயம் காட்டுகிறார் (பகலேயித்யாதி) ... (அ)

---

(க) கீதை-௯-௨௪. (௨) கீதை-௫-௨௯.

மூ.—

பேயினார்முலையூண்பிள்ளையாயொருகால் பெருநிலம்விழுங்கியதுமிழ்ந்த
வாயனாய் மாலாயாலிலைவளர்ந்து மணி முடி வானவர்தமக்குச்
சேயனாயடியேற்கணியனாய் வந்தென்சிந்தையுள் வெந்துயரறுக்கும்
ஆயனாயன்றுகுன்றமொன்றெடுத்தா னரங்கமாநகரமர்ந்தானே, (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பேயின் | பூதனையினுடைய | வானவர்தமக்கு | தேவதைகளுக்கு |
| ஆர் | விஷத்தினால் பூர்ண | சேயனாய் | தூரஸ்தனுமாய், |
| முலை | ஸ்தநத்தை [மான | அடியேற்கு | அடியேனுக்கு [ண்டு |
| ஊண் | உண்ட | அணியனாய் | ஸந்நிஹிதனாய்க் கொ |
| பிள்ளையாய் | பேதையாய், [தில் | வந்து | தானேவந்து |
| ஒருகால் | ஒரு (ப்ரளய) காலத் | என்சிந்தையுள் | என் மநஸ்ஸிலுள்ள |
| பெரு | விசாலமான | வெம் | க்ரூரமான |
| நிலம் | பூமியை | துயர் | துக்கத்தை [ய், |
| விழுங்கி | உண்டு, | அறுக்கும் | நசிப்பிக்குமவனுமா |
| அது | அந்தபூமியை (ஸ்ருஷ்டிகாலத்தில்) | அன்று | அந்த க்ருஷ்ணாவதார ஸமயத்தில் [ண்டு |
| உமிழ்ந்த | வெளியிலே புறப்பட விட்ட [னுமாய், | ஆயனாய் | க்ருஷ்ணனாய்க்கொ |
| வாயனாய் | அதரத்தை யுடைய | ஒன்று குன்றம் | ஒரு கோவர்த்தந மலையை |
| மாலாய் | ஸர்வாதிகனுமாய், | எடுத்தான் | உயரவெடுத்துப் பசுக்களை ரக்ஷித்தவன் |
| ஆலிலை | ஆலந்தளிரில் | அரங்கமாநகர் | அமர்ந்தான். (௯) |
| வளர்ந்து | கண் வளர்ந்தருளினவனுமாய், | | |
| மணி | மணிமயமான | | |
| முடி | கிரீடங்களையுடைய | | |

**வ்யா.**—ஒன்பதாம்பாட்டு. (பேயினாரித்யாதி) பேயினுடைய, விஷத்தாலே நிறைந்த முலையை, தாய் முலைக்கும் வேற்றுமுலைக்கும் வாசியறியாதே யுண்ட முக்த்த ([illegible])னாய். (ஒருகால்) விழுக்காடறியாமை என்றும் ஒக்குமாய்த்து. ஒருகால், பாப்பை யுடைத்தான பூமியை வயிற்றிலே வைத்து, அது ஸாத்மியாமையாலே உமிழ்ந்த திருவதரத்தை யுடையனாய், ஸர்வாதிகனை ஸர்வேச்வரனாய், சிறுவடிவைக்கொண்டு பெரிய லோகங்களை வயிற்றிலே வைத்து ஒரு பவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளி, ப்ரஹ்மாதிகளுக்கு தூரஸ்தனாய், என்போல்வார்க்குக் கையாளாய், என்பக்கல் அபேக்ஷாமாத்ர

முமின்றிக்கே யிருக்கத் தானே வந்து என்னுடைய மானஸ வ்யஸநத்தைப் போக்குமாயனும். (அன்று குன்றமொன்றெடுத்தான்) கோவர்த்தநகிரியைத் தரித்து, பண்ணின உபகாரமறியாத பசுக்களையும் இடையரையும் ரக்ஷித்தவன். . . ... ... ... (௯)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு (பேயினரிதயாதி) ஆதல் - பூர்த்தியாய், எத்தாலேயென்ன வருளிச்செய்கிறார் (விஷத்தாலே) என்று. உட்கருத்தருளிச்செய்து, வாக்யார்த்த மருளிச்செய்கிறார் (ஒருகாலித்யாதி). "வந்து" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார (என்பக்க லித்யாதி). . (௯)

மூ.—

பொன்னுமாமணியுமுத்தமுஞ்சுமந்து பொருதிரை மாநதிபுடை சூழ்ந்து
அன்னமமாடுலவு மலைபுனல்சூழ்ந்த வரங்கமா நகரமர்ந்தானை
மன்னுமாமாடமங்கையர் தலைவன் மானவேல் கலியன்வாயொலிகள்
பன்னிய பனுவல் பாடுவார் நாளும் பழவினை பற்றறுப்பாரே.... (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை | பதம் | உரை. |
|---|---|---|---|
| பொன்னும் | ஸுவர்ணங்களையும் | புனல் | சந்த்ரபுஷ்கரிணி முத |
| மா | ஸ்லாக்யமான | | லான தடாகங்க |
| மணியும் | ரத்நங்களையும் | | ளால் |
| முத்தமும் | முத்துக்களையும் | சூழ்ந்த | சூழப்பட்டுமிருக்கிற |
| சுமந்து | திரட்டிக்கொண்டு | அரங்கமாநகர் | திருவரங்கத்தில் |
| பொரு | ஒன்றோடொன்று உ | அமர்ந்தானை | கண்வளர்ந்தருளுகிற |
| | தையாநின்ற | | பெரியபெருமாள் |
| திரை | அலைகளையுடைத்தான | | விஷயமாக, |
| மா | ஸ்லாக்யமான | மன்னு | அழிவற்று |
| நதி | திருக்காவேரியினுடைய | மா | ஸ்லாக்யங்களான |
| புடை | பர்யந்த ப்ரதேசங்க | மாடம் | க்ருஹங்களையுடைய |
| சூழ்ந்து | சூழப்பட்டும், [ளிலே | மங்கையர் | திருமங்கையிலுள்ளா |
| மாடு | பார்ச்வங்களிலே | தலைவன் | ஸ்வாமியாய் [ர்க்கு |
| அன்னம் | ஹம்ஸங்களானவை | மானம் | அளவுடைத்தான |
| உலவும் | ஸஞ்சரியாநிற்பன | வேல் | வேலாயுதத்தை |
| | வாய் [ன | | யுடையரான |
| அலை | திரைகளையுடைத்தா | | |

| | | | |
|---|---|---|---|
| கலியன் | ஆழ்வார் [ய், | பாடுவார் | அப்யஸிக்குமவர்கள் |
| வாயொலிகள் | அருளிச் செய்ததா | நாளும் | தினந்தோறும் [களை |
| பன்னிய | லக்ஷணங்களினால் கு | பழவினை | ப்ராசீநமான கர்மங் |
| | றைவற்றதான | பற்று அறுப் | ஸவாஸநமாகப் போக் |
| பனுவல் | பாசுரங்களை | பார் | குவர்கள். (௧0) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (பொன்னித்யாதி) பொன்னும், பெருவிலையனான ரத்நங்களும், முத்துக்களும் சுமந்து, தன்னில்தான் பொராநின்றுள்ள திரைகளையுடைய மஹாநதியுண்டு - காவேரி, அது பர்யந்தத்திலே சூழப்பட்டிருப்பதாய், அருகே அன்னங்கள் ஸஞ்சரியாநின்றுள்ள ஸ்ரீசந்த்ர புஷ்கரிணி தொடக்கமான பொய்கைகள் சூழ்ந்த கோயிலிலேவந்து கண்வளர்நதருளுகிற ஸர்வேஶ்வரனை, ப்ரளயங்களுக்கு மழியாத மாடங்களாலே சூழப்பட்ட திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகராய், அளவுடைத்தான வேலைப் பரிகரமாக வுடைய ஆழ்வாரருளிச்செய்த, லக்ஷணங்களிலொன்றும் குறையாதபடி விலக்ஷணமான வித்தை அப்யஸிக்கவல்லார், ப்ராக்தநமான கர்மங்களை வாஸனையோடே போக்கப் பெறுவர். ... ... ... (௰)

பேரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (பொன்னித்யாதி) "நதிபுடைசூழ்ந்து" என்று சொல்லியிருக்க, மீளவும் "அலைபுனல்சூழ்ந்து" என்றால் புநருக்தமன்றோ வென்ன வருளிச்செய்கிறார் (ஸ்ரீசந்த்ர புஷ்கரிணியித்யாதி) ... (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அஞ்சாம்பத்தில் ஏழாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## அஞ்சாம்பத்து எட்டாந் திருமொழி

### ஏழை ப்ரவேசம்.

வ்யா.—இவ்வாழ்வாராகிறார்- சாஸ்த்ரவாஸனையாலே யாதல் தபஸ்ஸாலே யாதலன்றிக்கே பகவத் ப்ரஸாதத்தாலே தத்வத்ரயத்தையும்

யதாதர்ஶநம் பண்ணி யிருப்பா ரொருவராய்த்து. பரஸ்வரூபத்தை யதாதர்சநம் பண்ணுகையாவது ஏதென்றால்; ஶ்ரிய:பதியாய், அகில ஹேயப்ரத்யநீகனாய், ஸமஸ்த கல்யாணகுணாத்மகனாய், அந்த குணங்களுக்கும் ப்ரகாசகமாய் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாத்யாகரமாயிருந்துள்ள திவ்ய விக்ரஹத்தை யுடையனாய், உபய விபூதிநாதனாய், நிரதிசய போக்யனா யிருக்குமென்றறிகை; ஸ்வஸ்வரூபத்தை யதாதர்சநம் பண்ணுகையாவது - அநந்யார்ஹமாய், ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியின்றிக்கே பரதந்த்ரமா யிருக்குமென்றறிகை; அசித்தினுடைய ஸ்வரூபத்தை யதாதர்சநம் பண்ணுகையாவது-ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை யதாதர்சநம் பண்ணவொண்ணாதபடி இடைச்சுவராய்க் கொண்டு விரோதித்வமே ஸ்வரூபமா யிருக்குமென்றறிகை. இவ்விரோதியைக் கழித்து இச்சேதநன் விலக்ஷணவஸ்துவை லபிக்கும்போது அதுக்கநுரூபமா யிருப்பதொரு உபாய பரிக்ரஹம் பண்ணிக்கொள்ளவேணுமிறே. இம்மூன்றினுடைய ஸ்வரூபத்தையு மநுஸந்தித்தால் அவனையே பற்றவேணும்; விரோதி ப்ரபலமாகையாலே அவனைக்கொண்டே கழித்துக்கொள்ளவேணும்; ஸ்வஸ்வரூபத்தைப் பார்த்தால் ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாதபடி பரதந்த்ரமாகையாலே அவனையே பற்றவேணும்; அவ்வஸ்துதான் அநந்யஸாத்யமாகையாலும் அவ்வஸ்துவையே பற்றவேணும். இப்படி அவனை உபாயமாகப் பரிக்ரஹிக்குமிடத்தில், பரத்வம், தேசவிப்ரக்ருஷ்டமாய்க் கழிந்தது; வ்யூஹம், தத்ப்ராயமாய் ஸம்ஸாரிகளுடைய சிறுமையாலும் பகவத் வைபவத்தாலும் கழிந்தது; ஆபத்துண்டானபோது, ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயமாதல் ஸநகாதிகளுக்குக் காதாசித்கமாக ஆஶ்ரயணீய மாதலத்தனையிறே; விபவமும், காலவிப்ரகர்ஷத்தாலே மண்டல வர்ஷம்போலேயாய்க் கழிந்தது; அக்குறைகள்தீர, ஸ்வஸத்தா ஸ்திதி ப்ரவ்ருத்திகளும் ஆஶ்ரிதாதீநமாம்படி பண்ணிக்கொடு நிற்கிற நிலையிறே - அர்ச்சாவதாரம். அதாவது- ஆஶ்ரிதருகந்த த்ரவ்ய விசேஷத்தையே திருமேனியாகக்கொண்டு நிற்கையும், தன் க்ருஹத்தில் ஒரு ப்ரதேசத்திலே திருப்பள்ளியறையாக்கி "இங்கே எழுந்தருளி யிருக்க வேணும்" என்றால் அங்கே எழுந்தருளி யிருக்கையும், "திருமஞ்ஜநம்பண்ணி யருளவேணும், அமுது செய்தருளவேணும்" என்றால் அப்போது அமுதுசெய்தருளுகையும்; அவற்றை இவன் அநாதரிக்கும்போது தானும் அநாதரிக்கையும், அவதாரங்களிற்போலே

அஜஹத்ஸ்வபாவனாய், ஆஶ்ரிதர்க்கு அபிமத பல(ஃல)ப்ரதானம் பண்ணுகைக்கும், ஆஶ்ரயணீயனுகைக்கு முண்டான ஜ்ஞாநசக்த்யாதி குணங்களோடேகூட *ஆஶ்ரித பராதீநனுகையு மாயிறே யிருப்பது. ஆகையாலே, அர்ச்சாவதாரத்தை யாய்த்து இவர் ஆஶ்ரயணீயஸ்த்தலமாக நினைத்திருப்பது. முதல் தன்னிலே (க) "சூழ் புனல்குடந்தையே தொழுது" என்றும், (உ) "தஞ்சைமாமணிக்கோயிலே வணங்கி" என்று மிறே இவரிழிந்தது; ஆகையாலே, தம்முடைய ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டுக்கொண்டு, சரண்யரான பெரியபெருமாள்திருவடிகளிலே சரணம் புகுகிறார்.

இவர் (௩) *தாயே தந்தைதுடங்கிப் பலவிடங்களிலும் சரணம்புக்குப் போந்தார்; பகவல்லாபத்துக்கு ஸக்ருத்க்ருத மமைந்திருக்கச்செய்தே பலகாலும் சரணமபுகுகிறது நவராதிசயத்தாலே யிறே. இப்ப்ரபந்தத்துக்கு ஏற்றம்-நீர்மையுடைய பெரியபெருமாள் சரண்யராகையும், ஆழ்வார் அநுஷ்ட்டாதாவாகையும், ஸர்வாதிகாரமான த்ராவிடபாஷையாலே அருளிச்செய்கையும், த்ருபந (த்ருஷ்)ப்ரபந்நரான நமக்கு இவ்வார்த்தி இல்லையேயாகிலும இவர் பாசுரத்தைச் சொல்லவே இவராளவிலே இவர்க்கிரங்கினபோலே பெரிய பெருமாளிரங்குவரென்கிறதும். ப்ரயோஜநாந்தரத்துக்காகவும், துஃக்க நிவ்ருத்திக்காகவும் சரணம்புகுகிறவர்கள் பாசுரத்தை முன்னிட்டுக்கொண்டு சரணம்புகுகிறார்; அதுக்கடி என்னென்னில்; அவ்வோப்ரயோஜநங்களில் அவர்களுக்குள்ள ஆதரம் இவ்விஷயத்தே தமக்குண்டாகையாலும், அவர்களுக் ககப்பட இரங்குமவர் தமக்கிரங்காமையில்லை என்று நினைத்திருக்கையாலும்.

திருமாலையில் - ப்ராப்ய ப்ராபகங்கள் சொல்லிற்று; *அமலனுதிபிரானில் - ப்ராப்யம் சொல்லிற்று; இத்திருமொழியில் - ப்ராபகம் சொல்லுகிறது. ... ... ... ... ... ... (*)

அரு.—ஏழையேதலன்ப்ரவேசம். — கீழிரண்டு திருமொழிகளிலும்-பெரியபெருமாளாலே ஸமாஹிதராய்த் திருவரங்கத்தில் கண்டு களிக்கவா, (ச) "அடியேற்கணியனாய் . தென் சிந்தையுள் வெருதுயரறுக்கு மாயனை" என்று துஃக்க நிவர்த்தகத்வதனை அநுஸந்தித் திருக்கச் செய்கையும், தம்மை

(க) க-க-எ. (உ) க-க-௫ (௩) க-௯. (ச) ரு-எ-௫.

*அநந்தக்லேச பா (ஓ)ஜநமான ஸம்ஸாரத்தி லிருக்கக்கண்டு, விரோதி யான தேஹ ஸம்பந்தத்தைக் கழிக்கக்காணாமையாலே ஆர்த்தி மிகுந்து, பெரியபெருமாளைச் சரணம் புகுகிறாரென்னும் ஸங்கதி சொல்லுகையில்; இவர்க்கிப்படி ஆர்த்தி மிகும்படி ஜ்ஞாநம் பிறந்ததுக்கு மூலமேதென்றும், பரத்வாதிகளிருக்க இங்கே சரணம் புகுவானென்னென்றும், இவர் கீழே சரணம் புகுந்ததில்லையோ? மீளவு மிங்கே சரணம் புகுவா னென்னென் றும், இத்திருமொழிக்குச் சரணம் புகுந்த திருமொழிகளில் வாசிதா னென்னென்றும், இதில் ப்ரயோஜநாந்தர பரரை த்ருஷ்டாந்தமாக்கிக் கொள்ளுவானென்னென்றும் வருகிற சங்காபஞ்சகத்தையும் பரிஹரிக்கி றார் (இவ்வாழ்வா ரித்யாதி). கீழ் - ஆர்த்தி பிறக்கும்படியான ஜ்ஞாநம் வருகைக்கு மூல மருளிச்செய்தாராய், தத்கார்யதயா உபாயவரணத்தை அருளிச்செய்கிறார் (இவ்விரோதியை யித்யாதி). உபாயபரிக்ரஹம் பண் ணவேண்டினால் கர்ம ஜ்ஞாநாதிக ளில்லையோ வென்ன வருளிச்செய்கிறார் (இம்மூன்றி னித்யாதி வாக்யசதுஷ்டயத்தாலே). இத்தால் - தத்வத்ரயத் தையும் அவன் ப்ரஸாதத்தால் யதாதர்சநம் பண்ணினவராகையாலே அவ னையே உபாயமாகப் பற்றினாரென்றதாய்த்து. அவனையே பற்றினால் பர த்வாதிகளில்லையோ வென்ன வருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே). (மண்டலவர்ஷம்) வர்ஷாகாலவர்ஷம். ''ப்ரவ்ருத்தி'' என்றது நிவ்ருத்திக்கும் உபலக்ஷணமாக்கி யருளிச்செய்கிறார் (அவற்றை யித்யாதி). ஸத்தாதிகள் இவனிட்ட வழக்கானால் ஜ்ஞாந சக்த்யாதிகள் வேண்டாவோ ஆஸ்ரயணீயனாகைக்கு என்ன வருளிச்செய்கிறார் (அவதா ரங்களி லித்யாதி).

கீழ் பலவிடங்களிலும் ப்ரபத்திபண்ணிற்றும் ஆர்த்த்யதிசயத்தாலே யிறே, இத்திருமொழியிலார்த்தி மிகவும் அதிசயித்திருக்கு மென்கிறதுக்கு நியாமகமேதென்கிற சங்கையிலே, இதினேற்றஞ்சொல்லவே தானே தோற்றுமென்று இதின் ஸர்வாதிசாயித்வத்தை யருளிச்செய்கிறார் (இப் ப்ரபந்தத்துக் கித்யாதி) இத்தால் - (க) ''என்னடியாரது செய்யார்'' என் னும்படி குணபூர்த்தியுள்ளவர் விஷயமாகையால் ஆர்த்தி மிகுத்திருக்கு மென்னுமது தோற்றுகையாலும், *மயர்வற மதிநலம்பெற்ற ஆழ்வார் அநு ஷ்டாதாவாகையாலே நீர்மையுள்ள விஷயத்தி லார்த்தி ... கை யுக் தாகையாலும், எல்லார்க்கும் தெரியும்படி தமிழாகச் ... ய்கையாலே இது லர்த்த விசாரத்தாலே ஆர்த்தியிலுதிக்யம் காணலா ... கையாலும், ஆர்த்தி யில்லாதார்க்கும் இதிலன்வய மாத்ரத்தாலே ஆர் ... யுண்டானதாக இரங் கும்படி யிருக்கையாலும், இதிலார்த்தி மிகு ... திருக்குமென்றதாய்த்து. அன்றிக்கே, ப்ராஸங்கிகமாக ப்ரபந்த வைலக்ஷண்யத்தைச் சொல்லி ஈடு படுகிறாரென்னவுமாம்.

[illegible]

பெரியபெருமாள், திருமாலை பாடிலும் அமலனாதி பிரான்பாடிலும் இரங்காரோ, இதுவே இரக்கத்துக்கு உடலாவா னென்னென்ன வருளிச் செய்கிருர் (திருமாலை யித்யாதி). ... ... ... ... (*)

மூ.—ஏழை யேதலன் கீழ் மகனென்னு
திரங்கி மற்றவற்கின்னருள் சுரந்து
மாழை மான் மட நோக்கியுன்தோழி
உம்பி யெம்பியென்றொழிந்திலை உகந்து
தோழன் நீ யெனக் கிங்கொழியென்ற
சொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட
ஆழிவண்ணா நின்னடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (க)

| பதம். | உரை. |
|---|---|
| ஏழை | விஷயசபலன் (அஜ்ஞ |
| ஏதலன் | சத்ரு, [ன்) |
| கீழ்மகன் | நீசஜாதி, |
| என்னாது | என்று நினையாமல் |
| இரங்கி | தயைபண்ணி |
| மற்று | அதுக்குமேலே |
| அவற்கு | அந்த குஹப்பெரு |
| | மாள் விஷயத்தில் |
| இன் | இனிதான (ஸ்வயம் |
| | ப்ரயோஜநமான) |
| அருள் | க்ருபையை |
| சுரந்து | பண்ணி, |
| மாழை | முக்தமான |
| மான் | மானினுடைய |
| மடம் | ம்ருதுவான |
| நோக்கி | கண்கள் போன்ற |
| | கண்களையுடைய |
| | இந்த ஸீதை |
| உன்தோழி | உனக்கு ஸகி, |
| உம்பி | உனக்குத் தம்பியான |
| | லக்ஷ்மணன் |
| எம்பி | என்னுடைய தம்பி, |
| என்று | என்று சொன்ன இவ் |
| | வளவு மாத்ரத்தி |

| பதம். | உரை. |
|---|---|
| ஒழிந்திலை | விடாதவனாய்க் கொ |
| | ண்டு, |
| உகந்து | ஆதரத்துடனே |
| நீ | நீ |
| எனக்கு | எனக்கு |
| தோழன் | ஸ்நேஹிதன், [ய் |
| இங்குஒழி | இங்கே நிற்கக்கடவா |
| என்றசொற் | என்றுசொன்ன உக் |
| கள் | திகள் [வந்து |
| வந்து | கர்ணகர்ணிகையாக |
| அடியேன் | தாஸபூதனான என்னு |
| மனத்து | மநஸ்ஸில் [டைய |
| இருந்திட | பொருந்தியிருக்க, (அ |
| | திலீடுபட்டு) |
| ஆழி | ஸமுத்ரம்போன்ற |
| வண்ணா | ஸ்வபாவத்தை யுடை |
| | யவனே! |
| அணி | அலங்காரமான |
| பொழில் | சோலைகள் சூழ்ந்த |
| திருவரங்கத் | திருவரங்கத்தில் கண் |
| து | வளர்ந்தருளுகிற |
| அம்மானே | ஸ்வாமியே! [டிகளை |
| நின் அடியிணை | உன் இரண்டு திருவ |
| அடைந்தேன் | சரணமாகப் புகுந்தே |
| | ன். (க) |

வ்யா. — முதற்பாட்டு. (ஏழை) அஜ்ஞன். ஏழையென்ன - அஜ்ஞன் என்று காட்டுமோவென்னில்; சபலனென்றபடி. விஷயசாபல்யம் - அஜ்ஞாந கார்யமிறே. அஜ்ஞாநந்தான், ஜ்ஞாநாநுதயம், அந்யதாஜ்ஞாநம், விபரீதஜ்ஞாநம் என்று த்ரிப்ரகாரமாயிறே இருப்பது. 'ஜ்ஞாநம் பிறந்தவாறே ஜ்ஞாநாநுதயம் போம்; யதாஜ்ஞாநத்தாலே அந்யதாஜ்ஞாநம்போம்; விஷய ப்ராவண்யரூபமான விபரீதஜ்ஞாநமிறே போக்கவரிது. (க) "ஜ்ஞாநஸம்பந்ந: - ஜ்ஞாநஸம்பந்ந:" என்கிற தேவர்க்கு எதிர்த்தட்டா யிருக்கிறபடி. இத்தால்-ஜ்ஞாநக்கொத்தையைச் சொல்லிற்று.

(ஏதலன்) சத்ரு. தாயைச் சோறுவேண்டும்போதும் வாளை விதிர்த்த வேண்டும்படியான சாத்ரவத்தைச் சொல்லுகிறது. (உ) "ரிபூணாமபி வத்ஸல: - ரிபூணாம்பி வத்ஸல:" என்கிறதுக்கு எதிர்தட்டாயிருக்கிறபடி. (ங) "மர்யாதாநாஞ்ச - மர்யாதாநாஞ்ச" என்கிறவர்க்கு எதிர்த்தட்டாம்படி மர்யாதாபங்கம் பண்ணியிறே இருப்பது. இத்தால் - வ்ருத்தத்தில் கொத்தை சொல்லுகிறது.

(கீழ்மகன்) இவை இத்தனையும் பூஷணமாம்படியான ஜந்மத்தையுடையவன். கீழ்ச்சொன்னவை இரண்டும், ஜ்ஞாநஸாத்யமாயும் ப்ராயஶ்சித்த ஸாத்யமாயு மிருக்குமிறே; இது, வேறொன்றால் கழிக்கவொண்ணாதே. (ச) "இக்ஷ்வாகு வம்ஶ ப்ரபவ:-இக்ஷ்வாகு வம்சப்ரபவ:" என்கிறவர்க்கு எதிர்த்தட்டாயிருக்கிறபடி. இத்தால் - ஜந்மத்தின் கொத்தைசொல்லுகிறது. இம்மூன்றாலுமாக, பெருமாளுடைய நீர்மையிலேற்றம் சொல்லிற்றாய்த்து.

(என்றிரங்கி) இவையொன்றும் பாராதேயாய்த்து இரங்கிற்று; (ரு) "ருஷீணாமக்நிகல்பாநாம் - ருஷீணா மக்நிகல்பாநாம்" என்று ஜந்மவித்யா வ்ருத்தங்களையுடையரா யிருக்கும் உபாஸகரான ருஷிகளுக்கும், (சு) "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி - அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்னும் இளையபெருமாளுக்கும், ஸாதநஸித்த்யர்த்தயாகவும் போக(ஸுக)ஸித்த்யர்த்தமாகவும் இரங்கு மிரக்கத்தை யிறே இவ்வாளவி லிரங்கிற்று. அதவா, (என்றிரங்கி) இப்பாசுரம் சொல்லாதிருக்க, இரங்கி.

(க) ரா-பால-க-கஉ. (உ) ரா-யு-௰-ருசு. (ங) ரா-ஸு-ஙரு-கக. (ச) ரா-பா-க-அ. (ரு) ரா-பா-க-சரு. (சு) ரா-அயோ-ங௧-உரு.

(க) "నధర్మనిష్ఠో஽స్మి - நதர்மநிஷ்டோஸ்மி" (உ) "అనార్యః - அநார்யா தஃ" (ங) "రావణోనామ - ராவணோநாம" இத்யாதிகளிலே - சரணம் புகுவார் ஸ்வநிகர்ஷத்தை முன்னிட்டுக் கொள்ளக்கடவர்கள் என்று நின்றதிறே.

ஸ்ரீகுஹப்பெருமாள் சொல்லக்கடவ பாசுரத்தை இவர் சொல்லுவானென்னென்னில்; அவருடைய கருத்தாலே. (மற்றவற்கு) அவனுக்கு அதுக்குமேலே. (இன்னருள் சுரந்து) இவ்விஷயீகாரத்துக்கு மேலே, இனிய அருளைச்சுரந்து. (இன்னருள்) தன்பேறான அருள். (சுரந்து) வத்ஸ ஸகாசத்தில் தேநு (ధేను)வானது க்ஷீரத்தைச் சுரக்குமாபோலே, குணங்களைச் சுரந்து.

இத்தை உபபாதிக்கிறது மேல். (மாழை மான் மடநோக்கி) நிகர்ஷம் சொன்னால், ப்ரதமத்தில் முன்னிடக்கடவ அர்த்தத்தைச் சொல்லுகிறது. முக்த்த (ముగ్ధ)மான மானினுடைய ம்ருதுவான நோக்குப்போலேயுள்ள நோக்கையுடையவள். இத்தால்-ஸம்பந்தம் இருவரோடும் ஒத்திருக்கச்செய்தே இவளுடைய கடாக்ஷத்தினுடைய முற்பாடு சொல்லுகிறது. இவனைப்பாரா அவனைப்பார்க்கும்; (ச) *ప్రేక్షిత జ్ఞాస్తు కోసలాః - ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்து கோஸலாஃ இறே. ப்ரணயிநி, ப்ரணயிகளுக்கு வாயால் சொல்லுவதில்லையிறே. "இத்தனை குறைவாளனை விஷயீகரியா தொழிகிறதென்!" என்றுப்போலேயாய்த்துப் பார்வை இருக்கிறது. இவள் பருவத்தையும் நோக்கையும் கண்டால் இவள் வழியே போவானொருவனிறே. (உன்தோழி) உனக்கு ஸ்வாமிநி என்னாதே, தோழி என்கிறார் - நீர்மையாலே; சீரியார், சேஷபூதரையும் "அண்ணா" "ஆச்சீ" என்று நிற்பர்களிறே. இவர்கள்தான் இங்ஙனல்லது சொல்லமாட்டார்கள். (ரு) "మిత్రభావేన - மித்ரபாவேந" (சா) "మిత్రమౌపయికమ్ - மித்ரமௌபயிகம்" (எ) "తేనమైత్రీభవతుతే - தேநமைத்ரீ பவதுதே" இவ்வார்த்தை போழ்க்கனு யிருக்கையன்றிக்கே, ப்ராப்தி ஸமயத்திலும், (அ) "నిరంజనః పరమం సామ్యముపైతి - நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்யமுபைதி" என்று குணஸாம்யத்தையும் போக (భోగ)

(க) ஸ்தோ-ர-உஉ. (உ) ஸ்தோ-ர-௫உ. (ங) ரா-யு-கஎ-கஉ.
(ச)  (ரு) ரா-யு-கஅ-ங. (சா) ரா-ஸு-உக-கக.
(எ) ரா-ஸு-உக-உக. (அ) முண்ட-ங-க-ங.

ஸாம்யத்தையும் தேஹஸாம்யத்தையும் போக்ய (భోగ్య) ஸாம்யத்தை யும கொடுத்திறே வைப்பது.

(உம்பி எம்பி) உன்னுடைய தம்பி, எனனுடையதம்பி. இங்ஙனே சொல்லுவானென்னென்னில்; பெருமாள் விஷயீகரித்திருக்குமவர்களை அவரோபாதியாக நினைத்திருக்கும் இளையபெருமாள் கருத்தாலே; (க) "భక్తిరష్టవిధా హ్యేషా యస్మిన్ మ్లేచ్ఛేపి వర్తతే। తస్మై దేయం తతో గ్రాహ్యం సచ పూజ్యో యథాహ్యహమ్ - பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே। தஸ்மைதேயம் ததோக்ராஹ்யம் ஸசபூஜ்யோ யதாஹ்யஹம்" என்றும், (உ) "தொழுமினீர் கொடுமின் கொண்மினென்று நின்னோடு மொக்க வழிபட வருளினாய்" என்றும் சொல்லுகிறபடியே. (௩) "பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்" என்று - ஸம்ஸாரத்தில் நின்றும் ஒருவன் முக்தனாய்ச்சென்றால் ஸ்ரீபாதம் விளக்கி ஸூரிகள் ஆதரிக்கக்கடவர்கள் என்னாநின்றதிறே. அவர்களிலே பிறிகதிர்ப்பட்டுப் போந்தவரிறே இளையபெருமாள். இத்தால் - வைஷ்ணவாங்கீகாரம் பண்ணிக்கொடுத்தபடி. (௪) "அவன் செய்யும் சேமம்" என்றும், (ரு) "அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்" என்றும் சொல்லக்கடவதிறே. (என்றொழிந்திலை) அவ்வளவில் விட்டிலை. பிராட்டியை "தோழி" என்றும், இளையபெருமாளை "தம்பி" என்றும் சொன்னபோதே, ஆர்த்த (ఆర్త)மாக வருமிறே தம்முடைய தோழமை.

(உகந்து) உகப்பாலே, "தோழன்நீ" என்கிறார். உகப்பு ஓரளவில் நிற்குமதன்றே. (தோழன்நீ எனக்கு) ஸ்வநிகர்ஷத்தைச் சொல்லிப் புருஷகாரத்தை முன்னிட்டு வைஷ்ணவாங்கீகார முண்டானால், அநந்தரம் உபாயஸ்வரூபம அநுஸந்தேயமாகக் கடவதிறே; அத்தைச் சொல்லுகிறது. (இங்கொழி) பின்றுடர்ந்து போகப்புக்கார் போலே காணும் இவரும். படைவீடு கெடாமைக்கு ஒருவனைவைத்தோம், வழியடி கெடாதபடி இங்கேயிரும. ஸ்வேச்சாநுரூபமாக வன்றியிலே, (௬) *க்ரிய நாமிதியிலேயிறே அங்குமுள்ளது. (என்ற சொற்கள்) அவ்வர்த்தங்களன்றிக்கே, அப்பாசுரங்காணு மிவரை வருத்துகிறது. (வந்து) ஒருநிலை விசேஷத்திலே யாயிருக்க, கர்ணபரம்ப

(க) (உ) திருமா-௪உ. (௩) தி-வாய்-௧௦-௯-௧௦.
(௪) தி-வாய்-எ-௩-௧௦. (ரு) அமல-க. (௬) ரா-ஆர-௧ரு-எ.

ரையாகவந்து; இவர்நெஞ்சிலே யாய்த்து ஊற்றிருந்தது. இப்பாசுரந் தன்னை (க) "గుహేన సహితో రామో లక్ష్మణేన చ సీతయా - குஹேநஸஹிதோ ராமோ லக்ஷ்மணேநச ஸீதயா" என்று ஸ்ரீ வால்மீகிபகவான் சொல்லிவைத்தானிறே. (அடியேன் மனத்திருந்திட) (உ) "సంస్మ రామ్యస్య వాక్యాని - ஸம்ஸ்மராம்யஸ்ய வாக்யாநி" என்னுமாபோலே இவர் நெஞ்சிலேயாய்த்து வேர்விழுந்தது. சேஷபூதனுடைய நயநீயமான பாசுரம் சேஷிநெஞ்சிலே வேர்விழுந்து ரக்ஷணத்துக்காய்க் கிடக்குமாபோலே, சேஷிபாசுரம் சேஷபூதனுடைய நெஞ்சிலே கிடக்கக்கடவதிறே கைங்கர்யத்துக்காக.

(ஆழிவண்ண) ரத்நங்களாலே கடல் நிரம்பி யிருக்குமாபோலே, ஆஶ்ரயணத்துக்கு ஏகாந்தமான குணங்களாலே நிரம்பின கடல். (௩) "అపారకారుణ్య - அபாரகாருண்ய" இத்யாதி. (௪) [యథా రత్నాని జలధేరసఙ్ఖ్యేయాని పుత్రక । తథా గుణాహ్యనన్తస్య అసఙ్ఖ్యేయా మహాత్మనః - யதா ரத்நாநி ஜலதேரஸங்க்யேயாநி புத்ரக। ததா குணாஹ்யநந்தஸ்ய அஸங்க்யேயா மஹாத்மந:] உத்பத்தியு மங்கேயாய், வாஸமும் அங்கேயாய், புறம்போரிடத்தி லின்றிக்கே எல்லாரு மாதரிக்கும்படி ரத்நங்களிருக்குமாபோலே யாய்த்து குணங்களிருக்கும்படி. அதவா, கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனே! வடிவைக்கண்ட போதே ஸாம்ஸாரிகமான தாபங்களடைய ஆறும்படியாய்த்திருப்பது. (நின்னடியிணை) அநந்தரத்தில் (ரு) "శరణౌ - சரணௌ" என்கிறபதத்தை நினைக்கிறது. (அடைந்தேன்) க்ரியாபதத்தில் வர்த்தமாநம் கௌண (ళూ)மென்னுமிடம் சொல்லுகிறது.

(அணிபொழிலித்யாதி) ராமாவதாரத்தைச் சொல்லி இங்கே சேர்க்கையாலே (சு) "நம் சேவகனார் மருவிய பெரியகோயில்" என்கிறபடியே - அவரே இங்குச்சாய்ந்தாரென்கிறது. அணி என்று - பொழிலுக்கு விசேஷணமுமாய், கோயிலுக்கு விசேஷணமுமாயிருக்கிறது. அதாகிறது - ஸம்ஸாரத்துக்கு ஆபரணம்போலே யிருக்கை. சோலைவாய்ப்புக்கண்டு சாய்ந்தாப்போலே யிருக்கச்செய்தேயும், ஆஶ்ரயிப்பார் தேட்டமாயன்றோ இங்குச்சாய்ந்தருளிற்று. (அம்மானே)

---

(க) ரா-பா-க-ருO. (உ) ரா-ஆர-கசு-கக. (௩) கத்ய-

(௪) (ரு) த்வயம். (சு) தி-மா-௩க.

உடையவனுகையாலே உடைமை தேட்டமாயன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று. ... ... ... ... ... (க)

அரு. — முதற்பாட்டு மேல்பாட்டில் - "வாதமாமகன் மற்கடம்" என்று திருவடியை விஷயீகரித்தமையைச் சொல்லுகையாலே, இதுக்கு முன்னே விஷயீகரித்த ஸ்ரீகுஹப்பெருமாள் விஷயமாகத் திருவுள்ளம் பற்றி வ்யாக்யாநம் செய்தருளுகிறார். விஷயசாபல்ய ஹேதுவான அஜ்ஞாநம் - அபோக்யங்களில் போக்யதாபுத்தி யாகையாலே, அதின் கொடுமை சொல்லுகைக்குறுப்பாக அவாந்தரபேதங்களை அருளிச்செய்கிறார் (அஜ்ஞாநந் தானித்யாதி). (விஷயப்ராவண்ய ரூபமான) என்றது-விஷயப்ராவண்யமாகப் பரிணமித்தவென்றபடி. இத்தால்-"ஏழை" என்றசப்தம் - அமுக்யமாக விபரீதஜ்ஞாநத்தைக் காட்டுமென்றபடி. (க) "நராமஃ பரதாராம்ஸ்து சக்ஷுர்ப்யாமபி பஶ்யதி - நராமஃ பரதாராம்ஸ்து சக்ஷுர்ப்யாமபி பஶ்யதி" என்கிறபடியே யுண்டானபுகழை (உ)"யஶஸ்ஶ்ச-யஶஸ்ஶ்ச" என்றதாய், அதுக்கடியான ஜ்ஞாநஸம்பத்தியைச்சொல்லி, தத்பலமான சுசி (ஶு-சி)த்வம் சொல்லுகையாலே விஷய ப்ராவண்யலேசமில்லாதபடி சொல்லிற்றென்று விவக்ஷித்துக் கருத்தருளிச்செய்கிறார் (ஜ்ஞாநேத்யாதி).

(பூஷணமாம்படி) என்றது-குணமென்று சொல்லலாம்படி என்கை.

இவையொன்றும் பாராதே இரங்கிறுரென்கையாலே-இரக்கத்துக்குத்தகாத விஷயமென்றதாய்த்து. ஆறல் இரங்கத்தக்க விஷயமேதென்ன வருளிச்செய்கிறார் (ருஷீணாமித்யாதி). ‡(பாசுரத்தை) என்றவநந்தரம், சொல்லாதிருக்க என்று சேஷம்.

‡"அவர்க்கு" என்று - குஹப்பெருமாளை உபசரித்துச் சொல்லுகையால், தம்கருத்தால் சொன்னவரன்றென்று கருத்து.

(முன்னிடக்கடவ அர்த்தம்) புருஷகாரமென்றபடி. ஸ்ரீகுஹப்பெருமாள் பெருமாள்பக்கல் ஸ்நேஹத்தாலே நாலடியிட்டுவர, பெருமாள் கடாக்ஷிக்கைக்கு முன்னை, பிறந்தகத்தில் தோழன்மார்வந்ததாகக் கடாக்ஷித்து, அநந்தரம் பெருமாளை அங்கீகாரஹேதுவாக அழகாகவும் ஸாபிப்ராயமாகவும்பார்க்க, இவற்றை யெல்லாமறிந்து பெருமாள் "மாழைமான் மடநோக்கி யுன்தோழி" என்கிறுரென்று திருவுள்ளம்பற்றி, அதில் "தோழன் நீ யெனக்கு" என்றுப்போலே சொல்லாதே, "உன்தோழி" என்றத்தால் பலிதகருத்தருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி). நோக்கையிட்டு விசேஷித்ததுக்கு(ரு)பாவம் (இவளையித்யாதி). "மடம்" என்றத்தால் தோற்றின ம்ருதுத்வந்தா னென்னென்ன வருளிச்செய்கிறார் (இத்தனையித்யாதி). "மாழை" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (இவள்பருவமித்யாதி). எத்தனை நீர்மையுண்டானுலும் தம்பெருமை போகச்சொல்லுவரோ

(க) ரா-அயோ-எஉ-௬அ. (உ) ரா-பா-க-௬உ.

‡ இவ்வாகயத்வயம் அநந்விதம்.

வென்ன (சீரியாரித்யாதி). லோகத்தில் நியமோ அப்படியே வ்யவஹரிப்ப ரென்னக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவர்கள்தானித்யாதி). ஆனாலும், உபசரித்துச் சொன்னவார்த்தை நீர்ஸமக்குடலாமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவ்வார்த்தை யித்யாதி). (போழ்க்கன்) காபட்யம்.

உம்பியான இளையபெருமாள் எம்பிஎன்று தாத்பர்யம் விவக்ஷித்தரு ளிச்செய்கிறார் (உன்னுடைய வித்யாதி). பெருமாள் தன்னீர்மையாலே ஸாம்யத்தைக் கொடுப்பராகையாலே அப்படி "உம்பி" என்று அருளிச்செய்தாரே யாகிலும், அத்தை அநுபவிக்கிற ஆழ்வார் அங்ஙன் அநுபவிக்கக் கூடுமோ, வானவரில் தலையானவர்க்கும், "ஏழையேதலன்" இத்யாதிப்படியே கானவரில் தலையானவர்க்கும் நெடுவாசியுண்டே என்னும் சங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் (இங்ஙனே இத்யாதி). (இவரும்) ஆழ்வாரும், சொல்லலாம் என்று சேஷம். இளையபெருமாள் அப்படி பகவத் ஸமராக நினைத்திருக்கைக்கு ப்ரமாணம் (பக்திரித்யாதி). இந்தப்ரமாணம் இவ்விபூதியிலுள்ளார்க்காகச் சொன்னதன்றோ, இளைய பெருமாள் நித்யஸூரிகளன்றோ வென்ன வருளிச்செய்கிறார் (பதியினி லித்யாதி). பெருமாள் "உம்பி" என்றத்தால் பலித்த வர்த்தமென், "உன்தோழி" என்றத்தால் கொடுத்ததரம்போராதோ வென்ன வருளிச்செய்கிறா (இத்தாலித்யாதி). (அங்கீகாரம்) என்றது - உத்தேஸ்யதயா எண்ணும்படி பண்ணுகை. இப்படி அவன் வைஷ்ணவாங்கிகாரம் பண்ணிக்கொடுத்த விடமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி). "சேமம்" என்றது - பாகவதாபிமாநம் என்று திருவுள்ளம். ஸ்ரீலோகஸாரங்க முநிகள் தம்மைத் தோளிலே கொண்டுவரச்செய்தே அவர்க்குத்தாம் பரதந்த்ரரானபடியை அநுஸந்தித்தபடியாலே "ஆட்படுத்த" என்றாரிறே என்று கருத்து.

"உன்தோழி" என்றுப்போலே உனக்கு நான் தோழன் என்னவேண்டியிருக்க, "தோழன் நீஎனக்கு" என்றத்தாலே - தமக்குள்ள தோழமை ஒரு சரக்காகத் தோன்றுமையாலே, அவர் தம்மைத் தோழமை கொண்டதே கனக்க நினைத்தருளிச்செய்தார்; இத்தால் - உபாயஸ்வீகாரம் பண்ணினபடியாய்த்த தென்கிறார் (ஸ்வங்கர்ஷத்தை யித்யாதி). (க) "पद्भ्यामभिगमाच्चैव स्नेहसन्दर्शनेन च - பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்நேஹஸந்தர்சநேந ச" என்று சொல்லுகிறபடியே - நாலடி வருகையே ஸக்ருத்ப்ரபத்தி என்றெண்ணியிருந்தாரென்ற தாய்த்து. ஆழ்வார்க்கு கங்காகூலம் விப்ரக்ருஷ்டமாயிருக்குமே, ஓரிடத்தில் தாமுமவரு மிருந்து சொல்லுமாபோலே "இங்கு" என்னக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (பின்னித்யாதி.) இவரும்) என்ற வநந்தரம், அவரைப்போலே என்று சேஷம். ஆனால்

(க) ரா-அயோ-ரு௦-ச௦.

அவர் பின்தொடர்ந்தால் காட்டுக்குத் துணையாகக் கூட்டிக்கொண்டு போக வேண்ணுதோ, "ஒழி" என்று நிஷேதிக்கை தோழமைக்குச் சேராதே யென்ன வருளிச்செய்கிறார் (படையித்யாதி). இத்தால் - "பரதாழ்வானுக்கு நாம் போனவழிகாட்டு" என்று இஷ்ட விநியோகார்ஹமாம்படி பண்ணி யருளுகையாலே நிரதிசய புருஷார்த்தத்தை நியமித்தாரென்றதாய்த்து. கர்ணபரம்பரயா வந்ததென்றதுக்கு நியாமக மருளிச்செய்கிறார் (இப்பாசுரந்தன்னை யித்யாதி). ശ്ശ്ചോഃ ഫ്ലോ ഗ്രാം ലക്ഷ്മണേന സീതയാ-குஹமாஸாத்யதர்மாத்மா நிஷாதாதிபதிம்ப்ரியம். குஹேந ஸஹிதோ ராமோ லக்ஷ்மணேந ச ஸீதயா" என்றத்தாலே - இளையபெருமாளுக்கு முற்பட குஹரோட்டைச் சேர்த்தி சொல்லியும், அநந்தரம் அவர்க்கு இவர் தம்பிஎன்னும்படி ஸ்நிக்தரான இளைய பெருமாளைச் சொல்லியும், அதுக்கநந்தரம் இருவர்க்கும் புருஷகார பூதையான பிராட்டியைச் சொல்லியும் போருகையாலேயும், "ப்ரியம்" என்கையாலேயும், "உன்தோழி உம்பி, எம்பி, தோழன் நீஎனக்கு" என்றவை சொல்லிற்றாய்த்தென்று திருவுள்ளம். பரதாழ்வான் ஸ்ரீஸூக்திகள் பெருமாள் திருவுள்ளத்திலே சிரகாலம் கிடந்தத்தை த்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் (ஸம்ஸ்மரா மியித்யாதி).

"யதா - ததா" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (உத்பத்தியு மித்யாதி).

"அணி" என்றது *அரங்கத்துக்கு விசேஷணமானபோது தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அதாகிறதித்யாதி). பொழிலுக்கு விசேஷணமான போது தாத்பர்யம் (சோலையித்யாதி). ... ... ... ... (க)

மூ.—வாத மா மகன் மற்கடம் விலங்கு
மற்றோர்சாதியென்றொழிந்திலை உகந்து
காதலாதரம் கடலினும் பெருகச் செய்
தகவினுக்கில்லை கைம்மாறென்று
கோதில்வாய் மையினுயொடுமுடனே
உண்பனுனென்ற வொண்பொருளெனக்கும்
ஆதல் வேண்டுமென்றடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மற்றோர்சாதி | வேறொரு (மநுஷ்ய ஜாதியல்லாத) ஜாதியில் பிறந்தவன், | விலங்கு | (அதாவது) ஜ்ஞாந ஹீநமான திர்யக் ஜாதி, |

| | | | |
|---|---|---|---|
| மற்கடம் | (அதிலும்) குரங்கு, | இல்லை | கிடையாது |
| வாதம் | (அதுக்குமேலே அஹங்கார ஹேதுவான) வாயுவினுடைய | என்று | என்றுசொல்லி, |
| | | கோது இல் | நிர்த்துஷ்டமான |
| | | வாய்மையினொடும் | (ப்ரிய) பா(ஷ)ஷணத்தை யுடையரான உம்மோடு |
| மா | ப்லாக்யமான | | |
| மகன் | பிள்ளை | உடனே | கூடியிராநிற்க (உம்மைத் தழுவிக்கொண்டு) |
| என்று | ஆகிய இந்தத்தன்மைகளைப் பார்த்து | | |
| ஒழிந்திலை | கைவிடாதவனாய், (அதுக்குமேலே) | நான் | நான் |
| | | உண்பன் | (நிரதிசய ஸுகமான திருமேனியை) அநுபவிக்கக் கடவேன் |
| உகந்து | (அவன்விஷயத்திலே) ப்ரீதிபண்ணி, | | |
| காதல் | ஸ்நேஹமும் | | |
| ஆதரம் | (அதின் முதிர்ந்தநிலமான) காமமும் | என்ற | என்றருளிச்செய்த |
| | | ஒள் | அழகியதான |
| கடலினும் | ஸமுத்ரத்தைக்காட்டிலும் அதிகமாக | பொருள் | அர்த்தமானது |
| | | எனக்கும் | என் விஷயத்திலும் |
| பெருக | வளராநிற்க, | ஆதல்வேண்டுமென்று | உண்டாக வேணுமென்று கருதி |
| செய் | (நீர்) செய்த [குந்த) | | |
| தகவினுக்கு | உபகாரத்துக்கு (த்த | அடியேனையடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே! (உ) | |
| கைம்மாறு | ப்ரத்யுபகாரமானது, | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. ஜந்மவ்ருத்தங்களால் குறையநின்ற ஸ்ரீகுஹப்பெருமாள்பக்கல் பண்ணின விஷயீகாரத்தை என்பக்கலிலேபண்ணவேணுமென்று சரணம்புக்கார் - கீழிற்பாட்டில்; மநுஷ்யஸஜாதீயத்வம் கிடக்கச்செய்தே வந்த நிகர்ஷமிறே-கீழ்ச்சொல்லிற்று; இங்கு-விஜாதீயமான திர்யக்கையகப்பட தத்கத(தத்கத)நிகர்ஷம்பாராதே விஷயீகரித்தபாத்ரமேயன்றிக்கே அந்தஃபுரகைங்கர்யத்திலே ஏவியடிமைகொண்டாப்போலே, என்னளவிலும் கைங்கர்யத்தைக் கொள்ளவேணுமென்கிறார். இவ்வதிகாரிக்கு விஷயீகாராநந்தரம் கைங்கர்யத்திலே அந்வயிக்குமத்தனைபோக்கி, ஸாதநத்திலந்வயிக்கவேண்டுவதில்லை போலேகாணும். "இங்கொழி" என்றவிடத்தில் சொல்லிற்று இத்தையிறே.

(வாதமாமகனித்யாதி) விஷயீகாரத்துக்கு நிகர்ஷத்தை முன்னிடுகிறபடியே, கைங்கர்யத்துக்கும் நிகர்ஷத்தை முன்னிடவேணுமிறே;

விஸஜாதீயர் நிகர்ஷம் சொல்லும்போதும் "மற்றோர்சாதி" என்னவமையுமிறே. அதுதன்னிலே வருகிற நிகர்ஷம் சொல்லுகைக்காக (விலங்கு) என்கிறது - திர்யக்கு; ஜ்ஞாநத்தில் விலங்குதலையிட்டுச் சொல்லுகிறது. (க) "யஸ்து திர்யக்ப்ரவ்ருத்தி ஸ்ஸ்யாத் திர்யக்யோநிஸ்ஸ உச்யதே - யஸ்து திர்யக்ப்ரவ்ருத்தி ஸ்ஸ்யாத் திர்யக்யோநிஸ்ஸ உச்யதே" என்னக்கடவதிறே. ஜ்ஞாநத்துக்கு விலங்குதல் வருவது - ஆஹாராதியதி இல்லாமையாலும், ஜந்யஜநகபாவத்தில் முறையிலே பரிமாறுமையாலுமிறே. (மற்கடம்) அதிலும் தண்ணியதொன்று சொல்லுகிறது. தானே இரங்கிக்கொடுக்குமத்தையும் ஸ்வஸாமர்த்யத்தாலே அபஹரித்துக்கொண்டதாயிறே இருப்பது; (உ) "வாநரேண மயாஸஹ - வாநரேண மயாஸஹ" என்னுமாபோலே. (வாதமாமகன்) வாயுவினுடைய ஸ்லாக்யபுத்ரன். நிகர்ஷம்சொல்லுகிற ப்ரகரணத்தில் உத்க்ருஷ்டஜந்மத்தைச் சொல்லுகிறது எதுக்குறுப்பாகவென்னில்; ஜாதியைப் பற்றவன்றிக்கே, ஸ்வபாவத்தைப்பற்றவிறே. கீழ் உக்த நிகர்ஷம்போலன்றே "வாயுபுத்ரன்" என்கிற அஹங்காரத்தால் வந்த நிகர்ஷம். அர்த்தகாமங்களுக்கடி - அஹங்காரமிறே; ஸ்வரூபநாசத்தைபலி(ஃபலி)ப்பிக்குமிறே. இந்த அஹங்காரத்துக்கடி - அந்த உத்க்ருஷ்டஜந்மம். (ங) "புண்யபாபே விதூய - புண்யபாபே விதூய" என்னுமாபோலே த்யாஜ்யத்தில்முற்படவேண்டுவது இதிறே; ஆகையிறே (ச) "தர்மாந் பரித்யஜ்ய - தர்மாந் பரித்யஜ்ய" என்கிறது. (என்றொழிந்திலே) இவையோரோவொன்றே போருமிறே கைவிடுகைக்கு; இவைபார்த்துக்கைவிட்டிலே. இரக்கமுடையவனுக்கு இவைபார்த்துக் கைவிடவொண்ணாதிறே.

கைவிடாதவளவேயன்று (உகந்து) அதாவது-சேஷபூதனுக்குக் கைங்கர்யத்தை உண்டாக்குகையும் அவனுக்கு ப்ராப்தமென்று நினைத்திருக்கையுமன்றிக்கே தன்பேறாக நினைத்திருக்கையும், ப்ரத்யுபகாரம் தேடித்தடுமாற வேண்டாமையும். உகப்பை உபபாதிக்கிறது மேல். (காதலாதரம்) இது புநருக்தமன்றோவென்னில்; அவ்யாப்தி அதிவ்யாப்திரஹிதமான லக்ஷணவாக்யத்தில் புநருக்திதோஷமாவது; ஆற்றாமையும் ஆதரமும் சொல்லுவிக்கச் சொல்லுகிறதாகையாலே தட்டில்லை. கிஞ்ச, அபிஸந்திபேதத்தாலே புநருக்தமுமன்று,-(ரு) "செர்

(க) (உ) (ங) முண்ட-ங-க-ங.
(ச) கீதை-க அ-௬௬. (ரு) தி-வாய்-உ-ரு-க.

தாமரைத்தடங்கண்” என்கிறது தன்னையே பலகாலும் சொல்லுகிற துக்குத்தாத்பர்யமிறே. காதலினுடைய கார்யமிறே-ஆதரமாகிறது. (க)“[illegible]-ஸங்காத்ஸஞ்ஜாயதே காம:” என்கிறபடியே-கர்மநிபந்தநமாகச்சிலவர்க்கு வருமதந்தையிறே பெருமாளுக்கும் பிராட்டிக்கும் சொல்லுகிறது. பிராட்டிக்கு, பெருமாளைக் கண்டபோதே, “வில்லைமுறித்துக் கைப்பிடிக்கவல்லரே!” என்று ஸங்கப்பிறந்தது; பின்னை அநுபவித்தல்லது நிற்கவொண்ணாததசை-காமம்; அவர்க்கு பித்ருக்ருதகாரம் என்று பிறந்ததுஸங்கம். (௨) “[illegible]- குணேந ரூபேண விலாஸ சேஷ்டிதை:” என்கிறபடியே-குண ரூபசேஷ்டிதங்களைப்பற்றப் பிறந்தது-காமம். (கடலினும்பெருக) கடல்குளப்படியாம்படி பெருகுகிறஸமயத்திலே. இரண்டாம்ப்ராமும் கடல் போலேகாணும். பெருகுகையாவது - பர்யாப்தாபங்கம் பிறக்கை யிறே. அதாவது - (௩) “[illegible] - தத்சஸ்ய” என்கிறநிலை குலைந்து வேண்யுத்க்ரதநத்திலே ஒருப்படுகையும், (௪) “[illegible] - அவாக்யநாதர:” என்னும் நிலைகழிந்து (௫) “[illegible]- அவகாஹயார்ணவம் ஸ்வப்ஸ்யே” என்னும்படியாகையும்.

(செய்தகவினுக்கு) தகவாகிறது-தர்மம். அதாகிறது-ஒருப்ரயோஜநத்தைக் கணிசியாதே செய்யுமதிறே. (௬)“[illegible]-தர்மத: பரிரக்ஷிதா:” என்கிறபடியே-ப்ரயோஜந நிரபேக்ஷமாக எங்களை எல்லாரையும் ரக்ஷித்தவனல்லையோ. (இல்லைகம்மாரென்று) சேஷபூதன் சேஷியைப்பார்த்துச் சொல்லுகிற பாசுரத்தை சேஷிசொல்லுகிறுனிறே நீர்மையாலே: என்கையிலே திருவாழிபோதியத்தைத் தந்து எல்லாரும் தேடிக்கொடு திரியாநிற்க, (௭) “[illegible]-ஸேயமாஸாதிதாமயா” என்று நானிப்பேறு பெறும்படி பண்ணுவதே! என்று நான் சொல்லக்கடவ பாசுரத்தை இவர் சொல்லுவதே! என்றிறே இவருடைய அபிப்ராயம்.

(கோதில்வாய்மையினோடும்) வாய்மை-வாகிந்த்ரியவ்யாபாரம். அதாகிறது -வசநம். அதுக்குக் கோதில்லாமையாவது-(அ) “[illegible] - ஸம்ப்ரவே மதுரம்வாக்யம்” என்று பிராட்டியுடைய திருவுள்ளத்தே மெய்யென்றுபட்டு அவள் தரிக்கும்படி சொல்லு

(க) கீதை-௨-௬௨. (௨) ஸ்தோ-௫-௩௮. (௩) ரா-ஸு-௩௩-௩௦.
(௪) சாந்தோ-௩-௧௪-௨. (௫) ரா-யு-௫-௮. (௬)
(௭) ரா-ஸு-௩௩-௧௬. (அ) ரா-ஸு-௩௩-௧.

கையும், (க) " [Grantha] - த்ருஷ்டாஸீதா " என்று இவர் தரிக்கும்படி சொல்லுகையும், (உடனேயுண்பன் நானென்ற) இனி நாமொக்க ஜீவிக்கக்கடவோம.

இவ்வர்த்தம் (உ) " [Grantha] - ஏஷஸர்வஸ்வ பூதஸ்து" என்கிறத்தைப்பற்றச் சொல்லுகிறது. ஒருகலத்திலே உண்பாரைப் போலே சேஷசேஷிகளிருவர்க்கும் அநுபாவ்யமிறே திருமேனி. [ஸர்வஸ்வபூதः] ஸ்வரூப ரூப குணங்களிலும் பிராட்டிமாரிலும் அபிமதமாயிருக்கையாலே. அதாவது - ருசிஜநகமாயிருக்கையாலும், அானே ஸாதநமுமா யிருக்கையாலும், ஸ்தாதர்சந விஷயமாயிருக்கையாலும். ரக்ஷகனுக்கு ரக்ஷணத்துக்கு ப்ரதாநபரிகரம் திருமேனியிறே; அவ்வுடம்போடே யணைந்த உடம்பென்றிறே தன்னுடம்பையும் அவன் விடமாட்டாதே யிருக்கிறது.

(ஒண்பொருள்)சீரிய அர்த்தம். (எனக்குமாதல்வேண்டுமென்று) இப்பெரியபேற்றை ஆசைப்படுகையாவதென்! என்று கைவாங்கார்களிறே க்ருபணராயிருப்பார். (அடியிணையடைந்தேன்) சரணாகதிக்கு பலி(ஃபலி)யாததொன்றுமில்லை என்றிருக்கிறார். அத்தலையாலே வருமன்று எல்லாம் கைபுகுருமிறே. (அடியிணையடைந்தேன்) உன்னுடைமைகண்டேன் என்று வந்தவனில் வ்யாவ்ருத்தி.

(அணிபொழில் திருவரங்கத்தம்மானே) ஆபிமுக்யம் பிறந்தால் கைங்கர்யத்திலே அநவயிப்பிக்கைக்காகவன்றோ இங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது. ... ... ... ... ... (உ)

---

அந — இரண்டாம் பாட்டு. (வாதமிநயாதி) கீழ்ப்பாட்டில் பகவத்விஷயீகாரத்தை ப்ரார்த்தித்தவுடனே, நிரதிசய புருஷார்த்தமான கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக்கூடுமோ, கைம்முதலையன்றோ ப்ரார்த்திக்க வடுப்பதென்ன வருளிச்செய்கிறார் (இவ்வதிகாரிக்கித்யாதி). ஆனால் விஷயீகரித்தவுடனே ஸ்ரீகுஹப் பெருமாளைக் கொண்டு கைங்கர்யத்தைக் கொண்டாரோ வென்ன வருளிச்செய்கிறார் (இங்கொழி யித்யாதி).

விஷயீகரிக்கைக்கு ஸ்ரீகுஹப்பெருமாளை வ்யாஜீகரித்தது தம்முடைய நிகர்ஷம் முன்னிட்டாரே யாகிலும், விஷயீகாரம் பெற்றபின் கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கும்போது திருவடியை வ்யாஜீகரித்து கோஷத்தை முன்னிடவேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (விஷயீகாரத்துக் கித்யாதி). இத்தால் - புருஷார்த்ததினுடைய கௌரவத்தைப் பார்த்தால் ஸ்வநிகர்ஷமும் முன்னிட வேண்டியிருக்கு மென்றதாய்த்து. "ஏழை, ஏதலன்,

---

(க) ரா-பால-க-௭அ (உ) ரா-யு-க-கச.

கிழ்மகன்'' என்றவிடத்தில் உத்தரோத்தரம் நிகர்ஷாதிக்யம் சொல்லுமா போலே,இங்கே க்ரமேண சொல்லுமளவில் உத்தரோத்தர நிகர்ஷம் சொல்லக்கூடாமையாலே வ்யுத்க்ரமேண வ்யாக்யாநம் செய்தருளுகிறார் (விஸஜாதீய ரித்யாதி). (அது தன்னிலே) - அந்த நிக்ருஷ்ட ஜாதிதன்னிலே. ''மற்கடம்'' என்றபோதே ''விலங்கு'' என்றது ஸித்தமன்றோ வென்ன வருளிச்செய்கிறார் (திர்யக்கித்யாதி). திர்யக்குக்களிலும் தண்ணிதானமையை உபபாதிக்கிறார் (தானே யித்யாதி). இதநால் - பசுவாதிகளுக்குப் புல்லிட்டால் முகம்பார்த்துத்தின்னும்; குரங்குக்ளுக்குச் சோறுகாட்டினால் பறித்துக்கொண்டோடும்; அங்ஙனே, நிர்ஹேதுக க்ருபையால் ஈச்வரன் கொடுத்ததையும் தன்னாலே வந்ததாக எண்ணியிருக்கை மிகவும் தண்ணிதென்ற தாய்த்து. ''உத்க்ருஷ்ட ஜந்மந்த்யாஜ்யம்'' என்னுமதுக்கு த்ருஷ்டாந்தாந்தரம் (ஆகையிறே யித்யாதி). ஆனால ''வாதமாமகன்'' என்றதொன்றைச் சொல்ல வமைந்திருக்க, இதிலும் குறைந்தவற்றை அருளிச்செய்வானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவையித்யாதி). தோஷங்களில் ப்ரதாநங்களை முந்துறச் சொன்னத்தால் கைவிடுகைக்கு எல்லாம் துல்யங்க ளென்கைக்காக வென்று கருத்து.

அவ்யாப்தியாவது - லக்ஷ்யைக தேசத்தில் லக்ஷணமில்லாய லிருக்கை, அதிவ்யாப்தியாவது-அலக்ஷ்யத்தில் லக்ஷணம் வர்த்திக்கை; புநருக்தி என்றது - புந: அவ்யாப்தி வாரணார்த்தமாக வாதல், அதிவ்யாப்தி வாரணார்த்தமாக வாதல் பதாந்தரங்க ளுண்டாகை. திருவடி விஷயத்தில் பெருமாள்செய்த ஆதரத்தில் இவ்வாழ்வாருக்கு ஆற்றாமையாதல் ஆதரமாதல் சொல்லுவிக்கையாலே புநருக்தியாகிலும் சோஷாயவன் றென்கிறார் (ஆற்றாமை யித்யாதி). இங்ஙனன்றிக்கே, பெருமாளுக்கும் பிராட்டிக்கு முள்ள ஸங்கசாமங்களை ''காதலாதரம்'' என்கையாலே புநருக்தியில்லை என்கிறார் (இஞ்சேத்யாதி). கீழே முன்னேசொன்ன யோஜனையை ஸத்ருஷ்டாந்த முபபாதிக்கிறார் (செந்தாமரை யித்யாதி). இரண்டாம்பக்ஷத்தை உபபாதிக்கிறார் (காதலினுடைய வித்யாதி). கர்மநிபந்தநமான காதலாதரம் அவதார விசேஷமான இவாகளுக்குக் கூடுமோவென்ன வருளிச்செய்கிறா (ஸங்காதித்யாதி). தாத்பர்யாந்தரம் (இரண்டி தயாதி). கடல் போலே ஒருவா பாவ (ஞாநு) மொருவர்க்குத் தெரியாதபடி கம்பீரரானவர் இப்படி படுகிறுரென்று கருத்து.

பெருமாள் நினைவு இதானல் திருவடி நினைவு ஏதென்ன வருளிச்செய்கிறார் (என் கையிலே யித்யாதி).

பிராட்டிமாரினு மபிமதமானதுக்கு நியாமக மருளிச்செய்கிறார் (அதாவதித்யாதி); ஆஶ்ரிதோப யோகியாகையாலே அபிமதமென்று கருத்து. .(அவன்) திருவடி ''எனக்கும்'' என்கிற சகார ஸப்யார்த்த மருளிச்செய்

கிறார் (இப்பெரிய வித்யாதி). "ஆதல்வேண்டும்" என்றது - ஆகவேணும் என்று சப்தார்த்தம் கண்டுகொள்வது. "வேண்டுமென்றடியிணை யடைந்தேன்" என்று ஸாதநமாகச் சொல்லக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (அத்தலையித்யாதி) தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (உன்னுடைமை யித்யாதி). கார்யம் செய்துவந்தவனுக்கு முகங்கொடுத்தா யென்னு மதன்றிக்கே காலைப்பற்றிக் கிடக்கிறேனென்ற வ்யாவ்ருத்தி என்று கருத்து. ... ... ... .. ... ... ... (உ)

மூ.—கடிகொள் பூம்பொழில் காமரு பொய்கை
வைகு தாமரை வாங்கியவேழம்
முடியும்வண்ணமோர் முழு வலி முதலை
பற்ற மற்றது நின்சரண் நினைப்பக்
கொடியவாய் விலங்கினுயிர் மலங்கக்
கொண்டசீற்ற மொன்றுண்டுள தறிந்துன்
அடியனேனும் வந்தடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கடிகொள் | பரிமளத்தை யுடைத்தான | அது | அந்த யானையானது |
| பூ | புஷ்பங்கள் நிறைந்த | நின்சரண் | உன் திருவடிகளை |
| பொழில் | சோலையிலுல் சூழப்பட்டதாய் | நினைப்ப | த்யானிக்க (அப்பொழுது) |
| காமரு | ஸ்ப்ருஹணீயமான | கொடிய | க்ரூர்மான |
| பொய்கை | மடுவிலே | வாய் | வாயையுடைய |
| வைகு | இராநின்ற | விலங்கின் | திர்யக்கான முதலையினுடைய |
| தாமரை | தாமரைப்பூவை | உயிர் | ப்ராணனானது |
| வாங்கிய | பறித்த | மலங்க | வ்யாகுலப்படும்படியாக |
| வேழம் | ஸ்ரீகஜேந்த்ரனை, | | |
| முடியும்வண்ணம் | (தன்னுடைய சாபம்) முடியும் விதத்தை | கொண்ட | ஏறிட்டுக்கொண்ட |
| | | ஒன்று | அத்விதீயமான (ஆஸ்ரிதார்த்தமான) |
| ஓர் | ஆலோசியாநின்றதாய் | சீற்றம் | கோபமானது |
| முழுவலி | பூர்ணபலத்தையுடையதான | உண்டு | உண்டாயிற்று, |
| முதலை | முதலையானது | உளது | இப்படி ஆஸ்ரிதவிரோதி நிரஸநார்த்தமாக) உள்ள கோபத்தை |
| பற்ற | நெருக்கிப்பிடிக்க, | | |
| மற்று | அதுக்குமேலே | | |

அறிந்து அறிந்து
உன் உனக்கு
அடியனேன் தாஸபூதனுன நான்

வந்து அகிஞ்சநனாய்வந்து
அடியிணையடைந்தேன் அணிபொ
ழில் திருவரங்கத்தம்மானே! (௩)

வ்யா.—மூன்றும்பாட்டு. விஷயீகாரத்தையும் விஷயீகார பலமான கைங்கர்யத்தையும் சொல்லிற்று-கீழ்; கைங்கர்யத்துக்கு இடைச்சுவரான விரோதியைப் போக்கி ஸ்ரீ கஜேந்த்ராழ்வானைக் கைங்கர்யத்திலே அந்வயிப்பித்தாப்போலே, என்னுடைய விரோதியைப் போக்கி, என்னைக் கைங்கர்யத்திலே அந்வயிப்பிக்க வேணுமென்கிறார். விஷயீகாரத்துக்கும் கைங்கர்யத்துக்கும் நிகர்ஷம் முன்னிட வேண்டுகையாலே சொன்னார் - கீழ்; விரோதி நிரஸநத்துக்கு நிகர்ஷம் முன்னிட வேண்டுவதில்லை யிறே; விஷயீகாரமாகிறது- உபாயத்தளவும் செல்ல பலி (ஃலி)க்குமதிறே; அவன் உபாயமானால் பின்னை கைங்கர்யத்திலே அந்வயிப்பிக்கு மித்தனை; அதுக்கு விரோதி யறுகையிறே பின்னையுள்ளது; அந்த விரோதிதான் உபயாகாரமா யிருக்கக்கடவது; அவை யாகிறன- இந்த்ரியவஶ்யதையும், யமவஶ்யதையு மிறே. மேலிற் பாட்டில் - யமவஶ்யதை; இங்கு இந்த்ரியவஶ்யதை சொல்லுகிறது. எங்ஙனே யென்னில்; ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு விரோதியானமுதலையை நிரஸித்தாப்போலே, எனக்கு விரோதியான இந்த்ரியங்களை நிரஸித்தருளவேணு மென்கிறார். இவ்வதிகாரிக்கு இந்த்ரிய வஶ்யதையாவது - விஷயாந்தர ப்ராவண்யம் முதலாய் கைங்கர்ய ஸ்பர்ஶியான அஹங்கார மமகாரம் முடிவாயிறே யிருப்பது.

(கடிகொளிந்யாதி) "பொய்கைவைகு தாமரை" என்ன வமையுமிறே இவ னதிகரிந்த கார்யத்துக்கு, பொழிலையும் பொய்கையையும் வர்ணிக்கைக்குக் கருத்தென்னென்னில்; அநாவ்ருஷ்டியாலே ஜகத்தெல்லாம் நோவுபட்டு ஓரிடத்திலு மொரு புஷ்பமின்றிக்கே தட்டித்திரியாநிற்க, இவனுக்கு முற்படக் கண்ணிலே படுமதிறே சோலை; அந்தச் சோலைதான் தளிரும் முறியும் செருந்துமாய் நிற்கையாலே, கீழேயொரு பொய்கையு முண்டென்று தோற்றிற்று. (கடிகொள் பூம்பொழில்) பரிமள ப்ரசுரமாய் பூவை யுடைத்தான பொழில். "அச்சோலையை நோக்கிப்போக" என்று புக்கவாறே, பரிமளம் வந்து க்ராணவிஷயமாய், அங்கே புஷ்பமுண்டென்று தோற்றிற்று.

(காமருபொய்கை) ஆகர்ஷகமான பொய்கை - ஆகர்ஷகமா யிருக்கையாவது- அகாதமாய், "துஷ்ட ஸத்வங்களு முண்டாயிருக்குமோ"

என்று விவேகியாதே மேல்விழும்படியாயிருக்கை. (வைகு தாமரை) அநாவ்ருஷ்டியாலே தாமரைப்பூக்கள் எங்குமொக்கக் குடிவாங்கி பர்வதாக்ரத்திலே ஒரு பொய்கையிலே வந்து தங்குமாய்த்து. (வாங்கிய வேழம்) தன் மிடுக்காலும் அபிநிவேசத்தாலு மாக, வைத்தது வாங்கினுப்போலே வாங்கிற்று.

(முடியும்வண்ண மித்யாதி) இவ்வாதரத்தோடே புக்குத் தாமரைப்பூவைப் பறித்தவளவிலே, "ஓரானைக்கால் காணவல்லோமே" என்று பார்த்துக்கொடு கிடக்கிறமுதலை ஆனைக்காலைப் பற்றிற்று. (வேழம் முடியும்வண்ணம்) ஆனையை முடிக்கவேணும் என்றன்றே அது பற்றிற்று; தன்னுடைய சாபவிமோசநத்துக்காக விறே. இவர் பொறுக்கமாட்டாமையாலே சொல்லுகிற பாசுரமிறே இது.

(ஓர்முதலை) அத்விதீயமான முதலை. இதுக்கு முன்பு ஸ்வோஜ்ஜீவநத்துக்காக அநுகூலனை வந்து பற்றிற் றொரு முதலையல்லவிறே. (முழுவலி)தன்னில மல்லாமையாலே ஆனைக்கு மிடுக்குக்குறைந்தது; தன்னிலமாகையாலே முதலைக்கு மிடுக்கு மிக்கிருக்கை. (பற்ற) (க) "ச₂ரணௌ கா₃ட₄ம் நிபீட்₃ய - சரணௌ காடம் நிபீட்ய" என்னுமாபோலே - தன்னுடைய அபிமதம் தலைக்கட்டுகைக்காக அதின் காலை உறைக்கப் பற்றுகை. கரணாந்தரமில்லையாகையாலே உள்ளத்தைக் கொண்டு பற்று மித்தனையிறே யுள்ளது.

(மற்றது) பின்னை அந்த ஆனையானது. (உ) "க₃ஜாகர்ஷதே தீரே க்₃ராஹாகர்ஷதே ஜலே - கஜஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே" என்கிறபடியே-அநேககாலம் ‡(முதலை) நீர்க்கிழுக்க, ‡(ஆனை)கரைக்கிழுக்க, நோவுபட்டு மிடுக்கற்றது. அஹங்காரமிறே பல (ப₃ல)ஹாநிக்கடி; அத்தைப் பொகட்டு ஈஶ்வரனைப்பற்றின வாறே பல(ப₃ல)வானாமிறே. (நின்சரண் நினைப்ப) இப்படி நோவுபடாநிற்க இவன் நினையாதொழிந்தது - "ஒரு நீர்ப்பூவுக்காக ஸர்வேஶ்வரனை அழைக்கவோ, நாமே வெல்லுகிறோம்" என்றிருந்தான்; இவனிப்படி நெடுநாள் நோவுபடுகிறபடி அறியாதிருக்கிறானன்றே; "இவனுடைய அஹங்கார ஸ்பர்சமற்றால் முகங்காட்டுகிறோம்" என்றிருந்தா னத்தனையிறே. (சரண்நினைப்ப) இவன் மிடுக்கற்று, (ங) "மநஸா சிந்தயத்₃த₄ரிம் - மநஸா சிந்தயத்தரிம்" என்கிறபடியே-திருவடிகளை நினைக்க. தான், "நெடுநாள் நோவுபடாநிற்க முகங்காட்

(க) ரா-அயோ-ருக-உ. (உ) விஷ்ணுதர்மம்-சு அ. (ங) விஷ்ணுதர்-சு அ.
‡ ருண்டலிநத்வயம் க்வாசித்கம்.

டா தொழிவதே!"என்று கிலாய்க்க ப்ராப்தமிறே; அது செய்ததில்லை. [परमापदमापन्नः - பரமாபதமாபந்ந:] ஆபத்துக்கு உத்கர்ஷமாவது- ஸர்வேஶ்வரன் வந்து உதவும்படியாயிருக்கை;- அடிக்கழஞ்சு பெற்றிருக்கை. [नारायणपरायणः - நாராயண பராயண:] ப்ரஹ்மாதிகளைப்போலே ப்ரயோஜநாந்தரத்துக்காகச் சரணம் புகுகை யன்றிக்கே இவன் றன்னையே ப்ரயோஜநமாகப் பற்றுகை. நெடுநாள் வ்யாபரித்த சரீரமானது மிடுக்கற்றது. (க) "நாராயணா! ஓ! மணிவண்ணா!" என்கிற வாகிந்த்ரிய வ்யாபாரமும் ஓவி, (உ) "वाङ्मनसि संपद्यते- வாங் மநஸி ஸம்பத்யதே" என்கிறபடியே - நெஞ்சாலே நினைக்கும்படியாய்த்து.

(கொடியவாய்விலங்கு) முதலை, ஆனையின் காலையன்றோ பற்றிற்று; புண்படுகிறது தம் திருவுள்ளமிறே. ஒரு வைஷ்ணவனுக்கு வந்த ஆபத்துத் தனக்கு வந்ததாக நினையாதவன்று, வைஷ்ணவத்வ மில்லை என்றிருக்க வடுக்கும்; புத்ராதிகளுக்கு வந்த விரோதம் தனக்கு வந்ததாக நினையாதபோது தேஹாபிமாநத்துக்குக் கொத்தையாமாபோலே. (உயிர்மலங்க) தேஹமாதல், இந்த்ரியமாதலன்றிக்கே, ப்ராணஸ்தாந மகப்பட மலங்க. (கொண்டசீற்றம்) (ந) "सच नित्यं प्रशान्तात्मा - ஸசநித்யம் ப்ரசாந்தாத்மா" என்கையாலே ஆஶ்ரயத்தி லின்றிக்கே, (ச) "क्रोधमाहारयत् - க்ரோதமாஹாரயத்" என்கிறபடியே- கார்யகாலத்திலே ஏறிட்டுக்கொண்ட சீற்றம.

(ரு) [तत इत्यादि, कोपस्य वशमेयिवान् - ததஇத்யாதி, கோபஸ்ய வசமேயிவாந்] சரீரம் புண்பட்டால் சரீரி பேசாதிரானே; வந்தேறியான தேஹஸம்பந்தத்தைப்பற்றி சேதநன் பின்னே போமாபோலே. இவன் கர்மமிட்ட வழக்காமாபோலே அவன் அநுக்ரஹமிட்ட வழக்காய் அதின்பின்னே போகாநிற்கும். (ஒன்றுண்டு) தரித்ரனானவன் தநிகனை அடையுமாபோலே, "சீற்றமுண்டு" என்றாய்த்து இவர் பற்றுகிறது. ஆஶ்ரயிப்பார்க்கு உறுப்பான குணங்களிறே ஸௌசீல்யாதிகள்; விரோதி நிரஸநத்துக்குப் பரிகரமிறே சீற்றம். (உன்னடியனேனும் வந்தடியிணை யடைந்தேன்) ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவாறே ஸ்வரூபாநுரூபமான உபாயத்தைப பரிக்ரஹிக்கு மித்தனையிறே.

(க) சிறியதிரு-ருo. (உ) சாந்தோ-சு-அ-சு. (ந) ரா-அயோ-க-கo.
(ச) ரா-ஆர-உச-நச. (ரு) ரா-யு-ருசு-கநசு.

(அணிபொழி லித்யாதி) (க) "ஸ்ரோதோகேம் - த்வராயை நம:" என்கிறபடியே - மடுவின்கரை தேடிவர வேண்டாதே, நாணகப்பட்ட மடுவிலே யன்றோ வந்து சாய்ந்தருளுகிறது. அங்கு முதலையொன்று; இங்கு ஐந்து. (உ) "திவ்யம்வர்ஷஸஹஸ்ரகம் - திவ்யம் வர்ஷஸஹஸ்ரகம்" என்கிறபடியே - காலம் அளவுபட்டிருக்கும் அங்கு; இங்கு, காலம் அநாதி. அங்கு, பொய்கை அளவுபட்டிருக்கும்; இங்கு, * ஸம்ஸாரார்ணவம். ... ... ... ... ... ... (௩)

அரு.—மூன்றும்பாட்டு. (கடியித்யாதி) விரோதி நிரஸநத்துக்கு நிகர்ஷம் முன்னிடவேண்டா தொழிவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (விஷயீகார மித்யாதி);விரோதி நிரஸநம் உபாயபூதன் கார்யமாகையாலே வேண்டாவென்றபடி. இப்பாட்டில் இந்த்ரியவஸ்யதையை நிவர்த்திப்பிக்க வேணுமென்கைக்கு நியாமக மென்னென்ன வருளிச்செய்கிறார் (இவ்வதிகாரிக்கித்யாதி); அர்ச்சாவதாரத்தில் பூவிடவேணுமென்கிற ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு விரோதி முதலையாகையாலே, இவ்விபூதியில் கைங்கர்யத்தைப் பண்ணு மதிகாரிக்கு ப்ரஸக்தமான விரோதி இதுவே யிறே என்று கருத்து.

பறித்த என்னுதே, "வாங்கிய" என்றதுக்கு வாஸனை (தன்னித்யாதி.)

வேழத்தை - தன்சாபம் முடியும்வண்ணம் ஒராநின்றுள்ள முதலையென்றுக்கி யருளிச்செய்கிறார் (இவ்வாதரத்தோடே யித்யாதி). அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (ஆனையித்யாதி).

அத்விதீயத்வந்தன்னை விவரியாநின்று கொண்டு, ஈடுபாடாகத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இதுக்கித்யாதி). இவ்வதிகாரியைப் பற்றி இவ்விந்த்ரியங்கள் (௩) * முடியானேயிற்கரணங்கள்போலே உஜ்ஜீவிக்குமென்று கருத்து. அபிமதம் பெறவேண்டினால் கையாலே பற்றவேண்டாவோ வென்ன வருளிச்செய்கிறார் (கரணாந்தர மித்யாதி).

"நினைப்ப" என்று இத்தை ஆஸ்சர்யமாகச் சொல்லுகிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (தான் நெடுநாளித்யாதி). எடுத்த ஸ்லோக சேஷத்துக்கு அர்த்தமருளிச்செய்கிறார் (பரமாபத மித்யாதி). "மநஸா சிந்தயத்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (நெடுநாளித்யாதி).

விலங்கை "கொடிய" என்று விசேஷித்தத்தால் பலி (ஃபு)த்தவர்த்த மருளிச்செய்கிறார் (முதலை யித்யாதி). (தம் திருவுள்ளம்) ஆழ்வார் திருவுள்ள மென்றபடி.

(க) ர-ஸ்த-உ-இள. (உ) விஷ்ணுதர்-கூஅ. (௩) தி-வாய்-௩-அ.

சீற்றம்வந்தேறி என்றதுக்கு ப்ரமாணாந்தரம் (தத இத்யாதி). "తతో రామో మహాతేజా రావణేన కృతవ్రణమ్। దృష్ట్వా ప్లవగశార్దూలం కోపస్య వశమేయివాన్ - ததோ ராமோ மஹாதேஜா ராவணேந க்ருதவ்ரணம்। த்ருஷ்ட்வா ப்லவகசார்த்தூலம் கோபஸ்ய வசமேயிவாந்" என்கிறபடியே - திருவடிக்குப் பட்ட புண்ணால் பெருமானுக்குப்பிறந்த கோபத்துக்கு உபபத்தி யருளிச்செய்கிறார் (சரீரமித்யாதி). திருவடியைச் சரீரமென்றெண்ணிக் கோபிக்கக் கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (வந்தேறியித்யாதி). தேஹாத்மாபிமானி யாகையால் இவன் தேஹத்தின் பின்னே போனால் அவன் போக வேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (இவனித்யாதி).

இப்பாட்டுக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார் (அங்கித்யாதி). (௩)

மூ.—நஞ்சு சோர்வதோர் வெஞ்சின வரவம்
வெருவிவந்து நின்சரணெனச் சரணாய்
நெஞ்சிற்கொண்டு நின்னஞ்சிறைப் பறவைக்
கடைக்கலம் கொடுத்தருள் செய்ததறிந்து
வெஞ்சொலாளர்கள் நமன்றமர் கடியர்
கொடியசெய்வன வுள வதற்கடியேன்
அஞ்சிவந்து நின்னடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| வெம் | க்ரூரமான |
| சொலாளர்கள் | சொற்களை யுடையரான |
| நமன் தமர் | யமதூதர்கள் |
| கடியர் | பயங்கரமான வேஷத்தை யுடையராய்க்கொண்டு |
| கொடிய | (மரணகாலத்தில்) அதிக்ரூரமாக |
| செய்வன | செய்கிற வ்யாபாரங்கள் |
| உள | (பல) உண்டு; |
| அடியேன் | தாஸபூதனான நான் |
| அதற்கு | அந்த வ்யாபாரங்களுக்கு |
| அஞ்சி | பயந்து, |

| பதம். | உரை. |
|---|---|
| நஞ்சு | விஷத்தை |
| சோர்வது | உமிழாநின்றதாய், |
| ஓர் | அத்விதீயமாய் |
| வெம் | அதிக்ரூரமான |
| சினம் | கோபத்தை யுடையதான |
| அரவம் | ஸுமுக னென்னும் பாம்பானது |
| வெருவி | (தன்னைக் கொல்ல வந்த பெரிய திருவடிக்கு) பயந்து |
| வந்து | உன்னிடத்தில் வந்து |
| நின் சரண் எனா | நீ எனக்கு ரக்ஷகனாக வேணுமென்று சொல்ல, |

| | | | |
|---|---|---|---|
| சரணாய் | (அதுக்கு) ரக்ஷகனாய்க் கொண்டு, | கொடுத்து | ஒப்பித்து |
| நெஞ்சில்கொண்டு | (அதின் சொல்லைத்) திருவுள்ளம்பற்றி, | அருள்செய்தது | க்ருபைபண்ணி ரக்ஷித்த விதத்தை |
| நின் | உனக்கு சேஷபூதனாய் | அறிந்து | உணர்ந்து, |
| அம்சிறை | அழகிய இறகுகளை யுடையனான [தில் | வந்து | என் அபராதத்தை முன்னிட்டுக்கொண்டு வந்து |
| பறவைக்கு | பெரிய திருவடியிடத் | நின் அடியிணை யடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே!. (ச) | |
| அடைக்கலம் | (அப்பாம்பை) ரக்ஷ்ய வஸ்துவாக | | |

வ்யா.—நாலாம்பாட்டு. விஷயீகாரம் சொல்லி, விஷயீகார கார்யமான கைங்கர்யம் சொல்லி, அதுக்கு இடைச்சுவரான தேஹஸம்பந்தத்தை யறுத்துத் தரவேணும் என்கிறதாய் - இரண்டு பாட்டாலே; அதில் தேஹஸம்பந்தம் கிடக்கச்செய்தே அநுபவ விரோதியான பாபைகதேசபலமான இந்த்ரிய வஶ்யதையைப் பரிஹரித்துத் தரவேணுமென்றார் - கீழ்ப்பாட்டிலே; இதில், சரீரஸம்பந்தமற்றால் ஸர்வ பாபபலமாய் அநுபவ விரோதியாய்க்கொண்டு வரும் யமவஶ்யதையைத் தவிர்க்கவேணு மென்கிறார்.

(நஞ்சித்யாதி) ஸுமுகனுக்குப் பெரிய திருவடியால் வந்த பயத்தைத்தவிர்த்துக்கொடுத்தாப்போலே, எனக்கு யமவஶ்யதையால் வந்த பயத்தை யறுத்து, அவனையிட்டே (க) "పరిహర - பரிஹர" என்னும்படி பண்ணித்தரவேணுமென்கிறார். சரணம் புகுவார், தந்தாமுடைய நிகர்ஷத்தை முன்னிட்டுக்கொண்டிறே சரணம்புகுவது. அந்நிகர்ஷந்தான், ஆகிஞ்சந்ய ரூபமாயும் அபராத ரூபமாயுமிறே இருப்பது. அதாகிறது - நன்மையில்லை யென்கையும், தீமையுண்டென்கையும். அது தன்னை அநுஸந்தித்தாரிறே அடைவே (உ) "నధర్మనిష్ఠోస్మి - நதர்மநிஷ்டோஸ்மி" (ங) "ననిన్దితంకర్మ - நநிந்திதம் கர்ம" என்று. (ச) "జ్ఞానక్రియాచ భజనా - ஜ்ஞாநக்ரியாச பஜநா" இத்யாதிகளும். ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டது - கீழ்; இதில் - அபராதத்தை முன்னிடுகிறது.

"நஞ்சு, அரவம்" என்ன வமைந்திருக்க, (நஞ்சு சோர்வதோர் வெஞ்சினவரவம்) என்கிற தென்னென்றால்; (ரு) "வாயவனை யல்லது

(க) வி-பு-ரு-எ-கச. (உ) ஸ்தோ-ர-உஉ. (ங) ஸ்தோ-ர-உங.
(ச) (ரு) க-திரு-கக.

வாழ்த்தாது" என்றும், (க) "సాజీహ్వా - ஸாஜிஹ்வா" என்றும் - அவ னைச்சொல்லி உஜ்ஜீவிக்கக்கடவ வாயைக்கொண்டு, பிறருடைய நாசத் துக்குப் பரிகாரமான நஞ்சையுமிழ்ந்து கொண்டாய்த்து வருகிறது; இவ்வாக்கைக்கொண்டு கிடீர் "சரணம்" என்றதென்கைக்காக. இதில் பலித்த தென்னென்னில்; சரணாகதிக்கு அர்ஹரல்லாதா ரில்லை என் கைக்காக. (வெஞ்சினம்) அத்விதீயமான சினம். ஹ்ருதயத்திலே கிடந்தபோது பாதக (బాధక)மாகாதிறே. சினமுண்டானாலிறே உமி ழுவது. "சீற்றமுண்டு" என்கிறதுக்கு எதிர்த்தட்டாகை. (அரவம்) கீழ்ச்சொன்னவை பூஷணமாம்படியான ஜந்மம். (உ) "సర్పజాతిరియం క్రూరా - ஸர்பஜாதிரியம் க்ரூரா".

(வெருவிவந்து) சத்ருப(ஃ)ய பீ(ஃ)தனாய்க் கிடீர்வந்தது. (நின்சர ணென) நீ எனக்குப் புகலாகவேணும் என்ன. அதுதான் உக்திமாத் ரம். (சரணாய்) பெரியதிருவடிக்கு ப(ஃ)க்ஷ்யமாக ப்ராப்தமாயிருக்க, அத்தையும் தவிர்த்தான். "பண்ணின சரணாகதிதானேது" என்று நெகிழாதே, "மித்ரபாவமே யமையாதோ!" என்று ரக்ஷகனாய்.

(நெஞ்சிற்கொண்டு) "இத்தனை தண்ணியனா யிருக்கிறவனுக்கு நாமல்லது வேறு புகலிடமில்லை" என்று நெஞ்சிலே கொண்டு. அதி கார பூர்த்தியும் சரணாகதி பூர்த்தியுமன்றே பல (ఫల) ப்ரதமாவது; சரண்யனுடைய நினைவேயிறே. இங்ஙனல்லாதவன்று, ஸ்ரீ பரதாழ் வான் ப்ரபத்தியும் பலிக்க வேணுமே.

(நின்னித்யாதி) பெரிய திருவடிகையிலே காட்டிக்கொடுத்து அவனையிட்டு ரக்ஷிப்பித்தாய். ஈஸ்வர ஹ்ருதயத்துக் கொரு ப்ரிய மிறே யிது. (ங) "నక్షామి - நக்ஷமாமி" (ச) "నత్యజేయమ్- நத்யஜே யம்" என்கிற இவ்விரண்டும் சேரவிடவேணுமே இவனுக்கு. சரணா கதனைக் கைவிடவொண்ணாது; ஆஸ்ரிதவிஷயத்தில் அபராதம் பொ றுக்கவொண்ணாது; தன்னை ப(ஃ)க்ஷிக்கவந்த திருவடியை எதிரிடுவ தும் செய்யாதே, வேறொரிடத்தில் போவதும் செய்யாதே, தன்னைச் சரணம்புக்க ஸுமுகன் பண்ணிற்றேதேனு மபராதமுண்டோ?*நக்ஷ மாமி யாவதென்னென்னில்; ஈஸ்வர ஹ்ருதயமென்றொன்றுண்டு என் றாராய்ந்து பார்த்தால், ஜகத்தையடைய ஆஸ்ரிதார்த்த மென்றாய்த்தி

(க) (உ) (ங) வராஹபுரா.
(ச) ரா-யு-க அ-ங.

ருப்பது; அப்படியிருக்க, பெரியதிருவடிக்குத் தான் நியதாஹாரனு யிருக்கச்செய்தே "அது தலைக்கட்டாதே போருவதே!" என்று திரு வுள்ளம் சிவீலென்றிருக்குமிறே. வாலி, "நீரென்னைக் கொன்றதென்" என்ன; "ப்ராத்ருபார்யாபஹாரம் பண்ணினாய்" என்று அவனுக்குக் குற்றமாகச் சொன்னவர்தாமே, அக்குற்றம் மஹாராஜர் பக்க லுண்டா யிருக்க, "அது சொன்னாருண்டாகில் கண்டவிடமெங்கும் கழுமலை யாக்குவேன்" என்றாரிறே.

"ரக்ஷயாமி" "ரத்யஜேயம்" என்கிற இரண்டும் சேருகிறபடி யென்னென்றால்; நம்மைச் சரணம்புகுந்த இவன் நம்கீழே கிடக்கிறா னென்றிருக்கை யன்றிக்கே, பெரிய திருவடிகையிலே காட்டிக்கொடு த்து அவனை யிட்டிறே ரக்ஷித்தது. தானேயிட்டுக்கொண்டு ரக்ஷித்தா லும் அவன் துணுக்குத் துணுக்கென்கை போகாதிறே; "தானே ரக்ஷிக்கவல்லனாயிருக்க நம் கையிலே காட்டித்தருவதே!" என்று, இவ னைக் கைக்கொண்டபோதே அவன் பசியும் தீர்ந்தது. இனி இருவர்க் கும் அந்யோந்யம் ரக்ஷ்யரக்ஷக பாவ (ஃ)மிறே யுள்ளது; பாத்ய (ஃ)பாதக (ஃ) ஸம்பந்தம் போய்த்தே. முன்பு ஸஹஜசாத்ரவ முண்டேயாகிலும், பகவதாஶ்ரயணம் பண்ணினால் ஒரு நீராய்விடு மித்தனையிறே.

(நின்னஞ்சிறைப் பறவை) தன்கையிலே காட்டிக்கொடுத்தால் ரக்ஷிக்க வேண்டுகிறது சேஷியினுடைய நினைவே நடக்கவேண்டுகை யாலே யிறே. சேஷபூத ரிருவர்க்கும் வந்த விரோதத்துக்கு சேஷி யுடைய முகமிறே வாடுவது. (க) "రామమేవానుపశ్యన్తో నాభ్యహింసన్ పరస్పరమ్ - ராமமேவாநுபஶ்யந்தோ நாப்யஹிம்ஸந் பரஸ்பரம்" என் னக்கடவதிறே. (அடைக்கலம் கொடுத்தருள்செய்த தறிந்து) உணர் ந்து நோக்கும்படி பண்ணி. (அருள்) (உ) "அவன் செய்யும் சேமம்" என்கிறபடியே ஒருநாளும் பிரியாதபடியாய்ந்துச் செய்துகொடுத்தது.

அவன் சத்ருபி(ஃ)தனாய்வந்து சரணம்புக, அவனை நோக்கினோய்; நீரார்க்கு பயப்பட்டு நம்மைச்சரணம் புகுகிறீரென்ன (வெஞ்சொலா ளர்கள்) அவர்கள்செய்யும் செயல்கள் பொறுக்கலாய்; அவர்கள் பாசு ரம் கிடீர் பொறுக்கவரிது. (நமன்றமர்) நாலுமூன்று சாஸநம் மறுக் கும்படி அவனுக் கந்தரங்கரானவர்கள். (கடியர்) வேஷம் பொறுக்கப்

(க) ரா-யு-கஙக-கOஉ. (உ) தி-வாய்-எ-ரு-கO.

போகாது. (கொடிய செய்வனவுள) ஆஶ்ரயாநுரூபமாக வன்றிக்கே, பாபாநுரூபமாக நலியாநிற்பர்கள். (உள) பாபத்துக் கவதியுண்டாகி லிறே இவர்கள் செயலுக்கவதியுண்டாவது.

(அதற்கு) யமபடருடைய கொடுந்தொழில்களுக்கு. (அடியே னஞ்சிவந்து)சேஷபூதனைக்கும் யமாதிகளுக் கஞ்சுகைக்கு மென்ன சேர்த்தியுண்டு. (௧) "భయం భయానాం - பயம் பயாநாம்" இத்யாதி. (நின்னடியிணை யடைந்தேன்) யமன்றனஞ்சி (உ) "పరిహర-பரிஹர" என்னும்படியான உன் திருவடிகளை ஆஶ்ரயித்தேன்.

(அணிபொழி லித்யாதி) அநுபவ விரோதிகளைப்போக்கி ஆஶ்ரி தரை அநுபவிப்பிக்கைக்காக வன்றே இங்குவந்து சாய்ந்தருளிற்று.

---

**அரு.**—நாலாம்பாட்டு. (நஞ்சித்யாதி)பகவத்விஷயீகார பல(ஃல)மான கைங்கர்யந் தானிரண்டு-இவ்விபூதியில் கைங்கர்யம், அவ்விபூதியில் கைங் கர்யம்; அதில், இவ்விபூதியில் கைங்கர்யத்துக் கிடைச்சுவரான இந்த்ரிய வஶ்யதையைச் சொல்லுகிற மூன்றும்பாட்டை ப்ரதாநமாக்கி பேடிகாஸங் கதி காட்டினார்-கீழ்ப்பாட்டால்; அவ்விபூதியில் கைங்கர்யத்துக் கிடைச்சுவ ரான தேஹஸம்பந்தத்தை யறுத்துத் தரச்சொன்ன நாலாம்பாட்டை ப்ர தாநமாக்கி பேடிகாஸங்கதி விசேஷத்தை யருளிச்செய்கிறார் (விஷயீகார மித்யாதி). (தேஹஸம்பந்தத்தை) என்றது - தேஹஸம்பந்த மூலமான பாபத்தை யென்றபடி.

பாட்டுக்கெல்லாம் தொகுத்த தாத்பர்யம் (ஸாமுகனுக்கித்யாதி). இப் போது, "நஞ்சு சோர்வதோர்" இத்யாதி விசேஷணம் ஸாமுகனுடைய விபூதி விரோதித்வம் தோற்றுகைக்காக வென்று கருத்து. அன்றிக்கே, "நஞ்சு சோர்வதோர்" இத்யாதி விசேஷணத்தாலே பலித்த ஸ்வநிகர் ஷாநு ஸந்தாநம் செய்தருளுகிறாரென்று திருவுள்ளம் பற்றி, மூன்றுபாட் டிலும் விஷயீகாரமும் கைங்கர்யமும் விரோதி நிவ்ருத்தியும் ப்ரார்த்தித் திருக்கவும், இரங்காமைக்கடி, தம்முடைய அபராதமாக வேணுமென்றெ ண்ணி, மீளவு மருளை ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கத்யந்தரம் சொல்லுகி றார் (சரணமித்யாதி); இங்ஙன் ஸங்கத்யந்தர மென்றுவிடில், "விரோதி நிர ஸநத்துக்கு நிகர்ஷம் முன்னிடவேண்டுவதில்லை" என்று கீழ்ப்பாட்டி லவ தாரிகையிற் சொன்னது சேராதிறே. (இத்யாதிகளும்) என்றது - ஆழ்வா னருளிச்செய்த ஶ்லோகங்களு மென்றபடி; உண்டிறே என்று சேஷம். மீளவும் ஆகிஞ்சந்யத்தை முன்னிட வேண்டாவோ வென்ன வருளிச்செய் கிறார் (ஆகிஞ்சந்யத்தை யித்யாதி).

---

(௧) வி-பு-க-கஎ-௫௬. (உ) வி-பு-ரு-எ-௬௪.

"சோர்வது" என்றதினர்த்தம் (உமிழ்ந்துகொண்டு) என்றது. மூந்தின ஸங்கதிக்குச் சேர "நஞ்சு" இத்யாதிக்கு ப்ரஸ்நபூர்வகம் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதிலித்யாதி); தம்முடைய நிகர்ஷம் முன்னிடுகைக்கென்று கருத்து. "வெஞ்சினம்" என்று இத்தைச் சொல்லுவானேன், "நஞ்சுசோர்வது" என்றபோதே ஸித்தமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (ஹ்ருதயத்திலே யித்யாதி). "வெம்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (சீற்ற மித்யாதி); ரக்ஷணோபயோகியன்றிக்கே க்ரூரமென்று கருத்து.

"சரணென நெஞ்சிற்கொண்டு" இத்யாதி அமைந்திருக்க, "சரணாய்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பெரிய வித்யாதி).

வெருவி வந்ததும் சரணென்றதுமானவற்றை நெஞ்சிற்கொண்டென்ன வொண்ணாதோ, "நஞ்சு" இத்யாதியால் பலித்த நிகர்ஷத்தை "நெஞ்சிற்கொண்டு" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (அதிகாரி இத்யாதி வாக்யத்வயத்தாலே).

பெரிய திருவடிகையில் காட்டிக்கொடுப்பானென்னென்ன (ஸர்வேத்யாதி). அவனைக்கொண்டு ரக்ஷிப்பிக்கை ப்ரியமாகைக்கு ஹேதுவேதென்ன வருளிச்செய்கிறார் (ரக்ஷமாமி யித்யாதி). அநாஸ்ரிதனை ஸமுகன் செய்ததை அபராதமாகக்கொண்டு பெரிய திருவடியுடைய கார்யத்தை அநபராதமாக நினைத்தும் ரக்ஷிக்கையாலே ஆஸ்ரிதா குற்றம்பாரானென்கை பலிக்கையால், அதுக்கொரு ஸம்வாத மருளிச்செய்கிறார் (வாலி இத்யாதி). (கழுமலே) என்றது - வெட்டிப்பொகட்ட விடத்தில் தின்ன வந்து மலைமலையாகக் கழுக்களிருக்கும்படி யென்கை.

தான் ரக்ஷியாமையாலே *ரக்ஷமாமிக்கும் சேரும்; அவனைக் கொண்டாகிலும் ரக்ஷிக்கையாலே *நத்யஜேயத்துக்கும் சேருமென்றபடி. அவன் நினைவைப்பின் சென்று ரக்ஷியாவிட்டால் விரோத மென்னென்ன வருளிச்செய்கிறார் (தானேறிட்டித்யாதி). திருவடி ரக்ஷித்ததுக்கடி யென்னென்ன வருளிச்செய்கிறார் (தானே யித்யாதி). ... . ... (௪)

மூ.—மாக மா நிலம் முழுதும் வந்திறைஞ்சும்
மலரடிக்கண்ட மாமறையாளன்
தோகை மாமயிலன்னவரின்பம்
துற்றிலாமையிலத்த விங்கொழிந்து
போகம் நீயெய்திப் பின்னும் நம்மிடைக்கே
போதுவாயென்ற பொன்னருளெனக்கும்
ஆகவேண்டுமென் றடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே (௫)

| பதம். | உரை. |
|---|---|
| மா | பரந்த |
| கம் | பரமாகாசத்திலுள்ள நித்யஸூரிகளும் |
| மா | விசாலமான |
| நிலம் | பூமியோடுகூடின அண்டாந்தர்வர்த் |
| முழுதும் | எல்லாரும் [திகளும் |
| வந்து | திரண்டுவந்து |
| இறைஞ்சும் | ஆஶ்ரயியாநின்ற |
| மலர் | புஷ்பம்போன்ற |
| அடி | (உன்) திருவடிகளை |
| கண்ட | ஸாக்ஷாத்கரித்த |
| மா | மஹத்வமுடைய |
| மறையாளன் | கோவிந்தஸ்வாமி யென்னும் ப்ராஹ்மணனைக் குறித்து, |
| அத்த | அப்பா! (தபஸ்ஸுபண்ணும்காலததில்) |
| நீ | நீ, |
| தோகை | தோகையை யுடைய |
| மா | சிறந்த |
| மயிலன்னவர் | மயிலோடொத்த மயிர்முடியை யுடைய ஸ்த்ரீகள் கலவியிலுண்டான |
| இன்பம் | ஸுகத்தை |
| துற்று இலாமையில் | அநுபவியாமையால், |
| இங்குஒழிந்து | (சிலகாலம்) இங்கேயிருந்து [த்தை |
| போகம் | ஸ்த்ரீஸம்போக ஸுக |
| எய்தி | அநுபவித்து, |
| பின்னும் | அதுக்குமேலே |
| நம்மிடைக்கே | நம்மருகே |
| போதுவாய் | வரக்கடவாய் |
| என்ற | என்றருளிச்செய்த |
| பொன் | ஶ்லாக்யமான(ஆஶ்ரித ஹ்ருதயாநுஸாரியான) |
| அருள் | க்ருபையானது |
| எனக்கும் | என்விஷயத்திலும் |
| ஆகவேண்டுமென்று | உண்டாகவேணுமென்று |

அடியிணை யடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்தம்மானே!(ரு)

வ்யா. — அஞ்சாம்பாட்டு. (மாகமித்யாதி) விஷயீகாரத்தைச் சொல்லி, கைங்கர்யத்தைச் சொல்லி, கைங்கர்யத்தினுடைய உபயாகாரமான விரோதிகளைப் போக்கித் தந்தருளவேணும் என்றது-கீழ்; இதில், கோவிந்தஸ்வாமியுடைய கருத்தறிந்து கார்யம் செய்தாப்போலே என்னுடைய கருத்தறிந்து கார்யம் செய்யவேணுமென்கிறார். கீழ்நின்ற நிலைக்கு இவர்க்குக் கருத்தாவது - இந்த்ரிய வஶ்யதைக்கும் யமவஶ்யதைக்கு மடியான தேஹஸம்பந்தத்தை அறுத்துத் தரவேணுமென்கை. (க) "மரணமானால்" என்கிறபடியே தன்னடையே சரீரவிஶ்லேஷம் வித்திக்குமாகில் அபேக்ஷிக்கிற தென்னென்னில்; க்ரமப்ராப்தி பற்றாத த்வராதிரேகத்தாலே.

(மாக மித்யாதி) கோவிந்தஸ்வாமி யென்பாரொரு ப்ராஹ்மணன், இதிஹாஸபுராண ஶ்ரவணத்தாலே, க்ருஷ்ணனுடைய பால்ய

(க) தி-வாய்-௯-௩௦-௫.

சேஷ்டிதங்களையும் ராஸக்ரீடாதிகளையும் ஸாக்ஷாத்கர்த்துகாமனாய், "முன்பு (க) 'காணவாராய்' என்றெண்ணியிருப்பார்க்கு (உ) 'ప‌రిత్రాణాయ సాధూనామ్ - பரித்ராணாய ஸாதூநாம்' என்கிறபடியே காட்டிக்கொடுத்துப் போருமவனன்றோ, நமக்கு மவ்வாசையுண்டானால் ஸித்தியாமையில்லை, தத்தர்த்த(ఉదర్థ)மாக அர்த்திப்போம்" என்று சரீரத்தை ஒறுத்து தபஸ்ஸுபண்ண; இவன் நினைவின்படியே க்ருஷ்ணாவதாரத்திற் படிகளை யடைய ஸ்ருஷ்டித்துக்காட்டி அநுபவிப்பித்து, "உனக்கு வேண்டுவதென்?" என்று கேட்டருள; "கூடப்போந்து இப்படி தேவரை அநுபவிக்கு மித்தனை" என்ன; நீ தபஸ்ஸுபண்ணுகிறபோது விஷயவிதூரனாய் அந்நபாநாதிகளையும் கழித்து உடம்பையும் நாரும் நரம்புமாக்கிக் கொடுபோந்தாய், இங்கே இருந்து நெகிழ்ந்த போகங்களையும் கழித்துவா" என்று அவன்கருத்தறிந் தருளிச் செய்தாப்போலே, என்கருத்தறிந்து கார்யம் செய்யவேணுமென்கிறார்.

இவ்வர்த்தம் சாப்தமன்றிக்கே யிருக்க இவருக்கிது கருத்தாகச் சொல்லுகிறது-பாகரண பலத்தாலும், அர்த்தக்ரமத்தாலும். (ந) "நாசமானபாசம்" என்றும், (ச) "போந்தேன்" என்றும் சொல்லுகிற இவர்க்கு இது கருத்தாக வேணுமிறே.

(மாகமித்யாதி) உபய விபூதியிலுள்ளாரும் வந்து இல மயிக்கும்படியான திருவடிகளைக் கண்ட. இவ்வாஸ்ரயணம், தர்மிப்ரயுக்தமல்ல, க்ருஷ்ணாவதார ப்ரயுக்தம். பரமபதநிலயரான ஸூரிகளாஸ்ரயிக்கும்படி யென்னென்னால்; (நு) "ఆచ్ఛాద్యానుయయౌ శేషః ఫణైరానక దుందుభిమ్ - ஆச்சாத்யாநுயயௌ சேஷ: பணைராநக துந்துபிம்" என்றும், (சு) "வினதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின் கீழ்வருவானை" என்றும் சொல்லாநின்றதிறே. திவ்யாயுதங்களுங்கூட கர்ப்ப(గర్భ)வாஸம் பண்ணியிறே பிறந்தது. (மாநிலம்) இடையரோடு, அவர்கள்தான் வஸிஷ்டாதிக ளென்னும்படியான பசுக்களோடு, கன்றுகளோடு, பீஷ்மாதிகளோடு வாசியற ஆஸ்ரயித்ததிறே.

(புழுதும்) உபரிதந லோகங்களிலுள்ளாரும். மத்யராத்ரத்திலே பாலமுதுசெய்து சாய்ந்தருளப் புகுகிறவளவிலே, இந்த்ரன் திரு

(க) தி-வாய்-அ-நி-உ. (உ) கீதை-ச-அ. (ந) க-ந-அ.
(ச) சு-ந-ச. (நு) வி-பு-நி-ந-கஎ. (சு) நா-தி-க ச-ந.

வாசலிலே வந்துநின்று, புறப்பட்ட காவலிகளுக்கு "நான் வந்தேன் என்று விண்ணப்பம் செய்யவேணும்" என்று உள்ளேபுகுந்த இந்த்ரன், "நரகன் என்னுடைய சதுர்த்தந்தியையும் கரவேணுமென்று நெருக்காநின்றான்" என்ன, "கையைத்தா" என்று எழுந்திருந்து ஸத்யபாமைப் பிராட்டியோடுங் கூடப் பெரியதிருவடி தோளிலே ஏறி எழுந்தருளி நரகவதம் பண்ணினானென்னா நின்றதிறே (௧) "𑌪𑌾𑌦𑍇𑌨 𑌕𑌮𑌲𑌾𑌭𑍇𑌨 - பாதேந கமலாபேந" இத்யாதிகளாலே பரஹமருத்ராதிகள் சரம சொல்லாநின்றதிறே. (௨) "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌮𑍀𑌶𑌂 𑌕𑌮𑌲𑌾𑌸𑌨𑌸𑍍𑌥𑌮𑍍 - ப்ரஹ்மாணமீசம் கமலாஸநஸ்தம்" என்று திருமேனியிலே காட்டுவதும் செய்தானிறே.

(மலரடி) நிரதிசய போக்யமான திருவடிகள். பசுக்களின்பின்னே போவது, தேர்த்தட்டிலே நிற்பது, தூது நடப்பதாகிற வளவிலே கிடீர்! ஸர்வ ஸமாஶ்ரயணீயமாய்த்தது. (கண்ட) எல்லாருமொக்க இருந்தவிடத்தே சென்று ஆஶ்ரயிக்க வேண்டும்படியான திருவடிகளை யாய்த்துத் தானேவர இவன் கண்டது. (மாமறையாளன்) சாஸ்த்ரத்தாலேயாதல் உபதேசத்தாலேயாதலன்றிக்கே, கண்ணாலே காணப்பெற்ற வைதிகாக்ரேஸரன்.

(தோகையித்யாதி) கண்டவளவிலே "கூடப் போருமித்தனை" என்ன; "அது பின்னைசெய்கிறாய்" என்ன; "அதுக்கடியென்" என்ன; "இழந்த போகங்களை புஜிக்க வேணுங்காண்"; என்ன; "அதுதான் வேண்டுகிறதென்" என்ன; "நீ தபஸ்ஸு பண்ணுகிறபோது இதர விஷயங்களிலே ஸங்கம் கிடக்கச்செய்தே அவற்றைச் செறுத்து புஜியாதே போந்தாய்காண்" என்றான். மோக்ஷப்ரதனான ஸர்வேஶ்வரன்தன்னை யொழியச்செல்லாமையை யுடையராய், கூடப்போவோமென்பாரளவில் "போதரே" என்னுமித்தனை போக்கி, விட்டுப்போவானொருத்தனல்லன். அவன்பக்கலிலே அதிப்ரவணனாயிருக்குமவன், அவனை யொழிய விஷயப்ரவணமாக்கும ஸம்ஸாரத்திலிருப்பை இசையான். ஆனால் இவனை "இரு" என்கைக்கும், இவன் இருப்பை இசைகைக்கு மொரு கருத்துண்டாகவேணும், அதாவதென்னென்னில்; ஈஶ்வரன் நினைத்தால் விஷயப்ரவணரையும் இவ்வாஸனை யறுத்துக்கொடுபோக சக்தனென்னு மிடமும், எத்தனையே

(௧)

(௨) கீதை-௧௧-௧௫.

னும் பகவத்ப்ரவணரையும் தேஹ ஸம்பந்தத்தின் வழியே கொடு போய் விநாசத்தை பலி(ஃபலி)ப்பிக்கு மென்னுமிடமும் வெளியிட்டது. ஸாதுக்களுக்கடைய உபமாநபூமியாயிருக்கிற ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானிறே எதிரப்பு ஸோத்தான். இதுக்கு நேரே உதாஹரணம்-ஸ்ரீ மாலாகார ரளவிலே செய்ததிறே;- மாலாகாரர் க்ருஹத்திலே புக்கு, பூத்தொடுக்கிறவனை "அய்யே! நீ எங்களுக்குப் பூவிடவல்லையே!" என்ன; அவனும் இவ்வடிவு கண்டபோதே "கம்ஸன் வெட்டிவைத் தானாகில் வெட்டிவைக்கிறான், இம்மாலைகளை இங்கே சாத்துவோம்" என்று சாத்த; ப்ரீதனாய், "இவனை (க) *சூட்டு நன்மாலைப்படியே ஒரு தேசவிசேஷத்தே கொடுபோய்ப் பூவிடுவித்துக்கொள்வோமோ? இங்கே வைப்போமோ?" என்று விமர்சித்து, "கம்ஸனை மதியாதே நம்மை ஆதரித்த இவனை ஐஹிகபோகங்களை புஜிப்பித்துப் பின்னை அவ்வருகே கொடுபோகிறோம்" என்று வைத்தானிறே.

(உ) [భుక్త్వాచ విపులాన్ భోగాన్ - புக்த்வாச விபுலாந் போகாந்]கம்ஸனிட்ட சோற்றளவன்று காண் நான் தருவது. [త్వమన్తే - த்வமந்தே] இவன் கொடுக்கிற போகங்கள் தான் அளவுபட்டவையல்லாமையாலும், போக்தாவானவன் ஓரளவிலே மீளுமவனல்லாமையாலும், இதுக்கொரு முடிவில்லையிறே; (ந) "నజాతు కామః కామానా ముపభోగేన శామ్యతి। హవిషా కృష్ణవర్త్మేవ భూయ ఏవాఽభివర్ధతే- நஜாதுகாமஃ காமாநாமுபபோகேந சாம்யதி। ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூய ஏவாபிவர்த்ததே" (ச) యత్పృథివ్యాం వ్రీహియవం హిరణ్యం పశవస్స్త్రియః। ఏకస్యాఽపి నపర్యాప్త మితి మత్వా శమం వ్రజేత్ -யத் ப்ருதிவ்யாம் வ்ரீஹி யவம் ஹிரண்யம் பசவஸ்ஸ்த்ரியஃ। ஏகஸ்யாபி நபர்யாப்த மிதிமத்வா ஶமம் வ்ரஜேத்" என்கிறபடியே - இவற்றினுடைய ஸ்வபாவத்தை அநுஸந்தித்தால் பிரியலாம்படி யன்றிக்கே யாய்த்திருப்பது. இங்ஙனே இருக்கச்செய்தேயும், பகவத் ப்ரவணனாயிருக்கு மவனுக்கு நினைத்தபோது கால்வாங்கலா யிருக்கும். ஸௌபரி, மத்ஸ்யதர்ஶநத்திலே ஐம்பது வடிவுகொடு புஜித்து, தானே ஓரளவிலே அருவருத்து மீண்டானிறே. கர்மமும் ஜ்ஞாநமும் இரண்டுங்கூட நடக்கிறதிறே. கர்ம வாஸநை, விஷயங்களிலே மூட்டும்; ஜ்ஞாநம் அருவருத்து மீளப்ப

(க) தி-வி-உக. (உ) வி-பு-ரு-கக-உரு (ந) பாரதம்-ஆதிப-எக-கர. (ச) பாரதம்-ஆதிப-எக-ருந.

ண்ணும். ஔபாதிக கர்மத்தை ஸ்வாபாவிக ஜ்ஞாநம் மேலிடுமிறே. [ "மத்ப்ரஸாதாத் ... ஸ்மரணம் ப்ராப்ய - மத்ப்ரஸாதத: மயாநு ஸ்மரணம் ப்ராப்ய"] உபாஸகனுக்கு நம்ப்ரஸாதத்தாலே அந்திம ஸ்ம்ருதி யுண்டாமாபோலே, நீயும் நம்முடைய அந்திமஸ்ம்ருதியைப் பெற்றென்னுதல்; நீ நினைக்கமாட்டாத குறைதீர நாமே நினைக்கக்கட வோம். ஸ்வீகாராத்யவஸாய மிறே அத்தலைக்கு வேண்டுவது.

(தோகைமாமயிலன்னவ ரின்பம்) தோகையை யுடைத்தான ஸுந்தரமான மயில்போலே இருக்கிற ஸ்த்ரீகள். இத்தால் - தூரஸ்த்தரையும் ஆகர்ஷிக்கும்படியான மயிர்முடியையும் நடையையும் சொல்லுகிறது. இப்படி அநுபவித்தால் அது தன்னிலொன்றும் காணவொண்ணாதே ஸ்நாநோபகரணங்களைக் கொண்டு மீளும்படியிறே இருப்பது. (அன்னவரின்பம) ஆராய்ந்தால் அநுபாவ்ய மொன்றுமில்லை. "தோகை மாமயிலன்னவரின்பம்" என்று ஒன்றாக ஆக்ஷேபித்துச் சொல்லுகிறார். (௧) "தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும் நோயே பட்டொழிந்தேன்" என்றவர் வார்த்தையிறே; முரிக்குக் கிழக்கென்னிலும் இவர்ஈரவீறுதான் இங்ஙனல்லதிராமையாலே யாகல். (துற்றிலாமையில்) கலவிரஸத்தை யநுபவியாமையால்.

(அத்த) தான் நியமித்தபடியே அவன் செய்கைக்காக, அப்பனே! என்று அநுராயித்துச் சொல்லுகிறார். (இங்கொழிந்து) இந்நிலத்திலே சிலநாளிருந்து. (போகம் நீயெய்தி) இழந்த போகங்களையடைய புஜித்து. (நீயெய்தி) நினைத்தபோது ‡கால்வாங்கவல்ல அளவுடைய நீயல்லையோ இதிலதிகரிக்கிறாய். நீ தபஸ்ஸு பண்ணுகிற நாளில் விட்டவிஷயங்கள் இப்போது உனக்கு ப்ரதிபந்தகங்களாகவற்றோ? (பின்னும் நம்மிடைக்கே போதுவாய்) நினைத்தபோது மீட்கவல்ல தன் வைலக்ஷண்யம் தோற்றச சொல்லுகிறார். நேரே வகுத்த விஷயமான நம்பக்கலிலே வரக்கடவை. (என்ற பொன்னருள்) ஸ்ப்ருஹணீயமானவருள். (எனக்கு மாகவேண்டுமென்றடியிணையடைந்தேன்) அவன் கருத்தறிந்து கார்யம் செய்தாப்போலே, என் கருத்தறிந்து கார்யம் செய்யவேணும்.

---

(௧) ௧-௯-௧.  ‡ (பா) மீட்கவல்ல.

(அணிபொழிலிதயாதி) ஆஶ்ரிதாநுரூபமாக அபேக்ஷிதங்களை ராய்ந்து செய்கைக்காக வன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று. ஐஶ்வர்யம் வேணுமென்பார்க்கு அத்தைக் கொடுக்கவும்; தேஹத்தைப் பூண்கட்டிக்கொடுப்பார்க்கு அதனைச்செய்யவும், தேஹஸம்பந்தத்தை அறுத்துத ராவேணுமென்பார்க்கு அத்தைச்செய்யவு மன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று. ... ... ... ... (ரு)

அரு —அஞ்சாம்பாட்டு. (மாகமித்யாதி) கோவிந்தஸ்வாமியை த்ருஷ்டபோகஙகளிலே மூட்டிப் பின்பு மோக்ஷம் கொடுத்தாப்போலே தம்மை த்ருஷ்ட போகங்களிலே மூட்டச்சொல்லுகிறரோ வென்ன; அன்றென்கிறர் (கீழ்நின்ற வித்யாதி).

ஸங்கதி யருளிச்செய்தாராய், கோவிந்தஸ்வாமி வ்ருத்தாந்தத்தை விவரியா நின்றுகொண்டு தாத்பர்ய மருளிச்செய்கிறர் (கோவிந்தேத்யாதி); திருமலையிலே வர்த்திக்கிற கோவிந்தஸ்வாமி, மோக்ஷார்த்தமாகவுமன்றிக்கே, விஷயங்களிலே அருசிபிறந்து மன்றிக்கே, கேவலம "க்ருஷ்ணனுடைய சேஷ்டிதங்களைக் காணவேணும்" என்று தபஸ்ஸு பண்ணுகையாலே, விஷயங்களிலே ருசி விடேந்ததாய், அத்தையறிந்து "அநுபவித்துவா" என்று வைத்தானென்று கருத்து.

சாப்தமானவர்த்தம் த்ருஷடாந்த பல(ஃல)த்தாலே த்ருஷடபலா(ஃலா)பேக்ஷயா யிருக்க,அதுக்கு ப்ரதிகோடியாக, தேஹஸம்பந்தத்தை அறுத்துத்தரவேணுமென்கை கருத்தாகக் கூடுமோ வென்ன வருளிச்செய்கிறர் (இவ்வாத்தமித்யாதி).(ப்ரகரணபலம்)என்றது-விரோதிநிவ்ருத்தி சொல்லுகிறப்ரகரணபல மென்றபடி. (அர்த்தக்ரமம்) என்றது - பாபபல(ஃல)மான இந்த்ரிய வஶ்யதையும் யமவஶ்யதையும் நிவ்ருத்தமாக வேணுமென்று ப்ரார்த்தித்த வநந்தரம் ப்ராரத்திக்கத் தக்கது ப்ராப்தி ப்ரதிபந்தகமான தேஹஸம்பந்த நிவ்ருத்தியே சொல்லத்தக்கதென்கிற அர்த்தக்ரமம் என்றபடி.

(தர்மிப்ரயுக்தமல்ல) என்றது-(க) *மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் கண்ணனை திருவேங்கடமுடையானைப் பற்றியல்ல வென்றபடி. (ஆநகதுந்துபிம்) வஸுதேவனை.

(சதுர்த்தந்தியையும்) என்ற சகாரம்-அதிதி (ஶஹஸ)குண்டலங்களையும் வருணசத்ர(ஃ)த்தையும் கொண்டுபோனனென்னுமத்தை ஸூசிப்பிக்கிறது.

கண்ணனைக்கண்ட என்ன வமைந்திருக்க, அடிகளைச் சொன்னதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறர் (பசுக்களி னித்யாதி). "வந்து" என்ற

(க) தி-வாய்-க-அ-ங.

பதத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிருர் (எல்லாரு மித்யாதி). "மா" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிருர் (சாஸ்த்ரேத்யாதி).

உக்திப்ரத்யுக்தி ரூபேண தாத்பர்ய மருளிச்செய்கிருர் (கண்டவித்யாதி). மலரடியைக் கண்டவனை இருக்கச்சொல்லக்கூடுமோ, இவன்ருனிருப்பனே என்னும் சங்கையைக் கிளப்பிப் பரிஹரிக்கிருர் (மோக்ஷேத்யாதி, வெளியிட்டது இத்யந்தம்). அப்ரதிஹத ஸ்வதந்த்ரனானவன் நசையறுத்துக் கொண்டுபோக வல்லனுகிலும், தேஹ ஸம்பந்தத்தால் இவனுக்குப் பிறந்த நசையைப் பின்சென்று நாலுநாளிருந்து வரட்டும் என்று வைத்தானென்று கருத்து.

பகவத்ப்ரவணரை தேஹம் தன்வழியே இழுத்தவிட முண்டோவென்ன வருளிச்செய்கிருர் (ஸாதுக்களுக் கித்யாதி). தேஹஸம்பந்தம் பகவத் ப்ரவணரையும் தன்வழி இழுத்துக்கொண்டதுக்கு உதாஹரணங்காட்டி, விஷய ப்ரவணனையும் தன்னைக்காட்டி இதரவிஷய ப்ராவண்யத்தை அறுத்துக்கொண்டு போக சக்தனென்னு மதுக்கு உதாஹரணங்காட்டுகிருர் (இதுக்கித்யாதி). ஸ்ரீமாலாகாரரை விஷய ப்ராவண்யத்தைத் தவிர்த்ததுக்கு உதாஹரணமானுல், த்ருஷ்டபோகங்களைக் கொடுப்பானென்னென்ன வருளிச்செய்கிருர் (மாலாகாரரித்யாதி). இவ்விரண்டையும் அபேக்ஷியாமலிருந்தாலும் ஔதார்யத்தா லிரண்டையும் கொடுத்தானென்று கருத்து.

ஐஹிகபோகத்தை புஜிப்பித்தான் என்கிறதுக்கு ப்ரமாண மெடுத்து வ்யாக்யாநம் செய்தருளுகிருர் (புக்த்வேத்யாதி). "விபுலாந் - விபுலாந்" என்று வைத்தும் "புக்த்வா" என்று காலநியமமும் பண்ணியிருக்க, "அந்தே" என்கிறதுக்குக் கருத்து - ஆசாந்தே (ஆசாந்தே) என்ருக்கி, அதுக்குக் கருத்தருளிச்செய்கிருர் (இவனித்யாதி). ஆசைக்கு முடிவில்லையோ, இப்படி சொல்லுவா னென்னென்ன வருளிச்செய்கிருர் (நஜாதுகாம இத்யாதி). இப்படி ஆசைக்கு முடிவில்லாவிட்டால், இனி "அந்தே" என்கைக்கு முடிவுதா னெங்ஙனே யென்ன வருளிச்செய்கிருர் (யதித்யாதி) ப்ரமாணத்வயத்துக்கும் அடைவே கருததருளிச்செய்கிருர (இவ றறினுடைய வித்யாதி). (கால்வாங்கலாயிருக்கும்) என்றது - பகவத்வைலக்ஷண்யத்தாலும் இவறறினுடைய அல்பாஸ்த்திரத்வாதி தோஷ த்ருஷ்டதையாலும் கால்வாங்கலாமென்கை. கால்வாங்கின விடமுண்டோ வென்ன வருளிச்செய்கிருர் (ஸௌபரியித்யாதி). ஜ்ஞாநாதிகனான ஸௌபரி, விஷயங்களிலே விழுகைக்கும் மீளுகைக்கும் ஹேதுவென்னென்ன வருளிச்செய்கிருர் (கர்மேத்யாதி). இரண்டும் ஹேதுவாகை ஒத்திருக்க, ஜ்ஞாநத்துக்கு ஆதிக்யமேதென்ன (ஔபாதிகேத்யாதி). "த்வமந்தே" என்றதின் சேஷத்தை யெடுத்துத் தாத்பாய மருளிச்செய்கிருர் (மத்ப்ரஸாதத இத்யாதி).

(கடவோம்) என்றவநந்தரம், என்னுதல் என்று சேஷம். அந்திமஸ்ம்ருதி வேண்டாவோ வென்ன வருளிச்செய்கிறார் (ஸ்வீகாரேத்யாதி).

ஆகர்ஷகத்வ மொழிய வேறு பசையில்லையோ வென்ன வருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி). விரக்தரானவர் இப்படி வர்ணிப்பா னென்னென்ன வருளிச்செய்கிறார் (தோகையித்யாதி). (ஆக்ஷேபித்து) நிந்தித்து. அதுக்கு நியாமகமேதென்ன (தாயே யித்யாதி). அன்றிக்கே கவிலக்ஷணத்தாலும் வர்ணிக்கிறாரென்கிறார (முரிக்கித்யாதி). (முரி)-கரை. (அதுக்குக் கிழக்கு) கிழக்குப்பட்ட ஜலம். (என்னிலும்) நிஷ்ப்ரயோஜநத்தைச் சொல்லிலும்.

விஷயங்கள் ப்ரதிபந்தகமாகாதோ என்று அவனுக்குக் கருத்தாக, "நம் "என்றத்தைக் கடாக்ஷித் தருளிச்செய்கிறார் (நினைத்தவித்யாதி).(ரு)

மூ.—மன்னு நான்மறை மாமுனிபெற்ற
மைந்தனை மதியாத வெங்கூற்றன்
தன்னையஞ்சி நின்சரணெனச சரணாய்
தகவில் காலனை யுக முனிந்தொழியாப்
பின்னையென்றும் நின் திருவடிபபிரியா
வண்ணமெண்ணிய பேரருளெனக்கும்
அன்னதாகுமென் றடியிணையடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (௬)

| பதம். | உரை. |
|---|---|
| மன்னு | நித்யமாய் |
| நால் | நாலுவகைப்பட்டதா[ன |
| மறை | வேதங்களை யோதுமவனாய் |
| மா | ஸ்லாக்யமான(அநந்யப்ரயோஜநமான) |
| முனி | த்யாநயோகத்தை யுடையனானருஷியானவன், |
| பெற்ற | தான்பெற்ற |
| மைந்தனை | மார்க்கண்டேய னென்னும் பிள்ளையை |
| மதியாத | (பாகவத புத்ரனென்று) கணிசியாதவனாய் (வந்து கிட்டின) |
| வெம் | அதிக்ரூரனான |
| கூற்றன்தன்னை | யமனை(க்கண்டு) |
| அஞ்சி | பயந்து, |
| நின்சரண்என | நீயே (எனக்கு) அபயமென்றுசொல்ல |
| சரணாய் | (அவனுக்கு) ரக்ஷகனாய்க் கொண்டு, |
| தகவுஇல | தயையில்லாத |
| காலனை | யமனை |
| உக | (அவன்) மங்கும்படி |
| முனிந்து | கோபித்து, |
| ஒழியா | அவ்வளவிலே விடா[தே, |
| பின்னை | அதுக்குமேலே |
| என்றும் | எக்காலும் |

| | | | |
|---|---|---|---|
| நின் திருவடி | உன் திருவடிகளை | எனக்கும் | என்விஷயத்திலும் |
| பிரியாவண்ணம் | விஶ்லேஷியாம லிருக்கும்படி | அன்னதாகும் | அப்படி யுண்டாகவேணும் |
| எண்ணிய | ஸங்கல்பித்த | என்று | என்று நினைத்து |
| பேர் அருள் | (உன்னுடைய) பெரிய க்ருபையானது | | |

அடியிணை யடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்தம்மானே! ௬

வ்யா.— ஆரும்பாட்டு. கோவிந்தஸ்வாமி கருத்தறிந்து அவனுடைய கார்யஞ்செய்தாப்போலே என்கருத்தறிந்து என்னுடைய அபிமதம் செய்யவேணுமென்கிறார்-கீழ்; மார்க்கண்டேயன் ம்ருத்யுபயபீத (ভयभीत)னாய் சரணம்புக, அவனுக்கு ம்ருத்யுவைநிரஸித்து அந்த பய (भय)நிவ்ருத்தியைபபண்ணிக்கொடுத்த வளவன்றிக்கே, ஒருகாலமும் உன்திருவடிகளைப் பிரியாதபடியானபேற்றை அவனுக்குப பண்ணிக்கொடுத்தாப்போலே, என் ஸம்ஸாரபயத்தைப் பரிஹரித்து உன் திருவடிகளை நான் பிரியாதபடியானபேற்றைப் பண்ணித்தந்து, அது நானர்த்திக்க இரப்புக்குக்காரியம செய்ததாய் காலன்கொண்டு மோதிரமிடுமாபோலே பண்ணபபெறவொண்ணாது, என் ஸ்வரூபாநுரூபமான பேறாகிறது - நீ தரப பெறுமது, அது வேணுமென்கிறார்.

(மன்னித்யாதி) "முனிபெற்ற" என்னவமையும், "மன்னு நான் மறைமாமுனி" என்றதுக்குக் கருத்தென்னென்னில்; இபபடிப்பட்ட ஆபிஜாத்யத்தை மதியாதே கிடீர்' வந்து கிட்டிற்றென்கை. நித்யமாய் நாலுவகைப்பட்ட வேதாத்யயநபரனாய்; அதில் சொல்லுகிறபடியே பகவதுபாஸநபரனாய்ப போருகிறவன். அவைதிகமாக உக்த்யுபபத்திகளாலே உபாஸிபபாருமுண்டிறே. அங்ஙனன்றிக்கே, (க) "వేదైశ్చ సర్వైరహమేవ వేద్యః-வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்யஃ" என்கிற வஸ்து உபாஸ்யமென்றறிந்து, உபாஸநபரனாய்ப் போருகிறவன். மஹத்தையாவது - ப்ரயோஜநாந்தரவிதுர (विधुर)மாக (உ) "వాసుదేవస్సర్వమ్ - வாஸுதேவஸ்ஸர்வம" என்கிறபடியே - "எல்லாமவனே" என்று உபாஸிக்கை.

நான்மறையிலே மன்னிப்போருகிறவன். உபாஸகனுக்கு அத்யயநம், (ங) "స్వాధ్యాయ జ్ఞాన యజ్ఞాశ్చ - ஸ்வாத்யாய ஜ்ஞாந யஜ்ஞாஶ்ச" என்கிறபடியே உருவ அநுவர்த்திக்குமிறே. (ச) "స్వాధ్యాయా

(க) கீதை-கரு-கரு. (உ) கீதை-எ-கக. (ங) கீதை-ச-உஅ. (ச)

స్వాధ్యాయాద్ యోగమాసీత యోగాత్ స్వాధ్యాయ మామనేత్ । స్వాధ్యాయయోగ సమ్పత్త్యా పరమాత్మా ప్రకాశతే- ஸ்வாத்யாயாத் யோகமாஸீத யோகாத் ஸ்வாத்யாயமா மநேத் । ஸ்வாத்யாய யோகஸம்பத்த்யா பரமாத்மா ப்ரகாசதே" என்கிறபடியே - வேதவிஹிதமானபடியே யோகாரூடனாகக் கடவனாய், "யோகத்திலே ஸாக்ஷாத்கரிக்கிறவஸ்து கர்மாநுரூபமாக அந்யதாவாகத்தோற்றுகிறதோ, அன்றிக்கே யதாவாகவோ!" என்று அறிகைக்காகப் பின்னையும் அத்யயநபரனைகை. ஆசார்யன் சிஷ்யனைப்பார்த்து (க) "యతో వా ఇమాని భూతాని - யதோவா இமாநி பூதாநி" இத்யாதிகளை உபதேசித்து, "இதில் சொல்லுகிறபடியே உபாஸ்யவஸ்து ப்ரகாசிக்குந்தனையும்போய் தபஸ்ஸுபண்ணு" என்ன; அவனும் தபஸ்ஸுபண்ண; (உ) "అన్నం బ్రహ్మేతి వ్యజానాత్ - அந்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத்" என்கிறபடியே - "அந்நமோ ப்ரஹ்மம்" என்ன; "அதுவும் போதாது, இன்னமும் தபஸ்ஸுபண்ணு" என்ன; *ஆநந்தமயனளவும் தபஸ்ஸுபண்ணிவர, "அதுகாண் ப்ரஹ்மம்" என்று விட்டானிறே. (முனிபெற்ற) ஜ்ஞாநவிபாகதசையிலே பிறந்தவன்.

(மதியாத) பகவத்ஸம்பந்த முடையராயிருக்குமவர்கள் பங்க்தியிலுமகப்பட (ங) "పరిహార - பரிஹர" என்னவேண்டியிருக்க, வைஷ்ணவஸம்பந்த முடையார்பக்கல் கிட்டவொண்ணாதிறே; அப்படியிருக்க, மதியாதே வந்துகிட்டினன். (ச) [నాஸ்యாவர புருஷாః క్షీయన్తే- நாஸ்யாவரபுருஷாः க்ஷீயந்தே] பாகவதனுக்கு வித்யையாலும் ஜந்மத்தாலுமாக ஸந்தாநதவயமுண்டாய்ப் போரக்கடவதிறே; இரண்டு திறத்தார்க்கும் க்ஷயமில்லை யென்கிறது. அணுவாய் நித்யமான ஆத்மாவுக்கு க்ஷயமாகிறது - ஜ்ஞாநஸங்கோசம்; அதுவாராது. இதினுடைய உபப்ரும்ஹணமிறே (ரு) "కులం తారయతే-குலம் தாரயதே". இத்தை அநுவர்த்திக்குமவர்களும் (சா) "எமரேழெழுபிறப்பும்" என்னாநின்றார்களிறே.

(வெங்கூற்றம்) இவனுடைய உத்கர்ஷம் பாராதே தங்களையே பார்த்து, க்ரௌர்யத்தை முன்னிட்டுக்கொண்டாய்த்து வந்தது. (வெங்கூற்றந்தன்னை யஞ்சி நின்சரணென) ம்ருத்யு பய பீத (భయభీత)னாய்க் கொண்டு "நீயே எனக்குப் புகலாகவேணும்" என்று. (நின்சரணென)

(க) தை-ப்ரு-க. (உ) தை-ப்ரு-உ. (ங) வி-பு-ங-எ-கஅ.
(ச) சாந்தோ-ச-கங-உ. (ரு) (சா) தி-வாய்-உ-எ-க.

(௧) "[illegible]-மமாஸ்தி சக்ர ப்ரதிஹத வீர்யபலஸ்ய" என்று யமாதிகளஞ்சும்படியான பரிகரத்தையுடைய நீ புகலாக வேணும். [[illegible]-வஸதி மநஸி யஸ்ய ஸோவ்யயாத்மா] இவன் வைமுக்க்யம்பண்ணிப் போருமன்றும் விடமாட்டாதே நித்யாந்தர்யாமியாய்க்கொண்டு போருமவன். [[illegible] - புருஷவரஸ்ய] அவனே உபாயமென்றிருக்கை. [[illegible] - ந தஸ்ய த்ருஷ்டிபாதே தவகதிঃ] அப்படியிருக்குமவனுடைய கண்வட்டத்திலும் நீ ஸஞ்சரியாதேகொள். (௨) "[illegible] - வ்ரஜ பரிஹ்ருத்ய யதாக்நி மாஜ்யஸிக்தம்" என்னும்படியே அழலுடையாராயிறே யிருப்பது. [அத(ர்)வா மமாஸ்திசக்ர ப்ரதிஹத வீர்யப(ல)லஸ்ய] அவனுடைய பெருமையைபார்த்தால் ‡எனக்கும் கிட்டவொண்ணுதபடியாயன்றே இருபபது. அதுக்கடி, (௩) "[illegible] - அவ்யாஹதாநி க்ருஷ்ணஸ்ய சக்ராதீந்யாயுதாநி தம். ரக்ஷந்தி ஸகலாபத்ப்யோ யேந விஷ்ணுரூபாஸிதঃ" என்கிறபடியே - திவ்யாயுதங்களுக்கஞ்சினபடி. (௪) [கொடுமைசெய்யும் கூற்றமுமென்கோலாடி குறுகப்பெறா தடவரைத்தோள் சக்கரபாணி சார்ங்கவிற்சேவகனே] கிட்டிஞுகில் திருவாழியாலே தலையையறுத்தல் தூரத்திலேயாகில் கெட்டப்பாலே உருட்டுதல் செய்யுமவன். சரீரியன்றேவென்ன, [[illegible]-ஸோநய லோகঃ] அவனித்தேசத்திலே நடையாடுவானொருத்தனல்லன்காண். (௫) "நேமிப்பிரான்றமர் போந்தார்" என்னக்கடவதிறே. (சரணுய்) சரண்யரல்லாதாரைப் பற்றினுனே?

(மன்னித்யாதி) ஆபிஜாத்யத்தால்வந்த உத்கர்ஷத்தைச்சொல்லி அவன் சரணம்புக்கானென்றது - இங்கு; "ஏழையேதலன்" என்றும் "வாதமாமகன்" என்றும் "நஞ்சுசோர்வதோர்" என்றும் நிகர்ஷத்தைச்சொல்லிற்று - கீழ்; இரண்டுக்கும் சேர்த்தியென்னென்னில்; உத்கர்ஷாபகர்ஷங்களிரண்டும் சரணுகதிக்கு அப்ரயோஜகமென்கை. வேல்வெட்டிநம்பியார்க்குப் பிள்ளையருளிச்செய்தவார்த்தை.

(தகவில்காலனை) இரங்கவேண்டும் தசையிலும் இரக்கமற்றிருக்கை. இவனுடைய பாபத்தையும் தன்னுடைய நியாமகத்வத்தையுமே

‡ (பா) எனக்கு இங்கு குடிகிடகக வொண்ணுதபடி யன்றே.

(௧) வி-பு-௩-௭-௩௪. (௨) வி-பு-௩-௭-௩௮. (௩) விஷ்ணுதர்-௯௮.

(௪) பெரி-திரு-௫-௪-௪. (௫) தி-வாய்-௫-௨-௩.

யாய்த்துப்பார்ப்பது. (உகமுனிந்து) அவன்முனிவனளவிலே நினைத்தத்தை அவன்றன்னோடே போக்கினான். "நாளையும் வைஷ்ணவ பரிகரமாயிருப்பானை நலியவொண்ணாது" என்று உருமாய்த்துவிட்டான். (ஒழியா) "இவனைநலிந்த மருத்யுவை யழியச்செய்து இவனைப் பரிஹரித்தோமாகிலமையாதோ" என்றுவிடாதே.

(பின்னையித்யாதி) ஸம்ஸாரஸம்பந்தத்தையறுத்துத்திருவடிகளை ஒருநாளும் பிரியாதபடியான பேற்றைப பண்ணிக்கொடுத்தாய். (நின்திருவடிப்பிரியா) ஸம்ஸாரஸம்பந்தமறுகை கேவலனுக்குமொக்குமிறே. அங்ஙனன்றிக்கே, திருவடிகளைக் கிட்டும்படியான பேற்றையாய்த்துப் பண்ணிக்கொடுத்தது. (எண்ணியவித்யாதி) க்ருபையையன்றிக்கே, ஔதார்யத்தைப பற்றச் சொல்லுகிறது. இவன் ப்ரயோஜநாந்தரத்துக்கு வந்து கிட்டிலும் *ஸகலபலப்ரதனாகையாலே விலக்காத ஸமயம் பெற்றால் விடானிறே. ஆஶ்ரயிக்குமவனுக்கும் ஔதார்யகுண மநுஸந்தேயம். (க) "ௐ௺ஈ௸ௐ-அபாரகாருண்ய" இத்யாதி.

(எனக்கும்) அவனைப்போலே ஜந்மநிபந்தநமான ஏற்றமின்றிக்கேயிருக்கிற எனக்கும். அதாகிறது - (உ) "பாவமேசெய்து பாவியானேன்" (ங) "அப்பாவம் பலவுமிவையேசெய்து" என்று சொல்லுமவரிறே. (அன்னதாகுமென்றடியிணை யடைந்தேன்) அவன்நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே, "நாம்கொடுத்தா லிவன்விலக்கான்" என்னுமிதுவே பற்றாசாக உன்னைப்பிரியாத பேற்றைப்பண்ணி அவனுக்குக் கொடுத்தாப்போலே, உன்விருப்பத்தாலே நானும் அப்பேறு பெறவேணுமென்று சரணமபுகுந்தேன்.

(அணிபொழிலித்யாதி) ப்ரயோஜநாந்தரங்களுக்கு வந்தாஶ்ரயித்தவர்களுக்கும் விலக்காமையுண்டாகில், ஸ்வரூபாநுரூபமாண ப்ரயோஜநத்தைக் கொடுக்கைக்காகவன்றோ இங்கு வந்து கண்வளர்ந்தருளுகிறது. ... ... ... ... ... ... (௬)

---

அரு.—ஆறும்பாட்டு. (மன்னித்யாதி) கீழ்ப்பாட்டில்-என் கருத்தறிந்து என்னுடைய தேஹஸம்பந்தத்தை அறுத்துத் தரவேணும் என்றாராய், அது தானும் தமக்காகச் செய்தானாகில் (ச) "தனக்கேயாக வெனைக் கொள்ளு

---

(க) கத்யத்ரயம். (உ) க-௯-௯. (ங) க-௯-௩.
(ச) தி-வாய்-உ-௯-ச.

யீதே'' என்கிற பேற்றோடே விரோதிக்கு மாகையால், எனக்காகத் தரு கையாகிற விரோதியைக் கழிக்கவேணு மென்கிறு ரென்னும் ஸங்கதியை ஸ்ப்புரிப்பிக்கிறுர் (கோவிந்தேத்யாதி). "பேரருள்'' என்றத்தைக் கடா க்ஷித்து அருளிச்செய்கிறுர் (நானாத்திக்க வித்யாதி).

வேதம் சொல்லுகிறபடியே உபாஸிக்கிறவன் என்பானென், வேத ஹீநமான உபாஸநமுண்டோ வென்ன வருளிச்செய்கிறு (அவைதிகேத் யாதி).

யோஜநாந்தரம் (நான்மறையிலே யிதயாதி). மன்னுதல் - புநః புநః பரிசயமன்றே, மாமுனியானவனுக்கும் மறையிலே மன்னவேணுமோ வென்ன வருளிச்செய்கிறுர் (உபாஸகனுக் கித்யாதி). ப்ரமாணுந்தரம் (ஸ்வாத்யாயாதித்யாதி). தபஸ்ஸாலே ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம்பெற்ற விட முண்டோ வென்ன வருளிச்செய்கிறு (ஆசாரயனிதயாதி). (ஆசார்யன்)- வருணன். (சிஷ்யனே) ப்ருகுவை.

பெற்றமைந்தனுகை மதிக்கைக்கு ஹேதுவென்று விவக்ஷித்து, கை முதிகந்யாயத்தாலே ஸாதிக்கிறுர் (பகவதித்யாதி). (பங்க்தி) ஸந்தாநம். பகவத்ஸம்பந்த மாத்ரமுண்டானவன் ஸந்ததியி லிப்படி யிருக்க, பாகவத ஸம்பந்தம் நேரே யுண்டானவனிடத்திலே கேட்கவேண்டாவிறே என்று கருத்து. வைஷ்ணவ ஸம்பந்தமுடையார் பக்கல் யமன் அஞ்சுகைக்குக் காரணம் காட்டுகிறு (நாஸ்யாவரேதயாதி). "அவரபுருஷாः'' என்று ஜந்ம ஸம்பந்த முடையாருமாக வேணுமோ வென்ன வருளிச்செய்கிறுர் (இதி னித்யாதி). பூமியில் நீர் நிற்கப் பண்ணினவனுக்கு மூவேழுதலைமுறையும் உத்தரிப்பிக்கையைச் சொன்னுல் பாகவதனுக்குக் கைமுதிக ந்யாயஸித்த மாய் வருகையால் உபப்ரும்ஹண மென்று கருத்து.

யமன் அஞ்சுமென்னுமதுக்கு எடுதத ஶ்லோகத்துக்கு வ்யாக்யாநம் பண்ணுகைக்கு அடியெடுக்கிறுர் (வஸதீத்யாதி). "వసతిమనసియస్య సోzవ్యయాత్మా పురుషవరస్య నతస్య దృష్టిపాతే। తవ గతిరథవా మమాz స్తి చక్రప్రతిహతవీర్య బలస్య సోzన్యలోక్యః-வஸதிமநஸியஸ்ய ஸோவ்யயாத்மா புருஷவரஸ்ய நதஸ்ய த்ருஷ்டிபாதே। தவ கதிரதவா மமாஸ்தி சக்ரப்ரதிஹத வீர்ய பலஸ்ய ஸோந்யலோக்யः''. (சரீரியன்றே வென்ன) என்றது - பாகவத னும் சரீரத்தோடே யன்றே விருப்பது, அவன் பாபம்பண்ணினுல் நாமா ராய வேண்டாவோ என்று தூதன் சொல்லவென்கை. எத்தேசத்தா மென்ன வருளிச்செய்கிறுர் (நேமிப்பிரானித்யாதி).

"முனிந்து" என்றது போராதோ, "உக-உக்கிப்போம்படி" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (நாளையுமித்யாதி).

"அருள்" என்னாதே "பொன்னருள்" என்றதுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (க்ருபையை யித்யாதி). ... ... ... ... (௬)

மூ.—ஓதுவாய்மையுமுவனியப்பிறப்பும்
உனக்கு முன் தந்த வந்தணனொருவன்
காதலென்மகன் புகலிடம் காணேன்
கண்டு நீ தருவா யெனக்கென்று
கோதில்வாய்மையினா னுனை வேண்டிய
குறைமுடித்தவன் சிறுவனைக்கொடுத்தாய்
ஆதலால் வந்துன்னடியிணையடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (௭)

| பதம். | உரை. |
|---|---|
| ஓது | அத்யயநம் பண்ணப்படுகிற |
| வாய்மையும் | வசநரூபமான வேதத்தையும் |
| உவனியம் | உபநயநத்தாலே உண்டாகிற |
| பிறப்பும் | (த்விஜத்வமாகிற) ஜந்மத்தையும் |
| உனக்கு | உனக்கு |
| முன் | முதலிலே |
| தந்த | கொடுத்த |
| ஒருவன் | அத்விதீய (வித்வா)னாய் |
| கோது இல் | பழுதுபோகாத |
| வாய்மையினான் | வசநத்தை யுடையனான |
| அந்தணன் | ஸாந்தீபிநியென்னும் ப்ராஹ்மணன், |
| காதல் | என்னுடைய ப்ரீதிக்கு விஷயமான |
| என் மகன் | என் பிள்ளை |
| புகல் இடம் | போனவிடத்தை |
| காணேன் | அறிகிறிலேன். |
| நீ | ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனான நீ |

| பதம். | உரை. |
|---|---|
| கண்டு | (அவனிருக்குமிடம்) அறிந்து |
| எனக்கு | என்னிடத்தில் (கொண்டுவந்து) |
| தருவாய் | கொடுக்கவேணும் |
| என்று | என்றுசொல்லி |
| உனை | உன்னைக்குறித்து |
| வேண்டிய | கேட்டுக்கொண்ட |
| குறை | (அவனுடைய) குறையை (மநஸ்ஸங்கோசத்தை) |
| முடித்து | போக்கி (நிறைவேற்றி) |
| அவன் சிறுவனை | அவனுடைய பிள்ளையை |
| கொடுத்தாய் | யமலோகத்தில் நின்றும் கொண்டுவந்து கொடுத்தாய், |
| ஆதலால் | இப்படி ஸர்வசக்தியாகையாலே, |

வந்துன்னடியிணையடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே! (௭)

வ்யா.—ஏழாம்பாட்டு. (ஓதிந்யாதி) விஷயீகாரத்தைச்சொல்லி, கைங்கர்யத்தைச்சொல்லி, அதுக்கு விரோதியாய்வருமதில் இந்த்ரிய வஶ்யதையைத் தவிர்த்துத் தரவேணுமென்று சொல்லி, அதுக்கடியானபாபமடியாகவந்த யமவஶ்யதையைப்பரிஹரிக்கவேணுமென்று சொல்லி, அதுக்கடியான ப்ரக்ருதிஸம்பந்தத்தை யறுத்துத்தரவேணுமென்றுசொல்லி, கருத்தறிந்து செய்யுமளவன்றிக்கே உன்பரிவாலே செய்யவேணுமென்று நின்றது - கீழ்; இதுக்கவ்வருகு அபேக்ஷிக்கலாவதில்லாமையாலே மேலிற்பாட்டுக்களுக்கு உதயமில்லை. ஆனல் மேல் செய்கிறதென்னென்னில்; "ஆழ்வீர்! சேஷியும் சேஷபூதனுமானல் சேஷிசெய்தபடிகண்டு (க) "తత్తస్య సదృశం భవేత్ - தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத்" என்று சேஷபூதனிருக்குமத்தனை யல்லது இத்தனை த்வரிக்கக் கடவதல்லகாணும்" என்ன; தன்னைப்பார்த்தால், தன்சரீராவஸாநத்தில் தான் பேறுண்டோ? உன் ஸர்வசக்தித்வத்தாலே த்வரிக்கிறேனித்தனையன்றோ; அவனுடைய போக்யதைபோலே ஸர்வசக்தித்வமும் த்வரிப்பிக்குமிறே; ஸாந்தீபிநீபுத்ரனைக் கடல்கொள்ள மீட்டுக்கொடுத்த அகடிதகடநா ஸாமர்த்யத்தையும் விஞ்சியிருப்பதொன்றிறே ஸம்ஸாரார்ணவத்திலே அகப்பட்டு நோவுபடுகிற என்னையும்மீட்டு உன்திருவடிகளைத் தருகையாகிறது; தேவரீருடைய ஸர்வசக்தித்வத்தாலே அத்தைச செய்தருளவேணுமென்கிறார்.

(ஓதுவாய்மையும) வாய்மை - வாகிந்த்ரிய வ்யாபாரம். அதாகிறது - வசநம். ஒருவசநத்திலர்த்தத்தை நினைத்துப் பாசுரமிடுகிறார் மர்யாதா ஸ்தாபகார்த்தமாக. அந்தர்யாமி பராஹமணம் திருவுள்ளத்திலே அநுவர்த்தியா நிற்கச்செய்தேயும், (உ)"உடம்பினை யுபிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் சுடர்மிகுசுருதியுள்" என்றாரிறே. சப்தோசசாரணம் பண்ணுவதில்லை; அர்த்தத்திலொன்றும் விடுவதில்லை. (ஓதுவாய்மை) என்கிறது- (ரு) "పూర్వే పూర్వేభ్యో వచ ఏతదూచుః - பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:" என்கிறக்கடயுஞ்சாக நிரீக்ஷணம் பண்ணுதல், செவிபேறாக வருகையாதலன்றிக்கே, ஆசார்யோச்சாரணாநந்தரமாக அநுசசாரணம் பண்ணிப்போருகை. சப்தராசிக்ரஹணத்துக்கு உச்சாரணாநுசசாரணங்களொழிய வழியென்னென்னில்; அப்படி

(க) ரா-ஸு-நு-கூ-ரு. (உ) தி-வாய்-க-க-எ. (ரு)

யல்லது அர்த்தப்ரகாசமில்லாமையால். (க) "అర్థం తమ్-அர்த்தம் தம்" இத்யாதிப்படியே - அக்நிஸாக்ஷிகமாகக் கைப்பிடித்த ஸ்த்ரீயானவள் தன்னுடைய பர்த்தாவுக்குத்தன்னை ஆமூலசூடமாகக் காட்டுமாபோலே, ஸதாசார்யோபதேச ஜ்ஞாநபூர்வகமாகக் கைப்பிடித்தவனுக்காய்த்து வித்யை தன்னையுள்ளபடி காட்டுவது.

(உவனியப்பிறப்பும்) ப்ராஹ்மணனுக்கு ஜந்மம் இரண்டிறே. பக்ஷிக்கு முண்டிறே த்விஜத்வம். பக்ஷியினுடைய பூர்வாவஸ்த்தைபோலே இவனுடைய யோநிஜந்மம்; இரண்டாம் -ஜந்மத்திலேயிறே நீட்டி முடக்கவல்லது. கம்ஸவதாநந்தரமாகவிறே த்விஜத்வம்; பின்பு செய்ததும் யாதவர்களோடு ஸாஜாத்யமுண்டாகைக்காகவிறே. உக்ரஸேநனை அபிஷேகம்பண்ணி, ஸ்வதர்மாரூடனுக்கி, ராஜ்யமு மடிபட்டபின்பு, "அவந்தீபுரத்திலே ஸாந்தீபிநிபக்கலிலேபோய் உபநயநாதி ஸம்ஸ்க்ருதராவோம்" என்று அவனைச்சென்றுகிட்டி, "முன்பே கர்க்க(ரு)ன்வந்து ஜாதகர்ம நாமகரணாதிகளடையப் பண்ணினன், உத்தரதந்த்ர மநுஷ்டிபிக்கவேணும்" என்ன; மேலுள்ளதெல்லாம் செய்தானிறே.

(உனக்கு) (உ) "యో వై వేదాంశ్చ ప్రహిణోతి తస్మై - யோவை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிறபடியே - ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவனுக்கு வேதங்களைக்கொடுத்த உனக்கன்றோ தந்தது. (ங) "అనేన జీవేనాత్మనానుప్రవిశ్య - அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஸ்ய" என்கிற வாக்யத்திற்படியே - ஜீவத்வாரா அசித்திலே அநுப்ரவேசித்து, நாமரூபவிபாகம் பண்ணினன் தானேயிறே; (ச) "నామ రూపఞ్చ భూతానామ్ - நாம ரூபஞ்ச பூதாநாம்" இத்யாதி. த்வாபராந்தத்திலேயிறேயிது; இவரிப்போது பெரியபெருமாளைப்பார்த்துச் சொல்லுகையாலே அவருமிவருமொருவரென்றபடி. (அந்தணன்) அத்யயநம் பண்ணுவிக்கைக்கதிகாரி. (ஒருவன்) அத்விதீயன். வித்யாஸ்த்தலங்களுக்கடையத் தானேயாம்படி சமைந்தவன். அத்யயநத்திலே அந்தர்ப்பூதமே அல்லாத வித்யாஸ்த்தலங்களும்.(ரு) "శిక్షాయామ్-சிக்ஷாயாம்" இத்யாதி. தநுர்வேதமும் ஆயுர்வேதமு மகப்பட அங்கேயிறே அதிகரித்தது. முற்பட த்வயதனைக்கேட்டு இதிஹாஸபுராணங்களையு மதி

(க) (உ) ஸ்வேதாஸ்வ-சு. (ங) சாந்தோ-சு-ங.
(ச) விஷ்- (ரு) ரு-ஸ-உ-கஅ.

கரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளு மதி கரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம்படி பிள்ளையைப் போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே "ஒருத்தன்" என்பது.

இப்படி அப்யஸிப்பித்தவளவிலே, க்ரஹணவேளையில் ஜ்ஞாநத்தையும அதிகரிக்கிற சக்தியோகத்தையும் கண்டு, "தக்ஷிணையாக இவனை எத்தை வேண்டிக்கொள்வோம்" என்று, "என் புத்ரன் கடலிலே புக்கான், அவனெங்கேபோனு னென்றறிகிலேன், ஆராய்ந்து அவனை உருவழியாதபடி கொடுவந்து தரவேணும்" என்ன; கையில் வில்லை வாங்கிக் கடற்கரையிலே சென்றபோதே அருசி, வருணன் முகங்காட்ட; "ஆசார்யபுத்ரனிங்கே புகான், காட்டித்தா" என்ன; அவனும் போக்கற்றவாறே, "பஞ்சஜநன் பக்ஷித்தான்" என்ன; முனநாளுண்ட சோற்றை வாங்கவொண்ணுதிறே; கடலில் நீர் நீங்கிக்கொடுக்க சங்க(ஶ்ங்க)ரூபியான அவனை யகறறினவளவிலே, ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வான் வந்து ஆவேசிக்க; திருப்பவளத்தே வைத்து முழக்கிக்கொடு யமபுரத்தேற வெழுந்தருள; அவனும, அர்க்க்யாதிகளைக்கொடுத்து "எழுந்தருளிற்றென்?" என்ன, "ஆசார்யபுத்ரனிங்கே வந்தான், அவனைக்காட்டித்தா" என்ன; அவனும, நாகவிசேஷத்திலநின்றும் அவனைக் கொடுவந்து காட்ட; "என்புத்ரன்" என்று அவன் பாதயபிஜைசெய்யு பண்ணும படி அவனைக்கொடுவந்து காட்டிக்கொடுத்தானிறே.

(காதலென்மகன்) காதல் நான் வடிவுகொண்டதென்னும்படியான புத்ரன். (புகலிடம்காணேன்) நரகத்திலேயோ, கர்ப்பஸத்தலோ எங்கே புக்கான், என்றறிகிறிலேன் (கண்டுநீதருவாய்) ஸர்வசக்தியான நீ ஆராய்ந்து தரவேணும். வித்யாக்ரஹணதா(தா)ரணத்திலே கண்டானிறே சக்திமத்தையை.

(கோதில்வாய்மையினுன்) "காதலென்மகன்" என்ற இவனையிறே "கோதில் வாய்மையினுன்" என்கிறது, அதுக்குக் கருத்தென்னென்னில்; "குருவசந லங்கநீயம் - குருவசந லங்கநீயம்" என்கிற க்ருஷ்ணுபிப்ராயத்தாலே; இருவரும் பிரிந்திருக்கிறவளவிலே (க) "த்ருஷ்டா ஸீதா - த்ருஷ்டா ஸீதா" என்கிற திருவடியளவில் சொல்லும்வார்த்தையையிறே இவனளவிலே சொல்லுகிறது. (உனைவேண்டிய) சிஷ்ய

(க) ரா-யு-சு-எஅ.

னென்றிறே அவனுக்கு ப்ரதிபத்தி; மோக்ஷப்ரதனென்றன்றே. அபி ஜாவித்யா வ்ருத்தங்களால் வருமதன்றே மோக்ஷ ருசி; நைர்த்தோஷ்ய மடியாக பகவத்ப்ரஸாதத்தாலே வரவேணுமே; அது உண்டாகிலிறே இத்தை அபேக்ஷிப்பது. (குறைமுடித்து) "என்பிள்ளையைக் கொடுவந்து காட்டித்தரவேணும" என்ன; "அப்படியே செய்கிறோம்" என்றபோதே அற்றதிறே அவன்குறை.

(அவன் சிறுவனைக்கொடுத்தாய்) மோந்துபார்த்தாலும் குடற்றுடக்குத் தோன்றும்படியிறே கொடுத்தது. (க) [மாதவத்தோனித்யாதி, உருவுருவே கொடுத்தான்] "இப்போது கொடுக்கிற வடிவுதான் பழைய வடிவுதான்" என்னும்படியாய்த்துக் கொடுத்தது [தக்கணையா] சிஷ்யத்வ ஸித்திக்காக. [உருவுருவே] (உ) "அஸந்நேவ - அஸந்நேவ" என்னும்படியான வஸ்துவுக்கு சேஷத்வஜ்ஞாநத்தைப் பிறப்பித்து உருவுண்டாக்கி, சேஷத்வாநுரூபமான வ்ருத்திவிசேஷத்தைக்கொடுக்கை.

(ஆதலால் வந்துன்னடியிணை யடைந்தேன்) "சரீர ஸம்பந்தத்தில் பேறு தப்பாதிறே, நிர்வசக்தியானபின்பு அவ்வளவுதாழ்றியிருக்கிறதென்?" என்னும் த்வரையாலே சரணம்புகுந்தேன். (அணிபொழிலித்யாதி) கடல்கொண்ட வஸ்துவைமீட்டு உருவுருவே கொடுத்தாப்லே, ஸம்ஸாரார்ணவம் கொண்டவென்னைமீட்டு வ்ருத்திபர்யந்தமாக்கித்தருகைக்கன்றோ தேவரீர் திருக்குடந்தை சாய்ந்தருளிற்று... ... (எ)

---

அந —எழாம்பாட்டு. (ஓதித்யாதி) கீழ் ஆறுபாட்டுக்கும் மேல் இரண்டு பாட்டுக்கும் ஆகாங்க்ஷாபூர்வகமாக ஸங்கதியை யருளிச்செய்கிறார் (விஷயீகாரத்தை யித்யாதி). "இத்தனையன்றோ" என்ற வார்த்தை, என்று மேலிரண்டு பாட்டாற் சொல்லுகிறார் என்று சேஷம்

ஓதப்படுகிற வசநம் என்று சொல்லுகிறதென், அந்த ப்ரதிவசநந்தனைச் சொல்லவொண்ணாதோ வென்ன வருளிச்செய்கிறார் (ஒருவசநத்தி லித்யாதி) "ஓதுவாய்மை என்கிறது" என்ற பதத்துக்கு, "பண்ணிப் போருகை" என்றத்தோடன்வயம் (வாசஃ என்கிறத்தை) என்றது-எடுத்த வசநத்தில் "வசஃ" என்கிற பதத்தால் சொல்லுகிற வேதத்தை என்றபடி. சப்த முபரிதசமாகக் கொள்ளாவிட்டால் அர்த்தம் ப்ரகாசியாதென்னுமத்தை ப்ரமாண பூர்வகமாக வருளிச்செய்கிறார் (அர்த்தமித்யாதி). "అర్థం పదస్వరూప మభితస్వదర్శి ముద్రాలా నిత్యం తైరపి గ్రహస్య

---

(க) பெரி-திரு-ச-அ-க. (உ) தை-ஆந-சு.

హృదయా వేశ్యా సదేశ్యా త్రయీ। యస్మిన్నవ్యభిచారిణీ స్వహృదయం సన్దర్శ్య సా పాతివ్రతం ధత్తే లక్ష్మణ లక్ష్మణాయ మునయే తస్మై నమస్కుర్మహే-அர்த்தம் தம் தமகர்த்த ரூப மபிதஸ்ஸந்தர்ப்ய முக்க்ததார்ஹ்ருதா நித்யம் தைரபி துர்க்க்ரஹ ஸ்வஹ்ருதயா வேப்யா ஸதேப்யா த்ரயீ। யஸ்மிந்நவ்யபிசாரிணீ ஸ்வஹ்ருதயம் ஸந்தர்ப்ய பாதிவ்ரதம் தத்தே லக்ஷ்மண லக்ஷ்மணாய முநயே தஸ்மை நமஸ்குர்மஹே" என்கிற இந்தஶ்லோகத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அக்ரீத்யாதி).

(நீட்டி முடக்குகை) ஸ்பர்சநியமாதிகளோடே வர்த்திக்கை.

நாமரூபாதிகளை உண்டாக்கின உனக்கன்றோ ஜாதகர்மாதி நாமரூபங்களை யுண்டாக்கிறது என்று ஈடுபாடாக வருளிச்செய்கிறார் (அநேநேத்யாதி).

(அகற்றின) கொன்ற.

(கர்ப்பஸ்ததனே) என்றது - ஜீவ'ற ஜந்மமெடுக்கப் புக்கானே வென்கை.

(அதுக்கு) என்றது - புத்ரரக்ஷண யுக்தனாய் ஸ்வார்த்தபரனானவனை "கோதில் வாய்மையினான்" என்கிறதுக்கு என்ன "கோதில் வாய்மையினுனொடும்" என்ற பதத்தை இங்கும் ப்ரயோகித்ததுக்கு வித்தராயருளுகிறார் (இருவருமித்யாதி). மோக்ஷத்தைக் கேளாதே பிள்ளையைக் கேட்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (சிஷ்யனித்யாதி). இருச, ருசிதானும் இல்லையென்று விவக்ஷித்து, வேதாத்யயந பரனுக்கு ருசியிலவாமே போவானென்னென்ன வருளிச்செய்கிறார் (அபிஜநேத்யாதி)

"உரு உரு" என்றதுக்கு ஸ்வாபதேச மருளிச்செய்கிறா (அஸங்கேவேத்யாதி). ... ... ... ... ... ... (எ)

மூ.—வேதவாய்மொழி யந்தணனொருவன்
எந்தை நின் சரணென்னுடை மனைவி
காதல்மக்களைப் பயந்துலும காணாள்
கடியதோர்தெய்வம்கொண்டொளிக்குமென் றழைப்ப
ஏதலார்முன்னே இன்னருளவர்க்குச்
செய்துன்மக்கள் மற்றிவரென்று கொடுத்தாய்
ஆதலால் வந்துன்னடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வேதம் | வேதங்களை | ஒளிக்கும் | மறைத்து வையாநின்றது |
| வாய் | வாயினுல் | என்று அழைப்ப | என்று விண்ணப்பம் செய்ய, [த்தில் |
| மொழி | (எப்போதும்) பாராயணம் பண்ணுகி | அவர்க்கு | அந்த வைதிகன் விஷய |
| ஒருவன் | அத்விதீயனுன [ன்ற | ஏதலார் முனனே | சத்ருக்கள் முன்பே |
| அந்தணன் | ஜ்ஞாநசக்தியையுடைய வைதிகனுனவன், | இன் | (நீ) இனிதாக (ஸ்வயம் ப்ரயோஜநமாக) |
| எந்தை | எனக்குப் பிதாவான | அருள்செய்து | க்ருபைபண்ணி, |
| நின் | நீயே | மற்று | அதுகநமேலே, [கள் |
| சரண | (எனக்கு) உபாயமாக வேணும், (அதாவது;) | உன் மக்கள் | உன்னுடைய பிள்ளை |
| என்னுடை | என்னுடைய [வள் | இவா என்று | நானழைத்துக்கொண்டுவந்த இவர்கள்தானென்று சொல்லி |
| மனைவி | பெண்டாட்டி யான | கொடுத்தாய் | தந்தருளினுய், |
| காதல | (தனக்கு) ப்ரியமான | ஆதலால் | இப்படி நீ ஸர்வசக்தியாகையாலே |
| மக்களை | பிள்ளைகளை | | |
| பயத்தலும | பெறறபோதே | | |
| காணுன் | காண்கிறிலன், | | |
| கடியது | க்ரூரமான [யானது | | |
| ஓர்தெய்வம் | ஏதோ ஒருதேவதை | | |
| கொண்டு | எடுத்துக்கொண்டு போய் | | |

வந்துன்னடியிணை யடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே! (அ)

வ்யா.—எட்டாமபாட்டு. (வேதவாயிதயாதி) வைதிகபுத்ரோதிஹாஸத்தை முன்னிட்டுக்கொண்டு சரணம் புகுகிருர். இப்பாட்டிலும் சொல்லுகிறது - கீழ்ச்சொன்ன ஸர்வசக்தி யோகத்தை; ஆனுல் வாசியென்னென்னில்; தேசகால விப்ரகர்ஷம கிடக்கசெய்தே கார்யம்செய்த சக்திபத்தையைச சொல்லுகிறது.

(வேதவாய்மொழி யந்தணனெருவன்) அந்தணனெருவன் என்றுதே, கீழ்ச்சொன்ன விசேஷணத்துக்குத்தாத்பர்யமென்னென்னில்; ஈஸ்வரனுக்குத் திரக்கழிய இவன் கார்யம் செய்யவேண்டும்படியான இவன் வஸ்துதை சொல்லுகிறது. வேதத்தை விஷயீகரித்த வாகிந்த்ரிய வ்யாபாரத்தை யுடையவன். வேதபாராயணபரன். இத்தால்-இஸ்ஸ்வரூப ஜ்ஞாநமுடையவனென்கை. வேத தாத்பர்யார்த்தத்தை நிர்ண

யித்து அதுக்கு வாசகமான பாராயணத்தைப் பண்ணுமவன். (அந்தணனொருவன்) (க) "அறவனை யாழிப்படையந்தணனை" என்னுமாபோலே- சுத்தி யோகத்தைச் சொல்லுகிறது. ஆத்மாவுக்கு சுத்தியாவது - (உ) "నహి జ్ఞానేన సదృశం పవిత్రమిహ విద్యతే - நஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே" என்னுமாபோலே ப்ரமாணோக்த ஜ்ஞாந சுத்தியிறே; தபஸ் தீர்த்தயாத்ராஸேவாதிகளன்றே. சிற அந்தணனென்றது-சாந்த (శాన్త)ஸ னென்றபடி; இங்கு வைதிகனென்றபடி. சாந்தஸராவார் - ப்ரயோஜநார்த்தமாக ஓதுவது ஒந்துச்சொல்லுவதாயவர்கள்; வைதிகராவார்- (ந) "వైదికః కః-வைதிகः கः" என்கிறபடியே வேததாத்பர்ய மறியுமவர்கள். சுத்திக்கு அத்விதீயன். ஸ்வரூபஜ்ஞாநத்தை விசதீகரிக்கிறது- இரண்டு பதத்தாலும்.

(எந்தை) எனக்கு உத்பாதகன். மாதாபிதாக்களைப்போலே தோற்றிமாய்ந்துபோகையன்றிக்கே, (ச) "అవ్యయః పితా - அவ்யயःபிதா" என்கிறபடியே அழியாத பிதா என்றபடி. அடியிலே இத்தை உண்டாக்கி ஸ்வரூப ஜ்ஞாநத்தைப் பிறப்பித்த உபகாரகன் என்றாய்த்து அநுஸந்திப்பது இவன். (நின்சரண்) நீயே எனக்கு உபாயமாகவேணும்; அநந்ய ஸாதநனாய் அநந்ய ப்ரயோஜநனாயிருப்பானொருவன்.

"நாமே ஆஸ்ரயணீயர்" என்றும் "நாமே உபாயம்" என்றும் அத்யவஸித்தாயாகில் உனக்கினி குறையென்னென்ன; எனக்கொரு குறையில்லை; (என்னுடைமனைவி) என்னுடையக்ருஹிணி. என்னோடு ஸஹதர்மசாரிணி யானவள்; (ரு) "పితరం మాతరం దారాన్ - பிதரம் மாதரம் தாராந்" என்று த்யாஜ்யையானவளல்லள். அவள்கண்ணில் கண்ணநீரைக் கண்டால் ஆந்ருசம்ஸ்யத்தாலே கார்யம் செய்யவேண்டும்படியிருக்கிறவள். (காதல்மக்களை) பிள்ளைகள் பக்கலிலே ஸ்நிக்த்தை(స్నిగ్ధై)யாய்ப போரும். (பயத்தலும காணாள்) செய்வதெல்லாம் செய்து பத்துமாஸம் வயிற்றிலே தரித்துப்பெற்ற வளவிலே காணப்பெறுகிறிலள். அதுக்கடியென்னென்னில், (கடியதோர் தெய்வங்கொண்டொளிக்கும்) இப்படியிருப்பதொரு தேவதையை, இதுக்கு முன்பு நான் கண்டறியேன். யமனும் உடல் விடக்கவிறே கொண்டுபோவது; பெற்று முகத்திலே விழிப்பதுக்கு முன்னே, பார்த்துக்

(க) தி-வாய்-க-எ-க. (உ) கீதை-ச-ருஅ. (ந) ஸ்தோ-ர-கக.
(ச) ஸஹஸ்ரநா-உபோத்காதே-கO. (ரு) கத்யத்ரயோபாத்தம்.

கொண்டு நின்று கொண்டு போவாரைப்போலே வடிவோடே கொண்டு போய் ஒளியாநின்றது. க்ருஷ்ணனுடைய வடிவழகைக் காணவேணு மென்று நாய்ச்சிமார் செய்ததிறே. (அழைப்ப) இப்படி விண்ணப் பம்செய்ய.

அதாவது - க்ருஷ்ணன் ஒரு யாகவிசேஷத்திலே தீக்ஷித்து உறு ப்புத்தோலும் போர்த்துக்கொடு நிற்கிற நிலையிலே, இவன்சென்று "என் பார்யையானவள் மூன்று ப்ரஜைகளைப் பெற்றாள், பெற்றபோதே முகத்திலும் விழியாதபடி தைவம் கொண்டுபோகாநின்றது, அவளிப்போது ஆஸந்ந ப்ரஸவை, இப்ப்ரஜையை நோக்கித் தரவேணும்" என்ன; "அப்படியே செய்கிறோம், என்று எழுந்தருளப் புக்கவளவிலே, தீக்ஷிதரான தேவரீரெழுந்தருளவேணுமோ, நான்போய் பரிஹரித்துப் போருகிறேன்" என்று அர்ஜுநன் சொல்ல; "அப்படியே செய்யலாகாதோ" என்று ஸ்மிதம்பண்ணி அருளிச்செய்ய; அவனும், கர்ப(गर्भ)க்ருஹத்தைச் சுற்றும் சரக்கூடமாகக் கட்ட; அதுக்கு மேலே, ப்ரஜையினுடைய அழுகைக்குரல் கேட்டவாறே, ப்ராஹ்மணன், "க்ருஷ்ணன்வந்து நோக்கப்புக நீ ஒருக்ஷத்ரியாதமன், அடைகொடு பாழ்போக்கினாய்" என்று அர்ஜுநன் முன்மடியைக்கொத்துப் பிடித்து க்ருஷ்ணன் பாடே இழுத்துக்கொண்டுவர; பின்னையும், வைதிகனையும் அர்ஜுநனையும் தேரிலே ஏற்றிக்கொடுபோய் காரணத்தளவிலே நிறுத்திப்பரமபதத்திலே சென்று, பிள்ளைகளை நால்வரையும் மீட்டு, பூசின சாந்தும் மஞ்சளும் காதில் தோடுமான வடிவோடே கொடுவந்து காட்டிக்கொடுத்தான். காலக்ருதபரிணாம மில்லாத தேசமாகையாலே அவ்வடிவோடே கொடுவந்து காட்டிக்கொடுத்தானாய்த்து.

(ஏதலார்முன்னே) "ப்ரஜைகள்தான் போய் நெடுங்காலமுண்டாம், இன்னவிடத்திலே புக்கார்கள் என்று தெரியாதாம், இப்படியிருக்க, க்ருஷ்ணனைக்கொண்டு மீட்டுக்கொள்ளப் புகுகிறாய்" என்று சொல்லுமவர்கள் முன்னேகிடீர்! மீட்டுக்கொடுத்தது. (ஏதலார்) ஆழ்வார் வார்த்தை யிருக்கிறபடி. ப்ரத்யாஸந்ந சத்ருக்கள் அதாவது - (க) "*சாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி-சாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி யன்றோ, தன் கையிலொரு முதலில்லையாம், வேறொருவராலே பெறவிருக்கிறாய்" என்றிறே தங்களுக்கென்ன முதலுடையார்கள் சொல்லுவது. (இன்

(க) மீமாம்ஸகவசநம்.

ணருளித்யாதி) தன்பேருக வாய்த்துச் செய்தது. இரங்கி என்றபடி. (உன்மக்கள் மற்றிவரென்று கொடுத்தாய்) "உன்மக்க ளிவர்களே" என்று தேறும் படியாக அவ்வவப்படியே கொடுவந்து கொடுத்தாய்.

(ஆதலால் வந்துன்னடியிணை யடைந்தேன்) இப்படிப்பட்ட உன்னுடைய அதிசயித சக்தியை அநுஸந்தித்துச் சரணம் புகுந்தேன். "அங்குள்ளாரை இங்கே மீட்டுக்கொடுவந்து கொடுத்தமையுண்டு, உமக் கங்ஙனிருப்பதொன்றுண்டோ" என்ன; அதிலு மரியதொன்றன்றோ இங்குள்ளாரை அங்கேறக் கொடுபோகை. அது செய்யலாம், தன்னினைவாலே செய்யுமதாகையாலே; இத்தலையை இசைவித்து அத்தலையேறக் கொடுபோகையன்றோ வரிது.

(அணிபொழி லித்யாதி) இங்குள்ளாரை அக்கரைப்படுத்துகைக் கன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று. தேஹாத்மாபிமாநியாய் விஷயப்ரவணனாய் (௧) "ௐ஺ஂ஻ - அநந்த க்லேச பாஜநம்" என்கிற ஸம்ஸாரத்திலே அழுந்துகிற என்னை, ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்து உன்பக்கலிலே ப்ராவண்யத்தை யுண்டாக்கி (௨) *அந்தமில் பேரின்பத் தடியரோடே வைக்கைக்காகவன்றோ தேவரீரிங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது.... ... ... ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (வேதவாயித்யாதி) (இவன் வஸ்துவை) என்றது - வேதார்த்த ஜ்ஞாநத்தாலே பகவத்ஸ்வரூபத்தை உள்ளபடி யறிகையாகிற ஸத்தை என்றபடி. "மொழி" என்றதினர்த்தம் (வ்யாபாரத்தை) என்றது. வேதயதீதி வேதஃ என்கிற வ்யுத்பத்தியை உட்கொண்டு இப்பத ப்ரயோகத்துக்குக் கருத்தருளிச்செய்கிறார் (இஸ்ஸ்வரூபேத்யாதி). (இஸ்ஸ்வரூபம்) என்றது-ஸ்வஸ்வரூபமென்றபடி. விவரணம் (வேதேத்யாதி). (ப்ரணவோக்த ஜ்ஞாநம்) என்றது - சேஷத்வ ஜ்ஞாநமென்கை. (சாந்தஸன்) தாமஸன். "வேதவாய்மொழி" என்றத்தாலும் - ஸ்வரூபஜ்ஞாநத்தைச் சொல்லி, "அந்தணனொருவன்" என்றத்தாலும் - அதுவேயானால் புநருக்தமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (ஸ்வரூபேத்யாதி). (இத்தை) வேதத்தை. "வேதவாய்மொழி" இத்யாதியால் - சேஷத்வஜ்ஞாநத்தில் அத்விதீயன் என்கையால், அநந்யப்ரயோஜநத்தை பலிக்குமென்று விவரிக்கிறார் (அநந்யேத்யாதி).

(௩) "மாயன் மணிவண்ணன் தாள்பணியும் மக்களைப் பெறுவர்கள்" என்றும் (௪) "நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப் பாதம் பரவிப்பெற்

(௧) ஜி-ஸ்தோ-௪. (௨) தி-வாய்-௧௦-௧௦-௧௧.
(௩) பெரி-திரு-௧-அ-௧௧. (௪) தி-வி-௩௭.

ற்" என்றும் சொல்லுகிறபடியே - அநந்ய ப்ரயோஜநதைக்கு ஹாநிவாரா மே தோற்றுப்பெற்றவன் என்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (செய்வதித்யாதி) இங்ஙனன்றாகில் "த்யாஜ்யையானவ னல்லன்" என்ன வொண்ணாதிறே. கடியதோர் தெய்வந்தானேதென்ன வருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனுடைய வித்யாதி)

(காரணத்தளவிலே) ப்ரக்ருதியளவிலே.

(ஆழ்வார் வார்த்தை) என்றதுக்கு - ஸ்வயத்நபரரை "ஏதலர்" என்கிறதென்று கருத்து

விவரணம் (தேஹேத்யாதி). ... ... ... ... (௮)

மூ.—துளங்கு நீண்முடி யரசர்தம் குரிசில்
தொண்டை மன்னவன் திண்டிற லொருவற்கு
உளங்கொ ளன்பினோ டின்னருள் சுரந்து
அங்கோடு நாழிகை யேழுடனிருப்ப
வளங்கொள் மந்திரம் மற்றவற் கருளிச்
செய்தவா றடியே னறிந்துலக
மளந்த பொன்னடியே யடைந்துய்ந்தேன்
அணிபொழில் திருவரங்கத்தம்மானே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துளங்கு | விளங்காநின்றதாய | சுரந்து | பண்ணி, |
| நீள் | ஆதிராஜ்ய ஸூசகமான [ளும், | மற்று | பின்னையும் |
| முடி | கிரீடத்தை யுடைய | அவற்கு | அந்த ராஜாவுக்கு |
| அரசர்தம் | ராஜாக்களுக்கு | அங்கு | அந்த ராஜ்யபரிபாலநத்தில் [ற |
| குரிசில் | ராஜாவாய, | ஓடு | வ்யர்த்தமாகக் கழிகி |
| திண் | த்ருடமான | நாழிகை | காலங்களிலே |
| திறல் | பலத்தையுடையனாய் | ஏழு நாழிகையோடு | ஏழர்த்தத்தோடே கூடிய நாழிகையோடு |
| ஒருவன் | (அத்தாலே) அத்விதீயனான | | |
| தொண்டை மன்னவற்கு | தொண்டைமான் சக்ரவர்த்தி விஷயத்தில், [டைக்கிற | இருப்ப | இருக்கும்படியாக (ஏழர்ந்தம் நெஞ்சில் படும்படியாக) |
| உளம்கொள் | (தன்) திருவுள்ளத்தில் | வளம்கொள் | ஸர்வாதிகாரமான ஔதார்யத்தை யுடைத்தான |
| அன்பினோடு | ப்ரீதியோடு கூட | | |
| இன் அருள் | ஸ்வயம்ப்ரயோஜநமான க்ருபையை | மந்திரம் | திருமந்த்ரத்தை |

குரிசில்) ராஜா. மநுஷ்யர்களுக்கு ராஜா என்னுமாபோலே ராஜாக்களுக்கு ராஜா. (க) "ராஜாதிராஜ ஸ்ஸர்வேஷாம்- ராஜாதிராஜ ஸ்ஸர்வேஷாம்" நாட்டில் பரப்பாலே "இத்தேசத்துக்கு அபிஷிக்தன்" என்று தெரியாதிறே; அதுக்காக.

(தொண்டைபன்னவன்) தொண்டைமண்டலத்திலே அபிஷேகம் பண்ணியிருந்த காலத்து, நாடெங்குமொக்கத் தனக்காக்கிக்கொண்டது. அதுக்கடி சொல்லுகிறது (திண்டிற லொருவற்கு) (உ) "வீரபோக்யா வஸுந்தரா - வீரபோக்யா வஸுந்தரா" என்னுமாபோலே - தன்மிடுக்காலே எங்குமொக்க எறிந்துகொண்டு மிடுக்குக்கு அத்விதீயனாயிருக்கிறவனுக்கு. (௩) "மருவலர்த முடல்துணிய வாள்வீசும் பரகாலன்" என்றவிவர் மதித்த மிடுக்கிறே. "ஸ்வரூபஜ்ஞாநம் பிறக்க வேணும்" என்று சரணம் புகுகிறதுக்கு நிதர்சநமாகச் சொல்லுகிறதாகில், துர்மாநத்துக்கு ஹேதுக்களானவற்றைச் சொல்லுகிற தென்னென்னில்; ஸ்வரூபஜ்ஞாந முண்டானால் இவ்விசேஷணங்கள் அநுகூலரக்ஷணத்துக்கும் ப்ரதிகூல நிரஸநத்துக்கும் ஏகாந்தமா யிருக்கையாலே ஸ்வரூபாய வாமிறே யென்று.

(உளங்கொளன்பினோடு) ஹிதோபதேசத்துக்காகப் பண்ணின அன்பாகையாலே திருவுள்ளத்தைப் பற்றியிருக்குமிறே. (இன்னருள்) தன் பேறானவருள். (ச) "உதாராঃ - உதாராঃ" என்று ப்ரயோஜநாந்தரபரரானவிஜு மிருக்கச்செய்தே,(ச) "ஜ்ஞாநீத்வாத்மைவ-ஜ்ஞாநீத்வாத்மைவ" என்கிற விசேஷணமுண்டிறே. (சுரந்து) முலைக்கடுப்புத் தீரத் தரையிலே பீச்சுவாரோபாதி. (அங்கொடுநாழிகை) ராஜ்யதுர(ஞ)ரோடேகூட வ்யர்த்தமே கழிகிற காலத்திலே. (ஏழுடனிருப்ப) ஏழர்தரத்தைப்பற்ற ஏழுகாலமென்கிறதிறே.

(வளங்கொள் மந்திரம்) அழகாதல், ஸஞ்சாரித்வமாதல். வளமாகிறது - ஸகலபலப்ரதனை ஈஶ்வரனைப்போலே எல்லார்பக்கலிலும் ஸஞ்சரிக்கை, கர்மாதிகளுக்கு உபகாரகமாய் ப்ரபந்நனுக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தை யுண்டாக்கி அக்கரைப்படுத்துமிறே. (மற்றவற்கருளிச்செய்தவாறு) அவனுக்குத் திருமந்த்ரத்தை உபதேசித்து ததீய சேஷத்வத்தை யுண்டாக்கினபடி. குறும்பறுத்த நம்பியோ

(க) (உ) விஷ்ணுதர்மம்.
(௩) ௯-௬-௧௦ (ச) கீதை-எ-௧அ.

டே சேர்த்துவிட்டபடியைச் சொல்லுகிறது;-"பதிவ்ரதையோடுண்டான ஏகாந்தத்தி லநுபவத்தைத் திரளிலே வெளியிடுவாளைப்போலே, தானும் நானுமறிய வநுபவித்தவித்தை இங்ஙனே வெளியிடுவதே! திருவேங்கடமுடையான் அலேவலேயாகாதே!" என்கிறாரிறே. (அடியேனறிந்து) இவருடைய *நானிருக்கிறபடி.

(உலகமளந்த) விமுகர்தலேயிலு மகப்படவிருந்த திருவடிகள். (பொன்னடி) ஸர்வைஸ்ஸ்ப்ருஹணீயம். அதாகிறது - ஸ்வர்ண ஸ்வபாவத்தாலே பொற்கிண்டியில் தண்ணீர் வஸிஷ்ட்ட சண்டாள விபாகமற விநியோகங் கொள்ளலாமிறே. (அடைந்துய்ந்தேன்) "ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பிக்கவேணும்" என்று சரணம்புக்கு உஜ்ஜீவித்தேன்.

(அணிபொழி லித்யாதி) திருவேங்கட முடையானளவிலே பிறந்தவர்த்தத்தைச் சொல்லி, பெரியபெருமாள் திருவடிகளிலே சரணம்புகுகிறார். திருமலேயில் நிலேயிலே ஒரு உத்யோகமுண்டென்று தோற்றுமிறே; பின்பு போந்து சாய்ந்தவிடம் அதிறே.

"மானைமான் மடநோக்கி" என்று துடங்கி, "உலகமளந்த பொன்னடியே யடைந்துய்ந்தேன்" என்று தலேக்கட்டுகையாலே, ஒன்பதுபாட்டிலும் ஏகார்த்தத்தைப் பற்றவே சரணுகதியா யிருக்கிறது. ... ... ... ... ... ... (கூ)

---

அரு —ஒன்பதாம்பாட்டு. (துளங்கித்யாதி)(ஔபாதிகங்காணும்) என்றது - உம்முடைய அடிக் கொதிப்பாலே ஸ்வாநந்தா(ஸ்வாநந்த)ர்த்தமாய் விமுகையால் ஸ்வரூபத்துக்குச்சேராத காணுமென்றபடி.(ஸ்வரூபஜ்ஞாநத்தை) என்றது - பாகவத பர்யந்தமான ஸ்வரூபஜ்ஞாநத்தை என்றபடி.

முன்பு பிறந்த ஜ்ஞாநத்தை இல்லேயென்று பின்னேயும் அபேக்ஷித்த பேருண்டோவென்ன (ஸ்ரீ நாரதபகவானே யித்யாதி). சரணுகதி ஜ்ஞாந ப்ரதமுமாயிருக்குமோ வென்ன வருளிச்செய்கிருர் (ஸர்வாபிமதேத்யாதி).

(குரிசில்) ராஜத்வத்தையுடைய. இவ்வளவு போராதோ வென்ன வருளிச்செய்கிருர் (நாட்டிலித்யாதி).

மேலுக்கவதாரிகை (அதுக்கித்யாதி). (எறிந்துகொண்டு) வாள்வீசிக் கொண்டு.

தன்பேறு என்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன (உதாரா இத்யாதி). இத்தால் - ராஜ்யப்ரதா(நா)நம் பண்ணினதும் தன் பேருகச் செய்தானென்ற

தாய்த்து. "ஓடு" என்றது குறுகிக் கிடக்கிறதாய், ஓடுகிற - கழிகிற என்று விவக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ராஜயேத்யாதி).

"மற்றவற்கு - அங்கொடு நாழிகைகளில் ஏழுநாழிகையோ டிருப்ப வளங்கொள் மந்திரம் அருளிச்செய்தவாறு" என்று அந்வயம் விவக்ஷித்துத், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஏழித்யாதி). அதாவது -(க) "దేహాసక్తాత్మబుద్ధిర్యదిభవతి పదం సాధువిద్యాత్తృతీయం స్వాతంత్ర్యాంధో యదిస్యాత్ప్రథమ మితరశేషత్వధీశ్చేద్ద్వితీయమ్ । ఆత్మత్రాణోన్ముఖశ్చేన్నమ ఇతిచపదం బాంధవాభాసలోలశ్శబ్దం నారాయణాఖ్యం విషయచపలధీశ్చే చ్చతుర్థీం ప్రపన్నః-தேஹாஸக்தாத்மபுத்திர்யதிபவதி பதம் ஸாதுவித்யாத்த்ருதீயம் ஸ்வாதந்த்ர்யாந்தோ யதிஸ்யாத் ப்ரதமமிதர சேஷத்வதீஶ்சேத் த்விதீயம் । ஆத்மத்ராணோந்முக ஶ்சேந்நம இதிச பதம் பாந்தவாபாஸ லோலஶ் ஶப்தம் நாராயணாக்யம் விஷய சபலதீஶ்சேச் சதுர்த்தீம் ப்ரபந்நஃ" என்று பட்டரருளிச்செய்தபடியே - தேஹாத்மாபிமாந நிவ்ருத்தியும், ஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியும், அந்ய சேஷத்வ நிவ்ருத்தியும், ஸ்வயத்ந நிவ்ருத்தியும், அபந்துஷு பந்துத்வ ப்ரதிபத்தி நிவ்ருத்தியும், விஷய நிவ்ருத்தியும் ஆகிற ஆறும், * நமஸ்ஸிலார்த்தமான பாகவதசேஷத்வமாகிற அர்த்தமொன்றும் ஆகிற ஏழர்த்தத்தோடே நடக்குங்காலத்தில் இருக்கும்படியென்கை.

(அழகு) என்றது - போக்யதையைப் பற்ற. நம்பியோடே சேர்ந்ததுக்கு ஸூசக மென்னென்ன வருளிச்செய்கிறார் (பதிவ்ரதை யித்யாதி). (அலேவலே) பகுஜல்பாகள் என்றபடி. ஸ்வரூபஜ்ஞாநத்தை நீயுண்டாக்க வேணும் என்று ப்ரார்த்திக்கிறவர், "அடியேன்" என்கிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (இவருடைய வித்யாதி). வ்யவஹார ப்ராசுர்யமென்று கருத்து.

(ஏகார்த்தத்தை) என்றது-பிராட்டி புருஷகாரமாகச் சரணம் புகுகிற த்வயத்தோடுண்டான ஏகார்த்தத்தை யென்கை. ... ... (௯)

மூ.—மாட மாளிகை சூழ் திருமங்கை
மன்னனொன்னலர் தங்களை வெல்லும்
ஆடல்மா வலவன் கலிகன்றி
அணிபொழில் திருவரங்கத்தம்மானை
நீடு தொல்புகழாழி வல்லானை
எந்தையை நெடுமாலை நினைந்த
பாடல் பத்திவை பாடுமின் தொண்டீர்
பாடநும் மிடைப் பாவம நில்லாவே. (௧௦)

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**

---

(க) அஷ்டஶ்லோகி-௰.

| பதம். | உரை. |
|---|---|
| மாடம் | மண்டபங்களாலும் |
| மாளிகை | க்ருஹங்களாலும் |
| சூழ் | சூழப்பட்ட |
| திருமங்கை | திருமங்கைக்கு |
| மன்னன் | ராஜாவாய், |
| ஒன்னலர் தங்களை | சத்ருக்களை |
| வெல்லும் | ஜயிக்குமவராய், |
| ஆடல் மா | ஆடல்மா வென்னும் பெயருடைத்தான ஆடாநின்றுள்ள குதிரையை |
| வலவன் | நடத்த வல்லவராய், |
| கலிகன்றி | பாபநிவர்த்தகரான ஆழ்வார், |
| அணி | அலங்காரமான |
| பொழில் | சோலைகளையுடைய |
| திருவரங்கத்து | திருவரங்க மென்னும் திவ்யதேசத்துக்கு |
| அம்மானை | ஸ்வாமியாய், |
| நீடு | அபரிச்சிந்நமாய் |
| தொல் | அநாதியான |

| பதம். | உரை. |
|---|---|
| புகழ் | கீர்த்தியையுடைய |
| ஆழி | திருவாழியை |
| வலவனை | ஆளுமவனாய், |
| எந்தையை | எனக்குஸ்வாமியாய், |
| நெடு | எல்லையில்லாத |
| மாலை | ஆஸ்ரித வ்யாமோஹத்தை யுடையனான அழகிய மணவாளனை |
| நினைந்த | அநுபவித்து அதினாலுண்டான |
| இவை பத்து பாடல் | இப்பத்துப் பாசுரங்களையும், |
| தொண்டீர் | பாகவதர்களே! |
| பாடுமின் | சொல்லுங்கள், |
| பாட | (இவற்றைச்) சொல்லவே |
| நும்மிடை | உங்களிடத்தில் |
| பாவம் | ப்ராப்ய விரோதியான பாபங்கள் |
| நில்லா | நசித்துவிடுங்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மாடமாளிகையித்யாதி). இவருடைய பாவ (பாவ)வ்ருத்தி யில்லையேயாகிலும், இவருடைய பாசுரத்தைச் சொல்லவே ப்ராப்தி ப்ரதிபந்தகங்கள் போமென்கிறது.

(மாடமித்யாதி) தமக்கிந்த நன்மையெல்லாம் இவ்வூரிற்பிறப்பாலே வந்ததென்கிறார். இத்தால்-பிறந்தகத்திலேற்றம் சொன்னபடி. "ஆப்தன் சொன்னான்" என்னவேணுமிறே லோகபரிக்ரஹத்துக்கு, (௧) "𑌵𑌾𑌲𑍍𑌮𑍀𑌕𑌿𑌰𑍍𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌋𑌷𑌿𑌃 - வால்மீகிர்பகவாந் ருஷி:" (௨) "𑌸𑌹𑍋𑌵𑌾𑌚 𑌵𑍍𑌯𑌾𑌸𑌃 𑌪𑌾𑌰𑌾𑌶𑌰𑍍𑌯𑌃- ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:" (௩) "குருகூர்ச் சடகோபன்" என்னுமாபோலே. (ஒன்னலரித்யாதி) எதிரிகள், திருமங்கையாழ்வார் அழகுசெண்டேறப் புறப்பட்டவாறே, முழுக்காயாகத்தன்னிலே அவியுமத்தனை. இவர்க்கு சத்ருக்களாகிறார் - ப்ரமாண

(௧) ரா-பா-௩-௩அ. (௨) தை-        (௩) தி-வாய்-௩-௧௦-௧௧.

துஷ்டகரான பாஹ்யரும், ப்ரமேயதூஷகரான குத்ருஷ்டிகளுமிறே; இவர்களை வெல்லுகையாவது - (௧) "ஜிதபாஹ்ய - ஜிதபாஹ்ய" இத்யாதிப்படியே பாஹ்யருடைய ப்ரதிஜ்ஞையைவிட்டுத் திருமதிளுள் ளிட்டவை செய்தும்; ஆகமிகர் பரதேவதையாகச் சொல்லுகிற ருத்ரனுடைய பரத்வத்தைப் பறித்து அதுதன்னையுமெடுத்துப் பொகட்டாரிறே. (கலிகன்றி) பாபபரதிபடர். பகவத்பரபாவங்களை மதித்துச் சொன்ன பாசுரங்களிறே

கவிபாடுண்ட விஷயமிருக்கிறபடி சொல்லுகிறார்மேல் (அணிபொழில திருவரங்கத்தம்மானை) என்று. "'மாடமாளிகைசூழ் திருமங்கைமன்னன்' என்றவாறே * அணிபொழில் திருவரங்கம் எங்கே புக்கொளித்தது." என்றருளிச்செய்தார் பட்டர். (நீடுதொல் புகழாழிவல்லானை) (நீடு - புகழ்) அநுகூலரக்ஷணத்தில் வந்தால் திருவுள்ளத்தையும முன்னோடி நடத்துகை; (௨) "அறமுயலாழி" என்னக்கடவதிறே. (தொல்புகழ்) இதுதான் ஆகந்துகமல்ல. (ஆழிவல்லானை) திருவாழியை ஸ்வவசமாக்கிக் கார்யங்கொள்ளவல்லன் என்னுமிதுபோலே காணும் ஏற்றம். (எந்தையை) பரிகாரமுண்டானாலும் பிறர்காரியம் செய்யவேண்டுவதில்லையிறே ப்ராப்தியில்லையாகில்; கார்யம் செய்கைக்கீடான ப்ராப்திசொல்லுகிறது. ப்ராப்தனானாலும் ப்ரயோஜநமில்லையிறே வ்யாமுக்தனன்றாகில்; அதுக்காக(நெடுமாலை) என்கிறது. இத்தால்-ஆஸ்ரயணத்துக்கு ஏகாந்தமான ஸ்வபாவங்கள்சொல்லுகிறது.

(கினைந்தபாடல்) தந்நிஷ்டரானவர் பாசுரம். அநுபவம் வழிந்து புறப்பட்ட பாசுரமான- சொற்கள். (பத்திவை) முகமறிவார் முத்தைச்சேரக்கோத்துக கையிலேயிட்டுக் காணுமாபோலே. (பாடுமின் தொண்டீர்) பகவத்விஷயத்தில் சபலராயிருப்பார்! ஹர்ஷப்ரகர்ஷத்தாலே சொல்லுங்கோள். (பாட நும்மிடைப்பாவம் நில்லாவே) பால்குடிக்க நோய்தீருமாபோலே இவருடைய பாசுரத்தைசசொல்ல ப்ராப்திப்ரதிபந்தகங்கள் தன்னடையே விட்டுபபோம்; (௩) * ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி - ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமிபோலே. "நீடுதொல் புகழாழிவல்லானை" என்று * அஹம் சப்தத்தில் சக்தியைப்பற்றச் சொல்லுகிறது. ... ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

(௧) ஜிதந்தே-௧-௩௪. (௨) தி-வாய்-௨-௧௦-௫. (௩) கீதை-௧௮-௬௬.

அரு — பத்தாம்பாட்டு. (மாடமித்யாதி) நினைத்துப்பாட என்று விசேஷியாமல் "பாட" என்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இவருடைய வித்யாதி)

தம்முடைய ஏற்றம் சொல்லுவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (ஆப்தனித்யாதி) ஆடாநின்றுள்ள பாவுக்கு வல்லவ னென்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (எதிரிகளித்யாதி) "ஜிதவாஹ்யஜினா ரமணீப்ரதிமா அபிவைதிகயன்நவ ரங்கபுரீ। மணிமண்டபவப்ரகணாந்விததே பரகாலகவி: ப்ரணமேமஹிதான் - ஜிதபாஹ்ய ஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே। மணிமண்டப வப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹிதாந்".

திருமங்கைக்கு 'மாடமாளிகை'' என்று விசேஷண மிடுவானென், திருவரங்கத்துக்குப் பொழிலை விசேஷணமாகச்சுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (மாடமித்யாதி). (க) ''வண்டினமுரலும் சோலை'' என்கிற சோலை வாய்ப்பிலே ஈடுபட்டருளிச் செய்தாரென்று கருத்து. (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அஞ்சாம்பத்தில் எட்டாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்

அஞ்சாம்பத்து ஒன்பதாந்திருமொழி

கையிலங்கு ப்ரவேசம்.

வ்யா. — பெரியபெருமாள் திருவடிகளிலே பரபக்தி பண்ணினார் - கீழிற்றிருமொழியிலே; இப்பரபக்திக்கு பலம் (ஸ்ரீ)வ்யபிசார முண்டாயிருக்குமிறே; ஆனாலும், ப்ரஹ்மானுக்கு ஸ்வாதந்த்ர்யமென்று ஒன்றுண்டே; கோவிந்தஸ்வாமிக்கு பகவத்பாரவண்ய முண்டாயிருக்கச்செய்தேயும், "க்ஷேத்ரவிஷயங்களை அநுபவித்துப் பின்னை நம்பக்கல் வா" என்று விட்டதொன்றுண்டிறே; அப்படியே, உகந்தருளின நிலங்களிலேயாய்த்து வாஸனை; ஆனபின்பு, "உம்முடைய அபிநிவேசானுரூபமாக எங்கும் புக்கநுபவித்துப் பின்பு நம்பக்கலிலே வாரும்" என்றுவிட, அநந்தரம் திருப்பேரிலேபோய்ப் புக்கநுபவித்து இனிய

(க) தி-மா-கஎ.

ராய்ப்பேசுகிருர். கோவிந்தஸ்வாமிக்கு க்ஷுத்ரவிஷயங்களிலுண்டான ருசியோபாதியும் போருமாய்த்து இவர்க்கு உகந்தருளின நிலங்களிலே. ... .. ... ... ... *

---

அ௩ —*கையிலங்கு ப்ரவேசம் கீழ்த்திருமொழியில் அஞ்சாம்பாட்டிலும் ஆரும்பாட்டிலும்-என் கருத்தறிந்து ஸம்ஸாரஸம்பந்தத்தைப் போக்கவேணுமென்றும், அது செய்யுமிடத்தில் உன் பேருகச் செய்யவேணுமென்றும் ப்ரார்த்தித்திருக்க, ஸர்வஶக்தியானவனாங்கள் செய்யாமல் போவானென்னென்னும் சங்கையிலே, நம்பேருக உம் கருத்தறிந்து செய்யவேணுமென்றீராகில், அடிதுடங்கி உகந்தருளின நிலங்களிலே ப்ராவண்யமுடையராய் நமக்கு முகங்கொடுத்துக்கொண்டு இங்கே சிலநாளடிமை கொள்ளுகை பேருயிருந்தது என்று திருப்பேரிலே மூட்டிருனென்னும் பரிஹாரத்தை யருளிச்செய்துகொண்டு ஸங்கதி யருளிச்செய்கிருர் (பெரியபெருமாளிதயாதி). தன்பேருகவைக்கையாகிற ஸ்வாதந்த்ர்யத்தின்மேலே ஆஸ்ரிதன் நினைவின்படி செய்கையாகிற பாரதந்த்ர்யமுமொரு ஹேது வுண்டென்கிருர் (கோவிந்தேதயாதி). ... .. ... .. *

மூ.—கையிலங்காழி சங்கன் கருமுகில் திருநிறத்தன்
பொய்யிலன் மெய்யன் தன்தாளடைவரே லடிமையாக்கும்
செய்யலர் கமலமோங்கு செறிபொழில் தென்திருப்பேர்
பையரவணையான் நாமம் பரவி நானுய்ந்தவாறே. (௧)

| பதம் | உரை | பதம். | உரை |
|---|---|---|---|
| கை | திருக்கையிலே | மெய்யன் | (ஆஸ்ரிதர்க்கு) அவற்றை ப்ரகாசிப்பிக்குமவனாய், |
| இலங்கு | விளங்காநின்ற | தன் தாள் | தன் திருவடிகளை |
| ஆழி | திருவாழியையும் | அடைவரேல் | ஆஸ்ரயித்தார்களாகில் |
| சங்கன் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுமுடையனாய், | அடிமை ஆக்கும் | (அவர்களைத்தனக்கு) சேஷமாக்கிக் கொள்ளுமவனாய், |
| கரு | இருண்டிருக்கிற | செய் | கழனிகளில் |
| முகில் | மேகம்போன்ற | அலர் | விகஸியாநின்ற |
| திரு | அழகிய | கமலம் | தாமரைமலர்களுடைய |
| நிறத்தன் | வர்ணத்தையுடையனாய், | ஓங்கு | ஓக்கத்தையும் |
| பொய்இலன் | (சாஸ்த்ர ப்ரதிபாதிதமான ஸ்வலக்ஷணங்களில) பொய்யில்லாதவனாய் (அப்படிப்பட்ட ஸ்வலக்ஷணங்களை யுடையனாய்), | செறி | நெருங்கியிருக்கிற |
| | | பொழில் | சோலைகளையுமுடைய |
| | | தென் | ஸுந்தரமான |
| | | திருப்பேர் | திருப்பேரென்னும் திவ்ய தேசத்தில் |

| | | | |
|---|---|---|---|
| பை | பரந்த படங்களையுடைய | நாமம் | திருநாமங்களை |
| அரவு | திருவனந்தாழ்வானை | பரவி | சொல்லி |
| அணையான் | படுக்கையாக வுடையனான ஸர்வேஶ்வரனுடைய | நான் | நான் |
| | | உய்ந்தவாறு | உஜ்ஜீவித்த ப்ரகாரம் |
| | | ஏ | என்ன ஆஶ்சர்யம்!(க) |

வ்யா.—முதற்பாட்டு. (கையிலங்காழி சங்கன் கருமுகில் திருநிறத்தன்) என்னவுமாம்; அன்றிக்கே, (கையிலங்காழி சங்கம் கருமுகில் திருநிறத்தன்) என்றாகவுமாம். வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியான கையிலே விளங்காநின்றுள்ள திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுமுடையவன். (கருமுகில் திருநிறத்தன்) (உ) "ஆழிபோல்மின்னி" என்கிறபடியே மேகத்திலே மின்னினைப்போலேயாய்த்து திவ்யாயுதங்களோடே சேர்ந்தவடிவிருப்பது. (பொய்யிலன்) இதரஸஜாதீயமான விக்ரஹாதுடக்கமான வைலக்ஷண்யங்களில் ஓரர்த்தவாதசங்கையில்லை (மெய்யன்) இவையுடைய, (ங) "[illegible]-பக்தாநாம்" என்கிறபடியே-ஆஶ்ரிதார்த்தமாக்கி வைக்குமது உண்மையாயிருக்கும். (தன்தாளித்யாதி) (ங) "தேஹி மே ததாமி தே - தேஹிமே ததாமிதே" என்று ஒரோப்ரயோஜநத்தைக்கொண்டு அகலுகையன்றிக்கே, தன் திருவடிகளுக்கு அஸாதாரணராய் வந்து கிட்டுவர்களாகில், ப்ரயோஜநங்களைக் கொடுத்து அகலவிடாதே நித்யகைங்கர்யத்தைக் கொடுக்கும்.

(செய்யலர்) செய்களானவை நெல்விளைக்கத் தாமரையாய்த்து விளைவது. செய்களிலே அலராநின்றுள்ள தாமரைகளிலேலக்கத்தையும், செறிந்தபொழிலையுமுடைத்தாயிருக்கிற தென்திருப்பேரிலே, நிரந்தரபகவதநுபவத்தாலுண்டான ஹர்ஷத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரன் திருநாமத்தை (பரவிநானுய்ந்தவாறே) ஒருரஸவிசேஷத்திலே போனபடி (ச) "அஹமந்நமஹமந்நம் - அஹமந்நமஹமந்நம்" என்றும் (ரு) "ஸம்ப்ரஹ்ருஷ்டோ - ஸம்ப்ரஹ்ருஷ்டோ" என்றும் களித்துச்சொல்லக்கடவ பாசுரத்தை இங்கேவந்து சொல்லப்பெற்று வாழ்ந்துபோம்படியே! ... ... ... ... ... (க)

(க) தி-பா-ச. (உ) ஸ்ரீ-ஸ்தோ-கு. (ங) பாகு-கா-க-அ-அ.
(ச) தை-ப்ரு-கo-அ. (ரு) ஸா-அ-க-.

அரு —முதற்பாட்டு. (கையித்யாதி) கையிலே இலங்காநின்றுள்ள ஆழியென்ன, சங்கமென்ன, இவற்றை யுடையவன். சங்கன் என்று வ்யஸ்தபதமாகவும், கையிலே இலங்காநின்றுள்ள ஆழியென்ன, சங்கமென்ன, கருமுகில்போன்ற திருநிறமென்ன, இவற்றை யுடையவனென்று ஸமஸ்தபதமாகவும் பாடபேதத்தைக்காட்டி, அடைவே அர்த்த மருளிச்செய்கிறார் (கையிலங்கு இத்யாதி வாக்ய பஞ்சகத்தாலே)

(ப்ரஹ்மணுவென்றும்) என்ற வநந்தரம், "சொல்லுகிறபடியே தன்னுடைய போக்யத்வத்தையும் போக்த்ருத்வத்தையு மநுஸந்தித்து" என்று சேஷம். ... ... ... .. . . ... ... (க)

மூ.—வங்கமார் கடல்களேழும் மலையும் வானகமும் மற்றும்
அங்கண் மாஞாலமெல்லா மமுதுசெய்துமிழ்ந்த வெந்தை
திங்கள் மாமுகிலணவு செறிபொழில் தென்திருப்பேர்
எங்கள் மாலிறைவன் நாமமேதி நானுய்ந்தவாறே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வங்கம் | மரக்கலங்களால | எந்தை | என்ஸ்வாமியாய், |
| ஆர் | நிறைந்த | திங்கள் | சந்த்ரமண்டலத்தையும் [த்தையும் |
| ஏழ்கடல்களும் | ஸப்தஸமுத்ரங்களும், [ளும் | மாமுகில் | பெரிய மேகமண்டல |
| மலையும் | ஸப்தகுல பர்வதங்க | அணவு | அளாவியிருக்கிற |
| வானகமும் | ஆகாசமும், | | செறிபொழில் தென் திருப்பேர், |
| மற்றும் | அதுகளொழிந்தவை | எங்கள் | ஆஶ்ரிதரான எங்கள் விஷயத்தில |
| அங்கண் | அழகிய இடமுடைத்தான | மால | வ்யாமோஹத்தை யுடையனை |
| மாஞாலம் | பரந்த பூமியும் (ஆகிய) | | |
| எல்லாம் | இவை யெல்லாவற்றையும் [விழுங்கி | இறைவன | ஸர்வேஶ்வரனுடைய |
| | | நாமம் | திருநாமங்களை |
| அமுதுசெய்து | (ப்ரளயகாலத்தில்) | ஏதி | ஸ்துதித்து |
| உமிழ்ந்த | (ஸ்ருஷ்டிகாலத்தில) வெளிப்படுத்தின | | நான் உய்ந்தஆறு ஏ! (உ) |

வ்யா.— இரண்டாமபாட்டு. (வங்கமித்யாதி) மரக்கலங்களைக் கடலுக்குச் சிறப்பாக இட்டுச் சொல்லக்கடவது. மரக்கலங்களால் மிக்கிருந்துள்ள கடல்களேழும், பூமிக்கு ஆணியடித்தாப்போலே யிருக்கிற மலைகளும், அவற்றுக்கு அவகாசப்ரதானம் பண்ணுகிற ஆகாசமும், மற்றும், இவற்றை வேலியாக உடைத்தாயிருக்கிற பூமிபரப்பை

யடைய வயிற்றிலே ப்ரளயாபத்திலே எடுத்துவைத்து, "உள்ளே கிடந்து தளரவொண்ணாது" என்று, நிதியைவிழுங்கி உமிழ்ந்து பார்ப்பாரைப்போலே வெளிநாடு காண உமிழ்ந்த என்ஸ்வாமி.

(திங்கள்) சந்த்ரபதத்தளவும் மேகபதத்தளவும் செல்ல ஓங்கியிருப்பதாய், செறிந்தபொழிலையுடைத்தாயிருக்கிற தென்திருப்பேரிலே. (எங்கள்மாலிறைவன் நாமமேத்தி நானுய்ந்தவாறே) நாமபோல் வாரான ஆஶ்ரிதர்பக்கலிலே வ்யாமுக்தனாய், வ்யாமோஹமில்லையேயாகிலும் விடவொண்ணாத ப்ராப்தியையுடையனான அவனுடைய திருநாமத்தை ஏத்தி. (நானுய்ந்தவாறே) (க) "அஸந்நேவ-அஸந்நேவ" என்கிறபடியே அஸத்கல்பனாய்ப்போன நானுஜ்ஜீவிக்கும்படியே!(உ)

அரு.—இரண்டாம்பாட்டு. (வங்கமித்யாதி) கீழ்ப்பாட்டில் - தன்தாளடைவார்க்குச் செய்த உபக்ருதியை அநுபவித்தவர், அவ்வளவன்றியே தாளடையாதார்க்கும் ஆபத்ஸகனாயிருக்குமென்று அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

கீழ்ப்பாட்டில் "நான்" என்றதுக்கு - "தாளடைவர்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து அவ்விபூதியிலுள்ளாரைப்போலிருந்த நானென்றாராய், இதில் "ஞாலம்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து இங்குள்ளாரோடொரு கோவையான நானென்றாக்கி அர்த்த மருளிச்செய்கிறார் (அஸந்நேவேத்யாதி). ... ... ... ... .. ... .. ... (உ)

மூ.—ஒருவனை யுந்திப் பூமேலோங்கு வித்தாகந்தன்னால்
ஒருவனைச் சாபம் நீக்கி யும்பராளென்று விட்டான்
பெருவரை மதிள்கள் சூழ்ந்த பெருநகரரவணைமேல்
கருவரை வண்ணன் தென்பேர் கருதி நானுய்ந்தவாறே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒருவனை | அத்விதீயனான ப்ரஹ்மாவை | சாபம் | (அவனுடைய) சாபத் |
| உந்தி பூமேல் | திரு நாபிகமலத்தில் | நீக்கி | போக்கி, [தை |
| ஓங்குவித்து | உண்டாக்கியும், [னை | உம்பர்ஆள் | ("நீ முன்போலவே) மேலுலகங்களை யாளக் கடவாய்" |
| ஒருவனை | மற்றொருவனான ருத்ர | | |
| ஆகம்தன்னால் | தன் திருமார்பிலுள்ள ஸ்வேத பிந்துவினால் (ஸ்வேத பிம்துவை அவன் கையோட்டில் தெறித்து) | என்றுவிட்டான் | என்று விடைகொடுத்தவனுமாய், [ன்ற |
| | | பெருவரை | பெரிய மலைகள்போ |
| | | மதிள்கள் | ப்ராகாரங்களாலே |
| | | சூழ்ந்த | சூழப்பட்ட [ர்நகரில் |
| | | பெருநகர் | விசாலமான திருப்பே |

(க) தை-ஆந-௬-க.

| | | | |
|---|---|---|---|
| அரவு அணை மேல் | அநந்த சயநத்தின்மேலே | தென்பேர் | அவனெழுந்தருளியிருக்கும் தென்திருப்பேரில் (புக்கு) |
| கருவரை | நீலவர்ணமான பர்வதத்தினுடைய | கருதி | (அவனை அநுபவிக்க) ஆசைப்பட்டு |
| வண்ணன் | வர்ணத்தை யுடையனுமான ஸர்வேஶ்வரனை, | | நான் உய்ந்த ஆறு ஏ! (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (ஒருவனையித்யாதி) தன்னைஎண்ணினால் பின்னையொருவனை எண்ணவொண்ணாதபடி யிருப்பானாய், சதுர்த்தசபுவநத்துக்கும் நிர்வாஹகனாயிருக்கிற ப்ரஹ்மாவைத் திருநாபீகமலத்திலேயுண்டாக்கி, திருமார்வில் ஸ்வேதஜலத்தாலே ருத்ரனுக்கு வந்த சாபத்தைப்போக்கி (உம்பராளென்று விட்டான்) தேவஜாதிக்கெல்லாம் நியந்தாவான மேன்மையிலொன்றும் குறையாதபடி நடத்து என்று விட்டானாய்த்து. உபரிதநலோகங்களை ஆளு என்று விட்டான்.

(பெருவரையித்யாதி) பெருவரையென்னலாம்படியான மதிள்களாலே சூழப்பட்டு, (௩) * கலங்காபெருநகரத்தோடொக்கச் சொல்லலாம்படியான பெருநகரிலே திருவநந்தாழ்வான் மேலே ஓரஞ்ஜநகிரிபோலே சாய்ந்தருளினவன் (தென்பேர்கருதி) "அங்கேபுக்கநுபவிக்கவேணும்" என்று மநோரதித்த நானுஜ்ஜீவித்தபடி யே!• (தன்பேர்கருதி) அவ்வடிவழகுக்கு வாசகமான திருநாமத்தைச்சொல்லி ஒருவனுஜ்ஜீவித்தபடியே!. ... ... ... (௩)

---

அரு.—மூன்றாம்பாட்டு (ஒருவனித்யாதி) கீழ்ப்பாட்டில் ஜகத்துக்கெல்லா மாபத்திலே யுதவுகையைச் சொன்னாராய், அதினுடைய மேற்றமாக (உ) "ஸ்ருஷ்டிஸம்ஹாரம்" என்பதாக்கு முட்பட உபக்ருதி பண்ணுமவனென்று அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

சப்தார்த்தம் (உபரி யித்யாதி). அர்த்தாந்தரமாதல்.

"பேர்" என்றது- நிரூபகமாக்கு, ஒரு பாடத்துக்கு அர்த்த மருளிச்செய்து, பாடாந்தரத்துக்கு அர்த்த மருளிச்செய்கிறார் (அவ்வடிவித்யாதி). ... ... . . ... . . (௩)

ஸ்ரூ.—ஊனமர் தலையொன்றேந்தி யுலகெல்லாம் திரியுமீசன்
ஈனமர் சாபம் நீக்கா யென்ன வொண் புனலையீந்தான்

---

தேனமர்பொழில்கள் சூழ்ந்த செறிவயல் தென்திருப்பேர்
வானவர்தலைவன் நாமம் வாழ்த்தி நானுய்ந்தவாறே. (௪)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| ஊன் அமர் | மாம்ஸம் நிறைந்த | ஈந்தாய் | (...ல்ல) ஸ்வேத ஜலத்தை கொடுத்தவனாய் (அக்கபாலத்தில் நிறைத்தவனாய்), |
| ஒன்று தலை | ஒரு ப்ரஹ்ம கபாலத்தை | தேன் அமர் | வண்டுகள் நிறைந்த |
| ஏந்தி | கையில் தரித்துக்கொண்டு | பொழில்கள் | சோலைகளாலே |
| உலகு எல்லாம் | ஸமஸ்த லோகங்களிலும் | சூழ்ந்த | சூழப்பட்டதாய் |
| திரியும் | (பி(ஃ)க்ஷார்த்தமாக) ஸஞ்சரியாநின்ற | செறி | நெருங்கிய |
| ஈசன் | ருத்ரனானவன், | வயல | கழனிகளை யுடைத்தான |
| ஈன் அமர | "தண்மையை யுடைத்தான | தென் திருப்பேர், | |
| சாபம் | (என்னுடைய) சாபத்தை | வானவர் | நித்யஸூரிகளுக்கு |
| நீக்காய் | (நீ) போக்கவேணும்" | தலைவன் | ஸ்வாமியானவனுடைய |
| என்ன | என்று சொல்ல, | நாமம் | திருநாமங்களை(ச்சொல்லி) |
| ஒண்புனலை | (உன் திருமார்பிலுண்டான) அழகிய (சாபத்தைப்போக்கவ | வாழ்த்தி | ஸ்துதித்து |
| | | | நான் உய்ந்த ஆறு ஏ! (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (ஊனமரித்யாதி) மாம்ஸபந்துரமாயிருக்கிற தலையோட்டைத் தரித்து, கூறுசெய்தூரில் ஐயுட கைத்தலையுமாய்த் திரிவாரைப்போலே, பதிப்போடே திரிந்து பூமியெல்லாம் தட்டித்திரியும்படியான ருத்ரன், "அவத்யாவஹமாய்த் தன்மையை விளைக்கக்கடவதாயிருக்கிற சாபத்தைப்போக்கவேணும்" என்று திருவடிகளிலே விழுந்து சரணம்புக; திருமார்வில் ஸ்வேதஜலத்தைக்கொடுத்துவிட்டான்.

(தேனித்யாதி) வண்டுகள் மிக்கிருக்கிற பொழிலாலே சூழப்படுவதாய், செறிந்த வயலையுடைத்தான தென்திருப்பேரிலே (வானவரித்யாதி) பாலைக்குடித்து நோயைப் போக்குவாரைப்போலே *அயர்வறுமமரர்களதிபதி திருநாமத்தைச்சொல்லி ஒருவன் வாழ்ந்துபோம்படியே!. விநாசத்தை பலி(ஃலி)ப்பிக்கிலும் விடவொண்ணாத திருநாமமாய்த்து. ... ... ... ... ... ... (௪)

அரு.—நாலாம்பாட்டு. (ஊனமரித்யாதி) *ஆகந்தன்றொருவனைச் சாபம் தீர்த்தப்ரகாரத்தை ஸப்ரகாரமாக அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"ஈனமர்" என்றதினர்த்தம் (தண்மையை யித்யாதி).

"உய்ந்தவாறே!" என்கையாலே - உய்யாவிட்டாலும் "தலைவன் நாமம்" என்கையால் போக்யதை விடவொண்ணாதபடியா யிருக்குமென்று விவக்ஷித் தருளிச்செய்தாரா (விநாசநதை யித்யாதி) . ... (௪)

மூ.—வக்கரன் வாய்முன் கீண்ட மாயனேயென்று வானோர்
புக்கரண் தந்தருளா யென்ன பொன்னாகத்தானை
நக்கரி யுருவமாகி நகங்கிளர்ந்திடந்துகந்த
சக்கரசெல்வன் தென்பேர் தலைவன்றாளடைந்துய்ந்தேனே.

| பதம் | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| வக்கரன | "தந்த வக்ரனுடைய | அரியுருவமாகி | நரஸிம்ஹ ரூபியாய்க் |
| வாய் | வாயை | நக்கு | சிரித்து [கொண்டு |
| முன் | முறகாலத்தில் | கிளர்ந்து | வ்ருத்தியடைந்து |
| கீண்ட | கிழித்துப்பொகட்ட | நகம் | நகங்களினால் |
| மாயனே | ஆஶ்சர்ய பூதனே" | இடந்து | கிழித்துப் பொகட்டு |
| என்று | என்று சொல்லிக்கொ | உகந்த | ஸந்தோஷித்தவனாய் |
| வானோர் | தேவதைகள் [ண்டு | சக்கரம் | ஸுதர்சநத்தினால் |
| புக்கு | திரண்டுவந்து [யை | செல்வன் | ஶ்ரீமானாய் |
| அரண் தந்தரு ளாய் | ("எங்களுக்கு ரக்ஷை கொடுத்தருள வேணும்" | தென்பே | தென் திருப்பேருக்கு |
| | | தலைவன் | ஸ்வாமியானவனுடை |
| என்ன | என்று ப்ரார்த்திக்க, | தாள | திருவடிகளை [ய |
| பொன்னாகத் தானை | (அவர்களுக்கு விரோதியான) ஹிரண்யனை | அடைந்து | ஆஶ்ரயித்து |
| | | உய்ந்தேனே | உஜ்ஜீவித்தேன் (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வக்கரனித்யாதி) தேவர்களெல்லாரையும் நெருக்கி நலிந்து திரிந்தானொருத்தன் தந்தவக்ரனென்பானொருஅஸுரன்; அவன்வாயை முன்பொருகாலத்திலே அநாயாஸேந கிழித்துப் பொகட்ட ஆஶ்சர்ய சக்தியுக்தனே! என்று. (வானோர்) தேவர்களடங்கலும் திரண்டு "எங்களுக்கொருபுகல் தந்தருளவேணும்" என்ன. (பொன்னாகத்தானை) ஹிரண்யனை, நரஸிம்ஹவேஷத்தைக்கொண்டு, நக்கு - சிரித்து, பெரியகிளர்த்தியோடே திருவுகிராலே பிளந்து, "ப்ரஹ்லாதன்விரோதி போகப்பெற்றோம்" என்று உகந்த. (சக்கரச் செல்வன்) ஹிரண்யனுடல் திருவுகிருக்குப் போந்ததில்லை; பின்னை, திருவாழி, அழகுக்குப் பத்திரம் கட்டுவாரைப்போலே யாய்த்து. (தென்பேரித்யாதி) தென்திருப்பேரிலே நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வாதிகனை ஸர்வேஶ்வரனைக் கிட்டி உஜ்ஜீவிக்கும்படியே! ... (௫)

அ௫. — அஞ்சாம்பாட்டு. (வக்கரனித்யாதி) கீழிரண்டுபாட்டிலும் ப்ரதாநரான இருவர்க்கு முபகரித்தபடி சொன்னாராய், இதில், தேவர்க்கு

உபகரித்தவன் ஒரு அர்ப்ப(ஸர்)கனுக்கு முதலிஞனென்று கொண்டாடி யநுபவிக்கிருரென்று ஸங்கதி.

சக்கரம் செல்வத்துக்கு உடலாய்த்தென்கிரூர் (ஹிரண்ய னித்யாதி). (பத்திரம்) கத்தி. ... ... ... ... ... ... (ரு)

மூ.—விலங்கலால் கடலடைத்து விளங்கிழைபொருட்டு வில்லால்
இலங்கை மாநகர்க்கிறைவ னிருபது புயந்துணித்தான்
நலங்கொள் நான்மறை வல்லார்களோத்தொலி யேத்தக் கேட்டு
மலங்குபாய்வயல் திருப்பேர் மருவி நான் வாழ்ந்த வாறே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விளங்கு | ப்ரகாசியாநின்ற | வல்லார்கள் | அப்யஸிக்க வல்லரான ப்ராஹ்மணர்களுடைய |
| இழைபொருட்டு | ஆபரணங்களை யுடைய பிராட்டிக்காக | ஏத்த | உச்சமாக உச்சரிக்கப்பட்ட |
| விலங்கலால் | மலைகளினுல் | ஓத்துஒலி | வேத கோஷத்தை |
| கடல் | ஸமுத்ரத்தை | கேட்டு | கேட்டு |
| அடைத்து | அணைசெய்து, | மலங்கு | மத்ஸ்யங்களானவை |
| மா இலங்கை நகர்க்கு | பெரிய லங்காநகரத்துக்கு | பாய் | துள்ளி ஏப்படும் போகாநின்ற |
| இறைவன் | ஸ்வாமியான ராவணனுடைய | வயல் | கழனிகளையுடைய திருப்பேர், |
| இருபதுபுயம் | இருபது தோள்களை | மருவி | (ஸேவிக்க) ஆசைப்பட்டு |
| வில்லால் | (தன்) வில்லைவளைத்து | நான் | நான் |
| துணித்தான் | சேதித்தவனை, | வாழ்ந்த | உஜ்ஜீவித்த |
| நலம்கொள் | ஸதாசாரங்களை யுடையராய் | | ஆறு ஏ! (சு) |
| நால்மறை | நாலுவேதங்களையும் | | |

வ்யா.—ஆரும்பாட்டு. (விலங்கல்) நீரிலே ஆழக்கடவதான மலைகளாலே கடலையடைத்து, விளங்காநின்றுள்ள ஆபரணத்தாலே அலங்க்ருதையான பிராட்டியுடைய ஒப்பனையிலே தோற்று, ஆநந்ரியத்வத்துக்கு ஏகாந்தமான வில்லாலே, "ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு மழியாத லங்கையன்ருே எனக்குப் படைவீடு, நானிவ்வூருக்கு நிர்வாஹகனன்ருே" என்று அபிமாநித்திருக்கிற ராவணனுடைய, அவ்வூர்க்குக் கணையம்போலே யிருக்கிற தோள்களைத் துணித்தாறுய்த்து.

(நலங்கொள்) நிர்த்தோஷமாய் நாலுவகைப்பட்டிருந்துள்ள வேதங்களையு மதிகரித்திருக்கிற ப்ராஹ்மணரென்னுதல்; ஆசாரத்தால்

மிக்கு, நாலுவகைப்பட்டிருக்கிற வேதங்களும் கைவந்திருக்கிற ப்ராஹ்மணரென்னுதல். (ஓத்தொலியேத்தக்கேட்டு) அவர்கள் உச்சமாக உச்சரிக்கிற த்வநியைக்கேட்டு, "நம்மைக்குறித்துண்டான ஆரவாரம்" என்று மலங்குகள் பாயாநின்றுள்ள வயலையுடைத்தான திருப்பேரை பருவி நான் வாழ்ந்தவாறே. ... ... ... (௬)

அரு — ஆரும்பாட்டு. (விலங்கலித்யாதி) கீழ் ஓரர்ப்பகனுக்கு உதவினன்; அவ்வளவன்றிக்கே, ஒரு பெண்பிள்ளைக்காக அகடிதங்களைச் செய்தானென் றநுபவிக்கிறரென்று ஸங்கதி.

(கணையம்) உழலைத்தடி - ரக்ஷகமென்கை.
(மலங்கு) மத்ஸ்யவிசேஷம் ... ... ... ... (௬)

மூ.—வெண்ணெய் தான முதுசெய்ய வெகுண்டு மத்தாய்ச்சியோச்சிக்
கண்ணியார் குறுங்கயிற்றல் கட்ட வெட்டென்றிருந்தான்
திண்ண மாமதிள்கள் சூழ்ந்த தென்திருப்பேருள் வேலை
வண்ணனூர்நாம நாளும் வாய்மொழிந்துய்ந்தவாறே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தான் | யசோதை தபஸ்ஸு பண்ணிப்பெற்ற தான் | இருந்தான் | இருந்தவனாய், |
| வெண்ணெய் | நவநீதத்தை [வில் | திண்ணம் | த்ருடமாய் |
| அமுதுசெய்ய | அமுதுசெய்தவள | மா | பெரிதான |
| ஆய்ச்சி | தாயான யசோதை | மதிள்கள் | ப்ராகாரங்களாலே |
| வெகுண்டு | கோபித்து | சூழ்ந்த | சூழப்பட்ட |
| மத்து | தயிர்கடைகிறமத்தை | | தென் திருப்பேருள், |
| ஓச்சி | வீசியெறிந்து | வேலை | ஸமுத்ரம்போன்ற |
| கண்ணி | முடிகளினுல் | வண்ணனூர் | வர்ணத்தை யுடையனைவனுடைய |
| ஆர் | பூர்ணமாய் | நாமம் | திருநாமங்களை |
| குறு | சிறிதான | நாளும் | ப்ரதிதிநமும் |
| கயிறுல் | தாம்பினுல் | வாய்மொழிந்து | சொல்லி |
| கட்ட | பந்திக்க [து | | உய்ந்தஆறு ஏ! (எ) |
| வெட்டென்று | (அதுக்கு) ஸம்மதித் | | |

வயா. — ஏழாம்பாட்டு. (வெண்ணெயித்யாதி) "கவ்யம் பாழ்போகவொண்ணுது, இத்தை உபஜீவிக்கைக்கொரு பிள்ளைவேணும்" என்றுய்ந்து இவள் நோன்பு நோற்றுப்பெற்றது. ஆனுலும், அது காத்மியாதபடி அமுதுசெய்யப்புக்கால் ஸம்வதியார்களே; அவர்கள்

மறைக்க மறைக்க இவனுக்கு அதிலே ஆதரம் மிகுமே, தன் தாரக (ஔர்ஸ) மிழக்கமாட்டானே. அவர்கள் தங்களுடைய நோவக்கடைந்து உறிகளிலே சேமித்துவைத்த வெண்ணெயை அமுதுசெய்ய. (வெகுண்டு) சீறி, யசோதைப் பிராட்டியானவள் மத்தைக்கொண்டு அடிக்கக் கோலி, பல பிணைகளையுடைத்தாய்க் குறளாயிருந்துள்ள தாம்பாலே கட்ட; தாம்பை நெடுகப்பண்ண வொண்ணாதே, திருமேனியிலே இடங்காணு மித்தனையிறே; அப்படிக்கட்ட, (வெட்டென்றிருந்தான்) "சாமானியனென்று இடுமீடெல்லா மிடவமையும்" என்றிருப்பாரைப்போலே, வேறொரு ஹேதுவைச்சொல்லி யன்றியே இது சொல்லியே நம்மைக் கட்டுவதே! என்று இசைந்திருந்தானுய்த்து.

(திண்ணமித்யாதி) அரணாகப் போரும்படியான மதிள்களாலே சூழ்ந்த தென் திருப்பேருள். (வேலையித்யாதி) கடல்போலே ஶ்யாமளமான வடிவை யுடையரானவருடைய. அவ்வடி வழகுக்கு வாசகமான திருநாமங்களைச் சொல்லி ஒருவ னுஜ்ஜீவிக்கும்படியே! ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (வெண்ணெ யித்யாதி) *நாரீணா முத்தமைக்காக அகடிதங்களைச் செய்த வளவன்றிக்கே, இடைப்பெண்களுக் கெளியனாய்க் கட்டவு மடிக்கவு மானனென் றநுபவிக்கிறு ரென்று ஸங்கதி.

"தான்" என்றதுக்குக் கருத்தை யருளிச்செய்கிறார் (கவ்யமித்யாதி, மாட்டானே) என்னுமளவும். "ஓச்சி" என்றதினர்த்தம் (அடிக்கக்கோலி) என்றது. ... ... ... ... ... ... . . (எ)

மூ.—அம்பொனாருலகமேழு மறிய வாய்ப்பாடி தன்னுள்
கொம்பனார்பின்னை கோலம் கூடுதற் கேறு கொன்றான்
செம்பொனார்மதிள்கள் சூழ்ந்த தென்திருப்பேருள் மேவும்
எம்பிரான்நாம நாளுமேத்தி நானுய்ந்தவாறே. ... (அ)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| அம் | அழகிய | கொம்பு | வஞ்சிக்கொம்பு போன்ற சரீரத்தையுடைய |
| பொனார் | ஸ்வர்ணத்தோடொத்த (ஶ்லாக்யமான) | | |
| உலகம்ஏழும் | ஸப்தலோகங்களும் | பின்னை | நப்பின்னைப் பிராட்டியினுடைய |
| அறிய | அறியும்படியாக, | | |
| ஆய்ப்பாடி தன்னுள் | திருவாய்ப்பாடியிலுள்ள | கோலம் | அழகோடு |
| | | கூடுதற்கு | சேர்க்கைக்காக |

| | | | |
|---|---|---|---|
| ஏறு | ருஷபங்களை | மேவும் | பொருந்தியிருக்கிற |
| கொன்றான் | கொன்றவனாய், | எம்பிரான் | நம் ஸ்வாமியுடைய |
| செம் | சிவந்த | | நாமம் நாளும் ஏத்திநான் உய்ந்த |
| பொன் | பொன்னோடொத்த[ள் | | ஆறு, ஏ! (அ) |
| | மதிள்கள்சூழ்ந்த தென் திருப்பேரு | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (அம்பொனித்யாதி) ஓரிடைச்சேரிமாத்ரமன்றிக்கே, ஸ்லாக்யமான ஏழுலகங்களுமறிய, திருவாய்ப்பாடியிலே, வஞ்சிக்கொம்புபோலே யிருக்கிற வடிவையுடைய நப்பின்னைப் பிராட்டியுடைய ஒப்பனையோடே சேருகைக்காக, ருஷபங்களேழையும் நிரஸித்தான். தர்ஸநீயமான மதிள்களாலே சூழப்பட்ட திருப்பேரிலே நித்யவாஸம் பண்ணுகிற எனக்கு உபகாரகரானவருடைய திருநாமத்தை ஏத்தி நானுய்ந்தவாறே! ... ... (அ)

அரு—எட்டாம்பாட்டு (அம்பொனித்யாதி) ஓரிடைச்சிக்குப் பிள்ளையாய்க் கட்டுண்ட வளவன்றிக்கே, ஓரிடைச்சிக்காகத் தன்னைப் பேணாதே கருமாரி பாய்வாரைப்போலே எருதுகளின் கொம்பிலே பாய்ந்து கொன்று வேறொரு சொம்பைக் கைப்பற்றினனென்றநுபவிக்கிறாரென்று ஸங்கதி

அழகிய பொன்போ லுலகமென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஓரித்யாதி) ... .. ... ... .. (அ)

மூ.—நால்வகை வேத மைந்து வேள்வி யாறங்கம் வல்லார்
மேலை வானவரில் மிக்க வேதியராதிகாலம்
சேலுகள் வயல் திருப்பேர்ச் செங்கண் ‡மாலோடும் வாழ்வார்
சீலமாதவர்கள் சிந்தையாளியென் சிந்தையானே. (௯)

| பதம். | உரை | பதம். | உரை. [ய், |
|---|---|---|---|
| நால்வகை | நாலுவிதமான | வேதியர் | ப்ராஹ்மணோத்தமரா |
| வேதம் | வேதங்களிலும் | ஆதிகாலம் | ஸ்ருஷ்டிகாலம் துட |
| ஐவேள்வி | பஞ்சமஹாயஜ்ஞங்க | சேல் | கயல்கள் [ங்கி, |
| | ளிலும் | உகள் | துள்ளாநின்ற |
| ஆறுஅங்கம் | வ்யாகரணம் முதலிய | வயல் | கழனிகளையுடைய |
| | ஆறுஅங்கங்களி | திருப்பேர் | திருப்பேரில் |
| வல்லார் | ஸமர்த்தராய் [லும் | செம் | சிவந்த |
| மேலை | மேலுலகத்திலுள்ள[ல் | கண் | நேத்ரங்களையுடைய |
| வானவரில் | தேவதைகளிற்காட்டி | மாலோடும் | ஸர்வேஸ்வரனோடு |
| மிக்க | அதிசயித்தவராய், | | கூட |

‡ "மால்லோடும்," "மாலோடும்" என்று இரண்டுபாடமும் காண்கிறது யதாஸம்ப்ரதாய மநுஸந்தேயம். ஆத்யம், லக்ஷணதுஷ்டம்.

| | | | |
|---|---|---|---|
| வாழ்வார் | நித்யவாஸம் பண்ணுமவராய் | ஆளி | தனக்கு வாஸஸ்தானமாகக் கொண்டு ஆளுமவன் |
| சீலம் | ஸௌசீல்யத்தையும் | | |
| மா | ஶ்லாக்யமான | என் | என்னுடைய |
| தவத்தர் | தபஸ்ஸையுமுடையரானவர்களுடைய | சிந்தையான் | ஹ்ருதயத்தில் நித்யவாஸம் பண்ணுகிறான். (௯) |
| சிந்தை | ஹ்ருதயத்தை | | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (நால்வகை) நாலுவகைப்பட்ட வேதம், பஞ்சமஹாயஜ்ஞங்கள், அங்கங்களாறும், இவற்றில் வந்தால் ப்ரஹ்மாதிகளிலுங் காட்டில் கைவந்திருக்கிற ப்ராஹ்மணரானவர்கள். ஸ்ருஷ்டிகாலந்துடங்கி ஸர்வேஶ்வரனோடொக்கக் குடியேறி ஜீவித்துப் போருகிறவர்களாய்த்து. சீலகுணப்ரசுரராய் மிக்க தபஸ்ஸையுடையரா யிருக்கிற ப்ராஹ்மணர் ஹ்ருதயத்தைத் தனக்காக்கிக்கொண்டிருக்கிறவன் என்னுடைய ஹ்ருதயஸ்தனானான். ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிற் சொன்ன பெண்பித்தனுமவன் கிடீர்! ஸகல வித்யாதிகரானவர்க்கு உபாஸ்யன், அவன் அவர்களைச் சிந்தைவிடாதாப்போலே தம் திருவுள்ளத்தில் குடியிருந்தானென்று களிக்கிறாரென்று ஸங்கதி.

(என்னுடைய ஹ்ருதயஸ்தனானான்) என்றத்தாலே - கீழ்ச்சொன்ன ஸௌசீல்யத்திலும் மிக்க சீலமென்று கருத்து. ... ... ... (௯)

மூ.—வண்டறை பொழில் திருப்பேர் வரியரவணையிற் பள்ளி
கொண்டுறைகின்ற மாலைக் கொடி மதிள் மாட மங்கை
திண்டிறல் தோள் கலியன் செஞ்சொலால் மொழிந்தமாலை
கொண்டிவை பாடியாடக் கூடுவர் நீள்விசும்பே. ... (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகள் | அணையில் | படுக்கையில் |
| அறை | சப்தியாநின்ற | பள்ளிகொண்டு | சயனித்து [இற |
| பொழில் | சோலைகளையுடைய | உறைகின்ற | நித்யவாஸம் பண்ணு |
| திருப்பேர் | திருப்பேரென்னும் திவ்யதேசத்தில் | மாலை | ஸர்வேஶ்வரன் விஷயமாக, |
| வரி | மச்சங்களையுடைய | | |
| அரவு | ஆதிசேஷனாகிற | | |

வ்யா.—முதற்பாட்டு. (பொறுத்தேன்) ஸம்ஸாரிகளை "பந்துக்கள்" என்று நினைத்திருந்தால், அவர்கள் தாங்கள் சத்ருக்களாயிருக்கச் செய்தேயும், அண்ணியாரைப்போலே வர்த்தித்து, இவன்பண்ணின உபகாரங்களைக் கொண்டு, உபகரியாதானாக வார்த்தை சொன்னால், "இவர்கள் வேறுசிலரை இவ்வார்த்தை சொல்லாநின்றார்களோ, நம்மை இவ்வார்த்தை சொல்லிற்று நம்மோடுண்டான உறவில் ஊற்றமன்றோ" என்று, அவர்கள் சொல்லும் புல்லியசொற்களை ஸஹித்துப் போந்தேனென்னுதல்; அன்றிக்கே, ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், புண்டரீகாக்ஷனாயிருக்கிற ஸர்வேஶ்வரனை ஸ்துதிக்கக்கடவ பாசுரங்களைக்கொண்டு, (௧) "பாரிலோர்பற்றையை" என்கிறபடியே த்ருணஸமனாயிருக்கிற க்ஷுத்ரனை, (௨) "பனியிருங்குழல்கள்" என்றும் (௩) "சுந்தரத்தோள்" என்றும் சொல்லிக்கவிபாடும்படி, புல்லியசொற்களை நெஞ்சிலே தரித்துப் போந்தேனென்னுதல். சொல்லுக்குப்புன்மை, விஷயத்தைப்பற்ற வருமதிறே.

(பொருளித்யாதி)சிலரை பந்துக்களாக நினைத்திருந்தால், அவர்களுக்கு உபகரிக்கும்போது அர்த்தம்வேணுமே; பிறரைக்கவிபாடுவது அர்த்தத்துக்காகவிறே; ஆகையாலே, ஶ்ரோத்ராதிகளுக்கு ப்ராப்தமாயிருக்கிற அர்த்த காமங்கள் என்று சொல்லப்படுகிற இரண்டையும், கடமை இறுப்பாரைப்போலே அவற்றாலேபரிபூ(ர்ண)தனாய்க் கொடுத்துப்போந்தேன்; இப்படி அர்த்தக்ரஹணம் பண்ணப்புக்கால், அதுக்கு ஸஹகரித்தவர்களுக்கு ஸ்நேஹித்து வாழ்விக்கக்கடவனென்றும், அதுக்கு விரோதத்தைப்பண்ணினானைச் செற்று முடிக்கக்கடவனென்றும் ப்ரதிஜ்ஞைபண்ணி, அந்தஸங்கல்பத்தை அநுஷ்ட்டாநபர்யந்தமாக்கித் தலைக்கட்டிப்போந்தேன்; பொருளின்பமெனவிரண்டுமிறுத்தேன்.

(அவைதன்னைமனத்தகற்றி) இப்படி நெடுநாள் வாஸனைபண்ணிப்போந்த இவற்றைக் கழித்துக்கொள்ளப்பார்த்து, அது என்னால் செய்து தலைக்கட்டப்போகாதாகையாலே, வெறுத்துவந்து உன் திருவடிகளைப் பற்றினேனென்னுதல்; அன்றிக்கே இவைதன்னை ஸங்கல்பிக்குமித்தனைபோக்கி இவனால் அநுஷ்ட்டித்துத் தலைக்கட்டப் போகாதே; வாஸனையாலே அவைதான் நெஞ்சிலேபட்டுக்கிடக்குமே;

(௧) தி-வாய்-௩-௯-எ. (௨) தி-வாய்-௬-௬-௩. (௩) நா-தி-௯-௧.

அவற்றை ஹ்ருதயத்திலே விரிய விட்டுக்கூடு பூரித்து. "அவைதன்னை" என்று-ஆக த்வேஷங்களை. (வெறுத்தேன்) அதுதான் பின்னை சோக மோஹங்களோடே தலைக்கட்டுமிறே; அத்தாலே வந்து தேவர் திருவடிகளிலே சரணம்புகுந்தேன். (திருவிண்ணகர்)இவன் இப்போது செய்கிற இவை விபாகத்தில் அநர்த்தத்தோடே தலைக்கட்டக்கடவது; அப்போதாக "சுக்கிடத்திட்டுண்டோ" என்பாரைப்போலே, நமக்குத்தஞ்சமாவாரார்? என்று ஆராயக்கடவன், அவ்வளவில் நாம் தூரஸ்த்தராகவொண்ணாது என்று, நான் விபரீதத்திலே கைவளருகிறநாளே தொடங்கி எண்ணித் திருவிண்ணகரிலேவந்து ஸந்நிஹிதனாகையாலே திருவடிகளிலே வந்து சரணம்புகுந்தேன் என்னுமளவுமாய்த்திறே இங்குவந்து நின்றது. ... ... ... ... ... (க)

---

அரு.—முதற்பாட்டு. (பொறுத்தேனித்யாதி) "புன்சொல் - நெஞ்சில் - பொறுத்தேன்" என்று அந்வயித்து, "நெஞ்சில்" என்று விசேஷித்ததுக்கு ஹேது பூர்வகம் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகளை யித்யாதி). லோகோக்தியன்றியே "சொல்" என்றது - கவிகளாய், அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி).

இவ்வர்த்தத்வயத்துக்கும் சேரத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (சிலரை யித்யாதி). "ஐம்புலன்கட் கடனாயின - பொருளின்பமெனவிரண்டும் இறுத்தேன்" என்று அந்வயித் தருளிச்செய்கிறார் (ஆகையாலே யித்யாதி). இத்தால் - பந்துக்களுக்காக இறுத்தேனென்று முந்தின வர்த்தத்துக்குத் தாத்பர்யமும், ஐம்புலன்கட்காக இறுததேனென்று இரண்டா மர்த்தத்துக்கு அநுகுணமாகத் தாத்பர்யமும் கண்டுகொள்வது. "ஆர்வச்செற்றத்தை - வாயிலொட்டி யறுத்தேன்" என்று அந்வயித்தருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி).

"அவைதன்னை" என்றது - "பொருளின்பம்" என்றவற்றை யாதல், ஆர்வச்செற்றங்களைச் சொல்லுதல்; ஆக, இரண்டுயோஜனை யருளிச்செய்கிறார் (இப்படி நெடுநாளித்யாதி). "மனத்தகற்றி" என்றதுக்கு - பொருளின்பங்களை மனத்தில்நின்றும் அகலும்படி பண்ணியென்றுதல், ஆர்வச்செற்றங்களை மனத்திலே, அகல - விஸ்த்ருதமாகப் பண்ணி யென்றுதல் சொல்லலாமென்று கருத்து (சுக்கிடத்திட்டுண்டோ) என்றது - ஒருசெட்டி அக்கரைக்குப் போகாநிற்க, ஓடக்காரன் காசுகேட்க, "நான் என்காலாலே நடந்து போகாநிற்கச்செய்தே உனக்குக் காசு ஏது" என்று போனவ், திரும்பிவரும்போது கட்டாற்றிலே வருகிறவளவிலே மார்மட்டுக் கழுத்துமட்டாக, அப்போது பயப்பட்டு "சுக்கெடுகிறேன், திட்டுண்டோ - திடருண்டோ" என்றானும்; அத்தைச் சொல்லுகிறது. இத்தால் - இச்சே

தானும் ஏற்கவே விசாரியாமல் ஆபத்து வந்தவேளையிலே தேடுவன், அப்போ தாகவொண்ணுது என்று திருவிண்ணகரில் ஏற்கவேவந்து நின்றான் என்றதாய்த்து. ... ... ... ... ... .. .. (க)

மூ.—மறந்தேனுன்னை முன்னம் மறந்த மதியின் மனத்தால்
இறந்தே னெத்தனையு மதனுலிடும்பைக் குழியில்
பிறந்தே யெய்த்தொழிந்தேன் பெருமான் திருமார்பா
சிறந்தேன் நின்னடிக்கே திருவிண்ணகர் மேயவனே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உன்னை | எப்போதும்நினைக்கத் தக்க உன்னை | பிறந்தே | இடைவிடாத ஜநந(மரண)ங்களை யுடையனுய்க்கொண்டு |
| முன்னம் | அநாதிகாலமாக [ன், | | |
| மறந்தேன் | நினையாதொழிந்தே (அதுக்குமேலே) | எய்த்து | இளைத்து (சக்தியற்றவனுய்க கொண்டு) |
| மறந்த | நினையாதொழிந்தேனென்கிற | ஒழிந்தேன் | ஸ்வயத்நத்தில் நின்றும் நிவ்ருத்தனுனே |
| மதிஇல் | ஜ்ஞாந (அநுதாப)மு மில்லாத [கையால் | பெருமான் | ஸ்வாமியே! [ன், |
| மனத்தால் | மநஸ்ஸை யுடையேனு | திருமார்பா | புருஷகார பூதையான பிராட்டியைத் திருமார்பிலே யுடையவனே! (இப்போது) |
| எத்தனையும் | மிகவும்(அநித்தைக்காட்டிலும்) | | |
| இறந்தேன் | கைகழியப் போந்தேன்; (கிக்ருஷ்டனு | நின் அடிக்கே | உன் திருவடிகளுக்கே (ஆட்பட) |
| அதனுல் | ஆகையாலே[னேன்) | | |
| இடும்பை | துக்கரூபமான | சிறந்தேன் | தகுந்தவனுனேன்; |
| குழியில் | கர்ப்பத்தில் | | திருவிண்ணகர் மேயவனே! (உ) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. இத்தனையோ செய்தகுற்றமென்ன, (மறந்தேனுன்னை முன்னம்) அந்தப்பொருளின்பங்களோபாதி உன்னையும் ஒருமூலையிலே ஆதரித்துக்கொடு போரப் பெற்றிலேன். அது செய்து போந்தாராகில் அப்போதைக்கிப்போது அவற்றுக்குப் பரிஹாரம் பண்ணிஞராவரே. (மறந்தேன்) யாதொரு விஷயம்விடாதே நினைக்கவடுக்கும். அதொன்றையும் மறந்துபோந்தேன். மதுரையிலே நிர்வஹியாநிற்கச்செய்தே, ஒப்பிலாதபெருமாள் (க) "ధ్యేయో నారాయణ స్సదా - த்யேயோ நாராயணஸ்ஸதா" என்கிறவிஷயத்தையாகாதே மறந்துபோந்தது" என்றார். அல்லாதவை செய்தபடிசெய்ய, உன்னை முந்

(க)

துற முன்னம் மறந்துகொடுநின்றேனென்னுதல்; அன்றிக்கே, அநாதி காலம் மறந்துபோந்தேனென்னுதல். இம்மறப்புப்போருகிறது நெடு நாளுண்டாகில், உன்னை முன்னம் மறந்திலேன் என்றன்றோ சொல்ல வடுப்பது என்னில்; அதுவேண்டாவாய்த்து, "உன்னை"என்கிறவிடத் திலே ஸம்பந்தத்தை ஸ்மரித்தவராகையாலே; ஸம்பந்தம் ஸ்வாபாவி கமேயாகையாலே, முன்பு நெடுநாள் மறந்துபோரச்செய்தேயும் சில நாள் ஸ்மரித்து மறந்தாப்போலே யிருக்கத் தோற்றிற்று.

* கலங்காப் பெருநகாந்தன்னிலே யிருந்து மறக்கிறதன்றிறே, ஸம்ஸாரத்திலே யிருந்து மறக்கை குற்றமோவென்ன; அவ்வளவேய ன்று, நான் சேதநனுகப்பெற்றிலே னென்கிருர். சேதநனுகில் "மறந் தோம்" என்னும் அநுதாபம் பிறக்கவேணுமிறே மறந்தால்; "மறந் தோம்" என்கைக்கு யோக்யதையில்லையிறே அசித்துக்கு; சித்துக்கு ஜ்ஞாத்ருத்வ மாகிறது - ஜ்ஞாநகுணங்களுக்கு ஆஶ்ரயமாகையிறே; அக்குணங்கள் தன்பக்கல் காணுமையாலே அவற்றுக்கு ஆஶ்ரயமுண் டாகப்பெற்றதில்லை. மறந்தோமென்கிற மதியில்லாத நெஞ்சையுடை யேனென்கையாலே - அநுதாபரூபஜ்ஞாநமும் பிறக்கைக்கு த்வாரம் மநஸ்ஸிறே; அதில்லாமையாலே (இறந்தேனெத்தனையும்) அசித்துக் கும் அவ்வருகேயானேன். முதலிலே நினைக்கைக்கும் யோக்யதையில் லையிறே அசித்துக்கு; சித்துக்கு யோக்யதையுண்டாயிருக்கச்செய்தே யும், நினையாமையாலே அசித்துக்கும் அவ்வருகே கை கழியப்போ னேன். (க) "அஸந்நேவ" என்று ப்ரமாணங்களும் சொல்ல லாம்படியானேன். உண்டாயிருக்கச் செய்தேயும், "இல்லை" என்று வ்யவஹரிக்கலாம்படி நசித்தேன்.

(அதனால்) (உ) "அவித்யாதருஸம்பூதி பீஜமேதத்த்விதா ஸ்த்திதம்" என்கிறபடியே - அநாத் மந்யாத்ம புத்தியும் அஸ்வே ஸ்வபுத்தியும் ஸம்ஸாரத்துக்கு பீஜமென் றிருப்பார்கள்; இவர், அநுதாபமில்லாமை ஸம்ஸாரபீஜமென்றிருக்கி ருர். (இடும்பை) துக்கம். துக்கத்தை விளைக்கக்கடவதான கர்ப்பத்தி லே போய்ப்புக்கு, சாவது பிறப்பதாய்க்கொண்டு க்லேசப்பட்டேபோ ந்தேன். (பிறந்தே) இப்படிசாவது பிறப்பதாய்ப்போராநின்றால், நடு விலே காதாசித்கமாக பகவத் ஸமாஶ்ரயணம்பண்ணிலிறே அதொரு

(க) தை-ஆந-சு-க.   (உ) வி-பு-சா-எ-கக.

ஜந்மத்துக்கு ப்ரதிபந்தகமாக வற்றுவது; அப்படி புருஷகாரங்காட்டி மீண்டதில்லை. (எய்த்தொழிந்தேன்) இன்னும் பிறக்கைக்கடியான கர்மவாஸனை யுண்டேயாகிலும், பிறக்கைக்கு த்ரவ்யமில்லாதபடி யானேன்; - கர்மவாஸனை கிடந்து பிறக்கவேண்டிலும் பிறக்கைக்கு க்ஷமனல்லேன். ‡ (ஒழிந்தேன்-நானே-எய்த்தேன்) இனி, உடையவர்களுக்கு எடுத்துக்கொள்ள நல்லகாலமென்கிறார்.

உடையவர்கள் எடுத்துக்கொள்ளுகிறார்கள் என்கிறது நீர்தாம் எது நினைத்தென்ன; (பெருமான்). உம்மை நினைத்துக் கைகழிந்தீராகில் செய்யலாவதுண்டோ வென்ன; (பெருமான்) எனக்கு நானேயோ உளேன்? நீயல்லையோ? சேஷித்வப்ராப்தியைப் பற்றச் சொல்லுகிறீராகில், சேஷிகளாவார்க்கு ஸ்வாதந்த்ர்ய முண்டாயிருக்குமே; ஸ்வதந்த்ரரான நம்மைச் சொல்லுகிறதென் நீரென்ன; (திருமார்வா) உன்னுடைய ஸ்வாதந்த்ர்யத்தை அழித்து ஸ்வீகரிப்பிக்கும் பிராட்டியன்றோ அருகேயிருக்கிறாள். (க) “నకశ్చిన్నాऽపరాధ్యతి - நகஶ்சிந்நாऽபராத்யதி” என்பாளன்றோ அருகே. (சிறந்தேன்) அவள் ஏதேனும் தப்புச் சொல்லிலும் விடேனென்னும் நீயும், உன் ஸ்வாதந்த்ர்யத்தையழித்து உன்னையிட்டு ஸ்வீகரிப்பிக்குமவளும், இருவரும் இங்கே ஸந்நிதிபண்ணுகையாலே, தேவர் திருவடிகளுக்குத் தகுதியானேன். (திருவிண்ணகர்) *கலங்காப் பெருநகரம் இருப்பாயிருக்க, அவ்விடத்தை விட்டுப் பிராட்டியோடே கூட, எய்த்தாரை எடுக்கைக்காகத் திருவிண்ணகரிலே ஸந்நிஹிதனாய். நான் எய்த்துக் கொடுநின்றேன்; எய்த்தார்க்கும், எய்த்தாரை எடுக்கவந்து நிற்கிறவர்களுக்கும் ஒரு சேர்த்தியில்லையோ? ... ... ... ... ... ... ... (உ)

---

அரு.—இரண்டாம்பாட்டு. (மறந்தேனித்யாதி) (உ) “మేరుమన్దరమాత్రోऽపిరాశిః పాపస్య కర్మణః। కేశవం వైద్యమాసాద్య దుర్వ్యాధి రివనశ్యతి- மேருமந்தரமாத்ரோऽபி ராஶிঃ பாபஸ்ய கர்மணঃ। கேசவம் வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நஶ்யதி” என்றிருக்க, நீரிங்ஙித்தனை அஞ்சவேணுமோ என்னும் சங்காமுகேந ஸங்கதி ஸ்ப்புரிப்பிக்கிறார் (இத்தனையோவித்யாதி). இந்த பதத்துக்கு இப்படி அர்த்தம் சொன்னபேருண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (மதுரையிலே யித்யாதி).

மேலுக்கவதாரிகை (கலங்காவித்யாதி). சேதநனால் அநுதாபம் வேணும் என்கைக்கு ஜ்ஞாபக மென்னென்ன வருளிச்செய்கிறார் (சேதந

---

(க) ரா-யு-ககசு-௨௨. (உ) விஷ்ணுதர்மம்-எ அ. ‡ (பா) நான்.

ஞாதி லித்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே); அசித்வ்யாவ்ருத்த ஞைகையாலே அநுதாபத்துக்கு யோக்யதை உண்டென்று கருத்து. மேலுக்கவதாரிகை (அநுதாபேத்யாதி). "மறந்த மதியின்மனம்" என்கையாலே - அநுதாபமில்லை யென்றாய், அசித்ஸாம்யம் சொல்லிற்று; சித்துக்கு ஸாம்யம் எவ்வாகாரத்தாலே யென்ன வருளிச்செய்கிறார் (சித்துக் கித்யாதி). "எத்தனையும் - இறந்தேன்" என்றது- மிகவும் இறந்தேனென்றாய் அசித்தைப்பற்ற ஆதிக்யஞ் சொல்லுகிறது.

"பிறந்தே" என்கிற அவதாரணத்தைப் பற்ற வருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி). (காட்டி)புருஷகார முண்டேயென்று. "எய்த்தொழிந்தேன்" என்று முழுச்சொல்லாக்கி யருளிச்செய்கிறார் (இன்னுமித்யாதி). விவரணம் (கர்மேத்யாதி) இரண்டுசொல்லாக்கி அந்வயித்து "ஒழிந்தேன்" என்றதுக்கு ஸ்வயத்நத்தை விட்டேன் என்றாக்கி, அத்தாலே "எய்த்தேன்-தரைப்பட்டேன், போக்கற்றேன்" என்றாக்கி, இரண்டாலும் பலிதார்த்த மருளிச்செய்கிறார் (இனியித்யாதி). இத்தால் - ஆகிஞ்சந்யாநந்ய கதித்வங்களுடைய ஞைகையாலே உனக்கு நல்ல ஸமயமென்று கருத்து.

இரண்டுபதமாக்கின பக்ஷத்துக்கு அநுகுணமாக ஒரவதாரிகை யருளிச்செய்து, முழுச்சொல்லான பக்ஷத்துக்குச் சேர "பெருமான்" என்றதுக்கு அவதாரிகை (உம்மையித்யாதி) ... ... ... ... (௨)

௩.—மானேய் நோக்கியர்தம் வயிற்றுக்குழியி லுழைக்கும்
ஊனேராக்கை தன்னை யுதவாமை யுணர்ந்துணர்ந்து
வானேமாநிலமே வந்துவந்தென் மனத்திருந்த
தேனே நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (௩)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வானே | நித்யவிபூதி நிர்வாஹ | நோக்கியர்தம் | கண்ணழகை யுடையரான ஸ்த்ரீகளுடைய |
| மா | பெரிய [ கனே! | | |
| நிலமே | பூமியோடு கூடின லீலாவிபூதிக்கு நிர்வாஹகனானவனே! | வயிற்றுக்குழியில் | கர்ப்பத்திலிருந்து |
| வந்து | பரமபதத்தில் நின்று | உழைக்கும் | க்லேசப்படுமதாய், |
| உவந்து | உகப்புடனே[ ]வந்து | ஊன் | மாம்ஸமயமாய், |
| என்மனத்து | என் ஹ்ருதயத்தில் | ஏர் | புருஷார்த்தஸாதகமாகையாகிற அழகை யுடையதான |
| இருந்த | நித்யவாஸம் பண்ணுகின்ற | | |
| தேனே | போக்யபூதனே! | ஆக்கைதன்னை | கேவல சரீரத்தையும் |
| மானேய் | மானோடொத்த | | |

| | | | |
|---|---|---|---|
| உதவாமை | (அது என்னுடைய புருஷார்த்தத்துக்கு) ஸாதநமாகாமையையும் | உணர்ந்து | உ நன்றாக அறிந்து ணர்ந்து |
| | | நின் அடைந்தேன் | உன்னையே ஸாதநமாகப் பற்றினேன். |
| | | திருவிண்ணகர் மேயவனே! (௩) | |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மானேய்) மானேய்ந்த நோக்கையுடையாராயிருக்கிற ஸ்த்ரீகளுடைய. (வயிற்றுக்குழியி லுழைக்கும்) ஒரு தேசவிசேஷத்திலே போய் யானுடைய தண்டலிலே உழைக்குமது கிடக்கச்செய்தே,கர்ப்பத்திலே புக்குப்படும் க்லேஶத்துக்கு அவதியில்லையாய்த் திருப்பது. தங்களுடைய பருவமும் மௌக்த்யமும் கிடக்கச்செய்தே, "ஒருப்ரஜை யுண்டாகவேணும்" என்று நோன்பு நோற்பர்களாய்ந்து; இவனுடைய விநாசத்துக்காய்த்து யத்நிப்பது. (ஊனேயாக்கை) என்னவுமாம், (ஊனோாக்கை) என்னவுமாம். மாம்ஸப்ரசுரமான சரீரமென்றபடி; உள்ளும் புறம்பு மொக்க த்யாஜ்யமாயிருக்கை. இதுக்கு இரண்டாகாா முண்டு; தன்னை விரும்பினாரைத் தானும் விரும்பி, தன்னை வேண்டாதாரைத் தானும் வேண்டாதது; ஆகையாலே, புருஷார்த்த ஸாதநமான ஆகாரம் கிடக்கச்செய்தே பந்தகமான ஆகாரமே யாய்த்து விததிபபது. (உதவாமை யறிந்தறிந்து) காண்கிற தேஹத்திலே விருப்பத்தைப் பண்ணி, இது தன்னையே ஆத்மாவாக அபிமாநித்து; ஆத்மாவையும், அதுக்கு சேஷியான ஈஶ்வரனையும் நெகிழ்ந்துபோந்தால், பின்னை பந்தகமேயாய்த்துத் தலைக்கட்டுவது. நல்வழி போகைக்கு உடலாமது கிடக்க, அநர்த்தத்தை விளைக்குமதாய் த்யாஜ்யமாயிருக்கு மென்னுமிடத்தை விசதமாக வறிந்து.

(வானேமாநிலமே) உபயவிபூதி யோகத்தால் வந்த உயர்த்தியும் கிடக்கச்செய்தே, என்னைப் பெறுகை தனக்குப் பெரும்பேறு என்னுமிடம் தோற்ற இராநின்றான். (வானே) என்கிறது - நித்யவிபூதியை; (மாநிலமே) என்கிறது - லீலாவிபூதியை; ஆக, உபயவிபூதி யுக்தனென்றபடி. விபூதித்வயத்தையும் தனக்கு ப்ரகாரமாக உடையனாயிருந்துவைத்து என்னைப் பெறுகை தனக்குத் தேட்டமாக வந்தானாய்த்து. (வந்து வந்து) முன்பு அநாதிகாலம் இவரைப் பெறுகைக் குறுப்பாக வந்து, இவர்பக்கல் முகம் பெறாமையாலே போனமை யடையத் தோற்றி யிருக்கிறது. *எதிர்சூழல் புக்கிறே அவன் திரிந்தது. அன்றிக்கே, (வந்து உவந்து) என்னவுமாம்; அதாகிறது- *கலங்காப் பெரு

நகரத்தை இருப்பிடமாக வுடையவன், தனக்கென்ன ஒரு குடியிருப் பில்லாதாரைப் போலே யிருக்க வந்து, தருப்தனானாய்த்து. (க) *ஆவாஸம்த்வஹமிச்சாமி ப்ரதிஷ்ட மிஹ கானநே - ஆவாஸந்த்வஹமிச்சாமி ப்ரதிஷ்ட மிஹகானநே போலேயாய்த்து. (௨) [லோகநாதः புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி - லோகநாதः புராபூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி] ஸுக்ரீவ மஹாராஜரை நாதராகப் பெறுகைக்கு யோக்யதை ஸம்பா தித்தபடி யாய்த்து லோகநாதரானது.[நாதமிச்சதி] இச்சைக்கு விதே யத்வமில்லை. பெறுவார், பெருதொழிவார், முந்துற இச்சியாநின்றார். (௩) “ஸ ராமோ வானரேந்த்ரஸ்ய ப்ரஸாத மபிகாங்க்ஷதே- ஸ ராமோ வாநரேந்த்ர ஸ்ய ப்ரஸாத மபிகாங்க்ஷதே”. (என்மனத்திருந்த) இன்னும் வரத் தும் போக்குமுண்டு என்று தோற்றுதபடி ஸ்த்தாவர ப்ரதிஷ்ட்டை யாக இருந்தானாய்த்து. (தேனே) தம்மைப் பெறுகைக்கு அவன் வரு வது போவதாய்த்திரிந்த படியை அநுஸந்தித்தவாறே தமக்கினிதா யி ருக்கிறபடி; (௪)“நிவேசிதாத்மா-நிவேசிதாத்மா” (௫)“விஷ்ணோः பதே பரமே மத்வ உத்ஸः- விஷ்ணோः பதே பரமே மத்வ உத்ஸ:” என்கிறபடியே. (கின் னித்யாதி) அறுகாதப்பயணத்துக்குப் பொதிசோறு கொண்டு போம் விஷயம் இங்கே ஸந்நிஹிதமாய்த்து. ... ... ... (௩)

---

அ௩.—மூன்றும்பாட்டு (மானிதயாதி) “எய்த்தொழிந்தேன்” என்று நீர் க்லேசிப்பானென், (க) ஈச்வராய நிவேதிதும் - ஈச்வராய நிவேதி தும் அன்றோ உம்மை ஸ்ருஷ்டித்ததென்ன, அங்ஙனுதவாது என்கிறாரெ ன்று ஸங்கதி.

நரகக்குழியிலும் ஏற்றமோ இது, “வயிற்றுக்குழியிலுழைக்கும்” என்று இத்தைப் போரப்பொலியச்சொல்லி க்லேசிக்கைக் கென்ன வரு ளிச்செய்கிறார் (ஒருவித்யாதி) “மானேய் நோக்கியர்தம்”என்று விசேஷித் ததுக்கு பாவ மருளிச்செய்கிறார் (சங்களுடைய வித்யாதி). முந்தின பாட த்துக் கர்த்த மருளிசசெய்கிறார் (மாம்ஸேசயாதி). இத்தால் பலிதம் (உள் ளுமிதயாதி) இரண்டாம்பாடசதில், “ஏர்” என்று - அழகாய், இப்படி விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (இதுக்கித்யாதி). “ஆக்கை தன்னை” என்றதைதையுங் கூட்டி “தன்னை” என்றத்தாலே மற்றொன்று உணராமை பலிக்கையால், உதவாமை உண்டாய்த்து என்று தாத்பர்ய மருளிச்செய்கிறார் (காண்கிறவித்யாதி) (பந்தகமே) என்றது- பந்தகமான

---

(௧) ரா-ஆர-௫-௩௩. (௨) ரா-கி-௪-௧௮. (௩) ரா-கி-௪-௨௧.
(௪) ஸ்தோ-ர-௨-௭. (௫) பு-ஸூ-௧- (க) விஷ்ணுதத்வம்.

ஆகாரமே யென்றபடி. (தலைக்கட்டுவது) என்ற வநந்தரம், ஆகையாலே யென்று சேஷம்.

மேல்பதத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உபயேத்யாதி). ஸாமாநாதிகரண்யத்தாலே நிர்த்தேசித்ததின் கருத்தை அநுவதித்துக்கொண்டு, மேலுக் கவதாரிகை யருளிச்செய்கிறார் (விபூதித்வயத்தையுமித்யாதி). "உவந்து" என்றத்தை விவரிக்கிறது (அதாகிற இத்யாதி). இப்படி இடம் தேடிவந்த விடமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (ஆவாஸமித்யாதி). உபயவிபூதி யுக்தன் இவனைப் பெறுகை பெருப்பேறு யிருந்த விடமுண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (லோகேத்யாதி). லோகநாதரானவர் இவரை நாதராக இச்சிக்கவேணுமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஸுக்ரீவேத்யாதி). (விதேயத்வமில்லை) என்றது - கார்யமாகாது என்கிற நியமமில்லை என்றபடி. பெருமாளுடைய இச்சையை நீரறிந்தபடி யென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸராம இத்யாதி). அபிகம்ய காங்க்ஷதே என்று கருதது. ப்ரமாணாந்தரமாகவுமாம். ... ... (௩)

மூ.—பிறிந்தேன் பெற்றமக்கள் பெண்டிரென்றிவர் பின்னுதவா
தறிந்தேன் நீபணித்தவருளென்னு மொள்வாளுருவி
எறிந்தேனைம்புலன்களிடர்தீர வெறிந்துவந்து
செறிந்தேன் நின்னடிக்கே திருவிண்ணகர் மேயவனே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| பெற்ற | ஔரஸரான |
| மக்கள் | பிள்ளைகள் |
| பெண்டிர் | மனைவிகள் [ட |
| என்று | என்று சொல்லப்பட் |
| இவர் | இந்த பந்துக்கள் [கு |
| பின் | அந்த (ம்ருத்யு)காலத்துக் |
| உதவாது | துணை யாகாமையை |
| அறிந்தேன் | தெரிந்து கொண்டேன், (பின்பு) |
| பிறிந்தேன் | (அவர்களை) விட்டுவிட்டேன், |
| நீ | ஆபத்ஸகனான நீ |
| பணித்த | (அர்ஜுநனுக்கு) அருளிச்செய்த |

| பதம். | உரை. |
|---|---|
| அருள்என்னும் | பகவதநுக்ரஹத்தையே ஸாதநமாகப் ரதிபாதிக்கிற சரமஶ்லோகமாகிற |
| ஒள் | அழகிய |
| வாள் | கத்தியை [ழற்றி, |
| உருவி | உறையில் நின்றும் க |
| ஐம்புலன்கள் | சப்தாதி விஷயங்களாலும் அவற்றுக்கு ஸாதநங்களாலுமுண்டான |
| இடர்தீர | துயரம் நீங்கும்படி |
| எறிந்தேன் | வீசினேன், |
| எறிந்து | (இப்படி அவற்றை) நிரஸித்து |

| | |
|---|---|
| வந்து உன்னிடத்தில் வந்து நின் அடிக்கே உன் திருவடிகளிலே | செறிந்தேன் இடையறப் பொருந்தினேன் திருவிண்ணகர் மேயவனே!(௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (பிறிந்தேன்) ஸம்ஸாரத்திலே சிலரை பந்துக்களாக நினைத்துத் தானுபகரித்துப் போருகிறது - தனக்குத் தானுதவாதவன்று இவன் செவியிலே திருநாமத்தைச் சொல்லுதல், இவனுக்கு நல்வழி போகைக்கு விரகுபார்த்தல் செய்கைக்காகவிறே; அதில் அவர்கள் செய்வது - (க) "சோர்வினால் பொருள்வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லு" என்னுநிற்பர்களாய்த்து, இவன்றான், தனக்கு உணர்த்தி யுண்டானவன்றே தன்னுடைய ஸர்வஸ்வத்தையும் இவர்களிட்ட வழக்காக்கியாய்த்து வைப்பது. நீ மறந்து ஏதேனும் வைத்ததுண்டாகில் அத்தைச் சொல்லு என்னுநிற்பர்களாய்த்து; இவன்றனக்கும் அவர்களோபாதி புன்மை போருங்காணும். இவன் தன்னுடைய ஸர்வஸ்வத்தையும் அவர்களுக்கு ஆக்காநிற்கச் செய்தேயும், சிறிது இவன் பக்கலிலே உண்டென்று தோற்றவாய்த்து வர்த்திப்பது. [சுற்றமிருந்து] யமபடர் ஒருதிறனும், இவர்களொரு திறனுமாயாய்த்திருப்பது. இவர்கள் அலையாநின்றால் அவன் செய்வதென்னென்னில்; [ஆர்வினவிலும்,] தன்னுடைமையை அடைய எழுதிக்கொடுத்து ஸ்வீகரித்த இளையாளைக் கொடுவந்து முன்னேநிறுத்திலும்; வாய்திறவானாய்த்து.

(பெற்றவித்யாதி). வயிற்றிலேபிறந்த புத்ரன், பார்யை, இவர்களிறே அண்ணிய உறவாய்ப் போருவார்; அவர்களும், இவன்பக்கல் முன்பு உபகாரம் கொள்ளும்நாள் கொண்டு, பின்பு இவனுக்கு உதவவேண்டுமளவான வாறே போகாநிற்பர்கள். ஸ்வப்நத்தில் பதார்த்த தர்சநம் உணர்ந்தால் இன்றியே யிருக்குமாபோலே யாய்த்து இவர்களோட்டை ஸம்பந்தமும். (அறிந்தேன் - பிறிந்தேன்) ஜ்ஞாநம் பிறக்கைக்கு ஒருகாலமும், த்யஜிக்கைக்கு ஒருகாலமும் வேண்டுகிறதில்லை.

இவவருகுண்டான பந்துக்கள் நமக்கு உபகாரகரல்லர்கள். இனி ‡இவ்வளவுக்குத் தஞ்சமாவாரார்? என்று நெஞ்சிலேபட்டவாறே,"என்னையே தஞ்சமாக நினைத்திரு" என்று அருளிச்செய்த தொரு வார்த்தை யுண்டிறே; அது இப்போது வாரா தொழிற்று. (நீபணித்த) அ

(க) பெரி-திரு-௫-௩-௩. ‡ (பா) அவ்வருகுக்கு.

வன் (க) "ஸௌ லேக்ஷ - மா மேகம்" என்றவார்த்தை யாய்த்து. (அருள்) என்கிறதென்னென்றால்; என்னுடைய ப்ரஸாதத்தையே உனக்கு உஜ்ஜீவந ஹேதுவாக அத்யவஸி என்றானிறே. (ஒள்வாள்) ஸம்சயங்களை யடையத் துணித்துப்பொகட்டு, (உ) "நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதாந்மயாச்யுத ஸ்த்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே" என்னப்பண்ண வற்றாயிருக்கை. (ந) "மருவலர்தமுடல் துணிய" என்றது - உபாய விஷயமாக உண்டாயிருக்கிறது. (ஐம்புலன்) ப்ராப்யாபாஸங்களாயும் ப்ராபகாபாஸங்களாயும் வருமவையடைய நினைக்கிறது - அஹங்கார மமகார கர்ப்பமான க்ரியாகலாபங்கள் கிட்டாதபடி யாகவும், தன் பக்கலிலே உத்தேஶ்யதா புத்தியைப் பிறப்பிக்கக் கடவதான விஷயங்கள் கிட்டாதபடி யாகவும். (செறிந்தேன்) இனி அவன்றானே "நானல்லேன்" என்னிலும் அன்னத்தின் மூக்காலும் பிரிக்க வொண்ணாதபடி செறிந்தேன். (நின்னித்யாதி) இவர்க்கு இப்புத்தி விசேஷத்தைப் பண்ணுவித்தது திருவிண்ணகரிலே வந்து ஸந்நிதிபண்ணியாய்த்து. அர்ஜுநனுடைய தேர்த்தட்டுப்போலே யாய்த்து திருவிண்ணகர். அர்ஜுநனுக் கருளிச்செய்த வார்த்தை அவனோடொத்த ஸம்பந்தமுடையாரெல்லார்க்கு மாமிறே. ... ... ... ... ... (ச)

---

அரு —நாலாம்பாட்டு (பிறிந்தேனித்யாதி) உமக்கு தாமஸாதநமான தேஹம் உதவாமே போனால் உதவுகைக்கு பந்துவர்க்கமுண்டே, அவர்களாலே உஜ்ஜீவநம் ஸித்திக்கலாமே யென்ன, அது ஸித்தியாதாகையாலே விட்டேன் என்கிறார் என்று ஸங்கதி.

பந்துக்ருத்யமாவது-ஆபத்திலே உதவுமது, அது இல்லாமையாலே விட்டே னென்கைக்காக, பந்துக்ருத்யந்தன்னை யருளிச்செய்கிறார் (ஸம்ஸாரத்திலே யித்யாதி) இத்தால் - ஆத்மஹிதம் பண்ணுமவனை பந்து வென்றபடி எல்லாம் இவர்களிட்ட வழக்காகையால் இவனைக் கேட்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவன்றனக்கு மித்யாதி).

நீ பணித்தவார்த்தை என்னாமல், "அருள்" என்கிற தென்னென்று சங்காபிப்ராயம். அருளுக்கு ஒண்மை ஏதென்ன வருளிச்செய்கிறார் (ஸம்சயமித்யாதி). ஸம்சயமாவது-நீயோ புத்ராதிகளோ ரக்ஷகா என்கிற ஸம்சயம். அருளை "வாள்" என்று சொல்லுகிற தென்னென்ன வருளிச்செய்கிறார் (மருவலர்தமித்யாதி). சத்ருக்களைத் தம்முடைய வாளாலே துணிக்கு

---

(க) கீதை-கஅ-சுசு- (உ) கீதை-கஅ-எந. (ந) ந-க-கo-

மாபோலே உபாய ஸம்சயங்களையும் அவனருளாகிற வாளைக்கொண்டு து
ணிப்பரென்றபடி. "ஒள்வாளுருவி - ஐம்புலன்கள் இடர்தீர-எறிந்தேன்"
என்று அந்வயம். "எறிந்துவந்து" என்றது - அநுவாதம். "ஐம்புலன்கள்"
என்று - ப்ராப்யாபாஸங்களைச் சொல்லுகையாலே, ப்ராபகாபாஸங்களும்
அர்த்தாத் வந்தது. (அன்னத்தின் மூக்காலும்) என்றது-பிரிக்கப்போகாத
பாலையும் நீரையும் பிரிக்கும் அன்னத்தின் மூக்காலுமென்கை. இத்தால்-
அன்னம்போன்ற பிராட்டியாலும் பிதகுரைத்துப் பிரிக்கப்போகா தென்
கை ஸூசிதமாய்த்து. அன்று சொன்னவார்த்தை இவர்க்கு இன்றுகிற
படி எங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் (அர்ஜுநனுக் கித்யாதி). (௪)

மூ.—பாண்டேன் வண்டறையும் குழலார்கள் பல்லாண்டிசைப்ப
ஆண்டார் வையமெல்லா மரசாகி முன்னாண்டவரே
மாண்டாரென்று வந்தாரந்தோ மனைவாழ்க்கை தன்னை
வேண்டேன் நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே.(௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாண் | பாடாநின்றனவாய்க் கொண்டு | முன் ஆண்டவரே | (இப்படி) முன்பு ஆண்டுவந்த அவர்களே |
| தேன் | மதுபாநம் பண்ணுகின்றுள்ள | மாண்டார் | மாண்டுபோனார்கள், |
| வண்டு | வண்டுகள் | என்று | என்றசொல்லுக்கு விஷயராய்க்கொண்டு (இப்படி) |
| அறையும் | சப்தியாநின்ற | | |
| குழலார்கள் | மயிர்முடியை யுடைய ஸ்த்ரீகள் | வந்தார் | (அநாதிகாலமாக) வருகிறார்கள், (ஒருவர்க்கும்நிலையில்லை), |
| பல்லாண்டு இசைப்ப | உத்தரோத்தரம் மங்களங்களை ப்ரார்த்திக்க, (இவ்வுலகத்தார்) | அந்தோ | ஐயோ! ஐஸ்வர்யம் அஸ்த்திரம், (ஆகையால்) |
| அரசாகி | ராஜாக்களாய்க் கொண்டு | மனைவாழ்க்கை தன்னை | ஸம்ஸாரஸுகத்தை |
| வையம் எல்லாம் | ஸகல லோகங்களையும் | வேண்டேன் | விரும்பாதவனாய்க் கொண்டு |
| ஆண்டார் | பரிபாலநம் செய்தார்கள் | | நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே! (௫) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பாண்டேன்) ஆனை, குதிரை, தேர், காலாள் கூட்டி, அவை கொண்டு ப்ரதிபக்ஷத்தை அழியச்செய்து, அவ்வழியாலே ஐஸ்வர்யத்தையும் தன்னதாக்கிக் கொள்ளவேண்டு மதன்றிக்கே ஸித்தமான ஐஸ்வர்யத்துக்கு மங்களாசாஸநம் பண்ணு

ராஜ்யத்தைத் தருகைக்கன்றோ இந்நிலைதான். நீயே சரண்யனாய் வந்து நிற்கப் பெற்ற எனக்கு அவர்களைக் கொண்டு கார்யமென்? என்கிறார். (ஆண்டார், மாண்டார்) என்கிற இவை இரண்டும் இரண்டு வ்யக்தியிலேயாகப்பெற்றதில்லை. பெருக்காறு அடிசுட்டாப்போலே பட்ட தர்மஹாநியைக் கண்டு ஐயோ என்கிறார். (மனைவாழ்க்கை தன்னை வேண்டேன்) ஆள ஆசைப்படிலிறே மாளாமையை ஆசைப்படுவது; இது ஸ்த்திரமாகிலும் வேண்டேன். ... ... ... (௫)

---

அரு.—அஞ்சாம்பாட்டு (பாண்டேனித்யாதி) பந்துக்களுதவார் என்றுநின்றீர், குறைவற்ற ஐஶ்வர்யமுண்டானால் பந்துக்களெல்லாரும் வந்து உதவுவாகளே யென்ன; அது ஸ்த்ரமாகிலன்றோ இதுண்டாவது என்கிறார் என்று ஸாகதி.

"அரசாகி, பாண்டேனித்யாதி, வையமெல்லாம், ஆண்டார்" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி "ஆகி" என்ற அபூத தத்பாவனுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (ஆனையித்யாதி) (தேட்டமாயிருக்கை) என்றதுக்கு - (க) "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்" என்ற பாசுரத்திலே நோக்கு. விவரணம் (இன்றுக வித்யாதி). சப்தார்த்தம் (பாட்டையுமித்யாதி). கீழ் "ஆண்டார்" என்றபதம் அமைந்திருக்க, "முன்னாண்டவரே" என்று அநுவதிக்கைக்கு ப்ரயோஜந மென்னென்ன வருளிச்செய்கிறார் (முடிசூடினு னித்யாதி). "ஸர்வம் வாக்யம் ஸாவதாரணம் - ஸர்வம் வாக்யம் ஸாவதாரணம்" என்கிற ந்யாயத்தாலே, "என்றேவந்தார்" என்று விவக்ஷித்து, ஆளுகைக்கு மாளுகை யுண்டானாப்போலே மாளுகைக்கு மாளுகை யில்லாமையாலே "மாண்டார்" என்கிற சொல் காலதத்வமுள்ளதனையும் நிற்குமென்று தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி). அன்றிக்கே, "வந்தார்" என்கிற பஹுவசநத்தாலே - ஸர்வ ப்ரதேசத்திலும் இதுவே வார்த்தையாய்த்து என்கிறாராகவுமாம். இப்போது "முடிய" என்றது - தேசமெங்கு மென்றபடி. நித்யமான ஆத்மாவுக்கு மாளுகையாவ தென்னென்ன வருளிச்செய்கிறார் (தேதேத்யாதி).

இவரைப்போலே "அந்தோ!" என்று அநுகம்பித்த பேருண்டோ வென்ன வருளிச்செய்கிறார் (நந்தநீத்யாதி). ஆண்டவரே மாண்டார் என்று ஆயுஸ்ஸினுடைய அஸ்த்திரத்வத்தை யருளிச்செய்தாராய் கீழ், ஐஶ்வர்யத்தை "மாண்டார்" என்று அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (ஆண்டார் மாண்டாரித்யாதி) அஸ்த்திரமான ஐஶ்வர்யத்தை உமக்கு ஸ்த்திரமாக்கினாலோ வென்ன வருளிச்செய்கிறார் (இதுவித்யாதி). ... ... ... (௫)

---

(க) தி-பல்-௩.

மூ.—கல்லா வைம்புலன்களவை கண்டவாறு செய்யகில்லேன்
மல்லா மல்லமருள் மல்லர் மாள மல்லடர்த்த
மல்லா மல்லலஞ்சீர் மதிள் நீரிலங்கை யழித்த
வில்லா நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (௬)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கல்லா | கல்வியில்லாத (சாஸ்த்ர மார்க்கத்திலே நடவாத) | அடர்த்த | நெருக்கி அழித்த |
| | | மல்லா | அல்ப வ்யாபாரத்தை யுடையவனே! |
| அவை | அதிக்ரூரமான | மல்லல் | ஸம்ருத்தமாய் |
| ஐம்புலன்கள் | பஞ்சேந்த்ரியங்களும் | அம் | அழகியதான |
| கண்ட | சப்தாதிகளை அநுபவிப்பிக்கப்பார்த்த | சீர் | ஸம்பத்தையும் |
| | | மதிள் | ப்ராகாரங்களையும் |
| ஆறு | ப்ரகாரத்தை | நீர் | (சுற்றும் துர்க்கமாக நின்ற) ஸமுத்ரத்தையு முடைய |
| செய்யகில்லேன் | செய்கைக்கு யோக்யனாகிறிலேன், | | |
| மல்லா | பலிஷ்டனே! | இலங்கை | லங்காநகரத்தை |
| மல் அமருள் | மல்ல யுத்தத்தில் | அழித்த | நாசம்செய்த |
| மல்லர் | சாணூராதிகள் | வில்லா | தநுஸ்ஸை யுடையவனே! |
| மாள | முடியும்படி | நின்னடைந்தேன் திருவிண்ணகர் | |
| மல் | (அவர்கள்) பலத்தை | மேயவனே! | (௬) |

வ்யா.—ஆறும்பாட்டு. (கல்லா) நீர்போய் கார்ஹஸ்த்யத்துக்கு எடுத்துப்போன இந்த்ரியங்களின் வழியே போய், அவை உகந்த விஷயங்களை உகந்து திரியமாட்டீரோ, இங்ஙனே என்செய்ய க்லேசப்படுகிறீரென்ன; அவை உன்னைக் காணவேணுமென்றும் கேட்கவேணுமென்றும் உடன்பட்டவன்றிறே எனக்குடலாய்த் தினவாவது, அவை இங்ஙனன்றிக்கே எல்லாம கல்லா வைம்புலன்களாய்த்ததே. ராவணனோடொக்குமாய்த்து. மூலைபடியே போக்கி முடிக்கபபார்க்கு மித்தனை யல்லது நல்வழி போகவொட்டாதாய்த்து. அவை பார்த்து வைத்த வழிபோக க்ஷமனாகிறிலேன். அதாகிறது - சப்தாதி விஷயங்களை அநுபவிக்கையிறே; அதுக்கு நான் க்ஷமனாகிறிலேன், மேல்வரும் அநர்த்தத்தை அநுஸந்தித்தவாறே.

இந்த்ரியங்களானவை சிலரால் திரிய விலக்கவொண்ணாதபடி மூலையடியே நடப்பன சிலவுண்டாகில் நம்மால் செய்யலாவதுண்டோவென்ன (மல்லா) இந்த்ரியவஸ்யதையைத் தவிர்க்கைக் கீடான

ஹஸ்த்யதர்மம் நடத்திக்கொண்டு வேண்டினபடி விநியோகம் கொள்ளு கிறார் என்றிருக்கமாட்டீரோ என்னும் ஈஶ்வராபிப்ராயத்தைக் காட்டிக் கொண்டு ஸங்கதியை ஸ்ப்புரிப்பிக்கிறார் (நீர்போயித்யாதி). அன்றிக்கே, ராஜபோகத்தை வேண்டீராகில் ஸாமாந்ய தர்மமான கார்ஹஸ்த்ய (गार्हस्थ्य) தர்மத்தை அநுஷ்டிக்கமாட்டீரோ, அது நரகாவஹமன்றோ என்னுமபிப்ராயத்தைக் காட்டி ஸங்கதி ஸ்புரிப்பிக்கிறார் என்னவுமாம். (எடுத்துப்போன) படை எடுத்துப்போன அதாவது – ததர்த்தமான வென்கை. (கல்லா வைம்புலன்களாய்த்தே) என்றது – கல்வியின்றிக்கே– சாஸ்த்ர மார்க்கத்திலே நடக்கையின்றிக்கே யிருக்கிற இந்த்ரியங்களை ன்றபடி.

மேலுக்கவதாரிகை (இந்த்ரியங்கள் இத்யாதி). நாம் இந்த்ரிய வஶ்ய தை தவிர்த்துத் தருகிறோமென்று சொன்னதுண்டோ நம்மை நீர் வளைக் கைக்கென்ன வருளிச்செய்கிறார் (இந்த்ரியங்களை யித்யாதி) அர்ஜுந னோடு சொன்னதில்லையோ என்று கருத்து காட்டாத்சம். ஒருவார்த்தை சொன்னமட்டிலே அதைக்கொண்டு வளைக்கிறீரோ "நம்சக்தி" என்று கூட்டிக்கொள்வது. (மல்லொடு நீ அல்ப வ்யாபாரம்.

ஸமபிவ்யாஹார தாத்பர்யம் (முன்னிகையித்யாதி) உட்கருத்து (ஜகதி யித்யாதி). "மல்லல்" என்று – ஸம்ருத்தியாய், [illegible] ய சீரென்று விசே ஷித்ததுக்கு பாவ(ப்ர)ச்ரயதி கேச்யாதி) [illegible] ர்த்தம் (ராவணனித் யாதி). .. . ... ... . . ... (௬)

மூ.—வேறு யானிரந்தேன் வெகுளாது மனக்கொளெந்தாய்
ஆறு வெந்நரகத் தடியேனை யிடக்கருதிக்
கூறு ஐவர் வந்து குமைக்கக் குடிவிட்டவரைத்
தேறு துன்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| யான் | இந்நாள் விமுகனாகப் போந்த நான் | ஆறு | ஓய்வில்லாத |
| வேறு | த்ரு(ஷ்)ப்தனைக்காட்டிலும் வ்யாவ்ருத்தனாய்க்கொண்டு | வெம் | அதிக்ரூரமான |
| இரந்தேன் | (உன்னை) யாசித்தேன். | நரகத்து | ஸம்ஸாரமாகிற நரகத்திலே |
| எந்தாய் | என் ஸ்வாமியே! | அடியேனை | என்னை |
| வெகுளாது | கோபியாமல் | இட | பொகட்டுவைக்கும்படி |
| மனக்கொள் | (அத்தைத்) திருவுள்ளம்பற்றவேணும்; | கருதி | எண்ணி, |
| ஐவர் | (அதாவது) பஞ்சேந்த்ரியங்களும், | கூறு | (என்னைத் தங்களுக்கு) பாக(த்ய)மாகக் கொண்டு |
| | | வந்து | என்னைக்கிட்டி |
| | | குமைக்க | பாதி (ஹிம்ஸி)யாநிற்க, |

| | |
|---|---|
| குடிவிட்டவரை (நீ என்னை நல்வழிப்படுத்துகைக்காக என்னிடத்தில்) வயிக்கப்பண்ணின அந்த இந்த்ரியங்களை | தேறாது நம்பாமல் உன் உன்னை அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே! (௭) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (வேறாயானிரந்தேன்) இரந்த கார்யம் க்ரமத்தாலே செய்யலாம்படியா யிருப்பனவும் சில இரப்புக்களுண்டு, அப்போதே செய்து தலைக்கட்ட வேண்டும்படியா யிருப்பனவும் சில இரப்புக்களுண்டு; க்ரமத்தாலே கார்யஞ்செய்து தலைக்கட்டு மளவும் இவன் பொறுக்கும் என்று தோற்றி யிருந்தவிடத்திலே அந்த க்ரமமும் பொறுக்குமிறே; அப்போதே செய்யாவிடில் இவனைக் கிடையாதென்று தோற்றினவிடத்தில் அப்போதே செய்து தலைக்கட்ட வேண்டும்படியா யிருக்குமிறே; அதில்செய்தே அறவேண்டும்படி ஆர்த்தித்வத்தை யுடையேனாய்க்கொண்டு இரந்தேன் வேறாக என்றபடி. (யானிரந்தேன்) அத்தலை இத்தலையானபடியைத் திருவுள்ளம் பற்றவேணும். நீ *எதிர்சூழல் புக்கு இரந்துதிரிய, நானத்தை மறுத்து வைமுக்யம்பண்ணித் திரிந்தகாலத்தின் நீட்சியும் திருவுள்ளம் பற்றுகையுண்டே. நீ இரக்க மறுத்துத்திரிந்த நானன்றோ இப்போது இரக்கிறேன்.

(வெகுளாது) என்னுடைய பாசுரம் கேட்டால் தேவர் திருவுள்ளத்துக்கு சிவீல் என்னவேண்டும்படி யாயிருக்கும்; இன்று அநந்யகதியாய் வந்து நிற்கிறவன், முன்பு "நாம் அநாதிகாலம் பிடிக்க மறுத்துப்போந்தவ னன்றோ" என்று, என்னுடைய பூர்வ வ்ருத்தத்தைப் பார்த்தால் தேவர் சீறவேண்டும்படியா யிருக்கும். நான் ஸர்வதோஷயுக்தனாயிருந்தேன், நீ ஸர்வஜ்ஞனாயிருந்தாய், ஆனபின்பு, "நம்மையும் தன்னையும் பாராதே இவன் நிர்தோஷரைப்போலே நம்காலைப் பிடிப்பதே!" என்று சீறாதே. (மனக்கொள்) கார்யம் செய்யவேண்டுமளவிலே ஆனைக்குப்பாடுவாரைப்போலே அநாதரித்திருக்க வொண்ணாது; இத்தைத் திருவுள்ளம்பற்றி யருளவேணும். சீறுமைபோராது, இத்தைத் திருவுள்ளத்தே கொண்டருளவேணும். உட்மை ஸதோஷராகச் சொல்லிவைத்து, ஸ்வதந்த்ரனாயிருக்கிற என்னை "சீறாதே திருவுள்ளம் பற்றவேணும்" என்று நீர் சொல்லுகிறது என்னவேறாது கொண்டென்ன (எந்தாய்) என்னை லழித்துக்கொள்ள வொண்ணாத ப்ரா

ப்தியைக்கொண்டு பொறுக்கை யொழிய, செய்த குற்றத்தைக் கணக்கிட்டுக் கைவிடலாம்படியோ தேவரோடுண்டான ப்ராப்தியிருப்பது? (க) ''பிதேவ புத்ரஸ்ய'' என்று நின்றதிறே.

பொறுப்பிக்கிற விடத்திலே வந்தவாறே, செய்தகுற்றத்தைப் பார்த்துச் சீறுதே, ப்ராப்தியைப் பார்த்துக் கைக்கொள்ள வேண்டும்படி உமக்கு இப்போது வந்ததென்னென்ன, (ஆறுவெந்நரகம்) இந்த்ரியங்களினுடைய நினைவு சாலப் பொல்லாதாயிருந்தது. செய்த பாபம் அநுபவித்த அளவிலே விட்டடிக்கவும் கூடுமிறே யமனுடைய தண்டல் அங்ஙனன்றேயவல்ல, மாறாத நரகமாய்த்து ஸம்ஸாரம். (அடியேனை) கோமுற்றவர் படுக்கைப்பற்றிலே நலியக்கோலுமாபோலே. (உ) ''அஹம் ஸர்வம் கரிஷ்யாமி'' என்னுமாபோலே அங்குத்தைக்கு எல்லா வடிமையுஞ்செய்து வர்த்திக்கைக்கீடான ப்ராப்தியுடைய என்னை, அஹங்கார மமகாரங்களுக்குக் குடிமைசெய்யும் ஸம்ஸாரத்திலே போகத் தள்ளுவதாக நினையாநின்றது.

(கூறுவைவர்வந்து குமைக்க) இது ஐவர்க்குப் பொதுவிறே என்று இருக்கிறனவில்லை; அஹமஹமிகயா பற்றி நலியாநின்றன. (ஐவர்) சைதந்ய ப்ரஸாத்வார மாத்ரமிறே என்றிருக்கிறிலர். சேதனமொன்றே யிருக்கிறாய்த்து பாத(க)கத்வததி உறைப்பாலே (ஐவர்குமைக்க) ஒரு துர்பலனை ப்ரபலராயிருப்பார் ஐந்து சேவகர் ஐந்து திக்கிலே வலித்துக் கலங்கப்பண்ணி நெருக்குமாபோலே. (குடிவிட்டவரை) நீ குடிபுகுர விட்டவர்களை. அதுக்கடி - இத்தைக்கொண்டு நம் காலிலே குனிந்து அவ்வழியாலே நம்மைப் பெறவேண்டாவோ என்னும் கருத்தாலே இத்தைத் தந்தாய்நீ, அது உன் நினைவையொழிய மற்றைப்படியே உன்பக்கல் நின்றும் அகற்றி விஷயங்களிலே மூட்டி முடிக்குமவையா யிராநின்றன.

(தேறுது) உன் நினைவின்படியே நடக்குமவை யன்றிக்கே யொழிகையாலே, அவற்றை விஸ்வஸிக்கப் போகிறதில்லை. (உன்னித்யாதி) விஸ்வஸநீயனான நீ ஸந்நிஹிதனாயிருக்க, பயாவஹமான பதார்த்தங்களுக்குக் குடிமைசெய்து திரியவேணுமோ? ... (எ)

(க) கீ-கக-௩௪. (உ) ரா-அயோ-௩க-உ௫.

**வ்யா.**—எட்டாம்பாட்டு. (தீவாய்) அநலாஸ்யராய்த்து. நெருப்பை உமிழாநின்றுள்ள வாயையுடைய. (வல்) ப்ராயஶ்சித்தத்தால் பரிஹரிக்கப் படுமவையல்ல; (க) "அவஶ்யமநுபோக்தவ்யம்-அவஶ்ய மநுபோக்தவ்யம்" என்கிறபடியே-அநுபவித்தாலல்லது போக்கி நசியாதவையாய்த்து. (உடனின்று) நிருபாதிக பந்துக்களைப்போலே விடாதே நின்று கலந்து; (௨) "கலந்து நலியும் கடுந்துயர்" என்னக்கடவதிறே. (சிறந்தவர்போல்) ஒருகாலும் விடாத ப்ராதாக்கள், மற்றையாரைப் போலே.

(மேவாவெந்நரகத்து) (௩) "ஆநந்தமய:-ஆநந்தமய:" என்கிற வஸ்துவை அநுபவிக்கைக்கு யோக்யமான வஸ்துவுக்குப் பொருந்தாதபடியிருக்கிற நரகத்திலே தள்ளுவதாக வந்தன. இங்குள்ள து:க்கங்களை அநுபவித்தால், பின்னைப்போ யநுபவிக்கும் நரகமிறே அது; இப்போது "நரகம்" என்கிறது - இந்நரகந்தன்னையே. (விரைந்துவந்தார்) இத்தால்- இக்காலத்திலொரு ஸுக்ருதம் நுழைகைக்கு அவகாசமின்றிக்கே போந்தபடியைச் சொல்லுகிறது. கர்மத்துக்கு ப்ரவாஹாநாதித்வ முண்டிறே.

இது நீர்பண்ணின கர்மத்தினுடைய பலமன்றோ? தாந்தாம் பண்ணின கர்மபலம் தந்தாமுக்கே அநுபவிக்கவேண்டாவோ? இப்போதாகச் செய்யலாவதுண்டோ வென்ன, (மூவாவானவர்) அகர்மவஶ்யராய் உன்னை அநுபவிக்கும்படி பண்ணிவைத்தாயே. ஒரு விபூதியாக எப்போதும் ஒக்க பஞ்சவிம்சதி வார்ஷிகரா யிருப்பர்கள், புஜியாநிற்கச் செய்தே, "இது நமக்குக் குலைகிறதோ?" என்றிருக்க வேண்டாவாய்த்து. (முதல்வா) அவர்களை அகர்மவஶ்யராக்கி, அவர்களுக்கு அநுபவிக்கைக்கு உன்னைக் கொடுத்து, அவ்வழியாலே அவர்கள் ஸத்தையை நிர்வஹித்துக்கொண்டு போராநின்றாயே. (௪) "விண்ணுளார்பெருமானேயோ" என்றபடியே யாய்த்து.-ப்ராதாக்களிலே ஒருவன் முடிசூடி வாழாநிற்க ஒருவன் சிறைபட்டுக் கிடந்தாப்போலே தோற்றாநின்றதாய்த்து. (௫) [ஸ ராம ஸம்ஶ்ருண-ஹா ராம ஹாலக்ஷ்மண] இப்படிப்பட்ட அவர்க்கும் "இது மாயாம்ருகம் கிடீர்" என்று உணர்த்தி நோக்கும் இளையபெருமாளை! என்னும். [ஹாஸுமித்ரே - ஹா

(க)  (௨) பெரி-திருவ-௬௫.  (௩) தை-ஆ-௯-௨.
(௪) தி-வாய்-௭-௧-௫.  (௫) ரா-ஸு-௨-அ-அ.

ஸௌமித்ரே] அவர் தமக்கும், (க) "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய-ப்ரமாதம் மா கார்ஷீ: - ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய - ப்ரமாதம் மாகார்ஷீ:" என்ற ஸௌமித்ரையாரைச் சொல்லும்.

அப்பரிமாற்றமுள்ளது அவ்விபூதியிலே காணும், இங்கில்லை என்று அவனுக்குச் சொல்லவொண்ணாதபடி (மதிகோள் விடுத்த தேவா) ஸ்வரூபலாபம் பெறவேணு மென்றிருப்பார்க்கு அத்தைப் பண்ணிக்கொடுப்பது, இஶ்ஶரீரத்தில் வைகல்யம் போகவேணு மென்றிருப்பார்க்கு அத்தைப் பண்ணிக்கொடுப்பது. (தேவா) ஆருடம்பில் க்ஷயந்தான் தீர்ந்ததாயிருக்கிறது. (நின்னித்யாதி) என்னுடைய க்ஷயத்தைப் போக்குகைக்காக நீவந்து ஸந்நிஹிதனாயிருக்க, நான் பிறர்க்குக் குடிமைசெய்து திரியவோ? ... ... ... (அ)

அரு—எட்டாம்பாட்டு. (நீவாயித்யாதி) நம்காலில் குனிந்து வாழுவைக்கு நாமே குடிவிட்டவர் என்றறிந்நீராகில், அவை மற்றப்படியாய் நரகத்திலே இடக்கருதுகைக்குக் காரண மென்னென்னும் சங்கையிலே, வல்வினையார்கள் அவறறுக்கு மூலபல மென்கிறார் என்று ஸங்கதி.

பூர்வார்த்தத்துக்கெல்லாம் தொகுத்த பாவத்தை "விரைந்து" என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (அநலாஸ்யராய்த்து) என்று. சோம்பலில்லாமல் நெருப்பைச் சொரிந்துகொண்டு பிடிக்கவந்தார்களென்று கருத்து. (நிருபாதிக பந்துக்கள்) பெருமாளும் பிராட்டியும். சிறந்தவர்-தகுதியானவரென்றாய், அருளிச்செய்கிறார் (ஒருகாலு மித்யாதி).

"வெம்" என்றதுக்குத் தாத்பர்யம் (இங்குள்ள வித்யாதி). (அது) யமதண்டம். (இந்நரகம்) ஸம்ஸாரம். "விரைந்து" என்று-வேகம் சொன்னால் ஸ்த்தாயியானதுக் கொடிய வேகம் சொல்லவொண்ணாதே யென்ன வருளிச்செய்கிறார் (கர்மத்துக்கித்யாதி); ஜலகண ஸமுதாயத்தில் வேகம்போலே பாபஸமுதாயத்தில் நைரந்தர்யத்தைச் சொல்லுகிறதென்று கருத்து.

மூவாமை - ஷட்பாவ விகாரங்களுக்கும் உபலக்ஷணமாய், கர்மக்ருதமான விகாரமில்லாமையைச் சொல்லிற்றாய், இப்படி விசேஷித்தது - தம்மையும் அப்படி பண்ணவேணுமென்னும் கருத்தாலே என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (அகாமேத்யாதி) அன்றிக்கே, மூவாமை - முற்றாமையாய், அது பகவதநுபவத்தில் முற்றினமையாய், அத்தால் பலித்த தாத்பர்ய மருளிச்செய்கிறார் (புஜியாநிற்க வித்யாதி). கீழ்ச்சொன்ன தாத்பர்ய த்வயத்துக் கநுகுணமாகக் கருத்தருளிச்செய்கிறார் (அவர்களையித்

(க) ரா-அயோ-௪௦-௫.

யாதி). தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (விண்ணுளாரித்யாதி). விவரணம் (ப்ராதாக்களிலே யித்யாதி). இத்தால் - வெறுப்புத் தோற்றச் சொன்னரென்று கருத்து. மூன்றும் தாத்பர்யம் விவக்ஷித்து த்ருஷ்டாந்தம் காட்டுகிறார் (ஹாராமேத்யாதி). ஸம்பந்தமுடையார் பேரைச்சொல்லி விஷாதப் பட்டாப்போலே விஷாதப் படுகிறாரென்று தாத்பர்யம்.

மேலுக்கவதாரிகை (அப்பரிமாற்ற மித்யாதி). மதி- சந்த்ரனுடைய, கோள் - க்ஷயத்தை, போக்கினாய் என்று சப்தார்த்தமாய், இத்தை இப்போது சொல்லுகிறவர்க்கு, மதியினுடைய - ஸ்வரூப ஜ்ஞாநத்தினுடைய, க்ஷயத்தை விடுத்தமையும் ஸூசிதமென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (ஸ்வரூபலாப மித்யாதி). (கொடுப்பது) என்ற வசநந்தரம், இரண்டும் உனக்குத் துல்யம் என்று சேஷம். ... ... ... ... (அ)

மூ.—போதார் தாமரையாள் புலவிக்குல வானவர்தம்
கோதா கோதில் செங்கோல் குடைமன்னரிடை நடந்த
தூதா தூமொழியாய் சுடர்போலென் மனத்திருந்த
வேதா நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| போது ஆர் | காலத்திலே யலர்ந்த (செவ்வி யழியாத) | மன்னர் | துர்யோதநாதிகளான ராஜாக்களுடைய |
| தாமரையாள் | தாமரைப்பூவை வாஸஸ்தாநமாக உடைய பெரியபிராட்டியாருடையவும் | இடை | ஸபாமத்யத்திலே |
| | | நடந்த தூதா | தூதுபோனவனே! |
| | | தூமொழியாய் | பரிசுத்தமான (பாண்டவ பக்ஷபாதியான) சொற்களை யுடையவனே! |
| புலவி | பூமிப்பிராட்டி யுடையவும் [யுடைய | | |
| குலம் | தொண்டக் குலத்தை | | |
| வானவர் தம் | நித்யஸூரிகளுடையவும் | சுடர்போல | விளக்குப்போலே உஜ்ஜ்வலனாய்க்கொண்டு |
| கோதா | ஸந்தோஷத்துக்கு விஷயமானவனே! | என்மனத்து | என் ஹ்ருதயத்தில் |
| கோது இல் | ப்ரதிஹதியாகிற தோஷமில்லாத [ராய் | இருந்த | வாஸம்பண்ணு நின்றவனே! |
| செங்கோல் | ஆஜ்ஞையை யுடைய | வேதா | வேதப்ரதிபாத்யனே! |
| குடை | முத்துக்குடையை யுடையரான | நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே! | (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. பிராட்டிமாரும் நித்யஸூரிகளும் புருஷகாரமாகச் சரணம் புகுகிறார்.

(போதார் தாமரையாள்) காலத்திலே யலர்ந்த செவ்விப்பூவை இருப்பிடமாக வுடையவளென்னுதல்; அன்றிக்கே, செவ்விப்பூவை யுடைத்தான தாமரையை வாஸஸ்தாநமாக உடையவளென்னுதல். போதென்று - காலமாதல், புஷ்பத்தைச் சொல்லிற்றாதல். (புலவி) என்று - ஸ்ரீ பூமிப்பிராட்டிக்குத் திருநாமமாகவுமாம்; அன்றிக்கே, போதார் தாமரையாள் புலவி யிடத்தில் குலவானவர்தம் கோதா என்றாகவுமாம்; அப்போது, ஸர்வேஶ்வரனுக்கும் பிராட்டிக்கும் ஸம்ஶ்லேஷவர்த்தகமான விஶ்லேஷங்களுண்டானால், அப்போது(௧) "ஶ்ரத்தே - ரக்ஷ தர்மேண" என்கிறபடியே - இளையபெருமாள் ஆஶ்வஸிப்பிக்குமாபோலே, அவ்வூடலைத் தீர்த்து ஆஶ்வஸிப்பிக்கிற நித்யஸூரிகளுடைய கௌதூஹலத்துக்கு விஷயபூதனானவனே!.

(குலவானவர்) பகவதநுபவ வ்யபிசாரமில்லாதவர்கள். (௨)"வடிவுடைவானோர்" என்னுமாபோலே ‡(யாய்த்து). பெரியபிராட்டியாரோடுண்டான ஊடல் இடையாட்டத்தில் அத்தைப் பரிஹரித்து ஆஶ்வஸிப்பிக்கிற நித்யஸூரிகளுடைய கொண்டாட்டத்துக்கு விஷயபூதனானவனே! "கோதுகுலம்" என்கிறவிடத்திலே "கோதா" என்கிறது. அங்ஙனன்றிக்கே, (புலவிக்குலவானவர்) என்று - நித்யஸூரிகளுக்கு விசேஷணமாய், அந்தப் பக்ஷத்தில், †பிராட்டியுடைய பின்பு கூடாதபடி பிரிததபிரிவை யாய்த்துப புலவியென்கிறது. அத்தாலே-நித்யவாஸம் பண்ணாநிற்கச் செய்தேயும், இதுக்கு முன்பு ஒருகாலமும் அநுபவித்தறியாதாரைப் போலே உண்டாகிற அத்ருப்தியைப் பற்ற அவர்களைச் சொல்லிற்றாகவுமாம். இப்படி ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனாயிருந்து வைத்து, ஆஶ்ரிதார்த்தமாகத் தன்னை யழியமாறித் தூதுபோனபடியைச் சொல்லுகிறது.

(கோதில் செங்கோல் குடைமன்னர்) என்று - துர்யோதநாதிகளைச் சொல்லுகிறதென்றும, பாண்டவர்களைச சொல்லுகிறதென்றும அருளிச்செய்வர். பாண்டவர்களுடைய சத்ரசாமராதிகளையைப் பறிததுக்கொண்டு, ஒருவரால் ப்ரதிஹதி பண்ணவொண்ணாத ஆஜ்ஞையை யுடையராய்க் கொண்டு, முத்தின்குடை நிழல்கீழே யிருந்து பூமிப்பரப்படங்கலும் தாங்களே ராஜாக்களாய் நிர்வஹித்துக்கொண்டு போருகிற துர்யோதநாதிகள் நடுவே, கழுத்திலே ஓலையைக் கட்டிக்

---

(௧) ரா-கிஷ்-௧-௧௨௮. (௨) தி-வாய்-௭-௨-௧௦ ‡ குண்டலிதமக்ஷாசித்கம்.
† இந்தவாக்யம் அஸங்கிதம்.

கொடு தூதுபோனவனே! அன்றிக்கே, க்ருஷ்ணனுடைய அபிப்ராயத்தாலே, (கோதில் செங்கோல் குடைமன்னர்) என்று - பாண்டவர்களையே சொல்லுகிறதாகவுமாம்.

(தூமொழியாய்) பாண்டவர்களும் நீங்களும் செய்யப்பார்த்தது என்?என்று கேட்க;"அவர்களுக்கு தர்மமும் தர்மபலமான ஸ்வர்க்கமுமுண்டு; அவர்கள் ஐவர், நாங்கள் நூற்றுவர்; ஆகையாலே பூமிப் பரப்படைய எங்களுக்கே இடம்போரு மித்தனை, நாங்கள் ஒரு ஸூச்யக்ரமும் கொடுப்பதில்லை" என்று அவன் வார்த்தைசொல்ல; "உன்னபிப்ராயம் இதுவானபின்பு, உண்பன உண்டு உடுப்பன உடுத்துப் பூசுவன பூசி எல்லாவழியாலும் ஆஶ்வஸித்து ஒருப்பட்டிருக்கிற ராஜாவானவன் ஜயத்திலே த்வரியாநின்றான்" என்று ஆஶ்ரித விஷயத்திலுண்டான ஓரம் தோற்றச் சொன்னவார்த்தை யாகையாலே, மறுக்கவொண்ணாதபடி உஜ்ஜ்வலனாய்க் கொண்டு என் ஹ்ருதயத்திலே ப்ரகாசித்தவனே! (வேதா) இப்படி ப்ரகாசிக்கிறவன்றான் ஆரென்னில்; வேதைக ஸமதிகம்யன்.

(நின்னித்யாதி) ஓலைப்புறத்திலே கேட்டுப்போகை யன்றிக்கே, கண்ணாலே காணலாம்படி திருவிண்ணகரிலே வந்து ஸந்நிதி பண்ணின உன் திருவடிகளிலே சரணம் புகுந்தே னென்கிறார். ... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (போதாரித்யாதி) எத்தனைசொன்னாலும் அவன் இவர் நினைவின்படி செய்யாதே ஈஶ்வரத்வப் பிடாரடித்திருக்கையாலே புருஷகாரத்தை முன்னிடுகிறார் என்னும் ஸங்கதியை ஸூசிப்பிக்கிறார் (பிராட்டிமாரு மிதயாதி).

(புலவியிடத்தில்) புலவியிலே. ஸம்ஶ்லேஷார்த்தமான பிரிவிலே என்கை. (பூதனானவனே) என்ற வநந்தரம், என்றபடி என்று சேஷம்.

குலவானவர் - தொண்டக்குலத்திலே வானவர் என்றாய், அருளிச்செய்கிறார் (பகவதித்யாதி). "குலவானவர் கோதா" என்று இவர் இவர்களை கடக(஘டக)ராகச் சொன்னாப்போலே கடகதுண்டோ வென்னவருளிச்செய்கிறார் (வடிவுடை யித்யாதி). *கங்குலும் பகலில் கடகராக வெண்ணி, "வடிவுடைவானோர் தலைவனே" என்றாரிமே என்று கருத்து. இப்பாசுரத்தில் விவக்ஷிதமான ப்ரமேயத்தை இவ்விடத்துக்கு அநுகுணமாகக் காட்டிக்கொடுக்கிறார் (பெரியவித்யாதி). இத்தால் - பிராட்டிதசையை ப்ராப்தரான ஆழ்வார், தம்மிடத்திலே ஈஶ்வரனுக்குண்டான வடலைத்தீர்த்துச் சேர்க்கவேணும் என்னும் கருத்தாலே இப்படி ஸம்போ

இத்தார் என்றதாய்த்து. போதார் தாமரையாளென்ன, புலவியென்ன, குலவானவரென்ன, இவர்களுடைய கௌதூஹலத்துக்கு விஷயபூதனே! என்றும், தாமரையாளுடைய புலவியிலேயும் சேர்க்கும் குலவானவரென்றும், இரண்டுயோஜனை அருளிச்செய்தாராய், தாமரையாளுடைய புலவி போலேயான புலவியுடைய குலவானவரென்று மூன்றும்யோஜனை யருளிச்செய்கிறார் (அங்ஙனன்றிக்கே யித்யாதி).

"கோதில்" என்றதினால் ஈதம் (ஒருவராலித்யாதி). (ராஜா) தர்மபுத்ரன். (ஜயத்திலே) ஜய ஹேதுவான யுத்தத்திலே. .. .. (௯)

மூ.—தேனூர் பூம்புறவில் திருவிண்ணகர் மேயவனை
வானூரும மதிள்சூழ் வயல் மங்கையர்கோன் மருவார்
ஊனூர் வேற்கலிய னொலிசெய் தமிழ்மாலை வல்லார்
கோனாய் வானவர்தம் கொடி மாநகர் கூடுவரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தேன் ஆர் | தேன்மிக்க | ஊன் ஆர | சரீரங்களிலே புகக்கடவதான [யரான |
| பூ | பூக்களையுடைய | | |
| புறவில் | பர்யந்த ப்ரதேசங்களை யுடைத்தான | வேல | வேலாயுதத்தையுடை |
| | | கலியன் | ஆழ்வார் |
| திருவிண்ணகர் | திருவிண்ணகரென்னும் திவ்யதேசத்திலே | ஒலிசெய் | அருளிச்செய்த |
| | | தமிழ்மாலை | த்ராவிடரூபமான இப்பத்துப்பாசுரங்களையும் [கள் |
| மேயவனை | பொருந்தி வர்த்திக்கிற ஸர்வேஶ்வரன் விஷயமாக, | வல்லார் | அப்யஸிக்க வல்லவா |
| | | கோனாய | ஸ்வாமியாய்(ஸ்வதந்த்ரராய்)க்கொண்டு, |
| வான் ஆரும் | ஆகாசத்தை யளாவியிருக்கிற | வானவா தம் | நித்யஸூரிகள் வாஸம் பண்ணுகிற |
| மதின் | ப்ராகாரங்களாலும் | | |
| வயல் | கழனிகளாலும் | கொடி | கொடிகளாலே அலங்கரிக்கப்பட்ட |
| சூழ் | சூழப்பட்ட [ளாக்கு | | |
| மங்கையர் | திருமங்கையிலுள் | மா | பலாக்யமான |
| கோன் | ஸ்வாமியாய், | நகர் | ஸ்ரீவைகுண்டத்தை |
| மருவார் | சத்ருக்களுடைய | கூடுவா | சேரப்பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (தேனூரித்யாதி) தேன்மிக்கிருக்குமுள்ள பூக்களையுடைய பர்யந்தத்தை யுடைத்தான திருவிண்ணகரிலே நித்ய

வாஸம்பண்ணுகிறவனை. தேன் என்று - வண்டைச் சொல்லிற்றாகவுமாம். (வாருரும் மதிள்சூழ் வயல்மங்கையர் கோன்) ஆகாசாவகாசமிடமடையும்படியான ஒக்கத்தை யுடைய மதிளாலே சூழப்பட்டிருப்பதாய், வயலையுடைத்தான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார். (மருவாரித்யாதி) திருமங்கையாழ்வார் கையில் வேலுக்கு இரை சத்ருசரீரங்களாய்த்து. சத்ரு சரீரங்களிலே குளித்த வேலையுடையரான ஆழ்வாராருளிச்செய்த இப்பத்தும் வல்லார். (கோனுயித்யாதி) அங்கேபோய் சிலர்க்குப் பரதந்த்ரரா யிருக்கை யன்றிக்கே, (க) "ஆண்மின்கள்வானகம்" என்கிறபடியே தாங்கள் அங்குத்தைக்கு நிர்வாஹகராய்க்கொண்டு ஸ்ரீ வைகுண்டத்தை ப்ராபிக்கப் பெறுவர். (க0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

அரு — பத்தாம்பாட்டு. (தேனுரித்யாதி) (சிலர்க்குப் பரதந்த்ரராயிருக்கை யன்றிக்கே) என்றது - இந்த்ரன் முதலானோர் இங்குநின்றும் போனாரைத் தமக்குப் பரதந்த்ரரென்றிருக்குமாபோலே, அங்கும் நித்யஸூரிகள் அங்ஙன் நினைத்திரார்கள் என்றபடி. ... . .. (க0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆரும்பத்தில் இரண்டாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆரும்பத்து மூன்றுந் திருமொழி
## துறப்பேன் ப்ரவேசம்.

வ்யா.—(உ) *வண்டுணுநறுமலரிலே- "வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே" என்று தாம் பலகாலும் விண்ணப்பம் செய்தவார்த்தை ஸஹ்ருதய மென்று அப்பன் திருவுள்ளத்திலே படும்படியாக, (ந) * பொறுத்தேனிலே - அம்மனைவாழ்க்கையிலே

(க) தி-வாய்-க0-கூ-க. (உ) கூ-க. (ந) கூ-உ.

அந்வயித்து அவற்றால் தாம் மறுபாடுருவ க்லேசப்பட்ட படிகளை யும், தத்தேதுக்களையும் விண்ணப்பம் செய்து, இவ்வநிஷ்டமான வாழ் க்கையைத் தவிர்த்து எனக்கு இஷ்டமான உன் தாளிணைக்கீழ் வாழ் ச்சியை நான் பெறும்படி பண்ணித் தந்தருளவேணு மென்று திரு வடிகளிலே சரணம் புகுகிறேன் என்றார்.

ஸர்வேஶ்வரனுக்கு ஒரு ஸ்வபாவமுண்டு; - அநாதிகாலம் ஸம் ஸரித்துப்போந்தா னொருவன் ஸம்ஸாரத்தில் விரக்தி பிறந்து, இவை வேண்டேன் என்று இதில் தோஷங்களைச் சொல்லிக் காட்டுவது, இத் தைத் தவிர்த்துத் தரவேணு மென்று சரணம் புகுவதானாலும், திரிய வும் பூர்வ வாஸநைகளாலே அவற்றிலே சில பாசம் கிடக்க வடுக்கு மென்று, அவற்றில் தன்னு லாராயுமளவும் ஆராய்ந்து, தனக்கேற அவற்றில் கடையற ப்பாசங்கள் விட்டார்க்கன்றிக் கார்யம் செய்யான்; ஆகையாலே "பொறுத்தேன்" என்று தொடங்கிக்கீழிவர்சொன்னவார்த் தைகளைத் தனித்தனியே ஆராய்ந்து, இவற்றில் அறவிடாதே "எத்தை இன்னமும் அநுஸந்திக்கப் பார்த்தீர்" என்றாற்போலே கேட்க; அவ ற்றில் தமக்கு அவிருத்தமாய் விடாதே யொழிய நினைத்தவற்றையும், விருத்தமாய் விட நினைத்தவற்றையும் விண்ணப்பம்செய்து, (க) "குல வானவர்தம் கோதா" என்று கீழ்ச்சொன்ன தேசவிசேஷ ப்ராபதி யில் தமக்குள்ள த்வரையையும் அறிவித்துத் தலைக்கட்டுகிறார். *பொ றுத் தேனில் முதற்பாட்டில் "பொருளின்பம்" என்றவற்றில் ப்ரதாந மான இன்பத்தில் நீர் நின்ற எல்லை யென்னென்ன; சொல்லுகிறார். *

அரு —திருப்பேர் ப்ரவேசம். சரணம்புகுந்தால் கார்யம் செய்யா திருப்பா னென்னென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனுக் கித்யாதி). ஸ்வபாவமாவது- கோவிந்தஸ்வாமிக்குக் கருத்தறிந்து விஷயாநுபவத்திலே மூட்டிவிட்டாப்போலே இவரையும் உகந்தருளின நிலங்களில் வாஸநை யாலே யுண்டான ருசியறிந்துவைத்து அதிலே மூட்டிவிடுகை. இத்தை விவரிக்கிறார் (அநாதீத்யாதி) (தனக்கேற) என்றது - விஷயாந்தரங்களில் பாசம் ஸவாஸநமாகப் போகைக்கு அடையாளந்தன்னையும், இவ்விபூதி யிலே அநுபவிக்கக் கொடுத்தாலும் விஷமிஶ்ரபோஜந மென்றாப்போலே விடும்படியான பாகம் பிறந்தமை தன் திருவுள்ளத்திலே படுகை. (உ) "மரு ளொழி நீ மடநெஞ்சே" என்றாரிறே ஆழ்வாரென்று- கருத்து. (அறவிடா தே) என்றது - மிகவும் விடாதே என்கை. இத்தால் - திருப்பேர் நகரிலும்

(க) ௬-௨-௧. (உ) தி-வாய்-௰-௬-௧.

திருநந்திபுரத்திலும் மண்டியிருக்குமனா, "மனைவாழ்க்கையை - வேண்டேன்" என்று அத்தனைசொல்லிச் சரணமடைந்து தேசவிசேஷத்திலே போகவேணுமென்றாலும், உகந்தருளின நிலங்களில் ஆசை பின்னாட்டுமென்று கருதி, கீழ்த்திருமொழியில் சொன்ன விபூதியில் பிறக்கும் இன்பமெல்லாம் வேண்டாவோ? என்று ப்ரஸ்நம் பண்ண, அதில் உன்னை மறவாதிருக்கை யாகிற இன்பத்தை மறந்தேனல்லேன் என்று கொண்டு, இதினுடைய அநித்யதைக்காக அவ்விபூதியில் த்வரை எனக்குப் பிறந்ததென்கிறாரென்று ஸங்கதி சொல்லிற்றாய்த்து. ... ... ... (*)

மூ.—துறப்பேனல்லேனின்பம் துறவாது நின்னுருவம்
மறப்பேனல்லேனென்றும் மறவாது யானுலகில்
பிறப்பேனாக வெண்ணேன் பிறவாமைப் பெற்றதுநின்
திறத்தேனாதன்மையால் திருவிண்ணகரானே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திருவிண்ணகரானே | திருவிண்ணகரென்னும் திவ்யதேசத்தில் ஸந்நிஹிதனானவனே! | மறவாது | மறவாமையாலே, |
| இன்பம் | உன்னுடைய அநுபவத்தினாலுண்டான ஸுகத்தை | யான் | நான் |
| துறப்பேனல்லேன் | விடுகிறிலேன், | உலகில் | ஸம்ஸாரத்தில் |
| துறவாது | (அந்த ஸுகத்தை) விடாமையாவது | பிறப்பேனாக எண்ணேன் | (இனி) பிறப்பேனென்று நினைக்கமாட்டேன், |
| நின்உருவம் | உன்வடிவழகை | பிறவாமை | (அந்த) ஜந்மங்கழிக்கையையும், |
| என்றும் | ஸர்வகாலமும் | நின் | உன்னுடைய |
| மறப்பேனல்லேன் | மறக்கமாட்டேன் (என்றபடி). | திறத்தேன் ஆதன்மையால் | பக்ஷத்திலே (உனக்கு சேஷபூதனாக) ஆனபடியால் |
| | | பெற்றது | ஸித்திக்கப்பெற்றேன். |

வ்யா.—முதற்பாட்டு. (துறப்பேனல்லேனின்பம்) விஷயாநுபவ ஸுகத்தைத் துறக்குமித்தனை யொழிய, நின் திறத்தேனாயிருக்கிற ப்ராதாநஸுகத்தை விடுவேனல்லேன். சப்தாதிவிஷயங்களை விட்டேனாயாகில் இன்பத்தை இங்குத் துறவாதொழியும் விரகென்னென்ன, (துறவாதித்யாதி) ஸுகத்தைத் துறவாமையாவது - உன்னுடைய வடிவை மறவாதிருக்கை. (க) "மறந்தேனுன்னை முன்னம்"

(க) ௬-௨-௨.

என்று கீழுள்ளகாலம் மறந்தேனேயாகிலும், இனி மேலுள்ள காலம் மறவாதே யொழியப்பார்த்தேன்.

இத்தால் பலித்த தென்னென்ன; மறந்தே னுன்னை முன்னம், அது ஹேதுவாகப் பிறந்தே யெய்த்தொழிந்தேன் என்றேன்; இனி, உன்னை மறவாதே நினைக்கப்பார்த்தால், பிறவாமையன்றோ இதுக்குப் பலம் (என்று மித்யாதி) அம்மறவாமையால் பெற்றது - ஸம்ஸாரத்தில் பிறப்பேன் என்னும் மநோரதமும் தவிர்ந்தேன்.

அழகிது, தைலதாராவதவிச்சிந்நஸ்ம்ருதி உமக்குண்டாகை யாலே நமக்கு இனி ஜந்மம் வாராது என்று நினைத்திருக்கிறீரன்றோ வென்ன, (பிறவாமை யித்யாதி) அந்தப் பிறவாமையை நான் லபித்தது, உன் அபிமாநத்துக்குள்ளே யடங்கி "நீயே நிர்வாஹகன்" என்றிருக்கையாலே இத்தனையல்லது, நானநுஷ்டித்த தொன்றாலல்ல. (திருவிண்ணகரானே) உன் திறத்தேனாகப் பெற்றதுதானும் நீ இங்கே ஸந்நிஹிதனாகை.

(துறப்பேனல்லே னின்பம்) ஸுகத்தை ஸந்யஸிப்பேனல்லேன். (துறவாது நின்னுருவம மறப்பேனல்லேன்) ஸுகத்தைத் துறவாமையாவது-உன்னுடைய வடிவை மறவாதே யிருக்கை. (என்றும் மறவாது யானுலகில் பிறப்பேனாக வெண்ணேன்) மறவாமையால்பெற்றது பிறவாமை. (நின் திறத்தே னாதன்மையால் - பிறவாமைப் பெற்றது - திருவிண்ணகரானே) உன் திறத்தேனாகப் பெற்றது நீ ஸந்நிஹிதனாகை. ... ... ... ... ... (௧)

அரு —முதற்பாட்டு. (துறப்பேனித்யாதி) (௧)"பொருளின்பமென விரண்டுமிறந்தேன்" என்று க்லேசித்தவர், இங்கே "துறப்பேனல்லேன் இன்பம்" என்னக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (விஷயேத்யாதி). மேலுக்கவதாரிகை (சப்தாதீத்யாதி). (இன்பத்தை) ப்ரதாநஸுகத்தை. இவ்விபூதியில் பகவதநுபவஸுகம் விஷயாந்தராநுபவத்தோடே கலசியிருக்குமே என்று கருதது. நீதானே "மறந்தேன்" என்றீரே யென்ன வருளிச்செய்கிறார் (மறந்தேனித்யாதி).

அநாதிகாலம் மறந்தவர் இனி மறவாதிருக்கப்பார்த்தால் என்ன பலம், மீளவும் மறக்கவுங்கூடுமே இவ்விபூதியில் பிறவியாலே என்னும் ப்ரஸங்கத்துக்கு ப்ரதிவசநரூபேண மேலுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி).

(௧) ௯-௨-௧-

மறவாமையால் பிறவாமை என்றுவைத்து, "நின்திறத்தேனாதன்மையால்" என்றால் இது சேரும்படி யென்னென்ன; பால்குடிக்க நோய் தீருமாபோலே விஷய ஸ்வபாவத்தால் போச்சு இத்தனையொழிய மறவாமையை உபாயமாக நினைக்கவில்லை என்னும் கருத்தாலே யருளிச்செய்கிறார் (அந்தப்பிறவாமையை யிதீயாதி). "நின்திறத்தேன்" என்றதுதான் உம்மால் வந்ததோவென்ன வருளிச்செய்கிறார் (உன்திறத்தே னித்யாதி).

கீழ்ப்பாட்டுக்கெல்லாம் தாத்பர்ய மருளிச்செய்து, புத்திஸ்த்தமாகைக்காக பதாரூடமாகக் காட்டுகிறார் (துறப்பேனித்யாதி). இன்பம் - துறப்பேனல்லேன், துறவாமையாலே, நின்னுருவம் மறப்பேனல்லேன், என்றும் மறவாமையால் யானுலகில் பிறப்பேனாக வெண்ணேன், பிறவாமை- நின்திறத்தேனாதன்மையால், நின்திறத்தேனானது திருவிண்ணகரானாகையால் என்றந்வயம்... ... ... ... ... ... (௧)

மூ:—துறந்தேனார்வச் செற்றச்சுற்றம் துறந்தமையால்
சிறந்தேன் நின்னடிக்கே யடிமை திருமாலே
அறந்தானாய்த் திரிவாயுன்னை யென்மனத்தகத்தே
திறம்பாமல் கொண்டேன் திருவிண்ணகரானே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திருவிண்ணகரானே! | | துறந்தமையால் | விட்டபடியால், |
| திருமாலே | ஶ்ரிய:பதியே! | நின் அடிக்கே | உன் திருவடிகளிலே |
| அறம்தானாய் | ஸாக்ஷாத் தர்மமாய்க்கொண்டு | அடிமை | கைங்கர்யம் செய்கைக்கு |
| திரிவாய் | (பலம்கொடுக்க ஸமயம் பார்த்துத்) திரியுமவனே! | சிறந்தேன் | யோக்யனானேன்; |
| சுற்றம் | (ஸம்ஸாரிகளுடன்) உறவையும் | உன்னை | இப்படியான உன்னை |
| ஆர்வம் | ப்ரீதியையும் | என்மனத்தகத்தே | என் ஹ்ருதயத்துக்குள்ளே |
| செற்றம் | த்வேஷத்தையும் | திறம்பாமல் | தவறுமல் (விச்சேதமில்லாமல்) |
| துறந்தேன் | விட்டேன்; | கொண்டேன் | வைத்துக் கொண்டேன். (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (துறந்தேனித்யாதி) "உனக்குப் புறப்பே சில பற்றுண்டு" என்று தேவர்க்குப் பழியிட்டு விடவொண்ணாதபடி யானேன்; (௧) "பரித்யக்தா மயா லங்கா" என்னுமாபோலே, அநாதிகால வாஸநையாலே விஷயங்களிலே

(௧) ரா-யு-௧௯-௫.

ஸ்ம்ருதி பிறந்து அதடியாக ஸ்நேஹம்பிறந்து, பின்பு அவ்விஷயத்தைப் பெறில் ஜீவித்தல் இல்லையாகில் முடியுமளவாய், அது கிடையாதொழிந்தவாறே, "இவனிறே இதுக்கு நிரோதகன்" என்று கண்டார் மேலெல்லாம் கோபம்பிறந்து, யுக்தாயுக்த நிரூபணக்ஷமனன்றிக்கே, தோற்றினபடி நடந்து திரியக்கடவனாய்; இவைதான் இத்தனைக்கும் அடி - புறம்பே சிலரை உறவுமுறை என்றிருக்கையிறே; அது தவிர்ந்தேன். பண்ணின ஸங்கம் தவிரவே, அதடியாக வரும் த்வேஷம் போமிறே. இவை இரண்டும் போமிறே புறம்பே சிலரை உறவுமுறை என்றிருக்குமது தவிரவே.

(துறந்தமை யித்யாதி) புறம்பே சிலரை உறவுமுறை என்றிருக்கையிறே - இழவு வருகைக்கடி, அது தவிர்ந்தால், இப்போதாக உறவு ஸம்பாதிக்க வேண்டுவதில்லை யிறே. இவன்பக்கல் ஸம்பந்தம் ஸ்வாபாவிகமே. பாஹ்யவிஷயங்களை விட்டபோதே தொடங்கி திருவிடையாட்டமிறே. ராவணபவநத்தை விட்டு ஆகாசஸ்த்தனானபோதே ஸ்ரீமானானானிறே. அப்ராப்த விஷயங்களை விட்ட வநந்தரம் ப்ராப்த விஷயத்தினுடைய சரமாவதியிலே நின்றேன்; ப்ராப்தி பலமான கைங்கர்யத்துக்கு போக்யனானேன்.

நாம ஸர்வஜ்ஞராயிருந்தோம, நீர் அநாதிகாலம் புறம்பே சிலரை உறவுமுறை என்று இருந்தவராயிருந்நீர், இப்படி யிருக்க, இப்போது சிறந்தபடி எங்ஙனே யென்னில், (திருமாலே) ஸ்ரீய:பதி யாகையினாலே. இவன்றான் அகலநின்று பண்ணின குற்றத்தைக் கணக்கிட்டுக் கைவிடு மத்தனையோ? உய்யோடுண்டான குடல் துடக்கைப் பார்த்துக்கொள்ளு மத்தனையன்றோ? என்று ஆறவிடுவார் அருகே யுண்டாகையாலே, இவனுக்கு கர்ம பாரதந்த்ர்யம் ஔபாதிகமாய், ஈஸ்வர பாரதந்த்ர்யம் ஸ்வாபாவிகமா யிருக்குமிறே (க) "[illegible]-நகஸ்ஸிந்நாபராத்யதி" என்பார் அருகே யுண்டானால், கிட்டுகைக்கு ஒரு குறையுண்டோ. பிராட்டியோட்டை ஸம்பந்தமும் ஒரு தலைதுணுக்குமாதமாய், அவன்றான் ப்ரஜைகள் பக்கலிருக்கு மிருப்பைச் சொல்லுகிறது. (உ) "என்னடியார் அது செய்யார்" என்று அவளோடு பன்றுநிப் ஏற்றமுண்டிறே அவனுக்கு. பொறுக்கைக்கு ஒரு ஸாமகிரி யாத்ரமாய், பொறுப்பிப்பார் வேறே சிலரா யிருக்கையன்றிக்கே,

(க) ரா-யு-கக௬-௯௯. (உ) பெரி-திரு-௪-௯-உ.

பொறைதாளு யிருக்கை. இத்தால் - இதர தர்ம வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. கேவல தர்மமாகிறது தான், அசேதநமுமாய், செய்த போதே நசித்துவிடுமிறே; ஆகையால், இவன் செய்ததறியாதே, பலம் பெறுகைக்கு வேறே ஒருவனைக் காற்கட்ட வேண்டும்படியா யிருக்குமிறே. அவன்றன்னையே பற்றிப் பெறுமிடத்து இவற்றைவிட்டே பெறவேண்டி யிருக்குமிறே; ஆகையாலிறே ஸாதநநைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. கூறுசெய்வான் ஒன்று கொடுக்கும்போது ராஜாநுஜ்ஞை வேணும்; ராஜா ஒன்று கொடுக்கும்போது கூறுசெய்வான் வேண்டாவிறே.

(அறம்தானாய்) (க) "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம் - க்ருஷ்ணம தர்மம் ஸநாதநம்" (உ) "லோகாநாம் த்வம் - லோகநாம் தவம்" (ங) "ராமோ விக்ரஹவாந் - ராமோ விக்ரஹவாந்" (ச) "ஸாக்ஷாத் ராமாத் விநிர்வ்ருத்த: - ஸாக்ஷாத் ராமாத் விநிர்வ்ருத்த:." (திருமாலே அறந்தானாய்த் திரிவாய்) (ரு) "திறங்கரியன் செய்ய நெடுமலான் யார்வன் அறம்பெரியன்" என்னுமாபோலே. [ஆரதறிவார்] அவன்படி இதுவாயிருக்க, உடம்பை ஒறுத்துக் கார்யம் பாராநிற்பர்கள். (திரிவாய்) பலம் கொடுக்கைக்கு அவஸரம் பார்த்துத்திரியும் தர்மமாயிருந்து.

(உன்னை யென்மனத்தகத்தே திறம்பாமல் கொண்டேன்) உன்னுடைய தடுமாற்றத்தைத் தவிர்த்தேன். லக்ஷ்மீபதியாயிருந்த உன்னை, பிராட்டி புருஷகாரமாகவும், என்னுடைய அநந்யகதித்வத்தையும் முன்னிட்டு, என்னுடைய ஹ்ருதயத்திலே இனி நீ கால்வாங்கில் காதக (காதக)ரோபாதி யாம்படியாக வைத்துக்கொண்டேன். நீயே வந்து புகுருகிறவிடத்தில் நான் விலக்கிற்றிலேன் என்றபடி. அநந்யகதியைவிடில் நிர்க்க்ருணனும்; பிராட்டிக்கு அநபிமதம் செய்யில் ப்ரணயியன்றிக்கே யொழியும். ஆக, ஸ்வரூபமும், ப்ரணயித்வமும், இரண்டும் இழவாம். நீர் கொள்ளவல்லீரானபடி என்னென்ன (திருவிண்ணகரானே) நீ ஸுலபனாகையாலே. நீ திருவிண்ணகரிலேவந்து ஸந்நிஹிதனானபடியாலே. ... ... ... ... (உ)

---

அரு —இரண்டாம்பாட்டு. (துறந்தேனித்யாதி) கீழ்ப்பாட்டில் விஷயாந்தரத்தில் இன்பத்தைவிட்ட மாத்ரமொழிய ப்ராப்தமான இன்பத்தை

(க) பா-ஆர-அஅ-உ௪. (உ) (ங) ரா-ஆர-ஙஎ-கக.
(ச) ரா-அயோ-உ-உகூ. (ரு) உ-திருவ-ருஉ

"துறப்பேனல்லேன்" என்றீர்; இது இன்பமாகத் தோற்றும்போது புறம்பு பற்றற வேணுங்காணும், அதில் "ஆர்வச்செற்றமவைதன்னை வெறுத்தேன்" என்றது ஸம்பந்திதமோ? என்றுகேட்க அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

ஆர்வமென்ன-ராகமென்ன, செற்றமென்ன-த்வேஷமென்ன, இவற்றுக்கு டலான சுற்றத்தைத் துறந்தேன் என்று சப்தார்த்தமாய், ப்ரஸக்திபூர்வகம் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உனக்கித்யாதி). பந்துக்களடியாக ராகத்வேஷ முண்டா மென்னுமத்தை (க) "सङ्गात्सञ्जायते कामः - ஸங்காத் ஸஞ்ஜாயதே காம:" என்கிற ஸ்லோகத்தை உட்கொண் டருளிச்செய்கிறார் (அநாதிர்யாதி). தவிர்ந்த க்ரமமெப்படி யென்ன வருளிச்செய்கிறார் (பண்ணினவித்யாதி).

"அடியேன்" என்றத்தாலே பாகவத பர்யந்தமாக விவக்ஷித் தருளிச்செய்கிறார் (அப்ராப்தேத்யாதி)

(இப்போது) என்றவநந்தரம், "துறந்து" என்று கூட்டுவது. கர்மமடியான குற்றத்தைப் பாராமல் ஸம்பந்தமடியாக ரக்ஷிக்கைக்கு, கர்மத்தைப் பற்ற ஸம்பந்தக்துக்கேற்ற மேதென்ன வருளிச்செய்கிறார் (இவனுக்கித்யாதி). "திரு" என்றபதத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்து, "மால்" என்றதுக்கு - ஆஸ்ரிதவ்யாமுக்தனென்று அர்த்தம் விவக்ஷித்து, அதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பிராட்டியித்யாதி). (தலைதாலுக்கு) தலையசைக்கை. ஸம்மதியாகுமென்கை ஏற்ற மெங்ஙனேயென்ன வருளிச்செய்கிறார் (பொறுக்கைக்கித்யாதி) (ஸாமக்ரீ) ஸஹகாரி. பிராட்டி ஸஹகாரிமாத்ரமென்றபடி. (பொறைதானுயிருக்கை) பொறுப்பானுயிருக்கை. பிராட்டியில் வ்யாவ்ருத்தி மாத்ரமன்றிக்கே ஸாதநாந்தர வ்யாவ்ருத்தியும் பலித்ததென்று விவக்ஷித்து, பரக்க உபபாதிக்கிறார் (இத்தாலித்யாதி).

அறமாய் என்னாதே, "அறந்தானாய்" என்றத்தாலே - ஸநாதநத்வாதிகள் விவக்ஷிதமென்று ப்ரமாணங்கள் காட்டுகிறார் (க்ருஷ்ணமித்யாதி). "साक्षाद्रामाद्विनिर्वृत्तो धर्मश्चापि श्रियासह - ஸாக்ஷாத் ராமாத்விநிர்வ்ருத்தோ தாமஸ்சாபி ஸ்ரியாஸஹ" என்றதுக்கு - பிராட்டியோடே கூட ஸாக்ஷாத்தர்மமான ஸித்தோபாயம் பெருமானாலே நிறைவேற்றப் பட்டதென்று; அத்தாலே அவரே ஸாக்ஷாத் தர்மமானுரென்று கருத்து.

நீர்தான் அவற்றைக் கண்டீரோ வென்ன வருளிசசெய்கிறார் (நீயேயித்யாதி) வரில் பொகடோம் என்றிருந்தீராகில் நாம் அகன்றுபோகிறோம் என்ன வருளிச்செய்கிறார் (அநந்யகதியை யித்யாதி). யத்வா, தானே வந்து புகுரவேண்டுவா னென்னென்ன வருளிச்செய்கிறார் (அநந்யேத்யாதி). விலக்காமைதான் உமக்குப் பிறந்தது "நீர்கொள்ள வல்லீரானபடி" என்று கூட்டிக்கொள்வது. ... ... ... ... ... (௨.)

---

(க) கீ-௨-௬௨.

மூ.—மானேய் நோக்கு நல்லார் மதிபோல் முகத்துலவும்
ஊனேய் கண்வாளிக் குடைந்தோட்டந் துன்னடைந்தேன்
கோனே குறுங்குடியுள் குழகா திரு நறையூர்த்
தேனே வருபுனல் சூழ் திருவிண்ணகரானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கோனே | ஸ்வாமியே! | நல்லார் | விலக்ஷணை (ஸுந்தரி) களான ஸ்த்ரீகளு டைய |
| குறுங்குடியுள் | திருக்குறுங்குடியிலே | மதிபோல் | சந்த்ரனோடொத்த |
| குழகா | ஸந்நிஹிதனானவனே! | முகத்து | முகத்தில |
| திருநறையூர் | திருநறையூரிலே எழுந்தருளி யிருக்கிற | உலவும் | உலாவாநின்ற |
| தேனே | போக்யபூதனே! | ஊன்ஏய் | மாம்ஸ ப்ரசுரமான |
| வரு | பெருகிவாராநின்ற | கண் | கண்களாகிற |
| புனல் | ஜலத்தினால் | வாளிக்கு | பாணத்துக்கு |
| சூழ் | வ்யாப்தமான | உடைந்து | தளர்ந்து |
| திருவிண்ணகரானே! | | ஓட்டந்து | ஓடிவந்து |
| மான்ஏய் | மானோடொத்தவராய் | உன் அடைந்தேன் | உன்னைச்சரணமடைந்தேன் |
| நோக்கு | பார்வையை யுடைய | | (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மானிதயாதி) தப்பவொண்ணாதத் தைத் தப்பித் திருவடிகளிலே வந்து சரணம்புகுந்தேன், என்பக்கல் தயையைப்பண்ணி யருளவேணுமென்கிறார். (மானேய்நோக்கு நல்லார்) மானோடொத்த நோக்கையுடையராய், மற்ற வடிவழகுக் குறுப் பான நன்மைகளையுடைய ஸ்த்ரீகளுடைய, தர்சநீயமாய் தங்கள் பக்க லிலே சேர்த்துக்கொள்ளுகைக்குப் பரிகரமான முகத்திலே ஸஞ்சரியா நின்றுள்ள மாம்ஸப்ரசுரமான கண்ணாகிற அம்புக்கு ஈடுபட்டு ஓடி வந்து உன் திருவடிகளிலே சரணம்புகுந்தேன் கண்களாலே, கார் யப்பாடில்லாதாரைப் போலே நோக்கி இவனைத் தப்பாமல் அகப்ப டுத்தி, இவன் ஆழங்கால்பட்ட வாநந்தரம், கண்களைக்கொண்டு பேரா நின்று இவனை நோவுபடுத்தாநிற்பர்களிறே; அதைத்தப்பித் திரு வடிகளிலே வந்து சரணம்புகுந்தேன்.

(கோனே) அத்தைத்தப்பித் திருவடிகளிலே வந்து ஒதுங்கின விடம், தாய்நிழலிலே ஒதுங்குவாரைப்போலே ப்ராப்தவிஷயமாயி ருந்தது. (குறுங்குடியுள் குழகா) பரமபதம் கலவிருக்கையா யிருக் க, இவரோடே கலந்து சேர்த்துக்கொள்ளுகைக்காகத் திருக்குறுங்

குடியிலே வந்து ஸந்நிஹிதனானன். (திருநறையூர்த்தேனே) ப்ரஜை யினுடைய ஆர்த்திக்கு உதவுகைக்காக மாதாபிதாக்கள் சேரவிருக்கு மாபோலே, தமக்காக திருநறையூரிலே வந்து நிற்கிற நிலையை அநு ஸந்தித்தவாறே இனிதாகா நின்றது. பட்டர் "திருநறையூர்ப் பெருக் குக்குச் சிணையாறு படுகிறது கிடாய்!" என்றருளிச் செய்வர். (வரு புனலித்யாதி) காட்சியிலே ஸகல தாபங்களும் ஆறும்படியான ஜல ஸம்ருத்தியையுடைய திருவிண்ணகரிலே நீ வந்து ஸந்நிஹிதனாகை யாலே, அந்நோக்குக்கு தப்பித் திருவடிகளிலேவந்து கிட்டப்பெற் றேன். ... ... ... ... ... ... ... (௩)

அநு — மூன்றாம்பாட்டு. (மானேயித்யாதி) கீழ்ப்பாட்டில் - ராக த்வேஷ ஹேதுவான சுற்றம் துறந்தேன் என்றீர், (க) "லோகம் ஸமஸ்தம் ... வித்வாம்ஸமபி காஷதி" என்னும்படியான கண்ணழகுகண்டு நிலைதப்பின லன்றோ சுற்றம் துறந்தீராவீர என்ன வருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

பூர்வார்த்தத்துக்கெல்லாம் தொகுத்த பாவ மருளிச்செய்கிறார் (தப்ப வித்யாதி). உடைந்ததுக்கு ஹேதுவைக் காட்டிக்கொண்டு விவரிக்கிறா (கண்களாலே யித்யாதி).

"குழகா" என்றதினர்த்தம் (இவரோடே யித்யாதி)- ... (௩)

மூ.— சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்பவெள்ளத்

தாழ்ந்தே னருநரகத் தழுந்தும் பயன்படைத்தேன்

போந்தேன் புண்ணியனே உன்னையெய்தி யென்தீவினைகள்

தீர்ந்தேன் நின்னடைந்தேன் திருவிண்ணகரானே. (௪)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| | திருவிண்ணகரானே! | வெள்ளத்து | ஸமுத்ரத்தில் |
| புண்ணியனே | (என்னுடைய ஸுக ருதமானவனே! | ஆழ்ந்தேன் | (இந்நாள்வரையில்) மூழ்கினேன், |
| சாந்து | குங்குமங்களை | அரு | க்ரூரமான |
| ஏந்தும் | தரியாநின்ற | நரகத்து | ஸம்ஸாரமாகிற நரகத்தில் |
| மென் | ம்ருதுவான | அழுந்தும் | நித்யமாக அழுந்திக் கிடக்கிற |
| முலையார் | முலைகளையுடையரான ஸ்தரீகளுடைய | பயன் | ப்ரயோஜநத்தை |
| | | படைத்தேன் | பெற்றேன், (இப்படியிருக்க) |
| தடம் | விசாலமான | | |
| தோள் | புஜங்களோடொடான | போந்தேன் | (அகாரணமாக உன் திருவடிகளை) உபாயமாகக் கிட்டினேன், |
| புணர் | ஸம்ஶ்லேஷத்தில் பிறந்த | | |
| இன்பம் | ஸுகமாகிற | | |

(க)

| | | | |
|---|---|---|---|
| உன்னைஎய்து | உன்னைக்கிட்டி | தீர்த்தேன் | தீரப்பெற்றேன்;(பின் |
| என் | என்னுடைய | நின் அடைந் | உன்னைப்ராபித் [பு) |
| தீவினைகள் | கொடியபாபங்கள் | தேன் | தேன். (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (சாந்தேந்துமித்யாதி) (க) "நடமுலைச் செய்யசாந்து" என்னக்கடவதிறே. குங்குமத்தைச் சொன்னபடி. "விஷயங்களைவிட்டு இவ்வருகே போநத இவர், வீதராகர்க்கும ஸப்ருஹைம பிறக்கும்படி சொல்லுவானென்?" என்று பட்டர்க்கு விண்ணப்பம்செய்ய; 'மூரிக்குக் கிழக்கு என்னும்போதும இங்ஙனல்லது இராது காண் திருமங்கையாழ்வார் நாவீறு" என்று அருளிச்செய்தார். கிடாம்பியம்மாள், சிறியாண்டான் பெருமாள் பணித்தானாகப் பலகாலும சொல்லும்;"நான்சொல்லுகிற வாச்ய வாசகங்களே யன்றோ பட்டரும் வ்யவஹரிக்கிறது என்றிருக்கவொண்ணாது, அங்குத்தைக்கு ஏற்றமுண்டு;- முன்னேநின்ற தூணை நான் 'தூண்' என்றவாறே சிராயாய்த்தோற்றும்; அவர்சொன்னவாறே தளிரும் முறியுமாய்த்தோற்றும்" என்று.

(மென்முலையார்) விரஹபொறாத முலைபையுடைய ஸ்த்ரீகளுடைய. (தடந்தோளித்யாதி) முலைகளாகிற மலைகளோடே, தோளாகிற பாசங்களாலே நெருக்கிக்கட்டி, கடலிலே புகத்தள்ளுவாரைப போலே அவர்களுடைய தோள்களோடே அணைக்கையாலுண்டான ஆநந்த ஸாகரத்திலே தரைகாணவொண்ணாதபடி அவகாஹித்தேன்; உன்னுடைய க்ருபைக்கும அவிஷயமானேன். (உ) "ஆநந்தமய: - ஆநந்தமய:" என்கிற விஷயத்தை உள்ளபடி கண்ட இவர், இப்போது இங்கே இன்பவெள்ளம் என்கிறது - இவ்வளவும் வாககாறகட்டின படியைக்கொண்டு. (௩) * அநந்தஸ்ய பா(ஸ)ஜநமான ஐந்தை "இன்பவெள்ளம" என்கிறது - நெடுநாள் துவக்கினபடியைக் கண்டிறே.

இத்தாலும் பலித்தது ஒரு பலமுண்டு (அருநரகத்தித்யாதி) காலமெல்லாம இடைவிடாதே அவனுடைய கல்யாண குணங்களை அநுபவிக்கைக்கு இட்டுப்பிறந்த நான், காலமெல்லாம் நித்ய ஸம்ஸாரியாய்ப்போகையாகிற பரயோஜநத்தைப் பெற்றேன். "விஷயப்ராவண்யம் ஸமஸாரபீஜம்" என்றிருக்கிறார்.

(க) தி-ச-உ. (உ) தை-ஆ-இ-உ. (௩) ஜி-அம்தா-க-ஐ.

(போந்தேன்) ஒரு கர்மத்தை அநுஷ்டித்து அத்தாலே க்ஷீண பாபனாய், அநந்தரம் ஜ்ஞாநம்பிறந்து அத்தாலே "இது தீது, இது நன்று" என்கிற இனிமையாலே கிட்டுகையன்றிக்கே, நினைவின்றிக்கே யிருக்க ஸ்ரீமதுரையிலே உறங்குகிறவர்கள் ஸ்ரீமத் த்வாரகையிலே விழித்தாப்போலே திருவடிகளிலே வந்து கிட்டிக் கொடு நிற்கக்கண்டேன். இந்நாள்வரை போநதவிடத்து ஒரு ஸுக்ருதமும் பண்ணிற்றிலீராகில் இப்போது நம்மைவந்து கிட்டினபடி எங்ஙனே யென்னில், (புண்ணியனே) எனக்கு உன்னைக் கிட்டுகைக்கு மூலஸுக்ருதமும் நீயே என்கிறார். (உன்னை யெய்தி) ஸர்வாதிகனான உன்னைக் கிட்டி, என்னுடைய ப்ராப்தி ப்ரதிபந்தகமான பாபங்களை யடையப் போக்கினேன்.

நம்மைக்கிட்டின விரகுதானென்னென்னில் (திருவிண்ணகரானே) ராவணனாலே நெருக்குண்டு புகலிடமற்ற ஸ்ரீ விபீஷணாழ்வானுக்குப் புகலாகக் கடவதாகக் கடற்கரை வெளியிலே எடுத்துவிட்டு நின்றாப்போலே, ஸம்ஸாரத்திலே விஷயங்களாலே நெருக்குண்டு நோவுபடுகிற எனக்குப் புகலாகத் திருவிண்ணகரிலே வந்து ஸந்நிஹிதனாகையாலே, அத்தைநத் தப்பித் திருவடிகளிலே வந்துபுகுந்தேன். (௪)

அரு.—நாலாம்பாட்டு. (சாந்தித்யாதி) கீழ்ப்பாட்டில் கண்வலைக்குத் தப்பி ஓடிவந்தேன் என்றீர், அது ஸுகப்ராப்தி ஜநகமாயிருக்க, ஓடிவருகைக்கு மூலஸுக்ருதம் ஒன்றுண்டாக வேணுமே, அதாவதென்? என்று கேட்க, அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

நாவீறுடையார வார்த்தைதான் வீதராகாக்கும் ஸ்ப்ருஹை பண்ணும்படியா யிருக்குமென்னு மிடத்துக்கு ஸ்வாதமாக ஓரைதிஹ்யம் காட்டுகிறார் (கிடாம்பியம்மாளித்யாதி).

ஸ்ரீமத் த்வாரகையிலே விழிக்கையாவது- காலயவநன், ஜராஸந்தன், ஸ்ரீ மதுரையை அடைமதிள் படுத்த, அப்போது விஸ்வகர்மாவை அழைப்பித்து ஸ்ரீமத் த்வாரகையை யுண்டாக்கி மதுரையிலுள்ளாரை நித்ரையோடே ராத்ரியோடே கொடுபோய் வைக்கை என்கை. ... (௪)

மூ.—மற்றோர் தெய்வ மெண்ணே னுன்னை யென்மனத்து வைத்துப்
பெற்றேன் பெற்றதுவும் பிறவாமை யெம்பெருமான்
வற்றா நீள் கடல் சூழிலங்கை யிராவணனைச்
செற்றாய் கொற்றவனே திருவிண்ணகரானே. (௫)

| பதம். | உரை. |
|---|---|
| வற்றா | மாறாத |
| நீர் | ஜலத்தையுடைய |
| கடல் | ஸமுத்ரத்தினால் |
| சூழ் | சுற்றப்பட்ட |
| இலங்கை | லங்கைக்கு அரசனான |
| இராவணனை | ராவணாஸுரனை |
| செற்றாய் | அழியச்செய்தவனே! |
| கொற்றவனே | ராஜனே! |
| திருவிண்ணகரானே! | |
| மற்று ஓர்தெய்வம் | வேறொரு தேவதையை |

| பதம். | உரை. |
|---|---|
| எண்ணேன் | ஆஶ்ரயணீயமாக நினைக்கமாட்டேன், |
| எம்பெருமான் | ஸ்வாமியே! |
| உன்னை | ஸர்வாதிகனான உன்னை |
| என்மனத்து | என்மநஸ்ஸில் |
| வைத்து | இருத்தி |
| பெற்றேன் | (ஓரலப்யத்தை) லபித்தேன், |
| பெற்றதுவும் | லபித்ததுதானேதென்னில், |
| பிறவாமை | (ஸம்ஸாரத்தில்) ஜந்மமில்லாமையாம். |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மற்றோரித்யாதி) மநோரத ஸமயத்திலும் வேறோராஶ்ரயணீய வஸ்து உண்டாக நினையேன். (உன்னை என்மனத்து வைத்து) ஸர்வாதிகனாயிருக்கிற உன்னை, விலக்காமை மாத்ரத்தாலே என்னுடைய ஹ்ருதயத்திலே வைத்து, ஓரலப்ய லாபம் பெற்றேன். அப்பேறுதானேதென்னில், (பெற்றதுவும் பிறவாமையெம்பெருமான்) இதர தேவதைகளை ஆஶ்ரயிக்கைக்கு யோக்யமான ஜந்மமும்கூடக் கழியப்பெற்றேன். அதுக்கு யோக்யதையே தொடங்கி யின்றிக்கே யிருந்தபடி.

(வற்றாவித்யாதி) ஒருவராலழிக்க வொண்ணாத அரணை முறித்துப்புக்கு, "நான் இவ்வூருக்கு நிர்வாஹகனல்லேனோ?" என்று அபிமானித்திருக்கிற ராவணனைக் கிழங்கெடுத்தவனே! அரியன செய்யுமிடத்தில் வருத்தமறச்செய்ய வல்லவனன்றோ நீ. (கொற்றவனே) பெருமிடுக்கனான ராவணனை அழியச்செய்த வருத்தமுண்டோ என்னுடைய ப்ரதிபந்தகத்தைப் போக்கிச் சேரவிட்டுக்கொள்ளுகைக்கு? நாம் லங்கையை யழியச்செய்தது கடற்கரை வெளியிலே எடுத்துவிட்டுநின்று, உம்முடைய ப்ரதிபந்தகத்தைப் போக்கிற்று எங்கே வந்து நின்று என்ன, (திருவிண்ணகரானே) எனக்காகவந்து நிற்கிற இடம் திருவிண்ணகர் என்கிறார். ... ... ... (௫)

அரு.— அஞ்சாம்பாட்டு. (மற்றித்யாதி) விஷயாந்தர வைராக்யமேயன்றிக்கே தேவதாந்தர வைராக்யமுமெனக்குண்டாக்கினை யென்கிறாரென்று ஸங்கதி.

"எம்பெருமான்" என்றத்தைக் கடாக்ஷித் தருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி).

லங்கையை இப்படி விசேஷித்ததுக்கு பாவமருளிச்செய்கிறார் (அரியன வித்யாதி). "கொற்றவனே" என்று ராஜாவேஎன்று ஸம்போதிக்கையாலே ஒருவழியாலும் (க) "ந ஸந்த்யஜேயம் - நமேயம்" என்ற ராவணனை வாத்ஸல்யத்தாலே கொல்லமாட்டாதே யிருந்து;நீராமையால் . கொல்லவேண்டினைப்போலே இங்கே செய்யவேணுமோ? நானிசைந்தேனே என்று தாத்பர்யம் விவக்ஷித் தருளிச்செய்கிறார் (பெருவித்யாதி). ... (௫)

மூ.—மையொண்கருங்கடலும் நிலனு மணிவரையும்
செய்யசுடரிரண்டு மிவையாய நின்னை நெஞ்சில்
உய்யும் வகையுணர்ந்தே னுண்மையா லினி யாதும் மற்றோர்
தெய்வம் பிறிதறியேன் திருவிண்ணகரானே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | திருவிண்ணகரானே! | இவை | ஆகிய இவற்றை [ன |
| மை | அஞ்சநம்போல் | ஆய | சேஷமாகஉடையனு |
| ஒண் | அழகியதாய் | நின்னை | உன்னை [யாக), |
| கரு | கருநிறமுடையதான | உண்மையால் | யதார்த்தமாக(சேஷி |
| கடலும் | ஸமுத்ரமும் | உய்யும்வகை | (நான்) உஜ்ஜீவிக்கும் |
| நிலனும் | பூமியும் | நெஞ்சில் | மநஸ்ஸினால் [படி |
| அணி | பெருமைபொருந்திய | உணர்ந்தேன் | அறிந்தேன்; |
| வரையும் | பர்வதங்களும் | இனி | இப்படியானபின்பு, |
| செய்ய | ப்ரகாசமாகிறஅழகை யுடைய | மற்று | இதுக்குமேலே |
| | | பிறிது ஓர் | உன்னைக் காட்டிலும் வேறானதொரு |
| இரண்டு சுடரும் | இரண்டு தேஜஃபதார்த்தங்களான சந்த்ர ஸூர்யர்களும் | யாதும் | எவ்விதமான வஸ்துவையும் [யாக |
| | | தெய்வம் | ஆஶ்ரயணீய தேவதை |
| | | அறியேன் | நினைக்கமாட்டேன். |

வ்யா.—ஆறும்பாட்டு. (மையித்யாதி) ஸர்வேஶ்வரனுடைய திருமேனிக்குப் போலியாய் அஞ்ஜநம்போலே தர்ஶநீயமாயிருந்துள்ள ஸமுத்ரமும், அது வேலியாக உள்ளேகிடக்கிற பூமியும், அந்தப்பூமிக்கு ஆணியடித்தாப்போலே யிருக்கிற குலபர்வதங்களும், இப்படிப்பட்ட இதுக்கு இரண்டு விளக்கேற்றினைப்போலே யிருக்கிற சந்த்ர ஸூர்யர்களும். (இவையாய) இப்படி ஜகதாகாரனா யிருக்கிற உன்னை.

(க) ரா-யு-௩௯-௧௧.

(நெஞ்சிலித்யாதி) நெஞ்சாலே (க) "அஸந்நேவ-அஸந்நேவ" என்கிறபடியே அஸத்கல்பனாய் உருமாய்ந்துபோன நான் இப்போது உஜ்ஜீவிக்கும்படி தேவரை அநுவர்த்தித்தேன், "இவ்வாத்மாவுக்கு நீயே சேஷி, உன்னைக் குறித்து இவ்வாத்மவஸ்து அத்யந்த சேஷம்" என்கிற முறையாலே.

(இனி யாதும் மற்றோரித்யாதி) தத்வமிருந்தபடி யல்லது ப்ரதிபத்தி பண்ணக்கடவதல்லாத படியான பின்பு, வேறு சிலரை ஆஶ்ரயணீயராக நினைத்திரேன். (திருவிண்ணகரானே) இப்படி திருவிண்ணகரிலேவந்து ஸந்நிஹிதனான உன்னையொழிய பரதத்வமுமறியேன்.

அரு.—ஆறும்பாட்டு. (மையித்யாதி) தேவதாந்தரங்களை நீரெண்ணாமைக்கு மூலமென்னென்ன; உனக்கு சரீரதயா சேஷமாயிருக்க அதறியாதே (உ) "ஈஶ்வரோऽஹம்-ஈஶ்வரோऽஹம்" என்கிற ப்ரா(ப்ரா)ந்தரை எண்ண விரகுண்டோ வென்கிறாரென்று ஸங்கதி.

"உண்மையால்" என்றதுக் கர்த்தம் (இவ்வாத்மாவுக் கித்யாதி).
*இனிக்கு அர்த்தம் (தத்வமித்யாதி).... ... ... ... (சு)

மூ.—வேறே கூறுவதுண்டடியேன் விரித்துரைக்கு
மாறே நீபணியா தடை நின் திருமனத்து
கூறேன் நெஞ்சுதன்னால் குணங்கொண்டு மற்றோர்தெய்வம்
தேறேனுன்னையல்லால் திருவிண்ணகரானே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திருவிண்ணகரானே! | | உன்னையல்லால் | உன்னையொழிய |
| அடியேன் | சேஷபூதனான நான் | மற்றுஓர் தெய்வம் | வேறொரு தேவதையை |
| வேறே | வ்யாவ்ருத்தயாக | கூறேன் | [ன், வாயிட்டுச்சொல்லே |
| கூறுவதுஉண்டு | சொலலுவதொருவார்த்தையுண்டு, | குணம்கொண்டு | (அவர்களிடத்தில்) குணவிசேஷத்தைக் கண்டாகிலும் |
| விரித்து | விஸ்தாரமாக | நெஞ்சுதன்னால் | மநஸ்ஸினால் (அவர்களை) |
| உரைக்குமாறு | (நான்) சொல்லும்படி | தேறேன் | (ஆஶ்ரயணீயராக) விஶ்வஸியேன். (எ) |
| நீ | நீ | | |
| பணியாது | அருளிச்செய்யாமல் | | |
| நின் திருமனத்து | உன் திருவுள்ளத்தில் | | |
| அடை | (அடியேன் விண்ணப்பத்தைக்) கொண்டருளவேணும், | | |

(க) தை-ஆ-சு-க. (உ) கீதை-கசு-கச.

வ்யா.—ஏழாம்பாட்டு. (வேறேயித்யாதி) இது ஓரோலக்க வார்த்தையாக வன்றிக்கே, ப(ஃ)லத்தோடே வ்யாப்தமாகவேண்டும்படி திருவுள்ளத்திலே பட விண்ணப்பஞ்செய்கிறேன்; (க) "ஸர்வேஷாம் ஸுக்ரீவோ ஹநூமத்ப்ரமுகவாந் - விசேஷேணது ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்த முக்தவாந்" என்னுமாபோலே-முதலிகளெல்லாரையும் எல்லாத்திக்கிலும் விடாநிற்கச் செய்தே மஹாராஜர் திருவடியைப்பார்த்து அடையாளமும் சொல்லித் திருவாழிமோதிரமும் கொடுத்து விசேஷித்துவிட்டாப்போலே. (அடியேன் - கூறுவதுண்டு) சேஷபூதன் சேஷிசெய்தபடி செய்யக் கண்டிருக்கையிறே முறை; அப்படி ஆறியிருக்கவொண்ணாதே, என்னுடைய ஆற்றாமையாலே ஒருவார்த்தை விண்ணப்பம் செய்கிறேன்.

(விரித்துரைக்கு மித்யாதி) என்னுடைய வார்த்தை அர்ஜுநனுடைய ப்ரஶ்நம்போலே யாகவொண்ணாது; (உ) "ஸ்ரீபகவாநுவாச- பகவாநுவாச" என்று தலைக்கட்டவேணும். (௩) "கர்மண்யேவாதிகாரஸ்தே - கர்மண்யே வாதிகாரஸ்தே" என்று சிலவற்றைப்பரக்கச்சொல்லவொண்ணாது, (௪) "ஸ்தி²தோஸ்மி கதஸந்தேஹ:-ஸ்த்திதோஸ்மி" என்னுமிடம் ப(ஃ)லிக்கச்சொல்லவேணும். நான் பரக்கச சிலவார்த்தைகளை விண்ணப்பம் செய்யும் ப்ரகார மருளிச்செய்யாதபடி திருவுள்ளம் பற்றவேணும்.

(கூறேனித்யாதி) நான் ஓரநந்யகதி என்கிறார் - இதர தேவதைகளை வாயால்பேசேன்; அவ்வளவேயன்றிக்கே, நெஞ்சால் அவற்றுக்கு ஓராதிக்யமுண்டாக நினையேன்; ஆபாத ப்ரதீதியில் அவற்றுக்கு ஒருத்கர்ஷ முண்டாய்த்தோற்றிற்றாகிலும், அத்தை விஶ்வஸியேன். (உன்னையல்லால் திருவிண்ணகரானே) ஸர்வாதிகனாயிருக்கிற நீ திருவிண்ணகரிலேவந்து ஸந்நிஹிதனாய், நீயே ஆஶ்ரயணீயனென்று அறிவித்த பின்பு, இனி உனக்கு விபூதிபூதரானார் பக்கல் பாத்வ ப்ரதிபத்தி பண்ணேன் ... ... ... ... ... ... (எ)

அரு—ஏழாம்பாட்டு. (வேறேயித்யாதி) தேவதாந்தரத்தை யறியாதவராயும் விஷயாந்தரங்களில் ஸங்கமற்றவராயும் பந்துக்களைவிட்டும் இவ்விபூதியிலிருந்து அநுபவிக்கும்படியான திருவிண்ணகரிலே இருக்கும்படி கண்டும் இருந்தீராகில், அநுபவித்துக்கொண்டு ஸுகமே இருமென்ன;

(க) ரா-கிஷ்-௪௪-௧. (உ) கீ-௧அ-௨. (௩) கீ-௨-௪எ.
(௪) கீ-௧அ-எ௩.

அது அங்ஙனேயாகிலும் இன்ன மொரு வார்த்தையுண்டென்று திருவுள்ளம் பற்றும்படி யருளிச்செய்கிறுரென்று ஸங்கதி.

"வேறே" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறுர் (இதோரித்யாதி). விசேஷித்துச் சொல்லுவாருண்டோ வென்ன வருளிச்செய்கிறுர் (விசேஷேணேத்யாதி). இத்தை விவரிக்கிறுர் (முதலிகளித்யாதி). (பார்த்து) என்ற வநந்தரம், "விசேஷித்து வார்த்தை சொல்ல, பெருமாள்" என்று கூட்டுவது. "அடியேன்" என்றதுக்குத் தாத்பர்யம் (சேஷபூத னித்யாதி).

விரித்துரைக்குமாறு - நான் விஸ்த்ருதமாகச் சொல்லும்படியாக, நீ பணியாது - தேவரீரருளிச்செய்யாதே, நின் திருமனத்து அடை - திருவுள்ளத்திலே வைத்துக்கொள்ள வேணுமென்று சப்தார்த்தமாய், அத்தால் ஸங்க்ரஹமாக மறுமாற்றம் சொல்லவேணு மென்றதாய், பரக்கச்சொன்னதுண்டோ இப்படி நீர் சொல்லுகைக்கு என்ன வருளிச்செய்கிறுர் (என்னுடைய வித்யாதி). "பகவாநுவாச" என்றால், மீளவும் "அர்ஜுந உவாச - அர்ஜுநஉவாச" என்னுமது வாராதபடி சரமஶ்லோகம் சொன்னால் "ஸ்த்திதோஸ்மி" என்றாப்போலே அருளிச்செய்யவேணு மென்றதாய்த்து. விவரணம் (கர்மண்யேவேத்யாதி). வாக்யார்த்தம் (நானித்யாதி).

(க) "ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம் - சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்ற அர்ஜுநனுக்கு விஶ்வரூபத்தைக்காட்டி, நாம் சரமஶ்லோகார்த்தம் சொன்னபின்பும், ஆபாத ப்ரதீதியாலே தேவதாந்தரங்களில் மினுக்கங்களைக் கண்டு மீண்டுபோனானிறே, உமக்கு எத்தனையானாலும் அந்தரங்கமான உத்தரம் சொல்லப்போமோ? என்னும் ப்ரஶ்நத்திலே, முக்காலைக்கும் எனக்கு தேவதாந்தர விஷயத்தில் ஸங்க லேசமில்லை யென்கிறுரென்று ஸங்கதி திருவுள்ளம்பற்றி, வாக்யார்த்தங்களை அருளிச்செய்கிறா (இதரேத்யாதி). ... ... ... ... ... ... ... (எ)

மூ.—முளிந்தீய்ந்த வெங்கடத்து மூரிப்பெருங்களிற்றால்
விளிந்தீய்ந்த மாமரம்போல் வீழ்ந்தாரை நினையாதே
அளிந்தோர்ந்த சிந்தை நின்பாலடியேற்கு வானுலகம்
தெளிந்தேயென்றெய்துவது திருவிண்ணகரானே. (அ)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| முளிந்(து) தீய்ந்து | (தானே) உலர்ந்து எரிந்துபோன (மரங்களையுடைய) | கடத்து | காட்டிலே யுள்ளதாய், |
| | | மூரி | பலிஷ்டமான |
| | | பெரும் | பெரிய |
| வெம் | அதிக்ரூரமான | களிற்றால் | யானையினால் |

(க) கீ-உ-எ.

| | | | |
|---|---|---|---|
| விளிந்தீய்ந்த | தள்ளப்பட்டதான | ஓர்ந்த | அநவரதபாவனையையுடைய |
| மா | பெரிய | சிந்தை | மநஸ்ஸையுடையனான |
| மரம்போல் | மரத்தைப்போல | அடியேற்கு | அடியேனுக்கு |
| வீழ்ந்தாரை | நசித்துப்போனவரை | வானுலகம் | பரமபதத்தை |
| நினையாதே | மநோரதியாமல் | என்று | எப்போது |
| நின்பால் | உன் விஷயத்தில் | எய்துவது | கொடுக்கப் பார்க்கிறாய். |
| தெளிந்து | த்ருடாத்யவஸாயத்தை யுடையனாய் | | திருவிண்ணகரானே! (௮) |
| அளிந்து | ஸ்நேஹத்தையுடையனாய் | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (முளிந்தீய்ந்தவித்யாதி) நிலத்துக்கடைத்த வாகை, வெண்டு என்கிறபோலே சொல்லுகிற சிறு மரங்களானவை, நிலவெம்மையாலே உலர்ந்து தீய்ந்துபோகிற பாலைநிலத்தில். (மூரிப் பெருங்களிற்றால்) அதன் நிலத்திலுள்ள தொன்றுகையாலே வளர்ந்து அப்ரதிஹதமாக ஸஞ்சரியாநின்றுள்ள ஆனையாலே தள்ளுண்டு விழுந்த பெருமரம்போலே.

(வீழ்ந்தாரை நினையாதே) சில பதார்த்தங்கள் தோற்றி முடியும்; சிலர் நெடுநாளிருந்து கர்மக்ஷயத்தாலே முடிவர்கள். க்ஷுத்ரபதார்த்தங்களுக்கு உத்பத்தியோடே விநாசமாயிருக்கும்; இந்த்ராதிகள்‡ (ப்ரஹ்மாதிகள்) நெடுநாள் ஜீவித்துப் பின்னை முடிவர்கள்; இதாய்த்து ஸம்ஸாரஸ்வபாவம். ஆக, இங்கேயிருந்து, "இன்னார் இன்னதனை நாள் ஜீவித்து முடிந்தார்கள், இன்னவை தோற்று நசித்தன" என்று இத்தை மநோரதியாதே.

(அளிந்தோர்ந்த வித்யாதி) உன்பக்கலிலே, தெளிவையுடையேனாய், ஸ்நேஹத்தையுடையேனாய், அநவரதமுண்டான அவதாநத்தையுடைத்தான மநோரதத்தையுடைய அநந்யகதியான எனக்கு, அபுநராவ்ருத்தி லக்ஷணமான மோக்ஷத்தை என்று தருவது? (திருவிண்ணகரானே) அவ்வருகு படுத்துகைக்காக வந்திருக்கிற உனக்கு, தருமந்நாள் இந்நாளென்று தெரியுமிறே.

வெட்டிதான நிலத்திலே வலியதொரு பதார்த்தத்தாலே தள்ளுண்டு விழுந்துபோகிற மாமரம்போலே, ஸம்ஸாரத்திலே இருந்து ஜீவித்து முடிந்துபோவாரை மநோரதியாதே, தேவர்பக்கலிலே ஸ்நேஹித்து அவதாநத்தைப் பண்ணி அநவரதம் மநோரதிக்கும்படியான

‡ கூடஸ்தம் க்வாசித்கம்.

தெளிகையுடைய எனக்கு, புநராவ்ருத்தியில்லாத மோக்ஷத்தைத் தரப் பார்த்தது என்று? அத்தைத் தருகைக்காக வந்துநிற்கிற நீ. (அ)

---

அரு—எட்டாம்பாட்டு. (முளிந்தீய்ந்தவிதயாதி) நீர் தேவதாந்தரங்களில் குணங்கொண்டு தேருமைக்கு ஹேதுவேதென்றும், நீர் தாம் கூறுவதென்னென்றும் கேட்க, அருளிச்செய்கிறுரென்று ஸங்கதி.

"முளிந்தீய்ந்த" என்றது-† இடைக்குறைத்தலாயிருக்கிறதென்று விவக்ஷித்து, தானே உலர்ந்து தீய்ந்துபோன, வெய்- வெவ்வியதான, கடத்து - காட்டிடத்து என்ருய், அருளிச்செய்கிருர் (நிலத்துக் கித்யாதி). (வெண்டு) குழல்மூங்கில். மூரி - மிடுக்காய், அதினர்த்தம் (அப்ரதிஹதமாக) என்றது.

(மநோரதியாதே) என்றது - பாலைநிலத்திலே சிறு மரங்களும் பெரிய மரங்களும் தீய்ந்தும் முறிந்தும் போமாபோலே, ஸம்ஸாரத்தில் கர்மதாரதம்யத்தாலே உடனே நலிந்துபோகிற மனிசரைப்பற்ற நெடுநாள் ஜீவித்து முடிகிற தேவர்களுடைய ஆயுஸ்ஸு நல்லதென்று, அதுக்கடியான ஸுக்ருதம்பண்ணி நாமும் ஸாதிக்கவேணுமென்று நினையாதே என்கை இத்தால் - அந்த தேவதைகளிடத்தில் பெறத்தக்கது தமக்கு வேண்டுவதில்லை என்றதாய், அத்தாலே அவர்களை எண்ணேன் என்றதாய்த்து.

புத்தி ஸௌகர்யார்த்தமாக பாட்டடிமேலே பிடித்து அர்த்தமருளிச் செய்கிருர் (வெட்டிதான வித்யாதி) (நிற்கிறநீ) என்ற வநந்தரம், அருளிச்செய்யவேணும் என்று சேஷம். முளிந்தீய்ந்த வித்யாதி, நினையாதே- தெளிந்தே - அளிந்தோர்ந்தைநின்பாலுடைய அடியேறகு, வானுலகம் - எய்துவது - என்று என்றந்வயம். .. ... ... ... (அ)

மூ.—சொல்லாய்திருமார்பா உனக்காகித் தொண்டுபட்ட
நல்லேனை வினைகள் நலியாமை நம்பு நம்பீ
மல்லார் குடமாடி மதுசூதனே யுலகில்
செல்லா நல்லிசையாய் திருவிண்ணகரானே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மல்ஆர் | மிக்க பலிஷ்டனுய் | செல்லா | நடையாடாத (அபூர்வமான) |
| குடம்ஆடி | குடக்கூத்தாடினவனுய் | நல் இசையாய் | விலக்ஷணமானகீர்த்தியையுடையவனே! |
| மதுசூதனே | மதுவென்பவனை நிரஸித்தவனே! | நம்பீ | பூர்ணனே! |
| உலகில் | லோகத்தில் | | திருவிண்ணகரானே! |

---

† (பா) கடைக்குறைத்தலாய்.

| | | | |
|---|---|---|---|
| திருமார்பா | பெரிய பிராட்டியை வக்ஷஸ்த்தலத்திலுடையவனே! | தொண்டுபட்ட | அடிமைபூண்ட [னே |
| சொல்லாய் | எனக்குப் பதிலுரைக்கவேணும். | நல்லேனை | விலக்ஷணனான என் |
| உனக்காகி | உன்விஷயத்தில் | வினைகள் | பாபங்கள் [கு |
| | | நலியாமை | உபத்ரவியாமற் படிக் |
| | | நம்பு | விஸ்வஸித்து அங்கீகரித்தருளவேணும். |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (சொல்லாயித்யாதி) தேவர் இதுக்கொரு போக்கடி சொல்லவேணும். லக்ஷ்மீபதியாயிருக்கிற நீ எனக்கொன்று சொல்லாதொழிய வொண்ணாது. "இவன்தான் பண்ணின பாபபலந்தான் அநுபவிக்கிறான்" என்று நீ ஆறியிருக்கைக்கு நானொரு ப்ரஹ்மசாரி எம்பெருமானையோ பற்றிற்று? (உனக்காகி யித்யாதி) ஸ்ரிய:பதியான உன் திருவடிகளில் நித்ய கைங்கர்யத்திலே அந்வயிக்கும்படியான வைலக்ஷண்யத்தையுடைய என்னை, எனக்கு அதிதூரத்திலே வர்த்திக்கிற கர்மங்கள் என்னை நெருக்காதபடி நீ அங்கீகரித்தருள வேணும. (நம்பீ) லக்ஷ்மீஸம்பந்தமும மிகையாம்படியன்றோ தேவருடைய பூர்த்தி. (க) "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமே லென்னடியா ரதுசெய்யார்" என்று அவளோடு மன்றாடும்படியான கல்யாண குணங்களால் பூர்ணனன்றோ நீ.

(பல்லார்குடமாடி) மிடுக்கால்மிக்கு, மன்றிலே குடக்கூத்தாடி, உன்வடிவழகை ஸர்வஸ்வதானம பண்ணினவனே! ஸ்வைராஸஞ்சாரம் பண்ணாநின்றால் ஒருவரால் திரியவிடுகை† அரிதாயிருக்கை. அன்றிக்கே, (பல்லார்குடமாடி) என்று பாடமாகில், செருக்கனே! செருக்குக்குப் போக்குவிட்டுக் குடக்கூத்தாடினவனே! என்கிறது (மதசூதனே) அஸுரவர்க்கத்தைப் பக்கவேரோடே வாங்கினவனே! (உலகிற்செல்லா நல்லிசையாய்) லோகத்தில் பரிமாறாத புகழையுடையவனே! (திருவிண்ணகரானே) பரமவ்ஸ்தையில் குணம் பரிச்சின்னம்போலே. ஸம்ஸாரிகளைவிட்டு நித்யஸூரிகளுக்கு முகங்கொடுத்துக் கொண்டிருக்கிறவளவுகையாலே அங்கு குணம பரிச்சின்னமாய்த்து இருப்பது; திருவிண்ணகரிலேவந்து ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுத்தபின்பாய்த்து குணம் அபரிச்சின்னமாய்த்தது. (கூ)

---

(க) பெரி-திரு-ச-கூ-உ. † (பா) விடுவிக்க.

**அரு.**—ஒன்பதாம்பாட்டு. (சொல்லாயித்யாதி). உகந்தருளின நிலங்களிலே பேராசையாலே "துறப்பேனல்லேனின்பம்" என்றார், "வானுலகம்-என்றெய்துவது" என்றும் பதறுகிறார், இவர்க்கு ஒன்றும்சொல்லி முடியாது என்றாற்போலே பெரியபிராட்டியாரும் தானுமாய் ஸ்மிதம் பண்ணியிருக்க; இதறியாமல் இன்னும் கைவிட நினைத்தானோ என்னும் அதிசங்கையாலே அசசேர்த்தியிலே "எனக்கோரவதி சொல்லித் தீரவேணும்" என்கிறாரென்று ஸங்கதி.

"நம்பு" என்றதுக்கு லக்ஷணயா அர்த்த மருளிச்செய்கிறார் (அங்கீகரித்தருளவேணும்) என்று.

"ஆர்" என்றதினர்த்தம் (மிக்கு) என்றது. "மல்" என்று - ஐஶ்வர்யமாய், அத்தால் - செருக்கு பலிக்கும் என்றருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி). உலகில் - பரமபதத்தில், செல்லாத - நடையாடாத, நல்லிசையாய் - நல்ல யஶஸ்ஸை-ஸௌலப்யாதிகளால் வந்த யஶஸ்ஸை உடையையாய் என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (லோகத்தி லித்யாதி) .. (௯)

மூ.—தாரார் மலர்க்கமலந் தடம்சூழ்ந்த தண்புறவில்
சீரார் நெடு மறுகில் திருவிண்ணகரானைக்
காரார் புயல் தடக்கைக் கலியனொலிமாலை
ஆராரிவை வல்லா ரவர்க் கல்லல் நில்லாவே. (௰)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—ooo—

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தார் ஆர் | இதழ்களையுடைய | ஆர் | ஜலத்தினால் நிறைந்த |
| மலர் | பூக்களை யுடைத்தான | புயல் | மேகம்போன்ற ஔதார்யத்தை யுடையதாய் |
| கமலம் | தாமரைகளை யுடைய | தடம் | பரந்திருக்கிற |
| தடம் | தடாகங்களாலே | கை | ஹஸ்தங்களையுடைய |
| சூழ்ந்த | சூழப்பட்ட | கலியன் | ஆழ்வார் |
| தண் | குளிர்ந்த | ஒலி | அருளிச்செய்த |
| புறவில் | பர்யந்த ப்ரதேசங்களையுடையதாய் | மாலை | பாசுரரூபமான |
| சீர் ஆர் | செல்வம்மிக்க | இவை | இவற்றை |
| நெடு | நீண்ட | ஆரார் | யவரேயாகிலும் |
| மறுகில் | வீதிகளையுடையதான | வல்லார் | அப்யஸித்தார்களாகில் |
| திருவிண்ணகரானை | திருவிண்ணகரிலே எழுந்தருளியிருக்கிற அப்பன் விஷயமாக, | அவர்க்கு | அவர்களுக்கு |
| கார் | மழைகாலத்தில் | அல்லல் | பாபமானது |
| | | இல்லா | இல்லாது (நசித்துவிடும். (௰) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (தாராரித்யாதி) தாரென்கிறது - இதமை. இதழ்மிக்க பூவையுடைத்தான தாமரைகளையுடைய தடாகங்களாலே சூழப்பட்ட. அன்றிக்கே, தாரென்று - ஒளியாய், ஒளியை யுடைத்தான பூவையுடைய வென்னுதல். ஊரில் பர்யந்தமடங்கலும் தாமரைத்தடாகங்களாலே அலங்க்ருதமா யாய்த்திருப்பது. (சீராரித்யாதி) ஐஶ்வர்ய ப்ரகாசகமாய், நெடிதான வீதிகளையுடைய திருவிண்ணகரிலே வந்து நித்யவாஸம் பண்ணுகிறவனைக் கலிபாடிற்று.

(காராரித்யாதி) கார்காலத்தில், கழுத்தே கட்டளையாக நீரைப்பருகின மேகம்போலே கொடைதுவளர்ந்த கையையுடைய ஆழ்வார், ஒலியுடைத்தாம்படி அருளிச்செய்த தமிழ்த் தொடையை வல்லார், (க) "அஹம் வக்தா ப⁴வாந் ஶ்ரோதா வாச்யோ யோகோ விமுக்திதः - அஹம் வக்தா பவாந் ஶ்ரோதா வாச்யோ யோகோ விமுக்திதः" என்கிறபடியே இது கற்பார்க்கும் இந்நன்மைகள் வேணுமோவென்னில் (ஆராரித்யாதி) ஜந்ம வ்ருத்தாதிகள் ஏதேனு மொருபடியாக வமையும், இத்தை அதிகரிக்கைக்கடியான ருசியில் கண்ணழிவற்றிருக்கு மத்தனையே வேண்டுவது. அவர்களுக்கு பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகமானவை போகவேணுமென்று ‡(இவர்கள்) இரக்கவேண்டா, அவைதானே "நமக்கிவ்விட மிருப்பல்ல" என்று கால்வாங்கிப்போம். ... ... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு—பத்தாம்பாட்டு (சாராரித்யாதி) "மறுகு" என்றதினர்த்தம் (வீதிகளை) என்றது.

வக்த்ரு வைலக்ஷண்யமும் ப்ரமேய வைலக்ஷண்யமும் சொன்னாப் போலே ஶ்ரோத்ருவை லக்ஷண்யமும் வேணுமோ வென்னும் சங்கையை அநுவதிக்கிறார் (அஹமித்யாதி) ... ... ... ... (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆறும்பத்தில் மூன்றாந்திருமொழி முடிந்தது.

---

(க) ‡ குண்டலிதம் அதிகம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆறாம்பத்து நாலாந்திருமொழி

## கண்ணுஞ்சுழன்றுப்ரவேசம்.

வ்யா.—(க) "வினைகள் நலியாமை நம்புநம்பீ" என்றார்; அவனுமப்படிசெய்வானாக ஒருப்பட்டிருக்க, அத்தனைக்ரமம் பார்த்திருக்கவொண்ணாதபடி ஆற்றாமை விஞ்சிற்று; சேஷபூதன் சேஷி செய்தபடி செய்யக்கண்டிருக்குமதொழியக் காற்கட்டி நிர்ப்பந்திக்கக் கடவனல்லனிறே; அம்முறைபார்த்து நிற்கவொண்ணாதபடி ஆற்றாமை கரைபுரளுகையாலே "இனிச் செய்யுமதென்?" என்று பார்த்து, "சரீர விஶ்லேஷத்தளவு மிருந்து அர்ச்சிராதிமார்க்கந்தாலே ஒரு தேசவிசேஷத்திலே கொடுபோய்த் தன்னைத் தந்தநுபவிப்பிக்குமளவும் செல்ல அவன் வைத்த தண்ணீர்ப்பந்தலிலே ஒதுங்குவோம்" என்று பார்த்தார்; அதாகிறது - (உ) "ஏஷைவ ஶ்ரீரங்கே ஸுகமாஸ்வ-அத்ரைவ ஶ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்கிறபடியே அத்தோடு போலியாகச் சொல்லலா யிருக்கிற உகந்தருளின நிலங்களிலே அநுபவிக்கையிறே; ப்ரஜையினுடைய ஆர்த்திக்கு உதவுகைக்காக மாதாபிதாக்கள் சேர்விருக்குமாபோலே, ஸர்வேஶ்வரனும் பிராட்டியுங்கூட வந்து ஸந்நிதி பண்ணுகிற திருநறையூரிலே புக்கநுபவிக்கப் பார்த்தார்; அத்தையொழிய வேறே சிலவற்றை அநுபவிக்குமிடத்தில், அதுக்குப் பரிகரம் சரீரமே, அதுதான் பரிணாமியாகையாலே ஒருநாளிருந்தபடி இராதே க்ஷணந்தோறும் வேறுபடாநிற்குமிறே, அந்தச் சரீரந்தன்னைக் கொண்டநுவிக்குமிடத்தில் அதுக்கு விஷயம் ஸ்த்ரீகளே, அவர்களாகிறார்-இவன் பக்கலேதேனும் சில உபாதியைப்பற்ற சிலநாள் ஸ்நேஹித்து அது போனவாறே அவனை அநாதரித்து உபேக்ஷாவாத(ஸம்ப)த்தைப் பண்ணிப் பரிபவிக்குமவர்களா யிருந்தார்களே, ஆனபின்பு, அவர்களைவிட்டு, ஸர்வாவஸ்த்தையிலும்சென்று பற்றலாம்படி ஸுலபனாய், தான் ஸந்நிஹிதனாய்க் கொண்டு ஸர்வேஶ்வரன் திருநறையூரிலே வந்து ஸந்நிஹிதனானான், மோக்ஷார்த்தமாக யத்நித்த நீ அதில் தோள் மாறுமளவும் செல்ல அத்தோடு போலியாகச் சொல்லலாயிருக்கிற திருநறையூரிலேபுக்கு ஆஶ்ரயிப்போம்வா என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். ... *

(க) ௬-௩-௯. (உ) சரணாகதிகத்யம்.

அரு.—கண்ணுஞ்சுழன்று ப்ரவேசம்.—"வானுலகம்-என்றெய்துவது?" என்று கேட்க, (க) "'மரணமானால் வைகுந்தம்' என்கிறபடியே செய்வோம்" என்றிருக்கையாலே அவ்வளவும் திருநறையூரை அநுபவிக்க ஒருப்படுகிறாரென்று ஸங்கதியை யருளிச்செய்கிறார் (வினைகளித்யாதி); (உ) "துறப்பேனல்லேனின்பம்" என்றவரும் இவராகையாலும், தனக்கும் "இவரை இங்கேவைத்து சிலநாள் கைங்கர்யம் கொண்டருளவேணும்" என்னு மபிப்ராயத்தாலும், இப்படி க்ரமமாகச் செய்யத் திருவுள்ளம் பற்றினானென்று கருத்து. ஆற்றாமை விஞ்சினால் நிர்ப்பந்தித்துத் திருவாணையிடலாக வொண்ணாதோ வென்ன வருளிச்செய்கிறா (சேஷபூத னித்யாதி). (அத்தோடு) பரமபதத்தோடு. அதில், கீழே (ங) "திருநறையூர்த் தேனே" என்று ப்ரஸ்துதமான திருநறையூரெம்பெருமானை ஆஶ்ரயிக்கிறாரென் றருளிச்செய்கிறார் (ப்ராஜ்ஞையினுடைய வித்யாதி). சரீராவஸாநத்திலே பேறு தப்பாதாகில விஷயாநுபவத்தாலே காலக்ஷேபத்தைக் கழிக்கவொண்ணாதோ? உகந்தருளின நிலங்களிலே புகுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (அத்தை யித்யாதி). .. ... ... . .. ... ... *

மூ.—கண்ணுஞ்சுழன்று பீளையோடீளை வந்தேங்கினால்
பண்ணின்மொழியார் பையநடமினென்னாதமுன்
விண்ணும் மலையும் வேதமும் வேள்வியுமாயினான்
நண்ணு நறையூர் நாம்தொழுது மெழுநெஞ்சமே. (க)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| பீளையோடு | [illegible] | மலையும் | பர்வதங்களையும் |
| கண்ணும் | கண்களானவை [illegible] | ஆயினான் | தனக்கு ப்ரகாரமாக |
| சுழன்று | சுழன்று [illegible] | | உடையவனாய் |
| | [illegible] | வேதமுமாயி | வேதப்ரதிபாத்யனும் |
| ஈளைவந்து | [illegible] | [illegible] | |
| ஏங்கினால் | [illegible] | வேள்வியுமா | ஸமாராத்யனுமான |
| | [illegible] | யினான் | ஸர்வேஶ்வரன் |
| பண் இன் | பண்போலே இனிதான | நண்ணும் | விரும்பி நித்யவாஸம் |
| மொழியார் | சொல்லையுடைய ஸ்த்ரீ | | பண்ணுகிற |
| பைய | "மெள்ள [illegible] | நறையூர் | திருநறையூரை |
| நடமின் | [illegible] | நெஞ்சமே | ஓ மனமே! |
| என்னாதமுன் | என்று சொல்லுவதற்கு | நாம் | நாம் |
| | முன்னமே, | தொழுதும் | ஆஶ்ரயிப்போம் |
| விண்ணும் | ஆகாசத்தையும் | எழு | உத்யோகப்படு (க) |

(க) [illegible] (உ) [illegible] (ங) [illegible].

அரு.—மூன்றாம்பாட்டு. (கொங்காரித்யாதி) கீழ்ப்பாட்டிலே இகழ்ந்தாராகச் சொன்னாலும் (க)“ச்ரோத்ரம் சரணாயதே-ஆஸைகா தருணாயதே” என்கிறபடியே கண்ணைத்திறந்து பார்த்தாகிலும் போவோமென்று ஒருப்படுமே, அப்போது அவர்கள் சொல்லும்படியை அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

எம்மையும் எம் கோலத்தையும், இனி என்காண்பது - கண்டு ப்ரயோஜநமென்னென்றாய், அருளிச்செய்கிறார் (உம்முடைய வித்யாதி). (பாகம்) என்றது - “ஐயா”! என்னும்படியான - †முற்றுதல். தாவளம் - ரக்ஷகன் . .. ... ... ... ... ... (௩)

மூ.—கொம்பு மரவமும் வல்லியும் வென்ற நுண்ணேரிடை
வம்புண் குழலார் வாசலடைத் திகழாதமுன்
செம்பொன் கமுகினந்தான் கனியும் செழுஞ் சோலைசூழ்
நம்பன் நறையூர் நாம் தொழுது மெழு நெஞ்சமே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொம்பும் | வஞ்சிக்கொம்பையும் | இகழாதமுன் | அவமாநம் செய்வதற்கு முன்னே |
| அரவும் | ஸாப்பத்தையும் | | |
| வல்லியும் | கொடியையும் | கமுகு இனந்தான் | திரள்திரளாக இருக்கிற பாக்குமரங்கள் [ற |
| வென்ற | ஜயித்ததாய் (அவற்றிலும் மிக்க ஒசிவையும்) [உடையதாய் | | |
| | | செம்பொன் | சிவந்த பொன்போன் |
| நுண் | ஸூக்ஷ்மதையை(யும்) | கனியும் | பழங்களையுண்டாக்குமதாய் [தான |
| ஏர் | அழகியதான | | |
| இடை | மதயப்ரதேசத்தை யுடையராய் | செழும் | வளமையை யுடைய |
| | | சோலைசூழ் | சோலைகளாலே சூழப்பட்டதாய் |
| வம்பு உண் | பரிமள ப்ரசுரமான | | |
| குழலார் | மயிர்முடியை யுடையரான பெண்கள் | நம்பன் | விஸ்வஸநீயனை ஸர்வேஸ்வரன் நித்யவாஸம்பண்ணுகிற |
| வாசல் அடைத்து | (இவனை வெளியிலே தள்ளி) வாசற்கதவைச்சாத்தி | | நறையூர் நாம்தொழுது மெழு நெஞ்சமே! (௪) |

வ்யா. — நாலாம்பாட்டு. (கொம்புமித்யாதி) வஞ்சிக்கொம்பையும் அரவையும் வல்லிக்கொடியையும் மற்றுள்ள வற்றையும் ‡தோற்பிக்கவற்றான இடையையுடையராய், பரிமளிதமான குழலையுடைய

(க) † மூப்பு. ‡ (பா) தோற்பித்தஅறமெரிய.

ஸ்த்ரீகளானவர்கள். (வாசலித்யாதி) முற்காலம் இவனைவிரும்பி, பின்பு வெறுவியனானவாறே, புறம்பே தள்ளிக் கதவடைப்பர்கள்; இவன்றான் பின்னையும் சாபலத்தாலே போகாதே புறம்பே நிற்கும்; லஜ்ஜித்து இவன் அங்குநின்றும் கால்வாங்கிப போகைக்காக, இவனுக்கு போக (ஸ்ரீ)யோக்யதை யில்லாமையைச் சொல்லிப் பரிப விப்பர்கள்; இப்படிப்பட்டவர்கள் பரிபவோக்தி செவிப்படுவதற்கு முன்னே. (செம்பொனித்யாதி) அங்குள்ளவை †யடைய எப்போதும் பக்வபலமா யிருக்குமாய்த்து. கமுகுகளானவை செம்பொன் போலே யிருக்கிற, கனிகளையுண்டாக்குகிற பொழிலாலே சூழப்பட்டிருக்கும். முக்தப்ராப்ய பூமி யென்னுமிடம் தோற்றியிருக்கும். (நம்பன்) ஸர்வாவஸ்த்தையிலும் பற்றலாம்படி விஸ்வஸநீயனானவன் வர்த்திக்கிற திருநறையூரை நாமாஶ்ரயிப்போம். ... ... (௪)

---

அரு —நாலாம்பாட்டு (கொம்புமிதயாதி)"என்கோலம் என்காண்பது" என்னச்செய்தேயும், இடையிலே துவக்குண்டு, போகவும்மாட்டாதே து(ஸ)ருக்திகளாலே கிட்டவும்மாட்டாதே இடையிலே கிடக்க, கதவடைக்கும்படி சொல்லிவிடுவர்களென்கிறாரென்று ஸங்கதி.

மூன்று த்ருஷ்டாந்தங்களைச் சொல்லியும் போராதே "நுண்" என்றதுக்கு அர்த்த மருளிச்செய்கிறார் (மறறுள்ளவற்றையும்) என்று. சகார தாத்பர்யமாகவுமாம். (வெறுவியன்) தரித்ரன் வாசலடைத்தபின் இகழ ப்ரஸக்தி என்னென்ன; குழலில் பரிமளத்தை நச்சிப்போகாதே, அத்தாலே என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (இவன்றானித்யாதி) கமுகினந்தான்-க்ரமுக ஸமுதாயந்தான். "செம்பொன் - கனியும்" என்று அந்வயித்தருளிச்செய்கிறார் (கமுகித்யாதி). "செழும்" என்றதின் தாத்பர்யம் (முக்தப்ராப்யேத்யாதி). ... ... ... ... ... ... (௪)

மூ.—விலங்கும் கயலும் வேலு மொண் காவியும் வென்றகண்
சலங்கொண்ட சொல்லார் தாங்கள் சிரித்திகழாதமுன்
மலங்கும் வராலும் வாளையும் பாய் வயல் சூழ்தரு
நலங்கொள் நறையூர்நாம் தொழுது மெழு நெஞ்சமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விலங்கும் | (முக்த்த(ஸ்ரீ)மான)மானையும் | வேலும் | (கூர்மையான)வேலையும் |
| கயலும் | (துள்ளாநின்ற) கயல் மத்ஸ்யத்தையும் | ஒள் காவியும் | அழகிய (சிவந்த)[யும் செங்கழுநீர்ப் பூவை |

---

† (பா) அடங்க.

வென்ற ஜயித்த
கண் கண்களையுடையராய்
சலம்கொண் (முன்பு ஆசரித்துப்
ட சொல்லா போந்து,) இப்போ
ர் தாங் தாகக் கபடோக்தி
கள் களை யுடையரான
பெண்கள்
சிரித்து பரிஹாஸம்பண்ணி
இகழாதமுன் அநாதரிப்பதற்கு
முன்னே, [மும்
மலங்கும் மலங்கென்னும் மத்ஸ்ய

வராலும் வராலென்ற மீனும்
வாளையும் வாளையென்ற மீனும்
(களித்து)
பாய் துள்ளாநின்ற
வயல் கழனிகளாலே
சூழ்தரு சூழப்பட்டதாய்
நலம்கொள் அபீஷ்ட ப்ரதத்வமா
கிற நன்மையையு
டையதான
நறையூர் நாம்தொழுது மெழு
நெஞ்சமே! (௫)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (விலங்குமித்யாதி) கண்ணினுடைய மௌக்த்யத்துக்கு மானும், துள்ளுதலுக்குக் கயலும், கூர்மைக்கு வேலும, சிவப்புக்குக் காவியும போலேயாய், பின்னையும் இவற்றைத் தோற்பித்த கண்ணையுடையராய், ஒருகாலும் அநுகூலவாதம் பண்ணககடவரன்றிக்கே ச(ஷ்)லோக்திகளைப்‡ பண்ணக்கடவரான ஸ்த்ரீகள் அபஹஸித்து அநாதரிப்பதற்கு முன்னே. (மலங்குமித்யாதி) அங்குண்டான திர்யக்குக்களு மகப்பட "இன்னது பெற்றிலோம்" என்னும் சோகமின்றிக்கே அபிமதலாபத்தாலே களித்து வர்த்திக்கிற தேசமாய்த்து. ஆக, இன்னது பெற்றிலோம் என்னும் சோகமின்றிக்கே உத்தேஶ்யத்தைப் பெற்றுக் களித்து வர்த்திக்கலான நன்மையையுடைய தேசத்தை நாமாஶ்ரயிப்போம். ... ... (௫)

அ௫ —அஞ்சாம்பாட்டு. (விலஙகித்யாதி) கீழ்ப்பாட்டில் வாசலடைத்திருந்து பரிபவிக்கச் செய்தேயும கண்ணினழகைச் சொல்லித் தம் தோல்விசொல்லி அவர்களைக் கொண்டாடாநிற்குமே, அப்படி கொண்டாடினாலும் நெஞ்சு நெகிழாதவரா யிருப்பர்களென்று சொல்லுகிறாரென்று ஸங்கதி.

தன்னிடத்தில் முன்புண்டான அநுராகத்தைச் சொல்லிக் கூப்பிடுகிறாளாகையாலே "காவி" என்று - செங்கழுநீருக்குப் பேராய் பலித்த வர்த்தமருளிச்செய்கிறார் (சிவப்புக்கித்யாதி). மலங்கு-மத்ஸ்யவிசேஷம்,... (௫)

மூ.—மின்னேரிடையார் வேட்கையை மாற்றியிருந்து
என்னீருமி யெம்பால் வந்ததென் றிகழாதமுன்
தொன்னீரிலங்கை மலங்க விலங்கெரியூட்டினான்
நன்னீர்நறையூர் நாமதொழுது மெழு நெஞ்சமே. (௬)

‡ (பா) பருஷோக்திகளை.

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| மின்னேர் | மின்னோடொத்த (அதிஸூக்ஷ்மமான) | இகழ்தமுன் | பழிப்பதற்குமுன்னே, |
| இடையார் | இடையையுடைய ஸ்த்ரீகள் | தொல்நீர் | பழையதான ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட |
| வேட்கையை | (முன்பு தன்னிடத்திலுண்டான) ப்ரீதியை [கொண்டு, | இலங்கை | லங்கையை [யாக |
| மாற்றியிருந்து | தவிர்ந்தவர்களாய்க் | மலங்க | வ்யாகுலப் படும்படி |
| நீர் | "மூப்பரான நீர் | விலங்கு | திருவடியைக் கொண்டு [டையதாய் |
| இருமி | இருமிக்கொண்டு | எரியூட்டினான் | தீமூட்டி விட்டவனு |
| என்பால்வந்தது | என்னிடத்திற்கு வந்தது [துக்காக" | நல்நீர் | நன்றான (தாபஹரமான) ஜலஸம்ருத்தியை யுடையதான |
| என் | எந்த ப்ரயோஜநத் | | |
| என்று | என்றுசொல்லி | | |

நறையூர் நாம்தொழுது மெழு நெஞ்சமே! (ரு)

வ்யா. — ஆரும்பாட்டு. (மின்னேரித்யாதி) மின்னோடொத்த இடையையுடையரான ஸ்த்ரீகளானவர்கள், இவன்பக்கல் அபிநிவிஷ்டைகளா யிருக்கு மிருப்பைத்தவிர்ந்து, நீ எங்கள்பக்கல் வருகைக்குக் கொடுவந்த பரிசிலோ? இது, இருமிக்கொண்டு எங்கள்பக்கல் என்றிய வந்தீர் என்று இங்ஙனே அநாதரோக்திகளைப் பண்ணுவதற்கு முன்னே. (தொன்னீரித்யாதி) கடலை அகழாக வுடைத்தான லங்கை ஒருவர்கூறை எழுவருடுக்கும்படி விலங்காலே எரியூட்டினா னென்னவுமாம். அன்றிக்கே, இலங்கெரி யூட்டினான் என்னவுமாம். விலங்கு என்றபோது திருவடியாலே என்கிறது; இலங்கு என்றபோது, முன்பு சோறுவேவப்பண்ணுகைக்கு வேண்டுமளவு புக்கு வெளுத்திருந்தது, பெருமாள் தோளை அண்டைகொண்டு அத்தாலே வயிறு நிறைய புஜித்துத் தன்னிறம்பெற்று உஜ்ஜ்வலமான படியைச்சொல்லுகிறது. (நன்னீரித்யாதி) ஸகலதாபமு மாறும்படியான ஜலஸம்ருத்தியை யுடைத்தான திருநறையூரை நாம் புக்கு ஆஸ்ரயிப்போம். பொருந்தாத ராவணனை அழியச்செய்து விபீஷணனுக்குப் புகலாய் நின்ற சக்ரவர்த்தித் திருமகனைப்போலே, நம்முடைய விரோதியை வாஸனையோடே போக்குகைக் கீடான பெருமிடுக்கனானவன் வந்து வர்த்திக்கிற திருநறையூரிலே போய்ப் புகுவோம். (ரு)

அரு —ஆரும்பாட்டு. (மின்னேரிதயாதி) கீழ்ப்பாட்டிலே - "சலங்கொண்டசொல்லார்" என்று சொல்லப்போமோ, ஒருகாலல்லா ஒருகாலாகி

னும் ஸங்கம்பிறவாரோ? என்று பறத்தின்னையிலே [illegible] க்கும் [illegible]ன்பத்தை [illegible] [illegible]ாதையல பிநி[illegible]வசாதை [illegible] [illegible], அந்த அபிநிவேசம் மாற்றிப் பரிபவிப்பர்களென் கிறு ரென்று ஸங்கதி.

(பரிசில்) உபஹாரம். (இது) இருமல். ... ... ... (அ)

மூ.—வில்லேர்நுதலார் வேட்கையை மாற்றிச் சிரித்திவன்
பொல்லான் திரைந்தானென்னும் புறனுரை கேட்பதன்முன்
சொலலார் நான்மறைநான்கோதி யுலகில் நிலாயவர்
நல்லார் நறையூர் நாம்தொழுது மெழு நெஞ்சமே. (எ)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| வில்லர் | த(ு)நுஸ்ஸோடொத்த (த(ு)நுராகாரமாக வளைந்திருக்கிற) | கேட்பதன்முன் | செவிப்படுவதற்கு முன்னே, |
| நுதலார் | நெற்றியையுடையபெண்கள் | சொல்ஆர் | சொறசெவ்வியை யுடைத்தான(பதக்ரமாதிநியதமான) |
| வேட்கையை | (முன்பு தன்னிடத்திலுண்டான) அபிநிவேசத்தை | நான்குமறை | நாலு வேதங்களையும் |
| மாற்றி | தவிர்ந்து | ஓதி | அத்யயநம்பண்ணி(அவற்றை) |
| சிரித்து | பரிஹாஸம்பணணி, | உலகில் | லோகத்தில் |
| இவன் | "இந்தக்கிழவன்[illegible]) | நிலாயவர் | வ்யாபிக்கச்செய்யுமவராய் (ஸ்த்தாபிக்குமவராய்) |
| பொல்லான் | துஷ்டன் (ஸ்த்ரீலோ | நல்லார் | விலக்ஷணமான ஆசாரத்தை யுடையரான ப்ராஹ்மணர் வஸிக்கிற |
| திரைந்தான் | ஒடிந்த (சிதிலமான) சரீரத்தை யுடையவன்" | | நறையூர் நாம்தொழுது மெழு நெஞ்சமே! (எ) |
| என்னும் | என்றுசொலலுகிற | | |
| புறன்உரை | ஆதரமறறசொல் | | |

வ்யா. — ஏழாம்பாட்டு. (வில்லேரித்யாதி) வில்லோடொத்த நுதலையுடைய ஸ்த்ரீகளானவர்கள், இவனைப் பெறுவிடில் பிழையாதாரைப்போலே ஆசைப்பட்டார்களா யிருக்கு மிருப்பைத் தவிர்ந்து, அது தவிர்ந்தாலும், அது தன்னை மறைத்திருக்கை யன்றிக்கே சிரித்து. (பொல்லானித்யாதி) முன்பு இவனுடைய வடிவழகையும் அதினுடைய ஏகரூபதையையும் சொல்லிக்கொண்டாடிப் போந்தவர்கள், "இவன்பொல்லான், திரைந்தான்" என்று அவர்களுடைய புல்லிய

சொல்லு செவிப்படுவதற்குமுன்னே. (சொல்லரித்யாதி) பதத்தில் வர்ணக்ரமநியதத்வம்போலே யாய்த்து வாக்யத்தில் பதக்ரம நியதத்வமிருக்கும்படி. (ஓதி) பூர்வ பூர்வோச்சாரண க்ரமத்தைப் பற்ற உத்தரோத்தரோச் சார்யமாணத்வமாகிற க்ரமத்திலே அப்யஸித்து; இதுதான் காதாசித்கமா யிருக்கையன்றிக்கே, (உலகில் நிலாயவர்) வேதத்துக்கு ஸ்த்தாபகராய்ப் போருமிதுவே ஸ்வபாவமாகவுடையராயிருக்கை. வேதத்தில் வாஸனைபோய் ஆசாரத்தில் ஏதேனும் வைகல்யமுண்டாயிருக்கை யன்றிக்கே, ஆசாரப்ரதாநரானவர்கள் வர்த்திக்கிற தேசத்தை நாமும்போய் ஆஶ்ரயிப்போம். ... ... (எ)

அரு.—எழாம்பாட்டு. (வில்லேரித்யாதி) கீழ்ப்பாட்டில் - புறத்திண்ணையில் கிடக்க, வருவார்க்கு விரோதியாக இருக்கவொண்ணாது என்று, போனுனே என்று வாசல்திறந்து எட்டிப்பார்க்க, தன்மேல் அபிநிவேசத்தாலே பார்த்தார்களாகக்கொண்டு முதலிலமுகிலே ஈடுபட, அத்தைக்கண்டு, தங்கள் நைராஶ்யமெல்லாம் தோற்றப் பொல்லாங்கையெல்லாம் வர்ணித்துப் புறம்பாக்கி வார்த்தை சொல்லுவர்களென்று சொல்லுகிறரென்று ஸங்கதி.

“நிலாயவர்” என்றதினர்த்தம் (ஸ்த்தாபகராய்) என்றது. ... (எ)

மூ.—வாளொண்கண் நல்லார்தாங்கள் மதனனென்றார் தம்மைக்
கேண்மின்களீளையோடேங்கு கிழவனென்னுதமுன்
வேள்வும் விழவும் வீதியிலென்று மறாத வூர்
நாளுநறையூர் நாம்தொழுது மெழு நெஞ்சமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வாள் | வாளாயுதம்போல் அதிதீக்ஷ்ணமாய் | ஈளையோடு | “கோழையோடு கூடதளாநின்ற [(இருமி) |
| ஒள் | அழகியதான | ஏங்கு | |
| கண் | கண்களை யுடையராய் | கிழவன் | (இந்தக்) கிழவனை |
| நல்லார் | ஸௌந்தரிகளான ஸ்த்ரீகள் | கேண்மின்கள் | (எங்கே வந்தானென்று) கேளுங்கள்” |
| தாங்கள் | (இப்போது இகழ்கிற) தாங்களே | என்னுதமுன் | என்று (தம்மருகிற் பெண்களைப்பார்த்துச்)சொல்வதற்கு முன்னே, |
| மதனன் | (இவன்) மந்மதன் | | |
| என்றார்தம்மை | என்று (முன்பு) சொன்ன புருஷர்களையே (பார்த்து), | வேள்வும் | யாகாதியான ஆராதநமும் |
| | | விழவும் | உத்ஸவமும் |

| | | | |
|---|---|---|---|
| வீதியில் | வீதிகளில் | நாளும் | ப்ரதிதிநமும் |
| என்றும் | ஸர்வகாலமும் | நாம்தொழுது மெழு நெஞ்சமே! | (அ) |
| அறாதவூர் | மாறாதவூரான நறையூர், | | |

வ்யா. — எட்டாம்பாட்டு. (வாளொண்கணித்யாதி) ஓராளு மொரு நோக்கும் நேராய் மற்றும் கண்ணழகுக்கு வேண்டும் நன்மைகளையுடையரான ஸ்த்ரீகளானவர்கள், தாங்கள் முன்பு இவன்பக்கல் யௌவநமும் த்ரவ்யமுமுண்டான வன்று "இவன் காமன்" என்று கொண்டாடிப் போநதவர்கள், அருகிருந்தாரைப் பார்ந்து "கேண்மின்கள், ஈளையோடேங்கு கிழவன்" என்பதற்கு முன்னே யென்னுதல்; (ஈளையோடேங்கு கிழவன் - உங்கள் - கேள்) முன்பு, "என்னுடையவன்" என்று ஆதரித்தவர்கள், இபபோது ஒருவர்க்கொருவர் "உங்களுடைய கேள், உங்களுடைய கேள்" என்னுநிற்பர்கள். (விழவும் விழவுமித்யாதி) நித்யோத்ஸவமும் வைதிக ஸமாராதநமும் என்றும் மாறாத ஊர். (நாளுமித்யாதி) பரமபதத்திலே போய் நித்யாநுபவம் பண்ணுமளவும் செல்ல, இப்ப்ரக்ருதியோடே, அத்தோடு போலியான திருநறையூரிலே புக்கநுபவிப்போம். ... ... (அ)

அரு.—எட்டாம்பாட்டு. (வாளித்யாதி) "இவன் பொல்லான்" என்றவாறே, அவர்களைக்குறித்து, நீங்கள்தானே என்னைக் கண்ணாலே அகப்படுத்தி என்னை மந்மதனாகக் கொண்டாடியிருக்க இப்போது இங்ஙனே சொல்லுவீர்களோ? என்று அர்யாயப்பட, இவன் முகம் பாராதே அருகிருந்த தன் பருவத்தோடொத்த பெண்பிள்ளைகளைப் பார்தது இவனுக்குத் தங்களிடத்தில் நைராஸ்யம் பிறக்கும்படி இவன் செவிப்படச் சொல்லுகிறார்களென்கிறாரென்று ஸங்கதி. ... ... ... .. (அ)

மூ.—கனிசேர்ந்திலங்கு நல்வாயவர் காதன்மை விட்டிட
குனிசேர்ந்துடலம் கோலில் தளர்ந்திளையாதமுன்
பனிசேர்விசும்பில் பான்மதிகோள் விடுத்தானிடம்
நனிசேர் நறையூர் நாம்தொழுது மெழு நெஞ்சமே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கனிசேர்ந்து | கோவைப்பழத்தோடொத்து | வாயவர் | அதரத்தையுடையரான பெண்கள் |
| இலங்கு | விளங்காநின்ற | காதன்மை | (தன்னிடத்தில்) ஆசையை |
| நல் | அழகிய | | |

| | | | |
|---|---|---|---|
| விட்டிட | தவிர்ந்திருக்க, (அது க்குமேலே) | பனிசேர் | குளிர்ந்தகிரணங்களை யுடையனாய் |
| குனிசேர்ந்து | கூனையுடைத்தான | பால்மதி | பால்போல் விளங்கா நின்ற சந்த்ரனுடைய |
| உடலம் | சரீரமானது | | |
| தளர்ந்து | சிதிலமாய், | | |
| கோலில் | (தனக்குத் துணையாகப் பற்றின) கோலிலே (கோலைப்பிடிக்கவும் திறமையற்றவனாய்) [ன்னே, | கோள் | க்ஷயரோகத்தை |
| | | விடுத்தான் | போக்கின ஸர்வேஶ்வரனுடைய |
| | | இடம் | ஸ்தாநமாய் |
| | | நனிசேர் | பெருமைபொருந்திய |
| இளையாதமுன் | தளருவதற்கு மு | | நறையூர் நாம்தொழுது மெழு |
| விசும்பில் | ஆகாசத்தில் ஸஞ்சரியாநின்றவனாய் | நெஞ்சமே! | (க) |

வ்யா. — ஒன்பதாம்பாட்டு. (நனியித்யாதி) கோவைப்பழம் போலேயாய் விளங்காநின்றுள்ள அதரத்தையுடைய ஸ்த்ரீகள், இவன் பக்கல் தாங்கள் பண்ணிவைக்கும் †ஸ்நேஹத்தைத் தவிர்ந்து. (குனி சேர்ந்தித்யாதி) முன்பு இறுமாந்திறேயிருப்பது; இப்போது வளைவு தானே ஸ்வபாவமாய், நிமிர்ந்து வ்யாபரிக்க வொண்ணாதபடியா யிருக்குமாய்த்து. அநந்தரம், ஒருகோலை அபாஶ்ரயமாகப் பற்றும்; அத்தைத் தரிக்கப் பிடிக்கமாட்டாமையாலே அது தனக்கு அபாஶ்ரயமாகமாட்டாது, தானதுக்கு அபாஶ்ரயமாக மாட்டாதே இப்படி இளைப்பதற்கு முன்னே. (பனிசேரித்யாதி) ஆகாசப்பரப்புக்கடைய தானே ப்ரகாசகனாயிருக்கிற சந்த்ரனுக்கு வந்தக்ஷயத்தைப் போக்கினவன் வந்து வர்த்திக்கிற தேசம். (நனியித்யாதி) பிராட்டிக்காகப் பரிக்ரஹித்தான் என்கிற பெருமையையுடைய திருநறையூரை, அவன் பரிகரபூதரான நாம்போய் ஆஶ்ரயிப்போம். நனி-பெருமை... (க)

அ௫.—ஒன்பதாம்பாட்டு. (கனியித்யாதி) கீழ்ப்பாட்டில் இவன்முகம் பாராதே பரஸ்பரம் சொல்லிப் பரிஹஸிக்க, வாயில் பழுப்புக்குத் தோற்றுக் கிட்டப்போவதாக ஒருப்பட்டு எழுந்திருக்க, அதிலே கால்நடைதாராமையாலே கோலைக் கைப்பற்றி நாலாகிற்கு மதத்தைபோக்கி அடியிட்டுக் கிட்டவும்மாட்டாதே, அத்தோடே இவனும் சரமகாலம் என்று அஞ்சும்படியாய் விடுமித்தவை யாகையாலே, லோகஸ்த்திதி இதுவான் பின்பு, அத்தையெல்லா மெண்ணி, நறையூரிலேபோய் ஸுகமேயிருப்போமென்கிறாரென்று ஸங்கதி.

† (பா) ஸங்கத்தை.

"விசும்பில்-பனிசேர்-பான்மதி" என்றந்வயமாய், "விசும்பு" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (ஆகாசேத்யாதி). ... (க)

மூ.—பிறைசேர் நுதலார் பேணுதல் நம்மை யிலாதமுன்
நறைசேர் பொழில் சூழ் நறையூர் தொழுநெஞ்சமே யென்ற
கறையார் நெடுவேல் மங்கையர்கோன் கலிகன்றிசொல்
மறவாதுரைப்பவர் வானவர்க் கின்னரசாவரே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—oo:o:oo—

| பதம். | உரை | பதம் | உரை. |
|---|---|---|---|
| பிறைசேர் | (சந்த்ரனுடைய)பிறை | கறைஆர் | கறைமிக்கதாய் |
| | யோடொத்த | நெடுவேல் | நீண்டிருந்துள்ள வே |
| நுதலார் | நெற்றியை யுடையரா | | லையுடையராய், |
| | னபெண்கள் | மங்கையா | திருமங்கையி லுள்ளா |
| நம்மை | நம்விஷயத்தில் | கோன் | ஸ்வாமியான [ர்க்கு |
| பேணுதல் இ | ஆதரத்தைத்தவிர்ந்து | கலிகன்றி | ஆழ்வாருடைய |
| லாதமுன் | (இகழ்வதற்கு) மு | சொல் | ஸ்ரீஸூக்தியான இப் |
| | ன்னே, [நின்ற | | பத்துப் பாசுரத் |
| நறைசோ | தேன்வெள்ள மிடா | | தையும் [கொண்டு |
| பொழில்சூழ் | சோலைகளாலேசூழப் | மறவாது | பராக்கில்லாதவராய்க் |
| | பட்ட | உரைப்பவர் | அப்ப்ய(பூ)ஸிக்கு ம |
| நறையூா | திருநறையூரென்னும் | | வர்கள் |
| | திவ்யதேசததை | வானவர்க்கு | நித்யஸூரிகள் வஸிக் |
| நெஞ்சமே | ஓ! மநஸ்ஸே! | | கும் தேசத்துக்கு |
| தொழு | ஆஸ்ரயிக்கப்பாராய் | இன் அரசு | அழகிய (அப்ரதிஹத |
| என்ற | என்றருளிச் செய்தவ | | ரான) ராஜாவாக |
| | ராய், | ஆவர் | ஆகப்பெறுவர்கள். |

வ்யா. — பத்தாம்பாட்டு. (பிறைசேரித்யாதி) பிறையொத்த நுதலையுடையரான ஸ்தரீகளானவர்கள், நமபக்கல் பேணுதல் தவிருவதற்கு முன்னே (நறைசேர்)மதுமிக்க பொழிலாலே சூழப்பட்ட திருநறையூரிலே புக்கு ஆஸ்ரயிப்போமென்று தம திருவுள்ளத்தோடே கூடி. (கறையாரித்யாதி) ப்ரதிபக்ஷத்தை யழியச்செய்து கறை கழற்ற அவஸரமில்லாதபடி யிருக்கிற நெடுவேலைக் கையிலேயுடையராய் திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த.(மறவாது) ஸ்த்ரீகளும் கண்ணுக்கிலக்காய் யௌவநமுமுண்டான யோ

நாக இத்தைமறவாதே அப்யஸிக்கவல்லவர்கள், என்றுமொக்க பஞ்ச விம்சதி வார்ஷிகரான நித்யஸூரிகளுடைய தேசத்துக்கு நியாமக ராகப் பெறுவர். என்று மொக்க ஏகரூபராயிருக்குமவர்களிறே அவர் கள், அவன் ஸாம்யாபத்தி கொடுத்துவைக்கையாலே. ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு —பத்தாம்பாட்டு. (பிறையித்யாதி) மறக்கப்ரஸக்தி ஏதென்ன வருளிச்செய்கிறார் (ஸ்த்ரீகளுமித்யாதி). இத்திருமொழியில் ப்ரமேயத் துக்குச் சேர விசேஷிக்கிறார் (என்றுமொக்க வித்யாதி). ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆறும்பத்தில் நாலாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து அஞ்சாந்திருமொழி

### கலங்க முந்நீர் ப்ரவேசம்.

வ்யா.—ஸ்த்ரீகளுடைய பரிபவந்துக்குப் பரிஹாரமாகத் திரு நறையூரிலே புக்கு ஒதுங்குகையன்றிக்கே, அங்கேபோய்ப் புகவே, அம்ருதமதநம் தொடக்கமான அபதாநங்களைப் பண்ணி தேவஜாதிக்கு உபகாரகனாய், ஆஶ்ரிதர்க்கு உதவும் ஸ்வபாவனாய், உதவுமிடத்துப் பிரா ட்டிமாரோடு ஆஶ்ரிதரோடு வாசியற உதவும் ஸ்வபாவனானவன் வந்து நிற்கையாலே, அவ்வருகே யுள்ளவையெல்லாம் அவன்றானே தலைக் கட்டித் தரும், அவன்வந்து நித்யவாஸம் பண்ணுகிற தேசமாகை யாலே முக்தப்ராப்யமான பூமியோடு போலியான தேசமென்று அத் தேசத்தைப் பேசி அநுபவிக்கிறார். ... ... ... *

---

அரு. — கலங்கமுந்நீர் ப்ரவேசம் —கீழ்த்திருமொழியில் - திருவுள் ளத்தைக்குறித்து விஷயாநுபவத்துக் குறுப்பாகாத கோழைத்தனத்தா லேவந்த பரிபவங்களையெல்லாம் சொல்லித் திருநறையூரைத் தொழுவோ

மென்னவே, திருவுள்ளமானது, இவ்விபூதியிலே நாமிருந்து திருநறையூரைப்பற்றி யிருந்தோமாகில் சரீரம் பரிணாமி த்ரவ்யமாகையாலே நாமிந்தபகவத்விஷயத்துக்கும் ஆளாகாதே போய்விடுவோமே, ஆகையாலே, என்றும் பஞ்சவிம்சதிவார்ஷிகராணரோடு ஒரு கோவையாயிருந்தன்றோ அநுபவிக்க ஆசைப்படுவதென்று, சரீராவஸாநத்தளவும் ஆறியிருக்கப்போமோ? என்று த்வரிக்க; நாம் ஸ்த்ரீகளுடைய பரிபவ பரிஹாரார்த்தமாக வன்றிக்கே கேவலம் ஸ்வரூபாநுருணமாக ஆஶ்ரயிக்கவே ஆஶ்ரயண விரோதி தொடங்கிப் போய் நித்யகைங்கர்யாந்தமான அவ்வருகுள்ளவை யெல்லாம் தானே தலைக்கட்டும், பதறுதேகொள்என்று, அதுக்கீடாக ஈஶ்வரன் குணவிசேஷங்களை அநுஸந்தித்துக்கொண்டு திருநறையூரை அநுபவிக்கிறாரென்று ஸங்கதியை யருளிச்செய்கிறார் (ஸ்த்ரீகளுடைய வித்யாதி).... .. ... ... ... ... ... ... *

மூ.—கலங்க முந்நீர் கடைந்தமுதங் கொண்டிமையோர்
துளங்கல் தீர நல்கு சோதிச் சுடராய
வலங்கையாழி யிடங்கைசசங்க முடையானூர்
நலங்கொள் வாய்மை யந்தணர்வாழும் நறையூரே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முந்நீர | ஸமுத்ரத்தை [ம்படி | சங்கம் | பாஞ்சஜந்யத்தையும் |
| கலங்க | க்ஷோப (ங்)முண்டா | உடையான் | உடையவனுமான ஸர் |
| கடைந்து | மத(ந)நம்பண்ணி, | | வேஶ்வரனுடைய |
| அமுதங்கொ | (அதில் னின்றும்) அம் | ஊர | திவ்யதேசமானது, |
| ண்டு | ருதத்தையெடுத்து, | நலம்கொள் | ஸத்யமாகிற நன்மை |
| இமையோர் | தேவர்களுடைய | | யையுடைய |
| துளங்கல் | கலக்கமா (ஆபத்தா) | வாய்மை | வாகிந்த்ரிய வ்யாபா |
| தீர | போம்படியாக [னது | | ரமான சொற்களை |
| நல்கு | (அவர்களுக்குக்)கொ | | யுடையரான |
| | டாநின்றவனாய் | அந்தணர் | ப்ராஹ்மணர் [இற |
| சோதி சுடர் | (அக்காலே) அத்யுஜ் | வாழும் | நித்யவாஸம் பண்ணு |
| ஆய | ஜ்வலனாய், | நறையூா | திருநறையூரென்னும் |
| வலங்கை | வலதுகையில் | | திவ்யதேசமாயிரு |
| ஆழி | ஸுதர்சநத்தையும் | | க்கும். (௧) |
| இடங்கை | இடதுகையில் | | |

வ்யா.—முதற்பாட்டு. (கலங்கவித்யாதி) ஜலராசியானது கீழ்மண் கொண்டு மேல்மண்ணெறியும்படி கடைந்து, அம்ருதத்தைவாங்கி, அஸுரவர்க்கத்தாலே நோவுபடுகிற தேவஜாதிக்குக் கொடுத்து, இப்ப

டிசெய்தது அந்தஃபுரத்துக்காதல், அந்தஃபுர பரிகரத்துக் காதலன்றிக் கே, இது பெற்றவநந்தரம் (க) “[illegible]” என்றிருக்கும் தேவர்களுக்காக வாய்த்து இவற்றின் நேர்ந்தியடையத் தன்னதாய், அம்ருதபாநம் பண்ணுகையிலே அவர்களுக்கு அந்வயமாம்படி கொடுத்து, அவர்கள் புஜிக்கப்பெற்றது தன் பேறென்னுமிடம் வடிவில் புகரிலே தோற்றவிருக்கிறவன். (வலங்கையித்யாதி) அம்ருதத்தை புஜிக்கிற இவர்களுடைய விரோதியைப் போக்குகைக்குக் கையிலே திவ்யாயுதங்களைத் தரித்துக்கொண்டிருக்கிறவன் வர்த்திக்கிற தேசம். (நலங்கொளித்யாதி) யதாபூதவாதியான வேதம் கைப்பட்டிருக்கிறவர்களென்னுதல்; யதாபூதவாதிகளான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற ஊரென்னுதல். ... ... ... ... ... (க)

---

அரு.—முதற்பாட்டு. (கலங்கவித்யாதி) “அமுதங்கொண்டு - நல்கு” என்றபோதே “இமையோர்க்கு” என்கை ஸித்தமாயிருக்க, “இமையோர்” என்கையாலே-அஹங்காரிகளுக்கும் அரியனசெய்து கார்யஞ்செய்தவன் பரதந்த்ரரான நமக்குச்செய்யானோ? என்னுமிடம் தோற்றுமென்று உட்கருத் தருளிச்செய்கிறார் (இப்படி யித்யாதி). வாய்மை - வாக்வ்யாபாரமாய், வேதமாதல், கேவல வசநமாதல், ஆக இரண்டுயோஜனை யருளிச்செய்கிறார் (யதாபூதேத்யாதி). ... ... ... ... (க)

மூ.—முனையார் சீயமாகி யவுணன் முரண் மார்வம்
புனை வாளுகிரால் போழ்பட வீர்ந்த புனிதனூர்
சினையார் தேமாம் செந்தளிர் கோதிக் குயில்கூவும்
நனையார் சோலைசூழ்ந்தழகாய நறையூரே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| முனை | யுத்தத்திலே | போழ்பட | இருகூறும்படி |
| ஆர் | பொருத்தமுடைய | ஈர்ந்த | பிளந்த |
| சீயமாகி | நரஸிம்ஹமாய்க் கொண்டு | புனிதன் | பரிசுத்தனுடைய |
| | | ஊர், | |
| அவுணன் | ஹிரண்யாஸுரனுடைய | குயில் | குயில்களானவை |
| முரண் | பலிஷ்டமான | சினை ஆர் | கருவடைந்த (தழைத்திருந்துள்ள) |
| மார்வம் | மார்பை, | | |
| புனை | சேர்ந்திருக்கிற | தேமாம் | தேமாமரங்களுடைய |
| வாள் | ஒளியையுடைய | செம்தளிர் | சிவந்த தளிர்களை |
| உகிரால் | நகங்களினால் | கோதி | கொந்தி |

---

(க) ஸ்ரீ-க௱-கஅ.

| | | | |
|---|---|---|---|
| கூவும் | கூவாநின்றதாய், | சூழ்ந்து | சூழப்பட்டு [ஊ |
| நனை ஆர் | அப்போதலர்ந்த பூக்கள் நிறைந்ததான | அழகாய | தர்ஶநீயமாயிருந்துள் |
| | | நறையூர | (௨) |
| சோலை | பொழில்களாலே | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (முனையாரித்யாதி) பூசலென்னப் பணைக்கும் நாஸிம்ஹமாய், முனையில் அநபிபவநீயனான ஹிரண்யனுடைய வரபலத்தாலே பூண்கட்டின திண்ணியமார்வை, அழகுக்குச் சேர்ந்தாபபோலே, ஒளியையுடைத்தாய் தர்ஶநீயமாயிருக்கிற திருவுகிராலே இரண்டு கூறும்படி கீண்டு பொகட்டு, ஆஶ்ரிதனுக்கு ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே உதவினனென்கிற சுத்தியையுடையவன் வர்த்திக்கிறதேசம். ஆளிட்டஅதி தொழுகையன்றிக்கே தானே கைதொட்டுப் போக்கினசுத்தியை யுடையவன். (சினையாரித்யாதி) தழைத்திருந்துள்ள தேமாக்களிலே மதுபாநத்தைப்பண்ணின குயில்களானவை, ரஸாந்தரத்தை யிட்டு அத்தை மாற்றுகைக்காக அதினுடைய தளிர்களைக்கோதி,முக்தர்ஸாமகாநம் பண்ணுமாபோலேயிருந்து கூவாநிற்கும். (நனையாரித்யாதி) செவ்விபமாறாதே என்றும் நித்ய வஸந்தமான பொழிலாலே சூழப்பட்டு தர்ஶநீயமான திருநறையூர். நனை - பூமொட்டு. ... ... ... ... ... (௨)

---

அரு —இரண்டாம்பாட்டு (முனையாரித்யாதி) கீழ்ப்பாட்டில்- காதாசித்கமாக அஹங்கரிக்கும் தேவப்ரக்ருதிகளானவர்களுக்கு உதவினமையருளிச்செய்து, அதிலுங் காட்டில்கொண்டாடும்படி கேவலம் ஆஸுரப்ரக்ருதி வயிற்றிலே பிறந்தவன்தன் பேர் சொன்னமாத்ரத்திலே ஸமயத்திலே இரண்டுபடியாலே வந்து உதவினன்என்கிற குணத்தை யருளிச்செய்கிறரென்று ஸங்கதி

"முனையார" என்றத்தை * அவுணபதத்திலும் அநுஷங்கித் தருளிச்செய்கிறர் (பூசலித்யாதி) புனை - தொடையாய், சேர்ந்திருக்கிற, வாள் - காந்தியாதல், அழகாதல் சப்தார்த்தமாக்கி யருளிச்செய்கிறர் (அழகுக்கித்யாதி). அழகுக்கு என்றது - உபலக்ஷணமாய், ஒளிக்கும் அழகுக்கும் என்றபடி. ஒளி- காந்தி. தர்ஶநீயம் - அழகாயிருக்கை "புனிதன்" என்றதுக்கு இரண்டு தாத்பாய மருளிச்செய்கிறர் (ஆஶ்ரிதனுக்கித்யாதி). (௨)

மூ.—ஆனைப் புரவித் தேரொடு காலாளணிகொண்ட
சேனைத் தொகையைச் சாடி யிலங்கை செற்றானூர்
மீனைத்தழுவி வீழ்ந்தெழும் மள்ளர்க் கலமந்து
வானப்புதவி லாமை யொளிக்கும் நறையூரே (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆனை | யானைகளும் | வீழ்ந்து | (பின்பு அதினால் தள்ளுண்டவாகளாய்க்) கீழேவிழுந்து |
| புரவி | குதிரைகளும் | எழும் | (பின்னும் அதைப்பிடிக்க வாசையினால்) எழுந்திராநின்ற |
| தேரொடு | ரதங்களோடுகூட | மள்ளர்க்கு | உழவர்களுக்கு |
| காலாள் | காலாள்களுமாக | அலமந்து | பயந்து |
| அணிகொண்ட | விந்யாஸ விசேஷத்தையுடைத்தான | நானம் | மஞ்சளினுடைய |
| சேனைத்தொகையை | ஸேநாஸமூஹத்தை | புதலில் | தூற்றில் |
| சாடி | துகைத்து (அழித்து) | ஆமை | ஆமையானது |
| இலங்கை | லங்காநகரத்தை | ஒளிக்கும் | மறையாநின்ற |
| செற்றான் ஊர், | அழித்தவனுடைய | நறையூர். | (௩) |
| மீனை | மத்ஸ்யத்தை | | |
| தழுவி | (பிடிப்பதற்காக இரண்டு கைகளாலும்) அணைத்து, | | |

வ்யா — மூன்றும்பாட்டு. (ஆனையித்யாதி) ராவணனுடைய படையெழுச்சியை அநுக்ரமத்திலே பேசுகிறார். மலைகள் நடந்தாப்போலே யானைகளைப் புறப்படவிட்டு, அநந்தரம் குதிரைகளைவிட்டு, அநந்தரம் தேர்களாலே அலங்கரித்து, இவை இந்தனைக்கும் காவலாகக் காலாளைப் புறப்படவிட்டு. இப்படிப்பட்ட ஸேநாஸமூஹத்தைத் துகைத்துக் கழித்து லங்கையை அழியச்செய்த தசரதாத்மஜன் வர்த்திக்கிறவூர். (மீனையித்யாதி) நிலப்பண்பாலே சில மலைகள்போலே யாய்த்து மத்ஸ்யங்கள் வளர்ந்திருக்கும்படி; அத்தைப்பிடிக்கிறவர்கள், இரண்டுகையாலுமாகத் தழுவுவர்கள்; அவை பின்னையும் இவனைத்தள்ளா உதறிப்போம்; அதிலேவிழுந்த இவன் திரியவும் சாபலத்தாலே பிடிக்கக் கணிசிக்கும்; இத்தைக்கண்ட ஆமையானது தானஞ்சி வரம்பிலேநின்ற மஞ்சள் பற்றையிலே புக்கு மறையும். நானம்-மஞ்சள். அன்றியே கருமுகையும் பிச்சியுமாய் நின்ற செடியிலேபுக்கு மறையும். மள்ளர் என்று - உழவர். ... ... ... ... (௩)

---

அரு — மூன்றும்பாட்டு. (ஆனையித்யாதி) கீழ்ப்பாட்டில் - ஆஸ்ரிதனுக்கு உதவினமை யருளிச்செய்தார்; இப்பாட்டில் - உதவினதும் பிராட்டிக்கு உதவிற்றுப்போலே கிடீர் என்கைக்காக, பிராட்டிக் குதவினபடியை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"சேனை" என்றபோதே, ஆனைமுதலானவை இராதோ, விசேஷிப்

பானென்னென்ன வருளிச்செய்கிறார் (ராவணனித்யாதி). க்ரமந்தன்னைக் காட்டுகிறார் (மலைகளிதயாதி). "சாடி" என்றதினர்த்தம் (துகைத்து) என்றது. "அலமாந்து" என்றதினர்த்தம் (அஞ்சி) என்றது. "புதலில்" என்றதினர்த்தம் (பறறையிலே) என்றது; தூற்றிலேஎன்கை. ... (௩)

மூ.—உறியார் வெண்ணெயுண் டுரலோடும் கட்டுண்டு
வெறியார் கூந்தல் பின்னை பொருட்டான் வென்றானூர்
பொறியார் மஞ்ஞை பூமபொழில் தோறும் நடமாட
நறுநாண்மலர்மேல் வண்டிசைபாடும நறையூரே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உறி | உறிகளிலே | பொறிஆர் | புள்ளிகளை யுடைத்தான (நாநாவர்ணமான) |
| ஆர் | நிறைய சேமித்துவைத்த | மஞ்ஞை | மயில்களானவை |
| வெண்ணெய் | நவநீதரஸத்தை | பூபொழில் தோறும் | பூக்களை யுடைத்தான சோலைகளெங்கும் |
| உண்டு | அமுதுசெய்தும், | நடமாட | கூத்தாடா நிற்பதாய், |
| உரலோடு | உரலோடுசேர்த்து | வண்டு | வண்டுகளானவை |
| கட்டுண்டும் | (யசோதையினால்) கட்டப்பட்டும், | நறு | பரிமள ப்ரசுரமாய் |
| வெறிஆர் | பரிமள ப்ரசுரமான | நாள | அப்போதலர்ந்த |
| கூந்தல | குழற்கற்றையை யுடைய | மலர்மேல் | தாமரைப்பூக்களிலே |
| பின்னைபொருட்டு | நப்பின்னைப் பிராட்டிக்காக | இசைபாடும் | (அவற்றினுடைய நர்த்தநத்துக்கு ஒத்ததான) காநத்தைப்பாடாநிற்கும் |
| ஆன் | (ஏழு) ருஷபங்களை | | |
| வென்றான் | ஜயித்து அழித்தவனுடைய | | |
| ஊர், | | நறையூர். (௪) | |

வ்யா.—நாலாம்பாட்டு. (உறியாரித்யாதி). உறியிலே கள்ளக்கயிறு உருவிச் சேமித்துவைத்த வெண்ணெயை "தெய்வம் கொண்டதோ?" என்னும்படியாய்த்து அமுதுசெய்தது; "இது இவனை யொழியப்போகாது" என்று உரலோடே சேர்த்துக்கட்டுவர்கள்; அநுகூல ஸ்பர்ஶமுள்ள த்ரவ்ய மொழியச்செல்லாமையாலே கட்டுண்டிருக்கும்; இரண்டுக்கும் †வாசியற்றிருக்கிறபடி. (வெறியாரித்யாதி) பரிமளம் மிக்குள்ள திருக்குழலையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக ருஷபங்களேழையும அழியசசெய்தவன் வர்ததிக்கிறதேசம். (பொறியாரித்யாதி) பரப்பு மாறப்பூத்த பொழில்களின்மேலே நாநாவர்ணமான மயில்களானவை ஆலியாநிற்கும். (நறுநாணித்யாதி) செவ்வித்

† "அத்தோடு இவனோடு" என்று சிலகோசங்கள்.

தாமரைப்பூவிலே மதுபானார்த்தமாக இழிந்த வண்டுகளானவை, அவ ற்றினுடைய காலுக்கு இசையப் பாடாநிற்கும். ... ... (ச)

---

அ௫.—நாலாம்பாட்டு (உறியித்யாதி) கீழ் மூன்றுபாட்டிலும் - இஷ்ட ப்ராவண்யமும் அநிஷ்ட நிவ்ருத்தியும் அருளிச்செய்தாராய், இப்பாட்டில், அதுக்கநுகுணமான ஆஶ்ரிதகரஸ்பர்ஶமல்லாமல் செல்லாதபடியான ஸௌ ஶீல்யத்தை அநுஸந்திக்கிருரென்று ஸங்கதி.

உறியானது, ஆர் - பூர்ணமாக, முன்புபோ லிருக்கும்படியாக என் ருக்கி யருளிச்செய்கிருர் (உறியிலே யித்யாதி). "உண்டு" என்று இரண் டிடத்தில் போக்ய(ஶ்ரீ)தையைச் சொன்னதுக்குத் தாத்பர்யம் (அது கூலேத்யாதி). (வாசியற்றிருக்கிறபடி) என்றது-வெண்ணெயுண்கையோடு கட்டுண்கையோடு வாசியில்லை என்கை.(ஆலியாநிற்கும்) கூத்தாடாநிற்கும்.

மூ.—விடையேழ் வென்று மென்றோளாய்ச்சிக் கன்பனாய்
நடையால் நின்ற மருதம் சாய்த்த நாதனூர்
பெடையோடன்னம் பெய்வளையார் தம் பின்சென்று
நடையோடியலி நாணி யொளிக்கும் நறையூரே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏழ்விடை | ஏழுவ்ருஷபங்களையும் | பெடையோடு (தன்) | பேடையோடு |
| வென்று | ஸம்ஹரித்து, | பெய் | செறிந்த [கூடி |
| மென்தோள் | ம்ருதுவான புஜங்களை யுடைய [திறத்தில் | வளையார்தம் | வளைகளையணிந்த பெ ண்களுடைய |
| ஆய்ச்சிக்கு | நப்பின்னைப்பிராட்டி | பின்சென்று | பின்னேபோய் |
| அன்பனாய் | அன்பையுடையனு | நடையோடு | (அவர்கள்) நடையை அநுஸரித்து |
| நின்ற | வழியிலேநின்ற[மாய், | | |
| மருதம் | மருதமரத்தை [லே | இயலி | ஸஞ்சரித்து, (அப்படி நடக்கப் போகா மையாலே) |
| நடையால் | தவழ்கிற நடையினு | | |
| சாய்த்த | விழத் தள்ளினவனு | | |
| நாதன் | ரக்ஷகனுடைய [மான | நாணி | லஜ்ஜித்து |
| ஊர், | | ஒளிக்கும் | மறைபாநின்ற |
| அன்னம் | ஹம்ஸங்களானவை | நறையூர். | (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (விடையித்யாதி) ம்ருதுஸ்வபாவ மான தோளழகையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக ருஷபங்களே ழையு மழியச்செய்தானாய்த்து அவளுடைய பக்கல் ப்ரேமத்தாலே. (நடை யித்யாதி) தவழுகிற நடையாலே அஸுராவேசத்தாலே பேரா தேநின்ற மருதுகளை வேரோடே பறிந்துவிழும்படி சாய்த்த ஸர்வ

ரக்ஷகன் வர்த்திக்கிறதேசம். (பெடையித்யாதி) அன்னமானது பேடையோடேகூட, அங்குத்தை ஸ்த்ரீகளுடைய நடை யழகைக் கண்டு, தானுமப்படியே நடக்கைக்காகப் பின் செல்லும்; அந்நடை யழகு தனக்கு வாராமையாலே லஜ்ஜித்து அருகே ஒதுங்காநிற்கும். ... ... ... ... ... ... ... (ரு)

அநு: — அருசாம்பாட்டு (விடையித்யாதி). நப்பின்னைக்காக ஆன் வென்றதுக்கு ஹேதுகதநமுகேந, உரலோடு கட்டுண்டபின்பு மருதங்களை முறித்தானென்கையாலே, ஆஸ்ரிதர் கயிற்றாலே கட்டுண்டிருக்கச்செய்தேயும் விரோதி நிரஸநம் செய்தானென்கைக்காக அத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"பெய்வளையார்தம் - நடையோடியலி - பின்சென்று - நாணி" என்று அந்வயமாய், "இயலி" என்றது - இசலி என்றாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அன்ன மித்யாதி). ... ... ... ... (ரு)

மூ:—பகுவாய் வன்பேய் கொங்கை சுவைத்தாருயிருண்டு
புகுவாய் நின்ற போதகம் வீழப் பொருதானூர்
நெகுவாய் நெய்தல் பூமது மாந்திக் கமலத்தின்
நகுவாய் மலர்மேலன்ன முறங்கும் நறையூரே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பகுவாய் | பெரியவாயை யுடையளாய் | வீழ | நசித்துவிழும்படி |
| வன் | க்ரூர ஹ்ருதயத்தை யுடையளான | பொருதான் | யுத்தம்பண்ணினவனு மானவனுடைய |
| | | ஊர், | |
| பேய் | பேயான பூதனையு[டைய] | நெகுவாய் | அலர்ந்தவாயையுடை[ய] |
| கொங்கை | ஸ்தநத்தை | நெய்தல்பூ | கருநெய்தல் பூக்க[ளிலே] |
| சுவைத்து | உண்டு | மது | தேனை |
| ஆர் உயிர் | அருமையான (அவளுடைய) ப்ராண[னை] | மாந்தி | பாநம்பண்ணி, |
| | | நகுவாய் | விகஸியாநின்ற வாயையுடைய |
| உண்டு | க்ரஸித்தும், | கமலத்தின் | தாமரையினுடைய |
| புகுவாய் | (உள்ளே) ப்ரவேசிக்கத்தக்க வழியிலே | மலர்மேல் | பூக்களிலே |
| | | அன்னம் | ஹம்ஸங்களானவை |
| நின்ற | இருந்த | உறங்கும் | கண்வளராநின்ற |
| போதகம் | குவலயாபீடமானது | | நறையூர். (சு) |

வ்யா.—ஆறும்பாட்டு. (பகுவாயித்யாதி) வடிவில் பெருமைக்குத் தகுதியான பெரியவாயையுடையளாய், இவன் கிட்டிவரச்செய்

தேயு மிரங்காதபடியான நெஞ்சில் வன்மையை யுடையளா யிருக்கிற பூதனையினுடைய முலையையுண்டு, அவ்வழியாலே அவளுடைய ப்ராணனைமுடித்து. (புகுவாயிந்யாதி) புகுகிறவழியிலே நிறுத்தி னுய்த்து குவலயாபீடத்தை; - ப்ரபாதந்தாலே விளைந்ததாய், தான் மாதுலனுக் கண்ணாரை விழவிட்டு துக்கங்கொண்டாடுவானாக, மலை முறிந்து விழுந்தாப்போலே அது விழும்படி பொருத ஆண் பிள்ளை வர்த்திக்கிறதேசம். (நெருவாயிந்யாதி) கட்டவிழுகிற நெய் தற்பூவிலே மதுபானத்தைப் பண்ணிக் கழிபவலர்ந்த தாமரைப்பூ வைப் படுக்கையாகக் கொண்டு அதிலேபோய்ச் சாயுமாய்ந்து. (௬)

---

அரு.—ஆரும்பாட்டு. (பருவாயிக்யாதி) கீழ் மரங்களை முறித்தவளை வன்றிக்கே திருவாய்ப்பாடியிலும் திரு மதுரையிலும் முந்துறச்செய்த அதிமாநுஷ சேஷ்டிதங்களை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

இத்தால், சைசவதசையோடு கௌமாரதசையோடு வாசியில்லை இவ னுடைய விரோதி நிரஸநசீலதை யென்கை. பகு-ப(ப)ஹு, அதாவது-பெரு மையாய், இவன் ஸ்வாபாவிகாகாரத்தைப் பற்றவென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (வடிவிலித்யாதி) நகுதை - சிரிக்கையாய், அலருகை யாய், அருளிச்செய்கிறார் (கட்ட விழு றவித்யாதி). "மாந்தி" என்றதி னர்த்தம் (பானத்தைப் பண்ணி) என்றபடி (௬)

மூ.—முந்துநூலும் முப்புரிநூலும் முன்னீந்த
அந்தணாளன் பிள்ளையை யந்நான்றளித்தானூர்
பொந்தில்வாழும் பிள்ளைக்காகிப் புள்ளோடி
நந்துவாரும் பைம்புனல் வாவி நறையூரே. (எ)

| பதம் | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| முந்து | பழையதான (அபௌருஷேயமான) | | ஊர், |
| | | புள் | பக்ஷிகளானவை |
| நூலும் | வேதசாஸ்த்ரங்களையும் [யுர் | பொந்தில் | மரத்தின் பொந்துக |
| | | வாழும் | ளில் வஸியாநின்ற |
| | | பிள்ளைக்காகி | குட்டிகளின் ஆஹாரத்துக்காக |
| முப்புரிநூலும் | யஜ்ஞோபவீதத்தை | | |
| முன் ஈந்த | முன்னேகொடுத்த | ஓடி | நெடுந்தூரம்சென்று |
| அந்தணாளன் | ஸாந்தீபநியினுடைய | நந்து | நத்தைகளை |
| பிள்ளையை | புத்ரனை [லத்தில் | வாரும் | திரட்டாநிற்பதாய் |
| அந்நான்று | கடல்கொண்ட அக்கா | பைபுனல் | தெளிந்தநீரையுடைய |
| அளித்தான் | மீட்டுக்கொடுத்தவனுடைய | வாவி | தடாகங்களை யுடையதான |
| | | நறையூர். | (எ) |

வ்யா. — ஏழாம்பாட்டு. (முந்துநூலித்யாதி) முன்பே பழுக அபௌருஷேயமாய்ப் போருகிற வேதாக்ஷரராசியையும் வேதாத்ய யநத்துக்கு அதிகாரத்தை யுண்டாக்கிக்கொடுக்கிற உபநயநாதி ஸம்ஸ் காரத்தையும் பண்ணிக்கொடுத்த, அந்தணனுண்டு - ஸாந்தீபநி, ‡(அவனுடைய)புத்ரனைக் கடல்கொள்ள, அவனை மீட்டுக்கொடுத்தவன் வர்த்திக்கிறதேசம். இழந்தாரிழவுகள் தீர்க்குமவன் வர்த்திக்கிறதே சம். (பொந்தில்வாழுமித்யாதி) மரத்தின் பொதும்பிலே வர்த்திக் கிற பிள்ளைக்கு ப(க்ஷ)க்ஷ்யம்தேடிப் புள்ளானது கழியப்போய்ச் சங் குகளை வாருமாய்த்து அதுக் களவானவற்றைத் தேடிக்கொடுக்கிறு மென்று. நந்துஎன்று - நத்தைக்குப்பேர். ... ... (எ)

அரு — ஏழாம்பாட்டு. (முந்தித்யாதி) திருமதுரையில் புகுந்து ஆனை யைவென்ற வளவேயோ? செத்தவனை உடம்போடே கொடுத்த அகடித கட(ந்ந)ாஸமர்த்தன் என்று ஸர்வசக்தித்வத்தை அநுஸந்திக்கிருரென்று ஸங்கதி.

(ஸாந்தீபநி) என்ற வநந்தரம், அவன் என்று கூட்டுவது. அந்நான் று - அக்காலத்திலே என்ருய், பலித மருளிச்செய்கிருர் (கடலித்யாதி).

மூ. — வெள்ளைப் புரவித் தேர்விசயற்காய் விறல் வியூகம்
விள்ளச் சிந்துக் கோன்விழ ஊர்ந்த விமலனூர்
கொள்ளைக் கொழு மீனுண் குருகோடிப் பெடையோடும்
நள்ளக் கமலத் தேறலுகுக்கும் நறையூரே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெள்ளைபுரவி | வெள்ளைக்குதிரைகள் பூட்டின | கொள்ளை | ஸம்ருத்தமாய் |
| தேர் | தேரையுடைய | கொழு | வளர்த்தியையுடைய |
| விசயற்காய் | அர்ஜுநனுக்காக, | மீன் | மத்ஸ்யங்களை |
| விறல் | பலிஷ்டமான | உண் | புஜியாநின்ற |
| வியூகம் | ஸேநாஸமூஹமானது | குருகு | நாரையானது |
| விள்ள | சிந்நபிந்நமாம்படி யாகவும் | ஓடி | சென்று |
| சிந்துக்கோன் | ஸிந்து தேசாதிபதி யான ஜயத்ரதன் | பெடையோடும் | (தன்) பேடையோடு கூட [டைய) |
| விழ | நசிக்கும்படியாகவும் | நள்ளம் | செறிந்த (இதழையு |
| ஊர்ந்த | (தேரை) நடத்தின | கமலம் | தாமரைப்பூவில் |
| விமலன் | பரிசுத்தனுடைய | தேறல் | தேனை |
| ஊர், | | உகுக்கும் | பாநம்பண்ணுகின்ற |
| | | நறையூர். | (அ) |

‡ குண்டலிதபதம் அரும்பதத்துக்குச் சேராது.

வ்யா—எட்டாம்பாட்டு. (வெள்ளைப்புரவி யித்யாதி) வெள்ளைக் குதிரைபூண்ட தேரையுடைய, விசயனுக்காய் - அர்ஜுநனுக்காக, பெரிய மிடுக்கையுடைத்தான கையு மணியுமாக வகுத்துக் கொடுவரு கிற ஸேநாஸமூஹமானது முடிந்து போம்படியாகவும், ஜயத்ரதன் தலை அறுப்புண்ணும்படியாகவும், ஆஸ்ரிதனுடைய ப்ரதிஜ்ஞாஸம காலத்திலேவந்து உதவின ஓரத்தை யுடையவன் வர்த்திக்கிறதேசம். (கொள்ளைக்கொழுமீனித்யாதி) அதுதான் ஸம்ருத்தமாய்ப் பெரிய வளர்த்தியை யுடைத்தாயிருக்கிற மத்ஸ்யத்தை புஜித்த குருகு பேடையோடேகூடச் செருக்குக்குப் போக்குவிட்டுப்போய், செறிந்த இதழையுடைத்தாயிருக்கிற தாமரைப்பூவிலே நிறைந்திருக்கிற தேனை உகுக்குமாய்த்து. ... ... ... ... ... (அ)

---

அரு—எட்டாம்பாட்டு. (வெள்ளையித்யாதி) கீழ் - ஸர்வசக்தித்வத்தை அருளிச்செய்து, இப்படி சக்தனானவன் ஆஸ்ரிதனுக்குக் கையாளான ஸௌலப்யத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"வியூகம்" வ்யூஹமாய், அருளிச்செய்கிறார் (கையு மித்யாதி). "விள்ள" என்றதினர்த்தம் (முடிந்து) என்றது "சிந்து" - ஸிந்து தேசத்துக்கு, "கோன்" ராஜாஎன்றாய், அதினர்த்தம் (ஜயத்ரதன்)என்றது. (அதுதான்)

அந்தக் குருகுதான். ... ... ... .. ... ... (அ)

மூ.—பாரையூரும் பாரந்தீரப் பார்த்தன்றன்
தேரையூரும் தேவதேவன் சேருமூர்
தாரையூரும் தண்டளிர் வேலி புடைசூழ
நாரையூரும் நல்வயல்சூழ்ந்த நறையூரே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாரை | பூமியிலே | தண் தளிர் | குளிர்ந்த தளிர்களையுடையதுமான |
| ஊரும் | நடமாடாநின்ற | வேலி | (அரணாக இட்ட) வேலியாலே [தாய், |
| பாரம் | பா(ர)ரமானது | புடைசூழ | சுற்றும் சூழப்பட்ட |
| தீர | கழியும்படியாக | நாரை ஊரும் | நாரைகள் ஸஞ்சரியாநின்ற [லே |
| பார்த்தன்தன் | அர்ஜுநனுடைய [ற | நல்வயல் | அழகிய கழனிகளா |
| தேரை ஊரும் | ரதத்தைநடத்தாநின் | சூழ்ந்த | சூழப்பட்டதுமான |
| தேவதேவன் | தேவாதிதேவன் | நறையூர். | (௯) |
| சேரும் | சேர்ந்து நித்யவாஸம் பண்ணுகின்ற | | |
| ஊர், | | | |
| தாரை ஊரும் | (தேனின்)தா(ரை)ரை வழியாநின்றதாய், | | |

வ்யா. — ஒன்பதாம்பாட்டு. (பாரையூரு மித்யாதி) பொறுக்க மாட்டாதபடியா யிருக்கிற பூமியினுடைய பா(ரா)ரமானது போம் படியாக, அர்ஜுநனுடைய தேரை நடத்தி,(க) "தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம் - தமீஶ்வராணும் பரமம் மஹேஶ்வரம" என்கிற தன் மேன்மை கிடக்கச்செய்தே, ஆஶ்ரிதனுக்காகத் தாழநின்று ஸாரத்யம் பண்ணினவன் வந்து வாஸஞ்செய்கிறதேசம் (தாரையூரு மித்யாதி) பூவைத் தோற்பிக்கும்படியான தளிரையுடைத்தான வேலியாலே சூழப்பட்டென்னுதல்; தாரை யென்று நினைக்கிறது-தா(ரா)ரையாய், அத்தாலே - தேனொழுகாநின்றுள்ள வேலி என்னவுமாம் (நாரையூருமித்யாதி) நாரைகளினுடைய ஸஞ்சாரத்தை யுடைத்தாய் அழகிய வயலாலே சூழப்பட்ட திருநறையூர் ... ... ... (௯)

அரு.—ஒன்பதாம்பாட்டு (பாரையித்யாதி) கீழ்ப்பாட்டில் - ஜயத்ரத வதம் சொன்னாராய், அநந்தரத்தில நடந்ததாய் க்ருஷ்ணாவதாரத்துக்கு ப்ரதாந ப்ரயோஜநமான பூபா(பா)ர நிரஸநத்தை யருளிச்செய்கிறு ரென்று ஸங்கதி.

பாரை - பாரிலே, ஊராநிற்கிற, பாரம் - ஸ்வாமித்ரோஹிகளான பாரம் தீர என்றாய், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பொறுக்கவித்யாதி). தாரை-பூவை, ஊரும்- தள்ளும் என்றும், தாரை-தா(ரா)ரை, ஊரும்-ஒழுகு மென்றும் இரண்டர்த்த மருளிச்செய்கிறார் (பூவையித்யாதி). (௯)

மூ —தாமத்துளப நீண்முடி மாயன் தானநின்ற
நாமத்திரள் மாமாளிகை சூழ்ந்த நறையூர் மேல்
காமக்கதிர்வேல் வல்லான் கலிய னொலிமாலே
சேமத்துணையாம செப்புமவர்க்குத் திருமாலே. (௰)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துளபம் | திருத்துழாயினுலே கட்டப்பட்ட | நின்ற | நித்யவாஸம் பண்ணுமதாய், |
| தாமம் | மாலையினு லலங்கரிக்கப்பட்டும் | நாமம் | ப்ரஸித்தமாய் |
| | | திரள் | நெருங்கியிருக்கிற |
| நீள் | நீண்டுமிருக்கிற | மா மாளிகை | பெரிய க்ருஹங்களினுலே |
| முடி | கிரீடத்தையுடைய | | |
| மாயன் | ஆஶ்சர்யபூதனான ஸர்வேஶ்வரன் | சூழ்ந்த | வ்யாப்தமான [மாக, |
| | | நறையூர்மேல் | திருநறையூர் விஷய |

(க) ஶ்வேதாஶ்வ-௬.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காமம் கதிர் | மிக்க ஒளியையுடைய | செப்புமவாக்கு | அப்யஸிக்குமவர்களுக்கு |
| வேல் | வேலாயுதத்தை | திருமால் | ஶ்ரிய:பதியானவன் |
| வல்லான் | பிடிக்கவல்லரான | சேமம் | எப்போதும் ரக்ஷகனை |
| கலியன் | ஆழ்வார் | துணை ஆம் | ஸஹாயபூதனுக ஆவான். (௧௦) |
| ஒலி | அருளிச்செய்த | | |
| மாலை | சப்த ஸந்தர்ப்பமான இப்பத்துப் பாசுரங்களையும் | | |

வ்யா.— பத்தாம்பாட்டு. (தாமத்துளபமித்யாதி) திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதமாய், ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகத்தை யுடையனுப், ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையனுனவன் வந்து வர்த்திக்கிறதேசம். (நாமதிரளித்யாதி) "இன்ன மாளிகை" "இன்னமாளிகை"என்கிற பாவிருத்தியையுடைத்தான நெருங்கின ஓக்கத்தை யுடைத்தான மாளிகைகளாலே சூழப்பட்ட திருநறையூரிலே அருளிச்செய்தது (காமக்கதிரித்யாதி) அழகிய புகரையுடைத்தான. காமம் என்று - ப்ரகாமமாய், அத்தால் நினைக்கிறது - மிகுதியாய், மிக்க புகரையுடைய வேலைக்கையிலே யுடைய திருமங்கையாழ்வார் ஒலியுடைத்தாகச் சொன்னமாலை செப்பவல்லார்க்கு, (திருமால் - சேமத்துணையாம்) இவனை அடைகொடு பாழ் போக்குகை யன்றிக்கே, இவனுடைய ரக்ஷணத்தை முடியத் தலைக்கட்டிக் கொடுக்கும்படியான துணையாம. ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு (தாமமித்யாதி) துணையாம் என்ன வமைந்திருக்க, "சேமம்" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவனை யித்யாதி) அதாவது - பாணுஸுராதிகள் கையிலே உபஹாரங்களைக்கொண்டு, "துணையாகிறேன்" என்று சொல்லி, முதுகுகாட்டி விட்டோடி, கரம் கழியவிட்ட கபாலியைப்போலன்றிக்கே, ஆஶ்ரிதனை நழுவவிடாதவனென்கை. ... ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆறும்பத்தில் அஞ்சாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆரும்பத்து ஆருந்திருமொழி

## அம்பரம்ப்ரவேசம்.



வ்யா. — ஆஶ்ரித விரோதி நிரஸநசீலனானவன் வந்து நிற்கிற தேசம் திருநறையூரென்று அநுஸந்தித்தார்; நமக்கு அந்தஸ்நேஹமுமின்றிக்கே, தாந்த(ஸா ந்)ருமன்றிக்கே யிருக்கிற நாம் ஆஶ்ரயிக்கும்படி எங்ஙனே! என்கிற, திருவுள்ளத்தைக்குறித்து, தான் துர்மாநியுமாய் ஸ்நேஹமு மின்றிக்கே யிருக்கிற ராஜாதான், ஶ்ரீ மார்க்கண்டேய பகவானைப்போலே தேவதாந்தர பஜநம்பண்ணி அங்கு தன்னுடைய அபிமதம் தலைக்கட்டிக்கொள்ளப் பெறுமையாலே இங்கேவந்து பக்நா(பி மா)பிமாநனாய்த் திருவடிகளிலே விழுந்தாஶ்ரயித்து ஐஹிகாமுஷ்மிகங்களிரண்டையும் பெற்றுப்போனான்; ஆனபின்பு திருநறையூரை ஆஶ்ரயியென்று திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்து பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார். நம்பி ஒரு வாள்கொடுத்தருள, அத்தைக்கொண்டு பூமியையடையத் தன் காலின்கீழே இட்டுக்கொண்டானென்றொரு ப்ரஸித்தி யுண்டாய்த்து. ... ... ... ... *

---

அரு.—அம்பரத்தின்ப்ரவேசம்.—கீழ் திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்தவா இப்போது கேவல பரோபதேசம் பண்ணுகைக்கு ஸங்கதி காணாமையாலே, பரோபதேச முகத்தாலே திருவுள்ளத்துக் கருளிச்செய்கிறாரென்று ஸங்கதி யருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதி). .. *

மூ.— அம்பரமும் பெருநிலனும் திசைகளெட்டும்
அலைகடலும் குலவரையு முண்டகண்டன்
கொம்பமரும் வடமரத்தி னிலைமேல் பள்ளி
கூடினான் திருவடியே கூடகிற்பீர்
வம்பவிழும் செண்பகத்தின் வாசமுண்டு
மணிவண்டு வகுளத்தின் மலர்மேல்வைகு
செம்பியன்கோச் செங்கணான் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அம்பரமும் | ஆகாசத்தையும் | வண்டு | வண்டுகளானவை |
| பெரு | பரந்த | வம்பு | பரிமளத்தை |
| நிலனும் | பூமியையும் | அவிழும் | புறப்பட விடாநின்ற |
| எட்டுத்திசைகளும் | எட்டுத் திக்குக்களையும் | செண்பகத்தின் | செண்பகப்பூவி லுண்டான |
| அலை | அலைமோதாநின்ற | வாசம் | பரிமளத்தை |
| கடலும் | ஸமுத்ரத்தையும் | உண்டு | அநுபவித்து(பின்பு) |
| குலவரையும் | குலபர்வதங்களையும் | வகுளத்தின் மலர்மேல் | மகிழம்பூவின்மேலே |
| உண்ட | அமுதுசெய்த | வைகு | தங்காநிற்பதாய், |
| கண்டன் | கண்ட(ரூ)த்தை யுடையனாய், | செம்கணான் | சிவந்தகண்களையுடையனாய் |
| அமரும் | ஸம்ருத்தமான | செம்பியன் | செம்பியனென்ற பெயரை யுடையனான |
| கொம்பு | கிளைகளையுடைய | கோ | (சோழ)ராஜா |
| வடமரத்தின் | ஆலமரத்தினுடைய | சேர்ந்த | வாஸம்பண்ணுமதாய், |
| இலைமேல் | தளிரின்மேலே(ப்ரளயகாலத்தில்) | மணி | ரத்நங்களிழைத்த |
| பள்ளி கூடினான் | கண்வளர்ந்தருளினவனான ஸர்வேச்வரனுடைய | மாடம் | க்ருஹங்களை யுடையதான |
| திருவடி | ஸ்ரீபாதங்களை | திருநறையூர் கோயில் | திருநறையூரென்னும் திவ்யதேசத்தை |
| கூடிற்பீர் | பெறவேணு மென்றிருப்பவர்களே! | சேர்மின்கள் | அடைந்து நித்யவாஸம் பண்ணுங்கள். |
| மணி | அழகிய | | |

வ்யா.—முதற்பாட்டு. (அம்பரமுமித்யாதி). ஆகாசத்தையும், பரப்பையுடைத்தான பூமியையும், திக்குக்களெட்டும், க்ஷோபத்தை யுடைத்தான கடலையும், பூமிக்காணி யடித்தாப்போலே யிருக்கிற குலபர்வதங்களையும் அமுதுசெய்த கண்ட(ரூ)த்தையுடையவன். (கொம்பமரு மித்யாதி) தழைத்த கொம்பையுடைத்தான ஆலமரத்தி னிலையிலே கண்வளர்ந்தருளின அக(டி)டிதகடநா ஸாமர்த்த்யத்தை யுடையவன் திருவடிகளைப் பெறவேண்டியிருப்பீர்! (வம்பவிழு மித்யாதி) பரிமளத்தைப் புறப்படவிடுகிற செண்பகத்தி லுண்டான பரிமளத்தை புஜித்து, அத்தாலே நரைதிரைமாறி, அச்செண்பகத்தி லுண்டான வெக்கையை மாற்றுமாய்த்து மகிழம்பூவிலே படிந்து. செம்பியன்கோச் செங்கணானென்று - அவன்றனக்குப் பேர். இத்தால்

சொல்லிற்றாய்த்தென் னென்னில்; அவனுடைய அகடிதகட(னா)கா ஸாமர்த்த்யத்தோடு இந்த வண்டுகள் மகிழம்பூவிலே படிந்த இத் தோடு வாசியற உத்தேஶ்யமா யிருக்கிறதாய்த்திவர்க்கு அவ்வூரி லுள்ளதாகையாலே. ... ... ... ... ... (௧)

அரு.—முதறபாட்டு. (அம்பரமித்யாதி) "மணி" என்று - அழகாய், அதினார்த்தம் (நரைதிரைமாறி) என்றது; கிழத்தனம் தீர்ந்தென்றபடி. செம்பியன்கோ - சோழராஜா. செங்கணன் - சிவந்த கண்ணையுடைய. செண்பகத்தில் போன வண்டு மரித்துப் போமித்தனை போக்கி நரைதிரை மாறி வரக்கூடுமோ என்னும் சங்கையிலே, வண்டுகளாவார் - அவ்வூரி லவர்களாய், அவர்கள் வர்ஜ்ஜநீயமான ப்ராக்ருத போக(பூ)ங்களை புஜித் தும் ஸ்வரூபநாசம் பிறவாதே பகவத் போகத்தாலே அத்தால் வந்த வெக் கையை யாறறி யிருப்பர்களென்னும் ஸ்வாபதேசத்திலே கருத்தாக்கி, ஆ னால் அது இவர்க்கு உத்தேஶ்யமோ என்னும் சங்கையைப் பரிஹரிக்கிறார் (இத்தாலித்யாதி). (இந்த வண்டுகள்) செண்பகத்தில் படிந்த வண்டுகள். (இத்தால்) திவ்யதேசவாஸத்தாலே, நம்பெருமாள் (௧) "செய்தாரேல் நன்று செய்தார" என்றிருக்கு மவராகையாலே, அவர்களுக்கு ஸ்வரூபநா சம் வாராமையால் இவர்க்கு உத்தேஶ்யராகத் தட்டில்லை என்கை. (௧)

மூ.—கொழுங்கயலாய் நெடுவெள்ளங் கொண்ட காலம்
குலவரையின் மீதோடி யண்டத்தப்பால்
எழுந்தினிது விளையாடு மீசனெந்தை
இணையடிக் கீழினிதிருப்பீ ரினவண்டாலும்
உழுட்செறுவில் மணிகொணர்ந்து கரைமேல் சிந்தி
உலகெல்லாம் சந்தநமு மகிலும் கொள்ள
செழும்பொன்னி வளம் கொடுக்கும் சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெடு | பெருகிவாராநின்ற | குலவரையின் | குலபர்வதங்களுடைய |
| வெள்ளம் | ப்ரளயார்ணவ மானது [(மூழ்த்தின) | மீது ஓடி | மேலேபோய் ஸஞ்சரித்து, |
| கொண்ட | (பூமியை) ஆக்ரமித்த | அப்பால் | அதுக்குமேலே |
| காலம் | காலத்தில் | அண்டத்து | அண்டபித்தியளவும் |
| கொழு | பருத்த (ப(ஃ)லிஷ்டமான)[கொண்டு | எழுந்து | கிளம்பி (துள்ளி) |
| கயலாய் | மத்ஸ்ய ரூபியாய்க் | இனிது | ஸுகமாக |

(௧) பெரி-திரு-௪-௯-௨.

| | | | |
|---|---|---|---|
| விளையாடும் | ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுகின்ற | உழும் | உழாநின்ற |
| | | செறுவில் | கழனிகளுடைய |
| ஈசன் | ஸ்வதந்த்ரனாய் [டைய | கரைமேல் | வரம்புகளின்மேலே |
| எந்தை | எம் ஸ்வாமியானவனு | மணி | ரத்நங்களை [து |
| இணை | ஒன்றோடொன்று ஸத்ருசமான | கொணர்ந்து | திரட்டிக்கொண்டுவந் |
| | | சிந்தி | சிதறத்தள்ளியும், |
| அடிக்கீழ் | திருவடிகளின்கீழே | உலகெல்லாம் | ஸகல ஜநங்களும் |
| இனிது | ஸுகமாக | சந்தனமும் | சந்தநமரங்களையும் |
| இருப்பீர் | இருக்க விருப்பமுள்ளவர்களே! | அகிலும் | அகில் கட்டைகளையும் [படியாக |
| இனம் | கூட்டமாகத் திரண்ட | கொள்ள | எடுத்துக்கொள்ளும் |
| வண்டு | வண்டுகளானவை | வளம் | ஸம்ருத்தியை |
| ஆலும் | நர்த்தநம் பண்ணுகிற்ப | கொடுக்கும் | தருமதுமாய், |
| செழு | அழகிய [தாய், | சோழன் | சோழநாட்டரசன் |
| பொன்னி | திருக்காவேரியானது, | சேர்ந்தகோயில் | திருநறையூர். (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கொழுங்கயலித்யாதி) மிக்க ஜலமானது பூமியையடையக்கொண்ட காலம்; கொழுவிதான - த்ருடமான கயலாய், குலவரைக்குமேலே போய் அண்டபித்தி யளவும் செல்லத்† துள்ளி ஸ்வைரமாக லீலாரஸ மநுபவிக்கும் ஸ்வதந்த்ரன். (எந்தையித்யாதி) வகுத்த ஸ்வாமியானவன் திருவடிகளை யாஶ்ரயித்து ஆநந்த நிர்ப்பரராயிருக்க வேண்டியிருப்பீர்! இனவண்டு - திரண்ட வண்டுகளானவை, ஸஸம்ப்ரம ந்ருத்தம்பண்ணு நிற்பதாய், உழுகிற செய்களில் வரம்பிலே மணிகளைக்கொடுவந்து சிதறுநிற்பதாய், லோகமடங்கலும் அகிலையும் சந்தநத்தையும் கொள்ளை கொள்ளும்படியாக, தர்ஶநீயமான பொன்னியானது ஸம்ருத்திகளைக் கொடுவந்து கொடுக்கிற திருநறையூரென்று ஊருக்கு விசேஷணமாதல்; அன்றிக்கே, சோழன்றனக்கு விசேஷணமாதல். அவனுடைய விலாஸ சேஷ்டிதத்தோடு, காவிரியினுடைய ஸ்வைர ஸஞ்சாரத்தோடு வாசியற இவர்க்கு உத்தேஶ்யமா யிருக்கிறது காணும் அங்குள்ள தாகையாலே.

---

அரு —இரண்டாம்பாட்டு (கொழுங்கயலித்யாதி) கீழ்ப்பாட்டில் - ப்ரளயத்திலே வடதளத்திலே கண்வளர்ந்தததை அநுஸந்தித்தாராய், இதில்- அந்த ப்ரளய ஜலத்திலே துள்ளி விளையாடும் மத்ஸ்யாவதாரத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

---

† (பா) கிளம்பி.

(சோழன்றனக்கு) என்றது - சோழமண்டலத்தை யுடைய ராஜாவுக்கென்றபடி. (அவனுடைய) மத்ஸ்யாவதாரத்தினுடைய. ... (௨)

மூ.—பவ்வநீருடையாடை யாகச் சுற்றிப்
பாரகலம் திருவடியாப் பவனம் மெய்யா
செவ்வி மாதிரமெட்டும் தோளா வண்டம்
திருமுடியா நின்றான்பால் செல்லகிற்பீர்
கவ்வைமா களிறுந்தி விண்ணியேற்றக்
கழல் மன்னர் மணிமுடிமேல் காகமேறத்
தெய்வவாள் வலங்கொண்ட சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சுற்றி | (பூமியைச்) சூழ்ந்திருக்கிற | செல்லகிற்பீர் | கிட்டவேண்டியிருப்பவர்களே! [தாய் |
| பவ்வம் | ஸமுத்ரத்தினுடைய | கவ்வை | ஆரவாரத்தையுடைய |
| நீர் | ஜலமானது [க்க | மா | பெரிதான |
| உடை | உடுத்திக்கொள்ளத் த | களிறு | யானைகளை [து) |
| ஆடையாக | திருப்பீதாம்பர மாகவும், | உந்தி | தள்ளி (அழியச்செய் |
| | | விண்ணி | யுத்தத்திலே |
| பார் அகலம் | பூமிப் பரப்பெல்லாம் | ஏற்ற | எதிர்த்துவந்த [ரான |
| திருவடியா | திருவடியாகவும், [அ | கழல் | வீரக்கழலை யுடைய |
| பவனம் | வாயு (ஸமூஹ)மான | மன்னர் | ராஜாக்களுடைய |
| மெய்யா | திருமேனியாகவும், | மணி | மணிமய கிரீடங்களணிந்த |
| செவ்வி | அழகிய | | |
| எட்டுமாதிரமும் | எட்டுத்திக்குக்களும் | முடிமேல் | தலைகளின்மேலே |
| | | காகம் | காக்கைகளானவை |
| தோளா | புஜங்களாகவும் | ஏற | ஏறி(மாம்ஸத்தை புஜிக்கும்படியாக) |
| அண்டம் | அண்டபித்தியானது | | |
| திருமுடியா | திருவபிஷேகமாகவும் (ஆகும்படி ஜகத்ரூபியாய்) [ரனை | தெய்வம் | ஶ்லாக்யமான |
| | | வாள் | வாளாயுதத்தை |
| | | வலம் | வலது (கையில்) |
| நின்றான்பால் | இருக்கிற ஸர்வேஶ்வ | கொண்ட | பிடித்தவனான |

சோழன்சேர்ந்த திருநறையூர். (௩)

வ்யா.—மூன்றும்பாட்டு. (பவ்வநீரித்யாதி) கடலில் நீரானது திருப்பீதாம்பரமாய், பூமிப்பரப்படைய திருவடிகளாய், வாயுஸ்கந்த (ஸ்கந்தம்)மானது திருமேனியாகவும், அழகிய திக்குக்களெட்டும் திருத்

தோள்களாகவும், அண்ட பித்தியானது திரு வபிஷேகமாகவும், இப்படி ஜகதாகாரனு யிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளைக் கிட்டவேண்டியிருப்பீர். (கல்லையித்யாதி) பெரியமிடுக்கை யுடைத்தாய்க் கதறிக்கொடுவருகிற ஆனையைத் தள்ளி. (விண்ணியித்யாதி) விண்ணி என்று - யுத்தத்துக்கும், படை வீட்டுக்கும் பேர். யுத்தத்தில் வந்தெதிர்ப்பாராய் வீரக்கழலை யுடையரா யிருக்கிற ராஜாக்கள் முடிகளிலே காகமானது படியும்படியாக, ஆயுதத்தைக்கொண்டு வ்யாபரித்தாநுய்த்து. அவன் ஜகதாகாரனுய் நிற்கிற நிலையோடு, இவன் யுத்தத்தில் பராக்ரமித்தத்தோடு வாசியற இவர்க்கு உத்தேஶ்யமா யிருக்கிறது காணும் அவ்வூரை ஆஶ்ரயித்து வந்த ஸம்பத்தாகையாலே.

---

அரு —மூன்றும்பாட்டு. (பல்வமித்யாதி) ஒரு பெரியமீனைகத் துள்ளி விளையாடின வளவன்றிக்கே, பெருப் பெருத்தவை யெல்லாம் திருமேனியாம்படி யிருப்பாளுெருவ னென்றநுஸந்திக்கிறு ரென்று ஸங்கதி.

(ஸ்கந்தம்) ஸமூஹம். கல்லை - ஆரவாரமாய், கதறுகையைச் சொல்லுகிறது.... ... ... ... ... ... ... ... (க)

மூ.—பைங்கணாளரியுருவாய் வெருவ நோக்கிப்
பருவரத்தோ ளிரணியனைப் பற்றி வாங்கி
அங்கை வாளுகிர் நுதியாலவனதாகம்
அங்குருதி பொங்குவித்தா னடிக்கீழ் நிற்பீர்
வெங்கண் மா களிறுந்தி விண்ணியேற்ற
விறல்மன்னர் திறலழிய வெம்மாவுய்த்த
செங்கணான் கோச் சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பை | பசுமையான | இரணியனை | ஹிரண்யாஸுரனை |
| கண் | திருக்கண்களையுடைய | பற்றி | பிடித்து |
| ஆளரி உரு | நரஸிம்ஹ ரூபியாய்க் | வாங்கி | இழுத்து [ளுள்ள |
| வாய் | கொண்டு, | அம்கை | அழகிய திருக்கையி |
| வெருவ | (சத்ருக்கள்) பயப்படு | வாள் | ஒளியையுடைய [ளுவ் |
| | ம்படியாக | உகிர் நுதியால் | நகங்களின் நுனியி |
| நோக்கி | பார்த்து, | அவனது | அந்த ஹிரண்யனுடை |
| | | ஆகம் | சரீரத்தில் நின்றும் [ய |
| வர | வர(புல)த்தாலே | அம் குருதி | அழகிய ரக்தத்தை |
| பரு | பெருத்த | பொங்குவித் | வெள்ளமிடச் செய்த |
| தோள் | புஜங்களையுடைய | தான் | வனுடைய |

| | | | |
|---|---|---|---|
| அடிக்கீழ் | திருவடிகளின் கீழே | விறல் | மிடுக்கரான |
| நிற்பீர் | இருக்க ஆசையுற்றவர்களே! [ய | மன்னர் | அரசர்களுடைய |
| வெம்கண் | சிவந்த கண்களையுடை | திறல் | பலமானது |
| மா களிறு | பெரிய யானைகளை | அழிய | அழியும்படியாக |
| உந்தி | தள்ளி (நிரவஹித்து) | வெம் | கடுநடையுடைய |
| விண்ணி | யுத்தத்திலே | மா | குதிரைகளை |
| ஏற்ற | எதிர்த்துவந்த | உய்த்த | நடத்தாநின்ற |
| | | செங்கணான்கோச் சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர். | (௪) |

வ்யா. — நாலாம்பாட்டு. (பைங்கணித்யாதி) ஜாத்யுசிதமான கண்ணில் பசுமையை யுடைத்தாயிருக்கிற நரஸிம்ஹமாய், பார்த்த பார்வையிலே அஞ்சும்படியாக நோக்கி, வரபலத்தாலே திண்ணிதான தோளையுடைய ஹிரண்யன் பக்கலிலே பிற்காலியாதே சென்று கிட்டி மடியைப் பிடித்திழுத்து. (அங்கையித்யாதி) வெறும் புறத்திலே அழகியதாய், ஒளியை யுடைத்தாயிருக்கிற திருவுகிரில் ஏகதேசத் தாலே ஹிரண்யன் சரீரமானது ருதிரவெள்ளம் கொழிக்கும்படியாகப் பண்ணினவன் திருவடிகளைப் பெறவேண்டி யிருப்பீர்! (வெங்கணித்யாதி) வெவ்விய கண்ணை யுடைத்தாயிருக்கிற ஆனையைத்தள்ளி, யுத்தத்திலே வந்தெதிர்ந்த ராஜாக்களுடைய திறலழியும்படியாக, வெம்மாவுய்த்த - குதிரையை நடத்தினவன் வர்த்திக்கிறதேசம். அவன் ஆஶ்ரித விரோதிகளைப் போக்கினததோடு இவன் யுத்தத்தில் வ்யாபரித்தத்தோடு வாசியற உத்தேஶ்யமா யிருக்கிறது காணும் இவர்க்கு. ... ... ... ... ... ... (௪)

---

அநு.—நாலாம்பாட்டு. (பைங்கணித்யாதி) கீழ் - ஜகதாகாரதையை யநுஸந்தித்தார்; அதுக்கு உபயுக்தமாக எங்கும் வ்யாபித்தபடிக்கு ஜ்ஞாபகமான நரஸிம்ஹாவதாரத்தை அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

"ஏற்ற" என்றதினர்த்தம் (எதிர்ந்த) என்றது. ... ... (௪)

மூ.—அன்றுலக மூன்றினையு மளந்து வேறோ
ரரியுருவா யிரணியனதாகம் கீண்டு
வென்றவனை விண்ணுலகில் செலவுய்த்தாற்கு
விருந்தாவீர் மேலெழுந்து விலங்கல் பாய்ந்து

பொன்சிதறி மணிகொணர்ந்து கரைமேல் சிந்திப்
புலம்பரந்து நிலம்பரக்கும் பொன்னிநாடன்
தென் தமிழன் வடபுலக்கோன் சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (௫)

| பதம். | உரை. |
|---|---|
| அன்று | வாமநாவதார காலத்தில் |
| உலக மூன்றினையும் | (த்ரிவிக்ரமனாய்) மூன்று லோகங்களை |
| அளந்து | ஆக்ரமித்தும், [யும் |
| வேறு | விலக்ஷணமாய் |
| ஓர் | (பராக்ரமத்தில்) அத்விதீயமான |
| அரி உருவாய் | நரஸிம்ஹ ரூபியாய்க் கொண்டு |
| இரணியனது | ஹிரண்யனுடைய |
| ஆகம் | சரீரத்தை |
| கீண்டு | இருகூறாகப் பிளந்து |
| வென்று | ஜயித்து |
| அவனை | அந்த ஹிரண்யனை |
| விண்ணுலகில் | வீரஸ்வர்க்கத்தில் |
| செல உய்த்தாற்கு | செல்ல நடத்தினவனுமான ஸர்வேஶ்வரனுக்கு |
| விருந்தாவீர் | அதிதிகளாக வேண்டுமவர்களே! [தாய் |
| மேல் எழுந்து | கிளர்த்தியை யுடைத் |
| விலங்கல் | மலைகளை |
| பாய்ந்து | உடைத்துக்கொண்டு தாண்டிவந்து |
| பொன் | ஸுவர்ணங்களை |
| சிதறி | (சுற்றும்) இறைத்து (அதுக்குமேலே) |
| மணிகொணர்ந்து | ரத்நங்களைத் திரட்டிக்கொண்டுவந்து |
| கரைமேல் | கரைகளிலே |
| சிந்தி | சிதறிக்கொண்டு [கும் |
| புலம் | வெளி நிலங்களிலெங் |
| பரந்து | வ்யாபித்து (இப்படி) |
| நிலம் | பூமியெங்கும் |
| பரக்கும் | பரவாநின்ற |
| பொன்னி | திருக்காவேரிப்ரவஹியாநின்ற |
| நாடன் | நாட்டை யுடையனாய் |
| தென்தமிழன் | தென்திக்கிலுள்ள தமிழ்நாட்டுக்கரச |
| வடபுலம் | வடநாட்டுக்கும் [னாய் |
| கோன் | ராஜாவாய் |
| சோழன் | (மத்யதேசமான) சோழநாட்டுக்கும் அதிபதியானவன் |
| சேர்ந்த திருநறையூர். (௫) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (அன்றுலகமித்யாதி) த்ரைலோக்யத்தையும் தன் காற்கீழே யிட்டுக்கொண்டு, நாட்டில் நடையாடாததொரு நரஸிம்ஹமாய், ஹிரண்யனுடைய சரீரத்தைக் கிழித்து வென்று. (விண்ணுலகித்யாதி) "ஸ்வஹஸ்த வத(ஃ)த்தாலே வீரஸ்வர்க்கம் பெற்றான்" என்னக் கடவதிறே. (விருந்தாவீர்)அவனுக்கு அதிதி

வர்க்கமாய்ப் புக்கு அர்வயிப்பீர்! (மேலெழுந்தித்யாதி) கிளர்ந்து கொண்டு, நடுவே தகைந்துகொண்டு கிடக்கிற மலைகளை முறித்து, அந்த மலைகளிலும் ஸஹ்யத்திலு முண்டான பொன்களையும் மணிகளையும் கரையிலே கொடுவந்து சிந்துமாய்த்து. (புலமித்யாதி) வெளி நிலமுள்ள இடமெங்கும் பரந்து, பூமிப்பரப்படங்கலும் தானே கைக் கொள்ளுமாய்த்து. பொன்னிநாடன் பொன்னி நாட்டை யுடையவன். (தென்தமிழனித்யாதி)† ஆக, மூன்று ராஜ்யத்தையும் தானே ஆண்டானாய்த்து. அவன் பூமியை யடைய அளந்து கொண்டத்தோடு இவன் பூமியை யடையத்தானே நெருக்கி ஆண்டத்தோடு வாசியற உத்தேஶ்யமாயிருக்கிறதுகாணுமிவர்க்கு அவனை ஆஶ்ரயித்துவந்த ஸம்பத்தாகையாலே. ... ... ... ... ... ... (ரு)

அரு.—அஞ்சாம்பாட்டு. (அன்றித்யாதி) கீழ் வ்யாப்திக்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாக த்ரிவிக்ரமாபதாநமாகையாலே இத்தையுங் கூட்டிக்கொண்டு நரஸிம்ஹாவதாரம் பின்னாட்டி அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(அதிதிவர்க்கமாய்) என்றத்தாலே - ப்ரியராவீர் என்கை. (மூன்று ராஜ்யம்) என்றது-பாண்டியதேசம் - சோழமண்டலம் ‡என்கை.... (ரு)

மூ.—தன்னாலே தன்னுருவம் பயந்த தானாய்த்
தயங்கொளிசேர் மூவுலகும் தானாய் வானாய்
தன்னாலே தன்னுருவில் மூர்த்திமூன்றாய்
தானாய னாயினான் சரணென்றுய்வீர்
மின்னாடு வேலேந்து விளைந்த வேளை
விண்ணேறத் தனிவேலுய்த் துலகமாண்ட
தென்னாடன் குடகொங்கன் சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (சா)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தன்னாலே | ஸ்வேச்சையாலே | பயந்த | ஸ்ருஷ்டித்த |
| தன்உருவம் | தன் திவ்ய விக்ரஹத்தை | தானாய் | திவ்யாத்ம ஸ்வரூபத்தை யுடையனாய், |

† "தென்தமிழன் - தென்மண்டலத்தில் ராஜா; வடபுலக்கோன் - வடதேசத்தில் ராஜா; புலம் - பூமியாய், தேசபரம். சோழன் - சோழமண்டலத்தில் ராஜா. ஆக, மூன்றுதேசம்" என்று அரும்பதாந்தரம்.

‡ இங்கு ஒரு தேசவாசகபதம் லேகக ப்ரமாதத்தினால் விட்டுப்போச்சுது.

| | | | |
|---|---|---|---|
| தயங்கு ஒளி சேர் | மிக்க ஒளியை யுடைத்தான [யும் | உய்வீர் | உஜ்ஜீவிப்பவர்களே! |
| மூவுலகும் | மூன்று லோகங்களை | மின் ஆடு | ஒளிநடையாடாநின்ற |
| தானாய் | தனக்கு நிர்வாஹ்ய மாக வுடையனாய், | வேல் ஏந்து | வேலைத்தரித்த |
| வானாய் | பரமபதத்துக்கு நிர்வாஹகனாய், | விளைந்தவேளை | விளைந்த வேளென்பவனை |
| தன்னாலே | தன் ஸங்கல்பத்தாலே | விண் ஏற | வீரஸ்வர்க்கத்தை யடையும்படியாக |
| தன் உருவில் | தன் ஸ்வரூபத்தில் நின்றும் | தனி | ஒருகால் |
| மூன்றுமூர்த்தியாய் | ப்ரஹ்மவிஷ்ணு ருத்ர ரூபியான த்ரிமூர்த்திகளை யுண்டாக்கினவனாய், [யனாய்) | வேல் | வேலாயுதத்தை |
| தான் | தானே (அகர்மவஶ | உய்த்து | ப்ரயோகித்து |
| ஆயனாயினான் | க்ருஷ்ணனு மானவ[னை | உலகம் ஆண்ட | லோகங்களைப் பரிபாலநம் செய்தவனாய், [ஜாவாய், |
| | | தென் நாடன் | தென்தேசத்துக்கு ரா |
| | | குடகொங்கன் | மேற்குதேசத்தி லுள்ள கொங்கு நாட்டுக்கு அரசனை |

சரண் என்று உபாயமாக எண்ணி சோழன்சேர்ந்த திருநறையூர். (௬)

வ்யா. — ஆறும்பாட்டு. (தன்னாலே தன்னுருவமித்யாதி) (க) "ஶ்ரீ ஸ்வாதீந:" என்கிறபடியே தன்னுடைய ஸ்வரூபாதிகளை ஸ்வாதீநமாக வுடையனாகையாலே இதர விஸஜாதீயனா யுள்ளவன். தன்னுடைய ஸ்வரூபஸ்தகித்யாதிகள் தானிட்ட வழக்காம்படி யிருக்குமவனாய்த்து ஈஶ்வரனானவன். (தயங்கொளியித்யாதி) க்ருதகம் அக்ருதகம் க்ருதகாக்ருதகம் என்று மூன்றுவகையாகச் சொல்லப்படுகிற லீலாவிபூதி யடையத்தானிட்ட வழக்காக வுடையனாய்; தன்னதென்னு மத்தாலே, மிக்க ஒளியை யுடைத்தாய்க்கொண்டு அசைந்து வருகிற-பளபளத்து வருகிற, மூவுலகு மென்னுதல்; அன்றிக்கே, தயங்கொளிசேர் மூர்த்தியென்று - வடிவுக்கு விசேஷணமாதல். (தன்னாலே யித்யாதி) அந்த லீலாவிபூதியினுடைய ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு அநுரூபமான மூன்று வடிவையுடையனாய். ஸ்வேந ரூபேண நின்று பாலநத்தைப் பண்ணியும், ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு அந்தராத்மாவாய் நின்று ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்தியும், இப்படி மூன்று கார்யத்துக்கு மீடான மூன்று வடிவையு முடையனாய். (தானாயனித்யாதி) இப்படிப்பட்ட தான், லீலாவிபூதியிலே தன்னுடைய விபூதி பூதரிலே சிலர் "இவனெனக்கு மகன்" என்றபிமாநிக்கும்

படி க்ருஷ்ணனாய்வந்தவதரித்தவன் நமக்குப் புகலென்று உஜ்ஜீவிக்க வேண்டி யிருப்பீர்! (க) "ஸௌலப்ய-மாமேகம்" என்றவன் திருவடிகளையே பற்றி உஜ்ஜீவிக்கப் பார்ப்பீர்! (மின்னுமெயித்யாதி) ஒளிவர்த்தியாநின்றுள்ள வேலைக் கையிலேயுடைய விளைந்த வேளாகிற குறும்பனை வீரஸ்வர்க்கத்தேறப் போமபடி ஏகப்ரயோகத்திலே வேலை நடத்தி, ஜகத்தை யடையத் தானிட்ட வழக்காம்படி நிர்வஹித்த ராஜாவானவன் கிட்டி ஆஸ்ரயித்த திருநறையூர். (தென்னாட னித்யாதி) பாண்டியநாட்டையும் மேல்கொங்கையும் கொண்ட சோழன் சேர்ந்த. ஸர்வேஸ்வரனுடைய ஜகதாகாரதையோடு இவன் மூன்று ராஜ்யத்தையும் நிர்வஹித்ததோடு வாசியற உத்தேஸ்யமா யிருக்கிறதாய்த்து அவ்வூரை ஆஸ்ரயித்து வந்ததாகையாலே. ... ... ... (௬)

அ௫ —ஆரும்பாட்டு. (தன்னாலே யித்யாதி) கீழ் - மூன்று லோகத்தையும் காற்கீழிட்டுக்கொண்டபடி சொல்லி, அத்தாலே மூன்று லோகமும் தானானன் என்னும்படி வ்யாப்தி புதுக்கணித்தமை அநுஸந்தித்திருக்கக்கோலி, உபய விபூதி நிர்வாஹகன் க்ருஷ்ணன் என்று நின்றுகொண்டு அவனை யநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

விவரணம் (தன்னுடைய வித்யாதி). (உடையனாய்) என்ற வநந்தரம், "வானாய் - நித்ய விபூதியை யுடையனாய்" என்று சேஷம். தாத்பர்ய மருளிச்செய்து, சப்தார்த்தம் (தன்னதென்னு மித்யாதி). "குடக்கு" என்றது- குடதிசையாய், அதினர்த்தம் (மேல்) என்றது. .. ... (௬)

மூ.—முலைத்தடத்த நஞ்சுண்டு துஞ்சப் பேய்ச்சி
முதுதுவரைக் குலபதியாக் காலிப்பின்னே
இலைத்தடத்த குழலூதி யாயர்மாதர்
இனவளை கொண்டானடிக் கீழெய்த கிற்பீர்
மலைத்தடத்த மணிகொணர்ந்து வையமுய்ய
வளங்கொடுக்கும் வருபுனலம் பொன்னிநாடன்
சிலைத்தடக்கைக் குலச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (௭)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| பேய்ச்சி | பூதனையானவள் | தடம் | பெருத்த |
| துஞ்ச | முடியும்படியாக | முலை | (அவள்) முலையிலுள் |
| | | நஞ்சு | விஷத்தை [ள |

(க) கீதை-௧௮-௬௬. ௧௧௨௮ - வது பக்கத்தில் அரும்பதத்தில் "வ்யாப்திக்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாக" இத்யாதிபங்க்தி; "வ்யாப்திக்கு ப்ரத்யபிஜ்ஞாபகம் த்ரிவிக்ரமாவதாரமுமாகையாலே" என்றிருக்கவேணும்.

| | | | |
|---|---|---|---|
| உண்டு | அமுது செய்தவனாய், | மலைத்தடத்த | மலைகளின் தாழ்வரைகளிலே யுண்டான |
| முது | ப்ராசீநமான | மணிகொணர்ந்து | மணிகளைத் திரட்டிக் கொண்டுவந்து |
| துவரை | த்வாரகைக்கு | வையம் உய்ய | லோகமெல்லா முஜ்ஜீவிக்கும்படி |
| குலபதியாய் | நிர்வாஹகனாய், | வளம் கொடுக்கும் | ஸம்ருத்தியைக் கொடாநின்றுள்ள தாய், |
| காலிப்பின்னே | பசுக்களின் பின்னே | வரு | பெருகி வாராநின்ற |
| தடம் | பெரிய | புனல் | ஜலத்தை யுடையதாய் |
| இலைக்குழல் | இலையாலே செய்யப்பட்ட குழலை | அம் | ஸௌந்தரமான [டைய |
| ஊதி | ஊதிக்கொண்டு போனவனாய், [டைய | பொன்னி | திருக்காவேரியை யு |
| ஆயர் மாதர் | இடைப்பெண்களு | நாடன் | நாட்டுக்கு அதிபதி [யாய், |
| வளை இனம் | வளைமுதலிய ஆபரணங்களை | சிலை | வில்லை |
| கொண்டான் | (லீலார்த்தமாக) அபஹரித்தவனுடைய | தடம் கை | பரந்த கையிலே ஏந்தினவனாய், |
| அடிக்கீழ் | திருவடிகளின் கீழே | குலம் | க்ஷத்ரிய வம்ஶ்யனை |
| எய்த கிற்பீர் | கிட்டி ஆஶ்ரயிக்க விரும்புமவர்களே! | | |

சோழன் சேர்ந்த கோயில். (எ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (முலைத்தடத்த வித்யாதி) பூதனை முடியும்படி அவளுடைய வடிவுக்குத் தக்க பெரியமுலையை யுண்டு (முது துவரை யித்யாதி) ஶ்ரீமத் த்வாரகைக்கு நிர்வாஹகனாய், பசுக்களின் பின்னே பெருத்த இலைக்குழலை ஊதிக்கொடுபோய் அவற்றை மேய்த்து, மீண்டு திருவாய்ப்பாடியிலே புகுந்து, இடைப்பெண்களுடைய வளைதுடக்கமானவற்றைக் கொண்டவன் திருவடிகளை ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கவேண்டி யிருப்பீர்! (மலைத்தடத்த மணியித்யாதி) மலைத் தாழ்வரைகளி லுண்டான ரத்நங்களைக் கொடுவந்து பூமியடைய உஜ்ஜீவிக்கும்படி ஸம்ருத்தியைத் தள்ளாநின்றுள்ள, ஜலஸம்ருத்தியையுடைத்தாய் தர்ஶநீயமான பொன்னிநாட்டை யுடையவன். (சிலைத்தடக்கை யித்யாதி) பெரிய ஆண்பிள்ளையானவன் அவ்வாண்பிள்ளைத் தனத்தை நிர்வஹித்துக் கொடுக்கைக்காக ஆஶ்ரயிக்கிற தேசம். ...(எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (முலையித்யாதி) கீழ்ப்பாட்டில் - ஆயன் ப்ரஸ்துதனாகையாலே, அவனுடைய சேஷ்டிதங்களை அநுபவிக்கிறானென்று ஸங்கதி.

"பேய்ச்சி - துஞ்ச - தடம் - முலைத்ததான நஞ்சையுண்டு" என்று அந்வயித் தருளிச்செய்கிறார் (பூதனை யித்யாதி). முதுமை- பழமையாய், ப்ரதித்வாரகையை வ்யாவர்த்திக்கிற தென்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (ஸ்ரீமதித்யாதி). ... ... ... ... ... ... (எ)

மூ.—முருக்கிலங்கு கனித்துவர்வாய் பின்னை கேள்வன்
மன்னெல்லாம் முன்னவியச் சென்று வென்றிச்
செருக்களத்துத் திறலழியச் செற்றவேந்தன்
சிரந்துணித்தான் திருவடி நும் சென்னி வைப்பீர்
இருக்கிலங்கு திருமொழி வாயெண்டோ ளீசற்கு
எழில்மாட மெழுபது செய்துலக மாண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. ... (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முருக்கு | முருக்கம்பூப்போலே | நும்சென்னி | உங்கள் தலைகளிலே |
| இலங்கு | விளங்காநிற்பதாய் | வைப்பீர் | வைத்துக்கொள்ள ஆ |
| கனி | கோவைப்பழம் | | சையுற்றவர்களே! |
| | போலே | இருக்கு | ருக்குக்களாலே |
| துவர் | சிவந்திருப்பதான | இலங்கு | விளங்காநின்ற |
| வாய் | அதரத்தையுடைய | திருமொழி | சிறந்த சொல்லான பு |
| பின்னை | நப்பின்னைப் பிராட் | | ருஷஸூக்தத்தை |
| கேள்வன் | வல்லபனாய், [டிக்கு | வாய் | வாயிலே யுடையனாய் |
| முன் | முற் (பரசுராமாவதா | | (ஸதா(ஸ) ஜபியா |
| | ர) காலத்தில் | | நின்ற) [யனை |
| மன்எல்லாம் | ராஜாக்களெல்லாரும் | எண்தோள் | எட்டு புஜங்களையுடை |
| அவிய | நசிக்கும்படியாக | ஈசற்கு | ருத்ரனுக்கு |
| வென்றி | ஜயப்ரதமான | எழில் | அழகுபூண்ட |
| செருக்களத்து | யுத்தரங்கத்தில் | எழுபதுமாட | எழுபது ஆலயங்களை |
| சென்று | போய் | ம் | [ணி |
| செற்ற | சத்ருவான [னுடைய | செய்து | ப்ரதிஷ்டை பண் |
| வேந்தன் | கார்த்த வீர்யார்ஜுந | உலகம் ஆண் | லோகத்தைப் பரிபா |
| திறல் | பலத்தை | ட | லநம் பண்ணினவ |
| அழிய | அழியச்செய்து | | னாய், [ந்தவனாய், |
| சிரம் | (அவன்) தலையை | திருக்குலத்து | உயர்ந்தகுலத்தில் பிற |
| துணித்தான் | வெட்டினவனுமான | வளம் | ஸம்ருத்தியை யுடைய |
| | வனுடைய | | னான |
| திருவடி | ஸ்ரீபாதங்களை | சோழன் சேர்ந்த கோயில். (அ) | |

வ்யா. — எட்டாம்பாட்டு. (முருக்கிலங்கித்யாதி) முருக்கம் பூப்போலேயும் விளங்காநின்றுள்ள கனிபோலேயு மிருக்கிற அதரத்தையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபன். (மன்னெல்லா மித்யாதி) ராஜலோகமடங்க வழிபோக்கிலே முடியும்படி யுத்தபூமியிலே சென்று கிட்டி.(செற்றவேந்தன் சிரம்துணித்தான்)இந்த ப்ராதிகூல்யத்துக்கு ஹேதுபூதனான ஸஹஸ்ர பாஹுவர்ஜுநனுடைய மிடுக்கெல்லாம் போய் அவன் முடிந்துபோம்படிக் கிடாகத் தலைகளைத் துணித்த ஸர்வேஶ்வரன் திருவடிகளை உங்கள் தலைமேலே வைக்க வேண்டி யிருப்பீர்! (இருக்கிலங்கித்யாதி)வேதத்தில் ஶ்ரீபுருஷ ஸூக்தாதிகளை உச்சரியா நின்றுள்ள வாயையுடையராய் எட்டுத் தோள்களையு முடையராயிருக்கிற தேவர்க்கு; தர்சநீயமான மாடங்களை எழுபதும் சமைத்துப், பின்னையும் தன்னுடைய அபிமதம் கிடையாமையாலே அவ்வபிமத வித்யர்த்தமாக அவன் வந்தாஶ்ரயிக்கிற தேசம். ரத்நாதிகளைக் கொழித்துக்கொடுவருகிற ஆற்றுவரவோடு, க்ருஷ்ணன் இடைப்பெண்களுடைய துகில்களையும் வளைகளையும் வாரிக்கொடு வருகிற வரவோடு வாசியற உத்தேஶ்யமா யிருக்கிறபடி சொல்லிற்று-கீழ்ப்பாட்டில்; இப்பாட்டில் நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனாயிருக்கிற இருப்போடு, ஆஶ்ரித விரோதிகளை அழியச்செய்த செயலோடு வாசியற உத்தேஶ்யமா யிருக்கிறபடி சொல்லுகிறது. (அ)

அரு. — எட்டாம்பாட்டு. (முருக்கித்யாதி) கீழ்ப்பாட்டுக்கும் ஸங்கதியை மேலே இப்பாட்டிலே தாமே யருளிச்செய்கிறார்.

"மன்னெல்லாம்" என்ற பதத்தாலே - ஜாதியாகப் பகை தோற்றுகையாலே, க்ருஷ்ணாவதார விஷயமன்றென்று ஶ்ரீ பரசுராமாவதாராபதாநமாக வருளிச்செய்கிறார் (ராஜேத்யாதி). செற்ற - த்வேஷியான, வேந்தனுடைய திறலழிய என்று சப்தார்த்தமா யருளிச்செய்கிறார் (இந்த வித்யாதி). தலைகள் - ராஜாக்களுடையவும் தலைகள். (தேவர்க்கு) என்றது-ருத்ரனுக்கு என்றபடி. ராஜாவினுடைய அப்பொழுதையில் பூஜ்யதாபுத்தி ஸ்ப்புரிக்கைக்காக பஹுவசந ப்ரயோகமென்று கருத்து. திருக்குலத்து - க்ஷத்ரியகுல மாகையால் வந்த ஆபிஜாத்ய முடையனானவன். ஸம்பந்நனான சோழனென்றபடி. ... ... ... ... (அ)

மூ.—தாராளன் தண்ணரங்க வாளன் பூமேல்
தனியாளன் முனியாள ரேத்தநின்ற
பேராளனாயிரம் பேருடைய வாளன்
பின்னைக்கு மணவாளன் பெருமை கேட்பீர்

பாராளரவ ரிவரென் றழுந்தை யேற்றப்
படைமன்ன ருடல்துணியப் பரிமாவுய்த்த
தேராளன் கோச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (௯)

| பதம். | உரை. |
|---|---|
| தார் ஆளன் | திருமாலையினால் அலங்க்ருதனாய் |
| தண் | ப்ரமஹரமான |
| அரங்கவாளன் | திருவரங்கத்தில் நித்யவாஸம் செய்யுமவனாய், |
| பூமேல் | தாமரைப்பூமேல் வாஸம் செய்யாநின்ற |
| தனியாளன் | (ஸ்த்ரீத்வத்தில்) அத்விதீயையானபிராட்டிக்கு வல்லபனாய், |
| முனியாளர் | ருஷிகளான ஸநகாதிகள் |
| ஏத்தநின்ற | ஸ்தோத்ரம் பண்ணும்படியாக வெழுந்தருளி யிருக்கிற |
| பேராளன் | பெருமையை யுடையனாய் |
| ஆயிரம்பேர் உடையவாளன் | ஆயிரம் திருநாமத்தை யுடையனாய், |

| பதம். | உரை. |
|---|---|
| பின்னைக்கு | நப்பின்னைப் பிராட்டிக்கு |
| மணவாளன் | நாயகனானவனுடைய |
| பெருமை | அதிசயத்தை |
| கேட்பீர் | கேட்க விரும்புமவர்களே! |
| அவர் இவர் என்று | இன்னாரின்னாரென்று ப்ரஸித்தராய் |
| பார் ஆளர் | பூமிக்கு நிர்வாஹகரான ராஜாக்கள் |
| அழுந்தை | திருவழுந்தூரிலே (வந்து) |
| ஏற | எதிர்க்க, |
| படை | (அந்த) யுத்தத்திலே |
| மன்னர் | (அந்த) ராஜாக்களுடைய |
| உடல் | சரீரமானது |
| துணிய | துண்டு துண்டாம்படி |
| பரிமா | குதிரைகள் |
| உய்த்த | கட்டப்பட்ட |
| தேராளன் | தேரை நடத்தினவனாய் |
| கோ | ராஜாவான |
| சோழன் சேர்ந்த கோயில். (௯) | |

வ்யா.— ஒன்பதாம்பாட்டு. (தாராளனித்யாதி) உபயவிபூதியினுடைய ரக்ஷணத்துக்குத் தனிமாலை யிட்டிருக்கிறவன் (தண்ணரங்கவாளன்) ஜகத்ரக்ஷணத்துக் குறுப்பாகக் கோயிலை வாஸஸ்தானமாகக்கொண்டிருக்கிறவன். (பூமேலித்யாதி) தாமரைப்பூவை யிருப்பிடமாக வுடையளாய், அத்விதீயமான ஸ்த்ரீத்வத்தையுடைய பெரியபிராட்டியார்க்கு வல்லபன். (முனியாளரித்யாதி) கேவலம் ப்ரஹ்மபாவ (த்யா)நைகயே யாயிருக்கிற ஸநகாதிகள் ஏத்துகையால்வந்த பெருமையை யுடையவன். (ஆயிரமித்யாதி) அநுபவிப்பார்க்கு இழிந்தவிடமெங்கும் அறையாம்படியாக ஆயிரம் திருநாமங்களை யுடைய

வன். (பின்னைக் கித்யாதி) நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனானவ னுடைய பெருமையைக் கேட்கவேண்டி யிருப்பீர்! (பாராள ரித்யாதி) பூமிப்பரப்புக்கடைய நிர்வாஹகராய், இன்னார் இன்னார் என்று ப்ரஸித்தரா யிருக்கிற ராஜாக்கள் ஸபரிகரராய்க் கொண்டு திரு வழுந்தூரிலே வந்து எதிரிட, அவர்களுடைய உடல் துணியும்படிக் கிடாக. (பரிமாவுய்த்த தேராளன்) குதிரைபூண்ட தேரை யுடையவன். (௯)

அ௫ —ஒன்பதாம்பாட்டு (தாராள னித்யாதி) கீழே சில விபவங்களை அநுஸந்தித்தவர், ப்ரீத்யதிசயத்தாலே பரதவாதி பஞ்சாவஸ்த்தைகளையும் ஸாதாரண ஸூசகங்களாலே அநுபவிக்கிறாரென்று ஸங்கதி யாதல்; அன்றிக்கே, "முரிக்கிலங்கு கனித்துவர்வாய் பின்னை கேளவன்" என்ற க்ருஷ்ணாவதாரத்தையே ஸ்வாபாவிகாகாரத்தாலே கொண்டாடுகிறாரென்று ஸங்கதி யாதல்.

பஞ்சாவஸ்த்தையில் என்ற பக்ஷத்திலே, "முனியாளா" இத்யாதியாலே வ்யூஹம் ஸூசிதம், ஸநகாதிகளுக்கிறே முகம்கொடுப்பது, "ஆயிரம்பேர்" இத்யாதியாலே ஸர்வ சப்த வாச்யத்வததாலே ஸூசிதம் அந்தர்யாமித்வம் என்று கண்டுகொள்வது ... ... .. ... (௯)

மூ.—செம்மொழிவாய் நால்வேத வாணர் வாழும்
திருநறையூர் மணிமாடச் செங்கணமாலைப்
பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன்
புலமங்கைக் குலவேந்தன் புலமையார்ந்த
அம்மொழிவாய்க் கலிகன்றி யின்பப்பாடல்
பாடுவார் வியனுலகில் நமனார்பாடி
வெம்மொழி கேட்டஞ்சாதே மெய்ம்மை சொல்லில்
விண்ணவர்க்கு விருந்தாகும் பெரும் தக்கோரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செம்மொழி | யாதார்த்த்ய மாகிற செம்மையையுடை | வாழும் | நித்யவாஸம் பண்ணுகின்றதாய், |
| வாய் | சொற்களையுடைய [ய ராய் | மணிமாடம் | மணிமயமான மாடங்களை யுடையதான |
| நால்வேத வாணா | நாலுவேதங்களையும் வல்லரான ப்ராஹ்மணர் | திருநறையூர் | திருநறை யூரென்னும் திவ்யதேசத்தில் |

| | |
|---|---|
| செங்கண்மாலை | சிவந்த கண்களையுடைய ஸர்வேஶ்வரன் விஷயமாக, |
| பொய்ம்மொழி | அஸத்ய வசநமானது |
| ஒன்றுஇல்லாத | சிறிதும் கலசாத |
| மெய்ம்மையாளன் | ஸத்ய வசநத்தை யுடையராய், |
| புலம் | தர்சநீயமான |
| மங்கைக்குலம் | திருமங்கையி லுள்ளவர்களுக்கு |
| வேந்தன் | ராஜாவாய், |
| புலமைஆர்ந்த | ஜ்ஞாநபூர்த்தியை யுடையதாய் |
| அம்மொழி | அப்படிப்பட்ட சொற்களையுடைய |
| வாய் | திருமுகத்தை யுடையரான |
| கலிகன்றி | ஆழ்வாருடைய |
| இன்பம் | அநுபவ ஜநிதப்ரீதியி னுண்டான |
| பாடல் | (இந்தப்) பாசுரங்களை |
| வியன் | பெருமைபொருந்திய |
| உலகில் | லோகத்தில் |
| பாடுவார் | அப்யஸிக்குமவர்கள், |
| நமனார் | யமனுடைய |
| பாடி | தூதர்சொல்லுகிற |
| வெம்மொழி | க்ரூரமானசொற்களை |
| கேட்டு | கேட்டுக்கொண்டு |
| அஞ்சாதே | பயப்படாதவர்களாய் |
| மெய்ம்மை | (மேல்வரப்போகிற பலத்தின்) உண்மையை |
| சொல்லில் | சொன்னால் (அந்த பலம்,) |
| விண்ணவர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| விருந்துஆகும் | ஆதரணீயரான |
| பெருந்தக்கோர் | பெரிய ஜ்ஞாநாதிகராவர்கள். (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (செம்மொழியித்யாதி) யதாபூத வாதிகளாய்† வேதத்துக்கு வ்யாஸபதம்செலுத்த வல்லராயிருக்கிற ப்ராஹ்மணர் வர்த்திக்கிற, தர்சநீயமான மாடங்களையுடைய திருநறையூரிலே வர்த்திக்கிற புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனைக் கவிபாடிற்று. (பொய்ம்மொழி யித்யாதி) அவ்வேதசப்தம்போலே யிருக்கிற சப்தத்தை யுடையவர். (புலமங்கையித்யாதி) தர்சநீயமான திருமங்கைக்கு நிர்வாஹகரான திருமங்கையாழ்வார், அறிவு நிறைவெல்லாம் பேச்சிலே தோற்றும்படியான, அப்படிப்பட்ட பேச்சையுடைய ஆழ்வாருடைய, இன்பப்பாடலுண்டு - அநுபவத்துக்குப் போக்குவிட்டுச் சொன்ன பாசுரம், அத்தை (வியனுலகில் பாடுவார்) புறம்பே உண்டுடுத்துப் போதுபோக்குகிற ஸம்ஸார விபூதியிலே வ்யாவ்ருத்தராய்க் கொண்டு அதிகரிப்பார், யமபடருடைய க்ரூரமான சப்தம் கேட்டஞ்சாதே. (மெய்ம்மைசொல்லில்) மேல் பெறும்பேறிருந்தபடி சொல்லில், பரமபதத்திலேபோய், (க) "பதியினில் பாங்கினில்" என்கிற

(க) தி-வாய்-௧௦-௬-௧௦. † (பா) யதாபூதவாதியான வேதத்துக்கு.

படியே - நித்யஸூரிகள் எதிரேவந்து தந்தாமிருப்பிடங்களிலே கொண்டு புக்கு உயரவைத்துத் தாங்கள் தாழவிருந்து ஸ்ரீபாதம் விளக்கிக் கொண்டாடும்படியான பெருமையை யுடையராவர்கள். (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு (செம்மொழியித்யாதி) "மெய்ம்மை" என்றது-ஸத்யவசநமா யிருக்கவும், "பொய்ம்மொழி யொன்றில்லாத" என்கையால் பலித (ஃலித) மருளிச்செய்கிறார் (அவ்வேதசப்த மித்யாதி); பொய்யும் கலந்த மெய்யன்றென்கை. புலப்படும் மங்கை என்றாய் அருளிச்செய்கிறார் (தர்சநீயமான) என்று. "விருந்தாகும்" என்றதுக்குத் தாத்பர்யம் (பதியினிலித்யாதி). . ... ... ... ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்தில் ஆறுந்திருமொழி முடிந்தது

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆறும்பத்து ஏழாந்திருமொழி

## ஆளும்ப்ரவேசம்.

வ்யா.—ராஜ்யலாபத்துக்காக ஆஸ்ரயிக்கையன்றிகே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைக் கொண்டானொன்னை, ஆனபின்பு, ஆபந்நராளுர்க்கெல்லாம் புகல் அவனல்லதில்லை, இபபடி இருந்தபின்பு, எல்லாரும் அத்தேசத்திலே போய்ப்புக்கு அவனை அநுபவிக்கப்பாருங்கோ வென்கிறார். புநஸ்ச, நான்சொன்ன ஹிதத்தில் நாட்டார்க்கு அபேக்ஷையில்லையேயாகிலும், எனக்கு ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்திலே ருசியைப பிறப்பித்து அதுக்கு விரோதியையும் போக்கின அவனல்லது ஆபந்நராளுர்க்குப் புகலில்லை, ஆனபின்பு அவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசமே ஆஸ்ரயணீயஸ்தலமென்கிறார். *

---

அரு —ஆளும்ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே - திருவுள்ளத்தைக் குறித்துச் சொல்லுகிற வ்யாஜேந பரோபதேச ப்ரவ்ருத்த ரானபடியாலே, அவர்கள் இவ்வாழ்வாரைக் குறித்து "தேவரீர் சோழன் பணிந்தத்தை

யே பலகாலு மருளிச்செய்தீர், அவன் த்ருஷ்டார்த்தியன்றோ, ஸம்ஸார பயபீதர்க்கு ஆஸ்ரயித்து அநுபவிக்கக்கூடுமோ?'' என்னும் கருத்தாலே, கேவல பரோபதேசத்திலே ப்ரவ்ருத்தராகிறாரென்றும்; தம் திருவுள்ளமானது நான் கேட்டதுக்கு நம்மைக்குறித்தருளிச் செய்யாதே ஸாமாந்யமாக பரோபதேசம் பண்ணுகைக்கு அவர்கள்வந்து புகுகிறார்களோ? என்ன; மீளவும் தம் திருவுள்ளத்துக்கே அருளிச்செய்கிறாரென்றும் இரண்டு ஸங்கதி யருளிச்செய்கிறார் (ராஜ்யேத்யாதி). இப்பாட்டுக்களிலே உபயஸங்கதிக்கு மநுகுணமாக, "ஆஸ்ரயணீயன்'' என்று க்ரியையை அத்யாஹரிப்பது என்று திருவுள்ளம். ... ... ... ...

மூ.—

ஆளும்பணியு மடியேனைக் கொண்டான் விண்ட நிசாசரரைத்
தோளுந்தலையும் துணிவெய்த சுடுவெஞ்சிலைவாய்ச் சரந்துரந்தான்
வேளும் சேயு மனையாரும் வேற்கணாரும் பயில் வீதி
நாளும் விழவி னொலியோவா நறையூர்நின்ற நம்பியே. (௧)

| பதம் | உரை. |
|---|---|
| விண்ட | ப்ரதிகூலரான |
| நிசாசரரை | ராக்ஷஸர்களை |
| தோளும் | புஜங்களும் |
| தலையும் | தலைகளும் |
| துணிவுஎய்த | துண்டு துண்டாம்படியாகச் செய்து, (பின்னும்) |
| சுடு | கொளுத்தாநின்ற |
| வெம் | அதிக்ரூரமான |
| சிலைவாய் | தநுஸ்ஸில்நின்றும் |
| சரம் | பாணங்களை |
| துரந்தான் | ப்ரயோகித்தவனும், |
| வேளும் | மந்மதனோடும் |
| சேயும் | குமாரஸ்வாமியோடு |
| அனையாரும் | ஸத்ருசரான அழகிய புருஷர்களும் |
| வேல் | வேல்போன்ற |
| கணாரும் | கண்களையுடைய ஸ்த்ரீகளும் |

| பதம். | உரை. |
|---|---|
| பயில் | வாஸம் பண்ணுகின்ற |
| வீதி | தெருக்களில் |
| நாளும் | நித்யோத்ஸவமும் |
| விழவின் | நைமித்திகோத்ஸவங்களுடைய |
| ஒலி | ஆரவாரமும் |
| ஓவா | மாறுமலிருக்கிற |
| நறையூர் | திருநறையூரில் |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| நம்பி | பூர்ணனான ஸர்வேஸ்வரன், |
| அடியேனை | என்னை ஸ்வதஃ தாஸபூதனை |
| ஆளும் | தாஸபூதனென்கிற புத்தியை யுடையேனாம்படி பண்ணி |
| பணியும் | கைங்கர்யத்தையும் |
| கொண்டான் | ஸ்வீகரித்தான் (ஆகையால்) |

அவனே ஆஸ்ரயணீயன். (௧)

வ்யா.—முதற்பாட்டு. (ஆளுமித்யாதி) தன் திருவடிகளுக்கு அர்ஹமான வஸ்து †தனக்குரித்தென்றிராதபடி ஆளாக ஸ்வீகரித்து

† (பா) தனக்கரிதென்றிராதபடி.

அந்த ஆளானதினுடைய பல(ஃப)ரூபமான கைங்கர்யத்தையும் கொண்டான். - (அடியேனை ஆளும்பணியும் கொண்டான்) முதல் தன்னிலே யோக்யமான வஸ்துவையும், அயோக்யனாயேயாய் தன்னை ஸ்வதந்த்ரனாக புத்திபண்ணி வைக்கையன்றிக்கே, பரசேஷமென்னும் புத்தியைப் பிறப்பித்தானென்கையும், அந்த சேஷத்வத்தினுடைய பல (ஃப)மான தாஸ்யத்திலே ருசியைப் பிறப்பித்தானென்கையும். (விண்டவித்யாதி) இவ்வடிமையில் பொருந்தாதபடியான ஜந்மத்தையுடைய துஷ்ப்ரக்ருதிகளை அழியச்செய்யும்படி சொல்லுகிறது. இவர்களுக்கு இன்னும் இதிலே ருசி பிறக்கக்கூடுமோ? என்று ஆந்தனையும் அவஸரம்பார்த்து நின்று (க) “ద్విధా భజ్యేయ మప్యేవం న నమేయన్తు కస్యచిత్ - த்விதா பஜ்யேய மப்யேவம் ந நமேயந்து கஸ்யசித்” என்று அவர்கள் பொருந்தாமையிலே நிலைநின்றால், பின்னைக் கண்பாராதே அழியச்செய்யும். தோளைக் கழிப்பது, தாளைமுறிப்பது, தலையை அறுப்பதாய்க்கொண்டு சிறிதுபோது காலயாபநம் பண்ணி, பின்னை அம்பிலே அழிக்கைக்காக, காணவே எதிரிகள் குடல் குழம்பும்படியான வில்லில்நின்றும், (உ) “దీప్తపావకసఙ్కాశైః - தீப்தபாவக ஸங்காசை:” என்கிறபடியே-தொடுத்துவிடுகிறபோது அம்பாய், சத்ருசரீரங்களிலே அக்நியாய் ப்ரவேசிக்கும் அம்புகளை நடத்தினான்.

(வேளும் சேயுமித்யாதி) அந்தேசத்திலே வர்த்திப்பாரெல்லாம் போ(ஃபோ)க்தாக்களும் போக்யை(ஃபோக்ய)களுமான ஸ்த்ரீகளுமே யாய்த்து. வடிவழகுக்குக் காமவேளையும் ஸுப்ரஹ்மண்யனையும் போலேயிருக்கும் புருஷர்களும், அவர்கள் தங்களையும் ஒரு நோக்காலே அநந்யார்ஹராம்படி பண்ணவல்ல ஸ்த்ரீகளும் வர்த்தியாநின்றுள்ள. (நாளும் விழவினொலியோவா) (ங) “திங்களும் நாளும் விழாவறாத” என்கிறபடியே-நாள் திருநாளும் திங்கள் திருநாளும் மாறாதேயிருக்கிற திருநறையூரிலே நித்யவாஸம்பண்ணுகிற நம்பி-ஆளும் பணியுமடியேனைக் கொண்டான். ... ... ... ... ... (க)

அரு. — முதற்பாட்டு. (ஆளுமித்யாதி) கீழ்ச்சொன்னத்தை விவரிக்கிறார் (முதலித்யாதி). இத்தால் - ஆட்கொள்ளுகைக்கும் பணிகொள்ளுகைக்கும் பேதம் சொல்லிற்றாய்த்து; தாத்பர்யாந்தரமாகவுமாம். ஆளாக

(க) ரா-யு-நசு-கக. (உ) ரா-யு-கசு-உ.உ

(ங) தி-வா-எ-கூ-ந.

அபிமானித்துப் பணியைக்கொண்ட தன்றிக்கே ஜ்ஞாநவிசேஷங்களை யுண்டாக்கிறனென்று கருத்து ... ... ... ... ... (க)

மூ.—

முனியாய்வந்து மூவெழுகால் முடிசேர் மன்னருடல்துணியத்
தனிவாய் மழுவின் படையாண்ட தாரார் தோளான் வார்புறவில்
பனிசேர்முல்லை பல்லரும்பபானை லொருபால் கண்காட்ட
நனிசேர் கமல முகங்காட்டும் நறையூர் நின்ற நம்பியே. (உ)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| முனியாய் | பரசுராமாழ்வாராய் | முல்லை | முல்லைப்பூவானது |
| வந்து | வந்தவதரித்து, | பல் | (அவ்வூரில் ஸ்த்ரீகளுடைய) பற்களைப் போல் |
| மூவெழுகால் | இருபத்தொரு கால் | அரும்ப | மொட்டுவிடாநிற்க, |
| முடிசேர் | கிரீடங்களை யுடையரா | பானல் | பானலென்னும்பூ |
| மன்னர் | ராஜாக்களுடைய [ன | ஒருபால் | ஒருவகை |
| உடல் | சரீரமானது | கண்காட்ட | (அவர்கள்) கண்களைக்காண்பியாநிற்க, |
| துணிய | துணியும்படியாக | நனிசேர் | பெருமையை யுடைய |
| தனி | அஸத்ருசமான | கமலம் | தாமரைப்பூவானது |
| வாய் | முகத்தை (நுனியை) யுடைய | முகம்காட்டும் | முகத்தைக் காட்டாநிற்பதான |
| மழு | மழுவென்கிற | நறையூர்நின்ற | திருநறையூரில் நித்யவாஸம் பண்ணுகிறவனை [யன்). |
| படை | ஆயுதத்தை [வனும். | நம்பி | நம்பியே (ஆச்ரயணீ |
| ஆண்ட | நிர்வஹித்த (உடைய) | | |
| தார் ஆர் | மாலையினால் அலங்க்ருதமான [ய், | | |
| தோளான் | புஜங்களை யுடையனு | | |
| வார் | நீண்ட (விசாலமான) | | |
| புறவில் | பர்யந்த ப்ரதேசங்களில [யிருக்கிற | | |
| பனிசேர் | குளிர்ந்து அழகியதா | | |

முல்லை முதலியவை ஸ்த்ரீகளுடைய பற்கள் முதலியவற்றைப்போல விளங்குகின்றன வென்றபடி. (உ)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (முனியாயித்யாதி) ஆந்ருசம்ஸ்யவ்ரதபராதாநனை ருஷியாய்வந்து. அவ்வாந்ருசம்ஸ்ய வ்ரதர்க்கும் வைதஹிம்ஸையில் கைகூச வொண்ணுதிறே. (மூவெழுகாலித்யாதி) இருபத்தொருபடிகால் க்ஷத்ரிய வம்சத்தை அறுத்துத் தூவும்படி அத்விதீயமான வாயை யுடைத்தான மழுவை ஆயுதமாக நிர்வஹித்த. (தாரார்தோளான்) ஜகதரக்ஷணததுக்குத தனிமாலை யிட்டுக்கொண்டிருக்கிறவன். (வார்புறவி லித்யாதி) நீண்ட புறவில் - பரந்த பர்யந்

தத்தில், தர்சநீயமான முல்லையானது, அங்குத்தை ஸ்த்ரீகளுடைய தந்தபங்க்தியைக் காட்ட, நெய்தலில் அவாந்தர ஜாதியான பானலானது, கண்களைக்காட்ட. (நனிசேர் வயலுள் முத்தலைக்கும்) கடல் போலே பரந்த வயலிலே முத்தானது அலையாநின்றுள்ள. அன்றிக்கே, ரீதிபேதம் பிறவாமைக்காக, (கமலம்) என்றதாகில், அவ்விரண்டுக்கும் ஆஸ்ரயமான முகத்தை, பெருத்த தாமரையானது காட்டும்.

---

அரு.—இரண்டாம்பாட்டு. (முனியாயித்யாதி) நிசாசரரை வென்றவளவன்றிக்கே, ராஜாக்கள் சிறிதும் அதிமாத்ரமாகக் கைவிஞ்சினால் கொல்லவல்லனென்று ஸ்ரீ பரசுராமனை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

ஆந்ருசம்ஸ்யத்துக்கு ஹிம்ஸை கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (அவ்வாந்ருசம்ஸ்யேத்யாதி). "நனிசேர் கமலமுகங் காட்டும்" என்று பாடாந்தரமென்று அர்த்த மருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி). (௨)

மூ.—

தெள்ளார் கடல்வாய் விடவாயச் சின வாளரவில் துயிலமர்ந்து
துள்ளாவருமான் வீழ வாளி துரந்தானிரந்தான் மாவலிமண்
புள்ளார் புறவில் பூங்காவி புலன்கொள் மாதர் கண்காட்ட
நள்ளார் கமலமுகங்காட்டும் நறையூர் நின்ற நம்பியே. (௩)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| தெள் ஆர் | தெளிவை யுடைத்தான (ஸ்வச்சமான) | துரந்தான் | ப்ரயோகித்தவனாய், |
| கடல்வாய் | திருப்பாற் கடலில் | மாவலி | மஹாபலியிடத்தில் |
| விடவாய | விஷத்தை யுமிழாநின்ற வாயையுமுடையனாய், | மண் | பூமியை |
| சினம் | (ப்ரதிபக்ஷத்தின் மேல்) கோபத்தையுடையனாய், | இரந்தான் | யாசித்தவனாய், |
| வாள் | ஒளியையுடையனான | புள் ஆர் | பக்ஷிகள் நிறைந்த |
| அரவில் | திருவநந்தாழ்வான் மேலே | புறவில் | பர்யந்தங்களில் |
| துயில் அமர்ந்து | கண்வளர்ந்தருளி, (அநந்தரம்) | பூ காவி | அழகிய செங்கழுநீர்ப் பூவானது |
| துள்ளா வரு | துள்ளிக்கொண்டு வாராநின்ற | புலன்கொள் | தர்சநீயமான ஆபரணங்களணிந்த |
| மான் வீழ | மாயா ம்ருகம் நசிக்கும்படியாக | மாதர் | ஸ்த்ரீகளுடைய |
| வாளி | பாணத்தை | கண் | நேத்ரங்களை |
| | | காட்ட | காட்டாநிற்பதாய், |
| | | நள் ஆர் | (இதழ்) செறிவை யுடைய |
| | | கமலம் | தாமரையானது |

முகங்காட்டும் நறையூர் நின்ற நம்பியே. (௩)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (தெள்ளாரித்யாதி) தெண்மையார்ந்து திரைகொழித் தெறட்டாநின்ற கடலிலே; செந்தெங்குக்கு முள்கட்டினாப்போலே வஸ்துவின் நீர்மைக்குத் தக்கபடி ப்ரதிபக்ஷத்தின் மேலே விஷத்தை உமிழாநின்றுள்ள வாயையுடையனாய், அவர்கள்மேலே மிக்க சினத்தை யுடையனுமாய், நிரந்தர பகவதநுபவத்தால் வந்த ஒளியையுடையனுமா யிருந்துள்ள திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக் கொண்டு, அவன்மேலே சாய்ந்து, ராவணாதி கண்டகர் வந்து தோற்றினவாறே அப்படுக்கையை விட்டுப் போந்து அவதரித்து, அங்கே இங்கே துள்ளிவருகிற மாயாம்ருகமானது இலக்குப் பட்டு விழும்படி அம்பை நடத்தினவன். (இரந்தானித்யாதி) அவ்வம்பு கையிலே யிருக்கச்செய்தே, ஓர் இயற்றி யில்லாதாரைப்போலே, மஹாபலி பக்கலிலே சென்று மண்ணை இரந்தான். ஸாமத்துக்குச் செல்லாத விடத்திலே யாய்த்து பேதத்தி லிழிவது. (புள்ளாரித்யாதி) அன்னம் தொடக்கமான பக்ஷிகளாலே நெருங்கி யிருந்துள்ள பர்யந்தத்திலே, தர்சநீயமான செங்கழுநீரானது, ஆபரணங்களாலே அலங்க்ருதைகளா யிருந்துள்ள ஸ்த்ரீகள் கண்ணைக்காட்ட, செறிந்த இதழையுடைய தாமரைப் பூவானது அக்கண்களுக்கு ஆஸ்ரயமான முகத்தைக் காட்டாநின்றுள்ள திருநறையூர். ... ... (௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (தெள்ளாரித்யாதி) கீழ்ப்பாட்டில் ஸ்ரீ பரசுராமாழ்வானை அநுபவித்தவர், இரண்டிடத்திலு முண்டான ராமாவதாரத்திலும் ஸ்ரீ வாமநாவதாரத்திலும் திருவுள்ளமோடி, இவற்றுக்கெல்லாம் நாற்றங்காலான க்ஷீராப்தி நாதனை அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(தெண்மை) தெளிவு கடல் பதவாஸனை (திரையித்யாதி) (செந்தெங்கு) செவ்விளநீர் மரம். (நீர்மைக்கு) *'ரிபூணாமபிவத்ஸலா' என்னும்படியான வாத்ஸல்யத்துக்கு. (இயற்றி) அதிசயம். புலன்என்று - இந்த்ரியமாய், அத்தால் - அதுக்கு விஷயங்களான ஆபரணங்களைச் சொல்லுகிறது. ... ... ... ... ... ... ... ... (௩)

மூ.—

ஒளியா வெண்ணெயுண்டா னென்றுரலோ டாய்ச்சியொண் கயிற்றால்
விளியா வார்க்க வாப்புண்டு விம்மியழுதான் மென்மலர்மேல்
களியாவண்டு கள்ளுண்ணக் காமர்தென்ற லலர்தூற்ற
நளிர்வாய் முல்லை முறுவலிக்கும் நறையூர் நின்ற நம்பியே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| ஒளியா | ஒளித்துநின்று |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| உண்டான் என்று | விழுங்கினனென்று |
| ஆய்ச்சி | யசோதையானவள் |
| விளியா | கோபித்து |
| ஒள் | அழகிய |
| கயிற்றால் | தாம்பினால் |
| உரலோடு | உரலோடுசேர்த்து |
| ஆர்க்க | கட்ட [கொண்டு |
| ஆப்புண்டு | கட்டுண்டவனைக் |
| விம்மி | ஏங்கி |
| அழுதான் | அழுதவனைப் |
| மெல் | ம்ருதுவான |
| மலர்மேல் | பூக்களிலே |
| வண்டு | வண்டுகளானவை |
| களியா | உகப்புடனே |

| பதம். | உரை. |
|---|---|
| கள் | தேனை (நிஷித்த த்ரவ்யத்தை) |
| உண்ண | பாநம்பண்ண, |
| காமர் | அழகிய |
| தென்றல் | தென்றல் காற்றானது |
| அலர் தூற்ற | புஷ்பங்களை இறையாநிற்க (அவ்வண்டுகளுக்குப் பழிசொல்லாநிற்க), |
| நகிர் | பெருமை பொருந்திய |
| வாய் | முகத்தையுடைய |
| முல்லை | முல்லைப்பூவானது |
| முறுவலிக்கும் | அலராநிற்பதான (மந்தஸ்மிதம் பண்ணுகின்றதான) |

நறையூர் நின்ற நம்பியே. (ச)

வ்யா.—நாலாம்பாட்டு. (ஒளியாவெண்ணெ யித்யாதி) மறைய நின்று சேமித்து வைத்த வெண்ணெயை "தைவங்கொண்டது" என்னும்படியாக அமுதுசெய்து. அன்றிக்கே, மறைக்க வரிதான வெண்ணெயை அமுதுசெய்தான் என்று யசோதைப் பிராட்டியானவள் சீறி உரலோடே சேர்த்துத் திருமேனியிலே அழுந்தும்படியாகக் கயிற்றாலே நெருக்கிக்கட்ட. அன்றிக்கே, திருமேனியை ஸ்பர்சிக்கப் பெற்றது என்று "ஒண்கயிறு" என்றதாகவுமாம். (ஆப்புண்டு) அநுகூல ஸ்பர்சமுள்ள த்ரவ்யமொழியச் செல்லாமையாலே அப்படி கட்டுண்டு. நாகபாசாதிகளை யிட்டுக் கட்டிலிறே அறுத்துக் கொடு போக வல்லனாவது; அன்றிக்கே துர்யோதநாதிகள் கட்டிலாதல்; அநுகூலர் கட்டினால் போகமாட்டான்; (க) "யதிசக்நோஷி - யதிசக்நோஷி" என்றருளிறே. வங்கிபுரத்து நம்பி, பலகாலும் "திருவாராதநக்ரம மருளிச்செய்யவேணும்" என்று போருமாய், அவஸரஹாநியாலே அருளிச்செய்யாதே போந்தாராய், திருமலையிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, ஆழ்வானுக்கும் நம்பி ஸ்ரீஹநுமத்தாஸர்க்கும் அதுதன்னை அருளிச்செய்தாராய்ச், சமைகிறவளவிலே நம்பிதோற்ற,

(க) வி-பு-ரு-சு-கரு.

திருவுள்ளம் துணுக்கென்றஞ்சி, அப்போ தருளிச்செய்தவார்த்தை;- "என்றுமுள்ள இஸ்ஸம்சயநீரப் பெற்றோமாகிறது - நியாமகன்நியாம்யங்களிலே சிலர்க்கஞ்சிக் கட்டுண்டு அடியுண்டு அழுது நின்றான் என்றால் இது கூடுமோ என்றிருந்தோம், இரண்டு இழவுக்கும் நம்முடைய ஹ்ருதயம் அஞ்சி நொந்தபடியால் அதுவும் கூடும்" என்று. (விம்மியழுதான்) அகவாயிலோட்டத்துக்கு ஓசொல்லையில்லை யிறே. அதெல்லாம் தோற்றும்படி அதுக்குப் போக்குவிட்டு அழுதபடி. வாய்விட்டழ வொண்ணாதபடி "வாய், வாய்" என்னுமே.

(மென்மலரித்யாதி) கண்டவிடமெங்கும் பரப்புமாறப் பூத்துக் கிடக்குமிறே; அதிலே மதுபாநார்த்தமாகக் கிட்டின வண்டுகள், அத்தைக் கிட்டப்பெற்ற ஹர்ஷத்தாலே களித்து, நிஷித்த ஸேவை பண்ணுவாரைப்போலே மதுபாநத்தைப் பண்ணிற்றின. அதனைக் கண்ட ஸ்ப்ருஹணீயமான தென்றல், நாட்டிலே பழியைத் தூற்றிற்று; அதனைக்கண்ட முல்லை, புகுந்த பரமார்த்தை அநுஸந்தித்து, அது தானப்படி செய்கிறது, இது நானிப்படி செய்யக்கடவதோ?என்று வாய்விட்டுச் சிரிக்கமாட்டாமை ஸ்மிதம பண்ணிற்று. ... (௪)

அரு.—நாலாம்பாட்டு (ஒளியாவித்யாதி) கீழே-க்ஷீரார்ணவ சாயித்வத்தை அநுஸந்தித்தாராய், (க) "ఏష నారాయణః శ్రీమాన్ క్షీరార్ణవ నికేతనః । నాగపర్యఙ్కముత్సృజ్య హ్యాగతో మధురాం పురీమ్ - ஏஷநாராயண ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதநஃ । நாகபர்யங்க முத்ஸ்ருஜ்யஹ்யாகதோ மதுராம் புரீம்" என்கிறபடியே - க்ருஷ்ணனாய்ப் பிறந்து நியாம்யனை குணத்தில் தாம் ஆப்புண்டபடியை யருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"விளியா" என்றதினர்த்தம் (சீறி) என்றது அழுந்தும்படி நேரிதாயிருக்கை - ஒண்மை என்று கீழருளிச்செய்து, அர்த்தாந்தர மருளிச்செய்கிறார் (அன்றிக்கே யிதயாதி). நியாமகன் நியாம்யர்க்கஞ்சினமைக்கு ஒரு ஸம்வாத மருளிச்செய்கிறார் (வங்கிபுரத் தித்யாதி). (திருமலையிலே) என்கிறதுக்கு முன்னே, எம்பெருமானார் என்று கூட்டுவது; (உ) "గురోర్నామ న కీర్తయేత్ - குரோர்நாம ந கீர்த்தயேத்" என்கிற சூச்சத்தாலே அருளிச்செய்யாதொழிந்தது. (இரண்டிழவுக்கும்) என்றது - அவரபேக்ஷித்தபோது சொல்லக் கூடாமையாலும், இப்போது தானு மிவர்களோடே கூடச் சொல்லக்கூடாமையாலு முண்டான இழவுக்கு மென்கை. (அதுவும்) க்ருஷ்ணனஞ்சினதுவும். இத்தால் - நியாமகரான எம்பெருமானார், நியாம்யரான வங்கிபுரத்து நம்பியைக்கண்டு, துணுக்கென்றபோதே

(க) ஹரிவம்சம். (உ)

யசோதைப் பிராட்டிக்கும் க்ருஷ்ணன் தனுக்கென்னக் கூடுமென்றபடி.

"களியா" என்றதினர்த்தம் (களித்து) என்றது. வண்டு மதுபானம் பண்ணுகிறத்தையும் தென்றல் வீசுகிறத்தையும் முல்லை அலருகிறத்தையும் கடாக்ஷித்து அருளிச்செய்யுமிடத்தில், "கள்" என்றது - தேனையாகிலும், "அலர்தூற்ற" என்றதுக்கு-பூக்களை இறைக்கை சப்தார்த்தமாகிலும், முறுவலிக்கைக்கு விகாஸமே சப்தார்த்தமானாலும் இவற்றுக்கு ப்ரஸித்தியால் தோற்றும் த்வந்யர்த்தங்களை யருளிச்செய்கிறார் (கண்டவிடமெங்கு மித்யாதி). (அதுதான்) அந்த வண்டுதான். (இதுதான்) இந்தக் காற்றுதான்.

மூ.—

வில்லார்விழவில் வடமதுரை விரும்பி விரும்பா மல்லடர்த்துக்
கல்லார் திரடோள் கஞ்சனைக்காய்ந்தான் பாய்ந்தான் காளியன்மேல்
சொல்லார் சுருதி முறையோதிச் சோமுச்செய்யும் தொழிலினோர்
நல்லார் மறையோர் பலர்வாழும் நறையூர்நின்ற நம்பியே. (ரு)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| வடமதுரை | வடதிக்கிலுள்ள ஸ்ரீ மதுரையில் | சொல்ஆர் | (நிர்த்துஷ்டமான) சொற்களை யுடை |
| வில்ஆர் | வில்லை யுடைத்தான | சுருதி | வேதங்களை [யதான |
| விழவில் | தநுர்யாகத்திலே | முறை | க்ரமத்திலே |
| விரும்பி | (போக) ஆசைப்பட்டு (அங்கே) | ஓதி | அத்யயநம்பண்ணி, |
| விரும்பா | (தன்னை) உகவாத | சோமு | ஸோமயாகம் முதலியவற்றை\| |
| மல் | சாணூராதி மல்லர்களை [பு] | செய்யும் | அநுஷ்டியாநின்ற |
| அடர்த்து | பொடியாக்கி, (பின் | தொழிலினோ | கர்மட (ர்) ராய் |
| கல் ஆர் | கல்லோடொத்த (த ருடமான) தாய் | நல்லார் | விலக்ஷணரான (அநந்ய ப்ரயோஜநரான) [ர்கள் |
| திரள் | திரண்டிருக்கிற [ன | | |
| தோள் | புஜங்களை யுடையனை | பலர் மறை யோர் | அநேகம் ப்ராஹ்மண [நின்ற |
| கஞ்சனை | கம்ஸனை | | |
| காய்ந்தான் | சீறிக்கொன்றவனாய், | வாழும் | நித்யவாஸம் பண்ணு |
| காளியன்மேல் | காளியன் தலைமேலே | | நறையூர் நின்ற நம்பியே. (ரு) |
| பாய்ந்தான் | குதித்தவனாய், | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வில்லாரித்யாதி) கம்ஸன் மாதுலனாய், "வில்விழவு" என்றொரு வ்யாஜத்தையிட்டு அழைப்பித்து, வாசலிலே ஆனையைநிறுத்தி, அது கொன்றதென்று கண்ணநீர் விழவிட்டு

துலேக்கக்கொண்டாடி யிருப்பானாகக் கோல; அத்தை அறியாதிரு யிருக்கை யன்றிக்கே, அடியேதுடங்கி அவன் பண்ணிப்போருகிற ப்ராதிகூல்யத்தை அறியச்செய்தேயும், அத்தை மதியாதே, "வில் விழவுக்கு" என்று அவ்விடத்தை உகந்து புகுந்தானாய்த்து. (விரும் பாமல் லடர்த்து) உகவாத மல்லவர்க்கத்தை அழியச்செய்து. (கல்லா ரித்யாதி) திண்ணிய தோளுடைய கம்ஸன் கோலின கோலுதலை அவன்றன்னோடேபோம்படி பண்ணி அவனைமுடித்தது. (காளியன் மேல் பாய்ந்தான்) கம்ஸன் முதுகில் பாய்ந்தாப்போலே, காளியன் தலையில் பாய்ந்தபடி.

(சொல்லாரித்யாதி) புருஷ புத்த்யதீந மல்லாமையாலே நிர்த் தோஷமாயிருக்கிற ஶ்ருதிகளைப் பதங்கமங்களோடே அதிகரித்து; கேவலாத்யயநம் பண்ணுகையன்றிக்கே அதினுடைய அநுஷ்ட்டா நத்தளவும் போருமவர்கள்; அதுதான் காதாசித்கமாயிருக்கை யன்றி க்கே அதுதானே யாத்ரையாயிருக்குமவர்கள்; அது தன்னை ஒரு பல (ஃபல)த்துக்காக அநுஷ்ட்டிக்கையன்றிக்கே அநந்ய ப்ரயோஜநராய் அநுஷ்ட்டிக்கும்படியான வைலக்ஷண்யத்தை யுடையவர்கள். ...(ரு)

---

அரு. — அஞ்சாம்பாட்டு. (வில்லித்யாதி) கீழ்ப்பாட்டில் - ஆஶ்ரித பவ்யனாயிருந்தபடியை அநுஸந்தித்தாராய், ஆஶ்ரித விரோதிகள்மேல் தானேபோய் வெல்லவல்லனென்று க்ருஷ்ணாவதாரத்திலே தானே ஆழங் கால் படுகிறாரென்று ஸங்கதி.

"முறை" என்றதினர்த்தம் (பதங்கமேத்யாதி). (சோமு) ஸோமயா கமாய், அதுதான் உபலக்ஷணமென்றருளிச்செய்கிறார் (கேவலேத்யாதி). "செய்யும்" என்ற வர்த்தமாநார்த்தம் (அதுதானித்யாதி). "தொழிலி னோர்" என்று நிரூபகமாகச் சொன்னதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கி றார் (அது தன்னை யித்யாதி) ... ... ... ... ... (ரு)

மூ.—

வள்ளி கொழுநன் முதலாய மக்களோடு முக்கணான் [தான்]
வெள்கியோட விறல்வாணன் வியன் தோள் வனத்தைத் துணித்துகந்
பள்ளி கமலத்திடைப்பட்ட பகுவாயலவன் முகம் நோக்கி
நள்ளி யூடும் வயல் சூழ்ந்த நறையூர் நின்ற நம்பியே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வள்ளி | வள்ளியென்றசண்டாள ஸ்த்ரீக்கு | கொழுநன் | வல்லபனானஸுப்ரஹ்மண்யனை |

| | | | |
|---|---|---|---|
| முதலாய | ப்ரதாநனாக வுடைய | கமலத்து இ | தாமரைப்பூவின் நடு |
| மக்களோடு | புத்ரர்களோடு கூட | டை | வே [ய்) |
| முக்கணான் | த்ரிநேத்ரனான ருத்ரன் (தோற்று) | பள்ளி | படுக்கைக்கு(ப் போ |
| | | பட்ட | (அங்கே) அகப்பட்டுக் கிடந்த [தான |
| வெள்கி | வெட்கப்பட்டு | பகுவாய் | பெரியவாயை யுடைய |
| ஓட | ஓடிப்போக, | அலவன் | ஆண் நண்டானுடைய |
| விறல் | மிடுக்கனான | | (புஷ்பதூளி படி |
| வாணன் | பாணாஸுரனுடைய | முகம் | முகத்தை [ந்த) |
| வியன் | பெருத்திருந்துள்ள | நோக்கி | பார்த்து |
| தோள் வநம் | புஜங்களாகிற பெருங்காட்டை | நள்ளி | பெண் நண்டானது |
| | | ஊடும் | ப்ரணயகலஹம் பண்ணுகின்ற |
| துணித்து | சே (ச்)தித்து | வயல் | கழனிகளாலே |
| உகந்தான் | ஸந்தோஷித்தவனாய்; | சூழ்ந்த | சூழப்பட்ட |

நறையூர்நின்ற நம்பியே. (௬)

வ்யா.—ஆறும்பாட்டு. (வள்ளிகொழுந னித்யாதி) "வள்ளி" என்று- ஒரு சண்டாள ஸ்த்ரீக்குப்பேர்; அவளுடைய கொழுனனாய்த்து - ஸுப்ரஹ்மண்யன்; அவன் துடக்கமான புத்ராதிகளோடே கூட, (௧) "ஸாநீதப்ருத்யவர்க்க - அவிநீதப்ருத்யவர்க்கः" என்னுமிந்தனை யிறே இங்கு. (௨) [முண்டன் நீறன் இத்யாதி] தலையைச்சிரைத்து சாம்பலைப்பூசி யிருப்பானொருவனும், அவனுடைய புத்ரர்களும், ஜ்வரங்களும், பிடாரியும், அக்நியும்,இவையடைய முதுகுகாட்டி ஓட; அத்தைக்கண்டு, † "ஸ்த்ரீப்ரதாந ரானவர்களோடே யாசாதே ராய்போர விழிந்தது" என்று லஜ்ஜித்து. [வாணனுக் கிரங்கினான்] "ஆஸ்ரயணீய ரல்லாதாரை ஆஸ்ரயித்துவந்தானத்தனை" என்று அவனுடைய தசையை யநுஸந்தித்து க்ருபை பண்ணினானாய்த்து. (முக்கணான் வெள்கியோட) ருத்ரன்தான் நோக்குவதாக ஏறிட்டுக்கொடுவந்து வாணனைக் காட்டிக்கொடுத்து, பரிகாரத்தோடே லஜ்ஜித்தோட, பெரு மிடுக்கனான வாணனுடைய பாஹுவநத்தை சேதித்து ஸம்ஹரித்தானான். தேவதாந்தர பஜநத்துக்குப் பரிகாரமான தோள்களைத் துணித்தான். ஒருகையாலே அஞ்ஜலிபண்ணினால் கையைத் தெறிப்பதாகச் சொல்லாகின்றதிறே.

(௧) (௨) தி-௪-வி-௭௧. † (பா) ஸ்த்ரீப்ராயரான.

(பள்ளி கமலமித்யாதி) "பட்ட ரருளிச்செய்யக் குறிப்பாகக் கேட்டிருப்பதொரு பாட்டு" என்றருளிச்செய்வர்;—"பகுவாயலவன் கமலத்திடைப் பள்ளிபட்டது, நள்ளியானது கர்ப்பதாரணத்தாலே [illegible]திருக்க, 'அதுக்கு இனியது இடவேணும்' என்று, மதுவுக்காகப் போந்த அலவனானது தாமரைப்பூவிலே வந்திழியக் கொள்ள, போது அஸ்தமிக்கையாலே, உடம்பைக்கொண்டு அங்கே யிங்கே புரண்டு ராத்ரி அதிலே தங்கி, அதில் தாதும் சுண்ணமும் உடம்பிலே நிழலிட்டுத் தோற்ற, போது விடிந்தவாறே வந்தது; இது போனபோதே தொடங்கி, கதவைத்திறந்து வரவு பார்த்துக்கொடுநின்ற நள்ளியானது, இத்தைக்கண்டு, ராத்ரி தங்கினபடியாலும் உடம்பில் சுவடிருந்தபடியாலும் 'இது வெறுமனல்ல' என்று முகம்மாறிக் கதவையடைத்து உள்ளேபோய்ப் புக்கது." இத்தை பட்டர் அருளிச்செய்தவநந்தரம், பிள்ளை திருநறையூரரையர் "ஆராய்ந்து குற்றம் நிரம்பினால் பின்னை யன்றோ தண்டிப்பது" என்ன; "என்செய்வோம்! கேள்வியில்லாதபடி பெண்ணரசு நாடாய்த்து"என் றருளிச்செய்வர்.(௬)

---

அரு.—ஆரும்பாட்டு. (வள்ளியித்யாதி) கீழ்ப்பாட்டில் - ஆஸுரப்ரக்ருதிகளான கம்ஸ காளியங்களை வென்றபடி சொல்லி, அவ்வளவன்றிக்கே, தேவஜாதியானை ருத்ரனையும் எதிர்ததால் முதுகுகாட்டும்படி பண்ணினான் என்று அதி மாநுஷ சேஷ்டிதங்களை யநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

"மக்களோடு" என்ற த்ருதீயை - ப்ராதாந்யத்திலேயாய், மக்களை ப்ரதாநராகச் சொன்னதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அவிநீதேத்யாதி). எடுத்த ஸம்வாதத்துக்கு அர்தத மருளிச்செய்கிறார் (தலையை யித்யாதி). "மோடி" என்றத்தைப்பற்ற (ஸ்த்ரீ ப்ரதாநரானவர்களோடே) என்றது இரங்கக்காரண மென்னென்ன வருளிச்செய்கிறார் (ஆச்ரயணீயரித்யாதி) தேவதாந்தர பஜநம் பண்ணினால் கையைத் தெறிக்கவேணுமோவென்ன; பகவத்விஷயத்திலும் ஏக ஹஸ்தத்தாலே அஞ்ஜலிபண்ணினால் தெறிக்கவேணுமென்று சொல்லாநிற்க இதர விஷயத்தில் அஞ்ஜலிபண்ணினால் கேட்கவேணுமோ? என்று விவக்ஷித் தருளிச்செய்கிறார் (ஒரு கையாலே யித்யாதி).

குறிப்பாகக் கேட்டிருந்தபடி ஏதென்ன வருளிச்செய்கிறார் (பகுவாயித்யாதி). பகு - விஸ்த்ருதமான, வாயையுடைய, அலவன்-புருஷ நண்டு. நள்ளி - பெண்நண்டு. போது - ஸூர்யன். பரஸ்பரம் ப்ரியத்தையே நடத்து மிவற்றுக்குப் பிரிவுவர ஹேது வேறின்றியிலே யிருக்கையாலே அதுக்கு உசிதமான ஹேதுவை யருளிச்செய்கிறார் (கர்ப்பேத்யாதி).

நீலோத்பலத்திலிருந்த நள்ளியென்று கருதி, போது விடிந்து அதுவந்தால் இது முகுளிதமாய் (அத்தாலே கதவையடைத்து) என்றது (பெண்ணரசு நாடாய்த்தே!) என்றது -நாய்ச்சியார் கோயில் பற்றுகையாலே, நள்ளிக்கு செலிகை விஞ்சியிருக்குமே யென்கை. .·. ... ... ... (கூ)

மூ.—மிடையா வந்த வேல்மன்னர் வீய விசயன் தேர் கடவிக்
குடையா வரை யொன்றெடுத் தாயர் கோவாய்நின்றான் கூராழிப்
படையான் வேத நான்கைந்து வேள்வி யங்க மாறிசை யேழ்
நடையாவல்ல வந்தணர் வாழ் நறையூர் நின்ற நம்பியே. (எ)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| மிடையா | நெருங்கி (கூட்டமாகக்கூடி) | நின்றான் | ஆனவனும், [தியை |
| வந்த | (யுத்தத்துக்கு) வந்த | கூர் ஆழி | கூர்மைமிக்க திருவா |
| வேல் | வேலாயுதத்தை யு | படையான் | ஆயுதமாக வுடையவனும், |
| மன்னர் | ராஜாக்கள் [டைய | நான்குவேதம் | நாலுவேதங்களையும் |
| வீய | நசிக்கும்படி | ஐந்து வேள்வி | பஞ்சமஹா யஜ்ஞங்களையும்[கங்களையும் |
| விசயன் | அர்ஜுநனுடைய | ஆறு அங்கம் | சீக்ஷைமுதலிய ஆறங் |
| தேர் | தேரை | ஏழ்இசை | ஸப்தஸ்வரங்களையும் |
| கடவி | நடத்தினவனும், | நடையாவல்ல | எப்போதும் நடத்த வல்லரான |
| ஒன்றுவரை | கைப்பட்டதொரு மலையை | அந்தணர் | ப்ராஹ்மணர [நின்ற |
| குடையாஎடுத்து | குடையாகத் தூக்கி (கோகுலத்தை ரக்ஷித்து) | வாழ் | நித்யவாஸம் பண்ணு |
| ஆயர் கோவாய் | (அத்தாலே) இடையர்க்கு ஸ்வாமியாக | | நறையூர்நின்ற நம்பியே. (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மிடையாவித்யாதி) துர்வர்க்கமடைய அப்பக்ஷத்தைத் திரண்டுவந்ததாய்த்து. பூமிப்பரப்படங்கலும் நெளியும்படி நெருங்கி ஸாயுதராய் வந்த ராஜாக்கள் முடிய, கையில் ஆயுதங்கொண்டு வ்யாபரிக்க ஓரவகாசமறும்படி அர்ஜுநனுடைய தேரை நடத்தி, இந்த்ரனுடைய கல்வர்ஷத்தைப் பரிஹரிக்கைக்காக கைக்கெட்டிற்றொருமலையை வர்ஷத்துக்குப் பரிஹாரமான குடையாக எடுத்து. ஒருமலையை யெடுத்தானு யிருக்கையன்றிக்கே அநாயாஸமாயிருந்தபடி. (ஆயர்கோ)அந்த இந்த்ரன் தானேவந்து கோவிந்தாபி(ஷி)ஷேகம் பண்ணும்படி இடையர்க்கும் பசுக்களுக்கும் நிர்வாஹகனாய் நின்றான். (கூராழிப் படையான்) கையிலே திருவாழியு மிருக்கச்

செய்தேயாய்த்து மலையை யெடுத்தது. "பசியிலே நலிந்தோமாகில் தானே தவிருகிறான், அவ்வளவும் நாம் நம்பரிகரத்தை நோக்குவோம்" என்று பார்த்தான்.

(வேதநான்கித்யாதி) இவையே யாத்ரையாம்படி கைவந்திருக்கிற ப்ராஹ்மணர் வர்த்திக்கிற தங்களை நோக்குகைக்காகத் தங்களுடைய வித்யாவ்ருத்தங்களாலே அவன்றன்னையும் நோக்க வல்லவர்களாய்த்து.

---

அரு —ஏழாம்பாட்டு. (மிடையாவித்யாதி). கீழ்ப்பாட்டில் - படையெடுத்துப்போய் வாணன் தோள்துணித்து முக்கண்ணனை முதுகுகாட்டின செயலைச் சொல்லிற்றாய், அவ்வளவன்றிக்கே,* துர்வர்க்கமடைய எதிரிட்டவளவிலும் கையி லாயுதமின்றிக்கே வென்ற சதிரையும் மலையையெடுத்து இந்த்ரனைவென்ற படியையு மருபவிக்கிறாரென்று ஸங்கதி.

தாத்பர்ய மருளிச்செய்து, சப்தார்த்த மருளிச்செய்கிறார் (பூமியித்யாதி). "ஒன்று" என்ற விசேஷணத்தாலே தோற்றின லகு(லக்ஷ்ய)த்தையை விவக்ஷித்துத் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (ஒருவித்யாதி). "(க) *கருதுமிடம் பொருதுவருகிற திருவாழியாழ்வான் அழகுக்குடலா யிருக்கப்போமோ? மலை சுமக்கப்பண்ணி" என்னும் ப்ரஸ்தத்திலே உத்தரமாகத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பசியிலே யித்யாதி). (நலிந்தோம்) அவனாலே நலிவுபட்டோம். (பரிகரம்) திருவாழி. (நோக்குகை) இந்த்ரன் மேல் போகாமல் பிடிக்கை. (உ) "வாழாள்பட்டு" என்கிறவிடத்திற்போலேயான வாழ்ச்சி என்று விவக்ஷித்து, "வாழ்" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தங்களை யித்யாதி) (தங்களை நோக்குகை) தங்கள் சேஷத்வ ஸ்வரூபத்தை நோக்குகை. (அவன்றன்னையும் நோக்குகை) மங்களாசாஸநத்தால் நோக்குகை. ... ... ... ... (எ)

மூ.—பந்தார்விரலாள் பாஞ்சாலி கூந்தல்முடிக்கப் பாரதத்துக்
கந்தார்களிற்றுக் கழல்மன்னர் கலங்கச் சங்கம் வாய்வைத்தான்
செந்தாமரைமே லயனோடு சிவனுமனைய பெருமையோர்
நந்தா வண்கை மறையோர்வாழ் நறையூர் நின்ற நம்பியே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பந்து ஆர் | பந்தை (லீலார்த்தமாக).உடைய | பாஞ்சாலி | த்ரௌபதியானவள் |
| | | கூந்தல் | (தன்) தலைமயிரை |
| விரலாள் | கை விரல்களை யுடையளான | முடிக்க | முடித்துக் கொள்ளுகைக்காக, |

---

(க) தி-வாய்-௧௦-௬-அ. (உ) தி-பல்-௩.

| | | | |
|---|---|---|---|
| பாரதத்து | பார்தயுத்தத்திலே | செந்தாமரை மேல் | செந்த (திருநாபி)கமலத்தின்மேலே யுண்டான |
| கந்து ஆர் | (மதஜலத்தின்) கந்த(ஃந்)த்தாலே பூர்ணமான | அயனோடு | ப்ரஹ்மாவோடும் |
| களிறு | யானைகளின் மேலே ஏறி வாராநின்ற | சிவனும் அனைய | ருத்ரனோடுமொத்தய |
| கழல் | வீரக்கழலை யுடையரான | பெருமையோர் | ஸாமர்த்த்யத்தை யுடையராய் |
| மன்னர் | (துர்யோதநாதிகளான) ராஜாக்கள் | நந்தா | அழியாத |
| கலங்க | மதிமயங்கும்படி | வண் | ஔதார்யத்தையுடைய |
| சங்கம் | ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை | கை | கைகளையுடையரான |
| வாய்வைத்தான் | திருப் பவளத்திலே வைத்து ஊதின வனாய், | மறையோர் | ப்ராஹ்மணர் |
| | | | வாழ்நறையூர்நின்ற நம்பியே. |

வ்யா.—எட்டாம்பாட்டு. (பந்தாரித்யாதி) பந்துகொண்டு லீலாவிநோதம் பண்ணுமதொழிய, பரிபவத்துக்கு யோக்யையல்லாத த்ரௌபதி பரிபூ(ஃந்)தையாய்க் குழலைவிரித்து, "இது, என்னுடைய சத்ருக்களை யழியச்செய்து அவர்கள் தலைமேலே யிருந்தல்லது முடிப்பதில்லை" என்று ப்ரதிஜ்ஞைபண்ண; (பாரதத்தித்யாதி) ராஜாக்கள் தூசியேறின யுத்தத்திலே, கம்பத்தை முறித்துக்கொண்டு திரிகிற மத்த கஜங்களை மேற்கொள்ளவல்லரான வீரக்கழலை யுடைய ராஜாக்கள் முழுக்காயாக அவியும்படி ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாயிலேவைத்தூதினாய்த்து.

(செந்தாமரை யித்யாதி) தனித்தனியே ஸ்ருஷ்டி ஸம்ஹாரத்துக்கு க்ஷமராய், ப்ரஹ்ம ருத்ரர்களிற்காட்டில் ஏற்றமான ஔதார்யத்தை யுடையரான ப்ராஹ்மணர் நித்யவாஸம பண்ணுகிற. (அ)

---

அரு. — எட்டாம்பாட்டு. (பந்தாரித்யாதி) கீழ்ப்பாட்டில் சொன்ன பாரத ஸமரத்துக்குக் காரண மென்னென்ன வருளிச்செய்துகொண்டு, யுத்தாரம்ப ஸம்ப்ரமத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

கந்து - கந்தமாய், மதகந்த(ஃந்)த்தாலே பூர்ணமான களிறென்றாய், அதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (கம்பத்தை யித்யாதி).

நந்தாத - நசியாமலிருக்கிற என்றாய், அருளிச்செய்கிறார். (ஏற்றமான) என்று. ... ... ... ... ... ... ... (அ)

மூ.—ஆறும்பிறையு மரவமு மடம்பும் சடைமே லணிந்துடலம்
நீறும் பூசி யேறாருமிறையோன் சென்று குறை யிரப்ப
மாறொன்றில்லா வாசநீர் வரை மார்வகலத் தளித்துகந்தான்
நாறும் பொழில் சூழ்ந் தழகாய நறையூர் நின்ற நம்பியே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆறும் | கங்கையையும் | இரப்ப | (போக்கும்படி) யாசிக்க, (அப்போது) |
| பிறையும் | சந்த்ரகலையையும் | வரை | மலைபோன்ற |
| அரவமும் | ஸர்ப்பத்தையும் | அகலம் | பரந்த |
| அடம்பும் | அடப்பம்பூவையும் | மார்வத்து | (தன்) திருமார்பிலுண்டான |
| சடைமேல் | ஜடையின்மேலே | ஒன்று மாறு இல்லா | ஒரு ப்ரதியில்லாத (அஸத்ருசமான) |
| அணிந்து | தரித்து, | வாசநீர் | பரிமளம்மிக்கஸ்வேத [ஜலத்தை |
| உடலம் | சரீரத்தில் | அளித்து | கொடுத்து |
| நீறு | சாம்பலையும் | உகந்தான் | ஸந்தோஷித்தவனாய், |
| பூசியும் | பூசிக்கொண்டு | நாறும் | பரிமள ப்ரசுரமான |
| ஏறு ஊரும் | ருஷபத்தை நடத்தாநின்ற [ருத்ரன் | பொழில் | சோலைகளாலே |
| இறையோன் | ஈஶ்வராபிமாநியான | சூழ்ந்து | சூழப்பட்டு |
| சென்று | கிட்டி | அழகாய | தர்சநீயமாயிருக்கிற |
| குறை | (தன்னுடைய ப்ரஹ்மஹத்யை யாகிற) குறையை | நறையூர்நின்ற நம்பியே. (௯) | |

வ்யா. — ஒன்பதாம்பாட்டு. (ஆறும்பிறையு மித்யாதி) "என்னுடைய ரக்ஷணம் நானே பண்ணிக்கொள்ள வல்லேன்" என்று துர்மாநத்தைப் பண்ணி, அதுக்கீடான †அடையாளங்களை யுடையனாயிருக்கிற தன் ஜடையில் ஏகதேசத்திலே கங்கையைத்தரித்து, போக (போக) ப்ரதாநனென்று தோற்ற சந்த்ரனைத்தரித்து, ஸர்ப்பத்தையும் ‡அடப்பம்பூவையும் ஜடையிலே அணிந்து, உடம்பிலே பஸ்மத்தையுமணிந்து, ருஷபத்தை நிர்வஹியாநின்றுள்ள, இறையோனுண்டு - ஈஶ்வராபிமாநியானவன், லோககுருவுமாய்த் தனக்குப்பிதாவுமாயிருக்கிற ப்ரஹ்மாவினுடைய தலையைச்சேதித்து அத்தாலே பாதகியாய்க்கொண்டு ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே தன்குறையை அறிவிக்க. (மாறித்யாதி) (க) "ஸர்வ்வகந்த꞉ - ஸர்வகந்த꞉" என்கிற திருமேனியில்

(க) சாந்தோ-௩-௧௪-௨.
† (பா) அதுதோற்றும்படி. ‡ "அடம்பப்பூ" என்றும் காண்கிறது.

ஸம்வதஜலத்தைக் கொடுத்து, "மதிப்பனுய்த் திரிகிற இவனுடைய குறைதீரப் பெற்றோம்" என்று அத்தாலே தானுகந்தானுய்த்து.

(நாறும்பொழில்) (௧) "ஸர்வகந்த:-ஸர்வகந்த:" என்கிற வஸ்துவையும் துவக்கவற்றன பரிமளத்தையுடைத்தான பொழிலாலே சூழப்பட்டு தர்சநீயமாயிருக்கிற திருநறையூர். ... ... ... (௯)

அந — ஒன்பதாம்பாட்டு. (ஆறுமித்யாதி) கீழ்ப்பாட்டிலே "கோவிந்தா" என்றவள் குழல்முடிக்க மஹாபாரதத்தை நடத்தினனென்றதிலும் ஏறமாம்படி, துரபி(ரீ)மாநியாய் தம:ப்ரசுரனை காபாலிக்கும் உதவினனென்று குணநிக்யத்தை அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

(அடப்பம்பூ) என்றது - கடம்பமரத்தில் விசேஷமான மரத்திற் பூவென்றபடி. ... ... ... .. ... .. ... (௯)

மூ.—நன்மையுடைய மறையோர் வாழ் நறையூர் நின்றநம்பியைக்
கன்னிமதிள்சூழ் வயல்மங்கை கலியனொலிசெய் தமிழ்மாலை
பன்னி யுலகில் பாடுவார் பாடுசாரா பழவினைகள்
மன்னி யுலக மாண்டு போய் வானோர்வணங்க வாழ்வாரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| நன்மைஉடை | அநந்யப்ரயோஜநதை | தமிழ்மாலை | தமிழ்த்தொடையான |
| ய | யாகிற நன்மையை | | இப்பத்துப் பாசு |
| | யுடைய | பன்னி | பரிசீலித்து [ரங்களை |
| மறையோர் | ப்ராஹ்மணர் | உலகில் | (இந்த) லோகத்தில் |
| வாழ் | வர்த்தியாநின்ற | பாடுவார்பாடு | பாடுவர்களுடைய ஸ |
| நறையூர்நின்ற | திருநறையூரிலெழுந் | | மீபத்திலும் |
| | தருளியிருக்கிற | பழ வினை | ப்ராசீந கர்மங்கள் |
| நம்பியை | நம்பிவிஷயமாக, | கள் | [துக்குமேலே) |
| கன்னி | அழிவில்லாத | சாரா | அணையமாட்டா; (அ |
| மதிள் | ப்ராகாரங்களாலும் | மன்னி | (அவர்கள்) நெடுநாளி |
| வயல் | கழனிகளாலும் | | ருந்து |
| சூழ் | சூழப்பட்டிருக்கிற | உலகம் | இந்த லோகத்தை |
| மங்கை | திருமங்கைக்கு நிர்வா | ஆண்டு | பரிபாலநம் பண்ணி |
| கலியன் | ஆழ்வார் [ஹகரான | போய் | (அநந்தரம் பரமபதத் |
| ஒலிசெய் | அருளிச்செய்த | | துக்குப்) போய் |

(௧) சாந்தோ-௩-௧௪-௨.

| | | | |
|---|---|---|---|
| வானோர் | (அங்கு) நித்யஸூரிகள் | வாழ்வார் | பகவதநுபவம் பண்ணப்பெறுவர்கள். |
| வணங்க | ஆதரிக்கும்படியாக | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (நன்மையித்யாதி) அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர் வர்த்திக்கிற திருநறையூரிலேவந்து நித்யவாஸம் பண்ணுகிற கல்யாணகுண பூர்ணனானவனை, (கன்னியித்யாதி) அரணாகப்போரும்படியான மதிளாலே சூழப்பட்ட திருமங்கைக்கு ராஜாவானஆழ்வார் ஒலியுடைத்தாம்படி யருளிச்செய்த தமிழ்த்தொடையை லோகத்திலே ஆராய்ந்து சொல்லுமவர்களுடைய அருகு பாபங்களானவை கிட்டாது. பாபங்கள்வரப் போக்கவேணுமென்று அர்த்திக்கும்படி யிருக்கையன்றிக்கே, "இவ்விடம் நமக்கு இருப்பிடமன்று" என்று பராக்தமான பாபங்கள்தானே விட்டுப்போம். (மன்னியுலகமாண்டு) ஸம்ஸாரத்திலே நெடுநாளிருந்து ஐஹிகபோக(ங்க)ங்களையும் புஜித்து, பின்னை பரமபதத்தேபோய் நித்யஸூரிகள் ஆதரிக்க நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள். ... ... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அரு—பத்தாம்பாட்டு. (நன்மையித்யாதி) கன்னி - அழிவில்லாமையாய், அத்தால் பலிதத்தை யருளிச்செய்கிறார் (அரணித்யாதி). "வினைகள் சாரா" என்றுஅவற்றின்மேலே ஸ்வாதந்த்ர்யத்தை ஆரோபித்துச் சொன்னதுக்குக் கருத் தருளிச்செய்கிறார் (பாபங்களித்யாதி). ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆறும்பத்தில் ஏழாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து எட்டாந்திருமொழி
## மான்கொண்ட ப்ரவேசம்.

வ்யா.—இந்த்ராதிதேவதைகள் தன்னைக்கொண்டு ஒருகார்யமின்றிக்கே ப்ரயோஜநாந்தரங்களை அபேக்ஷிக்க, அவர்களுக்காகத் தன்னைப் பேணாதே இரப்பாளனுக்கியும், கடல் கடைந்தும், இப்படி அபேக்ஷித

ஸம்விதாநம்பண்ணுமவனை நான் உத்தேஸ்யனாகப்பற்றி, அவன் வந்து நித்யவாஸம் பண்ணுகிற திருநறையூரிலே நான் சென்றுகாணப் பெற்றேன், அத்தேசமே உத்தேஸ்யமென்கிறார். ... ... *

---

அந. — மான்கொண்ட ப்ரவேசம்.—கீழெல்லாம் திருவுள்ளத்தைக் குறித்து உபதேசிக்க, அத்தால பிறந்த அநுபவப்ரகர்ஷத்தாலே, ஸந்நிஹிதமாகைக்காக அவன் இங்கே நித்யவாஸம்பண்ண, அவனைத்திருநறையூரிலே காணப்பெறறேனென்று களிக்கிறரென்னும் ஸங்கதியை ஸூசிப்பிக்கிறார் (இந்த்ராதீத்யாதி). .. ... ... ... ... *

மூ.—மான்கொண்டதோல் மார்வில் மாணியாய் மாவலிமண்
தான்கொண்டு தாளாலளந்த பெருமானைத்
தேன்கொண்ட சாரல் திருவேங்கடத்தானை
நான் சென்றுநாடி நறையூரில் கண்டேனே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மான்கொண் | மானுடையதான | அளந்த | ஆக்ரமித்த |
| ட | [த்தை) | பெருமானை | ஸர்வ சேஷியாய், |
| தோல் | தோலை (க்ருஷ்ணாஜிந | தேன்கொண் | தேனையுடைத்தான |
| மார்வில் | மார்விலே த(த்)ரித்த | ட | [ய |
| மாணியாய் | (வாமந) ப்ரஹ்மசாரி | சாரல் | தாழ்வரைகளையுடை |
| | யாய்க் கொண்டு | திருவேங்கட | திருவேங்கட மலையி |
| மாவலி | மஹாபலியிடத்தில் | த்தானை | லே எழுந்தருளியி |
| | நின்றும் | | ருக்கிறவனை |
| மண் | பூமியை [னதான் | | |
| தான் | (அதுக்கு) ஸ்வாமியா | நான் | இந்நாள் விமுகரைப் |
| கொண்டு | (தாநம் வாங்கித்) தன் | | போந்த நான் [ய் |
| | னதாக்கிக்கொ | நாடிச்சென்று | தேடிக்கொண்டுபோ |
| | ண்டு [லே | நறையூரில் | திருநறையூரில் |
| தாளால் | (பின்பு) திருவடிகளா | கண்டேன் | காணப்பெற்றேன். |

வ்யா.—முதற்பாட்டு. (மான்கொண்ட வித்யாதி) மானுடைத் தானதோலை மார்விலேயுடைய மாணியாய், தன்னுடைய விநீதவேஷத்தைக் காட்டி அவன் நெஞ்சை நெகிழ்த்தது, பின்னையாய்த்து பூமியை வாங்கிற்று. (மாணியாய்) "பூர்வஜந்மமும் இரந்தேயோ ஜீவித்தது" என்று தோற்றவிருக்கை. "கொண்டல்லது போகேன்" என்று இரப்பிலே தகணேறினபடி. (மாவலிமண்ணித்யாதி) கிடந்தானைக்கண்டேறின மஹாபலியதான பூமியைத் தான் அவன்பக்கலிலே இரந்து பெற்றானாயிருக்கை. அவனதல்லாதத்தை அவனதாக்கி, உடைய தான்

தன்னதல்லாதது ஒன்றுஅவன் பக்கலிலே பெற்றானுயிருக்கை. "நம க்கேதேனுமாகப் பெறுமித்தனையே யன்றோ வேண்டுவது" என்றிருந் தான். (தாளாலித்யாதி) கையிலே நீர் விழுந்தஅநந்தரம் அவன் மறு மாஸ்ஸு படுவதுக்குமுன்னே, எல்லைநடந்து கொண்டானாய்த்து. பிராட்டி திருமுலைத்தடத்திலும் கண்ணிலும் வைத்துக்கொள்ளுகை க்கு அர்த்திக்கும்படி ஸுகுமாரமான திருவடிகளாலேயாய்த்து காடு மேடையு மளந்து கொண்டது. (பெருமானை) ஸர்வசேஷியாய் ஸர்வாதிகனாயிருக்கிறவன் இப்படி தன்னைத் தாழவிட்ட விடத்தி லும் தாழ்ந்தது தோற்றுமையிறே தாழவிடவல்லனாய்த்து.

(தேன்கொண்ட வித்யாதி) தேன்மிக்க பர்யந்தத்தை யுடைத் தான திருமலையிலே வந்துநிற்கிறவனை. தாளாலளந்தபோது தப்பி னார்க்கும் இழக்கவேண்டாதபடி திருமலையிலேவந்து நின்றானாய்த்து. (நான் சென்றுநாடி) அவன் நாடித்திரிகிறபோது வைமுக்யம்பண் ணி இருந்துத்திரிந்த நான், தேடிச்சென்று.(நறையூரில்) அறுகாத ப்பயணம்போய் பரமபதத்திலே காண்கையன்றிக்கே, விடாய்த்த விடத்திலே தண்ணீர்குடிக்கப் பெறுவாரைப்போலே திருநறையூரி லே காணப்பெற்றேன். ... ... ... ... ... (௧)

---

அரு.—முதற்பாட்டு. (மாணித்யாதி) (மாணுருவாய தான) மாணுடைய தான. விசேஷணப(ல)த்தாலே ப்ரஹ்மசர்யம் ஸித்திர திருக்கவும், "மா ணி" என்றதுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (பூர்வஜந்மமித்யாதி). "தான் கொண்டு" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (கொடுத்தானை யித் யாதி). விவரணம் (அவனதல்லாதத்தை யித்யாதி) "கொண்டு" என் றது - இரந்துகொண்டு என்றாய், இரக்கவேணுமோ வென்ன வருளிச் செய்கிறார் (நமக்கித்யாதி). "தாளால்" என்று விசேஷித்தது ஈடுபாட் டிலே யாக்கி யருளிச்செய்கிறார் (பிராட்டி யித்யாதி). ... ... (௧)

மூ.—முந்நீரை முன்னாள் கடைந்தானை மூழ்த்தநாள்
அந்நீரை மீனாயமைத்த பெருமானைத்
தென்னாலிமேய திருமாலை யெம்மானை
நன்னீர்வயல்சூழ் நறையூரில் கண்டேனே. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மூந்நீரை | ஆற்றுநீர் ஊற்றுநீர் வர்ஷஜலமென்று மூன்றுவகைப்பட்டநீரையுடைத்தான ஸமுத்ரத்தை | பெருமானை | ஸ்வாமியாய் |
| | | தென் ஆலி | தர்சநீயமான திருவாலியிலே [நின்ற |
| | | மேய | நித்யவாஸம் பண்ணு |
| மூன்நாள் | முற்காலத்தில் [ளைய் | திருமாலை | பெரிய பிராட்டியாரோடு கூடின ஸர்வாதிகனாய் |
| கடைந்தானை | மதநம் பண்ணினவ | | |
| மூழ்த்தநாள் | (அந் [illegible] கம் [illegible] ப்ரளயகாலத்திலே [கொண்டு | [illegible]ம்மானை | எனக்கு ஸ்வாமியுமானவனை, |
| | | நல்நீர் | ஸம்ருத்தமாகிற நன்மையையுடைய ஜலத்தையுடைத்தான [பட்ட |
| மீனாய் | மத்ஸ்ய ரூபியாய்க் | | |
| அந்நீரை | அந்த ஸமுத்ரத்தை | | |
| அமைத்த | (தன் கீழ்வயிறறில்) அடக்கிக்கொண்ட | வயல்சூழ் | கழனிகளாலே சூழப் |
| | | | நறையூரில் கண்டேனே. (உ) |

வ்யா — இரண்டாம்பாட்டு. (மூந்நீரித்யாதி) மூன்று வகைப்பட்ட நீர்திரண்ட கடலை க்ருதயுகத்திலே கடைந்தவனை. தேவர்கள் அஸுரர்கள் கையிலேயகப்பட்டுக் கிடக்கப் புக்கவாறே, அவர்களை ஜீவிப்பிக்கைக்காகக் கடலை நெருக்கிக் கடைந்தானாய்த்து. (மூழ்த்த நாள்) லோகத்தை ப்ரளயங்கொண்டகாலத்து. (அந்நீரை) அந்நீர் தானே, பாடிராப்பாரோ கொள்ளை கொண்டாற்போலே ஜகத்தையடையக் கோக்க, ஒரு மத்ஸ்யமாய் அத்தைத் தன்னுடைய செவுவில் ஏக தேசத்திலே அடக்கினானாய்த்து. கடல் கடைகைக்கு தேவர்களையும் அஸுரர்களையும் கூட்டிக் காரியமானபின்மைக்குறையாகேநிற்க வேண்டிற்று; ஜகத்துக்காக வந்தப்ரளயத்தைப் பரிஹரிக்கிற விடத்தில் அங்கொரு ஸஹாயமுமின்றிக்கே தானும்தன்னைக் குறையவிட்டு நிற்கிறவளவிலே பார்த்து; மூன்று செய்யுமிடத்தில் அநேகம்பேரைக்கூட்டிக்கொண்டு செய்யவும் வல்லனாய், தனியேயும் செய்யவல்லனாயிருக்கிற பெருமானை. ஸர்வாதிகனுடைய செயலிறே.

தேவர்களுக்குக் கடல்கடைந்தாப்போலேயும், ஜகத்துக்கு ப்ரளயத்தைப் பரிஹரித்தாப் போலேயும், என்னுடைய ஸம்ஸாரப்ரளயத்தைப் பரிஹரிக்கைக்காகப் பிராட்டியோடுங்கூடத் திருவாலியிலே நிற்கிற ஸர்வேஶ்வரனை. அன்றிக்கே, தேவர்களோடு லௌகிகரோடு என்னோடு வாசியற அபேக்ஷிதம் செய்யும்படியான ஸர்வேஶ்வரனை; ப்ராப்தியுடையவனை. (நன்னீரித்யாதி) கெட்ட நீரன்றிக்கே மிகுதி

குறைவற்று வேண்டுமளவான நீரையுடைத்தான வயலாலே சூழப் பட்ட திருநறையூர். ... ... ... ... ... (௨)

---

அநு—இரண்டாம்பாட்டு. (முந்நீரித்யாதி) இந்த்ரனுக்காக இரந்து கார்யம்செய்த அபதாநத்தை யநுஸந்தித்தார்; இதில், அந்த இந்த்ராதிக ளுக்காக அமுதமளிக்கவேண்டி உடம்புநோவக் கடல் கடைந்தபடியும் அதிலும் ஆஸ்சர்யாவஹமாக, மீனாய் ப்ரளயாபத்ரக்ஷகனானபடியும் அநு ஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(அந்நீர்தானே) பூமிக்கு அரணாகவைத்த ஸமுத்ரந்தானே; இதுக்கு "கோக்க" என்றதோடு அந்வயம். அமைக்கையாவது - ஜலத்தையெல் லாம் கீழ்வயிற்றிலே அடக்கி லோகத்தை முதுகிலேவைத்து ரக்ஷிக்கை யென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (ஒருவித்யாதி). (செலுவில்) கீழ் வயிற்றுப் பார்ஸ்வத்தில். பெருமையாவதென்னென்ன; அத்தைக் கீழே கடாக்ஷித்துத் தாத்பாய மருளிச்செய்கிறார் (கடலித்யாதி வாக்யத்ரயத் தாலே

"எம்மானை- திருமாலை - தென்னாலிமேயானை" என்று அந்வயம் திரு வுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தேவர்களுக்கித்யாதி). "எம் மானை" என்றது - ஸர்வேஸ்வரனென்றாய், அதுக்குத் தாத்பர்யாந்தர மருளிச்செய்கிறார் (அன்றிக்கே யித்யாதி). பலிதம் (ப்ராப்தியித்யாதி).(௨)

மூ.—தூவாய புள்ளூர்ந்து வந்து துறை வேழம்
மூவாமை நல்கி முதலை துணித்தானைத்
தேவாதிதேவனைச் செங்கமலக் கண்ணனை
நாவாயுளானை நறையூரில் கண்டேனே. (௩)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தூ ஆய | நித்துஷ்டமான | தேவாதி தேவனை | நித்யஸூரிகளுக்குத் தலைவனாய், |
| புள் | பெரிய திருவடியை | செம்கமலம் | செந்தாமரைப் பூப் போன்ற [யனாய், |
| ஊர்ந்து | நடத்திக்கொண்டு | கண்ணனை | திருக்கண்களை யுடை |
| துறை | (மடுவின்) கரையிலே | நாவாய் | திருநாவா யென்னும் திவ்யதேசத்தில் |
| வந்து | சென்று [ன் | உளானை | எழுந்தருளி யிருக்குமவனை |
| வேழம் | ஸ்ரீ கஜேந்த்ராழ்வா | | |
| மூவாமை | நலிவுபடாதபடி [ளி, | | |
| நல்கி | க்ருபைபண்ணி யரு | | |
| முதலை | (அவனுக்கு சத்ருவான) முதலையை | | |
| துணித்தானை | இருதுண்டமாக்கினவனாய், | | |

நறையூரில் கண்டேனே. (௩)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (தூவாய வித்யாதி) ஸர்வேஶ்வரன் திருவடியை மேற்கொண்டு தன் திருவடிகளாலே தாக்கி நடத்தப்புக்கால், அந்த ஸ்பர்ச ஸுகத்தாலே திமிர்த்து, "எங்களம்மை நாயனாருடைய ஸ்பர்ஶ ஸுகமிருந்தபடி யென்!" என்று ஏத்தும் வாயையுடையவாதல்; அன்றிக்கே, நிர்த்தோஷமான சப்தத்தை வடிவாகவுடைய வென்னுதல்; (௧)"வேதாத்மா-வேதாத்மா" என்னக்கடவதிறே. (புள்ளூர்ந்து வந்து துறை) அவனுடைய ஸ்வாபாவிகவேக(க)ம் போராமை நடத்திக்கொண்டு, அவனிடர்பட்ட பொய்கைக் கரையிலேவந்து. (வேழம் மூவாமைநல்கி) அது முடியாதபடி அதின்பக்கலிலே ஓரதனைப்பண்ணினானாய்த்து. அதாவது-பூவில் செவ்வி மாறுவதற்கு முன்னே திருவடிகளிலே இடுவித்துக் கொண்டானாய்த்து. (முதலையையித்யாதி) தானும் மூவாமை பெற்றானாய்த்து; அவன் ஆபந்நனானபின்பு அரைக்ஷணம் தாழ்த்தானாகில் தன்குணங்களை இழந்து போனானாமிறே; இடர்பட்ட பொய்கையிலேபோய்ப்புக்குப்பெரிய அவதா(க்ர)ந்ததோடே இரண்டையும் கூடக் கரையிலே கொடுபோய்வைத்து, ஆனைக்கு இடரின்றிக்கே முதலைக்கே இடராம்படி பண்ணினானாய்த்து. "ராஜபுத்ரர்களைப் பிணைத்தால் கைக்கூட்டனுக்கும் பாலும் சோறும் இடக்கடவது காண்" என்றருளிச் செய்தார்பட்டர். (துணித்தானை) பீஷ்மாதிகள்மேலே சீறுமாபோலே, எதிரிகள் பக்கல் சீறுமாபோலே, நீர்ப்புழு என்று பாராதே சீறினானாய்த்து ஆஶ்ரிதவிரோதி என்னுமாகாரத்தாலே கனத்துத் தோற்றுகையாலே.

ஆனை இடர்பட்ட மடுவின்கரையிலே பெரிய சீற்றத்தோடே தன்னைப்பேணாதே வந்து விழுந்தவன்றானானென்னில்; (தேவாதிதேவனை) *அயர்வறுமமரர்களதிபதியாய்த்து. (செங்கமலக்கண்ணனை) புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனை. (நாவாயுளானை) பரமபதம் கலவிருக்கையாயிருக்க, என்னுடைய ரக்ஷணத்துக்காகத் திருநாவாயிலே வந்து நித்யவாஸம் பண்ணுகிறவனை. அந்தத்திருநாவாய் தான் பரமபதத்தோபாதியாம்படி அடுத்தணித்தாகத் திருநறையூரிலே காணப்பெற்றேன். ... ... ... ... ... ... (௩)

அரு.—மூன்றாம்பாட்டு. (தூவாயவித்யாதி) ப்ரயோஜநாந்தர பரர்க்கும், மேல்வரும் நோயறியாதே லோகத்துக்கும் உபகரித்தபடியை யருளிச்செய்தார் கீழ்; அநந்யப்ரயோஜநராய்ப் பூவிடப்பெறாத இழவுதீரப்பெரிய

(௧) சதுஶ்ஶ்லோகீ-௧.

திருவடிமேற் கொண்டுவந்து நோக்கினபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

எறிவந்து என்றதே "ஊர்ந்து" என்றதுக்குத் தாத்பர்யம் (அவனுடைய வித்யாதி). (ஓரத்தை) பக்ஷபாதத்தை. முதலை துணித்தபின் தேவாகி தேவனானான் என்று விவக்ஷித்து, அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தானுமித்யாதி). மூவாமை - குணமிழக்கையென்று விவரிக்கிறார் (அவனித்யாதி). †(கையிலான்) அரக்கனென்றபடி. முதலையை விடுவிக்கவொண்ணாதோ, துணிப்பானென்னென்ன; அதுக்கு இஷ்டமான சாபவிமோசநத்துக்கு உடலாகையாலே செய்தானென்று ஸம்வாதம் காட்டுகிறார் (ராஜபுத்ரர்களை யித்யாதி). முடித்தானை என்றதே, பரிப்புத்தோற்ற "துணித்தானை" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (ப்ரீஷ்மேத்யாதி). அதுக்கு நியாமகம் (ஆஸ்ரிதேத்யாதி).

மேலுக் கவதாரிகை (ஆலயித்யாதி). ... ... ... (௩)

மூ.—ஓடாவரியா யிரணியனை யூனிடந்த
சேடார்பொழில் சூழ் திருநீர்மலையானை
வாடாமலர்த்துழாய் மாலை முடியானை
நாடோறும் நாடி நறையூரில் கண்டேனே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஓடா | (சத்ருமுன்பே) பிற்காலியாத | வாடா | செவ்வியழியாத |
| அரியாய் | நரஸிம்ஹமாய்க்கொண்டு | மலர் | புஷ்பத்தையுடைய |
| இரணியன் | ஹிரண்யனுடைய | துழாய் | திருத்துழாயினால் கட்டப்பட்ட |
| ஊனை | சரீரத்தை | மாலை | மாலையை |
| இடந்த | கிழித்துப் பொகட்டவனாய், | முடியானை | திருவபிஷேகத்திலணிந்தவனானவனை |
| சேடு ஆர் | இளமைமிக்க | நாள்தோறும் | ப்ரதிதிநமும் |
| பொழில் | சோலைகளாலே | நாடி | தேடித்திரிந்து |
| சூழ் | வ்யாப்தமான | | நறையூரில் கண்டேனே. (௪) |
| திருநீர் மலையானை | திருநீர்மலையிலே எழுந்தருளியிருக்குமவனாய், | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (ஓடாவித்யாதி) ஹிரண்யனுடைய முருட்டுடலைக்கண்டால் பிற்காலியாத நரஸிம்ஹமாயென்னுதல்; அன்றிக்கே, நாட்டில்நடையாடாத நரஸிம்ஹமாய். வரப(ப)லத்தாலே பூண்கட்டின ஹிரண்யனுடைய முருட்டுடலைப்பிளந்து, "இன்னும் இங்ஙனே யிருந்துள்ள விரோதிகள் ஆஸ்ரிதர்க்கு அடர்த்துவரில் செய்வதென்!" என்று, அவற்றைப் போக்குகைக்காக, இளமை மிக்க பொழில் சூழ்ந்திருந்துள்ள திருநீர் மலையிலே ஸந்நிஹிதனானவனை.

† "கையிலான்" என்னும் பதம் வ்யாக்யாநத்தில் காணவில்லை.

ஜகத்ராக்ஷணத்துக்கு முடிகவித்து மாலையிட்டுக் கொண்டிருக்கிறவனை, நாடோறும் நித்யஸூரிகளுடைய ஆசையே யாத்ரையாக உடையனை யாக் கொண்டு இங்கே காணப்பெற்றேன். ... ... ... (௪)

அ௫—நாலாம்பாட்டு. (ஓடாவித்யாதி) ஆனைக்கு உதவப்புள்ளூர்ந்து வந்த படியை அருளிச்செய்தார் - கீழ்ப்பாட்டில்; அங்ஙனே தேசாந்தரத்தில் வரவேண்டாதே நினைத்தவிடத் தன்னிலே ஸந்நிஹிதனாய் ஆஸ்ரிதனுக்கு உதவினமையை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"சேடு" என்றதினர்த்தம் (இளமை) என்றது. ... ... (௪)

மூ.—கல்லார்மதிள் சூழ் கடியிலங்கைக் காரரக்கன்
வல்லாகம் கீள வரி வெஞ்சரம் துரந்த
வில்லானைச் செல்வ விபீடணற்கு வேறாக
நல்லானை நாடி நறையூரில் கண்டேனே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கல் ஆர் | கல்லினால் கட்டப்பட்ட | வரி | அழகியதாய் |
| மதிள் | ப்ராகாரங்களாலே | வெம் | அக்நிகல்பமான |
| சூழ் | சூழப்பட்டும் | சரம் | பாணத்தை |
| கடி | (அகழ்முதலிய) கட்டுடையதுமான | துரந்த | ப்ரயோகித்தய், |
| இலங்கை | லங்கைக்கரசனாய் | வில்லானை | தநுஸ்ஸை யுடையனு |
| கார் | தண்ணியனான | செல்வம் | ஸ்ரீமானான [டத்தில் |
| அரக்கன் | ராவணாஸுரனுடைய | விபீடணற்கு | ஸ்ரீ விபீஷணாழ்வானி |
| வல் ஆகம் | பலிஷ்ட்டமான சரீரமானது | வேறாக | விலக்ஷணமாக |
| கீள | பிளக்கும்படியாக | நல்லானை | ஸ்நேஹத்தையுடையனானவனை |
| | | நாடி நறையூரில் கண்டேனே. (௫) | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கல்லாரித்யாதி) கல்லார் மதிள்சூழ்ந்து அரண்மிக்கிருந்துள்ள லங்கையில் கறுத்த நிறத்தையுடையனான ராவணனென்னுதல்; அன்றிக்கே தண்ணியனென்னுதல். கறுப்பு - தண்மைக்கும், நிறத்துக்கும் இரண்டுக்கும் பேரிறே. (வல்லாகம்) ப்ரஹ்மாஸ்த்ராதிகளுக்கு சிவையாதபடி வர(ப)லத்தாலே திண்ணிதான உடல் கிழியும்படிக்கீடாக, தர்சநீயமாய் (௧) "தீப்தபாவக ஸங்காஸை:-தீப்தபாவக ஸங்காஸை:" என்கிறபடியே தொடுத்துவிடும்போது

(௧) ரா-யு-௧௲-௨௨.

அம்பாய், சத்ருக்கள் சரீரங்களிலே அக்நியாய் ப்ரவேசிக்கும் அம்பு. நடத்தின வில்வலியை யுடையவனை.

(செல்வவிபீடணற்கு) ராவணபவநத்தை விட்டு ஆகாசஸ்தனான போதே (க) "அந்தரிக்ஷகதஸ் ஸ்ரீமாந்" என்கிறபடியே ராமஸம்பந்தத்தால் வந்த ஐஸ்வர்யம் குடிகொண்டதாய், ஸ. (வேறாக நல்லானை) "வருகிற விபீஷணன் புகுரக்கடவனல்லன்" என்று மஹாராஜருள்ளிட்டார் நிரோதிக்க; "அவனைக் கைக்கொள்கை தவிரோம்" என்று பெருமாளும் நிர்ப்பந்திக்க; "ஆகில் கிஷ்கிந்தையில் பரிகரமிங்ஙனே விடைகொள்ளுகிறது" என்ன; "வேணுமாகில் அது செய்கிறது, இது ஒருபடியாலும் தவிரோம்" என்று அவன் பக்கலிலே விசேஷித்து ஸங்கத்தைப் பண்ணினவனை. (நாடி நறையூரில் கண்டேன்)நான் அவனைத்தேடித் திருநறையூரிலே காணப்பெற்றேன். ... ... ... ... ... ... (ரு)

---

அரு. — அஞ்சாம்பாட்டு. (கல்லாரித்யாதி) தமப்பன் பகையாகப் பிள்ளைக்கு உதவினபடி சொல்லிற்று - கீழ்; தமயன் பகையாக உதவினபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

கடி - கட்டாய், துர்க்க (दुर्ग)ச்சவரணையைச் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, "கல்" இத்யாதியாலே விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (கல்லித்யாதி).லக்ஷணயா தன்மை சொல்லுமென்கிறார் (கறுப்பித்யாதி).

"வேறாக" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (வருகிற வித்யாதி). (உ) "[Sanskrit text] - நத்யஜேயம் கதஞ்சந" என்றத்தை உட்கொண்டருளிச்செய்கிறார் (ஆகிலித்யாதி). ... ... ... (ரு)

மூ.—உம்பருலகோடுயிரெல்லா முந்தியில்
வம்பு மலர்மேல் படைத்தானை மாயோனை
அம்பன்ன கண்ணாளசோதைதன் சிங்கத்தை
நம்பனைநாடி நறையூரில் கண்டேனே. ... (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உம்பர் உலகோடு | தேவலோகத்தோடு கூட | உந்தியில் | (தன்) திருநாபியிலுள்ள |
| உயிரெல்லாம் | ஸகல ப்ராணிகளையும் | வம்பு | பரிமள ப்ரசுரமான |

---

(க) ரா-யு-கசு-கஎ. (உ) ரா-யு-கஅ-ங.

| | | | |
|---|---|---|---|
| யானை ...யல் | கமலப் பூவின்மேலே | அசோதை | யசோதையுடைய |
| ...த்தானை | ஸ்ருஷ்டித்த [ஹை | தன் | [ள்ளையாய் |
| ...யானை | ஆய்சர்ய சக்தியுக்த | சிங்கத்தை | ஸிம்ஹம்போன்ற பி |
| ...பன்ன | அம்போடொத்த [ன | நம்பனை | விஸ்வஸநீயனு மான |
| ...ன்னுள் | கண்களை யுடையளா | | வனை |

நாடி நறையூரில் கண்டேனே. (௬)

வ்யா. — ஆறும்பாட்டு. (உம்பருலகித்யாதி) ப்ரஹ்மாதிகள் குடியிருப்போடே கூட மற்றுமுள்ள மநுஷ்யாதிகளையு மடையத் தன் திருவுந்தியிலே செவ்விப்பூவின்மேலே தன்னுடைய ஸங்கல்பத் தாலே யுண்டாக்கின ஆஸ்சர்யபூதனான ஸர்வேஸ்வரனை.

தன் ஸங்கல்பத்தாலே எல்லாவற்றையு முண்டாக்குமவன்றான் மெய்யே வந்தவதரித்தானுய்த்து. (அம்பன்ன கண்ணாளித்யாதி) பிள்ளையுறங்கா வில்லிதாஸர் "பிள்ளைக்குத் தாய்வழியாகாதே கண்" என்றருளிச்செய்வர். (நம்பனை) தன்னை யணுகினவர்க்குத் தன் கை யிலே ஸமர்ப்பிக்கலாம்படி விஸ்வஸநீயனானவனை. (நாடி நறையூரில்) ஸம்ஸாரத்திலே யிருக்கச்செய்தே அவனை விஸ்வஸித்து பற்றப்பெற் றேன். ... ... ... ... ... ... ... (௬)

அரு.—ஆறும்பாட்டு. (உம்பரித்யாதி) கீழ்ப்பாட்டுக்களில் - பிள்ளைக் கும் தம்பிக்கும் தாமே உதவினவளவு சொல்லிற்று; அவ்வளவன்றியே, சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவுக்கு உத்பாதகனாயிருந்தவன் தன்மேன்மை பா ராதே ஓரிடைச்சிக்கு மகனாயிருந்தபடியால் வந்து உதவின ஆஸ்ரித பார தந்த்ர்யம் சொல்லுகிறாரென்று ஸங்கதி.

சதுர்முகனை மலர்மேல் படைத்தத்தாலே "ஸ்ருஜ்யங்களெல்லாம் மல ர்மேல் படைத்தான்" என்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாதிக ளித்யாதி).

மேலுக்கவதாரிகை (தன்னித்யாதி) (க) "ధేనో్ర మాతృ ముఖస్సుతః- தர்யோ மாத்ரு முகஸ்ஸுதஃ" என்றத்தை யுட்கொண்டு அசோதையின் கண்ணழகை அருளிச்செய்ததுக்கு உட்கருத்தை ஸம்வாதமுகேந வருளிச் செய்கிறார் (பிள்ளையித்யாதி). ... ... ... ... ... (௬)

மூ.—கட்டேறு நீள் சோலைக் காண்டவத்தைத் தீமூட்டி
விட்டானை மெய்யமமர்ந்த பெருமானை
மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்டுவரை
நட்டானை நாடி நறையூரில் கண்டேனே. (எ)

(க)

| பதம் | உரை. | பதம். | உரை |
|---|---|---|---|
| கட்டு ஏறு | காவல்மிக்கிருந்ததாய் | பெருமானை | ஸர்வாதிகனாய், |
| நீள்சோலை | பரந்தபொழிலையுடையதான | மட்டு ஏறு | தேன்மிக்கிருந்துள |
| | | கற்பகத்தை | கல்பக வ்ருக்ஷத்தை |
| காண்டவத்தை | காண்டவவநத்தை [க] | மாதர்க்காய் | ஸத்யபாமைக்காக |
| தீ | அக்நிக்கு (ஆஹாரமா | வண்துவரை | அழகிய த்வாரகாபுரியில் (ஸத்யபாமையகத்தில்) |
| மூட்டிவிட்டானை | அநுமதிபண்ணி ஏவிவிட்டவனாய் | நட்டானை | ஸ்த்தாபித்தவனுமானவனை |
| மெய்யம் | திருமெய்யத்தில் [ற | | |
| அமர்ந்த | பொருந்தி வர்த்திக்கி | | |

நாடி நறையூரில் கண்டேனே. (எ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (கட்டேறு நீள்சோலை) இந்த்ரனுடைய காவற்காடென்கிற பதிப்பாலே மிக்க அரணை யுடைத்தாயிருக்கிற. (காண்டவத்தைத் தீமூட்டி விட்டானை) அர்ஜுநனும் தானுமாய் யமுநாதீரத்திலே பூம்பந்து இறட்டு விளையாடாநிற்க, அக்நி ஒரு ப்ராஹ்மணவேஷத்தைக்கொண்டுவந்து நிற்க, "நீ இந்த்ரனுடைய காவற்காட்டை புஜி" என்று விட்டான். (மூட்டி விட்டானை) துஷ்ட ம்ருகங்களின்மேலே விட்டானாய், தான் கிட்டுகைக்கு பயப்படுமாபோலே, ப்ரவேசிப்பிக்கையிலுண்டான அருமை சொன்னபடி. (மெய்யமமர்ந்த பெருமானை) "இன்னும் ஆரேனும் அர்த்தித்து வரில் செய்வதென்!" என்று திருமெய்யத்திலே வந்து ஸந்நிஹிதனானவனை.

(மட்டேறித்யாதி) பரிமளம் மிக்குவாரா நின்றுள்ள கல்பகவ்ருக்ஷத்தை. (மாதர்க்காய்) ஸ்ரீ ஸத்யபாமைப் பிராட்டிபக்கல் தாதர்த்ய(ர்த்த்ய)த்தை முடிய நடத்தினபடி. (வண்டுவரை நட்டானை) இந்த்ரனுக்கு நரகாஸுரனோடே விரோதம் விளைய, அவனுக்காக எடுத்துவிட்டு, அவனை யழித்து மீண்டுவந்து ஸ்வர்க்கத்தைக் குடியேற்றுகிறவளவிலே, இந்த்ராணியானவள், கல்பகவ்ருக்ஷத்தின் பூவர, "உங்களுக்கிது பொருதிறே, உடர்பு வேர்க்குமிறே, தரையிலல்லது கால்பாவாதே" என்று இங்ஙனே தன்னுடைய தேவத்வத்தையும் இவளுடைய மநுஷ்யத்வத்தையும் சொல்லி க்ஷேபித்துச் சூடினாள்; அவளும், க்ருஷ்ணன் தோளைப்பற்றி "இத்தை என் புழைக்கடையிலே நடவேணும்" என்ன; அத்தைப் பிடுங்கிக் கொடுபோந்து ஸ்ரீமத்த்வாரகையிலே நட்டு, பின்னையாய்த்து திருமஞ்ஜநம் பண்ணிற்று. "தான் சொப்பனக் குடியேறுவதற்கு முன்னே தன்னைக் குடியிருத்தின

யானை; தன் புழைக்கடையிலே ஒரு குப்பைமேனியைப் பிடுங்கினு ரேன்று வஜ்ரத்தைக்கொண்டு தடாருவதோ!'' என்று பிள்ளை யமுத—பணிக்கும்படி. என்னுடைய அபேக்ஷிதம் செய்கைக்காகத் திருநறையூரிலே வந்து நின்றவனைக் காணப்பெற்றேன். ... (எ)

ல—அரு—ஏழாம்பாட்டு. (கட்டேறிதயாதி) கீழ்ப்பாட்டில் - யசோதை தன்மையை ப்ரஸ்தாவித்தாராய், அவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களையும் அவதார ப்ரதா(தா)நப்ரயோஜநத்தையும் இரண்டுபாட்டாலு மருளிச்செய்கிறரென்று ஸங்கதி.

அக்நிதானே மூளமாட்டாதே, மூட்டிவிட வேண்டுவானொருவனென்னை வருளிச்செய்கிறா (துஷ்டேத்யாதி). (தான்) என்றது - அக்நிதானென்ற படி.

(சொப்பன) நன்றாக. ... ... ... ... ... (எ)

மூ.—மண்ணின் மீபாரங் கெடுப்பான் மறமன்னர்
பண்ணின்மேல் வந்த படையெல்லாம் பாரதத்து
விண்ணின் மீதேற விசயன் தேரூர்ந்தானை
நண்ணி நான் நாடி நறையூரில் கண்டேனே. (அ)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மண்ணின்மீ | பூமியின்மேலே (அஸுர வர்க்கத்திலுல்) உண்டான | வந்த | எதிர்த்துவந்த |
| பாரம் | பா(ர)ரத்தை | படை எல்லாம் | எல்லாச்சேனையையும் |
| கெடுப்பான் | அழிக்கைக்காக, | விண்ணின்மீது | வீரஸ்வர்க்கத்திலாக |
| மறம் | கோபத்தையுடையரான | ஏற | போய்ச் சேரும்படி |
| மன்னர் | ராஜாக்களுடைய | பாரதத்து | பாரதயுத்தத்தில் |
| பண்ணின் மேல் | ஸேநாவிந்யாஸத்தோடு கூடி | விசயன் | அர்ஜுநனுடைய |
| | | தேர்ஊர்ந்தானை | தேரைநடத்தினவனை |
| | | நண்ணி | ஆசைப்பட்டு |
| | | நான்நாடி நறையூரில் கண்டேனே. | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (மண்ணின் மீபாரமித்யாதி) எல்லாவற்றையும் பொறுக்கக்கடவ பூமி, "பொறுக்கப்போகிறதில்லை" என்ன; அதினுடைய பா(ர)ரத்தைப் போக்குகைக்காக, மறத்தையுடைய கர்ண துர்யோதநாதிகள் கையு மணியும் வகுத்து மேலிட்டுவந்த பரிகரமடைய மீளவும் அவ்வூரில் போகாதே வீரஸ்வர்க்கத்தை ப்ராபிக்கும்படி, அர்ஜுநனுடைய தேரை நடத்தினவனை. (நண்ணி நான்

நாடி) ஆசையுடையேனுக்கு இட்டி; அவ்வாசைக்கு அநுரூபமாக திருநறையூரிலே காணப்பெற்றேன். ... ... ...

---

அரு—எட்டாம்பாட்டு. (மண்ணித்யாதி) (க) †“నకిఞ్చిత్పర్వతాభా నాభారం సప్తసాగరమ్ । స్వామిద్రోహ మిదంభారం భారం విశ్వాసఘాతకమ్ நகிஞ்சித் பர்வதாபாரம் நாபாரம் ஸப்தஸாகரம் । ஸ்வாமித்ரோஹ மித பாரம் பாரம் விஶ்வாஸபாதகம்” என்கிறத்தை உட்கொண்டருளிச்செய கிறார் (எல்லாவற்றையு மித்யாதி). மண்ணின்மேலே யுத்தப்பண்போடே என்று சப்தார்த்தமா யருளிச்செய்கிறார் (கையுமணியும் வருத்து) என்று.

மூ—பொங்கேறு நீள் சோதிப் பொன்னாழி தன்னோடும்
சங்கேறு கோலத்தடக்கைப் பெருமானைக்
கொங்கேறு சோலைக் குடந்தைக் கிடந்தானை
நங்கோனை நாடி நறையூரில் கண்டேனே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொங்குஏறு | மேன்மேலும் ஸம்ருத்தி அதிசயித்து வாராநின்ற | தடம் கை | பரந்திருந்துள்ள திருக்கைகளையுடைய |
| நீள் சோதி | அபரிச்சிந்நமான தேஜஸ்ஸையுடைய | பெருமானை | ஸர்வேஶ்வரனாய், |
| பொன் | ஸௌந்தரமான | கொங்கு ஏறு | தேன் மிகுத்திருக்கிற |
| ஆழிதன்னோடும் | ஸுதர்சநாழ்வானோடு கூட | சோலை | பொழில்சூழ்ந்த |
| சங்கு | ஶ்ரீ பாஞ்சஜந்யமான | குடந்தை | திருக்குடந்தையில் |
| ஏறு | குடிகொண்டிருக்கிற | கிடந்தானை | கண்வளர்ந்தருளுமவனாய், |
| கோலம் | அழகியதாய் | நம்கோனை | நமக்கு ஸ்வாமியான |
| | | நாடி நறையூரில் கண்டேனே. (௯) | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பொங்கேறு நீள் சோதியித்யாதி) மிகைத்து ஆற்றுப் பெருக்குபோலே ஏறிவாராநின்றுள்ள நிரவதிக தேஜஸ்ஸையுடைத்தாய் ஸ்ப்ருஹணீயமாயிருக்கிற திருவாழியோடே கூட, ஶ்ரீபாஞ்சஜந்யத்துக்கும் குடியிருப்பான அழகிய திருத்தோள்களையுடைய ஸர்வேஶ்வரன். ஆழ்வார்களை யொழியவே வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டும்படியாய்த்து திருத்தோள்களழகிருக்கும்படி. ஆபரணத்துக்கும் ஆபரணம்போலே.

(கொங்கேறு சோலையித்யாதி) பரிமளமாதல், தேனாதல், பரமபதத்திலிருப்பு நித்யஸூரிகளுக்காயிருக்குமாபோலே நமக்குஸ்வாமி

---

(க) † இந்தஶ்லோகத்தை ப்ரத்யந்தரங்களைக்கொண்டு சுத்தமாக்கிக்கொள்ளவேணும்.

யானவனை, நப.க்காகவந்து நிற்கிற திருநறையூரிலே காணப்பெற்றேன். ... ... ... ... ... ... ... (௯)

---

அநு.—ஒன்பதாம்பாட்டு. (பொங்கித்யாதி) (௧) "கொடாதென்கோவலன்" என்கிறபடியே - ஆழ்வார்க்கு க்ருஷ்ணாவதாரமாக அநுஸந்திக்கலாம்படி யிருந்தபடியாலே, கீழ் ப்ரஸ்துதமான க்ருஷ்ணாவதாரத்தை அநுஸந்தித்தவுடனே ஆராவமுதமூற அநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

"நங்கோனை" என்றதுக்குத் தாத்பர்யம் (பரமபதத்தி லித்யாதி). (௯)

மூ.—மன்னுமதுரை வசுதேவர் வாழ்முதலை
நன்னறையூர் நின்றநம்பியை வம்பவிழ் தார்க்
கன்னவிலும் தோளான் கலியனொலி வல்லார்
பொன்னுலகில் வானவர்க்குப் புத்தேளிராகுவரே. (௰)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மன்னு | பகவத்ஸம்பந்தம் மாருதே பொருந்தியிருக்கிற | கல்நவிலும் | கல்லென்றுசொல்லப் படுகிற (த்ருடமான) |
| மதுரை | ஸ்ரீ மதுரையில் | தோளான் | புஜங்களையுடைய |
| வசுதேவர் | வஸுதேவருடைய | கலியன் | ஆழ்வார் [ரான |
| வாழ் | ஜீவநமாகிற வாழ்ச்சிக்கு | ஒலி | அருளிச்செய்த இப் பத்துப் பாசுரங்களை [கள் |
| முதலை | காரணபூதனாய், | | |
| நல் நறையூர் | விலக்ஷணமான திருநறை யூரிலே | வல்லார் | அப்யஸிக்க வல்லவர் |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற | பொன் உலகில் | அழகியதான பரமபதத்தில் (போய்) |
| நம்பியை | கல்யாணகுணபூர்ணனவன் விஷயமாக, | வானவர்க்கு | (அங்குள்ள)நித்யஸூரிகளுக்கு [ராக) |
| வம்புஅவிழ் | பரிமள மலராநின்ற | புத்தேளிர் | தேவர்களாக (பூஜ்ய |
| தார் | மாலையை யுடையராய் | ஆகுவர் | ஆகப்பெறுவர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (மன்னுமதுரை யித்யாதி) ஸித்தாஸ்ரமமாய் ஸ்ரீவாமநனிருந்து தபஸ்ஸுபண்ணி, ஸ்ரீ சத்ருக்நாழ்வான் வன்னியமறுத்துப் படைவீடுசெய்து, ஸர்வேஸ்வரன் தானுகந்து வந்தவத

---

(௧)

ரித்து, ஆணைபடும் அடவிபோலே பசவர்ஸம்பந்தம் மாறாததேசம். (வசுதேவரித்யாதி) ஸ்ரீவஸுதேவருடைய ஸத்தைக்கு நிமித்த பூதனுயுள்ளவனை. இவனைக்கண்டு அத்தாலே உளராயாய்த்துத் திரிவது. (நன்னகரியூரித்யாதி) ஸ்ரீ மதுரையிற்காட்டிலும் மிக்க நன்மையை யுடைத்தான திருநறையூரிலே நிற்கிற கல்யாணகுண பூர்ணனை.

(வம்பவிழ்தாரித்யாதி) செவ்விமாலையையும் அதுக்காஸ்ரயமாய் கல்லென்றுசொல்லப்படும் திண்ணிய தோளையுமுடையரான திருமங்கையாழ்வார் ஒலியுடைத்தாம்படி யருளிச்செய்த தமிழ்த்தொடை வல்லவர்கள், பரமபதத்திலே அங்குள்ள நித்யஸூரிகளுக்குத் தைவங்களாவர்கள். (க) "வைகுந்தன் தமரெமர்" என்றிறே அவர்கள் சொல்லுவது; அவர்களுக்கு ஆஸ்ரயணீய ராவர்கள். ... (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



அரு.—பத்தாம்பாட்டு (மன்னிதயாதி) மன்னுதல் - பொருந்துதலாய், பகவானுல் பொருந்தமுடைமையை யருளிச்செய்கிறார் (வஸித்தேத்யாதி).

(படுகை) உண்டாகை. வாழ்ச்சிக் குறுப்பானபிள்ளை யென்றும், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸ்ரீ வஸுதேவரித்யாதி).

"புத்தேளிர்" என்றதினாச்தம் (தைவங்களாவாகள்) என்றது. (கo)



ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆறும்பத்தில் எட்டாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து ஒன்பதாந்திருமொழி
### பெடையடர்த்தப்ரவேசம்.



வ்யா.—"நான் சென்றுநாடி நறையூரில் கண்டேன்" என்று ஆஸ்ரயணீயவஸ்துவை ஒரு தேசவிசேஷத்தில் போய்க்காண்கை யன்றிக்கே ஸம்ஸாரபூமியிலே திருநறையூரிலே காணப்பெறுகையால் வந்த அலப்ய(ஙூ)லாபத்தாலே ஹ்ருஷ்டரானுர்; "அவனைக்காணப்பெற்ற

(க) தி-வாய்-கo-கூ-கூ.

பின்பு அவன் ஸ்வரூபத்துக்கும் நம் ஸ்வரூபத்துக்கும் அநுரூபமான வ்ருத்தி விசேஷத்தைப் பண்ணப்பார் கிடாய் நெஞ்சே!" என்று திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார். திருநறையூரில் திர்யக்குக்களுமகப்படப் பேடைப்ரதாநமாயாய்த்திருப்பது; ஆகையாலே அங்கு நிற்கிற நம்பிக்கும் பிராட்டி ப்ராதாந்யமுண்டாகக்கடவதே; ஆகையாலே ஆஶ்ரயணீயதை குறைவற்ற தேசமாய்த்து. க்ஷணந்தோறும் ஸுகுமாரராயிருக்குமவர்கள் முகத்திலே நீர் ஏறிட்டுக்கொள்ளுமா போலே ப்ராப்தியளவும் ப்ரபத்தி பண்ணுநிற்பராய்த்து. (க)*ஸக்ருதே(தே)வவுக்கு "ஸஹமஸ்வ" என்று ஆழ்வான் நிர்வஹிப்பதொரு பொருளுண்டிறே; "ஒரு ஜந்மமாக ப்ரபத்தி பண்ணுமது சாலவும் அஸக்ருத்தாயிருந்ததோ? பெறுகிற பேற்றைப் பார்த்தால்" என்றருளிச்செய்தார் எம்பார். பக(ஃ)வல்லாப மொழியப் புறம்பு த(ஃ)ரிக்க வல்லரல்லர், இதொழிய வேறேயுமொரு உபாயமுண்டென்றிருக்குமவரல்லர்; வேறேயுமொரு உபாயமுண்டென்றிருக்கும்படியன்றிறே இதிலுண்டான நிலை. ... ... ... ... *

---

அரு. — பெடையடர்த்த ப்ரவேசம்.—(அநுரூபமான வ்ருத்தி விசேஷத்தை) என்றது- அநந்யபோக்ய(ஃ)த்வாநு குணமான ப்ரபத்தியை என்றபடி. "பெடையடர்த்த" இத்யாதியாலே ஸ்த்ரீ ப்ராதாந்யத்தையிட்டு விசேஷித்ததுக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார் (திருநறையூரிலேயித்யாதி). (உ) *ஏழையேதலனிலே ப்ராப்திக்காக பூர்ணப்ரபத்தி பண்ணினபின்பு, எம்பெருமான் தம்முடைய ஸ்வாதந்த்ர்யத்தாலும் இவருடைய உகந்தருளின நிலங்களில் ப்ராவண்யத்தாலும் இங்கே இன்னும் வைத்துக்கொண்டு அநுபவிக்கத்தேட, அப்படி யநுபவித்துக்கொண்டுவருகிற இவர், ப்ரபத்திக்குக் குறைவற்ற தேசமான மட்டிலே மீளவும் சரணமடைவானென்னென்ன; அந்த ப்ரபத்திதானும் பரமபோக்ய(ஃ)மாகையாலே விடமாட்டாமல் பண்ணுகிறாரென்று பரிஹார மருளிச்செய்கிறார் (க்ஷணந்தோறு மித்யாதி). ஆர்த்த்யதிசயத்தாலே இவ்வாழ்வார் கீழே பலவிடங்களிலும் ப்ரபத்தி பண்ணினராய்த்து; இப்போது போக்யதையாலும் விடமாட்டாதே பலகாலும் ப்ரபத்தி பண்ணுகிறாராய்த்து. ஆனால் "ஸக்ருதேவ இத்யாதி வசநத்துக்கு விரோதியாதோ?" என்னும் ப்ரஶ்நத்திலே, விளம்ப நிஷேதபரமாமித்தனையொழிய இவ்வதிகாரிக்கு ஆவ்ருத்தி நிஷேதமன்றென்றும், ஆவ்ருத்தி நிஷேதபரமானாலும் பக்தி (ஃ)க்கு வேண்டினாப்போலே அநேகஜந்மாவ்ருத்தி வேண்டாமை யாகலாமென்றும் பரிஹா

---

(க) ரா-யு-௧௮-௩௩. (உ) ௫-௮.

ரித்த புடைகளுண்டென்று அருளிச்செய்கிறார் (ஸக்ருதேவவுக்தித்யாதி வாக்ய த்வயத்தாலே). (அஸக்ருத்தாயிருந்ததோ) ஸக்ருத் தென்னலாயிருக்குமன்றோ ப்ரபத்தி என்றபடி. (௧) "జన్మాన్తర సహస్రేషు-ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" இத்யாதி இதுக்கு வேண்டாவோ. திருநறையூரில் கண்ட மட்டிலே அங்கே நினைத்தபடி அநுபவிக்கக்கோலி, ததர்த்தமாக மீளவும் ப்ரபத்தியையொழிய அறியாமையாலே ப்ரபத்தி பண்ணுகிறாரென்று யோஜநாந்தர மருளிச்செய்கிறார் (பகவதித்யாதி வாக்யத்ரயத்தாலே). ... *

மூ.—பெடையடர்த்த மடவன்னம் பிரியாது மலர்க்கமலம்
மடலெடுத்து மதுநுகரும் வயலுடுத்த திருநறையூர்
முடையடர்த்த சிரமேந்தி மூவுலகும் பலிதிரிவோன்
இடர்கெடுத்த திருவாளனிணை யடியே யடைநெஞ்சே. (௧)

| பதம். | உரை. |
|---|---|
| பெடை | பேடையினாலே |
| அடர்த்த | ப்ரணய கலஹத்தில் நெருக்கப்பட்டதாய் (அத்தாலே) |
| மடம் | (அப்பேடைக்கு) பவ்யப்பட்டதான |
| அன்னம் | ஹம்ஸ பக்ஷியானது |
| பிரியாது | (அப்பேடையோடு) விஶ்லேஷியாமல் (எப்போதும்கூடியிருந்து), |
| கமலமலர் | தாமரைப்பூவில் |
| மடல்எடுத்து | இதழ்களைக்கழற்றிப் [போகட்டு |
| மது | தேனை |
| நுகரும் | பாநம்பண்ணுகின்ற |
| வயல் | கழனிகளாலே |
| உடுத்த | சூழப்பட்ட |
| திருநறையூர் | திருநறையூரிலெழுந்தருளியிருப்பவனாய், |

| பதம். | உரை. |
|---|---|
| முடைஅடர்த்த | துர்க்கந்தம் மிக்க |
| சிரம் | ப்ரஹ்ம கபாலத்தை |
| ஏந்தி | கையில்கொண்டு |
| மூவுலகும் | மூன்று லோகங்களிலும் |
| பலி | பி(பி)க்ஷார்த்தமாக |
| திரிவோன் | ஸஞ்சரியாநின்ற ருத்ர[னுடைய |
| இடர் | சாபத்தை |
| கெடுத்த | போக்கின |
| திருவாளன் | ஶ்ரிய:பதியானவனுடைய |
| இணை | ஒன்றோடொன்று ஸத்ருசமான |
| அடி | திருவடிகளை |
| நெஞ்சே | ஓ மநஸ்ஸே! |
| அடை | ஆஶ்ரயிக்கப்பார். |

வ்யா.—முதற்பாட்டு. (பெடையடர்த்த மடவன்னம்) பூவிலே ஸஞ்சரிக்கையாலே பேடைக்குச் சேவலின்பக்கலிலே எப்போதுமொக்க அதிசங்கை வர்த்தியாநிற்குமாய்த்து. பேடையாலே அடர்க்கப்பட்ட மடவன்னமானது. மடவன்னம்போய், அத்தலையித்தலையானபடி; - பல் காட்டுவது, காலைப்பிடிப்பது, இரப்பதாகாநிற்கும்.

(௧) லக்வத்ரிஸ்ம்ருதி-

(பிரியாது) ஒருக்ஷணம் இத்தைவிட்டுப் புறம்புபோகாதே. "இதுக்கு இனியது கொடுவந்து இடவேணும்" என்று மதுபானார்த்தமாகவும் போகாதே. (மலர்க்கமலம் மடலெடுத்து) வேறொருபூவிற்போயன்றிக்கே அந்தப்பூத் தன்னிலேயிருந்து, மது நிரம்பின பூவில்நின்றும், மடலை வாங்கித்தான் ஸேவிப்பது, பேடையை ஸேவிப்பிப்பதாகாநிற்கும்.

இதுவாய்ந்து இவ்வூரில் வயலிருக்கும்படி. உள்ளநிற்கிறவன் எத்தனையேனும் அபிமானிகளுக்கும் புகலாம்படி யிருக்குமவன். (முடையித்யாதி) லோககுருவுமாய் தனக்குப் பிதாவுமாயிருந்தவனுடைய தலையையறுத்து அந்நாலே பாதகியாய், முடைமிக்கிருந்துள்ள - துர்க்கந்தம் மிக்கிருந்துள்ள, ப்ரஹ்மசிரஸ்ஸைத் தரித்து, கூறுசெய்த ஊரிலே கையும் கைத்தலையுமாய்த் திரியும் கூறுசெய்வானைப்போலே, ஈச்வராபிமானியாய் தான் செலுத்திப்போந்த பூமிப்பரப்பெங்கும் பிக்ஷைபுக்குத் திரிந்தானாய்த்து. (இடர்கெடுத்த திருவாளன்) "அருமந்தானொரு மதிப்பன் இப்படி எளிவரவு படுவதே!" என்று திருவுள்ளம் புண்பட்டு, அவனுடைய சாபத்தைப் போக்கினானாய்த்து. அதுக்கடியென்னென்னில்,(திருவாளன்)(க)"ஶ்ரிய நாராயண ஶ்ரீமாந்-தந்த்ர நாராயண ஶ்ரீமாந" என்கிறபடியே ஶ்ரியஃபதியாகையாலே. அவனுடைய (இணையடியே யடைநெஞ்சே) அபிமானிகளும் ஆபந்நானவன்று பற்றும் திருவடிகளை நீ பற்றப்பார். ... (க)

அரு.—முதற்பாட்டு. (பெடையித்யாதி) ஸ்த்ரீதாமமன்றோ மடப்பமென்ன வருளிச்செய்கிறார் (பேடை யித்யாதி). (மடவன்னம் போய்) என்றது - மடவன்னமாயிருக்கைபோய் என்றபடி. இப்படி பவ்யமான சேவல் பிரிய ப்ரஸக்தி ஏதென்ன வருளிச்செய்கிறார் (இதுக்கித்யாதி). பிரியாதேறுகரும் என்கையாலே போக்த்ரு (ஶ்ரீ) ஸாஹித்யத்தை விவக்ஷித்துத், தாத்பர்ய மருளிச்செய்கிறார் (வேறொரு விச்யாதி).

மேலுக்கவதாரிகை (இதுவாய்த்தித்யாதி). இத்தால் - புருஷவஶ்யதையும் ஸ்வயமேவ வத்ஸலனாயிருக்குமென்றும் சொல்லிற்றாய்த்து. (ஆய்த்து) என்றவநந்தரம், ருத்ரனென்று சேஷம். ... . ... (க)

மூ.—கழியாரும் கனசங்கம் கலந்தெங்கும் நிறைந்தேறி
வழியார முத்தீன்று வளங்கொடுக்கும் திருநறையூர்
பழியாரும் விறலரக்கன் பருமுடிகளவை சிதற
அழலாரும் சரந்துரந்தா னடியிணையேயடைநெஞ்சே. (௨)

(க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| கழி | உவர்க்கழிகள் | வளம்கொடுக்கும் | (இப்படி) ஸம்ருத்தியைக்கொடாநின்ற திருநறையூர், |
| ஆரும் | நிறையும்படியாக | பழிஆரும் | மிக்க அபவாதத்தையுடையனாய் |
| கனம் | பெருமைபொருந்திய | விறல் | மிடுக்கனான |
| சங்கம் | சங்குகளானவை | அரக்கன் | ராவணாஸுரனுடைய |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் | பரு | பெருத்த |
| கலந்து | வந்துசேர்ந்து | அவைமுடிகள் | அந்த (பத்துத்) தலைகளும் [யாக |
| நிறைந்து | வரிசை வரிசையாக இருந்து | சிதற | அறுந்து விழும்படி |
| ஏறி | (பின்பு அக்கழிகளில் நின்றும்) மேலே வந்து | அழல் ஆரும் | நெருப்புப்போன்ற |
| வழிஆர | வீதிகள் நிறையும்படி | சரம் | பாணங்களை [ய |
| முத்து | முத்துக்களை | துரந்தான் | ப்ரயோகித்தவனுடை |
| ஈன்று | சுரந்து | அடி இணையே அடைநெஞ்சே! (உ) | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கழியாருமித்யாதி) ஸமுத்ரத்தில் நின்றும் சங்குகளானவை கழிநிறையும்படியாக வந்து புகுருமாய்த்து உப்புநீரில் நின்றும் ரஸித்த ஜலத்துக்காக. (கனசங்கம் கலந்தெங்கும் நிறைந்தேறி) கர்ப்ப கேத(ஃத)த்தாலே ஐப்பசித் திருநாளுக்கு ப்ராணிகள் ஸர்வதோ தி(ஃ)க்கமாக வந்து புகுருமாபோலே, எங்குமொக்கக் கலந்து ஒழுகுமாறுதேவந்து புகுந்து. (வழியார முத்தீன்று) ஊரேற்றின தார்மிகர் அவகாச முண்டாமபடி குறுந்தெருவும் நெடுந்தெருவு முண்டாக்கினார்கள்; இவை ஸஞ்சாரயோக்யதை யில்லாதபடி. வழிகளிலே முத்தை மலையாகச் சுரவாநிற்கு மாய்த்து.

(பழியாரும்) ஜாநகி என்று வாசிபார்க்க மாட்டாமையாலே மிக்க பழியைத் தரித்திருப்பானாய், முன்கை மிடுக்காலே தோன்றினபடி நடந்து திரிகிற ராவணனுடைய தலைகள் சிதறும்படியாக, எதிரிகளை அம்பாய் நலிகையன்றிக்கே நெருப்பாகச் சுடுகிற அம்புகளை நடத்தினவனுடைய. ... ... ... ... ... (உ)

---

**அரு** —இரண்டாம்பாட்டு (கழியாரு மித்யாதி) கீழ்ப்பாட்டில் - தலையறுத்துத் திரிந்தபாதகியையும் அருள்செய்தபடி சொல்லிற்று; அப்படிப்பட்ட குணாதி(ஃ)கனுங்கூட ஸர்வதா (ஃ) (க) "நநமேயம்" என்றால் தலையறுத்து விடுமாகையாலே "நநமேயம்" என்னப்பாராதே, அடைநெஞ்சே

---

(க) ரா-யு-ருசு-கக.

என்கிறுரென்று ஸங்கதி.

"நிறைந்து" என்றதினர்த்தம் (ஒழுகுமாறுதே) என்றது. ... (௨)

மூ.—சுளைகொண்ட பலங்கனிகள் தேன்பாயக் கதலிகளின்
திரைகொண்ட பழம் கெழுமி திகழ் சோலைத் திருநறையூர்
வளைகொண்ட வண்ணத்தன் பின்தோன்றல் மூவுலகோடு
அளைவெண்ணெயுண்டான் றனடியிணையே யடைநெஞ்சே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சுளைகொண்ட | சுளைகளையுடைத்தான | வண்ணத்தன் | வர்ணத்தையுடைய பலராமனுக்கு |
| பலங்கனிகள் | பலாப்பழங்களில் நின்றும் | பின்தோன்றல் | பின்பு (தம்பியாக) அவதரித்தவனாய், |
| தேன்பாய | தேன் வெள்ளமிடாநிற்பதாய், | மூவுலகோடு | மூன்று லோகங்களோடுகூட |
| கதலிகளின் | வாழைமரங்களில் | அளை | கடையப்பட்ட தயிரையும் |
| திரைகொண்ட | பருத்திருந்துள்ள | வெண்ணெய் | வெண்ணெயையும் |
| பழம் | பழங்களானவை | உண்டான்தன் | அமுது செய்தவனுடைய |
| கெழுமி | நெருங்கி | | அடியிணையே அடைநெஞ்சே! |
| திகழ் | விளங்காநின்றதான | | |
| சோலை | சோலைகளையுடைய திருநறையூர், | | |
| வளைகொண்ட | சங்கு வர்ணம்போன்ற | | |

வ்யா.—மூன்றும்பாட்டு. (சுளைகொண்ட வித்யாதி) சுளைமிக்கிருந்துள்ள பலாப்பழமானது தேனொழுக, வாழைகளில் பருத்த பழங்களானவை நெருங்கி விளங்காநின்றுள்ள சோலையாலே சூழப்பட்ட திருநறையூர்.

(வளைகொண்ட வண்ணத்தன்) நம்பி மூத்தபிரானுக்குப் பின் பிறந்தவன். (மூவுலகித்யாதி) பூமிப்பரப்போடே கூட, தயிரையும் வெண்ணெயையும் அமுதுசெய்தவனுடைய திருவடிகளை அடை.

---

அரு —மூன்றும்பாட்டு. (சுளையித்யாதி) ஸர்வாத்மநா "நநமேயம்" என்பாரைத் தலையறுப்பானுயிருந்தவனென்குர் - கீழ்ப்பாட்டில்; அநுகூலர் விஷயத்திலே கரஸ்பர்சமுள்ள த்ரவ்யமல்லது செல்லாதானுயிருப்பானுகையாலே அவனை அடையென்கிறுரென்று ஸங்கதி.

"திரை" என்றதின் பலிதார்த்தம் (பருத்த) என்றது.

"அளை" என்றது - அளையப்பட்டது என்ருய், அதினர்த்தம் (தயிரையும்) என்றது. ... ... ... ... ... ... ... (௩)

மூ.—துன்றொளித் துகில்படலம் துன்னி யெங்கும் மாளிகைமேல்
நின்றார வான் மூடும் நீள்செல்வத் திருநறையூர்
மன்றாரக் குடமாடி வரையெடுத்து மழை தடுத்த
குன்றாரும் திரடோளன் குரைகழலே யடைநெஞ்சே. (௪)

| பதம் | உரை |
|---|---|
| துன்று | நெருங்கி யிருக்கும் படி |
| ஒளி | வரிசையாகக் கட்டப் பட்ட |
| துகில்படலம் | வஸ்த்ரங்களினால் செய்த கொடிகளின் ஸமூஹமானவை |
| மாளிகைமேல் | க்ருஹங்களின் மேலே |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| துன்னி | நிபிடமாய் |
| ஆரநின்று | பரம்பியிருந்து |
| வான் | ஆகாசத்தை |
| மூடும் | மறையாநின்றதாய் |
| நீள் | அபரிச்சிந்நமான |
| செல்வம் | ஸம்பத்தை யுடையதான |

| பதம். | உரை. |
|---|---|
| | திருநறையூர், |
| மன்று ஆர | வெளிநிலமெங்கும் |
| குடம்ஆடி | குடக்கூத்தாடியும் |
| வரை எடுத்து | கோவர்த்தந மலையை யெடுத்து |
| மழை தடுத்த | மழையைப் பரிஹரித்த |
| குன்று ஆரும் | மலையோடொத்ததாய் |
| திரள் | திரண்டிருந்துள்ள |
| தோளன் | புஜங்களை யுடையவனுமானவனுடைய |
| குரை | சப்தியாநின்ற வீரக் கழலையுடைய |
| கழல | திருவடிகளை |
| | அடைநெஞ்சே! (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (துன்றொளி) நெருங்கி ஒழுங்காயிருந்துள்ள துகில்களாலே சமைந்த கொடிகளானவை, மாளிகைகளெங்குமாகப் பரம்பி நெருங்கி, ஆகாசம் தோற்றாதபடி மறைக்கிற நிரவதிக ஸம்பத்தையுடைய திருநறையூர்.

(மன்றாரவித்யாதி) மன்றில் பரப்படையப் பாழ்த்திரும்படி குடக்கூத்தாடி. (வரையெடுத்து) இந்த்ரன் வர்ஷிப்பிக்க மலையை யெடுத்து வர்ஷத்தைப் பரிஹரித்த. (குன்றாரும் திரடோளன்) மலையாலே மலையை யெடுத்தாப்போலே திரண்ட தோளையுடையவன். *

---

அரு. — நாலாம்பாட்டு. (துன்றித்யாதி) ஆஶ்ரித கரஸ்பர்சமுள்ள த்ரவ்யமல்லது செல்லாதவனென்றார் - கீழ்ப்பாட்டில்; அவ்வாஶ்ரிதரிலே விரோதமுண்டானால் தான் மலையெடுத்தாகிலும் விரோதத்தைப் பரிஹரித்தவன்கிடாய், அடை, என்கிறாரென்று ஸங்கதி.

“ஒளி” என்றதினர்த்தம் (ஒழுங்கு) என்றது. துகில்களுடைய, படலத்தாலே - ஸமூஹத்தாலே என்று உட்கொண்டு அருளிச்செய்கிறார்

பெரியதிருமொழி, ௬-ப, ௯-தி, ௫-பா, அகில்குறடும் ௧௧௦௫ (அகில்களாலே) என்று.

ஆர்தல் - பொருந்துசலாய்; குன்மேருடொத்த என்று விவக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (மலையாலே யிதயாதி) (௪)

மூ.—அகில்குறடும் சந்தனமுமம் பொன்னுமணி முத்தும்
மிகக்கொணர்ந்து திரையுந்தும் வியன் பொன்னித்திருநறையூர்
பகல் கரந்த சுடராழிப் படையா னிவ்வுலகேழும்
புகக் கரந்த திருவயிற்றன் பொன்னடியே யடைநெஞ்சே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அகில்குறடும் | தேவதாருக்கட்டைகளையும் | கரந்த | மறைத்த |
| சந்தனமும் | சந்தனக் கட்டைகளையும் | சுடர் | உஜ்ஜ்வலமான |
| அம்பொன்னும் | அழகிய ஸுவர்ணங்களையும் | ஆழி | சக்ரத்தையே |
| அணிமுத்தும் | அழகிய முத்துக்களை | படையான் | ஆயுதமாக வுடையனு, |
| மிக கொணர்ந்து | அதிகமாகத் திரட்டிக் கொண்டுவந்து | இவ்வுலகு எழும் | இந்த ஸப்தலோகங்களையும் |
| திரை | அலைகளானவை | புக | உள்ளே ப்ரவேசிக்கச் செய்து |
| உந்தும் | தள்ளாநின்ற | கரந்த | (ஒருவரு மறியாதபடி) ஒளித்த |
| வியன் | ஆஸ்சர்யகரமான, | திருவயிற்றன் | திருவுதரத்தை யுடையவனு மானவனுடைய |
| பொன்னி | திருக்காவேரியையுடைய | பொன் | ஸௌந்தரமான |
| | திருநறையூர், | அடியே அடைநெஞ்சே! (௫) | |
| பகல் | (பாரதயுத்தத்தில்) ஸூர்யனை | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (அகிலித்யாதி) அகிற்குறடும், சந்தனமும், அப்பொன்னும், அழகிய முக்தையும், போ(ஜி)க்தாக்களளவல்லாதபடி கனக்கக் கொடுவந்து தள்ளாநின்றுள்ள ஆஸ்சர்யமான பொன்னியை யுடைய திருநறையூர்.

(பகற்கரந்த சுடராழிப் படையான்) நிரவதிக தேஜஸ்ஸாலே தேஜஃபதார்த்தத்தை மறைத்தானாய்த்து. ஆதித்யனுடைய தேஜஸ்ஸு கண்ணாலே முகக்கலாம்; திருவாழி யாழ்வானுடைய தேஜஸ்ஸு கண்கொண்டு முகக்கவொண்ணாதபடி யிருக்கையாலே இருண்டு காட்டிற்றாய்த்து. (இவ்வுலகேழும்) லோகங்களேழையும் வயிற்றிலே வைத்து, ப்ரளயம் தேடிவந்தால் "இங்குண்டோ" என்று பண்டையிலு மிளைத்துக்காட்டும் திருவயிற்றை யுடையவன். (பொன்னடியே

யடை) தன்னைப்பற்றினாரை உள்ளேயிட்டுத் தன்னை ப்ரளயத்துக்கு இலக்காக்கி நோக்குமவன் திருவடிகளிலே அடையப்பார். ... (ரு)

---

அரு— அஞ்சாம்பாட்டு. (அகிலித்யாதி) கீழ்ப்பாட்டிலே - ஒரு ஊருக்காக வந்த வர்ஷப்ரளயத்தைப் போக்கினபடி சொல்லிற்றாய், இதில் - லோகத்துக்காகவந்த ப்ரளயத்துக்கு உட்படாதபடி வயிற்றிலே வைத்திருந்தவனென்கிறாரென்று ஸங்கதி.

"வியன்" என்றதினர்த்தம் (ஆஶ்சர்யமான) என்றது.

"பகல்" என்றதினர்த்தம் (ஆதித்யன்) என்றது. தேஜஃ பதார்த்தத்தைக்கொண்டு மறைக்கும்போது இருள்வருவானென்னென்ன வருளிச் செய்கிறார் (ஆதித்யனுடைய வித்யாதி). பொன் - ஸ்ப்ருஹணீயதையாய், அதுக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி). ... ... (ரு)

மூ.—பொன்முத்து மரியுகிரும் புழைக்கைம் மா கரிக்கோடும்
மின்னத்தண்டிரை யுந்தும் வியன்பொன்னித் திருநறையூர்
மின்னொத்த நுண்மருங்குல் மெல்லியலைத் திருமார்பில்
மன்னத்தான் வைத்துகந்தான் மலரடியே யடைநெஞ்சே. (௬)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொன் | பொன்னையும் | மின் ஒத்த | மின்னோடு ஸதருசமாய் |
| முத்தும் | முத்துகளையும் | நுண் | அதிஸூக்ஷ்மமான [ய் |
| அரி | ஸிம்ஹத்தினுடைய | மருங்குல் | இடையையுடையளா |
| உகிரும் | நகங்களையும் | மெல் இயலை | ஸௌகுமார்யத்தை ஸ்வபாவமாக வுடையளான பெரியபிராட்டியை |
| புழை | த்வாரத்தையுடைய | | |
| கை | துதிக்கையையுடைய | | |
| மா | பெரிய [தான | | |
| கரி | ஆனையினுடைய | திருமார்பில் | அழகிய மார்பிலே |
| கோடும் | கொம்புகளையும், | மன்ன | பொருந்தும்படியாக |
| மின்ன | (மேற்கே) மின்னல் கண்டவளவிலே | தான் | தானே [டு |
| | | வைத்து | ஸ்தாபித்துக்கொண் |
| தண் | குளிர்ந்த ஜலத்தினுடைய | உகந்தான் | ஸந்தோஷித்தவனுடைய |
| திரை | அலைகளானவை | மலர் | புஷ்பம்போல் ஸுகுமாரமான |
| உந்தும் | (திரட்டிக்கொண்டுவந்து) ஒதுக்காநின்ற | | |
| வியன்பொன்னித் திருநறையூர், | | அடியே அடைநெஞ்சே! (௬) | |

வ்யா.—அரும்பாட்டு. (பொன்முத்தும்) ஸிம்ஹங்கள் ஆனைகளோடேகூடப் பொருது அதின் மஸ்தகத்தைக் கிழித்து அது உதிர்த்த முத்துக்களையும், மலைகளிலுண்டான பொன்னையும், ஸிம்ஹங்களுடைய உகிரையும், ஆனைக்கொம்புகளையும், ஆற்றுத்தலையிலே மேற்கே மின்ன, தண் திரைகளானது - நீர்வரவானது, கொடுபோந்து தள்ளாநிற்குமாய்த்து.

(மின்னொத்தவித்யாதி) மின்போலே நுண்ணிய இடையையுடையளாய், ஸௌகுமார்யத்துக்குத் தானும் ஒப்பாகாதபடியிருக்கிற பெரிய பிராட்டியாரை, திருமார்வில், (மன்ன)நாம் சென்று திருவடிகளைக் கிட்டினால் அவன் நம்முடைய தோஷங்களைக் கணக்கிடுவானோல் (க) "ந கஶ்சிந் நாபராத்யதி - நகஶ்சிந்நா பராத்யதி" என்று அத்தைப பொறுப்பிக்கும் பிராட்டியை உகந்து எப்போதும் திருமார்விலே வைத்துக்கொண்டிருக்கிறவனுடைய ஸுகுமாரமான திருவடிகளை அடை. மதுப்பில் அர்த்தத்தைச் சொல்லுகிறது. ... (சு)

அரு.—அரும்பாட்டு. (பொன்னித்யாதி) கீழெல்லாம் ஆபத்ஸகத்வாதிகளைச் சொல்லும் புடையாலே நாராயண சப்தார்த்தத்தை அநுஸந்தித்தாராய், இதில் ஸ்ரீமத்பதார்த்தாநுஸந்தாநம் செய்தருளுகிறாரென்று ஸங்கதி.

முத்துக்களுக்கு ப்ரஸக்தி யருளிச்செய்கிறார் (ஸிம்ஹங்களித்யாதி). "புழை" என்று - துளையாய், அப்படிப்பட்ட கையையுடைத்தாய், மா - மஹத்தான, கரிஎன்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (ஆனையித்யாதி). ... ... ... ... ... ... (சு)

மூ.—சீர்தழைத்த கதிர்ச்செந்நெல் செங்கமலத் திடையிடையின்
பார்தழைத்துக் கரும்போங்கி பயன்விளைக்கும் திருநறையூர்,
கார்தழைத்த திருவுருவன் கண்ணபிரான் விண்ணவர்கோன்
தார்தழைத்த துழாய்முடியன் தளிரடியே யடைநெஞ்சே (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தழைத்த | ஸம்ருத்தமான | செங்கமலம் | செந்தாமரையினுடை |
| சீர் | அழகையுடைய [ன | இடை இடை | நடுநடுவே [யவும் |
| கதிர் | கதிர்களை யுடையதா | யில் | |
| செந்நெல் | செந்நெல் பயிரினு | பார் | க்ரமமாக |
| | டையவும் (அதினி | தழைத்த | வளராநின்ற |
| | டையில் முளைத்த) | கரும்பு | கரும்பானது |

(க) ரா-யு-ககரு-சச.

| | | | |
|---|---|---|---|
| ஓங்கி | உயரவெழுந்து | விண்ணவர் | தேவர்களுக்கு |
| பயன் | பலங்களை | கோன் | ஸ்வாமியாய், |
| விளைக்கும் | கொடாநின்ற | தழைத்த | ஸம்ருத்தமான |
| திருநறையூர், | | தார் | பூந்தாரையுடைய |
| தழைத்த | (ஆகாசமெங்கும்)படிந்திருக்கிற | துழாய் | திருத்துழாய் சூடின |
| கார் | மேகம்போன்ற | முடியன் | திருவபிஷேகத்தை யுடையவனுமான |
| திருஉருவன் | அழகிய ரூபத்தை யுடையனாய், | கண்ணன் | க்ருஷ்ணனுடைய |
| பிரான் | உபகாரகனாய், | தளிர் | தளிர்போன்ற |
| | | | அடியே அடைநெஞ்சே! (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (சீர்தழைத்த கதிர்) அழகுமிக்க கதிரையுடைய செந்நெல் - வைத்த கண்மாறாதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படி தர்சநீயமான கதிரையுடைய செந்நெல், அப்படியிருக்கிற தாமரை. (பார்தழைத்துக் கரும்போங்கி) முதல் தன்னிலே கரும்பிடு நிலத்திலே யாய்த்து செந்நெலை நடுவது; அதுக்குக் களையாக இடையிலே தாமரையெழும்; முன்பு வெட்டிப்பொகட்ட கருப்பங் கட்டை பழைய வாஸநை கொண்டெழும்; அது பலிக்க வேணுமென்று அபிஸந்திபண்ணி க்ருஷிபண்ணின செந்நெலுக்கு முன்னே பல(ஃல)த்தைக் கொடுக்கும்.

(கார்தழைத்த வித்யாதி) கழுத்தே கட்டளையாக நீரைப்பருகி, ஆகாசாவகாசம் இடமடையும்படியான வடிவை யுடைத்தாய் துளித்துக்கொடுவந்து தோற்றுகிற மேகம்போன்ற வடிவழகையுடையவன். (கண்ணபிரான்) உபகாரசீலனான க்ருஷ்ணன். (விண்ணவர்கோன்) *அயர்வறு மமரர்களதிபதி. (தார்தழைத்த துழாய் முடியன்) உபயவிபூதி நாயகனென்னுமிடந் தோற்ற வைத்த வளயத்தை யுடையவன். ... ... ... ... ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (சீரித்யாதி) கீழ்ப்பாட்டில் - ஸ்ரீமத் பதார்த்தத்தை அநுஸந்தித்தாராய், * ச(சூ)ரண சப்தத்தாலே உபலக்ஷிதமான விக்ரஹ வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்து, அப்படியாலே, நித்யரோடு அடியாரோடு வாசியற உஜ்ஜீவித்து, அத்தால் க்ருதார்த்தனாய்த் தனிமாலை யிட்டிருக்கு மவனடியை அடையென்கிறாரென்று ஸங்கதி.

"சீர்தழைத்த" என்றது - *செந்நெல் பதத்துக்கும் *கமலப்பதத்துக்கும் விசேஷணமென்றருளிச்செய்கிறார் (அப்படி யித்யாதி). ... (எ)

மூ.—குலையார்ந்த பழுக்காயும் பசுங்காயும் பாளைமுத்தும்
தலையார்ந்த விளங்கமுகின் தடஞ்சோலைத் திருநறையூர்
மலையார்ந்த கோலம்சேர் மணிமாடம் மிகமன்னி
நிலையார நின்றான்றன் நீள்கழலே யடைநெஞ்சே. (௮)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குலை ஆர்ந்த | குலைகளிலே நிறைந்து | சோலை | சோலைகளை யுடைய |
| பழுக்காயும் | பழுத்திருந்துள்ள காய்களும் | | திருநறையூர், [தான |
| | | மலை ஆர்ந்த | மலைபோன்றதாய், |
| பசுங்காயும் | பழுக்கப்போகிற காய்களும் [டான | கோலம்சேர் | அழகியதாய் [விமா |
| | | மணிமாடம் | மணிமயமான கோயி |
| பாளை | பாளைகளிலே யுண் | மிக மன்னி | மிகவும் மனப்பொருத் |
| முத்தும் | முத்துக்களும் | | தமுடையவனாய் |
| தலை | (இளம்) குலைகளும் (ஆகிய இவைகளினால்) | நிலை ஆர | நிலையையுடையனாக (ஸ்த்திரமாக) |
| ஆர்ந்த | நிறைந்திருக்கிற | | |
| இளம் கமுகின் | இளம்பருவமான பாக்கு மரங்களை யுடையதாய் | நின்றான் தன் | எழுந்தருளி யிருக்குமவனுடைய [க்க |
| | | நீள் | போக்ய(ஸௌந்தர்ய)மை மி |
| தடம் | விசாலமான | கழல் | திருவடிகளை |

அடைநெஞ்சே! (௮)

வ்யா.—எட்டாம்பாட்டு. (குலையார்ந்த வித்யாதி). குலைமிக்கிருந்துள்ள பழுக்காயும், (பசுங்காயும் பாளைமுத்தும்) ப்ரதமாவஸ்தையும் சரமாவஸ்தையும் ஒருகாலே கண்டு அநுபவிக்கலாம்படி யிருக்குமாய்த்து. (தலையார்ந்த விளங்கமுகு) தலைநிறைந்திருந்துள்ள.

(மலையார்ந்த கோலம்) மலைபோலே தர்சநீயமான திருமணிமாடக் கோயிலினுள்ளே, அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நிலையார நின்றானாய்த்து. நிற்கிறபோதை அழகைக்கண்டு, "இவனிருத்தல் சாய்ந்தருளுதல் செய்து இவ்வழகை இழக்கவரில் செய்வதென்" என்று அதுக்குத் தானுக்கென்ன வேண்டும்படியா யிருக்கும். மலையொத்த ஓக்கத்தை யுடைத்தாய், அழகையுடைய மணிமாடங்கள் மிகவுடைய திருநறையூரிலே மன்னி நிலையாரநின்றான்.

அநு.—எட்டாம்பாட்டு. (குலையித்யாதி) கீழ்ப்பாட்டிலே - (க) "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய - மாம் சரணம்வ்ரஜ" என்று நின்றநிலையை அநுஸந்தித்தாராய்

(க) கீ-௧௮-௬௬.

அதிலும் வ்யாவ்ருத்தமான நிலையென்று சரணத்வத்துக்கு உடலானபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

பசுங்காயும் பழுக்காயும் என்னவேண்டி யிருக்க, "பழுக்காயும் பசுங் காயும்" என்பா னென்னென்ன வருளிச்செய்கிறார் (ப்ரதமேத்யாதி). (தலை) கீழ்ச்சொன்ன குலைகள்.

கீழே தாத்பர்ய மருளிச்செய்து, சப்தார்த்தம் காட்டுகிறார் (மலையொத்த வித்யாதி). ... .. ... ... ... ... ... (அ)

மூ.—

மறையாரும் பெருவேள்வி கொழும்புகைபோய் வளர்ந்தெங்கும்
நிறையார வான்மூடும் நீள்செல்வத் திருநறையூர்
பிறையாரும் சடையானும் பிரமனு முன் தொழுதேத்த
இறையாகி நின்றான் றன்னிணையடியே யடைநெஞ்சே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| மறைஆரும் | வேதப்ரதிபாத்யமான |
| பெருவேள்வி | மஹாயஜ்ஞங்களிலுண்டான |
| கொழும்புகை | ஸம்ருத்தமான புகையானது |
| வளர்ந்துபோய் | மேலே கிளம்பிப்போய் |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| நிறைஆர | நிறைந்திருந்து |
| வான் | ஆகாசத்தை |
| மூடும் | மறையாநின்றதாய் |
| நீள் செல்வம் | நிரவதிக ஸம்பத்தையுடையதான |
| திருநறையூர், | |
| பிறைஆரும் | சந்த்ரகலையை யுடைத்தான |
| சடையானும் | ஜடையையுடையருத்ரனும் |
| பிரமனும் | ப்ரஹ்மாவும் |
| முன் | முன்னேநின்று |
| தொழுது | ஆஸ்ரயித்து |
| ஏத்த | ஸ்தோத்ரம்பண்ண |
| இறையாகி | ஸர்வாதிகனாய்க்கொண்டு |
| நின்றான்தன் | நின்றவனுடைய |
| இணையடியே அடைநெஞ்சே! (கூ) | |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (மறையாருமித்யாதி) வேதோக்தமான மஹாயஜ்ஞங்களை அநபி(பி)ஸம்ஹிதப(ஃ)லமாக அநுஷ்டியாநின்றுள்ள ப்ராஹ்மணருடைய ஹோமத்திலுண்டான கொழுவிய புகையானது பரப்புள்ள விடமெங்கும்போய், ஆகாசாவகாசத்தை மறைக்கையாலே ஆகாசம் தோற்றாதபடியிருக்கிற நிரவதிக ஸம்பத்தையுடைத்தான.

(பிறையாரும்) ஸாதநவேஷம் தோற்றும்படி ஜடையையும் போக(ஃ)ப்ராதாந்யம் தோற்ற சந்த்ரனையும் தரித்துக்கொண்டிருக்கிற

ருத்ரனும், அவனுக்கு ஜநகனான சதுர்முகனும், ஸ்தோத்ராதிகளைப் பண்ணி ஆஶ்ரயிக்க. (இறையாகிநின்றான்) லோகத்துக்கு ஆஶ்ரயணீயரா யிருப்பார்க்கும ஆஶ்ரயணீயனா யிருக்கையாலே ஸர்வாதிகன்; அவன் திருவடிகளையே ஆஶ்ரயிக்கப்பார். ... ... (௯)

---

அரு. — ஒன்பதாம்பாட்டு. (மறையித்யாதி) கீழ்ப்பாட்டில் - "நிலையாராநின்றான்" என்று அநுஸந்தித்தார், அங்கிலையிலே வந்து, ஆஶ்ரயணீயரென்று ப்ரமிக்கத்தக்க ப்ரஹ்ம ருத்ரர்களும் வந்தாஶ்ரயியாநின்றாக ளாகையாலே, வேறு ஆஶ்ரயணீயரில்லை யென்று நெஞ்சுக்கு அறுதியிடுகிறாரென்று ஸங்கதி.

எங்கும் நிறைந்து, ஆர - பொருந்த என்று சப்தார்த்தமாய், பலிதார்த்த மருளிச் செய்கிறார் (பரப்பிதயாதி). ... ... ... (௯)

மூ·— திண்களகமதிள் புடைசூழ் திருநறையூர் நின்றானை
வண்களக நிலவெறிக்கும் வயல்மங்கை நகராளன்
பண்களகம் பயின்ற சீர்ப்பாடலிவைபத்தும் வல்லார்
விண்களகத் திமையவராய் வீற்றிருந்து வாழ்வாரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திண் | த்ருடமாய் | ஆளன் | ஸ்வாமியான ஆழ்வார் |
| களகம் | சந்தநப்பூச்சை யுடைத்தான | பண்கள் | கானங்களில் |
| மதிள் | ப்ராகாரங்களினால் | அகம் | உள்ளேயிருக்கிற(ஸாரமான) கானத்தி |
| புடை | சுற்றும் | பயின்ற | அருளிச்செய்த [லே |
| சூழ் | சூழப்பட்ட | சீர் | அழகிய |
| திருநறையூர் | திருநறையூரில் | இவைபத்துப் பாடலும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| நின்றானை | எழுந்தருளி யிருக்கும் ஸர்வேஶ்வரன் வி | வல்லார் | அப்யஸிக்குமவர்கள் |
| வண் | அழகிய [ஷயமாக | விண்கள் | ஸ்வர்க்காதி மேலுலகங்களில் |
| களகம் | ஹம்ஸங்களாகிற | | |
| நிலவு | நிலாவினால் | அகத்து | ஶ்ரேஷ்டமான பரமபதத்தில் (போய்) |
| எறிக்கும் | ப்ரகாஶியாநின்ற [ன | | |
| வயல் | கழனிகளையுடைத்தா | | |
| மங்கைநகர் | திருமங்கையென்னும் நகரத்துக்கு | இமையவராய் | நித்யஸூரிகளுடன் கலந்தவர்களாய் |

| | |
|---|---|
| வீற்றிருந்து வேறுபாடுதோற்ற விருந்து | வாழ்வார் பகவதநுபவம் பண்ணிஸஹிப்பர்கள். |

வ்யா.—பத்தாம்பாட்டு. (திண்களக மதிள்புடை) திண்ணிய தாய், சாந்திட்ட மதிள்களாலே சூழப்பட்டிருந்துள்ள திருநறையூரிலே நிற்கிற ஸர்வேஶ்வரனை. வஸ்துவின் சீர்மைக்குத்தக்க அரண் போரு மாய்த்து. அழகியதான அன்னங்களினுடைய ஸஞ்சாரத்தை யாதல், அன்றிக்கே, செந்நெற்கதிர்களினுடைய ஒளியாதல். களக மென்று - அன்னத்துக்குப் பேராய், அலையாகிற நிலவையுடைத் தான வயலாலே சூழப்பட்ட திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹக ரான திருமங்கையாழ்வார். (பண்களகம்) பண்களினுடைய அக மான பண்ணிலே சொன்ன இப்பாடல் பத்தும் வல்லார். (விண் களகத்திமையவராய்) போக (ஷ்ரீX)பூமிகளில் ப்ரதாநமான பரம பதத்திலேபோய் நித்யஸூரிகளோடே ஒரு கோவையாய், அவனை நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள். ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (திண்ணித்யாதி) "களகம்" என்றதினர்த்தம் (சாந்து) என்றது. "அகம்" என்று - உள்ளுக்குப்பேராய், பண்களில் ரஸமான பண்ணுடைய என்றாய், அருளிச்செய்கிறார் (பண்களினித்யாதி). விண்களில்- ஸ்வர்க்காதிகளில், அகம்- ஸாரமாய், அத்தால் ப்ரதாநவிடத்து என்றாய் அருளிச்செய்கிறார் (போகேத்யாதி).... ... ... (௧௦)

---

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆரும்பத்தில் ஒன்பதாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆறாம்பத்து பத்தாந்திருமொழி

## கிடந்த நம்பி ப்ரவேசம்.



வ்யா. — திருவுள்ளத்தைக்குறித்து "திருவடிகளிலே சரணம் புகு" என்றார்; சரணம்புகுகைக் கீடாக இங்கெல்லாம் சரண்யதை குறைவற்றதோவென்ன; "அவனுடைய திருநாமம் கேட்டறிவதில்லையோ?" என்கிறார். ஆஶ்ரித வாத்ஸல்யனாய், அதிமாநுஷசேஷ்டிதங்களை யுடையனாய், விரோதி நிரஸநஶீலனாய், உபயவிபூதி யுக்தனா யிருக்கிற இருப்புக்கு வாசகமான †திருநாமத்தோடே, ஶ்ரிய:பதித்வத்தையும் சேர்த்து அநுபவிக்கிறார். ... ... ... ... *

---

அரு. — கிடந்த நம்பியின் ப்ரவேசம் — கீழ்த்திருமொழிக்கும் இதுக்கும் ஸங்கதியை யருளிச்செய்கிறார் (திருவுள்ளத்தை யித்யாதி). அஜ்ஞரைப்போலேயும் அசக்தரைப்போலேயு மிருக்கும் இந்தத் திருநறையூர நம்பியிடத்தில் சரண்யதை குறைவறச்சொல்லாநின்றீர், இதுக்கு ப்ரமாணமென்னென்னும் ப்ரஶ்நத்திலே, ப்ரதமத்திலே (க) "நான் கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்ற திருநாமத்தை மறந்தாயோ என்று அத்தை ஸ்மரிப்பிக்கிறாரென்று கருத்து. இத்திருமொழியில் ப்ரமேயத்தைச் சேரப் பிடித்தருளிச் செய்கிறா (ஆஶ்ரிதேத்யாதி). ஒன்பதாம்பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (உபயேத்யாதி). ...

மூ—கிடந்தநம்பி குடந்தைமேவிக் கேழலாயுலகை
இடந்தநம்பி யெங்கள் நம்பி யெறிஞராணழியக்
கடந்தநம்பி கடியாரிலங்கை யுலகை யீரடியால்
நடந்தநம்பி நாமஞ்சொல்லில் நமோநாராயணமே. ... (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குடந்தை | திருக்குடந்தையிலே | உலகை | லோகங்களை |
| மேவி | பொருந்தி [கிற | இடந்த | (அண்டபித்தியில் நின்றும்) குத்தியெடுத்த |
| கிடந்த | பள்ளிகொண்டிருக் | | |
| நம்பி | (அழகினால்) பூர்ணனாய், | | |
| கேழலாய் | வராஹ ரூபியாய்க் கொண்டு | நம்பி | (ஸாமர்த்யத்தினால்) பூர்ணனாய், |

---

† (பா)திருமந்த்ரத்தோடே. (க) க-க-க-

| | | | |
|---|---|---|---|
| எங்கள் | ஸம்ஸாரிகளான எங்களுக்கு | நம்பி | (வீர்யத்திலும்) பூர்ணுய், |
| நம்பி | (குறையைத்தீர்க்க வல்ல) பூர்ணனுய், | உலகை | லோகங்களை |
| எறிஞர் | சத்ருக்களுடைய | ஈரடியால் | இரண்டடியாலே |
| அரண் | கோட்டையானது | நடந்த | அளந்துகொண்ட |
| அழிய | அழியும்படியாக | நம்பி | (அத்புதகர்மத்தால்) பூர்ணனை ஸர்வேஶ்வரனுடைய |
| கடியார் | க்ரூரமான ராக்ஷஸர்களுடைய | நாமம் | திருநாமத்தை |
| இலங்கை | லங்கையை | சொல்லில் | சொல்லப்புகில்(அது) |
| கடந்த | ஆக்ரமித்த (அழியச்செய்த) | நமோநாராயணமே | நமோ நாராயண மென்றிருக்கும். (க) |

வ்யா.—முதற்பாட்டு. (கிடந்தநம்பி யித்யாதி) பரமபதத்திற் காட்டிலும் திருப்பாற்கடலிற் காட்டிலும் திருக்குடந்தையிலே பொருந்திச் சாய்ந்தருளினபோதை அழகை, "நிற்றல் இருக்தல்செய்து இழக்கவரில் செய்வதென்?" என்று அநுசவேண்டாதபடி கண்வளர்ந்தருளுகிறபோதை அழகாலே பூர்ணனுனவன்; அண்டபித்தியிலே சேர்ந்த பூமியை இடந்தெடுத்துக் கொண்டேறி, அதுக்கடியான ஸாமர்த்ய்தால் குறைவற்றவன். (எங்கள்நம்பி) ஸம்ஸாரிகளாய்க் குறைவே நிரூபகமாம்படி யிருக்கிற நம்முடைய குறைவு தீர்க்கைக் கடியான ஸௌஶீல்யத்தை யுடையவன்.

(எறிஞரித்யாதி) சத்ருக்களிட்ட அரணழியும்படி க்ரூரரான ராக்ஷஸர் திரண்ட லங்கையை யழியச்செய்து, அத்தால்வந்த வீர்யத்தால் குறைவற்றவன். பரப்புடைத்தான பூமியையடைய இரண்டடியாலே அளந்த அத்புதகர்மத்தால் குறைவற்றவன்; அவனுடைய பேர்சொல்லில், நமோநாராயணமே. ... ... ... (க)

---

அரு — முதற்பாட்டு (கிடந்தவித்யாதி) "குடந்தைமேவி - கிடந்தநம்பி" என்றந்வயித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (பரமேத்யாதி). (ஸௌஶீல்யத்தை) குணஸௌஶீல்யத்தை.

"எறிஞரரணழிய - கடியாரிலங்கை - கடந்தநம்பி" என்றந்வயித்து அர்த்த மருளிச்செய்கிறார் (சத்ருக்களித்யாதி). ... ... (க)

மூ.—விடந்தானுடைய வரவம் வெருவச் செருவில் முனநாள் முன்
தடந்தாமரைநீர்ப் பொய்கைபுக்கு மிக்க தாடாளன்
இடந்தான் வையம் கேழலாகி யுலகை யீரடியால்
நடந்தானுடைய நாமம் சொல்லில் நமோநாராயணமே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விடம்உடைய | விஷத்தையுடைய | தாளாளன் | திருவடிகளையுடையனும், [கொண்டு |
| அரவம் | காளியனென்னும்ஸர்ப்பமானது | கேழலாய் | மஹா வராஹமாய்க் |
| வெருவ | பயப்படும்படி, | வையம் | லோகத்தை |
| முனநாள் | முன் (க்ருஷ்ணாவதார) காலத்தில் | இடந்தான் | (பாதாளத்தில் நின்றும்) குத்தியெடுத்தவனும் |
| செருவில் | யுத்தத்திலே [ன்னே, | | |
| முன் | இடைப்பிள்ளைகள் மு | உலகை | (வாமநாவதாரத்தில்) லோகங்களை |
| தடம் | பரந்திருந்துள்ள | | |
| தாமரை | தாமரைப் பூக்களையும் | ஈரடியால் | இரண்டடியாலே |
| நீர் | ஜலத்தையு முடைத்தான | நடந்தானுடைய | அளந்து கொண்டவனுமானவனுடைய |
| பொய்கை | மடுவிலே [துறந்தி) | நாமம்சொல்லில் | நமோநாராயணமே. (௨) |
| புக்கு | ப்ரவேசித்து (அவனைத் | | |
| மிக்க | மேன்மைபெற்ற | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு (விடந்தானுடைய விதியாதி) கீழ்ச் சொன்னவை திரியட்டும் பின்னுமட்டினபடி. விஷத்தையுடைய காளியன் அஞ்சும்படியாக, யுத்தத்திலே முன்பொருநாளிலே, (௧) * தன்னோராயிரம் பிள்ளைகளுக்கு முன்னே, பரப்புமாறப்பூத்த தாமரைகளையும், நினைத்த வகைகளெல்லாம் விநியோகம் கொள்ளலாம்படியான ஜல ஸம்ருத்தியையுமுடைய பொய்கையிலே போய்ப்புக்கு அவனைத்துறத்தின ஏற்றத்தையுடையவன். (தாளாளன்) திருவடிகளையுடையவன்.

நீருக்கும் சேற்றுக்குமிருபாத வடிவைக்கொண்டு ப்ரளயங்கதை (x) யானபூமியை எடுத்துக்கொண்டேறினான். லோகத்தை இரண்டடியாலே அளந்துகொண்டவனுடைய நாமம். ... (௨)

---

அ௫ —இரண்டாம்பாட்டு. (விடந்தானிச்யாதி) கீழ்ப்பாட்டிற்சொன்ன விரோதி நிரஸநசீலதையை முகாந்தரேண உபபாதித்துக்கொண்டு, கீழ்ச் சொன்ன ஸாமர்த்த்யத்தையும் அத்புத கர்மத்தையும் மீள வநுஸந்திக்கிறார் ஈடுபாட்டாலே என்னும் ஸங்கதி ஸாமே தர்சிப்பிக்கிறார் (கீழித்யாதி). "முனநாள்" என்றத்தோடு "முன்" என்றது புநருக்தமாகாமை, பரப்ர தேசமாக்கி யருளிச்செய்கிறார் (தன்னோரீத்யாதி). ... ... (௨)

---

(௧) பெரி-திரு-௬-௧-௧.

மூ.—பூணாதனலும் தறுகண்வேழம் மறுக வளைமருப்பைப்
பேணான்வாங்கி யமுதங்கொண்ட பெருமான் திருமார்வன்
பாணுவண்டு முரலும் கூந்தலாய்ச்சி தயிர்வெண்ணெய்
நாணாதுண்டான் நாமம்சொல்லில் நமோநாராயணமே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பூணாது | (கட்டுத்தறியிலே சேர்க்கிலும்) சேராத தாய்க்கொண்டு | கொண்ட | (க்ஷீராப்தியில் நின்றும்) கடைந்தெடுத்தவனுமான |
| அனலும் | நெருப்பையுமிழாநின்ற (பெருமூச்சை யுடையதாய்), | பெருமான் | ஸர்வேச்வரனாய், |
| தறு | வட்டமான [ன | திருமார்வன் | பிராட்டியை மார்பிலே யுடையவனாய், |
| கண் | கண்களை யுடையதா | பாணு | பாட்டையுடைத்தான |
| வேழம் | குவலயாபீடமென்னும் யானையானது | வண்டு | வண்டுகளானவை |
| மறுக | வ்யாகுலப் படும்படியாக | முரலும் | சப்தியாநின்ற |
| பேணான் | (அதை) மதியாதே | கூந்தல் | மயிர்முடியையுடைய |
| வளை | (அதினுடைய) வளைந்திருக்கிற | ஆய்ச்சி | யசோதை(சேமித்து வைத்த) |
| மருப்பை | கொம்பை | தயிர் | தயிரையும் |
| வாங்கி | பறித்தும், | வெண்ணெய் | வெண்ணெயையும் |
| அமுதம் | அம்ருதத்தை | நாணாது | (அவளை) மதியாமல் |
| | | உண்டான் | அமுது செய்தவனுமானவனுடைய |
| | | | நாமம்சொல்லில் நமோநாராயணமே. (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பூணாதனலும் தறுகண்) தறியோடே சேரக்கடவதன்றிக்கே, சேர்க்க நினைத்தார் பக்கலிலே நெருப்பையுமிழும்படியாய், ஜாதிப்ரயுக்தமான வட்டணித்த கண்ணையுடைத்தாயிருக்கிற குவலயாபீடமானது கலங்கும்படி, அதினுடைய வளைந்த குவடுகளை, பெரிய ப(ஃ)லத்தையுடையதொரு பதார்த்தமென்று பாராதே அநாதரித்து, வைத்தது வாங்குவாரைப்போலே பறித்தான்; அதுக்குமேலே, கடலைக்கடைந்து அம்ருதத்தை வாங்கி, அது புஜித்தார்க்கு வரக்கடவ ப்ரீதி தனக்குண்டாம்படி யிருந்தான். அதுக்கடி யென்னென்னில்; ஸர்வேச்வரனாகையாலே. (திருமார்வன்) (௧)"ஸ்ரீ

(௧) வி-பு-௧-௯-௧௦௫.

ஶ்ரீ:° ஸர்வதேவாநாம்-பஶுபதாம் ஸர்வதேவாநாம்" என்கிறபடியே - பிராட்டியைத் திருமார்விலே யுடையனாயிருக்கிறவன்.

(பாணுவண்டித்யாதி) சிக்ஷாப(ப)லத்தாலே மதுபாநமத்தமாய், பாடும்போது பண்ணிலே ஆளத்திவையாநின்றுள்ள வண்டுகளையுடைத்தான மயிர்முடியையுடைய. (ஆய்ச்சிதயிர்) யசோதைப்பிராட்டி வைத்ததயிரையும் வெண்ணெயையும் களவுகண்டு அமுதுசெய்யப் புக்கால், அவள் கண்டுபிடித்துக் கட்டுவது அடிப்பதாக நிற்குமிறே; அப்போது "வெண்ணெயைக் களவுகண்டோமென்றால் வருவதோரெளிவரவுண்டோ?" என்றிருக்குமாய்த்து. ... ... ... (ங)

---

அரு. — மூன்றாம்பாட்டு. (பூணித்யாதி) முதற்பாட்டில் விவக்ஷிதமான விரோதி நிரஸநசீலதையும் அத்புத சாரித்ரத்தையும் ஆஶ்ரித ஸுலபத்வத்தையும் ப்ரகாராந்தரேண அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

அனலுகை-ஜ்வலிக்கையாய், அருளிச்செய்கிறார் (சேர்க்க வித்யாதி). பேணான் - பேணாதே - மதியாதே என்றாய், அருளிச்செய்கிறா (பெரிய வித்யாதி). ஈந்த என்றாதே, "கொண்ட" என்றதுக்குத் தாத்பா ப மருளிச் செய்கிறார் (அதுக்கித்யாதி). பெண்ணமக முன் - னும் ஒரு அச்ச சாரித்ரமென்று விவக்ஷித் தருளிச்செய்கிறா (பஶுபதாமித்யா தி) .. (ங)

மூ.—கல்லார்மதிள்சூழ் கச்சிநகருள் நச்சிப் பாடகத்துள்
எல்லாவுலகும் வணங்கவிருந்த வம்மானிலங்கைக்கோன்
வல்லாளாகம் வில்லால் முனிந்தவெந்தை விபீடணற்கு
நல்லானுடைய நாமம் சொல்லில் நமோநாராயணமே. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கல்ஆர் | கல்லாலே கட்டப்பட் [ட | அம்மான் | ஸர்வேஶ்வரனாய், |
| மதிள் | ப்ராகாரங்கள் | இலங்கை | லங்கைக்கு ராஜாவா |
| சூழ் | சூழ்ந்த [ஸத்தை) | கோன் | ன ராவணனுடைய |
| கச்சிநகருள் | காஞ்சீநகரத்தில் (வா | வல்ஆள் | அதி பலிஷ்டமான |
| நச்சி | ஆசைப்பட்டு | ஆகம் | சரீரத்தை |
| எல்லாஉலகும் | ஸகல ப்ராணிகளும் | வில்லால் | தநுஸ்ஸினாலே |
| வணங்க | ஆஶ்ரயிக்கும்படி | முனிந்த | கோபித்து அழித்த |
| பாடகத்துள் | (அங்கே) திருப்பாடகமென்னும் திவ்ய தேசத்தில் | எந்தை | என் ஸ்வாமியாய், |
| இருந்த | எழுந்தருளியிருக்கிற | விபீடணற்கு | ஶ்ரீ விபீஷணாழ்வான் விஷயத்தில் |

| | | |
|---|---|---|
| நல்லானுடைய | ப்ரீதியாகிற நன்மையையுடையனானவனுடைய | நாமம்சொல்லில் நமோநாராயணமே. (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (கல்லார் மதிளித்யாதி) அரணாகப்போரும்படியான மதிளையுடைத்தான திருக்கச்சியை ஆசைப்பட்டுத் திருப்பாடகத்திலே ஸர்வலோகமும் வந்து ஆஶ்ரயிக்கும்படி யிருக்கிற ஸர்வேஶ்வரன்.

(இலங்கையித்யாதி) "இவ்வூர்க்கு நான் நியாமகனல்லேனோ" என்று தர்மாநத்தையுடைய ராவணனுடைய வல்லாண்மையுடைய சரீரத்தை வில்லாலே வேண்டோமென்ற என்னப்பன். (விபீடணற்கு நல்லான்) தமையன் பக்கல் த்வேஷம் மிக்கிருக்குமாபோலேயாய்த்து இவன் பக்கல் ராக(ம்) மிக்கிருக்கும்படி. முதலிகளெல்லார் பக்கல் பண்ணும் பரிவை இவனொருவன் பக்கலிலும் பண்ணினவனுடைய நாமம் சொல்லில். (நமோநாராயணமே) வாத்ஸல்யத்துக்கும் வாசகமிறே.

அரு.—நாலாம்பாட்டு (கல்லாரித்யாதி) முதற்பாட்டில் சொன்ன ஆஶ்ரித ஸௌலப்யத்தை பங்க்யந்தரேண (भङ्ग्यन्तरेण) அருளிச்செய்து கொண்டு, அங்குச்சொன்ன விரோதி நிரஸநத்தை விசேஷித்தருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

ராகம் மிகவிருக்கும் ப்ரகாரமெங்ஙனே யென்ன; (க) "மித்ரபாவேந" என்கிற ஶ்லோகத்தை யுட்கொண்டருளிச் செய்கிறார் (முதலிகளித்யாதி). (க "दोषो यद्यपि तस्य स्यात्" என்றது திருநாமத்தில் தோற்றில்லிறே அவனுடைய நாமமென்னலாவது; அதெங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் (வாத்ஸல்யத்துக்குமித்யாதி). ... ... ... ... ... ... ... (ச)

மூ.—குடையாவரையால் நிரைமுன்காத்த பெருமான் மருவாத
விடைதானேழும் வென்றான் கோவல்நின்றான் தென்னிலங்கை
அடையாவரக்கர் வீயப்பொருது மேவி வெங்கூற்றம்
நடையாவுண்ணக் கண்டான் நாமம் நமோநாராயணமே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன் | முற்காலத்தில் | நிரை | பசுக்கூட்டங்களை |
| குடையா | குடையாகக்கொண்[டு] | காத்த | ரக்ஷித்த |
| வரையால் | கோவர்த்தந மலையினால் | பெருமான் | ஸ்வாமியாய், [சேராத |
| | | மருவாத | (ஒன்றோடொன்று) |

(க) ரா-யு-கஅ-ங.

| | | | |
|---|---|---|---|
| ஏழ்விடையும் | ஏழு ருஷபங்களையும் | பொருது | (அவர்களோடு) யுத்தம்பண்ணி, |
| வென்றான் | (கொன்று) ஜயித்தவனாய், | வெம்கூற்றம் | க்ரூரஸ்வபாவனான ம்ருத்யுவானவன் |
| கோவல் | (இப்போது) திருக்கோவலூரில் | மேவி | (பயப்படாமல்) பொருந்தியிருந்து |
| நின்றான் | எழுந்தருளி யிருக்குமவனாய், | நடையா | இதுவேயாத்ரையாக |
| தென் இலங்கை | தெற்கேயுள்ளலங்கையில்வஸிப்பவராய் | உண்ணக்கண்டான் | (அவ்வரக்கரை)புஜிக்கும்படி ஸங்கல்பித்தவனுமானவனுடைய |
| அடையா | தன்னை ஆஶ்ரயியாதவர்களான | | நாமம் நமோநாராயணமே. (ரு) |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் | | |
| வீய | நசிக்கும்படி | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (குடையாவரை யித்யாதி) வரையைக்கொண்டு நிரையைக் காக்கிறான். மலையெடுத்தானாய் சுமையாயிருக்கை யன்றிக்கே, வர்ஷத்துக்கு ஒரு குடையெடுப்பாரோ பாதியாய்த்து. (பெருமான்) பசுக்களையும் இடையரையும்நோக்கி அவர்களுக்கு நிர்வாஹகனாய் நின்றநிலே. (மருவாத) அஸுராவேசத்தாலே ஒன்றோடொன்று பொருந்தாத ம்ருத்யுஸத்ருசமான ருஷபங்களேழையு மழியச்செய்தான். (கோவலித்யாதி) அதொரு காலவிசேஷத்திலேயாய், பிற்பட்டோம்! என்னவேண்டாதபடி திருக்கோவலூரிலே வந்து ஸந்நிஹிதனானான்.

(தென்னிலங்கை) லங்கையிலுள்ள ராக்ஷஸர் "ஒருவழியாலும் உன்னோடு பொருந்தோம்" என்ன; பின்னை, அவர்களை முடியும்படி பொருதானாய்த்து. (மேவிவெங்கூற்றம்) பண்டு ம்ருத்யு, ராக்ஷஸரைக்கிட்ட அஞ்சியாய்த்திருப்பது; இப்போது, பெருமாள்தோளை அண்டைகொண்டு அத்தாலே பொருந்தி புஜியாநிற்குமாய்த்து. (நடையா) இதுவே ஸ்வபாவமாம்படி பண்ணினவனுடைய நாமம் சொல்லில் நமோநாராயணமே. ... ... ... ... ... (ரு)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (குடையித்யாதி) முதற்பாட்டிற் சொன்ன ஸாமர்த்த்யத்தையும் ஸௌலப்யத்தையும் வேறொருபடியாலே அநுஸந்தியாநின்று கொண்டு, விரோதி நிரஸநத்தையே விடாமல் அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

விடையென்றதே "தான்" என்றதுக்குத் தாத்பர்யம் (ம்ருத்யுவித் யாதி).

அடையாதே யிருக்கிற அரக்கரென்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (ஒரு வித்யாதி).... ... ... ... ... ... ... (ங)

மூ.—கானமெண்கும் குரங்கும் முசுவும் படையாவடலரக்கர்
மானமழித்துநின்ற வென்றியம்மா னெனக்கென்றும்
தேனும் பாலு மமுதுமாய திருமால் திருநாமம்
நானும் சொன்னேன் நமருமுரைமின் நமோநாராயணமே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| கானம் | காட்டிலே வஸியா நின்ற | எனக்கு | எனக்கு |
| | | என்றும் | ஸர்வகாலமும் |
| எண்கும் | கரடிகளையும் | தேனும் | தேன்போலவும் |
| குரங்கும் | குரங்குகளையும் | பாலும் | பால்போலவும் |
| முசுவும் | கோ(ஸ்ரீ)லாங்கூலமென்னும் குரங்குகளையும் [டு | அமுதும் | அம்ருதம்போலவும் |
| | | ஆய | போக்யபூதனானவனுமான |
| படையா | ஸேனையாகக்கொண் | திருமால் | ஸ்ரியஃபதியினுடைய |
| அடல் | பலிஷ்ட்டரான | திருநாமம் | திருநாமமான |
| அரக்கர் | ராக்ஷஸர்களுடைய | நமோநாராயணம் | நமோநாராயணமென் பதை [நானும் |
| மானம் | கர்வத்தை | | |
| அழித்துநின்ற | அழியச்செய்த | நானும் | விஷயாந்தர ஸக்தனான |
| | | சொன்னேன் | சொன்னேன்; |
| வென்றி | ஜயசீலனான | நமரும் | நம்முடையவர்களும் |
| அம்மான் | ஸ்வாமியாய், | உரைமின் | சொல்லுங்கோள்.(சு) |

வ்யா.—ஆறும்பாட்டு. (கானமெண்கு மித்யாதி) இந்த்ராதி தேவதைகள் முதுகிட்டுப் போமதொழிய எதிர்நிற்கமாட்டாதபடி பண்ணும் மிடுக்கையுடையனான ராவணனுடைய துர்மாநத்தைப் போக்குமிடத்தில், இடக்கை வலக்கை வாசியறியாதே என்றும் காட்டிலே வர்த்திக்குமதொழியப் பூசல்கண்டறியாத, எண்கும் - கரடியும், குரங்கையும், முசுவையும் ஸேனையாகக்கொண்டு, திக்பாலாதிகளை அழியச்செய்த மிடுக்கையுடைய ராவணனுடைய துர்மாநத்தைப் போக்கின ஸர்வாதிகன்.

(எனக்கென்று மித்யாதி) எனக்கு ஸர்வவித போக்ய(பூதனு)மான ஸ்ரியஃபதியுடைய திருநாமத்தை. மிது(ன)நமான வேஷமே

காணும் இவர்க்கு ரக்ஷிப்பது;(க)"ரமமாணா வநே த்ரய:-ர்மமாணு வநே த்ரய:" என்னுமாபோலே. (நானும் சொன்னேன்) இதர விஷயங்களி னுடைய பேரையே சொல்லிப்போந்த நானுமன்றே சொன்னேன். †இனி இதுகண்டால் எல்லார்க்கும் சொல்லத் தட்டில்லையிறே; என் னோடு ஸம்பந்தமுடையாரெல்லாரும் இத்தையே சொல்லிப்போருங் கோள். (நமோநாராயணமே) நமக்கு வகுத்தத்தைச் சொல்லிப் போ ருங்கோள். ஆழ்வார்கள் கோஷ்டியில் இதொழிய வேறொரு திரு நாமமுண்டாக நினைத்திருப்பாரில்லை; உண்டாகில், ஆயிரம் என்று திரளச் சொல்லுமித்தனை; (உ)"பேராயிரம் கொண்டதோர் பீடுடை யன்" (ங)"தேவோ நாம ஸஹஸ்ரவாந் - தேவோநாமஸஹஸ்ரவாந்", பல பசுவுடையன் என்னுமாபோலே. ஶ்ருதி வேறொரு திருநாம முண் டாகச்சொல்லுமன்றாய்த்து இவர்கள் வேறொரு திருநாமமுண்டாகச் சொல்லுவது. அந்தர்யாமி ப்ராஹ்மணத்தோடு காரணவாக்யங்க ளோடு வாசியற இத்தையிறே சொல்லுவது. இதொழிந்தவை ஜ்ஞாந சக்த்யாதிகளைப்போலே, இது ஜ்ஞாநாநந்தா(நா) மலத்வாதிகளைபோ லே ஸ்வரூப நிரூபகமாயிருக்கும். ... ... ... ... (அ)

---

அரு. — ஆரும்பாட்டு. (கானமித்யாதி) முதற்பாட்டிற் சொன்ன விரோதி நிரஸநத்தை ஸப்ரகாரமாக அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"கானம்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இந்த்ராதித்யாதி).

மிதுநமான வேஷத்தை ரக்ஷித்தாருண்டோவென்ன வருளிச்செய் கிறார் (ரமமாண இத்யாதி). இருவரும் அந்யோந்யம்கண்டு ஆநந்தித்தாப் போலே, இருவர் சேர்த்தியையும் கண்டு ஆநந்தித்தாரென்று கருத்து. இப்படி யருளிச்செய்ததுக்கு பலிதார்த்த மருளிச்செய்கிறார் (இனி யித்யா தி). "நமரும்" என்ற ச(உம்)காரம்- அநுக்த ஸமுச்சயமாக்கி, (எல்லாரும்) என்றது. "நாராயணமே" என்றுஇத்தை அவதா(தா)ரணமாகச் சொல் லுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (ஆழ்வார்களித்யாதி). "மாத வன்" இத்யாதிகளைச் சொன்னதுண்டாயிருக்க, இல்லையென்பானென் னென்ன வருளிச்செய்கிறார் (உண்டாகி லித்யாதி). அவற்றையும் பல விடங்களி லருளிச்செய்தாலும் அதெல்லா மொருதட்டும், இதொருதட்டு மாகச் சொன்னார்களென்று கருத்து. அப்படியிருக்கச் செய்தவிடமென்

---

† (பா) இனி அதுகண்டால் எல்லார்க்கும் இடக்கடவதிறே.

(க) ரா-பா- க-ருக. (உ) தி-வாய்-அ-ரு-க.

(ங) பார-ஸபா-ருஅ-கக.

கே யென்ன "(பேரி,த்யாதி); "பேராயிரம்" என்று சொல்லியிருக்கவும் உடனே "நாராயணன்" என்று விரும்பினீரே என்று கருத்து. *பேராயிரத்தாலே *பீடுடையருளைக்கு ப்ரமாணம் ( தேவோநாமேத்யாதி ). * நாமஸஹஸ்ரவாக்யத்தாலே தேவனென்றுகருத்து. அதிசய ஹேது வானபடி எங்ஙனேயென்ன (பலவித்யாதி). ஆழ்வார்களிப்படி விரும்புகைக்குக் காரணமென்னென்ன (ப்ருதியித்யாதி). ப்ருதிதானப்படி விரும்பிற்றே யென்ன (அந்தாயாமியித்யாதி) ப்ருதியும் ஆழ்வார்களும் விரும்புகைக்கு இதுக்கு ஏற்றமென்னென்ன வருளிச்செய்கிறார் (இதொழிந்தவை யித்யாதி). .. ... ... ... ... ... ... (௬)

மூ.—நின்ற வரையும் கிடந்த கடலும் திசையு மிருநிலனும்
ஒன்றுமொழியா வண்ணமெண்ணி நின்றவம்மானார்
குன்று குடையாவெடுத்த வடிகளுடைய திருநாமம்
நன்றுகாண்மின் றொண்டீர்சொன்னேன் நமோநாராயணமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நின்ற | ஸ்திரமாகநின்ற | அம்மானார் | ஸர்வாதிகளாய், |
| வரையும் | பர்வதங்களும் [ற | குன்று | மலையை |
| கிடந்த | ஒரேஇடத்தில் கிடக்கி | குடையா | குடையாக |
| கடலும் | ஸமுத்ரமும் | எடுத்த | உத்த(ர)ரித்த[டைய |
| திசையும் | திக்குக்களும் | அடிகளுடைய | ஸ்வாமியுமானவனு |
| இரு நிலனும் | பரந்தபூமியும் (ஆகிய | திருநாமம் | நமோநாராயணம், |
| ஒன்றும் | சிறிதேனும் [இவை) | தொண்டீர் | ஓ! பக்தஜநங்களே! |
| ஒழியாவண்ணம் | பாழாகாதபடி [மேலும்) | நன்று | இனிதாக (உங்களுக்கு) |
| எண்ணி | ஸங்கல்பித்து (மேன் | சொன்னேன் | உரைத்தேன்இடி |
| நின்ற | (ஸ்ருஷ்டித்துக்கொண்டு) இருக்கிற | காண்மின் | கோள். (௭) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (நின்றவரை யித்யாதி) பூமிக்கு ஆணியடித்தாப்போலே பேராதேநிற்கிற குலபர்வதங்களையும், ஈச்வரஸங்கல்பத்தளவும் செல்ல கரையை அதிக்ரமியாதே கிடந்தவிடத்திலே கிடக்கிறகடலும், பராபரவிபாகம் பண்ணுகைக் கீடாயிருக்கிற திக்குக்களும், ப்ராணிகளுக்கு ஸஞ்சார யோக்யதை யுடைத்தாம்படி பரப்புடைத்தான பூமியும், இப்படிப்பட்ட பதார்த்தங்கள் ஒன்றும் குறையவொண்ணாதென்று தன்ஸங்கல்பத்தாலே இவற்றை உண்டாக்கிக் கொடுநிற்கிற ஸர்வேச்வரன்.

(குன்றுகுடையா வித்யாதி) வர்ஷத்தாலே நோவுபடுகிற பசுக்க

ளுக்கும் இடையர்க்கும் ஒரு நோவு வாராதபடி மலையைக் குடையா கக்கொண்டு நோக்கின ஸ்வாமியுடைய திருநாமம். (நன்று காண்மின்) காரணபூதனானவன் பேர் சொல்லுகை ப்ராப்தமிறே. ப்ராப்தம் செய்யப் பார்த்திலிகோளாகில் இனியது நான் வேணுமே, (தொண்டீர் சொன்னேன்) பகவத்விஷயத்தில் கைங்கர்ய ருசியுடையாரெல்லார்க்கும் சொன்னேன், இது செய்யாதார் கேளாதாராமித்தனை. (நமோநாராயணமே) ஸஹஸ்ராக்ஷரீமாலா மந்த்ரமாயிருக்கிறது மல்ல. ... ... ... ... ... ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (நின்ற வித்யாதி) முதற்பாட்டில் ப்ரஸ்துதமான ஆபத்ரக்ஷண ஸாமர்த்த்யத்தைப் பின்னாட்டி யநுஸந்திக்கிற இவர், இதுக்கு ஹேதுத்வேந காரணத்வத்தையு மநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

(பராபரவிபாகம் பண்ணுகை) என்றது - மேற்கே நிற்கிறவன் பரனென்றும், கிழக்கே நிற்கிறவன் அபரனென்றும் பிரிக்கை யென்கை.

"நன்று" என்றது-இனியதென்றாய், அதுக்கு உபபத்தியுடனே கருத்தருளிச்செய்கிறார் (காரணேத்யாதி) "தொண்டீர்" என்று விசேஷிப்பானென், எல்லார்க்கும் சொல்லவொண்ணாதோ வென்ன வருளிச்செய்கிறார் (இதித்யாதி). கைங்கர்ய ருசியில்லாவிடில் திருநாமத்தைத் தாம் சொன்னாலும் கேளார்கள் என்று விசேஷித்தார் என்று கருத்து. (எ)

மூ.—கடுங்கால் மாரி கல்லேபொழிய அல்லேயெமக்கென்று
படுங்கால் நீயே சரணென்றாயரஞ்ச வஞ்சாமுன்
நெடுங்கால்குன்றம் குடையொன்றேந்தி நிரையைச்சிரமத்தால்
நடுங்காவண்ணம் காத்தான் நாமம் நமோநாராயணமே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கடு | க்ரூரமான | சரண் | (எங்களுக்கு) ரக்ஷகன்" |
| கால் | காற்றோடுகூடிய | | |
| மாரி | மேகமானது | என்று | என்று சொல்லி |
| கல் | கல்லே | அஞ்ச | (அம்மழைக்கு) பயப்பட, |
| பொழிய | வர்ஷிக்க, | | |
| எமக்கு | "நமக்கு (இது) | அஞ்சாமுன் | அந்த பயம்கார்யகரமாவதற்கு முன்னமே |
| அல்லே | காளராத்ரியே யாயிருந்தது" | | |
| என்று | என்று | நெடும்கால் | பெரியனவாய் சுற்றுமுள்ள மலைகளோடு கூடிய |
| படுங்கால் | நெஞ்சில்பட்ட காலத்தில்; | | |
| ஆயர் | இடையர் (அப்பொழுது) | | |
| நீயே | "ஸர்வரக்ஷகனான நீயே | குன்றம் | கோவர்த்தந மலையை |

| | | | |
|---|---|---|---|
| ஒன்றுகுடை | ஒரு (அபூர்வமான) குடையாக | நடுங்காவண்ணம் | நோவுபடாதபடி |
| ஏந்தி | தரித்து | காத்தான் | ரக்ஷித்தவனுடைய |
| நிரையை | பசுக்கூட்டங்களை | | நாமம் நமோநாராயணமே. (அ) |
| சிரமத்தால் | ஶ்ரமத்திஞல் | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (கடுங்கால் மாரியித்யாதி) வெட்டிய காற்றையுடைத்தான மாரியானது கல்லை வர்ஷிக்க, (அல்லே எமக்கு) "நமக்கு இது ப்ரளயத்தில் செல்லுகிற ராத்ரியாகாதே!" என்று அவர்கள் நெஞ்சிலே பட்டவளவிலே, "நாங்கள் எங்கள் கார்யத்துக்குக் கடவோமல்லோம், நீ எங்களுக்கு ரக்ஷகனாகவேணும்" என்று இடையரஞ்ச; அந்த அச்சத்தினுடைய கார்யம் பலிப்பதுக்கு முன்னே, நெடியகாலையுடைத்தான மலையைத்தரித்து-பர்யந்தபர்வதங்களையுடைத்தான மலையைத்தரித்து, பண்ணின உபகாரமறியாத பசுக்களை ஶ்ரமத்தாலே நோவுபடாதபடியாக ரக்ஷித்தான். தான் அறிந்த ஆபத்தும் விலக்காமையுமிறே வேண்டுவது ரக்ஷிக்கைக்கு; ஸ்வாபாவிக ஸம்பந்தத்தில் கண்ணழிவில்லையே. ... ... (அ)

---

அரு—எட்டாம்பாட்டு. (கடுங்காலித்யாதி) கீழ்ப்பாட்டில் ஆபத்ரக்ஷணமே பின்னாட்டிற்றென்று ஸங்கதி.

"படுங்கால்" என்றதுக்கு, நெஞ்சிலேஎன்று கூட்டி யருளிச்செய்கிறார் (நமக்கித்யாதி). கால்என்றது - காலத்திலென்றபடி. (க) "పాదాః ప్రత్యన్త పర్వతాః - பாதாঃ ப்ரத்யந்தபர்வதாঃ" என்றத்தை உட்கொண்டு "கால்" என்றத்தை விவரிக்கிறார் (பர்யந்தேத்யாதி). அவர்களைச் சிரமத்தால் காத்தானென்ன வேண்டியிருக்க, "நிரையை" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (தானித்யாதி). இத்தால் - அவர்கள் "சரண்" என்றத்தோடு, பசுக்கள் வெறுமனே யிருந்தத்தோடு வாசியற ரக்ஷித்தானென்கைக்காக இப்படி யருளிச்செய்கிறாரென்று கருத்து. இதுக்கு ஹேது வருளிச்செய்கிறார் (ஸ்வாபாவிகேத்யாதி). ... .. ... (அ)

மூ.—பொங்கு புணரிக்கடல் சூழாடை நிலமாமகள் மலர்மா
மங்கை பிரமன் சிவனிந்திரன் வானவர் நாயகராய
எங்களடிகளிமையோர் தலைவருடைய திருநாமம்
நங்கள்வினைகள் தவிர வுரைமின் நமோநாராயணமே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொங்கு | கிளர்த்தியை யுடைய | கடல் சூழ் | ஸமுத்ரத்திஞல் சூழப்பட்டவளாய் |
| புணரி | அலைகளையுடைத்தான | | |

---

(க) அமரகோ-உ-சஅ.

| | | | |
|---|---|---|---|
| ஆடை | (அதையே) அரைநூல் மாலையாக உடையளான | நாயகராய | நிர்வாஹகனாய், |
| நிலமாமகள் | பூமிப்பிராட்டிக்கும் | எங்கள் | எங்களுக்கு |
| மலர் | கமலப்பூமேல் வஸிக்கிற | அடிகள் | ஸ்வாமியாய், |
| மாமங்கை | பெரியபிராட்டிக்கும் | இமையோர் | நித்யஸூரிகளுக்கு |
| பிரமன் | ப்ரஹ்மாவுக்கும் | தலைவருடைய | ப்ரதாநனானவனுமானவனுடைய |
| சிவன் | ருத்ரனுக்கும் | | திருநாமம் நமோநாராயணம், |
| இந்திரன் | இந்த்ரனுக்கும் | நங்கள் | நம்முடைய |
| வானவர் | (மற்றுமுள்ள) தேவர்களுக்கும் | வினைகள் | பாபங்கள் |
| | | தவிர | தீரும்படியாக |
| | | உரைமின் | சொல்லுங்கோள். (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பொங்குபுணரி யித்யாதி) பலகாலும் இத்தை ஆதரியாநின்றீர், இதுக்கு அர்த்தமென்னென்ன; இன்னதென்கிறார். கிளர்ந்ததிரையை யுடைத்தாயிருக்கிற கடலாலே சூழப்பட்ட மேகலையை யுடையளாயிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டி. (மலர் மா மங்கை) தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பெரியபிராட்டியார். (பிரமனித்யாதி) ப்ரஹ்மா ருத்ரன் இந்த்ரன் துடக்கமான தேவர்களுக்கெல்லாம் நியாமகனாயுள்ளான்.

(எங்களுடையவடிகள்) (க)“[illegible] - அஸ்மத்ஸ்வாமிந்” என்னுமாபோலே. (இமையோரித்யாதி). கீழே - ப்ரஹ்மாதிகளைச் சொல்லிநிற்கையாலே, இமையோர் என்கிறவிடம் நித்யஸூரிகளாய், * அயர்வறுமமரர்களதிபதியுடைய திருநாமம். ஆக, உபயவிபூதியுக்தனென்றபடி. உபயவிபூதியோகத்தைச் சொல்லுகையிறே இதுக்கர்த்தம். ஆக, குறைவற்றாரோடு குறைவற்றாராக ப்ரமித்திருக்கிறாரோடு, குறைவாளரோடு வாசியற எல்லார்க்குமொக்க நிர்வாஹகனாயிருக்கை. (நங்கள் வினைகள்) நீங்கள் அநாதிகாலம் புத்திபூர்வகமாகப் பண்ணினபாபம் தீரும்படி சொல்லப் பாருங்கோள். எண்ணாயிரத்துத் திருவாய்க்குலத்தாழ்வான், நஞ்ஜீயரை, “ப்ரபத்தியாகிறது, புத்திபூர்வம் பண்ணினபாபத்துக்கும் பரிஹாரமாகவற்றோ? ப்ராமாதிகத்துக்கேயோ?” என்ன; “அதினுடைய ப்ரபாவத்தைப்பார்த்தால் புத்திபூர்வத்துக்கும் பரிஹாரமாகவற்று, ஜ்ஞாநம் நடையாடினவிடத்தில் அநுதாபமின்றிக்கேயிராதிறே, ஆகையாலே இவன்

(க) சரணாகதிகத்யம்.

பக்கல் ப்ராமாதிகமல்லது கூடாது, பூர்வாக(ஷ)த்தைப் போக்குகிற இது புத்திபூர்வத்துக்குப் பரிஹாரமாகாது என்னவொண்ணுதே அதில் புத்தி பூர்வமொழிய இல்லாமையாலே." (நமோநாராயணமே) வினையைப் பண்ணுவதாலும் சொல்லவடுப்பது இது. ... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (பொங்கித்யாதி) "வினைகள்" என்று ஸாமாந்யமாயிருக்க, அநாதிபுத்தி பூர்வகங்களென்று ஒதுக்குவானென்னென்ன; ஸம்வாதமுகேந, முன்பெல்லாம் புத்தி பூர்வகங்களும் பின்பெல்லாம் ப்ராமாதிகங்களொழியக் கிடையாதே யென்றருளிச்செய்கிறார்(எண்ணுயிரத் தித்யாதி); ஜ்ஞாநம் பிறந்தவனுக்கு புத்தி பூர்வத்துக்கு ப்ரஸக்தியில்லை, ப்ரஸக்தமானாலும் அர்த்தாத் பூர்வ ப்ரபந்நஸ்மரணம் வாராதிராது, வந்தால் அது தீர்ந்து ப்ராமாதிகமாயே விடும்; ஆகையாலே, ப்ராமாதிகங்கள் அஶ்லிஷ்டங்களாய்ப் போகையாலே, "வினைகள் தவிர" என்னும்போது - அநாதி புத்தி பூர்வகங்களைச் சொல்லுமென்றதாய்த்து. இப்போதும் புத்தி பூர்வகத்தைப் போக்குமென்றதுக்கு நியாமக மென்னென்ன வருளிச்செய்கிறார் (அதிலித்யாதி). (அதில்) பூர்வாக(ஷ)த்தில். (கூ)

மூ.—வாவித்தடம் சூழ் மணிமுத்தாற்று நறையூர் நெடுமாலை
நாவில்பரவி நெஞ்சில்கொண்டு நம்பிநாமத்தைக்
காவித்தடங்கண் மடவார்கேள்வன் கலியனொலிமாலை
மேவிச்சொல்ல வல்லார்பாவம் நில்லா வீயுமே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வாவி | குளங்களினாலும் | கண் | நேத்ரங்களை யுடையரான |
| தடம் | பொய்கைகளினாலும் | மடவார் | ஸ்த்ரீகளுக்கு [ருந்த |
| சூழ் | சூழப்பட்டதாய், | கேள்வன் | (முன்பு) நாயகராயி |
| மணி | ரத்நங்களையும் | கலியன் | ஆழ்வார், [னுடைய |
| முத்து | முத்துக்களையுமுடைய | நம்பி | திருநறையூர் நம்பியி |
| ஆற்று | திருக்காவேரியை யுடையதான | நாமத்தை | திருநாமத்தை |
| நறையூர் | திருநறையூரி லெழுந்தருளியிருக்கிற | நாவில் | நாவினால் |
| நெடுமாலை | ஸர்வாதிகன் விஷயமாக, | பரவி | ஸ்துதித்தும் |
| காவி | கருநெய்தல்போன்ற | நெஞ்சில் | மநஸ்ஸினால் |
| தடம் | விசாலமான | கொண்டு | அநுஸந்தித்தும் |
| | | ஒலி | அருளிச்செய்த |
| | | மாலை | தமிழ்த் தொடையான இப்பத்துப் பாசுரங்களையும் |

| | | | |
|---|---|---|---|
| மேவி | (இதிலே) பொருந்தியிருந்து (அபிநிவேசத்துடன்) | பாவம் | பாபமானது |
| | | நில்லா | நிலைநில்லாது; |
| சொல்லவல்லார் | சொல்ல வல்லவர்களுடைய | வீயும் | உருமாய்ந்துவிடும். |

(௧௦)

வ்யா.—பத்தாம்பாட்டு. (வாவித்தடம் சூழ்த்யாதி) பொய்கைகளையும் அளவுபட்ட நீர்நிலங்களையு முடைத்தாயிருந்துள்ள திருநறையூரிலே வந்துநிற்கிற ஸர்வாதிகனை ஸர்வேஶ்வரனை. நம்பியுடைய திருநாமத்தை நாவாலேபாவி நெஞ்சாலேஅநுஸந்தித்து. (காவியித்யாதி) முன்பு எனக்கு ஏற்றமாக நினைத்திருப்பது இது; இப்போது எனக்குப்பிறந்த செவ்வியும் கண்டீர்கோளே. இப்போது மநோவாக்காயங்கள் மூன்றுக்கும் இதுவே விஷயமானபடி கண்டீர்கோளே. (மேவிச் சொல்ல வல்லார்) இதிலே பொருந்தி இத்தைச்சொல்ல வல்லவர்களுடைய பாபம் இவர்கள் பக்கல் நில்லா. இவர்களைவிட்டுப் போய், பின்னையும்தான் நிற்கையன்றிக்கே நசிக்கும். (க)"ஸுஹ்ருத: ஸாது க்ருத்யாம் - த்விஷந்த: பாபக்ருத்யாம்" என்கைக்கு முதலில்லை. (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு. — பத்தாம்பாட்டு. (வாவியித்யாதி) (எனக்கேற்றம்) அவர்களுக்கு நாயகனென்கை. (செவ்வி) பகவதநுபவமே யாத்ரையாயிருக்கை. கண்டீர்கோளே என்கையாலே - காயிகம். ... ... ... (௧௦)

---

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆறும்பத்தில் பத்தாந்திருமொழி முடிந்தது.

ஆறும்பத்து ஸம்பூர்ணம்.



---

(க) சாட்யாயந சாகை.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஏழாம்பத்து முதல்திருமொழி

## கறவா ப்ரவேசம்.



வ்யா.—(கறவாவித்யாதி). கீழே ஸம்பந்த ஜ்ஞாநம்பிறக்கையாலே கைங்கர்யலாபததுக்குக் கூப்பிட்டார்; நீரிங்ஙனேகிடந்து படுகிறதென், உமக்கு எல்லாம் பெறுகைக்கு உறுப்பாகவன்றோ நாமிவ்வோவிடங்களிலே நிற்கிறதென்று உகந்தருளின நிலங்களில் நிலையைக் காட்ட, இவருமவெல்லாம் பெற்றாராய், க்ருதார்த்தராகிறார்.

அரு —கறவாமட நாகனைப்ரவேசம்.—(க்ஷீழ) என்றது- (க) *பெடையடாததவிலும் - *(உ) கிடந்தநம்பியிலும், என்றபடி. (கூப்பிட்டார) என்றது - இத்திருமொழியில் முதலிரண்டு பாட்டால கூப்பிட்டாரென்கை. (உகந்தருளின நிலங்களிலே) என்றதுக்கு முன்னே, மூன்றாம்பாட்டிலே என்று கூட்டுவது ஆகக் கீழிரணடு திருமொழிகளிலும், திருமந்த்ரத்தையநுஸந்தித்துத் திருவடிகளிலே சரணம் புகுருகையாலே, கைங்கர்ய ப்ராரத்தனை தலையெடுத்து, கூப்பிட்ட கூப்பீடுக்கு ஸமாதாநம்பண்ண, ஸமாஹிதராகிறாரென்று ஸங்கதி சொல்லிற்றாய்த்து. ... ... ...

மூ.—கறவாமடநாகு தன் கன்றுள்ளினைபோல்
மறவாதடியேனுன்னையே யழைக்கின்றேன்
நறவார்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பி
பிறவாமையெனைபபணி யெந்தைபிரானே. (க)

| பதம். | உரை. |
|---|---|
| கறவா | பால்கறக்கப்பெறாத |
| மடம் | ப(ஞ)வ்யமான |
| நாகு | பசுவை [னது |
| தன்கன்று | தன்னுடைய கன்றா |
| உள்ளினைப் போல் | நினைக்குமாபோலே [ன நான் |
| அடியேன் | உனக்கு சேஷபூதனா |
| மறவாது | விஸ்ம்ருதியில்லாமல் |
| உன்னையே | ஸ்வாமியான உன்னையே எப்போதும் (சொல்லி) |
| அழைக்கின்றேன் | கூப்பிடாநின்றேன்; |

| பதம். | உரை. |
|---|---|
| நறவு ஆர் | தேன்மிக்கிருந்துள்ள |
| பொழில்சூழ் | சோலைகள் சூழ்ந்த |
| நறையூர் | திருநறையூரில் |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| நம்பி | கல்யாணகுண பூர்ணனே! |
| எந்தை | எனக்குப் பிதாவாய் |
| பிரானே | உபகாரகனானவனே! |
| எனை | என்னை |
| பிறவாமை | (இனிஸம்ஸாரத்தில்) பிறவாதபடி |
| பணி | செய்தருளவேணும். |

(க) சா-கூ. (உ) சா-க0.

அவ.—அநுபவ விரோதியான ஸம்ஸார ஸம்பந்தத்தைக் கழித்தருள வேணுமென்கிறார். ... ... ... ... ... *

வ்யா.—முதற்பாட்டு. (கறவாவித்யாதி) கறக்கப்பெறாத நாகினுடைய கன்று தன்தாயை நினைக்குமாபோலே. கறவாமடநாகானது, தன்கன்றையுள்ளினாப்போலே, என்று சொல்லநினைத்து, அர்த்தத்துக்குச் சேராமையாலே மிடிபட்டார் பிள்ளையமுதனார்; அதுதான் - அபக்ஷதர்மமாமிறே; ஆகையாலே, பட்டரருளிச்செய்யும்படி - கறவாமடநாகை, தன்கன்றுள்ளினாப்போலே என்று. கறக்கப்பெறாமையாலே, முலைக்கடுப்பால் வந்த நோவுண்டிறே அதுக்கு; அத்தாலே, அவனுடைய ஆற்றாமையெல்லாம் தோற்றுமிறே. (தன்கன்றுள்ளினாற்போல்) என்கையாலே, முலையுண்ணப் பெறாமையால் வந்த நாக்கொட்டுதல் தோற்றுமிறே; அத்தாலே, இத்தலையிலாற்றாமை யெல்லாம் தோற்றுமிறே. கறக்கப்பெறாத நாகினுடைய கன்று, தன்தாயை நினைக்குமாபோலே. (மறவாது) மறக்கைக்கு ஸம்பாவனையுள்ள ஸம்ஸாரத்தே யிருந்தே மறவாதே அநந்யார்ஹனான நான், ஸ்வாமியான உன்னையே சொல்லிக் கூப்பிடாநின்றேன்.

(நறவாரித்யாதி) தேன்மிக்கிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட நறையூரிலே வந்துநிற்கிற கல்யாணகுண பூர்ணனானவனே! (பிறவாமை) பிறக்கை மறப்போடே வ்யாப்தமாயாய்த் திருப்பது. அந்த மறப்பு வருகைக்கிடான பிறப்பு பிறவாமையை நான் பெறும்படி பண்ணி யருளவேணும். (எந்தைபிரானே) கடவ நீயே என்னுடைய விரோதியைப் போக்காவிட்டால்,வேறுசிலர் கடவாருண்டோ? நீயே நினைத்துக் கார்யம் செய்யில் உளேனாய், இல்லையாகில் இல்லையாம்படி அநந்ய கதியாயிருக்கிற நான், ஸ்வாமியான உன்னையே நினைத்துக் கூப்பிடாநின்றேன். என்னுடைய விரோதியை நீயே போக்காவிட்டால், வேறுசிலர் போக்குவாருண்டோ? ... (க)

---

அரு. — முதற்பாட்டுக்கவதாரிகை யருளிச்செய்கிறார் (அநுபவேத்யாதி).

சப்தார்த்தத்தைக் காட்டுகிறார் (கறக்கவித்யாதி). (தாயை) என்றது - அர்த்தவஸித்தார்த்தம். யதாஸ்ருதத்தில் விரோதத்தைக் காட்டிக்கொண்டு, உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (கறவா வித்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே). (அபக்ஷதர்மம்) என்றது - ஆழ்வாருக்கு மெய்

பெருமானுக்கும் தாயாகையும் கன்ருகையும் கூடாதென்கை. இரண்டு தலைக்கும் ஆற்ருமை வேண்டுகையாலே, அதுக்கு உறுப்பாக, "கறவா" என்றும், "தன்" என்றும் விசேஷித்தா ரென்றருளிச்செய்கிருர் (கறக்க வித்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே). "மறவாது" என்றதுக்கு நினைத்துக் கொண்டே என்று சப்தார்த்தம் ஸ்ப்புரிக்கும்படி, கீழ்ச்சொன்ன சப்தார்த்தந்தன்னை மீளவு மருளிச்செய்து அந்வயிக்கிருர் (கறக்கப் பெருதவித்யாதி). நினைத்துக்கொண்டே என்று சொல்லவொண்ணுதோ? "மறவாது" என்றதுக்கு ப்ரயோஜந மென்னென்ன வருளிச்செய்கிருர் (மறக்கைக்கித்யாதி).

பாட்டுக்கெல்லாம் தொகுத்த தாத்பர்ய மருளிச்செய்கிருர் (நீயேயித்யாதி). ... ... ... ... ... ... ... (உ)

மூ.—வற்ரு முது நீரொடு மால்வரை யேழும்
துற்ருக முன் துற்றிய தொல்புகழோனே
அற்றே னடியே னுன்னையே யழைக்கின்றேன்
பெற்றே னருள் தந்திடு மெந்தை பிரானே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வற்ரு | வடியாத | அற்றேன் | உனக்கே அநந்யார்ஹனுய்த் தீர்ந்த, |
| முதுநீரொடு | ஸமுத்ரத்தோடுகூட | அடியேன் உன்னையே அழைக்கின்றேன், | |
| மால் | பெரிய [ளையும் | பெற்றேன் | இப்பெரும்பேற்றை லபித்தேன், |
| வரையேழும் | ஸப்தகுல பர்வதங்க | அருள் | (தேவரீருடைய) க்ருபையை |
| முன் | முன்னே | தந்திடும் | (என்விஷயத்தில்) பண்ணியருள வேணும். (உ) |
| துற்ருக | ஒருபிடியாக | | |
| துற்றிய | (வாரி) விழுங்கின | | |
| தொல் | அநாதியான [னே | | |
| புகழோனே | கீர்த்தியை யுடையவ | | |
| எந்தைபிரானே! | | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வற்ருமுது நீரித்யாதி) இதுதான் மிகையன்ருே, ப்ரளயங்கொண்ட பூமியை நீ எடுத்தது ஆர்கூப்பிட. நீயறிந்த ஆபத்தும் விலக்காமையுமன்ருே வேண்டுவது உனக்கு ரக்ஷிக்கைக்கு. ப்ரளயம்கொண்ட பூமி ஆழ்ந்த வித்தனையல்லது, "என்னை எடுக்கவேணும்" என்றதோ? (வற்ருமுதுநீர்)வற்ருத ஜலத்தையுடைத்தான ஸமுத்ரஜலத்தோடே கூட குலபர்வதங்களேழையும், அதுக்காஸ்ரயமான பூமியையும், ஓாவதாந (ஒருகவளம்)மாக அமுதுசெய்து, இப்

படி பழையதாக நீ ஆர்ஜித்தகுணங்களை, நான் கூப்பிட அஸாரக்ஷணம் தாழ்த்து இழக்கவிறே புகுகிறாய்.

ப்ரளயத்தி லகப்பட்ட பூமியிற் சாட்டில், இவர்க்குண்டான வாசி - அவன் பக்கலிலே வ்யவஸிதனுடையதையும், ஸ்வரூபயாதை யுணருகையும், அநந்யகதிகளாகக் கூப்பிடுகையும். (பெற்றேன்) ஆபந்நனை போதாக என்னுடைய ரக்ஷணத்துக்கு, நான் நாலடி யிடத்தேடாதே உன்னையே சொல்லிக் கூப்பிடுகையாகிற இப்பேறுபெற்றேன். (அருள் தந்திடும்) இனி உன்னுடைய அருளுக்குத் தண்ணீர்த்துரும்பில்லையிறே. நாம் எல்லாம் செய்வோமாக விருக்கச்செய்தே, நீ ஒட்டுகிறிலை யென்னவேண்டாவே. நான் கைவாங்கினேன். அருள் தந்திடு எனக்கு என் குலநாதனே! ... ... ... ... (உ)

அரு —இரண்டாம்பாட்டு (வற்றுவித்யாதி) வைகதியைக்காட்டியருளுகிறார் (இதுதானித்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே). (இதுதான்) கீழில் பாட்டில் கூப்பிடுகைதான். "ஏழும்" என்ற சப்தார்த்தம் (பூமியையும்) என்றது. "தூற்று" என்றதினர்த்தம்- (அவதாரம்). (அவதாரமாக)- ஒருபிடியாக வென்றபடி.

இப்படி அவனுக்குத் தம்முடைய கூப்பீடு மிகையென்றிருந்தாராகில், மீளவும் "உன்னையே யழைக்கின்றேன்" என்கிற தென்னென்ன; அருளிச் செய்கிறார் (ப்ரளயதிலேத்யாதி) வாசிதானென்னென்ன (அவனித்யாதி). "அறந்தேன்" என்றதினர்த்தம் (வ்யவஸிதனுடையதையும்) என்றது. தத்தேகோபாயத்வாத்யவஸாயத்தை யுடையரானவையு மென்றபடி அத்யாஸ்ரூதமான இப்பதத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஆபந்நனை வித்யாதி). "பெற்றேன்" என்றதை - ஸாதநமாக்கி அருள் தரச் சொல்லக்கூடுமோவென்ன; அருளுகிறார் (இனியித்யாதி). விவரணம் நாமித்யாதி). (உ)

மூ —தாரேன் பிறர்க்குன் னருளென்னிடை வைத்தாய்
ஆரேனதுவே பருகிக் களிக்கின்றேன்
காரேய் கடலே மலையே திருக்கோட்டி
ஊரே உகந்தாயை உகந்தடியேனே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உன் அருள் | உன்னுடைய க்ருபையை | அடியேன் | அடியேனிடத்திலே) |
| | | உகந்து | ப்ரீதிபண்ணி (அதிலே) |
| என்னிடை | என் விஷயத்தில் | கார் ஏய் | மேகங்கள் படிந்திருக்கிற |
| வைத்தாய் | பண்ணியருளினாய், | | |
| பிறர்க்கு | அயலார்க்கு | | |
| தாரேன் | (அவ்வருளைக்) கொடுக்கமாட்டேன், | கடலே | திருப்பாற்கடலையும் |
| | | மலையே | திருமலையையும் |

| | | | |
|---|---|---|---|
| திருக்கோட்டியூரே | திருக்கோட்டியூரையுமே | பருகி | அநுபவித்து |
| உகந்தாய் | (வாஸார்த்தமாக) ப்ரீதிபண்ணி யருளினாய்; | ஆரேன் | த்ருப்தி யடையாதவனாய்க்கொண்டு, |
| அதையே | அந்த அருளையே | களிக்கின்றேன் | (அவ்வருளையேபருகி) ஸந்தோஷியா நின்றேன். (ங) |

வ்யா. — மூன்றாம்பாட்டு. (தாரேன் பிறர்க்கித்யாதி) வேறொருவர்க்குக் கொடேன். தேவருடைய ப்ரஸாதத்தை வேறொருவர்க்கு விட்டுக்கொடேன். இவர்கொடாதே யொழிகையாவது என்னென்றால்,† விஷயஸூசகமான உக்தியிருக்கிறபடி. உன்னுடைய கண்ணழிவற்ற க்ருபையை என்பக்கலிலே வைத்தாய். (ஆரேனதுவே பருகி) உன்னுடைய க்ருபையை புஜித்து பர்யாப்தனா யிருக்கையன்றிக்கே, மேன்மேலென அபிநிவிஷ்டனாய்க்கொண்டு உன்னுடைய க்ருபையை புஜித்து அத்தால் வந்த ஹர்ஷத்தாலே ஈருக்கியமாதிகள் தலையிலே அடியிட்டுத் திரியும்படி யானேன்.

(காரேயித்யாதி) என்னை உகந்துவந்த உன்னை, நானுகந்து. மேகங்களாலே நெருங்கியிருந்துள்ள. (கடலே மலையே திருக்கோட்டியூரே யுகந்தாயை) ஸௌபரி, பலவடிவுகொண்டாப்போலே அநேகம் வடிவுகொண்டு, அவ்வோவிடங்கள்தோறும் இனி இதுக்கு அவ்வருகில்லை என்னும்படி வர்த்தியாநின்றான்.... ... ... (ங)

அரு.—மூன்றாம்பாட்டு. (தாரேனித்யாதி) "அருள்தந்திடும்" என்னவே திருப்பாற்கடலுள் கிடந்ததும், திருமலையில் நின்றதும், திருக்கோட்டியூரில் வந்ததும் உமக்காக வன்றோவென்ன; அத்தால்வந்தஹர்ஷத்தாலே களித்து, இனி எமக்கொழிய பிறர்க்கிந்தவருளைக் கொடேனென்று ஹ்ருஷ்டராகிறார் என்று ஸங்கதி.

ப்ரயோஜநாந்தரபரரும் வந்து வணங்கும்படியான ஸர்வ ஸௌஹார்த்தத்தாலே எங்குமிருக்க, இவர் கொடாதொழிகை யாவதென் என்னும் ப்ரஸ்நத்தை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் (இவரித்யாதி). (விஷயஸூசகமான) என்றது - நானே விஷயமுன்னாருளுக்கு; வேறு விஷயம் கிடையாதென்னு மர்த்தத்தைச் சொன்னவென்கை. "அதுவே பருகி ஆரேன்" என்றும், "அதுவே பருகிக் களிக்கின்றேன்" என்றும் உபயத்ர அந்வயித்தருளிச்செய்கிறார் (உன்னுடையவித்யாதி).

"உகந்து, உகந்தாயை" என்று, அடியேனுக்கு உகந்து வர்த்திக்கிறு

† (பா) ஹர்ஷஸூசமான.

யென்று அந்வயித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (என்னை யித்யாதி). "கடலே" "மலையே" "ஊரே" என்ற அவதா(தா)ரணங்களுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (ஸௌபரிஇத்யாதி). ... ... ... (௩)

மூ —புள்வாய்பிளந்த புனிதா வென்றழைக்க
உள்ளே நின்றென்னுள்ளம் குளிருமொருவா
கள்வா கடல்மல்லைக் கிடந்த கரும்பே
வள்ளாலுன்னை யெங்ஙனம் நான் மறக்கேனே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புள் வாய் | பக்ஷியாகிய ப(ப)கா ஸுரனுடைய வாயை | கள்வா | அறியவொண்ணாத (ஸ்வபாவத்தையுடைய)வனே! |
| பிளந்த | கிழித்துப்பொகட்ட | கடல்மல்லை | திருக்கடல் மல்லையில் |
| புனிதா | பரிசுத்தனே! | கிடந்த | பள்ளிகொண்டிருக்கிற |
| என்று அழைக்க | என்று (நான்) கூப்பிடாநிற்க, | கரும்பே | போக்யபூதனே! |
| உள்ளேநின்று | என் ஹ்ருதயத்திலேயிருந்து | வள்ளால் | உதாரனை |
| என்உள்ளம் | என்மநஸ்ஸு | உன்னை | உன்னை |
| குளிரும் | குளிரும்(தாபமாறும்) படியா யிருக்கிற | நான் | நான் |
| ஒருவா | அத்விதீயனே! | எங்ஙனம் | எந்த உபாயத்தினால் |
| | | மறக்கேன் | மறக்க சக்தனாகிறேன்? (ஒருநாளும் மறவேன்). (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (புள்வாய்பிளந்த) பகாஸுரனுடைய வாயைக் கிழித்து, ஆஸ்ரிதவிரோதியை, ஆளிட்டு அந்திதொழாதே, தானே கைதொட்டுப் போக்கினனென்னும் சுத்தியை யுடையனாயிருக்கிறபடி. (புள்வாய்பிளந்த புனிதா) என்றாய்த்து இவர் கூப்பிட்டது. பின்னை அவன் செய்ததென்னென்னில்; (உள்ளேநின்று) புறப்பட்டுவந்து தோற்ற இவர்க்குப் பற்றாதென்று பார்த்து, ஹ்ருதயத்திலேநின்று, கமர் பிளந்திடமெங்கும் வவ்வலிடும்படி பண்ணினனாய்த்து.

(கள்வா) ஆஸ்ரிதவிஷயத்தில் இவன் செய்யுமவை பரிச்சேதிக்கப் போகாதாய்த்து. (கடல்மல்லைக்கிடந்த கரும்பே) திருக்கடல் மல்லையிலே வந்து சாய்ந்தருளின பரமரஸிகனே! "கரும்பே" என்கிறது - கைதொட்டு நெருக்குதலால் வரும் செவ்வியழிகை யின்றிக்

கேயிருக்கை. (வள்ளால்) (க) “தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் - தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்” என்கிறபடியே, தன்னுடைய வடிவழகை முற்றூட்டாக ஸர்வஸ்வதாநம் பண்ணினபடி. (உன்னை எங்ஙனம் நான் மறக்கேனே) மஹோபகாரகனாயிருக்கிற உன்னை, உன்னுடைய உபகாரம் கொண்டிருக்கிற நான், எத்தைச்சொல்லி மறப்பது. ... ... ... ... ... ... (ச)

அவ.—நாலாம்பாட்டு (புள்ளியாதி) கீழ்ப்பாட்டில்-உகப்பு தலைமண்டையிட்டபடி சொல்லிற்று; அது செசட்டை மறக்கத்தேட, மறவாதபடி உள்ளே புகுந்து வலிக்கையாலே மறக்க விரகில்லை என்கிறார் என்று ஸங்கதி.

மேலுக்கவதாரிகை (புள்வாயித்யாதி) (புறப்பட்டு) புறம்பேயிருந்து என்றபடி.

(ரஸிகன்) என்றது - ரஸ: அஸ்யாஸ்தி என்கிற மதுப்பின் மேலே க(ட்)ப்ரத்யயமாய் ரஸவானென்றபடி. பாலே என்றதே, “கரும்பே” என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கரும்பித்யாதி). கைபட்டால் திரிகுகபோமே பாலாகிலென்று கருத்து.... ... .. (ச)

மூ.—வில்லேர் நுதல் வேல் நெடுங்கண்ணியும் நீயும்
கல்லார் கடுங்கானம் திரிந்த களிறே
நல்லாய் நரநாரணனே யெங்கள் நம்பி
சொல்லாயுன்னை யான்வணங்கித் தொழுமாறே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கல்லார் | கற்கள் நிறைந்ததாய் | திரிந்த | ஸஞ்சரித்த |
| கடும் | (துஷ்ட ம்ருகங்களினால்) அதிக்ரூரமாயிருக்கிற | களிறே | மத்தகஜமே! |
| கானம் | காட்டிலே, | நல்லாய் | ஆச்ரிதவாத்ஸல்யமாகிற நன்மையுடையவனே! |
| வில்லேர் | தநுஸ்ஸோடொத்த | நரநாரணனே | (ப்ரஜைகளுக்காக) நரநாராயணவதாரம் பண்ணினவனே! |
| நுதல் | நெற்றியையும் | | |
| வேல் | வேல்போன்றதாய் | | |
| நெடு | நீண்டுமிருக்கிற | | |
| கண்ணியும் | கண்களையுமுடையளான பிராட்டியும் | எங்கள் | எங்களுடைய (குறை தீரும்படியான) |
| நீயும் | அவளுக்கு வல்லபனான நீயுமாக | நம்பி | பூர்ணனே! [ன்னை |
| | | உன்னை | ஸர்வஸ்வாமியான உ- |

(க) கடோப-க-உ-உரு.

| | |
|---|---|
| யான் வணங்கி — சேஷபூதனை நான் திருவடிகளிலே விழுந்து | தொழும்ஆறு — ஆஸ்ரயிக்கும் ப்ரகாரத்தை சொல்லாய் — அருளிச்செய்ய வேணும். (ரு) |

வ்யா. — அஞ்சாம்பாட்டு. (வில்லேர்நுதலித்யாதி) வில்லோடொத்த நுதலையும், வேலோடொத்த கண்களையுமுடையளுமாய், உனக்குங்கூட ஆகர்ஷகமான ஸௌகுமார்யத்தை யுடைய பெரியபிராட்டியாரும், அவள்தானும் கூடத் துணுக்குத் துணுக்கென்னும்படியான ஸௌகுமார்யத்தையுடைய நீயும், துஷ்டஸத்வ ப்ரசுரமாய், ஸஞ்சார யோக்யதையில்லாத காட்டிலே, ஒருகளித்த ஆனை, பிடியோடேகூட ஸ்வைரமாக ஸஞ்சரிக்குமாபோலே, (க) * ஆள்பார்த்துழிதருவானாய்க்கொண்டு திரிந்தவன்.

(நல்லாய்) ப்ரஜைகள் விஷயத்தில், அவர்கள் தங்களில் காட்டிலும் வத்ஸலனாயிருக்குமவனே!. (நாராயணனே) ஸ்தநந்தய ப்ரஜைக்காகக் குடிநீர் குடிக்கும் தாயைப்போலே, இவர்களுக்காகத் தபஸ்ஸு பண்ணுமவனே! (எங்கள் நம்பி) குறைவாளரான எங்கள் குறையை †நிரப்புகைக்கீடான பௌஷ்கல்யத்தை யுடையவனே! (சொல்லாய்) "உன்னுடைய கைங்கர்யத்துக்கு விரோதிகளை நானே போக்கித்தருகிறேன், அஞ்சாதே கொள்," என்று (உ) "மாஶுச:- மாசுச:" என்றாப்போலே ஒருவார்த்தை யருளிச்செய்யவேணும். (ந) "ஸர்வபூதேப்ய: அபயம் ததாமி-ஸர்வபூதேப்ய: அபயம் ததாமி" என்றாப்போலே யிருப்பதொரு வார்த்தை அருளிச்செய்யவேணும். ... ... (ரு)

அரு. — அஞ்சாம்பாட்டு. (வில்லேரித்யாதி) கீழ்ப்பாட்டில் மறக்க விரகில்லாதபடி அநுபவித்தபடி யருளிச்செய்தார்; அவ்வநுபவ ஜநித ப்ரீதியால் கைங்கர்யம் பண்ணும் விரகை எனக்கருளிச் செய்யவேணுமென்று ப்ரார்த்திக்கிறாரிங்கென்று ஸங்கதி.

"கடும்" என்றதுக்குத் தாத்பர்யம் (துஷ்ட ஸத்வப்ரசுரமாய்) என்றது. "கல்லார்" என்றதுக்குத் தாத்பர்யம் (ஸஞ்சாரேத்யாதி).

(அவர்கள் தங்களில் காட்டில்) ப்ரஜைகளுடைய மாதாபிதாக்களைக் காட்டில் என்றபடி. (தபஸ்ஸாவது) சிஷ்யாசார்யக்ரம மநுஷ்டிக்கை.

மூ.—பனியேய் பரங்குன்றின் பவளத்திரளே
முனியே திருமூழிக்களத்து விளக்கே

(க) ச-திரு-சுO. (உ) கீ-கஅ-சுசு. (ந) ரா-யு-கஅ-நந.
† (பா) போக்குகைக்கீடான.

இனியாய தொண்டரோம் பருகின்னமுதாய
கனியே உன்னைக்கண்டு கொண்டுய்ந்தொழிந்தேனே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பனியேய் | பனியினால்ப்ரசுரமாய் | விளக்கே | ஸ்வயம்ப்ரகாசனே! |
| பரம் | ஸ்ரேஷ்ட்டமா யிருந்துள்ள | இனியாய | போக்யபூதனே! |
| குன்றின் | ஹிமவத் பர்வதத்திலுள்ள திருப்பிரிதியிலெழுந்தருளியிருக்கிற | தொண்டரோம் | அடிமைபூண்ட நாங்கள் |
| | | பருகு | பாநம்பண்ணுகைக்கு யோக்யமாய் |
| பவளம் திரளே | பவளக்கொடியின் திரள்போல் ஸுந்தரனானவனே! | இன் அமுதாய | மதுரமான அம்ருதம் போன்றவனே! |
| முனியே | (ஆஸ்ரிதருடைய ஹிதத்தைச்)சிந்திக்குமவனே! | கனியே | பழுத்த பழம்போன்றவனே, [னை |
| | | உன்னை | இப்படிப்பட்ட உன் |
| திருமூழிக்களத்து | திருமூழிக்களமென்னும் திவ்யதேசத்திலெழுந்தருளியிருக்கிற | கண்டுகொண்டு | ஸாக்ஷாத்கரித்து |
| | | உய்ந்துஒழிந்தேன் | உஜ்ஜீவிக்கப்பெற்றேன். (சு) |

வ்யா.—ஆறும்பாட்டு. (பனியேய்பரங்குன்றித்யாதி) பனி மிக்கிருந்துள்ள ஹிமவானில் திருப்பிரிதியிலே, ஸர்வைஸ்ஸ்ப்ருஹணீயனாய்க்கொண்டு ஸந்நிஹிதனானவனே! (முனியே) இச்சேதநர் அறியாதிருக்கச் செய்தே எப்போதுமொக்க இவர்களுக்கு ஹிதத்தை அநுஸந்திக்குமவனே; (திருமூழிக்களத்து விளக்கே) திருமூழிக்களத்திலே வந்து உன்னுடைய ஸ்வரூப ரூப குணங்களுக்கு நீயே ப்ரகாசகனாய்க்கொண்டு நிற்கிறவனே!

(இனியாய்)இனிமைக்கு ப்ரகரசத்தைப் பண்ணுகையன்றிக்கே, இனிமை தானாயிருக்கை. (தொண்டரோம்பருகு) என்று, தேவர்கள் பருகும் அம்ருதம்போலன்றிக்கே,கைங்கர்ய ருசியுடையராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் பருகும் அம்ருதமாய்,அப்போதே எடுத்து நுகரலாம்படி கனிபோலே யிருக்கிறவனே! (உன்னைக் கண்டுகொண்டு) காணப்பெறுமையாலே (க) "ஸந்தமேநம்- அஸந்நேவ" என்கிறபடியே உருமாய்ந்த நான் கண்டு உஜ்ஜீவிக்கப் பெற்றேன். ... ... (சு)

(க) தை-ஆ-சு-க.

அரு.—ஆறாம்பாட்டு. (பணியித்யாதி) "சொல்லாய்" என்னுகின்றீர், வடதிசைக்கு ‡அளவான திருப்பிரிதி தொடக்கமாகவந்து நிற்க, (க) "ஶ்ரீரங்காக்ர இதஸ்ஸ்திதி: - ஸ்ரீரங்காக்ர இதஸ்ஸ்திதி:" என்னுமாபோலே பலவிடங்களி லிருப்பது அடிமைகொள்ளவே யன்றோவென்ன; அப்படியாமென்று சொல்லி ஹ்ருஷ்டராகிறார் என்று ஸங்கதி.

†பணியென்று சொல்லும்படியாய், ஶ்ரேஷ்டமான பர்வதமென்றருளிச்செய்கிறார் (பணியித்யாதி). (சேதநர்) என்றவநந்தரம் "ஹிதத்தை" என்று சேஷம். ... ... ... ... ... ... ... (சு)

மூ.—கதியேலில்லை நின்னருளல்ல தெனக்கு
நிதியே திருநீர்மலை நித்திலத்தொத்தே
பதியே பரவித்தொழும் தொண்டர் தமக்குக்
கதியே உன்னைக்கண்டு கொண்டுய்ந்தொழிந்தேனே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நின் அருள் அல்லது | உன்னுடைய க்ருபையொழிய | தொத்தே | மாலைபோன்றவனே! |
| எனக்கு | எனக்கு | பதியே | (ஆஶ்ரிதர்க்கு)இருப்பிடமானவனே! |
| கதியேல் | (வேறு) உபாயமோவென்றால் | பரவி | ஸ்தோத்ரம்பண்ணி |
| இல்லை | கிடையாது; | தொழும் | ஆஶ்ரயியாநின்ற |
| நிதியே | நிதிபோல் அநுபாவ்யனானவனே! | தொண்டர்தமக்கு | அடியார்க்கு |
| திருநீர்மலை | திருநீர்மலையிலே | கதியே | ப்ராப்யனானவனே! |
| நித்திலம் | முத்தினுடைய | உன்னைக் கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேன். | (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (கதியேலில்லை) கதியாகிலும் உன்னுடைய ப்ரஸாதமொழிய எனக்கு வேறொன்றில்லை. (கதி) என்றது - புகலென்றபடி. ப்ராப்யமாகிலும் உன் திருவடிகளை யொழிய வேறொன்றில்லை. நான் அநந்யகதி. (நிதியே) வைப்பானதநமே! (திருநீர்மலை) திருநீர்மலையிலே வந்து, முத்துமாலையை உடம்பிலே அள்ளி எறட்டுக்கொள்ளுமாபோலே குளிர உடம்பிலே எறட்டு அணைத்துக்கொள்ளலாம்படி யிருக்கிறவனே!

(பதியே) ஆஶ்ரிதர்க்கு வாஸஸ்த்தாநமாயுள்ளவனே! (பரவித்தொழும்) அடைவுகெட ஏத்தித்தொழும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ராப்யனுயுள்ளவனே! அன்றிக்கே, (பதியே பரவித்தொழுந் தொண்டர்)

(க) ‡ அளவான-எல்லையான.
† இவ்வரும்பதத்துக்கு "பணியே" என்று பாடமிருக்கலாம்.

என்று, என்னோடு ஸகோத்ரிகளாய், (க) "தானுகந்த வூரெல்லாம்" என்கிறபடியே, உகந்தருளின நிலமெல்லாம் புக்கு அநுபவிக்குமவர்களுக்கு ப்ராப்யனாயுள்ளவனே! (உன்னைக்கண்டுகொண்டு) நீ உகந்தருளின நிலங்களிலே வந்து ஸந்நிஹிதனானகையாலே, உன்னைக்கண்டுகொண்டு உஜ்ஜீவிக்கப்பெற்றேன். ... ... ... ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (கதியித்யாதி) கீழ்ப்பாட்டில் பிறந்த போக்ய (த்வ)தாநுஸந்தாநத்தாலே யுண்டான உகப்பின்மிகுதியாலே, நீயே எனக்கு ப்ராப்யமும் ப்ராபகமுமாகப் பெற்றேன் என்று க்ருதார்த்ததாநுஸந்தாநம் பண்ணுகிறாரென்று ஸங்கதி.

"கதி" பதத்துக்கு ப்ராபகத்வ விவக்ஷயா கீழருளிச்செய்து, ப்ராப்யத்வ விவக்ஷயா வருளிச்செய்கிறார் (ப்ராப்யேத்யாதி). "கித்திலம்" என்றது - பனிஸ்த்தலமென்றாய், அதினர்த்தம் (முத்து) என்றது. "தொத்து" என்றதினர்த்தம் (மாலை) என்றது.

பதியே-திருப்பதிகளையே, பரவித்தொழும் தொண்டரென்று, யோஜநாந்தரம் (அன்றிக்கே யித்யாதி). ... .. ... ... (எ)

மூ.—அத்தாவரியே யென்றுன்னை யழைக்கப்
பித்தாவென்று பேசுகின்றார் பிறரென்னை
முத்தே மணி மாணிக்கமே முளைக்கின்ற
வித்தே உன்னை யெங்ஙனம் நான் விடுகேனே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அத்தா | ஸ்வாமியே! | மணி | ஸ்லாக்யமான |
| அரியே | விரோதி நிரஸநசீல[னே!] | மாணிக்கமே | மாணிக்கம்போல் ஸுலபனே! |
| என்று | என்றுசொல்லி | முளைக்கின்ற | (பல(ஷ)ல பர்யந்தமாம்படி) முளையாநின்ற |
| உன்னை | உன்னை | வித்தே | விதைபோன்றவனே! |
| அழைக்க | (நான்) கூப்பிட, | உன்னை | ஏவம்விதனான உன்னை [நான்] |
| பிறர் | அயலார் | நான் | உன் ஸ்வபாவமறிந்த |
| என்னை | இப்படி கூப்பிடுகிறவென்னை | எங்ஙனம் | எவ்விதமாக |
| பித்தாஎன்று | பித்தனே (ப்ரா(ஞ்)ந்தனே)! என்று | விடுகேன் | விட சக்தனாவேன்? |
| பேசுகின்றார் | சொல்லுகிறார்கள்; | | |
| முத்தே | முத்துப்போல் குளிர்ந்தவனே! | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (அத்தாவரியே யித்யாதி) என்ஸ்வாமியே! என்னுடைய விரோதியைப் போக்கினவனே! என்று உன்னை

(க) திருநெ-சு.

நான் சொல்லிக்கூப்பிட. (பித்தாவென்று) அத்தாவென்று அஸங்கத பாஷணம் பண்ணிக் கூப்பிடாநின்றான்; இவன் பித்தனாயிராநின்றான், என்னாநின்றார்கள், "இவர்கள் அஸங்கதபாஷணம் பண்ணாநின்றார்கள், பிச்சராயிராநின்றார்கள்" என்று நான் நினைத்திருக்குமவர்கள் என்னை.

பிறரென்னைப் பேசாநின்றார்களென்று கைவிடலாம்படி யிருக்கிறாயல்லையே நீ. (முத்தே) முத்துப்போலே ஶ்ரமத்தைப் போக்குமவனே! பெருவிலையனான மாணிக்கம்போலே யிருக்கிறவனே! ப(ஃ)லத்தோடு வ்யபிசரியாதவனே! உன்னை எத்தைச்சொல்லி நான் விடுவது. ... ... ... ... ... ... (அ)

---

அரு—எட்டாம்பாட்டு. (அத்தாவித்யாதி) ஒருகால் சொன்னத்தையே ஒன்பதின்கால்சொல்லிக்கொண்டு நீர் தேன்குடிக்கும் நரிபோலே கண்டு களிததீராகில் உம்மை இந்நாளிலேயே †ஓரேதத்தைச் சொல்லி *ஆதரத்தைக்கட்ட ‡மட்டிலே விட்டோடவேண்டி வரும்; இதுக்கு இத்தனைகளிக்கவேணுமோ வென்ன; பேசினார்களாகிலும் விடும்படியாயோ உன்படி என்கிறாரென்று ஸங்கதி.

"மாத்ராதிகளிருக்க ஈஶ்வரனே ரக்ஷகனென்கிறாரிறே, பித்தர்" என்பரென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (அஸங்கதேத்யாதி). எம்பெருமானே ரக்ஷகன், மாத்ராதிகள் ரக்ஷகரல்லரென்கிற தமக்கு ப்ரதிகோடித்வ விவக்ஷயா "பிறர்" என்றதுக்கு அர்த்த மருளிச்செய்கிறார் (இவர்களித்யாதி). "என்னை" என்றதுக்கு "என்னாநின்றார்கள்" என்றத்தோடந்வயம். மேலுக்கவதாரிகை (பிறரித்யாதி). மணி-அழகாய், அழகான மாணிக்கமென்கிறார் (பெருவிலையனித்யாதி). முளையாதவித்து நிஷ்ப்பலமாகையாலே, முளைக்கின்ற வித்து ஸபலமாமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (பலத்தோடித்யாதி). ... ... ... ... ... ... (அ)

மூ.— தூயாய் சுடர் மாமதிபோலுயிர்க் கெல்லாம்
தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணா
ஆயா வலைநீருலகேழு முன்னுண்ட
வாயா உன்னை எங்ஙனம் நான் மறக்கேனே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தூயாய் | பரிசுத்தனே! | தாயாய் | மாதாவாய்நின்று கிற |
| சுடர் | (குளிர்ந்த) கிரணங்களையுடைய | அளிக்கின்ற | க்ருபைபண்ணியருளு |
| | | தண் | குளிர்ந்த |
| மா மதிபோல் | பூர்ணசந்த்ரன்போல் | தாமரைக்கண்ணா | செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவனே! |
| உயிர்க்கெல்லாம் | ஸகலப்ராணிகளுக்கும் | | |

---

† ஏதம்-தோஷம். * ஆதரத்தைக் கட்டுதல்-துயக்கப்பண்ணுதல்.
‡ மட்டிலே-அவ்வளவிலே.

| | | | |
|---|---|---|---|
| ஆயா | க்ருஷ்ணனாக அவதரித்தவனே! | உண்டவாயா | விழுங்கியவாயை யுடையவனே! |
| அலை | திரைக்கிளப்பத்தை யுடைய | உன்னை | இப்படி ஆபத்ஸகனான உன்னை |
| நீர் | ஸமுத்ரத்தினால் சூழப்பட்ட | நான் | உபகாரமறிந்த நான் |
| | | எங்ஙனம் | எவ்விதமாக |
| உலகுஏழும் | ஸப்தலோகங்களையும் | மறக்கேன் | மறக்கக்ஷமனாகிறேன் |
| முன் | ப்ரளயகாலத்தில் | | (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தூயாயித்யாதி) (க) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் - ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே, ஸர்வபூத ஸுஹ்ருத்தாய் ஆநுகூல்யம் பண்ணினரோடு, ப்ராதிகூல்யம் பண்ணினரோடு வாசியற எல்லார்க்கு மொக்க நன்மையைப் பண்ணுகையால் வந்த பாவ(भाव)சுத்தியையுடையவனே! ஸகலதாபங்களுமாறும்படி சீதமான கிரணங்களையுடைய பூர்ணசந்த்ரனைப்போலே, ஸர்வப்ராணிகளையும் தாயாய்க்கொண்டளிக்கின்ற குளிர்ந்த திருக்கண்களையுடையவனே! என்று திருக்கண்களுக்கு விசேஷணமாதல்; அன்றிக்கே, சுடர்மாமதிபோல் உயிர்க்கெல்லாம் தாயாய் அளிப்பாயுமாய், அவ்வாத்ஸல்யமெல்லாம் தோற்றும்படியிருக்கிற திருக்கண்களையுடையவனே! என்னுதல்.

(ஆயா) இப்படி யிருந்துவைத்து, உன்னுடைய விபூதிபூதரிலே, சிலர் "இவன் என்புத்ரன்" என்று அபி(भि)மாநிக்கலாம்படி க்ருஷ்ணனாய் வந்தவதரித்தவனே! (அலைநீருலகேழும்) ஆபத்து கரைபுரண்டால் வரையாதே எல்லாரையு மொக்க ரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனே! திரைக்கிளர்த்தியையுடைய கடல் சூழ்ந்தபூமியை அமுது செய்த திருப்பவளத்தை யுடையவனே! இப்படி ஆபத்ஸகனான உன்னை எங்ஙனே மறக்கும்படி. ... ... ... ... ... (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (தூயாயித்யாதி) ப்ரத்யக்ஷமாக மாதாபித்ராதிகள் ரக்ஷகரென்று கண்டார் பலர்கூடி ஏசத்தொடங்கில்; ஶாஸ்த்ரகம்ய(गम्य)னான என்னுடைய ரக்ஷகத்வத்தை மறக்கவேண்டிவரும் கிடீர்; ஆகையாலே விடவேண்டிவரும், ஆக உம்முடைய களிப்பு ப்ரயோஜநவத்தன்றே யென்ன; நீ ஸர்வப்ரகாரத்தாலும் ஸர்வவிதோபகாரகனாய், சிலபாக்யாதி(भाग्यादि)கர்க்குக் கண்ணுக்கும் விஷயமாக நிற்கிறாய், மாத்ராதி

---

(க) கீ-ரு-உகூ.

களைக்காட்டில் அணித்தாய் உதவுகிறாய், ஆகையால் உன்னை ஒருகாலும் விட வேண்டா வென்கிறார் என்று ஸங்கதி.

"உயிர்க்கெல்லாம்" என்ற பதத்திலே நோக்காகத் தூய்மையை யருளிச்செய்கிறார் (ஸௌஹ்ருத மித்யாதி).

தாத்பர்ய மருளிச்செய்து சப்தார்த்த மருளிச்செய்கிறார் (நிரையித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௯)

மூ. —வண்டார் பொழில்சூழ் நறையூர் நம்பிக்கென்றும்
தொண்டாய்க் கலியனொலிசெய் தமிழ்மாலை
தொண்டீரிவை பாடுமின்பாடி நின்றாட
உண்டே விசும்பு உந்தமக்கில்லை துயரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டீர் | பக்தஜநங்களே! | இவை | இப்பத்துப் பாட்டையும் |
| வண்டு ஆர் | வண்டுகள்நிறைந்த | பாடுமின் | பாடுங்கோள்; |
| பொழில்சூழ் | சோலைகள்சூழ்ந்த | பாடிநின்று | (அப்படி) காநம்பண்ணி |
| நறையூர் நம்பிக்கு | திருநறையூர் நம்பியிடத்தில் | ஆட | நர்த்தநம்பண்ணவே |
| என்றும் | எப்போதும் | உந்தமக்கு | உங்களுக்கு |
| தொண்டாய் | அடிமைபூண்ட | துயர் | து:க்கம் |
| கலியன் | ஆழ்வார் | இல்லை | நசித்துவிடும்; |
| ஒலிசெய் | அருளிச்செய்த | விசும்பு | பரமபதமானது |
| தமிழ்மாலை | தமிழ்த்தொடையான | உண்டு | கிடைக்கும். (௧௦) |

வ்யா. —பத்தாம்பாட்டு. (வண்டாரித்யாதி) மதுவெள்ளத்தாலே, வண்டுகளானவை பரிமளம்போலே படிகிற பொழில்களையுடைத்தான திருநறையூரிலே நிற்கிற கல்யாணகுண பரிபூர்ணனைக் கவிபாடிற்று. (தொண்டாயித்யாதி) அவன் திருவடிகளில் நித்யகைங்கர்யத்திலே அதிகரித்த திருமங்கையாழ்வார், ஒலியுடைத்தாம்படி யருளிச்செய்த தமிழ்த்தொடை. என்னைப்போலே நீங்களுமிவ்விஷயத்திலே ருசியையுடையிகோளாய் பாடுவதாடுவதாகவே, பரமபதம் தன்னடையே ஸித்திக்கும்படியாம். அதுக்கு விரோதியான பாபம் தன்னடையே போம். ... ... ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

அரு —பத்தாம்பாட்டு. (வண்டாரித்யாதி) உந்தமக்கு - விசும்புண்டு - துயரில்லை என்றர்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (என்னைப் போலே யித்யாதி). ... ... ... ... ... .. (௧௦)



ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்தில் முதல்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து இரண்டாந்திருமொழி
## புள்ளாய்ப்ரவேசம்.

வ்யா. —(புள்ளாய்) கீழ் ஸம்பந்தஜ்ஞாநம் விளைந்தபடி சொல்லிற்று; பின்பு தாம் நினைத்த பரிமாற்றம் பெறுமையாலே, (௧) "பிறவாமை எனைப்பணி" என்றுஅபேக்ஷித்தார்; "நீரிப்பாடுபடுவதென்? உமக்காகவன்றோ நாம் உகந்தருளின இடங்களிலே வந்து நிற்கிறது" என்ன; எல்லாம் பெற்றாராய் ஸமாஹிதரானார். "இதுவே பேறுமிழவுமாகைக்கு நம்தலையால் ஏதேனுமுண்டோ?" என்றுஆராய்ந்து பார்த்தார், இத்தலையிலொன்றுமின்றிக்கே, அவன்*எதிர்சூழல் புக்குப் பண்ணின க்ருஷி இப்படி பலித்த பலமாயிருந்தது, (உ) "ஊனேராக்கை தன்னை யுழந்தோம்பி வைத்தமையால் நானே யெய்தப்பெற்றேன்" இத்யாஜ்யமான சரீரத்தைக்கொண்டே பேற்றுக்குடலாம்படி பண்ணியருளினான் என்கிறார். ... ... ... ... *

அரு. — (புள்ளாய்ப்ரவேசம்) "கீழ்" என்றது - (௩) "கிடந்த நம்பி" என்கிற திருமொழியிலே என்றபடி. (இதுவே பேறுமிழவும்) என்றது - பகவதநுபவமே பேறும், இதில்லாமையே இழவும் என்றபடி. (இப்படி பலித்தபலமாயிருந்தது) என்றதுக்கு, இத்திருமொழியில் உயிர்ப்பாட்டைக்காட்டி அதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஊனேரித்யாதி).

மூ.—புள்ளாயேனமுமாய் புகுந்தென்னை யுள்ளங்கொண்ட
கள்வா வென்றலு மென்கண்கள்நீர்கள் சோர்தருமால்

(௧) எ-௧-௧. (உ) எ-உ-௯. (௩) ௬-௧௦-

உள்ளே நின்றுருகி நெஞ்சமுன்னை யுள்ளியக்கால்
நள்ளேனுன்னையல்லால் நறையூர் நின்ற நம்பியோ.        (க)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| நறையூர் | திருநறையூரென்னும் திவ்யதேசத்தில் | நீர்கள் | ஆநந்தபா(ஷ்ப)ஷ்பத்தை |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற | சோர்தரும் | பெருக்காநின்றன; |
| நம்பி | பூர்ணனே! | ஆல் | ஆஶ்சர்யம்! |
| புகுந்து | (என்னுள் அந்தர்யாமியாய்) ப்ரவேசித்து | நெஞ்சம் | (என்) மநஸ்ஸானது |
| புள்ளாய் | (ஹம்ஸ) பக்ஷியாயும் | உன்னை | என்னுடைய உஜ்ஜீவநத்தில் வ்யாபரித்த உன்னை |
| ஏனமுமாய் | வராஹமாயும் (அவதரித்த செயல்களைக்காட்டி) | உள்ளியக்கால் | அநுஸந்திக்கப் புக்கால் |
| என் | விஷயாந்தர ப்ரவணனை என்னுடைய | உள்ளேநின்று | (என்) ஹ்ருதயத்திலேயிருந்து |
| உள்ளத்தை | மநஸ்ஸை | உருகி | நீராகக் கரு(ப்போகாநின்றது), |
| கொண்ட | தனக்கு வசமாக்கிக் கொண்ட | உன்னையல்லால் | (இனி) உன்னைத்தவிர வேறொரு விஷயங்களை) |
| கள்வா | வஞ்சகனே! [தும் | நள்ளேன் | ஆசைப்படேன். |
| என்றலும் | என்றுசொல்லும்போ | "ஓ" என்பது - ப்ரீத்யதிசய த்யோதகமான அவ்யயம். (க) | |
| என் கண்கள் | என்னுடைய நேத்ரங்களானவை | | |

வ்யா.—முதற்பாட்டு. (புள்ளாயித்யாதி) என்னுடைய துக்க நிவ்ருத்திக்கு நான் பட்டது பட அமையாதோ? நானும் பிறவாத பிறவிகளையன்றோ நீ வந்து பிறந்தது. அன்னமாயும் வராஹமாயுமான செயலைக் காட்டி, என் ஹ்ருதயத்தைக் கொண்டாளுய்த்து. (க) ‹‹మనఏవ మనుష్యాణాం కారణం బన్ధమోక్షయోః - மநஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோः" என்று பந்தஹேதுவானது தன்னையே மோக்ஷஹேதுவாம்படி பண்ணியருளினான். (கள்வாவித்யாதி)இவர், "நெஞ்சிலே புகுராநின்றானென்றறியில், ஒட்டார்" என்று தெரியாதபடியாகப் புகுந்தபடி. இவ்வுபகாரத்தை அநுஸந்தித்துப் பேசப் புக்கவாறே, கண்ணனது நீர் பாயாநின்றது. (என்கண்கள்) ஸ்த்ரீ

(க) வி-பு-ஞ-எ-உ-அ.

களிநினைத்து அழுதுபோந்த என்னுடைய கண்கள்.

உன்னை அநுஸந்திக்கப் புக்கவாறே, நெஞ்சானது உள்ளேநின்றுருகி உடைகுலைப்படாநின்றது. (நள்ளேன்) இனி வேறே நூறாயிரம் இதரவிஷயங்கள் முகங்காட்டினாலும், அவற்றோடு செறியேன். (நறையூர்) நான் நோவுபடுகிற ஸம்ஸாரத்திலே, நீயே முற்பாடனாய் வந்து நின்ற பின்பு அவற்றோடு பொருந்துமோ? ப்ரீத்யதிசயத்தாலே "ஓ" என்கிறார். ... ... ... ... ... (க)

அரு.—முதற்பாட்டு. (புள்ளித்யாதி) (நான்பட்டது படவமையாதோ) என்றது - நான் மநுஷ்யனாய்ப்பிறந்து பட்டாப்போலே, நாட்டில் பிறந்து மாயங்கள் செய்து படாதன பட்டது போராதோ வென்றபடி. (நானும் பிறவாத) ஹேயனான நானும் பிறக்க விரும்பாத, ஜுகுப்ஸிதமான வென்கை. "உள்ளங்கொண்டகள்வா" என்று ஸம்போதிக்கைக் கடியான மாநஸாநுஸந்தாந விசேஷத்தை யருளிச்செய்கிறார் (அன்னமாயு மித்யாதி வாக்யத்வயத்தாலே). (அருளினன்) என்றவாநந்தரம், என்றநுஸந்திப்பது என்று கூட்டுவது. புள்ளாய் ஏனமுமாயுள்ள செயலைக் காட்டி உள்ளங்கொண்டானாகில், "கள்வா" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (இவரித்யாதி) (புகுந்தபடி) என்றதுக்கு, (க) "யஸ்யாத்மா ந வேத- யமாத்மா ந வேத" என்று அந்தர்யாமியாய்ப் புகுந்ததைக் களவாகச் சொல்லுகிறாரென்று கருத்து.

அந்தர்யாமியாய்ப் புகுந்து-புள்ளாய் ஏனமுமாய் - என்னுள்ளங்கொண்ட கள்வா என்று சப்தார்த்தம்.

(உள்ளேநின்று உருகி நெஞ்சமுன்னை யுள்ளியக்கால்) [நெஞ்சம்-உள்ளே நின்றுருகி, அத்தால் உன்னையல்லால், மற்றொன்றை நள்ளேன்] என்றந்வயம் விவக்ஷித்துத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உன்னையித்யாதி). நான் உள்ளே புகுரில் இரும்புபோல் வலியதான நெஞ்சு பதம்செய்து, அவ்வபதாநங்களைக் காட்டி ஆநந்தாஸ்ருக்களைப் ப்ரவஹிப்பித்து, நெஞ்சை எத்தனை உருக்கினாலும், பள்ளமடையான விஷயங்கள் ப்ரபலங்களாகையாலே தன்னடையே, செறியப்பண்ணுவோ வென்னும் பகவதபிப்ராயத்தாலே (நறையூர்நின்றநம்பி) என்கிறாரென்னுமிடம் தோற்ற வருளிச்செய்கிறார் (நானிதயாதி). ... ... ... ... ... (க)

மூ.—ஓடாவாளரியினுருவாய் மருவி யென்றன்
மாடே வந்தடியேன் மனங்கொள்ள வல்ல மைந்தா
பாடேன் தொண்டர் தம்மைக்கவிதைப் பனுவல் கொண்டு
நாடேனுன்னை யல்லால் நறையூர் நின்றநம்பியோ. (உ)

(க) ப்ரு-இ-எ-உஉ.

| பதம். | உரை. |
|---|---|
| நறையூர்நின்ற நம்பி! | [டாத |
| ஓடா | (நாட்டில்) நடையா |
| ஆள் அரியின் | நரஸிம்ஹத்தினு டைய |
| உருவாய் | வடிவையுடையனாய்க் கொண்டு |
| என்றன்மாடே | என்னிடத்தில் |
| வந்து | ஸந்நிஹிதனாய் [ந்து |
| மருவி | (என்னோடு) கலந்திரு |
| அடியேன் | சேஷபூதனான என் |
| மனம் | மநஸ்ஸை [னுடைய |
| கொள்ளவல்ல | ஸ்வாதீநமாக்கிக் கொள்ளத்தகுந்த |

| பதம். | உரை. |
|---|---|
| மைந்தா | ஸமர்த்தனே! |
| பனுவல் | சாஸ்த்ர ஸித்தமான (லக்ஷணங்களை யுடைய) |
| கவிதைகொண்டு | கவிகளாலே |
| தொண்டர் தம்மை | விஷயாந்தர ப்ரவணரான நீசரை |
| பாடேன் | (இனி) ஸ்தோத்ரம்பண்ணமாட்டேன், |
| உன்னையல்லால் | உன்னைத்தவிர (வேறொருவரை)க்கவி பாட) |
| நாடேன் | (மநஸ்ஸில்) விசாரிக்கவும் மாட்டேன். |

வ்யா —இரண்டாம்பாட்டு. (ஓடாவித்யாதி) "புள்ளாயேனமுமாய்ப்புகுந்து" என்றார் கீழே, தாழ்ந்த ஜந்மத்திலே வேணுமாகில் பிறக்கிறாய்; நாட்டார் பிறக்கும் பிறவிகளைப் பிறக்கலாகாதோ?

நாட்டில் நடையாடாதபடியான நரஸிம்ஹரூபத்தையுடையையாய். (மருவி) நரஸிம்ஹவேஷபரிக்ரஹம் பண்ணினவன்று துடங்கி, இவருடைய ஹ்ருதயத்திலேகாணும் கிட்டுவது. (என்றன்மாடே வந்து) நீ பராவஸ்த்தனாயாகில், என்பாடு வந்து கிட்டலாமோ? (அடியேன்மனங் கொள்ளவல்லமைந்தா) ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வான் நெஞ்சை உனக்காக்கிக் கொண்டாயென்கிறவிது - உனக்கொரு மிடுக்கோ? என்னைஉனக்காக்கிக்கொண்ட உனக்கு.

அதுசெய்தோமிறே, மேலே நீர் செய்யப்பார்த்ததென்னென்ன, (பாடேனித்யாதி) சாஸ்த்ரோக்தங்களான லக்ஷணங்களிலே குறைவற்றிருக்கிற கவிகளைக்கொண்டு நீசரைப் பாடுவது தவிர்ந்தேன். "கவிதைப்பனுவல்" என்றது - பனுவல் கவிதை என்றபடியாய், "பனுவல்" என்று - நூலாய், சாஸ்த்ரமென்றபடியாய், ஶாஸ்த்ரோக்தமான லக்ஷணங்களில் குறையற்ற கவியென்றபடி. (நாடேனுன்னையல்லால்) இவனைப் பாடுவோமோ என்று விசாரிக்குமதுவும் தவிர்ந்தேன். (நறையூர் நின்றநம்பியோ) நீ என்னுடைய ஸர்வேந்த்

ரியங்களுக்கும் உன்னை விஷயமாக்கிவைக்க, நான் உன்னைவிட்டுப் புறம்பே கவிபாடுகைக்கு ப்ராப்தியுண்டோ? ... ... ... (உ)

அரு —இரண்டாம்பாட்டு. (ஓடாவித்யாதி) கீழ்ப்பாட்டுக்கும் இப்பாட்டுக்கும் ஸங்கதி யென்னென்ன; தாமே யருளிச்செய்கிறார் (புள்ளாயித்யாதி). "ஆகாதோ" என்றவநந்தரம் (என்கிறார்) என்று சேஷம்.

(நாட்டில் நடையாடாத) என்றது - *நரங்கலந்த சிங்கமாய் இந்த நாட்டிலென்கை. "ஆளரி" என்று ஆஸ்சர்யத்துக்கு ஹேதுவாகத் தோற்றுகையாலே தாத்பர்ய மருளிச்செய்கிறார் (நரஸிம்ஹேத்யாதி). (கிட்டுவது) என்ற வநந்தரம், கேட்டமாயிருப்பது என்று சேஷம். "உனக்கொருமிடுக்கோ" என்றவிடத்தில் "உனக்கு" என்றதின் விவரணம் (என்னையுனக்காக்கி யித்யாதி).

மேலுக்கவதாரிகை (அதுசெய்தோமிறே யித்யாதி). (இவனை) என்றது - கீழ்ச்சொன்ன நீசனை யென்றபடி. ... ... ... ... (உ)

மூ.—எம்மானுமெம்மனையு மென்னைப் பெற்றொழிந்ததற்பின்
அம்மானுமம்மனையு மடியேனுக்காகி நின்ற
நன்மான வொண் சுடரே நறையூர் நின்றநம்பீ உன்
மைம்மான வண்ணமல்லால் மகிழ்ந்தேத்தமாட்டேனே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | நறையூர்நின்ற நம்பி! | நின்ற | ஸந்நிஹிதனாய் நின்றவனே! |
| எம்மானும் | என்தகப்பனும் | நல் | விலக்ஷணமாய் |
| எம்மனையும் | என்தாயும் | மானம் | பேரளவுடைத்தாய் |
| என்னைபெற்று | என்னை ப்ரஸவித்து (உண்டாக்கி) பின்பு) | ஒள் | அழகியதான [னே! |
| ஒழிந்ததற்பின் | (போக (ப்ரதிகூல) விரோதி யென்று) பொகட்டுப்போன வநந்தரம், | சுடரே | தேஜஸ்ஸை யுடையவ |
| அடியேனுக்கு | ஸ்வதஸ்ஸித்தமான தாஸ்யத்தையுடைய எனக்கு | உன் | உன்னுடைய |
| அம்மானும் | தகப்பனும் | மை மானம் | மையளவான (அஞ்சநம்போன்ற) |
| அம்மனையுமாகி | தாயுமாக | வண்ணமல்லால் | திருமேனியை யல்லது (மற்ற திருப்பதிகளை) |
| | | மகிழ்ந்து | ப்ரீதிபண்ணி |
| | | ஏத்தமாட்டேன் | ஸ்தோத்ரம்பண்ணமாட்டேன். (௩) |

வ்யா. —மூன்றாம்பாட்டு. (எம்பானுமித்யாதி) நாட்டாருபக ரிக்குமளவிலே உபகரித்தாயாகிலன்றோ உன்னை மறக்கலாவது? தாயளவிலே உபகரித்தான், தமப்பனளவிலே உபகரித்தான் என்ன வொண்ணாதே, அவர்கள் கைவிட்டவளவிலே, முகங்காட்டின உன்னை

மாதாபிதாக்கள் ராகாந்த(ரோசாந்த)ராய், பரஜையை உதபாதிக்குப் பின்பு "யௌவநவிரோதி" என்று காற்பரைக்கொள்ளுமவர்கள் ஜந்மந்தோறும் பழகிப்போந்த வாஸனையாலே, "அம்மே" என்றும், "அப்பா" என்றுமிறே இவன் சொல்லிப்போருவது; அதில் "அம்மே" என்றபோதாகப் பெண் குரலாலே "ஏன்" என்னும்; "அப்பா" என்றபோதாக ஆண்குரலாலே "ஏன்" என்றும்; இவனறிந்த வழியாலேயாய்த்து முகங்கொடுப்பது. (அடியேனுக்கு) அந்த மாதாபிதாக்களளவல்லாதபடி ஸ்வதஸ்ஸித்தமான முறையையுடையனெனக்கு அம்மானும் அம்மனையுமாகி நின்ற.

(நன்மான வொண் சுடரே) விலக்ஷணமாய் அளவிறந்த ஒள்ளிய சுடரையுடையவனே! அப்படியிருப்பது பரமபதத்திலேயன்றோ வென்ன; திருநறையூரிலேவந்து ஸந்நிஹிதனான கல்யாணகுணபரிபூர்ணனே! (உன்மைம்மானவண்ணம) அஞ்ஜனம்போலே ஸ்யாமளமான வடிவையுடைய உன்னையல்லது புறமபே சிலரை, பக்தனை வேணுமென்று ப்ரேரித்தாலும் பரீதிபுரஸ்ஸரமாக ஏத்துவதில்லை. இப்போது புறம்பாக நினைக்கிறது, புறமபுற்றை திருப்பதிகளை. (மைம்மானவண்ணம) மையளவான வண்ணம மைபொத்தவண்ணம்.

அரு —மூன்றாம்பாட்டு. (எம்மானுமித்யாதி) "தொண்டர்தம்மை பாடேன்" என்றீர், அவர்கள் உமக்கு விசேஷமாக உபகாரங்களைப் பண்ணினால் அவர்களை அதுக்காக ஏத்தவேண்டிவாராதோவென்ன, உபகாரங்களில் தலையான உபகாரங்களைப் பண்ணும் தாய் தமப்பனையன்றியே, மஹோபகாரகனான உன்னை விட்டு, இனி மற்றொரு எம்பெருமான்களைத்தான் மகிழ்ந்தேத்துவனோவென்கிறாரென்று ஸங்கதியை உட்கொண்டு அத்தை ஸூசிப்பிக்கிறார் (நாட்டாரித்யாதி வாக்யத்வயத்தாலே). (உன்னை) என்றவநந்தரம், என்கிறார் என்றுசேஷம்.

வாக்யதாத்பர்யமருளிச்செய்கிறார் (மாதாபிதாக்களித்யாதி).

"மான" என்றதுக்கு, பேரளவுடைத்தான என்று சப்தார்த்தமாய், (அளவிறந்த) என்கிறது. †("புலற்றேன்" என்னாதே "நாடேன்") என்ற பதவாஸனை (ப்ரேரித்தாலும்) என்றது. தன்னையல்லது அறியாத இவரை அந்யவிஷயஸ்துதியிலே மூட்டுவரோவென்ன வருளிச்செய்கிறார் (இப்போதித்யாதி.) ... .. .. .. ... ... (௩)

‡ குண்டலிநம் ஆலோசநீயம். தந்த்ஸ்த்தாநத்தில் "ஏத்தேன்" என்னாதே "மாட்டேன்" என்றிருக்கலாம்.

மூ.—சிறியாயோர் பிள்ளையுமா யுலகுண்டோ ராலிலைமேல்
உறைவாயென்னெஞ்சினுள்ளே யுறைவாயுறைந்ததுதான்
அறியாதிருந்தறியே னடியேனணி வண்டு கிண்டும்
நறைவாரும் பொழில்சூழ் நறையூர் நின்றநம்பியோ. (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அணி | அழகியதான | ஓர் | ஒரு இளமைமிக்க |
| வண்டு | வண்டுகளானவை | ஆலிலைமேல் | வடதளத்தின் மேலே |
| கிண்டு | அமைந்திருக்கும்படி | உறைவாய் | பொருந்தி யிருக்குமவனே! |
| நறை | தேனானது | | |
| வாரும் | ப்ரவஹியாநின்ற | என் நெஞ்சினுள்ளே | என் ஹ்ருதயத்துக்குள்ளே |
| பொழில் | சோலைகளாலே | | |
| சூழ் | சூழப்பட்ட | உறைவாய் | பொருந்தியிருக்குமவனே! |
| நறையூர் நின்றநம்பீ! | | | |
| சிறியாய் | இளம்பருவத்தையுடையனாய் | உறைந்தது தான் | (இப்படி நீ) பொருந்தியிருப்பதை |
| ஓர் | அத்விதீயனாயிருக்கிற | அறியாது | தெரிந்துகொள்ளாமல் |
| பிள்ளையுமாய் | பாலனுமாய்க்கொண்டு | அடியேன் | நான் |
| உலகு உண்டு | லோகங்களை விழுங்கி | இருந்தறியேன் | இருந்திலேன். (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (சிறியாயோர் பிள்ளையித்யாதி). (க) "பாலனாயேழுலகுண்டு" என்கிறபடியே, யசோதாஸ்தநந்தயமும் நிரம்பின பருவமென்னும்படியான பருவத்தையுடையையாய், அப்பருவத்திலே ஸகலலோகங்களையும் வயிற்றிலே வைத்து, ஒரு பவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநாஸாமர்த்யத்தை யுடையையாய்! அப்படி சேராச்சேர்த்தியாக என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்து, அவ்வாலந்தளிரினளவன்றிக்கே, பரமபதத்திற்போலே இடம் பெறவிருந்து, என்னை உனக்காக்கிக்கொண்ட இம்மஹோபகாரத்தை அறியாதே, நான் க்ருதக்நனாயிருக்கிறேனல்லேன். அவ்விடையாட்டமு மறிந்தேயிருக்கிறேன்.

உனக்கொரு உறைவிடமில்லாமைதான் செய்தாயோ நீ. தர்ஸநீயமான வண்டுகளானவை மேன்மேலெனப் படிகைக்கு மேற்பட வேறொன்றில் கால் வாங்காதபடி மிக்க தேனையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட திருநறையூரை வாஸஸ்தாநமாக உடையவனே!

(க) தி-வாய்-ச-உ-க.

உன்க்கு அஸங்குசிதமாக வர்த்திக்கைக்கு* ஒருஸ்த்தாநமில்லையோ இத்தேசத்தையுடைய உனக்கு. ... ... ... ... (ச)

---

அரு —காலாம்பாட்டு. (சிறியாயித்யாதி) தான் ப்ரேரித்தாலும் இனி மற்றொரு திருப்பதியையும் ஏத்தமாட்டேனென்கைக்கு ஹேதுவென்னென்ன; என்னெஞ்சினுள்ளே வந்து உறைகையால் அத்தை மறவாமையாலேயென்று ஸங்கதியாகவுமாம்; அன்றிக்கே, நானெத்தனை உபகாரசீலனானாலும் என்னப்ரயோஜநம், நாட்டில் ஒருவரும் அத்தைநினைப்பாரில்லாதேயன்றோ இருக்கிறது; நீருமங்ஙனேயானாலோவென்ன; நீஎன்னெஞ்சிலிருக்க, எனக்கு மறந்து க்ருதக்நனாக விரகுண்டோஎன்கிறாரென்று ஸங்கதியாகவுமாம்.

"பிள்ளை" என்ற பதத்தால்தானே சிறுமை தோற்றியிருக்க "சிறியாய்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பாலனாயித்யாதி). "பிள்ளையும்" என்ற சகாரம் விரோதேயாய், உலகுண்கைக்கும் பிள்ளையாகைக்குமுண்டான சேராச்சேர்த்தியை, நெஞ்சினுள்ளே உறைகைக்கு த்ருஷ்டாந்தமென்னுமிடம் தோறறவருளிச்செய்கிறார் (அப்படியித்யாதி). நெஞ்சிலென்றதே, "உள்ளே" என்கையாலே பலித்தவர்த்தமருளிச்செய்கிறார் (அவ்வாலந்தளிரித்யாதி).

"அணிவண்டு" இத்யாதிக்குத்தாத்பர்யம் (உனக்கொருஇத்யாதி). கிண்டுகை-கெழுமுகையாய், படியும்படி, வாரும்-ப்ரவஹிக்குமென்று சப்தார்த்தமாய் பலிதார்த்தம் (மிக்கதேனை) என்றது. நறையூரை, "பொழில்சூழ்" என்று விசேஷித்ததுக்குத்தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உனக்கேத்யாதி). "உனக்கு" என்றது-ஸங்குசிதமானஎன் நெஞ்சிலிருந்த உனக்கென்றபடி.

மூ.—நீண்டாயை வானவர்கள் நினைந்தேத்திக் காண்பரிதால்
ஆண்டாயெனவாதரிக்கப்படுவாய்க்கு நானடிமை [டேன்
பூண்டேனென் நெஞ்சினுள்ளே புகுந்தாயைப் போகலொட்
நாண்டானுனக்கொழிந்தேன் நறையூர் நின்ற நம்பியோ. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| நறையூர் நின்றநம்பீ! | |
| நீண்டாயை | அபரிச்சிந்நனான உன்னை |
| வானவர்கள் | ப்ரஹ்மாதிதேவர்கள் |
| நினைந்து | த்யாநித்து |
| ஏத்தி | ஸ்தோத்ரம்பண்ணி |
| காண்பது | ஸாக்ஷாத்கரிப்பது |
| அரிது | துர்லபம்; |

| பதம். | உரை. |
|---|---|
| ஆல் | ஆஸ்சர்யம்; |
| ஆண்டாய் என்று | (எங்கள்) ஸ்வாமியே! என்று |
| ஆதரிக்கப் படுவாய்க்கு | (தேவதைகளால்) ப்ரீதிபண்ணப்படுமுன் விஷயத்தில் |
| நான் | நான் |
| அடிமை பூண்டேன் | சேஷவ்ருத்தியை வஹித்தேன்; |

| | | |
|---|---|---|
| என் நெஞ்சி என் மநஸ்ஸில் | | போகலொ புறப்புபோகஸம்மதியே |
| னுள்ளே | | ட்டேன் ன். |
| | | நாண்தான் லஜ்ஜைஜயைத்தான் |
| புகுந்தா | ப்ரவேசித்த உன்னை | உனக்கு உனக்காக |
| யை | | ஒழிந்தேன் விட்டுவிட்டேன். (ரு) |

வ்யா. — அஞ்சாம்பாட்டு. (நீண்டாயை யித்யாதி) உன்னுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளைச் சிலர் பேசவென்று புக்கால், எல்லாம் பேசித் தலைக்கட்டவொண்ணாதபடி அபரிச்சேத்யனாயுள்ள உன்னை, ப்ரஹ்மாதிகள் நெஞ்சாலேகூட அநுஸந்தித்து ஸ்தோத்ராதிகளைப்பண்ணி கண்ணாலே காணவேணுமென்று ஆசைப்பட்டால், காணவரியையாய்! (ஆண்டாய்) என்னையனே! என்று ஆதரிக்கப்படுகிற உனக்கு. ப்ரஹ்மாதிகளுடைய பாசுரமிருக்கிறபடி.

இப்படியிருக்கிற உனக்கு, (க) "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி-அஹம் ஸாவம் கரிஷ்யாமி" என்று உன் திருவடிகளிலே ஸகலசேஷவ்ருத்திகளிலுமதிகரித்தேன். என்னையும் அடிமையிலே மூட்டுகைக்காக என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்த உன்னைப்போகவொட்டுவேனோ? "வந்தகார்யம் தலைக்கட்டிற்றாமாகில் இனி வேறே ஓரிருப்பிடம் தேடிப்போக வமையாதோ" என்று போக நினைத்தான், நான்போகவொட்டுவேனோ-"அடியேன்" "அடியேன்"என்னாநின்றீர்; சேஷபூதராவார் சேஷி செய்தபடி செய்யக்கண்டிருக்குமவர்களன்றோ? "ஒட்டேன்" என்று நிர்பபந்திக்கை உம்முடைய ஸ்வரூபத்துக்குப் போருமோவென்ன; (நாண்டானுனக்கொழிந்தேன்) மடலெடுக்க நினைப்பார், "இதுஆம்" "இதுஆகாது" என்று கார்யம்பார்த்தோசெய்வது! (நறையூர் நின்றநம்பியோ) நீயோசால நாணுடையையாயிருக்கிறாய்? நீ முந்துற மடலெடுத்துப் பின்னையன்றோ மடலெடுப்பித்தது. அவன் மடலெடுக்கையாகிறது - முற்பாடனாய் வருகிற்கையிறே. ... ... (ரு)

அரு — அஞ்சாம்பாட்டு. (நீண்டாயையித்யாதி) கீழ்ப்பாட்டில் க்ருதஜ்ஞதாநுஸந்தாநத்தாலே அடிமையிலே ஒருப்படவே, இவராசையையவளர்க்க நாலடி போகப்புக்கவாறே வளைக்கிறாரென்றுஸங்கதி.

இன்னபடியால் நீண்டாயையென்னுமைபால் அருளிச்செய்கிறார்(உன்னுடைய வித்யாதி)-வானவர்கள், நீண்டாயை-நீண்டிருக்கிறஉன்னை, நினைந்தேத்திக் காண்பது அரிது என்கை. அரிது - துர்க்கடம். (ஆல்) ஆஶ்சர்யம். வானவர்கள்ஆண்டாய்என்று ஆதரிக்கப்படுகிற உனக்கு நானடிமை

(க) ரா-அ-கக-உ௫.

பூண்டேனென்று சப்தார்த்தமுட்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாதீத்யாதி). (காணவரியையாய்) என்றதுக்கு (இப்படியிருக்கிற) என்றவாக்யத்தோடு ஸம்பந்தம். "அடிமைபூண்டேன்" என்னவமைந்திருக்க, "நான்" என்று விசேஷித்ததாலே, வ்யதிரிக்தராலே ஆதரிக்கப்படுகையன்றோ தோற்றுகிறது, அதுக்கு கர்த்ருபதம் எங்கேயென்ன; கீழ் "வானவர்கள்" என்றபதத்தை இங்கே அநுஷங்கித்துக்கொள்வது என்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாதிகளித்யாதி).

இவர், "போகவொட்டேன்" என்கைக்கு அவன் இவரை விட்டுப் போக ப்ரஸங்கித்தானன்றேயென்ன வருளிச்செய்கிறார் (வந்தகாரியமித்யாதி). (வந்த கார்யம்) - அடிமையில் மூட்டுகை. ஆக அடிமையிலாசை வளர்க்கவேணுமென்று நாலடி போக ஒருப்பட்டானென்று கருத்து. (ஒட்டுவேனோ) என்கிறவநந்தரம், என்கிறார் என்று சேஷம். இரண்டாம்பாட்டு தொடங்கி முக்காலும் "அடியேன்" என்றத்தையெல்லாமநுவதிக்கிறாராய், "ஒட்டேன்" என்றதின்மேலே ப்ரணயத்தாலுண்டான சிவட்குத்தோற்ற, மேலுக்கவதாரிகையருளிச்செய்கிறார் (அடியேனித்யாதி). ஆனால், நாணற்றாரோடு உம்மைக் கூட்டுவோமே என்னும் சங்கையிலே. (நறையூர்நின்றநம்பீ) என்கிறாரென்று விவக்ஷித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீயோவித்யாதி). ... ... (௭)

மூ. —எந்தாதை தாதை யப்பாலெழுவர் பழவடிமை
வந்தாரென்னெஞ்சினுள்ளே வந்தாயைப் போகலொட்டேன்
அந்தோ வென்னாருயிரே யரசே யருளெனக்கு
நந்தாமைத் தந்த வெந்தாய் நறையூர் நின்ற நம்பீயோ. (௮)

| பதம். | உரை. |
|---|---|
| என் ஆர் உ.யிரே | எனக்கு ஸத்தாநிர்வாஹகனான ப்ராணனே! |
| அரசே | என்னையாளுமவனே! |
| எனக்கு | என்விஷயத்தில் |
| அருள் | க்ருபையை |
| நந்தாமை | நசியாமல் (விச்சேதியாமல்) |
| தந்த | கொடுத்த (பண்ணின) |
| என்தாய் | என்ஸ்வாமியே! |
| | நறையூர் நின்றநம்பீ! |
| என்தாதை | நானும் என்தகப்பனும் |
| தாதை | அவன் தகப்பனும் |
| அப்பால் | அவனுக்குமுன்புண்டான |

| பதம். | உரை. |
|---|---|
| எழுவர் | ஸப்தபுருஷர்களும் (ஆகிய பத்துத்தலைமுறையாக) |
| பழவடிமை | பழைய (ஸ்வதஸ்ஸித்தமான) தாஸ்யத்தை |
| வந்தார் | (செய்துகொண்டு வந்தார்கள்) |
| என் நெஞ்சினுள்ளே | என்மநஸ்ஸில் |
| வந்தாயை | வந்துபுகுந்த உன்னை |
| போகலொட்டேன் | போகஸம்மதியேன் |
| அந்தோ | ஐயோ! |

(௮)

வ்யா.—ஆரும்பாட்டு. (எந்தாதை யித்யாதி). நான், என்னுடைய தமப்பன், அவனுடைய ஜநகன், இவர்களோடேகூட, அவ்வருகே எழுவர். (௧) "ஸப்த ஸப்தச ஸப்தச-ஸப்த ஸப்தச ஸப்தச" என்னக்கடவதிறே. ஒருவனுக்குண்டான நன்மை அசல் காக்குமிடத்தில் (௨) * ஏழ்படிகால் செல்லுமிறே. இத்தால், குலமாக அநந்யார்ஹர்களென்றபடி. நானபேக்ஷியாதிருக்க, நீயே என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்த உன்னைப் போகவொட்டுவேனோ? கைப்பட்ட நிதியை உத்தறுவாருண்டோ?

(அந்தோவித்யாதி) இவர் "ஒட்டேன்" என்னச்செய்தே, பின்னையும் போவானாக நினைத்தான்; அய்யோ! இவ்வஸ்துவை இழந்தாய் கிடாய் என்கிறார். உன்னையொழிய ஜீவியாதபடி என் ஸத்தையை நிர்வஹித்துக்கொண்டு போருகிறவனே! (அரசே) என்னை வன்னிய மறுத்து ஆண்டவனே! (அருளெனக்கு நந்தாமைத்தந்தவெந்தாய்) "நீ போகாதேகொள்" என்று காலைக்கட்டி வளைக்கலாம்படி என்பக்கலிலே அருளைப்பண்ணின என்னையனே! திருநறையூரிலே வந்து நின்றுய்த்து இவர்க்கு அருளிற்று. ... ... ... ... (௬)

அரு—ஆரும்பாட்டு. (எந்தாதையித்யாதி) திருநறையூரில் வந்தது நாணில்லாமையாலே என்னுநின்றீர்; நீர் நாணில்லாதவராகா நின்றீர், நாணற்றாரிருவரும் ஸ்வதந்த்ரராகில், நான் போகத்தட்டென்னென்ன; நீ என்குலநாதனை பின்பு, உன்னைப்போகவொட்டுவேனோவென்று காலைக் கட்டுகிறாரென்று ஸங்கதி.

(எந்தாதை) என்கையாலே, அர்த்தஸித்தமாக (நான்) என்றுகூட்டுகிறார். (அவ்வருகே) என்றது-இவர்களுக்கவ்வருகான கொள்பாட்டனைச் சொல்லுகிறது. (எழுவர்) மூவர்க்கும்மேலெழுவர். ஆக. (௩) "దశపూర్వాన్ - தசபூர்வாந்" என்ற பதின்மரையும் சொல்லிற்றாய், இதுஉபலக்ஷணமாய் "దశావరాన్ - தசாவராந்" என்ற பதின்மரையும் சொல்லுமென்று விவக்ஷித்து, இதுக்குத்ருஷ்டாந்ததயா, கந்யாதாநபல (ஃல) தயா சொன்ன வசநத்தைக்காட்டுகிறார் (ஸப்தேத்யாதி). இவ்வர்த்தத்துக்கு நேரே பெரியாழ்வார் திவ்யஸூக்தியையும்ப்ரமாணமாகவருளிச்செய்கிறார்(ஒருவனுக்கித்யாதி). இப்படி இவ்வாழ்வாரருளிச்செய்ததும், கேசவன்றமரிற் படியே. ஸம்பந்தி ஸம்பந்திகளுங்கூட நம்மளவு "தசபூர்வாந் தசாவராந்" என்கிறபடியே உஜ்ஜீவித்தமை பலிதமென்னுமிடம் தோற்றவருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி).

(௧) பாரு- (௨) தி-பல்-௬. (௩) போதாயந-

கிழிற்பாட்டிலும் "போகவொட்டேன்" என்று நிர்ப்பந்திக்கவே இவரைப் பாரதந்த்ர்யத்திலேதானே நிறுத்தவேணுமென்று இவர்வார்த்தையை, ஆனைக்குப்பாடுவாரைப்போலே அநாதரித்திருக்க, (அந்தோ) இத்யாதி யருளிச்செய்கிறுரென்று தாத்பர்யமருளிச்செய்கிறுர் (இவரித்யாதி). ... ... ... ... ... ... ... ... (சு)

மூ—மன்னஞ்ச வாயிரந்தோள் மழுவில் துணித்த மைந்தா
என்னெஞ்சத்துள்ளிருந் திங்கினிப்போய் பிறரொருவர்
வன்னெஞ்சம் புக்கிருக்கவொட்டேன் வளைத்துவைத்தேன்
நன்னெஞ்சவன்ன மன்னும் நறையூர் நின்ற நம்பீயோ. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நல் | த(ஂ)யாபூர்ணமான | இருந்து | அநவரத வாஸம்பண்ணி, |
| நெஞ்சம் | மநஸ்ஸையுடையளாய் | இனி | இதுக்குமேலே |
| அன்னம் | ஹம்ஸம்போன்ற நடையழகையுடையளான பெரிய பிராட்டியார் | இங்கு போய் | இங்குநின்றும் புறம்பேசென்று |
| மன்னும் | நித்யவாஸம் பண்ணுகிற நறையூர் நின்றநம்பீ! | பிறர் ஒருவர் | அயலாரான ஒருத்தருடைய |
| மன் | ராஜாக்கள் | வல் | (உன் விஶ்லேஷத்தில் இளகாத) வன்மையையுடைய |
| அஞ்ச | பயப்படும்படி | நெஞ்சம் | மநஸ்ஸை |
| ஆயிரம் தோள் | (கார்த்த வீர்யார்ஜுநனுடைய) ஆயிரம் புஜங்களையும் | புக்குஇருக்க | ப்ரவேஶித்து அங்கேபொருந்தியிருக்கும்படி |
| மழுவில் | பரசுவிஞலே | ஒட்டேன் | ஸம்மதியேன், |
| துணித்த | வெட்டிப்பொகட்ட | வளைத்து வைத்தேன் | (நீ போகாதபடி)தடையிட்டுவைத்தேன். (எ) |
| மைந்தா | பலிஷ்டனே! | | |
| என் நெஞ்சத்துள் | (இதுவரையில்) என் மநஸ்ஸுக்குள்ளே | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (மன்னஞ்சவித்யாதி)இவருடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்த ஈஶ்வரன் போக்கைநினைத்தான், போகவொட்டேனென்றுர், ஒட்டேளுவதென், நம்மோடே மலைந்து விலக்கப்போமோ உமக்கு, இருபத்தொருபடிகால் க்ஷத்ரியவம்சத்தை அறுத்துப்பொகட்ட பெருமிடுக்கரல்லோமோ நாமென்ன; அதில் தட்டில்லை, ஆனாலும்அவ்வோப்ரக்ருதிகளுக்கு அநுரூபமாகவன்றே நீபரிமாறுவதென்கிறுர்.

ராஜலோகமடைய அஞ்சும்படி அவர்களுக்கடிபான ஸஹஸ்ர பாஹுவர்ஜுநனுடைய தோள்களாயிரத்தையும் மழுவாலே துணித்த மிடுக்கனே! நீ தொடங்கின கார்யத்துக்கு ஒரு ப்ரதிஹதி யுண்டாமென்றவனுமல்லேன், உன்னுடைய மிடுக்கை இசையாதவனுமல்லேன், ஆனாலும் அவ்வோருடைய ஸ்வபாவங்களையறிந்தன்றோ பரிமாறுவது. (என்னெஞ்சத்துள்ளிருந்து) உன்னையொழிய அறியாதபடியிருக்கிற என்னுடைய நெஞ்சிலேவந்து புகுந்திருந்து, இனி இங்குநின்றும் போயிருக்கவுமாய், போகவுமாயிருப்பார் நெஞ்சில் போயிருக்கவொட்டேன்.

ஒட்டேனென்றாலும் நாம் தவிரோமென்றால், (வளைத்து வைத்தேன்) நீ போகில் நான் முடிவனென்கிறார். இத்தலை இழக்கவருமளவிலே, இட்டஅடி பேர்க்கமாட்டான். நீர் வளைக்கிறது என்ன மிடுக்குக்கொண்டென்ன; (நன் நெஞ்சவன்னமன்னும நறையூர் நின்றநம்பீயோ) நீர் குற்றங்கண்டு கைவிடப்பார்க்குமன்றும் (க) “ న కశ్చిన్నాపరాధ్యతి - நகஶ்சிந்நாபராத்யதி ” என்னுமவளன்றோ அருகே இருக்கிறாள். ... ... ... ... ... (எ)

---

அரு —ஏழாம்பாட்டு (மன்னஞ்சவித்யாதி) ஸங்கதியருளிச்செய்கிறார் (இவருடையவித்யாதி).

(சப்தார்த்தம்) (ராஜலோக மித்யாதி) உட்கருத்தருளிச்செய்கிறார் (நீயித்யாதி). மேலுக்கவதாரிகைஎன்னவுமாம். (ஸ்வபாவம்) என்றது - அவனையொழியத் தரிக்கமாட்டாமை.

“அத்வேஷமே அமைந்திருக்க,நான் போகாதிருப்பேனோ” என்னும் பா(భా)வததாலே மேலுக்கவதாரிகையருளிச்செய்கிறார்(ஒட்டேனித்யாதி). (நல்நெஞ்சவன்னம்) நன்றான நெஞ்சையுடைய அன்னம்போன்ற நடையழகையுடையளான பிராட்டி. “மன்னும்” என்னுமதுக்கு சப்தார்த்தமாக வருளிச்செய்கிறார் (நீர் இத்யாதி). ... ... ... ... ... (எ)

மூ.—எப்போதும்பொன்மலரிட்டிமையோர் தொழுது தங்கள்
கைபபோது கொண்டிறைஞ்சிக் கழல்மேல் வணங்க நின்றாய்
இப்போதென்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப் போகலொட்டேன்
நற்போது வண்டு கிண்டும் நறையூர்நின்ற நம்பீயோ. (அ)

---

(க) ரா-யு-௧௧௬-௪௪.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நல் | ஸௌந்தர்யமான | கைபோது | புஷ்பம்போன்ற கை |
| போது | பூக்களிலே | கொண்டு | களாலே |
| வண்டு | வண்டுகளானவை | இறைஞ்சி | அஞ்சலித்து |
| கிண்டும் | படிந்திருக்கிற (போக்யமான) | கழல்மேல் | திருவடிகளில் (விழுந்து) |
| நறையூர் நின்றநம்பீ! | | வணங்க | ஆஶ்ரயிக்கும்படி |
| எப்போதும் | ஸர்வகாலமும் | நின்றாய் | எழுந்தருளியிருக்குமவனே! |
| பொன் | அழகிய | | |
| மலர் | புஷ்பங்களை | இப்போது | நான் உன்னுடைய போக்யதையை யறிந்த இப்போது; |
| இட்டு | ஸமர்ப்பித்து | | |
| இமையோர் | நித்யஸூரிகள் | | |
| தொழுது | ஆஶ்ரயித்து, | என் நெஞ்சினுள்ளே புகுந்தாயைப் | |
| தங்கள் | தங்களுடைய | போகலொட்டேன். | (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (எப்போதுமித்யாதி) நாம் முன்பு வந்து புகுந்தது? ஒருகுறையுண்டாயோ? இப்போது போக நினைக்கைக்கு? (க) "ஸதா பஶ்யந்தி-ஸதாபஶ்யந்தி" என்கிறபடியே எப்போதுமொக்க ஸ்ப்ருஹணீயமான புஷ்பங்களைக்கொண்டு நித்யஸூரிகளானவர்கள் தொழுது, தங்கள் கைகளாகிற புஷ்பங்களைக்கொண்டு, அஞ்சலியைப் பண்ணிக்கொண்டு திருவடிகளிலே விழுந்து, ஆஶ்ரயிக்கும்படியிருந்தாய்.

(இப்போதென் நெஞ்சினுள்ளே) உன்னுடைய இவ்வரவுக்கு பூர்வக்ஷணத்தில் எனக்கொரு ஸ்ம்ருதியில்லை. (புகுந்தாயை) என் பக்கல் ஓரபேக்ஷாமாத்ரமுங்கூட வின்றிக்கேயிருக்க, நீயே வந்து புகுந்து உன்னுடைய போக்ய(த்வ)தையை அறிவித்தபின்பு, இனி உன்னைப்போகவொட்டுவேனோ? (நற்போதுவண்டுகிண்டும்) விலக்ஷணமான புஷ்பங்களிலே வண்டுகளானவை (உ)"குடைந்துவண்டுண்ணும்"என்கிறபடியே, உள்ளேயுள்ளே அவகாஹிக்குமத்தனைபோக்கி வேறொன்றில் போகவொண்ணாதபடி போக்யமான தேசத்தை வாஸஸ்தாநமாக உடையவனே! அவ்வூரிலவகாஹித்தார்க்கு வேறேயு மோரிடம் தேடிப்போகலாம்படியோ - அவ்வூரில் போக்யதையிருப்பது.

அரு—எட்டாம்பாட்டு (எப்போதுமித்யாதி) நீர் பிராட்டி சவிகை கொண்டு விளைகைக்குக் காரணமென்? முற்கோலிவந்தோமென்றதல்,

(க) ஸாம-உத்தர-கஅ-உ-ச. (உ) தி-வாய்-க-எ-கக

நமக்கொரு குறை தீர்ந்தோமென்றுசல் உண்டாகில் சொல்லிக்காணு மென்ன அதுக்கு உத்தரமருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

இப்பாட்டுக்கெல்லாம் தொகுத்த பாவம் (நாமித்யாதி). "நாம்" என்றது - ப்ரஜ்ஞோக்தியாய், ஆழ்வாரே ஈஸ்வரனைப்பார்த்துச் சொல்லும் வார்த்தை. நான் முன்பாக வந்திருக்க, பின்பு நீ புகுந்ததுண்டாயோ நீ போக நினைக்க? உனக்கொரு குறையுண்டாய் என்றால் தீரப்பெற்றாயைத் தான் போகநினைக்கிறாயோ? இரண்டுமில்லை, நீயே நான் நினையாதிருக்க வந்து புகுந்து, உன் போக்யதையையு மறிவிப்பித்தாய், நீயோ பரிபூர்ணன்; என்னுடையொன்றும் வேண்டுவதில்லை, நான் போக்யதையாலே போகவொட்டாமை, பிராட்டியை அண்டைகொண்டு வளைத்தேனத்தனை யென்று கருத்து. (நினைக்கைக்கு) என்றவனந்தரம் "என்கிறார்" என்று சேஷம். சப்தார்த்தம் (ஸ்தேத்யாதி).

நம்பியுடைய போக்யதையிலே தாமவகாஹித்ததுக்கு த்ருஷ்டாந்தமாக வண்டை யருளிச்செய்தாரென்றுமிடம் தோற்றக் கருத்தருளிச்செய்கிறார் (அவ்யுரித்யாதி) ... ... ... ... ... ... ... (அ)

மூ.—ஊனேராக்கைதன்னை யுழந்தோம்பி வைத்தமையால்
யானாயென்றனக்காயடியேன் மனம் புகுந்த
தேனே தீங்கரும்பின் தெளிவே யென் சிந்தைதன்னால்
நானே யெய்தப்பெற்றேன் நறையூர்நின்றநம்பீயோ. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| யானாய் | எனக்கு அநுரூபமாவாய் | | நறையூர் நின்றநம்பீ! |
| என்றனக்காய் | எனக்கு விதேயனாய்க்கொண்டு | ஊன் ஏர் | மாம்ஸப்ரசுரமான |
| அடியேன் | அடியேனுடைய | ஆக்கைதன்னை | சரீரத்தை |
| மனம் | மநஸ்ஸிலே | உழந்து | ஸ்ரமப்பட்டு |
| புகுந்த | ப்ரவேசித்த | ஓம்பிவைத்தமையால் | வளர்த்து வைத்தபடியாலே |
| தேனே | தேன்போல் போக்யபூதனே! | என் | என்னுடைய |
| தீங் | மதுரமான | சிந்தைதன்னால் | மநஸ்ஸினால் |
| கரும்பின் | கருப்பஞ்சாற்றினுடைய | நானே | (வளர்த்த) நானே |
| தெளிவே | ஸாரம்போல் இனியனானவனே! | எய்தப்பெற்றேன் | (உன்னை) ப்ராபிக்கப் பெற்றேன். (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (ஊனேராக்கையித்யாதி) ஈஶ்வரன் அநேகாவதாரங்களைப் பண்ணி, ஸ்வயம் வரித்துக்கொடு வந்த ஸ்வீகாரத்தினுடைய பலம் பெற்றேனென்கிறார்.

மூ. —நன்னீர் வயல் புடைசூழ் நறையூர் நின்ற நம்பியைக்
கன்னீர் மால்வரைத்தோள் கலிகன்றி மங்கையர்கோன்
சொன்னீர் சொல்மாலை சொல்லுவார்கள் சூழ் விசும்பில்
நன்னீர்மையால் மகிழ்ந்து நெடுங்காலம் வாழ்வாரே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நல்நீர் | அழகிய ஜலத்தை யுடைய | சொல் | கொண்டாட்டச் சொல்லையே [தாய் |
| வயல் | கழனிகளாலே | நீர் | ஸ்வபாவமாகஉடைய |
| புடை | பர்யந்தங்களிலே | சொல்மாலை | சப்த ஸந்தர்ப்ப ரூபமான இப்பத்துப் பாசுரங்களை |
| சூழ் | சுற்றப்பட்ட | | |
| நறையூர் | திருநறையூரென்னும் திவ்யதேசத்தில் | | |
| நின்ற | எழுந்தருளி யிருக்கிற | | |
| நம்பியை | பூர்ணன்விஷயமாக, | சொல்லுவார்கள் | அநுஸந்திக்கு மவர்கள், |
| கல் | ஒலியாநின்ற | | |
| நீர் | மலையருவிகளையுடைய | சூழ் | பரந்த (போக(ஞ்ஜ)ப்ரசுரமான) |
| மால் | பெரிய | | |
| வரை | மலையோடொத்த | | |
| தோள் | புஜங்களையுடையராய் | விசும்பில் | பரமபதத்தில், |
| கலி | சத்ருக்களை | நல் | ஸ்வரூபாநுரூபமான |
| கன்றி | கோபியாநின்றவராய் | நீர்மையால் | ஸ்வபாவத்தாலே |
| மங்கையர் | திருமங்கையி லுள்ளார்க்கு | மகிழ்ந்து | ஆநந்தித்து |
| கோன் | ஸ்வாமியான ஆழ்வார் | நெடு | அபரிச்சிந்நமான |
| | அருளிச்செய்ததாய், | காலம் | காலத்தளவும் |
| | | வாழ்வார் | ஸுகிப்பர்கள். (கC) |

வ்யா. —பத்தாம்பாட்டு. (நன்னீரித்யாதி) அழகிய ஜலஸம்ருத்தியை யுடைத்தான வயலானது பர்யந்தமெங்கும் சூழ்ந்திருக்கின்ற திருநறையூரை வாஸஸ்த்தாநமாக உடைய கல்யாணகுண பரிபூர்ணனையாய்த்துக் கவிபாடிற்று. (கன்னீர்மால்வரைத்தோள்) கல்லென்று-த்வநிக்குப்பேர். மிக்க த்வநிகளையுடைத்தான அருவிகளையுடைத்தாயிருக்கிற பெரிய மலைபோன்ற தோள்மிடுக்கையுடையராய், ப்ரதிபக்ஷநிரஸநஸ்வபாவரான திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான ஆழ்வார் கவிபாடினவர். (சொன்னீர் சொன்மாலை) இத்தை அநுஸந்தித்தார்க்கு, "இதொரு சப்தமே!" என்று கொண்டாடுமிதுவே ஸ்வபாவமாம்படியிருக்கிற சொல்தொடையைச் சொல்லுமவர்கள்

இத்தைச் சொல்லுகையே போருமாய்த்துப்ரயோஜநம், அதுக்கு மேலே, போக(பூமி)பூமிகளில் மேலாயிருக்கிற பரமபதத்தேபோய், இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபமான முறையாலே நிரதிசய ஸ்வரூபாநந்திகளாய், பின்னை ஒருநாளும் புநராவ்ருத்தியில்லாத பேற்றைப்பெறுவர்கள். ... ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு.— பத்தாம்பாட்டு. (மன்னிரித்யாதி) திருமங்கையிலுள்ளார்க்கு நிர்வாஹகராகைக்கு ஹேதுவாகத் தோளை வர்ணிக்கிறதுக்கு த்ருஷ்டாந்தமாக, மலைக்கு மிகவும் பெருமை சொல்லவேண்டி, அருவிகளின் மிகுதி சொல்லுகிறாரென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (மிக்கவித்யாதி). எல்லாராலும் சொல்லும்படியான நீர்மையையுடைய சொல்மாலையையென்று சப்தார்த்தமாயருளிச்செய்கிறார் (இதொருவித்யாதி). ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்தில் இரண்டாந் முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து மூன்றாந்திருமொழி

சினவில் ப்ரவேசம்.

வ்யா. —(சினவில்) (க) "நானேயெய்தப்பெற்றேன்" என்றார் கீழ், அந்த பேறுதன்னையே பேசுகிறாரிதில்.

---

அரு.—சினவில்ப்ரவேசம். (பேறுதன்னை) என்றவநந்தரம் "ப்ரீத்யதிசயத்தாலே தம்மிலேதாமே" என்று சேஷம். ... ... *

மூ.—சினவிற்செங்கணரக்கருயிர்மாளச்
செற்றவில்லியென்றுகற்றவர்தந்தம்
மனமுட்கொண்டென்றுமெப்போதும்
நின்றேத்தும் மாமுனியை மரமேழெய்த மைந்தனை

---

(க) ௭-௨-௯.

நனவிற் சென்றார்க்கும் நண்ணற் கரியானை
நானடியேன் நறையூர் நின்ற நம்பியைக்
கனவிற் கண்டேனின்று கண்டமையாலென்
கண்ணிணைகள் களிப்பக் களித்தேனே. (க)

| பதம். | உரை. |
|---|---|
| சினம் | கோபத்துக்கு |
| இல் | இருப்பிடமாய், |
| செங்கண் | சிவந்த கண்களையுடை யரான |
| அரக்கர் | ராக்ஷஸருடைய |
| உயிர் | ப்ராணன்கள் |
| மாள | முடியும்படி |
| செற்ற | சீறின |
| வில்லி என்று | தநுஸ்ஸை யுடையவனே! என்று |
| கற்றவர் | அறிவுடையார் |
| தம்தம் | தங்கள்தங்களுடைய |
| மனமுள் | மநஸ்ஸுக்குள்ளே |
| கொண்டு | த்யாநித்துக்கொண்டு |
| என்றும் | ஸர்வகாலமும் [ம் |
| எப்போதும் | ஸர்வாவஸ்தையிலு |
| நின்று | ஒருபடிப்பட்டிருந்து |
| ஏத்தும் | ஸ்தோத்ரம்பண்ணப் பட்டவனாய், |
| மா | பெரிய |
| முனியை | ஆஶ்ரித விஷயத்தில் ப்ரத்யுபகார சிந்தையை யுடையனாய், [ம் |
| ஏழ்மரம் | மராமரங்களையு |

| பதம். | உரை. |
|---|---|
| எய்த | அடித்த |
| மைந்தனை | மிடுக்கனாய், |
| நனவில் | தெளிவிலே |
| சென்றார்க்கும் | நடக்குமவரான ஜ்ஞாநாதிகாக்கும் |
| நண்ணற்கு | கிட்டுகைக்கு (ஸாக்ஷாத்கரிக்கைக்கு) |
| அரியானை | துர்லபனாய, |
| நறையூர்நின்ற | திருநறையூரிலே எழுந்தருளி யிருக்கும |
| நம்பியை | பூர்ணனை, [வனை |
| அடியேன் | சேஷபூதனான |
| நான் | நான், |
| கனவில் | மாநஸாநுபவத்தில் |
| கண்டேன் | அநுபவித்தேன், |
| இன்று | இப்பொழுது |
| கண்டமையால் | பாஹ்ய ஸாக்ஷாத்காரம்பிறந்தபடியால் |
| என்கண் இணைகள் | என்னுடைய இரண்டுகண்களும் |
| களிப்ப | ஸந்தோஷிக்க (அதிருக்க) |
| களித்தேன் | (நானும்) ஸந்தோஷிக்கப்பெற்றேன். |

வ்யா.—முதற்பாட்டு. (சினவிலித்யாதி) மிக்க சினத்தையுடையராய், சேதநர்விஷயமாக நிர்நிபந்தநமான த்வேஷத்தையுடையராய், அந்த த்வேஷப்ராசுர்யம் தோற்றும்படி யிருக்கிற கண்ணில் சிவப்பை யுடையராயிருக்கிற ராக்ஷஸருடையப்ராணன்கள் முடியும்படி பிடித்த

வில்வலியை யுடையவனே! மாதாவானவள் "ப்ரஜை" என்று பாராதே, ஹிம்ஸிக்குமாபோலே; (௧) "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதை வதம்- தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" என்கிற பொதுவைப் பாராதே அழித்துவிட்டானாய்த்து. இவர்களிருக்கில் ஐகதுபஸம்ஹாரமென்று, விபூதி குடி கிடக்கைக்காக அழித்தானாய்த்து. (கற்றவரிர்யாதி) அறிவுடையரான யோகிகளானவர்கள் தம் ஹ்ருதயத்திலே கொண்டு எல்லாக்காலத்திலும் எல்லா அவஸ்த்தையிலும் ஒருபடிப்பட நின்றேத்த, அவர்களுக்கு எல்லாம் செய்தும் பின்னையும் ஒன்றும் செய்யாதானாய், பெருந்தனிசுபட்டாப்போலே "இவர்களுக்குச் செய்யலாவதென்?" என்று இவற்றை அநுஸந்திக்குமவனை. (பற்றேழிகயாதி) இப்படிப்பட்ட தன்படி அறியாதார்க்கும் மறுவேர்தி விஸ்வஸிபபித்துக் கார்யம் செய்த மிடுக்கனை.

(நனவிலித்யாதி) "கனவில்" என்றதுக்கு எதிராய், ஜாகருகாவஸ்த்தையைக் காட்டுகிறது. நனவு - தெளிவு எததனையேனுமதிசயித ஜ்ஞாநராயிருப்பார்க்கும் நேர்கொடு நேர் சென்று கிட்டிக் காண வரியனாயிருக்கிறவனை. (நானடியேன்) இவர்களைபபோல ஸ்வ யத்நத்தாலன்றிகதே, அவன் காட்டின வழியாலே காணப்பெற்ற அடியேனான நான், திருநறையூரிலே நித்யவாஸம்பண்ணுகிற கல்யாணகுண பூர்ணனை. மாநஸஸாக்ஷாத்கரிக்க, அந்தாலே கண்ணால் காணும் காட்சியன்றிக்கே, அந்த நெஞ்சுதானே முழுமிடறுசெய்து பூர்ணமாக நெறிபட அநுபவிக்கப் பெறுகிறேன். இப்படிக் காணப்பெறுகையாலே (கண்ணிணைகள் களிப்பக்களித்தேனே) "நெஞ்சே அநுபவித்து, கண்கள் அநுபவிக்கப் பெற்றதில்லை" என்கிற குறை கிடவாமை, கண்கள் கண்டநுபவிக்க, அவற்றுக்கு ஆஸ்ரயபூதனாயிருக்கிறானும் (௨) "என் கண்கள் களிப்பக் களித்தாகிய சிந்தையனாய்க் களிக்கின்றேன்" என்கிறபடியே, களிக்கப்பெறுகிறேன். ... ... ... ... (௧)

அரு — முதற்பாட்டு சினவிலித்யாதி) சினத்துக்கு இல் என்று பதபேதமாய், பலிதம் (மிக்கசினத்தை) என்று. விவரணம் (சேதநரித்யாதி). ஸாவஸாத்ருத்தாயிருப்பான், ஒருவனுயிரை மாளப் பண்ணுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (மாதாவித்யாதி). (ஹிம்ஸிக்குமாபோலே) பீடித்து சிக்ஷிக்குமாபோலே ஆனால் இவர்களையும் சிக்ஷிக்கவொண்ணாதோ, கொல்லவேணுமோவென்ன; (இவர்களித்யாதி). எத்தும்படியிருக்

(௧) ஜித-௧-௨. (௨) திருவாய்-௧௦-அ-ச.

கும் மாமுனியை என்று சப்தார்த்தமாய் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அறிவுடையித்யாதி). (தனிசு) கடன். (இவற்றை) ஏத்தும்படிகளை.

"நனவு" என்றதுக்கு முக்யார்த்தத்தைச் சொல்லி, பலிதார்த்தம் (நனவு-தெளிவு) என்று. "கனவில்கண்டேன்" என்றதுக்கு அர்த்தமருளிச்செய்கிறார் (மாநஸவிஷயாதி). "என்சிந்தைதன்னால் நானே யெய்தப்பெற்றேன்" என்றத்தைப் பேசுகிறதாகையாலே, அது நிரந்தர மாநஸாநுபவமாகையாலே, "கனவு" என்றபதம் ஸ்வப்நத்தைச் சொன்னதன்றிக்கே, லக்ஷணயா மாநஸாநுபவத்தையே சொல்லுகிறதென்று திருவுள்ளம். (தெறிபட) என்றது - சக்ஷுர்விஷயமாக என்றபடி. ... ... (௧)

மூ.—தாயை நினைந்த கன்றேயொக்க வென்னையும்
தன்னையே நினைக்கச்செய்து தானெனக்
காய் நினைந்தருள் செய்யுமப்பனை
அன்றிவ் வையகமுண்டு மிழ்ந்திட்ட
வாயனை மகரக்குழைக்காதனை
மைந்தனை மதிட்கோவலிடைகழி
யாயினை அமரர்க்கரியேற்றையென்
னன்பனையன்றியாதரியேனே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| தாயை | (தன்) தாயை |
| நினைந்த | ஸ்மரியாநின்ற |
| கன்றேஒக்க | கன்றுபோலே, |
| என்னையும் | உபகாரம்பெற்ற என்னையும் [யே |
| தன்னையே | உபகாரகனை தன்னை |
| நினைக்கச்செய்து | த்யாநிக்கும்படி பண்ணி, (அதுக்குமேலே) |
| தான் | ஸர்வஜ்ஞனை தானே |
| எனக்காய் | அஜ்ஞனை எனக்காக (என்ஹிதத்தை) |
| நினைந்து | அநுஸந்தித்து |
| அருள்செய்யும் | க்ருபை பண்ணாநின்ற |
| அப்பனை | நிருபாதிக பந்துவாய், |
| அன்று | அந்த ஆபத்காலத்தில் |
| இவ்வையகம் | இந்தலோகத்தை |
| உண்டு | விழுங்கி, (பின்பு) |
| உமிழ்ந்திட்ட | வெளிப்புறப்படவிட்ட |
| வாயனை | திருப்பவளத்தை யுடையனாய், |
| மகரக்குழை | மகர குண்டலங்களை யுடைய |
| காதனை | திருச்செவிகளையுடையனாய், |
| மைந்தனை | நித்யயுவாவாய், [ய |
| மதிள் | ப்ராகாரங்களை யுடை |
| கோவல் | திருக்கோவலூரில் |
| இடைகழி | திருவிடைகழியில் |
| ஆயினை | (முதலாழ்வார்கள் நடுவே) ஆன (நின்ற) வனாய், |

| | | | |
|---|---|---|---|
| அமரர்க்கு | நித்யஸூரிகள் நடுவே | என் அன்பனை | என்னிடத்தில் ப்ரீதி யுக்தனானவனைத் |
| அரி | ஸிம்ஹம்போலவும் | அன்றி | தவிர வேறொருவனிடத்தில் [டேன். |
| ஏற்றை | வ்ருஷபம் போலவும் மேனாணித்தவனாய், | ஆதரியேன் | ப்ரீதி பண்ணமாட் |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (தாயித்யாதி) தாயைநினைத்த கன்றைப்போலே, நானும் தன்னையே நினைக்கும்படிக் கிடாகப் பண்ணினான். அந்த கன்று தாயை நினைக்கிறது, வேறொரு கார்யத்துக்கன்றிறே, முன்னாள் முலைகொடுத்த உபகார ஸ்ம்ருதியாலேயிறே; அப்படியே நானும் உபகார ஸ்ம்ருதியாலே தன்னை நினைக்கும்படி பண்ணினான். (தானெனக்காய் நினைந்து) "எல்லாம் செய்தாலும் இவனுடைய நினைவுக்கு வைகல்யமுண்டாகக்கூடும், இவன் தலையில் இவ்வருந்தேவை யிடுகிறதென்" என்று (க) "அஹம் ஸ்மராமி - அஹம் ஸ்மராமி" என்கிறபடியே, நான் நினைக்கமாட்டாக்குறை தீர, எனக்காகத் தான் நினைத்து. (அருள்செய்யுமப்பனை) என்பக்கலொரு ஹேதுவின்றியே யிருக்க, தன்னுடைய நிரவதிகமான ப்ரஸாதத்தை ஒருதலைத்து முழுக்கப் பண்ணின நிருபாதிக பந்துவை.

(அன்றிவ்வையகமுண்டுமிழ்ந்திட்டவாமனை) ஆபந்நரானவன்று, எல்லாரையுமொக்க வரையாதே நோக்கும் ஸ்வபாவனானவனை. வயிற்றிலே வைத்தும் புறப்படவிட்டும் ரக்ஷித்த நிருபாதிக ரக்ஷகத்வத்தையுடையவனை. (மகரக்குழைக்காதனை) ப்ரளயத்திலே தள்ளிலும் விடவொண்ணாத வடிவழகையுடையவனை. (மைந்தனை) நித்யமான யௌவனத்தை யுடையவனை. (மதிள் கோவலிடைகழியாயனை) உகந்தார் நடுவே புகுந்து நெருக்குமவனை. (அமரர்க்கரியேற்றை) உபயவிபூதியின் நடுவே புகுந்து நெருக்குமிதுவே ஸ்வபாவமாகவுடையவனை. இப்படி பூர்ணனாயிருந்துவைத்து, என்பக்கலிலே அன்பைப் பண்ணினவனை. (அன்றியாதரியேனே) அவன் என்பக்கலிலே அன்பைப்பண்ணி மேல்விழாநிற்க, நான் அவனையொழிய வேறுசிலரை ஆதரிப்பனோ? (உ)

அரு'—இரண்டாம்பாட்டு. (தாயித்யாதி) (உ) "மாலே! நாம் தன்னை யுழந்தோம்பிவைத்த நாமேயன்றோ எய்ப்பெற்றோம்" என்று களித்தோம்; பூர்வவாஸனையாலே மீண்டு மறப்போமென்றை ஆதரிக்கவேண்டுவதில் செய்வதென்னென்று தம்மிலே தாமே அதிசங்கைபண்ணி, "அது நம்மால் வந்ததாலன்றோ நாமதிசங்கைபண்ணுவது, அவனே நினைக்கப் பண்ணி

(க) வராஹசரமம்- (உ) ௫-உ-௩.

ளுறைகில் நாண்ணி வேறொன்றை ஆதரியேன்'' என்று ஸமாஹிதராகிறார் என்று ஸங்கதி.

(உபகாரஸ்ம்ருதி) என்றது - ஸ்ருஷ்ட்யவதாராதிகளைப் பண்ணுகை. உகந்தார் - முதலாழ்வார்கள். அமரர்க்குநடுவே அரிபோலவும் ஏறுபோலவும் மேனாணித்திருக்கிறவனை யென்றாய், கீழ்பதத்தைக்கடாக்ஷித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உகப்பாரித்யாதி). ... ... ... (உ)

மூ.—வந்தநாள் வந்தென்நெஞ்சிடம் கொண்டான்
மற்றோர் நெஞ்சறியானடியேனுடைச்
சிந்தையாய் வந்து தென்புலர்க்கென்னைச்
சேர்கொடானிது சிக்கெனப்பெற்றேன்
கொந்துலாம் பொழில்சூழ்க் குடந்தைத்தலைக்
கோவினைக் குடமாடியகூத்தனை
எந்தையை யெந்தை தந்தைதம்மானை
எம்பிரானை யெந்நால் மறக்கேனே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| வந்தநாள் | என்னைமுதலிலே ஸ்வீகரிக்கைக்காகத் தானே வந்தநாளிலே |
| வந்து | என்னைக்கிட்டி |
| என்நெஞ்சு | என்மநஸ்ஸை |
| இடம்கொண்டான் | இருப்பிடமாக அங்கீகரித்தான், |
| மற்றுஒர்நெஞ் | வேறொருத்தருடைய நெஞ்சையும் |
| அறியான் | தனக்கிருப்பிடமாக அறிகிறிலன், |
| அடியேனுடை | என்னுடைய |
| சிந்தையாய்வந்து | மனோரதத்தை யுடையனாய் (நான் ப்ரார்த்திக்க வேண்டிய நித்ய கைங்கர்யத்தைத் தானே கொடுக்கக்கருதி) வந்து |
| தென்புலர்க்கு | தென்திக்கிலுள்ள யமதூதர்கையில் |

| பதம். | உரை. |
|---|---|
| என்னை | தானேவந்து ஸ்வீகரித்த என்னை |
| சேர்கொடான் | அகப்படும்படி பண்ணமாட்டான், |
| இது | இத்தை |
| சிக்கென | த்ருடமாக |
| பெற்றேன் | லபித்தேன்; (ஆகையால்,) |
| கொந்து | பூங்கொத்துக்கள் |
| உலா | உலாவாநின்ற (நிறைந்திருக்கிற) |
| பொழில் | சோலைகளினாலே |
| சூழ் | வ்யாப்தமான |
| குடந்தைத்தலை | திருக்குடந்தையிலே பள்ளி கொண்டிருக்கிற |
| கோவினை | ஸ்வாமியாய், |
| குடம் ஆடிய | குடக்கூத்தாடின |
| கூத்தனை | ஆஸ்சர்ய சேஷ்டிதங்களையுடையனாய், |
| எந்தையை | என்க்குப்பிதாவாய், |

| | | | |
|---|---|---|---|
| எந்தை | என்பிதாவுக்கு | எம்பிரானை | எனக்கு உபகாரகனானவனை |
| தந்தை | பிதாவானபாட்டனார் முதலான என்குலத்துக்கு | எத்தால் | எந்த காரணத்தைச் சொல்லி |
| தம்மானை | ஸ்வாமியாய், | மறக்கேன் | மறப்பேன்? (௩) |

வ்யா.—மூன்றும்பாட்டு. (வந்தநாளித்யாதி) ப்ரதமஸ்வீகாரத்துக்கு முன்பு தாமிட்டது ஒரு பச்சையுண்டாய், அதுக்கு உபகரித்தானாகிலிறே இந்நாளென்னலாவது, அங்ஙனொன்றில்லாமையாலே, ப்ரதமஸ்வீகாரத்தை "வந்தநாள்" என்னுமித்தனையாய்த்துச் சொல்லலாவது. (என்நெஞ்சிடங் கொண்டான்) (க) "ஆவாஸ ஸ்த்வஹமிச்சாமி- ஆவாஸந்த்வஹமிச்சாமி" என்கிறபடியே, என்னுடைய ஹ்ருதயத்தைத் தனக்கிடமாகக்கொண்டான். (மற்றோர் நெஞ்சறியான்) திருவடிதிருவநந்தாழ்வான்தொடக்கமானார் பக்கலிலும்போவானாயிருக்கிறிலன். (உ) "அநந்தன்பாலும் கருடன்பாலுமைதுநொய்தாக வைத்து" என்றும், (௩) "இடவகைகளிகழ்ந்திட்டு" என்றும்; (ச) "கல்லும் கனைகடலும்வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொல்" என்றும் சொல்லுகிறபடியே, இவருடைய திருவுள்ளமொழிய வேறோரிடமுண்டாக நினைத்திருக்கிறிலன். பின்னை அவ்வோவிடங்களில் இவனில்லையோவென்னில்; ஸௌபரி, பலவடிவுகொண்டு, அநுபவித்தாப்போலே, "இதுக்கவ்வருகில்லை" என்னலாம்படி அவன் முகங்கொடுத்துக் கொண்டிருந்தபடி. (அடியேனுடைய யித்யாதி) (ரு) "வழுவிலா வடிமை செய்யவேண்டும்" என்கிற என்னுடைய மநோரதத்தைத் தானுடையனாய்க்கொண்டு வந்து, யமபடர்கையில் என்னைக் காட்டிக்கொடுப்பானாயிருக்கிறிலன். (இதுசிக்கெனப்பெற்றேன்)என் ஸங்கல்பமடியாக வந்ததாகிலிறே, இதுக்கு ஒரு குலைத்தலுள்ளது, அவனடியாக வருகையாலே ஒருநாளும் குலையாதபடி பெற்றேன்.

(கொந்துலாமித்யாதி) பூங்கொத்துக்களை யுடைத்தாய், நித்யவஸந்தமாயிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட திருக்குடந்தையிலே சாய்ந்தருளி, தன்னுடைய சேஷித்வத்தை உதறிப்படுத்தவனை (குடமாடிய) மன்றிலே குடக்கூத்தாடி வடிவழகை இடையர்க்கு முத்தூட்டாக்கினவனை. (எந்தையை) எனக்கு ஜநகனானவனை, என்

(க) ரா-ஆர-இ-௩௩. (உ) பெரி-திரு-ரு-ச-அ. (௩) பெரி-திரு-ரு-ச-௧௦.
(ச) பெரியதிருவ-௬அ. (ரு) தி-வாய்-௩-௩-௧.

னுடைய அவதாரத்தைஎனவானை. (எம்பிரானை) தன்னுடைய ஸ்வரூப ரூப குணவிபூதிகளை எனக்கு ப்ரகாசிப்பித்த மஹோபகாரகனை, (எத்தால் மறக்கேனே) பண்ணின உபகாரம் அளவுபட்டு மறக்கவோ? நானிட்ட பச்சையையின்றி ஏதேனும் குறைவிருக்கவோ? எவ்வழியால் மறப்பது? (௫)

அரு—மூன்றும்பாட்டு (வாதம்ளித்யாதி) எம்பெருமான் அநாதியாக ஸ்ருஷ்ட்யவதாராதிகளைப்பண்ணி, தன்னை நினைக்கும்படி யத்நித்துக் கொண்டிருக்கச்செய்தேயும், அவனைநினையாதே வேறொன்றை ஆதரித்து, அத்தால் யமபடர் கையிலே அகப்பட்டுத் திரிந்தகாலமே, "ஆதரியேன்" என்று நிர்ணயிக்கும் விரகு எங்ஙனேஎன்று விசாரித்து, தன்னைமறவாதபடி ஞானவஸ்யோபகாரமின்றி நிற்கக்கண்டபின்பு, நமக்கு நிர்ணயிக்கக் குறையென்னென்று மஹாவிதராகிறாரென்று ஸங்கதி.

"வந்து - நெஞ்சிடம் கொண்டான்" என்னவமைந்திருக்க, "வந்த நாள்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ப்ரதமேத்யாதி). கேவலம் "வந்து" என்றால், பச்சையிடவந்தான் என்றாகிலும் தோற்றுமென்று விசேஷிக்கிறாரென்று கருத்து. "கொண்டான்" என்றதுக்கு வாஸனை (ஆவாஸமித்யாதி). "ஓர்" என்றுநெஞ்சை விசேஷித்ததுக்குக் கருத்து (திருவடியித்யாதி) ... .. ... .. ... ... ... (௫)

௬.—உரங்களாலியன்ற மன்னர்மாளப்
பாரதத்தொரு தேரைவர்க்காய்ச்சென்று
இரங்கியூர்ந்தவர்க்கின்னருள்செய்யும்
எம்பிரானை வம்பார்புனல்காவிரி
அரங்கமாளி யென்னாளி விண்ணாளி
ஆழிசூழிலங்கை மலங்கச்சென்று
சரங்களாண்ட தண்டாமரைக் கண்ணனுக்
கன்றி என்மனம்தாழ்ந்து நில்லாதே. (௬)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| உரங்களாலே | மிடுக்கினாலே | இரங்கி | (அவர்கள்விஷயமாக) |
| இயன்ற | (ராஜ்யத்தை) நடத்தா | | மனம்தளர்ந்து |
| | நின்ற | ஒருதேர் | ஒருதேரை |
| மன்னர் | துர்யோதநாதி ராஜா | ஊர்ந்து | நடத்தி |
| | க்கள் | அவர்க்கு | அந்த பஞ்சபாண்ட |
| மாள | நசிக்கும்படியாக | | வர் விஷயத்தில் |
| பாரதத்து | பாரதயுத்தத்தில் | இன் | இனிய (ஸ்வயம் ப்ர |
| ஐவர்க்காய் | பஞ்சபாண்டவர்களு | | யோஜநமான) |
| சென்று | போய், [க்காக | அருள் | க்ருபையை |

| | | | |
|---|---|---|---|
| செய்யும் | பண்ணுகின்ற | மலங்க | வ்யாகுலப்படும்படி |
| எம்பிரானை | உபகாரகனாய், | சென்று | கிட்டி |
| வம்பு | புதிதான | சரங்கள் | பாணங்களை |
| புனல் | ஜலத்தினாலே | ஆண்ட | ப்ரயோகித்த |
| ஆர் | நிறைந்த | தண் | குளிர்ந்த |
| காவிரி | திருக்காவேரியை யுடைய | தாமரை | தாமரைபோன்ற |
| அரங்கம்ஆளி | திருவரங்கத்தைப்பரிபாலநம்செய்யுமவனாய், | கண்ணனுக்கு | கண்களையுடையவனை |
| என்ஆளி | என்னை ஆளுமவனாய். | அன்றி | விட்டு மற்றொருவர் விஷயத்தில் |
| விண்ஆளி | பரமபதத்துக்கு நிர்வாஹகனாய், | என்மனம் | என் மநஸ்ஸானது |
| ஆழிசூழ் | ஸமுத்ரத்தினால் சுற்றப்பட்ட | தாழ்ந்து | நைச்யத்தை வஹித்து (உருக்கமுற்று) |
| இலங்கை | லங்காபுரியானது | நில்லாது | இருக்கமாட்டாது. |

வ்யா.—நாலாம்பாட்டு. (உரங்களாலித்யாதி) தர்மப்ரதாநராய் நடத்துகையன்றிக்கே, அஸுராவேசத்தாலே வந்த முன்கைமிடுக்கையுடையராய், மிடுக்காலே நடத்திகொடுபோருகிற ராஜாக்களுண்டு-துர்யோதநாதிகள், அவர்கள் முடியும்படிக்கீடாக பாரதஸமரத்திலே, வந்த ப்ரதிபக்ஷத்துக்கெல்லாம், ஒருதேரை யெதிராகவிட்டு, தான் பாண்டவர்களுக்காகத் தன்னை அழிவுக்கிட்டுச் சென்று. (இரங்கி) "அய்யோ! இவர்கள் பால்யத்திலே பித்ருஹீநானார்கள், அரக்கு மாளிகையிலே அகப்பட்டார்கள, நீரிலேகழுவிலே அகப்பட்டார்கள்" என்று அவர்கள்பக்கல் க்ருபையைப்பண்ணி அவர்களுக்காகத் தேரைநடத்தி, அவர்களபேக்ஷிக்க அவர்களுக்கு ஒருகார்யம் செய்தானாயிருக்கையன்றிக்கே, தன்பேறாக அருளைப்பண்ணின, ஆஶ்ரித விஷயத்தில்பண்ணுமோரத்துக்கு எல்லைகாணவொண்ணாதபடி யிருக்கிற மஹோபகாரகனை.

(வம்பாரித்யாதி) ப்ரவாஹம் மாறுகையாலே நித்யாபூர்வமான ஜலஸம்ருத்தியை யுடைத்தாயிருக்கிற காவிரியையுடைய கோயிலை நிர்வாஹ்யமாக உடையவனை. (என்னாளி) எனக்கு நிர்வாஹகனை. (விண்ணாளி) நித்யவிபூதியுக்தனை. (ஆழிசூழிலங்கைமலங்கச்சென்று) கடல்சூழ்ந்த அரணையுடைத்தாயிருக்கிற லங்கை ஒருவர்கூறை ஏழுவருடுக்கும்படியாக எடுத்துவிட்டு அம்புகளை நடத்தின புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனுக்கல்லது. (என்மனம்தாழ்ந்து நில்லாதே)

ஆச்ரிதர்க்காக ஸாரத்யம்பண்ணியும், மார்விலே அம்பேற்றும் உபகரிக்குமவனுக்கல்லது, வேறுசிலர் விஷயமாக என்னுடைய ஹ்ருதயத்திலே தாழ்ச்சி பிறவாது. ... ... ... ... ... (௪)

அரு—நாலாம்பாட்டு. (உரங்களித்யாதி) நான் மறக்கிறேனென்றாலும், என் நெஞ்சானது அவனுக்கே தாழ்ந்திருக்குமென்கிறாரென்று ஸங்கதி.

"உரங்களால்" என்று விசேஷிப்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (தர்மேத்யாதி). "ஒரு" என்றதுக்குத் தாத்பர்யம்(வந்தவித்யாதி). (நீரிலே கழுவிலேயகப்பட்டார்கள் என்றுக்ருபையைப் பண்ணுகையாவது) - துர்யோதநன் தானும் பாண்டவர்களுமாக ஜலக்ரீடைக்கு உத்யோகித்து, அவ்வளவிலே ஜலத்திலே கூர்சுக்கேளை நட்டுவைக்க, இவர்களறியார்களென்று, க்ருஷ்ணன் அந்தக் கழுக்களைத் தப்புவித்தருளுகை. அருளுக்கு இனிமைதன்னை யருளிச்செய்கிறார்(அவர்களித்யாதி). "செய்யும்" என்று வர்த்தமாநநிர்தேசபலிதம் (ஆச்ரிதேத்யாதி).

வம்பு - நூதனமான, புனல்ஆர்ந்த அரங்கமென்றருளிச் செய்கிறார் (ப்ரவாஹமித்யாதி). மலங்குதல் - "அராஜகமாய்த்து" என்று கலங்குதலாய், அதினர்த்தம் (ஒருவரித்யாதி). ஒருவன் ஒருவன் கூறையைப் பறிக்க, அவன்கையில்நின்றும் மற்றொருவன் பறிக்க, இப்படி அராஜகமாய்ப்போகை யென்கை (எம்பிரானை) என்றவிடத்தில்ஐகாரம் சாரிகையாய், எல்லாப்பதங்களும் "தாமரைக் கண்ணனுக்கு" என்றதுக்கு விசேஷணமென்று விவக்ஷித்துத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஆச்ரிதர்க்காகவித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௪)

மூ.—ஆங்குவெந்நரகத்தழுந்தும் போதஞ்சே
லென்றடியேனை யங்கேவந்து
தாங்குதாமரையன்ன பொன்னாரடி
யெம்பிரானை யும்பர்க் கணியாய்நின்ற
வேங்கடத்தரியைப் பரிகீறியை
வெண்ணெயுண்டுரலினிடை யாப்புண்ட
தீங்கரும்பினைத் தேனை நன்பாலினை
யன்றியென்மனம் சிந்தைசெய்யாதே. (ஞ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆங்கு | அந்த பாதாளாதிகளிலேயுள்ள [ல் | அழுந்தும் போது | மக்நனாய் (நோவுபடுகிறகாலத்தில்), [து |
| வெந்நரகத்து | க்ரூரமான ஈரகங்களி | அங்கேவந்து | அந்தவிடங்களில் வந் |

| | | | |
|---|---|---|---|
| அஞ்சேலென்று | பயப்படவேண்டாமென்று | வெண்ணெய் உண்டு | வெண்ணெயை (களவிலே) அமுதுசெய்து |
| அடியேனை | உனக்கு சேஷபூதனான என்னை | உரல் இடை | உரலின்நடுவிலே (உரலோடு தன் இடுப்பிலே) |
| தாங்கு | ரக்ஷியாநின்றவனாய் | ஆப்புண்ட | கட்டுண்டவனாய், |
| தாமரையன்ன | தாமரைப்பூவோடொத்ததாய் | தீங்கரும்பினை | இனிய கருப்பஞ்சாற்றோடொத்தவனாய், |
| பொன் ஆர் | ஸ்ப்ருஹணீயதை மிக்கிருந்துள்ளன | தேனை | தேன்போல் போக்யபூதனாய், |
| அடி | திருவடிகளையுடைய | நல்பாலினை அன்றி | மதுரமான பால்போன்றவனான புருஷோத்தமனைத்தவிர மற்றொருவரை |
| எம்பிரானை | என்ஸ்வாமியாய், | என்மனம் | என்னுடைய மனஸ்ஸானது |
| உம்பர்க்கு | நித்யஸூரிகளுக்கு | சிந்தைசெய்யாது | நினையாது. (௫) |
| அணியாய்நின்ற | அலங்காரபூதனாயிருக்குமவனாய், | | |
| வேங்கடத்து | திருவேங்கடமலையிலெழுந்தருளியிருக்கிற | | |
| அரியை | ஸிம்ஹமாய், | | |
| பரி | குதிரையாய்வந்த கேசியை | | |
| கீறிய | வாயைக் கிழித்தவனாய், | | |

வ்யா.— அஞ்சாம்பாட்டு. (ஆங்குவெந்நரக மித்யாதி) பாபம் பண்ணுகிற ஸமயத்திலே வந்துகிட்டி, அவற்றில்நின்றும் திரியவிடுவிக்கையன்றிக்கே, அவை செய்தற்று, அத்ருஷ்டரூபேண ப(ஃ)லாநுபவம்பண்ணும் துக்கானுபவ பூமிகளிலே-கொடிதான நரகத்திலே நோவுபடுமளவிலே. (அஞ்சேலென்று) "இவன், தான் பண்ணின பாபத்துக்கு பலாநுபவம் தானே பண்ணுகிறானாகில், நமக்கென்?" என்றிருக்கையன்றிக்கே, "நாமுளோமாக நீ பாபங்களுக்குக் குடிமகனாகவேணுமோ? நீ அஞ்சாதேகொள்" என்று அங்கேசென்று. (தாங்கு) ரக்ஷிக்குமது, செவ்வித் தாமரைப்பூப்போலே ஸ்ப்ருஹணீயமான திருவடிகளைக் கொண்டாய்த்து. விகாஸம் செவ்வி குளிர்ச்சி நாற்றம் இவற்றுக்குத் தாமரையை ஒருபோலியாகச் சொல்லலாம்படியாய், அவ்வளவல்லாதபடி அதிஸுகுமாரமாய், ஸ்ப்ருஹணீயமான திருவடிகளையுடைய என்னையனை.

(உம்பர்க்கணியாயித்யாதி) திருமலையில் நிற்கிறநிலை, நித்யஸூரிகளுக்கு ஆபரணம்போலே யிருக்கிறதாய்த்து. (அரியை) உகப்பார்க்கு ஆபரணமாயிருக்குமாபோலே, உகவாதார்க்கு அப்ரத்ருஷ்யனாயிருக்குமாய்த்து. (பரிகீறியை) கேசியுடைய வாயைக்கிழித்தவனை.

(வெண்ணெயித்யாதி) ஆஸ்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யமொழியச் செல்லாமை பிறந்து, அது நேர்கொடு நேர்கிடையாமை, களவுகண்டு புஜிக்கப்புக்கு, அதுதன்னை முடியச்செய்து தலைக்கட்டமாட்டாமை வாயது கையதாக அகப்பட்டு, உரலோடே சேர்த்துக்கட்டுண்டு, அடியுண்டு, அடிக்கிருப்த்து, உடம்புவெளுத்துப் பயர்த்துப்,பேகணித்து, நின்றநிலையை அநுஸந்திக்க வநுஸந்திக்க இவர்க்கு இவ்விருப்புக்தானேபாய்த்து ஸர்வவித போக்யமுமாயிருக்கிறது (க)"ஸர்வரஸ:-ஸர்வரஸ:"என்கிறபடியே இனிதாகாநின்றது. (நன்பாலினை) இப்படி ஸர்வவித போக்யமுமாயிருக்கிறவனையொழிய என்னுடைய நெஞ்சு வேறுசிலரை அநவரதபாவனை பண்ணாது. ... ... ... (ரு)

அரு —அனுசாரம்பாடு. (ஆஙசித்யாதி) கீழ்ச்சொன்ன ஸாரதியின்படியை அனுசந்கொண்ட ப்ரீத்யதிசயத்தாலே, மற்றும் சில அபசாரங்களை அருளிச்செய்து, தன்னெஞ்சு நிரந்தராநுபவம் பண்ணும்படியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(உ)"ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி-ஸாவபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றவனுடைய திருவடிகளாகையாலே பாபநிவர்த்தகத்வம் அவற்றுக்கேயாக விவக்ஷித்தருளிச் செய்கிறாரென்று தாத்பர்யமருளிச் செய்கிறார் (பாபநித்யாதி). (அத்ருஷ்டரூபேண) பகவந்நிக்ரஹரூபேண. திருவடிகள் *திண்கழலாகையாலே, தன்னைப் பற்றினார்மேல் அநுக்ரஹத்தை உண்டாக்குமென்று கருத்து ... ... ... ... ... (௬)

மூ. —எட்டனைப் பொழுதாகிலுமென்று
மென்மனத்தகலா திருக்கும் புகழ்
தட்டலர்த்த பொன்னே யலர்கோங்கின்
தாழ்பொழில் திருமாலிருஞ்சோலையங்
கட்டியைக் கரும்பீன்ற வின்சாற்றைக்
காதலால் மறைநான்கு முன்னோதிய
பட்டனைப் பரவைத்துயிலேற்றை யென்
பண்பனையன்றிப் பாடல்செய்யேனே. (௬)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| என்றும் | ஸர்வகாலமும் | என்மனத்து | என்மநஸ்ஸில் நின்றும் |
| எட்டனைப் பொழுதாகிலும் | ஒருநொடிப்பொழுதுங்கூட | அகலாது | பிரியாமல் |
| | | இருக்கும் | எழுந்தருளியிருக்கையாலுண்டான |

(க) சாந்தோ-௫-கஉ-௪. (உ) கீதை-கஅ-௬௬.

| | | | |
|---|---|---|---|
| புகழ் | கீர்த்தியை யுடையனுய், | கரும்பு | கருப்புதண்டமானது |
| தட்டு | மிகவும் | ஈன்ற | (தானே) பெருக்காநின்ற |
| அலர்த்த | விகஸிப்பிக்கப் பட்டதாய் | இன் | இனிதான |
| பொன்னேய் | பொன்னோடொத்து ஸ்ப்ருஹணீயமான | சாற்றை | ரஸம்போன்றவனுய் |
| அலர் | புஷ்பங்களை யுடையதான | காதலால் | ஆசையுடன் |
| கோங்கின் | கோங்கு மரங்களினுடைய | மறைநான்கும் | நாலுவேதங்களையும் |
| தாழ் | தழைத்திருக்கிற | முன் | பூர்வம் க்ருஷ்ணவதாரத்தில் |
| பொழில் | சோலைகளை யுடைத்தான | ஓதிய | அத்யயநம்பண்ணின |
| திருமாலிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலை மலையி லெழுந்தருளியிருக்கிறவனுய், | பட்டனை | பண்டிதனுய், |
| அம் | மதுரமான | பரவை | க்ஷீராப்தியில் |
| கட்டியை | கற்கண்டுபோலே போக்யபூதனுய், | துயில் | கண்வளராநின்ற |
| | | ஏற்றை | ஶ்ரேஷ்டனுய், |
| | | என்பனை யன்றி | எனக்கு ஸ்வாமியானவனையொழிய வேறொருவனை |
| | | பாடல்செய்யேன் | பாடமாட்டேன். (ரு) |

வ்யா.—அரும்பாட்டு. (எட்டனையித்யாதி) வ்யதிரிக்தர்பக்கலிலே அல்பமுத்கர்ஷங்கண்டு, நான் போரப்ராசு ருப்பட்டாலும் என்னுடைய வாகிந்த்ரியமானது அதுக்கு உட்படாது.

அக்பலபகாலமும் என்றுமொக்க என்னுடைய நெஞ்சை அகலாதிருக்கையால் வந்த புகழையுடையனுய்; பிராட்டி (க) "அகலகில்லேனிறையும்" என்று சொல்லியிருக்கிற பிராட்டியும் ஏற்றமாக நினைத்திராநின்றுளொத்து என்று பெட்டனைபொழுது மகலாதிருக்குமென்றபடி (தட்டலர்த்த) கீர்த்தி விரியாநிற்பதாய், பொன்போலேயிருக்கிற அலரையுடைத்தான கோங்கினுடைய வெணுதல், இதழ் மிகும்படி அலரப்பண்ணப்பட்டு, பொன்போலே யிருக்கிற அலரையுடைத்தான கோங்கினுடைய தழைத்த பொழிலையுடைய திருமலையிலே அநுபவயோக்யமாய்க்கொண்டு நிற்கிறவனை.

கைதொட்டு நெருக்குகையால் வரும் செவ்விக்கேடின்றிக்கே, அக்கரும்பினுடைய ரஸமாயுள்ளவனை (காதலாலித்யாதி) இதுக்கு முன்பு ஓதுப்போராநவன் அபிநிவிஷ்டனுய் ஓதுமாபோலே, ஸாங்

(க) தி-வாய்-ஸ-கட-கO.

தீபங்யோடே ஸாதரமாக நாலுவேதத்தையும் அப்யஸித்த பண்டி தனை, இவ்வவதாரத்துக்கு நாற்றங்காலாய்க்கொண்டு, திருப்பாற்கட லிலே கண்வளர்ந்தருளின நீர்மையுடையவனை யல்லது பாடல் செய் யேன். ... ... ... ... ... ... ... (சு)

---

அரு.— ஆரும்பாட்டு. (எட்டனையித்யாதி) "பண்பனையன்றிப்பாடல் செய்யேனே" என்றத்தைக் கடாக்ஷித்து ஸங்கதியருளிச்செய்கிறார் (வ்யதிரிக்த மித்யாதி).

(வாகிந்த்ரியமானது) என்றவநந்தரம், "நெஞ்சைப்போலே" என்று சேஷம். (உட்படாது) என்றவநந்தரம், ஆகையாலே பாடல் செய்யே னென்று சேஷம்.

"எட்டனைப்பொழுதாகிலும்" என்றது - எள்ளத்தனையு மென்றபடி யாய், அத்தையருளிச்செய்கிறார் (அத்யல்பகாலமுமித்யாதி). "எட்டனை," "என்றும்," என்னும் த்விருக்தியாலே, ஆதராதிசயம் தோற்றுமென்று, தாத்பர்யமருளிச் செய்கிறார் (பிராட்டியித்யாதி). "என்றும்," என்றது ஸ்தூலகாலமாகையாலே, ததந்தர்க்கதமான ஸூக்ஷ்மகாலம் பிறபடச் சொல்லவேண்டி அந்வயம் காட்டுகிறார் (என்றுமித்யாதி). அலர்ந்த என் கிறமெல்லொத்து "அலர்த்த" என்றுவல்லொத்தாய்க்கிடக்கிறதாய், அர்த்த மருளிச்செய்து, "அலர்த்த" என்கிறபடி தானே, ஸூர்ய கிரணங்களால் விகஸிப்பிக்கப்பட்ட என்னலாமென்றருளிச்செய்கிறார் (இதழ்மிகுமித்யா தி). "தட்டு" என்கிறபதம் அலரப்பண்ணுகையில் கர்த்தாவாக வேண்டுகை யாலே சொல்லிற்று; "அலர்த்தப்பட்ட" என்னும்போது, அலருகை தள விகாஸந்தானே யாகையாலே, "தட்டு" என்றபதம் மிகுதியைச் சொல்லு மென்று திருவுள்ளம்.

கரும்பின்சாற்றை என்னாதே, "ஈன்ற" என்றதுக்குபாவம் (கை தொட்டித்யாதி). (ஒத்துப்போகாத) அத்யயநம் வாராத. ... ... (சு)

மூ.— பண்ணினின்மொழி யாழ்நரம்பில்பெற்ற
பாலையாகி யிங்கே புகுந்தென்
கண்ணும்நெஞ்சும் வாயுமிடங்கொண்டான்
கொண்டபின் மறையோர்மனந்தன்னுள்
விண்ணுளார்பெருமானை யெம்மானை
வீங்குநீர் மகரந்திளைக்கும் கடல்
வண்ணன்மாமணி வண்ணனெம்மண்ணல்
வண்ணமேயன்றி வாயுரையாதே. (எ)

| பதம் | உரை. |
|---|---|
| பண்ணின் | கானங்களிலே |
| இன் | ப்ராவ்யமான [ன |
| மொழி | சொல்லை யுடைத்தா |
| யாழ் | வீணையினுடைய |
| நரம்பில் | தந்திகளில் |
| பெற்ற | உண்டான |
| பாலையாகி | பாலைஎன்னும் ராகம் போல் மிகஇனிய னுயக்கொண்டு |
| இங்கே | இந்த என்நெஞ்சில் |
| புகுந்து | வந்து ப்ரவேசித்து |
| என் கண்ணும் | என்கண்களையும் |
| நெஞ்சும் | மநஸ்ஸையும் |
| வாயும் | வாக்கையும் |
| இடம் கொண்டான் | இருப்பிடமாக அங்கி கரித்தான்; |
| கொண்டபின் | இப்படி அங்கிகரித்த பின்பு, |
| மறையோர் | வைதிகப்ராஹ்மணரு |
| மனம் | மநஸ்ஸை [டைய |
| தன் உள் | தனக்கு வாஸஸ்த்தாந மாகவுடையனுய், |

| பதம். | உரை. |
|---|---|
| விண்ணுளார் | நித்யஸூரிகளுக்கு |
| பெருமான் | ஸ்வாமியாய், [னுய் |
| எம்மான் | எனக்கு நிர்வாஹக |
| வீங்கு | வ்ருத்தியடையாநின்ற |
| நீர் | ஜலத்தை யுடையதாய் |
| மகரம் | மீன்களானவை [ற |
| திளைக்கும் | துள்ளி விளையாடாநின் |
| கடல் | ஸமுத்ரம் போன்ற |
| வண்ணன் | வர்ணத்தை யுடைய னுய், |
| மா | ப்லாக்யமான |
| மணி | நீலமணியினுடைய |
| வண்ணன் | வாண (ஸ்வபாவ) த் தையுடையனுய், |
| எம் அண்ணல் | எனக்கு ஸ்வாமியான வனுடைய |
| வண்ணமே | வர்ணத்தையொழிய |
| அன்றி | வேறொன்றை |
| வாய் | என்வாக்கானது |
| உரையாதே | சொல்லாது. (எ) |

வ்யா. —ஏழாம்பாட்டு. (பண்ணினின் மொழியாழித்யாதி) என்னுடைய மநோவாக் காயங்கள் அவனையல்லதறியா தென்கிருர்.

(பண்ணினித்யாதி) பண்வர்க்கத்திலே இனிய பேச்சையுடைய யாழ் நரம்பிலே யாழிலே பிறக்கபபட்ட பாலையாகிறபண்ணுய், அப்பண்போலே போக்யனுய்க்கொண்டு வநது புகுநது. (என்கண்ணும் நெஞ்சும் வாயுமிடங்கொண்டான்) கண்ணுக்கு வேறொன்றைக் காணவொண்ணுதபடி தானே விஷயமானுன்; வாககுக்குவேறே சிலரைப் பேசுகைக்கு விஷயமல்லாதபடி தாமே விஷயமானுன்; நெஞ்சுக்கு வேறே சிலரை நினைக்க அவகாசமில்லாதபடி தானே விஷயமானுன்; ஆக ஸர்வேந்த்ரியங்களுக்கும் தன்னையே விஷயமாக்கினுன்.

(மறையோரித்யாதி) ப்ராஹ்மணருடைய ஹ்ருதயங்களைத் தனக்கு வாஸஸ்த்தாநமாக வுடையனுய், *அயர் வறுமமரர்களதிபதி

யாயுள்ளவனை. (எம்மானை) எனக்கு ஸ்வாமியாயுள்ளவனை. (வீங்கு நீர்மையாதி) பெருத்த நீரான ஜலத்தையுடைத்தாய், ஜலச(ச)ரஸத்வங்கள் தன்னில் கூடி விளையாடாநிற்கிற கடல் போலேயிருக்கிற நிறத்தையுடையனாய், பெருவிலையனான நீலமணிபோலேயிருக்கிற நிறத்தையுடையனானவனை த்ருஷ்டாந்தத்தைக்காட்டி, என்னை அடியானாக்கிக் கொண்டவனுடைய நிறத்தைப்பொழிய என்னுடைய வாகிந்த்ரியமானது, பேசுமதற்குப் போராது. ... ... ... (௧)

அ௩ —ஏழாம்பாட்டு (பண்ணினபாதி) ஸமுதாயேந கரணத்ரயத்துக்கும் அவனே விஷயமானானென்கிறாரென்று ஸங்கதியருளிச்செய்கிறார் (என்னுடைய வித்யாதி)

லோகத்திலே மநோ வாக் காயங்களென்கிற ப்ரஸித்தியைப்பற்ற, "கண்"பதம் காயலக்ஷணிகமென்றுகருத்து. இத்தால்பலிதமர்த்தத்தை யருளிச்செய்கிறார் (ஆகவித்யாதி) (பேசாது) என்றவனந்தரம், "கண்ணுள்ளது காணாது, நெஞ்சானது நினையாது" என்று உடுவது "கொண்டபின்" என்று மூன்றுக்கும் தானே விஷயமாக்குகையை ஹேதுவாக வருளிச் செய்கையாலே இங்ஙனே கூட்டவடுப்பது. ... ... .. (௨)

மூ.—இனியெப்பாவம் வந்தெய்தும் சொல்லீர்
எமக்கிம்மையே அருள் பெற்றமையால் அடும்
துனியைத் தீர்த்து இன்பமே தருகின்றதோர்
தோற்றத் தொன்னெறியை வையம் தொழப்படும்
முனியை வானவரால் வணங்கப்படும்
முத்தினைப் பத்தர்தாம் நுகர்கின்றதோர்
கனியைக் காதல் செய்தென் உள்ளம் கொண்ட
கள்வனை யின்று கண்டுகொண்டேனே. (௩)

| பதம். | உரை | பதம் | உரை. |
|---|---|---|---|
| இம்மையே | இந்த லோக(ஜந்ம)த்திலேயே | எப்பாவம் | (பூர்வோத்தராகங்களில்) எவ்விதமான பாவம் |
| அருள் | (எம்பெருமானுடைய) க்ருபையை | வந்து எய்தும் | வந்து கிட்டப்பெறும்? |
| பெற்றமையால் | ப்ராபித்தபடியாலே, | சொல்லீர் | சொல்லுங்கோள்; |
| இனி | இதுக்குமேலே | அடும் | (ஆத்மாவை) உருமாயப் பண்ணுகின்றதாய் |
| எமக்கு | நம்மை | | |

| | | | |
|---|---|---|---|
| துனியை | ப்ராப்தி ப்ரதிபந்தகமானகர்மங்களை | வணங்கப்படும் | ஆம்ரயிக்கப்படுமவனுய், |
| தீர்த்து | போக்கி | முத்தினை | (முத்துப்போல் குளிர்ந்த (ம்ரமஹரமான) வடிவையுடையனுய் |
| இன்பம் | ஸுகத்தையே | | |
| தருகின்றது | கொடாநின்றவனுய், | பத்தர்தாம் | முமுக்ஷுக்களான உபாஸகராலே |
| ஓர் | அத்விதியமாய் | | |
| தோறறம் | அழகியதாய் | நுகர்கின்றது | புஜிக்க (அநுபவிக்க)ப்படாநின்றுள்ள |
| தொல் | பழையதான | | |
| நெறியை | உபாயபூதனுய், | ஓர் | அத்விதிய மதுரமான |
| வையம் | லோகத்தாராலே | கனியை | பழம் போன்றவனுய், |
| தொழப்படும் | ஆம்ரயிக்கப்படாநின்றவனுய் | காதல் செய்து | ஆசையுற்று |
| | | என் உள்ளம் | என் மாஸ்ஸை |
| முனியை | (அவ்வவர்களுக்கு அளிக்கவல்ல ப்ரயோஜநத்தை) மாநம்பண்ணுமவனுய், | கொண்ட | அபஹரித்த |
| | | கள்வனை | சோரனுனவனை |
| | | இன்று | இப்பொழுது |
| | | கண்டு கொண்டேன் | ஸாக்ஷாத்கரித்தேன். (அ) |
| வானவரால் | நித்யஸூரிகளிறுல | | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (இனியெப்பாவமி த்யாதி) அவனுடைய நிக்ரஹபலமான பாபங்கள் என்னைக்கிட்டவறறுு (க) "அவஶ்யமநு போ⁴க்தவ்யம்- அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிற வசநத்தைக்கொண்டு, அநுபவித்தாலல்லது நசியேனென்றுகொண்டு சிலவை நிற்றல், ப்ராரப்தங்காண் என்றுசிலவை நிற்றல்செய்யவற்றே! "இனி" என்கிறது எத்தைக்கொண்டென்ன; (இமையேயருள் பெற்றமையால்) இஹ லோகததிலே பகவத்ப்ரஸாதததைப் பெற்றபடியாலே, இனியெப் பாவம் வந்தெய்தும் சொல்லீர். (அடுநதுனியை) (உ) "அச்சே²த்³யோঽயமதா³ஹ்யோঽயம்-அச்சேத்யோய மதாஹ்யோயம்" என்று சொல்லப்படுகிற ஆத்மவஸ்துவை, (௩) "அஸந்நேவ- அஸந்நேவ" என்னலாம்படி முடிக்கிற துனி உண்டு - ப்ராப்திப்ரதிபந்தகமான கர்மங்கள், அவற்றை ஸவாஸநமாகப் போக்கி, (௪) "ஏஷ ஹ்யேவாঽநந்த³யாதி - ஏஷஹ்யே வாநந்தயாதி" என்கிறபடியே, நிரதிசயாநந்தியாமபடி பண்ணுகிற, (தோற்றத்தொன்னெறியை) தோற்றம்-அழகு. தொன்மை-பெருமை. அழகிய மஹாபத²(த)ம் என்பர். இதரோபாய பரிக்ரஹம் பண்ணின

(க)
(௩) தை-ஆ-௬-க.
(உ) கீ-உ-உ௪.
(௪) தை-ஆ-எ-க.

ர்க்கும் தன்னையே பற்றவேண்டும்படியாய், தன்னைப் பற்றினார்க்கு வேறொன்றைப்பற்றவேண்டாதபடி ப்ராதாநமாய், நிலைநின்ற உபாயமாயுள்ளவனை. (க) "அறஞ்சுவராகிநின்ற" இப்போதாக எடுக்கவேண்டா, பண்டேஎடுத்து நிற்கிறதாய்த்து. (உ) "ஸநாதநம்- ஸநாதநம்" என்கிறபடியே. அத்தையிறே அவன் (௩) "மாம்-மாம்" என்றது.

(வையம்தொழப்படும்) பூமியிலுள்ளார், இருந்ததேகுடியாக ஆஶ்ரயிக்கப்படுமவனாய், சேதநருடைய ஸ்வரூபபேதத்தோபாதியும் போருமிறே ருசிபேதமும்; அவ்வோ ருசிக்கநுகுணமான பேறுகளைப் பண்ணுகைக்கு மநநம் பண்ணிக்கொண்டிருக்குமவனை, ஒன்றிலோரபேக்ஷையில்லாத நித்யஸூரிகளாலே ஆஶ்ரயிக்கப்படுமவனாய், அவர்களுடைய ப்ரமத்தைப்போக்குமவனை. (பத்தர்தாம்) ஸம்ஸாரத்தில் முமுக்ஷுக்களுண்டு - தன்பக்கல் ருசியுடையராயிருப்பார், அவர்களுக்குக் கண்டபோதே அநுபவிக்கலாம்படி பக்வபல(ஃபல)மாயுள்ளவனை. அவையொன்றுமின்றிக்கே யிருக்கிற என்பக்கலிலே தான் ஆசையுடையனாய், என்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினவனை. நான் அநாதிகாலம்பண்ணிப்போந்த ஆத்மாபஹாரத்தை அரைக்ஷணத்திலே பண்ணினவனை, இன்று நினைவின்றிக்கேயிருக்கக் காணப்பெற்றேன். ... ... ... ... ... ... ... (அ)

---

அரு. —எட்டாம்பாட்டு. (இனியித்யாதி) ஆழ்வீர்! இங்ஙனே நீர் மிகவும்களியாநின்றீர், இந்த்ரிய ஸமுதாயாத்மகமான சரீரம், கர்மாதீநமாய் வந்ததன்றோ, கர்மாநுகுணமாக அவைபோய்விடாவோவென்ன; பாபமாவது-பகவந்நிக்ரஹரூபேண இருப்பதொன்றன்றோ? அநுக்ரஹம்பெற்றால், அவையுண்டோவென்று மடிபிடிக்கிறாரென்று ஸங்கதி.

(அவஶ்யமநுபோக்தவ்யம் - அவஶ்யமநுபோக்தவ்யம்) என்றது - ப்ராரப்தேதரபூர்வ பாபமானவற்றில் கழியுண்ணுதகொடுவினைகளை. ஸித்தோபாயத்துக்கு அழகு ஏதென்ன வருளிச்செய்கிறார் (இதரேத்யாதி). தொன்மைக்கு ப்ரமாணங்களருளிச் செய்கிறார் (அறமித்யாதி). ... (அ)

மூ.—என்செய்கேனடியேனுரையீரிதற்கென்று
மென்மனத்தே யிருக்கும்புகழ்
தஞ்சையாளியைப் பொன்பெயரோன்
நெஞ்சமன்றிடந்தவனைத் தழலேபுரை

---

(க) திருமா-௬. (உ) பார-ஆர-அஅ. (௩) கீ-கஅ-௬௬.

விஞ்சவாளரக்கன்நகர் பாழ்படச்
சூழ்கடல்சிறைவைத்திமையோர் தொழும்
பொன்செய்மால்வரையை மணிக்குன்றினை
யன்றியென்மனம்போற்றி யென்னாதே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அடியேன் | பரதந்த்ரனான நான் | வாள் | வாளாயுதத்தையுடையனான |
| இதற்கு | அவன் பண்ணின இந்த உபகாரத்துக்கு | அரக்கன் | ராவணாஸுரனுடைய |
| என் செய்கேன் | என்ன ப்ரத்யுபகாரம் பண்ணுவேன்? | நகர் | பட்டணமானது |
| உரையீர் | சொல்லுங்கள்; | பாழ்பட | (ஆள்) பாழாகப்போம்படி |
| என்றும் | ஸர்வகாலமும் | சூழ் | (அவ்வூரை) சுற்றிக்கொண்டிருக்கிற |
| என் மனத்தே | என் ஹ்ருதயத்திலேயே | கடல் | ஸமுத்ரத்தை |
| இருக்கும் | வாஸம் பண்ணுகையாலுண்டான | சிறைவைத்து | அணைகட்டினவனாய் |
| புகழ் | கீர்த்தியை யடைந்தவனாய், | இமையோர் | தேவர்களால் |
| தஞ்சை ஆளி | தஞ்சைமாமணிக்கோயிலுக்கு நிர்வாஹகனாய், | தொழும் | ஆஶ்ரயிக்கப்படுமவனாய, |
| பொன் பெயரோன் | ஹிரண்யனுடைய | பொன் செய் | ஸ்ப்ருஹணீயமாய் |
| நெஞ்சம் | மார்பை | மால் | பெரிதான |
| அன்று | அக்காலத்திலே | வரையை | பர்வதம் போன்றவனாய், |
| இடந்தவனை | கிழித்துப்பொகட்டவனாய், | மணி | நீலமணி மயமான |
| தழலே புரை | நெருப்புபோல் கிட்டவொண்ணாதவனாய், | குன்றினை யன்றி | மலைபோலே குளிர்ந்த வடிவையுடையனானவனையொழியவேறொருவனை |
| விஞ்ச | அதிசயித பராக்ரமத்தையுடையனாய் | என்மனம் | என் நெஞ்சானது |
| | | போற்றி என்றாது | வாழக்கடவாய்என்றும் மங்களாசாஸநம் பண்ணமாட்டாது. |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (என்செய்கேன்) உபகாரம் பண்ணாமலிருக்கப் பெறுகிறதில்லை, உபகரிக்கலாவதொன்றும் காண்கிறிலேன், எத்தைச்செய்வேன்? (அடியேன்) எனக்கென்ன ஒரு கைம்முதலில்லாதபடி ஸ்வரூபமே பிடித்து பரதந்த்ரனான நான் எத்தைச்செய்வேன். (உரையீர்) மத்யஸ்த்தராய்க் கரைமேலே நிற்கிற நீங்கள் இதுக்

தொரு போக்கடி சொல்லவல்லிகோள். (என்றும்) என்றுமொக்க என்னுடையஹ்ருதயத்தை விடாதிருக்கையாலேவந்த புகழையுடையனாய். இங்கு புகுருகைக்குடலாகத் தஞ்சாவூரிலே நின்றவனை. (பொன்பெயரோனித்யாதி) எனக்குப் பண்டே உபகரித்து நின்றவனை. (தழலேயித்யாதி) சிவராய் வந்து கிட்டவொண்ணாதபடி நெருப்பை உமிழாநிற்பானாய், அநபிபவநீயனாய், அஸௌரப்ராதீக்ஷனாய், ஒளியை யுடைத்தாயிருப்பதொரு வாளை தேவதைபக்கலிலே பெற்றுடையனாயிருக்கிற ராக்ஷஸனுடைய நகரியானது பாழ்படும்படி லங்கைக்கு அகழான கடலை அணைசெய்தவனை.

இமையோருண்டு - ப்ரஹ்மாதிகள், எங்கள் குடியிருப்புப் பெற்றோமென்று (க) "ஓ[illegible] - பௌரந்தரராயணோதேவ:" என்றாப்போலே ஸ்தோத்ரம்பண்ண, அத்தாலே புசிபெற்ற வடிவையுடையனாய் நின்றவனை. "இவர்கள் கார்யம்செய்து தலைக்கட்டப்பெற்றோமிறே" என்று, அத்தாலே குளிர்ந்த நிறத்தையுடையனாய் நின்றபடி. இப்படிப்பட்ட இவனையல்லது "போற்றி" என்று என்னுடைய ஹ்ருதயமானது மங்களாசாஸநம் பண்ணாது. (உ) * பாழாளாகப்படை பொருதானுக்கல்லது என்னுடைய ஹ்ருதயமானது பல்லாண்டு பாடாது. நித்யஸூரிகள் பெறும்பேற்றைப்பெற்றேன் ஸம்ஸாரியானநான், பரதந்த்ரனாயிருக்கையாலே, ப்ரத்யுபகாரம் பண்ணலாவது காண்கிறிலேன், எத்தைச்செய்வேன். சொல்லிகோளென்கிறார். ... ... ... ... ... ... ... (கூ)

அரு.— ஒன்பதாம்பாட்டு (எனசெய்கேனித்யாதி) கீழ்ப்பாட்டில், அவனநுக்ரஹித்தானாகையாலே, நிக்ரஹரூபமான பாபம் வந்தெய்தாது என்றாநின்றீர். உம்மை இப்படி அநுக்ரஹிக்கைக்கு. உம்மால் பெறப்புகுகிற உபகாரமென்னென்ன, நான் அவன்பண்ணின உபகாரங்களை அநுஸந்தித்து உபகாரஸ்ம்ருதியாலே ப்ரத்யுபகாரம் பண்ணத் தேடினாலும் பணணவிரகுண்டோவென்கிறாரென்று ஸங்கதி.

"அடியேன், இதற்கு - அவன்பண்ணின அநுக்ரஹ விசேஷத்துக்கு, என்செய்கேன்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உபகாரமித்யாதி). ப்ரஹ்லாதனுக்கு உபகரித்ததே தம்மதாக வருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி). சிறைவைக்கை - போகவொட்டாமல் தடுக்கை; அத்தால் பலிதம் (அணைசெய்தவனை) என்றது.

(க) ரா-யு-கஉ0-கங. (உ) தி-பல்-ங.

"மணிக்குன்றினை" என்றதுக்குத் தாத்பர்யம் (இவர்களித்யாதி). பாட்டுக்கெல்லாம் தொகுத்தபாவம் (நித்யஸூரிகளித்யாதி).

மூ.—தோடுவிண்டலர் பூம்பொழில் மங்கையர்
தோன்றல் வாள்கலியன் திருவாலி
நாடன் நன்னறையூர்நின்ற நம்பிதன்
நல்ல மாமலர்ச்சேவடி சென்னிச்
சூடியும் தொழுதெழுந்தாடியும்
தொண்டர்கட்கவன்சொன்ன சொன்மாலை
பாடல்பத்திவை பாடுமின் தொண்டீர்
பாட நும்மிடைப் பாவம் நில்லாவே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| தோடு | இதழ்களானவை |
| விண்டு | ஸந்திபந்தங்கள் விட்டு |
| அலர் | விகஸியாநின்ற |
| பூ | புஷ்பங்களையுடைத்தான |
| பொழில் | சோலைகள் சூழ்ந்த |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார்க்கு |
| தோன்றல் | ப்ரதாநராய், |
| வாள் | வாளாலே |
| கலியன் | சத்ருக்களை நிரஸிக்குமவராய், |
| திருவாலிநாடன் | திருவாலிநாட்டுக்கு நிர்வாஹகரான |
| அவன் | அந்த ஆழ்வார், |
| நல் | விலக்ஷணமான |
| நறையூர் | திருநறையூரிலே |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| நம்பிதன் | ஸகல கல்யாணகுணபூர்ணனுடைய |
| நல்ல | அழகியதாய் |
| மா | பெரிதான |
| மலர் | புஷ்பம்போல் அதிஸுகுமாரமாய் |

| பதம். | உரை. |
|---|---|
| சே | அழகியதான (ஆச்ரிதாநாச்ரித விபாகமற ஸர்வஸுலபமான) |
| அடி | திருவடிகளை |
| சென்னி | தம் திருமுடியில் |
| சூடியும் | தரித்துக்கொண்டும் |
| தொழுதும் | ஆச்ரயித்தும் |
| எழுந்து | எழுந்திருந்து |
| ஆடியும் | நர்த்தநம்பண்ணியும் |
| தொண்டர்கட்கு | ஆச்ரிதர் உஜ்ஜீவிக்கைக்காக |
| சொன்ன | அருளிச்செய்த |
| சொல்மாலை | சப்தஸந்தர்ப்ப விசேஷமான |
| இவை பத்து பாடல் | இந்த பத்துப்பாட்டுக்களையும் |
| தொண்டீர் | பகவத்விஷயத்தில் ருசியுடையவர்களே |
| பாடுமின் | காநம்பண்ணுங்கோள், |
| பாட | காநம்பண்ணவே |
| நும்மிடை | உங்களிடத்தில் |
| பாவம் | பாபமானது |
| நில்லா | தங்காது. (கo) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (தோடுவிண்டலரித்யாதி) இதழ் விண்டலருகிற பூவையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட திருமங்கையிலுள்ளார்க்கு ப்ரதாநராயுள்ள ஆழ்வார். (வாள்கலியன்) பகவத்ப்ராப்திக்கு ப்ரபத்திபோலேயாய்த்து, ப்ரதிபக்ஷநிரஸநத்துக்குக் கையில்வாள். (திருவாலிநாடன்) இதுவே போருமாய்த்து ஏற்றம். (நன்னறையூர்) திருநறையூரிலே வந்து நிற்கையாலே கல்யாணகுணங்களால் பரிபூர்ணனானவன்.

நிரதிசயபோக்யமாய், குணகுணநிரூபணம்பண்ணாத திருவடிகளைத் திருமுடிக்கு வளையமாக வைத்தும். (தொழுதும்) (க) "நம: புரஸ்தாத்-நம: புரஸ்தாத" என்கிறபடியே தொழுதும், தொழப்பெற்ற ஹர்ஷத்தாலே இச்சரீரமிருந்தவிடத்திலிராதே ஆடியும். (தொண்டர்கட்கு) தாமறிந்ததாக அநுபவித்தது விடுகையன்றிக்கே, பின்புள்ளார்க்கும் அநுபவயோக்யமாம்படி (உ) "தொண்டர்க்கமுதுண்ண" என்கிறபடியே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் விருந்திட்டாராய்த்து. (பாடல்பத்து) அது தான் ஸபாதலக்ஷக்ரந்தமாய், புக்கவிடமும் புறப்பட்டவிடமும தெரியாதேயிருக்கையன்றிக்கே பாடல்பத்தும், பகவத்விஷயத்தில் ருசியுடையாரித்தைப் பாடப்பாருங்கோள். (பாடுதும்மிடையித்யாதி) கரும்பு தின்னக் கூலியிறே, பாடுகைதானே ப்ரயோஜநமாகப் போந்திருக்க, அதுக்குமேலே ப்ராப்திப்ரதிபந்தகமான பாபங்கள், "நமக்கு இவ்விடம் ஆஶ்ரயமல்ல" என்று, தன்னடையே விட்டுப்போம். ... ... ... ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அ௫—பத்தாம்பாட்டு. (தோடித்யாதி) "தோன்றல்" என்றதினர்த்தம் (ப்ரதாநராயுள்ள) என்றது.

"சேவடி" செவ்வையானவடி என்று அருளிச்செய்கிறார் (குணகுணேத்யாதி). (வளையமாகவைத்து) தரித்து என்றபடி. ... ... (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்தில் மூன்றாந்திருமொழி முடிந்தது.

---

(க) கீதை-௧௧-௪௦. (உ) தி-வாய்-௯-௪-௯.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து நாலாம்திருமொழி

### க ண் சோ ர ப் ர வே ச ம்.

வ்யா. —(கண்சோரவெங்குருதி) இது திருமங்கையாழ்வாருடைய (க) நெடுமாற்கடிமை. பாகவத சேஷத்வத்தைச் சொல்லுகிற திருமொழியாய்த்து. பெரியநம்பி, ஜந்ம வ்ருத்தாதிகளால் குறைய நின்றரொருவர் திருநாட்டுக்கு நடந்தாராய், அவரை அநுகமநம் பண்ணி, தீர்த்தமாடாதே வந்தெழுந்தருளியிருக்க, இத்தை எம்பெருமானார் கேட்டருளி, பெரியநம்பிபாடே வந்து, "மர்யாதை கிடக்கக் கார்யம் செய்யவேண்டாவோ?" என்ன; (க) "பயிலும் சுடரொளி (உ) *நெடுமாற்கடிமை, கடலோசையோபாதியோ? சிறிது குறையவாகிலும் ஆசரிக்கவேண்டாவோ?" என்றருளிச்செய்தார். பிள்ளை அழகியமணவாளரரையர், கரையேபோகாநிற்க, "உள்ளேமாமதலைப் பிரானைத்திருவடிதொழுதுபோனுலோ"என்ன; "ஆர்தான் † திருமங்கையாழ்வாருடைய பசைந்தவளையத்திலே கால்வைக்கவல்லார்" என்றருளிச்செய்தார்.

திருநறையூரிலே புக்கு, நம்பியழகை அநுஸந்தித்து, அங்கு நின்றும் போந்து, திருச்சேறையிலே வந்து, மாமதலைப்பிரானுடைய மௌக்த்யத்தை யநுஸந்தித்து, அம்மௌக்த்யத்துக்குப் போலியான க்ருஷ்ணவதாரத்தை அநுஸந்தித்து, அவ்வழியாலே அவதாரங்களெல்லாவற்றையு மநுஸந்தித்து, அவையெல்லாவறறுக்கு மடியாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறபடியை அநுஸந்தித்து, இப்படி அவன்படிகளை அநுஸந்தித்து, (ங) "[illegible]குணைர்தாஸ்யமுபாகதஃ" என்று தோற்று எழுதிக்கொடுத்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் நமக்கு உத்தேச்யரென்று இங்ஙனே பாகவத சேஷத்வத்தை அநுஸந்தித்துப் பேசியநுபவிக்கிறார். இத்தால், அநந்யார்ஹ சேஷத்வத்தைச் சொல்லிற்றாகிறது. அதாகிறது - ததீய சேஷத்வ பர்யந்தமாகையிறே. ஒன்றிரண்டுக்ரமம்சென்றால் மீளாதிறே.

(க) தி-வாய்-க-எ. (உ) தி-வாய்-அ-கஂ. (ங) ரா-கி-ச-கஉ.

† (பா) திருமங்கையாழ்வார்வசைந்த.

அரு.—கண்சோர வெங்குருதிப்ரவேசம்—கீழ் (க)*நண்ணாதவாளவுணரிலே பாகவதசேஷத்வத்தைஅநுஸந்தித்தாரேயென்ன வருளிச்செய்கிறார் (இதுஇத்யாதி) ஆழ்வார் (உ) * பயிலும்சுடரொளி அருளிச்செய்தாப்போலே, அங்கேயுமநுஸந்தித்தாரேயாகிலும், (ங) "நெடுமாற்கடிமை போல இங்கேயுமநுஸந்தித்தாரென்று கருத்து. ஆழ்வார்தாம் இருகால்மட்டு அநுஸந்திப்பானென்? இவர்தாமவரைப்போலே இருகால்மட்டு அநுஸந்திப்பானென்? ப்ரமேயபேதம் வேண்டாவோவென்ன வருளிச்செய்கிறார் (பாகவதேத்யாதி). * பயிலும்சுடரொளியில், பாகவதவிஷயத்தில் சேஷித்வாநுஸந்தாநம்பண்ணி, *நெடுமாற்கடிமையில், போக்யத்வாநுஸந்தாநம்பண்ணினரோவாபாதி, இவரும் கீழே * நண்ணாதவாளவுணரிலே போக்யத்வேந அநுஸந்தித்தாராகையாலே இங்கே சேஷித்வாநுஸந்தாநம் பண்ணுகிறாரென்று கருத்து, * நெடுமாற்கடிமையென்று, இருகால் மட்டு அருளிச்செய்தமாத்ரத்துக்கு த்ருஷ்டாந்தம். பாகவத சேஷத்வமுத்தேஸ்யமென்னுமதுக்கு ஸம்வாதம் (பெரியநம்பி யித்யாதி) (சிறிது குறையவாகிலும்) என்றது-(௪) "அவரெங்கள் குலதெய்வமே" என்று குலதெய்வத்தோடொக்க பூஜிக்கவேணடியிருக்கும்; ஸ்பர்சமாத்ரமாகிலும் வேண்டாவோவென்கை. இவர்தாம் பாகவத சேஷத்வத்திலே உற்றிருப்பரென்னுமதுக்கு ஜ்ஞாபகமேதென்ன வருளிச்செய்கிறார் (பின்னையித்யாதி)

கீழ்த்திருமொழிகளோடு இதுக்கு ஸங்கதிகதநமுகத்தாலே ப்ரமேயத்தை யருளிச்செய்கிறார் (திருநறையூரிலித்யாதி) பலிதார்த்தமருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி). ஸ்வரூபப்ரகாசகமான ப்ரணவத்தில் உகாரார்த்தம் சேர்ந்திருக்கிறதென்று கருத்து. . . ... ... *

மூ.—

கண்சோர வெங்குருதி வந்திழிய வெந்தழல்போல் கூந்தலாளை
மண்சேர முலையுண்ட மாமதலாய் வானவர்தம்கோவே யென்று
விண்சேருமிளந்திங்களகடுரிஞ்சு மணிமாடமல்கு செல்வத் [லாரே.
தண்சேறை யெம்பெருமான் தாள்தொழுவார் காண்மின்னென் தலைமே

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வெம் | க்ரூரமான பார்வையையுடைய | குருதி | ரக்தமானது |
| | | வந்து | வெள்ளமிட்டுக் கொண்டுவந்து |
| கண் | கண்ணானது | | |
| சோர | சுழலமிட்டுத் தளரும்படியாகவும் | இழிய | சரீரத்தில் நின்றும் தரையில் குதிக்கும்படியாகவும் |
| வெம் | உஷ்ணமான | | |

(க) உ-௯. (உ) தி-வாய்-ங-எ. (ங) தி-வாய்-அ-௰. (௪) உ-௬-௪.

| | | | |
|---|---|---|---|
| வெம் | வெப்பத்தை யுடைத்தான | அகடு | கீழ்வயிற்றை |
| தழல்போல் | நெருப்புப்போலே சிவந்திருக்கிற | உரிஞ்சு | பிளவாநின்ற |
| கூந்தலாளை | மயிரையுடைய பூதனையை | மணிமாடம் | ரத்நமயமான க்ருஹங்களாலே |
| மண்சேர | (ப்ரேதமாய்) பூமியிலே விழும்படி | மல்கும் | ஸம்ருத்தமான [ய் |
| முலையுண்ட | ஸ்தநபாநம் பண்ணி | செல்வம் | ஸம்பத்தையுடையதா |
| மா | அத்யந்தம் [ன | தண் | குளிர்ந்து ப்ரமஹரமான |
| மதலாய் | இளம்பருவத்தை யுடையனானவனே! | சேறை | திருச்சேறையிலெழுந்தருளியிருக்கிற |
| வானவர்தம் | நித்யஸூரிகளுக்கு | எம்பெருமான் | ஸ்வாமியினுடைய |
| கோவே | ஸ்வாமியே! [ண்ணி, | தாள் | திருவடிகளை |
| என்று | என்று ஸ்தோத்ரம்ப | தொழுவார் | ஆச்ரயிக்குமவர்கள் |
| விண்சேரும் | ஆகாசத்தையடைந்திருக்கிற | என்தலைமேலார் | என்சிரஸ்ஸில் திருவடிகளை வைத்து உலாவுமவர் |
| இளந்திங்கள் | பாலசந்த்ரனுடைய | காண்மின் | காணுங்கோள். (௧) |

வ்யா.—முதற்பாட்டு. (கண்சோரவித்யாதி) பூதனையானவள், யசோதைப்பிராட்டி வடிவைக்கொடுவந்து கிட்ட, அவளை முடித்தானைத்து. க்ரூரமாக நோக்கிக்கொடுவந்த கண்கள்சோர (வெங்குருதி) முலைப்பால்வழியே உதிரவெள்ளமானது கொழித்திழிய.(வெந்தழல்) ப்ராணன் போனவாறே, ஆக்கனை ஒப்பனையும் போமிறே. நெருப்புப்போலே சிவந்த மயிர்முடியையுடையளான பூதனை பிணமாய் பூமியிலே விழச்செய்தேயும், பின்னையும் முலை யுண்ணும்படி யாய்த்து மௌக்த்யம். (வானவரித்யாதி) பூதனை, தாய்வடிவைக் கொண்டுவந்து முலை கொடுக்க, பேயென்று பாராதே முலையுண்டவன்றானுமிரான்னில்; நித்யஸூரிகள் பரிய விருக்கிறவனாய்த்து.

ஸ்வர்க்கத்திலே ஸுகப்ரதாநனாய் வர்த்திக்கிற சந்த்ரனுடைய கீழ் வயிற்றைப் போழும்படியான ஓக்கத்தையுடைத்தாய், மணிமயமான மாடங்களால் வந்த நிரவதிக ஸம்பத்தையுடைத்தாயிருக்கிற திருச்சேறையிலேயிருக்கிற ஸ்வாமி. (தாள் தொழுவாரித்யாதி) "திருத்துழாய் போலேயும் கௌஸ்துபம் போலேயும் உம்முடைய ஸ்பர்சம் நயக்கினிதாயிராநின்றது, உம்முடைய தலையைக்கொடுவாரும் நம்மு

டைய காலைவைக்க" என்ன; இங்கு உமக்கொழியாது, வருத்தவர்கள் காலுக்கு இடம் போருமித்தனை. ... ... ... ... (க)

அரு. —முதற்பாட்டு. (கண்சோரவித்யாதி) வெந்தழல்போல் கூந்தலாளைப் பிள்ளைகண்டால் அருகமொழியமுலையுண்ணக்கூடுமோவென்னவருளிச்செய்கிறார் (பூதனை யித்யாதி). மேலில்பதங்களில் "வெம்" என்ற பதத்தை இங்கும் அநுஷங்கித்தத தாத்பர்யமருளிச்செய்கிறார் (க்ரூரமித்யாதி). (ஆக்கனை) ஆகப்பட்ட."மதலை" என்று-பிள்ளையாய், மௌக்த்த்யம்தோற்ற,"மா" என்றுஅத்தைவிசேஷிக்கைக்குக் கருத்தென்னென்னவருளிச்செய்கிறார் (கெருப்பித்யாதி).

"உரிஞ்சு" என்றதினர்த்தம்(போழும்படியான)என்றது. மறுபாடுருவும்படியென்கை. "காண்மின்" என்று நிஷ்கர்ஷித்துச் சொல்லுகைககு உட்கருத்தையருளிச்செய்கிறார் (திருந்துழாயித்யாதி). "இத்தனை" என்ற வநந்தரம், "என்றுசொல்லுவன்கிடிகோள்" என்றுசேஷம். ... ... (க)

மூ. —

அம்புருவ வரி நெடுங்கணலர்மகளை வரையகலத்தமர்ந்து மல்லல்
கொம்புருவவிளங்கனிமேலிளங்கன்றுகொண்டெறிந்தகூத்தர்போலாம்
வம்பலரும் தண்சோலை வண்சேறை வானுந்து கோயில்மேய [ருரே.
எம்பெருமான்தாள்தொழுவாரெப்பொழுதுமென்மனத்தே யிருக்கின்

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அம்புருவ | அழகியபுருவத்தையும் | எறிந்த | வீசிப்போகட்ட |
| வரி | ரேகைகளையுடையதா | கூத்தா | நடையழகை யுடைய |
| நெடு | நீண்டிருக்கிற [ய் | வம்பு | பரிமளமானது [ுய், |
| கண் | கண்களையு முடையளாய், | அலரும் | பரமபாகின்ற |
| அலர்மகளை | தாமரைப்பூவிலவதரித்தவளான பிராட் | தணசோலை | குளிர்ந்த சோலைகளையுடைய [யில் |
| வரை | மலைபோன்ற [டியை | வண்சேறை | அழகிய திருச்சேறை |
| அகலத்து | திருமார்வில் | வான்உந்து | ஆகாசத்தைத் தள்ளாநின்ற (உயர்த்தியையுடைய) |
| அமர்ந்து | பொருந்தச்செய்து, | | |
| மல்லல் | தழைத்திருக்கிற | கோயில் | திவ்யாலயத்தில் |
| கொம்பு | கிளைகளை | மேய | நித்யவாஸம்பண்ணுகின்றவனை |
| உருவ | வடிவாகவுடைய | | |
| விளங்கனிமேல் | (அஸுராவிஷ்டமான) விளாமரத்தின் பழத்தின்மேலே | எம்பெருமான்தாள் தொழுவார், | |
| | | எப்பொழுதும் | ஸாவகாலமும் [யே |
| இளங்கன்று கொண்டு | இளம்பருவமான வத்ஸாஸுரனைக்குறுந்தடியாகக்கொண்டு | என்மனத்தே | என் ஹ்ருதயத்திலே |
| | | இருக்கின்றார் | வாஸம்செய்கிறார்கள். |

வ்யா. —இரண்டாம்பாட்டு. (அம்புருவவித்யாதி). அழகிய புருவத்தையுடையளாய், செவ்வரியையும், கருவரியையுமுடைத்தாய், ஈஶ்வரனுக்குக் காலமெல்லாமநுபவியா நின்றாலும் உண்டறுக்க வொண்ணாதபடியான பரந்த திருக்கண்களையுடையளாய், தாமரைப் பூவை இருப்பிடமாகவுடையளாயிருக்கிற பிராட்டியை, மலைபோலே யிருக்கிற திருமார்விலேவைத்து. (மல்லல் கொம்புருவவித்யாதி) இப்படி பிராட்டிக்கு இருப்பிடமென்று பாராதே, தழைத்த கொம்புகளை யுடைத்தாயிருக்கிற விளவாகிற அஸுரனை, கன்றாய் வந்த அஸுரனைக்கொண்டு, இலக்கைக்குறித்து எறிகைக்காக இட்ட நாலடியும் நடைச்சக்ரவத்துப் பிடிக்கவேண்டும்படியா யிருந்ததாய்த்து. மல்லல் - பெருமை.

(வம்பலருமித்யாதி) நித்யவஸந்தமாய், ஶ்ரமஹரமான பொழிலை யுடைத்தாயிருக்கிற திருச்சேறையிலே, ஸ்பர்த்தையாலே ஆகாசத்தைத் தள்ளுகிறாப்போலேயிருக்கிற கோயிலிலே வந்து நித்யவாஸம் பண்ணுகிறவனுடைய திருவடிகளைத் தொழுவார். (எப்பொழுதுமென் மனத்தேயிருக்கின்றாரே) (க) "ஸதத்யஸ்மின் - நிதித்யாஸிதவ்ய:" என்கிற விஷயத்துக்கு இடங்காண்கிறிலேன். ... ... ... (உ)

அரு. —இரண்டாம்பாட்டு. (அம்புருவவித்யாதி) தலைமேலே அவர்களாகிலும், உம்முடைய நெஞ்சு, பகவத்விஷயத்தையன்றிச்சிந்தியாதென்று நின்றீரே, அங்கே அவனே புகுந்தாலோவென்ன; அங்குமவனுக்கு இடம் காணேனென்கிறாரென்று ஸங்கதி.

"அமர்ந்து" என்றதை அமர்த்தியென்றாக்கி யருளிச்செய்கிறார் (அழகியவித்யாதி). "எப்பொழுதும்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிதித்யாஸிதவ்ய இத்யாதி). ... ... ... ... ... ... (உ)

மூ. —

மீதோடிவாளெயிறுமின்னிலக முன்விலகுமுருவினளைக்
காதோடு கொடி மூக்கன்றுடனறுத்த கைத்தலத்தா வென்று நின்று
தாதோடு வண்டலம்பும் தண்சேறையெம்பெருமான் தாளையேத்திப்
போதோடு புனல்தூவும்புண்ணியரே விண்ணவரில் பொலிகின்றாரே.

(க) ப்ருஹ-ச-ஐ-ரு.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மீதுஓடி | ஊர்த்வமுகமாகவளர்ந்து | கைத்தலத்தா | திருக்கைகளை யுடையவனே! |
| வாள் | ஒளியை யுடைத்தாயிருக்கிற | என்று | என்று இவ்வண்ணமாக, |
| எயிறு | கோரைப்பல்லானது | நின்று | ஒருபடிப்பட்டுநின்று, |
| மின் இலக | மின்னல்போலே ப்ரகாசியாநிற்க, | தாதோடு | பூந்தாதுகளோடே (கூடியிருக்கிற) |
| முன் | எதிரில்(நிற்கப்போகாமல் அங்கு)நின்றும் | வண்டு | வண்டுகளானவை |
| விலகும் | ஒதுங்கிப் போகவேண்டும்படியான | அலம்பும் | சப்தியாநின்ற |
| உருவினளை | (பயங்கர) ரூபத்தையுடைய சூர்ப்பணகையை | தண்சேறைஎம்பெருமான் | |
| காதோடு | செவியுடன்கூட | தாளை | திருவடிகளை |
| கொடிமூக்கு | கொடிபோன்ற நாஸிகையை [ல் | ஏத்தி | ஸ்தோத்ரம் பண்ணி, |
| அன்று | அந்தராமாவதாரத்தி | போதோடு | புஷ்பங்களோடேகூ |
| உடன் | அந்த க்ஷணத்திலேயே | புனல் | ஜலத்தை [ட |
| அறுத்த | சே(஛்)தித்துவிட்ட | தூவும் | பரிமாறாநின்ற |
| | | புண்ணியர் | பாக்யசாலிகள் |
| | | விண்ணவரில் | நித்யஸூரிகளிற்காட்டிலும் |
| | | பொலிகின்றார் | ஸம்ருத்தராகிறார்கள் (அதிசயித்திருக்கிறார்கள்). (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மீதோடியித்யாதி) மேலெங்கும் பரந்து, ஒளியையுடைத்தாயிருக்கிற எயிறானது ஒளிவிட. (மின்னிலக) மின்போலேவிளங்க. (முன்விலகும்) மின்னினெதிர் விழிக்கவொண்ணாதாப்போலே தனுக்கென்னவேண்டும்படியான வடிவையுடையவளை, அன்றிக்கே, (மீதித்யாதி) மேலேபரந்து, ஒளியையுடைய எயிறானது மின்போலே விளங்க. (முன்விலகும்) முன்னே ஸஞ்சரிக்கிற வடிவையுடையவளை என்றுமாம். (காதோடு கொடிமூக்கு) பிராட்டியோடு போலியாகப் ‡பண்ணிக்கொடுவந்த அவயவங்களைப்போக்கின திருக்கைகளை யுடையவனே! (க) "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:- ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்னக்கடவதிறே.

(தாதோடித்யாதி) தாதோடே வண்டுகளானவை மதுபானம் பண்ணி அறையாநின்றுள்ள திருச்சேறையிலே எழுந்தருளியிருக்

(க) ரா-ஆர-௩௪-௧௩. ‡ (பா) பேணிக்கொண்டுவந்த.

கிறவன் திருவடிகளை ஏத்தி. (போதோடு புனல்தூவும்புண்ணியரே) புஷ்பங்களோடேகூட ஜலத்தைக் கொண்டு ஆஶ்ரயிக்கிற பாக்யாதி கரே. (க) * சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி ஆஶ்ரயிக்கிற நித்ய ஸூரிகளில் ஸம்ருத்தராகிறார்-அங்கேயிருந்து ஆஶ்ரயிக்கிறவர்கள், இங்கே யிருந்தபடியே ஆஶ்ரயிக்கிறவர்களோடு ஒவ்வாரிறே. ... (௩)

---

**அரு** —மூன்றாம்பாட்டு. (ஶ்ரீதோடியித்யாதி) ஆழ்வீர்! நீரிவ்விபூதியி லிருக்கும் ஶ்ரீவைஷ்ணவர்களை உமக்கு ஶிரஸா வாஹ்யராகவும், மநஸா த்யேயராகவும் அருளிச்செய்யாநின்றீர்; ப்ரக்ருதிமண்டலத்திலிருப்பார் அத்தனை ஶ்லாக்யரோ? அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்த(ஶ்ரீ)ராறன்றோ உத்தேஶ்யர் என்ன வருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"முன்விலகும்" என்றதுக்கு முன் நிற்கவொண்ணாதே விலகவேண்டும் படியான வடிவையுடையவளென்றும், முன்னே ஸஞ்சரிக்கிற வடிவை யுடையவளென்றும் இரண்டர்த்த மருளிச்செய்கிறா (மின்னித்யாதி). முற்பட்டயோஜனையில், விரூபையாய்வருகையாலேபிற்காலிக்கவேண்டும் படியான வடிவுடையவளென்று அவளுடைய ஸ்வாபாவிக வேஷத்தைச் சொன்னாராய், இரண்டாம்யோஜனையில், காமரூபிணியாகையாலே அபிரூபையாய் ஏறிட்டுக்கொண்ட வடிவையுடையவளென்றாராகையால் இத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (பிராட்டியித்யாதி). இளையபெருமாளன்றோ மூக்கரிந்ததென்ன வருளிச்செய்கிறார் (ராமஸ்ய இத்யாதி).

(அறையாநின்றுள்ள) சப்தியாநின்றுள்ள. ... ... ... (௩)

மூ.—

தேராளும் வாளரக்கன்தென்னிலங்கை வெஞ்சமத்துப்பொன்றிவீழப்
போராளும்சிலையதனால்பொருகணைகள்போக்குவித்தாயென்றுநாளும்
தாராளும் வரைமார்பன் தண்சேறை யெம்பெருமானும்பராளும்
பேராளன்பேரோதும்பெரியோரை யொருகாலும்பிரிகிலேனே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தேர் ஆளும் | தேர்களை நடத்தவல்லனாய் | வெம் சமத்து | க்ரூரமானயுத்தத்தில் |
| வாள் | வாளாயுதத்தை யுடையனை | பொன்றிவீழ | சிதிலமாய் அழிந்து போம்படியாக, |
| அரக்கன் | ராவணஸுரனுடைய | போர் ஆளும் | யுத்தத்தை நடத்த வல்ல |
| தென் இலங்கை | ஶ்லாக்யமான லங்கையானது | சிலையதனால் | தநுஸ்ஸினாலே |

(க) தி-வி-உ-க.

| | |
|---|---|
| பொரு | (தானே) சண்டை செய்யாநின்ற |
| கணைகள் | பாணங்களை |
| போக்கு வித்தாய் | ப்ரயோகித்தவனே! |
| என்று | என்றுசொல்லி, |
| நாளும் | தினந்தோறும், |
| தார் ஆரும் | திருத்துழாய் மாலையையுடைய |
| வரைமார்வன் | மலைபோன்றதிருமார்வையுடையனாய், |
| உம்பர் ஆரும் | மேலுலகங்களைப்பரிபாலநம் பண்ணுகிற |
| பேராளன் | பெருமையுடைய (ஸர்வாதிக)னை |
| தண்சேறை எம்பெருமான் | |
| பேர் | திருநாமங்களை |
| ஓதும் | கீர்த்தியாநின்ற |
| பெரியோரை | மஹாத்மாக்களை |
| ஒருகாலும் | ஒருக்ஷணமும் |
| பிரிகிலேன் | பிரியமாட்டேன். (ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (தேராளுமித்யாதி) ஆனை குதிரை காலாளுக்கு அவதியில்லாமையாலே, தேருக்கேயாய்த்து மெய்க்காட்டுப்பட்டோலை கொள்ளுவது. (வாளரக்கன்) அவையும் மிகையாம்படி, ப்ரதிபக்ஷநிரஸநத்துக்குக் கையில் வாளேயமையும். (தென்னிலங்கை) தேவதைகளுக்கு ப்ரவேசிக்க வரிதான ஊரைப் பூசலிலே சிதிலமாய்ப்போம்படி பண்ணி. (போராளுமித்யாதி) யுத்தத்தைநடத்தாநின்றுள்ள வில்லாலே. (பொருகணைகள் போக்குவித்தாய்) (க) "దీప్త పావక సంకాశైః - தீப்தபாவகஸங்காஶைः" என்கிறபடியே, தொடுத்துவிடுகிறபோது அம்பாய், எதிரிகள்மேலே நெருப்பை எரித்துக்கொடுபோய் தைக்கிற அம்பை நடத்தினவனே! என்று.

(தாராளுமித்யாதி (உ) "தாழுமருவிபோல் தார்கிடப்பச்சூழும்" என்கிறபடியே, ஜகத்ரக்ஷணத்துக்குத தனிமாலையிட்டுக்கொண்டிருக்கிறவன். (தண்சேறை) ரக்ஷணத்துக்குப் பாங்கான கலவிருக்கையையுடையவன். (உம்பரித்யாதி) உபரிதந லோகங்களை நடத்துகிற ஸர்வாதிகன். (பேரோதும்) வாயாலேதிருநாமம்சொல்லாவிடில் தரியாத ஸ்வபாவத்தை யுடையராய்க்கொண்டு ஸங்கீர்த்தநம் பண்ணுகிற பெரியோருண்டு - அவன்றானுமகப்பட (௩) "మహాత్మానః - மஹாத்மாநः" என்னும்படியிருக்கிற மஹாப்ரபாவர்களை. (ஒருகாலும் பிரிகிலேனே) க்ஷணகாலம் பிரிய, காலமெல்லாமிடைவிடாமலநுபவிக்கலாமென்னிலும் பிரிய க்ஷமனல்லேன். ... ... ... ...(ச)

அரு.—நாலாம்பாட்டு. (தேராளுமித்யாதி) கீழ்ப்பாட்டில் (ச) "விண்ணுளாரிலும் சீரியர்" என்று அநுஸந்தித்தார்; அந்த ஏற்றத்தால் இவர்களி

(க) ரா-யு-க௲-உஉ. (உ) ௩-திரு-௫௩. (௩) கீ-௯-௧௩. (ச) தி-வி-௪௩.

டத்தில் தமக்குப் பிறந்த பரமபக்தியைப் பேசுகிறாரென்று ஸங்கதி.

"தென்" என்றது-ப்ரைஷ்ட்யமாய் அருளிச்செய்கிறார் (தேவதைகளுக்கித்யாதி).

(தாழுமருவி) தாழ்ந்துவருமருவி. "ஓதும்" என்ற வர்த்தமாநார்த்தமருளிச்செய்கிறார் (வாயாலேயித்யாதி). ... ... ... (ச)

மூ. —

வந்திக்கும் மற்றவர்க்கும் மாசுடம்பில் வல்லமணர் தமக்குமல்லேன்
முந்திச்சென்றரியுருவாயிரணியனை முரணழித்த முதல்வற்கல்லால்
சந்தப்பூ மலர்ச்சோலைத் தண்சேறை யெம்பெருமான் தாளை நாளும்
சிந்திப்பார்க்கென்னுள்ளம் தேனூறி யெப்பொழுதும் தித்திக்குமே,

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அரிஉருவாய் | நரஸிம்ஹமாய்க்கொண்டு | மற்றவர்க்கும் | ஜைநவ்யதிரிக்தரான பௌத்தர்க்கும் |
| முந்தி | முன்னே | அல்லேன் | கூட்டனல்லேன்; |
| சென்று | போய் | சந்தப்பூ | சந்தநபுஷ்பங்களான |
| இரணியனை | ஹிரண்யாஸுரனுடைய | மலர் | விகஸியாநின்ற [வை |
| முரண் | பலத்தை | சோலை | பொழில்கள்சூழ்ந்த |
| அழித்த | அழியச்செய்த | | தண்சேறைஎம்பெருமான்தாளை, |
| முதல்வற்குஅல்லால் | ஜகத்காரணபூதனுக்கொழிய, | நாளும் | தினந்தோறும் |
| வல் | வலிந்து வாதம் பண்ணுகின்றவர்களாய் | சிந்திப்பார்க்கு | த்யாநம் பண்ணுமவர்கள் விஷயத்தில் |
| உடம்பில் | சரீரத்தில் | என் உள்ளம் | என்மநஸ்ஸானது |
| மாசு | அழுக்கையுடையவர்களான | தேன்ஊறி | தேனிலே நனைந்து (தேன்வெள்ளமிடாநின்றுகொண்டு) |
| அமணர்தமக்கும் | ஜைநர்க்கும், | எப்பொழுதும் | ஸர்வகாலமும் |
| வந்திக்கும் | தங்கள்தேவதைகளை வந்தநம் பண்ணுகின்ற | தித்திக்கும் | மதுரமாயிராநின்றது. |

வ்யா. —அஞ்சாம்பாட்டு, (வந்திக்குமித்யாதி) பௌத்தர்களுக்கும், "வந்தே" என்றாப்போலே சொல்லுவர்கள்போலே காணும். (மாசுடம்பில்) அழுக்குக்கழற்றிருக்குமிதுதானே தர்மமென்றிருக்கிற அமணர்க்கும் கூட்டல்லேன். (முந்தியித்யாதி) சிறுக்கனுடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே முன்னேசென்று, ஹிரண்யனுடைய மிடுக்கைப்போக்கின ஜகத்காரணபூதனான ஸர்வேஶ்வரனுக்கல்லது, பாஹ்யகுத்ருஷ்டிகளுக்குக் கூட்டல்லேன்.

(சந்தவித்யாதி) நீர்தாம் இதறிந்தபடி யெங்ஙனேயென்ன; ஸ்ரீவைஷ்ணவர்களென்றவாறே, என்னுடைய ஹ்ருதயத்துக்கு இனிதாயிரா நின்றதே; அப்படியிருக்கும்போது, நான் அவனுக்கு அநந்யார்ஹனானேனாகவேண்டாவோ? பாஹ்ய குத்ருஷ்டிகள் பக்கலிலே ருசியுடையராயிருப்பார்க்கு, பாகவதர்கள் பக்கலிலே ருசியுண்டாமோ? (சந்தப்பூவித்யாதி) சந்தநப்பூமலரையுடைத்தான சோலையையுடைத்தாய், ப்ரமஹரமாயிருக்கிற திருச்சேறையில் நாயனாருடைய திருவடிகளை, நாள்தோறும் போக(போக்ய)ரூபமாக அநுபவிப்பார்க்கு, என்னுடைய ஹ்ருதயமானது தேனூறி எப்பொழுது மினிதாகாநின்றது; இது - வெறுமனேயோ? ... ... ... ...(௫)

அநு.—அஞ்சாம்பாட்டு. (வந்திக்குமித்யாதி) "ஒருகாலும் பிரிகிலேன்" என்று மிகவுமாதரியாநின்றீர்; பாஹ்ய குத்ருஷ்டிகளும் சிலவித் தாந்தங்களைப் பண்ணிக்கொண்டு, ஸ்வமதநிஷ்டரைக் கொண்டாடிக்கொண்டு இராநின்றார்களே என்ன; நீங்கள் நரஸிம்ஹத்தின் வாசியறிந்து விஸ்வஸித்து, ததீயரே உத்தேஸ்யரென்கிற ப்ரதிபத்தியைப் பண்ணாதிருந்தீகோளாகில், நான் அங்ஙனிருப்பனல்லேனென்று - ஸ்வவ்யாவ்ருத்தியைப் பேசுகிறாரென்று ஸங்கதி.

அமணர்க்கு மற்றவர்-பௌத்தரென்று விவக்ஷித்து, அவர்கள் தங்கள் தேவதைகளை வந்திக்கிறாராகையாலே இப்படி விசேஷிக்கைக்கு உட்கருத்தை யருளிச்செய்கிறார் (வந்தேயித்யாதி). "தமக்கும்" என்ற சகாரம், அநுக்தஸமுச்சயமாக்கி யருளிச்செய்கிறார் (குத்ருஷ்டி)என்று.

நாங்களும் நரஸிம்ஹாவதாராபதாந ஸ்ரவணம் பண்ணியிருந்தாலும், எங்களுக்கு அவனையல்லது அறியாமை பிறந்ததில்லை, நீர இவ்விசேஷமறிந்தது எவ்வழியாலே என்னும் ப்ரஸ்நத்தை அநுவதித்துக்கொண்டு தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் (நீர்தாமித்யாதி). .. ... ... (௬)

மூ.—

பண்டேனமாயுலகை யன்றிடந்த பண்பாளாவென்று நின்று [ன்
தொண்டானேன் திருவடியே துணையல்லால் துணையிலேன் சொல்லுகின்றே
வண்டேந்து மலர்ப்புறவில வண்சேறை யெம்பெருமானடியார்தம்மைக்
கண்டேனுக்கிதுகாணீரென்நெஞ்சும் கண்ணிணையும் களிக்குமாறே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பண்டு | பூர்வம் [கொண்டு, | உலகை | அண்டபித்தியிலொட் |
| ஏனமாய் | மஹா வராஹமாய்க் | | டிக்கிடந்தஜகத்தை |
| அன்று | அப்போது | இடந்த | குத்தியெடுத்த |

| | |
|---|---|
| பண்டு ஏனமாய் | ... |
| பண்பாளா | ஸுசீலனே! |
| என்றுநின்று | என்று ஸ்திரசித்தனாய்ச்சொல்லி |
| தொண்டு ஆனேன் | (தேவரீர்க்கு) அடிமைப்பட்டேன், |
| திருவடியே | (தேவரீர்) திருவடிகளே |
| துணை | (எனக்கு) ரக்ஷகம், |
| அல்லால் | அதையொழிய |
| துணை இலேன் | வேறு ரக்ஷகவஸ்துவையுடையனல்லேன்; |
| சொல்லுகின்றேன் | (இதை) உறுதியாகச் சொல்லுகிறேன், |
| வண்டு | வண்டுகளை |
| எந்தும் | தரியாநின்ற |
| மலர் | பூக்களையுடைத்தான |
| புறவில் | பர்யந்த ப்ரதேசங்களையுடைய |
| வண் | அழகியதான |
| சேறை எம்பெருமான் | |
| அடியார்தம் | அடியார்களை |
| கண்டேனுக்கு | பார்த்த எனக்கு, |
| இது | இவ்விதமாக |
| கண்இணையும் | இரண்டுகண்களும் |
| என்நெஞ்சும் | என் மாநஸமும் |
| களிக்கும்ஆறு | ஸந்தோஷிக்கும் ப்ரகாரத்தை |
| காணீர் | பாருங்கள். (சு) |

வ்யா. —ஆறும்பாட்டு. (பண்டேனமாயித்யாதி) முன்பு வராஹ கல்பத்தினுடைய ஆதியிலே மஹாவராஹமாய், அண்டபித்தியிலே சேர்ந்த பூமியை எடுத்துக்கொண்டு ஏறின நீர்மையையுடையவனே! என்று மாறாதே சொல்லி, அந்நீர்மையிலே தோற்று, தேவர் திருவடிகளுக்கு அடிமையானேன். (திருவடியேதுணை) தேவர் திருவடிகளே எனக்குத்தஞ்சம்; வேறோராபாஶ்ரயத்தை யுடையேனல்லேன். (சொல்லுகின்றேன்) இது சபதம்பண்ணித்தரலாம்.

இப்படி நீர் அத்யவஸித்துச்சொல்லுகிறது என்கொண்டென்ன; (வண்டேந்துமித்யாதி) வண்டுகள் மாறாத பசுமலரையுடைத்தான பர்யந்தத்தையுடைத்தான வண்சேறையெம்பெருமானடியார்தம்மைக் கண்டமாத்ரத்திலே கண்டிகோளே என்னுடைய நெஞ்சும் கண்ணிணையும் களிக்கிறபடி; ஆனபின்பு, அத்யவஸிக்கையில் ஒருகுறையுண்டோ? ... ... ... ... ... ... ... (சு)

---

அரு.— ஆறும்பாட்டு. (பண்டித்யாதி) ஶ்ரீவைஷ்ணவர்களை நினைத்த மட்டிலே தேவர்திருவுள்ளம் எப்பொழுதும் தேறுதி நித்திக்கைக்கு மூலமென்னென்ன; எம்பெருமானுடைய ஆபத்ரக்ஷணாதி சேஷ்டிதங்களிலகப்பட்டு, அவன் திருவடியே துணையென்றிருந்தபடியால் என்கிறாரென்று ஸங்கதி.

"ஏனம்பண்டு" என்றந்வயித்து, க்ரமேண அர்த்தமருளிச்செய்கிறார் (முன்பித்யாதி). "சொல்லுகின்றேன்" என்றதுக்கு, இப்படி எம்பெருமா

ரோடே சொல்லுகின்றேனென்று அர்த்தம் திருவுள்ளம்பற்றி, ப்ரோதாக்களைக் குறித்தருளிச்செய்யும் பா(ஞா)வத்தை யருளிச்செய்கிறார்(இது வித்யாதி). "ஆம்" என்றவநந்தரம், "ஏ" என்று சேஷம். இவ்வளவால், மேல்ப்பாட்டில் எப்பொழுதும் தேனூறுகைக்கு மூலம் சொல்லிற்றாய்த்து.

மூ.—

பைவிரியும் வரியரவில் படுகடலுள் துயிலமர்ந்த பண்பாவென்றும்
மைவிரியும்மணிவரைபோல்மாயவனேயென்றென்றும்வண்டார்நீலம்
செய்விரியும்தண்சேறை யெம்பெருமான் திருவடியைச் சிந்தித்தேற்கென்
ஐயறிவுங்கொண்டானுக்காளானார்க்காளாமென்னன்புதானே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பை | படங்கள் | வண்டு | வண்டுகள் |
| விரியும் | விகஸியாநின்ற | ஆர் | நிறைந்திருக்கிற |
| வரி | மச்சங்களையுடைய | நீலம் | கருநெய்தல்கள் |
| அரவில் | திருவநந்தாழ்வான் மேலே, | செய் | கழனிகளிலே |
| படு | ரத்நங்களுண்டாகாநின்ற | விரியும் | மலராநின்ற |
| கடலுள் | திருப்பாற்கடலிலே | தண்சேறை யெம்பெருமான் திருவடியை | |
| துயில்அமர்ந்த | கண்வளராநின்ற | சிந்தித்தேற்கு | த்யாநம்பண்ணுகின்ற |
| பண்பா | ஸௌலபனே! | என் | என்னுடைய |
| என்றும் | என்றுசொல்லியும், | ஐஅறிவும் | பஞ்சேந்த்ரியங்களாலுண்டான ஐந்துவிதமான ஜ்ஞாநங்களையும் |
| மைவிரியும் | இருள்பரம்பாநின்ற | கொண்டானுக்கு | தன்விஷயமாக்கிக் கொண்டவனுக்கு |
| மணிவரை போல் | இந்த்ரநீலமணிமயமான பர்வதம்போன்ற திருமேனியை யுடைய | ஆள்ஆனார்க்கு | அடிமைப்பட்ட பாகவதர்விஷயத்தில் |
| மாயவனே | ஆச்சர்யபூதனே! | என் அன்பு | என்னுடைய ப்ரீதியானது |
| என்றும் | என்றுசொல்லியும், | ஆள்ஆகும் | அடிமைப்படும். (எ) |
| என்று | இப்படி பலகாலும் சொல்லி, | | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (பைவிரியுமித்யாதி) "பை" என்று ப(ஃ)ணம். நிரந்தரபகவதநுபவத்தாலே விகஸிதமான பணங்களையுடையனாய், ஸர்வேச்வரனுக்கு வைத்த கண் மாறாதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படி தர்சநீயமான வரிகளையுடையனாய்,சைத்யஸௌரப்ய மார்த்தவங்களை ப்ரக்ருதியாகவுடையனாயிருக்கிற திருவநந்தாழ்வான்மேலே. (படுகடலுள்) படுகடலிலே-ரத்நாதிகள்படுகிறகடலிலே

யென்னுதல்; ஆழத்தையுடைத்தான கடலிலேயென்னுதல். (துயிலமர்ந்தபண்பாவென்றும்)வீசிவில்லிட்டெழுப்பினாலும்எழுப்பவொண்ணாதபடி கண்வளர்ந்தருளுகிற நீர்மையை யுடையவனே! என்றும். (மைவிரியுமித்யாதி)மைபரம்பாநின்றுள்ள அஞ்ஜநகிரிபோலே யிருக்கிற வடிவையுடைய ஆஶ்சர்யபூதனே! யென்றும்.

(வண்டாரித்யாதி) வண்டுகள் மாறாத நீலமானது செய்களில், பரப்புமாற மலர்ந்து கிடக்குமாய்த்து. (தண்சேறையெம்பெருமான்) ஶ்ரமஹரமான திருச்சேறையிலே நிற்கிற நாயனாருடைய ஶ்லாக்யமான வடிவழகை அநுஸந்தித்தேற்கு. (என்னையறிவுங்கொண்டானுக்கு) ஶ்ரோத்ராதிகளைந்தாலுமுண்டான வெளிச்சிறப்பைத் தன்பக்கலிலே ஆக்கிக்கொண்டான். அது தனக்குத் தான் விஷயமானானென்றபடி. ஐயறிவுங்கொண்டானுக்காளான வளவிலே நிற்கிறதில்லை; அவனுக்காளானாரளவிலே ஆளாகாநின்றது என்னன்பானது. (எ)

---

அரு.— ஏழாம்பாட்டு. (பைவிரியித்யாதி) பாகவதரைக் கண்டமாத்ரத்திலே களிக்கும்படியிருக்கையாலே அவனுக்குத் தாம் தொண்டானமையை அநுஸந்தித்தார் கீழ்ப்பாட்டில்; இதில், அவனுக்குத்தொண்டானத்தாலுண்டான ப்ரீதி, பிடறி பிடித்துத்தள்ள, ஆளானார்க்காளானமையை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி. அதாவது, தண்சேறையெம்பெருமான் திருவடியைச் சிந்திக்கை - அவர்களுக்கு முகமலர்த்திக் குறிப்பாயிருக்கை. இங்ஙனன்றாகில், அவனையறிவுங் கொண்டிருக்க, வேறு ஆளாகை கூடாதிறே.

(வீசிவில்லிடுகை)ஊன்றித்தனியிடுகை. (அநுஸந்தித்தேற்கு) என்றவநந்தரம், “இழுக்கு என்?” என்று மூல வ்யாக்க்யாநங்களில் கூட்டிக்கொள்வது. ... ... ... ... ... (எ)

மூ.—

உண்ணாது வெங்கூற்றமோவாத பாவங்கள் சேரா மேலை [னைப்
விண்ணோரும் மண்ணோரும் வந்திறைஞ்சும் மென்தளிர்போலடியி
பண்ணாரவண்டியம்பும் பைம்பொழில்சூழ் தண்சேறையம்மான்றன்னைக்
கண்ணாரக்கண்டுருகி கையாரத் தொழுவாரைக் கருதுங்காலே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மேலை | ப்ரக்ருதிமண்டலத்துக்கு மேலேயுள்ள | மண்ணோரும் | பூமியோடு கூடிய லீலாவிபூதியிலுள்ளவர்களும் |
| விண்ணோரும் | பரமபதவாஸிகளான நித்ய ஸூரிகளும் | வந்து | கிட்டி |
| | | இறைஞ்சும் | ஆஶ்ரயிக்கும்படியா[ன |

| | |
|---|---|
| மெல் | ம்ருதுவான |
| தளிர்போல் | பல்லவம் போன்ற (ஸௌகுமாரமான) |
| அடியிணை | திருவடிகளை யுடையனாய், |
| பண் ஆர | காநம்பொருந்தியிருக்கும்படி |
| வண்டு | வண்டுகளானவை |
| இயம்பும் | பாடாநின்ற |
| பைபொழில் | பரந்தசோலைகளாலே |
| சூழ் | வ்யாப்தமான |
| தண்சேறை | அம்மான் தன்னை, |
| கண் ஆர | கண்கள்நிறையும்படி |
| கண்டு | ஸேவித்து |
| உருகி | மனம்நெகிழ்ந்து |
| கை ஆர | கைகள் நிறையும்படி (கைகளின் குறை தீரும்படி) |

| | |
|---|---|
| தொழுவாரை | ஆச்ரயிக்கும் பாகவதர்களை |
| கருதுங்கால் | நினைக்குமளவில், (அவர்களை), |
| வெம் | க்ரூரமான செயலையுடைய |
| கூற்றம் | யமதேவதையானது, |
| உண்ணாது | புஜியாது (உபத்ரவித்து நசிப்பிக்கமாட்டாது); |
| ஓவாத | இடைவிடாமல் பாதி(ஸாதி)க்கிற |
| பாவங்கள் | பாபங்களானவை |
| சேரா | (தங்களுடைய ப(ஃ)லாநுபவம் செய்விக்கைக்காக) கிட்ட மாட்டா. (அ) |

வ்யா॰ —எட்டாம்பாட்டு. (உண்ணாதித்யாதி) பாகவதர்களை நெஞ்சாலேநினைக்க, ம்ருத்யுவால்வரும் பயம் போம், பாபங்களுடைய நலிவால்வரும் பயத்துக்கு மஞ்சவேண்டாவென்கிறது. (உண்ணாது வெங்கூற்றம்) க்ரூரமான செயலையுடைய ம்ருத்யு, தன்னுடைய ஆஸ்யத்திலே விழுந்தாலும் கீழ்ஜிச்ச பயப்படும். (ஓவாதபாவங்கள் சேரா) ஒருக்ஷணகாலமும்இடைவிடாதே நெருங்கப்பண்ணின பாபங்கள், ப(ஃ)லாநுபவத்துக்காக வந்து கிட்டா. இவை இப்படிவந்து கிட்டாமைக்கடி யென்னென்னில்; உபயவிபூதியுக்தனை ஸர்வேச்வரனைத் தங்கள்ஸர்வகரணங்களாலு மநுபவிக்குமவர்கள் பக்கலிலேயன்றோ இவர்கள் ப்ரவணராய்த்து; உபயவிபூதியிலுள்ளாரும் வந்து ஆச்ரயிக்கிற ஸௌகுமாரமான திருவடிகளையுடையவனை.

(பண்ணாரவித்யாதி) பண் பேராதபடி, வண்டுகள் த்வநியாநின்றுள்ள பரந்தபொழிலையுடைய தண்சேறையம்மான்தன்னை, கண்களினுடைய விடாய் தீரக்கண்டு, அந்த ப்ரீதியாலே இறைஞ்சி. உருகி, என்றுபாடமாகவுமாம். கைகளின் விடாய் தீரும்படி தொழுவாரை நினைக்குங்கால், உண்ணாதுவெங்கூற்றம், ஓவாதபாவங்கள்சேரா. (அ)

அரு. —எட்டாம்பாட்டு. (உண்ணாதித்யாதி) பாகவதமுகவிகாஸமே ப்ரயோஜநமாகஎம்பெருமானை நினைத்திருக்கவொட்டுமோ? விரோதிகளைத் திருக்கும் தேசமன்றோவென்ன வருளிச்செய்கிறார் என்று ஸங்கதி திருவள்ளம்பற்றி தொகுத்துத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (பாகவதர்களித்யாதி).

கிட்டாது என்றதே, "உண்ணாது" என்றதுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (தன்னுடையவித்யாதி). "ஓவாத" என்றுவைத்து "சேரா" என்கிறதென்னென்ன வருளிச்செய்கிறார் (ஒருவித்யாதி). ப்ரோத்ருசங்காநுவாதபூர்வகமாக வ்யாக்யாதா,தாமேபரிஹரிக்கிறவழியாலே தாத்பர்யமருளிச் செய்கிறார் (இவையித்யாதி). வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (உபயவிபூதியிலுள்ளாருமித்யாதி).

"ஆர" என்றதின் தாத்பர்யம் (பேராத) என்றது; பொருந்தி யிருக்கிறபடி. ... ... ... ... ... ... ... ... (அ)

மூ.—

கள்ளத்தேன்பொய்யகத்தேனாதலால்போதொருகால்கவலையென்னும்
வெள்ளத்தேற்கென்கொலோ விளைவயலுள் கருநீலங்களைஞர் தாளால்
தள்ளத்தேன் மணநாறும் தண்சேறை யெம்பெருமான்தாளை நாளும்
உள்ளத்தே வைப்பாருக்கிது காணீரென்னுள்ளமுருகுமாறே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| விளை | பயிரையுடைத்தான | காணீர் | பாருங்கள், |
| வயலுள் | கழனிகளில் (முளைத்திருக்கிற) | இது | இந்த மஹாப (ஷ்) லமானது |
| கருநீலம் | கரிநெய்தலை [ர் | கள்ளத்தேன் | ஆத்மாபஹாரியாகிற சோரமும் |
| களைஞர் | களைபிடுங்குகிற உழவ | பொய்யகத்தேன் ஆதலால் | வஞ்சகமான நெஞ்சையுடையனாயிருப்பனபடியால் |
| தாளால் | (தங்கள்) கால்களாலே | போது ஒருகால் | ஒரு நொடிப் பொழுதும் (இடைவிடாமல்) |
| தள்ள | ஒதுக்கித்தள்ள, [லே | கவலைஎன்னும் | துக்கமென்கிற |
| தேன் | (அதில் நின்றுமொழுகின)தேனினுடைய | வெள்ளத்தேற்கு | மஹா ஸமுத்ரத்தில் அழுந்திக்கிடக்கிற எனக்கு |
| மணம்நாறும் | பரிமளம் வீசாநின்ற | என்கொலோ | எவ்விதமாகக்கிடைத்ததோ! அறிகிலேன் |
| தண்சேறை | எம்பெருமான்தாளை | | |
| நாளும் | ப்ரதிதிநமும் | | |
| உள்ளத்தே | மநஸ்ஸிலே | | |
| வைப்பாருக்கு | இருத்தி த்யாநம்பண்ணும் பாகவதர் விஷயத்தில் | | |
| என் உள்ளம் | என் மநஸ்ஸு | | |
| உருகுமாறு | (ஸ்நேஹித்து) சிதிலமாகும்ப்ரகாரத்தை | | |

வ்யா. —ஒன்பதாம்பாட்டு. (கள்ளத்தேனித்யாதி) எனக்கு இது தானுண்டானபடி எங்ஙனே என்கிறார்.

(கள்ளத்தேன்) (க) “[illegible]-சோரேணாத்மாபஹாரிணா” என்கிறபடியே, அநாதிகாலம் ஆத்மாபஹாரம் பண்ணிப் போந்தேன், அது தன்னையும் தெரியாதபடி (உ) “உன்னையும் வஞ்சிக்கும்” என்கிறபடியே, என்னந்தராத்மா அறிகிறதென்று மறைத்துப் போந்தேன். இப்படி செய்கையாலே ஒருக்ஷணமுமிடைவிடாதே, மறப்பாகிற ஸாகரத்திலே அழுந்திப்போந்தேன், துஃக்கஸாகரமென்றுஞ்சொல்லுவர்கள். (என்கொலோ) இப்படியிருக்கிறஎனக்கு இப்பேறுண்டானபடி எங்ஙனேயோ! ஆத்மஸமர்பணம் பண்ணி மெய்யான ஸ்நேஹத்தையுடையராய், அவனை அநவரதபா(ஃ)வனை பண்ணிக்கொண்டு போருவார் பெறும்பேற்றை, நான்பெற்றபடி எங்ஙனேயோ!

(விளைவயலித்யாதி) விளைவயலிலே களையாக முளைத்த நீலத்தைக் க்ர்ஷகரானவர்கள் காலாலேதள்ள, அவ்வசைவாலே நிரம்பியிருக்கிற தேன் வெள்ளமிட்டு, அதினுடையபரிமளமேயாயிருக்கிற தண்சேறை யெம்பெருமான் திருவடிகளை என்று மொக்கஹ்ருதயத்திலே வைக்குமவர்களுக்கு, என்னுடையஹ்ருதயம் அழிகிறபடிகண்டிகோளே; இப்பேறு எனக்கு வந்தபடிஎங்ஙனேயோ! (கூ)

---

அரு. —ஒன்பதாம்பாட்டு. (கள்ளத்தேனித்யாதி) “உண்ணாது” இத்யாதிப்படியே, ஸஜாதீயதாபுத்தி பண்ணி அபசாரப்படும்படியாயிருக்கிற இப்பாகவதவிஷயத்திலே உமக்கு இப்படிநிரவதிகமான ப்ரேமம்விளைந்ததுக்கு அடி சொல்லிக்காணீரென்ன; அடி தேடித்தம்மிடத்திலொன்றும் காணாமே தாமே ஆஶ்சர்யப்படுகிறாரென்றுஸங்கதி. அன்றிக்கே, பாகவதர்களை நினைக்க, விரோதிகழியுமென்றுநின்றீர் நீர், நினைக்கவொட்டாதேயிருக்கும் விரோதி போகாமையன்றோ நாங்களிப்படி பாகவ்தரை நினைத்தால் நெஞ்சுருகாமலிருப்பது; அது உமக்குப் போய் இதுண்டானவழியென்னென்ன; “எம்பெருமானுண்டாக்கினான்” என்னில்; எங்களுக்கு உண்டாக்கவொண்ணாதோ வென்பர்கள், என்னாலுண்டாய்த்து என்னமாட்டார் ஸத்ருசஸ்நேஹதுஉண்டாகக் காண்கிறிலராகையாலே, எங்ஙனேயோவென்று பூர்வவ்ருத்தத்தையும் சொல்லிக்கொண்டு விஸ்மயப்படுகிறாரென்றாகவுமாம்; இந்தஸங்கதிகளை ஸ்புரிப்பிக்கிறார் (எனக்கித்யாதி).

(க) பார.உத்யோ ருக-ருச. (உ) தி-வாய்-ரு-க-ரு.

அநாதிகாலம் இப்படியிருந்தீரேயாகிலும், இப்போது இசைந்து கவி பாடினீரே யென்ன; "கள்ளத்தேன் பொய்யகத்தேன்" என்கிறாரென்று விவக்ஷித்து, அந்த அபஹாரத்தை மெய்யாக்கவிட்டேனென்று அர்த்தமாயருளிச்செய்கிறார் (அதுதன்னையித்யாதி) "கவலை" என்னுதக்கு, மறப்பென்று அர்த்தமருளிச்செய்து, அர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (துக்கேத்யாதி). ... ... ... ... ... ... ... ... (௯)

மூ.—

பூமாண்சேர்கருங்குழலார்போல்நடந்துவயல்நின்றபெடையொடன்ன
தேமாவினின்னிழலில் கண்டுயிலும் தண்சேறையம்மான் தன்னை மா
வாமான்றேர்பரகாலன் கலிகன்றி யொலிமாலைகொண்டு தொண்டீர்
தூயாண் சேர் பொன்னடிமேல் சூட்டுமின் நும துணைக்கையால்
தொழுது நின்றே. (க௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| அன்னம் | ஹம்ஸமானது, |
| பூ | புஷ்பங்களிலுண்டான |
| மாண் | அழகோடு |
| சேர் | கூடியிருக்கிற |
| கருங்குழலார்போல் | இருண்டமயிர் முடியையுடைய ஸ்த்ரீகளைப்போலே |
| வயல் நின்ற | கழனிகளிலே ஸஞ்சரிக்கிற |
| பெடையோடும் | பேடையோடுகூட |
| நடந்து | உலாவி (பின்பு) |
| தேமாவின் | தேமாமரத்தினுடைய |
| இன்னிழலில் | (இனிய குளிர்ந்த) நிழலில் |
| கண் துயிலும் | உறங்காநின்ற |
| தண்சேறை அம்மான் தன்னை | குளிர்ந்த (ப்ரமஹரமான திருச்சேறையிலெம்பெருமான் விஷயமாக, |
| வா | (ஓடி) வாராநின்ற |
| மா | குதிரைகள் கட்டின |

| பதம். | உரை. |
|---|---|
| தேர் | தேரையுடையராய்க்கொண்டு |
| பரகாலன் | சத்ருக்களை வெல்லுமவரான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த |
| மாலை | சப்தஸந்தர்ப்பரூபமான இப்பத்துப்பாசுரத்தையும் |
| கொண்டு | ஸம்பாதித்து (அநுஸந்தித்து)க்கொண்டு |
| தொண்டீர் | ஓபக்தஜநங்களே! |
| தூ | பரிசுத்தமாய் |
| மாண்சேர் | அழகுபொருந்தியதாய் |
| பொன் | ஸ்ப்ருஹணீயமான |
| அடிமேல் | (அவன்) திருவடிகள்மேலே, |
| நும் | உங்களுடைய |
| துணைகையால் | ஒன்றோடொன்று சேர்க்க (அஞ்ஜலிபந்தமான) கைகளினால் |
| தொழுது நின்று | ஆஶ்ரயித்துக் கொண்டு இருந்து |
| சூட்டுமின் | சூட்டுங்கள் (தரியுங்கள் |

வ்யா —பத்தாம்பாட்டு. (பூமாண்சேரித்யாதி) பூக்களையுடைத் தாகையால்வந்த அழகையுடைத்தாய், இருட்சியையுடைத்தானகுழலை யுடைய ஸ்த்ரீகள்போலே நடக்கவேணுமென்றுகணிசித்த அன்னங்க ளானவை, தனியேநடக்கில் வாயாதென்று பார்த்து, வயலில்நின்ற பெடையோடொக்க நடக்குமாய்த்து. அப்படி செய்தவிடத்திலும் வாயாமையாலே லஜ்ஜித்து, தேமாவினுடைய இனியநிழலிலே போய் உறங்காநிற்கும். (வாமான்றேரித்யாதி) தாவிவருகிற மாவையுடைய தேரை, அர்ஜுநனுடைய தேரைநடத்தி ப்ரதிபக்ஷத்தை யழிக்கும் க்ருஷ்ணனைப்போலே, நடத்தி சத்ருக்களை அழியச்செய்கிற ஆழ்வார், ஒலியையுடைத்தாம்படி அருளிச்செய்த தமிழ்த் தொடையைக்கொண்டு, பகவத்விஷயத்தில் ருசியுடையீர், ஹேயப்ரத்யநீகமாய், தர்சநீய மாயிருந்துள்ள திருவடிகளிலே சூட்டுங்கோள். அதுசெய்யும்போது, அஞ்ஜலியைப் பண்ணாநின்ற கையையுடையராய்க்கொண்டு தொழுது இம்மாலையைச் சூட்டுங்கோள். ... ... ... ... (க௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.



அரு' —பத்தாம்பாட்டு. (பூமாணித்யாதி) மாண்பு - அழகு. காயாம் பூவால்வந்த அழகும், அதுக்குப் பரபாக(ரூப)மான கருங்குழலுமாய் கே சவனுக்குத் தருகியான ஸ்த்ரீகளையிட்டுத் திருப்பதிக்குச் சிறப்புசொல்லு கை மாமதப்பெயிரானை க்ருஷ்ணனுக்கு உகப்பாகையாலே அன்னங்களை லக்ஷ (ஸூ) கரித்ததுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பூக்களையித்யாதி). வாயாமையாலே) என்றது - பும்ஸ்த்வத்தாலமர்ந்த கமநமே பின்னிட் டுகையாலெனகை "மா" என்று-குதிரையாய், "மாத்தேர்" என்கிறத்தை மெல்லொத்தாக்கி "மான்றேர்" என்றாய், குந்தமென்றத்தை "குன்றம்" என்கிறவோபாதி "மான்றேர" என்று கிடக்கிறதென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (தாவியித்யாதி). தேரால்பரகாலனானமையை ஸத்ருஷ் டாந்த மருளிச்செய்கிறார் (அர்ஜுநேத்யாதி). ... ... ... (க௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஏழாம்பத்தில் நாலாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஏழாம்பத்து அஞ்சாந்திருமொழி

## தந்தைகால் ப்ரவேசம்.

வ்யா. —கீழே பாகவதசேஷத்வத்தை யநுஸந்தித்தார், அது பகவத் விஷயத்துக்குஉத்தம்ப(ஸ்ம்)கமாயிருக்குமிறே,ஆகையாலே,அபேக்ஷைபிறந்தது; பிறந்த அபேக்ஷைதான், "வரில்பொகடேன், கெடில்தேடேன்" என்று ஆறியிருக்குமளவன்றிக்கே, "இப்போதே பெறவேணும்" என்னுமளவாயிருந்தது; அப்போதேபெறாமையால்பிறந்த ஆற்றாமை,ஒருபிராட்டி தசையைப்பிறப்பிக்க, அத்தாலேஅவனோடே காதாசித்கமாக ஸம்ப்ளேஷத்தை யுடையளாயிருப்பாளொருத்தி, நம்மோடேநித்யஸம்ப்ளேஷத்தைப் பிறப்பிக்கைக்காகதிருவழுந்தூரிலே வந்து ஸந்நிஹிதனானானென்று ✻ (அவள் பாசுரத்தாலேஅங்குத்தைப் படிகளை) அநுஸந்திக்கிறார். ... ... ... ... *

அரு. — தந்தை காலின்ப்ரவேசம். — கீழ்த்திருமொழியில் பாகவத சேஷத்வத்தில் எல்லையளவும் போகையாலே, அவர்களுக்கு உகப்பாக பகவத் விஷயத்தில் அறிவு மிழந்திருந்தபடி சொல்லிற்று, அத்தாலே மீளவும் பகவத்விஷயத்திலே போந்தாரென்று ஸங்கதி யருளிச்செய்கிறார் (கீழேயித்யாதி). (பிராட்டிதசையைப் பிறப்பிக்க) என்றது-(க) "மாலைப் புகுந்து" (உ) "என்னெம் புலனும்" என்கிற பாட்டுக்களைப்பற்ற. ... *

மூ. —தந்தைகாலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட்கண்வந்த
எந்தை பெருமானார் மருவிநின்ற ஊர்போலும்
முந்தி வானம் மழைபொழியும் மூவாவுருவில் மறையாளர்
அந்தி மூன்றுமனலோம்பும் அணியார் வீதி யழுந்தூரே. (க)

| பதம். | உரை. | பத. | உரை |
|---|---|---|---|
| வானம் | மேகமானது | உருவில் | வடிவையுடையராய் |
| முந்தி | (யாகத்துக்கு) முன்னமே (அதின் பஹ்லமாக) [யாக | மறையாளர் | வேதங்களுக்கு நிர்வாஹகரான ப்ராஹ்மணோத்தமர் |
| மழைபொழியும் | மழைபெய்யும்படியாக, | அந்தி மூன்றும் | மூன்று ஸந்த்யாகாலங்களிலும் |
| மூவா | கிழத்தனமில்லாத யௌவநப் பருவமுடைய | அனல் ஓம்பும் | அக்நியிலே ஹோமம் பண்ணுகின் [ற |

✻ குண்டலிதம் ப்ராசீநகோசேசாஸ்தி.

(க) பெ-தி-ஏ-ரு-எ (உ) பெ-தி-எ-தி-கூ.

| | | | |
|---|---|---|---|
| அணி ஆர் | அழகு மிக்க [ன | நள் | நெருங்கியிருக்கிற |
| வீதி | வீதிகளையுடைத்தா | இருள் கண் | அந்தகாரத்திலே |
| அழுந்தூர் | திருவழுந்தூரென்னும் திவ்யதேசமானது, | வந்த | க்ஷீராப்தியில் நின்றும்வந்து திருவவதரித்தருளினராய் |
| தந்தை | தகப்பனான வஸுதேவனுடைய | எந்தை | நான் என்தகப்பன் என்குலத்துக்கு |
| காலில் | காலிலே | பெருமானார் | ஸ்வாமியானவர் |
| பெருவிலங்கு | நெடுநாளாகப் பூட்டப்பட்ட விலங்கினுடைய | மருவி | விருப்பத்துடன் |
| | | நின்ற | நித்யவாஸம் பண்ணாநின்ற |
| தாள் | பூட்டானது | ஊர்போலும் | பரமபதம்போலே நித்யாதரணீயமாயிருந்தது. (௧) |
| அவிழ | தானேவிட்டுப்போம்படியாக, | | |

வ்யா.—முதற்பாட்டு. (தந்தை காலித்யாதி) ஆபத்திலேவந்து உதவி, அவற்றைப்போக்கும் ஸ்வபாவனாய்த்து. ஸ்ரீவஸுதேவர் காலிலுண்டான பெருவிலங்குண்டு - எட்டுகர்ப்ப (௨௪௫) த்துக்கு அவ்வருகே இட்ட விலங்கு; அதுதன்னடையே விட்டுப்போம்படியாக. இவன் வந்தவதரித்த வநந்தரம், திருவாய்ப்பாடியேறக்கொண்டுபோக வல்லாரானாரிறே. (நல்லிருட்கண்) கம்ஸன் காவலாகவைத்த துஷ்ப்ரக்ருதிகள் கண்படாதபடி செறிந்த இருளிலேவந்து தோன்றின என்னுடைய குலநாதனானவர். (வந்த) ஸ்ரீவஸுதேவர்க்கன்றியே, தமக்கோதான் வந்து உதவிற்று. (மருவிநின்ற) அவவவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே, அந்தவஸுதேவர் போல்வாரெல்லார்க்கும் உதவுகைக்காக வந்து நித்யவாஸம் பண்ணுகிற தேசம்போலும். அவன்நின்றதேசமிறே உத்தேஸ்யமாவது. ப்ராப்யபூதனான அவன் வந்துநிற்கையாலே, நமக்கு ப்ராப்யபூமிதான் போலேயிருந்தது என்று ஆதராதிசயம்தோற்றச்சொல்லுகிறது. இதுவே அல்லாதபாட்டுக்களிலவற்றுக்கும் பொருள்.

(முந்திவானமித்யாதி) வானமானது முந்தி மழையைப்பொழியுமாய்த்து. இவர்களுடைய அபிஸந்தியொழியவேயும், அவாந்தரபலங்கள் முற்பட்டிருக்குமாய்த்து. (மூவாவுருவில் மறையாளர்) அங்குள்ளாரடங்கலும் தருணாக்நிஹோத்ரிகளாய்த்து இருப்பது. ஸாஸ்த்ரோக்தமான க்ரமத்திலே உபநயநாதி ஸம்ஸ்காரமேதுடங்கி, ப்ரு

ப்த்ர்ஷிகாலத்திலே யாகாதிகளைப்பண்ணியிருப்பார் சிலராய்த்து. (அந்தி மூன்றும் அனலோம்பும்) ஒருப(ஃ)லாபிஸந்தியைப் பண்ணிச் செய்கிறார்களன்றே; நித்யாதுஷ்டாநத்துக்குக் கொள்ளுவதொருப(ஃ)லமில்லையிறே; ஆகையாலே இதுவே யாத்ரையாய், தர்ஶநீயமான வீதியையுடைத்தான தேசம். ... ... ... (க)

அரு. —முதறபாட்டு. (தந்தையித்யாதி) விலங்குக்குப்பெருமை நாளிலுடைய நெடுமையைப்பற்ற என்றருளிச்செய்கிறார் (ஸ்ரீவஸுதேவரித்யாதி). பிறந்தபின்பும், விலங்கோடே யிருந்தாரோவென்ன வருளிச்செய்கிறார் (இவன் வந்தித்யாதி) அவனிருக்கிறவூரைச் சொல்லுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (அவனித்யாதி). ஆனால் "போலும்" என்பானென்னென்ன வருளிச்செய்கிறார் (ப்ராப்யேத்யாதி).

அனலோம்புகைக்கு மழைபொழிகையோ ப(ஃ)லமென்னவருளிச் செய்கிறார் (இவர்களுடைய வித்யாதி). "மூந்தி" என்று விசேஷித்தத்தாலே பலித்தவர்த்தமென்னவுமாம். மூவாமை-பால்யமாய், அப்படிப்பட்ட பருவமுடையவரென்று விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் அங்குள்ளாரித்யாதி). அந்திகளிலே ப்ராதர்மத்ய ஸாயம் ஸந்த்யைகளில் மூன்றிலும், ஓம்பும்-ஹோமம்பண்ணு நிற்பர்களென்று சப்தார்த்தமாய், தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஒருப(ஃ)லாபிஸந்தியை யித்யாதி). "யாத்ரையாய்" என்றவாந்தரம், "இருப்பாகள்" என்றுசேஷம். .. ... (க)

மூ. —பாரித்தெழுந்த படைமன்னா தம்மை மாளப் பாரதத்துத்
தேரில் பாகனாயூர்ந்த தேவதேவனூர்போலும்
நீரில் பணைத்த நெடு வாளைக்கஞ்சிபபோன குருகினங்கள்
ஆரல் கவுளோடருகணையு மணியார் வயல்சூழழுந்தூரே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீரில் | ஜலத்தில் | ஆரல் | ஆரலென்னும் சிறு மீனை |
| பணைத்த | ஸந்தோஷாதி சயத்தினால் அபிவ்ருத்த (ஸம்ருத்த) மாகாநின்ற (துள்ளி விளையாடாநின்ற) | கவுளோடு | கதுப்பிலேகொண்டு |
| | | அருகு | (பின்னும்) அப்பெரிய மீனின் ஸமீபத்திலே |
| நெடு | பெரிய | அணையும் | வந்து சேராநின்றதா[ய் |
| வாளைக்கு | மத்ஸ்யத்துக்கு | அணி ஆர் | அழகுமிக்கிருந்துள்ள |
| அஞ்சி | பயந்து | வயல் சூழ் | கழனிகளாலே சூழப்பட்டதான |
| போன | ஓடிப்போன | | |
| குருகுஇனங்கள் | குருகென்னும் பறவைக்கணங்கள் | | |

அழுந்தூர்,

| | | | |
|---|---|---|---|
| பாரித்து | (க்ருஷ்ணனை ஜயிக்க வேணுமென்று) மநோரதித்து | பாரதத்து | பாரதயுத்தத்திலே |
| எழுந்த | உத்யோகித்து வந்த | தேரில் | (அர்ஜுநனுடைய) ரதத்திலே |
| படை | ஆயுதங்களை யுடையரான | பாகனாய் | ஸாரதியாய் நின்று |
| மன்னர்தம்மை | துர்யோதநாதி ராஜாக்களை | ஊர்ந்த | தேரை நடத்தின |
| மாள | நசிப்பிக்கைக்காக | தேவதேவன் | நித்யஸூரிகளில் தலைவனை ஸர்வேஶ்வரனுடைய |
| | | ஊர்போலும். | (உ) |

வ்யா. —இரண்டாம்பாட்டு. (பாரித்தித்யாதி) "இன்று ஸாரதியைப் பிடிக்கக்கடவோம்"என்றுஒருப்பட்டுவந்த, வெறுங்கையோடே க்ருஹத்திலே போய்ப்புக்கவாறே பொய்யாஸநமிட்டு வஞ்சிக்கத் தேடினார்களிறே. (படைமன்னர் தம்மைமாள) ஸாயுதரான ராஜாக்கள் ஆயுதத்தைப் பிடித்துக்கொண்டு முடிந்து தேர்காலிலே துகையுண்டுகிடக்க. (தம்மைமாள) அவகர்ள் தாங்கள் கோலிவந்தத்தை, அவர்கள் தங்களோடேபோக்கி (தேரில் பாகனாயூர்ந்த) தேரிலே ரதியாய்நின்று ஊர்ந்தானாகில், அத்தால்வரும் விஜயமும தமதலையிலே கிடக்குமிறே. ப்ரதிபக்ஷமழியவும வேணும், அர்ஜுநன் தலையிலே விஜயம் கிடக்கவும்வேணுமென்று, அதுக்காக ஸாரதியாய்க்கொண்டு தேரைநடத்தினானய்தது. ஆழ்வானுக்கு மூலம்வாசித்துப் போந்தார் சிலரிலே, ஒருவருக்கு க்ரந்தம்பார்க்கவேண்டி, ஆழ்வானோடே திருமுடிக்குறையிலே யிருந்து பாராநிற்கச்செய்தே, அரயன்வந்தானாய், அவ்வளவிலே, அவர்கையில் க்ரந்தத்தை, ஆழ்வான் தான் வாங்கிப் படித்துக் கொண்டிருந்தானும். (தேவதேவனூர்போலும்) தன்னை யாராக நினைத்தான்; அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த (ர்க்கு) ர்க்கும் அவ்வருகாயிருக்கிறதான, ஸம்ஸாரிகளிலே ஒருவனுக்குத் தாழ்வுசெய்வதே.

(நீரில்பணைத்த நெடுவாளைக்கஞ்சிப்போன குருகினங்கள்) குருகுகளானவை, திரள் திரளாக மத்ஸ்ய(மத்ஸ்ய) க்ரஹணத்துக்காக நீர் நிலங்களில்வந்து இழிந்து, தனக்கு வாய்க்கடங்குவது ஒன்றைக்ரஹித்து, தன்கதுப்பிலே யிருக்கச்செய்தே, வேறேயொரு பெரிய மத்ஸ்யம்யாத்ருச்சிகமாகத் தன்செருக்குக்குப் போக்குவிட்டு, மேலே எழப்பாயும்,அத்தால் வந்தஹர்ஷத்தாலே பணைததுக்கொடுக்கும், அத்தைக் கண்ட இது தன்சாபலத்தாலே "ஆமிஷம்" என்று கணிசித்து வந்து

கிட்டும், இதின் வடிவில் பெருமையைக்கண்டு, "இது நீர்நிலையிலே கிடக்கிறதொன்று, பறக்கவும்மாட்டாதே யிருக்கிறதொன்று" என்றறியமாட்டாதே வெருவியோடினது, பின்னையுமிதனருகே வந்து கிட்டா நிற்கும். (அணியார் வயல்சூழழுந்தூரே) பாரத ஸமரத்தில் பீஷ்மாதிகள் "அதிரதர் மஹாரதர் என்றிங்ஙனே ஆண்பிள்ளைகளாகப் பேர்பெற்று ஜீவித்திருந்தோம், இப்போதாகப் பூசல் கோழைகளாக வொண்ணாது" என்று ஸாரதிபக்கலிலே வந்துகிட்டுவது, "தேர்த்தட்டின் மேலே உழக்குண்டுபோக வொண்ணாது" என்று அகலுவதாய்க்கொண்டு அவர்கள் படுவதுறைப் படாநின்றன வாய்த்துக்குருகினங்களும். (உ)

அரு.—இரண்டாம்பாட்டு (பாரிதகிதயாதி) கீழ்ப்பாட்டில், வத்தவதரித்தமையை அநுஸந்தித்தார; அவ்வவதாரத ஸக்ருப்ரகாசப்ரயோஜநமான பூபார(நிராஸ)ாவதரணப்ரகாரத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸாகதி.

ரதியையொழிய, ஸாரதியையோ எதிர்ப்பதென்ன வருளிச் செய்கிறார் (வெறுங்கைபிதயாதி). ராதுவந்தபோது அப்படி பாரிதகுவர, பூசல் தலையில் சொல்லவேணுமோவென்று கருத்து. சன விஜயத்தைப் பிறர் தலையில ஏறிட்டபடி கண்டவிடமுண்டோ வென்ன வருளிச் செய்கிறார (ஆழ்வாணித்யாதி). (மூலம் வாசிதது) படிப்பித்து என்றபடி

ஆரல் - சிறுமீனாய், அத்தை கவளோடேகதுப்பிலே கொண்டு என்று சப்தார்த்தமாய், தாத்பாயமருளிச்செய்கிறார் (குருகித்யாதி). திருப்பதியை இப்படி வர்ணித்தது த்ருஷ்டாந்தமா எனனுமிடம் தோற்ற உட்கருத்தை யருளிச்செய்கிறார (பாரதேதயாதி) (உ)

மூ. —

செம்பொன் மதிள்சூழ் தென்னிலங்கைக் கிறைவன் சிரங்களையிரண்டும்
உம்பர் வாளிக்கிலக்காக வுதிர்த்த வுரவோனூர்போலும்
கொம்பிலார்ந்த மாதவிமேல் கோதிமேய்ந்த வண்டினங்கள்
அம்பராவுங்கண் மடவாரைம்பாலணையு மழுந்தூரே. (ங)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கொம்பில் | கிளைகளிலே | அம்பு அராவும் | பாணம்போலே (காமிகளை) பாதி (ஹிம்ஸி) யாநின்ற |
| ஆர்ந்த | நிறைந்திருக்கிற | கண் | கண்களையுடையரான |
| மாதவிமேல | குருக்கத்தி மரத்தினமேலே (ளைக்)கிறி | மடவார | ஸ்த்ரீகளுடைய |
| கோதி | மூக்காலே (தளிரக | ஐம்பால் | ஐந்து குணங்களையுடைய மயிர் முடிகளில் |
| மேய்ந்த | இரைதேடாநின்ற | | |
| வண்டு இனங்கள் | வண்டுக் கூட்டங்கள், | | |

| | |
|---|---|
| அணையும் அழுந்தார், | (சென்று) சேராநின்ற |
| செம்பொன் | சிவந்த பொன்போலே அழகியதான |
| மதிள்சூழ் | ப்ராகாரங்களாலே சூழப்பட்டு |
| தென் | தர்சநீயமாயிருக்கிற |
| இலங்கைக்கு | லங்காநகரத்துக்கு |
| இறைவன் | ஸ்வாமியான ராவணனுடைய |
| ஐஇரண்டு சிரங்களையும் | பத்துத் தலைகளையும் |
| உம்பர்வாளிக்கு | ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு |
| இலக்காக | லக்ஷ்யமாகப்பண்ணி |
| உதிர்த்த | அறுத்து விழவிட்ட |
| உரவோன் | பலிஷ்டரான சக்ரவர்த்தித் திருமகனுடையவர்போலும். (௩) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (செம்பொனித்யாதி) "அரணையுடைத்தான ஊரிலேயன்றோ விருக்கிறது, அவ்வூருக்குக் கடவோம் நாமன்றோ" என்று துர்மாநம் பண்ணியிருக்கிற ராவணனுடைய தலைகள் பத்தையும், ப்ரஹ்மாஸ்த்ரந்துக்கிலக்காக்கி உதிர்த்துப் பொகட்ட உரவோனூர்போலும். இந்த்ராதிகளுடைய வஜ்ரத்துக்கு அழியாத பையல்தலைகளை, பனிச்சுக்கு ப்ரகாந்தமான மிடுக்காலே அழித்தாருய்த்து.

(கொம்பிலார்ந்த வித்யாதி) கொம்புகள் செறிந்திருந்துள்ள குருக்கத்தியின்மேலே. (கோதிமேய்ந்த வண்டினங்கள்) தன்செருக்காலே தளிரையும் பூக்களையும் கோதி, அவற்றில் நின்றும் மதுபாநம் பண்ணின வண்டினங்கள், "அதிற்காட்டில் போக்யதையும் இருட்சியுமாயிருப்பதொரு ப்ரதேசம் தேடிப்போய், இராத்தங்கவேணும்" என்று பார்த்து, (அம்பராவுமித்யாதி) அம்பை இளைப்பிக்கிற கண்ணையுடையராய், ஆத்மகுணோபேதைகளாயிருந்துள்ள ஸ்த்ரீகளுடைய மயிர் முடியிலேபோய் சேராநிற்கும். "ஐம்பால்" என்று அஞ்சு வகையாக மயிர்முடியைச் சொல்லுகிறது. ... ... ... (௩)

அரு —மூன்றாம்பாட்டு. (செம்பொனித்யாதி) கீழ்ப்பாட்டில், மஹாபாரத வ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்தாராய், அதிலும் ஸ்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தில் வ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார் இதில் என்று ஸங்கதி; அன்றிக்கே, ஸாரதியாய்வென்றபடி சொன்னவளவிலே ரதியாய் வென்றபடியும் ஸ்ம்ருதமாய் அருளிச்செய்கிறாரென்று ஸங்கதியாகவுமாம்.

† "உம்பர்வாளிக்கு" என்று விசேஷித்ததுக்குக்கருத்தென்னென்னவருளிச் செய்கிறார். (இந்த்ராதித்யாதி). குண்டிகமான என்றத்தைக்

† இங்கு மூன்றுபங்க்திகள் அநன்விதங்கள் கோசாந்தரங்களைக்கொண்டு பரிஷ்கரிக்கவேணும்.

கொண்டே என்றது ஏதத்தின் கார்யமென்று கருத்து.

மேலுக்கவதாரிகை(அதிலித்யாதி).(ஐந்துவகை)என்றது-கந்த(ஸ்ப)ம், மது, மார்தவம், ஸ்நிக்ததை, இருட்சி, ஆகிற ஐந்துவகையென்கை. (௩)

மூ.—

வெள்ளத்துள்ளோராலிலைமேல் மேவி யடியேன் மனம் புகுந்தென்
உள்ளத்துள்ளும் கண்ணுள்ளும் நின்றார் நின்ற வூர்போலும்
புள்ளுப் பிள்ளைக்கிரைதேடிப் போன காதற்பெடையோடும்
அள்ளற்செறுவில் கயல் நாடுமணியார் வயல் சூழழுந்தூரே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காதல் | ப்ரேமம் மிக்கிருந்துள்ள | ஆலிலை மேல் | வடதளத்தின்மேலே |
| பெடையோடும் | பேடையோடு கூட(ச் சேர்ந்து) | மேவி | பொருந்தியிருந்து, (பின்பு) |
| பிள்ளைக்கு | குட்டிக்காக | அடியேன் | தாஸபூதனான என்னுடைய |
| இரைதேடி | ஆஹாரத்தை ஆராய்ந்துகொண்டு | மனம் | மநஸ்ஸிலே |
| | | புகுந்து | ப்ரவேசித்து |
| போன | போகாநின்ற | என் உள்ளத்துள்ளும் | என் ஹ்ருதயத்திலும் |
| புள்ளு | பக்ஷியானது, | | |
| அள்ளல் | சேற்றையுடைத்தான | கண்ணுள்ளும் | கண்களிலும் (விஷயமாய்க்கொண்டு) |
| செறுவில் | விளைநிலங்களிலே | | |
| கயல் | மீன்களை | நின்றார் | (எப்போதும்) எழுந்தருளியிருக்குமவர் |
| நாடும் | தேடாநின்ற | | |
| அணிஆர்வயல்சூழ் அழுந்தூர், | | | [நின்ற |
| வெள்ளத்துள் | ப்ரளயார்ணவத்தில் | நின்ற | நித்யவாஸம் பண்ணுமூர்போலும். |
| ஓர் | ஒரு | | |

வ்யா.—நாலாம்பாட்டு. (வெள்ளத்துள்ளித்யாதி) ப்ரளயத்திலே ஒருபவனுள ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளி. (அடியேன் மனம் புகுந்து) "இவன் ப்ரளயத்திலே கண்வளர்ந்தருளாநின்றான், பரிகைக்கு ஒரு யசோதாதிகளுமின்றிக்கே இராநின்றது, என்வருகிறதோ?" என்று ஆராய்ச்சி பிறக்கும்படி பண்ணி, அதுண்டானவாறே, அதுவே ஹேதுவாக ஹ்ருதயத்திலே வந்துபுகுந்து, "மாநஸாநுபவமேயாய் கண்ணுக்கு விஷயமாகப் பெற்றிலோம" என்கிற விஷாதம் கிடவாதபடி கண்ணுக்கும் தானேவிஷயமாய், ஹ்ருதயமும் வேறொன்றிலே போகாதபடி தானே விஷயமானவர். (நின்றவூர்போலும)

கண்ணுக்கு விஷயமாக்கிக்கொண்டு வந்தாநிற்கிற தேசப்போலும்.

(புள்ளூப்பிள்ளைக்கித்யாதி) குட்டிக்கு இரைதேடிப்போகிற புள்ளானது, தனியேபோகாதே காதலையிட்டு நிரூபிக்க வேண்டும்பெடையோடேபோய். (அள்ளல் செறுவில் கயல்நாடும்) சேறென்றால் இருக்கக்கடவவை, அங்குள்ள போக்யதையின் மிகுதியாலே அத்தை மதியாதே ஸஞ்சரியாநிற்கும். இத்தால் சொல்லிற்றாய்த்து ப்ரளயமென்றுபாராதே ஜகத்ரக்ஷணத்துக்காக மஹாவராஹமானது இறங்குமாபோலே யிராகின்றதாய்த்து. ... ... ... ... (ச)

---

அரு.— நாலாம்பாட்டு. (வெள்ளத்துள்ளிதயாதி) கீழ்ப்பாட்டிலே "உரவோன்" என்று மிடுக்கை அநுஸந்தித்தார; இது பருவம் நிரம்பி விஸ்வாமித்ராதிகளாலே ஸஂசிக்ஷித வித்யாஸம்பத்தையு முடைத்தாயிருந்ததென்று திருவுள்ளம்பற்றி, முக்த(X)சிசுவாய் ப்ரளயத்தில் இளைந்தளிரிலிருந்த மிடுக்கைச்சிந்திக்க, அந்த பாவநா ப்ரகாஷத்தாலே, ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமா யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

அள்ளல்-சேறுடைத்தான. செறுவில்-விளைநிலத்தில் என்று சப்தார்த்தமாய் தாத்பாயமருளிச் செய்கிறார (சேறென்றாலித் யாதி). (ச)

மூ.—பகலுமிரவுந்தானேயாய்ப் பாரும் விண்ணும் தானேயாய்
நிகரில் சுடராயிருளாகி நின்றார நின்ற ஊர்போலும்
துகிலின் கொடியும் தேர்த்துகளும் துன்னி மாதர்கூந்தல்வாய்
அகிலின் புகையால் முகிலேய்க்குமணியார் வீதி யழுந்தூரே(ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துகிலின் | வஸ்த்ரங்களினால் கட்டப்பட்டதாய் | முகிலேய்க்கும் | மேகத்தோடொத்திருக்கிற |
| துன்னி | நெருங்கி யிருக்துள்ள | | அணியாரவீதி அழுந்தூர், |
| கொடியும் | த்வஜங்களும் | பகலும் | பகலையும் |
| தேர | தேர்நடத்தும்போதுண்டான | இரவும் | ராத்ரியையும் |
| துகளும் | தூ(ளி)ளியும் (இவற்றாலேகூடின) | தானேயாய் | தனக்கு விபூதியாகவுடையனாய், |
| மாதர் | ஸ்த்ரீகளுடைய | பாரும் | பூமியையும் |
| கூந்தல்வாய் | மயிர்முடிகளிலே (பரிமளத்துக்காக இடாநின்ற) | விண்ணும் | ஆகாசத்தையும் |
| | | தானேயாய் | தனக்கு விபூதியாகவுடையனாய், |
| அகிலின் புகையால் | அகில்கட்டையின் தூபத்தினால் | நிகர் இல் | ஒப்பில்லாத |

சுடராய் தேஜஃபதார்த்தங்களையும் ஆகி விபூதியாக வுடையனாய்க்கொண்டு
இருள் அந்தகாரத்தையும் நின்றார் நின்ற வூர்போலும். (ஓ)

வ்யா. —அஞ்சாம்பாட்டு. (பகலுமிரவுமித்யாதி) "பகல்" என்றும், "இரவு" என்றும் சொல்லப்படுகிற இவற்றைத்தனக்கு விபூதியாகவுடையனாய். (பாரும் விண்ணும் தானேயாய்) பூம்யந்தரிக்ஷங்களைத் தனக்கு விபூதியாகவுடையனாய். (நிகரில் சுடராயிருளாகி நின்றார்) தமஃப்ரகாசங்களை விபூதியாகவுடையனாய், இப்படி ஜகதாகாரனானவன், அஸாதாரணவிக்ரஹத்தைக் கண்டு அநுபவிக்கலாம்படி வந்துநிற்கிற ஊர்போலும்.

(துகிலின் கொடியித்யாதி) நெருங்கக் கட்டின துகில்களாலுண்டானகொடியும், தேர்கள் ஒன்றோடொன்று தாக்கிக்கிளப்பப்பட்ட தூளியும், மிகுதியையுடைத்தாய், அவ்வூரில் ஸ்த்ரீகளுடைய குழலுக்கு வாசங்கொளுத்துகைக்காக அகிலைப்புகைப்பர்கள்; அது மேகம்போலேயாய், வர்ஷாலைவக்காட்டாநின்றது. வர்ஷாவில் வந்தால், ஒரு காற்றும் தூளியும் மேகமும் மூன்றும் கூடியிறேயிருப்பது; அதில் கட்டின கொடிகளால் வந்த காற்றுண்டாயிருந்தது. தேர்காலாலே கிளப்பப்பட்ட தூளியுண்டாயிருந்தது; அவர்கள குழலுக்குப் புகைக்கிற அகில் புகையானது மேகமாயிருந்தது; ஆக இம்மூன்றும் கூடி நித்ய வர்ஷாவைக் காட்டாநின்றது; ருதுவிசேஷங்கள்தோறு முண்டான பதார்த்தங்களை அநுபவிக்க வொட்டுகிறனவில்லை. ... (ரு)

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (பகலுமித்யாதி) கீழ்ப்பாட்டில், வடதளசாயியின்படியை அநுஸந்தித்து அஞ்சின இவரை "நீர் அஞ்சவேணடாகாணும், எனக்கிதெல்லாம் விபூதிகாணும்" என்ன, அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"துன்னி" என்ற பதம் நெருங்கி என்றபடி. அத்தை, துகில், தேர், புகை இம்மூன்றுக்கும் விசேஷணமாக்கி யருளிச்செய்கிறார் (நெருங்கவித்யாதி). "முகில்" என்ற பதம், வர்ஷாகாலபர மென்றருளிச் செய்கிறார் (வர்ஷாவில்) என்று. "எய்க்கை" ஸத்ருசமாகையாய், அத்தை உபபாதிக்கிறார் (அதில் கட்டினவித்யாதி). (ரு)

மூ. —ஏடிலங்கு தாமரைபோல் செவ்வாய் முறுவல் செய்தருளி
மாமுவந்தென் மனம் புகுந்தார் நின்றார் நின்ற ஊர்போலும்
நீடு மாடத்தனிச்சூலம் போழ்கக் கொண்டல் துளிதூவ
ஆடலரவத்தார்ப்போவா அணியார் வீதியழுந்தூரே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நீடு | உயர்ந்திருக்கிற | ஏடுஇலங்கு | இதழ்களினால்(நிறைந்து) விளங்காநின்ற |
| மாடம் | க்ருஹங்களி லுண்டான | | |
| தனி | அத்விதீயமான | தாமரைபோல் | தாமரஸபுஷ்பம்போலே இராநின்ற |
| சூலம் | சிகரமானது | | |
| போழ்க | (மேகத்தின வயிற்றை)கிண்டுபிளக்க | செவ்வாய் | சிவந்த திருப்பவளத்தினால் |
| கொண்டல் | (அதினால்) மேகமானது | முறுவல்செய்தருளி | (முதலிலே) மந்தஸ்மிதம் பண்ணி |
| துளிதூவ | (மழை)த்துளிகளை இறையாநிற்பதாய், | மாடுவந்து | (அநந்தரம் என் )ஸமீபத்திலே வந்து |
| ஆடல் | ஆடாநின்ற ஸ்த்ரீகளுடைய | என்மனம் | (பின்பு) என்ஹ்ருதயத்தில் |
| அரவத்து | ஆரவாரத்தினாலுண்டான | புகுந்து | ப்ரவேசித்து |
| ஆர்ப்பு | பேரொலியானது | நின்றார் | அங்கே ஸ்த்தாவரமாயெழுந்தருளியிருக்கிறவர் |
| ஓயா | இடைவிடாமலிருக்கிற | | |
| அணியார்வீதி அழுந்தூர் | | நின்றவூர்போலும். (௬) | |

வ்யா.—ஆறும்பாட்டு. (ஏடிலங்கித்யாதி) இதள் விளங்கா நின்றுள்ள தாமரைபோலே ஸ்மிதம்பண்ணியருளி, என்னைப் பெறுகையில் வந்த அலப்யலாபம தன்னதென்னுமிடம் தோற்ற ஸ்மிதம் பண்ணி, அத்தாலே தான் செய்தது விலக்காதபடியான தசையை எனக்குப் பிறப்பித்து, என்னருகேவந்து நின்று, அது ஸாத்மித்தவாறே ஹ்ருதயத்திலே வந்து புகுந்து, "இனி இவர்க்கொரு போக்கில்லை" என்று தோற்ற நிற்கிறவர், கண்ணுக்கிலக்காம்படி வந்து நிற்கிறதேசம் போலும்.

(நீடுமாடமித்யாதி) ஓங்கின மாடங்களிலுண்டான தனிச்சூலமானது, மேகங்களினுடைய கீழ்வயிற்றைப்போழ, அவ்வர்ஷத்தையுண்டாக்கும். இத்தால் மாடங்களினுடைய ஒக்கம் சொன்னபடி. (ஆடலரவத்தார்ப்போவா) ஸ்த்ரீகள் ஆடுகிறபோதை ஆரவாரத்தாலுண்டான கோஷம் மாறாதே செல்லுகிற. (அணியார்வீதி) அது மாறாமையால் வந்த அழகையுடைய வீதியென்றபடி. ... ... (௬)

---

அரு.—ஆறும்பாட்டு. (ஏடிலங்கித்யாதி). கீழ்ப்பாட்டில், இவர் அச்சம் தீரும்படி ஐகதாகாரதையைக்காட்டி, அத்தாலிப்போது ஸத்தைபெற்

ருப்போலே இருந்த இவரைப்பெற்ற ஹர்ஷத்தாலே, தான் ஹர்ஷம் தோற்றக்கிட்டவந்து நின்றபடியை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(தனிச்சூலமானது) அத்விதீயமான மழுவானது. (சு)

மூ. —

மாலைப்புகுந்து மலரணைமேல் வைகியடியேன் மனம்புகுந்தென்
நீலக்கண்கள் பனிமல்க நின்றார் நின்ற ஊர்போலும்
வேலைக்கடல்போல் நெடுவீதி விண்டோய் சுதை வெண்மணிமாடத்து
ஆலைப்புகையாலழல் கதிரை மறைக்கும் வீதி யழுந்தூரே. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வேலை | கரையையுடைத்தான | மலர் அணை மேல் | பூம்படுக்கையில் |
| கடல் போல் | ஸமுத்ரம்போலே கம்பீரமாயும் | வைகி | தங்கி |
| நெடு | நீண்டிருக்கிற | அடியேன் | (பின்பு) என்னுடைய |
| வீதி | வீதிகளிலேயுண்டாய் | மனம் | ஹ்ருதயத்தில் |
| விண் | ஆகாசத்திலேசென்று | புகுந்து | ப்ரவேசித்து (அநந்தரம் பிரிவை ப்ரஸங்கித்தவளவிலே) |
| தோய் | படிந்திருப்பதாய், | | |
| சுதை | சுண்ணாம்பிட்டு | | |
| வெண் | வெளுத்திருப்பதாய் | என் | என்னுடைய |
| மணி | மணிமயமாயிருக்கிற | நீலம் | கருநெய்தல் போன்ற |
| மாடத்து | க்ருஹங்களிலே | கண்கள் | கண்களில்நின்றும் |
| அழல் | உஷ்ணமாயிருக்கிற | பனி | நீரானது |
| கதிரை | (ஸூர்ய)கிரணங்களை | மல்க | பெருகாநிற்க |
| ஆலைப்புகையால் | கரும்பாலையில் நின்றுமுண்டான தூமத்தினால் | நின்றார் | (அதைக்கண்டு அப்புறம் போகமாட்டாமல்) இங்கே யெழுந்தருளி யிருக்குமவர் |
| மறைக்கும் | மறையாநின்ற | | |
| வீதி அழுந்தூர் | | | நின்றவூர்போலும். (எ) |
| மாலை | ஸாயங்காலத்தில் | | |
| புகுந்து | ப்ரவேசித்து | | |

வ்யா. —ஏழாம்பாட்டு. (மாலைப்புகுந்து) போக (஭ோ) யோக்யமான காலத்திலேவந்து புகுந்து பூம்படுக்கையிலேதங்கி, அநந்தரம் அங்கு நின்றும்போந்து. (அடியேன்மனம் புகுந்து) அநந்யார்ஹையான என்னுடைய ஹ்ருதயத்திலே வந்துபுகுந்து, பிரிவைப்ரஸங்கித்து, என்னுடைய கண்ணும் கண்ணீருமான ஆற்றாமையைக்கண்டு பின்னைகால்வாங்கிப் போகமாட்டாமே நின்றவர் நித்யவாஸம் பண்ணுகிற தேசம்போலும்.

(வேலையித்யாதி) கரையையுடைத்தான கடல் போலேயாய்த்து திருவீதிகளுடையபெருமையிருக்கும்படி. (விண்டோய்சுதை)ஸ்வர்க்கத்தளவும் ஓங்கியிருப்பதாய், சாந்திட்டு, அத்தாலே வெளுத்திருப்பதாய், மணிமயமான மாடத்திலுண்டான ஆதித்யனுடைய உஷ்ணமான கிரணங்களை, ஆலையிலுண்டான புகையானது வந்து வீதியை மறையாநிற்கும். இத்தால் ஊருக்கும் வயலுக்குமுண்டான அண்ணிமை சொல்லுகிறது. ... ... ... ... ... (௭)

---

அரு.—எழாம்பாட்டு. (மாலையித்யாதி)கீழ்ப்பாட்டில் ஸ்மிதம்பண்ணிக் கொண்டு கிட்டிநின்றபடியை அநுஸந்தித்தார், கிட்டிவந்தவர் படுக்கை ஏறி அநுபவித்து, அது ஸாத்மிக்கைக்காகப் பிரிவை ப்ரஸங்கித்திருக்கும்படியை அநுஸந்திக்கிறுரென்று ஸங்கதி.

(உண்டான) என்றது - ஔந்நத்யத்தாலே மாடத்திலே ஸஞ்சரிக்கிறவென்றபடி. புகையானது கிரணங்களையும் வீதியையும் மறைக்குமென்று ச(ஃ)காரார்த்யாஹார பூர்வகம் அந்வயித்துக்கொள்வது. ... ... (எ)

மூ.—வஞ்சி மருங்குலிடை நோவ மணந்துநின்ற கனவகத்தென்
நெஞ்சு நிறையக் கைகூப்பி நின்றூர் நின்ற ஊர்போலும்
பஞ்சியன்ன மெல்லடி நற்பாவைமார்க ளாடகத்தின்
அஞ்சிலம்பி னார்ப்போவா அணியார் வீதி யழுந்தூரே. (௮)

| பதம். | உரை. |
|---|---|
| பஞ்சியன்ன | பஞ்சுபோலே |
| மெல் அடி | ம்ருதுவான பாதங்களையுடைய |
| நல்பாவைமார்கள் | விலக்ஷணரான ஸ்த்ரீகள் பூண்ட |
| ஆடகத்தின் | ஸுவர்ணத்திஞல் செய்யப்பட்ட |
| அம் சிலம்பின் | அழகிய தண்டைச் சிலம்பினுடைய |
| ஆர்ப்பு | பேரொலியானது |
| ஓவா | இடைவிடாமலிருக்கிற |
| அணியார்வீதி அழுந்தூர், | |
| வஞ்சிமருங்குல் | வஞ்சிக்கொடிபோடொத்த |
| இடை | (என்) மத்யப்ரதேசமானது [யாக |
| நோவ | தளர்ந்துமெலியும்படி |
| மணந்துநின்ற | (என்னோடு) சேர்ந்திருக்கிற |
| கனவகத்து | ஸ்வப்நகல்பமான ஸம்ஶ்லேஷதசை |
| என் நெஞ்சு | என்மநஸ்ஸிலே [யில், |
| நிறைய | ஒரு குறையும் தோற்றுதபடி பரிபூர்ணமாக |
| கைகூப்பி | (தான் செய்த அபராதத்தை க்ஷமிப்பிக்கைக்காக) அஞ்சலி பண்ணிக்கொண்டு |

நின்றூர் நின்ற ஊர்போலும். (௮)

வ்யா. —எட்டாம்பாட்டு. (வஞ்சிமருங்குல்) வஞ்சியின் படியை யுடைத்தான இடையானது நோவக்கலந்துநின்ற ஸ்வப்நகல்பமான ஸம்ஶ்லேஷத்தில். (என்நெஞ்சமித்யாதி) "இன்ன பரிமாற்றம் பெற்றி லோம்" என்கிற அத்ருப்தி நெஞ்சில் கிடவாதபடியாக வாய்த்து, நெஞ்சிலே குறைவறப் புகுந்து நின்றபடி.

(பஞ்சியன்ன) செம்பஞ்சுபோலே ம்ருதுவான காலையுடைய ராய், நிருபாதிகமான ஸ்த்ரீத்வத்தை யுடையரானவர்களுடைய பொன்னாலே சமைக்கப்பட்ட அழகிய சிலம்பிலுண்டான ஆரவார மானது மாறாதேயிருக்கிற. ... ... ... ... (அ)

---

அரு —எட்டாம்பாட்டு. (வஞ்சியித்யாதி) கீழ்ப்பாட்டிலே, பிரிவை ப்ர ஸங்கிக்கக் கணணும் கண்ணீருமாயிருந்தபடியை அநுஸந்தித்தார்; அங்கு மிங்கும் தங்கித்தங்கி வருவாரைப்போலே தானே ஹ்ருஷ்டனாய் வந்த இவன், பிரிவை ப்ரஸங்கிப்பானென்னென்னும் ப்ரஸ்தாவத்திலே, அதுதான் என்னிடையாட்டத்தின் குற்றங்காண் என்கிறாரென்று ஸங்கதி.

இடை நோவ மணந்த குற்றம்தீரக் கைகூப்பினன், அதுவெல்லா மென்னெஞ்சிலே நிரந்தரத்யாந விஷயமாய்த்து என்னும் தாத்பர்யத்தை யருளிச் செய்கிறார் (இன்ன பரிமாறறமித்யாதி). (இன்ன பரிமாற்றம்) தாழ்ந்த பரிமாற்றம். (அ)

மூ.—என்னைம்புலனுமெழிலுங்கொண்டிங்கேநெருனலெழுந்தருளிப்
பொன்னங்கலைகள் மெலிவெய்தப் போன புனிதரூர்போலும்
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல் வரிவண்டிசைபாட
அன்னம் பெடையோடுடனாடு மணியார் வயல்சூழழுந்தூரே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மன்னும் | மத்ஸ்யாதிகள் நெருங் கி வர்த்திக்கிற | அன்னம் | ஹம்ஸபக்ஷியானது |
| முதுநீர் | பழையதான தடாகத் திலே யுண்டான | பெடையோடு | (தன்)பேடையோடு |
| அரவிந்தமலர் மேல் | தாமரைப் பூவின்மே லே | உடன் | கூடின தாய்க்கொ ண்டு [ன்ற |
| வரிவண்டு | ரேகைகளை யுடைய வண்டுகளானவை | ஆடும் | நர்த்தநம் பண்ணுகி |
| இசைபாட | காநம் பண்ணுகிற்கச் செய்தே | அணியார் வயல்சூழழுந்தூர், | |
| | | நெருனல் | நென்னேற்று [தில் |
| | | இங்கே | நானிருக்கு மிவ்விடத் |
| | | எழுந்தருளி | வந்து |
| | | என் ஐம்புல னும் | என்னுடைய பஞ்சே ந்த்ரிய ஜ்ஞா நத்தையும் |

| | | | |
|---|---|---|---|
| எழிலும் | அழகையும் [ண்டு | மெலிவுஎய்த | தளர்ந்து விழும்படி |
| கொண்டு | அபஹரித்துக்கொ | | யாக [ன |
| பொன் | ஸ்ப்ருஹணீயமாய் | போன | விஶ்லேஷித்துப்போ |
| அம் | அழகியதான | புனிதர் | பரிசுத்தருடைய |
| கலைகள் | (என்) வஸ்த்ரங்களும் | | ஊர்போலும். (கூ) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (என்னைம்புலனுமித்யாதி) என்னுடைய ஶ்ரோத்ராதிகளால் வந்த வெளிச்சிறப்பையும், ஸமுதாய சோபையையும் கொண்டு, நினைவின்றிக்கேயிருக்க, இங்கே நேற்றெழுந்தருளி அரையில் பரியட்டமானது தொங்காதபடிக்கீடாகப் பண்ணிப்போன புனிதரூர்போலும். இத்தலையிலுள்ளத்தை ஸர்வஸ்வாபஹாரம்பண்ணி, தன்பக்கலுள்ளதொன்றும் தொங்காதபடி பண்ணிப்போன சுத்தியையுடையவர் வர்த்திக்கிற தேசம்போலும்.

(மன்னுமுதுநீர்) ஜலசரஸத்வங்கள் மன்னியிருக்கிற. (முதுநீர்) பழையதாய் மாறாத ஜலத்தையுடைய பொய்கைகளிலுண்டான தாமரைப் பூக்களின்மேலேமதுபானம் பண்ணின தர்ஶநீயமான நிறத்தையுடைத்தான வண்டினங்களானவை, செருக்குக்குப் போக்குவிட்டு இசைபாட, அதினுடைய பாட்டுக்குச்சேர அன்னமானது, பேடையோடொக்க ஆடாநிற்கும். ... ... ... ... ... (கூ)

அரு.—ஒன்பதாம் பாட்டு. (என்னித்யாதி) கீழ்ப்பாட்டில், இடைநோவ மணந்தபடி சொல்லிற்று; அந்த ஸம்ஶ்லேஷம் ஸாத்மிக்கவேணுமென்று நாலடிபேரவே, தமக்குப் பிரிந்துபிறந்த க்லேசத்தாலே அல்பம் வெறுப்பு தோற்ற, அவன் ஸந்நிஹித தேசத்தைக் கொண்டாடுகிறாரென்று ஸங்கதி.

(சுத்தியையுடைய) என்றது-தான், என்னுடைய விஶ்லேஷத்தாலே நிறம் முதலானவற்றை இழவாதே வீதராகரைப்போலே பவித்ரதை தோற்றவிருக்கிறானென்னும் வெறுப்புக்கு ஸூசகமென்று திருவுள்ளம். (கூ)

மூ.—நெல்லிற்குவளை கண்காட்ட நீரிற்குமுதம் வாய்காட்ட
அல்லிக்கமலமுகம் காட்டும் கழனியழுந்தூர் நின்றானை
வல்லிப்பொதும்பில் குயில்கூவும் மங்கைவேந்தன் பரகாலன்
சொல்லிற்பொலிந்ததமிழ்மாலைசொல்லப்பாவம்நில்லாவே. (கO)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| நெல்லில் | நெற்பயிரின் நடுவே முளைத்த |
| குவளை | கருநெய்தலானது |
| கண் | (அவ்வூர்பெண்களுடைய) கண்களை |
| காட்ட | தர்சிபிக்க, |
| நீரில் | ஜலத்திலே முளைத்த |
| குமுதம் | அரக்காம்பலானது |
| வாய்காட்ட | (அவர்களுடைய) வாயை தர்சிப்பிக்க, |
| அல்லி | இதழை யுடைத்தான |
| கமலம் | தாமரைப்பூவானது |
| முகம் | (அவர்கள்) முகத்தை |
| காட்டும் | ப்ரகாசிப்பியாநின்ற (அவர்கள் முகம் போலே விளங்காநின்ற) [த்தான |
| கழனி | விளைநிலங்களை யுடை |
| அழுந்தூர் | திருவழுந்தூரிலே |
| நின்றானை | எழுந்தருளி யிருக்குமவன் விஷயமாக, |

| பதம். | உரை. |
|---|---|
| வல்லி | கொடிகளுடைய |
| பொதும்பில் | புதறுகளிலே |
| குயில் | கோகிலங்களானவை |
| கூவும் | கூவாநின்ற |
| மங்கை | திருமங்கைக்கு |
| வேந்தன் | ராஜாவாய் |
| பரகாலன் | சத்ருக்களுக்குக் காலன்போலே இராநின்ற ஆழ்வாருடைய |
| சொல்லில் | நல்ல சப்தங்களினால் |
| பொலிந்த | நிறைந்திருக்கிற |
| தமிழ் | தமிழ்பாஷையிலுண்டான |
| மாலை | சப்த ஸந்தர்ப்ப ரூபமான இப்பத்துப் பாட்டையும் |
| சொல்ல | அப்யஸிக்கவே |
| பாவம் | பாவங்களானவை |
| நில்லா | (அவர்களிடத்தில்) தங்கமாட்டாது. (௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு.(நெல்லிலித்யாதி) நெல்லுக்குக்களையாக முளைத்த குவளைகளானவை, அவ்வூரில் ஸ்த்ரீகளுடைய கண்ணைக் காட்டி நீர் நிலங்களிலுண்டான அரக்காம்பலானவை, அவர்களுடைய அதரத்தைக்காட்ட. (அல்லிக்கமலம்) மிக்க இதளையுடைத்தான தாமரைப் பூக்களானவை, அவர்களுடைய முகத்தைக்காட்டாநின்றுள்ள. (கழனியழுந்தூர் நின்றானை) வயலுக்கும் ஊருக்கும் வாசிதெரிவிக்க வொண்ணாதாய்த்து.

(வல்லிப்பொதும்பிலித்யாதி) பூங்கொடிகளானவை நெருக்கியிருக்கிற முழஞ்சுகளிலே, குயில்களானவை, முக்தர் ஸாமகாநம் பண்ணுமாபோலே கூவாநிற்கிற திருமங்கையிலுள்ளார்க்கு ராஜாவாயுள்ளார், ப்ரதிபக்ஷநிரஸந சீலராயுள்ளார். (சொல்லில் பொலிந்த) சொல்களால் ஸம்ருத்தமாயுள்ள தமிழ்த்தொடையைவாயாலே சொல்ல (பாவம் நில்லாவே) பாபத்தை யுண்டாக்குவதானலும்தவிர வொண்

ணுதனைச்சொல்லப் பாவங்கள் தன்னடையேபோம். ... ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

அரு.—பத்தாம்பாட்டு. (நெல்லில் குவளையித்யாதி). "மாலை" என்ற த்தால் தோற்றின போக்ய(ஷ்ஷீ)தையைப்பற்ற தாத்பாய மருளிச் செய்கிறார் (பாபத்தையித்யாதி). (௧௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஏழாம்பத்தில் அஞ்சாந்திருமொழி முடிந்தது.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து ஆறுந்திருமொழி

### சிங்கமதாய்ப்ரவேசம்.



வ்யா.—(சிங்கமதாயித்யாதி) "போனபுனிதர்" என்றுஇன்னுதானுர்; "நாம் எங்கேனும்போனோமோ? உமக்காகவன்றோ இவ்வோவிடங்களில் வந்துநிற்கிறது" என்று உகந்தருளின கோயில்களில் நிலையைக்காட்டினன்; "இனித்தான் சிறுக்கனுடையப்ரதிஜ்ஞாஸமகாலத்திலேவந்து உதவினவனென்று நம்மை யறிந்திலீரோ? உமக்கு நினைத்த வகையெல்லாம் பரிமாறுகைக்காக இங்கேவந்து நின்றோம்; உம்முடைய விரோதியைப்போக்கி, உம்மை அடிமைகொள்ளுகைக்காக வந்து நின்றோம்" என்று திருவழுந்தூரிலே நிற்கிற நிலையைக்காட்டக் கண்டு த்ருப்தராயநுபவிக்கிறார். (க) "[Grantha text] தஸ்யைவ கோபாய யதஃ ப்ரஸாதாயச ஜாயதே" என்கிறபடியே, இந்நிலைதானே இவர்க்கு இழவுக்குமுடலாய் பேற்றுக்கு முடலாயாய்த்திருப்பது. ஆகையாலே தமக்கு இப்போது ஸமாதாநமாய் விட்டது. ... ... ... ... ... ... *

அரு.—சிங்கமதாயின் ப்ரவேசம். கீழ்த்திருமொழியில் "போனபுனிதர்" என்றவர் இங்கே "கண்டுகொண்டேன்" என்று களிக்கக் காரணமென்னென்ன; அவன் ஆச்ரிதன்சொல்வழியே செய்வானுனமையை அறிவிப்பிக்க த்ருஷ்டராகிறாரென்று ஸங்கதி யருளிச் செய்கிறார் (போனபுனிதரித்யாதி.) ... ... ... ... ... ... ... (*)

(க) வி-பு-உ-௬-௬௮:

மூ.—சிங்கமதாயவுணன் திறலாகம் முன்கீண்டுகந்த
சங்கமிடத்தானைத் தழலாழி வலத்தானைச்
செங்கமலத்தயனனையார் தென்னழுந்தையில் மன்னிநின்ற
அங்கமலக்கண்ணனை யடியேன் கண்டுகொண்டேனே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சிங்கமதாய் | நரஸிம்ஹரூபியாய்க் கொண்டு [டைய | கமலத்து | திருநாபிகமலத்தில் பிறந்த |
| அவுணன் | ஹிரண்யாஸுரனு | அயன் அனையார் | ப்ரஹ்மாவோடொத்த ப்ராஹ்மணாகள் (வர்த்திக்கிற) |
| திறல் | பலிஷ்டமான | | |
| ஆகம் | சரீரத்தை | | |
| முன் | ப்ரஹ்லாதன் ப்ரதிஜ்ஞைபண்ணின காலத்தில் | தென் | ஸுந்தரமான |
| | | அழுந்தையில் | திருவழுந்தூரிலே |
| | | மன்னி | பொருந்தி |
| கீண்டு | கிழித்துப் பொகட்டு | நின்ற | நித்யவாஸம் பண்ணுகிறவனாய், [ன்ற |
| உகந்த | ஸந்தோஷித்தவனாய், | | |
| சங்கம் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தை | அம்கமலம் | அழகியகமலமலர்போ |
| இடத்தானை | இடது திருக்கையிலுடையவனாய், | கண்ணன்தன்னை | திருக்கண்களையுடையவனை |
| தழல் | ஜ்வலியாநின்ற | அடியேன் | அரங்யார்ஹ சேஷபூதனான நான் |
| ஆழி | ஸ்ரீஸுதர்சநத்தை | | |
| வலத்தானை | வலது திருக்கையிலேந்தினவனாய், | கண்டுகொண்டேன் | காணப்பெற்றேன். (௧) |
| செம் | அழகியதான | | |

வ்யா. —முதற்பாட்டு (சிங்கமதாய்) நரஸிம்ஹவேஷத்தையுடையனாய், அவுணனுண்டு - ஹிரண்யன், அவனுடைய மிடுக்கையுடைத்தான சரீரத்தை, சிறுக்கனுடைய ப்ரதிஜ்ஞைக்கு முற்பாடனாய்க் கொண்டுவந்து கிழித்து, அவனுடைய விரோதிபோகப்பெற்றத்தால் வந்தஉகப்புந்தன்னதானபடி. விரோதியைப்போக்குவானும் தானாய், அத்தால் உகப்பானும் தானாயிருக்கிறபடி. சிறுப்ரஜை பால்குடித்தால் உகப்பாள்தாயிறே. (சங்கமிடத்தானை) கையில் திவ்யாயுதம்கொண்டு கார்யம்கொள்ள அறிந்திலனாய்த்து.

(செங்கமலமித்யாதி) ஸ்ருஷ்டிகார்யத்துக்குக்கடவனான ப்ரஹ்மாவோடொத்திருக்கிற ப்ராஹ்மணரான திருவழுந்தூரிலே நித்யவாஸம்பண்ணுகிற புண்டரீகாக்ஷனை ஸர்வேச்வரனை. (அடியேன் கண்டுகொண்டேனே) அவ்வூரிலுள்ளாருடைய ஜந்மமுமின்றிக்கே,

ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுடைய படியுமின்றிக்கே யிருக்கிற நான் கண்டநுபவிக்கப்பெற்றேன். ... ... ... ... (க)

---

அரு. — முதற்பாட்டு. (சிங்கமித்யாதி) (முற்பாடனைக்கொண்டு) என்றது-முற்பாடனென்னலாம் படியாய்க்கொண்டு என்றபடி. இத்தால் ஸமஸமய ஸமுத்பூதத்வத்தைச் சொன்னபடி. விவரணம் (விரோதியை யித்யாதி). "இடத்தானை" என்றும் "வலத்தானை" என்றும் சொல்லுவானென்? "சங்குசக்கரத்தான்" என்றுப்போலே சொன்னல் அர்த்தஸித்தமன்றோ வென்ன வருளிச்செய்கிறர் (கையிலித்யாதி). கார்யங்கொள்ள வறியாமையால், அவையிருந்த விடந்தன்னிலே யிருந்தன வென்னுமது தோற்றவருளிச் செய்தபடி.

(ப்ரஹ்லாதாழ்வானுடைய படியாவது) பக்த்ய(த்)ரேகிசயம். (க)

மூ. — கோவாணுர் மடியக்கொலையார் மழுக்கொண்டருளும்
மூவா வானவனை முழுநீர் வண்ணனை யடியார்க்கு
ஆவாவென்றிரங்கித் தென்னழுந்தையில் மன்னிநின்ற
தேவாதிதேவனை யான் கண்டுகொண்டு திளைத்தேனே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கோவாணுர் | ராஜாக்களென்று பேர் பெற்றவர்களெல்லாரும் | வண்ணனை | வர்ணத்தை யுடையவனாய், |
| மடிய | முடியும்படியாக | அடியார்க்கு | அநந்யார்ஹசேஷபூதரானவர் விஷயத்தில் [று |
| கொலைஆர் | ஸம்ஹார க்ரியையை ஸ்வபாவமாக உடைத்தான [தை | ஆ ஆ என்று | ஐயோ! ஐயோ! என் |
| மழு | மழுவென்னு மாயுதத் | இரங்கி | க்ருபைபண்ணி |
| கொண்டருளும் | (கையில்) ஏந்தினவனாய், | தென் அழுந்தையில் மன்னிநின்ற | |
| மூவா | கிழத்தனம் (முதலான விகாரங்கள்) இல்லாத | தேவாதிதேவனை | நித்யஸூரி நிர்வாஹகனானவனை, |
| வானவனை | பரமபதநாதனாய், | யான் | நான் |
| முழுநீர் | நிறைந்தஜலத்தை யுடைத்தான ஸமுத்ரத்தினுடைய | கண்டுகொண்டு | கண்ணாலே ஸேவித்[து |
| | | திளைத்தேன் | கலக்கமற்று களித்தேன். (உ) |

வ்யா. — இரண்டாம்பாட்டு. (கோவாணுர்மடிய) ஓரோப்ரதேசங்களுக்கு நிர்வாஹகராய், க்ஷத்ரியரென்று பேர் பெற்றரெல்லா

ரும் முடியும்படிக்கீடாக. (கொலையார் மழுக்கொண்டருளும்) இரு பத்தொருபடிகால் க்ஷத்ரியகுலத்தை அறுத்துப்பொகடச்செய்தே யும், வேறோராயுதம் வேண்டாதபடியிருக்கிற மழுவைக் கொண்டரு ளின ஏகரூபமான விக்ரஹத்தையுடையவனை. (முழுநீர்வண்ணனை) ஜலராசியான கடல்போன்ற நிறத்தையுடையவனை.

(அடியார்க்காவாவென்றிரங்கி) அஸாதாரண பரிகாரத்துக்கு அய்யோவென்று க்ருபையைப்பண்ணி திருவழுந்தூரிலே வந்துநிற் கிற. (தேவாதி தேவனை) *அயர்வறுமமரர்களதிபதியை, நான் கண் ணாலே காணப்பெற்று க்ஷேப(ஸ்ரீ)மடையத் தீர்ந்து களிக்கப்பெற் றேன். (உ)

---

அ௫.—இரண்டாம்பாட்டு. (கோவானுரீத்யாதி) கீழே துஷ்ப்ரக்ருதி யான ஓர் அவுணனை நிரஸித்தமையை யருளிச்செய்தார்; அவ்வளவன்றி யே மூவெழுகாலும் துஷ்டசிக்ஷை பண்ணினபடியை அருளிச்செய்கிரு ரென்று ஸங்கதி.

(மூவாவானவன்) மூப்பில்லாத வைகுண்டநாத னென்ருய், பலி தார்த்தம் (ஏகரூபமான வித்யாதி). ... ... ... ... (உ)

மூ. —உடையானை யொலிநீருலகங்கள் படைத்தானை
விடையானோட வன்று விறலாழி விசைத்தானை
அடையார் தென்னிலங்கை யழித்தானை யணியழுந்தூர்
உடையானை யடியேனடைந்துய்ந்து போனேனே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உடையானை | ஸர்வஸ்வாமியாய் | விசைத்தானை | சலிப்பித்தவனாய் |
| ஒலிநீர் | கோ(ஷ)ஷியாநின் றஜலத்தையுடைத் தான ஸமுத்ரத்தி னால் சூழப்பட்ட | அடையார் | சத்ருக்கள் நிறைந்தி ருக்கிற |
| | | தென் இலங் கை | தென்திசையிலுள்ள லங்கையை |
| உலகங்கள் | லோகங்களை | அழித்தானை | நாசம் செய்தவனாய் |
| படைத்தானை | ஸ்ருஷ்டித்தவனாய் | அணி | பூமிக்கு ஆபரணமா யிருக்கிற |
| விடையான் | எருதை (வாஹந மாக) உடையனான ருத்ரன் | அழுந்தூர் | திருவழுந்தூரை |
| | | உடையானை | இருப்பிடமாக உடை யனானவனை |
| ஓட | தோற்று ஓடும்படி | அடியேன் | நான் |
| அன்று | அந்த பா(ணா)ஸுர யுத்த ஸமயத்தில் | அடைந்து | ஆச்ரயித்து |
| | | உய்ந்துபோ னேன் | உஜ்ஜீவித்தேன். (௩) |
| விறல் | மிடுக்கையுடைய | | |
| ஆழி | ஸ்ரீஸுதாசநத்தை | | |

வ்யா. —மூன்றாம்பாட்டு. (உடையானையித்யாதி) ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த சேதநர்க்கும் நிருபாதிக சேஷியாயுள்ளவனை. (ஒலிநீருலகங்கள் படைத்தானை) ஸர்வமும் உபஸம்ஹ்ருதமாய்க்கிடக்க, கடல்சூழ்ந்தபூமியை ஸ்ருஷ்டித்தகாரணபூதனை. (விடையானித்யாதி) நாட்டுக்கு ரக்ஷகராக நிறுத்தினவர்கள் தாங்களே, அஸுரர்களோடேகூட பாத (ஞாத) கராய்வருமன்றும் நோக்குமவனை. ருத்ரன்கெட்டோட, இவன்பண்ணின வ்யாபாரமென்னென்னில்; மிடுக்கை யுடைய திருவாழியை விதிர்த்தானித்தனை. (விடையானோட)அவன்றான் (க) "பாரவச்யம் ஸமாயாத:- பாரவச்யம் ஸமாயாத:" என்று பரவசனாய்க்கிடந்தும், தெளிந்தும், (உ) "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ! - க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ!" என்னுமிறே சொல்லுவது.

(அடையாரித்யாதி) ப்ராதிகூல்யமேயாய், அதிலே நிலைநின்றாரை அழியச்செய்யுமவனை. (அணியழுந்தூருடையானை) நித்யவிபூதியுக்தனான ஸம்பத்துக்குமேலே யொன்றாகானும், திருவழுந்தூருக்குக்கடவனானது. கீழே உபயவிபூதியோகத்தையும்சொல்லி, அணியழுந்தூருடையானென்னும்போது, அதுக்குமேலே ஒருஸம்பத்தாக வேணுமிறே இது. (அடியேனித்யாதி) அநந்யகதியான நான் கிட்டப்பெற்று, (ஙு) "அஸந்நேவ- அஸந்நேவ" என்னும் நிலைதவிர்ந்து உஜ்ஜீவித்து க்ருதார்த்தனாகப் பெற்றேன். ... ... (௩)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (உடையானையித்யாதி) கீழே ஆச்ரித விரோதிகளை அழியச்செய்தபடி சொல்லிற்று; அவ்விரோதிகளுக்கு ஸஹாயபூதரையும் பின்னிடப்பண்ணி விஜயியாயிருக்கும் படியையு மநுபவித்து ஹ்ருஷ்டராகிறா ரிங்கென்று ஸங்கதி.

(வருமன்றும்) என்ற வாந்தரம், "அவர்களை யோட்டி பூமியை" என்று சேஷம்.

(கீழே) என்றது—"உடையானை" என்ற பதத்திலேயென்றபடி.(௩)

மூ. —குன்றால் மாரிதடுத்தவனைக் குலவேழமன்று
பொன்றாமை யதனுக்கருள் செய்த போரேற்றை
அன்றாவின் நறுநெய்யமர்ந்துண்ண வணியழுந்தூர்
நின்றானை யடியேன் கண்டுகொண்டு நிறைந்தேனே. (௪)

---

(க) (உ) வி-பு-ரு-௫௩-௪. (ஙு) தை-ஆ-௬-க.

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| குன்றால் | கோவர்த்தநபர்வதத்தினால் | அன்று | அந்த க்ருஷ்ணாவதாரத்தில் |
| மாரி | கல்மழையை | ஆவின் | பசுவினுடைய |
| தடுத்தவனை | பரிஹரித்தவனாய், | நறுநெய் | புதிதான (அப்பொழுது காய்ச்சிவைத்த) நெய்யை |
| குலம் | நல்லஜாதியிற பிறந்த | அமர்ந்து | மனம்பொருந்தி (ஆஸக்தியுக்தனாய்) |
| வேழம் | ஸ்ரீகஜேந்த்ரமானது | உண்ண | அமுது செய்தவனாய், |
| பொன்றுமை | முடிந்து போகாதபடி | அணி அழுந்தூர்நின்றானை, | |
| அன்று | அக்காலத்தில் | அடியேன் கண்டுகொண்டு | |
| அதனுக்கு | அவ்வானைக்கு | நிறைந்தேன் | பூர்ணனானேன். (ச) |
| அருள்செய்த | க்ருபை பண்ணி யருளினவனாய், | | |
| போர் ஏற்றை | யுத்தத்தில் செருக்கனானவனாய், | | |

வ்யா. —நாலாம்பாட்டு. (குன்றால் மாரிதடுத்தவனை) தலைக்காவலாகவைத்த இந்த்ரன் தான் பாத(ஸ்ரீ)கனாக, நோக்கினபடி சொல்லுகிறது.

அவன் பசிக்ராஹததாலே வர்ஷத்தைப்பண்ண, அதுக்கு எதிராகக்கிடந்ததொரு மலையையெடுத்துப பரிஹரித்தவனை. (குலவேழமித்யாதி) நல்ல ஆகரத்திலேபிறந்து, மதமுதிதமாய், செருக்கி, மூலையடியேதிரிகிற யானையானது, விழுக்காடறியாதே பொய்கையிலே வந்து புகுந்து முதலையின்கையிலே அகப்பட்டு, அது முடிந்து போகாமே, அதின்பக்கலிலே நிர்ஹேதுக க்ருபையைப்பண்ணின. (போரேற்றை) அவ்வவஸ்த்தையை அறிந்து பரிஹரிக்கவல்ல ஆண்புலியை.

(அன்றாவின் நறுநெய்யமர்ந்துண்ண வணியழுந்தூர் நின்றானை) அன்று பசுவின்நெய்யை அமர்ந்து அமுதுசெய்த திருவழுந்தூர் நின்றானை, திருவாய்ப்பாடியிலே நின்றபடியாய்த்து இங்குநிற்கிறது. (அடியேனித்யாதி) கண்ணாலே காணப்பெற்று, அபூர்ணனான நான் பூர்ணனாகப்பெற்றேன். ... ... ... ... ... (ச)

---

அரு.—நாலாம்பாட்டு. (குன்றாலித்யாதி) கீழ்ப்பாட்டில், ருத்ரன்தான் எதிர்க்க வென்றபடி சொல்லிற்று; இதில் இந்த்ரன் தானே எதிரிட அவனை வென்றபடி சொல்லுகிறது என்று ஸங்கதி. இத்தைஸ்புரிப்பிக்கிறார் (தலைக்காவலித்யாதி). இத்தால்தானே அதிகாரி புருஷர்களாக வைத்தவர்களை ஆஸ்ரித விரோதிகளானார்களாகில் அவர்களையும் வெல்ல

வல்லானென்னும் மஹாகுணம் சொல்லிற்றாய்த் தென்று திருவுள்ளம்.

பாத(ஸ்ரீ)கனுடைய தலையறுக்க வொண்ணாதோ வென்ன வருளிச் செய்கிறார் (அவனித்யாதி). (அதுக்கு) அவ்வளவான குற்றத்துக்கு.

“உண்ண” என்றத்தை, “உண்ட” என்றாக்கி அர்த்தமருளிச்செய்கிறார் (தன்றித்யாதி). ... .. ... ... ... ... (௪)

மூ.—கஞ்சனைக் காய்ந்தானைக் கண்ணமங்கையுள் நின்றானை
வஞ்சகப்பேய் முலையூடுயிர் வாய்மடுத்துண்டானைச்
செஞ்சொல் நான்மறையோர் தென்னழுந்தையில் மன்னிநின்ற
அஞ்சனக்குன்றந் தன்னை யடியேன் கண்டுகொண்டேனே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கஞ்சனை | கம்ஸனை | உண்டானை | (முலையை) அமுது செய்தவனாய், |
| காய்ந்தானை | கோபித்தவனாய் | செஞ்சொல் | (மெய்ப்பொருளான) அழகையுடைய சொற்கள்நிறைந்த |
| கண்ணமங்கையுள் | திருக்கண்ணமங்கையென்னும் இவ்வதேசத்தில் | நான்மறையோர் | நாலு வேதங்களையும் அத்யயநம் பண்ணின ப்ராஹ்மணருடைய |
| நின்றானை | எழுந்தருளியிருக்குமவனாய, | தென் அழுந்தையில்மன்னிநின்ற. | |
| வஞ்சகம் | கபடத்தையுடையவளான | அஞ்சனக்குன்றம் தன்னை | மைமலைபோன்றவடிவழகை யுடையவனை |
| பேய் | பூதனையுடைய | அடியேன்கண்டுகொண்டேனே (௫) | |
| முலையூடு | முலைவழியே | | |
| உயிர் | (அவள்) ப்ராணனையும் | | |
| வாய்மடுத்து | வாயிலேயிடுக்கொண்டு | | |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கஞ்சனைக்காய்ந்தானை) கம்ஸனுடைய நினைவை அவன்றன்னோடேபோம்படி முனிந்தவனை. (கண்ணமங்கையுள் நின்றானை) இன்றுமிங்ஙனே யிருந்துள்ள விரோதிகளைப் போக்கி ரக்ஷிக்கைக்காகத் திருக்கண்ணமங்கையிலே நின்றானை. (வஞ்சகமித்யாதி) வஞ்சகத்தை யுடையளான பூதனையுடைய முலைவழியிலே ப்ராணன்களும் வற்றிவரும்படி முலையை அமுதுசெய்தவனை.

(செஞ்சொல்நால்மறையோர்) யதாபூதவாதியானவேதம் கைவந்திருக்கிற ப்ராஹ்மணரதான திருவழுந்தூரிலே நிற்கிற ப்ரமஹாரமான வடிவையுடையனைக்கொண்டு, தாபத்ரயம் போம்படி நின்ற

வடிவையுடையவனை. (அடியேன் கண்டுகொண்டுகளித்தேனே) அநங்யார்ஹனான நான் கண்டுகொண்டு களிக்கப்பெற்றேன். ... ... (௬)

அ௫ —ஆரும்பாட்டு. (பெரியானையித்யாதி) கீழ்ப்பாட்டில் காய்ந்தவரைக் காயுமவனையும் வஞ்சிப்பாரை வஞ்சிக்குமவனையுமிருக்குமென்றார்; அப்படியே தங்களைப் பெரியோராக எண்ணியிருப்பார்க்குத் தான் மிகவும் பெரியோனாய், அவர்களுக்கரியனா யிருப்பானென்றநுஸந்தித்து, இப்படிப்பட்டவனுக்கு அடியேனாய்க்களித்தேனென்கிறாரென்று ஸங்கதி.

(ஆனையுரிவை) என்றது-ஆனையுடைய, உரிவை-தோலையென்றபடி.(௬)

மூ. —திருவாழ் மார்வன்றன்னைத் திசைமண்ணீரெரிமுதலா
உருவாய்நின்றவனை யொலிசேரும் மாருதத்தை
அருவாய்நின்றவனைத் தென்னழுந்தையில் மன்னிநின்ற
கருவார்கற்பகத்தைக் கண்டுகொண்டு களித்தேனே. (௭)

| பதம். | உரை. |
|---|---|
| திரு | பெரிய பிராட்டியார் |
| வாழ் | நித்யவாஸம் பண்ணுநின்ற |
| மார்வன் தன்னை | திருமார்பையுடையவனாய், |
| திசை | திக்குக்களுக்கும் |
| மண் | பூமி |
| நீர் | ஜலம் |
| எரி | அக்நி (கால் ஆகாசம் ஆகியஇவற்றுக்கு) |
| முதலாய் | காரணபூதனாய்க்கொண்டு |
| உருவாய் | (இப்பஞ்சபூதங்களையும்) சரீரமாக உடையனாய்க்கொண்டு [மவனாய், |
| நின்றவனை | எழுந்தருளி யிருக்கு |
| ஒலிசேரும் | சப்தகுணத்தோடு |
| மாருதத்தை | கூடியவாயு(முதலான வ்யக்தபஞ்சபூதங்களையும் சரீரமாக உடையவனாய்) |
| அருவாய்நின்றவனை | (அவற்றுக்கு) அந்தராத்மாவாய்க்கொண்டு) அரூபியாயிருக்குமவனாய், |
| தென் அழுந்தையில் மன்னிநின்ற, | |
| கரு ஆர் | கர்ப்பத்தை (வேர்ப்பற்றை) உடைத்தான |
| கற்பகத்தை | கல்பவ்ருக்ஷம் போன்றவனானவனை |
| கண்டுகொண்டு களித்தேன். (௭) | |

வ்யா. —ஏழாம்பாட்டு. (திருவாழ்மார்வனித்யாதி) ஸ்வவ்யதிரிக்தருடைய ஐஶ்வர்யத்துக்கு நிதாநபூதையான பிராட்டி (க) "அகலகில்லேன்" என்றுவிரும்பி வர்த்திக்கும்படியான மார்வுபடைத்தவனை. (உ) "ఈశేశితవ్య వైషమ్య నిమ్నోన్నత మిదం జగత్ । నమశ్శ్రీరఙ్గనాయక్యై

(க) தி-வாய்-௬-௰-௰. (உ) ர-ஸ்த-க-௭.

ஸ்ருஷ்டி ஸம்ஹார ஸ்திதி-ஸ்ரேஷ்டிதவ்ய வைஷம்ய நிம்னோந்நதமிதஞ்ஜகத்। நமஸ்ஸ்ரீரங்க நாயக்யை யதப்ரூவிப்ரயபேததஃ" என்னக்கடவதிறே. "திசை" திக்குக்கள். (மண்ணித்யாதி) காரணமான பூதபஞ்சகத்துக்கும் நிர்வாஹகனுய், அவற்றைத்தனக்கு சரீரதயா சேஷமாகவுடையவனை. (ஒலிசேரும்மாருததை) தனக்கடைத்தஸ்பர்சத்தையும், ஆகாச குணமான சப்தத்தையும் உடைத்தாயிருக்கிற காற்றைத்தனக்கு ப்ரகாரமாகவுடையனானவனை.

இப்படிகாரணமான பதார்த்தங்களைக்கொண்டு தேவாதிகார்யங்களையடைய உண்டாக்கி (க) "தத்ஸ்ருஷ்ட்வா - ததநுப்ரவிஸ்ய" என்கிறபடியே ஜீவத்வாரா அவற்றிலே அநுப்ரவேசித்து பின்னை அவற்றைச் சொல்லும் சொல்லு தன்னளவும் வரும்படி இவற்றுக்கடங்க காரணபூதனுய் நிற்கிறவனை. திருவழுந்தூரிலே நித்யவாஸம் பண்ணுகிற. (கருவார் கற்பகத்தை) அடியுடைத்தான கல்பகமாய்த்து. ஸ்வர்க்கத்திலே நிராலம்பநமாக நிற்கிறதன்றிக்கே, பூமியிலே வேர்ப்பற்றுண்டானகற்பகத்தைக் கண்டுகொண்டு, என்ஸர்வாபேக்ஷிதங்களும்பெற்று ஹ்ருஷ்டனானேன். ... ... ... ... ... ... (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (திருவாழித்யாதி) கீழ்ப்பாட்டில் சொன்ன பெரியோனானமைக்கு ஹேதுக்களை அருளிச்செய்கிருரென்று ஸங்கதி.

எல்லாருடைய ஐஸ்வர்யத்துக்கு நிதாநமென்கைக்கு ப்ரமாணமருளுகிருர (ஈஸேத்யாதி). "மண்ணீரெரி" என்று காறறுக்கும் ஆகாசத்துக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம்பற்றி, இவற்றுக்கு முதலாகையால், நிர்வாஹகனுகையால், இவற்றை, உருவாய் திருமேனியாக வுடையனுய் நின்றவனை என்று சப்தார்த்தமாய் தாத்பர்யமருளுகிருர் (காரணமானவித்யாதி). இத்தால் காரணபூதங்களைச்சொல்லிற்று. "ஒலிசேர்" என்று விசேஷித்தத்தால் ஸமுசிதமான ஆகாசத்தையும் மாருதத்தையும் சொன்னது வ்யக்தகுணங்களான பூதபஞ்சகத்துக்கு முபலக்ஷணமென்று திருவுள்ளம்பற்றி தாத்பர்யமருளிச் செய்கிருர் (தனக்கித்யாதி).

அருவாய்நிற்கை அரூபியாய் நிற்கையாய், ஜீவத்வாரா அநுப்ரவேசிக்கிறத்தைச் சொல்லுகிறதெனகிருர் (இப்படியித்யாதி) "கரு" என்று கர்ப்பமாய், அத்காலே (வேர்ப்பற்று) என்றபடி. கருவில் பொருந்தின கற்பகமென்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிருர் (ஸ்வர்க்கேத்யாதி). ... ... ... ... ... ... ... (எ)

---

(க) தை-ஆ-ந.

மூ.—நிலையாளாக வென்னை யுகந்தானை நிலமகள்தன்
முலையாள் வித்தகனை முது நான்மறை வீதிதொறும் [நின்ற
அலையாரும் கடல்போல் முழங்கும் தென்னழுந்தையில்மன்னி
கலையார் சொற்பொருளைக் கண்டுகொண்டு களித்தேனே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| என்னை | என்னை | வீதிதொறும் | வீதிகள்தோறும் |
| நிலை ஆளாக | நித்யகைங்கர்ய நிரதனாகப்(பண்ணி) | அலை ஆரும் | அலைகளினால் பூர்ணமான |
| உகந்தானை | ஸந்தோஷித்தவனாய், | கடல்போல் | ஸமுத்ரம்போலே |
| நிலமகள்தன் | பூமிப் பிராட்டியினுடைய | முழங்கும் | கோ(஘ோ)ஷியாநின்ற |
| | | தென்அழுந்தையில் மன்னிநின்ற | |
| முலைஆள் | முலையைஆளவல்ல | கலைஆர் | சாஸ்த்ரங்களிலேயுண்டான |
| வித்தகனை | ஆஸ்சர்யபூதனாய், | சொல் | வசநங்களுக்கு |
| முது | பழையதான (அநாதியான) | பொருளை | ப்ரதிபாத்யனாயுள்ளவனை |
| நால்மறை | நாலு வேதங்களானவை | கண்டுகொண்டு களித்தேன். (அ) | |

வ்யா.—எட்டாம்பாட்டு. (நிலையாளாகவென்னையுகந்தானை) (க) "தேஹி மே ததாமி தே- தேஹிமே ததாமிதே" என்னும்படி ஏற்றுக்கொண்டுபோகாமே, நித்யகைங்கர்யத்திலே என்னை அந்வயிக்கும்படி உகந்தானை. தபஸ்ஸாலும் ஸமாதியாலும் பெறுவதொன்றல்ல காணும், அவனுகப்பாலேபெறில் பெறுமித்தனையல்லது, பெறவரியது காணும். (நிலமகளித்யாதி) ஸ்ரீபூமிப்பிராட்டியுடைய திருமுலைத்தடத்துக்கு, ஆனைக்குக் குதிரை வைக்கவல்ல ஆஸ்சர்யபூதனை.

(முதுநான்மறை) முதுநான்மறையுண்டு - பாசிபூத்தவேதம், அது திருவீதிகள்தோறும், திரைக்கிளப்பத்தையுடைய கடல் போலே கோஷியாநின்றுள்ள, தென்னழுந்தையில் மன்னிநின்ற. (கலையார் சொற்பொருளை) ஸகலகலைகளாலும், புருஷார்த்தமாக ப்ரதிபாதிக்கப்பட்டவனைக் கண்டுகொண்டு, என் ஸர்வாபேக்ஷிதங்களும் பெற்று ஹ்ருஷ்டனானேன். ... ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு. (நிலையித்யாதி) கீழ்ப்பாட்டிலே, ஸ்ரிய:பதித்வத்தையும், ஸாவாந்தர்யாமித்வத்தையும், பெருமைக்கிடாக அநுஸந்தித்தார்: அவ்விரண்டாலும் தம்மை ஆட்கொள்ள வல்லானொருனுகையாலே, அவனைப்ராபகனென்று களிக்கிறாரென்று ஸங்கதி.

(க)

செய்தாளை என்னாதே, "உகந்தாளை" என்றதுக்குக் கருத்தென் னென்னவருளிச் செய்கிறார் (தபஸ்ஸாலு மித்யாதி). நிலமகள்முலை என் னாதே "தன்" என்றத்தாலே ஸூசிதமான அம்சத்தை அருளிச்செய்கிறார் (ஆனைக்கித்யாதி). இத்தாலே போக்ய (ஸ்ரீ) தாப்ரகர்ஷம் சொன்னபடி.

"நிலையாளாக" இத்யாதியால் ப்ராபகத்வம் ஸித்தமாகையாலே "சொற்பொருள்" என்றதுக்கு ப்ராப்யத்வவிவக்ஷயா வருளிச்செய்கிறா (ஸகலேத்யாதி). ... ... ... ... ... ... (அ)

மூ. — பேராளைக் குடந்தைப்பெருமாளை இலங்கொளிசேர்
வாரார் வனமுலையாள் மலர்மங்கை நாயகளை
ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில் மன்னிநின்ற
காரார் கருமுகிலைக் கண்டுகொண்டு களித்தேனே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பேராளை | திருப்பேர்நகரிலே ஸந்நிஹிதனாய், | நாயகளை | வல்லபனாய், |
| குடந்தைப்பெருமாளை | திருக்குடந்தையிலே பூந்தருளியிருக்கி றஸர்வசேஷியாய், | ஆரா | அநுபவிக்க அநுபவிக்க த்ருப்தி பிற வாதபடி |
| இலங்கு | விளங்காநின்ற | இன் | போக்யமான |
| ஒளிசேர் | காந்தியோடு கூடின | அமுதை | அம்ருதம்போன்றவ னாய் |
| வார் ஆர் | கச்சையுடைத்தாய் | தென் அழுந்தையில் மன்னிநின்ற, | |
| வனமுலையாள் | அழகிய ஸ்தநங்களை யுடையளான | கார் ஆர் | மழைகாலத்திலே |
| மலர்மங்கை | கமலவாஸிநியான பெரிய பிராட்டியார்க்கு | கருமுகிலை | இருண்ட மேகம்போல் ஶ்யாமஸுந்தரமான வளை |
| | | கண்டு கொண்டு களித்தேன். (௯) | |

வ்யா. — ஒன்பதாம்பாட்டு. (பேராளை) திருப்பேரிலே ஸந்நிஹி தனானவளை. (குடந்தைப்பெருமாளை) திருக்குடந்தையிலேவந்து, கண்வளர்ந்து தன்னுடைய சேஷித்வத்தை உதறிப்படுத்தவளை. (இலங் கொளியித்யாதி) நித்யமான யௌவநத்தையுடைய பெரியபிராட்டி யாருக்கு வல்லபனானவளை.

(ஆராவின்னமுதை) அவ்விருவருமானசேர்த்தி இவர்க்குஇனிதா யிருக்கிறபடி. (தென்னழுந்தையித்யாதி) திருவழுந்தூரிலே நித்ய வாஸம்பண்ணுகிற கார்காலத்தில் மேகம்போலே ஶ்யாமஸுந்தரமான

வடிவழகையுடையவனை, (கண்டுகொண்டு களித்தேனே) கண்கள் குளிரக்காணப் பெற்று ஹ்ருஷ்டனானேன். ... ... (௯)

அ௬ —ஒன்பதாம்பாட்டு. (பேரானையித்யாதி) இப்பாட்டில், நித்ய கைங்கர்யங்கொள்ள வந்தானென்று அநுஸந்தித்தார்; அக்கைங்கர்யத் துக்கு விஷயம் இருவருமாகையாலே, அச்சேர்த்தியில் தமக்குப் பிறந்த நிரதிசய போக்ய(ஸ்ரீவை)தையை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி. அன் றிக்கே, கீழே ப்ராப்யனென்றார்; ப்ராப்யனானபடி தான் பல இடங்களி லேயும் வந்திருந்தமையாலே என்று, அத்தை உபபாதிக்கிறாரிங்கென்று மாம்.

"உதறிப்படுக்கை" ப்ரகாசிப்பிக்கை. ... ... ... (௯)

மூ. —திறல் முருகனனையார் தென்னழுந்தையில் மன்னிநின்ற
அறமுதல்வனவனை யணியாலியர்கோன் மருவார்
கறைநெடுவேல் வலவன் கலிகன்றி சொல் ஐயிரண்டும்
முறை வழுவாமை வல்லார் முழுதாள்வர் வானுலகே. (௧௦)

## திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திறல் | பலத்தில் | கோன் | ஸ்வாமியாய், |
| முருகன் அனையார் | ஸுப்ரஹ்மண்யனோ டொத்தவர்கள் நித்யவாஸம் பண் ணுகிற | மருவார் | சத்ருக்களுடைய |
| | | கறை | ரக்தக்கறையையுடை யதாய் |
| | | நெடு | நீண்டிருக்கிற |
| தென் | ஸுந்தரமான | வேல் | வேலாயுதத்தை |
| அழுந்தையில் | திருவழுந்தூரில் | வலவன் | ஆள வல்லவரான |
| மன்னிநின்ற | பொருந்தி நித்யவாஸ ம் பண்ணுநின்றவ னாய், | கலி கன்றி | ஆழ்வாரருளிச்செய்த |
| | | சொல் | ஸ்ரீஸூக்தியான |
| | | ஐ இரண்டும் | பத்துப் பாசுரங்களை யும் |
| அறம் முதல்வ னவனை | ஸகல தர்மங்களுக் கும் காரணபூதனா யுள்ளவன் விஷய மாக, | முறைவழுவா மை | க்ரமம் தப்பாமல் |
| | | வல்லார் | சொல்ல வல்லவர்கள் |
| அணி | ஸம்ஸாரத்துக்கு ஆப ரண பூதமான | வான் உலகு | பரமபதத்தை |
| | | முழுது | ஸம்பூர்ணமாக |
| ஆலியர் | திருவாலியிலுள்ளார் க்கு | ஆள்வர் | பரிபாலனம் பண்ணப் பெறுவர்கள். (௧௦) |

வ்யா. —பத்தாம்பாட்டு. (திறல் முருகனித்யாதி) மிடுக்கில் வந் தால், தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யனில் குறைந்தாரில்லை

யாய்த்து அவ்வூரிலுள்ளாரில். (அறமுதல்வனவனை) தர்மத்தினுடைய வேர்ப்பற்றானவனை. ஸ்வஜநரக்ஷணம், ஜீவலோகரக்ஷணம், ஆஸ்ரித ரக்ஷணம், என்று சொல்லப்படுகிற தர்மங்களுக்கு வேர்ப்பற்றானவனை.

(அணியாலியரித்யாதி) ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான திருவாலி யிலுள்ளார்க்கு நியாமகராயுள்ளார். (மருவாரித்யாதி) சத்ருநிரஸநத் தால்வந்த கறைகழற்ற அவஸரமில்லாதபடியிருப்பதாய், நெடியதான வேலைக்கையிலேயுடையரான ஆழ்வார் ஒலியையுடைத்தாம்படி அரு ளிச்செய்த இப்பத்தையும், அடைவில் தப்பாதபடி அநுஸந்திக்க வல்லவர்கள், (க) "ஆண்மின்கள் வானகம்" என்கிறபடியே த்ரிபாத் விபூதியடையத் தாங்களிட்ட வழக்காகப் பெறுவர்கள். ... ... (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு —பத்தாம்பாட்டு· (திறலித்யாதி) முருகனை, "திறல்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார (மிடுக்கித்யாதி). ... (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்தில் ஆறுந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து ஏழாந்திருமொழி

## திருவுக்கும் ப்ரவேசம்.

வ்யா. —(திருவுக்கும் திருவாகிய வித்யாதி) "அடியேன் கண்டு கொண்டு களித்தேன்" என்றார்கீழ்; அது தானேயாய் நிற்கப்பெறா தே, பாத (ஃ) கமான இந்த்ரியங்கள் விடாதே அணித்தாய்நின்று நலிகிறபடியை அநுஸந்தித்து அஞ்சி, நம்மாழ்வார் (உ) *உண்ணிலா வியில்பட்ட க்லேசத்தை யடையப்பட்டு, இதுக்குப்போக்கடி அவன் திருவடிகளிலே விழுந்து சரணம்புகுகைக்கு மேற்பட இல்லையென்று அத்யவஸித்து, புருஷகாரபூ(ஃ)தையான பிராட்டிமுன்னாகத்தம்மு டைய அநந்யகதித்வத்தைச சொல்லிக்கொண்டு சரணம்புகுகிறார். *

(க) தி-வாய்-௧0-௬-௬. (உ) தி-வாய்-ஏ-௧.

அ௫.—திருவுக்கும் திருவின் ப்ரவேசம். கீழே ஸகலேந்த்ரியங்களும் பகவத் விஷயத்திலே ப்ரவணங்களாகப் பெற்றமையாலே மிகவும் களித்த இவர்க்கு, இந்த்ரியங்களுக்கு பயப்பட்டுச் சரணம் புகுகிற ப்ரஸக்தி ஏதென்னும் சங்கையிலே, "ஆராவின்னமுதை" என்று அபரிச்சின்ந போக்யதையை அநுபவித்தவராகையாலே, யதா(மூ)மநோரதம் பரிபூர்ணமாக அநுபவிக்கக்கோலி, அது பெறாமையாலே, இதுக்கு மூலம்-கர்மக்ருதமான இந்த்ரியங்களன்றோ; இன்னும் பூர்வவாஸநாப(ப)லத்தாலே கொடுபோய் விஷயங்களிலே மூட்டில் செய்வதென்னென்று அதிசங்கையாலே மிகவுமஞ்சி, சரணம் புகுகிறாரென்று ஸங்கதியையருளிச் செய்கிறார் (அடியேனித்யாதி). ... ... ... ... ... ... *

மூ.—திருவுக்கும் திருவாகிய செல்வா
தெய்வத்துக்கரசே செய்யகண்ணா
உருவச்செஞ்சுடராழி வல்லானே
உலகுண்டவொருவா திருமார்பா
ஒருவற்காற்றி யுய்யும்வகை யென்றால்
உடனின்றைவரென்னுள் புகுந்தொழியா
தருவித் தின்றிட வஞ்சி நின்னடைந்தேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| திருவாகிய | (எல்லாருக்கும்) ஸம்பத்கரையான | ஒருவா | அத்விதீயனே! |
| திருவுக்கும் | பிராட்டிக்கும் | திருமார்பா | பிராட்டியை திருமார்பிலே யுடையவனே! |
| செல்வா | ஸம்பத்ரூபனே! | | |
| தெய்வத்துக்கு | நித்யஸூரிகளுக்கு | அழுந்தூர் | திருவழுந்தூரில் |
| | | மேல்திசை | மேல்பாகத்தில் |
| அரசே | அதிபதியே! | நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| செய்யகண்ணா | சிவந்து அழகிய திருக்கண்களை யுடையவனே! [யதாய் | அம்மானே | ஸ்வாமியானவனே! |
| | | ஒருவற்கு | ஒரு இந்த்ரியத்துக்கு |
| | | ஆற்றி | அபேக்ஷித்ததைப் பண்ணி |
| உருவம் | அழகிய வடிவையுடை | | |
| செஞ்சுடர் | நிரவதிக தேஜோரூபமான | உய்யும்வகை | உஜ்ஜீவிக்கும்வகை |
| | | என்றால் | என்றால், |
| ஆழிவல்லானே | திருவாழியைகையிலே யுடையவனே! | ஐவர் | பஞ்சேந்த்ரியங்கள் |
| | | உடன்நின்று | ஸமீபத்திலிருந்து |
| உலகுண்ட | ஸமஸ்த லோகங்களையும் விழுங்கிய | என்னுள்புகுந்து | என்பக்கலிலே வந்து புகுந்து |

| | | | |
|---|---|---|---|
| ஒழியாது | ஒருக்ஷணமும் கால் வாங்காமல் | அஞ்சி | (அவற்றுக்கு) அஞ்சி |
| அருவி | அலேத்து | நின் | உன் (திருவடிகளிலே) |
| தின்றிட | நெருக்க [வந்து | அடைந்தேன் | சரணம்புகுந்தேன்.(க) |

வ்யா.—முதற்பாட்டு. (திருவுக்கும் திருவாகிய செல்வா) ஸ்வவ்ய திரிக்தருடைய ஸம்பத்துக்கு நிதாநபூ(ஃபூ)தையான பிராட்டிக்கு ஸம் பத்தானவனே! (தெய்வத்துக்கரசே) * அயர்வறுமமரர்களதிபதியே! புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனே! விரோதி நிரஸநத்துக்குப் பரிகரமாய், அழகிய வடிவையுடைத்தாய், நிரவதிக தேஜோரூபமான திருவாழியை கையிலேயுடைய ஸர்வேஶ்வரனே! லக்ஷ்மீபதியென்னுதல், நித்யஸூரிகளுக்கெல்லாம் நிர்வாஹகனென்னுதல், கைசலியாமல் திருவாழியைப் பிடிக்கவல்லவனென்னுதல், இவைபிறேஸர்வாதிகத்வத்துக்கு லக்ஷணம். (உலகுண்டஒருவா) குணாகுணநிரூபணம் பண்ணாதே, தளர்ந்தார் தாவளமானவனே! (திருமார்வா) உன்னைத் தளர்ந்தார் தாவளமாக்குமவளைத் திருமார்விலே யுடையவனே!

(ஒருவற்கித்யாதி) ஏகவிஷயத்தில் சேஷத்வம் குலைந்தது கிடாய். ஒருவற்கு ஆடல்கொடுத்து உஜ்ஜீவிக்கும்படியாயிருக்கிறதில்லை. (உடனின்று) ரக்ஷகனை உன்னிற்காட்டிலும் பாத (ஃபா) கவர்க்கம் அணித்தாய்நின்று நலியாநின்றன. (க) "உண்ணிலாவிய" என்னுமா போலே, ஒருவரிருவரன்றிக்கே சேதநஸமாதியாலே நலியாநின்றுள்ள ஐந்திந்த்ரியங்கள் என்பக்கலிலே வந்துபுகுந்து என்னைநெருக்கி, ஒருக்ஷணமும் கால்வாங்குகிறனவில்லை. (அருவித்தின்றிட) "என்னுடைய விஷயத்தைக்காட்டு, என்னுடைய விஷயத்தைக்காட்டு" என்று, இவைதனித்தனியே, அலேத்துநெருக்க அவற்றுக்கு அஞ்சி வந்து, ஸர்வஸ்வாமியான உன் திருவடிகளிலே, சரணம் புகுந்தேன். (அழுந்தூர் மேல்திசைநின்ற வம்மானே) ரக்ஷணத்தில் அதிகரித்த உனக்கு அத்தைதமுடிய நடத்தவேண்டாவோ? (க)

அரு—முதற்பாட்டு. (திருவித்யாதி) திருவாகிய-எல்லார்க்கும் ஸம்பத்கரையான, திருவுக்கும், "செல்வா" ஸம்பத்ரூபனே என்று அர்த்த விவக்ஷயாவருளிச் செய்கிறார் (ஸ்வவ்யதிரிக்தேத்யாதி). "உருவம்" என்றது - உருவையுடைத்தான என்றது. அத்தால் வடிவாதல், அழகாதலாக லாமென்று யோஜநாத்வயத்தையும் தந்த்ரேணவருளிச் செய்கிறார் (விரோ

(க) தி-வாய்-எ-க.

இதித்யாதி). (நிர்வாஹகனென்னுதல்) என்ற வநந்தரம் "புண்டரீகாக்ஷனென்னுதல்" என்று சேஷம். ஸர்வேஶ்வரத்வத்துக்கு உபயுக்தமாக ஶ்ரியஃபதித்வத்தைக் கீழருளிச்செய்தாராய், புருஷகாரத்வம் தோற்ற இங்கே அநுஸந்திக்கிறாரென்னுமிடம் தோற்ற பா(ஞா)வமருளிச்செய்கிறார் (உன்னையித்யாதி).

மேலே "ஐவர்" என்கிறத்தைக் கடாக்ஷித்து வாக்யதாத்பர்யமருளிச் செய்கிறார் (ஏகேத்யாதி). (ஏகவிஷயத்தில்) நீயாகிற ஒருவிஷயத்தில். சப்தார்த்தம் (ஒருவற்கித்யாதி). "ஒருவற்கு" ஓரிந்த்ரியத்துக்கு "ஆற்றி" அபேக்ஷிதத்தைக் கொடுத்து, ஆறப்பண்ணி, இதினர்த்தம் (ஆடல்கொடுத்து) என்றது. (உஜ்ஜீவிக்கும்படி) ப்ராப்தவிஷயத்திலே மூட்டும்படி. (அணித்தாய்) என்றதுக்கு, கர்மவஶ்யனாகையாலே, கர்மக்ருதங்களானவை சேர்ந்திருக்குமென்று கருத்து; அன்றிக்கே, நீ இந்த அவஸரம் பார்த்துப் புகுந்தாய்; இவை ஸஹஜங்களென்றாகவுமாம். ... (க)

மூ.—பந்தார் மெல்விரல் நல்வளைத்தோளி
பாவைபூமகள் தன்னொடுமுடனே
வந்தாயென்மனத்தே மன்னிநின்றாய்
மால்வண்ணா மழைபோலொளிவண்ணா
சந்தோகா பௌழியா தைத்திரியா
சாமவேதியனே நெடுமாலே
அந்தோ நின்னடியன்றி மற்றறியேன்
அழுந்தூர் மேல்திசை நின்றவம்மானே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| பந்து ஆர் | (எப்போதும்) பந்தை யுடைத்தாய் |
| மெல் | ம்ருதுவான [ய் |
| விரல் | விரற்களையுடையளா |
| நல்வளை | அழகிய வளைகளையுடையளாய், [ய் |
| தோளி | புஜங்களையுடையளா |
| பாவை | (நிருபாதிக) ஸ்த்ரீத்வத்தை யுடையளுமான |
| பூமகள் தன்னொடும் | பெரிய பிராட்டியாரோடு [ண்டே |
| உடனே | கூடினவனாய்க் கொ |
| வந்தாய் | எழுந்தருளினவனே! |

| பதம். | உரை. |
|---|---|
| என்மனத்தே | என் ஹ்ருதயத்திலே |
| மன்னி | பொருந்தி |
| நின்றாய் | எழுந்தருளி யிருக்குமவனே! |
| மால் வண்ணா | கறுத்ததிரு நிறத்தையுடையவனே |
| மழைபோல் | மேகத்தோடொத்த (குளிர்ந்த) |
| ஒளி | காந்தியையும் |
| வண்ணா | வர்ணத்தையு முடையவனே! |
| சந்தோகா | சாந்தோக்யோபநிஷதர்த்தத்தையறிந்தவனே! |

| | | | |
|---|---|---|---|
| பௌழியா | ப்ருஹதாரண்ய கோபநிஷதர்த்தத்தை யறிந்தவனே ! | மாலே | ஸர்வாதிகனே ! அழுந்தூர்மேல் திசைநின்ற அம்மானே! |
| தைத்திரியா | தைத்திரீ யோபநிஷதர்த்தத்தை யறிந்தவனே ! | நின் | உன்னுடைய |
| | | அடியன்றி | திருவடிகளையொழிய |
| | | மறறு | வேறொரு புகலை |
| சாமவேதியனே | ஸாமவேதார்த்தமறிந்தவனே ! | அறியேன் | அறியமாட்டேன் |
| | | அந்தோ | ஐயோ!(என்றுஅவன் தம் நெஞ்சில் வந்தமைக்கு ஆப்சர்யப்படுகிருர்). (உ) |
| நெடு | (அவ்வேதங்களில்ப்ரதிபாதிக்கப்பட்ட) மேன்மையை யுடைய | | |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பந்தாரித்யாதி) ஸர்வேஶ்வரனோடு கலக்கும்போது மகப்பட, ஒருக்ஷணமும் விடாதே, பந்தையுடையளாய், அப்பந்துமுட்படப் பொருத விரல்களையுடையளுமாய். (நல்வளைத்தோளி) தர்ஶநீயமானவளைகளை யுடைய திருத்தோள்களை யுடையளுமாய், நிருபாதிகமான ஸ்த்ரீவத்தையுடையளாய், தாமரைப்பூவை இருப்பிடமாகவுடையபெரியபிராட்டியாரோடுகூடவந்தாய். (க) "அரவிந்தப்பாவையும் தானும்" என்கிறபடியே ஸபரிகரனுய்க் கொண்டாய்த்து வந்துபுகுந்தது. (என்மனத்தே மன்னிநின்ருய்) இவ்வளவாலே நெஞ்சை நெகிழப்பண்ணி விலக்காமையுண்டானவாறே, (உ) "ஸ்வஸ்த்ய ... ஆவாஸந்த்வஹமிச்சாமி" என்கிறபடியேவந்து புகுந்தாணுய்த்து. (மால்வண்ணு) கறுத்த திருநிறத்தை யுடையவனே! (மழைபோலொளிவண்ணு) கறுத்திருக்கையன்றிக்கே, மேகம்போலே குளிர்ந்த வடிவையுடையவனே.

(சந்தோகாவித்யாதி) ஆர்த்தரக்ஷணத்துக்கீடான ஸர்வஜ்ஞத்வத்தை யுடையவனே. இத்தால் வேதார்த்ததத்வஜ்ஞாந முடையவனே என்றபடி. (நெடுமாலே) அவ்வேதங்களாலேசொல்லப்படுகிற ஆதிக்யத்தையுடைய ஸர்வாதிகனே. (அந்தோவித்யாதி) வேறேயும் சில ரக்ஷகருண்டாய், "அவர்கள் ரக்ஷிக்கிருர்கள்" என்று உனக்கு ஆறியிருக்க வொண்ணுதுகிடாய்; அநந்யகதியான நான் உன்திருவடிகளொழிய வேறொரு புகலுடையேனல்லேன். (அழுந்தூர் மேல்திசை

(க) பெரி-திரு-தி-உ-கo. (உ) ரா-ஆ-௫-ஙக.

நின்ற வம்மானே) அநந்யகதிகளை நோக்குகைக்கன்றோ தேவரீர் இங்கே வந்து நிற்கிறது. ... ... ... ... ... ... (உ)

அநு.—இரண்டாம்பாட்டு. (பந்தாரித்யாதி) கீழ்ப்பாட்டிலே, ஆஸ்ரயண ஸௌகர்யா பாதக குணங்களை அநுஸந்தித்து, உத்தம்பி(ஸ்ரு)கையான பிராட்டியை முன்னிட்டுச் சரணம் புக்கார்; இதில், கார்யாபாதக குணங்களை அநுஸந்தித்து, தம்முடைய ஆகிஞ்சந்யத்தை இருவருமான சேர்த்தியிலே விண்ணப்பம் செய்கிறாரென்று ஸங்கதி.

நெடுமையால் ஆதிக்யம் சொல்லி "மால்" என்றும் பெருமையைச் சொன்னால், புநருக்தமன்றோ வென்னவருளிச் செய்கிறார் (அவ்வேதங்களாலே யித்யாதி). ... ... ... ... ... ... (உ)

மூ.—நெய்யாராழியும் சங்கமுமேந்தும்
நீண்டதோளுடையாயடியேனைச்
செய்யாதவுலகத்திடைச்செய்தாய்
சிறுமைக்கும் பெருமைக்குமுள்புகுந்து
பொய்யாலேவரென் மெய்குடியேறிப்
போற்றிவாழ்வதற்கஞ்சி நின்னடைந்தேன்
ஐயாநின்னடியன்றி மற்றறியேன்
அழுந்தூர் மேல்திசைநின்றவம்மானே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஐயா | கிருபாதிக பந்துவே! | செய்தாய் | உண்டு பண்ணினவனே! |
| அழுந்தூர்மேல் திசைநின்ற | அம்மானே! | சிறுமைக்கும் | க்ஷுத்ரவிஷயங்களை அநுபவிக்கைக்கும் |
| நெய் ஆர் | கூர்மை மிக்கிருந்துள் | பெருமைக்கும் | பெரியவிஷயங்களை அநுபவிக்கைக்குமாக |
| ஆழியும் | ஸுதர்சநத்தையும்[ள | | |
| சங்கமும் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தை | | |
| ஏந்தும் | தரியாநின்ற [யும் | | |
| நீண்ட | தீர்க்கமான | பொய்யால் | வஞ்சனையினாலே (நானுமறியாதபடி) |
| தோள் | புஜங்களை | | |
| உடையாய் | உடையவனே! | உள்புகுந்து | என்னுள்ளே ப்ரவேசித்து |
| உலகத்திடை | (இந்த) லோகத்திலே | | |
| செய்யாத | (மற்றொருவர் விஷயத்தில்)பண்ணப்படாத (உன்விஷயமான ருசி விஸ்வாஸாதிகளை) | என் மெய் | என்னுடைய சரீரத்திலே |
| | | குடியேறி | (ஸ்வஸ்தாநத்திற்போய்) நித்ய வாஸம் பண்ணிக்கொண்டிருக்கிற |

| | | | |
|---|---|---|---|
| ஐவர் | பஞ்சேந்த்ரியங்களை | அஞ்சி | பயந்து |
| போற்றி | ஸ்துதிபண்ணி அநுவர்த்தித்து | நின் | உன் திருவடிகளை |
| வாழ்வதற்கு | வாழ்கைக்கு | அடைந்தேன் | (புகலாகப்) பற்றினேன். (ங) |

வ்யா.—மூன்றாம்பாட்டு. (நெய்யாரித்யாதி) கடைந்து பற்றற நெய்யிட்டிருக்கிற திவ்யாயுதங்களையுடையவனே. நெய்-கூர்மை, ஆர்தல்-மிகுதி, கூர்மை மிக்கதிருவாழி. அவற்றுக்குத் தகுதியான திருத்தோள்களையுடையவனே! (அடியேனை) தேவர்க்கு யோக்யனாயிருக்கிற என்னை. (உலகத்திடைச்செய்யாதவற்றைச் செய்தாய்) லோகத்திலே செய்யாதவற்றையெல்லாம் செய்தாய். உன் திருவடிகளில் கைங்கர்யத்தை நினையாத லோகத்திலே வைத்தாய்.

(சிறுமைக்கும் பெருமைக்கு முள்புகுந்து) க்ஷுத்ர விஷயங்களை லபிக்கைக்கும், கிட்டவரிய விஷயங்களை லபிக்கைக்குமாக க்ருத்ரிம ரூபத்தாலே "நான்" என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி என் சரீரத்திலேவந்து குடிபுகுந்தனவாய்த்து. (போற்றிவாழ்வதற்கஞ்சி) அவற்றை ஆராதித்துப் பின்சென்று வர்த்திக்குமதற்கஞ்சி. (நின்னடைந்தேன்) நிருபாதிகசேஷியான உன்னைக்கிட்டினேன். (ஐயா) நிருபாதிக பந்துவே! உன்திருவடிகளையொழிய வேறொரு புகலுடையேனல்லேன். (அழுந்தூர்மேல்) நிருபாதிக பந்த (பந்து) ம்தோற்றவந்து நிற்கிறவனே. ... ... ... ... ... ... ... (ங)

அரு.—மூன்றாம்பாட்டு (நெய்யாரித்யாதி) கீழ், கார்யபாதககுணங்களில் ஸர்வஜ்ஞதையை அநுஸந்தித்தார; அவற்றில் சக்திமத்வத்தையும் ப்ராப்தியையு மநுஸந்திக்கிறாரிங்கு என்று ஸங்கதி.

அர்த்தாந்தரம் (நெய்யித்யாதி) அந்வயம் காட்டுகிறார் (உலகத்திடையித்யாதி). செய்யாதவற்றைச் செய்கையாவது என்னென்ன வருளிச்செய்கிறார் (உன்னித்யாதி). (லோகத்திலே) என்றவநந்தரம், "கைங்கர்ய ருசியுண்டாக்கி இந்த்ரியங்களுக் கஞ்சும்படி" என்று சேஷம்.

(குடியேறி) என்றவநந்தரம், "வர்த்திக்கிற" என்று மூலத்தில் அத்யாஹாரம் திருவுள்ளம்பற்றியருளிச் செய்கிறார் (க்ஷுத்ரேத்யாதி) (ங)

மூ.—பரனேபஞ்சவன் பௌழியன் சோழன்
பார்மன்னர் மன்னர்தாம் பணிந்தேத்தும்
வரனே மாதவனே மதுசூதா மற்றோர்
நற்றுணை நின்னலாலிலேன்காண்

நரனே நாரணனே திருநறையூர் நம்பீ
எம்பெருமா னும்பராளும்
அரனே ஆதிவராஹமுன்னானாய்
அழுந்தூர்மேல் திசைநின்றவம்மானே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| பரனே | ஸர்வாதிகனே! |
| பஞ்சவன் | பஞ்சவனென்றும் |
| பௌழியன் | பௌழியனென்றும், |
| சோழன் | சோழனென்றும் ப்ரஸித்தராய் |
| மன்னர் | ஸகலைஶ்வர்யஸம்பூர்ணராய் |
| ப்பார் | (அவ்வவ) தேசங்களுக்கு [கள், |
| மன்னர் | ராஜாக்களாயுள்ளவர் |
| தாம் | தாங்களே (தங்களுடைய அபீஷ்டஸித்திக்காக) |
| பணிந்து | ஆஶ்ரயித்து |
| ஏத்தும் | ஸ்தோத்ரம்பண்ணும்படியாக எழுந்தருளியிருக்கிற |
| வரனே | ஆஶ்ரயணீயனே! |
| மாதவனே | ஶ்ரியப்பதியே |
| மதுசூதா | மதுவென்னும் அஸுரனை நிரஸித்தவனே! |
| நரனே நாரணனே | (ஆஶ்ரிதரைப் பெறுகைக்காக) நரனையும் நாராயணனையு மவதரித்தவனே! |
| திருநறையூர் | திருநறையூரிலே எழுந்தருளியிருக்கிற |
| நம்பி | பூர்ணனே! |
| எம்பெருமான் | எனக்கு நிருபாதிகசேஷியானவனே! |
| உம்பர் | தேவதைகளை |
| ஆளும் | (தனக்குக் கீழ்ப்படுத்தி) பரிபாலநம் பண்ணவல்லனை |
| அரனே | ருத்ரனுக்கு அந்தர்யாமியா யுள்ளவனே! |
| முன் | ஆதிகாலத்தில் |
| ஆதிவராஹமானாய் | ஜகத்காரணபூதமான மஹாவராஹமா யவதரித்தவனே, |
| அழுந்தூர்மேல் திசைநின்ற, | அம்மானே! |
| நின் அலால் | உன்னையொழிய |
| நல் | பரார்த்ததைக ப்ரயோஜநமான |
| மற்றுஓர் | வேறொரு |
| துணை | ரக்ஷகனை |
| இலேன் | உடையே னல்லேன். |

வ்யா. —நாலாம்பாட்டு. (பரனே) ஸர்வஸ்மாத்பரனானவனே, (பஞ்சவனித்யாதி) "பஞ்சவன்" என்றும் "பவுழியன்" என்றும் சோழர்கள்பேர், ஒரோராஜ்யங்களுக்குக் கடவராய், ஐஶ்வர்யப்ரதாநராயிருக்கிற ராஜாக்கள், தந்தாமுடைய அபிமதார்த்தமாக வந்தாஶ்ரயித்து, அவைபெற்றுப்போம்படிக்கீடாக நிற்கிறபரனே! அவர்களுக்கு

ஆஸ்ரயணீயனாயுள்ளவனே. (மாதவனே) அவர்களுடைய அபிமதங்களைத் தலைக்கட்டிக் கொடுப்பிக்கும் புருஷகாரத்தையுடையவனே. (மதுசூதா) அவர்களுடைய விரோதியைப் போக்குகைக்கீடான விரோதி நிரஸநசீலனானவனே. (மற்றோர் நற்றுணை) தன்னை அழிய மாறியும் அடைந்தாரை நோக்கும் துணை உன்னையொழிய வேறொருவரை யுடையேனல்லேன்.

(நரனே நாரணனே) ஆஸ்ரிதார்த்தமாக அவர்கள் உன்னைப் பெறுகைக்குப் பண்ணும் தபஸ்ஸை, நீ அவர்களைப் பெறுகைக்காகப் பண்ணுமவனே. (திருநறையூர் நம்பி) திருநறையூரிலே வந்து நிற்கிற கல்யாணகுண பரிபூர்ணனே. (எம்பெருமான்) அங்கே பிராட்டியும் நீயுமாய் நிற்கிற நிலையைக்காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவனே. (உம்பராளுமரனே) மேலுண்டான தேவதைகளை நிர்வஹிக்கிற ருத்ரனுக்கு அந்தராத்மாவாய்நின்று அவர்களை நிர்வஹிக்கிறவனே. (க) "రుద్రం సమాశ్రితా దేవా రుద్రో బ్రహ్మాణమాశ్రితః । బ్రహ్మా మామాశ్రితో రాజన్ నాహం కఞ్చిదుపాశ్రితః - ருத்ரம் ஸமாஸ்ரிதா தேவா ருத்ரோ ப்ரஹ்மாணமாஸ்ரிதஃ। ப்ரஹ்மா மாமாஸ்ரிதோ ராஜந் நாஹம் கஞ்சிதுபாஸ்ரிதஃ" என்றுநின்றதிறே. (ஆதிவராஹ முன்னானாய்) ஒருவனுக்குள்ளீடாய் நின்று ரக்ஷிக்கையன்றிக்கே, வாராஹ கல்பத்தினுடைய ஆதியிலே மஹாவராஹமாய்வந்து அவதரித்து கண்ணுக்கிலக்காய் நின்று நோக்கினவனே. (அழுந்தூர்மேல்) அது தன்னைப் பழங்கதையாக்கி, இப்போது திருவழுந்தூரிலே வந்து நிற்கிறவனே. ... ... ... ... ... ... (ச)

அரு. —நாலாம்பாட்டு. (பரனித்யாதி) கீழ்ப்பாட்டில், தம்மை லோகத்தாரில் வ்யாவ்ருத்தராக வைத்த உபகாரஸ்ம்ருதி பண்ணியருளினார்; அவ்வுபகாரஸ்ம்ருதியடியாக வாயார ஏத்தியருளுகிறா ரென்று ஸங்கதி.

"நரனே" என்றத்தையும் "வராஹம்" என்றத்தையும் கடாக்ஷித்து (தன்னை யழிய மாறி) என்றது.

அரனை "உம்பராளும்" என்று விசேஷித்ததுக்கு ப்ரமாணம் (ருத்ரமித்யாதி). (ச)

(க)பாரத-ஆஸ்வமேதிக பர்வம்.

மூ.—விண்டான் விண்புக வெஞ்சமத்தரியாய்
பரியோன் மார்வகம் பற்றிப்பிளந்து
பண்டானுய்ய வோர்மால்வரையேந்தும்
பண்பாளா பரனே பவித்திரனே
கண்டேன் நான் கலியுகத்ததன் தன்மைக்
கருமமாவது மென்றனக்கறிந்தேன்
அண்டா நின்னடியன்றி மற்றறியேன்
அழுந்தூர் மேல்திசைநின்ற வம்மானே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| விண்டான் | தன்னோடே சேராத சத்ருவான ஹிரண்யன் (உயிர்மாண்டு) |
| விண்புக | வீரஸ்வர்க்கத்தில்ப்ரவேசிக்கும்படியாக |
| வெம்சமத்து | க்ரூரமான யுத்தத்திலே [கொண்டு |
| அரியாய் | நரஸிம்ஹரூபியாய்க் |
| பரியோன் | பருத்திருக்கிற ஹிரண்யனுடைய |
| மார்வகம் | மார்வை [த்து |
| பற்றி | (நகங்களாலே) பிடி |
| பிளந்து | கிழித்துப் பொகட்டவனே, |
| பண்டு | க்ருஷ்ணவதாரத்தில், |
| ஆன் | பசுக்கள் |
| உய்ய | பிழைக்கும்படி |
| மால் | பெரிய |
| ஓர் வரை | ஒருமலையை |
| ஏந்தும் | (குடையாக) தரியாநின்ற |
| பண்பாளா | ஸௌலப்யத்தை யுடையவனே! |
| பரனே | மற்றரக்ஷகரெல்லாரிலுமுயர்ந்தவனே! |
| பவித்திரனே | (ஆஶ்ரிதரை)பரிசுத்தராக்கவல்லவனே! |
| அண்டா | அண்டாதிபதியே! |
| அழுந்தூர்மேல் திசைநின்ற அம்மானே! | |
| நான் | நான் |
| கலியுகத்ததன் | கலியுகத்தினுடைய |
| தன்மை | ஸ்வபாவத்தை |
| கண்டேன் | அறிந்தேன், |
| என்றனக்கு | எனக்கு |
| கருமமாவதும் | ஹிதரூபமான கர்மத்தையும் |
| அறிந்தேன் | நிஶ்சயித்துக் கொண்டேன்,(அதாவதேதென்னில்) |
| நின் அடியன்றி மற்றறியேன். (ரு) | |

வ்யா. —அஞ்சாம்பாட்டு. (விண்டானித்யாதி) ஹிரண்யாஸுரனானவன், வீரஸ்வர்க்கத்துக்கு ஏறிப்போம்படியாக. (வெஞ்சமத்து) கொடிய யுத்தத்திலே நரஸிம்ஹவேஷத்தையுடையனாய், அஹங்கார மமகாரங்களாலே தடித்த வடிவையுடையனானவனுடைய மார்வைச் சென்று பற்றி, இரண்டு பிளவாம்படி பண்ணி. (பண்டானுய்ய) இத்தால், அது சிறுக்கனறியச் செய்ததொரு செயலிறே; அங்ஙன் உப

காரஸ்ம்ருதியு மில்லாத பசுக்களுக்கும் இடையர்க்கும் உதவினபடியைச் சொல்லுகிறது. முன்பு பசுக்களும் இடையரும் பிழைக்கும் படி கைக்கெட்டிற்றொரு பெருமலையை எடுத்து ரக்ஷித்த நீர்மையை யுடையவனே. (பரனே) இப்பரிரக்ஷண தர்மத்தில் உனக்கவ்வரு கொருவருமில்லாதபடி இருக்கிறவனே. (பவித்திரனே) அசுத்தரையும் சுத்தராக்கும் சுத்தியை யுடையவனே.

(கண்டேன் நான்கலியுகத்ததன் தன்மை) இக்கலியுகத்தினுடைய ஸ்வபாவத்தை நானழுகிதாகக் கண்டேன். உன்பக்கத்திலே வைமுக்ய(ஆ)த்தை யுண்டாக்கி விஷயப்ராவண்யத்தைப் பிறப்பித்து முடிக்கும் ஸம்ஸாரஸ்வபாவத்தை நானழுகிதாகஅறிந்தேன். (கருமமாவது மென்றனக் கறிந்தேன்) எனக்கு ஹிதமாவதுவும் உன்திருவடிகளை ஆஶ்ரயிக்குமதுவே என்றறிந்தேன். (அண்டா) அண்டத்துக்கு நிர்வாஹகனானவனே! அன்றிக்கே இடையர்க்கு நிர்வாஹகனானவனே, என்றுமாம். (அழுந்தூரித்யாதி) ஶ்ரீப்ரஹ்லாதனுக்கும் இடையர்க்கும் பசுக்களுக்கும் உதவினபடியே பிற்பாடர்க்கும் உதவுகைக்காகவன்றோ இங்கு வந்து நிற்கிறது. ... ... ... ... (௫)

அரு.—அஞ்சாம்பாட்டு (விண்டானித்யாதி) கீழ்ப்பாட்டில், வியாரப் புகழ்ந்து, ராஜாக்களுக்குக் கொடுத்துக்கொண்டிருக்கிற படியைச் சொல்லி, நீயே கதி என்றார்; எம்பெருமான், நீரிங்ஙனே நம்மைக்கொண்டாடுவது, அநந்யகதித்வத்தைப் பலகாலும் சொல்லுவது, ஆக இப்படிபடுகைக்கு மூலமென்னென்று கேட்க அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"சமரம்" என்றத்தைக்கடைக்குறைத்தலாய், "சமம்" என்றுக்கியருளிச் செய்கிறார் (கொடிய வித்யாதி). "ஆஹய்ய" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி). சப்தார்த்தம் (முன்பித்யாதி).

கீழ்வாக்யவிவரணம் (உன்பக்கலித்யாதி). ... .. ... (௫)

மூ.—தோயாவின் தயிர் நெய்யமுதுண்ணச்
சொன்னார் சொல்லி நகும் பரிசே பெற்ற
தாயாலாப்புண்டிருந்தழுதேங்கும்
தாடாளா தரையோர்க்கும் விண்ணோர்க்கும்
சேயாய் கிரேத திரேத துவாபார
கலியுகமிவை நான்குமுனாய்
ஆயா நின்னடியன்றி மற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே. (௬

| பதம் | உரை. |
| --- | --- |
| சொன்னார் | வாய்வந்தபடி சொல்லவல்லவர்கள் |
| சொல்லி | நவநீத சௌர்யத்தை வெளிப்படையாகச்சொல்லி |
| நகும் | பரிஹஸியாநின்ற |
| பரிசே | ப்ரகாரமும் (மதிக்கவற்றோ? என்று பழிக்கஞ்சாதே) |
| தோயா | நன்றாகத்தோயாதே |
| இன்தயிர் | மதுரமான தயிரையும் |
| நெய் | நெய்யையும் |
| அமுதுண்ண | அமுது செய்யாநிற்க (அப்பொழுது) |
| பெற்றதாயால் | பெற்றதாய்போல் ப்ரிய கரையான யசோதையினால் |
| ஆப்புண்டு | கட்டுண்டு [ன்று |
| இருந்து | போகமாட்டாதே நி |
| அழுது | அழுது (அதிலும்) |

| பதம். | உரை. |
| --- | --- |
| எங்கும் | வாய்விடமாட்டாதே விக்கிவிக்கி அழாநின்ற |
| தாடாளா | பெரியோனே! |
| தரையோர்க்கும் | பூமியிலுள்ளார்க்கும் |
| விண்ணோர்க்கும் | மேலுலகத்திலுள்ளார்க்கும் |
| சேயாய் | கிட்டவரியனே |
| முன் | முன்னமே |
| கிரேதத்ரேத துவாபரகலியுகம் | க்ருதயுகம் த்ரேதாயுகம் த்வாபரயுகம் கலியுகம் என்று சொல்லப்படுகிற |
| இவைநான்கும் ஆனாய் | இந்நாலு யுகங்களுக்கும் நிர்வாஹகனானவனே! |
| ஆயா | இடையனான க்ருஷ்ணனே! |

அழுந்தூர் மேல் திசைநின்ற அம்மானே!
நின் அடியன்றி மற்று அறியேன். (௬)

வ்யா —ஆறும்பாட்டு. (தோயாவின்தயிரித்யாதி) அறத் தோயாத இனிய தயிரையும், நெய்யையும் பொருந்தி அமுதுசெய்ய. (சொன்னாரித்யாதி) வாய்க்குப் போந்தார் போந்தபடி சொல்லுகிற பழிக்கஞ்சாதே, "மழலைத்தயிரும் நெய்யும் புஜித்தோமாகில், இதுக்கு வருவதொன்றுண்டோ?" என்றும், "ஒன்றையிட்டுப்பழிசொல்லுகிறார்களன்றோ" என்றும் நாட்டார் சொல்லுகிற பழிக்கு லஜ்ஜியாதே இருந்தானாய்த்து. (பெற்ற தாயாலாப்புண்டு) யசோதைப் பிராட்டியாலே கட்டுண்டு. (அழுது) ப்ரதிக்ரியை அற்றுப் போகமாட்டாதே நின்றவேண்டப்பாட்டை யுடையவனே.

(தரையோர்) பூம்யந்தரிக்ஷங்களிலுள்ளார் ஸ்வயத்நத்தாலேகாணப்பார்க்குமன்று அவர்களுக்கு தூரஸ்த்தனானவனே! நீரிங்ஙனே பதறுகிறதென்? காலம்வந்து கார்யம் செய்யவேண்டாவோவென்ன; (கிரே

ததிரோத) (க) ‘‘க்ரே க்ருதயுகம் தஸ்ய-கலௌ க்ருதயுகம் தஸ்ய’’ என்னவொண்ணாதோ உனக்கு, காலம் நீ இட்டவழக்கன்றோ? உன் திருவடிகளையொழிய வேறொன்றை யறியேன். (அழுந்தூர்மேல்) அந்த க்ருஷ்ணவதாரத்தில் பிற்பாடர்க்கும் இழவாமைக்கன்றோ நீ இங்கு வந்து நிற்கிறது. ... ... ... ... ... ... (கூ)

---

அரு.—ஆரும்பாட்டு. (தோயாவித்யாதி) கீழ்ப்பாட்டிலே, ‘‘கலியுகத்தன் தன்மையறிந்தேன்’’ என்றாநின்றீர், உமக்குறுப்பாக, இனி கலியுகத்தை அழிக்கச் சொல்லுகிறீரோவென்ன அருளிச் செய்கிறரென்று ஸங்கதி.

† கலியுகத்தை உண்டாக்கமாட்டாயோ என்று கருத்து. [சொன்னார் சொல்லி நகும்பரிசே தோயா வின்தயிர் நெய்யமுதுண்ண பெற்ற தாயாலாப்புண்டு] என்றந்வயமாய் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மழலையித்யாதி). ‘‘தரையோர்’’ என்கிற விடத்தில் ‘‘தரா’’ என்கிற சப்தம் ‘‘தரை’’ என்றாய் பூமியைச் சொல்லுகிறதென்று அருளிச்செய்கிறார் (பூம்யந்தரிக்ஷேத்யாதி). ... ... ... ... ... ... ... ... (சா)

மூ.—கறுத்துக் கஞ்சனை யஞ்ச முனிந்தாய்
கார்வண்ணா கடல்போலொளிவண்ணா
இறுத்திட்டான் விடைபேழும் முன் வென்றாய்
எந்தாயந்தர மேழுமுனாய்
பொறுத்துக்கொண்டிருந்தால் பொறுக்கொணாப்
போகமே நுகர்வான் புகுந்தைவர்
அறுத்துத்தின்றிடவஞ்சி நின்னடைந்தேன்
அழுந்தூர்மேற்றிசை நின்ற வம்மானே. ... (எ)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கஞ்சனை | கம்ஸனை | ஒளி | நீலமானகாந்தியையும் |
| கறுத்து | கோபித்து | வண்ணா | ரக்ஷகத்வஸ்வபா(வ)வத்தையு முடையவனே! |
| அஞ்ச | அவன் பயப்படும்படி | | |
| முனிந்தாய் | (அவனை நிரஸித்தருளினவனே! | | |
| | | விடை | பலிஷ்ட்டமான [யும் |
| கார்வண்ணா | மேகம்போல் குளிர்ந்த வடிவையுடையவனே! | ஆன் ஏழும் | ஏழு வ்ருஷபங்களை |
| | | முன் | க்ருஷ்ணவதாரத்தில் |
| கடல்போல் | ஸமுத்ரம் போன்ற | இறுத்திட்டு | (உடலை) முறித்து |

---

(க) விஷ்ணுதர்ம-கoகூ-ருஎ. † ‘‘கலியுகத்தில் க்ருதயுகத்தை உண்டாக்கமாட்டாயோ’’ என்று இருக்கலாம்.

| | |
|---|---|
| வென்றாய் | (கொன்று) ஜயித்தவனே! |
| எந்தாய் | என்ஸ்வாமியே! |
| அந்தரம்ஏழும் | மேலுலகங்களேழுக்கும் |
| முன் | ஆதிகாலம் தொடங்கி |
| ஆனாய் | நிர்வாஹகனானவனே! |
| அழுந்தார் மேல் திசைநின்ற அம்மானே, | |
| ஐவர் | பஞ்சேந்த்ரியங்களும் (பண்ணும்) |
| பொறுக்கக் கொண்டிருந்தால் | (உபத்ரவங்களை) ஸஹித்துக்கொண்டிருக்கப்பார்த்தாலும் |
| பொறுக்கொணா | ஸஹிக்கப்போகாமல், |
| போகமே | விஷயபோகங்களையே |
| நுகரவான் | அநுபவிப்பிக்கைக்காக |
| புகுந்து | என்னுள்ப்ரவேசித்து |
| அறுத்து | பாதி(பாதி)த்து |
| தின்றிட | (ஸ்வரூபத்தை) அழியப் பண்ணுகிற்க, |
| அஞ்சி | (அதற்கு) பயந்து |
| நின் அடைந்தேன். (எ) | |

வ்யா.—ஏழாம்பாட்டு. (கறுத்துக்கஞ்சனை) எல்லாரும் ரக்ஷை பெற்று ஜீவிக்கவேணு மென்றிருக்கிற இவன் பக்கலிலே தாரபிஸந்தியைப் பண்ணினானைத்து கம்ஸன்; அவன்பண்ணின அபிஸந்தி அவன்றன்னோடே போம்படிகோபித்து, கம்ஸனானவன் பீ(பீ)தனாம்படி முனிந்தாய், சீறினாய். (கார்வண்ணா) கண்டார்க்கு ஸ்ரமஹரமானவடிவையுடையவனே. (கடல்போலொளிவண்ணா) கடல்போலே ஸர்வபதார்த்தங்களுக்கும் ரக்ஷகனுமாய் அத்தோடொத்த நிறத்தையுடையவனே! (இறுத்திட்டான் விடையேழு முன்வென்றாய்) அஸுராவேசத்தாலே ம்ருத்யுபோலே வந்த ருஷபங்களேழினுடைய கொம்பையும் முறித்து அவற்றை ஜயித்தாய் (எந்தாய்) அச்செயலைக்காட்டி என்னை எழுதிக்கொண்டாய். (அந்தரமேழு மானாய்) உபரிதநலோகங்களேழையு முடையனானவனே.

(பொறுத்துக்கொண்டிருந்தால்) இவற்றால்வந்த நலிவை ஆற்றியிருப்போமென்றால் ஆற்றவொண்ணாதபடியாக போக(ப்⁴ோக)ங்களை புஜிக்கவேணுமென்று ஐவர்நெருக்கி புஜிப்பிக்க, அவர்களுக்கஞ்சி, உன் திருவடிகளிலே சரணம் புகுந்தேன். ... ... (எ)

---

அரு—ஏழாம்பாட்டு. (கறுத்திந்த்யாதி) காலம் நீ இட்டவழக்கன்றோ என்று, உம்மைப்பெரிய நிதயுகத்தின்படியே என்னையே நினைந்து உகக்கப் பண்ணச் சொல்லா நின்றீர், இதுக்கு நான் செய்யவேண்டுவதென், இந்த்ரியங்களை விஷயங்களில் நின்றும் மீட்டு, என்னையே நீர் உகக்கலாகாதோவென்ன; அவை என்னால் அடக்கவரிது, உன்னாலடக்கவேணு மென்கிறாரென்று ஸங்கதி.

(ஒளியையும் வண்ணத்தையுமுடையவனே) என்றவற்றை வ்யுத்க்ரமேண வருளிச்செய்கிறார் (கடல்போலேயித்யாதி). ... ... ... (எ)

மூ. — நெடியானே கடியார்கலி நம்பி
நின்னையே நினைந்திங்கிருப்பேனைக்
கடியார் காளையரைவர் புகுந்து
காவல் செய்தவக்காவலைப் பிழைத்துக்
குடிபோந்துன்னடிக்கீழ் வந்து புகுந்தேன்
கூறைசோறிவை தந்தெனக்கருளி
அடியேனைப்பணியாண்டு கொளெந்தாய்
அழுந்தூர் மேல்திசைநின்ற வம்மானே. (அ)

| பதம் | உரை. |
|---|---|
| நெடியானே | ஸர்வாதிகனே! |
| கடி | (பூமிக்கு) அரணாகச் சமைந்திருக்கிற |
| ஆர் கலி | ஸமுத்ரத்தில் (கண்வளர்ந்தருளுகிற) |
| நம்பி | பூர்ணனே! |
| எந்தாய் | என் ஸ்வாமியே! |
| அழுந்தூர்மேல் திசை நின்ற அம்மானே! | |
| நின்னையே | உன்னையே |
| நினைந்து | த்யானித்துக்கொண்டு |
| இங்கு | இந்தலீலா விபூதியில் |
| இருப்பேனை | இருக்கிற என்னை, |
| கடி ஆர் | பலத்தையுடைத்தாய் |
| காளையர் | (பரபீடநத்தில் பின்வாங்காத) இளம்பருவத்தை யுடையதான |
| ஐவர் | பஞ்சேந்த்ரியங்களும் |
| புகுந்து | என்னுள் ப்ரவேசித்து |
| காவல்செய்த | (என்னை உன்னிடத்தில் போகாதபடி) சிறைவைத்த |

| பதம். | உரை. |
|---|---|
| அக்காவலை | அந்தகடினமான சிறையை |
| பிழைத்து | தப்பி வந்து, [ழே |
| உன் அடிக்கீழ் | உன் திருவடிகளின் கீ |
| குடிபோந்து | குடியிருக்கக்கருதி |
| வந்து | கிட்டி |
| புகுந்தேன் | அந்தர்ப்பவித்தேன், |
| எனக்கு | (விஷயாந்தரங்களைவிட்டுவந்த) எனக்கு |
| கூறை | வஸ்த்ரமும் |
| சோறு | அந்நமுமாயுள்ள [களை |
| இவை | இந்த உன் திருவடி |
| அருளி | க்ருபைபண்ணி |
| தந்து | கொடுத்து, |
| அடியேனை | ஸ்வதஸ்ஸித்தமான தாஸ்யத்தையுடைய என்னை |
| பணி ஆண்டு கொள் | நித்ய கைங்கர்யத்தை பண்ணுவித்துக் கொண்டருளவேணும். (அ) |

வ்யா. —எட்டாம்பாட்டு. (நெடியானே) ஸர்வாதிகனான ஸர்வேச்வரனே. (கடியார் கலிநம்பி) பரிமளத்தை யுடைத்தாய், அரண்

பெற்றிருக்கிற, ஆர்கலியுண்டு - கடல், அதிலே சாய்ந்தருளின கல்யாணகுண பரிபூர்ணனே. (நின்னையே நினைந்திங்கிருப்பேனை) பரமபதத்தேயிருந்து, அங்குள்ளார் நினைக்கும் நினைவை இங்கேயிருந்து உன்னையே நினைத்திருக்கிற என்னை, நெஞ்சில் நன்மையின்றிக்கே பிறரை நலியநலிய இளகிப்பதியாநின்ற பருவத்தையுடைய ஐவர் வந்துபுகுந்து சிறைசெய்கிற. (அக்காவலைப் பிழைத்துக் குடிபோந்துன்னடிகளிற் வந்து புகுந்தேன்) (க) "த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கத:—த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் சரணங்கத:" என்கிறபடியே, அவற்றைத்தப்பி உன் திருவடிகளிலே சரணம் புகுந்தேன்.

(கூறைசோறிவைதந்தெனக்கருளி) எனக்குக் கூறையும் சோறுமாயிருக்கிற இத்திருவடிகளைத் தந்தருளி. (உ) "தோட்டமில்லவள்" என்கிறபடியேயும், (ங) "எல்லாமகண்ணன்" என்றும் சொல்லுகிறபடியே கூறைசோறாக நினைத்திருப்பது இவையாய்த்து இவர். (அடியேனைப் பணியாண்டு கொள்ளுந்தாய்) வகுத்த ஸ்வாமியான நீ ராஜபுத்ரனாய்ப் பிறந்து முடியிழந்து போவாரைப்போலேயாகாமே அடியேனாயிருக்கிற என்னை நித்யகைங்கர்யத்தைக் கொண்டருளவேணும். (அழுந்தாரிக்யாதி) ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு வந்து புகுரலாம்படி கடற்கரை வெளியிலே வந்து நின்றாப்போலே, எனக்கு உறவுமுறையார் கைவிட்டவன்று வந்து கிடடலாம்படி யன்றோ தேவரீர் இங்கே வந்து நிற்கிறது. ... ... ... ... ... (அ)

---

அரு.—எட்டாம்பாட்டு (நெடியானே இத்யாதி) கீழ்ப்பாட்டில், "பொறுத்துக்கொண்டிருந்தால் பொறுக்கொணுப்போகமே நுகர்வான்" என்று அதுக்கஞ்சினேனென்றீர், "லோகத்திலே மஹாயோகிகளுமித்தனை அருசிறைக்கண்டதில்லையே, சரகாகிலும் நின்று நினைத்தன்றோ இருப்பது; ஆகையாலே அவர்ஜ்ஜநீயமான அவற்றுக்குச் செய்துகொண்டு ஆறியிரும்" என்று எம்பெருமானுக்குக் கருத்தாக அருளிச்செய்கிறாரென்று ஸங்கதி.

"கடி" என்று பரிமளமும், காடி(த்)ந்யமும். அந்வயக்ரமேணவருளிச் செய்கிறார் (பரிமளத்தை இத்யாதி).

"இவை" என்றதினாத்தம் (இத்திருவடிகளை) என்றபடி ... (அ)

---

(க) ரா-யு-கஎ-கஞ. (உ) பெரி-திரு-கு-க-கு. (ங) தி-வாய்-ச-எ-ஆ

மூ.— கோவாயைவரென்மெய் குடியேறிக்
கூறைசோறிவைதாவென்று குமைத்துப்
போகார் நானவரைப் பொறுக்ககிலேன்
புநிதா புட்கொடியாய் நெடுமாலே
தீவாய் நாகணையில் துயில்வானே
திருமாலே இனிச் செய்வதொன்றறியேன்
ஆவாவென்றடியேற் கிறைபிரங்காய்
அழுந்தூர் மேல் திசைநின்றவம்மானே. (கூ)

| பதம். | உரை. |
|---|---|
| புநிதா | பரிசுத்தனே ! |
| புட்கொடியாய் | பெரியதிருவடியை த்வஜமாக வுடையவனே ! |
| நெடுமாலே | (ஆஶ்ரிதரிடத்தில்) அத்யந்த வ்யாமோஹமுடையவனே ! |
| தீவாய் | அனலையுமிழாநின்ற வாயையுடைய |
| நாகு அணையில் | திருவநந்தாழ்வானாகிற படுக்கையில் |
| துயில்வானே | கண்வளர்ந்தருளுமவனே ! |
| திருமாலே | ஶ்ரியஃபதியே ! |
| அழுந்தூர் மேல் திசைநின்ற அம்மானே ! | |
| ஐவர் | பஞ்சேந்த்ரியங்களும் |
| கோவாய் | (எனக்கு) நிர்வாஹகங்களாய்க் கொண்டு (என்னை அடிமை கொண்டு) |
| என்மெய் | என்சரீரத்தில் |
| குடியேறி | குடியாக ஏறிவந்து |
| இவை | இந்த ஹேயங்களான |

| பதம். | உரை. |
|---|---|
| கூறை | வஸ்த்ரத்தையும் |
| சோறு | அந்நத்தையும் |
| தா என்று | கொடு என்று |
| குமைத்து | (என்னை) அடர்ந்துக் கொண்டிருந்து |
| போகார் | இங்குநின்றும் போகின்றனவில்லை. |
| நான் | உனக்கடியேனான நான், |
| அவரை | அவ்விந்த்ரியங்கள் செய்யும் உபத்ரவங்களை |
| பொறுக்ககிலேன் | ஸஹிக்கமாட்டுகிறிலேன் ; |
| இனி | உன்னையே புகலாக அடைந்தபின்பு |
| செய்வது | என் ஹிதத்துக்காகச் செய்ய வேண்டிய |
| ஒன்று | (மற்று) ஒரு க்ருத்யத்தையும் |
| அறியேன் | அறிகிலேன், (ஆகையால்) |
| அடியேற்கு | என்விஷயத்தில் |
| ஆ ஆ என்று | ஐயோ ஐயோ என்று |
| இறை | சிறிது |
| இரங்காய் | க்ருபைபண்ணியருள். |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கோவாயித்யாதி) நீ சேஷியாமது தவிர்ந்து, இவை எனக்கு நியாமகமாய்க்கொண்டுவந்து என் சரீரத்

திலே குடிபுகுந்தது. (கூறைசோறிவை) நான் கூறையும் சோறு மாக நினைத்திருக்குமவையொழிய வேறே சிலவற்றைத்தாவென்று என்னை நெருக்கி ஒருக்ஷணமும் கால்வாங்குகிறிலர்கள்; நான் அவர்க ளுடைய நலிவைப்பொறுக்கமாட்டுகிறிலேன். (புனிதா) என்விரோ தியைப்போக்கி ரக்ஷிக்குமது உன்பேறாக நினைத்திருக்கும் சுத்தி யோகத்தையுடையவனே! (புட்கொடியாய்)†இவை எல்லாவற்றுக்கும் கொடிகட்டியிருக்கிறவனே! (நெடுமாலே) ஆஶ்ரிதர்பக்கல் மிக்கவ்யா மோஹத்தையுடையவனே!

(தீவாய் நாகணையில் துயில்வானே) ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைக ஸ்வபாவனே! உனக்கு என்வருகிறதோ என்றஞ்சவேண்டாதபடி சத் ருக்கள்மேலே நெருப்பை உமிழுகிறதிருவநந்தாழ்வான்மேலே சாய்ந் தருளினவனே! (திருமாலே) அப்படிக்கையிலே சாய்வது இருவரு மான சேர்த்தியோடேயாய்த்து. (இனிச்செய்வதொன்றறியேன்) இனி நான் என்னுடைய ஹிதவிஷயமாகச் செய்வதொன்றறியேன். "அய்யோ அய்யோ" என்று அநந்யகதியான என்பக்கலிலே க்ருபை பண்ணியருளவேணும். (அழுந்தூர்மேல்) க்ருபை பண்ணுகைக்கு வாய்த்து நிற்கிறஇடமன்றோ இவ்விடம். ... ... ... ...(கூ)

அரு—ஒன்பதாம்பாட்டு. (கோவாயித்யாதி) கீழ்ப்பாட்டிலே, தமக் கடுத்த கூறை சோறிவை தரவேணுமென்று, தம் அபீஷ்டத்தை ப்ரார்த் தித்தார், இதில் இந்த்ரியங்கள் தங்களுக்கு அடுத்தவற்றைத்தரச்சொல்லி பாதி (பாதி)க்கிறன, அந்த பாதை (பாதை)யை நீக்கி யருளவேணுமென்று அநிஷ்டநிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதி.

"கோவாய்" என்று இப்போது சொல்லுகைக்கு வேறுகோவுண் டோவென்ன வருளிச்செய்கிறார் (நீ ரேஷயித்யாதி). நீரும் "கூறைசோ றிவை தந்தெனக்கருளி" என்றனின்றீரே, இவை அவற்றை ப்ரார்த்தித் தால் "தந்தமத்து" என்று சொல்லுவானென்னென்ன வருளிச்செய்கிறார் (நான் கூறையுமித்யாதி).

பலிதார்த்தத்தை அருளிச்செய்து விசேஷண ப்ரயோஜநகத(ஞ்)ந முகேந சப்தார்த்தமருளிச்செய்கிறார் (உனக்கென்வருகிறதோ வித்யாதி). "நான்அவரைப்பொறுக்ககிலேன்" என்றனின்றீர், நீர்தானே அவற்றைப் போக்கப் பார்த்துக்கொள்ளவொண்ணாதோ வென்ன (இனிச்செய் வதொன்றறியேன்) என்கிறாரென்று மதுக்குத் தாத்பர்யமருளிச் செய்கி றார் (இனிநானித்யாதி). ... ... ... ... ... ... (கூ)

† (பா) ரக்ஷணத்துக்கு.

மூ.— அன்னமன்னு பைம்பூம்பொழில்சூழ்ந்த
அழுந்தூர் மேல் திசைநின்ற வம்மானைக்
கன்னிமன்னு திண்டோள் கலிகன்றி
ஆலிநாடன் மங்கைக்குலவேந்தன்
சொன்னவிந்தமிழ் நன்மணிக்கோவை
தூயமாலை யிவை பத்தும்வல்லார்
மன்னி மன்னவராயுலகாண்டு மான
வெண்குடைக்கீழ் மகிழ்வாரே. (௧௦)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—ooo—

| பதம். | உரை. |
|---|---|
| அன்னம் | ஹம்ஸங்களானவை |
| மன்னு | நித்யவாஸம் பண்ணு நிற்பதாய் |
| பை | பரந்த |
| பூ | பூக்களை யுடைத்தான |
| பொழில் | சோலைகளாலே |
| சூழ்ந்த | வ்யாப்தமாயிருக்கிற |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் |
| மேல்திசை | மேல்புறத்தில் |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| அம்மானை | ஸ்வாமிவிஷயமாக[த் |
| கன்னி | அழிவிலலாமை யான |
| மன்னு | பொருந்தியிருக்கிற(எப்போது மழிவில லாத) |
| திண் | பலத்தையுடைய |
| தோள் | புஜங்களையுடைய, |
| ஆலிநாடன் | திருவாலி நாட்டுக்கு நிர்வாஹகராய், |
| மங்கை | திருமங்கையி லுள்ளார்க்கு |
| குலவேந்தன் | குலக்ரமமாக வந்த ராஜாவான |
| கலிகன்றி | ஆழ்வார் [டதாய், |
| சொன்ன | அருளிச் செய்யப்பட |
| இன்தமிழ் | அழகிய தமிழ்பாஷை யிலுள்ளதாய், |
| நல் | நிர்த்துஷ்டமான |
| மணி | ரத்நங்களுடைய |
| கோவை | மாலைபோலே அதிஸ்லாக்யமாய், |
| தூய | கவியில் தோஷமற்று பரிசுத்தமா யிருப்பதாய் |
| மாலை | சப்தஸந்தர்ப்பரூபமா யிருக்கிற |
| இவைபத்தும் | இப்பத்துப்பாசுரங்களையும் [கள |
| வல்லார் | அப்யஸிக்க வல்லவர் |
| மன்னவராய் | ராஜாக்களாய்க் கொண்டு |
| மன்னி | சிரகாலமிருந்து |
| உலகுஆண்டு | லோகங்களை பரிபாலநம் பண்ணி |
| மானம் | பெரியதாய் |
| வெண்குடைக் கீழ் | வெளுத்து (பதிதாய் இருக்கிற) குடையின் கீழ் இருந்து |
| மகிழ்வார் | ஆநந்திப்பார்கள்(௧௦) |

வ்யா.—பத்தாம்பாட்டு. (அன்னமன்னு மித்யாதி) அன்னங்கள் நித்யவாஸம்பண்ணுகிற பரந்தபூவையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட: அன்னங்கள் ஒன்றோடொன்று ஊடினால், உடம்போடேபடுக்கையாக அணுகாதபடி கிடக்கைக்குவேண்டும் பரப்புபோந்திருக்குமாய்த்து பூவின்பெருமை. (அழுந்தூர் மேல்திசைநின்ற வம்மானை) திருவழுந்தூரில் மேல்பார்ஶ்வத்திலே நின்ற ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனை. (கன்னிமன்னு திண்டோள்) ஒருநாளுமழியாத மிடுக்கையுடைத்தானதோள்களையுடைய ஆழ்வார், திருவாலிநாட்டுக்கு நிர்வாஹகராயுள்ளார், திருமங்கையிலுள்ளார்க்குப் பழையதாக ராஜாக்களாயுள்ளார். (சொன்ன வின்தமிழ்) சொன்ன இனியதமிழான இந்தநல்லரத்நமாலையை லக்ஷணங்களில் குறைவற்றிருக்கிற இப்பத்தையும் அப்யஸிக்க வல்லவர்கள். (மன்னிமன்னவராய்) சிரகாலம் ராஜாக்களாய். லோகங்களையடைய நிர்வஹித்துப் பெரியமுத்தின் குடைக்கீழேஇருந்து நிரவதிக ப்ரீதியுக்தராகப் பெறுவர். இந்த்ரியவஶ்யதையை அநுஸந்தித்து அஞ்சினவர், இத்தை ப(ல)மாகச் சொல்லுவானென்னென்னில்; "இவர்க்கு அந்த ஐஶ்வர்யம், பாகவத சேஷமாக்குகைக்கு உடலாகையாலே, அதுவும் புருஷார்த்தத்திலே புக்குப்போய்த்துகாண்" என்று பட்டர் அருளிச்செய்சாராம். ... ... ... (கo)

பேரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு.—பத்தாம்பாட்டு. (அன்னமித்யாதி) பூவை (பரந்த) என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிசெய்கிறார் (அன்னமித்யாதி). "மான" என்றதினர்த்தம் (பெரிய) என்றது. ... ... ... ... (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்து ஏழாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து எட்டாந்திருமொழி

### செங்கமலம் ப்ரவேசம்.

வ்யா.—(செங்கமலத் திருமகளும்) இந்த்ரிய வஶ்யதைக்கஞ்சி கூப்பிட்டார், நீர் இங்ஙனே கிடந்து கூப்பிடுகிறதென், பேரளவுடைய ப்ரஹ்மாதிகள் தங்கள் ஆபத்தை அறிவிப்பிக்கும்போது அக்கரையி

லேநின்று கூப்பிடுமதொழிய அவர்களுக்கும் கிட்ட வொண்ணுதபடி யிருக்கக்கடவராய், உமக்குப்பட்டகுறை அறிவிக்கலாம்படி பண்ணினோமாய் நின்றோமே, இவ்வளவுமல்லாதின்றநாம, இனிமேலுள்ளகார்யம் செய்வுதோமென்று உமக்குஆறியிருக்கக்குறையுண்டோ? உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களும் செய்கைக்கன்றோ நாமிங்குவந்து நிற்கிறதென்று, அங்குற்றை நிலையைக்காட்டிக்கொடுக்க, அத்தை அநுஸந்தித்து த்ருப்தராய், பிறரைப்பார்த்து, "இவனல்லது ஆஶ்ரயணீயனில்லை, ஆனபின்பு எல்லாருமவனை ஆஶ்ரயித்து உஜ்ஜீவித்துப்போகப் பாருங்கோள்" என்கிறார். ... ... ... ... *

அரு —செங்கமலத்திருமகளும் ப்ரவேசம். கீழ்த் திருமொழியில், அங்கு சங்கையாலே குறைப்பட்டிருந்த இவ்வாழ்வார் இத்திருமொழியிலே பரோபதேசத்திலே புகுருகைக்கு ஸங்கதி யென்னென்ன வருளிச் செய்கிறார் (இந்த்ரியத்யாதி). (பட்டகுறை) என்றது. அநாதியாக இந்த்ரியங்களிலகப்பட்ட குறை யென்கை. ... ... ... ... ... *

மூ.— செங்கமலத்திருமகளும் புவியும் செம்பொன்
திருவடியி னிணைவருட முனிவரேத்த
வங்கமலிதடங்கட லுளநந்தனென்னும்
வரியரவினணைத் துயின்ற மாயோன்காண்மின்
எங்குமலிநிறை புகழ்நால் வேதமைந்து
வேள்விகளும் கேள்விகளுமியன்றதன்மை
அங்கமலத்தயனனையார் பயிலும செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எங்கும் | எல்லா வாக்யங்களிலும் | இயன்ற | அதிசயித்திருக்கிற |
| மலி | (ப்ராமாண்யமா) மிக்கிருப்பதாய், | தன்மை | ஸ்வபாவத்தையுடையராய், |
| நிறைபுகழ் | (அத்தால்) பூர்ணமான யஶஸ்ஸையுடையதான | அம்கமலத்து | அழகிய திருநாபி கமலத்தைப் பிறப்பிடமாகவுடைய |
| நால்வேதம் | நாலு வேதங்களாலும் | அயன் அனையார் | ப்ரஹ்மாவோடொத்திருக்கிற ப்ராஹ்மணர்கள் |
| ஐந்து வேள்வி | பஞ்சமஹாயஜ்ஞங்களாலும் | பயிலும் | நித்யவாஸம் பண்ணுகையி லுண்டான |
| கேள்விகளும் | (மற்றும்) கேட்டறிய வேண்டும் இ(மூ)லஶ்ருதி முதலானவற்றிலும் | செல்வத்து | ஸம்பத்தையுடைத்தாய |

| | | | |
|---|---|---|---|
| அணி | லீலாவிபூதிக்கு ஆபரணமாயிருக்கிற | வருட | பிடியாநிற்க, |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் | முனிவர் | ஸநகாதிருஷிகள் |
| உகந்துநின்ற | உகப்புடனே எழுந்தருளி யிருக்கிறவனாய் | ஏத்த | ஸ்தோத்ரம் பண்ணாநிற்க, |
| அமரர்கோ | நித்யஸூரிகள் தலைவனான எம்பெருமானவன், | வங்கம் | மரக்கலங்கள் |
| | | மலி | நிறைந்திருக்கிற |
| | | தடம் | விசாலமான |
| | | கடலுள் | ஸமுத்ரத்தில் |
| செம் கமலம் | அழகிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய [ரும் | அநந்தன் என்னும் | அநந்தனென்று ப்ரஸித்தனாய் [ன |
| திருமகளும் | பெரிய பிராட்டியா | வரி | ரேகைகளையுடையனா |
| புவியும் | ஸ்ரீபூமிப்பிராட்டியும் | அரவின் அணை | திருவநந்தாழ்வானாகிற படுக்கையின் மேலே |
| செம்பொன் | ஸௌந்தரமாய் ஸ்ப்ருஹணீயமா யிருக்கிற | துயின்ற | கண்வளரா நின்ற |
| திருவடியின் இணை | திருவடிகளிரண்டையும் | மாயோன்காண்மின் | ஸர்வேஸ்வரன் கிடீர். (க) |

வ்யா. —முதற்பாட்டு. (செங்கமலத்திருமகளும்) ஆஸ்ரிதருடைய ஸர்வாபராதங்களையும்பொறுப்பிக்கும பெரியபிராட்டியாரும். (புவியும்) அப்பொறைக்கு உவாத்தான ஸ்ரீபூமிப் பிராட்டியும், ஸ்ப்ருஹணீயமாய் ஒன்றுக்கொன்று ஒப்பான திருவடிகளை வருட; ஸநகாதிகள் நின்று ஸ்துதிக்க. (வங்கமலிதடங்கடலுள்) மரக்கலங்களால் மிக்கிருக்கிற பெரியகடலிலே. (அநந்தனென்னும்) திருவநந்தாழ்வானென்று ப்ரஸித்தனாயிருக்கிறவன்மேலே. ஸர்வேஸ்வரனையும் "அநந்தன்" என்னக்கடவதிறே-த்ரிவித பரிச்சேதராஹித்யத்தாலே; அநந்தன் தன்னையும் விளாய்க்குலைத்துக்கொள்ளவல்லனாயிருக்கையாலே அநந்தனென்று ப்ரஸித்தியை யுடையனான. (வரியரவினணைத்துயின்ற மாயோன்காண்மின்) புன்றிச்சுநதேயாலே ஸர்வேஸ்வரனுக்கு வைத்த கண்மாறாதே கண்டுகொண்டிருக்கவேண்டும்படி தர்ஸநீயமான வரிகளையுடையனாய், ஸௌகுமார்ய ஸௌரப்யாதிகளை ப்ரக்ருதியாகவுடைய திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின ஸர்வேஸ்வரன் கிடீர்காணீர்க்குவந்து நிற்கிறவன்.

(எங்குமலிநிறைபுகழ்நாதி) வேதப்ராமாண்யம் ப்ராதேசிகமாயிருக்கையன்றிக்கே, எங்குமொக்க மிகுகையால்வந்த நிறைந்த புக

ழையுடைத்தான நாலுவகைப்பட்ட வேதம், பஞ்சமஹாயஜ்ஞம், மற்றும் ஶ்ரவணத்தாலே அறியவேண்டியவற்றாலும் வந்த இயற்றியை ஸ்வபா(வ)மாகவுடையராய். (அங்கமலத்தயனனையார்) தனித்தனியேப்ரஹ்மாவைப்போலே ஸ்ருஷ்டிக்கக்ஷமராயிருக்கிறப்ராஹ்மணர் நித்யவாஸம் பண்ணுகையால் வந்த நிரவதிக ஸம்பத்தையுடைய திருவழுந்தூரிலே வந்துநின்றருளின இதுதான் தனக்கு அலப்யலாபமாகக்கொண்டு நிற்கிறவன் * அயர்வறு மமரர்களதிபதியான ஸர்வேஶ்வரன் கிடிகோள்; அவனை ஆஶ்ரயித்து உஜ்ஜீவித்துப்போகப்பாருங்கோள் என்கிறார். ... ... ... ... ... (க)

அரு — முதற்பாட்டு. (செங்கமலமித்யாதி) செம்மையுடைய கமலத்திருமகளென்று சப்தார்த்தமாக்கி தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதருடைய வித்யாதி). த்ரிவிதபரிச்சேதராஹித்ய மிவனுக்குண்டோ? "அநந்தன்" என்னும் ப்ரஸித்தி வருகைக்கு என்ன வருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனையுமித்யாதி). "வரி" என்ற விசேஷிக்கதுக்கு உட்கருத்தருளிச் செய்கிறார் (குன்றிச்சூடித்யாதி). (குன்றிச்சூடு) கு(ஞ)ஞ்சாபீட(ம்)ம்.

(ப்ராஸ்தஸிகமாயிருக்கையன்றிக்கே) என்றது-சிலவாக்யங்களில் ப்ராமாண்யமுண்டாய், சிலவாக்யங்களில் ப்ராமாண்யமின்றிக்கே யிருக்கையன்றிக்கே என்கை. அங்கங்களைத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (மற்று மித்யாதி). "இயற்றி" என்றது-அதிசயமென்றபடி. "அமரர்கோவே-காண்மின்" என்றந்வயித்து அருளிச்செய்கிறார் (அயர்வித்யாதி).(க)

மூ.— முன்னிவ்வுலகேழுமிருள்மண்டியுண்ண
முனிவரொடு தானவர்கள் திகைப்பவந்து
பன்னுகலைநால்வேதப் பொருளையெல்லாம்
பரிமுகமாயருளிய வெம்பரமன் காண்மின்
செந்நெல்மலிகதிர்க் கவரிவீசச்சங்க
மவைமுரலச் செங்கமல மலரையேறி
அன்னமலிபெடையோடு மமரும் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (உ)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| செம்நெல் | ஶ்லாக்யமான நெல் பயிரினுடைய | அவை | அங்கே ஸஞ்சரிக்கிற |
| | | சங்கம் | சங்குகளானவை |
| மலி கதிர் | ஸம்ருத்தமான கதிர்களானவை | முரல | முழங்காநிற்க, |
| | | செம் | ஸுந்தரமான |
| கவரி வீச | சாமரங்கள் (போல்) வீசாநிற்க, | கமல மலரை | தாமரைப்பூவின் மேலே |

ஏறி — ஏறி
அன்னம் — ஹம்ஸமானது
மலி — போக (ஸ்ரீX) ப்ரசுரமான
பெடையோடும் — (தன்) பேடையோடு [கூட
அமரும் — பொருந்திகன்வளரா [நின்ற
செல்வத்து அணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோவே!
முன் — முற்காலத்தில்
இவ்வேழுலகும் — இந்தஸப்தலோகங்களையும் [னது
இருள் — அஜ்ஞாநாந்தகாரமா
மண்டி — அடர்ந்திருந்து
உண்ண — புஜிக்கையில் (தன்வசமாக்கிக் கொண்டு கபளீகரிக்கையில)

முனிவரொடு — ஸநகாதி ருஷிகளுடன் கூட
தானவர்கள் — ராக்ஷஸர்களும்
திசைப்ப — ப்ரமப்பட்டு நிற்க (அவ்வளவில்)
வந்து — (தான் பரமபதத்தில் நின்றும) வந்து,
பன்னு — விஸ்த்ருதமாயுள்ள
கலை — சாஸ்த்ரங்களை யுடைத்தான [டைய
நால் வேதம் — நாலு வேதங்களினு
பொருளை எல்லாம் — அர்த்தங்களையெல்லாம் [ண்டு
பரிமுகமாய் — ஹயக்ரீவனாய்க் கொ
அருளிய — உபதேசித்தருளின
எம்பரமன் காண்மின் — நம்முடைய ஸர்வாதிகன் கிடீர். (௨)

வ்யா. —இரண்டாம்பாட்டு. (முன்னிவ்வுலகேழு மிருள்மண்டியுண்ண) பண்டு இவ்வுலகங்களேழையும் அந்தகாரமானது தான் கண்டபடியே பரந்து புஜிக்க (முனிவரொடு தானவர்கள் திசைப்ப) ஸாத்விகரோடு அஸாத்விகரோடு வாசியற அறிவுகெட்டுக் கலங்க அவதரித்து, பரமபின கலைகளையுடைத்தான நாலுவகைப்பட்ட வேதங்களினுடைய அர்த்தத்தையெல்லாம் ஹயக்ரீவமூர்த்தியாய் அருளிச்செய்த ஸர்வஸ்மாத்பரன் கிடீர்.

(செந்நெல்மலிகதிர்க் கவரிவீச) செந்நெலினுடைய கனத்த கதிரானது கவரி வீச. (சங்கமவைமுரல) அங்கே ஊருகிற சங்கங்களானவை த்வநிக்க (செங்கமலமலரையேறி) செவ்விபெற அலர்ந்த தாமரைப்பூவைப்படுக்கையாகக்கொண்டு அதின்மேலேறி. (அன்னமலிபெடையோடுமமரும் செல்வத்து) அன்னமானது அப்பூம்படுக்கையிலே போக (ஸ்ரீX) ஸ்ரோதஸ்ஸில் தன்னைவிஞ்சின பெடையோடொக்கச் சாய்கிற நிரவதிக ஸம்பத்தையுடைய, அங்குத்தை திர்யக்குகளுமகப்பட போக (ஸ்ரீX) ப்ரகாநமாயாய்த்திருப்பது (௨)

அரு.—இரண்டாம்பாட்டு. (முன்னித்யாதி) கீழ்ப்பாட்டில், திருப்பாற்கடலில் கிடந்தான் இவரென்றார்; அங்கு நின்றும்போந்து வேதப்ரதா(நா)நம் பண்ணின மஹோபகாரகன் இவர் என்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதி.

(அந்தகாரமானது) என்றது - அஜ்ஞாநாந்தகாரமானது என்றபடி. இங்ஙனன்றாகில், வேதப்ரதாநத்தால் பாஹ்யாந்தகாரம் போகாதிறே. (கலஙக) என்ற வநந்தரம், "அதுதீர" என்று சேஷம்.

சங்கங்களை "அவை" என்று விசேஷிக்கையாலே செந்நெலிலே வர்த்திக்கிறவை என்று விவக்ஷித்து, ஜந்துக்களாகையாலே கூட்பிடும் என்று அத்தை கா(ர)நஸ்த்தாநேயாக்கி யருளிச்செய்கிறார் (அங்கேவூரு கிற வித்யாதி). "அன்னம்" என்பதும் "பெடையோடும்" என்பதும் ஜாதாவேகவசநமாய், பல அன்னங்கள் பலபேடைகளோடு அமரும்என்று விவக்ஷித்து அத்தை அருளிச்செய்கிறார் (அங்குத்தை திர்யக்குக்களுமித்யாதி). ... ... ... ... ... ... ... ... (உ)

மூ. — குலத்தலைய மதவேழம் பொய்கைபுக்குக்
கோள்முதலை பிடிக்கவதற் கனுங்கிநின்று
நிலத்திகழும் மலர்ச்சுடரேய் சோதியென்ன
நெஞ்சிடர் தீர்த்தருளிய வென் நிமலன்காண்மின்
மலைத்திகழ் சந்தகில் கநகமணியுங்கொண்டு
வந்துந்திவயல்கள் தோறும் மடைகள்பாய
அலைத்துவரும் பொன்னிவளம் பெருகும்செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (ங)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| மலை | ஸஹ்யபர்வதத்தில் | பாய | பாயும்படியாக |
| திகழ் | விளங்காநின்ற | அலைத்துவரும் | அலையெறிந்துகொண்டு வாராநின்ற |
| சந்து | சந்தநமரங்களையும் | பொன்னி | திருக்காவேரியானது |
| அகில் | அகில்கட்டைகளையும் | வளம் | ஸம்ருத்தமாக |
| கனகம் | ஸுவர்ணங்களையும் | பெருகும் | ப்ரவஹியா நிற்கையி னாலுண்டான |
| மணியும் | ரத்நங்களையும் | செல்வத்து அணியழுந்தூர் நின்றுக ந்த அமரர்கோ, | |
| கொண்டுவந்து | திரட்டிக்கொண்டு [வந்து | குலம் | நல்லஜாதியில் பிறந்த (யானைகளுக்குள் ளே) |
| உந்தி | தள்ளி | | |
| வயல்கள்தோறும் | கழனிகளெங்கும் | | |
| மடைகள் | மடைகளிலே | | |

| | |
|---|---|
| தலைய | ச்ரேஷ்டமானதும் |
| மதம் | கொழுப்புடையதுமான |
| வேழம் | ஸ்ரீ கஜேந்த்ரமானது |
| பொய்கை | மடுவிலே |
| புக்கு | ப்ரவேசித்து (நீர்க்கையில், அங்கு) |
| கோள் | மிடுக்கையுடைத்தான |
| முதலை | முதலையானது |
| பிடிக்க | (தன்காலைப்)பற்றி இழுக்க |
| அதற்கு | அந்த முதலைக்கு |
| அனுங்கிநின்று | பயப்பட்டிருந்து, |
| நிலா | சந்த்ரிகையை |
| திகழும் | சுற்றும் விளங்கப்பண்ணுகின்ற |
| மலர் | விகாஸத்தையுடைத்தான |
| சுடர் | தேஜோரூபியான சந்த்ரனோடு |
| ஏய் | ஒத்திருக்கிற |
| சோதி | (குளிர்ந்த) தேஜஸ்ஸையுடையவனே! |
| என்ன | என்று கூப்பிட, (அங்கே எழுந்தருளி) |
| நெஞ்சு | (அதின்)மநஸ்ஸிலுண்டான |
| இடர் | துக்கத்தை |
| தீர்த்தருளிய | போக்கியருளினவனாய் |
| என் | (அதை) எனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், |
| நிமலன்கண்டீர் | (அத்தால்) பரிசுத்தனானவன் கிடீர். (௩) |

வ்யா —மூன்றாம்பாட்டு. (குலத்தலையமதவேழம்) நல்ல ஆகரத்திலே பிறந்து தான் ஆனைகளுக்கெல்லாம் ப்ரதா(ந)நமாய், மதமுதிதமாய், மூலையடியே திரிகிற ஆனை விழுக்காடறியாதே தன்னிலமல்லாத வேற்றுநிலத்திலே புக்கு கொடிதானமுதலையின்கையிலே அகப்பட்டதாய்த்து. (கோள்முதலைபிடிக்க) சாபோபஹதமாய் அதுக்குப் பரிஹாரமாக "எப்போதோ ஆது நமகையிலே வந்தகப்படுவது" என்றிருக்கிற முதலையின்கையிலே புக்குப் பிடிபட. (அதற்கனுங்கிநின்று) அதற்கு வெருவி, முதலையினுடைய வ்யாபாரமேயாய் தன்னுடைய வ்யாபாரமற்றுநின்று. (நிலைத்திகழு மலர்ச்சுடரேய் சோதியென்ன) நிலாவை பரப்பாநின்ற விகாஸத்தையுடைய சுடருண்டு சந்த்ரன், அவனோடொத்த தண்ணளியை யுடையையாய்க்கொண்டு வந்து தோற்றவேணுமென்ன; (நெஞ்சிடர் தீர்த்தருளிய என்நிமலன் காண்மின்) அதினுடைய கையில் பூ ச்செவ்வியாறுதபடி தன் திருவடிகளிலே இடுவித்துக்கொண்டு அதினுடைய ஹ்ருதயத்தில் வ்யஸநத்தைப்போக்கி யருளுகைபாலே, ஆஶ்ரிதருடைய விரோதியைப் போக்கி, அவர்களுடைய அபேக்ஷிதஸம்விதாநம்பண்ணும் ஸ்வபா(வ)வனென்கிற சுத்தியை எனக்குப்ரகாசிப்பித்தவன் கிடீர்.

(மலைத்திகழ் சந்தகில் கநகமணியும்கொண்டு) ஸஹ்யபர்வதத்திலே விளங்காநின்ற சந்தநத்தையும், அகிலையும், பொன்னையும், ரத்ந

கங்களையும் வாரிக்கொண்டுபோந்து. (வந்துந்தியித்யாதி) பா(ஓ)ரமபொறுக்கமாட்டாமை சுமை பொகடுவாரைப்போலே தள்ளி, வயலென்று பேர்பெற்ற விடமெங்கும் மடைகள்தோறும் வந்து பாயாநிற்குமாய்த்துப் பொன்னியானது. இப்படி அலைத்துக்கொண்டு பெருகிவாராநின்ற காவிரியால் வந்த நிரவதிக ஸம்பத்தையுடைய. அவன்தான் ஆர்த்தரிருந்தவிடமெங்கும் வந்து ரக்ஷிக்குமாபோலே, இந்த ஆற்றுவரவும அம்பக்ஷிதமான இடமெங்கும் வந்து பாயாநிற்குமாய்த்து. ... ... ... ... ... ... (௯)

---

அ௫.—மூன்றும்பாட்டு. (குலவித்யாதி) கீழ்ப்பாட்டில், அஜ்ஞாநம் போம்படி வேதப்ரதாநம் பண்ணினபடி சொல்லிற்று, இதில், அர்த்தவேதத்தில் ப்ரதிபாத்யமான கைங்கர்யத்தை விரோதிநிவ்ருத்தி பூர்வகமாகத் தானே கொண்டருளுமவனென்னுமதுக் குறிப்பாக, ஸ்ரீகஜேந்த்ரரக்ஷணத்தை உபதேசிக்கிறுரென்று ஸங்கதி.

"குல" என்றது-க்ருஹமாகியாய் அருளிச்செய்கிருர் (அகரத்திலே) என்று. "பிடிக்க" என்கைபாலேஏற்கவே பிடிக்கக் கோலினமை தோற்றுகையாலே பலிதார்த்தமருளிச் செய்கிருர் (சாபாபஹதமாயித்யாதி). கொடுமையின்படிதன்னை எல்லையிலத்தனவு மருளிச்செய்தா ரென்னவுமாம்.

பாட்டுக்கெல்லாம்தொகுத்து பாவமருளிச்செய்கிருர்(அவன்தானித்யாதி)

மூ. — சிலம்புமுதல் கலனணிந்தோர் செங்கற்குன்றம்
திகழ்ந்ததெனத் திருவுருவம் பன்றியாகி
இலங்குபுவி மடந்தைதனை யிடந்துபுல்கி
எயிற்றிடைவைததருளிய வெம்மீசன் காண்மின்
புலம்புசிறை வண்டொலிப்பப் பூகந்தொக்கப்
பொழில்கள்தொறும் குயில்கூவ மயில்களால
அலம்புதிரைப் புனல்புடைசூழ்ந் தழகார் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புலம்பு | அழகிதாக விளங்காநின்ற | பொழில்கள் தொறும் | சோலைகளெங்கும் |
| சிறை | இறகுகளையுடைய | குயில் | கோகிலங்களானவை |
| வண்டு | வண்டுகளானவை | கூவ | கூவாநிற்பதாய், |
| ஒலிப்ப | த்வநியாநிற்பதாய், | மயில்கள் | மயில்களானவை |
| பூகம் | பாக்குமரங்கள் | ஆல | கூத்தாடாநிற்பதாய், |
| தொக்க | திரண்டிருக்கிற | அலம்பு | அலையெறிகின்ற |

| | |
|---|---|
| திரை | அலைகளையுடைத்தான |
| புனல் | ஜலமானது |
| புடை | பர்யந்தப்ரதேசங்களிலே |
| சூழ்ந்து | வ்யாப்தமாய்க்கொண்டு |
| அழகு ஆர் | அழகுமிக்கிருக்கிற |
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | |
| ஓர் | அத்விதீயமாய் |
| செம் கல் | சிவந்த ரத்நங்களையுடைத்தான |
| குன்றம் | மேருபர்வதமானது |
| திகழ்ந்ததென | விளங்குவதுபோலிராநின்றதாய், |
| சிலம்புமுதல் | தண்டைச்சிலம்பு முதலான |
| கலன் | ஆபரணங்களை |
| அணிந்து | சாத்திக்கொண்டிருக்கிற |
| திருவுருவம் | அழகியவடிவையுடைய |
| பன்றியாகி | மஹாவராஹமாயவதரித்து, |
| இலங்கு | விளங்காநின்ற |
| புவிமடந்தை தன்னை | ஸ்ரீபூமிப்பிராட்டியை |
| இடந்து | (அண்டபித்தியில்நின்றும்) குத்தியெடுத்து |
| புல்கி | (அவளுடன்) ஸம்ஶ்லேஷித்து |
| எயிறு இடை | தந்தத்தினிடையிலே |
| வைத்தருளிய | வைத்துக்கொண்டு (ஏறி) அருளினவனாய் |
| எம் | (அறிவில்) நமக்கெல்லாம் |
| ஈசன் காண்மின் | நிர்வாஹகனான ஸர்வேஶ்வரன் கிடீர். (௪) |

வ்யா. —நாலாம்பாட்டு. (சிலம்புமுதல் கலனணிந்து) சிலம்பு துடக்கமான ஆபரணங்கள் பலவற்றையுமணிந்து ஒரு மேருவானது நின்று விளங்குமாபோலே, வராஹவேஷத்தையுடையனாய். (இலங்கு புவி) அண்டபி( த்)தியிலே புக்குச் சேர்ந்த பூமியை இடந்தெடுத்துக் கொண்டேறி, அந்தபூமிக்கும் அபிமாநியான ஸ்ரீபூமிப்பிராட்டியை அணைத்து, அந்தபூமிதன்னைத் திருவெயிற்றிலே ஒருநீலமணியழுத்தினாப்போலே வைத்தருளின அச்செயலைக்காட்டி, என்னை எழுதிக் கொண்டவன் கிடீர்.

(புலம்புசிறை வண்டொலிப்ப) அழகிய சிறகையுடைத்தான வண்டுகள் மதுபாநமத்தமாய் த்வநிக்க. (பூகந்தொக்கப் பொழில்கள் தோறும் குயில்கள்கூவ) கமுகுகள் திரண்ட சோலைகள்தோறும் குயில்களானவை, முக்தர் ஸாமகாநம்பண்ணுமாபோலேகூவ, (மயில்களால) அதினுடைய பாட்டுக்கீடாக மயில்கள் ஆலிக்க. (அலம்பு திரைப்புனல் புடைசூழ்ந்தழகார் செல்வத்து) அலைத்துக்கொடுவருகிற திரைகளையுடைத்தான ஜலமானது பர்யந்தமெங்கும் சூழ்கையால்வந்த நிரவதிகஸம்பத்தையுடைத்தாய் ஸம்ஸார விபூதிக்கு ஆபர

ணம்போலேயிருக்கிற திருவழுந்தூரிலே. ... ... ... (ச)

அநு.—நாலாம்பாட்டு (சிலம்பித்யாதி) கீழ்ப்பாட்டில், "நிலத்திகழு மலர்ச்சுடரேய் சோதி" என்று பெருமிடறு செய்து கூப்பிட வந்து உபகரித்தவனென்றீர்; ஸம்ஸார ப்ரளயங்கொண்டிருக்கிற எங்களுக்கு அங்ஙன் கூப்பிடக்கூடுமோ வென்னு மதிசங்கையிலே, ப்ரளயத்திலகப்பட்டுக் கூப்பிடவறியாத பூமியை எடுத்தாப்போலே நம்மையு மெடுக்க வல்லவன் இவர் என்று வராஹவ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறு ரென்று ஸங்கதி.

"செம்" சிவந்த "கல்" ரத்நங்களையுடைய "குன்றம்" மேருவானது திகழ்ந்ததென்னும்படியாக. "சிலம்பு முதல் கலனணிந்து" இவ்வாபரண சோபையாலே மூட்டாக்கிட்டபடியாலே விளங்காநின்றுள்ள திருவுருவ முடைய வராஹமென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறுர் (சிலம்பித்யாதி). "செஙகட்குன்றம்" என்று பாடமானபோது குன்றுக்கே விசேஷணமாய், அபூ(ஞ)தோபமையாக வ்யாக்யாநாந்தரமுண்டு, "குன்று" நீலாசலமென்று கருத்து. ... ... ... ... ... ... (ச)

மூ.— சினமேவு மடலரியி னுருவமாகித்
திறல்மேவு மிரணியன தாகங்கீண்டு
மனமேவும் வஞ்சனையால் வந்தபேய்ச்சி
மாளவுயிர் வவ்விய வெம்மாயோன்காண்மின்
இனமேவும் வரிவளைக்கை யேந்தும்கோவை
ஏய்வாய மரதகம்போல் கிளியினின்சொல்
அனமேவுநடைமடவார் பயிலும் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்தவமரர்கோவே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இனம் மேவும் | வரிசைவரிசையாகப் பொருந்தியிருப்ப | கிளியின் | கிளிகளினுடைய |
| வரி | அழகியதான [தாய் | இன்சொல் | மதுரமான சொல்லையுடையவர்களாய், |
| வளைகை | வளைகளையுடைத்தான கைகளாலே | அனம் மேவும் | ஹம்ஸத்தோடு பொருந்தியிருக்கிற (ஸத்ருசமான) |
| ஏந்தும் | தாங்கப்பட்ட, | நடை | நடையழகையுமுடையவர்களான |
| கோவைஏய் | கோவைப் பழத்தோடொத்த | மடவார் | ஸ்த்ரீகள் |
| வாய் | அதரத்தையுடைத்தாய், | பயிலும் | நித்யவாஸம் பண்ணுகின்ற |
| மரதகம்போல் | மரகதப்பச்சை போன்ற வர்ணத்தையுடைத்தான | | |

| | |
|---|---|
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர்க்கு, | |
| மேவும்சினம் | அதிசயிதமானகோபத்தையும் |
| அடல் | மிடுக்கையுமுடைய |
| அரியின்உருவமாகி | நரஸிம்ஹவேஷத்தையுடையனாய்க் கொண்டு, |
| திறல்மேவும் | ப(ப)லம் மிக்கிருந்துள்ள |
| இரணியனது | ஹிரண்யனுடைய |
| ஆகம் | சரீரத்தை |
| கீண்டு | பிளந்தவனும் |
| மனம் மேவும் | மனஸ்ஸிலே பொருந்தியிருக்கிற |
| வஞ்சனையால் | கபடத்தினாலே |
| வந்த | (கொல்ல) வந்த |
| பேய்ச்சி | பூதனையானவள் |
| மாள | முடியும்படியாக |
| உயிர் | அவளுடைய ப்ராணனைக் கொண்டு |
| வவ்விய | க்ர(ஹ)ஹித்தவனைக் |
| எம் | (அவ்வாச்சர்யத்தை) எனக்குப்(ப்ரகாசிப்பித்தவனுமான) |
| மாயோன்காண்மின் | ஆச்சர்யபூ(பூ)தன் இடீர். (ரு) |

வ்யா —அஞ்சாம்பாட்டு. (சினமேவு மடலரியினுருவமாகி) சிறுக்கன்பக்கலிலே அவன் மிகைத்துவரப்புக் கவாறே அதுகண்டு பொறுக்கமாட்டாமை, சினத்தைவிட்டுவகுத்தாப்போலேயாய், கிட்டவொண்ணாத நரஸிம்ஹவேஷத்தையுடையனாய். (திறல்மேவுமிரணியனதாகங்கீண்டு) நரஸிம்ஹத்துக்கும் பிற்காலியாத மிடுக்கையுடைய ஹிரண்யனுடைய உடலைக்கீண்டு. (மனமேவுமித்யாதி) இவனுடைய பருவத்தைக்கண்டால் "கெட்டேன், இவனை அழியசெய்கையாவதென்'' என்று நெஞ்சிலிரக்கம் பிறக்கையன்றிகயே நெஞ்சிலே பொருந்தியிருக்கிற வஞ்சகத்தையுடையளாய்க்கொண்டு வந்த பூதனை முடியும்படி அவளுடைய முலைவழியே அவளுடைய ப்ராணன்களும் வற்றிவரும்படி முலையை அமுதுசெய்த ஆச்சர்யபூ(பூ)தன் கிடீர் இங்குவந்து நிற்கிறவன்.

(சினமேவுமித்யாதி) தர்ஶநீயமான வளையையுடைத்தான கைகளாலே எந்தப்பட்டு, இவர்கள் தங்களோடொத்துக் கோவைபோன்ற அதரத்தையுடைத்தாய், மரகதம்போன்ற நிறத்தையுடைத்தாயிருக்கிற கிளியினுடைய பேச்சுபோலே இனிதானபேச்சையுடையராய். கற்பிக்கிறவர்கள்பேச்சும் கிளியின் பேச்சும் வாசிதெரியாது அன்னம்போன்ற நடையுடைய ஸ்த்ரீகள் நெருங்கி வர்த்திக்கையால் வந்த திரவதிக ஸம்பத்தையுடைய. ... ... ... ... (ரு)

௫ —அஞ்சாம்பாட்டு. (சினமேவுமித்யாதி)கீழ்ப்பாட்டுக்களில், அநுகூலனை ஸ்ரீ கஜேந்த்ர ரக்ஷணம்பண்ணி மஹிஷியான பூமிக்கு விரோதியான முறையாலே பூமியை உத்த்(த்)ரித்தானென் றீரேயாகிலும், நாங்கள் அங்ஙனநுகூலிக்கவும் பெறாதே ஒரு ப்ரத்யாஸத்தியுமின்றிக்கே, விரோதியும் கனத்திருக்க ரக்ஷிக்கும்படி எங்ஙனேயென்ன ; விரோதிநிரஸநசீலனென்கிறு ரிங்கென்று ஸங்கதி.

இரண்டு பேச்சுக்கும் இனிமை ஒத்திருக்குமோவென்னவருளிச்செய்கிறார் (கற்பிக்கிற வித்யாதி). ... ... ... ... ... (௫)

மூ. — வானவர் தம்துயர்தீரவந்துதோன்றி
மாணுருவாய் மூவடி மாவலியை வேண்டித்
தானமரவேழுலகு மளந்தவென்றித்
தனிமுதல் சக்கரப் படையென் தலைவன்காண்மின்
தேனமரும் பொழில் தழுவுமெழில்கொள்வீதிச்
செழுமாட மாளிகைகள் கூடந்தோறும்
ஆனதொல் சீர்மறையாளர் பயிலுஞ்செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (௬)

| பதம். | உரை. |
|---|---|
| தேன் | மதுவானது [நின்ற |
| அமரும் | மாறாதே ப்ரவஹியா |
| பொழில் | சோலைகளாலே |
| தழுவும் | சுற்றப்பட்டு |
| எழில்கொள் | அழகுமிக்கிருந்துள்ள |
| வீதி | வீதிகளிலும் |
| செழு | அழகிய |
| மாடம் | மண்டபங்களிலும் |
| மாளிகைகள் | அரண்மனைகளிலும் |
| கூடந்தோறும் | க்ருஹங்களிலும் [ராய் |
| ஆன | ஆத்மகுண ஸம்பந்ந |
| தொல்சீர் | பழையதான (அழிவற்ற) கீர்த்தியையுடையராய் |
| மறையாளர் | வேதாத்யயநபரரான ப்ராஹ்மணர்கள் |
| பயிலும் | நெருங்கி வர்த்திக்கிற |
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | |

| பதம். | உரை. |
|---|---|
| வானவர்தம் | தேவர்களுடைய |
| துயர்தீர | துக்கம் போம்படியாக |
| தான் | (ஸர்வ வ்யாபியாய் அவாப்த ஸமஸ்த காமனான) தான் |
| மாணுருவாய் | வாமந வேஷத்தையுடையனாய்க் கொண்டு |
| வந்துதோன்றி | வந்தவதரித்து |
| மாவலியை | மஹாபலியினிடத்தில் |
| மூவடி | மூன்றடியை |
| வேண்டி | யாசித்து (அதுபெற்றவாறே), |
| ஏழுலகும் | ஸப்தலோகங்களையும் |
| அமர | (தன் திருவடிக்கீழ்) அடங்கும்படியாக |
| அளந்த | ஆக்ரமித்தவனாய், |

| | | | |
|---|---|---|---|
| வென்றி | ஜயசீலமாய், | சக்கரம் | ஸுதர்சநத்தை |
| தனி | அத்விதீயமாய் | படை | ஆயுதமாகவுடையனாய் |
| முதல் | (ஆயுதங்களில்) ப்ரதா(நா)நமான | என் தலைவன் | எனக்கு ஸ்வாமியான |
| | | காண்மின் | ஸர்வேச்வரன்கிடீர். |

வ்யா. — ஆறும்பாட்டு. (வானவர்தம் துயர்தீர) அநந்யப்ரயோஜநராய் அவனையல்லதறியாதே (க) * தொடைபொத்ததுளபமும் கூடையும் பொலிந்து தோன்றுமவர்களுக்காகவன்றிக்கே, கார்யம்செய்து தலைக்கட்டின வாந்தரார்,நான் ஈச்வரனென்னும்தேவர்களுக்கு அஸுரர்களால் வந்த துக்கம் போம்படி வநதவதரித்து. (மாணுருவாய்) "அவன்பக்கலிலே பெருவிடில் ஜீவிக்கைஅரிது" என்று தோற்றும் இரப்பிலே தகணேறின வடிவையுடையனாய், தனக்கில்லாதது மூவடியாய், அதுடையான் மஹாபலியாய், அவன்கையிலே தான் நீரேற்றுப்பெற்று, அந்த திருவடிகளின்கீழே ஏழுவகைப்பட்ட லோகங்களுமடங்கும்படிக்கீடாக வளர்ந்து. (வென்றித்தனிமுதல் சக்கரப்படை) வெற்றியை யுடைத்தாய், அத்விதீயமாய் ஆயுதங்களுக் கெல்லாம ப்ரதா(ந)நமாயிருக்கிற திருவாழியைப் பரிகரமாகவுடையனான என் ஸ்வாமிகிடீர் (௨) "త్రివిక్రమ క్రమాక్రాన్త త్రైలోక్యస్ఫురదాయుధః- த்ரிவிக்ரம க்ரமாக்ராந்தத்ரைலோக்யஸ்ஸ்ப்புரதாயுதஃ" என்கிறபடியே யிருக்கிற திவ்யாயுதங்களையுடையவன். (௩) "జితం భగవతా జగత్- ஜிதம பகவதா ஜகத்".

(தேனமரும் பொழில் தழுவுமெழில் கொள்வீதி) தேன்மாறாத பொழிலாலே தழுவப்பட்ட அழகையுடைத்தான வீதி. (செழுமாடமிதயாதி) அழகிய மாடங்கள், மாளிகைகள், கூடங்கள், மண்டபங்கள், மற்றுமவகாசமுள்ள இடமெங்கும. (ஆனதொல்சீர்) வித்யாவிநயங்களால் ஸம்பந்நரா † (ய்,பழையதான சீரையுமுடையரா)யிருக்கிற ப்ராஹ்மணர் நெருங்குகையால் வந்தநிரவதிகஸம்பத்தையுடைய. ... ... ... ... ... ... ... (௯)

அரு — ஆறும்பாட்டு. (வானவரித்யாதி கீழ்ப்பாட்டில், விரோதி நிரஸநசீலனென்றீர்; அவன் விரோதி நிரஸநசீலனேயாகிலும், எங்களுக்கு ப்ரயோஜநாந்தரங்களில் நசை அநுவர்த்திக்கையாலே எங்களைக்கைக் கொள்ளுமோவென்ன; ப்ரயோஜநாந்தரபரர்க்குங்கூட தன்னை இரப்பாளனாக்கிக்கார்யம் செய்யும்படியான ஸுசீலன்கிடீகோ ளென்கிறாரென்று ஸங்கதி

(க)தி-பள்-கo. (௨)வி-டி-ரு-ரு-கஎ. (௩) † குண்டலிதம் க்வாசித்கம்.

"வானவர்" என்னவமைந்திருக்க "தம்" என்றத்தாலே அவர்கள் துரபிமாநம் தோற்றுமென்று விலக்ஷித்து வ்யாவர்த்யகதநபூர்வகம் தாத்பர்யமருளிச் செய்கிறார் (அநந்யேத்யாதி). வானவரென்று, வான்-ப்ராப்யமாகத் தோற்றுகையாலும், அதுபெறுகைக்கு ஸாதநமும் தாமே அநுஷ்டிக்க வல்லாரென்று முன்பிருக்கிற ஸ்வாதந்த்ர்யம் "தம்" என்றத்தாலும் ஸூசிதமாகையாலும், அநந்யப்ரயோஜநராய் அநந்ய ஸாதநரானவர்களை வ்யாவர்த்திக்கிறதென்று திருவுள்ளம். மாணாய் என்னாதே, "மாணுருவாய்" என்றத்தாலே, இரப்பிலே தகணேறினமைதோற்றுமென்று அருளிச் செய்கிறார் (அவனித்யாதி). "தான் மாணுருவாய் மூவடி மாவலியையவேண்டி" என்றந்வயித்து, தானே தன்னிலே ஸர்வஸ்வாமித்வம் தோற்றியிருக்கையாலே வேண்டக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (தனக்கேத்யாதி). மாணுருவானபோது சக்கரப்படையுண்டோவென்ன; "அளந்தபோது உண்டு" என்றுப்ரமாணமருளிச்செய்கிறார் (த்ரிவிக்ரம இத்யாதி). திருவடிகளின்கீழே அடங்கும்படி அளக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ஜிதமித்யாதி). ... ... ... ... ... ... ... (சு)

மூ. — பந்தணைந்த மெல்விரலாள் சீதைக்காகிப்
பகலவன் மீதியங்காத விலங்கைவேந்தன்
அந்தமில்திண் கரம்சிரங்கள் புரண்டுவீழ
அடுகணையாலெய்து கந்தவம்மான் காண்மின்
செந்தமிழும் வடகலையும் திகழ்ந்தநாவர்
திசைமுகனேயனையவர்கள் செம்மைமிக்க
அந்தணர்த மாகுதியின் புகையார் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| செம்தமிழும் | அழகிய (ஸ்வார்த்தத்தை எளிதில் ப்ரகாசிப்பிக்க வல்ல) த்ராவிடவேதமும் |
| வடகலையும் | ஸம்ஸ்க்ருத வேதமும் |
| திகழ்ந்த நாவர் | விளங்காநின்ற நாவையுடையவர்களாய் |
| திசைமுகனே அனையவர்கள் | ப்ரஹ்மாவோடொத்த (ப்ரபாவமுடையவர்களாய், |
| மிக்கசெம்மை | அதிசயிதமான வைலக்ஷண்யத்தையுடையரான |
| அந்தணர்தம் | ப்ராஹ்மணருடைய |
| ஆகுதியின் | (யஜ்ஞத்தில்) ஆஹுதியிலேயுண்டான |
| புகை ஆர் | தூமம் நிறைந்திருக்கிற |
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | [இற |
| பந்து அணைந்த | பந்தோடு கூடியிருக் |

| | | | |
|---|---|---|---|
| மெல் | ம்ருதுவான [ண | திண் | பலிஷ்டமான |
| விரலாள் | விரற்களை யுடையளா | கரம் | கைகளும் |
| சீதைக்காகி | ஸீதை நிமித்தமாக, | சிரங்கள் | தலைகளும் [க |
| பகலவன் | ஸூர்யன் | புரண்டுவீழ | அறுந்துவிழும்படியா |
| மீது | மேலே | அடுகணையால் | கொல்லவல்லபாணத் |
| இயங்காத | ஸஞ்சரிக்கப்போகாத (உயர்ந்த அரணை | | திறல் |
| இலங்கை | லங்கைக்கு [யுடைய) | எய்து உகந்த | அடித்து (க்கொன்று) ஸந்தோஷித்த |
| வேந்தன் | ராஜாவான ராவண னுடை ய[ணிறந்த) | அம்மான்காண் | ஸர்வேஶ்வரன் கிடீ |
| அந்தம் இல் | அவதியில்லாத (எண் | மின் | ர். (௭) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (பந்தணைந்த) ஸர்வேஶ்வரன் ஸந்நிதியிலும் பந்துகொண்டுபோதுபோக்க வேண்டும்படியாய், அந்த பந்து தொடவும் பொறுதபடியான விரலையுடைய பெரியபிராட்டியாரோடுண்டான ஸம்ஶ்லேஷத்துக்காக. பிரிவுக்கு ஹேதுபூ(஭ூ)தனாய், சந்த்ராதித்யர்கள் மேலே ஸஞ்சரிக்கப்பெறாத அரணையுடைத்தாயிருக்கிற லங்கைக்கு நிர்வாஹகனான ராவணனுடைய. (அந்தமிலித்யாதி) அறுக்கவறுக்க முளைக்கையாலே அவதியின்றிக்கே யிருப்பதாய், திண்ணியதாயுமிருக்கிற தோள்களும் தலைகளும் தெறித்துப்போய் விழ, ஒரு கோலைஅம்பாலே எய்து அவனையழித்து, "விரோதிபோகப் பெற்றோம், ஆஶ்ரிதரும் குடியிருப்புப் பெற்றார்கள்" என்று அவர்களுக்குக்கடவ உகப்பைத்தானுகந்த ஸர்வேஶ்வரன் கிடீர்.

(செந்தமிழித்யாதி) (செந்தமிழும்) அர்த்தத்தை நேராகக்காட்டவல்ல தமிழும். (வடகலையும்) ஸம்ஸ்க்ருதமும், இவையடைய விளங்குகிற நாவையுடையருமாய். (திசைமுகனே யனையவர்கள்) தனித்தனியே சதுர்முகனைப்போலே ஸ்ருஷ்டிக்ஷமராயிருக்கிற ப்ராஹ்மணர்வர்த்திக்கிற (செம்மையித்யாதி) இப்படி வைலக்ஷண்யம் விஞ்சியிருந்துள்ள ப்ராஹ்மணருடைய ஹோமதூமத்தையும் அழகிய செல்வத்தையுமுடைய அணியழுந்தூர். ... ... ... (௭)

---

அரு.—ஏழாம்பாட்டு. (பந்தணைந்தவித்யாதி) கீழ்ப்பாட்டில், ப்ரயோஜநாந்தர பரரிடத்தில் தன்னை இரப்பாளருக்கும் கார்யம் செய்யுமவன் என்றுநின்றீர்; இப்படி அவன் செய்யவேண்டுவா னென்னென்னில், அவன் பிராட்டியிடத்தில் அபி(஭ி)நிவிஷ்டனாய் கார்யம் செய்யுமாபோலே சேதநரெல்லாரிடத்திலும் அபிநிவிஷ்டனாயிருப்பன் கிடீரென்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதி.

ஸர்வேஶ்வரனுக்கு வ்யாமோஹத்தை யுண்டாக்குகைக்கு உப்யுக்தமான மௌக்த்ய(ஶ்ஞ)மும், மார்தவமும் ஸஹிதமாகிற தென்றருளிச்செய்கிறார் (ஸர்வேஶ்வரனித்யாதி).

" ஆர் " என்று பொருந்துதலாய், இவர்களுக்குப் பொருந்தினதென்றாய், அத்தால்பலிதம் (அழகிய) என்கிறது. ... ... ... ... (எ)

மூ. — கும்பமிகு மதவேழம் குலையக் கொம்பு
பறித்து மழவிடை யடர்த்துக் குரவைகோத்து
வம்பவிழும் மலர்க்குழலாளாய்ச் சிவைத்த
தயிர் வெண்ணெயுண்டுகந்த மாயோன் காண்மின்
செம்பவளமரகத நன்முத்தங்காட்டத்
திகழ்பூகம் கதலிபலவளம் மிக்கெங்கும்
அம்பொன்மதிள் பொழில்சூழ்ந்தழகார்செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (அ)

| பதம் | உரை. |
|---|---|
| செம்பவளம் | (பாக்குமரங்களில் பழங்கள்) சிவந்த பவழத்தையும் |
| மரகதம் | (அவற்றின் காய்கள்) மரதகப் பச்சையையும் |
| நல்முத்தம் | (பூக்கள்) நல்ல முத்துக்களையும் |
| காட்ட | தர்சிப்பிக்கவற்றான |
| பூகம் | கமுகுகளாலே |
| திகழ் | விளங்காநின்றதாய், |
| பல | அநேகமான |
| கதலி | வாழைகளுடைய |
| வளம் | ஸம்ருத்தியானது |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| மிக்கு | அதிசயித்திருப்பதாய், |
| அம்பொன் | மிகவும் ஸ்ப்ருஹணீயமான [தான |
| மதிள் | ப்ராகாரத்தையுடைத் |
| பொழில் | சோலைகளாலே |

| பதம். | உரை |
|---|---|
| புடை | பர்யந்தங்களிலே |
| சூழ்ந்து | சுற்றப்பட்டு |
| அழகு ஆர் | அழகுமிக்கிருக்கிற |
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர்கோ, | [யும் |
| மிகு கும்பம் | பெருத்தமஸ்தகத்தை |
| மதம் | மதத்தையுமுடைய |
| வேழம் | குவலயா பீடமானது |
| குலைய | அழியும்படியாக |
| கொம்பு | (அதின்) தந்தங்களை |
| பறித்து | பிடுங்கியும், |
| மழம் | இளம்பருவமான |
| விடை | எருதுகளை |
| அடர்த்து | நெருக்கியும், |
| குரவை | ராஸக்ரீடையிலே |
| கோத்து | (பெண்களோடு) கை கோத்தும், |
| வம்பு | பரிமளமானது |
| அவிழும் | பரவாநின்ற |
| மலர் | பூக்களுடைய [ளான |
| குழலாள் | மயிர்முடியையுடைய |

| | | | |
|---|---|---|---|
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி | உண்டு | அமுதுசெய்தும் |
| வைத்த | சேமித்துவைத்த | உகந்த | ஸந்தோஷித்த |
| தயிர் | தயிரையும் | மாயோன்கா | ஆஶ்சர்யபூ (ூ)தன் |
| வெண்ணெய் | நவநீதத்தையும் | ண்மின் | கிடீர். (அ) |

வ்யா.—எட்டாம்பாட்டு. (கும்பமிகு மதவேழம்) ஆனைகளோடும் மலைகளோடும் பொருது புண்பட்ட மஸ்தகத்தையுடைத்தாய், மதமுதிதமாயிருக்கிற குவலயாபீடமானது குட்டிச்சுவர்போலே தளர்ந்துவிழும்படி அதினுடையகொம்பை அநாயாஸேந பறித்து. (மழவிடையடர்த்து) பருவத்தால் இளைதாய், "காட்டுக்காட்டு" என்று ம்ருத்யுஸத்ருஶமாயிருக்கிற வ்ருஷபங்களேழையும் அழியச்செய்து. (குரவைகோத்து) பெண்களுடைய குரவைக்கூத்திலே தன்னையுமொருவனாக விட்டுக்கோத்து. (வம்பவிழுமித்யாதி) விரோதிவர்க்கத்தைத்தானே கைதொட்டுப்போக்கினவன். அநுகூலஸ்பர்சமுள்ள த்ரவ்யமொழியச் செல்லாமையாலே, பரிமள ப்ரசுரமான பூவையுடைத்தான குழலையுடைய யசோதைப் பிராட்டி வைத்த தயிரையும் வெண்ணெயையும் அமுதுசெய்து, அத்தாலே பெறுப்பேறு பெற்றானாக விருக்கிற ஆஶ்சர்யபூ(ூ)தன் கிடீர்.

(செம்பவள மரதகநன்முத்தம் காட்ட) அங்குண்டான கமுகுகளில் பாளைகள் முத்தைக்காட்ட, பசுங்காயானது மரகதத்தைக் காட்ட, பழங்காயானது பவளத்தைக்காட்ட, ஆக இப்படி மூன்றும் ஒருகாலே கண்டநுபவிக்கலாம்படி யிருப்பதாய், வாழைகளினுடைய மிகுதியால் வந்த அழகு குறைவற்று எங்குமொக்க ஸ்ப்ருஹணீயமாய், அரணாகப்போரும்படியான மதிளாலே சூழப்பட்ட பொழிலையுடைத்தாயிருக்கிற திருவழுந்தூர். ... ... ... ... (அ)

---

அரு—எட்டாம்பாட்டு. (கும்பமித்யாதி) கீழ்ப்பாட்டில், சொன்ன பிராட்டியிடத்தில் போலே சேதநரிடத்தில் அபிநிவிஷ்டனா யிருக்கைக்கு மூலமென்னென்ன, ஆஶ்ரித கரஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாதபடியானஸ்வபா(ூ)வன்கிடீரென்கிறாரென்று ஸங்கதி.

கும்பத்துக்கு மிகுதி யுத்த(்)வுடுக்க ளென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (ஆனையித்யாதி). (காட்டுக்காட்டு) என்று (பருவத்தால் இளைதாய்) என்று அந்வயித்துக்கொள்வது.

"பல-கதலி" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி யருளிச் செய்கிறார் (வாழைகளினுடைய மிகுதியாலே) என்று ... ... ... ... (அ)

மூ. — ஊடேறு கஞ்சனொடு மல்லும் வில்லும்
ஒண்கரியுமுருள் சகடுமுடையச்செற்ற
நீடேறுபெருவலித் தோளுடையவென்றி
நிலவுபுகழ் நேமியங்கை நெடியோன்காண்மின்
சேடேறு பொழில்தழுவு மெழில்கொள்வீதித்
திருவிழவில் மணியணிந்த திண்ணைதோறும்
ஆடேறு மலர்க் குழலார் பயிலும் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சேடுஏறு | இளமையேறி(மிக்கு) இருக்கிற | கஞ்சனொடு | கம்ஸனோடுகூட |
| பொழில் | சோலைகளாலே | மல்லும் | சாணூராதிமல்லவர்க் கழும் |
| தழுவும் | சுற்றும்வ்யாபதமாய்க் கொண்டு [ருக்கிற | வில்லும் | தநுஸ்ஸும் [மான) |
| எழில்கொள் | அழகை யுடைத்தாயி | ஒள் | அழகிய (பலிஷ்ட்ட |
| வீதி | திருவீதிகளில் | கரியும் | குவலயாபீடமும் |
| திருவிழவில் | உத்ஸவங்களிலே | உருள் | உருண்டு வாராநின்ற |
| மணி | ரத்நங்களாலே | சகடும் | சகடாஸுரனும் |
| அணிந்த | அலங்கரிக்கப்பட்ட | உடைய | நெருக்குண்ணும்படி |
| திண்ணைதோறும் | திண்ணைகளெங்கும், | செற்ற | (அவர்களை) அழித்த வனாய் |
| ஆடுஏறு | பரிமளம்ஏறி (மிக்கு) இருக்கிற | நீடுஏறு | மென்மேலும் அதிச யித்து வாராநின்ற |
| மலர் | புஷ்பங்களினாலலங்க ரிக்கப்பட்ட | பெருவலி | மிக்கபலத்தையுடைய |
| குழலார் | மயிர்முடியையுடைய பெண்கள் | தோள்உடைய | புஜங்களையுடையனாய் |
| பயிலும் | நெருங்கி வர்த்திக்கிற | வென்றி | ஜயமானது |
| செல்வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோ, | | நிலவு | (எப்போதும்) வர்த்தி யாநிற்கையாலுண் டான |
| ஊடு ஏறு | (மஞ்சத்தினுடைய) மத்யத்திலே ஏறி யிருக்கிற | புகழ் | கீர்த்தியையுடைய |
| | | நேமி | திருவாழியை |
| | | அம்கை | அழகிய திருக்கையி லேயுடையனான |
| | | நெடியோன் | ஸர்வாதிகன்கிடீர் (கூ) |

வ்யா. —ஒன்பதாம்பாட்டு. (ஊடேறு கஞ்சனொடு) தன்பயத் தாலே உயர்மஞ்சத்திலே போயேறி நிற்கிற கம்ஸனோடேகூட அவன் தனக்கு அரணாகநிறுத்தின மல்லவர்க்கழும். (வில்லும்) வில்விழவுக்

சென்று இட்டுவைத்த வில்லும் (ஒண்கரியும்) ஆனைகலிக்கதென்று மாதுலனும் கண்ணநீரை விழவிட்டிருப்பதாகக் கோலின குவலயாபீடமும். (உருள்சகடம்) அஸுராவேசத்தாலே தொட்டில் பருவத்திலே மேலே வந்து விழக்கோலின சகடமும். (உடைபச்செற்ற) இவற்றையெல்லா மொருகாலே அழியச் செய்தாப்போலே தோற்றுகிறதாய்த்து இவர்க்கு அநுஸந்தாநத்தில் வைசத்ய(ஸ்ரீ)த்தாலே. (நீடேறு பெருவலித் தோளுடையவித்யாதி) நாள்செல்ல நாள்செல்ல மிடுக்கேறிவாராநிற்பதான தோளையுடையனும், விஜயமானது எப்போது மொக்கவர்த்தியாநின்ற புகழையுடைத்தான திருவாழியைக் கையிலேயுடைய ஸர்வாதிகன் கிடீர்.

(சேடேறு பொழில்) இளமைமிக்குவருகிற பொழிலாலே தழுவப்பட்டு, அத்தாலே எழில்மிக்கிருக்கிற திருவீதியில் திருநாள்களில் ரத்நங்களாலே அழுத்தப்பட்ட திண்ணைகள்தோறும், ஆடுகைக்காக ஏறின புஷ்பாதிகளாலே அலங்க்ருதமான குழலையுடைய ஸ்த்ரீகளுடைய நெருக்கத்தால்வந்த திரவதிக ஸம்பத்தையுடைய திருவழுந்தூரிலே. "ஆடு" என்று - பரிமளம். பரிமளம்மிக்க மலர்க்குழல் (கூ)

அரு —ஒன்பதாம்பாட்டு. (ஊடேறித்யாதி) கீழ்ப்பாட்டில் ஆஸ்ரிதகரஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாதபடியான வ்யாமோஹம் சொல்லிற்று; அந்த வ்யாமோஹகார்யமான ஆஸ்ரிதவிரோதி நிரஸநம் பண்ணினமையைப் பலபடி உபதேசித்து நேமியைப்போலேஉங்களையும் கைவிடானென்கிறு ரென்று ஸங்கதி.

"ஊடு" என்று மத்த்ய(ஸ்ரீ)மாய், மஞ்சத்தின் மத்த்யமாக்கி யருளிச் செய்கிருர் (தன்னித்யாதி). ... ... ... ... ... (கூ)

மூ. — பன்றியாய் மீனுகி யரியாய்பாரைப்
படைத்துக்காத்துண்டு மிழ்ந்த பரமன்றன்னை
அன்றமரர்க்கதிபதியு மயனும்சேயும்
அடிபணியவணியழுந்தூர் நின்றகோவை
கன்றிநெடுவேல் வலவனுலிநாடன்
கலிகன்றி யொலிசெய்த வின்பப்பாடல்
ஒன்றினெடு நான்குமோரைந்தும் வல்லார்
ஒலிகடல் சூழுலகாளும்பர்தாமே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| பன்றியாய் | மஹாவராஹமமாயும் |
| மீனாய் | மத்ஸ்யமாயும் |
| அரியாய் | நரஸிம்ஹமமாயும் அவ |
| பாரை | பூமியை [தரித்து |
| படைத்து | ஸ்ருஷ்டித்து |
| காத்து | ரக்ஷித்து |
| உண்டு | (ப்ரளயத்தில்) அமுது செய்து |
| உமிழ்ந்த | (ஸ்ருஷ்டி காலத்தில்) வெளிப் படுத்தின |
| பரமன்தன்னை | ஸர்வாதிகனாய், |
| அன்று | அக்காலத்தில் |
| அமரர்க்கு | தேவர்களுக்கு |
| அதிபதியும் | ராஜாவான இந்த்ர |
| அயனும் | ப்ரஹ்மாவும் [னும் |
| சேயும் | ருத்ரனும் |
| அடிபணிய | திருவடிகளிலே விழுந்தாஶ்ரயிக்கும் படியாக, |
| அணி | ஸம்ஸாரத்துக்கு ஆபரணமாயுள்ள |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் |
| நின்ற | உகப்புடனெழுந்தருளியிருக்கிற |

| பதம். | உரை. |
|---|---|
| கோவை | நித்யஸூரிகளுக்கு (நிர்வாஹகனை) ஸர்வேஶ்வரன் விஷயமாக, |
| கன்றி | கறையையுடைத்தாய் |
| நெடு | தீர்க்கமாயுள்ள |
| வேல் | வேலாயுதத்தை |
| வலவன் | பிடிக்கவல்லராய், |
| ஆலிநாடன் | திருவாலி நாட்டுக்கு நிர்வாஹகரான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| ஒலிசெய்த | ஒலியுடைத்தாம்படி [ய் அருளிச் செய்ததா |
| இன்பம் | மதுரமாய், [டின |
| ஒன்றினொடு | ஒருபாசுரத்தோடு கூ |
| நாலும் | நாலுபாசுரங்களும் |
| ஓர் ஐந்தும் | (அதன்பின்) ஒரு ஐந்து பாசுரங்களும் |
| பாடல் | (ஆகியபத்து) பாசுரங்களும் [கள், |
| வல்லார் | அப்யஸிக்க வல்லவர் |
| ஒலி | கோ(ஷ)ஷியாநின்ற |
| கடல்சூழ் | ஸமுத்ரத்தாலே சூழ |
| உலகு | லோகங்களை [ப்பட்ட |
| ஆளும் | பரிபாலநம் பண்ண வல்லரான |
| உம்பர்தாம் | தேவதைகளாவர்கள் |

வ்யா. —பத்தாம்பாட்டு. (பன்றியாயித்யாதி) ஆஶ்ரிதரக்ஷணம் ஒரு தலையானால் தன்னைப்பேணாமையும் ரக்ஷிக்குமவனாய்த்து. (பாரையித்யாதி). பூமியை ஸ்ருஷ்டித்து, பன்றியா யித்யாதிகளாலே (காத்து) அத்தை ரக்ஷித்துத் திரியவும் ப்ரளயம்வர, வயிற்றிலேவைத்துத், திரிய வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, இப்படி ஸர்வவித ரக்ஷணங்களையும் பண்ணுமிடத்தில் தன்னை எண்ணினால் பின்னை ஒருவரையும் எண்ணவொண்ணாதிருக்கிற ஸர்வாதிகனை. (அன்றமரர்க்கித்யாதி) அதிபதிகளான ப்ரஹ்மாதிகளும்வந்து

ஆஶ்ரயித்து. தந்தாமுடைய அபிமதங்கள் பெற்றுப் போம்படியாக வந்துநிற்கிற இடமாய்த்து. தேவர்களுக்கெல்லாம் நியாமகனுயிருக்கிற இந்த்ரனும், இவ்வருகுள்ளாரிற் காட்டில் விஜாதீயமான ஜந்மத்தையுடைய ப்ரஹ்மாவும், அவன்மகனான ருத்ரனும் (அடி பணிய) திருவடிகளிலே விழுந்து ஆஶ்ரயிக்க, திருவழுந்தூரிலே நின்றருளின ஸர்வாதிகனானவனே. (கன்றிநெடுவேல் ... நிரஸநம்பண்ணிக் கறைகழுற்ற அவஸரமின்றிக்கே ... (க) "மஹாதநு:-மஹாத்ரு:" என்னுமாபோலே, ஒருவரால் ... வொண்ணாதபடி நெடிதாயிருந்துள்ள வேலைக்கை ... திருவாலிநாட்டையுடையராயிருந்துள்ள ஆழ்வார், ... தாம்படி அருளிச்செய்த இனிய பாடலான இப்பாசுரம் வல்லார். "ஒன்றினொடு நான்குமோரைந்தும்" என்று தாம் சாத்து அநுபவித்த ப்ரகாரமிருக்கிறபடி. இவற்றை அப்யஸிக்க வல்லார்க்கு, ப்ரஹ்மாதிகளுடைய பதமுண்டாக முன்னந்தட்டில்லை. "திருமங்கையாழ்வார்தாம் பாகவத சேஷத்வமாக்குகைக்கு உடலாயிருக்கையாலே ஐஶ்வர்யத்தையும் ஆதரித்தருளினார்" என்றருளிச்செய்வர். (௧0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அரு. —பத்தாம்பாட்டு (பன்றியாயித்யாதி). (தாம்சேர்த்தநுபவித்த ப்ரகாரம்) என்றது - முதற்பாட்டில், அநந்தாவதாரகந்தமான க்ஷீரார்ணவசாயியை ஒருபாட்டிலும், அங்கு நின்றும் திர்யக்காய் அவதரித்தபடியை "முன்னிவ்வுலகு" என்கிற இரண்டாம்பாட்டிலும், "செலம்புமுதல்" என்கிற நாலாம்பாட்டிலும், "சினமேவும்" என்கிற அஞ்சாம்பாட்டிலும், "பன்றியாய்" என்கிற பத்தாம்பாட்டிலுமாக நாலுபாட்டிலும், ஒருப்ரகாரமாகவும், மற்றை அஞ்சுபாட்டிலும் கஜேந்த்ரரக்ஷணார்த்தமாகவும் வாமந ராம க்ருஷ்ண ரூபேணவும் வந்த வவற்றுக்கு ஸௌசீல்யும் திருவுள்ளத்திலொட்டி அநுபவித்தமை தோற்ற இங்ஙனருளிச்செய்தாரென்றபடி. ... ... ... ... ... . ... . (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்தில் எட்டாந்திருமோழி முடிந்தது.

---

(க) ரா-யு-௬00-௧௧.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஏழாம்பத்து ஒன்பதாந்திருமொழி

## கள்ளம்மனம் ப்ரவேசம்.



வ்யா.—கீழ்த்திருமொழியிலே, அவனே கடிகோள் ஆஶ்ரயணீய னென்றார்; ஆனால்நீர் எங்களைச் செய்யச்சொல்லுகிற தென்னென்ன; பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய வார்த்தையைக்கேட்டு அநர்த்தப்பட்டுப் போகாதே ஆஶ்ரயணீயனானவன் திருவடிகளை ஆஶ்ரயித்து உஜ்ஜீவித்துப்போகப் பாருங்கோளென்கிறார். ... ... ... ... *

அரு.—கள்ளம் மனம்ப்ரவேசம். (நீரெங்களைச் செய்யச் சொல்லுகிற தென்னென்ன) என்றது-எங்களுக்கும் வேறுசிலர் உபதேசிக்கக்கேட்டவையுண்டாயிருக்க நீரெங்களைச் செய்யச் சொல்லுகிற தென்னென்ன என்றபடி. *

மூ. — கள்ளம்மனம் விள்ளும்வகை கருதிக்கழல் தொழுவீர்
வெள்ளம் முதுபரவைத்திரை விரியக்கரையெங்கும்
தெள்ளும் மணிதிகழும் சிறுபுலியூர்ச் சலசயனத்
துள்ளும் எனதுள்ளத்துள்ளு முறைவாரையுள்ளீரே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கள்ளம் | ஆத்மாபஹார மாகிற க்ருத்ரிமத்தையுடைய | மணி | ரத்நங்களானவை |
| மனம் | மநஸ்ஸானது | திகழும் | விளங்காநின்ற |
| விள்ளும்வகை | (அவ்வாத்மாபஹாரத்தில் நின்றும்) வேறுபடும் ப்ரகாரத் | சிறுபுலியூர் | சிறுபுலியூ ரென்னும் திருநாமத்தையுடைத்தாய் |
| கருதி | ஆசைப்பட்டு | சலசயனத்துள்ளும் | ஜலசாயியான எம்பெருமான் பள்ளிகொண்டிருக்கிற சலசயநமென்னும் திவ்யதேசத்திலுள்ளும் |
| கழல் | (ஸர்வேஶ்வரன்)திருவடிகளை | | |
| தொழுவீர் | ஆஶ்ரயிக்க வேண்டியிருக்கிறவர்களே! | | |
| முது | அநாதியான | | |
| பரவை | ஸமுத்ரத்திலுண்டான | எனது | என்னுடைய |
| திரை | அலைகளிலுண்டான | உள்ளத்துள்ளும் | ஹ்ருதயத்திலுள்ளும் |
| வெள்ளம் | ப்ரவாஹமானது | | |
| கரை எங்கும் | தீரங்களிலே | உறைவாரை | நித்யவாஸம்பண்ணும் ஸர்வேஶ்வரனை |
| விரிய | பரவாநிற்க, | | |
| தெள்ளும் | (அவ்வலைகளினாலே) கொழிக்கப்பட்ட | உள்ளீர் | த்யாநியுங்கோள் .(க) |

வ்யா. —முதற்பாட்டு. (கள்ளம்மனம் விள்ளும் வகைக்கருதி) (க) "யதாஹி சோரஸ் ஸததாஹி புத்தஃ" என்கிறபடியே, வேதார்த்தாபலாபம் பண்ணுவார் - சோரரிறே; அதுக்குமேலே அவனுடையதான ஆத்மாபஹாரம் பண்ணிப்போரு கிறார் சிலரிறே. க்ருத்ரிமத்தைப்பண்ணி வர்த்திக்கிறஹ்ருதயம், அதில்நின்றும் வேறுபடும் ப்ரகாரத்தை மநோரதித்து, அவன் திரு வடிகளை ஆஶ்ரயிக்க வேண்டியிருப்பீர்! (வெள்ளம் முதுபரவைத் திரைவிரிய) பழையதானகடல்திரைகளாலுண்டான வெள்ளமானது கரையெங்கும் போந்தேற.

(தெள்ளும் மணிதிகழும்) நினைவின்றிக்கேயிருக்கக் கடலேறி வடிந்தபடியாலே அங்குண்டான ரத்நாதிகள் விளங்காநின்றுள்ள. (சிறுபுலியூர்ச் சலசயனத்துள்ளுமென துள்ளத் துள்ளுமுறை வாரையுள்ளீரே) உகந்தருளின நிலங்களும் இவர் திருவுள்ளமும் ஒக்கவாய்த்து அவன் விரும்பியிருப்பது. இப்படியிருக்கையாலே ஆஶ்ரயிப்பார்க்கு ஆஶ்ரயணீயஸ்த்தாநமிவையிரண்டுமாய்த்து. "சல சயனன்" என்றது - ஜலசயநனென்றபடியாய், அது அவனுக்குத் திருநாமமாய், ஜலசயநன் வர்த்திக்கிறவிடம் சலசயநமென்று ஊருக் குப்பேராகிறது. ... ... ... ... ... ... (க)

அரு.— முதற்பாட்டு. (கள்ளமித்யாதி) மனத்துக்கு கள்ளமாவது - பௌத்தாதி மதத்தைப் பற்றி வர்த்திக்கை என்று விவக்ஷித்து, அவர்கள் கள்ளரோ வென்னவருளிச்செய்கிறார (யதாஹிசோர இத்யாதி). (சிலரிறே) என்றது-குத்ருஷ்டிகளை. சப்தார்த்தம் (க்ருத்ரிமத்தையித்யாதி). (க்ருத்ரி மத்தை) என்றது-வேதாபஹாரத்தையும், ஆத்மாபஹாரத்தையும் [முதுப ரவைத்திரை-வெள்ளம்-கரைஎங்கும்-விரிய] என்றந்வயித்தருளிச் செய்கி றார் (பழையதானவித்யாதி).

கரையெங்கும் விரிய மணிதிகழும் என்னவமைந்திருக்க "தெள்ளும்" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (நினைவித்யாதி). "நி னைவு" என்றது-ரத்நஸம்பாதநார்த்தமான நினைவு என்றபடி. ஈடுபாடாக த்தாத்பர்ய மருளிச் செய்கிறார் (உகந்தருளின வித்யாதி). ஆறாம்பாட்டில் "சலசயநம் தொழும்" என்று பகவத்பரமாகவிருக்கவேண்டியிருக்க இங்கு திவ்யதேசத்துக்குப் பேரானபடி எங்ஙனே யென்ன வருளிச் செய்கிறார் (சலசயனனென்றித்யாதி). மன்னக்களுமுறி, சலசயநனென்று திருநாம மாய்த் தென்று திருவுள்ளம். (க)

(க)

மூ. — தெருவில்திரி சிறுநோன்பியர் செஞ்சோற்றொடுகஞ்சி
மருவிப் பிரிந்தவர் வாய்மொழி மதியாது வந்தடைவீர்
திருவில்பொலி மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்து
உருவக் குறளடிக ளடியுணர்மி னுணர்வீரே. (உ)

| பதம். | உரை | பதம் | உரை. |
|---|---|---|---|
| தெருவில் | வீதிகள்தோறும் | மதியாது | ஆதரியாமல் |
| திரி | ஸஞ்சரிப்பவராய், | வந்து | அவர்களைவிட்டுவந்து |
| சிறு | அதிக்ஷுத்ரமான | அடைவீர் | ஆஶ்ரயிக்கப் பார்க்கி |
| நோன்பியர் | வ்ரதத்தையுடைய | | றவர்களே! |
| | ராய், [அழகிதான | திருவில் | ஸம்பத்தினால் |
| செம் | (தயிரமுதமியவறுல்) | பொலி | ஸம்ருத்தரான |
| சோற்றொடு | சோற்றோடுகூட | மறையோர் | ப்ராஹ்மணர் வர்த்திக் |
| கஞ்சி | (குடிக்க வேண்டும்) | | கிற |
| | கஞ்சியை (அந்ந | சிறுபுலியூர்ச் சலசயனத்து, | [ய |
| | ஸத்தை) [து) | உருவ | அழகியவடிவையுடை |
| மருவி | ஆசைப்பட்டு (புஜித | குறள் | வாமநனை |
| பிரிந்தவர் | ஶாக்யர்களிடத்தில் | அடிகள் | ஸ்வாமியினுடைய |
| | நின்றும் வேறுப | அடி | திருவடிகளை |
| | ட்ட ஜைநாதிகள் | உணர்வீர் | தயாநிக்கப் பார்க்கிறீர்க |
| வாய்மொழி | வாயினால் சொல்லப் | | ளாகில் |
| | பட்ட சொல்லை | உணர்மின் | ச்யாநியுங்கோள். (உ) |

வ்யா. — இரண்டாம்பாட்டு. (தெருவில்திரி சிறுநோன்பியர்) அஸந்ஸ்ய வேஷத்தையுடையராய்க்கொண்டு தெருவுகளிலே ஸஞ்சரிக்கிற அவைதிகமான வ்ருத்தத்தையுடையராய். (செஞ்சோற்றொடு கஞ்சி மருவிப்பிரிந்தவர் வாய்மொழி மதியாது வந்தடைவீர்) (க) "தண்டயிரினலத் திரளைமிடற்றிடை நெருக்குவான்" என்றும், மனந்திரியாக்கஞ்சி என்று முண்டு அவர்கள் புஜித்து வாஸனைபண்ணிப் போருவது. ஆக இப்படி அவைதிகமான அநுஷ்டாநத்தையுடையராய், வைதிகமர்யாதையை அகன்று திரிகிறவர்களுடைய வாயில் வார்த்தையை அநாதரித்து வந்தாஶ்ரயிப்பீர்!

(திருவில்பொலி மறையோர்) ஐஶ்வர்யம் குறைவற்றிருக்கிற ப்ராஹ்மணர்வர்த்திக்கிற (சிறுபுலியூர்ச் சலசயனத்து) அழகியதாய், கண்டார்க்குமேல் விழவேண்டும்படியான வடிவையுடைய ஸ்ரீவாமநனான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளை ஸ்மரியுங்கோள், அதுஸந்

(க) உ-க-எ.

திக்கப்பார்க்கிறீங்கள். (உணர்வீர்) அநுஸந்தாநத்தை யுடையீர்! தெருவில் திரிசிறுநோன்பியர் செஞ்சோற்றொடுகஞ்சிமருவிப்பிரிந்தவருடைய வாயில் வார்த்தையை அநாதரியுங்கோள். திருவில் பொலிமறையோர் சிறுபுலியூர்ச்சலசயனத்தை வந்தாஶ்ரயிக்கப் பாருங்கோள். உருவக்குறளடிகளடியையுணருங்கோள்.'' என்றுக்ரியை.(உ)

---

அந —இரண்டாம்பாட்டு. (தெருவிலித்யாதி) கீழ்ப்பாட்டில், பௌத்த(த்)திமதத்தைக் கள்ளமாகச் சொல்லுகிறபடி யென்னென்ன, அவர்கள் கள்ளத்தை வெளியிடுகிறாரென்று ஸங்கதி.

சிறுமை-நிகர்ஷமாய், அருளிச்செய்கிறார் (அவைதிகமான) என்று. அதாவது-பூப்ர(ப்ரு)மணம், வ்ரதார்த்தமாகத் தரையில் புரளுகை முதலானவை. சோற்றுக்குச் செம்மையாவது-நன்மையாய், தயிர்த்திரளை என்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (தண்டயிரித்யாதி). (மணந்திரியாக்கஞ்சி) என்றது மநஸ்ஸு கலங்காதே, தா(த்)ரணார்த்தமாகக் குடிக்கும் கஞ்சி.

கீழே ஒருக்ரியையாக வருளிச்செய்து, மூன்றுக்ரியையாக்கி அருளிச்செய்கிறார் (உணர்வீரித்யாதி). "மதியாது" என்றது-மதியாதிருங்கோள் என்றுயருளிச் செய்கிறார் (அநாதரியுங்கோள்) என்று. ... ... (உ)

௩. — பறையும் வினைதொழுதுய்மின் நீர்பணியும் சிறுதொண்டீர்
அறையும்புனலொருபால் வயலொருபால் பொழிலொருபால்
சிறைவண்டினமறையும் சிறுபுலியூர்ச் சலசயனத்
துறையு மிறையடியல்ல தொன்றிறையு மறியேனே. (௩)

| பதம். | உரை. |
|---|---|
| வினை | பாபங்களானவை |
| பறையும் | பறந்துபோம், |
| நீர் | நீங்கள் |
| தொழுது | (அவனை) ஆஸ்ரயித்து |
| உய்மின் | உஜ்ஜீவியுங்கள், [லே |
| சிறு | க்ஷுத்ர விஷயங்களி |
| தொண்டீர் | சபலரானவர்களே! (அதைவிட்டு) |
| பணியும் | (அவனை) ஆஸ்ரயிக்கப்பாருங்கள்; |
| ஒரு பால் | ஒருபக்கம் |
| புனல் | ஜலமானது |
| அறையும் | அலையெறியுமதாய், |
| ஒருபால் | ஒருபக்கம் [ய் |
| வயல் | கழனிகளை யுடையதா |

| பதம். | உரை. |
|---|---|
| ஒருபால் | ஒருபக்கம் [தாய் |
| பொழில் | சோலைகளையுடைய |
| சிறை | இறகுகளையுடைய |
| வண்டு இனம் | வண்டுக்கூட்டங்கள் |
| அறையும் | (எங்கும்) சப்தியாநிற்பதான |
| | சிறுபுலியூர்ச்சலசயனத்து [ற |
| உறையும் | பொருந்தி வர்த்திக்கி |
| இறை | ஸ்வாமியினுடைய |
| அடியல்லது | திருவடிகளையொழிய |
| ஒன்று | வேறொன்றை |
| இறையும் | சிறிதும் |
| அறியேன் | அறியமாட்டேன். (௩) |

வ்யா:—மூன்றாம்பாட்டு. கண்டிகோளே நாமிருக்கிறபடி, நீங்களும் இப்படியேயிருக்கப் பாருங்கோளென்கிறார்.

(பறையும்வினை) அநாதிகாலம்பண்ணின பாபங்களடங்கலும் பறந்துபோம். தொழுது உஜ்ஜீவியுங்கோள். (பணியும் சிறுதொண்டீர்) அப்ராப்த விஷயங்களிலே தொண்டுபட்டிருக்கிற நீங்கள் விழுந்தாஶ்ரயியுங்கோள். அங்ஙனன்றிக்கே, அந்தரங்க கிங்கராக வேண்டியிருப்பீர்! (பணிமின்) ஆஶ்ரயியுங்கோளென்னுமாம்.

(அறையுமித்யாதி) அவ்வூர்தான், ஓரருகு நீர் வெள்ளமறையாநிற்கும், ஓரருகு பொழிலாயிருக்கும், ஓரருகு வயலாயிருக்கும் இவை மூன்றிடத்திலுமொக்க அறையாநின்றுள்ள சிறகையுடைத்தான வண்டுகளினுடைய ஸமூஹமானது அறைகிற சிறுபுலியூர்ச்சலசயனத்திலே நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளையொழிய வேறொன்றை த்யாஜ்யதயாவாகிலும் அறிவதொன்றில்லை. (௩)

---

அரு.—மூன்றாம்பாட்டு. (பறையுமித்யாதி) கள்ளமனத்தைவிட்டு இருந்தவருண்டோ வென்னும் சங்கையிலே அருளிச்செய்கிறார் என்று ஸங்கதி திருவுள்ளம்பற்றி அவதாரிகையருளிச்செய்கிறார் (கண்டிகோளேயித்யாதி).

சிறுமை-நிகர்ஷமாய், தாத்பர்யமருளிச் செய்கிறார் (அப்ராப்தேத்யாதி). சிறுமை-ஸூக்ஷ்மதையாய், அந்தரங்க கைங்கர்யம் செய்யவேண்டியிருப்பீர் என்று அர்த்தாந்தரம் (அங்ஙனன்றிக்கேயித்யாதி).

(அறையாநிற்கும்) அலைமோதாநிற்கும். "சிறை" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச் செய்கிறார் (அறையாநின்றுள்ள) என்றது. அடித்துக்கொள்ளாநின்றுள்ள என்றபடி. (அறைகிற) என்றது - பாடுகிற என்றபடி. (இறையும்) அல்பாகாரத்தையும் என்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் (த்யாஜ்யதயாவாகிலும்) என்று. ... ... ... ... ... (௩)

மூ. — வானார் மதிபொதியும் சடைமழுவாளியொடொருபால்
தானாகிய தலைவனவனமரர்க்கதிபதியாம்
தேனார் பொழில்தழுவும் சிறுபுலியூர்ச் சலசயனத்
தானாயனதடியல்ல தொன்றறியேனடியேனே. (௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| ஒருபால் | (திருமேனியின்) ஏகதேசத்தில் (வர்த்திக்குமவனாய்), | ஆர் | நிறைந்திருக்கிற |
| | | மதி | சந்த்ரனானவன் |
| | | பொதியும் | அடங்கியிருக்கிற |
| வான் | ஆகாசத்திலே | சடை | ஜடையையுடையனும், |

| | | | |
|---|---|---|---|
| மழுவாளியொடு | மழுவை யுடையனான ருத்ரனோடுகூட | தேன் ஆர் | தேன் மிக்கிருந்துள்ள |
| அமரர்க்கு அதிபதி | தேவேந்த்ரனும் | பொழில் | சோலைகளாலே |
| தான் ஆகிய | தான் என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி அவர்களை விபூதியாக வுடையனான | தழுவும் | வ்யாப்தமான |
| | | சிறுபுலியூர்ச்சலசயனத்து ஆயனது | எழுந்தருளி யிருக்கும் க்ருஷ்ணனுடைய |
| தலைவனும் | ஸர்வாதிகனாய், | அடியல்லது | திருவடிகளையொழிய |
| அவன் | அப்படி ஸௌசீல்யனாக ப்ரஸித்தனாய், | ஒன்று | மற்றொன்றையும் |
| | | அடியேன் | தாஸபூதனான நான் |
| | | அறியேன் | (ரக்ஷகமாக) அறியமாட்டேன். (௪) |

வ்யா.—நாலாம்பாட்டு. (வானோர்மதி) "தம்மை அவர்கள் ஆப்தராக நினைத்திருந்தபடியாலே தாம் சொல்லிற்றுக்கேட்பர்கள்" என்று பார்த்து, தம்படியை அவர்களுக்கு அறிவித்து "நீங்களும் என்னைப் போலே அவனைக்கொண்டு உங்கள் விரோதிகளைப்போக்கிக் கொள்ளப் பாருங்கோள்" என்கிறார்.

(வானோர்மதி) பரந்த ஆகாசத்துக்கெல்லாம் தானே போரும்படியிருக்கிற சந்த்ரனை தன்னுடையிலேகதேசத்திலே யடக்கி, தமப்பன், பிறரென்றுபாராதே கொல்லுகைக்குப் பரிகரமான மழுவையுடைய ருத்ரனுக்கு தன் திருமேனியிலே இடங்கொடுத்துக்கொடுநிற்கிற சீலத்தையுடையஸர்வாதிகன். (அவனமரர்க்கதிபதியாம்) தேவர்களுக்குநிர்வாஹகனான இந்த்ரனும், தானென்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படியிருக்கிறவன்.

(தேனார்பொழிலித்யாதி) தேன்பாருத பொழிலாலே அணையப்பட்டிருந்துள்ள. (சிறுபுலியூர்ச் சலசயனத்தாயன்) க்ருஷ்ணவதாரம் தீர்த்தம் ப்ரஸாதித்ததென்று வெறுக்கவேண்டாதபடி பிற்பாடர்க்கும் அநுபவிக்கலாம்படி, அவ்வவதாரத்தின்படியே வந்து சாய்ந்தவன். அவன் திருவடிகளல்லது வேறொன்றையுமறியேன்; அதுக்கடி அவனுக்கே சேஷபூதனாகையாலே. ... ... ... (௪)

---

அரு.—நாலாம்பாட்டு. (வானோர்மதியாதி) உம்மைப்போலே நாங்கள் வேறொன்றையு மறியாதிருந்தபோது, உம்மைப்போலே எங்களையுமங்கீகரித்து விரோதியைப் போக்குவமோவென்ன; இவர்கள் ஸ்வநிகர்ஷாநுஸந்தாநத்தாலும், தம்முடைய வைலக்ஷண்யாநுஸந்தாநத்தாலும் பிறந்த

ஆப்ததாஜ்ஞாகத்தைக்கண்டு, அவனுடைய ஸௌஶீல்யத்தை உபதேசித்து, என்னைப்போலே உங்களையும் அங்கீகரிப்பன், ஆனபின்பு அவனடியாக விரோதியைப் போக்கிக்கொள்ளப் பாருங்கோளென்கிறாரென்று இரண்டு பாட்டுக்கும் ஏகதாத்பர்யமாக அவதாரிகை அருளிச்செய்கிறார் (தம்மை அவர்களித்யாதி). (அவனைக்கொண்டு) என்றது - ஸுஶீலனான அவனைக் கொண்டு என்றபடி.

[வானோரித்யாதி, தலைவன்-அமரர்க்கதிபதியாம்; அவன், தேனாரித்யாதி, ஆனயன் ; அவனடியல்லா லொன்றறியேனடியேனே] என்றந்வயித்துக் கொள்வது. ... ... ... ... ... ... ... (சு)

மூ. — நந்தா நெடுநரகத்திடை நணுகாவகை நாளும்
எந்தா யெனவிமையோர் தொழுதேத்து மிடமெறிநீர்ச்
செந்தாமரை மலரும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
அந்தாமரை யடியா யுனதடியேற் கருள்புரியே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இமையோர் | தேவர்கள் | தாமரைஅடி | தாமரை மலர்போன் |
| நாளும் | திநந்தோறும் | யாய் | ற திருவடிகளை யு |
| எந்தாய்என | என்ஸ்வாமியே! என் | | டையவனே! |
| | று சொல்லி | நந்தா | நசியாததாய் |
| தொழுது | ஆஶ்ரயித்து [கின்ற | நெடு | தீர்க்கமாயுள்ள |
| ஏத்தும் | ஸ்தோத்ரம் பண்ணு | நரகத்திடை | நரகத்தோடொத்த |
| இடம் | தேசமாய், | | ஸம்ஸாரத்தின் நடு |
| எறிநீர் | அலைமோதாநின்ற நீர் | | வே [(பிறவாதபடி) |
| | நிலைகளிலே [னது | நணுகாவகை | (இனி) கிட்டாதபடி |
| செந்தாமரை | செந்தாமரைப் பூவா | உனது அடி | உன்னுடையதாஸபூத |
| மலரும் | விகஸியாநின்ற | யேற்கு | னான என்விஷயத் |
| சிறுபுலியூர்ச் சலசயனத்து | | | தில் |
| அம் | அழகிய | அருள்புரி | க்ருபைபண்ணாய்.(ரு) |

வ்யா. —அஞ்சாம்பாட்டு. (நந்தா நெடுநரகத்திடை) ஒருகாலும் விட்டுப்பற்றக்கடவதல்லாத நெடுநரகமான ஸம்ஸாரத்துக்குள்ளே போய்ப்புகாதபடி. (நாளுமித்யாதி) ப்ரஹ்மாதிகள் காலமெல்லாம் நின்று "என்னாயனே" என்று தொழுது ஸ்தோத்ரம் பண்ணுகிற தேசம்.

(எறிநீரித்யாதி) மிக்கஜலத்தையுடைத்தான பொய்கைகளிலே, அந்த நீர்ச்செறிவாலே தாமரைகள் போய்அலருகிற சிறுபுலியூர்ச்சல

சயனத்திலே (அந்தாமரையடியாய்) செவ்விப்பூப்போலேயிருக்கிற திருவடிகளையுடையவனே! (உனதடியேற்கருள்புரியே) அல்லாதார் செய்தபடிசெய்ய; அநந்யகதியான என்பக்கலிலே உன்னுடைய கண்ணழிவற்ற கருணையைப் பண்ணியருளவேணும். ... ... (௫)

---

அரு —அஞ்சாம்பாட்டு. (நந்தா நெடுநரகமித்யாதி) கீழ்நாலுபாட்டிலும் பரோபதேசம்பண்ண திருந்தினபேரும் திருந்தாதபேருமாயிருக்கையாலே ஸம்ஸாரத்திலே அவர்கள்படுகிறபாட்டை உபதேசிக்கக்கேட்கிலி, அதுதமக்கு பயாவஹமாயிருக்கையாலே சடக்கென பரோபதேசத்தை விட்டு மேலஞ்சுபாட்டாலே எம்பெருமானைச்சரணம்புகுருகையை அர்த்திக்கிறாரென்று ஸங்கதி.

[இமையோர் - நாளும்] என்றநுவதித்து அருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாதிகளித்யாதி).

"அம்" என்று அழகாய், பலிதம் (செவ்விப்பூப்போலே யித்யாதி). கீழ்ஸங்கதி தன்னை ஸப்புரிப்பிக்கிறார் (அல்லாதாரித்யாதி). ... . (௫)

மூ. — முழுநீலமு மலராம்பலு மரவிந்தமும விரவி
கழுநீரொடு மடவாரவர் கண்வாய் முகமலரும்
செழுநீர் வயல்தழுவும் சிறுபுலியூர்ச் சலசயனம்
தொழுநீர்மை யதுடையாரடி தொழுவார் துயரிலரே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முழுநீலமும் | (வர்ணாந்தரம் கலசாமல்) முழுக்க நீலவாணமாயிருக்கிற பூவும் | நீர் | ஜலமானது |
| அலர் | விகஸியாநின்ற | வயல் | கழனிகளை [கிற |
| ஆம்பலும் | அரக்காம்பலும் | தழுவும் | சூழ்ந்து கொண்டிருக் |
| அரவிந்தமும் | தாமரைப்பூவும் | சிறுபுலியூர் | சிறுபுலியூரிலெழுந்தருளியிருக்கிற |
| கழுநீரொடு | செங்கழுநீரும் | சலசயனம் | ஜலசயனனென்கிற எம்பெருமானை |
| விரவி | சேர்ந்து [ளுடைய | தொழுமது | ஆஸ்ரயிக்கையையே |
| மடவாரவர் | (அங்குள்ள) பெண்க | நீர்மையுடையார் | ஸ்வபாவமாகவுடையவர்களுடைய |
| கண் | கண்கள்போலவும் | அடி | ஸ்ரீபாதங்களை |
| வாய் | அதரம்போலவும் | தொழுவார் | ஆஸ்ரயிக்குமவர்கள் |
| முகம் | முகம்போலவும் | துயர் இலர் | துக்கத்தை யடையார்கள். (௬) |
| அலரும் | விகஸியாநின்ற, | | |
| செழு | ஸம்ருத்தமான | | |

வ்யா. —ஆறாம்பாட்டு. (முழுநீலமும்) எங்குமொக்கக் கறுத்திருக்கிற நீலமும், அரக்காம்பலும், தாமரையும், செங்கழுநீரும்

இவைதன்னிலேகூடி அங்குண்டான ஸ்த்ரீகளுடைய கண்ணையும் வாயையும் முகத்தையும் காட்டாநிற்கிற.

(செழுநீர் வயல்தழுவும்) அழகிய ஜலமானது, வயலை அணைந்திருக்கிற சிறுபுலியூர்ச்சலசயனத்தைத்தொழுகையே ஸ்வபா(வ)வமாகவுடையாருடைய திருவடிகளைத் தொழுவார்க்கு துக்கங்களில்லா. அவைதன்னடையே விட்டுப்போம். ... ... ... ... (கா)

அ ந.—ஆறாம்பாட்டு. (முழுநீலமித்யாதி) கீழ்ப்பாட்டிலே "அருள்புரியே" என்னச்செய்தேயும் சடக்கென அருள்புரியக்காணாமையாலே, அவனை விட்டு அடியாரளவும் போய் தேறிநிற்கிறாரென்று ஸங்கதி.

"விரவி" என்றதினர்த்தம் "கூடி" என்றது.

"சிறுபுலியூர்ச் சலசயனத்தை" என்றது – மன்னக்களுழறி வருகையாலே சிறுபுலியூர்ச் சலசயநனை யென்றபடி. அவனையன்றிக்கே அவனைத் தொழுவாரையிறே இங்குத்தாம்பற்றுகிறது; ஆகையாலே இங்ஙனே நிர்வஹிக்க வடுப்பது. ... ... ... ... ... ... ... (கா)

மூ. — சேயோங்கு தண்திருமாலிருஞ்சோலைமலை யுறையும்
மாயாவெனக்குரையா யிதுமறைநான்கினுளாயோ
தீயோம்புகை மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்
தாயோ வுனதடியார் மனத்தாயோ வறியேனே. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| சேய் ஓங்கு | மிகவும் உந்நதமாய் |
| தண் | குளிர்ந்திருக்கிற |
| திருமாலிருஞ் சோலைமலை | திருமாலிருஞ் சோலை மலையிலே |
| உறையும் | பொருந்தி வர்த்திக்கிற |
| மாயா | ஆஶ்சர்யபூ(ஃப)தனே |
| நான்குமறையின் | நாலு வேதங்களினுடைய |
| உளாயோ | (உள்ளே) இருக்கிறாயோ? |
| தீ | த்ரேதாக்நிகளை |
| ஓம்புகை | ஹோமத்தினால் வளர்க்கையையேஸ்வபா(வ)வமாக வுடைய |
| மறையோர் | ப்ராஹ்மணாகள் வாத்திக்கிற |
| | சிறுபுலியூர்ச் சலசயனத்து |
| ஆயோ | இருக்கிறாயோ? |
| உனது | உனக்கு |
| அடியார் | சேஷபூதரான பாகவதாகளுடைய |
| மனத்தாயோ | ஹ்ருதயத்திலே வஸிக்கிறாயோ? |
| அறியேன் | அறிகிலேன்; |
| இது | இந்த ப்ரஶ்நத்திற்கு உத்தரத்தை |
| எனக்கு | எனக்கு |
| உரையாய் | அருளிச் செய்ய வேணும். (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (சேயோங்கித்யாதி) "சேய்" என்று க்ஷேத்ரபாலகனுக்குப்பேராய், அவனங்விடத்துக்காவலாகச் சொல்லிப்போருவதொன்றுண்டு அதாகிறது. அன்றிக்கே "சேய்" என்று தூரத்துக்கு வாசகமாயிருக்கையாலே மிகவும் ஓங்கின திருமலையிலே நிற்கிற ஆஶ்சர்யபூ(பூ)தனே. (எனக்குரையாயிது) எனக்கு இத்தை யருளிச்செய்யவேணும். (மறைநான்கினுளாயோ) எங்குமொக்க உன்னையே சொல்லா நின்றுள்ள வேதங்கள் நாலினுமுள்ளாயோ?

எப்போதுமொக்க அக்நிகார்யத்தில் அவஹிதராய்ப்போருகிற ப்ராஹ்மணருடைய சிறுபுலியூர்ச் சலசயநத்திலுள்ளாயோ? உன் திருவடிகளிலே அஸாதாரணராயிருப்பார் ஹ்ருதயங்களிலே உள்ளாயோ? அடியேன் அறிகிறேனில்லை, எனக்கிது தெரிய அருளிச்செய்யவேணும்; இத்தால் சொல்லிற்றாய்த்து ஸௌபரி பலவடிவுகொண்டாப்போலே இவ்வோ இடங்கள்தோறும், இனி அவ்வருகில்லை என்னுமபடி குறைவற வர்த்திக்கிறபடியைக் காட்டிக்கொடுத்தான். (எ)

---

அரு.—ஏழாம்பாட்டு. (சேயோங்கித்யாதி) கீழ்ப்பாட்டில் எம்பெருமானை விட்டு அவனடியாரைப்பற்றித் தேறியிருந்தார்; அத்தைக் கண்டு உகந்து குறைவற எங்குமிருக்கும்படிகளைக்காட்டக்கண்டு உகந்து ஆஶ்சர்யப்படுகிறாரிங்கென்று ஸங்கதி.

"சேய்" என்று ருத்ரபுத்ராதிகளுக்கு ப்பேராகையால், க்ஷேத்ரபாலகனும் ருத்ரபுத்ரனாகையாலே சொல்லுகிறதென்றருளிச் செய்கிறார் (சேயென்றித்யாதி).

சாஸ்த்ரைக ஸமதிகம்யங்களான அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹங்களையும், கண்ணால் கண்டநுபவிக்கலாம்படியான அர்ச்சாரூபங்களையும், நெஞ்சாலே அநுபவிக்கலாம்படி அந்தர்யாமியாயிருக்கும் வடிவுகளையும், ஒருகாலே காட்டினபடியாலே கண்டு ஆஶ்சர்யப்படுகிறாரென்று பாட்டுக்குத் தொகுத்த தாத்பர்யத்தை யருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி). (எ)

மூ. — மையார்வரிநீல மலர்க்கண்ணார்மனம் விட்டிட்டு
உய்வானுனகழலே தொழுதெழுவேன் கிளிமடவார்
செவ்வாய்மொழி பயிலும் சிறுபுலியூர்ச்சலசயனத்து
ஐவாயரவணைமேலுறை யமலா வருளாயே. (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கிளி | கிளிகளானவை | பயிலும் | அப்யஸியாநின்ற |
| மடவார் | ஸ்த்ரீகளுடைய[டான | | சிறுபுலியூர்ச் சலசயனத்து |
| செவ்வாய் | சிவந்தவாயிலே யுண் | ஐவாய் | ஐந்து வாய்களை |
| மொழி | சொற்களை | | யுடைய |

| | | | |
|---|---|---|---|
| அரவு அணை மேல் | திருவநந்தாழ்வானாகிற படுக்கையின் மேலே | கண்ணார் | கண்களையுடைய ஸ்த்ரீகள் விஷயத்தில் |
| உறை | பொருந்தி கண்வளர்ந்தருளுகிற | மனம் விட்டிட்டு | மநஸ்ஸை (ஆசையை) விட்டு |
| அமலா | பரிசுத்தனே! | உய்வான் | உஜ்ஜீவிக்கைக்காக |
| மை ஆர் | அஞ்ஜநத்தினால் நிறைந்து (அலங்கரிக்கப்பட்டதாய், | உனகழலே | உன் திருவடிகளையே |
| வரி | ரேகைகளுடையதாய் | தொழுதெழுவேன் | ஆஶ்ரயித்துஉஜ்ஜீவிப்பேன்; |
| நீலமலர் | கருநெய்தல் போன்றதான | அருளாய் | (அப்படி) க்ருபை பண்ணவேணும். (அ) |

வ்யா. —எட்டாம்பாட்டு. (மையார் வரிநீலம்) அஞ்ஜநத்தாலே குறைவற அலங்க்ருதமாய், செவ்வரிகருவரிகளையுடைத்தாய், நீலமலர் போலேயிருக்கிற கண்களையுடைய ஸ்த்ரீகளை மநோரதித்திருக்குமிருப்பைவிட்டு உஜ்ஜீவிக்கைக்காக உன் திருவடிகளை. (தொழுதெழுவேன்) ஆஶ்ரயிப்பேன்.

(கிளிமடவார் செவ்வாய் மொழிபயிலும்) கிளிபோலேயிருக்கிற ஸ்த்ரீகளுடைய அக்கிளிபோன்ற பேச்சுநெருங்கியிருக்கிற சிறுபுலியூர்ச் சலசயனத்திலே அநுபவஜநிதப்ரீதிக்குப் போக்குவிடுகைக்குப் பலவாய்த்தலைகளையுடையனாய், சைத்யாதிகளை ப்ரக்ருதியாகவுடைய திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளி ப்ரயோஜநநிரபேக்ஷமாக ரக்ஷணத்திலே ஒருப்பட்டிருக்கிறவனே! என்பக்கலிலே உன்னுடைய க்ருபையைப்பண்ணியருளவேணும். கிளியானது மடவாருடைய சிவந்தவாயில் பேச்சை அப்பஸிக்கிறதென்னுமாம். கிளிமடவார் செவ்வாய்மொழி பயிலும் சிறுபுலியூர்ச் சலசயனத்து வாயரவணைமேலுறையமலா - மையார்வரி நீலமலர்க்கண்ணார் மனம் விட்டிட்டுய்வானுனகழலே தொழுதெழுவேன்; அருளாய். செவ்வாய் - நேராயிருக்கிற. ... ... ... ... ... ... (அ)

அரு —எட்டாம்பாட்டு. (மையாரித்யாதி) கீழ்ப்பாட்டில்பலவடிவைக் காட்டினபடியாலேகண்டு ஆஶ்சர்யப்பட்டார்; இப்பாட்டில் இப்படி அநுபவத்துக்கு விச்சித்தி வரும்படியிருக்கும் நிலத்தில் தாமிருந்தபடியாலே, அநுநித்யமாகச் செல்லுகைக்காக ப்ராப்யாபா(ஞா)ஸங்களில் நசையற்று சரணம்புக்கு க்ருபையை ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதி.

"அமலா" என்றதின் தாத்பர்யம் (ப்ரயோஜநேத்யாதி). மூன்றின அர்த்தத்தில் சப்த(ஸ்)நிர்வாஹத்தைக்காட்டுகிறார் (செவ்வாயித்யாதி). (அ)

மூ. — கருமா முகிலுருவா கனலுருவா *புனலுருவா
பெருமால் வரையுருவா பிறவுருவா நினதுருவா
திருமாமகள் மருவும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
அருமா கடலமுதே யுனதடியே சரணமே. (௯)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கரு மா | (ஆஶ்ரிதர்க்கு) நீல வர்ணமாய்ப் பெருத்திருக்கிற | நினது உருவா | உனக்குஅஸாதாரணமாயுள்ள விக்ரஹத்தையுடையவனே! |
| முகில் உருவா | மேகம்போன்ற வடிவையுடையவனே | திருமாமகள் | பெரிய பிராட்டியார் |
| கனல் உருவா | (அநாஶ்ரிதர்க்கு) அக்நி போன்ற வடிவையுடையவனே! | மருவும் | நித்யவாஸம் பண்ணுகின்ற |
| | | சிறுபுலியூர்ச் சலசயனத்து | |
| புனல் உருவா | ஜலம் போல் ஸர்வஸுலபமான வடிவையுடையவனே! | அரு | பெறுதற்கரிதாய் |
| | | மாகடல் | பெரிய க்ஷீராப்தியிலே யுண்டான |
| பெருமால் | மிகவும் பெருத்திருக்கிற | அமுதே | அம்ருதம்போலே நிரதிசய போக்யபூதனானவனே! |
| வரை உருவா | மலைபோன்ற (அபரிச்சின்னமான) வடிவையுடையவனே! | உனது அடியே | உன் திருவடிகளே |
| பிற உருவா | மற்றுமுண்டான வடிவையுடையவனே! | சரணம் | (எனக்கு) ப்ராப்யமாயிருக்கும். (௯) |

வ்யா. —ஒன்பதாம்பாட்டு. (கருமாமுகிலித்யாதி) ஆஶ்ரிதர்க்கு க்கண்ட காட்சியிலே ஸகலதாபமும் போம்படி ஶ்ரமஹரமான பெரியமேகம்போன்ற வடிவையுடையவனே. (கனலுருவா) அநாஶ்ரிதர்க்குக் கிட்டவொண்ணாதபடி அநபிபவநீயமான வடிவையுடையவனே. (புனலுருவா) ஸர்வஸுலபமான வடிவையுடையவனே. (பெருமால்வரையுருவா) அபரிச்சேத்யமான வடிவையுடையவனே. (பிறவுருவா) இன்னமும் சொல்லிச்சொல்லாத வடிவுகளையுடையவனே! (நினதுருவா) இப்படி ஜகதாகாரமான வடிவுகளொழிய, அஸாதாரணமான வடிவுகளையுடையவனே.

(திருமாமகள் மருவும்) பெரியபிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற. (அருமாகடலமுதே) பெரிய கடலைக்கடைந்து அருமைப்பட்டுவாங்கின அம்ருதம்போலே நிரதிசய போக்யனாய்க்கொண்டு

பெரியபிராட்டியாரோடுங்கூட சிறுபுலியூர்ச் சலசயனத்திலே சாய்ந் தருளினவனே! (உனதடியே சரணாமே) ஸ்ரியஃபதியான உன் திரு வடிகளொழிய எனக்கு வேறுபுகலில்லை-ப்ராப்யமில்லையென்கை. (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு. (கருமாமுகிலித்யாதி) கீழ்ப்பாட்டில் ப்ரா ப்யாபாஸங்களை விட்டு சரணம்புகுந்தார்; அவன் காட்டின வடிவுகளை யெல்லாம் அநுஸந்தித்துப்பிறந்த போக்யதாதிசயத்தைப்பேசி, ப்ராப்யத் தை நிஷ்கர்ஷிக்கிறாரென்று ஸங்கதி.

காட்சியிலே ப்ரமஹேதுவான மேகத்துக்கும் புனலுக்கும் ஒத்திருக்குமா கையாலே பௌநருக்த்யம் வாராமைக்காகத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஸர்வஸௌலபேத்யாதி). "பெரு" என்றும், "மால்" என்றும் மீமிசைச் சொல்லாக வருளிச்செய்ததும் போராமே, "வரை" என்று த்ருஷ்டாந்த மிடுகையால் பலித்தவர்த்தமருளிச் செய்கிறார் (அபரிச்சேத்யமான வித் யாதி).

சரணபதம்-க்ருஹபரமாய், ப்ராப்யத்தைக் காட்டுமென்றருளிச் செய் கிறார் (ப்ராப்யமில்லை) என்று. ... ... ... ... ... (கூ)

மூ. — சீரார் நெடுமறுகில் சிறுபுலியூர்ச் சலசயனத்து
ஏரார் முகில்வண்ணன் றன்னை யிமையோர் பெருமானைக்
காரார்வயல் மங்கைக்கிறை கலியனொலிமாலை
பாராரிவை பரவித்தொழப் பாவம்பயிலாவே. (கo)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சீர் ஆர் | ஐஶ்வர்யத்தை யுடைத்தாய் | ஏர் ஆர் | அழகுமிக்க |
| நெடு | நீண்டிருந்துள்ள | முகில்வண்ணன் தன்னை | மேகம்போன்ற வடிவையுடையனாய், |
| மறுகில் | திருவீதிகளை யுடைத்தான | இமையோர் பெருமானை | நித்ய ஸூரிகளுக்குத் தலைவனாயுள்ள ஸர்வேஶ்வரன் விஷயமாக, |
| சிறுபுலியூர் | சிறுபுலியூ ரென்னும் திருநாமத்தை யுடைத்தாய், | கார் ஆர் | கருமைமிக்க |
| சலசயனத்து | ஜலசாயியானஎம்பெருமான் கண்வளர்ந்தருளுகிற சலசயனமென்னும் திவ்ய தேசத்திலெழுந்தருளியிருக்கிற | வயல் | கழனிகளையுடைய |
| | | மங்கைக்கு | திருமங்கையிலுள்ளார்க்கு |
| | | இறை | ஸ்வாமியான |
| | | கலியன் | ஆழ்வார் |
| | | ஒலி | அருளிச்செய்த |

| | | | |
|---|---|---|---|
| இவை மாலை | இந்த சப்தஸந்தர்ப்ப ரூபமான பாசுரங்களை | பரவி | சொல்லி [வே |
| | | தொழ | (அவனை) ஆஸ்ரயிக்க |
| | | பாவம் | பாபமானது |
| பாரார் | பூமியி லுள்ளவர்கள் | பயிலா | கிட்டமாட்டாது. (க௦) |

வ்யா. —பத்தாம்பாட்டு (சீராரித்யாதி) ஐஸ்வர்யத்தையடையக் கோள்சொல்லித்தாராநின்ற பெரியதிருவீதிகளையுடைய சிறுபுலியூர்ச் சலசயனத்திலே அழகிய வடிவையுடைத்தான மேகம்போன்ற வடிவை யுடையனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறவனை. (இமையோர்பெருமானை) அங்குகண்வளர்ந்தருளுகிறவன் தானாரென்னில்; அயர்வறுமமரர்களதிபதியாய்நந்து

(காரார்வயல் மங்கைக்கிறை) நிரந்தரமேக ஸஞ்சாரத்தை யுடைத்தென்னுதல்; இருள்மிகுந்திருக்குமாள வயலையுடைத்தான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார், ஒலியையுடைத்தாம்படி அருளிச்செய்தமாலை. (பாராரிவை பரவித்தொழ பாவம்பயிலாவே) பாவம் வருகைக்கு யோக்யமான ப்ரதேசத்திலேயிருந்துச்செப்தேயும் இவற்றை வாயாலேசொல்லி ஆஸ்ரயிக்க பாபங்கள் தானே "நாமிவிடமிருப்பல்ல" என்று விட்டுப்போம். ... ... ... ... (க௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அரு —பத்தாம்பாட்டு. (சீராரித்யாதி) "முறுகு" என்றதினர்த்தம் (திருவீதி) என்றது.

"பாரார்" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (பாவமித்யாதி). ... ... ... ... ... ... .. .. (க௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்தில் ஒன்பதாந்திருமொழி முடிந்தது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியதிருமொழி ஏழாம்பத்து பத்தாந் திருமொழி

## பெரும்புறக்கடல் ப்ரவேசம்.

வ்யா. —(பெரும்புறக்கடலித்யாதி) அவனல்லது ஆஸ்ரயணீயனில்லையென்று பிறர்க்கு உபதேசிக்கப் புக்கவர் "அருளாய்" என்றும், "உனதடியே சரணாமே" என்றும், தம்முடைய அபேக்ஷையின் மிகுதியைச் சொல்லித் தலைக்கட்டினார். இவர்க்கு இனிச்செய்யலா

வதென்னென்று பார்த்து வேறே ஓராஸநமாகவிருந்து தன்னுடைய ஸ்வரூப ரூப குணவிபூதிகளையடையக் காட்டிக்கொடுத்து "நம்மை யொழிந்த வஸ்துக்களுடைய நமக்கு உபமாநமாயிருத்தல், ப்ரகாரமா யிருத்தல் செய்யும்படியிருக்கிறநாம, உமக்குக்கண்ணாலே கண்டநுப விக்கலாம்படி வந்துநின்றோமாகில், நீர் என்பெறுநீராய்த்தான்கிடந் து கூப்பிடுகிறது, இனிமேலுள்ள கார்யமும் நாமேசெய்வுதோங் காணும்" என்று ஸமாதாநம்பண்ண, அப்படியே அநுஸந்தித்து த்ருப்தராகிறார். (க) [ఆరురోహ రథం హృష్టః శత్రుఘ్న సహితో బలీ- ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்டஶ் ஶத்ருக்நஸஹிதோ பலீ] பெரிய ஆசையுட னே வந்த ஸ்ரீபரதாழ்வானுக்கு நினைத்து வந்தகார்யத்தில் செய்த தொன்றுமில்லை; ஆகிலும் மீண்டுபோகிறபோது ஹ்ருஷ்டனாய்ப் போனானிறே; அப்படியேயாய்த்து இவர் விஷயத்தில் ஸமாதாநம் பண்ணினபடியும். ... ... ... ... ... ... *

அ௫.—பெரும்புறக்கடல் ப்ரவேசம் கீழ்த்திருமொழியில் "அருள் புரியே" என்றும், "அருளாயே" என்றும், ப்ரார்த்தித்தவர், பரமப்ரா ப்யத்தைப் பெறுகை, இத்திருமொழியில், "கண்டுகொண்டேனே" என் று ஹ்ருஷ்டராகக்கூடுமோவென்ன ஸங்கதியருளிச்செய்கிறார் (அவனல்ல தித்யாதி). (என்பெறுநீராய்) எதைப்பெறுதவராய் என்றபடி. இவ ருடைய அபேக்ஷிதம் செய்யாமல், வேறொன்றால் ஸமாதாநம் பண்ணினால் த்ருப்தராகக்கூடுமோ வென்னவருளிச்செய்கிறார் (ஆருரோஹேத்யாதி).*

மூ. — பெரும்புறக்கடலை யடலேற்றினைப்
பெண்ணையாணை யெண்ணில்முநிவர்க்கருள்
தருந்தவத்தை முத்தினைத் திரட்கோவையைப்
பத்தராவியை நித்திலத்தொத்தினை
அரும்பினையலரை அடியேன்மனத்
தாசையை அமுதம்பொதியின்சுவைக்
கரும்பினைக் கனியைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| புறம் | எல்லா ஸமுத்ரத்துக் கும் வெளியிலே யிருக்கிற | ஏற்றினை | ருஷபம்போல் மேனாணித்தவனாய், |
| பெரும் கடலை | அபரிச்சிந்நமான ஸமுத்ரம்போன்றவனாய் | பெண்ணை | ஸ்த்ரீபோல் ஆஸ்ரித பரதந்த்ரனாய், |
| அடல் | மிடுக்கையுடைய | ஆணை | புருஷன்போல் ஸ்வதந்த்ரனாய், |

(க) ரா - அயோ-௧௧௩-க.

| | |
|---|---|
| எண் இல் | அஸங்க்யாதமான தபஸ்ஸையுடைய |
| முநிவர்க்கு | யோகிகளுக்கு |
| அருள் தரும் | தபஸ்ஸின் பலத்தைக் கொடாநின்ற |
| தவத்தை | தபோரூபியாய் (ஸர்வஜ்ஞனாய்), |
| திரள் | திரண்டிருக்கிற |
| முத்தின் கோவையை | முத்துமாலைபோல் இனியவனாய் |
| பத்தர் | பக்தஜநங்களுக்கு |
| ஆவியை | ப்ராணன்போல் தாரகனாய், |
| நித்திலம் | முத்தினுடைய |
| தொத்தினை | குவியல்போல் ரக்ஷகனாய், |
| அரும்பினை | அரும்புபோல் கௌமாராவஸ்த்தையையுடையனாய், |
| அலரை | மலர்ந்தபுஷ்பம்போல் யௌவநாவஸ்த்தையையுடையனாய், |
| அடியேன் | தாஸபூதனான என்னுடைய |
| மனத்து | மநஸ்ஸிலுண்டான |
| ஆசையை | ஆசைக்கு விஷயமானவனாய், |
| அமுதின் | அம்ருதத்தினுடைய |
| பொதி | திணிப்பாலே (அம்ருதத்தைநீராகப் பாய்ச்சினாற் போலே) |
| இன்சுவை | நிரதிசயமதுரமாயிருக்கிற |
| கரும்பினை | கருப்பஞ்சாறுபோல் போக்யபூதனாய், |
| கனியை | பழம் போலே அப்போதே அநுபவிக்கலாம்படியிருக்கிறவனான ஸர்வேஸ்வரனை |
| நாடிச்சென்று | தேடிக்கொண்டுபோய் |
| கண்ணமங்கையுள் | திருக்கண்ண மங்கையென்னும் திவ்யதேசத்தில் |
| கண்டுகொண்டேன் | ஸாக்ஷாத்கரித்தேன். |

வ்யா. —முதற்பாட்டு. (பெரும்புறக்கடலை) ஸர்வபதார்த்தங்களையும் தன்னுள்ளே அடக்கிநோக்கும் கடல்போலே அபரிச்சேத்யனாயுள்ளவனை. எல்லாக்கடலுக்கும் புறம்பாய், தான்பெருத்திருக்கிற கடல்போன்றிருக்கிறவனை. (அடலேற்றினை) ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களையும் தன்னுள்ளே இட்டுநோக்கும்படி, இவற்றையுடையனாகையால் வந்த மேனாணிப்பையுடையவனை. (பெண்ணை) அப்படியிருந்தால் ஒருவர்க்கும் கிட்டவொண்ணாதபடியாயிருக்குமோவென்னில்; பரதந்த்ரனாயிருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. வெறும் பாரதந்த்ர்யமே யாயிருக்குமித்தனையோவென்னில், (ஆணை) நிரங்குசமான ஸ்வாதந்த்ர்யத்தையுடையவனை. (எண்ணில் முனிவர்க்கருள் தரும்தவத்தை) எண்ணிறந்த தபஸ்ஸையுடைய யோகிகளுக்கு, அந்த தபஃப (ஃ) லத்தைக்கொடுக்கும் தபஸ்ஸானவனை. (முத்தின்

திரள்கோவையை) கண்டபோதே ஸாபமெல்லாம் ஆறும்படி உடம்பிலே எறிட்டுக்கொண்டநுபவிக்கலாம்படி முத்தினுடைய திரண்ட மாலைபோலே யிருக்கிறவனை. (பக்தாவியை) தன்பக்கல் பரிவையுடையார்க்குத் தன்னையொழிய ஜீவிக்கை அரிதாம்படியிருக்கிறவனை. (திக்திலத்தொத்தினை) மேன்மேலென நமக்குண்டென்று தேறியிருக்கலாம்படி முத்துக்குலைபோன்றிருக்கிறவனை. திக்திலம் - முத்தும், அழகும். ஸௌந்தர்யத்தொகுதி.

(அரும்பினையலரை) இரண்டவஸ்தையையும் ஒருகாலே சூழ்த்துக்கொடுக்கலாம்படியிருக்கிறவனை. (க) "யுவா ஸுவாஸா: - யுவா குமார:". (அடியேன் மனத்தாசையை) நான் நித்யாநுபவம் பண்ணுகிறச் செய்தேயும், இதுக்குமுன்பு அநுபவித்தறியாத தொன்றில் போலே பிறக்கிற ஆசையானவனை. (அமுதம் பொதியின் சுவைக்கரும்பினை) அம்ருதத்தை நீராகப்பாய்ச்சி வளர்த்தாப்போலே நிரதிசய போக்யபூதமான கரும்புபோலே இனியனாயிருக்கிறவனை. (கனியை) அப்போதே நுகரலாம்படி பக்வபலமாயிருக்கிறவனை. (சென்றுநாடிக் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே) பசித்தவிடத்தே ஸ்வாதுபோஜநம்பண்ணப் பெறுவாரைப்போலே அபேக்ஷைபிறந்த விடத்தே கண்டநுபவிக்கப் பெற்றேன். ... ... ... ... (க)

அரு — முகற்பாட்டு. தாதபாயம ... ய்து சப்தார்த்தம்காட்டுகிறார் (எல்லாக்கடலுகருமிதயாதி) ( ... —லுக்கும்) ஸப்தஸாகரத்துக்கும். அபூ(ப்ரூ)ம்தாபமை என்று இரவெள்ளம். (முத்துக்குலை) முத்துக்குவியல். கீழ் முத்துமாலையைச் சொன்னது ப்ராப்பக்வாபிப்ராயேண, இங்கு முத்துக்குவியலைச் சொன்னது ப்ராபகத்வாபிப்ராயேண, வித்து ஜீவிக்கையாயிருக்கையாலே ரக்ஷகமாமென்றபடி.

(சூழ்த்துக்கொடுக்கலாம்படி) என்றது - வ்யாபித்திருக்கலாம்படி என்றபடி. "இன்சுவை" என்று விசேஷித்ததின் கருத்து (நிரதிசய போக்யபூதமான) என்றது. ... .. ... ... .. (க)

மூ. — மெய்ந்நலத்தவத்தைத் திவத்தைத்தரும
மெய்யைப் பொய்யினைக் கையிலோர் சங்குடை
மைந்நிறக்கடலைக் கடல்வண்ணனை மாலை
ஆலிலைப்பள்ளிகொள் மாயனை

(க) ருக்வே-அஷ்ட-உ-அ-உரு.

தென்னலைப் பகலை யிற்றைநாளினை
நாளையாய்வரும் திங்களை யாண்டினைக்
கன்னலைக் கரும்பினிடைத் தேறலைக்
கண்ணமங்கையுள்கண்டு கொண்டேனே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| மெய் | யதார்த்தமாய் (ஸ்வரூபாநுரூபமாய்) |
| நலம் | அழகியதான (ப்ரீதிரூபாபந்நமான) |
| தவத்தை | பக்தியோக ரூபமான தபஸ்ஸூக்கு விஷயபூதனாய், |
| திவத்தை | பரமபதத்தை |
| தரும் | கொடாநின்ற |
| மெய்யை | விஶ்வஸநீயமான ப்ரபத்திக்கு விஷய பூதனாய், |
| பொய்யினை | (அநாஶ்ரிதர்க்கு ஒரு ப்ரகாரத்தாலும்) இல்லாதவனாய் (காணப் படாதவனாய்), |
| கையில் | திருக்கையிலேந்தின |
| ஓர் சங்குஉடை | ஒரு (அஸத்ருசமான) ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடைத்தாய் |
| மை நிறம் | அஞ்ஜநத்தின் வர்ணத்தையுடைத்தான |
| கடலை | (விஜாதீயமான) ஸமுத்ரம் போன்றவனாய், |
| கடல்வண்ணனை | ஸமுத்ரத்தின் (ரக்ஷகத்வ) ஸ்வபாவத்தையுடையனாய், |
| மாலை | ஸர்வாதிகனாய், |
| ஆலிலை | ஆலந்தளிரில் |
| பள்ளிகொள் | (ப்ரளயகாலத்தில்) கண் வளர்ந்தருளுகிற |

| பதம். | உரை. |
|---|---|
| மாயனை | ஆஶ்சர்யபூதனாய், |
| தென்னலைபகலை | நேற்றுப்பகலிலே அநுபவிக்கப் பட்டவன் போல் அநுபூதஸூக ஸ்மரண மாத்ரத்திலே ஸூகப்ரதனாய், |
| இற்றைநாளினை | இன்றையதிநம் அநுபவிக்கப்படுமவன் போல் தத்கால ஸூகஜநகனாய், |
| நாளையாய் | நாளையதிநத்தில் அநுபவிக்கப்படுமவன் போல் பவிஷ்யத் காலத்தில் ஆநந்த ஜநகனாய், |
| வரும் | (இப்படி அநேக நாள்கள் கூடி) வாராநின்ற |
| திங்களை | மாஸங்கள் தோறும், |
| ஆண்டினை | (அப்படியே அநேக மாஸங்கள் கூடின) வர்ஷங்கள்தோறும் ஆநந்திப்பிக்குமவனாய், [யனாய், |
| கன்னலை | சர்க்கரைபோல் இனி |
| கரும்பினிடை | கருப்பந்தடியிலேயுண்டான |
| தேறலை | ரஸம்போல் அப்போதே அநுபவிக்கலாம்படி யிருக்குமவனானவனை |

கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (உ)

வ்யா. —இரண்டாம்பாட்டு. (மெய்ந்நலத்தவத்தை) ஸ்வரூபாநுரூபமாய், ஸ்நேஹரூபமாயிருக்கிற அபிமதஸாதநமான ப(ஃ)க்தியை. (திவத்தைத்தரும் மெய்யை) ப்ரபத்தியை. (பொய்யினை) இவ்விரண்டு மில்லாதார்க்குத் தன்படிகளொன்று மறியவொண்ணாதிருக்குமவனை. (கையிலேரித்யாதி) கீழ்ச்சொன்ன இரண்டுமுடையார்க்குக் காட்டிக்கொடுக்கும் வடிவையுடையவனை. கண்டத்தை எல்லாமடைய உள்ளேயிட்டுநோக்குங்கடல்போலன்றியே, ஓர்சங்குடைமைந்நிறக்கடலை. (கடல்வண்ணனை) ஸர்வபதார்த்தங்களையும் தன்னுள்ளே அடக்கி, சிறியதைப் பெரியது நலியாதபடி தன்திரைகளாகிற கையாலே நோக்கும் கடல்போலே யிருக்கும் ஸ்வபா(ஃ)வத்தையுடையவனை. (மாலை) ஸர்வாதிகனை. (ஆலிலையித்யாதி) அகடிதக(ஃ)டநா ஸாமர்த்த்யத்தை யுடையவனை. ஒருசிறுவடிவாலே ஸகலலோகங்களையு மடக்கி ஒருபவளுனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின ஆஸ்சர்ய பூ(ஃ)தனை.

(நென்னலைப்பகலை) அபிமதலாபமுண்டான பிற்றைநாளில் நிர்வ்ருதி போலே "நேற்றைப் பகலிலே அநுபவமிருந்தபடி என்" என்று ஸ்மரித்துத் தரிக்கலாம்படி யிருக்கிறவனை. (இற்றைநாளினை) அநுபூ(ஃ)யமான நாளானவனை. (நாளையாய்வரும் திங்களை) இவ்வநுபவத்துக்கு விச்சேதம் பிறவாமே, நாளையாயும் வரப்புகாநின்றதென்று அநுஸந்திக்கலாம்படியிருக்கிற நாளையாய், அதுதான் ஒருநாளுமேயாய்ப் போகாமே அப்படி என்றுமொக்கச் சொல்லலாம்படியான நாள்களையுடைய மாஸமானவனை. (ஆண்டினை) அப்படிப்பட்ட மாஸங்களையுடைய ஆண்டானவனை. இனி அவ்வாண்டுதன்னை அப்படியே இரட்டித்துக்கொள்ளுமத்தனை. (கன்னலை) நிரதிசயபோக்ய(ஃ)ஞனவனை. (கருமபினிடைத்தேறலை) நெருக்கிக்கார்யம்கொள்ள வேண்டாதே, அப்போதே பருகலாம்படியிருக்கிற கரும்பில் ரஸாம்சமானவனை. கண்ணமங்கையுள். ... ... ... (உ)

---

அரு —இரண்டாம்பாட்டு. (மெய்ந்நலமித்யாதி) "சென்று நாடிக் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே" என்றுநின்றீர்; எவ்வழியாலே உமக்குக்காட்டக்கண்டுகொண்டீர் என்ன; "ப(ஃ)க்திப்ரபத்திகளுக்கெல்லாம் அவனே நிர்வாஹகனுகையாலே அவ்வழியாலே" என்றுநின்று கொண்டு நிரதிசயபோக்யதாப்ரகாரத்தைப்பேசி அநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

(அமிர்தஸாதநமான) என்றது-போஜநத்துக்கு க்ஷுத்து போலே ப்ராப்யத்துக்கு அவஶ்யாபேக்ஷிதமான என்றபடி. இங்ஙனன்றாகில், ஸ்வரூபவிருத்தமான ப(பு)க்தி ஸ்வரூபாநுரூபமாகாதிறே. (ப்ரபத்தியை) என்றது-ப்ரபத்திஸ்வபாவனவனை யென்றபடி "ஓர் சங்கு" என்று விசேஷிக்கையாலே, பலசங்கடைய கடலை வ்யாவர்த்திக்கிறது. பலிதார்த்தமருளிச்செய்து சப்தார்த்தமருளிச் செய்கிறார் (ஒரு சிறுவித்யாதி).

ஆண்டொழிய பின்னையும் காலமில்லையோ வென்ன வருளிச் செய்கிறார் (இனியித்யாதி). (இரட்டிக்கை) மேலுமிப்படி பெருக்கிக்கொள்ளுகை. எல்லாக்காலத்துக்கும் இப்படி நிர்வாஹகனென்கை. ... ... (௨)

மூ. — எங்களுக்கருள் செய்கின்றவீசனை
வாசவார்குழலாள் மலைமங்கைதன்
பங்கனைப்பங்கில் வைத்துகந்தான்றன்னைப்
பான்மையைப் பனிமாமதியந்தவழ்
மங்குலைச்சுடரை வடமாமலையுச்சியை
நச்சினாம் வணங்கப்படும்
கங்குலைப் பகலைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எங்களுக்கு | அநந்ய [illegible] களான [illegible] | பான்மையை | (இப்படிப்பட்ட நீர்மையை) ஸ்வபா(வ)வமாக வுடையனாய், |
| அருள்செய்கின்ற | க்ருபை [illegible] பண்ணுகின்ற | பனி | குளிர்ந்தும் |
| ஈசனை | ஸர்வேஶ்வரனாய், | மா | பரந்துமிருக்கிற |
| வாசம் வார் | பரிமளம்வீசாநின்ற | மதி | சந்த்ரனுடைய |
| குழலாள் | மயிர்முடியை யுடையவளாய் | அம்தவழ் | அழகியஸஞ்சாரத்தை யுடைத்தாயிருக்கிற |
| மலைமங்கை | இமயமலைகுப்பெண்ணான பார்வதியை | மங்குலை | ஆகாசத்துக்கு நிர்வாஹகனாய் |
| தன்பங்கனை | தன்னுடைய பார்ஶ்வத்திலே யுடையனான ருத்ரனை | சுடரை | ஸூர்யனுக்கு அந்தர்யாமியாய், |
| | | வட | வடதிசையிலுள்ள |
| பங்கில் | தன் திருமேனியிலோர் பாகத்தில் | மா | பெரிய |
| | | மலை | திருவேங்கட மலையினுடைய |
| வைத்து | இருத்தி | உச்சியை | சிகரத்திலே (எழுந்தருளியிருக்குமவனாய்) |
| உகந்தான்தன்னை | ஸந்தோஷித்தவனாய், | | |

நச்சி — ஆசைப்பட்டு
நாம் — நம்மாலே
வணங்கப்படும் — ஆஸ்ரயிக்கப்படாநின்ற
கங்குலை — ராத்ரிக்கு நிர்வாஹகனாயு,
பகலை — பகற்காலத்துக்குக் கடவனானவனை
சென்றுநாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (௩)

வ்யா. — மூன்றாம்பாட்டு. (எங்களுக்கருள் செய்கின்றவீசனை) அநந்யகதிகளான எங்கள்பக்கலிலே நிர்ஹேதுகக்ருபையைப் பண்ணுகிற ஸர்வேஸ்வரனை. (வாசவார்குழலாள்) என்னைப்போலன்றியே, தானுமொருஸ்த்ரீயுமாய், ஐஸ்வர்யாபிமாநம் கொண்டாடியிருக்கிற ருத்ரனை, தன் திருமேனியில் ஒருபார்ஸ்வத்திலே வைத்து அதுதன்னைத் தன்பேறாகவைத்து உகந்திருக்கிறசீலத்தையுடையவனை. (பான்மையை) இப்ஸீலந்தான் புறக்குறிக்கு ஏறத்தாழப்போலே ஒருகாலுண்டாய்ப்போமதன்றியே இதுவே ஸ்வபாவமாம்படியிருக்கிறவனை.

(பனிமாமதியந்தவழ்மங்குலை) குளிர்ந்து நிறைந்திருக்கிற சந்த்ரனுடைய ஸஞ்சாரத்தையுடைய ஆகாசமானவனை. (சுடரை) தீக்ஷ்ணதையை அறுக்கைக்கீடான கிரணங்களையுடைய ஆதித்யனை. (வடமாமலையுச்சியை) இப்படி ஸாதாரணமான வடிவேயன்றியே அஸாதாரணமான விக்ரஹத்தோடே அத்திருமலையிலே ஏகதேசமாய் நிற்கிறவனை. (நச்சிநாம் வணங்கப்படும் கங்குலை) ஆசையை யுடையோமாய்க்கொண்டு நம்மாலே ஆஸ்ரயிக்கப்படுகிற போக (ஸுக)யோக்யமான காலமானவனை. (பகலை) அதுக்குறுப்பாக த்ரவ்யார்ஜநத்துக்கீடான காலமானவனை. சென்றுநாடி. ... ... ... (௩)

அரு — மூன்றாம்பாட்டு. (எங்களுக்கித்யாதி) கீழ்ப்பாட்டில், "மெய்ந்நலத்தவத்தை" என்றும், "திவத்தைத்தரும்மெய்ம்மையை" என்றும் இவ்விரண்டும் வ்யாஜமாக்கி ரக்ஷிப்பானென்றீர்; உமக்கிரண்டு கோடியிலும் வைத்துக்கொண்டு எத்தாலே ரக்ஷித்தானென்ன; தன்னுடையநிர்ஹேதுக க்ருபையாலே என்றத்தை அநுஸந்தித்து அவன் சீலாதிகளையும் அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(ஸாதாரணம்) என்றது-ஜீவனுக்கும்தனக்கும்பொதுவானஎன்றபடி.

மூ. — பேய்முலைத்தலநஞ்சுண்டபிள்ளையைத்
தெள்ளியார் வணங்கப்படும் தேவனை
மாயனை மதில்கோவலிடைகழி
மைந்தனையன்றி அந்தணர் சிந்தையு

ளீசனையிலங்கும் சுடர்ச்சோதியை
எந்தையை யெனக்கெய்ப்பினில் வைப்பினைக்
காசினைமணியைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (ச)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| பேய் | பூதனையினுடைய | அந்தணர் | ஶ்ரீ வைஷ்ணவர்களுடைய |
| முலைத்தலம் | முலையின் ஸ்தலத்திலே யுண்டான | சிந்தையுள் | மநஸ்ஸிலே(இருந்து) |
| நஞ்சு | விஷத்தை | ஈசனை | (அவர்களை) நியமிக்க வல்லனாய், |
| உண்ட | அமுதுசெய்த | இலங்கும் | (அவர்கள் தோஷம் தட்டாதபடி) விளங்காநின்ற |
| பிள்ளையை | பாலனாய், | சுடர் | உஜ்ஜ்வலமான |
| தெள்ளியார் | ஜ்ஞாநாதிகராலே | சோதியை | தேஜோரூபியாய், |
| வணங்கப்படும் | ஆஶ்ரயிக்கப்படாநின்றவனாய், | எந்தையை | எனக்கு ஸ்வாமியாய் |
| தேவனை | (அத்தாலே) தீப்யமானனாய், | எனக்கு எய்ப்பினில் | எனக்கு [லத்தில் தளாத்திமேலிடும் கா |
| மதின் | ப்ராகாரங்களினால் சூழப்பட்ட | வைப்பினை | நிதிபோல்ரக்ஷகனாய், |
| கோவல் | திருக்கோவலூரிலே | காசினை | ஸுவர்ணம் போல் ஸ்ப்ருஹணீயனாய், |
| இடைகழி | திருவிடைகழியிலே (முதலாழ்வார்களுடனெழுந்தருளியிருக்கிற) | மணியை | ரத்நம்போல் அதிஶ்லாக்யனா யுள்ளவனை |
| மைந்தனை | யுவாவாய் | | சென்றுநாடி கண்ணமங்கையுள் |
| அன்றி | அதுக்குமேலே | | கண்டுகொண்டேன். (ச) |

வ்யா. —நாலாம்பாட்டு. (பேய்முலையித்யாதி) பூதனையுடைய முலை ஸ்தலத்திலுண்டான விஷத்தை அமுதுசெய்து, விழுக்காடறியாத முக்த(?)னை. (தெள்ளியார் வணங்கப்படும்தேவனை) இப்படி முக்த(?)ரன்றியே அறிவுடையராயிருப்பாராலே ஆஶ்ரயிக்கப் படுவானாய், அத்தாலே தீப்யமானனானவனை. (மாயனை) ஆஶ்சர்யபூதனை. (மதிட்கோவலிடைகழிமைந்தனை) இடமில்லாதிடத்தே ஆஶ்ரிதரோடே புகுந்து நெருக்கின நித்ய யௌவநஸ்வபாவனை. (அன்றி யந்தணர் சிந்தையுளீசனை) அதுக்குமேலே ஆஶ்ரிதருடைய ஹ்ருதயத்திலே புகுந்து, அவர்களைத்தன்வழியே நியமித்துக்கொண்டிருக்கிறவனை.

(இலங்கும் சுடர்ச்சோதியை) இவர்களுடைய சரீரத்திலும், ஆத்மாவிலும்வர்த்தியாநிற்கச்செய்தே அவற்றைப்பற்றிவரும்தோஷங்கள் தன்பக்கலிலே தட்டாதபடியிருக்கிறவனை. (எந்தையை) இஸ்ஸ்வபா(ஸ்வா)வத்தைக்காட்டி என்னையெழுதிக்கொண்டவனை. (எனக்கெய்ப்பினில் வைப்பினை) எனக்குக் கைம்முதலில்லாதவன்று அழித்துக் கெடுத்துஜீவிக்கலாம்படியானநிதியானவனை. (காசினை)பொன்போலே ஸ்ப்ருஹணீயனானவனை. (மணியை) அப்பொன்னை அழித்தும் ஸ்வீகரிக்கக்கடவ ரத்நம்போலே ஶ்லாக்யனானவனை. சென்றுநாடி. (௪)

---

அ௫.—நாலாம்பாட்டு. (பேய்முலையித்யாதி) இப்படி நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்தது உம்மைத்தானேயோ? மற்று யாரையாகிலும் இப்படி கடாக்ஷித்ததுண்டோவென்ன; முதலாழ்வார்களையும் கடாக்ஷித்தானென்னக்கோலி ஆயனாருடைய பிள்ளைச் சேவகம் துடங்கி அநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(அதுக்கு மேலே) என்றது-முதலாழ்வார்களைக் கடாக்ஷித்ததுக்கு மேலே யென்றபடி. "அந்தணர்" என்ற பதம் - திருமழிசைப்பிரான், பட்டர்பிரான், தொண்டரடிப் பொடியாழ்வார் இவர்களைச் சொல்லிற்றாய், இவர்களைச்சொன்னது உபலக்ஷணமாக்கி,மாறன், குலசேகரன், பாணன் என்கிற மூவரையும் திருவுள்ளம்பற்றி (ஆஶ்ரிதருடைய) என்றருளிச்செய்தது.

(இஸ்ஸ்வபாவத்தை)என்றது-ஆழ்வார்கள் ஒன்பது திருநாமங்களையும் மயர்வறமதி நலமருளிக் கடாக்ஷித்த ஸ்வபா(ஸ்வா)வத்தை யென்றபடி. (௪)

மூ. — ஏற்றினையிமயத்துளெம்மீசனை
இம்மையைமறுமைக்கு மருந்தினை
ஆற்றலை யண்டத்தப் புறத்துய்த்திடு
மையனைக் கையிலாழி பொன்றேந்திய
கூற்றினைக் குரு மாமணிக்குன்றினை
நின்றவூர்நின்ற நித்திலத்தொத்தினைக்
காற்றினைப் புனலைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டு கொண்டேனே. (௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஏற்றினை | ருஷபம்போல் செருக்கனாய், | எம்மீசனை | நம்முடைய ஸ்வாமியாய், |
| இமயத்துள் | ஹிமவானில் (திருப்பிரிதியில்) எழுந்தருளியிருக்கிற | இம்மையை | ஐஹிகபலப்ரதனாய் |
| | | மறுமைக்கு | ஆமுஷ்மிக பலங்களுக்கு |

| | | | |
|---|---|---|---|
| மருந்தினை | ஔஷதம்போல் ஸாதகபூதனாய் | குரு | ஸ்லாக்யமாய் |
| ஆற்றலை | மிடுக்கனாய், | மா மணி | நீலமணிமயமான |
| அண்டத்து அப்புறத்து | அண்டத்துக்கு வெளியிலே (பரமபதத்தளவும்) | குன்றினை | மலைபோல் அதிஸுந்தரனாய் |
| உய்த்திடும் | (ஆஸ்ரிதரை) நடத்த வல்லவனை | நின்றவூர் | திருநின்றவூரில் |
| ஐயனை | நிருபாதிக பந்துவாய் | நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| கையில் | திருக்கையில் | நித்திலம் தொத்தினை | முத்துக்குவியல் போல்குளிர்ந்தவடிவை யுடையனாய், |
| ஒன்று ஆழி | அத்விதீயமான ஸுதர்சனாழ்வானை | காற்றினை | காற்றுபோல் ஸுகரனாய் |
| ஏந்திய | தரித்துக்கொண்டு | புனலை | ஜலம்போல் தாரகனாயுள்ளவனை |
| கூற்றினை | ம்ருத்யு போலே (அநாஸ்ரிதர்க்கு) பயங்கரனாய், | | |

சென்றுநாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (௫)

வ்யா.— அநுசாம்பாட்டு (ஏற்றினை) ஸ்வாதந்த்ர்யவத்தால் வந்த செருக்கையுடையவனை. (இமயத்துள் எம்ஈசனை) ஹிமவானில் திருப்பிரிதியிலிருந்து இருப்பைக்காட்டி என்னை வசீகரித்தவனை. (இம்மையை மறுமைக்கு மருந்தினை) ஐஹிகமாயும் ஆமுஷ்மிகமாயுமுள்ள பலங்களுக்கு ஸாதநபூதனானவனை. (ஆற்றலை) ஒருவஸ்துவே எல்லாவற்றையும் தரவற்றோவென்னில்; அதுகண்ணழிவுசொல்லவொண்ணாதபடி ஸர்வசக்தியுக்தனானவனை. (அண்டத்தப் புறத்துய்த்திடுமையனை) இவ்வைச்வர்யசக்திவம்கொண்டு கொள்ளவிருக்கிற கார்யமென்னென்னில்; இவற்றைப்பரமபதத்தளவும் செல்லநடத்துகை. அதுதானவனுக்கு வேண்டுகிறதென்னென்னில்; (ஐயனை) நிருபாதிக பந்து(பந்து)வாகை.

(கையிலாழியொன்றேந்திய கூற்றினை) ஆதிவாஹிகர் கையிலே காட்டிக்கொடுத்துக் கொடுபோகாநின்றால், ஆரேனும் சிலர்விலக்கினருண்டாகில் இருதுண்டமாக்குகைக் கீடான பரிகரத்தையுடையனாய், சத்ருக்களுக்கு ம்ருத்யுபோலேயானவனை. (குருமாமணிக்குன்றினை) ஸ்லாக்யமானநீலரத்ந பர்வதம்போன்ற வடிவையுடையவனை. அங்கேகொடுபோனால் காட்சிகொடுக்கும்படியான வடிவிருக்கிறபடி. (நின்றவூர் நின்றநித்திலத்தொத்தினை) அவ்வளவும்போகப்பற்றாதார்க்குக் காட்சிகொடுக்கைக்காக திருநின்றவூரிலே நிற்கிற முத்துத்திரள்

போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனை. (காற்றினை) ஸ்வஸ்பர்ஶத்தால் வரும் ஸுகமாயிருக்கிறவனை. (புனலை) தா(ஶ)ரகனானவனை. சென்றாடி. ... ... ... ... ... (ரு)

அரு—அஞ்சாம்பாட்டு- (ஏற்றினையிசையாகி) கீழ்ப்பாட்டில் தம்மை விஷயீகரித்தமையை ஸத்ருஷ்டாந்தமாக அநுஸந்தித்தார் இப்படி ஆழ்வார்களையெல்லாம் விஷயீகரித்துப்பெற்ற மேன்மையையுடைக்களெல்லாம் தோற எழுந்தருளியிருக்கும் திருப்பதியிலே திருவடிகளை அநுபவித்து ஊருஷ்டரானவளவிலே அவனுடைய ஐஹிகாமுஷ்மிகாதி பலப்ரதத்வம், மோக்ஷப்ரதத்வம் முதலானவற்றையுமநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"மருந்து" என்பது நீக்கத்தக்கதையாலே உபயவித பலஸாதநபூதனென்றபோதே அவை இல்லாமையால் வரும் துக்கத்தைப்போக்குமவனென்றுமென்று நிருவுளம்பற்றியருளிச் செய்கிறார் (ஐஹிகமாயுமித்யாதி) "இம்மையை" என்ற விடத்தில் ஐகாரம் அவ்யயம்.

(அவ்வளவும் போக) சரீராவஸாநமநந்தரத்தளவும் செல்ல. (பற்றுவார்க்கு) பொறுக்கமாட்டாதாகத் . . . . ... (ரு)

கூ. — துப்பனைத்துரங்கம் படச்சீறியதோன்றலைச்
சுடர்வான்கலன் பெய்ததோர்
செப்பினைத் திருமங்கைமணாளனைத்
தேவனைத் திகழும் பவளத்தொளி
யொப்பனை யுலகேழினை யூழியை
ஆழியேந்திய கையனை யந்தணர்
கற்பினைக் கழுநீர்மலரும் வயல்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (சு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துப்பனை | ஸமர்த்த (பலிஷ்ட) னாய், | பெய்தது | இட்டுவைக்கும் படியான |
| துரங்கம் | கேசியென்னுமஸுரனானவன | ஓர் | விலக்ஷணமான |
| | | செப்பினை | செப்பு (பாத்ரம்) போன்றவனாய், |
| பட | அழியும்படியாக | | |
| சீறிய | (அவனை) கோபித்தருளின | திருமங்கை | பெரிய பிராட்டியாருக்கு |
| தோன்றலை | ஸுந்தரனாய், | மணாளனை | வல்லபனாய், |
| சுடர் | உஜ்ஜ்வலமாய் | தேவனை | (அத்தால) விளங்குமவனாய், |
| வான | பெருவிலையனான | | |
| கலன் | ஆபரணங்களை | திகழும் | ஒளிவிடாநின்ற |

| | |
|---|---|
| பவளத்து | பவழத்தினுடைய |
| ஒளி ஒப்பனை | காந்தியோடொத்தவ (ஸ்ப்ருஹணீய) னாய், |
| உலகு ஏழினை | ஸப்தலோகங்களுக்கு நிர்வாஹகனாய், |
| ஊழியை | காலத்துக்கு நிர்வாஹகனாய், |
| ஆழி ஏந்திய | திருவாழியைத்தரியா நின்ற [வனாய், |
| கையனை | திருக்கையை யுடைய |
| அந்தணர் | ப்ராஹ்மணராலே |
| கற்பினை | ஓதப்படுமவனானவனை |
| கழுநீர் | செங்கழுநீர்ப் பூவா |
| மலரும் | அலராநின்ற [னது |
| வயல் | கழனிகளையுடைய |

கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (௬)

வ்யா.—ஆறும்பாட்டு. (துப்பனை) தான்நினைத்தவை செய்து தலைக்கட்டுகைக்கீடானஸாமர்த்த்யத்தையுடையவனை. (தூங்கம்படச் சீறியதோன்றலை) கேசியுடைய வாய்கிழியும்படி சீறியமுக்த(ஸ்)னை. (சுடர்வான்கலன் பெய்ததோர் செப்பினை) ஒளியையுடைத்தாய், பெருவிலையனுபிருந்துள்ள ஆபரணங்களை இட்டுவைக்கும் செப்பானவனை. "சுடர்வான்கலன்" ஆகிறது தானேதென்னில்; (திருமங்கைமணாளனைத் தேவனை) பிராட்டியும் தானுமான சேர்த்தியிலே யுண்டான ஒத்துமஞ்சளும், செம்பஞ்சிக்குழம்பும், மாளிகைச்சாந்தின் நாற்றமுமாய்க்கொண்டு திருமேனியில் புகர்தோன்றநின்றநிலை.

(திகழும் பவளத்தொளியொப்பனை) ஸர்வைஸ்ஸ்ப்ருஹணீயனானவனை. (உலகேழினை) போக்ய (ஸ்) போகோ (ஸ்) பகரண போக (ஸ்) ஸ்தாநங்களாயுள்ளவனை. (ஊழியை) காலமே சேஷித்தவன்று காலமாய்நின்றவனை. (ஆழியேந்தியகையனை) நித்யமான திவ்யாயுதங்களை ஏந்தும் திருக்கையை யுடையவனை. நித்யமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவனை யென்றபடி. (அந்தணர் கற்பினை) ப்ராஹ்மணருடைய மர்யாதைபோலே யிருக்கிற ஸங்கல்பத்தையுடையவனை, ப்ராஹ்மணராலே அத்யயநம் பண்ணப்படுகிறவனை யென்றுமாம். (கழுநீர்மலரும் வயல்) செங்கழுநீர் தொடக்கமான புஷ்பங்கள் அலராநின்றவயலையுடைத்தான. ... ... ... (௬)

---

அ.—ஆறும்பாட்டு. (துப்பனையித்யாதி) கீழ்ச்சொன்ன ப(ஸ்)லப்ரதத்வோபயுக்தமான ஸாமர்த்த்யத்தையும், தத்கார்யமான விரோதிநிரஸநத்தையும், அதுக்குடலான ஸ்ரிய:பதித்வத்தையும், இவையெல்லா மனுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"தோன்றல்" என்றது-அழகுக்குவாசகமாகையாலே,(மூர்த்த(ஃ)னை) என்றது; ஸௌந்தர்யனையென்றபடி.

"ஏந்திய" என்றது- ஏந்துமென்றாய், அத்தால் பலித்தது (நித்யமான) என்றது. (மர்யாதைபோலே) என்றது-சாபாநுக்ரஹஸங்கல்பம்போலே யென்கை. "கற்பினை" என்றதுக்கு- கற்கப்படுமவனை யென்றர்த்தாங்கீகாரமருளிச்செய்தார் (ப்ராஹ்மணராலேயித்யாதி). ... ... ... (௬)

மூ. — திருத்தனைத் திசைநான்முகன் தந்தையைத்
தேவதேவனை மூவரில்முன்னிய
விருத்தனை விளங்குமசுடர்ச்சோதியை
விண்ணைமண்ணினைக் கண்ணுதல்கூடிய
அருத்தனை யரியைப் பரிகீறிய
அப்பனை யப்பிலா ரழலாய்நின்ற
கருத்தனைக் களிவண்டறையும்பொழில்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (௭)

| பதம். | உரை. |
|---|---|
| திருத்தனை | (ஆநந்தத்தினால்) த்ருப்தனாய், (பரிபூர்ணனாய்), |
| திசை | திக்கிலுள்ளவர்களுக்கு நிர்வாஹகனான, |
| நான்முகன் | ப்ரஹ்மாவுக்கு |
| தந்தையை | பிதாவாய், |
| தேவதேவனை | தேவர்களாலே ஆஶ்ரயிக்கப்படும் தேவனாய், |
| மூவரில் | ப்ரஹ்ம விஷ்ணுருத்ரரான மூவர்களுக்குள் (மற்ற இருவர்க்கும்) |
| முன்னிய | ப்ரதா(ஃ)நனான |
| விருத்தனை | நாயகனாய் (நியாமகனாய்) |
| விளங்கும் | ப்ரகாசியாநின்ற |
| சுடர் | உஜ்ஜ்வலமான |
| சோதியை | தேஜோமயமான திவ்யவிக்ரஹத்தை யுடையனாய், |

| பதம். | உரை. |
|---|---|
| விண்ணை | ஸ்வர்க்கத்துக்கு நியாமகனாய் |
| மண்ணினை | பூமிக்கு நியாமகனாய், |
| கண்ணுதல் | நெற்றிக் கண்ணனான ருத்ரனானவன் |
| கூடிய | சேர்ந்திருக்கிற |
| அருத்தனை | அர்த்த (ஃ) பாக (ஃ)த்தை யுடையவனாய், |
| அரியை | ஸிம்ஹம்போல் மிடுக்கனாய், |
| பரிகீறிய | கேசியைக் கிழித்துப் பொகட்ட |
| அப்பனை | உபகாரகனாய், |
| அப்பில்ஆர் | ஜலத்திலே இருக்கிற |
| அழலாய்நின்ற | படபாக்நி போல்(எல்லா பதார்த்தங்களுக்கும் லயஸ்தாநமா) யிருக்கிற |

| | | |
|---|---|---|
| கருத்தனை | ஸர்வஸ்வாமியாயுள்ள ஸர்வேஶ்வரனை, | அறையும் சப்தியாநின்ற |
| களி | மதித்திருக்கிற | பொழில் சோலைகளையுடைய |
| வண்டு | வண்டுகளானவை | கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (எ) |

வ்யா.—ஏழாம்பாட்டு. (திருத்தனை) ஸ்வாநந்தா(ந)நுபவத்தாலே நித்யத்ருப்தனானவனை. (திசைநான்முகன் தந்தையை) இவ்வருகுள்ளாரில்காட்டில் அதிகனாயிருக்கிறசதுர்முகனுக்கு ஜநகனானவனை. (தேவதேவனை) அவனொருவனுக்குமன்றிக்கே, தேவர்களானாரெல்லாராலும் ஆஶ்ரயிக்கப்படுமவனை. (மூவரில்முன்னியவிருத்தனை) மூவருமான நிலையில் மற்றை இருவர்க்குத் தானே நியாமகனாய், தானானநிலையில் வந்தால் சேஷித்வத்தால்வந்த உறைப்புத்தோற்ற விருக்கிறவனை. (விருத்தனை) தலைமகனை. (விளங்கும் சுடர்ச்சோதியை) த்ரிமூர்த்தி மத்யஸ்தனான நிலையொழிய அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையனானவனை. (விண்ணை) போக ( ) பூமியான ஸ்வர்க்காதிகளானவனை. (மண்ணினை) அதுக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ணும் கர்மபூமியானவனை.

( கண்ணுதல்கூடிய வருத்தனை ) லலாடநேத்ரனான ருத்ரனை யுடைத்தான அர்த்த ( ) பாக( )த்தை யுடையவனை. (அருத்தன்) அர்த்த ( ) பாகன். (அரியை) விரோதிகளைப் போக்குமவனை. (பரிதிய வப்பனை) விரோதிநிரஸநத்தை சீலமாகவுடைய உபகாரகனை. (அப்பிலாரழலாய்நின்ற கருத்தனை) படபா( )முகாக்நி ஜலாம்சமடையத் தன்பக்கலிலே வந்து சுவறும்படி யிருக்குமாபோலே ஸர்வபதார்த்தங்களும் தன்பக்கலிலேவந்து லயிக்கும்படியிருக்கிறசக்தியை யுடையவனை. களிவண்டறையும். ... ... ... ... (எ)

அரு.—ஏழாம்பாட்டு. (திருத்தனையித்யாதி) கீழ்ப்பாட்டில் ஸர்வப( )லப்ரதத்வோபயுக்தமான ஸர்வசக்தித்வத்தை யநுஸந்தித்தார்; அதுக்குறுப்பாக விரோதிநிரஸநத்தைப் பலபடியாக அநுஸந்திக்கக்கோலி நிரபேக்ஷதையை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(தலைமகனை) நாயகனை. மூவரிலித்யாதியான பதங்களில் குணங்களெல்லாம் ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்துக்குறுப்பாக வநுஸந்திக்கிறாரென்று திருவுள்ளம். ... ... ... ... ... ... ... (எ)

மூ — வெஞ்சினக்களிற்றை விளங்காய்வீழக்
கன்றுவீசிய வீசனைப்பேய்மகள் துஞ்ச
நஞ்சு சுவைத்துண்டதோன்றலைத்
தோன்றல்வாளரக்கன் கெடத்தோன்றிய
நஞ்சினை யமுதத்தினை நாதனை
நச்சுவாருச்சிமேல் நிற்கும்நம்பியைக்
கஞ்சனைத்துஞ்ச வஞ்சித்த வஞ்சனைக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (அ)

| பதம். | உரை | பதம் | உரை. |
|---|---|---|---|
| வெஞ்சினம் | அதிக்ரூரமான கோபத்தையுடைய | கெட | முடியும்படி |
| களிற்றை | யானைபோல் அழகிய ரூப, | தோன்றிய | திருவவதரித்த |
| விளங்காய் | விளாம்பழமான அஸுரனானவன் | நஞ்சினை | விஷம்போன்றவனாய் |
| வீழ | விழுந்து முடியும்படி | அமுதத்தினை | (ஆஸ்ரிதர்க்கு) அம்ருதம்போல் போக்யபூதனாய், |
| கன்று | கன்றாய்வந்த அஸுர | நாதனை | ஸர்வசேஷியாய், |
| வீசிய | தூக்கெறிந்த [னை | நச்சுவார் | (தன்னை) ஆசைப்படுமவர்களுடைய |
| ஈசனை | ஸ்வாமியாய், | உச்சிமேல் | சிரஸ்ஸில் |
| பேய்மகள் | பூதனையானவள் | நிற்கும் | எழுந்தருளியிருக்கிற |
| துஞ்ச | முடியும்படி | நம்பியை | பூர்ணனாய், |
| நஞ்சு | (அவள் முலையிலுள்ள) விஷத்தை | கஞ்சனை | கம்ஸனை |
| சுவைத்து | உறிஞ்சி | துஞ்ச | (அவன்) முடியும்படி |
| உண்ட | அமுதுசெய்த | வஞ்சித்த | மோசம் செய்த (கொன்ற) |
| தோன்றலை | பாலகனைப், [னை | வஞ்சனை | க்ருத்ரிமனாயுள்ளவனை |
| தோன்றல் | (சத்ருவாக)ப்ரஸவித்த | கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். (அ) | |
| வாள் அரக்கன் | வாளாயுதத்தையுடைய ராவணாஸுரன் | | |

வ்யா. —எட்டாம்பாட்டு. (வெஞ்சினக்களிற்றை) வெவ்விய சினத்தையுடைய மதஹஸ்திபோலே தர்ஸநீயனானவனை. (விளங்காயித்யாதி) கன்றாயும் விளாவாயும் வந்த அஸுரர்களிருவரையும் தன்னைக் கொண்டு தன்னையே மாய்த்துத்தர தான்நினைத்தது தலைக்கட்டவல்லவனை. (பேய்மகளித்பாதி) பூதனைமுடியும்படி அவளுடைய விஷத்தை போக்யமாகக் கொண்டமுதுசெய்த முக்தனை. (தோன்றலித்

யாதி) சத்ருவாக ஸர்வலோகங்களிலும் ப்ரஸித்தனாய் ஸாயுதனுமா யிருக்கிற ராவணன்முடியும்படி தோன்றின ம்ருத்யுவை.

(அமுதத்தினை) அவ்விருப்புக்கானே அநுகூலர்க்கு போக்யமா யிருக்கிறவனை. (நாதனை) நிருபாதிகசேஷியை. (நச்சுவாருச்சிமேல் நிற்கும் நம்பியை) தன் பக்கலாசையுடையார் தலைமேலே நிற்குமவ னாய், அதுதான் பெறாப்பேறாக நினைத்து பூர்ணனாயிருக்கிறவனை. (கஞ்சனையித்யாதி) கம்ஸனுடைய துராபிஸந்தியை அவன் தன்னோடே போக்கி உகவாதாரோடு செவ்வையழியப் பரிமாறுமவனை. கண்ண மங்கையுள். ... ... ... ... ... ... ... (அ)

---

அந —எட்டாம்பாட்டு. (வெஞ்சினக்களிறித்யாதி) கீழ்ப்பாட்டில் ஸர்வஸமாஸ்ரயணீயத்வத்தை யநுஸந்தித்தார்; அதுக்குறுப்பாக விரோதி நிரஸநத்தைப் பலபடியாக அநுஸந்திக்கக்கோலி அப்ரதிஹததத்வத்தை யநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

(நிருபாதிகசேஷியை) என்றது - விரோதிநிரஸநத்துக்கு உறுப்பான ப்ராப்தியைச் சொல்லுகிறது. (தன்பக்கலாசையுடையார்தலைமேலே) என்றது- விரோதிநிரஸநத்துக்காகத் தன்னிடத்தில் ஆசைப்பட்டவருடைய ஆசையின்தலைமேலென்றபடி. இத்தால் ஆற்றாமையுடைய ஸமகாலமே வந்துநிற்கிறவனென்று விரோதிநிரஸநத்தில் விளம்பராஹித்யம் ஸூசித மாயிற்று. ... ... ... ... ... ... ... ... (அ)

மூ. — பண்ணினைப்பண்ணில் நின்றதோர் பான்மையைப்
பாலுள் நெய்யினைமாலுருவாய் நின்ற
விண்ணினைவிளங்கும் சுடர்ச்சோதியை
வேள்வியை விளக்கினொளிதன்னை
மண்ணினைமலையை யலைநீரினை மாலை
மாமதியை மறையோர்தங்கள்
கண்ணினைக் கண்களாரளவும்நின்று
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பண்ணினை | பாட்டுப்போலினிய னாய் | பான்மையை | ஸ்வபாவம் போலே நிரதிசய போக்ய பூதனாய், |
| பண்ணில் | (அந்த)கானத்திலே | பாலுள் | பால்போலவும் அதி னுள்ளேயிருக்கிற |
| நின்றது | ஸாரபூதமா யிருக்கிற | | |
| ஓர் | அதிவிலக்ஷணமான | | |

| | |
|---|---|
| நெய்யினை | நெய்போலு மிருக்குமவனாய், |
| மால்உருவாய் நின்ற | அதிவிசாலமான ஸ்வரூபத்தை யுடைத்தாயிருக்கிற |
| விண்ணினை | பரமபதத்துக்கு நிர்வாஹகனாய் |
| விளங்கும் சுடர் | மிகவுமுஜ்ஜ்வலமாய் |
| சோதியை | தேஜோமயமான விக்ரஹத்தை யுடையவனாய், |
| வேள்வியை | யாகங்களுக்கு நிர்வாஹகனாய் |
| விளக்கினொளி தன்னை | தீபத்தின் தேஜஸ்ஸுபோலே ஸ்வயம்ப்ரகாசனாய், |
| மண்ணினை | பூமிபோல் ஸர்வாதாரபூதனாய், |
| மலையை | மலைபோல்அவிசால்யனாய்; |
| அலை நீரினை | அலைமோதாநின்ற ஜலம்போலே இஷ்டவிநியோகார்ஹனாய், |
| மாலை | ஆஸ்ரிதவ்யாமுக்தனாய் |
| மாமதியை | பெரிய ஜ்ஞானத்தைக் கொடுக்குமவனாய், |
| மறையோர் தங்கள் | வேதாத்யயநசீலரான ப்ராஹ்மணர்க்கு |
| கண்ணினை | நேத்ரம்போல் அர்த்தப்ரகாசகனாயிருக்குமவனை, |
| கண்கள் ஆரளவும் நின்று | கண்கள் (விடாய் தீர்ந்து) நிறையுமளவும் ஒருபடிப்பட்டிருந்து |
| கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். | (௯) |

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பண்ணினை) (க) "ஸ அத்யஸ்ஸுஸ்வாதூ- யஆத்யஸ் ஸ்வாதுநாம்" என்கிறபடியே, பண்போலினியனானவனை. (பண்ணில்நின்ற தோர்பான்மையை) இன்னாரினையாரென்றன்றியே, எல்லாரையுமொக்க வருத்தக்கடவதாயிருக்கிற அந்த பண்ணினிசைபோலே நிரதிசயபோக்யனானவனை. (பாலுள் நெய்யினை) ஸாராம்சத்தோடு ருஜீஷாம்சத்தோடு வாசியற இரண்டிலுமுண்டான உபாதேயாம்சமானவனை. (மாலுருவாய்நின்ற விண்ணினை) "த்ரிபாத்விபூதி" என்னலாம்படியான பரப்பையுடைய நித்யவிபூதியுக்தனானவனை. (விளங்கும் சுடர்ச்சோதியை) அங்கே நிரவதிகதேஜோரூபமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனாய் நிற்கிறவனை. (வேள்வியை) அதுதேசத்தை ப்ராபிக்கைக்கு ஸாதநயான கர்மங்களாய் நிற்கிறவனை. (விளக்கினொளிதன்னை) ஸ்வாயத்தமான தேஜஸ்ஸையுடையவனை.

(மண்ணினை) செய்தார் செய்தகுற்றங்களையடைய மறக்குமவனாய் குற்றம் செய்வார்க்கு தன்னைப்பற்றி நிற்கும்படி இடங்கொடுக்கு

(க)

மலையை. (மலையை) இப்படிப்பட்ட தன் ஸ்வபாவத்தை ஒருவரால் சலிப்பிக்க அரிதாம்படியிருக்கிறவனை. (அலைநீரினை) ஜ்ஞானத்திடைமெய்கும் ஏற்றிப்பாய்ச் சீதகொள்ளலாம்படியிருக்கிறவனை. (மாலை) ஆஸ்ரிதர்பக்கல் வ்யாமோஹமே வடிவாயிருக்கிறவனை. (மாமதியை) (௧) "ददामि बुद्धियोगं तं - ததாமி' புத்தியோகம் தம்" என்கிறபடியே தன்னைப்ராபிக்கைக்கீடான புத்தியோகத்தைக் கொடுக்குமவனை. (மறையோர் தங்கள் கண்ணினை) வேதத்தை எங்கும்போக்க அதிகரித்திருப்பார்க்கு, தன்னையொழிய பதார்த்த தர்ஸநம் பண்ணவொண்ணாதபடி அவர்களுக்கு "த்ருஷ்டி பூதனாயுள்ளவனை. (கண்களாரளவும் நின்று) காணப்பெறுமையால் உருவினகண்களினுருவுதல் தீரும்படி நின்று கண்டநுபவிக்கப் பெற்றேன் ... ... ... .. (௯)

அ௫.—ஒன்பதாம்பாட்டு. (பண்ணினையித்யாதி) விரோதிநிரஸநத்துக்காக ஒப்பனையை நச்சுகிறதென்; அவ்வளவன்று, நிரதிசய போக்யனாயிருக்குமவனென்று கொண்டு ஸர்வப்ரகார வைலக்ஷண்யத்தை அநுஸந்திக்கிறாரென்று ஸங்கதி.

"ஓர்" என்றதால் பலித்த வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் (இனவுரித்யாதி). (வருத்த) என்றது-கடுபடுத்த என்றபடி. "பண்ணினைப்பண்ணில் நின்றதோர் பான்மையை" என்று உபக்ரமிக்கையாலே "பாலில் நெய்யினை" என்று பாலில நெய்யினையென்று விவக்ஷிதமென்று திருவுள்ளம் பற்றி, "பண்ணினை" என்றும், "பாலில் நெய்யினை" என்றுமிவற்றையுமருளிச்செய்வானென், ஸாராம்சமான பண்ணிலிசையையும் பாலில் நெய்யையுமருளிச்செய்தால் அமையாதோ என்னுமதிசங்கையைப் பரிஹரிக்கிறார் (ஸாராம்சத்தோடித்யாதி). உத்கர்ஷாபகர்ஷங்கள் பரஸ்பரமுண்டாகிலும், எல்லாவற்றிலுமுண்டான போக்யதாமாத்ரம் சொல்லவேண்டுவதாகையாலே அங்ஙனருளிச் செய்தாரென்று கருத்து. பண்போலன்றிறே பாலும்நெய்யுமிருப்பது, அஸாராம்சமும் மிஸ்ரமாயிறேயிருப்பது, இவற்றோடே அபேத வ்யபதேசம் கூடுமோவென்ன வருளிச்செய்கிறாராகவுமாம், இப்போது (வாசியற) என்றது "வாசியற்றிருக்கிற" என்றாய், விவேகிக்கவொண்ணாதபடி ஒன்றாயிருக்கிற தென்றபடி. (இரண்டிலும்) பால்நெய் இரண்டிலு மென்றபடி. "மால்" என்று பெருமையாய், பேருருவுடைத்தாய் நின்ற நித்யமான விண்ணினை யென்றாதாமருளிச் செய்கிறார் (தரிபாத்விபூதித்யாதி). "சுடர்ச்சோதி" என்றதால் விக்ரஹத்தினுடைய தேஜோரூபதவம் சொன்னபடியாலே, விக்ரஹத்தில் ப்ரபை(ஒளி)யைச் சொல்லிறதாக்கியருளிச் செய்கிறார் (ஸ்வாயத்தேத்யாதி).

(௧) கீ-௰-௰.

"மா" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளிச்செய்கிறார் (ததாமி இத்யாதி). ... ... ... ... .. .. ... ... (௯)

மூ. — கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று
காதலால் கலிகன்றியுரைசெய்த
வண்ணவொண்டமிழொன்பதோடொன்றிவை
வல்லராயுரைப்பார் மதியந்தவழ்
விண்ணில விண்ணவராய் மகிழ்வெய்துவர்
மெய்ம்மைசொல்லில் வெண்சங்கமொன்றேந்திய
கண்ணா! நின்றனக்கும் குறிப்பாகில்
கற்கலாம் கவியின் பொருள்தானே. (௧0)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

—○○※○○—

| பதம் | உரை | பதம். | உரை |
|---|---|---|---|
| கண்ணமங்கையுள் | திருக்கண்ணமங்கையில் | அம்விசும்பில் | அழகிய (போகப்ரசுரமான) ஸ்வர்க்கத்திலேபோய் |
| கண்டுகொண்டேனென்று | காணப்பெற்றேனென்று | விண்ணவராய் | தேவர்களாயிருந்து |
| கலிகன்றி | ஆழ்வார் | மகிழ்வு எய்துவர் | ஸந்தோஷிப்பார்கள், |
| காதலால் | ப்ரீதியுடன் | மெய்ம்மை சொல்லில் | இதினுடைய உண்மையான பலத்தைச்சொல்லப்புகில |
| உரைசெய்த | அருளிச்செய்ததாய், | வெண்சங்கம் ஒன்று | வெண்மையாய் அத்விதீயமாயிருக்கிற பாஞ்சஜந்யத் |
| வண்ணம் | காநத்தின் ஸ்வபாவமான இசையையுடைத்தாய், | ஏந்திய | தரியாநின்ற |
| ஒண்தமிழ் | அழகிய தமிழ்பாஷையிலேயுண்டான | கண்ணா | ஸர்வாதிகனே! |
| ஒன்பதோடு ஒன்று | ஒன்பது பாசுரங்களோடு கூடிய ஒரு பாசுரமானவையும் | குறிப்பாகில் | திருவுள்ளமாகில் |
| இவை | இப்பத்துப்பாசுரங்க | கவியின்பொருள் | இப்பாசுரங்களினர்த்தங்களைக்கூட |
| வல்லராய் | அப்யஸிக்க ஸமர்த்தராய்க்கொண்டு | நின்றனக்கும் | ஸர்வஜ்ஞனான உனக்கு |
| உரைப்பார் | அநுஸந்திக்குமவர்கள் | கற்கலாம் | அப்யஸிக்கத் தகுந்ததாயிருக்கும். (௧0) |
| மதிதவழ் | சந்த்ரன ஸஞ்சரியாநின்ற | | |

வ்யா.—பத்தாம்பாட்டு. (கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று) ஒருதேசவிசேஷத்திலேபோய் [illegible] வஸ்துவை ஸம்ஸாரத்திலே திருக்கண்ணமங்கையிலே காணப்பெற்றேனென்று. (காதலால் கலிகன்றியுரைசெய்த) அபிநிவேசத்தாலே ஆழ்வாரருளிச

